உ

சிவமயம்

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்

ஸ்ரீலஸ்ரீ சிவஞானசுவாமிகள் அருளிச்செய்த

# காஞ்சிப் புராணம்





பொன். சண்முகனு ரெழுதிய பொழிப்புரையுடன்



காஞ்சிபுரம் மெய்கண்டார் கழக ஆசிரியர் முதுபெரும் புலவர்

பொன். குமாரசுவாமி அடிகள் அவர்களால்



காஞ்சிபுரம் உயர்திரு. S. காளப்ப முதலியார் அவர்கள்

முத்தமிழ் அச்சகத்தில் பதிப்பிக்கப்பெற்றது.

1964

திருவள்ளுவர் செந்தமிழ்ப் பாடசாலை வெளியீடு 22

சேக்கிழார் பெருமானும் சிவஞான முனிவரும் (அச்சில்)
[23–வது வெளியீடு]

விலை ரூபாய் 10-00

[தபாற் செலவு வேறு]

கிடைக்குமிடம்:
பொன்- சண்முகன்
திருப்புட்குழி
பால் செட்டி P. O. (வழி) காஞ்சிபுரம்.



ஸ்ரீ காமாட்சி யம்பா சமேத ஸ்ரீ ஏகாம்பரநாதர்
(செம்பொன் மலைவல்லி தழுவக்குழைந்த மணிமேனிப் பெருவாழ்வு)

சிவமயம்

# காஞ்சிப் புராணப் பதிப்புரை

கா-பிரமன். அஞ்சித்தல்-பூசித்தல். புரம்-நகரம். பிரமனல் பூசிக்கப்பட்டதால் காஞ்சிபுரம் என்பதாம். பூமாதேவிக்கு உந்தித் தானமாகவும் பேசப்படும் சிறந்ததலம். கடல் பொங்கி அழிக்க வரும் பிரளய காலத்தும் காஞ்சியில் பிரளயம் வந்து அழிக்க வொட்டாமல் காத்த பிரளயங் காத்த அம்மை என்னும் தேவி ஆலயமும் உள்ளது. ஈறுசேர் பொழுதினும் இறுதியின்றியே மாறிலாதிருந்திடு வளங்கொள் காஞ்சி என்பது கந்தபுராணம். ஸ்ரீ மாணிக்கவாசகர் தேசமெல்லாம் புகழ்ந்தாடுங் கச்சித் திருவே கம்பன் செம்பொற் கோயிலென்ருர். திருநாவுக்கரசர் திரேதா யுகத்தில் இராவணன் கயிலைமலையை எடுத்தபோது இறைவன் திரு விரலாலூன்ற அழுந்தி வருந்தி ஏனைய தலங்களின் மூர்த்தியை அழைக்காமல் அம்மையார் தனத்திற்குக் குழைந்த பெருமான் தான் நமக்கு உளங்குழைந்தருள்வானென்று. நம் திருவேகம்பப் பெருமானை அழைத்துத் துன்பம் நீங்கி நலம்பெற்ருனென்று தாம் பாடியருளிய திருக்குறுந்தொகையில்

> **இலங்கை வேந்தன் இராவணன் சென்றுதன்**
> **விலங்க லேடுக் கவ்விர லூன்றலுங்**
> **கலங்கிக் கச்சியே கம்பவோ என்றலும்**
> **நலங்கொள் செல்வளித் தானெங்கள் நாதனே**

என்றனர். இதனல் இத்தலம் மிகப் புராதனம் என்பதாகும்.

இனிப் புராணம் என்பது அத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவனது அநாதி முறைமையான பழமை என்று அவனது சொருப தடத்தலட்சணங்களையும், வழிபட்டு நலம் பெற்றவர் களுடைய வரலாறுகளையும் கூறுவதுமாகும்.

திருவாசகத்தில் இறைவன் பெருமையைக் கூறும் முதற் பகுதி சிவபுராணமென்றே கூறுகின்றனர்.

திருஞானசம்பந்தர் திருப்பாசுரத்திலும் திருநாவுக்கரசர் இலிங்கபுராணத் திருக்குறுந்தொகையிலும், சுந்தரமூர்த்தி சுவாமி கள் தமது தேவாரத்திலும் புராண வரலாறுகளைச் சிறப்பித்துக் கூறுகின்றனர். சிவபுராணங்கேட்டால் மன அமைதியும், முன் செய்துள்ள சஞ்சிதகன்மமும் தேயும் என்று சிந்தைமகிழச் சிவ புராணந்தன்னை முந்தை வினைமுழுதும் மோயவுரைப்பன் யான் என்றனர். இனி, புராணமே இறைவனுக்குத் திருவுருவம். புராணம் வேறு இறைவன் வேறல்ல புராணமே இறைவன். இறை

வனே புராணம் என்பதைப் புராதனன் ஆகமவேத கீத புராண ரூபமொழித்து வெங்கிராதனுகிய வடிவுகொண்ட கிரீசனேடுரை செய்குவான் என வில்லிபுத்தூராழ்வார் கூறுகின்றனர். வேட்டுறில் சிவ பதவியே வேட்டுற விரும்பிக் கேட்டுறில் சிவபுராணமே கேட்டுற வேண்டும் என்றனர் கந்தபுராண ஆசிரியர். ஆகவே, புராணங்களைக் கற்கவேண்டும் கேட்கவேண்டும்.

தாளாண்மை யில்லாதார் வேளாண்மை செலுத்துவதும் தரைமே லென்றும்
வேளாண்மை யில்லாதார் மனைவாழ்க்கை செலுத்துவதும் விசயம் வேட்டு
வாளாண்மை யில்லாதார் மண்டுசமர்க் கேறுவதும் வளர்பு ராணங்
கேளாதார் கதிவிழைவும் விழியில்லார் வழிநடக்குங் கிரம மாமால்

என்றனர் குற்றாலத் தலபுராண ஆசிரியர்.

சித்தாந்த சாத்திரத்தில் "சிறப்புடைய புராணங்கள்" உணர்ந்தும் என்றனர். பெரிய புராணம் திருவிளையாடற் புராணம் கந்தபுராணம் காஞ்சிப் புராணம் காளத்திப் புராணம் தணிகைப் புராணம் கோயில் புராணம் சேதுபுராணம் குற்றாலத் தலபுராணம் இவைகளெல்லாம் சொல்லழகு பொருளழகு நடையழகுகளாற் சிறந்து சித்தாந்த சாத்திரத்தைத் தழீஇ இருப்பதால் சிறப்புடைய புராணங்கள் என்றனர்.

இப் புராணங்களுள்ளும் காஞ்சிப் புராணம் மிகச் சிறந்ததாகும். சிவபெருமான் விச்சுவாதிகரும் விச்சுவகாரணரும் விச்சுவாந்தரியாமியும் விச்சுவரூபியும் விச்சுவசேவியரும் ஆவரென்னும் வேதாந்த நூற்றுணிபை வற்புறுத்தி இகபரத்தில் துயருற்றுவாழும் உலகத்தவர் அதனை மாற்றிப்போக மோட்சங்களை எய்துதற்குச் சரண்புகுத வேண்டிய முழுமுதற் பொருள் சிவபெருமானேயென்ச்சிவபரத்துவத்தைத்தெளியவுணர்த்துவனவாகும். ஆதலால் நம் முன்னோர்கள் நற்பாலர் வேண்டின் மயிலம்மையார் தவம் நாடுக, நூல்கற்பான் விரும்பில் சிவஞானதேவன் கலையுணர்க்வென்று கூறினர். மேலும் இக்காஞ்சிப் புராணம் செய்தருளிய சிவஞான முனிவர் வடநூற்கடலும் தென்றமிழ்க் கடலும் நிலைகண்டுணர்ந்தவர். இவர்களியற்றிய நூல் பலவும் இவர்கள் பிரபந்தத் திரட்டிற் காணலாம். இலக்கணம் சமயம் தருக்கம் மொழிபெயர்ப்பு மறுப்புக்கள் முதலிய பல துறைகளிலும் தலைசிறந்தவர். இவர்கள் நூற்புலமையோ டில்லாமல் சிவஞானங் கைவரப் பெற்றவர். யோகிகள் சிவஞான போதத்திற் கெழுதிய மாபாடியத்தைப் படிக்க இவர்கள் சிவானுபவம் தெரியும். வடமொழியிலுள்ள பிரம்சூத்திரத்திற்குச் சங்கரர் இராமானுசர் நீலகண்டர் மாத்துவர் இந்நால்வரும் பாடியம் செய்துள்ளார்கள். சைவ சித்தாந்தத்திற்கு முதல் நூலாகிய சிவஞான போதத்திற்கு, இவர்கள் சிவஞான

பாடியத்தைத் தமிழில் இயற்றியுள்ளார்கள். இவர்கள் செய்தது காஞ்சிப் புராண முதற்காண்டம். இரண்டாங்காண்டம் இவர்கள் மாணவர் பன்னிருவருள் சிறந்த மகாவித்துவான் கவி ராட்சசர் என்று புகழப்பட்ட கச்சியப்ப முனிவரர் செய்தது. ஆக இரண்டு காண்டம் மூலமட்டும் புங்கத்தூர் உயர்திரு கந்தசாமி முதலியார் அவர்கள் இற்றைக்கு 85வருடத்திற்குமுன் வெகுதானிய புரட்டாசி மாதத்தில் சென்னை ஆதிகலாநிதி அச்சகத்திற் பதித்துள்ளனர். பின்னர்க் கி. பி. 1910 சாதாரண ஞு வைகாசி மாதத்தில், மதுரைத் தமிழ்ச் சங்கப் புலவரும் சைவசித்தாந்த சாத்திரப் பிரசாரகருமாகிய உயர்திரு வண்ணக்களஞ்சியம் நாகலிங்க முதலியாரவர்கள் சென்னைக் கலாரத்னாகர அச்சகத்தில் பதிப்பித்துள்ளார்.

பின் முதற்காண்டம் மாத்திரம் சோடசாவதானம் உயர்திரு சுப்பராய செட்டியாரவர்களாலும் காஞ்சிபுரம் சித்தாந்தபோத ரத்னாகரம் ஆலாலசுந்தரம் பிள்ளையவர்களாலும் பதவுரை எழுதி அச்சிடப்பெற்றது. பின்னர், இம் முதற்காண்டத்திற்குக் காஞ்சிபுரம் பச்சையப்பன் உயர்நிலைப்பள்ளி வித்துவான் சைவசித்தாந்த சாத்திரப் போதகாசிரியர் புலிசை உயர்திரு அருணைவடிவேல் முதலியார் அவர்கள் குறிப்புரை எழுதித்தரக் காஞ்சிபுரம் நம் 'மெய்கண்டார் கழகத்தினரால் 1937 மெய்கண்டான் ஆண்டு 714 ஈசுர ஞு ஐப்பசி மாதத்தில் காஞ்சிபுரம் குமரன் அச்சகத்தில் பதிப்பிக்கப்பட்டது. இதுகாறும் இரண்டாங் காண்டத்திற்கு யாரும் ஓர் விளக்கமும் எழுதாமையால் காஞ்சிபுரம் திருவள்ளுவர் செந்தமிழ்ப் பாடசாலை ஆசிரியர் உயர்திரு. பொன். சண்முகனார் அவர்களைக் கொண்டு குறிப்புரை எழுதி 1953வது வருஷத்தில் காஞ்சிபுரம் ஸ்ரீநிலையம் பிரசில்லை பாடசாலையின் 20வது வெளியீடாக அச்சிட்டு வெளியிட்டேன்.

முதற்காண்டங் காப்பி யொன்றுங் கிடைக்காமையால் ஷை பாடசாலை ஆசிரியரைக் கொண்டு பொழிப்புரை யெழுதி ஷை பாடசாலையின் 22வது வெளியீடாகப் பல அன்பர்கள் உதவியால் காஞ்சிபுரம் உயர்திரு S. க்ளப்ப முதலியார் அவர்களது முத்தமிழ் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுகின்றேன். நம் சைவ உலகும் தமிழுலகும் ஏற்றுப் போற்றும் வகையால் 'சேக்கிழார் பெருமானாரும் சிவஞான முனிவரரும் என்னும் நூல் வெளிவரத் துணை செய்ய வேண்டுகின்றேன்.

ஸ்ரீ சிவஞான சுவாமிகள் திருவடி வாழ்க
மெய்கண்டநாதன் விரைகழல் வெல்க
சைவமும் தமிழும் தழைத்தினி தோங்குக.

**பொன்-குமாரசுவாமி அடிகள்.**

உ
சிவமயம்
திருவம்பலம் உடையார் துணை

# முகவுரை

**திருச்சிற்றம்பலம்**

*நலமார் கச்சி நிலவே கம்பம்*
*குலவா ஏத்தக் கலவா வினையே*

**திருச்சிற்றம்பலம்**

## தொண்டை மண்டலம்

'தொண்டை நன்னாடு சான்றோர் உடைத்து' 'தொண்டைப் பாலார் பதியார் அறத்தொடு சீரும் படைத்தவரே' என்பவை முதலிய சான்றோருரைகளால் தொண்டைமண்டலச் சிறப்பு யாவராலும் நன்கறிந்ததே, இது பிற மண்டலங்களைப்போல மழைவளம் நிலவளம் முதலியவற்றை உடையது அன்று என்று சொல்வதும் உண்டு, இக் காஞ்சிப்புராணத்தையும் தணிகைப் புராணத்தையும் திருக்குறிப்புத் தொண்டர் நாயனார் புராணத்தையும் கற்றுணர்ந்தோர் அச்சொல்லைச் சிறிதும் மதியார். தொண்டைமண்டல சதகம் தொண்டை நாட்டார் மாட்சியை உணர்த்துகின்றது. நம் அருளாசிரியராகிய மாதவச் சிவ ஞான யோகிகள் 'நூலாய்பவர் திருநெல்வேலி நாட்டினர், என்றதற்குத் தலை சிறந்த காட்டாக விளங்கும் பெருமானார் ஆவார், ஆதலின், பெரிய புராணத்தை நன்கு ஆய்ந்துணர்ந்து, "திருத்தொண்டை நன்னாட்டு நானிலத்து ஐந்திணை வளமும் தெரித்துக் காட்ட, மருத்தொண்டை வாய்ச்சியர் சூழ் குன்றைநகர்க் குலக்கவியே வல்லான் அல்லால், கருத் தொண்டர் எம்போல்வார் எவ்வாறு தெரிந்துரைப்பார்"? என்று பாடியருளினர். அருளியும், ஓர் அரிய உண்மையை உலகர் தெரிய உணர்த்திய திறம் கவிஞர் எல்லார்க்கும் களிப்பூட்டுவதாகும். "வறுமை உற்றுழியும் தொண்டை வளமலி நாட்டோர் தங்கள் இறும் உடல் வருத்தியேனும் ஈவதற்கு ஒல்கார் அற்றே தெறுகதிர் கனற்றும் வேனிற் பருவத்தும் சீர்மை குன்று, துறுமணல் அகடுகீண்டும் ஒண்புனல் உதவும் பாலி," என்பதில், பாலாறு நீருதவும் திறத்தில் சூலத்தினுற் செய்த நன்றியாதலையும் அதற்குத் தொண்டை மண்டலத்துச் சான்றோர் ஈகை ஒப்பாதலையும் உவமம் ஆக்கிய பெரிய சாதுரியம் யாவர்க்கும் மாதுரியமாகும்.

அன்னை காமக்கண்ணி கயிலாயத்திலிருந்து காஞ்சிக்கு வந்த உண்மையை உணர்த்தும் இடத்தில், 'மங்கலத் தமிழ்ப்புவிக்கு வாள் முகம் எனத்தகும் துங்கமிக்க கீர்த்திபெற்ற தொண்டைநாட்டை நண்ணினள்" என்று தொண்டை நாட்டைச் சிறப்பித்துப் பாடியருளினர்,

தமிழகம் நிலமகளது மதிமுகமாகும், தொண்டைநாடு அம் முகத்தில் உள்ள செங்கனிவாயாம், காஞ்சிமா நகர் அத்திருவாயின்

நன்ருவாகும். (51—145) திருவேகம்பம் சதாசிவ மூர்த்திமாளுகிய பரமசிவன் எழுந்தருளியிருப்பது. அதைச் சுற்றிய திருமதில் பொன் மதில் எனப் போற்றப்பெறுகின்றது. பொன்மதில் என்பது இரு பொரு ளுடையது. அதனுல், "கச்சி மூதூர் தரைமிசை உயிர்கள் செய்த கன்மம் ஓர்ந்து அளிப்பான் வந்த கதிர்செய் மண்டில மேயாம்" (89—123) "செய்வதும் தவிர்வதும்" என்று இருவகையவாம் அறங் கட்கெல்லாம் நிலைக்களம் காஞ்சியே, என்னை? உலகுயிர்க்கெல்லாம் இலகுதாய் ஆகி நிலவும் காமக்கோட்டியம்மையே இந் நகரில் வீற்றிருந்து முப்பத்திரண்டறத்தையும் வளர்த்துக் காட்டிய மாட்சி வேறு நகர்க்கு உண்டோ? (89—124) இக்காஞ்சியைப் புகழாத கவி வாணர் இலர். அவர் எல்லாரும் சொல்லாதவற்றைச் சொல்லவல்லா தேன் யான் என்று தம் அடக்கத்தை இரண்டு படலமும் கூறி முடிக்கும் வரையில் அடங்கியிருந்து வெளியிட்டருளினர் ஒளிவிட் டுலகெலாம் விளங்கும் உத்தமோத்தம முனிவராகிய இந்நூலாகிரியர் மாதவச் சிவஞான யோகிகள். (90—125) இக்காஞ்சிப்புராணம் உத்தமக் காதை' எனப்பெறும் உயர்ச்சியுடையது. (90—126) இவ்வுயரிய சிவபுராணத்தைப் பாடியருளும் ஆற்றல் சான்ற ஆசிரியர் தம்மை நமக்குணர்த்தியவாற்றை அறிந்து நாமும் அவ்வாருய அடக்கம் உறத் தக்க பேற்றை எய்தல் வேண்டும்.

"எவ்வெவர் கோட்படு பொருளும் அஞ்செழுத்தின் அடக்கி அவற்றியல்பு காட்டி, மெய்வகை அஞ்சவத்தையினும் நிற்குமுறை ஓது முறை விளங்கத் தேற்றி, அவ்வெழுத்தின் உள்ளீடும் அறிவித்துச் சிவ போகத்து அழுத்தி, நாயேன் செய்வினையுங் கைக்கொண்ட வேலப்ப தேசிகன்றாள் சென்னி சேர்ப்பாம்." (குரு வணக்கம்)

அமுதமும் கைப்ப அறிஞர் கழகந்தொறும் குழாம் குழாம் ஆகித் தமிழாராய்ச்சி புரியும் இக் காஞ்சியின் புகழ் எல்லைக்கு முடிவில்லை. "கொழிதமிழ் மறைப் பாடற்கிள்ளை பாடுசீர் காஞ்சி என்றும்" போற் றப்படுவது இது. காஞ்சித்திருநகர்ச்சிறப்பைத் திருவேகம்பப் படலத் தில் விளக்கம் உற அறியலாம்.

## திருவேகம்பம்

திருமாமறையே ஒருமாமரம் (ஏகாம்ரம்). அவ்வேத பாதவத் தின் கீழ் ஆனந்தப்பேரொளியே சிவலிங்கம் ஆகத் தோன்றிற்று. அதன் இடப்பால் விளங்கும் தாயே லளிதாம்பிகையாகிய ஏலவார் குழலி, அவ்வம்மையப்பர் திருவடியே 'வெம்பவக் கடலின் நின்று அருட் கரை விடுக்கும்', காஞ்சி மாந்தரு நிழலில் மாந்தர் ஒரு சிறிது நேரம் நின்று வழிபட்டால் பிறவிப் பெருந்துயர் வெப்பம் எப்பொழுதும் மீண்டுருது, 'ஏகம்பநாதன் என்றுரைப்ப. ஆதிமந்திரம் அஞ்செழுத்து இதுவே, ஐம்பெருங்கொடும்பாதம் அறுக்கும். ஓதும் ஐ வகைப் பிரம மந்திரத்தும் அஞ்செழுத்தினும் உயர்ந்தது இம்மனு. எம்மனு? 'ஏகம்ப நாதன்' என்னும் மனு, மவ்வும் னவ்வும் ஆகிய ஒற்று இரண்டும் கணக்

கிடப்படாமையின் 'ஏகம்பநாதன்' என்பது அஞ்செழுத்து எனப் போற்றப் பெறும். அத்தகைய "ஏகம்பநாத மாமனுத்தான் நூறு கோடியின் மிக்கது". அதனின் ருழ்ந்தனவே அஞ்சும் எட்டும் பனிரண்டும் ஆகிய எழுத்து மந்திரமும் அம்சமந்திரமும் காயத்திரியும் வேதமந்திரமும் ஆகும். இவற்றை ஒன்றனின் ஒன்று முறையே தாழ்ந்ததெனக் கொள்க, "இம்மனு அறப்பயன் பொருள் இன்பம் வீடு என்று அனைத்தும் ஓதுநர்க்கு அளிக்கும்" இன்னோரன்ன பல மாண்புகளைப் புராணத்துள் நுழைந்து நுணுகியாராய்ந்துணர்தல் சாலப்பயன் ஆக்கும்.

காமக்கோட்டம் குமரக்கோட்டம் கச்சபேசம் முதலிய தலங்கள் பலவற்றையும் குறித்த பெருமைகளையெல்லாம் இப்புராணத்தில் தனித்தனியாக உள்ள படலங்களிற் காண்க, காமக்கோட்டத்திலே திசைமயக்கம் உண்டாகும். அங்கு நேரான திசையை அறிந்துகாட்ட வல்லார் எவரும் இலர். திருக்களிற்றுப்படியாரில் தாரத்தோ டொன்ருவர் என்றதற்கு இத்தலமும், தாரத்தோர் கூருவர் என்றதற்கு அம்மையப்பராக எழுந்தருளிக் காட்சிதரும் திருச்செங்கோடும் காட்டாக இருக்கும் தனிச்சிறப்புடையன. தாரத்தோர் கூருகாது, வேருகத் தாரத்தோடு தலை நிற்கும் தலங்களே எங்கும் உள்ளன.

## சிவம்

'சிவம்' என்றதன்பொருள்:- குறைவிலாத மங்கலக் குணத்தன்; அநாதியே மலம் இல்லாத தூயன்; அச்சிவனே வீடுநல்கும் உரிமையுடைய ஞானரூபன். "அவன் அவள் அது எனும் அவைதொறும் ஒன்றும் இச்சிவன் அல்லால் முத்தியிற் சேர்த்துவார் இல்லை," இது வேத வாக்கியம். அந்நிய தேவதையை அகத்திலும் எண்ணுதே. சிவனையே சிந்தித்து வழிபட்டு வா. அதுவே வீடு பெறுவிக்கும். வேதக் கூற்ருவது:- மானிடன் விசும்பைத் தோல்போற் சுருட்ட வல்லன் ஆனுல், சிவனை வழி படாமல் வீடு பெறவும் வல்லனுவன். இந்நூலில் உள்ள சிவ தோத்திரங்களை மாத்திரம் தொகுத்து மனனம் செய்து நாள்தொறும் பாடிப் பரவி வருதல் ஒன்றே பரகதி வழி காட்டும் பெருமையுடையதாகும். அவை இவை:-

*152-45; 154-50,51; 162-16,17,18; 163-19,20,21; 177-39,40, 41; 178-42,43; 191-40,41; 192-42; 212-57; 233-11; 295-34; 362-16; 431-85; 556-8,9; 557-10; 579-67,68; 580-69;*

காஞ்சியில் எத்திருக் கோயிலுள்ளும் அம்மையார்க்குத் தனித் திருக்கோயில் இல்லை. இங்குள்ள இலிங்கங்களுள் இலிங்கமூர்த்தி சிவம், சிவலிங்கவேதி சிவை (அம்மை) காமக்கோட்டம் தனிக் கோயில். திருக்கோயிலுக்குட்பட்டது அன்று. அதனுல் 'தாரத்தோடு ஒன்ருவர்' என்பதற்கு இக் காஞ்சி நகர் அன்றிவேறு எடுத்துக்காட்டில்லை. 'இகழுறும் இலிங்கவேதி என்னுரு இலிங்கவேதி திகழ்மதிச் சடில மோலிச் சிவபிரான் வடிவுகண்டாய்' என்று திருமாலுக்கு நம் பெருமாட்டி சாப விடைக்கு வழியுணர்த்தியருளிய இடத்தில் (இப்புராணத்திற்) காண்க.

திருமுறையுள் ஐந்து திருப்பதிகம் பெற்ற ஐந்து தலங்கள் இருக்கும் ஏற்றமும், திருக்கச்சி மயாநம் என்று தனித்திருத்தலம் வாய்ந்த மாட்சியும் அதற்கென்று அமைந்த திருத்தாண்டகம் (மைப்படிந்த கண்ணும் தானும்) ஆகிக் கடவுளைக் காட்டும் பாட்டும், திருவேகம் பத்துள் இருக்கும் வெள்ளக் கம்பம் கள்ளக் கம்பம் நல்ல கம்பம் என்னும் முத்தலம் இத்தலத்திற்கே வாய்த்த உயர்வும் காஞ்சியின் கடவுட்டன்மைக்குச் சான்றுவன.

'கச்சிப் பலதளியும் ஏகம்பத்தும் கயிலாயநாதனையே காணலாமே' என்னும் திருநாவுக்கரசர் திருத்தாண்டகத்தின் முடிவால், இக்காஞ்சியில் உள்ள தலமெல்லாம் பாடல் பெற்றவை என்றதும் அவற்றில் காட்சி தந்தருள்வான் கயிலாயநாதனே என்றதும் அறிந்து போற்றியுய்யுமா றுணர்த்தும்உண்மை.

ஆளுடைய நம்பி (சுந்தர மூர்த்தி சுவாமிகளு)க்கு இடக் கண் கொடுத்தருளிய விழுப்பமும் திருக்குறிப்புத் தொண்ட நாயனார், சாக்கிய நாயனார், ஐயடிகள் காடவர் கோனாயனார் வீடு பெற்ற பீடும் இத்தலத்திற்கே உரியனவாகும்.

'முத்தி தரும் நகரேழுள் முக்கியமாம் கச்சி' என்னும் முதுமொழியை அறியாதார் ஆர்?

'இடையறுகாசி' 'இடையறுக் காஞ்சி' என்னும் ஆட்சி இப்புராணத்தில் உண்டு.(காஞ்சி) என்றதன் இடையெழுத்து ஞகரமெய். அஃது அற்றது காசி, அறாதது காஞ்சி. இதனை, இடையறு காசி மூதூர் தன்னினும் இருமைசான்ற இடையறுக் காஞ்சி மூதூர் எம்பிராற்கு இனியது ஆகும்.'' என்று பாடியருளினர். இடையொசி முலையாள்பாகன் கருணையால் எவர்க்கும் அவ்வூரிடை இடையூறு ஒன்று(ம்) இன்றி முத்திவீடு எளிதின் எய்தும்.'' என்றும் அப்பகுதியை அடுத்துக் கூறியதால் காஞ்சியின் பெருமை நன்கு விளங்கும்.

காஞ்சியை நினைத்தாலும் காசியில் வாழ்ந்த பேறுண்டாகும்: ஆகவே காஞ்சியே எவற்றினுள்ளும் சிறந்தது, இவ்வாறு நான்முகன் கூறினன். அதை உணர்ந்து காஞ்சியில் வாழ்வோர் பாசம் நீங்கிப் பதியை அடைவர். (233-9) பரதகண்டமே கருமபூமியாகும் சிறப்புளது; எவ்வுலகினும் பரதகண்டமே மாட்சிமிக்கது. அக்கருமபூமியிற் கடவுளர் உறைவிடங்களே மேலானவை. அவற்றினும் மேன்மை சான்றவை திருமால் கோயில்கள். அவற்றினும் சாலச்சிறந்தவை மானுடலிங்கம் உள்ள திருகோயில்கள், அவற்றினும் உயர்ந்தவை தேவலிங்கம் நிலவும் ஆலயங்கள். அவற்றினும் மிகச் சீரியவை சுயம்புலிங்கங்கள் துலங்கும் தளிகள். அவற்றிலும் காசிக்ஷேத்திரத்து விசுவநாதம் சிறந்தது, அதனினும் ஓங்கிய பாங்குளது காஞ்சிக்ஷேத்திரத்துத் திருவேகம்பம், அதனினும் உயர்ந்ததும் இல்லை. அதனொடு ஒப்பதும் இல்லை. காசி தன்கண் இறந்தால் முத்திநல்கும், அம்முத்தியும், சாரூபமே. சாயுச்சியம் அன்று. காஞ்சியை நினைப்பினும் சிவபிரான் திருவடிக்கலப்பாம் பேரின்ப வீடு

பெறல் உறுதி, (648-215) வேதியர் உள்ளமும் வேதாகம நெறியெழுாக்கம் ஓம்பி மிக்கு உயர்ந்தோர் உள்ளமும் சிவயோகியர் உள்ளமும் மெய்யடியவர் உள்ளமும் ஒன்றனில் ஒன்று உயர்ந்தவாகும். (இஃது புண்ணியஸ்தலங்களும், உத்தம ஸ்தலங்களும், காசியும், காஞ்சியும் முறையே உயர்ந்தனவாகும் (இதுபுறம்) தென்னடு, தமிழகம், தொண்டைநாடு' காஞ்சி என்னும் முறையில் (இக்காஞ்சிப்புராணத்தில்) வைத்து, அவை சிறந்துவிளங்க, ஐயன் திருக்கண்ணை அன்னை புதைத் தருளினுள் என்று ஆசிரியர் அருளியதால் விளங்கும் சிறப்பை அறிஞர் அறிவர்.

சிவ பரத்துவம்:-

*193-48,49; 220-16; 221-17,19,21; 223-25,28; 307-15,16; 308-17; 350-14; 429-78,79; 430-80,81,82,83; 431-84,85; 463-44; 474-25,26;*

சிவ பத்தி: *318-9;* சிவபத்தி பேதம்: *389-7,8; 390-9,10* சிவ பூஜை: *213-60,61,62; 214-63,64,65; 29-23,24,25,26,27,28,29,30; 362-15,16,17,18; 388-4; 498-21,22; 499-23; 548-26,27; 549-28, 29; 598-24,25;* (சைவத்திறம்:- *606-55,56; 607-57,58,59; 608-60, 61,62,63; 609-64;* சரியை கிரியை யோகம் ஞானம் முத்திமுடிபு).

தில்லையில் திருச்சிற்றம்பலம் மட்டும் பரவெளியாகும். காஞ்சியோ தன் எல்லை முழுவதும் பரவெளியாம் பரத்துவம் உள்ளது. (*668-295*)

"ஆதி அந்தமும் இல்லதோர் மெய்யறி வானந்த நிறைவாகுஞ்
சோதி நந்தமைத் தம்மனக் குகையினுந் தொழுபவர் கருத்தீமை
காது காஞ்சியாம் பரவெளித் தலத்தினுங் காண்டகப் பெறுவோரே
ஓதி முற்றுணர் உறுவரும் பெறலரும் வீட்டினை உறுவாரால்"

(*668-296*)

அக்காஞ்சித் தலத்தில் இறந்தவர்க்குத் தீக்கடன் கழிப்போரைச் சூதகம் தொடக்குருது. இழிநரைத் தீண்டினும் தொடக்கில்லை.

(*669-297*)

சிவபூஜையும், சிவத்யாநமும், சிவஸ்தோத்திரமும், சிவபக்த பூஜையும் ஆகிய நான்கும் கொடிய மாபெரும் பாவத்தையும் தீர்க்க வல்ல பிராயச் சித்தமாகும். (602-39)

அகத்தியர் ஸ்தோத்ரமாக இப்புராணத்தில் அமைந்தவற்றின் பொருளை எல்லாச் சைவரும் உணர்தல் வேண்டும். உணர்ந்து அவ்வாறே ஒழுகல் வேண்டும். அவையாவன:—

(1) எனக்கு இப்பிறவியும் யான் செய்த தவமும் என் அறிவும் பயன்விளைத்தன.

(2) அரியும் அயனும் அடிமுடியறியாத பெருமானே! அவ்விருவர்க்கும் காட்டாத திருவடிகளை அடியேன் காணக் காட்டியருளினை. அதனல் என் நினைவெல்லாம் நிறைவேறப் பெற்றேன்.

(3) என் ஆயுள்முழுதும் சங்கரா சம்புவே எங்கள் பெருமானே! சிவனே அங்கணு! என்று என்றும் ஓலம் இட்டு அழைத்து அரற்றுவதே பொழுது போக்காகின்றது.

(4) உன் திருவடிக்கே என்றும் ஒன்ருயிருக்கும் பொருளே உரிய தாய்க் குறைவிலாததும் இடையருததும் ஆன அன்பு, என்றும் எனக்கு உண்டாகுக.

(5) இம் மண்ணிற் பிறந்தது முதல் இறக்கும் வரையிலும் தெய்வமென்று போற்ருத அபாக்கியவான்கள் என் குலத்தில் எய்தி எக்காலத்திலும் பிறத்தலாகாது. ஒருகால் பிறந்துவிட்டாலும் அது அப்பொழுதே செத்துத்தொலைய வேண்டும். எம்பெருமானே இவ்வரம் அடியேனுக்கு அருள்புரிவாயாக.

(6) விடைக்கொடி தூக்கியருளி மும்மதில் எரித்த முதல்வனே நீயே என்குல தெய்வமான முடிவிலாப் பாக்கியத்தால், எல்லாவுலகிலும் யானே பெருஞ்செல்வன் என்று மும்முறை சொல்லி யுறுதிப்படுத்து வேன் இவ்வுலகர்க்கு.

(7) பெருமானே! உமாபதியே! உன்னைச் சிறப்பான குலக் கடவு ளாகக் கொள்ளாத கீழ்மகன் பிறந்த — பிறக்கின்ற — பிறக்குங் குலம் எதிலும் அடியேன் மறந்தும் பிறவாத பெருவாழ்வு எனக்கு வேண்டும்.

(8) அடியாராம் இமையவர் கூட்டம் உய்ய வேண்டி அலை கடல் நஞ்சு உண்ட அமுதமே! கருணைக்கடலே, மலையான் மடந்தை மணவாளா, உன் திருவடிக்கு என் முடிவணக்கம் உரியது.

இவ்வாறு நாள்தொறும் பலகாலம் திருவேகம்பன் திருவடியை முன்னிலையில் வைத்துத் திரிகரண சுத்தியுடன் தோத்திரம் பண்ணித் தூயசிந்தையராவது சைவர் எல்லார்க்கும் தனிப்பெருங்கடனுகும்.

இக்காஞ்சித் தலத்தில் சிவபிரான் காப்புக்கூத்து (திதிநடனம்) ஆடுவதால், தங்கள் வாழ்நாளை வளர்த்துக்கொள்ள விரும்பும் மக்கள் இத்திருவேகம்பத்து நடராசப் பிரானைத் தொழு துய்தல் வேண்டும்.

இங்குப் பெறும் முத்தியைக் கேசாந்த முத்தி என்பர்' க+ஈசன்= கேசன், அந்தம்—முத்தியே முடிவு, ஆதலின் 'அந்தம் எனப்படும். கேசாந்தம் என்பது தழுவக் குழைந்தபடலம் 68-ம் பாடல் முதலியவற் றிற்காண்க.

இப்புராணம் ஏனைய புராணங்களின் விசேடம் உடையதாய், 'ஒழுக்கப்படலம்' என்றும் சிவபுண்ணியப்படலம் என்றும் இரண்டு சிறந்த படலங்களை ஆசிரியர் பாடியருளியிருப்பது, உலகிற்கு ஒரு புதிய பாவலர் விருந்தாகும். சிவபுண்ணியப் படலத்தில் மகேசுர மூர்த்தங்கள் எல்லாவற்றிற்கும் இலக்கணம் கூறி இருப்பதால், அன்பர் சிவநல் வினைவழி, அவற்றுள் உள்ளம் விரும்பியதொன்றை உபாசித்தல் வேண்டும்.

"வன்புலையுடம்பே ஆவி வருத்திடும் பிணி; வேறில்லை"
"பெரும்பிணியிதனைத் தீர்க்கும் மருத்துவன் பிறவியில்லாப்
பரம்பொரு ளான முக்கட் பரமனே என்று தேறி
முரண்பயில் விடையோன் தென்பால் முகத்தினைச் சரணம் எய்தி
விரும்பி வீடுறுதற்பாலார் பிறப்பினை வெருவப் பெற்றார்"

என்னும் (இப்புராணம்) பாடலை முடிவாக் கூறி இம் முகவுரையை முடித்துக்கொள்கிறேன்.

---

முகவுரையில் வருவன பக்க எண்ணும் பாட்டெண்ணும்



சிவமயம்

**தமிழக முதலமைச்சர்**

## உயர்திரு. எம். பக்தவத்சலம் அவர்களுக்கு

## வாழ்த்து

அவனியில் தோன்றில் புகழொடு தோன்றல் அஃதிலார் நன்றுதோன் றாமை
தவமுயர் திருவள் ளுவருரை தனக்குத் தகுபக்த வச்சலம் நீயே
உவரிசூ ழுலகம் புகழ்ந்திட என்றும் ஒன்பதோ டேழுபே றெய்தி
நவந்தரும் உமையே கம்பர்தம் அருளால் நானிலத் தூழிவா ழியவே.

வெண்பா

சென்னைமுதன் மந்திரியாம் சீர்பக்த வச்சலநீ
பின்னை கலைமான் பிரிவின்றி—மன்னவனாய்
இந்திரசம் பத்தென்ன இப்புவியில் வாழியவே
தந்திமுகன் தண்ணருளாற் றான்

இந்துசமய அறநிலையத் தலைவர்
உயர்திரு. மா. செ. சாரங்கபாணி முதலியார், பி.ஏ., பி.எல். அவர்கள்.
திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம் 21வது பட்டம்
ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய ஞானதேசிக பரமாசாரிய சுவாமிகளிடம் அறிவித்து
3000 ரூபா நன்கொடையாகப் பெற்று முற்றுவித்த உதவியை என்றும் மறப்பதில்லை. அவர்கள் நலம்பலபெறப் பண்ணின்மென்மொழி பெண்ணொருபாகன் எங் கண்ணுதலருளால் எண்ணிய பெற ஆசீர்வதித்து வாழ்த்துகின்றேன்.

எழுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்

உமைதிரு முலைப்பால் உண்டவர் புகழ்மா
கறனுயர் பரம்பரைச் சைவ
தமிழுடன் பீஏ,பீஎல்தேர்ந் தரசர்
தஞ்சபை வழக்கறி புலவ
சமயதே வத்தா னத்தற நிலையத்
தலைவநீ சாரங்க பாணி
இமமகள் பாகத் தேகம்ப ரருளால்
என்றும்நீ டூழிவா ழியவே

புவன நாயகியோ டடைக்கலங் காத்த புண்ணியன்
நண்ணுமா கறல்வாழ்
தவநெறிச் சார்ங்க பாணிநற் பெயர்சார்
சட்டநூற் புலமையிற் றழைத்துச்
சிவநெறிவளரச் செந்தமிழ் நாட்டுச்
சிவாலய முதற்பிற அறங்கள்
நவமுறச் செழிக்க நடாத்தும் ஆணையினர்
நலமொடும் வாழி வாழியவே

நன்கொடையாக 3000ம் ரூபா உதவிய ஷி திருக்கயிலாய பரம்பரை மகா சந்நிதானத்திற்குத் திக்குநோக்கிய வணக்கத்துடன் வாழ்த்து

எழுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்

நந்தியெம் பெருமான் முதற்சன குமர
ஞானசத் தியதரி சனியும்
அந்தமார் ஞானப் பரஞ்சோதி முனிகள்
அகச்சந்தா னத்திஞ ரியர்பின்
அந்திவண் ணத்தற் கன்பர்மெய் கண்டார்
அருணந்தி மறைஞான முனிவர்
புந்தியின் ஞானம் உயருமா பதியும்
புறச்சந்தா னத்தி ஞரியரே.
இத்தகு திருக்கை லாய நன்மரபில்
இருபத் தொன் றுவது பட்டம்
அத்தனே கம்பர் ஆவடு துறையுள்
ஆரியனுய் வந்த தொக்கும்
உத்தம ஞான சுப்பிர மணிய
உயர்மகா சந்நிதா னந்தான்
நத்தியிங் கிவரே ஞானச் செங்கோலை
நடத்திநீ டுழிவா ழியவே.

சிறப்புப் பாயிரங் கொடுத்த ஸ்ரீலஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக சுவாமிகள் திருவடிக்கு வணக்கம். மற்றும் அணிந்துரை முதலிய உதவிய அன்பரனைவர்க்கும், ஸ்ரீ காமாட்சியம்மையார் சமேத ஸ்ரீ:ஏகாம்பர நாதர் திருவருளால் அருமகப் பேறும் நிறை பெருந்திருவும் வளமுறப் பெற்று உளமிகமகிழ இறைவனை இறைஞ்சி வாழ்த்துகின்றேன் ஆசீர்வாதம்.

மற்றும் இந்நூல் முற்றுற உபாயங்களை அறிவித்த சைவப் பஞ்சாங்க ஆசிரியர் கணிதசோதிடப் புலவர் சங்கரங்கோயில் உயர்திரு இ. மு. சுப்பிரமணிய பிள்ளையவர்கட்கு அடியேன் நன்றிஉரித்தாக. தொண்டை

மண்டல சைவ வேளாளர் சங்கத் தலைவர் உயர்திரு சடகோப முதலியார் அவர்கட்கும் என்றும் மறவா நன்றியுடன் அவர்கள் நலம்பல பெற ஆசீர்வதிக்கின்றேன்.

எழுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்

இந்துலா மாடஞ் சென்னைமா நகரில்
இனிதுறை கற்றவர்க் கன்ப
செந்தமிழ்க்கல்வி அறிவுடன் ஒழுக்கம்
சிறந்தவ பரம்பரைச் சைவ
சிந்தையிற் றூய சேக்கிழார் மரப
செல்வமும் கல்வியும் மிக்கு
நந்தலில் புகழே கொளுஞ்சட கோப
நாமநீ நீடுவா ழியவே.

இந்நூல் முழுதிற்கும் அச்சாக வேண்டிய பேப்பர் பல இடங்களில் திரிந்தலைந்து வாங்கிக் கொடுத்தும், இதிற்கண்ட சித்திரக் கவிகளின் பிளாக்குகளையும் நமது உருவப் பிளாக்கையும் ஸ்ரீ காமாட்சியம்மையார் தழுவக்குழைந்த திருவுருவ மாவடி பிளாக்கு முதலியவைகளையும் செய் துகொடுத்துதவிய சைவப்பற்றும் தமிழ்ப்பற்றும் மிக்க சென்னை கவுணியன் அச்சக வுரிமையாளர் உயர்திரு கா. முருகேச செட்டியார், சமரபுரி செட்டியார் தவப்புதல்வர்கள் வேணு செட்டியார், சிவராம செட்டியார், குருநாத செட்டியார் இவர்கட்கு வாழ்த்து.

வெண்பா

முருகேசச் செம்மலுடன் மூதறிஞன் சமரபுரி
பெருநேசத் தாலிவர்கள் பெற்று—வருநேசர்
வேணுசிவ ராமனுடன் வேண்டுகுரு நாதனிவர்
தாணுவரு ளால்வாழ்க தாம்

இந்நூலைச் செம்மையாய் அச்சிட்டுப் பயிண்டு செய்து கொடுத்த காஞ்சிபுரம் முத்தமிழ் அச்சக உரிமையாளர் உயர்திரு S. காளப்ப முதலியார் அவர்கட்கு வாழ்த்து.

எழுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்

பூமலர்ப் பொதும்பர் இஞ்சிசூழ் காஞ்சிப்
புராணமாக் கவிபொழிப் புரையும்
தேமலர் மார்பன் காளப்பச் செம்மல்
தெள்ளுறப் பதித்தளித் தனனால்
வாமமேகலை காமாட்சியே கம்பர்
வளர் திரு வருளினா லென்றும்
மாமலர்த் தருவிந்திரனென வவனும்
மனைமக்கள் தாமும் வாழியவே.

### வெண்பா

புலவர்புகழ் காஞ்சிப் புராணப் பொழிப்பைப்
புலவரமு தென்னப் புகன்றான்—புலமைமிகு
பொன்சண் முகக்குரிசில் போதமிக வாழியவே
நம்சண் முகனருளால் நன்கு.

### கட்டளைக் கலித்துறை

உலகம் புகழ்ந்திடுங் காஞ்சிப் புராணம் உரையெழுதி
நிலவும்படி செய்தனன் புலவோருளம் நீங்ககிலான்
நலங்கொண்ட வள்ளுவர் கல்லூரி ஆரியன் நற்றமிழில்
வலங்கொண்ட பொன்சண்மு கன்கல்வி செல்வத்து
வாழியவே

### உரையாசிரியர் அவையடக்கம்

### எழுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்

வல்லினங் கசட தபறஆ றெழுத்தின்
வருதல்முன் இலடற அவைபோல்
நல்லினந் தெய்வப் புலவர்பே ருரைமுன்
நவிலுமென்-உரையஃ தற்றே
செல்லினம் மாரி பொழிவபோற் கவியைச்
செப்பிடு மப்பெரி யோர்கள்
மெல்லின அறிவின் என்னுரை யேற்று
மேலுற ஆசிகூ றுவரே.
பதிபசு பாச முப்பொருள் விளக்கம்
பகர்சிவ ஞானபா டியஞ் செய்
ததிர்கட லுலகும் ஆண்டளப் பானும்
ஆதிசே டனும் புகழ்ந் தேத்தித்
துதிசெயும் உயர்மா தவச்சிவ ஞான
முனிவர்சொல் கவிக்குரை செய்தேன்
கதிர்முனற் கத்தி யோதம்போன் றடியேன்
கற்றவர் நன்மதிப் புறவே

### கலிவிருத்தம்

வேதஆகம விதியுமை செயும்அருச் சனைபோல்
காதலா லெறிகல்லுமேற் றருளுமே கம்பர்
ஓதுபல்கலை வல்லுந ருரைக்கரு ளுவபோல்
போதமில் என துரைக்கருள் புரிவதும் வழக்கே.

சென்னை அறநிலையத் துணைத்தலைவர்

**உயர்திரு. D. இராமலிங்க ரெட்டியார், M.A.B.L. அவர்களுக்கு வாழ்த்து.**

செல்லுறழ் சோலைச் சென்னைமா நகரில் தேவத்தா னங்கள்மேற் பார்வை
நல்லறத் துறையிற் றலைவருக் குற்ற நற்றுணை யாய்அமை தலைவ
இல்லற நெறியில் வருவிருந் தோம்பும் இரா மலிங் கச்செம்மால் என்றும்
அல்லறற் குழலி மனைவி நன்மக்கள் அவரொடும் வாழிநீ டூழி.

**உயர்திரு. D. மாதவப் பிள்ளை B. A. B. L.,**

அறநிலைய உதவி ஆணையர் (காஞ்சிபுரம்) அவர்களுக்கும்
எம் நன்றி கலந்த வணக்கம் உரியதாகுக.

**பொன்–சண்முகனார்.**

இந்நூல் பொழிப்புரையுடன் அச்சிடப் பொருளுதவிய அன்பர்
சென்னை மங்களாகபே உரிமையாளர்

**உயர்திரு. T. சம்பந்த முதலியாரவர்கட்கு**

**வாழ்த்துக் கலி விருத்தம்**

*கச்சியே கம்பர் காதையை அச்சிட*
*இச்சை யாப் பொரு ளீந்த சம்பந்தனுங்*
*கச்சிறு ளவன் காதலி சுற்றமும்*
*பொச்ச மில்சிவ போகமுந் துய்ப்பரே*

**—பொன். குமாரசுவாமி அடிகள்**

அருட்டிரு.

**திரு முருக, கிருபானந்தவாரியார் சுவாமிகள்**

**அணிந்துரை**

*சண்முகனார் செய்த தகவார் பொழிப்புரையும்*
*தண்முகமார் காஞ்சித் தலநூலும்—விண்முகமும்*
*கொண்டு மகிழக் குமாரசாமித் தவனார்*
*கண்டுவெளி யிட்டார் களித்து.*

# நன்றியுரை

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம் குரு மகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள் மூவாயிரம் வெண்பொற்காசருளிய பரிசு, திருமந்திரம் மூவாயிரம் அருளுதலையும், திருஞானசம்பந்தர்க்கு 'அம்பொன் ஆயிரம் கொடுப்பர். என்னும் அருளிப் பாட்டினையும் கொண்ட திருவுட்கிடைபோலும், அவர்தம் திருமுன்பு வணங்கி வாழ்தலே செயத் தக்கது.

தொண்டை மண்டலாதீனம், காஞ்சி நகரம், திருக்கயிலாய பரம்பரை மெய்கண்டீசுவரர் மடாதிபர், மெய்கண்ட சிவாசாரியர் சந்தானம், ஞானபீடம்.

சீலஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக பரமாசாரிய குருமகா சந்நிதானம் அவர்கள் வாழ்த்துரை அருளியும் முகவுரை முற்றுவித்தும், 'ஆதீன சமயப் பிரசாரகர்' என்னும் ஏற்றம் அளித்தும் உற்றுழி உதவியும் அருளும் அவர் தம்பேரருளை மறவாமையை அவர்தம் திருவடி வணக்கத்தால் வேண்டுவல் அடியனேன்.

தமிழக முதலமைச்சர் கனம் எம். பக்தவச்சல முதலியார் B. A., B L., அவர்கள் உலகியல் அரசியலொடும் சிவமணம் கமழும் தமிழ் நூல்கள் பலவும் கற்று வல்லவராய் 'மதிநுட்பம் நூலோடுடையர்' என யாவரும் போற்றும் சிறப்பும் ஈன்ற புனிற்றுக் கன்றின்பாலுள்ள கனிவு பற்றிய பொருள் பொதிந்த திருப்பெயர்க்குப் பொருந்திய நடையும் உடையர் மதிப்புரை வழங்கியருளிய எளிவந்த வான்கருணையை என்றென்றும் போற்றும் கடப்பாடுடையேன்.

அருட்டிரு திருமுருக. கிருபானந்தவாரியார் சுவாமிகள், காஞ்சிபுரம் பச்சையப்பன் உயர்நிலைப்பள்ளித் தலைமை ஆசிரியர் திரு. க. வச்சிரவேல் முதலியார் (சித்தாந்த சிகாமணி, நாவலர்) B. A., L. T. அவர்கள், காஞ்சி திரு. S அருணைவடிவேலு முதலியார (மகாவித்துவான், தருமை ஆதீனத் தமிழ்க் கல்லூரி விரிவுரையாளர், காஞ்சிப்புராணக் குறிப்புரை எனப் பெயரிய சிறப்புரை ஆசிரியர்) இவ்வாசிரியன்மார்கள் தம் செவ்விய திருவுள்ளத்தில் எம் குடி வாழ்க்கையில் கருத்துடையவர்கள். அவர்கள் அருளிய அணிந்துரைகள் அடியேனை அந்நிலையில் நிறுத்தி வாழ்விக்கும் என்னும்துணிவுடையேனாய் வாழ்த்தி வணங்குகின்றேன்.

டாக்டர். திரு. மா. இராசமாணிக்கனார், M.A., M.O.L.PH.D. அவர்கள் முப்பதாண்டிற்கு மேலும் தொடர்புடையர் தம் பேரன்பால் தாமே அணிந்துரை வழங்கியும் திருத்தல விளக்கம் எழுதத் தூண்டியும் உபகரித்த கருணையை மறவேனாய்ப் போற்றுகின்றேன்.

தொண்டர் சீர் பரவுவார் அருளிய திருத்தொண்டர் புராணம் **வி**ரைவில் முற்றுப்பெற நாடொறும் கேட்டுக் கேட்டு மகிழ்ந்த அநபாய சோழ மன்னரை ஒத்து அறநிலையப் பாதுகாப்பு ஆணையாளர் திருமிகு **சாரங்கபாணி முதலியார்**, B.A., B.L. அவர்கள் காஞ்சிப் புராணம் முற்றுப்பெறப் பொருளுதவி புரிவித்து அணிந்துரை உதவி வெளியீட்டு விழாவிற்கு முழு மனத்தொடும் துணைபுரியா நிற்கும் அவர் தமக்குச் செம்பொன்மலை வல்லி தழுவக் குழைந்த மணிமேனிப் பெரு வாழ்வினைப் பேரருள் புரிய வேண்டுவல்.

புலவர் **முருகவேள்**, M.A., M.O.L. அவர்கள் தம் தந்தையாரொடு தொடர்பு முப்பதாண்டுகட்கு முன்பே வாய்த்தமையின் சிறிய பருவத்தே பெருந்தகைமையும் முதுக் குறைவும் கண்டு மகிழும் பேறுடையேன், அவர்தம் அணிந்துரை ('திருக்கோயில்' ஆசிரியர்) அப்பிரானருளுக்குப் பாத்திர ராக்குவிக்கும், அவர்க்கென் நன்றி கலந்த வணக்கத்தொடும் வாழ்வளிக்கத் திருவருளை வேண்டுகின்றேன்.

வள்ளலார் மாணவர் இல்லத் தலைவரும் குருகுலம் ஆசிரியரும் ஆகிய **திரு. 'அண்ணு' நா. ப. தணிகை அரசர்** அவர்கள் புரிந்த, புரியா நின்ற, புரிய உள்ள நலங்கள் பலப் பல. அந்நிலையில் வித்துவான் **திரு. ம. எ. கிருட்டினசாமி (பெரியபாளையம் தலைமைத் தமிழாசிரியர்)** அவர்களொடும் கற்பார்போலக் காட்டிக் கற்பித்தனரெனின் புனைந்துரையாகாது. இவர் தமக்கும் வழிவழியும் நன்றி செலுத்துதலையுடையோம்,

**அ. எ. த. அ. உலகநாத முதலியார்,**

**ஐவுளி, ஆடிசன்பேட்டை, காஞ்சிபுரம்.**

உத்தமனே நல்ல உலகநாதச் செம்மால்
பத்தினியிற் சாலிநேர் பன்னியொடு—புத்திரரும்
வாழிஇரு செல்வநலம் வையத்தில் வாழ்வாங்குத்
தாழ்வின்றிச் சுற்றமுடன் ருன்

சுபம்

**—பொன். சண்முகனுர்**

# திருவள்ளுவர் செந்தமிழ்ப் பாடசாலை வெளியீடுகள்

1. ஆத்திசூடி
2. கொன்றைவேந்தன்
3. நறுந்தொகை
4. மூதுரை
5. நல்வழி
6. திருக்குறள் முதலதிகார விளக்கம்
7. இரண்டாமதிகார விளக்கம்
8. திருக்குறள் அறத்துப்பால்
9. திருக்குறள் மூலம்
10. திருப்பாசுரம் பொழிப்புரையுடன்
11. திலகவதியார்
12. காரைக்காலம்மையார்
13. மங்கையர்க்கரசியார்
14. சைவ மங்கையர்
15. நீதிநூல்
16. வகுத்தான் வகுத்த வகை
17. திருவேகம்பநாதர் தழுவக்குழைந்தபடம்
18. தெய்வமிகமேல்
19. பெரியாரைத் துணைக்கொள
20. திருக்குறள் (இரண்டாம் பதிப்பு)
21. கச்சியப்ப முனிவர் அருளிய காஞ்சிப் புராணம் குறிப்புரையுடன்.

# பிழை திருத்தம்

| பக்கம் | பாட்டு | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 2 | 8-உ | பரண்முன் | கண்முன் |
| 103 | 7-பா | கால்வாய் | நால்வாய் |
| 116 | 15-உ | முக்சுடர் | முச்சுடர் |
| 151 | 39-உ | நீராாடினர் | நீராடினர் |
| 167 | 2-உ | விண்ணேர் | விண்ணோர் |
| 216 | 3-உ | செயங்களை | செயல்களை |
| 252 | 2-பா | முகுர்த்தம் | முகூர்த்தம் |
| 259 | 4-உ | சகக்ரத்தை | சக்கரத்தை |
| 270 | 13-உ | சத்திர | சத்திய |
| 272 | 20-உ | நூற்பயனை | நாற்பயனை |
| 277 | 13-உ | விருப்பிய | விரும்பிய |
| 317 | 4-உ | தாங்கிவர் | தாங்கியவர் |
| 320 | 16-பா | மெம்யெனுந் | மெய்யெனுந் |
| 330 | 9-பா | என்ற | ஏன்ற |
| 357 | 38-உ | ஆயர் | ஆய்ச்சியர் |
| 416 | 25-உ | முதலறிந் | முதலரிந் |
| 417 | 29-உ | வெள்ளத்துள | வெள்ளத்துள் |
| 424 | 56-உ | மனம | மனம் |
| 489 | 2-பா | எண்ணும் | என்னும் |
| 493 | 3-பா | முகில்போய் | முகில்போல் |
| 495 | 10-உ | முறைறே | முறையே |
| 563 | 9-பா | பணிந்த | பணித்த |
| 567 | 23-உ | அரனும் | அயனும் |
| 568 | 28-உ | முறைபிழாத | முறைபிறழாத |
| 518 | 101-பா | உணர்ந்தாள் | உணர்ந்தான் |
| 624 | 123-உ | மயக்ககுறுத்தும் | மயக்குறுத்தும் |
| 647 | 210-பா | கச்சி | காசி |
| 663 | 273-உ | கரிய கூந்தலையுடைய உமையம்மையை எனச் சேர்க்கவும். | |
| 683 | 357-உ | மந்திரத்திரத்தொடும் | மந்திரத் தொடும். |
| 694 | 404-உ | கொண்டு | கண்டு |
| 708 | 28-பா | அணிபேறு | அணிபெறு |
| ,, | ,, உ | பிரனுர் | பிரானுர் |
| ,, | ,, உ | கொள்ளத் தொடங்கினுர் | கொள்ளச் செய்தனர் |
| 714 | 52-உ | புற்கென்ன | யுறகென்ன |
| 715 | 53-உ | அணிந்தத் | அணிந்த |
| 717 | 61-உ | துந்துமிாள் | துந்துமிகள் |

தமிழக முதலமைச்சர் கனம் பக்தவத்சலம் அவர்கள் வழங்கி அருளிய

# மதிப்புரை

காஞ்சிமாநகர் பழம்பெரும் புண்ணியத் தலம்; இந்துக்கள் காசிக்குச் சமமாக இதைக் கொண்டாடுகிறார்கள். வரலாறு நெடுக இந்த நகரம் புகழோடு இருந்து வந்திருக்கக் காண லாம். பண்டைக் காலத்தில் தொண்டை மண்டலத்தின் தலைநகராக இருந்த பெருமையும் இத்தலத்திற்கு உண்டு. தென்னாட்டில் சமயம், கலை, கல்வி, இலக்கியம் ஆகியவற்றைப் பழைய மரபு கெடாமல் போற்றி வளர்த்த முக்கியமான பதிகளுள் காஞ்சியும் ஒன்றாகும். இதன் பெருமைக்கு ஓர் உரைகல்லாகக் காஞ்சிப்புராணம் விளங்குகிறது.

புராணங்களைச் சமய சீலத்தின் ஒரு அம்சமாகவும், வாழ்க்கைநெறிக்கு வழிகாட்டும்அறநூல்களாகவும்நம்முடைய முன்னோர் மதித்து வந்தனர். புராணங்களைப் படித்தும், புராணப் பிரசங்கங்களைக் கேட்டும் பக்தி நெறியில் நின்று ஒழுகினார்கள். அவர்களது வாழ்க்கையில் வேதங்கள், சாஸ்தி ரங்களைப் போலவே புராணங்களும் சிறப்புப் பெற்றிருந்தன. இதனால் ஒவ்வொரு தலத்தையும் பற்றி உள்ள திருவிளை யாடல்களையும், ஐதீகங்களையும் விரித்தும் தொகுத்தும் கூறும் தல புராணங்கள் பல பெருகின. இவை வெறும் புராணக் கதைகளாக மட்டும் இல்லாமல், மனப்பண்புகளை உயர்த்தி மக்களுக்கு ஆத்ம சுகத்தையும் மன நிறைவையும் அளிக் கின்றன. இவற்றின் வாயிலாக அக்கால மக்களின் சமய வாழ்க்கை, நம்பிக்கை, லட்சியம், ஒழுக்கம், உயர்ந்த பண்பாடு ஆகியவையும் நமக்குத் தெளிவாகின்றன. ஆகையினால், தல புராணங்கள் சமய நோக்குடன் மட்டுமின்றி, ஆராய்ச்சி நோக்குடனும் படிக்கத் தக்கவையாகும்.

தமிழில் உள்ள தல புராணங்களுள் காஞ்சிப் புராணத் திற்கு ஒரு தனிச் சிறப்பு உண்டு. காஞ்சியைப் பற்றிப் பல

தல புராணங்கள் இருந்தபோதிலும், அவை எல்லாவற்றிலும் மிகச் சிறந்ததாக மதிக்கப்படுவது, சிவஞான சுவாமிகள் அருளிச் செய்த காஞ்சிப் புராணமேயாகும். சுவாமிகள் வட மொழியும் தென்மொழியும் கரைகண்டவர்; சிவாகமங்களை ஐயந்திரிபற அறிந்து ஓதியவர். அவருடைய தபோபலமும் கல்விச் சிறப்பும் காஞ்சிப் புராணத்திற்குச் சைவ உலகிலும், தமிழிலக்கிய உலகிலும் நிலையான இடத்தைத் தேடித் தந்துள்ளன.

முறையாகப் பாடங்கேட்பதும், பாட்டுக்களைப் படித்தே விளங்கிக் கொள்வதும் இந்தக் காலத்தில் குறைந்துவிட்டன. இது உரைநடைக் காலம். எவ்வளவு பெரிய விஷயங்களையும் எளிதாகச் சொல்லவேண்டும் என்று மக்கள் எதிர்பார்க்கிறார்கள். இந்நிலையில், காஞ்சிப் புராணத்திற்கு எளிய தமிழில் உரை எழுதி வெளியிடும் முயற்சி விரும்பி வரவேற்கத்தக்கதாகும். இந்தப் பணி பொறுப்பும் சிரமமும் மிகுந்தது. உரையாசிரியர் தமிழ் இலக்கண, இலக்கியப் பயிற்சியுடையவராக இருந்துவிட்டால் மட்டும் போதாது. சைவ சித்தாந்த சாஸ்திரப் பயிற்சியும் அவருக்கு இருக்கவேண்டும். அப்பொழுது தான் விஷயங்களைத் திரிபின்றித் தெளிவாக விளக்க முடியும்.

தற்போது காஞ்சிப் புராணத்திற்கு உரை எழுதியுள்ள திரு. பொன் சண்முகனார் அவர்களும், அவருடைய தந்தையாரான பொன். குமாரசுவாமி அடிகளாரும் செந்தமிழ்ப் புலவர்கள்; சிறந்த சிவ பக்தர்கள். இந்த நூலின் மூலம் அவாகள் தமிழ் மொழிக்கும், னசவ சமயத்துக்கும் அரிய தொண்டாற்றியுள்ளார்கள். நூலுக்குச் சைவ அன்பர்களும் தமிழ்ப் பெருமக்களும் பேராதரவு அளிப்பார்கள் என்று நம்புகிறேன். இந்தச் சீரிய முயற்சிக்கு என் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

அன்புடன்,

**எம். பக்தவத்சலம்.**

# அணிந்துரை

**திரு. எம். எல். சாரங்கபாணி முதலியார் அவர்கள்,** *பி.ஏ.பி.எல்*

**அறநிலைய ஆணையர், சென்னை.**

---

சமய இலக்கியங்களில், தலபுராணங்கள் மிகவும் சிறப்பிடம் பெறுவன ஆகும். தலபுராணங்கள், தமிழ்நலமும், கவிதை நயமும் அமைந்து திகழ்வன. நாட்டின் பல்வேறு பகுதிகளைப் பற்றிய பலதிறச் செய்திகளையும் உணர்ந்துகொண்டு மகிழ, அவைகள் நமக்குப் பேருதவி புரிகின்றன.

சமயக் கருத்துக்களையும், தத்துவ நுட்பங்களையும், வாழ்வியல் அனுபவ உண்மைகளையும், நம் முன்னோர்களின் உள்ளுணர்ச்சித் திறங்களையும் பிறவற்றையும், தலபுராணங்களால் அறிந்துகொண்டு, நாம் மிகவும் பயன்பெறுகின்றோம். அவைகளில் அமைந்துள்ள கவிதை—இலக்கிய—அறிவுச் செல்வம் அளப்பரியது. அவைகளை இயற்றியருளிய கவிஞர்கள், நம்மனோரின் பெருமதிப்பிற்கும் வணக்கத்திற்கும் உரியவர்கள் ஆவர்.

தலபுராணங்களில் காஞ்சிப்புராணம் தலைசிறந்ததொன்று. கவிதை நலத்திலும், கற்பனைத் திறத்திலும், உயரிய கருத்துக்களை அழகுற உணர்த்தும் சிறப்பிலும், காஞ்சிப்புராணம் கவின்மிக்குத் திகழ்கின்றது. எளிய இயற்கை வருணனைப் பகுதிகளிலும்கூட, அரிய பெரிய சைவ சித்தாந்த தத்துவ நுட்பங்களை அழகுற விளக்கிச் செல்வது காஞ்சிப் புராணம் என்று தமிழறிஞர்கள் அதனைச் சாலவும் போற்றிப் புகழ்வர்.

பிற்காலப் பெருங்கவிஞர்களில் புகழோங்கிய ஒருவராகப் பிறங்கிய மாதவச் சிவஞான சுவாமிகள், தம் கலைப்புலமை யெல்லாம் ஒருங்கே களிநடம் புரிந்து பொலியும்படி இந்நூலை இயற்றியருளியிருக்கின்றார்கள் என்பதொன்றே, இந்நூலின் சிறப்பினை அறிவிக்கப் போதியதாகும்.

இத்தகைய புகழ்சான்ற இனிய இந்நூலுக்கு, யாவரும் எளிதிற் படித்து இன்புறும்வண்ணம் சிறந்ததொரு பொழிப்புரையினை, அறிஞர் திரு. பொன். சண்முகம் அவர்கள் எழுதி வெளியிட முன்வந்தமை மிகவும் பாராட்டி மகிழ்தற்குரியது. இவர் வழிவழியாக வந்த செந்தமிழ்ப் புலமையும், சிவநேயச் செல்வமும் மிக்கவர். அடக்கமே ஓர் உருவமானவர், சைவ சித்தாந்த நூல்களில் ஆழ்ந்த பயிற்சியுடையவர். கச்சியப்ப முனிவர் இயற்றிய காஞ்சிப்புராணம் இரண்டாம் காண்டத்தினை, முன்னரே குறிப்புரை எழுதிப் பதிப்பித்து வெளியிட்டிருப்பவர். இவர்தம் தந்தையார் சீலத்திரு. பொன். குமாரசாமி அடிகள், திருப்பாதிரிப்புலியூர் ஸ்ரீலஸ்ரீ ஞானியார் சுவாமிகள் அவர்களின் அன்பையும்

நன்மதிப்பையும் திரம்பப் பெற்ற பெரும்புலவர் ஆவார்கள். "கச்சித் திருவேகம்பர் மாலை" போன்ற சிறந்த கவிதை நூல்கள் யாத்தவர்கள்.

"மகனறிவு தந்தையறிவு" என்னும் பழமொழிக்கேற்பத் தம் தந்தையாரின் புலமை நலங்களையெல்லாம் தாமும்பெற்று, இவ்வுரை நூலைச் செவ்விதின் எழுதி முடித்திருக்கும் திரு. பொன். சண்முகம் அவர்களின் தொண்டு மிகவும் பாராட்டற்குரிய தொன்றாகும்.

இந்நூல் யாவர்க்கும் பயன்படவும், இந்நூலாசிரியர் எல்லா நலங்களும் எய்தி நீடினிது வாழவும், கச்சி ஏகம்பனின் கழலிணைகளை மனமொழி மெய்களால் வழுத்துகின்றேன்.

**மா. சே. சாரங்கபாணி.**

# பாராட்டு அணிந்துரை

## திரு. N. R. முருகவேள், M. A., M. O. L., அவர்கள்,

ஆசிரியர்: **"திருக்கோயில்"**

---

(வெண்பா)

ஆய கலையனைத்தும் ஆய்ந்துணர்ந்து கற்றுவல்ல
தூய சிவ ஞான சுவாமிகள்தாம்,—நேயமிகக்
காஞ்சிப் புராணம் கவின்பெருகச் செய்தளித்தார்,
தீஞ்சுவைகள் எல்லாம் செறித்து!

தலச்சிறப்பைச் சாற்றும் புராணங்கள் தம்முள்
கலைச்சிறப்பார் காஞ்சிப் புராணம்,—நலச்சிறப்புப்
பற்பலவும் வாய்ந்து, பயில்வார்க் கறிவூற்றும்!
பொற்புமிக ஓங்கிப் பொலிந்து.

தொட்ட இடந்தோறும் தூயசைவ சித்தாந்த
நுட்பங்கள் தோற்றிஉயர் நோக்கமைந்து, மட்டில்லா
இன்பம் விளைக்கும்! இறையுணர்வில் தோய்விக்கும்!
நன்றுயர்காஞ் சிப்புரா ணம்.

இத்தகைய காஞ்சிப் புராணத்திற் கின்னுரைதான்,
வித்தகன் பொன் சண்முகனும் மேதகையோன்,—முத்தமிழ்தேர்
பொன்குமர சாமி அடிகள் புகழ்ப்புதல்வன்,
நன்குவரைந் தீந்தான்! நயந்து.

தேர்ந்த தமிழ்ப்புலமை, சித்தாந்த நூற்பயிற்சி,
சார்ந்துயர்பண் பெல்லாம்,பொன் சண்முகன்தான்—ஆர்ந்து நின்றான்!
கச்சிஏ கம்பன் கழலிணைகள் போற்றுகின்றேன்,
இச்சிறந்தோன் வாழ்க! இனி தென்று.

**ந. ரா. முருகவேள்.**

சிவமயம்

## சிவஞான சுவாமிகள் தோத்திரம்

கருணைபொழி திருமுகத்தில் திருநீற்று நுதலும்
கண்டாரை வசப்படுத்தக் கனிந்தவா யழகும்
பெருமைதரு துறவோடு பொறையுளத்திற் பொறுத்தே
பிஞ்ஞகனார் மலர்த்தாள்கள் பிரியாத மனமும்
மருவினர்கள் அகலாத ஞானமே வடிவாம்
வளர்துறைசைச் சிவஞான மாமுனிவன் மலர்த்தாள்
ஒருபொழுதும் நீங்காமல் எமதுளத்தில் சிரத்தில்
ஒதிடுநா வினிலென்றும் உன்னிவைத்தே உரைப்பாம்.

—தொட்டிக்கலைச் சுப்பிரமணிய சுவாமிகள்.

திருச்சிற்றம்பலம்

# கச்சியேகம்பர் ஆனந்தக்களிப்பு

ஆனந்தம் ஆனந்தம் தோழி—கம்பர்
ஆடுந் திருவிளை யாட்டினைப் பார்க்கில்
ஆனந்தம் ஆனந்தம் தோழி.

ஒன்றுவிட் டொன்றுபற் றாமல்—என்றும்
ஒன்றுவிட் டொன்றினைப் பற்றவல் லாருக்(கு)
ஒன்றும் இரண்டுமல் லாமல்—நின்ற
ஒன்றினை வாசகம் ஒன்றி லளிப்பார்
ஆனந்தம் ஆனந்தம் தோழி. க

க. 1. ஒன்றுவிட்டு ஒன்று பற்றல் — மனம் ஒரு வழிப்படாமல் கணந்தோறும் வேறு வேறு பொருள்களைப் பற்றிவிடுதல்: அங்ஙனமன்றி ஒன்றியமனம் வேண்டும் என்றபடி.

2. ஒன்று விட்டு ஒன்றினைப் பற்றலாவது — உலகப்பற்றை விடுத்து முதல்வன் பற்றினைப் பற்றி அன்புசெய்து நிற்றல்.

3-4. ஒன்றும் இரண்டும் அல்லாமல் — நின்ற ஒன்று—முதற் பொருள் உயிர்களோடு ஒன்றே வேறே என்பதின்றி உடனுந்தன்மை யில் பிரிப்பின்றி நின்ற நிலை. இது, கண் ஒரு பொருளைக் காணும் போது, கண்ணொளியும் உயிரினறிவும் தானென மற்றையதெனப் பிரித் தறிய வாராது ஒட்டி நிற்பது போன்றது. இதனை அநந்நியம் என்றும் அத்துவிதம் என்றும் கூறுப.

4. 'வாசகம் ஒன்று' என்றது—சித்தாந்த மகா வாக்கியத்தை: திருவைந்தெழுத் தெனினுமாம்.

இரண்டு வினையால் விளைந்த—வகை
இரண்டையுங் காட்டிஎன் சென்னியின் மீதே
இரண்டு சரணமும் சூட்டி—அஞ்சில்
இரண்டை இரண்டில் அடக்கவல் லாராம்
ஆனந்தம் ஆனந்தம் தோழி. உ

உ. இரண்டுவினை—நல்வினை தீவினை. வகை இரண்டு—இன்பத் துன்பங்கள். அஞ்சில் இரண்டை இரண்டில் அடக்கல்—'சிவாய நம' என்னும் திருவைந் தெழுத்தில் மகரத்தைச் சிகரத்திலும் நகரத்தை வகரத்திலும் அடக்கல்.

மூன்றுல கும்படைப் பாராம்—அந்த
மூன்றுல கும்முட னேதுடைப் பாராம்
மூன்று கடவுளா வாராம்—அந்த
மூன்று கடவுளர் காணவொண் ணாராம்
ஆனந்தம் ஆனந்தம் தோழி. ௩

நாலு வருணம்வைப் பாராம்—பின்னும்
நால்வகை ஆச்சிர மங்கள்வைப் பாராம்
நாலுபா தங்கள்வைப் பாராம்—அந்த
நாலுக்கு நாலு பதமும்வைப் பாராம்
ஆனந்தம் ஆனந்தம் தோழி. ௪

௪. நாலுபாதம் — சைவாகமங்களின் உளவாகிய சரியை கிரியா யோக ஞானபாதங்கள். நாலுபதம்—சாலோக சாமீப்பிய சாரூப்பிய சாயுச்சியங்கள்.

அஞ்சு மலமஞ் சவத்தை—பூதம்
அஞ்சுதன் மாத்திரை அஞ்சிந் திரியம்
அஞ்சு தொழிலஞ்சு மாற்றி—எழுத்(து)
அஞ்சும் அஞ்சாக அமைக்கவல் லாராம்
ஆனந்தம் ஆனந்தம் தோழி. ௫

௫. மலம், அவத்தை, தூலபூதம், சூக்குமபூதம், பொறி, ஆற்றுந் தொழில், திருநாம எழுத்து என்பவற்றை ஐந்தைந்தாக அமைத்துள் ளமையை எடுத்தோதியபடி.

ஆறாறு தத்துவக் கூட்டம்—உடன்
ஆறத்து வாக்களும் ஆதார மாறும்
ஆறுகுற் றங்களும் நீங்க—இரண்(டு)
ஆறின் முடிவில் நடனஞ்செய் வாராம்
ஆனந்தம் ஆனந்தம் தோழி. ௬

௬. இரண்டாறின் முடிவு — முடியின்மேல் பன்னிரண்டங்குலம் அருவமாயுள்ள சுழுமுனையின் முடிவெனப்படும் துவாதசாந்தம்: இது 'மீதானம்' எனவும்படும்.

ஏழு புவனப் பரப்பும்—கடல்
ஏழுஞ் சிகரிகள் ஏழும் பெருந்தீ(வு)
ஏழுப் பிறவிகள் ஏழும்—இசை
ஏழும் படைத்த இறைவ ரிவராம்
ஆனந்தம் ஆனந்தம் தோழி, எ

எ. பெருந்தீவு ஏழு:— நாவலந்தீவு, சாகத்தீவு, குசத்தீவு, கிரௌஞ்சத்தீவு, சான்மலித் தீவு, கோமேதகத்தீவு, புட்கரத்தீவு என்பன.

உலகம் ஏழு:—பூலோகம், புவலோகம், சுவலோகம், மகலோகம், சனலோகம், தவலோகம், சத்தியலோகம் என்பன.

எட்டு வடிவமா வாராம்—அந்த
எட்டு வடிவுக்கும் எட்டரி யாராம்
எட்டுக் குணமுடை யாராம்—பத்தி
எட்டும் உடையோ ரிதயத்து ளாராம்
ஆனந்தம் ஆனந்தம் தோழி. அ

அ. எட்டுவடிவம்:—மண், புனல், தீ, காற்றுவெளி, ஞாயிறு, நிலவு, உயிர் என்பன. இவை இறைவனுக்கு வடிவங்களாம்.

எட்டுக்குணம்:—முற்றுணர்வு, வரம்பிலின்பமுடைமை, இயற்கை யுணர்வுடைமை, இயல்பாகவே பாசங்களினீங்குதல், தன்வயமுடைமை, பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை தூயவுடம்பினனாதல் என்பன.

எண்வகைப்பத்தி:—அடியார் பத்தி, சிவபூசை கண்டு மகிழ்தல், சிவார்ச்சனை, சிவார்ப்பணம் செய்தல், சிவபுராணம் கேட்டல், பரவச மாதல், சிவனடிமறவாமை, பொய்வேடமின்மை.

ஒன்பதும் ஒன்பதும் ஒன்றும்—மற்றை
ஒன்பதும் முப்பதும் ஒன்பதும் ஒன்றும்
ஒன்பதும் ஒன்பதும் ஒன்றும்—பின்னும்
ஒன்பதும் ஆனவைக் கப்புறத் தாராம்
ஆனந்தம் ஆனந்தம் தோழி. கூ

கூ. தத்துவங்கள் முப்பத்தாறும் தத்துவிகங்கள் அறுபதுமாகிய தொண்ணூற்றாறனையுங் கடந்த நிலையினன் முதல்வன் என்றபடி. $19+49+19+9=96$ எனக் கணக்கிட்டுக் கண்டுகொள்க.

பத்துத் திசையுடை யாராம்—பத்துப்
பத்துப்பத் தாந்திருப் பேருடை யாராம்
பத்துக் கரமுடை யாராம்—தவம்
பத்தினில் ஒன்றுபத் தாகச்செய் வாராம்
ஆனந்தம் ஆனந்தம் தோழி. கo

க0. பத்துப்பத்துப் பத்தாந்திருப்பேர்-ஆயிரந் திருப்பெயர். $10 \times 10 \times 10 = 1000$. தவம் பத்தினிலொன்று பத்தாகச் செய்வார் என்றபடி: எனவே "ஏகம் பத்தார்" என்னும் பெயர்க்கு நயம் பெறப் பொருள் விரித்தபடி.

*ஞானமும் ஞேயப் பொருளும்—பற்றும்*
*ஞாதாவும் இல்லையென் பார்க்கரி யாராம்*
*ஞானமும் ஞேயப் பொருளும்—பற்றும்*
*ஞாதாவு மாய்ப்பகுப் பார்க்குயெட்டாராம்* (ஆனந்தம்)கக

கக. பரமுத்தி நிலையாகிய சிவபோக அநுபவ நிலையில் உயிரும், உயிரினறிவு நிகழ்ச்சியும், முதற்பொருளும் உள்ளனவெனினும், யான் துய்க்கின்றேன் என்னும் சுட்டறிவு நிகழப் பெருமையின் காண்பானும் காட்சியும் காட்சிப்பொருளில் வியாப்பியமாய் அடங்கி நிற்கும் என்பது உணர்த்துகின்றது. இது.

'காண்பானும் காட்டுவதும் காண்பதுவும் நீத்துண்மை காண் பார்கள் நன்முத்தி காணார்கள்—காண்பானும் காட்டுவதுங் காண் பதுவும் தண்கடந்தைச் சம்பந்தன் வாட்டும்நெறி வாரா தவர்" என்னும் வினாவெண்பாவின் பொருளை விளக்குதல் காண்க.

*மெய்யில் அணிவதும் பாம்பு—மலை*
*வில்லினில் நாணாய் விசிப்பதும் பாம்பு*
*கையில் பிடிப்பதும் பாம்பு—அவர்*
*காட்டின நாடகம் காண்பதும் பாம்பு* (ஆனந்தம்) கஉ

கஉ. 'அவர்காட்டின நாடகம் காண்பதும் பாம்பு', என்றது-பதஞ் சலி முனிவரை.

*நாதத் துடியி னடிப்பும்—மெல்ல*
*நடந்து நடந்து நடிக்கும் நடிப்பும்*
*வேதம் படிக்கும் படிப்பும்—நுதல்*
*மீது விளங்கு குறுவேர்ப் பொடிப்பும்* (ஆனந்தம்) கங

*கையிற் கபாலத் தழகும்—திருக்*
*காலினிற் பாதுகை சேர்ந்த அழகும்*
*மெய்யணி நீற்றின் அழகும்—மையல்*
*மீறுங் குறுநகை மூர லழகும்* (ஆனந்தம்) கச

*உடுப்பது காவி உடையாம்—மறை*
*ஓதிமம் தேடும் சிரமேற் சடையாம்*
*எடுப்பது பிச்சை அமுதாம்—மார்பில்*
*ஏற்பது காமாட்சி கொங்கைச் சுவடாம்* (ஆனந்தம்) கரு

கரு. முதல்வன் உயிர்களுக்குப் போகமும் யோகமும் உதவுதற் பொருட்டுப் போகவடிவும் யோக வடிவுமாய்த் தம்முள் மாறுபட்ட வடிவங்களைத் தான் ஒருவனே கோடலின், அந்நிலை உலகத்தின் வைத்து அறியப்படாத அதிசய நிலையாகலின், அவன் அசிந்திதன் எனவும், அவன் உரு, உலகினை இறந்துநின்றதெனவும் உணர்க என உணர்த்தி யருளியபடி.

திருச்சிற்றம்பலம்.

திருச்சிற்றம்பலம்

# மூவர் திருமுறையுள் திருவேகம்பம் போற்றப்பெறும் இடம்

## முதல் திருமுறை

76 திரு இலம்பையங்கோட்டூர் 4
133 திருக்கச்சியேகம்பம்—பதிகம்

## இரண்டாந் திருமுறை

12 திருக்கச்சியேகம்பம்—பதிகம்
36 திருவிரும்பூளை 4
39 திருக்ஷேத்திரக்கோவை 1

## மூன்றாந் திருமுறை

41 திருக்கச்சியேகம்பம் (திருவிருக்குக்குறள்)
65 திருக்கச்சிநெறிக்காரைக்காடு (பஞ்சமம்)
114 திருக்கச்சியேகம்பம் (திரு இயமகம்)

## நான்காந் திருமுறை

| | | |
|---|---|---|
| திருவேகம்பம் | காந்தாரம் | பதிகம் |
| திருமேற்றளி | திருநேரிசை | ,, |
| திருவேகம்பம் | ,, | ,, |
| திருப்பருப்பதம் | திருநேரிசை | 7 |
| திருப்பெருவேளூர் | ,, | 6 |
| திருநாகைக்காரோணம் | ,, | 6 |
| திருவேகம்பம் | திருவிருத்தம் | பதிகம் |

## ஐந்தாந் திருமுறை

32 திருப்பூந்துருத்தி 1
47 திருவேகம்பம்—பதிகம்
48 ,, ,,
62 திருக்கடுவாய்க்கரைத் திருப்புத்தூர் 3
69 திருக்கருவிலிக்கொட்டிட்டை 9

## ஆறாந் திருமுறை

1 கோயில் 8
7 திருஅதிகைவீரட்டானம் 2

8 திருககாளத்தி 1, 2, 4, 6, 7, 9.
9 திருஆமாத்தூர் 8
12 திருக்கழிப்பாலை 7
16 திருவிடைமருதூர் 5
20 திருநள்ளாறு 5
22 திருநாகைக்காரோணம் 8
25 திருவாரூர் 6
30 ,, 7
31 ,, 2
37 திருவையாறு 7, 9
38 ,, 7, 9
40 திருமழபாடி 2
41 திருநெய்த்தானம் 4, 9
43 திருப்பூந்துருத்தி 3
44 திருச்சோற்றுத்துறை 5
50 திருவீழிமிழலை 4
51 ,, 5 (திருமேற்றளி ஏகம்பம்)
59 திருவெண்ணியூர் 9
62 திருவானைக்கா 6
63 ,, 8
64 திருவேகம்பம் பதிகம்
65 ,, ,,
66 திருநாகேச்சரம் 7
70 க்ஷேத்திரக்கோவை 4
74 திருநாரையூர் 4
76 திருப்புத்தூர் 5
78 திருவாலங்காடு 9
79 திருத்தலையாலங்காடு 5
80 திருமாற்பேறு 3, 4
82 திருச்சாய்க்காடு 7
83 திருப்பாசூர் 4, 7
84 திருச்செங்காட்டங்குடி 7
97 வினு விடை 7, 10 (கச்சிமயானம் கச்சிமேற்றளி)

பதிக எண்ணும் பா எண்ணும்

—:—

# திருஞானசம்பந்த நாயனர்

## திருக்கச்சியேகம்பம்

### பண் — இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

மறையானை மாசிலாப் புன்சடை மல்குவெண்
பிறையானைப் பெண்ணொடா ணாகிய பெம்மானை
இறையானை யேர்கொள்கச் சித்திரு வேகம்பத்
துறைவானை யல்லதுள் காதெனை துள்ளமே. 1

நொச்சியே வன்னிகொன் றைமதி கூவிளம்
உச்சியே புனைதல்வே டம்விடை யூர்தியான்
கச்சியே கம்பமே யகறைக் கண்டனை
நச்சியே தொழுமின்நும் மேல்வினை நையுமே. 2

பாராரு முழவமொந் தைகுழல் யாழொலி
சீராலே பாடலா டல்சிதை வில்லதோர்
ஏரார்பூங் கச்சியே கம்பனை யெம்மானைச்
சேராதா ரின்பமா யந்நெறி சேராரே. 3

குன்றேய்க்கு நெடுவெண்மா டக்கொடி கூடிப்போய்
மின்றேய்க்கு முகில்கள்தோ யும்வியன் கச்சியுள்
மன்றேய்க்கு மல்குசீ ரான்மலி யேகம்பம்
சென்றேய்க்குஞ் சிந்தையார் மேல்வினை சேராவே. 4

சடையானைத் தலைகையேந் திப்பலி தருவார்தம்
கடையேபோய் மூன்றுங்கொண் டான்கலிக் கச்சியுள்
புடையேபொன் மலருங்கம் பைக்கரை யேகம்பம்
உடையானை யல்லதுள் காதெனை துள்ளமே. 5

மழுவாளோ டெழில்கொள்சூ லப்படை வல்லார்தம்
கெழுவாளோ ரிமையாருச் சியுமை யாள்கங்கை
வழுவாமே மல்குசீ ரால்வள ரேகம்பம்
தொழுவாரே விழுமியார் மேல்வினை துன்னுவே. 6

விண்ணுளார் மறைகள்வே தம்விரித் தோதுவார்
கண்ணுளார் கழலின்வெல் வார்கரி காலனை
நண்ணுவா ரெழில்கொள்கச் சிநக ரேகம்பத்
தண்ணலா ராடுகின் றஅலங் காரம்மே. 7

தூயானைத் தூயவா யம்மறை யோதிய
வாயானை வாளரக் கன்வலி வாட்டிய
தீயானைத் தீதில்கச் சித்திரு வேகம்பம்
மேயானை மேவுவா ரென்தலை மேலாரே. 8

ஆ

நாகம்பூ ணேறதே றல்நறுங் கொன்றைதார்
பாகம்பெண் பலியுமேற் பர்மறை பாடுவர்
ஏகம்ப மேவியா டுமிறை யிருவர்க்கும்
மாகம்ப மறியும்வண் ணத்தவ னல்லனே. 9

போதியார் பிண்டியா ரென்றிவர் பொய்ந்நூலை
வாதியா வம்மினம் மாவெனுங் கச்சியுள்
ஆதியார் மேவியா டுந்திரு வேகம்பம்
நீதியாற் றொழுமின்நும் மேல்வினை நில்லாவே. 10

அந்தண்பூங் கச்சியே கம்பனை யம்மானைக்
கந்தண்பூங் காழியூ ரன்கலிக் கோவையால்
சந்தமே பாடவல் லதமிழ் ஞானசம்
பந்தன்சொற் பாடியா டக்கெடும் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்.

—:0:—

## திருநாவுக்கரசு நாயனர்

### ரு. திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்.

பண்டு செய்த பழவினை யின்பயன்
கண்டுங் கண்டுங் களித்திகாண் நெஞ்சமே
வண்டு லாமலர்ச் செஞ்சடை யேகம்பன்
தொண்ட னய்த்திரி யாய்துயர் தீரவே. 1

நச்சி நாளும் நயந்தடி யார்தொழ
இச்சை யாலுமை நங்கை வழிபடக்
கொச்சை யார்குறு கார்செறி தீம்பொழில்
கச்சி யேகம்ப மேகை தொழுமினே. 2

ஊனில் ஆவி இயங்கி உலகெலாம்
தானு லாவிய தன்மைய ராகிலும்
வானு லாவிய பாணி பிறங்கவெங்
கானி லாடுவர் கச்சியே கம்பரே. 3

இமையா முக்கண்ணர் என்நெஞ்சத் துள்ளவர்
தமையா ரும்மறி வொண்ணுத் தகைமையர்
இமையோ ரேத்த இருந்தவன் ஏகம்பன்
நமையா ளும்மவ னைத்தொழு மின்களே. 4

மருந்தி னேடுநற் சுற்றமும் மக்களும்
பொருந்தி நின்றெனக் காயஎம் புண்ணியன்
கருந்த டங்கண்ணி னுளுமை கைதொழ
இருந்த வன்கச்சி யேகம்பத் தெந்தையே. 5

*பொருளி னேடுநற் சுற்றமும் பற்றிலர்க்*
*கருளு நன்மைதந் தாயஅ ரும்பொருள்*
*சுருள்கொள் செஞ்சடை யான்கச்சி யேகம்பம்*
*இருள்கெ டச்சென்று கைதொழு தேத்துமே.* 6

*மூக்கு வாய்செவி கண்ணுட லாகிவந்*
*தாக்கும் ஐவர்தம் ஆப்பை அவிழ்த்தருள்*
*நோக்கு வான்நமை நோய்வினை வாராமே*
*காக்கும் நாயகன் கச்சியே கம்பனே.* 7

*பண்ணில் ஓசை பழத்தினில் இன்சுவை*
*பெண்ணொ டாணென்று பேசற் கரியவன்*
*வண்ண மில்லி வடிவுவே றுயவன்*
*கண்ணி லுண்மணி கச்சியே கம்பனே.* 8

*திருவின் நாயகன் செம்மலர் மேலயன்*
*வெருவ நீண்ட விளங்கொளிச் சோதியான்*
*ஒருவ னுய்உணர் வாய்உணர் வல்லதோர்*
*கருவுள் நாயகன் கச்சியே கம்பனே.* 9

*இடுகு நுண்ணிடை யேந்திள மென்முலை*
*வடிவின் மாதர் திறம்மனம் வையன்மின்*
*பொடிகொள் மேனியன் பூம்பொழிற் கச்சியுள்*
*அடிகள் எம்மை அருந்துயர் தீர்ப்பரே.* 10

*இலங்கை வேந்தன் இராவணன் சென்றுதன்*
*விலங்க லையெடுக் கவ்விர லூன்றலும்*
*கலங்கிக் கச்சியே கம்பவோ என்றலும்*
*நலங்கொள் செல்வளித் தானெங்கள் நாதனே.* 11

*திருச்சிற்றம்பலம்.*

## சுந்தரமூர்த்தி நாயனுர்

**பண் - தக்கேசி**

*திருச்சிற்றம்பலம்*

*ஆலந் தானுகந் தமுதுசெய் தானை ஆதி யைஅம ரர்தொழு தேத்தும்*
*சீலந் தான்பெரி தும்உடை யானைச் சிந்திப் பாரவர் சிந்தையு ளானை*
*ஏல வார்குழ லாள்உமை நங்கை என்றும் ஏத்தி வழிபடப் பெற்ற*
*கால காலனைக் கம்பன்எம் மானைக் காணக் கண்அடி யேன்பெற்றவாறே.*

*உற்ற வர்க்குத வும்பெரு மானை ஊர்வ தொன்றுடை யான்உம்பர் கோனைப், பற்றி னூர்க்கென்றும் பற்றவன் தன்னைப் பாவிப் பார்மனம் பாவிக்கொண் டானை, அற்றம் இல்புக ழாள்உமை நங்கை ஆத ரித்து வழிபடப் பெற்ற, கற்றை வார்சடைக் கம்பன்எம் மானைக் காணக் கண்அடி யேன்பெற்ற வாறே.*

திரியும் முப்புரம் தீப்பிழம் பாகச் செங்கண் மால்விடை மேல்திகழ் வானைக், கரியின் ஈருரி போர்த்துகந் தானைக் காம னைக்கன லாவிழித் தானை, வரிகொள் வெள்வளை யாள்உமை நங்கை மருவி ஏத்தி வழிபடப் பெற்ற, பெரிய கம்பனை எங்கள்பி ரானைக் காணக் கண்அடி யேன்பெற்ற வாறே. 3

குண்ட லந்திகழ் காதுடை யானைக் கூற்று தைத்த கொடுந்தொழி லானை, வண்ட லம்புமலர்க் கொன்றையி னானை வாள ராமதி சேர்சடை யானைக், கெண்டை யந்தடங் கண்ணுமை நங்கை கெழுமி ஏத்தி வழி-படப் பெற்ற, கண்டம் நஞ்சுடைக் கம்பன்எம் மானைக் காணக் கண்அடி யேன்பெற்ற வாறே. 4

வெல்லும் வெண்மழு ஒன்றுடை யானை வேலை நஞ்சுண்ட வித்தகன் தன்னை, அல்லல் தீர்த்தருள் செய்யவல் லானை அரும றைஅவை அங்கம்-வல் லானை, எல்லை யில்புக ழாள்உமை நங்கை என்றும் ஏத்தி வழிபடப் பெற்ற, நல்ல கம்பனை எங்கள்பி ரானைக் காணக் கண்அடி யேன்பெற்ற வாறே. 5

திங்கள் தங்கிய சடையுடை யானைத் தேவ தேவனைச் செழுங்கடல் வளரும், சங்க வெண்குழைக் காதுடை யானைச் சாம வேதம் பெரிதுகப் பானை, மங்கை நங்கை மலைமகள் கண்டு மருவி ஏத்தி வழிபடப் பெற்ற, கங்கை யாளனைக் கம்பன்எம் மானைக் காணக் கண்அடி யேன்பெற்ற வாறே. 6

விண்ண வர்தொழு தேத்தநின் றானை வேதந் தான்விரித் தோதவல் லானை, நண்ணி னார்க்கென்றும் நல்லவன் தன்னை நாளும் நாம்உகக் கின்றபி ரானை, எண்ணில் தொல்புக ழாள்உமை நங்கை என்றும் ஏத்தி வழிபடப் பெற்ற, கண்ணும் மூன்றுடைக் கம்பன்எம் மானைக் காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே. 7

சிந்தித் தென்றும்நி னைந்தெழு வார்கள் சிந்தை யில்திக ழுஞ்சிவன் தன்னைப், பந்தித் தவினைப் பற்றறுப் பானைப் பாலொ டான்அஞ்சும் ஆட்டுகந் தானை, அந்தம் இல்புக ழாள்உமை நங்கை ஆத ரித்து வழிபடப் பெற்ற, கந்த வார்சடைக் கம்பன்எம் மானைக் காணக் கண்அடி யேன்பெற்ற வாறே. 8

வரங்கள் பெற்றுழல் வாளரக் கர்தம் வாலி யபுரம் மூன்றெரித் தானை, நிரம்பிய தக்கன் றன்பெரு வேள்வி நிரந்த ரஞ்செய்த நிட்கண் டகனைப், பரந்த தொல்புக ழாள்உமை நங்கை பரவி ஏத்தி வழிபடப் பெற்ற, கரங்கள் எட்டுடைக் கம்பன்எம் மானைக் காணக் கண்அடி யேன்பெற்ற வாறே. 9

எள்கல் இன்றி இமையவர் கோனை ஈச னைவழி பாடுசெய் வாள்போல், உள்ளத் துள்கி உகந்துமை நங்கை வழிபடச் சென்று நின்றவா கண்டு, வெள்ளம் காட்டி வெருட்டிட அஞ்சி வெருவி ஓடித் தழுவ வெளிப்பட்ட, கள்ளக் கம்பனை எங்கள்பி ரானைக் காணக் கண்அடி யேன்பெற்ற வாறே. 10

பெற்றம் ஏறுகந் தேறவல் லானைப் பெரிய எம்பெரு மானென் றெப்போதும், கற்ற வர்பர வப்படு வானைக் காணக் கண்அடி யேன்-பெற்ற தென்று, கொற்ற வன்கம்பன் கூத்தன்எம் மானைக் குளிர்பொ ழில்திரு நாவலா ரூரன், நற்ற மிழ்இவை ஈரைந்தும் வல்லார் நன்னெ றிஉல கெய்துவர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்.

இது கண்பெற்ற திருப்பதிகம்

---

# திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர்

## திருநெறிக் காரைக்காடு

### பண் – பஞ்சமம்

---

திருச்சிற்றம்பலம்.

வாரணவு முலைமங்கை பங்கினராய் அங்கையினில்
போரணவு மழுவொன்றங் கேந்திவெண் பொடியணிவர்
காரணவு மணிமாடங் கடைநவின்ற கலிக்கச்சி
நீரணவு மலர்ப்பொய்கை நெறிக்காரைக் காட்டாரே. 1

காருரு மணிமிடற்றார் கரிகாடர் உடைதலைகொண்
டூருரன் பலிக்குழல்வார் உழைமானின் உரியதளர்
தேருரு நெடுவீதிச் செழுங்கச்சி மாநகர்வாய்
நீருரு மலர்ப்பொய்கை நெறிக்காரைக் காட்டாரே. 2

கூறணிந்தார் கொடியிடையைக் குளிர்சடைமேல் இளமதியோ
டாறணிந்தார் ஆடரவம் பூண்டுகந்தார் ஆன்வெள்ளை
ஏறணிந்தார் கொடியதன்மேல் என்பணிந்தார் வரைமார்பில்
நீறணிந்தார் கலிக்கச்சி நெறிக்காரைக் காட்டாரே. 3

பிறைநவின்ற செஞ்சடைகள் பின்தாழப் பூதங்கள்
மறைநவின்ற பாடலோ டாடலராய் மழுவேந்திச்
சிறைநவின்ற வண்டினங்கள் தீங்கனிவாய்த் தேன்கதுவும்
நிறைநவின்ற கலிக்கச்சி நெறிக்காரைக் காட்டாரே. 4

அன்றாலின் கீழிருந்தங் கறம்புரிந்த அருளாளர்
குன்றாத வெஞ்சிலையிற் கோளரவ நாண்கொளுவி
ஒன்றாதார் புரமூன்றும் ஓங்கெரியில் வெந்தவிய
நின்றாருங் கலிக்கச்சி நெறிக்காரைக் காட்டாரே. 5

பன்மலர்கள் கொண்டடிக்கீழ் வானோர்கள் பணிந்திறைஞ்ச
நன்மையிலா வல்லவுணர் நகர்மூன்றும் ஒருநொடியில்
வின்மலையில் நாண்கொளுவி வெங்கணையால் எய்தழித்த
நின்மலனார் கலிக்கச்சி நெறிக்காரைக் காட்டாரே. 6

புற்றிடைவாள் அரவினொடு புனைகொன்றை மதமத்தம்
எற்றொழியா அலைபுனலோ டிளமதியம் ஏந்துசடைப்
பெற்றுடையார் ஒருபாகம் பெண்ணுடை யார் கண்ணமரும்
நெற்றியினார் கலிக்கச்சி நெறிக்காரைக் காட்டாரே. 7

ஏழ்கடல்சூழ் தென் னிலங்கைக்கோமானை எழில்வரைவாய்த்
தாழ்விரலால் ஊன்றியதோர் தன்மையினார் நன்மையினார்
ஆழ்கிடங்குஞ் சூழ்வயலும் மதில்புல்கி யழகமரும்
நீண்மறுகிற் கலிக்கச்சி நெறிக்காரைக் காட்டாரே. 8

ஊண்டானும் ஒலிகடல்நஞ் சுடைதலையிற் பலிகொள்வர்
மாண்டார்தம் எலும்பணிவர் வரியரவோ டெழிலாமை
பூண்டாரும் ஓரிருவ ரறியாமைப் பொங்கெரியாய்
நீண்டாருங் கலிக்கச்சி நெறிக்காரைக் காட்டாரே. 9

குண்டாடிச் சமண்படுவார் கூறைதனை மெய்போர்த்து
மிண்டாடித் திரிதருவார் உரைப்பனகள் மெய்யல்ல
வண்டாருங் குழலாளை வரையாகத் தொருபாகம்
கண்டாருங் கலிக்கச்சி நெறிக்காரைக் காட்டாரே. 10

கண்ணாருங் கலிக்கச்சி நெறிக்காரைக் காட்டுறையும்
பெண்ணாருந் திருமேனிப் பெருமான தடிவாழ்த்தித்
தண்ணாரும் பொழிற்காழித் தமிழ்ஞான சம்பந்தன்
பண்ணாருந் தமிழ்வல்லார் பரலோகத் திருப்பாரே. 11

திருச்சிற்றம்பலம்.

## சுந்தரமூர்த்தி நாயனார்

### திருமேற்றளி

### பண் - நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

நொந்தா ஒண்சுடரே நுனையே நினைந்திருந்தேன்
வந்தாய் போயறியாய் மனமே புகுந்து நின்ற
சிந்தா யெந்தைபிரான் திருமேற்ற ளியுறையும்
எந்தாய் உன்னைஅல்லால் இனிஏத்த மாட்டேனே. 1

ஆள்தான் பட்டமையால் அடியார்க்குத் தொண்டுபட்டுக்
கேட்டேன் கேட்பதெல்லாம் பிறவாமை கேட்டொழிந்தேன்
சேட்டார் மாளிகைசூழ் திருமேற்ற ளியுறையும்
மாட்டே உன்னைஅல்லால் மகிழ்ந்தேத்த மாட்டேனே. 2

மோறாந் தோரொருகால் நினையா திருந்தாலும்
வேறா வந்தென்னுள்ளம் புகவல்ல மெய்ப்பொருளே
சேறார் தண்கழனித் திருமேற்றளி யுறையும்
ஏறே உன்னைஅல்லால் இனியேத்த மாட்டேனே. 3

உற்றூர் சுற்றமெனும் அதுவிட்டு நுன்னடைந்தேன்
எற்றா லென்குறைவென் இடரைத்து றந்தொழிந்தேன்
செற்றாய் மும்மதிலும் திருமேற்ற ளியுறையும்
பற்றே நுன்னையல்லால் பணிந்தேத்த மாட்டேனே. 4

எம்மான் எம்மனையென் றவரிட்டி றந்தொழிந்தார்
மெய்ம்மா லாயினதீர்த் தருள்செய்யு மெய்ப்பொருளே
கைம்மா ஈருரியாய் கனமேற்ற ளியுறையும்
பெம்மான் உன்னையல்லால் பெரிதேத்த மாட்டேனே. 5

நானேல் உன்னடியே நினைந்தேன்நி னைதலுமே
ஊனேர் இவ்வுடலம் புகுந்தாய்என் ஒண்சுடரே
தேனே இன்னமுதே திருமேற்ற ளியுறையும்
கோனே உன்னைஅல்லால் குளிர்ந்தேத்த மாட்டேனே. 6

கையார் வெஞ்சிலைநாண் அதன்மேற் சரங்கோத்தே
எய்தாய் மும்மதிலும் எரிஉண்ண எம்பெருமான்
செய்யார் பைங்கமலத் திருமேற்ற ளியுறையும்
ஐயா உன்னைஅல்லால் அறிந்தேத்த மாட்டேனே. 7

விரையார் கொன்றையினாய் விமலாஇனி உன்னைஅல்லால்
உரையேன் நாவதனால் உடலில்உயிர் உள்ளளவும்
திரையார் தண்கழனித் திருமேற்ற ளியுறையும்
அரையா உன்னைஅல்லால் அறிந்தேத்த மாட்டேனே. 8

நிலையாய் நின்னடியே நினைந்தேன்நி னைதலுமே
தலைவா நின்னினையப் பணித்தாய்ச லமொழிந்தேன்
சிலையார் மாமதில்சூழ் திருமேற்ற ளியுறையும்
மலையே உன்னைஅல்லால் மகிழ்ந்தேத்த மாட்டேனே. 9

பாரூர் பல்லவனூர் மதிற்காஞ்சி மாநகர்வாய்ச்
சீரூ ரும்புறவின் திருமேற்ற ளிச்சிவனை
ஆரூ ரன்அடியான் அடித்தொண்டன்ஆ ரூரன்சொன்ன
சீரூர் பாடல்வல்லார் சிவலோகம் சேர்வாரே. 10

*திருச்சிற்றம்பலம்*

---

**சுந்தரமூர்த்தி நாயனார்**

## திருக்கச்சியனேகதங்காவதம்

**பண் - இந்தளம்**

---

*திருச்சிற்றம்பலம்*

தேனெய்புரிந்துழல்செஞ்சடையெம்பெரு மானதிடந்திக ழைங்கணையக்
கோனையெரித்தெரி யாடியிடங்குல வானதிடங்குறை யாமறையாம்
மானையிடத்ததொர் கையனிடம்மத மாறுபடப்பொழி யும்மலைபோல்
யானையுரித்த பிரானதிடங்கலிக் கச்சியனேகதங் காவதமே. 1

கூறுநடைக்குழி கட்பகுவாயன பேயுகந்தாடநின் ஞேரியிட
வேறுபடக்குட கத்திலேயம்பல வாணனின்ருடல் விரும்புமிடம்
ஏறுவிடைக்கொடி யெம்பெருமானிமை யோர்பெருமானுமை யாள்கண
ஆறுசடைக்குடை யப்பனிடங்கலிக் கச்சியனேகதங் காவதமே. [வன்

கொடிகளிடைக்குயில் கூவுமிடம்மயி லாலும்மிடம்மழு வாளுடைய, கடிகொள்புனற்சடை கொண்டநுதற்கறைக் கண்டனிடம் பிறைத் துண்டமுடிச், செடிகொள்வினைப்பகை தீருமிடந்திரு வாகுமிடந்திரு மார்பகலத், தடிகளிடம்மழல் வண்ணனிடங்கலிக் கச்சியனேகதங் காவதமே.
3

கொங்குநுழைத்தன வண்டறைகொன்றையுங் கங்கையுந்திங்களுஞ் சூடுசடை, மங்குனுழைமலை மங்கையைநங்கையைப் பங்கினிற்றங்க வுவந்தருள்செய், சங்குகுழைச்செவி கொண்டருவித்திரள் பாயவியர்த்தழல் போலுடைத்தம், அங்கைமழுத்திகழ் கையனிடங்கலிக் கச்சியனேகதங் காவதமே.
4

பைத்தபடத்தலே யாடரவம்பயில் கின்றவிடம்பயி லப்புகுவார்
சித்தமொருநெறி வைத்தவிடந்திகழ் கின்றவிடந்திரு வானடிக்கே
வைத்தமனத்தவர் பத்தர்மனங்கொள வைத்தவிடம்மழு வாளுடைய
அத்தனிடம்மழல் வண்ணனிடங்கலிக் கச்சியனேகதங் காவதமே. 5

தண்டமுடைத்தரு மன்றமரென்றம ரைச்செயும்வன்றுயர் தீர்க்கும்மிடம், பிண்டமுடைப்பிற வித்தலேநின்று நினைப்பவராக்கையை நீக்குமிடம், கண்டமுடைக்கரு நஞ்சைநுகர்ந்தபி ரானதிடங்கடலேழுகடந், தண்டமுடைப்பெரு மானதிடங்கலிக் கச்சியனேகதங் காவதமே,
6

கட்டுமயக்க மறுத்தவர்கைதொழு தேத்துமிடங்கதி ரோனெளியால்
விட்டுமிடம்விடை யூர்தியிடங்குயிற் பேடைதன்சேவலொ டாடுமிடம்
மட்டுமயங்கி யவிழ்ந்தமலரொரு மாதவியோடு மணம்புணரும்
அட்டபுயங்கப் பிரானதிடங்கலிக் கச்சியனேகதங் காவதமே. 7

புல்லியிடந்தொழு துய்துமென்னுதவர் தம்புரமூன்றும் பொடிபடுத்த
வில்லியிடம்விர வாதுயிருண்ணும்வெங் காலனைக்கால்கொடு வீந்தவியக்
கொல்லியிடங்குளிர் மாதவிமவ்வல் குராவகுளங்குருக் கத்திபுன்னை
அல்லியிடைப்பெடை வண்டுறங்குங்கலிக் கச்சியனேகதங் காவதமே. 8

சங்கையவர்புணர் தற்கரியான்றள வேனகையாட் விராமிகுசீர்
மங்கையவண்மகி ழச்சுடுகாட்டிடை நட்டநின்ருடிய சங்கரனெம்
அங்கையனல்லன லேந்துமவன்கனல் சேரொளியன்னதோர் பேரகலத்
தங்கையவன்னுறை கின்றவிடங்கலிக் கச்சியனேகதங் காவதமே. 9

வீடுபெறப்பல வூழிகணின்று நினைக்குமிடம்வினை தீருமிடம்
பீடுபெறப்பெரி யோரதிடங்கலிக் கச்சியனேகதங் காப்பனிடம்
பாடுமிடத்தடி யான்புகலூர னுரைத்தவிம்மாலைகள் பத்தும்வல்லார்
கூடுமிடஞ்சிவ லோகனிடங்கலிக் கச்சியனேகதங் காவதமே. 10

திருச்சிற்றம்பலம்

**சுந்தரமூர்த்தி நாயனர்**

## திருஓணகாந்தன்றளி

**பண் – இந்தளம்**

---

திருச்சிற்றம்பலம்

நெய்யும்பாலுந் தயிருங்கொண்டு நித்தம்பூசனை செய்யலுற்ருர்
கையிலொன்றுங் காணமில்லைக் கழலடிதொழு துய்யினல்லால்
ஐவர்கொண்டிங் காட்டவாடி ஆழ்குழிப்பட் டழுந்துவேனுக்
குய்யுமாறென் றருளிச்செய்யீ ரோணகாந்தன் றளியுளீரே. 1

திங்கள்தங்கு சடையின்மேலோர் திரைகள்வந்து புரளவீசும்
கங்கையாளேல் வாய்திறவாள் கணபதியேல் வயிறுதாரி
அங்கைவேலோன் குமரன்பிள்ளை தேவியார்கோற் றட்டியாளார்
உங்களுக்காட் செய்யமாட்டோ மோணகாந்தன் றளியுளீரே. 2

பெற்றபோழ்தும் பெருதபோழ்தும் பேணியுங்கழ லேத்துவார்கள்
மற்ருேர்பற்றில ரென்றிரங்கி மதியுடையவர் செய்கைசெய்வீர்
அற்றபோழ்து மலர்ந்தபோழ்து மாபற்காலத் தடிகேளும்மை
ஒற்றிவைத்திங் குண்ணலாமோ ஓணகாந்தன் றளியுளீரே. 3

வல்லதெல்லாஞ் சொல்லியும்மை வாழ்த்தினும் வாய்திறந்தொன்
றில்லையென்னீ ருண்டுமென்னீ ரெம்மையாள்வான் இருப்பதென்நீர்
பல்லையுக்க படுதலையிற் பகலெலாம்போய்ப் பலிதிரிந்திங்
கொல்லைவாழ்க்கை யொழியமாட்டீ ரோணகாந்தன் றளியுளீரே. 4

கூடிக்கூடித் தொண்டர்தங்கள் கொண்டபாணி குறைபடாமே
ஆடிப்பாடி யழுதுநெக்கங் கன்புடையவர்க் கின்பமோரீர்
தேடித்தேடித் திரிந்தெய்த்தாலுஞ் சித்தமென்பால் வைக்கமாட்டீர்
ஓடிப்போகீர் பற்றுந்தாரீ ரோணகாந்தன் றளியுளீரே. 5

வாரிருங்குழன் வாணெடுங்கண் மலைமகள்மது விம்முகொன்றைத்
தாரிருந்தட மார்புநீங்காத் தையலாளுல குய்யவைத்த
காரிரும்பொழிற் கச்சிமூதூர்க் காமக்கோட்டமுண் டாகநீர்போய்
ஊரிடும்பிச்சை கொள்வதென்னே யோணகாந்தன் றளியுளீரே. 6

பொய்ம்மையாலே போதுபோக்கிப் புறத்துமில்லை யகத்துமில்லை
மெய்ம்மைசொல்லி யாளமாட்டீர் மேலைநாளொன் றிடவுங்கில்லீர்
எம்மைப்பெற்ருல் ஏதும்வேண்டீ ரேதுந்தாரீ ரேதுமோதீர்
உம்மையன்றே யெம்பெருமான் ஓணகாந்தன் றளியுளீரே. 7

வலையம்வைத்த கூற்றமீவான் வந்துநின்ற வார்த்தைகேட்டுச்
சிலையமைத்த சிந்தையாலே திருவடிதொழு துய்யினல்லால்
கலையமைத்த காமச்செற்றக் குரோதலோப மதவருடை
உலையமைத்திங் கொன்றமாட்டே னோணகாந்தன் றளியுளீரே. 8

வாரமாகித் திருவடிக்குப் பணிசெய்தொண்டர் பெறுவதென்னே
ஆரம்பாம்பு வாழ்வதாரூ ரொற்றியூரே லும்மதன்று
தாரமாகக் கங்கையாளைச் சடையில்வைத்த அடிகேளுந்தம்
ஊருங்காடு உடையுந்தோலே ஓணகாந்தன் றளியுளீரே. 9

ஓவணமே லெருதொன்றேறு மோணகாந்தன் றளியுளார்தாம்
ஆவணஞ்செய் தாளுங்கொண்டு அரைதுகிலொடு பட்டுவீக்கிக்
கோவணமேற் கொண்டவேடங் கோவையாகஆ ரூரன்சொன்ன
பாவணத்தமிழ் பத்தும்வல்லார் பறையுந்தாஞ்செய்த பாவந்தானே.

திருச்சிற்றம்பலம்.

இது பொன்பெற்ற திருப்பதிகம்



உ

# திருநாவுக்கரசு நாயனர்

## திருக்கச்சிமயானம்

### திருத்தாண்டகம்



திருச்சிற்றம்பலம்

மைப்படிந்த கண்ணாளுந் தானுங் கச்சி
மயானத்தான் வார்சடையான் என்னின் அல்லான்

ஒப்புடையன் அல்லன் ஒருவன் அல்லன்
ஓரூரன் அல்லன் ஓருவமன் இல்லி

அப்படியும் அந்நிறமும் அவ்வண் ணமும்
அவனருளே கண்ணாகக் காணின் அல்லால்

இப்படியன் இந்நிறத்தன் இவ்வண் ணத்தன்
இவனிறைவன் என்றெழுதிக் காட்டொ ணாதே.

திருச்சிற்றம்பலம்.





ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள்

சிவமயம்

# சிவஞான சுவாமிகள் வரலாறு

—:o:—

செந்தமிழ்ச் சங்கத் தலைமைப் புலவராய் வீற்றிருந்து சிவபிரானுர் அத்தமிழைப் பரப்பாநின்ற பாண்டி நன்னாட்டில் தமிழ் முனிவர் எழுந்தருளி இருக்கும் பொதிகை மலைச் சாரலிலே பாவநாசத் திருத்தலத்தைச் சார்ந்து பொருநை நதிக்கரையில் விக்கிரமசிங்கபுரம் என்னும் நற்பதி சிறந்து விளங்கியது.

அந்நற்பதியில் சைவ வேளாளர் நன்மரபில் வந்த ஆனந்தக் கூத்தர், கற்பிற் சிறந்து குறிப்பறிந்தொழுகும் தம் துணைவியார் மயிலம்மையொடும் வாழ்ந்து வந்தனர். மரபிரண்டுஞ் சைவநெறி வழிவந்த கேண்மையராய் இல்லறத்தை நல்லறமாய் நடாத்துங்கால், அகத்தியர் திருவருளை முன்னமே பெற்று ஏழு தலைமுறை அளவும் திருவருட் புலவர்களே மக்களாக வழிவழி வரும் அக்குடியில் அவ்வேழாவதாகும் வரப்பேற்றினுல் அவர் தங்கட்குச் சிவஞானச் செல்வராக நம் முனிவர் பெருமான் அவதரித்தனர்.

வரப்பிரசாதமாக வாய்த்த மகனுர்க்குத் தாய்தந்தையர் 'முக்களாலிங்கர்' எனப் பிள்ளைத் திருப்பெயரிட்டழைத்தனர். பாண்டி நாட்டுத் திருக்கருவைப் பதியில் முக்களாமரத்து நீழலில் எழுந்தருளி விளங்கும் சிவபிரானுர் திருவருளால் அப்பெயர் வாய்க்கப்பெற்ற மகவு இளம்பிறைபோல நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் உரிய காலங்களில் சாதகன்மம் முதலிய செய்யப்பெற்று வளர்வாராயினர்.

ஐந்தாண்டு நிரம்புகையில் முக்களாலிங்கர் பள்ளியிற் சேர்க்கப் பெற்றனர். முற்பிறப்புக்களிற் கலைஞானம் கைவரப் பெற்றிருந்த சிறிய பெருந்தகை நன்கு கல்வி பயின்று வந்தனர். அங்ஙனம் வருநாளில் ஓர்நாள் பள்ளியினின்றும் வீட்டிற்கு வரும் பொழுது, திருவாவடுதுறை ஆதீனத்து முனிவர் பெருமக்கள் சிலர் பாவநாசத்தை நோக்கிச் செல்லுதலைக் கண்ட முக்களாலிங்கர் ஆவின்பின் செல்லும் கன்றுபோல அன்புமீதூர்ந்து தொடர்ந்து போய் அம்முனிவரர்தம் திருவடிகளில் பணிந்தெழுந்து ஒருமருங் கொதுங்கி நின்று தம் வீட்டிற் கெழுந்தருளுமாறு குறை இரந்து வேண்டினர். சிறுவர்தம் சொல்லையும் செயலையும் ஒருங்கு நோக்கிய துறவோருள்ள நிலையை எங்ஙனம் எழுதிக்காட்ட இயலும். இன்சொல் லென்னும் விறல்கயிற்றில் விருந்தினரை வளைத்து உடன்கொண்டு சென்ற பருவச் சிறுவர் தம் பெருஞ்

செயலைக் கண்டு கண்டு மகிழ்ந்த தாயாராகிய மயிலம்மையார் எதிர் சென்று துறவோரை வணங்கி இன்சொற்கூறி வரவேற்றனர். தந்தையாராகிய ஆனந்தக்கூத்தர் அப்பொழுது வெளியே சென்றிருந்தனர்.

அந்நிலையில் மகனர் தம் தாயாரிடம் முனிவரர்க்கு விருந் தமுது படைக்க வேண்டினர். மகிழ்ந்த அன்னையார் அடியார் களுக்கு அமுதூட்டிக் களிப்பித்தனர். கற்புடைய மடவார் கடப் பாட்டில் ஊட்டுகையில் தாயின் சேயின் மனநிலையும் வாய்மொழி யும் திருத்தொண்டும் வாழ வாழ்த்தினர் ஆதீன முனிவரர்.

மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்துக் கண்மணிபூண்டு காவி உடுத்துத் தாழ்சடை பூண்டு விளங்கிய தவக்கோலத்தும் திரு வுள்ளச் சீலத்தும் தம்வயமிழந்து அவற்றின் வழிநின்ற முக்களா லிங்கர் அம்மையார் உபசரித்த காட்சியும் கூட மழலைச்சொல் லில் அருட்பாவாக வடிவெடுத்துத் துறவோர் திருச்செவி என்னும் மதகின் வழித் தேனூறலாகச் சென்று பெருக்கெடுத்தது. அது வருமாறு:

> "அருந்ததிஎன் அம்மை அடியவர்கட் கென்றும்
> திருந்த அமுதளிக்கும் செல்வி—பொருந்தவே
> ஆனந்தக் கூத்தர் அகமகிழத் தொண்டுசெயும்
> மானந் தவாத மயில்"

என்பதாம்.

நெட்டுருச் செய்த பாடலை ஒப்பக்கொண்டு முன்னறி தெய்வமாகிய அன்னையை முதற்கண் போற்றினர். திண்ணிய கற்புடைமையை 'அருந்ததி' எனவும், குடநீரட்டுண்ணும் இடுக்கட் பொழுதும் கடனீர் அற உண்ணும் விருந்தினர் வரினும் இடனில் பருவம் என்றொருப் புரவிற் கொல்காமையை 'என்றும்' எனவும், கடப்பாட்டில் ஊட்டும் வன்மையைத் 'திருந்த' எனவும், மடைத்திறத்தை 'அமுது' எனவும் இப்பேற்றினை இயல்பாக உடைமையைச் 'செல்வி' எனவும் தந்தை தாயார் பெயர் சிதைவு பெறாத சீர் அமைய 'ஆனந்தக்கூத்தர்' எனவும், 'மயில்' எனவும் தொண்டு செய்வோர் அகமும் செயப்படு வோர் அகமும் மகிழப் பொதுவாக அமைய 'அகம் மகிழ' எனவும் சிவபுண்ணிய மாக்குவார் 'தொண்டு' எனவும் தந்நிலையிற்றாழாமை யும் தாழ்வு வந்துழி உயிர்வாழாமையுமாகிய பெருமையை 'மானம்' கெடவந்துழியும் நீக்கி நிறுத்துவார் 'தவாத' எனவும் 'நல்ல என உறுப்புநூ லவர்உரைக்கும் நலமும், சாயலும் பெயரும் அடங்க 'மயில்' எனவும் கூறினர். இருவர்தம் செயலையும் முற்றக்கண்ட துறவோர் வாழ்த்தி விடைபெற்றுச் சென்று ஆங்கோர் திருமடத் தில் தங்கினர். வந்த தந்தையார் யாவும் அறிந்து மகிழ்ந்து புதல்வ ரொடும் சென்று துறவோரை வணங்கினர்.

முக்களாலிங்கர் தவச்செல்வர்களைப் பிரியமாட்டாராய்ப் பெரிதும் வருந்தக்கண்ட அத்தவத்தவர்கள் புதல்வரைத் தம்மொடும் அனுப்பக் கேட்டனர்.

தந்தை தாயார் பெறலரிய செல்வரைத் தம் உயிரினும் நன்கு மதித்தும் உலகோபகாரமாக வந்த மகனுரை அவர் விருப்பப்படி உடன்செல்ல இசைந்தனர்.

முனிவர்கள் முக்களாலிங்கரொடும் சுசீந்திரம் சென்று ஈசானமடத்தில் மூலமூர்த்தியாம் நமச்சிவாய மூர்த்திகளின் திருவுருவை வணங்கிப் பின்பு திருவாவடுதுறை ஆதீன சின்னப்பட்டம் வேலப்பதேசிகரை வணங்கி நின்றனர்கள்.

அத்தேசிக மூர்த்திகள் 'விளையும் பயிர் முளையிலே தெரியு மென விளங்கிய முக்களாலிங்கர் தம் இயல்புகளைக் கண்டும் கேட்டும் பாராட்டிச் சமயவிசேட தீக்கைகளைச் செய்து காவியுடை அணிவித்துத் துறவு நிலையை அடைவித்தனர்.

முக்களாலிங்கர் சிவமுயன்றடையும் தெய்வக் கலை பலவற்றையும் திருந்தக் கற்று வருகையில் அவர்க்குப் போதகாசிரியராயும் விளங்கிய வேலப்பதேசிகர் நிருவாண தீக்கையும் தந்து 'சிவஞானம்' எனத் தீட்சாநாமம் சூட்டினர்.

வடமொழியிலும் தமிழ் மொழியிலும் கற்றுவல்லராய நம் சிவஞான சுவாமிகள் இராசவல்லிபுரம் செப்பறை 'அகிலாண்டேசுவரி பதிகம்' அம்மை சந்நிதியில் ஆசிரியர் திருமுன்பு பாடியருளினர்.

வேலப்ப தேசிகரொடும் நம் சுவாமிகள் வழிபாடுசெய்து வருகையில் கோயமுத்தூருக்கு மூன்றுகல் தொலைவிலுள்ள மேலைச் சிதம்பரத்தில் வழிபாடுசெய்து தங்கியிருந்தபோது தேசிகர் அவர்கள் இறைவன் திருவடி நிழலை எய்தினர்.

ஆசாரியர்க்கு அங்கே அப்பொழுது செய்வன செய்து முடித்து வடிபாட்டிற்குத் தம்பிரான் ஒருவரை நியமித்துத் திருவாவடுதுறை ஆதீனத்தைச் சேர்ந்தனர் சுவாமிகள்.

நமச்சிவாய மூர்த்திகளின் திருவுருவை வணங்கிய சிவஞான சுவாமிகள் ஆதீனத்தில் விளங்கிய வேலப்ப தேசிகர்க்குத் தம் ஞானசிரியர் திருவடி கூடிய செய்தியை அறிவித்தனர்.

திருவாவடுதுறை ஆதீன வேலப்ப தேசிகர், தம்பிரான் வேலப்ப தேசிகரைச் சின்னப் பட்டத்திற்குக் கொணர்ந்து சில நாள் கழித்து அவரைச் சுசீந்திரம் திருமடத்தில் இருத்திச்

சிவஞானசுவாமிகளுடன் திரும்புகையில் சங்கரநயினர் கோயிலில் தங்கியிருந்து இறைவன் திருவடி நீழலிற் கலந்தனர்.

சுசீந்திரத்திலிருந்த சின்னப்பட்டம் வேலப்பதேசிகர், ஆசிரியர்க்குச் சங்கரன்கோயிலில் வழிபாடுகள் ஆற்றுவித்துப் பின்னர்த் திருவாவடுதுறையைச் சிவஞான முனிவருடன் அடைந்து திருச்சிற்றம்பலத் தம்பிரானைச் சின்னப் பட்டத்திற்குரியவராக்கித் தாம் பண்டார சந்நிதியாக எழுந்தருளியிருந்தனர்.

அக்காலத்தில் சிவஞான சுவாமிகள் பஞ்சாக்கர தேசிகர் மாலை, சங்கர நமச்சிவாயப் புலவர் நன்னூல் விருத்தியுரைத் திருத்தம், திருவாரூர் வைத்தியநாத தேசிகர் இயற்றிய இலக்கண விளக்கத்திற்கு மறுப்பாகிய இலக்கண விளக்கச் சூறாவளி, தம் ஆதீனத்தைச் சார்ந்தவர் எழுதிய மரபட்டவணையை மறுத்தெழுந்த தருமபுர ஆதீன நூலாகிய சித்தாந்த மரபு கண்டனத்திற்கு மறுப்பாகிய சித்தாந்த மரபு கண்டனக் கண்டனம் என்னும் நூல்களை இயற்றியருளினர்.

ஸ்ரீமாதவச் சிவஞான சுவாமிகள் ஆதீனத்துப் பண்டார சந்நிதியின் இசைவுபெற்றுத் திருவாவடுதுறையினின்றும் நீங்கி வழியிலுள்ள தலங்களை வழிபாடு செய்துகொண்டு சிதம்பரத்தை அடைந்து சிலநாள் தொடர்ந்து வழிபாடு செய்து வருங்கால் கொற்றவன் குடியில் உமாபதி சிவாச்சாரியரையும், (சிங்காரத் தோப்பு) திருக்களாஞ்சேரியில் மறைஞான சம்பந்தரையும் வணங்கித் திருப்பாதிரிப்புலியூரை அடைந்தனர். அங்கெழுந்தருளியுள்ள பாடலீஸ்வரர் திருநாவுக்கரசரைக் கடலினின்றும் கரையேற்றிய காரணத்தால் அவ் இடத்திற்குக் கரையேறவிட்ட குப்பம் எனவும் தமக்குக் கரையேறவிட்ட முதல்வர் எனவும் வழங்கப்பெறும் ஆங்கே செல்வரொருவர் பொற்கிழி ஒன்றைப் புலவரவையிற் காட்டிக் 'கறையேற விட்டமுதல் வாஉன்னை அன்றியுமோர் கதியுண்டாமோ' என்னும் ஈற்றடிச் செய்யுளைப் பாடிமுற்றுவிப்போர்க்கு இது பரிசில் ஆகும் என்றனர். பாடிப் பரிசில் பெறாது பொற்கிழி கிடந்த அந்நிலையில் அந்தணரொருவர் தம் முறையீட்டைக் கேட்டு அங்கெய்திய சிவஞான முனிவரர்

> "வரையேற விட்டமுதஞ் சேந்தனிட
> வுண்டனைவல் லினமென் றுலும்
> உரையேற விட்டமுத லாகுமோ
> எனைச்சித்தென் றுரைக்கில் என்னும்
> நரையேற விட்டமுத னுளவனுக்
> கொண்டுநறும் புலிசை மேவும்
> கரையேற விட்டமுதல் வாவுன்னை
> அன்றியும்மோர் கதியுண் டாமோ."

என்னும் செய்யுளை யாத்து அவ் வந்தணர் கைக்கொடுத்து அவர் வறுமையைத் தீர்த்தனர்.

தன்னடியார்க்குத் தோன்றாத் துணையாம் ஈசர் கழல் பணிந்து இடையுள்ள தலங்களை வணங்கிக் கொண்டே கச்சிமா நகரவர் செய்தவப் பயனாகக் காஞ்சியை அடைந்தனர் நம்மாதவப் பெருந்தகையார். அன்பர் சிலருடன் சென்று திருவேகம்பரையும் காமாட்சியம்மையையும் நாடொறும் வழிபட்டு வருவாராயினர்.

'கம்பராமாயண நூலுக்கு ஒப்பதும் உயர்ந்ததும் ஆகிய நூலொன்றும் தமிழில் இல்லை' எனச் செருக்கிக் கூறிய வைணவர் தம் தருக்கொழிய 'நாடிய பொருள்கை கூடும்' என்னும் முதற் பாவிற்குக் குற்றங்கள் பல காட்டி அவ்வைணவர்தம் குறையை நிறைவு செய்ய அக்குற்றங்களைப் பரிகரித்தனர். அந்நூலின் உயர்வை அறிந்து போற்றுதற்கும் உரியர் சுவாமிகள் போல்வா ரன்றித் தம்மை ஒப்பவர் அல்லர் எனப் போற்றிச் சென்றனர். அது 'கம்பராமாயண முதற் செய்யுட் சங்கோத்தர விருத்தி' என்னும் ஓர் சிறுநூலாய் அமைந்தது.

திருவண்ணாமலை ஞானப்பிரகாச முனிவர் சிவஞான சித்தி யார்க்குச் சிவசமவாதத்தைத் தழுவிய நிலையில் ஒருரை கண்டுள் ளனர். அம் மரபில் வந்த பண்டார சந்நிதிகளில் ஒருவர் தம் சீடருள் ஒருவரைச் சிவஞான சுவாமிகள்பால் விடுத்துச் சுவாமி களுடைய பொழிப்புரையைப் பழிக்குமுகமாகத் தம் கொள்கையை நிலைநிறுத்தச் சிவஞான சித்தியார் சுபக்கப் பாயிரத்துள் வரும் 'என்னை இப்பவத்திற் சேராவகை எடுத்து என்னும் பாவுள் 'எடுத்து' என்னும் சொல்லுக்குப் பொருளென்னை என வினவுவித் தனர். இவர் கருவியாக ஏவுவித்த பண்டார சந்நிதியின் உட் குறிப்பை உணர்ந்து எடுத்து' என்னும் சொல்லுக்குச் சிவசமவாத வுரை மறுப்பு நூலை எழுதினர். அப் பண்டார சந்நிதியார் மறுப் பெழுதக் கண்டு எடுத்தென்னும் சொல்லுக்கிட்ட வைரக்குப்பாயம் என்னும் நூலை வெளியிட்டதன் மேலும் ஞானப்பிரகாசர் உரை முழுவதும் பொருந்தாத போலியுரை என விளக்கச் சிவ சமவாத வுரை மறுப்பு என்னும் நூலையும் இயற்றினர்.

சர்வாத்ம சம்பு சிவாசாரியார், கஞ்சனூர் அரதத்த சிவா சாரியார், அப்பைய தீட்சிதர் ஆக மூவரும் முறையே இயற்றியுள்ள 'சித்தாந்தப் பிரகாசிகை,' 'சுலோக பஞ்சகம், 'சிவதத்துவ விவேகம்' என்னும் வடமொழி நூல்களை மொழிபெயர்த் தருளிச் செய்தும் தொல்காப்பியத்தில் பாயிரம் முதற் சூத்திரம் ஆக இரண்டனையும் நுண்பொருள் விளங்கத் தேற்றும் தொல்காப் பியச் சூத்திரவிருத்தி இயற்றியும் தமிழுலகிற் குதவினர்.

பின்பு காஞ்சியினின்றும் சென்னைக்குப் போய்ப் பெருஞ் செல்வராகிய மணலி சின்னையா முதலியார் அவர்களின் பேருதவி யால் சிவாகம சீலர்களாகிய சைவ அந்தணர்களைக் கொண்டு அவ் வாகமப் பொருள்களைச் சின்னாள் பயின்று வல்லராயினர் முனிவர் பெருமானார். திரு. முதலியாரிடத்தில் விடைகொண்டு காஞ்சியை அடைந்தனர்; சிவஞான போதப் பேருரையாம் மாபாடியத்தை இங்கு முற்றுப்பெறச் செய்தனர். திருவாவடுதுறைக்குச் சென்று சுவாமிகள் ஆதீன பண்டார சந்நிதி பின் வேலப்ப தேசிகரும் சின்னப்பட்டத்துத் திருச்சிற்றம்பல தேசிகரும் உடனிருப்பக் கூட்டிய அவையில் யாவரும் மகிழ்ந்து பாராட்ட மாபாடியத்தை விரித்துரைத்தனர்.

சுவாமிகள் மீளவும் வந்து காஞ்சியில் மாணவர்களுக்குப் பாடம் சொல்வதும் திருவேகம்பரை வழிபடுவதுமாக இருந்த காலத்தில், பின் வேலப்ப தேசிகர் திருப்பெருந்துறை சென்று தங்கியிருந்து இறைவன் திருவடி நீழல் எய்தப்பெற்றனர். திருச் சிற்றம்பல தேசிகர் பண்டார சந்நிதியாக அமர்ந்து அம்பலவாண தேசிகரைச் சின்னப்பட்டத்தில் அமர்த்தினர். மாதவச் சிவஞான சுவாமிகள் அவ்விழாவிற்குச் சென்று பங்குகொண்டு மீண்டும் காஞ்சியை நண்ணினர்.

மார்கழித் திங்களில் திருவெம்பாவை ஓது நாட்களில் திருத் தொண்டத் தொகை ஓதக் கூடாமையால் வருந்திய மெய்யன் பர்களின் குறை தீரத் திருத்தொண்டர் திருநாமக் கோவை நூல் செய்துதவினர் முனிவரர்.

திருமுல்லை வாயிலில் வழிபாடு செய்தகாலை 'வடதிரு முல்லை வாயில் அந்தாதியையும், குளத்தூரில் அங்ஙனே தரிசனம் நிகழ்ந்த பொழுது 'குளத்தூர்ப் பதிற்றுப் பத் தந்தாதியையும், சோமேசர் முதுமொழி வெண்பாவையும், அமுதாம்பிகை பிள்ளைத் தமிழை யும், இளங்காடு என்னும் தலத்தில் இளைசைப் பதிற்றுப்பத் தந்தாதி யையும் இயற்றியருளினர் சுவாமிகள்.

காஞ்சியில் மாணாக்கர் சூழ இருந்துழிக் கம்பர் அந்தாதி, திருவேகம்பர் ஆனந்தக களிப்பு என்னும் சிறு நூல்களை இயற்றி னர். காஞ்சியில் வாழ் பெருமக்கள் வேண்டுகோளுக்கு இசைந்து வடமொழியிலுள்ள காஞ்சிப் புராணத்தைத் தமிழில் மொழி பெயர்த் தருளினர்.

சுவாமிகள் தாம்மொழி பெயர்த்தருளிய காஞ்சிப் புராணத் தைப் புலவரவையில் அரங்கேற்றுங்கால் திருவேகம்பமுடையார் வணக்கத்தை முதற்கண் கூறாது திருச்சிற்றம்பல முடையார்

வணக்கம் முதற்கட் கூறிய தென்னென வினவிய புலவர்கள் முன்னிலேயில் சுவாமிகளின் தலேயாய மாணவராம் கச்சியப்ப முனிவரர் அவையிலிருந்த ஓதுவாரைத் திருவேகம்பர் தேவாரம் ஓதுமாறு கூறித் 'திருச்சிற்றம்பலம்' எனத் தொடங்கிய ஓது வாரைத் தடுத்து இத்தலம் பிருதிவி ஆகலின் பிருதிவி அம்பலம் தொடங்காமையே அமையும் என அறிவுறுத்தப் புலவர்கள் சுவாமிகளின் மாணவர் தம் மதிநுட்பங்கண்டு மகிழ்ந்தனர். இவ் வாருகக் காஞ்சிப் புராணம் அரங்கேற்றம் பெற்றுச் சிறந்தது.

சுவாமிகள் காஞ்சியில் தங்கியிருந்த காலங்களில் பல்வகை யினும் உதவி புரிந்துவந்த பிள்ளேயார் பாளேயம் மணியப்ப முதலியார் உதவியைக் காஞ்சிப் புராணத்துள் அமைத்தனராக வும் முதலியார் அதற்கு இசைவுதாராமையின் மாற்றினரெனவும் கூறுப. மேலும், முதலியார் கச்சியப்ப முனிவரருக்கும் அவ்வாறு வேண்டுவ யாவும் பொருளாலும் செயலாலும் முற்றுப்பெறுவித் தனர் என்ப.

தொட்டிக்கலேக் கேசவ முதலியார் என்னும் பெருஞ்செல்வ ராகிய மெய்யன்பர் விருப்பின்படி சுவாமிகள் அவருருக்கு உடன் சென்று அங்குக் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் சிதம்ப ரேசர்மீது கலேசைப் பதிற்றுப் பத் தந்தாதியும் அவ்வூர் விநாயகர் மீது செங்கழுநீர் விநாயகர் பிள்ளேத் தமிழும் பாடி அரங்கேற்றி அவரை மகிழ்வித்தனர்.

பின்பு சிலநாட்கள் கழித்துத் திருவாவடுதுறையை அடைந்து ஞானுசிரியரை வணங்கி அடியார்களோடும் கலந்திருந்து கி. பி. 1785க்கு ஒத்த மெய்கண்டான் யாண்டு 562, சாலிவாகன சகாத்தம் 1708 விசுவாவசு ஆண்டு சித்திரைத் திங்கள் எட்டாம் வைகல் ஞாயிற்றுக்கிழமை ஆயிலியம் கூடிய நன்னுளில் பகற் பொழுதில் இறைவன் திருவடி நீழலே எய்தினர்.

மன்னு விசுவா வசுவருட மேடமதி
உன்னிரவி நாட்பகலோ தாயிலியம்—பன்னுந்
திருவாளன் எங்கோன் சிவஞான தேவன்
திருமேனி நீங்கு தினம்.

22ஆம் பரிவிருத்தியில் வரும் விசுவாவசுச் சித்திரை 8ஆம் நாள் ஆயிலியம் கணித சோதிடத்திலும் கண்டது. இப்பொழுது 25ம் பரிவிருத்தி விசுவாவசு எதிர்வர இருத்தலின் இற்றைக்கு 178 ஆண்டுகள் முன்பு ஸ்ரீமாதவச் சிவஞான சுவாமிகள் இறைவன் திருவடி கூடியமையை உணர்த்தும்.

---

# மாதவச் சிவஞான சுவாமிகள் இயற்றிய நூல்கள்

1. தொல்காப்பியச் சூத்திரவிருத்தி
2. சங்கர நமச்சிவாயப் புலவர் எழுதிய நன்னூல் விருத்தி யுரைத் திருத்தம்
3. அகிலாண்டேசுவரி பதிகம்
4. இளசைப் பதிற்றுப்பத் தந்தாதி
5. கச்சி ஆனந்த ருத்திரேசர் பதிகம்
6. கலைசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ்
7. குளத்தூர் அமுதாம்பிகை பிள்ளைத் தமிழ்
8 குளத்தூர் பதிற்றுப்பத் தந்தாதி
9. சோமேசர் முதுமொழி வெண்பா
10. திருத்தொண்டர் திருநாமக் கோவை
11. திருமுல்லைவாயில் அந்தாதி
12. திருவேகம்பர் அந்தாதி
13. திருவேகம்பர் ஆனந்தக் களிப்பு
14. பஞ்சாக்கர தேசிகர் மாலை
15. காஞ்சிப் புராணம்
16. சித்தாந்தப் பிரகாசிகை
17. சிவ தத்துவ விவேகம்
18. சுலோக பஞ்சகம்
19. தருக்க சங்கிரகம் அன்னம் பட்டீயம்
20. சிவஞான சித்தியார் பொழிப்புரை [சுபக்கம்]
21. சிவஞான போதச் சிற்றுரை
22. சிவஞான மாபாடியம்
23. இலக்கண விளக்கச் சூறாவளி
24. எடுத்து என்னுஞ் சொல்லுக்கிட்ட வயிரக் குப்பாயம்
25. என்னை யிப்பவத்தில் என்னும் செய்யுட் சிவசமவாத மறுப்பு
26. கம்ப ராமாயண முதற் செய்யுள் சங்கோத்தர விருத்தி
27. சித்தாந்த மரபு கண்டனக் கண்டனம்
28. சிவசமவாத உரை மறுப்பு
29. தனிச் செய்யு ளுரை

**மாணவர்கள்**

திருதணிகைக் கச்சியப்ப முனிவர்
தொட்டிக்கலைச் சுப்பிரமணிய முனிவர்
காஞ்சிச் சிதம்பர முனிவர்
இலக்கணம் சிதம்பரநாத முனிவர்
காஞ்சி முத்துக்குமாரதேசிகர்
காஞ்சிச் சரவண பத்தர்
இராமநாதபுரம் சோமசுந்தரப் பிள்ளை
திருமுக்கூடல் சந்திரசேகர முதலியார்
காவாந்தண்டலம் அடைக்கலங்காத்த முதலியார்
கடம்பர் கோயில் கல்யாண சுந்தர உபாத்தியாயர்
இவர்கள் முதலாக மற்றும் பலர்



திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
இருபத்தொன்றுவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள்

சிவமயம்

# அணிந்துரை

**சித்தாந்த சிகாமணி திரு. க. வச்சிரவேல் முதலியார்,**
(தலைமை ஆசிரியர், பச்சையப்பன் உயர்நிலைப் பள்ளி, காஞ்சிபுரம்.)

### புராணமாவது யாது ?

புராணம் என்னும் சொல்லின் பொருள் முன் நடந்தது என்பது ஆகும். புராதனம் (பழைமை) என்னும் சொல்லின் திரிபே அது. புராணங்களுள் கூறப்படும் கதைகள் பெரும்பாலும் பழைய வரலாறுகளே ஆகும். ஆயினும், அவ்வரலாறுகள் காலந்தோறும் பலர் வாய்ப்பட்டுச் சிலபல மாறுதல்களைப் பெற்றே வருகின்றன. வருதலால், அவை புனைந்துரை, உருவகம், உயர்வு, நவிற்சி என்பவற்றோடு கலந்து, பொது மக்களது கற்பனை உணர்வைக் கவரும் வகையில் கவிஞர்களால் இயற்றப்பட்டு வழங்கி வருகின்றன.

### மக்களது உணர்வும் புராணமும்

மக்களது உளநிலையைப் பொதுவாக அறிவு, உணர்வு என இரு வகைப்பட வைத்து ஆராயலாம். அவற்றுள் அறிவு என்பது இலக்கணம், தருக்கம், அறிவியற்கலை என்பவற்றின் பயிற்சியால் வளர்ச்சியும் திருத்தமும் உறும். இவ்வறிவினும் உணர்வே பெரிதும் திருந்துதற்கு உரியது. ஏனெனின், மக்கள்தம் உணர்வே அவர்தம் செயல்களாகப் பரிணமித்து நன்மையும் தீமையும் பயப்பனவாக உள்ளன. இவ்வுணர்வு சிறந்த இலக்கியங்களின் பயிற்சியால்தான் வளமுறும். புராணங்கள் இலக்கியத்தின் ஒரு சிறந்த பகுதி ஆகும்.

### புராண நூல் தொகுப்பின் தொன்மை

புராணம் எனப்படும் நூல் தொகுப்பு மிகப் பழங்காலத்திலேயே ஏற்பட்டிருக்கவேண்டும் எனத் தெரிகின்றது. அது, மிகப் பழங்காலத்தில், வேதங்களுக்கு அடுத்த நிலையில் சிறப்புக் கொடுக்கப்பட்டு நன்மக்களால் ஓதியுணரப்பட்டது என்பதில் ஐயம் இல்லை. சாந்தோக்கியம் என்னும் உபநிடத்தில் நாரதர் உபதேசம்பெற்ற வரலாறு கூறப்படுகிறது. நாரதர் சனற்குமாரமுனிவரை அடுத்துத் தமக்கு உறுதி உரைத்தருளவேண்டும் என்றார்:—

சனற்குமாரர்: உமக்குத் தெரிந்தவை இன்னவை என்பதைக் கூறுக; பின்னர், யாம் அவற்றிற்கு மேம்பட்டதனை அறிவுறுத்துவோம்.

நாரதர்: பெருமானே! இருக்குவேதம், யசுர்வேதம், சாமவேதம், நான்காவதாக அதர்வவேதம், ஐந்தாவதாக இதிகாசபுராணம்,............... இவையிற்றைக் கற்றுளேன் — என்பது அவர்களுக்கு இடைநிகழ்ந்த பேச்சு.

இப் பேச்சிற்போல, உபநிடதங்களில் பல இடங்களில் இதிகாச புராணம் என்னும் தொடர் வருகின்றது. இதனால், புராணங்கள் வேதங்

களோடு ஒத்துச் சிறப்புள்ளவை என்பதும், அவற்றை அடுத்துப் பயிலப் பட்ட பழமை உடையவை என்பதும் இனிது விளங்கும். இதிகாசம் புராணம் என்பதில் அடங்கும் என்பது பெரியோர் கொள்கை.

### புராணங்களின் உயர்வு

சமய உணர்வுள்ள நன்மக்கள் புராணங்களை உயர்வாகக் கருது கின்றனர். அருணந்தி சிவனார் என்னும் பேராசிரியர் "சிறப்புடைய **புராணங்கள்** உணர்ந்தும் சென்றால் சைவத் திறத்தடைவர்" எனப் **புராணங்களை உண்மை ஞானம்** கைவருதற்கு வாயிலாகக் கூறுகின்றார். சமயக் கண்கொண்டு காண்போர் புராணங்களை வேதப்பொருளை விளக்க வந்தனவாகக் கருதுகின்றனர். "புராணமாவது பரமசிவன் உலகத்தைப் படைத்தல், காத்தல், அழித்தல் முதலியவற்றைக் கூறும் வேதவாக்கி யங்களின் பொருள்களை வலியுறுத்தி விரித்து அறிவிப்பது; அஃது உலகத் தினது தோற்றம், ஒடுக்கம், பாரம்பரியம், மனுவந்தரம், பாரம்பரியக் கதைகள் என்னும் இவ்வைந்தையும் கூறும்: இக் காரணம்பற்றிப் புராணம் பஞ்சலக்கணம் எனவும் பெயர் பெறும்" என்பது சமயநூல் உணர்ந்தோர் கூறும் கூற்று.

இங்கு மகாபாரதம் ஆதிபருவத்தில் வரும் ஒரு தொடர் அறியத் தக்கது:— "அற்பக் கேள்வியினையுடைய சிறியோன் தனக்குத் தீங்கு விளைப்பான் என வேதம் அஞ்சுகிறது! (ஆதலால்) இதிகாசபுராணம் கொண்டு வேதத்தை நன்கு உபப்பிருங்கணம் செய்க;" என்பது அத் தொடர். இதனால் வேதவாக்கியங்களை இலக்கிய இலக்கண தருக்க ஞானம் மட்டும் கொண்டு ஆராயப் புகுதல் செய்யத்தக்கதன்று; மற்று; இதிகாசம் புராணம் என்பவற்றில் வரும் விளக்கங்களை மனத்திற் கொண்டு மரபு உணர்ந்து (சம்பிரதாயம் தெரிந்து) பொருள் செய்ய வேண்டும் என்பது விளங்கும்.

இக்கருத்தையே கந்தபுராணத்துப் பாயிரப் படலத்துவரும் பின் வரும் பாட்டும் உணர்த்துகின்றது:

> **அன்னதோர் மறையினை அறிந்தும் ஐயமா**
> **உன்னிய நிலையினா உள்ளந் தேறவும்**
> **அன்னவர் அல்லவர் மரபிற் றேரவும்**
> **இன்னும்ஓர் மறையுள(து) இதுவும் கேண்மதி**
> ... ... ... ... ... ...
> **[என்பெயர் அதற்கெனின் இனிது தேர்ந்துளோர்**
> **துன்பம தகற்றிடு தொல்பு ராணமாம்]**

### புராணம் தரும் பயன்

ஒரு நாட்டில் முற்றக் கற்றுணரும் தலையாய அறிவினர் சிலராகத் தான் இருக்கக்கூடும். ஆயினும், அவர்தம் அனுபவங்களை அந்நாட்டில் உள்ள பிறரெல்லாரும் பெறுதல் வேண்டும். பெற்றால்தான் நாட்டில் உணர்ச்சி இணைப்பு (Emotional integration), ஒருமைப்பாடு, முன்னேற் றம் என்பவை இருக்கும். இது பண்டும் இன்றும் என்றும் உள்ள நடை

முறை அறிவு (Practical wisdom) இவ்வுண்மையைக் கடைப்பிடித்தே வேதவியாசர் நான்கு மாணுக்கர் மூலம் நான்கு வேதங்களேயும் உலகில் பரப்பியதோடு அமையாது,பதினெண் புராணங்களேயும் கேட்டுணர்ந்து சூதமுனிவர் மூலம் உலகிற் பரப்பினுர். சுருங்கக் கூறின், உயர்ந்த கருத்துக்களே எல்லோரும் உணரும்படி எளிமையாகவும் இனிமையாக வும் உணர்த்துவனவே புராணங்கள் ஆகும். ஆதலால், புராணங் களுக்கு இலக்கியத்திலும் சாத்திரத்திலும் ஒரு சிறந்த இடம் என்றும் இருக்கும் என எண்ணலாம்.

திருக்குறள், திருமுருகாற்றுப்படை, பரிபாடல் முதலியவற்றுள் புராணக் கதைகள் வருவதை உணர்ந்தால், புராணங்களேக் குறைவாக எண்ணி மதிக்க ஒருவரும் ஒருப்படார்.

மேற்கூறிய உயர்வும், பயனும் உள்ளனவளய், நம் நாட்டின் பழைய நாகரிகத்தையும், பண்பாட்டினேயும், மக்களின் பலதலேப்பட்ட உணர்வு நெறிகளேயும் சொல்லோவியஞ் செய்து காட்டும் புராணங் களுள் காஞ்சிப்புராணமும் ஒன்று ஆகும்.

இது திராவிட மாபாடிய கருத்தராகிய மாதவச் சிவஞான சுவாமிகளால் இயற்றப்பெற்றது. இலக்கிய இலக்கணச் செறிவும், கற்பனேத் திறனும் உள்ளது.

பொதுவாகச் சிவபுராணங்கள் எல்லாம் வேத உபப்பிருங்கணம் எனப்படினும் அத்தன்மையில் தலேசிறந்து விளங்குபவை கந்தபுராண மும் சிவஞான சுவாமிகளால் இயற்றப்பெற்ற காஞ்சிப் புராணமுமே என எடுத்துக்கூறுதல் மிகையாகாது. கந்தபுராணத்திலுள்ள வரலாறு களெல்லாம் காஞ்சிப் புராணத்திலமையும்; காஞ்சிப் புராணத்திலுள்ள வரலாறுகள் அனேத்தும் கந்தபுராணத்தில் அமைந்துள்ளன. ஆயினும் முன்னேயது மிக விரிந்த பார காவியமாய்க் கலேஞானங்களின் எல்லேயை ஆங்காங்கு வரையறுத்து விளக்கிச் செல்வது. காஞ்சிப் புராணம் கலேஞானத்தின் தெளிவாய் அமைந்து மக்களுணர்வைச் சிவநெறியின்கண் செவ்விதின் உய்ப்பது. வேத மந்திரங்களேயும் உப நிடதத் தொடர்களின் பொருளேயும் ஆங்காங்குத் தெரித்துரைப்பது. இது தமிழ்ப் புலமை நிரம்ப விரும்புவோரும், சித்தாந்த சைவ நுண் பொருள்களே உணர்ந்து இன்புறக் கருதுவோரும் இன்றியமையாது ஓதி உணர்தற்குரியது,

இப்புராணம் இதற்குமுன் பல பெரியோர்களால் பலவகையில் அச்சிடப்பட்டு மக்களுக்குக் கிடைத்துள்ளது. ஆயினும், இஞ்ஞான்று இதனேப் பெற்றுக் கற்றுணர விரும்புவோர்க்குப் பிரதிகள் சென்ற பத்தாண்டுகளுக்குமேலாகக் கிடைத்தல் அரிதாயிற்று. ஆதலினுல் இதனேக் காஞ்சிபுரம் மெய்கண்டார் கழக ஆசிரியரும் முதுபெரும் புலவருமாகிய அருட்டிரு. பொன். குமாரசாமி அடிகள் அவர்கள் தம் முதுமைப் பருவத்தே அச்சிட்டுப் பலருக்கும் கிடைக்கும்படி செய்ய முன்வந்தது போற்றுதற்குரியது. அவர்கள் காஞ்சிபுரத்தில் பரம்பரை

வித்வான்கள் மரபில் வந்த உயர்திரு. நாராயணசாமி முதலியார் அவர்களிடத்தில் காஞ்சிப் புராணமும் சைவ சித்தாந்த சாத்திரங்களும் முறையாகப் பாடங் கேட்டவர்கள். அன்னோர் தமது முன்னைநிலைத் திருமகனுரைக் கொண்டு செய்யுள்களுக்குப் பொழிப்புரை முதலியன எழுதுவித்ததும் மகிழ்ச்சிக் குரியது.

வரன் முறையில் பாடங்கேட்போர் தொகை குன்றி வருதலின் இத்தகைய சம்பிரதாய கிரந்தங்களுக்கு உரை வகுக்கும்போது பின் பின் வருவோர் முன்முன் வந்தோரை விஞ்சுதல் இயல்பே. தழுவக் குழைந்த படலத்தில் விந்தம் ஓங்கி எழுந்தமையைக் குறிக்குமிடத்து 'மால்வரை வீயும் எல்லை விளக்கினைச் செத்திறப்ப வளர்ந்தெழுந்து விசும்பு சென்று நிவந்ததால்' என்னும் தொடர் வருகின்றது. இதற்கு விளக்கில் விழுந்திறக்கும் விட்டிற் பூச்சியைப்போல விந்தம் ஓங்கி எழுந்தது என முன் உரைகாரர்கள் உரைத்து வந்தனர். 'வீயும் விளக்கினைச் செத்து' என்னும் தொடரில் செத்து என்பது உவம உருபு என்பதை ஸ்ரீமத் ஞானியார் சுவாமிகள் அணுக்கமாக இருந்த புலவர்களுக்கு விளக்கி வந்தார்கள். அதனால்தான் அத்தொடர்க்கு 'அவியும் போது திரிபடர்ந்து எரியும் விளக்குப்போல' என்னும் உண்மைப் பொருள் பின்பதிப்பில் வெளிவருவதாயிற்று. அதுபோலப் பதிகம் இரண்டாம் பாட்டில், 'கன்னியாழ்க் கிழவன் வரம்பெறுகாரைக் காட்டினில்' என்னும் தொடரின் பொருள் யூகமாக எழுதப்பட்டு வந்தது. கன்னியாழ்க் கிழவன் என்பது கன்னி ராசிக்கும் மிதுன ராசிக்கும் உரிய புதன் என்னும் கருத்தில் வந்துள்ளது என்பதை எடுத்துரைத்தவர் பெருநகர் வித்துவான். தில்லை முதலியார் அவர்கள் ஆவார்கள். அம் மெய்யுரை இப்பதிப்பின்கண் கொடுக்கப்பட்டுள்ளது. இவற்றைப்போல் அறிஞர்கள் தாம்தாம் ஆராய்ந்து காணும் நுண்பொருள்களைத் திரட்டு தல் நம்மனோர் கடன்.

இப்புராணம் வேத மந்திரங்களின் உண்மைப் பொருள்களை ஆங்காங்கு விளக்கிச் செல்வதாக இருத்தலின் ஆதீனங்களில் தக்க வடமொழிப் புலவர்களும் செந்தமிழ்ப் புலவர்களும் சைவசித்தாந்த சாத்திரம் உணர்ந்தோறும் ஆகிய புலவர் குழுவினைத் தக்க ஊதியம் கொடுத்து நிரந்தரமாக ஏற்படுத்திப் பதிப்பிக்க வேண்டியதொன்று. ஆயினும், அவர்கள் செய்யவேண்டிய வேலையைக் காஞ்சிமா நகரத்தைச் சார்ந்த ஒருவர் தமது ஆர்வமே காரணமாக எடுத்து முடித்திருப்பது போற்றற்குரியது.

இதனைப் பதிப்பித்தோரும், பொழிப்புரைத்தோரும் பொருளுதவினோரும் வாங்கிப் பயன்பெறுவோரும் தழுவக்குழைந்த பெருமான் திருவருளால் எல்லா நலங்களும் நிரம்பப் பெறுவர் என்பது திண்ணம்.

**ஞாலம்நின்புக ழேமிக வேண்டுந்தென்**
**ஆலவாயி லுறையும்எம் ஆதியே.**

காஞ்சிபுரம்,
5-8-'63.

**க. வச்சிரவேல் முதலியார்,**

சிவமயம்

# அணிந்துரை

தருமை யாதீனத் தமிழ்ப் புலவர்
**சித்தாந்தக்கலைமணி வித்துவான் திரு. சி. அருணைவடிவேலு முதலியார்,**
தருமபுரம்.

மக்கள் அடையும் உறுதிப் பொருள்களாகிய அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கனுள், 'பரம புருடார்த்தம்' எனப்படும் வீடுபேற்றினைத் தருவது மெய்ந்நெறியே. அம் மெய்ந்நெறியை உணர்த்தும் நூல்கள் பல திறத்தன. அவற்றுள் புராணங்கள் சிறந்தெடுத்துக் கூறப்படும். பழம் பொருள்களைக் கொண்டு விளங்குதலால், புராணங்கள் அப்பெயர் பெற்றன. எனவே, புராணங்களை உணர்வதனாலேயே மெய்ந்நெறியின் தொன்னிலையை நாம் உணர்தல் கூடும் என்பது பெறப்படும். இச்சிறப்புக் கருதியே புராணங்களை, "சிறப்புடைய புராணங்கள் உணர்ந்தும்" என்றார் அருணந்தி தேவ நாயனார். மாணிக்க வாசகரும் திருவாசகத்தின் முதற்றிருப்பாட்டினை, 'சிவபுராணம்' எனக் குறித்தருளினமை கருதற்பாலது.

இன்ன சிறப்புடையனவாய், 'பதினெட்டு' என்னும் தொகையினைப் பெற்று விளங்கும் புராணங்களின் பகுதிகள், இஞ்ஞான்று பல தல புராணங்களாய் விளங்குகின்றன. எண்ணிறந்த தல புராணங்களுள் சிறப்புடைய தல புராணங்கள் சில. அவற்றுள்ளும் இன்றியமையாது குறிப்பிடத் தக்க தல புராணங்கள் மிகச் சிலவே. அம் மிகச் சிலவற்றுள்ளும் சிறப்பு வாய்ந்த தலபுராணம் காஞ்சிப் புராணம்.

ஒருவகையில், 'ஆரூர், தில்லை, காசி' முதலிய தலங்களே தலங்களுட் சிறந்தனவாகக் குறிக்கப்படினும், மற்றொரு வகையில் காஞ்சியே சிறந்தது என்பது ஆன்றோர் அனைவர்க்கும் உடன்பாடு. அஃதாவது, எழுந்தருளியிருக்கும் இறைவனது அருள்நிலை பற்றிப் பிற தலங்கள் உயர்ந்தன வாயினும், அவனை அடைவிக்கும் நிலைபற்றிக் காஞ்சி சிறப்புடையது என்பதாம்.

உலகம் உய்தற் பொருட்டு, இறைவி திருக்கைலையினின்றும் போந்து, எண்ணான்கு அறங்களை வளர்த்து, இறைவனை என்றும் ஏத்தி வழிபட்டுக்கொண்டிருக்கும் பெருமை காஞ்சி ஒன்றிற்கே உண்டு. அதனாலேயே உருத்திரர் பலரும் அயன் மாலாதி அளவற்ற தேவர்களும், அகத்தியர் மார்க்கண்டேயர் முதலிய பற்பல முனிவர்களும், யோகாசாரியர்களும், பிறரும் காஞ்சியை அடைந்து இறைவனை வழிபட்டுப் பேறு பெற்றனர். அவர்களால் வழிபடப்பட்ட தலங்கள் பலவும் காஞ்சியில் நிரம்பியுள்ளன. இத்துணைத் தலங்களை உள்ளடக்கிய பெருந்தலம் காஞ்சியைத் தவிர மற்றொன்று இல்லை என்பது உலகம் அறிந்து மகிழும் உண்மை. காஞ்சித் தலம் இத்தகு சிறப்புடையது ஆதலின், அதன் புராணமும் அத்தகைய சிறப்புடையதாய் விளங்குதல் இயல்பே.

அதற்கேற்ப அப் புராணத்தைத் தமிழிற் பாடியருளிய ஆசிரியரும் மிகச் சிறப்புடையவராய் அமைந்தமை மேலும் மகிழ்ச்சிக்குரிய ஒன்று.

காஞ்சித் தலபுராணம் இரண்டு பகுதிகளை உடையது; அவை இரண்டும், 'இரண்டு காண்டங்கள்' எனப்படுகின்றன. எனினும், உண்மையில் அவை இரண்டும் இரண்டு தனி நூல்களே. அவை இரண்டிற்கும் வடமொழி முதல் நூல்கள் வேறு வேறே. தமிழ்க் காஞ்சிப் புராணத்தின் முதற்பகுதி, திருவாவடுதுறை ஆதினத்து மாதவச் சிவஞான யோகிகளாலும், இரண்டாம் பகுதி, அவர்தம் மாணுக்கர் கச்சியப்பமுனிவரராலும் பாடியருளப்பெற்றன.

காஞ்சிப் புராணத்தின் முதற்பகுதியே மிக்க பொருள்களையுடையது. அதனுல், அஃது ஒன்றே, 'காஞ்சிப் புராணம்' எனப் பலராலும் போற்றப்படுகின்றது. அதன்கண் எப்புராணங்களின் பொருளையும் காணலாகும். அதனை இயற்றியருளிய ஆசிரியர், வடநூற் கடலும் தென்னூற்கடலும் நிலைகண்டு உணர்ந்தமையோடு, சிவஞான போதத்திற்கு அரும்பேருரையாகிய மாபாடியம் வகுத்த மாண்பினராதலின் வேத சிவாகமப் பொருள்கள் பலவும் நிறைந்து விளங்குமாறு அதனை ஆக்கி அளித்துள்ளார். அதனுல், சைவநெறியினை உணர விரும்புவோர் பலராலும் அப்புராணம் இன்றியமையாது ஓதியுணரப் பெற்று வருகின்றது.

இப் புராணத்திற்குப் பதவுரை விசேட உரைகளுடன் கூடிய பழைய பேருரை ஒன்று உண்டு; அதன் முற்பகுதி சோடசாவதானம் சுப்பராயச் செட்டியார் அவர்களாலும், பிற்பகுதி காஞ்சி ஆலால சுந்தரம் பிள்ளையவர்களாலும் எழுதப்பட்டன. அவ்வுரை மிக விரிந்ததாய் விளங்கியிருந்து பின்னர்க் கிடைத்தல் அரிதாயிற்று. அது போழ்து என்னுல் எழுதப்பட்ட குறிப்புரை உரைநடைகளுடன் அப் புராணத்தைக் காஞ்சிபுரம் மெய்கண்டார் கழகத்தினர் 1937-ம் ஆண்டில் வெளியிட்டனர். அதுவும் பல ஆண்டுகளாகக் கிடைத்தல் அரிதாகிவிட்டது. அதனுல், இரண்டாவது பதிப்பாக அதனை வெளியிட வேண்டும் என்று பலர் சொல்லிவந்தனர். பொருள் கைகூடாமையால் அவ்வெளியீடு செய்யப்பெறவில்லை.

இந்நிலையில் அப்புராணத்தைக் காஞ்சிபுரம் தவத்திரு. பொன். குமாரசுவாமி அடிகளார், தம் முன்னை ஆச்சிரமத் திருமகனுர் திரு. பொன். சண்முகனுர் அவர்களைக் கொண்டு எழுதுவித்துத் தெளிவான சுருங்கிய பொழிப்புரையுடன் வெளியிடுவது மகிழ்ச்சிக்குரியதாகும். தவத்திரு. அடிகளார் அவர்கள் காஞ்சிப் புராணத்தின் இரண்டாங் காண்டத்தை முன்னரே திரு. சண்முகனுர் அவர் எழுதிய குறிப்புரையுடன் வெளியிட்டுள்ளார்கள். அதனுடன் அப்புராணத்தின் முதற் காண்டத்தையும் இப்பொழுது பொழிப்புரையுடன் வெளியிடுகின்றுர்கள்.

திரு. பொன். சண்முகனார் அவர்கள் இயற்கை மதிநுட்பத்தோடு, பண்டைத் தமிழ் இலக்கிய இலக்கணங்களிலும், சித்தாந்த நூல்களிலும் சிறந்த பயிற்சியுடையவர்கள். சேனாவரையர், பரிமேலழகர் போன்ற பேருரையாசிரியர்களது உரைகளின் நுண்ணிய போக்கினையும் நோக்கினையும் ஊன்றி உணர்ந்தவர்கள். கச்சியப்பமுனிவரர், கச்சியப்ப சிவாசாரியர் முதலிய அருட் புலமையாளரது செய்யுள் நலங்களில் பழகித் திளைத்தவர்கள். ஆகவே, அவர்களது பொழிப்புரை காஞ்சிப் புராணத்தின் பொருளை நன்கு உணர்தற்குப் பெரிதும் துணைபுரிவதாதல் உறுதி. அதனால், இதனை எழுதியுதவிய திரு, பொன். சண்முகனார் அவர்களிடத்தும், இதனை எழுதுவித்து வெளியிடும் தவத்திரு. அடிகளாரிடத்தும் சைவ உலகமும், தமிழுலகமும் என்றும் குன்றா நன்றியறிவுடன், இவ்வுரையினைப் பெற்றுப் பயன் அடைவனவாகுக.

தருமபுரம், 27-7-'63

இங்ஙனம்,

**சி. அருணைவடிவேல் முதலியார்**

—:o:—

**திரு. டாக்டர். மா, இராசமாணிக்கனார்**, எம்.ஏ.எல்.டி., எம்.ஓ.எல்., பி.எச்.டி. (Readar in Tamil), பல்கலைக்கழகம், சென்னை.

## அணிந்துரை

"கல்வியிற் கரையிலாத காஞ்சிமாநகர்" என்று திருநாவுக்கரசரால் பாராட்டப்பெற்ற கச்சியம்பதியில் சைவ சமயத் தொண்டாற்றி வரும் பொன். குமாரசுவாமியடிகள் "செங்குந்தர் நூற்கோவை"யைப் பதிப்பித்தவர்; "செல்வ விநாயகர் பதிகம்," "கச்சி ஏகம்பர் மாலை" என்னும் சிறு நூல்களைப் பாடியவர்; தமிழகத்திலும் இலங்கையிலும் சைவ சமயச் சொற்பொழிவுகள் ஆற்றிப் புகழ் பெற்றவர்.

இப்பெரியார் காஞ்சிப் புராணத்திற்கு உரை எழுதி, அந்நூலைப் பெரிய அளவில் அச்சிட்டுள்ளார். இது போற்றத்தகும் நன் முயற்சியாகும். உரை மிகவும் எளிய நடையில் அமைந்துள்ளது; நூலிற் கூறப்பட்டுள்ள எல்லாக் கோவில்களும் இவை இவை என்று எளிதில் அறிந்துகொள்ளும்படி நூலின் இறுதியில் தலங்களின் விளக்கம் கொடுத்திருப்பது கற்பார்க்கு மிகுந்த பயனைத் தருவதாகும்.

இத்திருப்பணியில் இவர்தம் செல்வ மைந்தரும் நற்றமிழ்ப் புலவருமாகிய திரு. பொன். சண்முகனார் தந்தையார் உடனிருந்து அரிய தொண்டு செய்துள்ளார்.

இச்சிவத் தொண்டு செய்துள்ள அடிகளார்க்கும் அவர்தம் திருமகனார்க்கும் சைவ உலகமும் தமிழ் இலக்கிய உலகமும் நன்றி பாராட்டும் கடப்பாடுடையது. இப்பெருமக்கள் நீடுவாழ்ந்து மேலும் இத்தகைய நற்பணிகளைச் செய்யுமாறு இறைவன் திருவருளை வேண்டுகிறேன்.

**மா. இராசமாணிக்கனார்.**

**தஞ்சாவூர். அரண்மனை சரசுவதி மகால்,**

**தமிழ்த்துறை ஆராய்ச்சியாளர்,**

## வித்துவான் வீ. சொக்கலிங்கம் அவர்கள்

**இயற்றிய சாற்றுக்கவி**

---

திருவளர் தெய்வச் செழுமறைப் பெருமான்
கழகமோ டிருந்து கவினுற வாய்ந்த
தண்டமிழ் நாட்டின் தனிப்பெரு முதல்வர்
செறியிருள் விழுங்குஞ் செஞ்சுடர் போல,
நல்லோர் நயக்கும் நங்கயி லாய
வழிவழிப் போந்த வண்டமிழ் முனிவர்
ஆவடு தண்டுறை யாதீ னத்தின்
திருவினுந் திருவாய்த் திறமுறத் திகழ்ந்த
சிவனருள் ஞானம் சிறக்கப் பெற்றோர்,
சிவஞான முனிவர் எனப்பெயர் கொண்டோர்
கற்றோர் வியக்குங் காஞ்சிப் புராணம்
முற்றவுஞ் சுவைக்க மொழிந்தன ராக,
அத்தகு சிறப்புடை அரியதோர் நூலின்
ஈரா யிரத்து எழுநூற் றோடு
நாற்பா னிரண்டு நாற்பா வினுக்குப்
பொழிப்புரை காண்டல் பொருத்தமென் றுணர்ந்து
திருமுறை சாத்திரம் தெளிவொடு கற்றோர்,
அடக்கம் ஆற்றல் அமையப் பெற்றோர்,
தந்தை யிடத்துத் தமிழ்நூல் கற்றோர்
தனலக் குமியைத் தாரமாய்க் கொண்டோர்,
சண்முக மென்னுஞ் சொல்வன் மையினர்
தந்தைப் பணியினைத் தலைமேற் கொண்டு
சந்தத் தமிழிற் செய்தன ராக,
அன்னவர் தன்னை யத்தகு செயல்செய
ஏவிய செம்மல் காவியக் களஞ்சியம்,
காஞ்சிப் பதிவாழ் ஏகாம் பரனார்
நாமந் தன்னை மூச்சொடு பேச்சும்
தேனெனச் சொல்லிப் பாலெனப் பரவிடுந்
தொண்டை நாட்டுக் காஞ்சிப் பதிக்கு
அணித்தா யுள்ள ஐயன் குளத்தே
தலைமுறை யாகத் தமிழ்நூல் கற்ற
செங்குந் தகுலத் தனிக்குடி தழைக்க
உத்திரா டத்தே உதித்த செல்வர்
சொந்தத் தந்தை கந்த சாமி

ஈன்ற தாயார் பார்வதி யம்மை
பிள்ளை நாமம் பொன்னுச் சாமி
வித்தை தந்தோர் நாரா யணராம்
கற்ற நூலோ கணக்கி லில்லை
இல்லறத் துணைவி நற்பெருந் தேவி
ஈன்ற மக்களில் இன்னால் தனக்கு
இன்னாரை தந்தவர் இனிய பண்பினர்
அன்னவர் தம்மொடு சுந்தர மம்மை
அருங்குணச் செல்வி ஆகிய இருவர்
அறுபத் திரண்டாம் அகவை தன்னில்
கைலைப் பரமன் வழிவழிப் போந்த
சைவம் வளர்க்குஞ் சீருடை யண்ணல்
பாதிரிப் புலியூர் ஞானியார் மடத்துத்
திருவுடைத் திருவார் சிவசண் முகமெனும்
மெய்ஞ்ஞா னச்சிவா சாரிய சுவாமிகள்
சிவமே யனையார் தம்மை யடைந்து
சைவத் தீக்கையுஞ் சைவசந் நியாசமும்
ஏற்றத் துறவினை எவ்விதத் தானும்
பழிப்பா ரின்றிப் பாங்குறத் தழுவி,
இயற்றிய நூல்கள் எடுத்துச் சொல்லின்
செங்குந் தர்புகழ் நுவல்நூற் கோவை,
செல்வ விநாயகர் சிறப்புப் பதிகம்
கச்சியே கம்பக் கடவுள் மாலை,
இன்னுஞ் சிலபல இன்னரும் நூற்கள்
சைவமுந் தமிழுந் தழைத்தினி தோங்கத்
தன்னுயி ரீந்துத் தருவன செய்பவர்
என்னரும் மக்களும் இவர்தம் நட்பால்
ஏகாம் பரனார் இயற்பெயர் செல்வர்.
நாற்பதிற் றிரட்டி நாலைக் கூட்டிய
அகவை தன்னை அடையப் பெற்றவர்
நட்புக் குகந்தவர் நயத்தகு பண்பினர்
இத்தகு புகழுடைப் புத்தகச் செல்வர்
காஞ்சிப் புராண உரைநூல் தன்னைத்
தமிழுல குக்குத் தந்திடத் துணிந்து
தன்துயர் சிறிதும் பொருட்படுத் தாது
பதிப்பித் துதவினர் பன்னாள் வாழ்வோர்
முருகக் கடவுளின் மறுபிறப் பெனத்தகு
செம்பொன் குமார சாமிக் கோவே!

861, தத்தோஜியப்பா சந்து,
தஞ்சாவூர்,
5—8—1963.

இங்ஙனம்,
வீ. சொக்கலிங்கம்.

ஓம்

வாலாசாபாத் இந்துமத பாடசாலையைச் சேர்ந்த வள்ளலார் மாணவர் இல்லத்தின் தலைவரும், 'குருகுலம்' இதழ் ஆசிரியருமான

## அண்ணா நா. ப. தணிகை அரசு

அவர்கள் எழுதியுதவிய

## அணிந்துரை

வடமொழி, தென்மொழி, ஆகிய மொழிகளையும், சைவ சமய இலக்கியங்களையும் இலக்கணங்களையும், கற்றுத் துறைபோக வல்ல அருளாசிரியர் சிவஞான சுவாமிகளால் அருளிச் செய்யப்பெற்றது காஞ்சிப் புராணம். அக்காஞ்சிப் புராணம் ஏனைய தலபுராணங்களினும் பல வகைகளில் வேறுபட்டு, உயர்ந்த சாத்திரக் கருத்துகளைத் தன்னுட் கொண்டு விளங்குவது.

மாதவச் சிவஞான சுவாமிகள் தாம் அருளிய காஞ்சிப் புராணத்தில் எல்லா விடங்களும் கருத்துச் செறிவுடையனவாய், கற்றவர்களுக்கு இன்பம் பயப்பனவாய், இனிக் கற்பவர்களுக்குச் சுவைமிகத் தருவனவாய் அமைந்துள்ளன. இந்நூலை ஐயந்திரிபறக் கற்றாலே, பதி, பசு, பாச உண்மைகளையும், இலக்கணங்களையும், பதியையடையப் பசு பயிலவேண்டிய சாதனங்களையும், அவற்றால் அடையத்தகும் பயனையும் நாம் அறிந்துகொள்ள இயலும். எனவே, இந்நூலுக்கு இனிய எளிய, சுவைமிக்க தமிழில் பொழிப்புரையானது தேவையாயிற்று.

சைவத் திருமுறைகளில் பெரும் பயிற்சியும், சித்தாந்த சாத்திரங்களில் தெளிவான அறிவும், இனிய செந்தமிழில் எழுத்து சொல்லாற்றல்களுங் கொண்டு, தமிழ்நாடு எங்கணுமுள்ள சைவ சித்தாந்தப் பேரறிஞர்களுக்கெல்லாம் அறிமுகமான அடியேனது ஆசிரியர் பொன்–சண்முகனார் அவர்கள் தெளிவான பொழிப்புரை யொன்றெழுதியுள்ளனர். பேரருளாசிரியராகிய சிவஞான சுவாமிகளின் கருத்தைத் தமிழிற் சிறிது பயிற்சியுடையோரும் புரிந்துகொள்ளும் வகையில்உணரத் தெளிவாகவும் இனிமையாகவும் அமைந்துள்ளது அப்பொழிப்புரை.

ஆசிரியர் பொன். சண்முகனார் அவர்களும், அவர்தம் தந்தையார் பொன். குமாரசாமி அடிகளாரும், காஞ்சிபுரத்திலிருந்து கொண்டு, செந்தமிழன்னைக்கும் சைவப் பேருலகிற்கும் ஆற்றிவரும் தொண்டுகள் போற்றற்குரியன. பன்னிரு திருமுறைகளையும் பதினன்கு சாத்திரங்களையும் தாங்கள் ஓதி யுணர்ந்தாற்போல ஏனையோரும் கற்றுத் திருவேகம்பப் பெருமான் திருவடியை வணங்கி உய்ய வேண்டுமென்னும் பேரிரக்கத்தோடு அவர்கள் செய்யும் செயல்கள் பல. அவை யாவும் நற்பயன் தருவனவாக!

காஞ்சிப் புராணத்தின் ஒவ்வொரு படலத்திலும் பேசப்படும் மூர்த்திகளைப் பற்றியும், ஆண்டு வழிபட்டு முத்தியடைந்தவர்களைப் பற்றியும், அவண் வழிபடுதலால் நாம் அடையத்தகும் நலங்களைப் பற்றியும் ஆசிரியர், 'திருத்தல விளக்கம்' என்னும் பகுதியில் எழுதியிருப்பது இப்புராணத்தின் முன்பதிப்புகளில் காணப்படாத தொன்றாகும்.

ஞான சாத்திரக் கருத்துக்கள் நாடெங்கும் பரவுதற்கு இந்நூல் சிறந்த துணையாக விளங்கா நிற்கும்.

ஆசிரியர் பொன் சண்முகனாரும் அவர்தம் முன்நிலை (பூர்வாசிரம)த் தந்தையாரும் திருவேகம்பப் பெருமான் திருவருளால் நலங்களெல்லாம் பெற்று நன்கினிது நீடு வாழ்வார்களாக!

**நா. ப. தணிகை அரசு.**

சிவமயம்

முதுபெரும்புலவர்

**சீலத்திரு. சிவஞானதேசிக சுவாமிகள் அவர்கள்**

# ஆசியுரை

'நூலுணர்வுணரா நுண்ணியோன்' 'மாலே பிரமனே மற்று ஒழிந்த தேவர்களே நூலே நுழைவரியான் நுண்ணியனய் வந்து அடியேன் பாலே புகுந்து பரிந்துருக்கும் பாவகம்' என்று திரு வாசகம் உணர்த்திற்று. அந்நுண்ணிய பொருள் சமயாதீதப்பழம் பொருள். சமயங்களுள் தலையாயது சைவமே. அஃது ஆருருயுள்ள அகம், அகப்புறம், புறம், புறப்புறம் என நால்வேறுபட்ட இருபத்து நான்கு சமயங்களுக்கும் வேருய் இருபத்தைந்தாவது சமயம் ஆகும். இதன் முடிவே ச ம யா தீ த ப் பழம் பொருளின் நிலை. 'ஐயஞ்சி னப்புறத்தான்' என்பதற்கு ஈதும்பொருளாகும். 'அப்புறத்தான்' என்றது சமயங் கடந்த மோன சமரசத்தைக் குறித்து நின்றது. அச் சமரச நிலையைப் பெற அச் சமயாதீதப் பழம்பொருள் தன் நுண்ணிய நிலையை நாம் அறியும்வண்ணம் பரியநிலையில் தன்னைக் காட்டித் தரல்வேண்டும். அகளமாய் ஆரும் அறிவரிதாம் அப் பொருள் சகளமாய் வந்து அருளப்பெற்றவரே நம் சமயாசாரியர் முதலிய அருளாளர் பலரும். அருளாசிரியர் ஆன அவர்க்குரிய நெறியே அவர் திருவடி வழிபாட்டை மறவாத நமக்கு முரியது. ஏனைய நெறிகள் அவ்வ(ச் சமயத்த)வர்க்குரிய பெருநெறிகளே ஆகும். ஆயினும் அவை நமக்குரியனவும் பெரியனவும் அல்ல. இவ்வுண்மையை உணர்த்துவது இது:-

"நெறியல்லா நெறிதன்னை நெறியாக நினைவேனைச்
சிறுநெறிகள் சேராமே திருவருளே சேரும்வண்ணம்
குறியொன்றும் இல்லாத கூத்தன், தன்கூத்தை, எனக்
கறியும்வண்ணம் அருளியவாறுர் பெறுவார் அச்சோவே."

இத்திருவாசகத்தில், "குறியொன்றும் இல்லாத கூத்தன்" என்றது அகளமாய் ஆரும் அறிவரிதாய் நின்ற அதீதப்பொருளை. "தன் கூத்தை எனக்கு அறியும்வண்ணம் அருளியவாறு" என்றது சகள மாய் வந்தவாற்றை. அது சகளமாய் வருதல் என்ருல் என்ன? அவ்வரவு அருள் நூல்களான் உணரற்பாலது. உணர்தற்கும் உணர்த்தற்கும் அரிதேயாம். ஆயினும், நம் ஆசிரியர் பலரும் உணர்ந்துணர்த்திய உண்மையுரைகளை யொட்டி யுணர்ந்தால் நமக்கும் நன்கு விளங்குவ துறுதி.

அந்நுண்பொருள் நமக்கு எண்பொருளாகின்றது. எவ் வாறு? அவ்வாற்றை மறையுமாய் மறையின் பொருளுமாய் வந்து

என் மனத்திடை மன்னிய மன்னே' என்றுணர்த்தியவற்றாலறிய லாம். நம் மனத்தில் மறையாய் வந்து மன்னுதலும் மறைப்பொரு ளாய் வந்து மன்னுதலும் சிவமாகிய நுண்பொருள் நமக்கு எண் பொருளாம் வண்ணமே என்று மணிவாசகப்பிரான் திருவாய் மலர்ந்தருளினர் ஆயின், நாம் மறைப்பொருளையும் மறையையும் போற்றத் தவறுதல் கொடுமையே ஆகும் அன்றோ? "வேதங்கள் ஐயா(—நுண்ணியா) என ஓங்கி ஆழ்ந்து அகன்ற நுண்ணியனே" என்று அவ்வாசிரியர் அருளியதன் உண்மைதான் என்னே! ஈண்டு 'ஐயா' என்றதன் பொருளை "அணுத்தருந் தன்மையில் ஐயோன் காண்க" என்றதிற் காண்க. அவ்வாறு கூறக் காரணம் யாது? சொற்பதங் கடந்த தொன்மையே காரணம். 'மிக்க வேத மெய்ந்நூல் சொன்னவனே சொற்கழிந்தவனே' என்றதால், வேதாந்தனே வேதமுதல்வனுதல் கூடும் என விளங்கும். விளங்கவே வேதத்தால்தான் வேதாந்தனை உணர்தல் வேண்டும் என்பது பெற்றும்.

வேதத்தை உணர்தல் முதற்கடப்பாடு. அவ்வேதத்தின் முடிவான பொருளை உணர்தல் அடுத்து நிகழ்தற்பாலதே. அஃதா வது வேதத்தை உணரும் போழ்தை அடுத்தே வேதாந்தப் பொருளையும் உடன் அறிந்து வருவதாம். (போழ்தடுத்து என்பது போழ்தத்து போதத்து என மருவிற்று. கம்பராமாயணம் பிர பந்தக் கட்டளை (பதினொன்றாவது திருமுறை)களில் உள்ள ஆட்சி யால் அவ்வுண்மையை அறியலாம். வேதத்தை அருளிய முதற் பொருளை அவ்வேதத்தையே கொண்டு உணர்தல் வேண்டும்.

வேதத்தை உணர்தற் கருவி உபவேதம், அங்கம், உபாங்கம் என்று முத்திறப்படும். அவற்றுள் உபவேதம் நான்கு; அங்கம் ஆறு; உபாங்கம் நான்கு. அந்நான்கும் புராணம், நியாய நூல், மீமாஞ்சை, மிருதி என்பன. அவற்றுள். "புராணம் பரமசிவன் உலகத்தைப் படைக்குமாறு முதலாயின கூறும் வேதவாக்கியப் பொருள்களை வலியுறுத்து விரித்துணர்த்துவது. இதிகாசமும் ஈண்டு அடங்கும்." (சிவஞானபோத மாபாடியவசநம்) "அயன் என்றது அவ்வேதத் திற்கு அங்கமாய் அயனுற் செய்யப்பட்ட பதினெண் புராண நூலை யும் மாயோன் அவதாரமாகிய வியாதனுற் செய்யப்பட்ட இதிகாச நூலையும்" (சிவஞானசித்தியார், அவையடக்கம்)

திருவாசகத்தின், 'மறையின் பொருளுமாய் வந்து மன்னிய மன்' என்ற மறைப்பொருளிற் புராணமும் கொள்ளப்படும். ஆதலால், சிவஞான சித்தியாரிற், "சிறப்புடைய புராணங்கள் உணர்ந்தும் வேத சிரப் பொருளை மிகத் தெளிந்தும் சென்றால் சைவத் திறத்தடைவர்" என்றருளினர் அருணந்தி தேவநாயனர்.

இதனாலும் புராணம் வேதாந்தப் பொருளை மிகத் தெளியச் செய்யுங் கருவி என்பது புலனாயிற்று. சிறப்புடைய புராணங்கட்கும் வேதாந்தத் தீதில் பொருளுக்கும் உள்ள அணுக்கத் தொடர்பு நுணுக்கமாகத் தெரிந்தது.

உயிர்கட்குள்ள நோய்கள் பெரியனவும் சிறியனவுமாக இரு திறப்படும். அவற்றுள் பெரியன இறப்பும் பிறப்புமாம். ஆயினும் பிறப்பைப் பெரியதொரு நோயாகக் கொள்ளார் பேதையர். இறப்பை மட்டும் கொண்டஞ்சும் அவர்க்கு அவ்விறத்தலாகிய பெரிய துன்பம் பிறத்தலால் வருவதென்பது தெரியாது. தெரிந்தோர் 'யானேதும் பிறப்பஞ்சேன இறப்பதனுக்கு என்கடவேன்' என்றுரைப்பர். அந் நைந்தலை விளக்கும் நோய் கெடக் கடவுளை நூலே உணர்த்த வல்லன. அதனால்தான், நம் ஆசிரியருள் பெரியராம் அப்பர், "நூலால் நன்று நினைமின்கள் நோய் கெட'' என்றருளினர். அந்நூல் வகையுள் அடங்கும் புராணம், கடவுளை நன்று நினைய உணர்த்தும் ஆற்றல் சான்றவை. 'நான்மறை ஞான மெல்லாம் ஆவகை ஆவர்போலும்' 'கலையாரும் நூலங்கம் ஆயினான் காண்' என்பவற்றின் கருத்தை ஊன்றியுணர்தல் மிக நன்றாம். மறை நான்கும் அங்கமாறும் பிறகலையும் சிவரூபம் என்னும் உண்மையைத் திருமுறைகளில் பயிலக் காணலாம். காணவே புராணமும் சிவரூபமே என்பது பெற்றாம். சிவரூபத்தைக் கொண்டே சிவத்தை உணர்தல் வேண்டும். எருமையுருவைக் கொண்டு பசுவை அறியலாகுமோ? வேத முதல்வனை வேதமே முதல் முதலாகத் தொழுது காட்டிற்று. வேதாங்கங்களும் வேதம் தொழும் ஆற்றை விளக்கிக் காட்டின. உபவேதங்களும் உபாங்கங் களும் அன்னவாயின. விளக்குதலில் மட்டும் வேறுபட்டனவே அவையெல்லாம் பொருளால் வேறுபட்டன அல்ல. அதனால், புராணம் வேதத்தின் வேறுபட்டன ஆகா. 'ஆயிரம் ஆரணம்' உள. அவற்றை ஓதுவது எதற்கு? கடவுள் நம் உள்ளத்திற் புகும் பொருட்டே. மறையுமாய் மறையின் பொருளுமாய் வந்தென் மனத்திடை மன்னும் பொருட்டே. அம்மன்னுதற்கு, வேதமுதல் வனுடைய குறிகளையும் அடையாளங்களையும் கோயில்களையும் நெறி களையும் நேர்மைகளையும் அறிதல் வேண்டும். அவற்றையெல்லாம் விளக்குவன புராணங்கள். சிவபிரான் திருவடிக்கு மனம்புகாப் பொறியிலிகளை அப்பர் கடிந்து அறிவுறுத்தருள்கின்றார்.

**"குறிக ளும்அடை யாளமும் கோயிலும்**
**நெறிக ளும்அவர் நின்றதோர் நேர்மையும்**
**அறிய ஆயிரம் ஆரணம் ஓதினும்**
**பொறியி லீர்மனம் என்கொல் புகாததே"**

இதனால் விளங்குவது யாது? ஏற்றான் அடிக்கே இரவும் பகலும் பிரியாது வணங்கும் அன்பர்க்கே வேதவேள்விகள் உரியன; பயன் விளைப்பன என்பதாம். புராணங்கள், அவ்வேத முதல்வன் கூறி முதலியவற்றை விளங்க உணர்த்தும் சிறப்புடையன. ஆதலின் அவற்றை ஓதின், ஓதுமவர் உள்ளத்தில் அவன் திருவடி குடிபுகும் என்பது முக்காலும் உண்மை.

"ஞானத்தால் வீடென்றே நான்மறைகள் புராணம்
நல்ல ஆகமம் சொல்ல அல்லவாம் என்னும்,
ஊனத்தார் என்கடவர்"

எனச் சிவஞான சித்தியாரிற் புராணம் நின்றவாற்றாலும் அச் சிறப்பு விளங்கும்.

"வேத முதல்வன் என்னும் மெய்த்திருப் பாட்டினிளேர்
ஆதி யுலகோர் இடர்நீங்கிட ஏத்த ஆடும்
பாதம் முதலாம் பதினெண் புராணங்கள் என்றே
ஓது என்று உனரசெய்தனர் யாவும் ஓதாதுணர்ந்தார்"

இது சேக்கிழார் பெருமானார் திருவாய்மொழி. இதற்கு அடியாகியது திருக்கடைக்காப்புள் ஒன்றான திருப்பாசுரத்தின் எட்டாவது அருண்மொழி. அஃதாவது

"வேதம் முதல்வன் முதலாக விளங்கி வையம்
ஏதப் படாமே உலகத்தவர் ஏத்தல் செய்யப்
பூத முதல்வன் முதலே முதலாப் பொலிந்த
சூதன் ஒலிமாலை என்றே கலிக்கோவை சொல்லே."

என்பது.

இது வையை யாற்றில் இட்ட ஏடு நீர் எதிர்ந்து சென்று நிறுவிய துட்பட்டு ஞானம் ஈசன்பால் அன்பே என்ற ஞானம் உண்டார் திருவாக்கு. ஆற்று நீர்ப் பெருக்கில் எதிர்ந்து சென்ற தன் உட்கிடையாகப் புராணம் இருப்பதால், புராணம் சிவரூபம் ஆவதில் யாரேனும் ஐயம் உறலாமோ? உற்றால், அவர்க்கு வானே நிலனே பிறவே உரியன ஆமோ?

"சூதன் ஒலிமாலை" என்றது சூத முனிவரால் உணர்த்தப் பெற்ற புராணங்களை. தமிழில் உள்ள உயரிய புராணங்கள் எல்லாம் அவ்வொலி மாலையின் உதிர்மலர்களே ஆகும். புராணங்களின் வேற்றுமை, புராணார்த்தங்களின் வேற்றுமை, புராணங்கள் கூறும் தேவர்களின் வேறுபாடு, புகழ்ச்சி யிகழ்ச்சிகள், புராணங்களின் தாற்பரியங்கள் எல்லாவற்றையும் விசாரசாகரத்துள் (487, 510–517) மிகத் தெளிவித்திருக்கும் உண்மையை அறிதல் நன்று. நீலகண்ட பாடியத்தில், வேதம் சிவாகமம் இரண்டும் செய்த கருத்தன் சிவன் ஒருவனேயாம் எனச் சுருதியும் புராணங்

களும் சிவாகமங்களும் கூறுகின்றன என்றுள்ளதாலும் புராணச் சிறப்பு விளங்கும்.

தமிழ்ப் புராணங்களுள் (திருத்தொண்டர் புராணம் அல்லாதவற்றுள்) கந்தபுராணம், காஞ்சிப், புராணம், திருவிளையாடற் புராணம், சேதுபுராணம், திருக்குற்றாலத் தலபுராணம் முதலியவை அச்சூதஞெலிமாலையைப் போலச் சிறப்புடையன.

காஞ்சிப் புராணம் கந்தபுராணத்தை யடுத்து வேதாகமப் பொருள்களை விளக்குந் திறத்தில் ஒப்புயர்வற்று விளங்கும் மாட்சி மிக்கது. இதன் சிறப்புக்களையும் ஆசிரியர் மாதவச் சிவஞான யோகிகளின் பெருமைகளையும் பின்னர் உள்ள அணிந்துரைகளால் நன்கறியலாகும். காஞ்சிப் புராணத்தின் பொருட்சிறப்பு முதலியவற்றை இதில் உணர்த்தும் ஆற்றல் இப்போது யாம் உற்றிலேம்; பலமுறை பாராயணம் பண்ணிய பாக்கியம் உடையேம்; எம் வழிபடு கடவுள் அருள்வரலாற்று நூலாதலின்.

புராணங்களின் பொருள்களை உலகோர்உணர்தல்வேண்டி, நம் முன்னோர் வகுத்த இடங்களே புராணச் சிறப்பைப் புலப்படுத்தும். கோயில், ஆற்றங்கரை, குளக்கரை, திருமடம் ஆகிய இவற்றை இடமாக விதித்தனர். ஏன்? மக்கள் மிகக்கூடும் இடங்கள் பலவற்றுள் சாலச் சிறந்தவை இவை. திருமடத்தினும் குளக்கரையும், அதனினும் ஆற்றங்கரையும், அதனினும் கோயிலும் மக்கள் நெடுநேரம் இருந்தும் பலராகக் கூடியும் கேட்டுப் பயன் பெறுந் திறத்திற் சிறந்தன ஆகும். ஆறும் குளமும் (குளிப்பதற் குரியது) நீராடித் தூயராய பின்னர்ப் புராணக் கேள்விக்குத் தக்கவராதற் பொருட்டும், கோயிலும் மடமும் புராணப் பொருள் இனிது விளங்கி இன்புறுத்தற் பொருட்டும் கொள்ளப்பட்டன. நான்கிடமும் பலர்கூடும் இடமாதல் பற்றியே விதிக்கப்பட்டன. சமயப் பிரசாரம் புரியும் நெறியில் நம் முன்னோர்க்கு இருந்த நோக்கம் இதனாற் புலப்படும்.

இப் பதிப்பு, இக்காலத்தில் மிக்க வுதவியாகத் தோன்றிய ஒரு புதிய வெளியீடு. காஞ்சிப் புராணம் கிடைக்காத காலம் இது. காஞ்சிப் புராணத்தைக் கற்றுணர விரும்பாதவர் தமிழ்ப் புலவருள் இரார். இருப்பின், அவர் "நல்லதன் நலனும் தீயதன் தீமையும் இல்லை யென்போர்க்கு இனன் ஆகி"யவராயிருக்கலாம்.

இப்புராணம் பொழிப்புரையுடன் கூடியது. இவ்வுரை சாலச் சிறந்து விளங்குகின்றது. இதை யெழுதியவர் திரு.பொன். சண்முகனார் என்னும் புலவர். அவர் அணிந்துரை வழங்கிய பேராசிரியரிருவரிடத்திலும் தமக்கு முன்னிலையில் அப்பனாரும் ஆசிரியருமாகிய சைவத்திரு. பொன்.குமாரசாமி அடிகளார் அவர்

களிடத்திலும் தமிழ் பயின்றவர். நுண்மாண் நுழைபுலம் மிக்கவர். பழைய புதிய இலக்கண நூல்களையும் சைவ சித்தாந்த சாத்திரங் களையும் ஆழ்ந்தாய்ந்துணர்ந்த பேரறிவினர். நினைவாற்றல் சான் றவர். தந்தையார்க் குகந்த மைந்தனர் எனச் சைவத் தொண்டு புரியும் சிவ புண்ணிய சீலர். பரிமேலழகரைப் போலுரைப்பவர். நச்சினார்க்கினியரைப் போலப் புதுப்பொருள் காண்பவர். கச்சியப்ப முனிவரர்போல வுறுதியுடையவர். பண்புகளின் முதன்மையதான கற்றுணர்ந்தடங்கலுக்கு நிலைக்களமானவர். அவர்க்குள்ள ஆற்றலைக் காட்டும் இடங்கள் பல உள. அவற்றை எல்லாம் கற்போர் காண்பர். இப்புலவர் திலகரைத் தமிழ் நாட் டிற்கு வழங்கியருளிய அடிகளார் அவர்களையும் நிறைநாட் செல்வர் பொன். சண்முகனர் அவர்களையும் திருவருள் நீடினிது வாழ்வித் தாள்க. அவ்விருவரும் வாழ்க, வாழ்க, வாழ்க.

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ குரு மகா சந்நிதானம் அவர்கள் நன்கொடை வழங்கி அருளினர். அவர் தம் திருவடி மலர்களைச் சிந்தை செய்வாம்.

இதைப் பதிப்பித்த 'முத்தமிழ் அச்சகம்' முதல்வர் சைவத் திரு. எஸ். காளப்ப முதலியார்க்கும் கச்சித் திருவேகம்பன் திருவருள் எல்லா நலங்களையும் நல்குக.

ஏகம்பத்துறை யெந்தாய் போற்றி
பாகம் பெண்ணுரு வானாய் போற்றி.



# பாடபேதம்

கவுள்துளை (நா-க), கவுள்தொளை (சு) 1—1—1
கச்சிகாவல் (நா-க-சு), கச்சிக்காவல் 4—9—4
எவ்வெவர் (நா-சு) எவ்வெவ (க) 8—20—1
ஆசையான் (நா-சு) ஆசையின் (க) 8—22—4
வஞ்சினம் (க), வெஞ்சினம் (நா-சு) 12—6—4
சென்று (க), தோன்றும் (நா-சு) 14—14—3
அடிப்படுத்து (சு), அடிபடுத்து (க) 19—31—1
முன்நவந்தரு (க), தன்நவந்தரு (சு) 28—65—2
வயல்மேவும் (சு), வயல்மேயும் (க) 48—135—1
கடைஞர் (சு) கடையர் (க) 65—47—1
புவன (க) புவனை (சு) 70—63—1
நோய்குடைபவர் (சு), நோய்க்குடைபவர் 88—118—1
இதயக்கஞ்ச (க), இதயகஞ்ச (சு) 88—119—3
பதிகம் (க), பதிகப்படலம் (தலைப்பு) 91-தலைப்பு
கச்சபாலயத் (சு), கச்சபாலையத் (க) 93—9—1
ஓணகாந்தன் (சு-க)(சிறக்கும்) ஓணகாந்தர் 96—17—4
தற்பரன் (க) தற்பர (சு) 103—8—4
பிணங்குற்றேம் (க) பிணக்குற்றேம் (சு) 108—23—4
முழங்கும் (சு) முழக்கும் (க) 138—29—2
கதவினை (நா-க) கதழ்வினை (சு) 141—5—3
அநித்திய (சு-க) அனித்திய (நா) 145—18—3
அநாதி (க-சு) அனுதி (நா) 146—23—2
அநாதி (க-சு) அனுதி ( ;, ) 147—26—2
மலர்சிலம்பு (நா-சு) மலர்ச்சிலம்பு (க) 154—50—1
பேரோன் (க) பெயரோன் (சு) 235—4—2
பர்ப்பதம்(க)—பற்பதம் (சு-நா) 236—6—1
பணிமொழி (நா-சு) பனிமொழி (க) 245—4—1
காயாரோகணம் (நா) காரோணம் (சு-க) 252 தலைப்பு
சஞ்சீவினி (க) சஞ்சீவனி (சு-நா) 268—8—3
புறந்தருதல்—புரந்தருதல் (சு-நா-க) 317—5—3
தெளிநீ (க) தெளிதி (சு-நா) 330—11—4
அவ்வேல்வை (க) அவ்வேலை (சு-நா) 351—16—5
அதன்கீழ்ப்பாங்கர் (க) நெடுகீங்ழ்ப்பாங்கர் (சு-நா) 367—1—3
இலைப்புரைகிளைத்து (க) இலைப்புணர்கிளைத்து (சு-நா) 418—34-2

விசையனெடு (சு) விசையினெடு (நா-க) 432—87—3
கந்திருவர் (க) கந்தருவர் (சு-நா) 433—94—4
தருமவாற்றின் ஒழுகு (க) தருமவாற்றினின்றொழுகு (சு-நா) 438—2—3
சுவேதலோகிதனெடுஞ் (க) சுவேதலோசித நெடுஞ் (சு-நா) 477—2—3
இலகுளீச்சரம் (சு-நா) இலகுளீச்சரீசம் (க) 479—1—1
வண்புணர்ப்பு (நா-சு) வன்புணர்ப்பு (க) 480—4—1
அவிர் (நா-சு) அவிழ் (க) 483—13—4
காஞ்சிவிச்சுவ (நா-சு) காசிவிச்சுவ (க) 485—22—2
வாமதேவன் (ஆ-க) வாமதேகன் (நா) 489—2—1
அழைத்தேம் (சு-க) அழைத்தேன் (நா) 503—14—4
ஆங்கனம் (சு-க) ஆங்ஙனம் (நா) 507—25—1
மேகல் (ஆ-க-நா) மேக (சிறக்கும்) 514—47—2
நன்று வந்தனையோ (நா-ஆ-க) நன்று வாழ்ந்தனையோ 515—50—1 (இது சிறக்கும்)
மார்க்கண்டி (ஆ-நா) மாற்கண்டி (க) 536—27—4
கூர்ப்பரத்தை (ஆ-நா) கூற்பரத்தை (க) 545—13—3
மாதணி (நா-க) மாமணி (சிறக்கும்) 553—5—2
நாயகமாச்செய்து (ஆ-க) நாயகமாய்ச் செய்து (நா) 560—21—2
மைந்தர்கள் (நா-ஆ-க) மைந்தர்காள் 581—76—5
சேறற்கு (க) சேரற்கு (நா-ஆ) 603—52—3
தேற்றி (நா-க) தேறி (இது சிறக்கும்) 607—58—5
புவ—புவ் (க-நா) }
சுவ—சுவ் (க-நா) } 610—68—2, 3
மலியெடுத் (ஆ-நா) மலிபெடுத் (க) 621—112—3
பூரம் (நா-ஆ) பூசம் (க) 626—130—1
தவிர்ந்து (ஆ-க) தரித்து (நா) 627—133—4
பூர்த்தம் (க) சூக்தம் (நா-ஆ) 628—138—2
கொடிவேறினையன (க-ஆ) கொடியென்றினையன (நா) 629-143-4
மணிகுயிலும் (நா-க) மணிமுயலும் (ஆ) 631—147—3
உருத்த (க) உருத்து (நா-ஆ) 634—160—4
போராண்மை (க-ஆ) போரண்மை (நா) 646—208—2
மூசிள (ஆ) மூசின (க-நா) 648—214—3
திரைகடல் (ஆ-நா) திரைக்கடல் (க) 648—217—1
சொன்னது (க) சொன்னவை (ஆ-நா) 659—258—2
பிரியொண்ணாய் (ஆ-நா) பிரிவொண்ணாய் (க) 660—263—1

செய்தேஞே (ஆ-நா) செய்தேனே (க) 660—263—4
ஆன்றவர் (ஆ-நா) வானவர் (668—293—3
பரப்பி (ஆ-நா) பரப்ப (க) 670—301—4
நாட்டவர் (ஆ-நா) நாடவர் (க) 671—305—3
மூட (ஆ-நா) மூடி (க) 673—317—2
அகழ்ந்து (ஆ) மகிழ்ந்து (க-நா) 675—325—2
குற்றனர்—(நா-ஆ) குற்றன (க) 677—331—1
நாறெலுமிச்சை (ஆ-நா) நேரெலுமிச்சம் (க) 678—334—2
குடக்காய் (நா-க) குடங்காய் (ஆ) 678—334—3
துருவாசன்—துருவாச (க) துருவாசர் (ஆ-நா) 692—395—1
தொகுத்திலேகித்த (க) தொகுத்து லேகித்த (நா-ஆ) 704—12—3
மண்டில (நா-ஆ-க) மண்டல (சிறக்கும்) 705—15—2
கருப்புரம் (நா) கற்புரம் (ஆ-க) 705—16—2
வில்மணி (நா-ஆ) விண்மணி (க) 706—22—2
மாதா (நா-ஆ) மாதர் (க) 711—40—2
கற்பப்பூ (ஆ-க) கற்பகப் பூ (நா) 717—62—1
ஆசரித் (நா) ஆசிரித் (ஆ-க) 740—39—4
நிரயக் குழி (ஆ) நிரையக்குழி (க) நிறையக்குழி (நா) 743-47—4
மிண்டரும் (ஆ) மிண்டறும் (நா-க) 745—54—4
திரிசூலம் (நா-ஆ) திருச்சூலம் (க) 754—19—3
நுழையாவாறு (நா-ஆ) நுளேயாவாறு (க) 755—21—2
கிரிச்சரம் (ஆ) கிரிச்சிரம் (நா-க) 765—57—4
பைதுறுத் (க) பேதுறுத் (நா-ஆ) 772—85—4
பிறர்சுமை (நா-ஆ) பிறர்தமை (க) 776—100—2

—::—

---

க = புங்கத்தூர் திரு. கந்தசாமி முதலியார் அவர்கள்

நா = வண்ணக்களஞ்சியம், காஞ்சி திரு. நாகலிங்க முனிவர்

ஆ = காஞ்சி. சித்தாந்தபோத ரத்ஞகரம் திரு. ஆலாலசுந்தரம் பிள்ளை அவர்கள்

சு = சோடசாவதானம் தி. க. சுப்பராயச் செட்டியார் அவர்கள்

# காஞ்சிப் புராணப் படல அட்டவணை



—:0:—

உ
சிவமயம்



முதுபெரும்புலவர் — பொன். குமாரசுவாமி அடிகள்
மெய்கண்டார் கழக ஆசிரியர், கணித சோதிடர், காஞ்சிபுரம்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

திருவாவடுதுறை ஆதீனம்

# சிவஞான சுவாமிகள்

அருளிச் செய்த

# காஞ்சிப் புராணம்

## பொழிப்புரை

### பாயிரம்

### காப்பு

*கலிநிலைத் துறை*

*இருக வுள்துளை வாக்குகார்க் கடங்கள்இங் குலிகக்*
*குருநி றத்திழி தோற்றமுன் குலாய்த்தவழ்ந் தேறிப்*
*பரிதி மார்பினில் சமனொடு காளிந்தி பயிலுந்*
*திருநி கர்த்தசீர் ஐங்கரக் களிற்றினைச் சேர்வாம்.*

*ஐந்து திருக்கரங்களும் யானைமுகமும் உடைய விநாயகப் பெருமானாரது இரு காதுகளின் வழி ஊற்றுகின்ற கரிய மதநீர் செந்நிற மார்பினிடமாக ஒழுகுதல், சூரியன் மார்பில் அவன் மகனாகிய இயமனும், மகளாகிய காளிந்தியும் தவழ்தலை ஒக்கும். இவ்வாறு காட்சி விளங்கும் அவ்விநாயகப் பெருமான் திருவடிகளில் சரண் புகுவாம்.*

*கவுள்—கன்னம். வாக்குதல் — வடித்தல். இங்குலிகம்—சாதிலிங்கம்; சிவப்புமாம். குரு—நிறம். நிறம்—மார்பு.*

### தலவிநாயகர்

*அறுசீரடி யாசிரிய விருத்தம்*

விகட சக்கர ஆரணந் தொடர்வரும் வித்தக முகில்வீற
விகட சக்கர விந்தமன் னவன்றனக் கருளுமெய்த் தலைவாகு
விகட சக்கர வாகமென் முலையுமை கான்முளை என்னுச்சே
விகட சக்கரர் எந்திர் மெனச்சுழல் வெம்பவக் கடல்நெஞ்சே. 2

விகடக் கூத்தினைப் பூசனையாக் கொண்டு திருமாலுக்குச் சக்கரம் அருளி 'விகட சக்கரன்' எனும் திருப் பெயர் பூண்டோனே! வேதங்கள் தொடர்தற்கரிய மெய்யறிவே! மேகம் நாணுறப் பொழியும் மதத்தை யுடையோனே! கண்கள் தாமரைமலரை ஒத்துப் 'பதுமாக்கன்' எனப் பெயரிய மாலுக் கருளிய மெய்மையே தலைமைப் பாட்டினனே! குடத்தையும, சக்கரவாகப் பறவையையும் நிகர்த்த கொங்கை உமைக்கு மகனே! எனத்துதித்து வணங்கிக் குயவனது சக்கரமெனச் சுழலுகின்ற பிறவிக் கடலை, நெஞ்சமே! கடப்பாயாக!

## கடவுள் வாழ்த்து

### சபா நாயகர்

சங்கேந்து மலர்க்குடங்கைப் புத்தேளும் மறைக்கோவுந் தழல்கால் சூலம், அங்கேந்தும் அம்மானும் தத்தமது தொழில் தலைநின் றூற்றச் செய்தோர், பங்கேந்தும் பெருமாட்டி விழிகளிப்ப இருமுனிவர் பணிந்து போற்றக், கொங்கேந்து மணிமன்றுள் குனித்தருளும் பெருவாழ்வைக் குறித்து வாழ்வாம். 3

பாஞ்சசன்னியம் கொள்ளும் திருமாலும், வேதனும், நெருப்பு மிழும் சூலம் பற்றும் உருத்திரமூர்த்தியும் முறையே காத்தலும், படைத்தலும், அழித்தலுமாகிய செயல்களை மேற்கொள்ள அருள் செய்து சிவகாமியம்மை கண்டு களிக்கவும், பதஞ்சலி வியாக்கிரபாதர் பணிந்து போற்றவும் நறுமணங் கமழும் அழகிய அம்பலத்தின்கண் நடித்தருளும் பெருவாழ்வாம் கூத்தப் பெருமானை உளங்கொள்ளுதலான் வாழ்வோமாக!

### திருவேகம்ப நாதர்

தணந்தபெருந் துயர்க்கடல்மீக் கூர்தலினன் மலைபயந்த தரளமூரற், கணங்குழையாள் புரிபூசை முடிவளவுந் தரியாமல் இடையே கம்பை, அணங்கினைத்தா தெனவிடுத்து வலிந்திறுகத் தழீஇக்கொள்ள அமையாக் காதல், மணந்தருளிக் குறிபூண்ட ஒருமாவிற் பெருமானை வணக்கம் செய்வாம்.

காமாட்சியம்மை பிரிந்தமையால் நேர்ந்த துன்பமாகிய கடல் அவ்வளவில் நில்லாது மிகுதலால் அவ்வம்மையார் புரிகின்ற பூசனை முடியுமளவும் பொருது கம்பை நதி என்னும் தெய்வ மகளைத் தூதாகப் போகவிடக் கண்டஞ்சித் தழீஇக் கொள்ள அடங்காத ஆதரத்தால் கலந்து வளைத்தழும்பும், தனத் தழுமபும் ஒருங்கு பெற்ற மாவடியில் எழுந்தருளியுள்ள திருவேகம்பப் பெருமானை வணங்குவாம்.

### காமாட்சி அம்மையார்

ஊன்பிலிற்று மழுவாளி கலவிதனில் ஒண்ணுதென் றோர்ந்து நஞ்சந், தான்பிலிற்றும் பாப்பணியை நீப்பவுங்கார்

வண்டினங்கள் தழைந்து மூசத், தேன்பிலிற்று நறுங்கடுக்கைத் தெரியலைப்பாம் பெனமருண்டத் தெரியல் நாறுங், கான்பிலிற்றத் தெருண்டணையுங் காமக்கோட் டத்துமையைக் கருத்துள் வைப்பாம். 5

மழுப்படையோன் போக வடிவினனுக்குக் கொன்றை மலர்மாலையைத் தரிப்பவும், காமக் கண்ணியம்மையார் வண்டுகள் செறிந்து மொய்க்கும் அதனைப் பாம்பென முன்னர் மருண்டு நறுமணத்தால் மாலையெனப் பின் தெளிந்து பிரானை அணையும் அவ்வம்மையை நினைவில் நிறுத்துவாம்.

பிலிற்றுதல்—சிந்துதல். தழைந்து—நெருங்கி. மூச—மொய்ப்ப. கடுக்கை—கொன்றை.

கருக்காமக் கோட்டிமிர வினையனைத்தும் ஒருங்கெய்திக் கலகஞ் செய்யுந், தருக்காமக் கோட்டியெலாம் அறஎறிந்தாம் இனிஎன்றும் தகைசால் அன்பு, சுருக்காமக் கோட்டினைச்சே யரைகரங்கொண் டார்க்குழலைச் சுவடு நல்குந், திருக்காமக் கோட்டியம்மை சேவடிப்போ தெப்போதுஞ் சிந்திப் பாமால். 6

பிறவியைத் தரவருகின்ற அவா வென்னும் தீமையைத் தோற்றுவிக்கின்ற இருள்மலங் காரணமாகக் கூடுகின்ற இருவகை வினைகள் முற்றும் ஒருங்கு கூடிச் செருக்குவன ஆகும். அக்கூட்டத்தை முற்றவும் களைந்தனம். பேரன்பினை மேலும் பெருக்குவோம். பிரமன் சிரத்தினைக் கரத்தினும், சங்குமணியை இடையினும் தரித்த பெருமானுக்குத் தனச்சுவட்டினைப் பதித்த காமக் கோட்டியம்மையார் திருவடி மலர்களை நனவினும் கனவினும் சிந்திப்போமாக!

கரு—பிறவி. திமிரம்—இருள் (ஆணவம்). கோட்டி—கூட்டம்.

## விகடசக்கர விநாயகக் கடவுள்

விழிமலர்ப்பூ சனைஉஞற்றித் திருநெடுமால் பெறுமாழி மீள வாங்கி, வழியொழுகாச் சலந்தரன்மெய்க் குருதிபடி முடைநாற்றம் மாறு மாற்றால், பொழிமதநீர் விரையேற்றி விகடநடப் பூசை-கொண்டு புதிதா நல்கிப், பழிதபுதன் தாதையினும் புகழ்படைத்த மதமாவைப் பணிதல் செய்வாம். 7

திருமால் சிவபூசையில் கண்மலரைச் சாத்திப்பெற்ற சக்கரத்தை விநாயகர் ஓர்வழியாற்கொண்டு அறவழி ஒழுகாத சலந்தரனைத் தடிந்த முடைநாற்றம் நீங்க மதநீரால் மணம் ஏற்றி விகடநடப் பூசை கொண்டு புதிதாக்கித் தந்து பழியைநீக்குகின்ற தன்தாதையினும் புகழ்படைத்த அவ்விநாயகரை வணங்குவாம்.

## குமாரக் கடவுள்

முருகோட்டந் தரப்பாயும் மும்மதமும் ஊற்றெடுப்ப முரிவிற் கோட்டும், ஒருகோட்டு மழகளிற்றை இருகோட்டு முதுகளிறு உலவக் காட்டிப், பருகோட்ட நறைவேட்டுப் பைங்கோட்டுத் தினைப்புனத்துப் பரண்மேற் கொண்டு, குருகோட்டும் பெடை மணந்த குமரகோட் டத்தடிகள் குலத்தாள் போற்றி 8

பறவைகள் தினைப்புனத்து வீழாமே கடியும்;வள்ளியம்மையாரின் இதழமுதம் விரும்பி, உபசார மும்மதமும் ஒருகொம்பும், இளமையும் உடைய யானைவடிவினராகிய விநாயகப் பெருமானை உண்மையாகவே மும்மதமும், இருதந்தமும், முதுமையும் உடைய யானையாகப் பரண்முன் வருவித்து அவ்வம்மையை மணந்த குமரகோட்டப் பெருமான் திருவடிகள் காப்பதாக!

## வயிரவக் கடவுள்

வேறு

எளியரை வலியர் வாட்டின் வலியரை இருநீர் வைப்பின்
அளியறத் தெய்வம் வாட்டும் எனுமுரைக் கமைய அன்றே
தெளியுமா வலியைச் செற்றோற் செகுத்துரிக் கவயம் போர்த்த
வளியுளர் கச்சி காவல் வயிரவர்க் கன்பு செய்வாம். 9

எளியரை வலியர் வருத்தின் அளியையுடைய அறக்கடவுள் அவ்வலியரை வருத்தும் எனும் மூதுரை உளது. அதற்கு இலக்கியமாக மாவலியை அழித்த நெடியோனை அழித்து அவரது தோலைக் கவசமாகப் போர்த்த, காற்று மிக்குலவும் காஞ்சியைக் காவல் கொண்ட வயிரவர்க்கு அன்பு வைப்பாம்.

வஞ்சனை அறிந்து வைத்தும் ஈதலே நன்றெனத் தெளிந்தமையால் தெளியும் மாவலி என்றனர். 'நிக்கிரகங்கள் தானும் நேசத்தால் ஈசன் செய்வது ஆகலின்' 'அளி அறக்கடவுள்' என்றருளினர்.

## திருநந்தி தேவர்

அங்கணன் கயிலை காக்கும் அகம்படித் தொழின்மை பூண்டு
நங்குரு மரபிற் கெல்லாம் முதற்குரு நாத னாகிப்
பங்கயந் துளவம் நாறும் வேத்திரப் படைபொ றுத்த
செங்கைஎம் பெருமான் நந்தி சீரடிக் கமலம் போற்றி. 10

அகச் சந்தான புறச்சந்தானங்கட்குப் பரமாசாரியராய் அகம்படித் தொழின்மை பூண்டு குறை இரப்பக் குழுமி இருக்கும் திருமால் பிரமனாதியோரைக் கைப்பிரம்பு கொண்டு சந்நிதியில் விலக்கலின், அவர்தம் அடையாள மாலைகளின் துழாய், தாமரை இவற்றின் மணநாறும் பிரம்பினை ஏந்தியுள்ள திருநந்திதேவர் தம் சிறப்புப் பொருந்திய திருவடிக் கமலங்களை வணங்குவாம்.

### அகத்திய முனிவர்

காசியி னின்றும் போந்து கம்பர்தாம் அருளப் பெற்று
மாசிலாக் கச்சி மூதூர் மன்னிவீற் றிருந்து பூமேல்
ஆசிலாத் தமிழ்ப ரப்பி அருந்தமிழ்க் குரவு பூண்ட
தேசினன் மலய வெற்பிற் குறுமுனி திருத்தாள் போற்றி. 11

காசியினின்றும் எழுந்தருளித் திருவேகம்பருள்வாய்த்துக் குற்ற மற்ற காஞ்சியில் நிலைபெறச் சிறப்புற இருந்து உலகில் களங்கமில்லாத தமிழைப் பரப்பி நல்லாசிரியத்தன்மை மேற்கொண்ட ஞானவடிவினரும் பொதியமலைக் குறுமுனிவரும் ஆகிய அகத்தியர்தம் திருவடிகள் காக்க!

### திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார்.

ஷை வேறு

பரசமய கோளரியைப் பாலரு வாயனைப்பூம் பழனஞ் சூழ்ந்த, சிரபுரத்துத் திருஞான சம்பந்தப் பெருமானைத் தேய-மெல்லாம், குரவையிடத் தமிழ்வேதம் விரித்தருளும் கவுணியர்தம் குலதீ பத்தை, விரவிளமை ஆளுடைய வென்றிமழ விளங்க-ளிற்றை விரும்பி வாழ்வாம். 12

பரசமயம் நிராகரித்து நீருக்கும் (நீற்றினை வளர்க்கும்) சிங்கமாய், ஞானப்பாலின் வடிவேயாகிய திருமுறைகளை இடையறாது ஓதியருளின மையின் பாலறுவாயராய், மகிழ்ச்சியால் குரவைக் கூத்தியற்றத் தமிழ் வேதம் விரித்த கவுணியர் குலவிளக்காய், சிரபுரமென்னும் சீகாழிப் பதியில் அவதரித்து எமைக் கலந்து ஆண்ட வென்றியையுடைய மழ இளங்களிறாய் விளங்கும் திருஞான சம்பந்தப் பெருமானை விரும்புதலின் வாழ்வோமாக!

'பால் நல்வாய் ஒருபாலன்' என்ற செம்பொருளும் ஆகும்.

### திருநாவுக்கரசு நாயனார்

ஷை வேறு

இடையறாப் பேரன்பும் மழைவாரும் இணைவிழியும் உழவா ரத்திண், படையறாத் திருக்கரமும் சிவபெருமான் திருவடிக்கே பதித்த நெஞ்சும், நடையறாப் பெருந்துறவும் வாகீசப் பெருந்-தகைதன் ஞானப் பாடல், தொடையறாச் செவ்வாயும் சிவவேடப் பொலிவழகும் துதித்து வாழ்வாம். 13

முதிர்ந்து முறுகிய அன்பும், அதனைக் காட்டும் மழைபோலப் பொழியும் கண்களும், உழவாரப் பணி இடையறாது புரியும் படைஏந்திய திருக்கரமும், சித்த நிலை திரியாது திருவடியிற் பதிந்து மீளாத திருவுள் ளமும், ஒழுக்கம் பிறழாக் கடுந்துறவும், வீட்டிற்கு வாயில் ஏனும் தொடை

எப்பொழுதும் சாத்தும் செவ்வாயும், காண இனியதும், கவினைத் தருவதுமாகிய சிவவேடப் பொலிவான் அமைந்த அழகும் ஆகிய இவற்றைத் துதித்து வாழ்வாம்.

### சுந்தரமூர்த்தி நாயனார்

ஒருமணத்தைச் சிதைவுசெய்து வல்வழக்கிட் டாட்கொண்ட உவனைக் கொண்டே, இருமணத்தைக் கொண்டருளிப் பணி-கொண்ட வல்லாளன் எல்லாம் உய்யப், பெருமணச்சீர்த் திருத்-தொண்டத் தொகைவிரித்த பேரருளின் பெருமாள் என்றுந், திருமணக்கோ லப்பெருமாள் மறைப்பெருமாள் எமதுகுல தெய்வ மாமால். 14

ஒருமணத்தைத் தவிர்த்தவரைக் கொண்டே இருமணங் கொண்டும், தம்மைப் பணிகொண்டவரைத் தாம் தூதுபோக்கல் முதலிய ஏவல் கொண்டும் வல்லாளராய், பெருவாழ்வு தரும் திருத்தொண்டத் தொகை விரித்தமையான் உலகர்பால் பேரருளாளராய் அரசர்கோல மும், அந்தணர்சீலமும் ஒருங்கு திகழ விளங்கும் சுந்தரமூர்த்தி நாயனார் எமது வழிவழித் தெய்வம் ஆவர்.

வழக்கில்லா வழக்கு ஆதலின் வல் வழக்காயிற்று.

### மாணிக்கவாசக சுவாமிகள்

பெருந்துறையிற் சிவபெருமான் அருளுதலும் பெருங்-கருணைப் பெற்றி நோக்கிக், கரைந்துகரைந் திருகண்ணீர் மழை-வாரத் துரியநிலை கடந்து போந்து, திருந்து பெருஞ் சிவபோகக் கொழுந்தேறல் வாய்மடுத்துத் தேக்கிச் செம்மாந், திருந்தருளும் பெருங்கீர்த்தி வாதவூ ரடிகளடி யிணைகள் போற்றி. 15

சிவபெருமான் திருப்பெருந் துறையில் வைத்து அருளிய அளவிலே அவனுடைய பேருரட் டிறத்தை எண்ணி எண்ணி உள்ளம் உருகி உருகி உடனைத் தொடுமணற் கேணியிற் சுரந்து கண்கள் நீர் பாயத் துரியாதீதநிலை பெற்றுச் சிவபோகமாகிய செழுந் தேனைப் பெருக உண்டு நிறைந்து இறுமாந்து மீளாதிருந்தருளும் பெரும் புகழுடைய திருவாதவூரர் திருத்தாள் காப்பதாக.

இந் நான்கு திருப்பாடல்களுக்கு ஒப்பனவும் உயர்ந்தனவும் இல்லை என்க.

### அறுபத்து மூவர்

கலி விருத்தம்

தத்து மூதெயில் மூன்றும் தழலெழ
மூத்து மூரல் முகிழ்த்த நிராமய
சித்து மூர்த்திதன் தாளிணை சேர்அறு
பத்து மூவர் பதமலர் போற்றுவாம். 16

இடம் பெயர்வனவாகிய சிறப்புடைய எயில்கள் மூன்றனையும் புன்னகையால் போக்கிய மலவலி கெடுப்போனும் மெய்யறிவைத் தனக்குத் திருமேனியாக வுடையோனும் ஆகிய சிவபிரான் திருவடிகளைச் சேர்ந்த அறுபத்து மூவர் திருவடிகளைப் போற்றுவாம்.

பிற எயில்கள் போலாது இடம் பெயர்தலின் சிறப்புடையது என்பார் மூது எயில் என்றார்.

## சேக்கிழார் நாயனார்

தூக்கு சீர்த்திருத் தொண்டத் தொகைவிரி
வாக்கி னாற்சொல்ல வல்ல பிரான்எங்கள்
பாக்கி யப்பய னாப்பதி குன்றைவாழ்
சேக்கி ழானடி சென்னி இருத்துவாம். 17

உயர்த்திக்கூறப்பெறும் புகழுடைய திருத்தொண்டத்தொகையை விரித்துச் சொல்ல வல்லவரும் எங்கள் சிவபுண்ணியப் பயனாகக் குன்றத்தூரில் அவதரித்தவருமான சேக்கிழார் பெருமானார் திருவடிகளைச் சிரமேற் கொள்வாம்.

தூக்கு—பிறவிப்படுகுழியினின்று தூக்கும் எனவுமாம்.

## திருக்கூட்டத்தார்

*அறுசீரடி யாசிரிய விருத்தம்*

பேயன்ன புறச்சமயப் பிணக்குநூல் வழியனைத்தும் பிழையே யன்றி, வாயன்மை தெளிந்துசைவ சித்தாந்த வழிதேறி அதீதவாழ்வில், போயண்மி அஞ்செழுத்தும் திருநீறும் கண்டிகை-யும் பொருளாக் கொண்ட, நாயன்மார் திருக்கூட்டம் பணிந்-திறைஞ்சும் பெரும்பேறு நான்பெற் றேனால். 18

பேய்த்தேர்போலும் புறச்சமய நூல்கள் கூறுவன தவறுடு பொய் படுவனஎனவும், சைவ சித்தாந்த வழியே குற்றம் இல்லது மெய்யாவது எனவும் தெளிந்து துரியம் கடந்த சுடர்த் தோகையுடன் பிரியாது நிற்கின்றபெருமானை அவ்விடத்திற் சேர்ந்தடைந்து ஐந்தெழுத்தையும், திருநீற்றையும், உருத்திராக்க மணியையும் மெய்ப்பொருளாகக் கொண்டொழுகிய நாயன்மார் திருக்கூட்டத்தை பணிந்து அவரொடும் உறையும் பேற்றினை யான் பெற்றேன். தாழ்ந்துயரும் தன்மையை எடுத்துணர்த்தினார்.

## பஞ்சாக்கர தேசிகர்

கயிலாய பரம்பரையிற் சிவஞான போதநெறி காட்டும் வெண்ணெய், பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர் மெய்ஞ்ஞான பானு வாகிக், குயிலாரும் பொழில்திருவா வடுதுறை-வாழ் குருநமச்சி வாயதேவன், சயிலாதி மரபுடையோன் திருமரபு நீடூழி தழைக மாதோ. 19

திருக்கைலாய பரம்பரையின் வரு சிவஞானபோதநெறியை உலகினில் எடுத்துக்காட்டும், திருவெண்ணெய் நல்லூரைப் பாடி வீடாக் கொண்டு அத்துவித உண்மைகண்டு மெய்கண்டார்' என்னும் காரணத் திருப்பெயர் ஏற்றவர் தம் வழிவழியில் வந்தருளி மெய்ஞ்ஞான சூரியனாகித் திருவாவடுதுறையில் ஞானச்செங்கோல் செலுத்திவரு குருநமச்சிவாய தேவர்தம் மரபாம் திருநந்திதேவர் மரபு நெடும் பல்லூழி தழைப்பதாக. சயிலாதி-திருநந்திதேவர்.

## வேலப்ப தேசிகர்

எவ்வெவகோட் படுபொருளும் அஞ்செழுத்தின் அடக்கி-
அவற் றியல்பு காட்டி, மெய்வகைஅஞ் சவத்தையினும் நிற்கு-
முறை ஓதுமுறை விளங்கத் தேற்றி, அவ்வெழுத்தின் உள்ளீடும்
அறிவித்துச் சிவபோகத் தழுத்தி நாயேன், செய்வினையும் கைக்-
கொண்ட வேலப்ப தேசிகன்தாள் சென்னி சேர்ப்பாம். 20

எவ்வெச் சமயவாதிகள் நூலையும், நூற்பொருளையும் திருவைந்தெழுத்தனுள் அடக்கி, அவற்றின் ஏகதேச நிலையை உணர்த்தி, நின்மல சாக்கிரமுதலிய நிலைகளில் நிற்குமுறைக்கும், நிற்கை நிலைபெற அறிவாற் கணிக்குமுறைக்கும் உள்ள ஒற்றுமையை விளங்கத் தெளிவித்து, ஐந்தெழுத்தின் தலைமைப்பொருளையும் அறிவித்துச் சிவபோகத்தில் திளைப்பித்து யாம் அவர்க்கு உடைமைப் பொருளாயினமையின் எமது ஆகாமிய வினையையும் கைக்கொண்ட குருநாதராகிய பின்வேலப்ப தேசிகர் திருவடிகளைச் சிரமேற்கொள்வாம்.

## நூல் செய்தற்குக் காரணம்

கலிநிலைத் துறை

மறைநான்கும் பயின்றொழுகி இட்டிகளும் பல இயற்றி
மல்லல் ஞாலத், திறவாத புகழ்படைத்தும் ஈசனிடத் தன்பிலரை
எண்ணு துள்ளம், புறம்ஓதிக் கொலைபயின்று மதுமாந்துங்
கொடும்பாவப் புலைய ரேனும், அறவாணன் திருவடிக்கீழ் அன்
பினரேல் அவர்எம்மை அடிமை கொள்வார். 21

நான்கு மறைகளை நன்கு பயின்றும், நல்வழி ஒழுகியும் வேள்விகள் பல இயற்றியும் அழியாத புகழ் அடைந்தும் ஈசனிடத் தன்பிலரைப் பொருளாக மதியாமையையும், அறவழி ஒழுகாதும் அருள்வழி ஒழுகுவோர்ஆயின் அவர் ஏவல்வழி நிற்கும் பெற்றிமையையும் எடுத்தோதுவர் ஆசிரியர்.

## மற்றைய சிவநேசர்கள்

பொருவில் கச்சியம் புராணம்வண் டமிழினிற் புகலென்
றிருநி லம்புகழ் மணிமதிற் கச்சிஏ கம்பர்
திருவ ருட்குரி யான்றவர் கூறிய சிறப்பால்
உரிமை உற்றெழும் ஆசையான் உரைத்திடலுற்றேன். 22

ஒப்பில்லாத காஞ்சிப் புராணத்தை வளமமைந்த தமிழாற் செய்க எனப் பெருநிலத்தவர் புகழ்ந்து கூறும் அழகிய மதில் சூழ்ந்த கச்சித் திருவேகம்பர் தம் திருவருட் பேற்றினர் கூறிய சிறப்பினானும், உள்ளத் தெழும் ஆசையானும் இந்நூலுரைக்கப் புக்கேன்.

அம்-சாரியை, 'அண்ணல் அம்கடிநகர்' (சீவ-78) உரிய என்னும் பெயரெச்சத்தகரம் விகாரத்தால் தொக்கது; 'புகழ்புரிந்தில்' (திருக். 59.) 'ஆசையாற் சொல்ல லுற்றேன்' (திருத்.)

## அவை யடக்கம்

மாயை காரிய உருக்களும் எம்பிரான் வடிவம்
ஆய வேல்அவை அருள்மய மாகும்மற் றதுபோல்
பேய னேன்பிதற் றுரையும்ஏ கம்பர்தம் பெருமை
தூய காதையுள் ஏறுதலால் துகளறத் தோன்றும். 23

மாயாகாரியப் பொருள்களாகிய கல், மண், பொன் முதலியனவும் எமது தலைவனாகிய சிவபெருமானது திருவுருவங்களாகச் சமைக்கப் பெறின், அவை அருள் வடிவங்க ளாகும். அவ்வாறே பித்துற்றோர் நிலையில் கூறும் எனதுரையும் சொன்மாத்திரையால் தாழ்ந்தும், இறைவன் வரலாறுகளாம் பொருட்பொலிவானே குற்றமற விளங்கும்.

பேயரும், பித்தரும், பத்தரும் ஒருவழி ஒற்றுமையும் உடையர் ஆகலின் பேயனேன் என அருளினர். பித்தேறிய உரை பிதற்றுரை என்க. பித்து, பேரன்பு.

இழித்த சொற்புணர்த் தெளியனேன் இயம்பிய கவியும்
கழித்த ஐவகை இலக்கண வழுவுக்குக் காட்டாப்
பழித்தி டாதெடுத் தாளுவர் பல்வகைச் சுவையும்
கொழித்த நாவின ராகிய வழுத்தரு குணத்தோர். 24

இழிவுடைய சொற்களால் ஆக்கிய தம் பாக்களையும் ஐவகை யிலக்கண வழுக்களுக்கு இலக்கியமாக (மேற்கோளாக) இகழாது எடுத்தாளுவர்; சொற்சுவை பொருட்சுவை பலவும் வடித்தெடுத்து வல்லாங்குக் கூறும் இலக்கிய வழுக்களின் நீங்கிய நல்லியல்பினோர்.

எளிமை—செஞ்சொல், இலக்கணச்சொல், குறிப்புச்சொல் இவற்றொடு திட்ப நுட்பங்கள் செறியாமை. இது கற்றோரை நோக்கியது.

எழுத்துப் போலியும் எழுத்தென ஆளுவர் அதுபோல்
புழுத்த நாயினேன் பிதற்றிய செய்யுட்போ லியையும்
பழுத்த கேள்வியோர் கைக்கொள்வர் என்பது பற்றி
விழுத்த நாணினேன் சிவகதை விளம்புதற் கிசைந்தேன். 25

போலி எழுத்தையும் எழுத்தாக ஆளுதல் செய்வர், ஆகலின் தனது போலிச் செய்யுளையும் கேள்வியான் மிக்கோர் மேற்கொள்வர் எனுந் துணிவு பற்றி, நாணிலியாய்ச் சிவகதை விரித்துரைக்கப் புகுந்தேன் என ஸ்ரீமாதவச் சிவஞானயோகிகள் அருளினர்.

'தாழ்வெனுந் தன்மையோடுஞ் சைவமாம் சமயஞ் சாரும் ஊழ் பெற்று'ப் 'பணியுமாம் என்றும் பெருமை' எனும் பண்பின் வெளிவந்தன இப்பாடல்கள்.

பழுத்த கேள்வியோர்-கேள்வி பழுத்தோர்; கேள்வி ஞானத்தான் முதிர்ச்சி பெற்றவர். விழுத்த நாணினேன்-நாண் விழுத்தேன்-நாணம் நீங்கியேன். கழிந்த உண்டியர்' (திருமுரு. ) போலக்கொள்க. இது கேள்விச் செல்வரை நோக்கியது. விளம்புதல்-விரித்துரைத்தல்.

நெறிவ ழாஉமை பூசனை போல்நெறி பிறழ்ந்தோன்
எறித ருங்கலுங் கைக்கொளுங் கச்சியெம் பெருமாற்
கறிவின் மேலவர் காப்பியப் பனுவல்போல் அறிவின்
குறியி லேன்கவிப் புன்சொலும் கொள்வது வழக்கால். 26

உமையம்மையார் வேண்டும் உபகரணங்களுடன் விதிவழுவாது இயற்றிய பூசனைகொண் டருளிய திருவேகம்பப்பெருமானுர் சாக்கிய நாய னார் விதிவழி கடந்தெறிந்த கல்லையும் கைக்கொண்டு பயனை நல்கினர். இருவேறு வகை நிகழ்ச்சியையும் ஏற்றருள்வோ னாகலின், அப்பெரு மான், அறிவின்மேலவர் பெருங்காப்பியங்களை ஏற்றருளியவாறு அறி வின் அடையாளமும் காணப்பெறாத தம் புன்சொற் பாடலும் கைக் கொண்டருளுவது வழிவழிவந்த வழக்கேயாகும்; புதுமுறை அன்று.

## சிறப்புப் பாயிரம்

எழுசீரடி யாசிரிய விருத்தம்,

அருட்பணிக் குரிய மகேச்சுரர் முதலா நால்வருந் தருக-வென் றறைய, மருட்பகை தூமிக்கும் காஞ்சிமான் மியத்தை வழங்குதென் மொழியினு லுரைத்தான், கருப்பகை இரிக்கும் ஞானமும் ஏனைக் கலைகளுங் கரிசறப் பயின்ற, மருப்பொழி லுடுத்த ஆவடு துறையில் வாழ் சிவஞானமா தவனே. 27

பிறவியை அகற்றும் ஞான நூல்களையும், பிறகலைகளையும் தெளியக்கற்ற திருவாவடுதுறை ஆதீன ஸ்ரீலஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள், திருத்தொண்டிற் குரிய மகேச்சுரர் முதலான நால்வகையினர் மயக்கொழிக்கும் காஞ்சிப் புராணத்தைத் தமிழ் மொழியில் அருள்கென அருள் செய்தனர்.

# திருநாட்டுப் படலம்

*கலிநிலைத் துறை*

பணங்கொள் பாம்பணி கம்பனார் பனிவரை பயந்த
அணங்கி னோடென்றும் அமர்ந்தினி தரசுவீற் றிருக்கும்
உணங்க ரும்புகழ்க் காஞ்சியை அகந்தழீஇ உம்பர்
வணங்க மேவரும் பாலிநாட் டணிநலம் வகுப்பாம். 1

திருவேகம்பப் பெருமானார் காமாட்சி யம்மையுடன் என்றும் விளங்க வீற்றிருந்து அருளாட்சி புரியும் திருக் காஞ்சியம் பதியைத் தன்னுட்கொண்டு சிறத்தலின் தேவரும் வணங்க இருக்கின்ற பாலி நாடெனும் தொண்டை நாட்டினிருவகை நலங்களையும் வகுத்துரைப்பாம்.

இந்தப் பூமி சிவனுய்யக் கொள்கின்றவாறு என்று நோக்கித் தேவரும் வணங்குவர்.

## மழைச் சிறப்பு

கடல் கடைந்திடச் செல்லுறாஉம் வெள்ளைமால் கடுப்பப்
படலை வெண்முகில் பரவைநீ ருழக்கிவாய் மடுத்து
விடமெ ழுந்தென மீண்டஅம் மாயனை விழைய
உடல்க றுத்துவிண் நெறிப்படர்ந் தொய்யென மீண்டு. 2

திருமால், பாற்கடலைக் கடைய, வெண்ணிற மேனியராய்ச் சென்று கருகி மீண்டனர். கடலை நோக்கிச் சென்ற வெண்ணிற மேகங்களும் நீரைப் பருகி அத்திருமாலை ஒப்பக் கருநிறமுற்று வான்வழி விரைய் மீண்டு,

உழக்கி—ஒய்யென இவற்றை உவமைக்கும் கூட்டுக. புவியின் மிக்க பரப்பினது ஆகலின் கடல் பரவை எனப்படும். படலை—தொகுதி. படர்ந்து—சென்று; துன்புற்று.

அற்றை ஞான்றுமால் கயிலையைச் சரணடைந் தாங்குப்
பொற்ற நந்தியஞ் சாரல்சூழ் பொருப்பினைக் குறுகிக்
கற்றை வார்சடைச் சுந்தரன் கடவவான் மதுரை
முற்று நான்முகி லெனவரை முழுவதும் பொதிந்து. 3

திருமால், அந்நாளில் திருக்கைலை மலையைச் சரணடைந்து சார்ந்தாற்போலக் கரிய மேகங்களும் அழகிய நந்தி மலையைச் சூழ்ந்து, சோமசுந்தரப் பெருமான் நான்கு முகில்களை ஏவ மதுரை மாநகரை வளைத்தாற்போல அம்மலையைப் பொதிந்துகொண்டு,

முரிந்த வெண்டிரைக் கருங்கடல் முகட்டினைக் குழித்து
விரிந்த வெள்ளநீர் மடுப்புழிக் கரந்துடன் மேவிக்
கரிந்தி டத்தனைச் செய்ததீ வடவையின் களவைத்
தெரிந்து வில்லுமிழ் தடித்தெனத் திசைதொறுஞ் சிதறி. 4

கடல்நீரைப் பருகும்வழி தனது வடிவை மறைத்து நீருடன் உட்புகுந்து தன்னைக் கருகச் செய்த வடவானலத்தின் வஞ்சகச் செயலை அறிந்து அதனை வெளியே யுமிழ்தல் போல ஒளியைக் கக்குகின்ற மின்னலாகப் பல திசைகளினும் வீசி;

குழித்து—குழி செய்து (மிகப் பருகி என்னும் குறிப்பிற்று) கடற் பள்ளங்களைக் கப்பற் செலவினர் கூறுப. உடன் மேவி—உடலில் மேவி, உடன் மேவி எனக்கொள்க. தடித்து—மின்.

கான்ற அக்கனல் மீட்டடை யாவகை கருதி
வான்ற னிற்குனி சிலையெனத் தடையினை வயக்கி
ஏன்ற நீஇனி எதிர்த்தனை யாயிடின் இன்னே
ஊன்ற னோடுயிர் குடிப்பலென் றுருமொலி எழுப்பி. 5

உமிழப் பெற்ற தீ, மீள அணுகாத உபாயத்தை நாடி, வளைத்த (அம்பேற்றிய) வில்லென இந்திர தனுசை வல்லென விளக்கி, மேலும் பகைத்தனையாயின் அப்பொழுதே உயிரையும், உடலையும் ஒருங்கு பருகுவல் என இடியொலி எழச்செய்து, (தெழித்து—உரப்பி)

(இப்பிழை பொறுத்தனன்; இனிப்பிழை பொறேன்) வானில், ஊனொடு எனற்பாலன தன் சாரியை பெற்றன.

அடுத்த டுத்தலை மோதுதெண் டிரைப்புனல் அளக்கர்
உடுத்த பாரில்உன் கிளையெலாம் முதலற ஒருங்கே
படுத்து நின்வலி பாற்றுவன் யானெனப் பகைமை
தொடுத்த வஞ்சினங் கொண்டழல் மேல்அமர் தொடங்கி. 6

அடுத்து மேன்மேல் அலைத்தெழும் கடல் சூழ்புவியில் வடவைத் தீயின் இனமாகிய நெருப்பெலாம் வேரொடும் ஒருசேர அழித்து அவ்வழி அதன் வலிமையைப் போக்கப் பகை பற்றி எழுந்த சபதத்தொடும் போரைச் செய்யத் தொடங்கி,

பகை—மை பகுதிப் பொருள் விகுதி; பத்திமைபோல, சினையொடு முதலுக்கு ஒற்றுமை உண்மையின், கிளையை யழித்து முதலின் வலிமையைக் குறைத்தல் பேசப்பெற்றது.

விச்சை மந்திர வலியினல் வீங்குநீர் மழையை
வச்சி ரக்கணை யாக்கிமெய் வளமெனக் கருளும்
பொச்ச மில்மறை வேள்வியும் புனிதன்ஏந் தழலும்
எச்ச மாகமற் றெவையுமீண் டிறுகென இயம்பி 7

மந்திரவித்தையின் வன்மையால் பெருமழைத் தாரையை வயிரக்கணையாக்கி, வேள்வித்தீயையும், சிவபிரான் திருக்கரத்துத் தீயையும் தவிரப் பிற நெருப் பெவற்றையும் அழிக்க எனக்கூறிவிடுத்து,

மெய்வளமாவது உயிருடம்புகளை ஒன்று படுத்தி உலகைச் சித்திரிக்கும் தன்மை. பொச்சம் இல் மறை—பயனுல் வழுப்படா மறை; வேள்விக்கு ஏற்றினும் அமையும். ஈண்டு—விரைய. வேள்வி மழைக்குக் காரணம் ஆதலின், எனக்கருளும் என்க.

காட்ட கங்களுங் கழைநரல் கதிர்மணிச் சிமயக்
கோட்ட கங்களும் குளிர்புனற் கழனிசூழ் குலவு
நாட்ட கங்களும் பரல்முரம் படுத்தெரி நடஞ்செய்
மோட்ட கங்களும் முழுவதுங் குளிர்கொளச் சொரிந்து. 8

முல்லையும், குறிஞ்சியும், மருதமும், நெருப்பின் திருக்கூத்து நிகழ்கின்ற பாலையும் ஆகிய எங்கணும் குளிர்ச்சி பெறச்சொரிந்து,

கழை நரல்—மூங்கில் ஒலிக்கின்ற. மணி—முத்து. சிமயக்கோடு—மலைச் சிகரம். பரல்—பருக்கைக் கற்கள். முரம்பு—மேட்டு நிலம்.

இற்றொ ழிந்தன ஒழியமற் றெஞ்சிய எரிபோய்க்
கற்ற வேதியர் வேள்வியஞ் சாலையுட் கரப்ப
உற்ற வாகண்டு தன்சினக் கனலையும் ஒருவி
வெற்றி மாமுர செனமறைப் பேரொலி விளக்கி. 9

கெட்டொழிந்த நெருப்பொழிய மிக்கிருந்தவை வேதியர் செய் வேள்வியில் அடைக்கலம்புகக் கண்டு கோபமாகிய கனலையும் நீக்கி வெற்றியின் முழக்கென வேதபாராயண ஒலியால் விளக்கி,

தனது கீர்த்தியுந் திறற்பிர தாபமும் தரைமேல்
அனல்செய் கோபமும் முல்லையு மெனஎங்கும் அமைத்துப்
புனித மாம்அவை தன்னையும் பொதிந்துகொண் டென்னப்
பனிவி சும்பினிற் சிவந்துவெண் ணிறம்படைத் தன்றே. 10

மேகம், கொடையால் வருபுகழும், படைத்திறத்தால் வரு பிர தாபமும் பெற்ற நிலையை முல்லை மலரானும், இந்திர கோபப் பூச்சியானும் தரைமேல் யாண்டும் பரப்பி, அவ்வளவின் அமையாது தூய அப்புகழ்ப் பிரதாபங்கள் அவற்றிற்கு முதலாகிய தம்மையும் அகப்படுத்தாற்போல ஆகாயத்தில் வெண்ணிறமும், செந்நிறமும், படைத்தன்று,

கீர்த்தி—வெண்ணிறம், பிரதாபம், செந்நிறம், கவி மதம். முன்னது ஈரத்தானும், பின்னது வீரத்தானும் அடைவன.

*அறுசீரடி யாசிரிய விருத்தம்*

உடுவணி குடுமிக் கோடு பிளவுபட் டுடையப் பெய்யுங்
கொடுமழைக் காற்ற தங்கட் குளிர்பெயல் மாற எண்ணி
நெடுமலை எடுத்துக் காட்டு நெட்டிதழ்க் காந்தட் கொள்ளி
விடுசுடர்க் கனலி அந்தப் புனலொடும் வீந்த தன்றே 11

விண்மீன்கள் தவழ வளர்ந்த மலைச்சிகரங்கள் பிளவு படப் பெய்யும் கொடிய மழையைப் பொறாத நந்திமலை அம்மழையைத் தவிர்க்கும் உபாயம் நாடிக் காந்தளாகிய கொள்ளிக்கட்டையை எடுத்துக்காட்ட அக் கொள்ளியொடு மழையும் கெட்டது.

மழையை நிறுத்தக் கொள்ளி காட்டல் வழக்கு. உடு-நட்சத்திரம்

போதம்மே லாகப் பண்டே புல்லிய மலநோய் தீர்ந்தும்
வாதனை தாக்கு மாபோல் மழைப்பெயல் மாறித் தீர்ந்துங்
காதல்செய் துறையும் புள்ளும் மாக்களும் கவன்று நெஞ்சம்
நோதக மரங்க ளெல்லாம் நுண்துளி துவற்றும் மாதோ. 12

மெய்யறிவு மேலிட அநாதியே பற்றியுள்ள மலவலி கெட்டும் வாசனை தாக்கித் துன்புறுத்துவ தொப்பத், தம்மை விரும்பிச் சார்ந்து வாழும் பறவை விலங்கினங்கள் மனம் வருந்த மரங்கள் துவலையைத் துவற்றும்.

'அடை மழை விட்டும், செடி மழை விடவில்லை' என்பது வழக்கு

கனைபெயல் எழிலிக் கூட்டங் கலிவிசும் பகடு போழ்ந்த
நனைமுடி நந்திக் குன்றம் நளிபடப் பொழியுந் தெண்ணீர்
புனைமறை வசிட்ட மேலோன் செருத்தல்ஆன் பொழிந்த தீம்பால்
வனைபுகழ் வெள்ள மென்னத் திசைதொறும் வழிந்த மன்னோ. 13

செறி பெயலைக் கொண்ட மேகங்கள், தேனடை சூழ்ந்த நந்திமலை குளிர்ச்சியுறப் பொழியும் நீர் வசிட்ட முனிவர்வழி நிற்கும் காமதேனுப் பொழிந்த இனிய பால் வடிவெடுத்த புகழதுபெருக்கம் போலத் திசை தொறும் வழிந்தன.

கலி—ஒலி, விசும்பின் குணம். அகடு-நடுவிடம். செருத்தல்—மடி.

### பாலியாற்று வளம்

கண்ணகன் குடுமிக் குன்றிற் கல்லெனக் கறங்கி ஆர்த்து
விண்ணிவர் ஏணி யென்ன வியன்முடி தொடுத்து வீழுந்
தண்ணறு அருவி யெல்லாந் தலைத்தலை விரிந்து சென்று
புண்ணியப் பாலி யாற்றிற் சேர்ந்துடன் போய மாதோ. 14

மலையினது முடிமுதல் அடிவரை அருதொழுகும் அருவிகள் வானுலகிற்கு ஏற அமைத்த ஏணிகள் போலாக விளங்கிக் கல்லென்னும் ஒலியுடன் பாலியாற்றிற் கலந்தன.

பாரிடங் குழித்து வீழும் பல்வயின் அருவி யெல்லாம்
ஓரிரும் பாலி யாற்றின் ஒருங்குசென் றணையுந்தோற்றம்
சீரிய புவனந் தோறுஞ் சிதறிய வினைக ளெல்லாம்
ஓரிடத் தொருவன் றன்பால் உடங்குசென் றுறுதல் போலும். 15

பல்வேறிடங்களில் குழி செய்து வீழும் அருவி யாவும் பாலி நதியில் ஒருங்கு கூடும் காட்சி, வெவ்வேறுடம்புடன் வெவ்வே றுலகத்துச் செய்த வினைப்பயன்கள் ஒரு பிறப்பின்கண் வந்துறுதலை ஒக்கும்.

விலகிவீழ் அருவித் தாரை வேறுவே றாக ஓடிக்
குலநதிப் பாலி வைப்பின் ஏகமாய்க் கூடுந் தோற்றம்
அலகில்பல் வழியும் மூதூர் அணிமையின் ஒன்று மாறும்
பலபல மதமும் ஈற்றின் ஒருவழிப் படலும் போலும். 16

கால் பலவாய் ஓடிப் பின் பாலியின் ஒன்றாய்க் கூடுங்காட்சி, பேரூரை அடைதற்கு அமைந்த பல வழிகளும், ஒரு வழிப் படுதலையும், சமய நெறிகள் பலவும் முடிந்த முடிபாகிய ஒருவழிச் செலவையும் ஒக்கும்.

விலகி—இடையிட்டுத் தவழ்ந்து; அருவி மாலையாக எனலும் பொருந்தும். ஓடி—பொருந்தி. குலம்—மேன்மை.

மலைநகைத் தனைய காட்சி வயின்வயின் அருவித் தாரை
சிலையினின் றிழிந்து மண்மேல் திரண்டுசென் றணையுந் தோற்றம்
உலவையோ டிகலிச் சேடன் உயர்வரைக் குடுமி யெல்லாம்
பலதலை விரித்துப் பொத்திக் கிடந்தஅப் பான்மை போலும். 17

நந்தி மலையினது புன்சிரிப்பின் வெள்ளொளிபோலத் திகழும் அருவிகள் மலைமுகட்டிற் பலவாய், இழிந்து மண்ணில் ஒன்று படும் காட்சி, வாயுதேவனொடு பகைத்து ஆதிசேடன் தனது ஆயிரம் படங்களால்கைலைமலைச் சிகரங்களைப் பொதிந்ததொக்கும் என்க.

உலவை—காற்று; வாயுதேவன்; உலவுவதென்னும் பொருளது.

குரைபுனல் தொண்டை நாட்டைக் குறும்பெறிந் தடிப்படுத்துப்
புரைதப நடாத்து கென்னப் புதுமுகி லரசன் நந்தி
வரைமிசை யிருந்து வேந்தா மணிமுடி சூட்டி உய்ப்பத்
திரைபடு பாலி வல்லே சிலையினின் றிழிந்து போந்து. 18

மேகமாகிய புதிய அரசன் நந்தி மலையாகிய அரசவையில் வைத்துப் பாலியாகிய தன் மகனுக்கு மணிமுடி சூட்டி இளவரசாக்கித்

'தொண்டைநாட்டரணை எறிந்து குறுநில மன்னரை ஏவல் கொண்டு, செங்கோல் செலுத்துக' என ஏவ மலையினின்று விரைய இழிந்துபோய்,

குறை—ஒலிக்கின்ற. புரைதப என்னும் குறிப்பு வெப்பமாகிய கொடுங்கோன்மையையும் பாலி அரசனின் செங்கோன்மையையும் விளக்கியது.

அரசுகள் சூழ்ந்து செல்ல அருங்கணி மலர்வாய் விள்ளச்
சரிகுழற் குறமின் ஞர்கள் பறப்பல தானை வெள்ளம்
விரவிடப் பரிய காலாள் மேதகு மாக்கள் அத்தி
இருபுடை தழுவிப் போத இகல்கொடு வையம் ஊர்ந்து. 19

பாலிநதியை அரசாக உருவகிக்கும் பதின்மூன்று பாடல்கள் படித்தின்புறற் குரியன.

அரசமரங்கள் திரண்டு போதவும், அரிய வேங்கை மரங்கள் மலரவும், குறமகளிர் தம் ஆடைகள் பல கலப்பவும், பரிய அடியினையுடைய ஆண் மரங்கள், மாமரங்கள், அத்தி மரங்கள் இருபுறமும் தழுவிப் போகவும் வன்மையொடும் புவியில் தவழ்ந்து,

(வேறு பொருள்) அரசர் சூழவும், சோதிடர் நல்லோரை கூறவும், குறமகளிர் தந்த கள்ளைப் போர்வீரர் கொண்டு விரவவும், பதாதிகள், குதிரைகள், யானைகள் இருமருங்கும் போதவும், பகையை உட்கொண்டு தேரூர்ந்து,

அணிவகுத் தெழுந்து குன்றர் அரும்பெறற் குறிச்சி புக்கு
மணிவகை ஆரம் பூண்டு மதுக்குட விருந்து மாந்தித்
தணிவற வெளிக்கொண் டேகித் தலைத்தலை வேட்டம்போகித்
துணிபட மாக்க ளெல்லாந் தொலைத்துடன் ஈர்த்துச் சென்று. 20

ஈர்த்துச் செல்லும் பொருள்களை வரிசையாக்கிக் கிளர்ந்து மலைவாழ்நர் சிற்றூர்களிற் புகுந்து நவமணி மாலைகளும் தாங்கி, மதுக்குடங்களை அகப்படுத்துக் குறைவறக் கொண்டு வெளிப்பட்டு அவ்வவ்விடந்தொறும் கொள்ளை கொண்டு விலங்குகள் குறைபடத் தொலைத்து ஈர்த்துச் சென்று, தார், கூழை, (முன்படை, பின் படை) பல்வகை வியூகங்களாக அணிவகுத்து (ஈர்த்துக் கொணர்ந்த பொருள்களை வரிசையாக்கி) எனவும் பிற இரண்டற்கும் பொதுவாக்குக.

கலி விருத்தம்

மண்டமர் மேல்கொடு வந்தனம் இன்னே
தண்டக நாட்டுறை தாபதர் நோயோர்
பெண்டிரும் நும்அரண் ஏகுதிர் பெட்டென்
றெண்டிசை யார்ப்ப இசைப்பறை சாற்றி. 21

'மிக்குச் செல்கின்ற பேரேற்று வந்துளோம், ஆகலின், தண்டக நாட்டிலுறை தவத்தரும், பிணியுடையரும், பெண்டிரும் ஆகிய நீவிர் விரும்பி இப்பொழுதே நுமக்குப் பாதுகாப்பாகிய இடத்திற்குச் செல்லுமின்' என எண்டிசையினும் ஆரவாரிப்பப் பேரொலியாகிய பறையால் முழக்கிக் கூறி,

நீர்ச் செலவின் எழுந்த பேரொலியைத் தற்குறிப்பேற்றத்தானும், பறையாக்கிய உருவகத்தானும் போர் நிகழ்ச்சி கூறினர்.

இருற்றிகி ரிப்படை தாங்கி இபக்கோ
டருத்திறல் வெஞ்சிலை காந்தள் அரும்பு
நருப்பயில் கோலென ஏந்திநல் வீர
மருப்பகை மாய்த்துற வெட்சி மலைந்து. 22

தேனடையாகிய சக்கரப் படைதாங்கி, யானைத் தந்தத்தை வன்மை அமைந்த கொடிய வில்லாகவும், காந்தள் அரும்பினை விடம் பூசிய அம்பாகவும் ஏந்திப் பிறக்கிடாத வீரமுடைய பகையை அழிக்க வெட்சி மாலையைச் சூடி,

கொல்லுதலின் அம்பிற்குக் கோலெனப் பெயர் அமைந்தது; வெல்லுதல் வேல்போல. மலைதல்-மாறுபாட்டொடு சூடுதல்.

முல்லையின் வேந்து முடித்த கரந்தை
ஒல்லை அலைத்துயர் ஆனிரை பற்றி
மெல்லிதழ் தின்று சிவந்தெழு வேய்த்தோள்
நல்லவர் கற்பை யழித்து நடந்து. 23

முல்லை நிலமாகிய அரசு கொண்ட கரந்தையை எளிதில் அழித்துப் பசுக்கூட்டங்களைக் கவர்ந்து மெல்லிய உதட்டை அதுக்கிச் சிவந்து மூங்கில் போலும் தோளினையுடைய ஆய்ச்சியர் கற்பினை அழித்து நடந்து.

பசு நிரைகளைக் கவர்வோர் வெட்சி மாலையையும், அவற்றை மீட்போர் கரந்தை மாலையையும் சூடுதல் மரபு.

உதட்டைக் கடித்தல்-சினக்குறிப்பு, ஆற்றிற்குக் கொள்ளுங்கால், மெல்லிய இதழ் (பூ) களை அழித்து எனவும், முல்லைக் கொடியை அழித்து எனவும் பொருள் கொள்க முல்லை இன் வேண்டா வழிச்சாரியை.

வஞ்சி மலைந்தழல் பாலையை வாட்டி
அஞ்சி யிடாதுதன் ஆணை யிருத்தி
எஞ்ச லுறாமரு தத்திறை யோடும்
வெஞ்சம ரேற்றுழி ஞைத்துணர் வேய்ந்து. 24

வஞ்சி மாலையைச் சூடி அஞ்சிப் பின்னிடாது, அழலுகின்ற பாலையைக் கெடுத்துத் தன் ஆட்சியை நிறுவி, உழிஞை மாலையைச் சூடி வளங் குறையாத மருதமாகிய அரசொடு கொடிய போரை மேற்கொண்டு,

அத்து, அல்வழிக்கண் வந்த சாரியை, அழல் பாலை—'எரி நடஞ் செய் மோட்டகம்' (காஞ். திருநா. 8) பாலையை மருதம்போல ஆக்கி என்பார் 'வாட்டி இருத்தி' என உரைத்தனர்.

தடுத்தெதிர் நின்ற தடங்கரை யெல்லாம்
படுத்து மதன்பயில் பாசறை வீட்டி
மடுக்குளம் ஏரியின் வாட்ட மனைத்தும்
கெடுத்தன மென்று தழீஇக்கிளர் வுற்று. 25

மேற்செல்ல விடாது எதிர்த்துநின்ற பேரணைகளை அழித்துச் அரணை) சோலைகளையும் கெடுத்து, மடுக்குளம், ஏரிகளின் வாட்டம் கெடுத்து வளமாகிய நீர் நிரப்பிக் கொடையான் வந்த பெருமிதமுற்று,

வீறி யடாவகை வெஞ்சிறை கோலித்
தூறிடு மள்ளர் தொலைந்தழி வெய்தச்
சீறி யடர்ந்து தெழித்துமுள் வேலி
கீறி வளைந்து கிடங்கினை நீங்கி. 26

செருக்கி அழியாதவண்ணம் பெருங்கரையை வளைத்து மேடிட்டுத் தடுக்கும் உழவர் எழுச்சி தொலைந்து அழியப்பொங்கி நெருங்கிப் பேரொலி செய்து முள்வேலியைத்துண்டு படுத்திச் சூழ்ந்து அகழியைக்கடந்து,

தூறிடு மள்ளர்—பழித்துப்பேசும் வீரர். தெழித்து—உரப்பி. வேலமரம் வைத்து வளர்த்தலானும், பகைவர்தம் வேல் கொண்டு அமைத்தலானும் வேலி எனப்பெறும்.

நொச்சியை முற்றிஅந் நொச்சியி னுள்ளார்
பச்சிள நொச்சி பறித்தணி யாமே
நச்சிய தும்பை நறுந்துணர் சூடி
அச்செழு மாமதில் முற்றும் அகழ்ந்து. 27

மதிலை வளைத்து அம்மதிலிடத்தவர் நொச்சி மாலையைச் சூடித் தம்மதிலைக் காவாமே தாம் விரும்பிய தும்பை மாலையைச் சூடி அதிரப் பொருது அவ்வளவிய மதிலை முற்றும் அகழ்ந்து,

மதிலைக்காவல் செய்வோர் நொச்சியணிதல் மரபு. மதிலிடத்தோர் (அகத்துழிஞையோர்) நொச்சியணியாதபடி வெள்ளம் அதனை அழித்தது.

ஷை வேறு

இடித்துவெளி செய்துநக ரெங்கணும் நுழைந்தாங்
கடுத்தமட வார்வயி றலைத்தனர் இரங்கக்
கொடுத்திடு வளங்கள்பல கொள்ளைகொடு மண்ணின்
எடுத்துவரு வெள்வரகு கொள்ளுடன் இறைத்து. 28

இடித்து வெளியாக்கி நகர் முழுதும் புகுந்து, ஆண்டுள்ள மகளிர் வயிற்றிலடித்துக் கொண்டரற்றப் போகத்திற்குக் காரணமான பல செல்வங்களையும் (கொள்ளை) மிகுதியாகக் கொண்டு, தம்மிடத்திருந்த

கவடிகளையும், குடைவேலையும் விதைத்து,

'மண்ணின்' என்ற குறிப்பானே கழுதை ஏரானுழுது வித்தியது விளங்கிற்று. "வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டு, வெள்ளை வரகும் கொள்ளும் வித்தும்" (புறநா-392)

வெற்றிபுனை மாலிகை மிலைச்சிஇரு பாலுஞ்
சுற்றிவரு புட்குல நிரைத்தொழுதி தன்னால்
கொற்றமிகும் ஆர்கலியை நோக்கிஅறை கூவி
எற்றுகழி நெய்தல்வழி எய்துறுத லோடும். 29

வாகை மாலையைச் சூடி வலமும், இடனும், வட்டமும் தொடரும் பறவைக் கூட்டத்தின் பேரொலியால், வெற்றி மிகும் கடலை நோக்கி வலிதிற் போர்க்கு அழைத்துக், கரையை மோதுகின்ற உப்பங்கழிவழி அடைந்த அளவிலே,

தொழுதி—பறவைக் கூட்டத்தின் ஒலி. ஆர்கலி-கடல்; நிறைந்த ஒலியுடையது. "அறை கூவி ஆட்கொண்டருளி" (திருவா)

பௌவம துணர்ந்துபவ ளந்தரள மாதி
வெளவுதிரை ஏந்தியெதிர் கொண்டடி வணங்கச்
செவ்விதின் உவந்துபயம் ஈந்துசின மாறிக்
கௌவியமெய் யன்பொடு கலந்துளதை யன்றே. 30

பாலி மன்னன் படை எடுப்பை அறிந்து,கடல் பவளம், முத்து முதலிய பொருள்களைத், தாவிப்படர்கின்ற திரைக்கரங்களால் ஏந்தி, எதிர்கொண்டு அடிதாழக் கோபம் தணிந்து செவ்வனே மகிழ்ந்து பயம் ஈந்து மேலிட்ட உள்ளன்பொடும் அளவளாவியது. பயம்-பயன், நீர்.

அறுசீரடி யாசிரிய விருத்தம்

தன்னடிப் படுத்து மேலைத் தண்டக நாடு முற்றும்
முன்னுறக் கவர்ந்து கொண்ட வளத்தினும் மூவி ரட்டி
பின்னுற அளித்து வானிற் புலவரும் பெட்கு மாற்றால்
அங்கிலை உயிர்கள் ஓம்பி அரசுசெய் துறையும் பாலி. 31

தண்டக நாட்டினைத் தனக்குக் கீழ்ப்படுத்தி, முன் தான் கொள்ளை கொண்ட வளத்தினும் மிகுதியாகப் பின்னர் அளித்துத் தேவரும் விரும்பும் போகம் உடைத்தாம் அங்கிலையில் பாலி அரசு வீற்றிருக்கும்.

'ஒருவர் கூறை எழுவர் உடுத்து' என்றாற் போல 'மூவிரட்டி' மிகுதி குறித்தது.

காரணப் பொருளின் தன்மை காரியத் துளதாம் என்ன
ஆரணப் பனுவல் கூறும் அரும்பொருள் தெளியத்தேற்றும்
பேரிசைப் புவிமேல் யார்க்கும் பெட்டன பெட்ட வாறே
சீரிதிற் கொடுக்குந் தேனுத் தரவருஞ் செழுநீர்ப் பாலி. 32

யாவராயினும் ஆக, அவர் விரும்பியது யாதானும் ஆக எண்ணிய எண்ணியாங்கு அருள வல்லது காமதேனு; அது அருள் சுரந்தது பாலியாகலின் 'தாயைப்போலப் பிள்ளை' என்றபடி குலவித்தையாயிற்று. ஆகலின், 'காரணப் பொருளியல்பு காரியத்துளதாகும்' என்னும் தருக்க நெறி உறுதி உற்றது.

மாவுக்கிருக்கும் மணம், கூழுக்கிருக்குங் குணம்என்பதும் நோக்குக.

வறுமைஉற் றுழியும் தொண்டை வளமலி நாட்டோர் தங்கள்
இறும்உடல் வருத்தியேனும் ஈவதற் கொல்கார் அற்றே
தெறுகதிர் கனற்றும் வேனிற் பருவத்தும் சீர்மை குன்று
துறுமணல் அகடு கீண்டும் ஒண்புனல் உதவும் பாலி. 33

வறுமை மிக்க வழியும் வளமலி தொண்டைநாட்டவர் வருந்துதற்குரிய உடம்பை வருத்தியும் பிறர்க்கு ஈதற்குத் தளரார், அத்தன்மைத்தே ஆகப் பாலி நதியும் கோடையினும் மணலை அகழ்ந்தும் தெளிந்த நீரை உதவும்.

சொற்றஇத் தாதத் மனமை சுவைபடும் பாலோ டொக்கும்
மற்றைய தீர்த்த மெல்லாம் வார்தரு புனலோ டொக்கும்
பெற்றிமை உணர்ந்து தொல்லோர் பெயரிடப் பட்ட சீர்த்தி
பற்றிய தெனலாம் பாலிப் பெருமையார் பகரு நீரார். 34

பாலி நதியின் நீர் பாலின் சுவையை உடைத்தாயும் ஏனைய தீர்த்தங்கள் நீரின் சுவையே யாதலையும் கண்டு நம் முன்னோர் இதனைப் பாலியெனப் பெயர் அமைத்தனர் எனலாம் அப் பாலியின் பெருமையைக் கூற வல்லவர் ஒருவருமிலர்.

## நாட்டு வளம்

கலிநிலைத் துறை

விளம்பும் இத்தகை மணிகொழி விரிதிரைத் தரங்க
வளம்பு னற்றடம் பாலியான் வண்மைபெற் றோங்கி
உளம்ப யின்றுநாற் பொருள்களும் உஞற்றுநர்க் கிடமாய்த்
துளும்பு மேன்மையிற் பொலிந்தது தொண்டைநன் னாடு 35

பாலி நதியின் வளத்தால் அறம், பொருள், இன்பம், வீடென்னும் பயன்களைச் செய்பவர்களுக்கு இடனாய் விளங்கும் மிகுந்த மேன்மையிற் பொலிந்தது தொண்டை நாடு,

செக்கர் வார்சடைச் சிவபிரான் திருவருள் செய்யத்
தக்க வாய்மையின் உயிர்க்கெலாந் தன்னிடத் திருந்து
மைக்கண் எம்பெரு மாட்டியெண் ணான்கறம் வளர்க்குந்
தொக்க மாப்புகழ் படைத்தது தொண்டைநன் னாடு. 36

காமாட்சியம்மையார் முப்பத்திரண்டு அறங்களும் இறைவன் வழி நின்று நடத்துதற் கிடனாய்த் திரண்ட புகழ் கொண்டதும் இந்நாடே.

பவம்வி ளைத்திடாப் பெரும்பதி யெனத்திசை போய
சிவம்வி ளைத்திடு நகரங்கள் ஏழுளுஞ் சிறந்து
தவம்வி ளைத்திடு காஞ்சியைத் தன்னிடத் திருத்தி
நவம்வி ளைத்திடும் பெருமைபூண் டதுதொண்டை நாடு. 37

முத்திதரு நகர் ஏழனுள் முதன்மை பெற்று எண்டிசையும் பரவித் தவத்திற்கிடனய்ப் புதுமைகளும் பொலியத் திகழ்வது தண்டகநாடு.

தரைவி ளங்கிய தண்டக நாட்டினில் தகைசால்
வரையுங் கானமும் புறம்பணைப் பழனமு மணிநீர்த்
திரையும் வேலையு மென்னுநா னிலத்தினுள் சிறந்த
புரையில் ஐந்திணை வளஞ்சிறி தறிந்தவா புகல்வாம். 38

நிலவுலகம் விளங்குதற்கு ஏதுவாகிய தண்டக நாட்டினில் அழகு நிரம்பிய குறிஞ்சி, முல்லை, மருத, நெய்தல் எனப் பெறும் மலையும் மலை சார்ந்த நிலமும், காடும காடு சார்ந்த நிலமும், வயலும் வயல் சார்ந்த நிலமும், ஆகிய இவற்றின் குற்றம் இல்லாத ஐவகை ஒழுக்கங்களை அறிந்த வாறு சிறிது விரும்பிச் சொல்வாம் என ஆசிரியர் அருளினர்.

'தரை விளங்கிய நாடு' என்பது, 'நிலம் பூத்த மரம்' (கலித்தொகை) நிலம பொலிவுபெறுதற்கு ஏதுவாகிய மரம் என்பது போல, நிலவுலகம் விளங்குதற்கு ஏதுவாகிய -என எழுவாய்த் தொடராகக் கொள்ள வேண்டும். ஏதுப்பொருள் கருவிக் கண் அடங்கும்' என ஆங்காங்கு நச்சினார்க் கினியர் காட்டுவர். நிலம் நான்காய் ஒழுக்கம் ஐந்தாதல்: பாலைக்குத் தனிநிலம் இன்றிக்குறிஞ்சியும், முல்லையும் திரிந்ததே பாலை என்பதைக் காட்டும்.

## குறிஞ்சி

முருக வேட்கிடு தூமம்ஓம் புறமுளி அகில்சந்
தருவ ஆரழற் பெய்துபுன் பயிர்விளைத் துவப்பார்
பெருவ ளந்துறந் தூர்தொறும் இடுபலி பேணும்
பொருவில் வாழ்க்கையர் தஞ்செயல் போன்மெனப் பொருப்பர்.39

குறிஞ்சி நிலத்தெய்வமாகிய முருகப் பெருமானுக்கு நறும்புகை வளர்ப்ப,உலர்ந்த அகில், சந்தனம் முதலிய மரங்களை எரியில் இட்டு, அவ்விடத்தில் தினை முதலிய புன்செய்ப்பயிரை விளைத்து நுகர்ந்து மகிழ்வர் குறவர். இருவகைப் பற்றும் துறத்தலான் பெருவளங்களைக் கைவிட்டுப் பிச்சை ஏற்றுண்ணும் துறவோரை ஒப்பர் அக்குறவர்.

அரிய பொருள்களைக் கைவிட்டு எளிய பொருள் கொண்டு வாழ்தலின் ஒப்பர்.

ஏறு தன்னுடல் வருத்திய பகைமையெண் ணாது
தூறு பன்மணி மரமுதல் பொறையெலாந் தொலைத்த
வேறு நன்றியே கடைப்பிடித் திதைவியன் பொருப்பர்க்
கூறு நல்வளம் விளைத்திடும் உயர்ந்தவர் செயல்போல். 40

தினைப்புனம், உழுதல் முதலியவற்றால் வருத்திய செயல்களை மனங்கொள்ளாமல், மரமுதற் சுமைகளைத் தவிர்த்த நன்றியைக் கடைப் பிடித்துக் குறவர்களுக்குப் புன்செய்ப்பயனை நிரம்பக் கொடுக்கும். உயர்ந் தோர் பிறர்தமக்குச் செய்த தீங்குகளை மறப்பர்; நலங்களைப் பாராட்டுவர் ஆகலின் பெரியோர் தினைப் புனத்திற்கு உவமமாயினர்.

இதை–தினைப்புனம். வேறு நன்றி–பகைமைக்கு வேறாய நன்றி.

வேட்டை மேற்புகு வார்க்குநல் வினையுந்த மடவார்
கூட்டம் வாய்க்குமச் சாரலில் தினைக்குறற் கெய்துஞ்
சேட்டி ளங்கிளிக் குலங்களத் தெரிவைமார் ஓப்பும்
பாட்டி சைத்திறம் ஒளியிருந் தனுதினம் பயிலும். 41

வேட்டை மேற்புகுகின்ற தலைவர்க்கு முன்னை நல்வினை செலுத்தச் சென்று, தலைவியரைக் கண்டு உழுவலன்பு செலுத்தக் கூடும் மலைச் சாரல்களில், குறப்பெண்கள் தினைப்புனத்துக் கிளிகளை ஓட்ட அக்கிளி கள் புறம் செலாது ஒளிந்திருந்து கிளிகடி பாடல்களை நாடொறும் பயிலும்.

கூட்டம்–புணர்ச்சி. ஓப்பும்–துரத்தும்.

சாரல் என்னும் முதற் பொருளும், தினையாகிய உணவும் கிளியா கிய பறவையும், கிளியோப்புதல் என்னும் செய்தியும் புணர்தல் என் னும் உரிப்பொருளும் வந்தன.

நங்கு லத்தரு வாழ்க்கையைக் கெடுத்துநம் இருக்கை
தங்க ளுக்கெனக் கொண்டஇவ் ஏனல்கள் தம்மை
இங்கண் வாட்டுதும் என்பதோர் சூழ்ச்சியெண் ணியபோல்
அங்கண் எஞ்சிய வேங்கைகள் போதுசெய் தலரும். 42

வேங்கை மரங்களை அழித்துத் அவ்விடத்து தினையை விதைத் தனர் குறவர். தப்பிய வேங்கைகள் தம் இனத்தை அழித்து அவ்விடத் தைக் கைப்பற்றிய தினைப்பயிரை அழிக்கப் பூத்தனபோல மலர்ந்தன.

வேங்கை, பூத்தவழி தினை அறுப்பது வழக்கு.

போது–மலரும் பருவத்து அரும்பு. ஏனலென்னும் உணவும் வேங்கை என்னும் மரமும், மரம் எறிந்து தினை விதைத்தலும், தினை அறுத்தலும் என்னும் செய்தியுமாகிய கருப் பொருள்களும் வந்தன.

என்னை ஊர்ந்தருள் சுடர்வடி யிலையவேற் பெருமான்
றன்னை நன்மரு கெனப்படைத் தவன்றன தூர்தி
அன்ன தாமெனுங் கேண்மையான் அளிமுகிற் குலத்தைக்
கன்னி மாமயில் காண்தொறுங் களிசிறந் தகவும். 43

மயில், தன்னை ஊர்தியாகவுடைய முருகப் பெருமானைத் தனக்கு நன் மருகனாகக் கொண்ட இந்திரன் தனக்கு ஊர்தியாகிய மேகக் கூட் டத்தை உறவு பற்றிக் காணுந் தொறும் களிப்பினாலே ஆடும், கூவி அழைக்கும்.

நெருங்கு பைந்தழை வருக்கைமேல் நெடுவளி யலைப்ப
அருங்கண் மாமயில் வீற்றிருந் தசைதருங் காட்சி
கருங்க ணாயிரச் செம்மல்தன் மருகனைக் காண
மருங்கு வந்துதன் ஊர்தியை நிறுவுதல் மானும். 44

பலாமரத்தின்மேல் மயிலிருந்து பெருங் காற்றலைப்ப அலையுங் காட்சி, ஆயிரங் கண்களையுடைய இந்திரன் தன்மருகனாகிய முருகனைக் காண வந்து ஊர்தியாகிய மேகத்தை நிறுத்துதல் ஒக்கும்.

சந்தும் ஆரமுந் தாங்கிவம் பலர்ந்ததண் குவட்டான்
மைந்தர் கண்ணையு மனத்தையும் கவர்ந்திடும் வனப்பின்
முந்தும் ஓங்கலுங் கொடிச்சியர் குழுக்களு முகில்தோய்
கந்த மார்குழை முகத்தலர் இலவங்கங் காட்டும். 45

சந்தன மரங்களையும், முத்துக்களையும் தாங்கி, வாசனை பொருந்திய குளிர்ந்த கொடுமுடியான் மைந்தர் கண்ணையும், கருத்தையும் கவர்ந்து கொள்ளும் பேரழகால் மலையும் நறுமணம் கமழ் தளிர் முன்னுடைய இலவங்கமரம் காட்டும்.

(வேறு பொருள்) சந்தனமும், முத்த மாலையும் தாங்கிக் கச்சணிந்த குளிர்ந்த கொங்கையால் கவர்ந்திடு உறுப்பெலாம் திரண்ட பேரழகால் குறிஞ்சி நிலமகளிர் குழாமும், கம்மியர் செய்குழை தங்கு முகத்து இலவிதழ் (அங்கம்) வாய்காட்டும், சிலேடையணி.

மலைகண்ணைக் கவர்தல்: கண்வாங்கிருஞ் சிலம்பு (கலித்- ) -

கொங்கை யேந்திய ஆண்களும் அவணகொம் புடைய
துங்க வேங்கையின் குலமெலாம் அவணபால் சுரந்து
பொங்கு நீடுசே வினங்களும் அவணவான் புனலை
அங்கண் வேட்டுணும் ஒற்றைத்தாள் எகினமும் அவண. 46

நறுமணம் தாங்கிய ஆண் மரங்களும், கோடுகளையுடைய உயர்ந்த வேங்கை மரங்களும், பால் பெருகி மிகு சே மரங்களும், நீரை விரும்பி, உண்ணும் ஒரு தாளையுடைய புளியமரங்களும் அவ்விடத்தன. (வியப்பு) முலையுடைய ஆணும், கொம்புடைய புலியும், பால் சுரக்கும் காளையும், ஒரு காலையுடைய அன்னமும் அவ்விடத்தன என்னும் பொருள் காண்க.

ஆணெ லாம்ஒரு கன்னியை மணப்பவா னணையுங்
கோணை வேங்கைகள் யாட்டினோ டுறவுகொண் டோங்கும்
பேணு சேவினஞ் சிங்கமே லேறிடும் பிழையா
தேணி னாற்பொலி எகினங்கள் இடபத்தை விழுங்கும். 47

ஆண் மரங்கள் கன்னி ராசியைத் தோய வானை அணையும்; அழிவின்மையையுடைய வேங்கை மரங்கள் மேடராசி யொடு நட்புறும்; சேமரங்கள் சிம்மராசி மேல் இவரும், தப்பாது வன்மையாற் பொலி புளிய மரங்கள் இடப ராசியைப் போர்க்கும்.

வியப்பு: பலர் ஓர் கன்னியை மணத்தலும், புலிகள் யாட்டொடு உறவு கொள்ளுதலும், காளைகள் சிங்கத்தின் மேல் ஏறுதலும், அன்னங்கள் இடபத்தை விழுங்குதலும் ஆம்.

வில்ல லர்ந்தபல் உடுக்களும் விண்ணெறிப் படருஞ்
செல்லும் வெண்கதிர்க் கடவுளும் பானுவுந் திறல்சால்
மல்லல் வானவக் குழுவும் எய்ப்பாறவந் திருக்கும்
இல்லம் எங்கணும் வான்தொட இழைத்திடுங் குன்றம். 48

ஒளி மலர்ந்த பல நட்சத்திரங்களும், வான் வழிச் செல்லும் மேகங்களும், சந்திரனும் சூரியனும் வன்மையமைந்த தேவர் குழாமும் இளைப்பாற வந்து இருத்தலைச் செய்யும் தேற்று மாத்தை வான்தோய எவ்விடத்தும் வளர்க்கும் குன்றங்கள்,

வியப்பு: மலைகள் மனைகள் இயற்றும்.

போது மூன்றினும் போதுசெய் காவிசூழ் பொருப்பும்
மேத குந்தமிழ்க் கெல்லையாம் வேங்கட வரையும்
காதல் பூப்பஅத் தாணிகொண் டறுமுகக் கடவுள்
கோது நீத்தர சாட்சிசெய் குறிஞ்சிஅக் குறிஞ்சி. 49

காலை, நன்பகல், மாலை ஆகிய இம் மூன்று பொழுதுகளினும் மலர் தலையுடைய நீலோற்பலச் சுனையையுடைய தணிகை மலையும், மேன்மை தங்கிய தமிழ்க்கு வடக்கு எல்லையாகிய திருவேங்கட மலையும், காமுற அத்தாணி மண்டபமாகக் கொண்டு அறுமுகப் பெருமானுர் குற்றம் நீக்கி அருளாட்சிசெய் மலைகளைக் கொண்ட குறிஞ்சி அக்குறிஞ்சி.

முப்போது மலரும் குவளை இந்திரன் கொணர்ந்தனன். முருகனுக்குச் சாத்திவழிபாடு செய்தனன். இதனைக் கந்தபுராணத்துட் காண்க.

"காலைப் போதினி லொருமலர் கதிர்முதி ருச்சி
வேலைப் போதினி லொருமலர் விண்ணெலாம் இருள்சூழ்
மாலைப் போதினில் ஒருமல ராகஇவ் வரைமேல்
நீலப் போதுமூன் றொழிவின்றி நித்தலு மலரும்"

அன்பெ லாம்ஒரு பிழம்பெனத் திரண்டகண் ணப்பன்
எம்பி ராற்கொரு விழியிடந் தப்புகா ளத்திப்
பொன்பி றங்கிய முகலிசூழ் கயிலையம் பொருப்புந்
தன்பு லத்திடை யுடையது தடவரைக் குறிஞ்சி. 50

பேரன்போர் வடிவாய்நின்ற திருக்கண்ணப்ப நாயனுர் எமது பெருமானுர்க்குத் தமது விழியிடந்தப்புதற்கு இடனாய் விளங்கிய பொன் முகலியாறு சூழ் திருக்காளத்தி மலையையும் கொண்டது அக்குறிஞ்சி.

நாவல் மன்னவர்க் கிரந்துசோ றளித்திடு நம்மான்
தேவி யோடமர் திருக்கச்சூர் திருவிடைச் சுரமும்
பாவ காரியர் எய்தொணுக் கழுகுசூழ் பறம்பும்
மேவ ரத்திகழ் குறிஞ்சியின் பெருமையார் விரிப்பார் 51

சுந்தரமூர்த்தி நாயனுர்க்குப் பிச்சை ஏற்று அவ்வுணவை அளித்த பெருமான் எழுந்தருளுதற்கிடனுகிய திருக்கச்சூரும், திருவிடைச் சுரமும், புண்ணியர் எய்துதற்குரிய திருக்கழுக்குன்ற மலையையும தன்னுட் கொண்டு திகழ் குறிஞ்சியின் பெருமையை யாவர் விரித்துரைப்பார்?

## பாலை

குராவ ளித்திடு பாவையைக் கோங்குபொன் கொடுத்துப்
புராரைப் பாடலம் பூந்தழற் பாங்கரின் மணப்ப
மராம ரத்துளர் வண்டுபண் பாடவன் முருங்கை
விராவி வெண்பொரி இறைத்திடும் வியப்பின தொருபால். 52

கோங்கமரம் பொன் கொடுத்துக் குராமரம் ஈன்ற பாவையைப் பருத்த அடியினையுடைய பாதிரி (வேள்வி முன்போல) முன் மணந்து கொள்ள, வெண்கடப்ப மலரில் திரிகின்ற வண்டு பண் இசைப்ப வலியில் முருங்கை மலராகிய வெண்பொரியை உளங்கலந்து வீசும் வியப்பினது ஒருபுறம்.

வன்முருங்கை—வன்மை கெட்டது என்னும் பொருளில் வந்தது. பாலையில் உள்ள மரங்களைக் கொண்டு திருமண நிகழ்ச்சி சித்திரிக்கிருர்.

எயிற்றி மார்எழில் நலத்தினுக் கிரியல்போ யுடைந்தாங்
கயற்பொ தும்பர்புக் கலர்குராப் பாவைகண் டவர்தந்
துயிற்று சேயெனக் கவன்றுபோய்த் தூதுணம் புறக்கள்
வெயிற்ற லைக்கணின் றுயங்குவ நிலைமைவிண் டவர்போல். 53

தூதுணம் புறக்கள், பாலை நிலப்பெண்களின் பேரழகினுக்குப் பெரிதும் தோற்றோடி (புறங்கண்டு) அடுத்துள்ள சோலையிற் புகுந்து, குராமரப்பாவைகளை அவர் தம்முடைய குழந்தைகள் உறங்குவனவாகக் கண்டு கவலை கொண்டு வெளியேறி வெயிலில் நின்று, நிலை கெட்டவர் போல வருந்தும்.

நன்பகலாகிய முதற்பொருளும், குரா என்னும் மரமும், தூதுணம் புறு என்னும் பறவையுமாகிய கருப்பொருள்களும் வந்தன.

தூது ணம்புற வினமெலாந் துணையுடன் கெழுமிப்
போத ஊடியும் உணர்த்தியுந் தலைத்தலைப் புணர்ந்து
காதல் அந்நலார் மொழியையுங் கடந்துசே ணிடைச்செல்
ஏதில் ஆடவர் தமைச்செல வழுங்குவித் திடுமால். 54

தலைவியர் மொழியைக் கடந்தும் சேணிடைப்பிரிந்து செல் தலைவர் பாலை நிலவழிச் செல்வுழி, ஆங்காங்குத் தூதுணம் புறக்கள் தத்தம்

பெடையுடன் பெரிதும் ஊடியும் பெரிதும் ஊடலைப் போக்கியும், பெரிதும் கூடியும் காதலை வென்ற வீரரைத் தடைப்படுத்தும்.

இதனைக் காமோத்தீபனம் என்ப. ஆடவர்-வீரர் என்ற குறிப்பினது. தாதுணம் புறு, துணை என்னும் பறவைக் கருப்பொருளும் பிரிதலென்னும் உரிப்பொருளும் வந்தன.

வெங்க திர்ப்பிரான் நண்பகற் போதினில் வேனில்
மங்கை கொங்கைதோய்ந் தளித்திடும் பாலையாம் மைந்தன்
அங்கண் நானில வரசர்பா லிரந்துவன் முரம்பு
தங்கு சூழலிற் சிற்றர சாள்வதும் உளதால். 55

சூரியன், வேனிற் பருவமாகிய மங்கையொடு கூடியவழித் தோற்றிய பாலை என்னும் மகன், குறிஞ்சி முதலாகிய நானில அரசரிடத்து, இரந்து பெற்ற திண்ணிய மேட்டு நிலங்களில் சிற்றரசு புரிதலும் ஆங்குளது.

முல்லை

நவிலும் இந்நிலப் புறம்பயில் புறவநன் மடந்தை
குவிவ ருந்தழல் வெம்மைகூர் கொடும்பசி தணியச்
செவிலி யாய்முகில் தீம்பயம் ஊட்டிட வளர்ந்தாங்
கவிழு நீள்வர காதியாம் மகப்பயந் தளிக்கும். 56

மேகமாகிய செவிலித்தாய் விரிந்த தழலாகிய வெப்பம் மிகுகின்ற கொடிய பசி தணிய இனிய பாலாக நீரூட்டி, முல்லை நிலமாகிய நன்மகளை வளர்ப்ப வளர்ந்த அந்நிலையில் குருத்து விரிகின்ற வரகு முதலிய (புன்செய்ப்பயிர்) மகவுயிர்த்து அந்நில மக்களைக்காக்கும்.

கொல்லை யெங்கணுங் கொழுமலர் ததைபுன முருக்கின்
முல்லை மென்கொடி படர்ந்தலர் நிரைநிரை முகிழ்ப்ப
அல்லை வென்றகந் தரப்பிரான் அரக்கெறி மார்பில்
தொல்லை வெண்டலை மாலிகை துயல்வரல் மானும். 57

முல்லை நிலத்தின்கண் எவ்விடத்தும் செழுவிய மலர் செறிந்த காட்டு முருங்கை மரத்தில் மெல்லிய முல்லைக்கொடி படர்ந்து வரிசை வரிசையாக மலர் அரும்புதல், இருளை வென்ற நீல மணிமிடற்றினோன் தனது செவ்வொளி வீசும் திருமார்பிற் பிரமனுதியர் வெண்டலை மாலை அசைதலை ஒக்கும்.

நீலமுண்டும் நித்தியனுகை, விண்ணோர் அமுதுண்டும் வெண்டலை மாலையாதல் கருதத் தக்கது.

நீலம் பூத்தலர் பூவையைக் கோட்டுநீள் கரத்தாற்
கோலம் பூத்தபொற் கொன்றைகள் தழீஇக்கிடந் தசைவ
ஆலம் பூத்தருள் மிடற்றினோன் அன்றுமோ கினியாஞ்
சீலம் பூத்தமால் இளமுலை திளைப்பது தெளிக்கும். 58

நீலநிற மலர்கள் பூத்த காயா மரத்தைப், பொன்போலப் பூத்த கொன்றை மரங்கள் கிளைகளாகிய நீண்ட கரங்களால் தழுவிக் கிடந்தசைதல், திருநீலகண்டப் பெருமான் அந்நாள் மோகினியாய் இயல்பமைந்த திருமாலின் போக நுகர்ந்தமையைத் தெரிய உணர்த்தும்.

மாசாத்தன் தளிப்படலத்துள் இவ்வரலாறு காண்க.

பெண்ண லங்கனி இடைக்குலப் பிடிநடை மடவார்
விண்ண லங்கனி மாதரை எழிலினுல் வென்று
பண்ண லங்கனி மிடற்றவர் பணைத்தமூக் கரிந்து
மண்ணி லெங்கணுந் தூக்கிவைத் தெனக்குமிழ் மலரும். 59

பெண்களுக்குரிய இலக்கணம் நிரம்பிய ஆயர்குல மகளிர், அழகு முற்றிய அரம்பை முதலிய மாதரைத் தம் அழகால் வென்றமையால், தோற்ற அவர்தம் மூக்கை அறிந்து மண்ணிடத்து எங்கணும் தூக்கி வைத்தாற் போலக் குமிழம்பூ மலரும்.

ஒட்டி மூக்கிழத்தல் பேசப் பெற்றது.

மௌவ லங்குழ லார்விழிக் குடைந்துவான் குதிக்கும்
நவ்வி மீண்டக லாவகை மகளிர் ஆனனத்துக்
கொவ்வு ரூதவர் ஆணையிற் றிரியும் ஒண்மதிகண்
டவ்வு ழித்தன திருக்கையிற் சிறைப்படுத் தலைக்கும். 60

முல்லை மலரை யணிந்த ஆய்ச்சியர் விழிக்குத் தன்கண் ஒவ்வாமையின் தோல்வியுற்று வான் தாவும் மானை அவர் முகத்திற்குத் தோற்று அவர் ஏவல் வழித்திரிந்து கொண்டிருக்கும் சந்திரன் தன்னிடத்துச் சிறைப்படுத்தி வருத்தும்.

உழி-இடம். சந்திரனிடத்துள்ள களங்கத்தை மானென்னும் வழக்குப் பற்றியது.

கற்றை வார்குழல் ஆய்ச்சியர் கயல்விழி முகத்தின்
பெற்றி யொப்புறப் பெருங்குருந் துச்சிமேல் தாவி
ஒற்றை மானுடைக் கலைமதி யதன்நிழ லுறங்கும்
மற்றை மானையும் பற்றுவான் கதிர்க்கையால் வருடும். 61

ஆய்ச்சியருடைய முகத்தினை முழுதும் ஒப்புறலை விரும்பி ஒற்றை மானை அகப்படுத்த கலைச்சந்திரன், பெரிய குருந்த மரத்தின் உச்சியில் தாவி யிருந்து அதன் நிழலில் துயிலும் பிறிதொரு மானையும் கைப்பற்ற வேண்டிக் கிரணக்கையால் அதனை வருடும்.

நலம்ப யின்றிள வேனிலின் நவிலுமாங் குயில்கள்
அலம்பு கார்வரும் போதுவா யடைப்பது முன்னாள்
புலம்பு கொண்டவர் காரொடுந் தலைவர்தேர் புகுத
வலம்பு னைந்துரை வளமொழிக் கிடைதலா னன்றே. 62

இன்பத்தில் திளைத்து இளவேனிற் பருவத்துக் கூவும் மாமரத்திலுள்ள குயில்கள் ஒலிக்கின்ற கார் காலம் வரும் அளவில் வாயடைத்துக் கூவாதிருத்தற்குக் காரணம் தனிமை கொண்ட தலைவியர் கார்ப் பருவத்தொடும் சேணிடைச் சென்ற தலைவருடைய தேர் புகுதலான் வெற்றியைப் பாராட்டும் வளமொழிக்குத் தோல்வியுறுதலானே. எனவே, தனிமை கொண்ட தலைவி வாயடைத்திருந்தமை பெறுதும்.

தொண்டை மான்கடக் களிற்றினை முல்லையால் தொடக்கி
அண்டர் தம்பிரான் வெளிப்படக் காட்சிதந் தருள்சீர்
கொண்ட வான்பதி முதல்பல தன்னிடைக் குலவக்
கண்ட முல்லையின் பெருமையார் கட்டுரைத் திடுவார். 63

தொண்டைமான் எனும் அரசனுடைய மதயானையை முல்லைக் கொடியால் யாத்துத் தேவர் முதல்வன் வெளிப்படக் காண எழுந்தருளி அருளும் சிறப்பினையுடைய திருமுல்லை வாயில் முதலான பல சிவதலங்கள் தன்னிடை விளங்க அமைந்த முல்லையின் பெருமையை யாவர் உறுதிபடச் சொல்ல வல்லவர்.

மருதம்

பொலஞ்சி றைச்சுரும் புளர்தரு குறுஞ்சுனைப் புறவ
நிலந்த னைப்புடை யுடுத்தது நெட்டிள வாளை
இலஞ்சி நின்றுமீப் பாய்ந்துவெண் மதிகிழித் தேகித்
தலங்கொள் வானியாற் றுலவுறூந் தடம்பணை மருதம். 64

பொன்னிறச் சிறகையுடைய வண்டு சுழல்கின்ற குறுஞ்சுனைகளையுடைய முல்லை நிலத்தை அடுத்துச் சூழ்ந்தது, நீண்ட இளவாளைமீன் நீர்நிலையினின்றும் மேற்றாவித் திங்களை யூடறுத்துப் போய் வானகங்கையில் உலவும் அகன்ற வயல்களையுடையது மருதம்.

ஒருவ னாகிய சிவபிரான் உலகுயி ரளிப்பக்
கருணை கூர்ந்துமுன் நவந்தரு பேதமுங் காட்டுந்
திருநி கர்ப்பவூர் பாலியே வயல்வளஞ் செழிப்பப்
பெருகு தண்புனல் பற்பல கால்களாய்ப் பிரியும். 65

ஒருவனாகிய சிவபெருமானே உலகிலுள்ள உயிர்களைக் காத்தளிப்பக் கருணை மேலிட்டுப் பழமையான ஒன்பது வகைப்பட்ட சிவபேதங்களையும் மேற்கொள்ளும் சிறப்பினை ஒப்ப, ஒன்றாகிய பாலியே, வயலின் வருவளங்கள் தழைப்பப் பெருகுநீர் கொண்ட பல கால்களாய்ப் பிரிந்து போம்.

நவந்தரு பேதங்கள்: சிவம், சத்தி, நாதம், விந்து, சதாசிவன், மகேசுரன், உருத்திரன், திருமால், பிரமன் என்பன.

'சிவஞ் சத்தி நாதம் விந்து சதாசிவன் திகழும் ஈசன், உவந்தரு ளுருத்திரன் றான் மாலயன் ஒன்றி னொன்றாப், பவந்தரும் அருவநாலிங் குருவநா லுபய மொன்று நவந்தரு பேதம் ஏக நாதனே நடிப்பன் என்பர்.' (சித்தி. சூ. 2-74.)

பராரை மூலமேற் பணைகிளை வளாரெனப் பலவும்
விராவி ஒன்றிலொன் றனந்தமாய்க் கவடுவிட் டென்னத்
தராத லம்புகும் பாலியிற் பிரிந்துதண் கரைக்கண்
அராவு கால்களும் அவைதரு கால்களும் அனந்தம். 66

பருத்த அடிமரமாகிய ஒரு முதலின் மேலே பெருங்கிளையும், கிளையும், வளாரும் ஏனைய பிறவுமாய்க் கலந்து ஒன்றிலிருந் தொன்றாய்க் கிளைத்துப் பிரிந்தாற்போலத் தரையிடத்துப் புகுந்து செல்லும பாலி நதியிற் பிரிந்து தண்ணிய கரையைக் கரைக்கின்ற கால்களும், அவற்றினின்றும் பிரிகின்ற கால்களும அளவிறந்தன.

பரு+அரை=பருவரை எனற்பாலது மரூஉ முடிபின் வந்தது.

நான்மு கப்பிரான் வேள்வியைத் தபவரு நதியை
மான்ம றுத்திடைக் குலையெனக் கிடந்தமை மான
மீன்மு கப்பெருங் காற்புனல் தட்பவீழ்ந் துழக்கும்
பான்மு லைக்கரு மேதியாற் பருமடை யுடையும். 67

பிரமன் செய்யும் வேள்வியை அழிக்க வந்த வேகவதி நதியைத் திருமால் எதிருற்றுத் தடுத்துக் கரையாகக் கிடந்தமையை ஒப்ப, மீன்களைத் தனனிடங் கொண்ட பெரிய கால்வாய்களிலுள்ள நீரைத் தடைப்பட வீழ்ந்து கலக்கும் பால்சுரக்கும் மடியினையுடைய கரிய எருமைகளால் பருத்த நீர் மடைகள் உடைக்கப்பெறும்.

பிரமன் செய் வேள்வியை சரசுவதி நதியுருவாய் அழிக்க முற்பட்ட வரலாறு சிவாத்தானப் படலத்துள் காண்க.

பழங்கண் வேனிலைப் புயல்கொடு பாற்றுதன் இறைக்குத்
தழங்கும் ஓதையின் மருதம்வாழ்த் தெடுப்பது தகைய
வழங்கு தண்ணுமை ஓதையும் மள்ளரார்ப் பொலியும்
முழங்கும் தீம்புனற் சும்மையு முடுகிவிண் புகுமால். 68

வெம்மையால் துன்பம் செய் வேனிற் பருவத்தை மேகத்தால் மாற்றிக் கார்ப் பருவம் ஆக்கி நீர் பெருகுவித்த இந்திரனை தன் தலைவனுக்கு மருதமக்கள் வாழ்த்துப் பாட்டொலியை ஒப்ப, மருதப்பறையின் பேரொலியும், உழவர் ஆரவாரப் பேரொலியும், நீர்ப்பெருக்கின் பெருமுழக்கும், விரைந்து விண்ணிடம் நுழையும்.

பொறிகள் ஐந்தையும் புறஞ்செலா தடக்கிஓர் நெறிக்கே
குறிகொ ளும்படி செலுத்துபே ராளர்தங் கோள்போற்
பிறிவு றும்பல மடைகளிற் பிழைத்திடா தொதுக்கிச்
செறித ரும்புனல் முழுவதும் அகன்பணை செறிப்பார். 69

ஐம்பொறிகள் வழியே ஐம்புலன்களின் மேல் அறிவு செல்லாதவாறு அதனைத் தடுத்து அருள் நெறியில் முதற் பொருளைப் பெறும்படி செயற்படுத்தி இன்பத்தைத் தேக்குவார் பேராளர், அதுபோலப், பாலி நீர் சிறிதும் வேறு பல வேண்டாத மடைகளிற் றப்பாத வாறு சிறை

செய்து செறிவு கொள்ளும் புனல் முற்றவும் அகன்ற வயல்களில் தேக்கு வர் உழவர்.

'சென்ற இடத்தால் செலவிடா (து) தீது ஒரீஇ நன்றில்பால் உய்ப்ப தறிவு அகப்பகையை அஞ்சிக் காப்பவரைப் பிறன் மனை நோக்காத 'பேராண்மை'யர் 'என்றுற் போலப் 'பேராளர்' என்றருளினர். 'பிறன்மனை அன்னையில் தீரா நன்னர் ஆண்மை' என ஞானமிர்தத்தினும் காண்க.

ஆள்—போர் வீரன். பேராளர்-பெருவீரர். 'ஒரு நெறிய மனம்' (திருஞா-1-11) எனுந் திருவாக்குக் காண்க.

பழியில் நீங்கிநன் கீட்டிய பசும்பொருள் சிறிதும்
கழிப டாதுநல் வழிப்பயன் படுவது கடுப்பக்
கொழிதி ரைச்சுவைப் பாலியின் குளிர்புனல் முழுதும்
வழுவு றாதுகால் வழிச்சென்று வளவயல் நிறைக்கும். 70

நூலோர் விலக்கியன ஒழிந்து, விதித்தன செய்து நன்கு தொகுத்த பெரும் பொருள் சிறிதும் வீண்போகாது அறவழியில் பயன் படலை ஒப்ப, நீர் சிறிதும் மடையுடைத்து வெளியேறாது முழுதும் கால் வாயிற் சென்று வளம் நிறைக்கும வயல்களை நிறைக்கும். பசும்பொருள்-சிந்தையில் இரக்கம் வைத்துத் தேடிய பொருள்.

கண்ண கன்புவி முழுதுமாங் கடுங்கொலை அவுணன்
அண்ணல் மார்பகம் பிளப்பவர் போலவிர் மணியின்
வண்ண வன்கடா நிரைநிரை யாத்துவன் படையாற்
பண்ணை தோறுநின் றுழுநர்கம் பலைகளே யெங்கும். 71

இடமகன்ற நிலவுலக முற்றுமாய்க் கொடிய கொலைத் தொழிலை மேற்கொண்ட அவுணனது மார்பைப் பிளப்பவர்போல நீலமணிபோலும் நிறத்தனவாகிய வலிய கடாக்களை ஏரிற் பூட்டி வயல்களை வரிசை வரிசையாக உழுவோர் ஆரவார ஒலி எங்கணும் உள்ளன.

மருவு சால்தொறும் வெருவிமுன் குதித்தெழு வாளை
இரும ருப்பிடை உதைந்துழும் எருமையைத் தடுக்கும்
பருவ ராற்குலம் ஒய்யெனப் பாய்ந்தெழுந் தலைக்கும்
உருவ வாற்புறத் துதைந்துவல் விரைந்தெழ உந்தும். 72

படைச்சால் தொறும் அஞ்சித் துள்ளி எழுந்த வாளை மீன்கள் உழாநின்ற கடாக்களின் இருகொம்பிடை உதைத்து வீழ்ந்து உழவைத் தடைப் படுத்தும். பருத்தவரால் மீன்கள் விரையத் தாவி எழுந்து அசைக்கும் வால்புறத்துத் தாக்கி மிக விரைந்து செலத் தூண்டும்,

பூண்ட வன்கொடுந் தானவன் ஆக்கைபோழ்ந் திடலுங்
காண்ட கும்புவி தன்நிறங் காட்டிய தென்னக்
கீண்ட சால்தொறுங் கேழ்கிளர் தமனியங் கிடந்து
மாண்ட பேரொளி வயங்கிநீள் கனையிருள் மேயும். 73

வன்மை பூண்ட கொடிய அசுரன் மார்பை உழுபடை பிளந்த அளவிலே பூமி தன் நிறத்தைக் காட்டியது என்னக் கிழித்த உழுசால்வழி எங்கும ஒளி மிகுந்த பொன் வெளிப்பட்டு மாட்சிமைப் பட்ட பேரொளி விளங்கித் தங்கிச் செறிந்த இருளை உண்ணும்.

நீளுதல்–தங்குதல்; உலகில் இருள் என்றும் நீங்காமையின் நீள் இருள் எனப்பட்டது.

வேறு செய்துபின் பொருத்துறும் வினைவல அமைச்சிற்
கூறு செய்ததண் சேறெலாங் குழப்பி ஒன் ருக்கிச்
சாறு செய்துவா சவற்ரெழு துறுமிடர் தவிர்த்து
நாறு செய்கென வெண்முளை வித்துவர் நாளால். 74

தம்மரசர்க்கு நலம் தோன்ற மாறுபட்ட அரசரைப் பிரித்தலும், பின்பு வேண்டுங்கால் பகை போக்கி அவரைப் பொருத்தலும் வல்ல அமைச்சரைப் போல, உழுபடையாக வயலை முன் கூறுபட உழுது, பின் குழப்பி ஒன்ருக்கி, இந்திரனைத் தொழுது விழாச் செய்து மிகும் இடையூற்றினைத் தவிர்த்து நல்லோரையில், நாற்ருகுக என்று முளைத்த நெல்லை விதைப்பர் உழவர்.

> 'வீற்றுடு விளைகெனத் தொழுது வித்துவார்'
> நாறிது பதமெனப் பறித்து நாட்செய்வார். (சீவக-25)

அருள்வி ளங்கலும் உடல்பொரு ளாதிய பந்தம்
தரும வன்புடை யெய்துறக் கொடுத்திடுந் தகைபோல்
பெருக யாத்தநீர்க் கலங்கல்போய்த் தெளிந்தபின் முழுதும்
மருவு சால்வழி வடிந்துறக் கவிழ்ப்பர்கள் மள்ளர். 75

சிவஞானம் மேலிட்ட அளவிலே தனு, கரண, புவனபோகங்களைத் தந்த முதல்வனிடத்து அடையக் கொடுத்திடும் முறைபோல, பெருகக் கட்டிக் குழப்பிய நீர் கலங்கல் நீங்கித் தெளிந்து வண்டல் வயலில் படிந்தபின் நீர் முழுவதும் வடியும்படி கீழ்மடை வழிச் செல்ல விடுவார்கள் உழவர்கள்.

கலி விருத்தம்

இளமகப் பசிதனக் கேந்து கொங்கைப்பால்
அளவறிந் தூட்டுதாய் மான ஆறறி
களமர்கள் முளைப்புனல் செவ்வி கண்டுநீள்
வளவயல் பாய்த்தித்தம் மகவின் ஓம்புவார். 76

தாய் தன் பச்சிளங்குழவியின் பசிக்குக் காலமும் அளவும் அறிந்து பால் சுரந்து ஊட்டுதல் போலப் பயிர்செய் முறை அறிந்து உழவர்கள் முளைப்பயிர்க்கு உரிய காலங்களில் அளவொடு நீர் பாய்ச்சி வளவயலைத் தம் மகவுபோலக் காப்பார்.

ஓரிடத் துயிர்த்ததன் பறழை ஓம்புவான்
பாரிடைப் பல்வயின் உய்க்கும் பூசைபோல்
காருடற் களமர்கைந் நாறு வாரிப்போய்ச்
சீருடைப் பணைதொறும் நடுதல் செய்வரால், 77

ஓரிடத்தில் ஈன்ற தன் குட்டிகளைப் பல்வேறிடங்களில் கொண்டு போய்வைத்துக் காக்கும் பூனைபோல உழவர் ஓரிடத்து வித்திய நாற்றுக் களை பல்வயல்களிலும் நடவு செய்வர்.

சீருடைப்பணை-பதப்படுத்தவயல். கை-சிறிய. நாறுதல்-முளைத்தல்.

மரகதந் தளிர்த்தென வளர்பைங் கூழ்செறி
தரநிறை கழனியுள் சங்கம் ஊர்வன
பரவைநீர் மேய்ந்தெழும் படலைக் கொண்டலுள்
சரமதி நுழைந்துசெல் காட்சி சாலுமால். 78

மரகதம் தழைத்த தென ஒளிகிளர் பசிய பயிர் செறிந்த வயலில் சங்குதவழ்தல், கார்காலத்துச் சந்திரன் நீர் கொண்டு நிறைந்த மேகத்திடைப் புகுந்து செல்லும் காட்சியை ஒக்கும்.

களமர்கள் களைகளை பருவங் காட்டலும்
இளமயில் வயல்வளங் காண எய்தியாங்
குளமகிழ் கூர்தர உழத்தி மாரெலாம்
வளமலி பணைதொறும் வந்து முற்றுவார். 79

உழவர், களையைக்களையும் காலத்தை உணர்த்தலும், உழவர் பெண்டிர் பலரும் உள்ளம் மகிழ்ச்சி மிக, இளமயில் வயலைக்காண வந்தாற்போல வளம் மிக்க வயல்கள்தொறும் வந்து சூழ்வார்.

அம்புயம் உற்பலம் ஆம்ப லாதியாம்
பைம்புதற் களையறப் பறித்த தம்உருக்
கொன்புனற் றோன்றலும் கொய்த புன்களை
பின்பினு முளைப்பதென் பெயர்த்தென் பார்சிலர். 80

தாமரை, நீலோற்பலம், செவ்வல்லி முதலியவற்றின் மலர்களின் புதல்களே களைகளாக முற்றப்பறித்த தம் வடிவில் உள்ள முகம், கண், வாய் முதலியன பெரும் புனலில் தோனறலும் பறித்தவை தொடர்ந்து மீளவும் முளைப்பதும் எனனே என வியப்பர் உழத்திமாருட்சிலர்.

இவை யன்றி வேறுகளையில் எனவும், மகளிர் உறுப்பனைத்தும் மலர்கள் எனவும் பெறவைத்தனர்.

பங்கயம் ஆம்பலுற் பலத்தில் தேனுண்டு
தங்கிய வண்டினந் தமது வாள்முகம்
செங்கனி வாய்விழி சேர்ந்து மூசுற
அங்கவை கட்டெறிந் தகற்று வார்சிலர். 81

தாமரை, செவ்வல்லி, நீலோற்பல மலர்களில் தேனுண்ணத் தங்கிய வண்டுகள் வேற்றுமையறியாது களைபறி மகளிர் தம்முடைய ஒளியுடைய முகம், தொண்டைக்கனிபோலும் வாய், கருங்கண் இவற்றின் மொய்ப்ப, வயலிடத்திலுள்ள களையைப் பறித்தெறிந்து அவ்வண்டுகளை உடன அகற்றுவர் சிலர்.

பாயிதழ்த் தாமரை பறித்தங் கொப்புமை
ஆயுந ரெனமுகஞ் சேர்த்தி ஐதுதேன்
வாய்மடுத் திணையில தென்று மாற்றல்போல்
மீயுயர் கரைப்புறம் வீசு வார்சிலர். 82

மகளிர் சிலர், பரவிய இதழ்களையுடைய தாமரை மலரைப் பறித்து ஒப்புடைமை ஆராய்வார் போல முகத்தொடு சேர்த்தித் தேனைப்பருகி, ஒப்பில தென அகற்றுதல்போல மேலே உயர்ந்த கரைக் கயலில் வீசுவார்.

இணைவிழிக் கிணையில என்ப தண்மையின்
அணுகிநீ காணென அழைத்துக் காட்டல்போற்
பிணையுநா சியினெதிர் பிடித்து மோந்துதேன்
தணிவிலுற் பலமுடி சார்த்து வார்சிலர். 83

இருகண்களுக்கு ஒப்பின்மையை நெருங்கிக் காணெனக் காட்டுதல் போல நீலோற்பல மலரை மூக்கிற்பட மோந்து பின் கூந்தலில் முடிப்பர் சிலர். பிணையும் நாசி—கண்களோடு இணைந்த மூக்கு.

சைவலங் களைகுவான் குனியத் தாழ்குழல்
எய்தியெம் இனத்தினை ஒறேன்மின் என்பபோற்
கைமிசை விழுந்துசிக் குண்ணக் கால்நிமிர்த்
தையபூங் குழன்முடித் தணைகின் றார்சிலர். 84

பாசியாகியகளையைப் பறிக்கத் தலையைத் தாழ்க்க அவ்வழிக் கூந்தல் முன்கைமேல் வீழ்ந்து உவமையால் எமக்கு இனமாய் அப் பாசியைக்களையன்மின் என்பபோலச்சிக்குண்டு தடுப்ப நிமிர்ந்து அழகிய மலரணிந்த கூந்தலை ஒப்பனை செய்து செயலிற் றலைப்படுவர் சிலர்.

நறுமலர்ப் பங்கயங் களைய நாரியர்
கறுவொடு முள்ளரைக் காம்பு பற்றலுந்
தெறுகரங் கிழியப்புண் செய்யு மேதமக்
கிறுதிசெய் வார்க்கெவ ரிடரி ழைத்திடார். 85

மகளிர், நறுமணமுடைய தாமரை மலரைக் களை எடுப்பக் காழ்ப் பொடும் பற்றிய அளவிலே அழிக்கின்ற கை கிழிபடப்புண்ணாக்கியே விட்டது. வலிமிக்குத் தம்மை அழிப்பவர்க்கு மெலியரும் தம்மால் ஆம் சிறு தீங்கைச் செய்து வைப்பர்.

இப்படலம் 87ஆம் செய்யுளை நோக்குக. எவர்—எத்துணை எளியரும். கறுவொடும் முகத்திற்கு ஒப்பாக முயலும் பகையும், பயிர்க்குப் பகையும் நோக்கியது.

அலமரு விழியின மாமெ ஞமுக
மலர்மிசைப் பாய்தரு கயலும் மாண்டதன்
குலமெனப் புறவடி கூடுங் கூர்மமும்
இலவிதழ்க் கடைசியர் எளிதிற் கைக்கொள்வார் 86

சுழலுகின்ற விழிகளை இனமென்று மதித்து முகமலர்மேல் பாய்ந்த கயல் மீனையும், மாட்சிமைப்பட்ட தன் இனமெனப் புறவடியை நெருங்கிய ஆமையையும் முள் முருக்க மலர் போன்ற அதரங்கள் கூடிய கடைசியராகிய உழத்தியர் முயலாது வைத்து எளிதினிற் கைப்பற்றினர்.

பறிதரக் களைந்தெறி பாவை மாரைஅம்
மறிபுனற் குவளைகால் வளைத்துப் பாம்பெனப்
பொறிவெரு வுறச்செயும் புடைப்பின் மொய்ம்பிலாச்
சிறியருந் தம்மினுந் தீங்கி ழைப்பரே. 87

வேர் பறியக் களைந்தெறியும் பாவை போல்பவரை மடங்கிவரும் நீரிலுள்ள அக்குவளைக் கொடிகள் காலை வளைத்துப் பாம் பென்று அவர்கள் இந்திரியங்கள் கலங்கி அஞ்சச் செயா நிற்கும். வலியர் ஒருவர் வலியிலரைத் தாக்கின் அவ்வலியிலரும் தம்மால் இயலும் தீங்கை அவ்வலி யுடையவர்க்குச் செய்வர்.

களிபடு சுரும்புளர் கமலக் கஞ்சமும்
நளிபடு குவளையும் நனைகொள் ஆம்பலுந்
தளிரியற் கடைசியர் முழுதுஞ் சாடுவார்
அளிமரு வலர்க்கெவர் அன்பு செய்குவார். 88

கள்ளுண்டு களிக்கும் வண்டுகள் சுழன்று திரியும் தாமரைகளும், பெருமை அமைந்த குவளை மலரும், தேன் பொருந்திய ஆம்பல் மலரு மாகிய இவற்றை, மாந்தளிர் போலு மேன்மை வாய்ந்த அம்மருத நில மகளிர் ஒருசேரக் களைவர். பகைவர்க்கு மிக்க அன்பினைச் செய்வாரெவர்.

புரைதபு பசும்பயிர்ப் பொலிவுங் கங்கெலா
நிரைநிரை கிடந்தபல் நிறத்த பூக்களும்
வரைதவழ் முகில்களும் வான விற்களுந்
தரையிடைப் பயன்பெறச் சார்ந்த தொக்குமால். 89

குற்றத்தினின்று நீங்கிய பசியபயிர்களின் விளக்கமும், வயல் வரம்பின் பக்கங்களிலெல்லாம் வரிசை வரிசையாகக் கிடந்த பல நிறங் களையுடைய மலர்களும், மலையிற் றவழு மேகங்களும் அதிற்றோன்றும் இந்திரதனுசுகளும் உலகினிடத்து ஓர் பயனைப் பெற அடைதலை ஒக்கும்.

இருள்முகி லுறழ்பயி ரிடையெ லாந்தடித்
துருகெழ வயங்கியாங் குலவும் அங்கலார்
திருமலர்ப் பதமெலப் பெயர்த்துத் தேங்குழற்
கருஞ்சிமி ரூர்த்தெழக் கரையி லேறுவார். 90

நீர் கொண்ட மேகத்தை ஒத்த பசிய பயிர்களினிடங்களிலெல்லாம் மின்னல் போலத் தமது வடிவந்தோன்ற விளங்கி அவ்விடத்துலாவும் மருத நிலப்பெண்கள், அழகிய தாமரையை யொத்த தமது கால்களைச் சேற்றினின்றும் மெல்ல வாங்கித் தேன் சிந்துங் கூந்தலில் கரிய வண்டுகளொலித்து மேலேயெழக் கரையிலேறு நிற்பார்கள்.

தெறுங்களை கட்டநீர்ச் செறுவிற் பண்டுபோல்
நறுங்கள்அம் போருகச் சேக்கை நாடிவந்
துறுங்களி ஓதிமம் உயங்கி வாடுவ
வறுங்கள நாடியுள் மறுகு மாந்தர்போல். 91

பயிர்களை வருத்தும் களைகளைக் களைந்தெறிந்த நீரையுடைய வயலில், களிப்பு மிக்க அன்னங்கள் முன்பு போலத் தாமிருக்கும் நறுமணங்கமழும் தேனையுடைய தாமரைகளாகிய படுக்கைகளை நாடி வந்து அவையில்லாமையால், தலைவி அல்ல குறிப்பட்டமையால் அவள் நிற்றலொழிந்த இடத்தைநாடி மனஞ் சுழலும் தலைவரைப் போல மனம் வருந்தி வாடா நின்றன.

கொள்ளைபோய் நனிவறங் கூர்ந்த காலையும்
வள்ளியோர் விருந்தினர் வாடக் காண்பரோ
கள்ளரு மலர்வள மிழந்துங் கார்வயல்
வெள்ளன மகிழமீன் விருந்து நல்குமால். 92

வள்ளல்கள் தம்பொருள் முழுதும் வறியர் கவர்தலால் மிகவும் வறுமையுற்ற காலத்தும் தம்மிடத்து வந்த விருந்தினர் பசியால் மெலியக் காண்பரோ? காணார். அவ்வாறே, பயிராற் கருமைவாய்ந்த வயல்கள் தேன் சிந்தும் மலர் வளத்தை இழந்தும், வெள்ளிய அன்னம் மகிழ்ச்சி மிக மீன்களை விருந்தாகத் தாராநிற்கும்.

மண்ணக மகளிர்கை வண்மை கண்டயாம்
விண்ணக மகளிர்கை மேன்மை காண்டுமென்
றெண்ணிமேற் சேறலுற் றென்ன வான்பயிர்
கண்ணிறை கவின்செழித் தோங்குங் காட்சித்தே. 93

நன் செய்ப்பயிர்கள், நிலவுலகிலுள்ள பெண்டிர் கைராசியைப் பார்த்த யாம் விண்ணிடத்துள்ள தேவமாதரது கைவளத்தையும் காண்போமென்று கருதி மேலெழுந்து சென்றாற்போலக், கண்களுக்கு நிறைந்த அழகால் விளங்கி வளரும் காட்சியையுடையது.

கொச்சகக் கலிப்பா

ஈன்றெடுத்தோர் குணமகவுக் கியையுமுறைப் படிவித்தின்
தோன்றுமுளை முன்விளர்த்துப் பின்பசந்த தொடர்பினால்
ஆன்றசெழுங் கதிர்களுமுன் தூவெள்ளை யாயெழுந்து
மான்றுமர கதமேனி வாய்த்துமடல் கிழித்தெழுமால். 94

தாய் தந்தையர் குணம் தம்மக்களுக்குப் பொருந்து முறைப்படி வித்தில் தோன்றிய முளைகள் முன்வெளுத்துப் பின்னே பசந்து காட்டிய இயைபினால், மிகுந்து செழித்த நெற்கதிர்களும் முன்பு களங்கமில்லாத வெண்ணிறம் கொண்டெழுந்து, பின்பு பெருமையமைந்து மரகதம் போல மேனி பசந்து மடல் கிழித்தெழாநிற்கும்.

தந்தை குணம் மைந்தர்க்கு அமைதல்: 'வித்தும் முளையும் வேறன்றே' (முத்துக் )

அரமகளிர் அங்கைவளம் அறிபாக்கு மேற்போந்து
திரையெறிநீர்க் கடல்வரைப்பிற் றெரிவையர்கைக் கிணையொவ்வா
மரபுணர்ந்து மீண்டென்ன வானோக்கிக் கதிர்த்தெழுந்த
பரவுபுனல் தடஞ்சாலி பார்நோக்கி இறைஞ்சுமால். 95

தெய்வப் பெண்களது அழகிய கை (விசேடத்தை) ராசியை உணர மேற்போய், அலைவீசும் நீர்மயமாகிய கடல் சூழ்ந்த நிலவுகில் பெண்கள் கைக்கு ஒப்பாகாத மரபினையறிந்து திரும்பினாற்போல விண்ணுலகை நோக்கிக் கதிர்வாங்கிப் பரந்த நீரிலுள்ள பெருத்த நெற்பயிர்கள் இந்நிலவுலகை நோக்கி வளைந்து சாயாநிற்கும்.

பேதைமையில் ஆடவர்முன் வளைவின்றிப் பெதும்பைமையின்
மேதகச்சற் றெனவணங்கி மங்கைமையின் மிகநாணும்
மாதரைப்போற் பைங்கூழின் மன்னனெதிர் கதிர்த்தெழுந்த
ஏதமிலாக் கதிர்முதிர்ந்து வரவரக்கீ ழிறைஞ்சுமால். 96

பேதைப் பருவத்தில் ஆடவர்கள் முன் சிறிதும் தலையைத் தாழ்த்தாது, பெதும்பைப் பருவத்தில் மேன்மை பொருந்தச் சிறிது தலையிறங்கி, மங்கைப்பருவத்தில் மிகவும் தலையிறங்கும் பெண்களைப் போலப் பசிய பயிராயுள்ள பருவத்தில் தனது தலைவனாகிய இந்திரனுக்கெதிரே கதிர் கொண்டு தலையிறக்கமில்லாது குற்றமில்லாத அந்நெற்கதிர்கள் பால் பற்றி முதிர்ந்து வர வர நிலவுலகை நோக்கிக் கீழே தலையிறங்கா நிற்கும்.

முப்பருவமும் ஒருங்கு நிகழாமையின் தன்மையின் வைத்து ஓதினார். பைங்கூழ், எழுவாய் ஏதம் இன்மை குற்றம் இன்மையாவது பின்னே பழுத்தற்குரிமை உடைமை. முதிர்ந்து வரவர-முதிர, முதிர.

உருத்திட்பம் உறுக்காலைத் தலைநிமிர் இ உற்றதற்பின்
தருக்கற்று நனிவணங்கிப் பழுத்தகதிர்த் தடஞ்சாலி
பெருக்கத்து வேண்டுமால் பெரும்பணிவு மிகச்சிறிய
சுருக்கத்து வேண்டுமுயர் வெனுமொழியின் சுவைதேற்றும் 97

வடிவு திண்மை பெறுத நிலையில் தலை நிமிர்த்து திண்மைபெற்ற நிலையில் செருக்கொழிந்து பெரிதும் தலை சாய்த்து முதிர்ந்து காய்த்த கதிர்களையுடைய பெரிய நெற்கதிர்கள், யாவர்க்கும் மிக்க பணிவு செல்வப் பெருக்கத்தில் வேண்டும், மிகவுஞ் சுருங்கிய காலத்து உயர்வு வேண்டும் என்னும் மூதுரையின் சுவையுடைப் பொருளைத் தெளிவிக்கும்

"பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய, சுருக்கத்து வேண்டும் உயர்வு (திருக்-963)

தாமதிவாக் கியகிரணந் துளித்தென்னக் கதிர்ச்சாலி
காமர்மணித் தரளங்கள் கான்றுசெறுத் திடராக்கிப்
பூமலரக் கால்யாத்த புனல்முழுதும் புறங்கவிழ்த்து
மாமைநீர் புலர்த்தவரு மள்ளருள மகிழ்விக்கும். 98

கதிர்களையுடைய நெற்பயிர்கள் வெண்டிங்கள் தம்மேலொழுக்கிய கதிர்களைத் துளித்தாற்போல, விருப்பஞ் செய்யு முத்துக்களைத் தம்மிடத்தினின்றும் உமிழ்ந்து வயலை மேடாக்கி மலர்கள் மலரத் தமதுகால்கள் தோறும் சிறைப்படுத்திய நீர்முழுமையும் புறத்திற்போகவிட்டு, அழகிய நீரை வடிக்க வாராநின்ற அந்நில மக்களுடைய மனமகிழச் செய்விக்கும். நெல் முத்துத் தோன்றுமிடங்களிலொன்று.

வணங்குகுலைக் கதிர்ச்சாலி சிலையாக வளர்பதடி
உணங்குகதிர் கணையாக ஒளிர்முளரிக் கரம்பற்றி
இணங்குபசுங் குரல்கவர வரும்புட்க ளிரிந்தோட
அணங்குபுரிந் தெதிர்கண்டோ ரதிசயிப்பச் செயும்பணைகள். 99

வயல்கள் வளைந்த கதிர்க்குலையுடைய நெற்பயிர்கள் வில்லாகவும், வளர்ந்துலர்ந்த பதர் நெருங்கிய கதிர்கள் அம்பாகவும், விளங்குந்தாமரையாகிய கைகளிலேந்தி இசைந்த பசிய கதிர்களைக் கவரவரும் பறவைகள் விலகியோட வருத்தம் செய்து நேர் கண்டவர் வியப்பச் செய்யும்.

பாலொளிநீத் தெழும்விடத்தான் முகில்வண்ணம் படைத்திருந்த
மாலவனார் கலிக்கச்சி வந்தெய்தித் தவமுஞற்றி
மேலையுருச் சிவந்தென்ன வெள்ளொளிபோய்ப் பசந்தெழுந்த
சாலியெலாஞ் செங்கனக நிறம்வாய்ந்து தழைக்குமால். 100

கடலிற் றோன்றிய விட வேகத்தால் பால்போன்ற முன்னுள்ள நிறத்தை இழந்து மேகம் போலும் கருநிறவண்ணத்தைப் பெற்றிருந்த திருமாலானவர் பல நலங்களுமுடைய திருக்கச்சி நகரை அடைந்து தவஞ் செய்து முன்புள்ள கருநிறம் சிவந்தாற்போல, முன்னைய வெண்ணிறம் பருவத்தாலொழிந்து பின்பு பசு நிறங்கொண்டு மேலெழுந்த நெற்பயிர்களெல்லாம கதிர்களால் சிவந்த பொன்னிறம் வாய்ந்து தழைத்தோங்கும்.

பச்சைவண்ணர், பவளவண்ணர் வரலாறு இப்புராணம் வீராட்டகாசப் படலத்துட் காண்க.

நாவலோர் புனைந்துரைக்கும் நலமுழுதும் அமைந்துவட நாகஞ்சூழ்பொன், நாவலோ எனவியப்ப வளர்செந்நெல் அரிபருவம் நாடித் தெண்ணீர், நாவலோன் உளங்களிப்பப் படியெடுக்குங் குண்டைநகர் உழவர் போல்வார், நாவலோ னெனவிளிப்பத் தொழுவரெலாம் நயந்தெய்தி வினையின் மூள்வார்.

கல்வியில் வல்லோர் புனைந்து கூறும் வளமை முற்றும் அமைந்து வடபாலுள்ள மேருவைச் சூழ்ந்த பொன்னிறம் வாய்ந்த நாவலந் தீவோ என்று கண்டோர் வியந்து கூற, வளருஞ் செந்நெற்கதிரை யரியும் பருவத்தை ஆராய்ந்து, தெள்ளிய நீர்சூழ்ந்த திருநாவலூராளியாகிய ஆளுடைய நம்பிகள் மனங் களிகூர நெல்லளந்த குண்டையூர்க் கிழாரைப் போன்ற, மருதநில மக்களெல்லாரும் 'நாவலோ' என்று அழைக்க விரும்பியடைந்து தத்தமக்குரிய நெல்லரி தொழிலில் முயல்வாராயினர். 'நாவலோ' என்பது நெல்லரிதற்கு மருதநில மக்களை அழைக்கும் குறியீடு. இது குழூஉக்குறி.

கலி விருத்தம்

ஒருவ ருக்கொரு செல்லல்உற் றுழிஅஃ
தருகு ளார்க்கும் அடுப்பது திண்ணமே
கருவி மள்ளர் கதிர்க்குலை தன்னொடும்
பருமென் பூக்களும் பற்றி அரிகுவார். 102

உழவர்கள் அரிவாளால் கதிர் முற்றிய குலைகளொடும் பரிய மெல்லிய மலர்களையும் பற்றி அரிவார். ஒருவர்க்கொரு துன்பம் வரின் அவரோடு கூடியிருப்பார்க்கும் அத்துன்பம் வருவது உறுதி என்பது அறிய நேர்ந்தது.

அரிவர் சேர்ப்பர் அடுக்குவர் சிக்கென
வரிவர் சென்னியில் வைப்பர் களஞ்செலப்
புரிவர் பொன்னங் கிரியெனப் போர்செய்வர்
பிரிவர் மீள்வரிப் பெற்றியர் எங்கணும். 103

நெற்கதிரைத் தாளுடன் அரிவர்; ஓரிடத்திற் சேர்ப்பர்; மேன்மேலடுக்குவர்; விரையக் கட்டுவர்; தலைமேற்சுமந்து செல்வர்; களத்திற்குக் கொண்டு போவர்; மேருமலை என்னப் போர் செய்வர்; அவ்விடத்தினின்றும் பிரிவர்; மீண்டு வருவர்; இவ்வியல்பினரே எவ்விடத்தும் உள்ளனர். மடிந்திருப்போர் இலர்.

சிறைசெய் தீம்புனல் நாட்டிறை செற்றுமுன்
சிறைய ரிந்த வரைகளைச் சீற்றத்தால்
சிறைசெ யக்கரு தித்தன் நிலத்தொரு
சிறைவைத் தாலெனப் போர்கள் சிறக்குமால். 104

இனிய நீரைச் சிறை செய்த மருத நிலத்திறைவனாகிய இந்திரன் வெகுண்டு முன்பு சிறகுகளை அரிந்த மலைகளைக் கோபத்தால் சிறைப் படுத்தக் கருதித் தன்னிலத்தில் ஒரு பக்கத்தில் வைத்தாற்போல நெற் போர்கள் சிறந்து விளங்கும்.

மலைகளுக்குச் சிறகுகள் இருந்தன என்றும் அவற்றை இந்திரன் தடிந்தான் என்றும் புராணங்கள் கூறும்.

வெற்பெ லாமண்ணின் வீழ்த்து வலாரிதன்
ஒப்பி லூர்தியை ஏவிஒ றுத்தல்போற்
பற்பல் போர்கள் சரித்துப் பகட்டினம்
முற்பி ணைத்து நடத்துவர் மொய்ம்பினோர். 105

மலைகளை எல்லாம் மண்ணில் விழச்செய்து இந்திரன் தனது ஊர்தியாகிய மேகங்களைச் செலுத்தி அவற்றை மிதித்துத் தண்டித்தல்போல வலிமையையுடைய மருதநிலத்து மக்கள் இட்ட பல நெற்போர்களைச் சரித்து எருமைக்கடாக்களை ஒன்றோடொன்று பிணைத்து மிதிப்பிப்பாராயினர்.

நெற்ப லாலத்தின் நீங்கிய தோவெனப்
பற்பல் கால்முகங் கோட்டின பார்ப்பபோற்
பொற்ப வாயினில் பூங்கதிர் கவ்வுபு
சொற்ப கட்டினஞ் சுற்றி உழக்குமால். 106

நெல், வை(வைக்கோல்) யினின்றும் நீங்கியவோ என்று பன்முறையும் முகத்தை வளைத்துப் பார்ப்ப போலப் பொலிவு பெற வாயாலழகிய நெற்கதிர்களைக் கவ்விக்கொண்டு நெற்போர்களை எருமைக்கடாக்களின் கூட்டம் சுற்றிக் கலக்கா நிற்கும்.

சொல்–நெல். பலாலம்–வை.

உடலின் ஆவி பிரிந்தென ஊழ்வினைத்
தொடர்பு நீங்குவ தொப்பத் தொகுத்தநெற்
படலை வையினில் நீங்கப் பகட்டினம்
அடைய வுந்தொடர் நீங்கி அகலுமால். 107

உடலினின்றும் ஆவி பிரிந்தமையால் பிராரத்த கன்ம சம்பந்தமும் அந்த அளவில் நீங்குதல் போலத், தொகுத்த நெற்போர்த் தொகுதியில், நெற்குவியல் வைக்கோலின் நீங்கக் கடாவினம் முழுதும் பிணிப்பினின்றும் நீங்கி அகலும்.

வைய கற்றி வளிஎதிர் தூற்றலும்
பொய்ய கன்றவர் ஐம்பொறி போதல்போற்
கைய கன்று கழிவைப் பொடியொடும்
ஒய்யெ னப்பதர் அப்புறத் தோடுமால். 108

வைக்கோலினின்றும் நெல்லை யகற்றிக் காற்றெதிர் தூற்றலும், சிவஞானிகளுடைய ஐம்பொறிகளின் தொழில் ஒழிதல் போல, நீங்கிக் கழிந்த வைக்கோற் பொடியொடும் நெற்பதர்கள் விரைந்து அப்புறத் தோடா நிற்கும்.

பொய் அகன்றவர்–உள்ளனபோலத் தோன்றி உண்மையில் நிலையாமை உடைய உலகப் பொருள்களின்மேற் பற்று நீங்கிய சிவஞானிகள்

அறத்து நூல்வழி ஆற்றுவ ஆற்றிஅத்
திறத்தின் எஞ்சிய செந்நெற் குவையெலாங்
குறித்தெ டுத்துநெற் கூடுய்த் தறச்செயல்
மறப்பி லாத வளக்குடி எங்கணும். 109

அறநூல் முறைப்படி கொடுக்க வேண்டுவ கொடுத்து அக்கூறு பாட்டின் மிஞ்சிய செந்நெற் குவியல் அனைத்தையும் அளந்து கொண்டு நெற் கூட்டினில் சேர்த்து, அறச்செயலை மறவாமல் வாழ் வளமுடைய குடிகள் எவ்விடத்தும் உள்ளன.

குறைய வித்தின கொண்டு குடியெலாம்
நிறையச் சாலி நிரப்புவ பூம்பணை
இறைய ளித்த இருநாழி நெற்கொண்டே
அறமெ லாம்நிறை விக்கும் அமலைபோல் 110

மலர்களையுடைய வயலில் குடிகளெல்லாம் மிகச் சிறிய அளவில் வித்திய நெல்முளைகளைக் கொண்டு ஒன்று நூறாய நெற்குவியலைத், திருவேகம்பப் பெருமான் அளித்த இருநாழி நெற்கொண்டு முப்பத்திரண்டறங்களையும் நிறைவிக்கும் காமாட்சி அம்மையைப் போல நிரப்பின.

அமலை—மலமில்லாதவள்; காமாட்சியம்மை.

கொடுப்ப கொண்டு பெருக்கிக் கொடுத்தலால்
அடுத்த வாணிகர் போலும் அகன்பணை
உடுத்த சோலைகள் உம்பர் கடவுள்நீர்
மடுப்ப தென்ன வளர்ந்தெழுந் தோங்குமால். 111

இடம் பரவிய வயல்கள் தம்மிடத்து வித்திய சிறிய அளவைக் கொண்டு ஒன்று, பலவாகப் பெருக்கிக் கொடுத்தலினால் வளர்ச்சி செய்யும் தொழிலில் அடுத்த வணிகரை ஒத்துத் தோன்று நிற்கும். அம்மருத நிலத்தைச் சூழ்ந்த சோலைகள் தேவரது தெய்வத் தன்மை வாய்ந்த கங்கையை வாய்மடுப்பது போல வளர்ந்தெழுந்து ஓங்காநிற்கும். 'தொடுப்பின் ஆயிரம் வித்தியது விளைய' என்னும் உரையை எண்ணுக.

கலிநிலைத் துறை

கொண்டல் உகுக்கும் ஆலி நிகர்ப்பக் குளிர்பாளை
விண்டு முகைக்கும் பைங்கமு கெங்கும் விளையாட்டு
வண்டலர் கொங்கைக் கிடையிள நீர்மற் றவர்காணு
தண்ட மிசைக்கொண் டெய்தி யளிக்கும் வளர்தெங்கு. 112

பசிய பாக்கு மரங்கள் எவ்விடத்தும், மேகங்கள் சிந்தும் மழைத் துளிகளை ஒப்பக் குளிர்ந்த பாளை வாய் விட்டுக் காய்களைத் தோற்றுவிக்கும். விளையாட்டு மகளிர் கொங்கைக்குப் புறங்கொடுத்த இளநீர்க் காய்களை அம்மகளிர் கூட்டம் காணாதவாறு வானிடத்து வைத்துக் காக்கும் வளர் தென்னை மரங்கள்.

செற்றெயில் வென்றார் தேர்மிசை மேற்போக் கெனமென்பூத்
துற்ற பொதும்பர்த் துறையின் இனத்தாற் செருவேற்றுப்
பற்றிய வாவி நீங்குபு பைந்தேன் அடைகீறி
உற்றெழு வாளை பொருதுயிர் விண்டார் கதிகாட்டும். 113

பகைவரது மதிலை அழித்து வென்றவர் தம் தேரின் விதானம் என மெல்லிய பூக்கள் நெருங்கிய சோலை உடுத்த நீர்த்துறையில் இனத்தோடு போரேற்றுக் கைப்பற்றிய பொய்கையை நீங்கிப் பசிய தேனடையைக் கீறி மிக்கெழுந்த வாளைமீன போர்செய்து இறந்து வீரசுவர்க்கம் புகுவோர் நிலைமையைக் காட்டும். போரில் இறந்தோர் சூரிய மண்டலத்தைப் பிளந்து சுவர்க்கம் செல்லல்: 'கதிருடல் வழிபோய்க் கல்லுழை நின்றோர்' (கல்) 'செங்களம்பட், டொண்பருதி உடல்கிழித் தோடும் கடற்றானை ஒளிறுவா ளவுணர் குழுவும்' (முத்து-சப்-3) மேற்போக்கு – மேற்கட்டி.

போதுகள் மேய நெடுங்கய மேவு புனிற்றுக்கார்
மேதியை ஆயிடை வாளை வெகுண்டு விசும்பேறிப்
பாதி வெரிந்புறம் உட்குழி யக்குதி பாய்ந்தாடி
மீதுயர் திண்கரை யேற உகைக்கும் வியப்பிற்றால். 114

மலர்களை மேய்வதற்கு நெடிய நீர்நிலையில் இறங்கிய ஈன்றணிய கரிய எருமையை அவ்விடத்துள்ள வாளைமீன் வெகுண்டு வானிற் றாவி அவ்வெருமை முதுகு பாதி குழிபடக் குதித்து அவ்வெருமை துள்ளி மேலுயர்ந்த திண்ணிய கரையை ஏறச் செலுத்தும் வியப்பினது.

வெரிந்புறம்–முதுகு; ஒரு பொருட் பன்மொழி.

சுவையொளி ஊறொலி நாற்றமெனைந்தின் தொடர்பற்றிக்
கவர்படு நெஞ்சில் திரைதிரை தோறுங் கடைநீர்நாய்
துவள எழும்பா முறைமுறை கீழ்நீர்ச் சுழல்காட்சி
எவரும் இறும்பூ துறவுள வேரித் தடமெங்கும். 115

சுவைஒளி ஊறு ஒலி நாற்றம் என்று சொல்லப்பட்ட ஐம்புலன்களின் தொடர்பு பற்றிப் பிளவுபட்ட மனம்போல, அலைகள் அலைக்குந் தோறும் திரிக்கப்பட்ட நீர் நாய் துவண்டு எழும்பி முறைமுறையே நீர்க்கீழ் சென்று வாசமமைந்த தடாகமெங்கும் சுழலும் காட்சியானது, எவரும் வியப்புற உள்ளது.

கீழ்நீர், முன் பின்னாகத்தொக்க ஆறும் வேற்றுமைத்தொகை. ஏரித்தடம் என்னின் இருபெய ரொட்டுப் பண்புத்தொகை.

கரைத்துறு தண்பூங் காஞ்சிகள் சாகைக் கரம்ஓச்சி
விரைத்த கரும்பைத் தைவரு தோற்றம் விரிதார்வண்
டிரைத்தெழு திண்டோள் கேள்வரொ டூடும் இளையார்மேல்
நிரைத்தமர் செய்வான் வேள்சிலை பற்றும் நிகழ்விற்றால். 116

கரையில் நெருங்கிய தண்ணிய மலர்களைக்கொண்ட காஞ்சிமரங்கள் தமது கிளைகளாகிய கைகளை நீட்டி வாசமிக்க கரும்புகளைத் தடவுங் காட்சி, மலர்விரிந்த மாலைகளில் வண்டுகள் ஒலித்துப் பறந்தெழும், திண்ணிய தோள்களையுடைய தம்கணவரொடு புலக்கும் பெண்களொடு மன்மதன் போர் செய்ய அம்புகளை வரிசைப்படுத்தி வில்லையேந்தும் இயல்பினையொக்கும்.

மேதகு செவ்வணி தாங்கினர் செல்லுமின் அன்னாருந்
தீதற வெள்ளணி பூண்டுசெல் சேடிய ராஞேரும்
போதலு மீள்தலு மாய்ப்பொலி வீதிகள் எங்கெங்கும்
காதல்செய் சேரி மடந்தையர் உள்ளங் கவல்விக்கும். 117

மேன்மை தங்கிய செவ்வணி தாங்கிச் செல்லும் மின்னலையொத்த தோழிப் பெண்களும், குற்றமற்ற வெள்ளணி பூண்டு செல்லும் பாங்கிமார்களும், எவ்விடத்தும் போதலும், மீண்டு வருதலுமாக விளங்கும் வீதிகள், கண்டோர் விரும்பும் சேரியிலுள்ள பரத்தையருடைய மனத்தைக் கவலுறச்செய்யும்.

தலைவி பூப்புற்றமையைத் தலைவற் குணர்த்தச் சேடியர், செம்மலரும், செம்பட்டும், செஞ்சாந்தும், செவ்வணியும் தாங்கிப் பரத்தையர் சேரிக்குச்சென்று மீள்வர். தலைவி மகப்பயந்து நெய்யாடினமையைத் தலைவற் குணர்த்தச் சேடியர் வெண்மலரும், வெண்பட்டும், வெண் சாந்தும், வெள்ளணியுமணிந்து பரத்தையர் சேரிக்குச்சென்று திரும்புவர்.

தசும்புறழ் கொங்கையொ டெம்பெரு மான்மகிழ் தண்பாசூர்
விசும்பை உரிஞ்சு மதிற்றிரு வல்லம் விரைச்செந்தேன்
அசும்பு தடம்பொழில் ஏனைய வைப்பும் அனந்தஞ்சூழ்
பசும்பணை மாமரு தத்தெழில் யார்பகர் கிற்பாரே. 118

குடத்தை ஒத்த தனத்தையுடைய இறைவியொடும் எமது முதல்வன் அமரும் தண்ணிய திருப்பாசூரும், ஆகாயத்தைத் தடவுகின்ற மதில் சூழுந் திருவல்லமும், வாசம் அமைந்த செந்தேன் ஊறும் பரந்த சோலை சூழ்ந்த பிறதலங்களும் அளவிலவாய்ச் சூழ்ந்த பசிய வயலால் திருத்தங்கு மருத நிலத்தின் பொலிவை எடுத்துச் சொல்லும் வன்மையை யுடையர் யாவர்.

பகர்கிற்பார்: கில், ஆற்றலுணர்த்துவதோர் இடைச்சொல்.

## நெய்தல்

கலி விருத்தம்

அம்மருத வைப்பினை அடுத்தகழி நெய்தல்
மம்மர்விட வாலம்அர னுக்குதவு மாற்றால்
நம்மின மெனப்பொய்ம்மொழி நாடியுரை கைதை
சும்மைய அளக்கரொடு சூழ்ந்துறவு கொள்ளும். 119

அம் மருத நிலத்தை அடுத்த கழி சூழ்ந்த நெய்தல் நிலமானது மயக்கஞ்செய்யும் விடத்தைச் சிவபிரானுக்குத் தந்த தன்மையால், பொய்யுரையை ஆராய்ந்து கூறிய தாழைகள் தமது இனமென்று ஆரவாரத்தையுடைய அக்கடலோடு ஆராய்ந்து நெருங்கி நட்புக்கொள்ளும்.

'உணர்ச்சி நட்பாம் கிழமை தரும்' ஆகலின் கூறினர். 'கொலைக்கும், பொய்க்கும்' அடுத்தடுத்த இடம் உண்டு. 'ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன், பின்சாரப் பொய்யாமை நன்று' என்னும் திருக்குறளை நோக்குக.

கண்டல்மட லேறஅலர் தூற்றுகமழ் புன்னை
உண்டுநறை காலும்அளி ஒத்துடன் இசைக்கும்
வண்டுளர் அரும்புவிரி நெய்தல்மண மிசையுங்
குண்டுகழி மேய்பறவை நோக்கிமகிழ் கூரும். 120

தாழம்பூ விதழிற் பொருந்த நறுமணங் கமழும் புன்னை அலர் சொரிவன. தேனுண்டு உமிழ் வண்டுகள் ஒருங்கு இசை கூட்டும். வண்டுகள் முரன்று சுழலுதற்கு இடனாகிய அரும்புகள் அலர்கின்ற நெய்தல் மணம் வீசும். ஆழ்ந்த கழியில் மேய் பறவைகள் கண்டு மகிழ் மீக்கூரும்.

(வே-ள்) தாழை 'மடலேறுவல்' எனச்சேட்படுத்த தோழிக்குக் கூறவும், கூட்டம் அறிந்து புன்னை அலர் பரப்பவும், வண்டு தோழியாய் தலைவன் கொண்டுடன் கழிதற்கு ஒத்தொழுகவும், தலைவி மீண்டு வந்துழி நெய்தல் தம் இல்லில் மணநேரவும் இந்நிகழ்ச்சிகளை நோக்கி மகிழ்ச்சி மீக்கூரவும் எனப்பொருளமைய இயற்றினர்.

கண்டுமொழி யார்அவய வத்தெழில் கவர்ந்து
தெண்டிரை அளக்கரின் ஒளித்தது தெளிந்து
கொண்டதுறை யோர்கடல் குளிப்பர்துகிர் சங்கம்
வண்டரளம் வாரிமட வாரெதிர் குவிப்பார். 121

கற்கண்டைப்போன்ற இனியமொழியினையுடைய நெய்தல்நில மகளிர் தம் அவயவமாகிய அதரம், கழுத்து, பல் இவற்றின் அழகைக் கவர்ந்து கடலிடை ஒளித்தமையைத் தெளிந்து நெய்தல் நிலத்தவர் கடலில் குளித்துப் பவளமும், சங்கும், முத்தும் ஆகிய இவற்றை வாரி அம்மகளிர்முன் குவிப்பர்.

கவர்ந்த திருடரைக் கைப்பற்றி உடைமையை இழந்தவர்முன் நிறுத்துதல்.

எம்முடை உறுப்பெழிலை வவ்வினிர்க ளென்னுக்
கொம்மைமுலை வம்பணி பரத்தியர் வெகுண்டு
விம்முவளை சேல்பவளம் வெண்டரளம் மற்றும்
அம்மபிறர் கொள்ளவிலை யாற்றிமகிழ் கூர்வார். 122

திரண்டகொங்கைமேல் கச்சும் நறுமணப் பொருளும் அணிந்த புரத்தியர், 'எம்முடைய அவயவ அழகைக் கொள்ளை கொண்டார்கள்' என்று சினந்து ஒலிக்கும் சங்கு, சேல்மீன், பவளம், வெண்முத்து முதலியவற்றைப் பிறர் கொள்ள விலைப்படுத்தினமையால் மகிழ்ச்சி மீக்கூர்வர். அம்ம, வியப்பிடைச்சொல்.

கண்ணெழில் கவர்ந்தகடல் மீன்களை உணக்கும்
உண்ணமிழ்த மன்னமடவார்பறவை ஓப்பும்
பண்ணிசை மடுப்பவிழை பவ்வமும் அருக்கன்
விண்ணெழு பகற்பொழுதில் மெல்லென ஒலிக்கும். 123

கண்ணினழகைக் கவர்ந்த மீன்களை உலர்த்து நெய்தல் நில மகளிர் மீன்களைக் கவரவரும் பறவைகளை ஓட்டும் பாடற் பண்ணைச் செவிமடுப்ப விரும்பிக் கடலும், சூரியன் விண்வழிச்செல்லும் பகலில் மெல்லென ஒலிக்கும்.

தணந்தவர்கள் ஆருயிர் வருத்தவிறல் சாற்றி
மணந்தழுவு தும்பைமலர் சூடிஅடல் மாரன்
அணங்கமர்செய் காலமென ஓர்ந்துமுர சாழி
இணங்குற இராப்பொழுதின் மிக்கொலி எழுப்பும். 124

தம்மிற் பிரிந்துறைகின்ற காதலர் அரிய உயிரை வருத்த விருது கூறித் தும்பை மலரைச்சூடி மன்மதன் பொருகின்ற காலம் இதுவென எண்ணி அவன் முரசாகிய கடல் இராப்பொழுதில் மிக் கொலிக்கும்.

வீழ்ந்தவர் தணத்தலின் விழிப்புனல் உகுத்துத்
தாழ்ந்தழு திரங்குமட மாதர்தமை நோக்கி
ஆழ்ந்தகழி மாதும்உடன் நின்றழுவ தென்னச்
சூழ்ந்துபுள் அரற்றமலர் தேத்துளி துளிக்கும். 125

விரும்பிய தலைவர் பிரிந்துறைதலின் கண்கள் நீரைச்சொரிந்து துன்பத்திலழுந்தி அழுது இரங்கும் தம்மை நோக்கி ஆழ்ந்த கழியாகிய பெண்ணும் உடனின் றழுதல்போலப் பறவைகள் அரற்றத் தேனைச் சிந்தும் (கண்ணீர் சிந்தும்).

பெண்ணிற்குப் பெண் இரங்குவதியல்பு என விளக்கும்.

நலம்பயில் பொருட்குமலி வங்கமிசை நண்ணும்
புலம்பர்வரு கின்றவழி நோக்கினர் புலம்பி
இலம்படு மடந்தையர்கள் இன்னுயிர் தளிர்ப்ப
அலம்புகுளிர் பூந்திவலை வீசும்அலை வாரி. 126

பொருள்வயிற் பிரிந்து மரக்கலத்திற் சென்ற நெய்தல் நிலத் தலைவர் வரும் வழிமேல் விழிவைத்து நோக்கிப் புலம்பும் மடந்தையர் இனிய உயிர் தழைப்பக் குளிர்ந்த மெல்லிய நீர்த்திவலைகளை அலைக்கை யால் வீசும் கடல்.

தலைவனே செல்வம் ஆகலின், அவனின்மையை வறுமை என்பார் இலம்படுமடந்தையர் என்றனர். 'அறஞ்சாரா நல்குரவு' (திருக்-1047) எனவே, 'அறஞ்சார் பொருள்' ஆவது அறத்தொடுகூடுதல். காரண காரியங்களுள் ஒன்றாய் அமைதல்.

புன்புற மதத்தரும் வியந்துபுகழ் செய்ய
என்பையொரு பெண்ணென இயற்றுநகர் ஒற்றி
நன்பதி முதற்பல உடுத்தநளி நெய்தல்
தன்பெருமை யாவர்அள விட்டறி தரத்தோர். 127

சமணர் முதலானோரும் வியந்து, 'எங்கும் இலை' என்று புகழ எலும்பைப் பூம்பாவையென்னும் பெண்ணுக்குதற் கிடனாகிய திருமயிலை, திருவொற்றியூர் முதலாய நற்பதிகளைக்கொண்ட குளிர்ந்த நெய்தல் நிலத்தின் பெருமையை யாவரே அளவிட்டு முற்ற அறியுந்தரத்தினர்? ஒருவரும் இலர்.

## திணை மயக்கம்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

திருத்தொண்டை நன்னாட்டு நானிலத்தைந் திணைவளமுந் தெரித்துக் காட்ட, மருத்தொண்டை வாய்ச்சியர்சூழ் குன்றை நகர்க் குலக்கவியே வல்லான் அல்லால், கருத்தொண்டர் எம்—போல்வார் எவ்வாறு தெரிந்துரைப்பார் கலந்தார்க் கின்பம், அருத்தொண்ட ரணியில்அவை ஒன்றோடொன் றியைந்தனவும் ஆங்காங் குண்டால். 128

அழகிய நல்ல தொண்டை நாட்டு நால்வகை நிலங்களின் இயல்பு களையும், ஐவகைத்திணைகளின் இயல்புகளையும் வளத்தொடும் விளக்கி உணர்த்தவேண்டின், குன்றத்தூரில் தோன்றியருளிய பெருங்கவிஞர் ஆகிய சேக்கிழார் பெருமானாரே வல்லர் ஆவர். என்னெனின் திருவருள் பெற்ற தொண்டர் ஆகலின், பிறவி நெறிக்கு வயத்தராகிய பிறர் எங்ஙனம் ஆராய்ந்துரைப்பார். கலந்தார்க்கு இன்பத்தை ஊட்டுகின்ற புவியில் அவ்வொழுக்கங்கள் தம்முட் கலந்து தலை மயங்குதலும் அவ் விடங்களில் உளவாம்.

கலந்தார் —முற் பிறவிகளிலும் அன்பு செய்தும் செயப்பெற்றும் வருந் தலைவன் தலைவியர். தரணி—நோயை நுகர்ச்சியால் கடபித்த லின், புவிக்குத் தரணி எனக் காரணக்குறியாயிற்று. இன்பம் கூறவே துன்பமும் உடன் கொள்ளப்படும். 'துன்புள தெனின் அன்றோ? இன் புளது? இன்பம் அருத்து ஒள் தரணி எனப்பிரிக்க வேண்டும்.

வரைப்பிண்டி மலர்தூவி வனப்பலா செதிர்சொரிந்த மலருள் மூழ்கி, நிரைக்கும்பூங் கணைதூவி மதன்எம்மான் விழிநெருப்புள் நிற்றல் காட்டும், வரைத்துன்று கறிக்கொடிபோய்க் கடுக்கைமிசை மரகதத்தோ ரணம்போல் தாவி, நிரைக்கிள்ளை வாரணமும் எதிர்-நடப்பப் பொருநர்நெடுங் கயிறு காட்டும். 129

குறிஞ்சிக் குரிய அசோக மரம் மலரைத்தூவிக் கொண்டுள்ள அங்கிலையிலே, முல்லைக்குரிய முள்முருக்கமரம் பொழியும் மலர் மழையில் மூழ்கிய காட்சி மன்மதன் மலர்க்கணையைத் தூவிச் சிவபெருமான் திரு நுதல்நோக்கில் எழுந்த நெருப்பில் மறைந்த காட்சியை நினைவுபடுத்தும்; மலைக்குரிய மிளகுக்கொடி செறிந்து மாகதத்தோரணம் போல முல்லைக் குரிய கொன்றை மரத்தில் படர்ந்து, வரிசையாகக் கிளிகளும் கானங் கோழிகளும் எதிர் எதிர் அதன்மேல் நடத்தல் கழைக்கூத்தாடி கயிற் றின்மேல் நடத்தலை ஒக்கும்.

குறிஞ்சியோடு முல்லைக்கு மயக்கம் கூறப்பட்டது. நிரைத்தல் — தாமரைப்பூ, மாம்பூ, அசோகம்பூ, முல்லைப்பூ, நீலப்பூ என இவ்வரிசையில் கோடல். அசோகு, மிளகு, கிளி குறிஞ்சிக்கருப்பொருள்கள். முள்முருக்கு, கொன்றை, கானங்கோழி முல்லைக்கருப்பொருள்கள்.

சுற்றெல்லா மலர்முல்லை தழைத்துபெருந் தூறுசெய அதன்-
கீழ் எண்கு, பற்றிநுழைந் துறங்கநடு வளர்கொன்றை மிசைக்கறி
தாய்ப் படருந் தோற்றம், உற்றரக்கன் வெள்ளிமலை எடுத்தநாள்
வெரீஇத் தழுவும் உமையா ளோடுங், கற்றைவார் சடைப்பெரு
மான் நின்றநிலை காட்டுவதும் உண்டால் அங்கண். 130

சுற்றிலும் மலரொடு கூடிய முல்லைக்கொடி செறிந்து பெரிய புதரைச் செய்ய, அப்புதரின் கீழ் கரடி நுழைந்து துயில் கொள்ள, நடுவில் வளர்ந்த கொன்றை மரத்தின்மேல் மிளகுக் கொடி தாவிப்படருங் காட்சி, இராவணன் அணுகி வெள்ளி மலையை எடுத்த அந்நாளில் அஞ்சித் தழுவிய உமாதேவியாரோடும் சிவபெருமானின்ற நிலையைக் காட்டுவதும் அவ்விடத்துள்ளது.

முல்லையும், கொன்றையும் முல்லைக்கருப்பொருள்கள். எப்பொருளையும் சிவமாகக் காணும் காட்சியைக் குறிஞ்சி முல்லைகளின் மயக்கத்துள் வைத்துக் காட்டினர்.

தாம்பயிலும் வரைக்கிளைத்த செயலைமலர் கவர்மாரன் தன்-
மேல்சீறி, ஆம்பலினங் கழனியிற்போய் அவன்சேமச் சிலைக்கரும்-
பை அழித்துண் டார்க்கும், பூம்படுகர்ப் பகட்டினங்கள் வெகுண்-
டெழுந்து மலைச்சாரற் புனிற்று வாழை, தேம்பயில்செந் தினை-
யனைத்தும் அழித்துழக்கி மேய்ந்துவக்குஞ் செவ்வித் தோர்பால்.

யானைக்கூட்டங்களின் இருக்கையாகிய மலையிற்றோன்றிய அசோக மலரைத் தனக்கு அம்பாகக்கொண்ட மன்மதன்மேல் வெகுண்டெழுந்து மருதநிலத்திற்புக்கு அவன் கையிருப்பு வில்லாகிய கரும்பினை அழித்துப் பிளிறி ஆரவாரிக்கும். மருத வயலின் எருமைக்கடாக்கள் வெகுண்டு போய் மலைச்சாரலில் வளர்ந்த இளவாழையையும், இனிய செந்தினையையும் முற்றும் அழித்துக் கலக்கி மேய்ந்து மகிழும் நிலைமையது ஓர்புறம்.

குறிஞ்சி மருதங்களின் மயக்கம் இது.

(செயலை) அசோகு, யானை, மலைவாழை, செந்தினை குறிஞ்சிக் கருப் பொருள்கள். தடாக்களும், கரும்பும் மருதநிலத்தன. மலையுறை பகடு வயல் வளங்களையும் வயலுறை பகடு மலை வளங்களையும் அழித்தல்.

வரைக்குறக்கன் னியர்புனத்துக் குருகோட்டும் கவண்மணிக்-கல் மருதத் தெண்ணீர்த், திரைக்கயத்துத் திடர்செய்ய அந்நிலத் துச் சிறுமகார் சினமீக்கொண்டு, விரைத்தகுழற் பேதையர்கள் வண்டலாட் டயர்துறையின் மேவிப் பந்தும், நிரைக்கழங்கும் அவ-ரலறப் பறித்தெறிந்து நீர்ச்சுனையைத் தூர்ப்பார் அங்கண். 132

குறச்சிறுமியர், புனத்தில் தினைக்கதிரைக் கவரவரும் பறவைகளை ஓட்டக் கவணில் வைத்தெறிந்த மணிகளாகிய கற்கள், மருதநிலத்து நீர் நிலைகளைத் தூர்த்து மேடு செய்ய, அவ்வயற் சிறுமியர்கள் சினமிக்குச் சென்று மணந்தங்கிய கூந்தலையுடைய அக்குறச் சிறுமியர் விளையாட் டிடங்களை அடைந்து பந்தையும், கழற்சிக்காய்களையும் பறித்து அவர் அரற்றச் சுனையைத் தூர்ப்பார். குறிஞ்சி மருதங்களின் மயக்கம் இது. கன்னிப் பருவத்துத் தினைப்புனங்காவல் செய்வர் ஆகலின் கன்னியர் என்றனர். கவண்—கிளிகடி கருவி.

தாமும்ஒரு பயப்படார் பயப்படுவார் தம்மையுந்தம் போற்-செய் வார்போல், காமர்அளி நுகராமல் கழிப்பூமேல் அடுக்கலுறுங் கணிதேன் ஊற்றும், ஆமிதனை அறிந்துவெகுண் டெழுந்தென்ன அணிவேங்கைக் குடுமி தன்னை, நாமநீள் கடல்பவளக் கரநீட்டிப் பற்றியிடு நலமும் ஓர்பால். 133

தாமும் அறஞ் செய்யாராய், செய்வோரையும் தம்மைப்போல ஆக்கும் உலோபர் போல, அழகிய வண்டு நுகராதவாறு உப்பங்கழியி லுள்ள மலர்களில் மலையிலுள்ள வேங்கை மலர்கள் தேனைச் சொரிந்து கெடுக்கும். அதனைப் பொறுது. அச்சம் செய்யும் கடல், பவளமாகிய கரத்தை நீட்டி அவ் வேங்கையின் குடுமி (உச்சி)யைப் பற்றிடும் ஒருபுறம். இது குறிஞ்சி நெய்தல்களின் மயக்கம். நாமம்-அச்சம்.

அலைக்காகம் மலைச்சாரற் பலாச்சுளையைக் கவ்வியெழுந் தரக்-கர் கோமான், சிலைத்தாச ரதிமனையைக் கொண்டகன்று லெனா-வங்கஞ் சேரும் அந்நாள், நிலைப்பான மதில்இலங்கை மிசைத்தா-வும் அனுமனைப்போல் நீள்வால் மந்தி, மலைப்பால்நின் றலைத் தோணி பாய்ந்துழக்கி மீண்டெய்தும் வாழ்வும் அங்கண். 134

நெய்தல்நில நீர்க் காக்கை மலையிடத்துப் பலாவின் சுளையை வாயிற்கவ்விக் கொண்டு, இராவணன் இராமன் மனைவியைக் கைப்பற்றி மீண்டாற்போல மீண்டு மரக்கலமேற் சேரும் அக்காலத்து நிலையுடைய மதில் சூழ்ந்த இலங்கைமேல் தாவும் அனுமனைப் போல நீண்ட வாலை யுடைய குரங்கு மலையினின்றும் மரக்கலத்துட் பாய்ந்து கலக்கி மீண் டடையும் நிகழ்ச்சியும் அவ்விடத்துள்ளது. இதுவும் அம்மயக்கே.

காக்கைக்கு இராவணனும், சுனைக்குச் சீதையும், கலத்திற்கு இலங்கையும்; மந்திக்கு அனுமனும், மலைக்கு மயேந்திரமும் நிகழ்ச்சியில் இடம் பெற்றன. தாசரதி—தசரதன் புதல்வனாகிய இராமன; தத்திதாந்தம. அலை இரண்டும கடல்.

இடைச்சியர்பால் நடைகற்பச் செல்வதெனை வயல்மேவும்
எகினமெல்லாம், படைத்தவளம் பாடியிற்போய் ஆன்பாலை வாய்-
மடுத்துப் பையுள் நீங்கும், மடைத்தலைசூழ் வயல்மகளிர் மொழிபயி-
லப் போவதெனை வனத்துள் வாழும், பெடைக்குயில்போய்ப்பணைக்-
கமுகின் கனிதொண்டைக் கனியென்னப் பேணும் ஓர்பால். 135

மருத நிலத்து வாழும் அன்னங்கள், வளம் நிரம்பிய முல்லைநிலத்தூர்களின் ஆய்ச்சியர்பால் நடை கற்றுக் கொளற்குச் சென்றாலெனச் சென்று, பசுவின் பாலை நிரம்ப உண்டு பசித்துன்பம் நீங்கும். மடை உடுத்த வயல்சூழ் உழத்தியர்பால் மொழி கற்கப் போவதென முல்லை நிலத்துப் பெண் குயில் போய் வயலிடத்துள்ள பாக்குமரத்தின் பழுக்காயைக் கொவ்வைப் பழம் என எண்ணி விரும்பும் இடமும் ஆங்குளது.

கொடும்பரவர் கழியுழக்கக் குதித்தெழுமீன் ஆய்ச்சியர்பாற்
குடத்துள் வீழ்ந்தங், கடும்பயத்தோ டலமருமற் றவர்கடையுந் தயி-
ரோதைக் கலமந் தோடி, ஒடுங்குமுயல் கைதையினுள் அடங்கியங்-
கட் கடலொலிகேட் டுள்ளம் மாழ்கும், கடுங்கருமத் தொடர் அந்-
தோ யாங்குறினும் விடாதென்னக் காட்டும் ஓர்பால். 136

கொடியர் ஆகிய நெய்தல் நிலத்தோர் கழியை வலைகொண்டு கலக்கத் துள்ளி யெழுந்த மீன், இடைச்சியர் பாற்பானையுள் வீழ்ந்து காய்ச்சும் அப்பாலில் மனம் சுழன்று வருந்தும். அப்பெண்டிர் தயிர் கடைதலின் எழும ஓசைக்கு வருந்தி ஓடி ஒடுங்கு முயல் தாழைப் புதருள் அடங்கி, அங்குக் கடலோசையை தொடர்ந்து கேட்டு உள்ளம் வருந்தும். இவற்றால் கொடிய வினையாகிய வலை எவ்விடத்துறினும் அனுபவித்தால் அல்லது கழியாது எனக் காட்டும் ஓர் புறத்து நிகழ்ச்சி.

இது முல்லை நெய்தல்களின் மயக்கம். பயத்தோடு—பயத்தால், இருபொருள் கொள்க. 'அலமரல் தெருமரல் ஆயிரண்டும் சுழற்சி' (தொல்). 'தேளுக்கு அஞ்சிப் பாம்பின் வாய் வீழ்ந்த தொக்கும், இவை.

இடுகும்இடைக் கடைசியர்கள் களைந்தெறிந்த நறுங்கமலம்
இரைக்கும் முந்நீர்ப், படுதிரைமேல் வயங்குதலுங் கடல்முளரி
பூத்ததெவன் பாரீர் என்பார், உடைதிரைநீர்க் கடல்கிளைத்த
துகிர்க் கொடிபோய்ப் பழனமிசை ஒளிரக் கண்டோர், கடிவயலுந்
துகிர்ஈன்ற தென்னென்பார் இப்பரிசு கவினும் ஓர்பால். 137

நுணுகும் இடையினையுடைய உழத்தியர் களை எடுத்த நறிய தாமரை மலர், ஒலிக்கின்ற நீர்த்திரைமேல் விளங்குதலும், கடல் தாமரை மலரைப் பூத்தது என்னே பாரீர் என்று வியப்பார். கரையொடு மோதி உடைகின்ற திரைசூழ் நீர்க்கடலில் தழைத்த பவளக்கொடிபோய் வயலில்

விளங்கக் கண்டோர் விளக்கமமைந்த வயலும் பவளக் கொடியை ஈன்றது என்னை என்பார். இவ்வியல்பு அழகு செய்யும் ஓர்புறம்.

மருதத்தொடு நெய்தலும், நெய்தலொடு மருதமும் மயங்கும் மயக்கம் இதனாற் கூறப்பட்டது.

இடை—நடுஇடம்; அரை. சிற்றிடம் என்னும் பொருளும் ஆம். 'நுதல் அடி நுசுப்பென மூவழிச் சிறுகி' (கலித்-)கடி-நீரைக்காப்புக்கொண்ட.

வரைப் புறத்துப் பசுங்கிளியுங் கான்குயிலும் உடன்ஆன்பால் மடுத்துப் புட்கள், இரைத்தெழூஉம் பணைமருதச் சேக்கைமிசை எதிரெதிருற் றிசைகள் பாடும், நிரைக்குடுமி வரைப்பகடும் வயற்-பகடுங் கரும்பொடித்து நெரித்து மாந்தித், திரைத்தடநீர்க் கான்-யாற்றுத் திளைத்தாடி உடனுறங்குஞ் செவ்வித் தோர்பால். 138

மலையிற் பயிலும் பசிய கிளியும், முல்லை நிலத்துக் குயிலும் ஒருங் கிருந்து பசுவின் பாலைப் பருகிப் பறவைகள் ஒலிக்கின்ற பூக்களையுடைய தழைத்த மருத மரமாகிய தங்குமிடத்திலிருந்து மாறி மாறிக் கூவும்.

களிறுகளும், கடாக்களும், கரும்புகளை ஒடித்து நெரித்துச் சுவைத்துக் காட்டாற்றில் படிந்து மூழ்கி ஒரு சேரத் துயில் கொள்ளும் இயல்பிற்று ஓர்புறம்.

குறிஞ்சி, முல்லை, மருதங்களின் மயக்கம் கூறப்பட்டது. கிளி, பகடு—குறிஞ்சிநிலக் கருப்பொருள். குயில், கான்யாறு—முல்லை நிலக்கருப் பொருள். பால், புட்கள், மருதம், பகடு கரும்பு—மருதநிலக்கருப்பொருள்.

புறவகத்த குமிழ்ம்போதுங் கழிக்கானல் கைதைதரும் பொலங் கேழ்ப் பூவுந், தறைபொறுத்த வரைதோன்றித் தண்மலர்மேல் இருபுடையுந் தாங்கி நின்றே இறைவனுக்காம் மலர்மோந்தாள் மூக்கரிந்து சுரிகையுடன் ஏந்தி அந்நாள், முறைநிறுத்த செருத் துணையார் நின்றநிலை காட்டிவளம் முகிழ்க்கும் ஓர்பால். 139

முல்லை நிலத்திலுள்ள குமிழ மலரையும், கடற்கரைச் சோலையி லுள்ள தாழையின் பொன்னிற மலரையும் நிலம் சுமந்த மலை தன்னிடத்து மலர்ந்த செங்காந்தள் மலர்மேல் இருபக்கமும் தாங்கி நின்று, சிவபெரு மானுக்குரிய மலரினை மோந்து தீங்கிழைத்த அரசரது பட்டத்துத் தேவியின் மூக்கினை அரிந்து அவ்வுடை வாளொடு தமது கையிலேந்தி, அக்காலத்தில் வழிபாட்டு முறையை நிலைபெறச் செய்த செருத்துணை நாயனார் அன்பின்வழி உறுதி பெற நின்ற நிலையை உணர்த்திச் செல்வ நிலையைப் புலப்படுத்தி நிற்கும் ஓர்பால்.

குறிஞ்சி, முல்லை, நெய்தல்களின் மயக்கம் இது. 'தறை' எதுகை நோக்கித் திரிந்தது. 'தறையிடைப் படுத்துகின்றேன்' (திருத்தொ-எறி-).

விண்முட்டுங் குடுமிவரைத் திகிரிபடும் வெண்முத்தும் வேலைச்-சூழல், மண்முட்ட நறும்புன்னை உகும்அரும்புந் தலைமயங்கி அவற் றுட் சேர்ந்த, தண்முட்டை இதுவென்னப் பகுத்தறிய வல்லாது தளர்வு கொண்டு, கண்முட்ட வளம்படைத்த வயல் அன்னந் துயர்-கூருங் காட்சித் தோர்பால். 140

வானுலகை அளாவிய சிகரத்தையுடைய மலையிலுள்ள மூங்கிலிற் ரோன்றிய வெள்ளிய முத்தமும், கடற்கரை வைப்பிற் பொருந்த நறு மணம் வீசும் புன்னை மரங்கள் சொரிந்த அரும்பும் இடங்களின் மயங்கிக் கிடத்தலால் அவற்றோடு கலந்த குளிர்ந்த தம்முடைய முட்டைகள் இவை என்று பகுத்தறிய இயலாமையால் தளர்ச்சி கொண்டு நோக்கு வோருடைய கண்கள் புல்லெனும்படி வளம படைத்த மருத நிலத்து அன்னம் துயர்மிகும் காட்சியையுடையது ஓர்புறம்.

குறுஞ்சுனையிற் களிவண்டு சுழன்றாடுங் கான்குயில்கள் குரை-நீர்ப் புன்னை, தொறும்பொதுளுங் கருங்கொடிதன் குடம்பையிற்-போய்க் கருவுயிர்த்துச் சுலவி மீண்டு, உறும்பிரச மலர்க்காஞ்சிச் சினையேறி ஒளியிருந்து நாடிக் காலம், உறுந்துணையும் இனிதுறை-யும் உலவாத வளங்காட்டி ஓங்கும் ஓர்பால் 141

குறுஞ்சுனையிற் கள்ளுண்டு களித்த வண்டுகள் சுழன்று திரியும் முல்லைநிலக் குயில்கள், ஒலிக்குங் கடற்கரையில் வளர்ந்த புன்னை மரங்கள் தோறும் செறியும் கரிய காக்கையின் கூட்டிற் சென்று முட்டையை ஈன்று சுழன்று அங்கு நின்றும் திரும்பி நறுமணங்கமழும் தேன் சிந்து மலர்களுடைய காஞ்சி மரத்தின் கிளையிலேறி ஒளித்திருந்து ஆராய்ந்து, பார்ப்பாகுங்காலம் வாய்க்குமளவும இனிதாக வசிக்குங் கெடாத வளத் தைக் காட்டி உயர்ந்து தோனாறிற்கும்.

முல்லை, மருதம், நெய்தல்களின் மயக்கம் கூறிற்று இப்பாடல்.

குறுஞ்சுனையும், குயிலும். முல்லை நிலத்தன. குரைநீர், (கடல்) புன்னை, கொடி (காக்கை) நெய்தல் நிலத்தன, காஞ்சி, மருதநிலக் கருப் பொருள்.

கறிக்கொடியுந் துகிர்க்கொடியும் நெடுவயலைப் பசுங்கொடியுங் கமழ்தேன் மௌவல், வெறிக்கொடியும் நாற்றிசையுந் தாய்ப்படர நடுவளர்ந்த விரைக்குராமேல், கிறிக்கொடிய பெருங்காற்றாற் பல்-காலும் அசைபாவைக் கிளர்ச்சி வாள்கண், மறிக்கொடியுங் கூத்-தியர்செய் கயிறுவிசி கழைக்கூத்தின் வயங்கும் ஓர்பால். 142

மிளகுக்கொடியும், பவளக்கொடியும், நெடிய வயலையின் பசிய கொடியும், தேன் கமழும் மல்லிகையின் மணமிக்க கொடியும் நாற்றிசை யினும் தாவிப்படர நடுவில் வளர்ந்த மணம் உடைய குராமரத்தின்மேல் கிறியென்னும் ஒலிக்குறிப்பையுடைய மிகப்பெரிய காற்றால் பன்முறையும் அசையும் அம்மரத்தின் காயாகிய பாவையின் தோற்றம் கண்ணுகிய மானுக்கு வாள் தோற்கும் கழைக் கூத்தாடு மகளிர் ஆடும் கயிறு கட்டிய கழைக்கூத்தைப்போல விளங்கும் ஓர்புறம்.

மிளகு, பவளம், வயலை, மௌவல் ஆகிய இந்நான்கு கொடிகளும் முறையே குறிஞ்சி, நெய்தல், மருதம் முல்லை ஆகிய இந்நான்கனையும் தமக்கு இடமாக உடையன. குரா பாலையது.

இனையநா னிலம்அடுத்த வளாகமெலாம் பெருங்குடிகள் இயல்பின் ஓங்கித், தினையளவும் முறைபிறழாத் தொண்டைநாட் டணிமுழுதுந் தெரித்துக் கூறக், கனைதிரைநீர்க் கடலாடை நிலவரைப்பின் யாருளரோ கற்ப நாட்டுந், தனைநிகர்பா தலதலத்தும் அன்னதே யெனிற்பிறிது சாற்று மாறென். 143

இத்தன்மைய வளங்களையுடைய நால்வகை நிலங்களும் சூழ்ந்த இடப் பரப்புகளிலெல்லாம் செல்வ மிக்க குடிகள் மேம்படுதலால் தினைத் தனையும் முறைபிறழாத தொண்டை நாட்டின் சிறப்பு முழுதும் வரிசைப் படுத்திக் கூற, ஒலிக்கின்ற கடலை ஆடையாகவுடைய நிலப்பரப்பின் யாவருளர்? கற்பக நாட்டினும், பாதல உலகத்தும் அவ்வியல்பே என்னில், வேறு விரித்துச் சொல்ல யாதுளது என்க.

எந்நாட்டுப் பெருவளமும் எவ்வெவகோட் பாடுகளும் இயம்ப வல்ல, பொன்னாட்டுப் பொன்செருக்கும் பல்நாக்குப் பணிச்செருக்கும் போக்கும் இந்த, நன்னாட்டைப் புலவரெலாந் தொண்டைநாடெனவுரைப்பர் ஞால மங்கை, தன்னாட்போ தனையமுகக் கனிவாயாங் காரணத்தின் சார்பாற் போலும். 144

எந்த நாட்டிலுள்ள எப்பெரு வளங்களையும் எவ்வெச்சமயக் கொள்கைகளையும் எடுத்துச் சொல்லவல்ல விண்ணுலகத்துத் தேவகுருவின் சொல் திறனையும், பலநாப் படைத்த ஆதிசேடனின் தருக்கையும் போக்குதற்கு உரிய புலமையும், செல்வ நிலைமையும் உடைய நல்ல நாட்டைப் புலவர் யாவரும் தொண்டை நாடெனக் கூறுவர். நில மகளுடைய அன்றலர்ந்த தாமரை மலரை ஒத்த முகத்திலுள்ள (தொண்டைக்கனி) கொவ்வைக் கனி போன்ற வாயாம் காரணத்தினாற்போலும்.

கரிகாற்சோழனுக்கு நாக கன்னிகையிடத்துப் பிறந்த புதல்வன, தன் தந்தையை ஆதொண்டைக் கொடிசூடி அடைந்து ஆதொண்டைச் சக்கரவர்த்தி, தொண்டைமான் எனும் பெயர் பெற்று, அவனால் ஆளப் பெற்றமையால் தொண்டை நாடென இந்நாட்டிற்குப் பெயர் அமைந்தது.

சலதியுடைச் சேயிழைக்குத் தமிழ்நாடே மதிமுகமாத் தமிழ்நாட் டுள்ளு, மலர்புகழ்த்தண் டகநாடே கனிவாயா அதனுள்ளும் சாதி பேதங், குலவும்ஆ ருயிர்க்கெல்லாந் தத்தமது மரபொழுக்கங் குடங்கை சேர்ஆ, மலகமெனத் தேற்றுதலின் நாவெனலாங் காஞ்சிநகர் வண்மை சொல்வாம். 145

கடலை உடையாகக் கொண்ட நிலமகட்குத் தமிழ்நாடே மதிக்கத் தக்க முகமாகவும், அத்தமிழ் நாட்டினும் விரிந்த புகழையுடைய தண்டக நாடே கொவ்வைக் கனிபோலும் வாயாகவும், அத் தண்டக நாட்டிடத்தும் பல சாதி பேதங்களாக விளங்குகின்ற அரிய உயிர்களுக்கெல்லாம் தத்தமரபினையும் ஒழுக்கத்தினையும் உள்ளங்கை நெல்லிக்கனி போலத் தெளிவித்தலால் நாவென்று சொல்லப்படும் காஞ்சிபுரத்தின வளமையை இனிக் கூறுவாம்.

ஆகத் திருவிருத்தம்—172.

# திருநகரப் படலம்

அறுசீரடி யாசிரிய விருத்தம்.

கச்சிமா நகர்ஓர் தட்டுங் கடவுளர் உலகோர் தட்டும்
வைச்சுமுன் அய்னுர் தூக்க மற்றது மீது செல்ல
நிச்சயம் முறுகித் தாழ்ந்து நிலமிசை விழும்இவ் வூரை
இச்சகத் தூர்க ளோடும் எண்ணுதல் மடமைப் பாற்றே. 1

பிரமன், பெருமை அமைந்த கச்சி நகரைத் துலையின் ஓர் தட்டிலும், தேவருலகைப் பிறிதொரு தட்டிலும் வைத்து முன்னோர்கால் தூக்கிப் பார்க்க அவ்விண்ணுலகு கனமின்மையால் மேலே செல்லும்படி, மிகத் தாழ்ந்து நிலமேல் விழும் இவ்வூரை இவ்வுலகில் உள்ள நகரங்களொடும் வைத்து எண்ணப்புகுதலும் அறியாமையின் பாலது.

அயன், பிறவாதவன் என்பது பொருள். முன், எனவே அறிந்தபின் எண்ணுதலும் நிச்சயம் மடமைப்பாலது. அயோத்தி, மதுரை, மாயை என எண்ணுதல். சகம்-அழிவது; 'ஈறுசேர் பொழுதினும் இறுதியின்றியே, மாறிலாதிருந்திடு வளங்கொள் காஞ்சி' என்பது கருத்து.

கவினெலாந் திரட்டிக் காஞ்சிக் கடிநக ராக்கிக் கஞ்சத்
தவிசினோன் அதன்பால் நுட்பத் தொழில்செயச் சார்ந்த காலைப்
புவியிடைக் கழிந்த சேடம் பொற்பவே றெடுத்து விண்ணு
டவிர்தரச் செய்தான் போலும் அன்றிவே றுரைப்ப தென்னோ. 2

தாமரை மலரை இருக்கையாகவுடைய பிரமன், எவ்வயின் அழகையும் ஒன்று கூட்டிக் காவலைக் கொண்ட காஞ்சி நகராக்கி, நுட்பத்தொழிலில் புவியிடை உதிர்ந்த எஞ்சிய அழகால் ஆக்கப் பெற்றதே விண்ணுலகெனலாம் போலும், அன்றி வேறுரைப்பதெவனுளது.

ஆதிநாள் முக்கண் எம்மான் அயன்றனைப் படைத்து வேதம்
ஓதுவித் தருளின் நோக்கி உலகெலாம் படையென் றேவும்
போதிது பார்த்திவ் வாறு படையெனப் புகன்று வைத்தான்
ஈதென லாகுங் காஞ்சி என்னுரை யளவைத் தாமே. 3

சிவபெருமானார் படைப்புக்காலத்தில் பிரமனைப் படைத்து, அறிவு நூல் கொளுத்தி, அருட் பார்வை வைத்துக், காஞ்சிபுரத்தைச் சிருட்டி செய்து 'இதுபோலப் படைப்பாய் ஆக' என்றருளினர். ஆகலின், பிரமன் படைப்பினைக் கடந்த இத்தலத்தின் பெருமை என்னுரை அளவையின் அடங்குமோ?

இந்நகர் நோக்குந் தோறும் இமையவர் தமது நாடு
நன்னரென் றிருந்த தம்மைத் தாங்களே நாணி வைவர்
முன்னொரு சமயந் தன்னைப் பொருளென முற்றி நின்றோர்
பின்னர்வான் சைவம் எய்தப் பெறின்அவர் பேசு மாபோல். 4

தேவர் காஞ்சியைக் காணுந்தோறும், காணுந்தோறும் தம் பொன்னுலகையே பெரிதென மதித்தமைக்கு நாணுவர்; தம் அறிவை இகழ்வர். முன் ஒரு சமயத்தைப் பொருளாகப் போற்றி உறைத்து நின்றோர் பின்னர் உண்மையாகிய சைவ சமயத்தை, முன்னைச் சிவபுண்ணியத்தால் எய்தப்பெறின் கடைப்பிடித்த சமயத்தையும் தம்மையும் வெறுத்துக் கொள்ளுதல் போல.

திருநாவுக்கரசு நாயனார் திருமுறைகளை ஓதுவோர் இவ்வுண்மையை உணரலாம். 'பெறின்' என்பது பெறலருமை குறித்து நின்றது. நன்னர்-(நன்மை) நனமை உடையதனை நன்மை என்றார். 'தகுதியுடையதனைத் தகுதி' (திருக்-111) என்றாற்போல.

நீடும்இந் நகரம் மன்னி நெடுந்தவம் முயல்வோர் வான
நாடர்தம் பதமுங் கஞ்சன் நாரணன் வலாரி வைப்பும்
பாடிரி கான்ற சோறுக் காண்பதிப் பதியின் வண்மை
கோடியில் ஒருகூ றெவ்வா அவையெனக் குறித்தே யன்றே. 5

நிலைபெறும் இந்நகரில் நிலைபெற்றுப் பெரிய தவத்தினை முயல்வோர் ஏனையராகிய வானோர் உலகையும் (தாமரையோன்) பிரமன், மால், இந்திரன் இன்னோர் பெருமபதங்களையும் பெருமை திரிந்த உண்டுமிழ்ந்த சோறு போல மதிப்பதற்குக் காரணம் இப்பதியின் வளமையில் கோடியில் ஒருகூறும் ஒப்பாகா அவைஎனக் கருதியே ஆகும்.

## புறநகர் சோலை

எழுசீரடி யாசிரிய விருத்தம்

சுரும்புகால் உழக்க முகையுடைந் தலர்ந்து துளித்ததீஞ் சுவை-
மதுப் பிலிற்றும், அரும்பெறற் சோலை மீமிசைக் கருவி முகிற்-
குழாம் அடர்வபாட் டளிக்கு, விரும்புதேன் அளியாக் கற்பக
நாட்டை வெல்லுவான் வருவதோர்ந் தஞ்சித், தரும்புகழ் வலாரி
ஊர்தியைச் செலுத்தித் தடுத்திடை மடக்குதல் மானும். 6

வண்டுகள் காலால் மிதிக்க அரும்புகள் முருக்கு உடைபட்டு மலர்ந்து இனிய தேனைச் சிந்தும சோலைமேல் தொகுதியையுடைய மேகக் கூட்டம் நெருங்குதல், யாவரும் விரும்பும் பாட்டிசை கேட்டு வண்டிற்குத் தேனைச் சொரியாத கற்பகச் சோலை அடுத்த விண்ணுலகை வெல்ல வருவதறிந்து அஞ்சி இந்திரன் தனக்கு வாகனமாகிய மேகத்தைச் செலுத்தி இடையே தடுத்து மடக்குதலை ஒக்கும்.

கருவி-மின்னு, முழக்கு முதலிய தொகுதி. மேக மண்டிலத் தணவுஞ் சோலையும், கற்பக மரத்தில் வண்டு மொய்யாமையும் பெறப்பட்டன.

நறவம்ஊற் றெடுப்பச் சிறகர்வண் டிமிரும் நளிபொழில் இடும்-
பைகூர்ந் தழுகு, குறைபடப் பொதிந்த குயின்களை வல்லே குதித்-
தெழுந் துதைத்துதைத் தகற்றி, நிறைபுனல் தடத்துப் பிறழ்-
தருங் கிழமை நெட்டிள வாளைமீன் றனக்குத், துறைதொறுங்
கைம்மாறெனக்கனிசெழுந்தேன்சொரிவன நெடுமரப்பொதும்பர்.

தேன் இடையறாது பெருக வண்டொலிக்கும் குளிர்ச்சி பொருந்திய சோலை, துன்பம் மிகுந்து அழகு குன்ற மூடிய மேகங்களை விரையத் துள்ளி எழுந்து பல்கால் உதைத்து அகற்றி நிறைந்த நீர் நிலையில் புரளுகின்ற உரிமையுடைய நீண்ட இளவாளை மீன்களுக்குத் துறைகளிலெல்லாம் பின்செய் உதவியெனப் பழங்களையும், தேனையும் அவ்விளமரச் செறிவு மிக்குச் சொரிவன.

குயின்—மேகம். கைம்மாறு — திருப்பிச்செயல். கை — செயல். மாறுதல்—எதிர்தல்.

வண்டலாட் டயரும் வாள்மருள் நெடுங்கண் மங்கையர் நெரி-சுரி கூந்தற், கொண்டலைக் காணுந் தொறும்தொறும் அவர்தங் கோமளச் சாயலுக் குடைந்து, தொண்டுபூண் டெதிர்நின் றாடுவ தேய்ப்பத் தோகைமா மயில்நடங் குயிற்றுந், தண்டளிர் துவன்றிப் புதுநறாத் துளிக்குந் ததைமலர்ச் சாகையம் பொதும்பர். 8

தண்ணிய தளிரும், செறிந்த மலரும் கொண்டு தேனைத் துளிக்கும் கிளைகளையுடைய இளஞ் சோலையில் விளையாட்டைச் செய்யும் மகளிர் கூந்தலாகிய மேகத்தைக் காணுந்தோறும் அம்மெல்லியலார் சாயலுக்குத் தோற்று ஏவல் பூண்டு எதிர் நின்று ஆடுதலை ஒப்பக் கலாபத்தையுடைய மயில் நடஞ்செய்யும்.

மருள்—உவம வுருபு. துவன்றி—ததைந்து; செறிந்து.

வாம்பெருந் திரைய தடம்புடை யுடுத்த வளம்பொழிற் சாகை-கள் தோறுந், தீம்புனல் குடையும் மாதரார் முன்னாள் செறித்த-பட்டாடைபொன் அணிகள், பூம்புன லகத்தில் தோன்றலும் இளை-யோர் புனல்அர மகளிரென் றஞ்சிக், கூம்பிய கரத்தர் அந்நலார் நகைப்பக் குலைமிசை நோக்கிவெள் குவரால். 9

குளங்களின் மருங்கு சூழ்ந்த சோலையிற் கிளைகள் தொறும், மகளிர் முன்னாள் சேர்த்த பட்டுடைகளும், அணிகலன்களும் அந்நீரில் தோன்ற, நீரரமகளிர் என்றெண்ணி அஞ்சி இளைஞர் கரங்கூப்பி நிற்க, நீராட வந்த மகளிர் கண்டு நகைப்பக் கரைமிசை நோக்கி நாணுவர்,

கொங்கவிழ் பொதும்பர்க் கொழுமுகை யுடைந்து குளிர்மதுச் சொரிதலின் ஆழ்ந்த, பங்கயச் சேக்கை மீமிசை எகினம் பைப்பய மேல்நிவந் தெழுவ, பொங்குவெம் பாவக் கருமுருட் டமுனல் புணரியுள் சிலையுடன் அமிழ்ந்தும், எங்கள்வா கீசர் அஞ்செழுத் தருளால் எழுந்துமேல் வயங்குதல் மானும். 10

நறுமணத்தொடும் மலர்கின்ற மலர்களைக் கொண்ட சோலையில் செழுவிய அரும்பு முருக்கவிழ்ந்து தேனைச் சொரிதலினால் கீழுள்ள குளத்தில் நீருள் அழுந்திய தாமரைப் பூவாகிய இருக்கைமேலிருந்த அன்னம் மெல்ல மெல்ல மேல் ஏறி எழுதல், மிகக்கொடிய பாவச்செயலை

மேற்கொள் சமணரால் கல்லுடன் பிணித்து கடலில் அமிழ்த்தப் பெற்றும் எங்கள் திருநாவுக்கரசர் பெருமானுர் அஞ்செழுத்தின் துணையால் மேலெழுந்து விளங்குதலை ஒக்கும்.

குளிர்—தங்கிய, கார் அமணர்—இருண்ட அறிவினையுடையவர். முருடு—வன்மை 'வன்பராய் முருடு ஒக்கும் என் சிந்தை' (திருவா) இருப்பை முதலிய மரங்களில் காணப்பெறும் முடிச்சு. இங்குத் திருநாவுக்கரசர் தம் கருணை வடிவம் கண்டும் தீங்கிழைக்கும் திண்மை.

### யானைக் கூடம்

கலி விருத்தம்

முறைமுறை பனைக்கைநீர் முகந்து வாய்மடூஉ
நிறைதடங் குறைதட மாக்கு நீண்டவெண்
பிறைமருப் பொருத்தல்மா மதப்பெ ருக்கினல்
குறைதடம் நிறைதட மாக்குங் கொள்கைத்தே. 11

களிறு, பனையை ஒத்த துதிக்கையால் நீரைப் பருகி நிறைந்த நீர் நிலையைக் குறைபடுத்தும்; இனி, மதநீர் பெருக்கிக் குறைந்த நீர் நிலையை நிறைபடுத்தும். இவ்வாறு மாறி மாறி நிறைந்தும், குறைந்தும் காணப் பெறும் கோட்பாட்டினை உடைத்து அத்தடம்.

ஒருத்தல்–யானைத் தலைவன் (கலி–46: 3, நச்) குறை தடம், நிறை தடம் என்பன, இடத்து நிகழ் பொருளின் தொழில் இடத்தின்மேல் ஏற்றப்பட்டது.

தாம்உறை இடந்தரி யலர்கட் கீந்தவர்
தாம்உறை இடங்களில் தங்கி ஊக்குலந்
தாம்உறப் பரிவருத் தனைசெய் வேழங்கள்
தாம்முறை முறைதிரி தண்டம் எண்ணில. 12

யானைக் குலத் தலைவர்கள் தம் குழாத்தொடும் தங்குகின்ற காட்டினைத் தம் அரசனது பகைவர்க்காக்கி, அவர் அரசு செய்கின்ற நாட்டிடத்தைத் தாம் சுற்றத்தொடும் கைக்கொண்டு இங்ஙனம் மாற்றிக் கொண்டு மாறி, மாறித் திரிகின்ற யானை செல்லும் வழிகள் அளவில்லன உள்ளன.

தண்டம்–யானை செல்வழிகள். பரிவருத்தனை-மாற்றிக்கொள்ளல்.

மழைப்புனல் தங்கள்மேல் ஊற்று மாமுகில்
உழைச்செல வெகுண்டெதிர் இறைப்ப தொப்பநீள்
புழைக்கையில் நிறையநீர் முகந்து போர்மதத்
தழைச்செவிக் கரிகள்விண் தலத்து வீசுவ. 13

போர்த் தொழிலையும், மதப்பெருக்கமைந்த காதுகளையும் உடைய யானைகள் தமமேல் நீரைச் சொரிகின்ற கரிய மேகங்களிடத்துப் பகை கொண்டு எதிர்செல உட்டுளை பொருந்திய துதிக்கையால் நிரம்ப நீரை முகந்து விண்ணிடத்து வீசா நின்றன.

கறையடிச் சுவடெனுங் கனக வட்டில்கள்
நிறையவாக் கியமத நீரைச் செல்வர்போல்
சிறையளிக் குலமெலாந் தெவிட்ட உண்டுவாழ்ந்
தறைபெரு வளத்தன ஆம்பல் வீதியே. 14

யானை செல்லும் வீதிகள், உரலை ஒத்த தம்முடைய காற்சுவடு என்னும் பொற்கிண்ணங்களுள் வழிய ஒழுக்கிய மதநீரை வண்டின் குழாங்கள் செல்வரைப் போலத் தேக்கெறிய வுண்டும் வாழ்ந்தும் கழிக்கின்ற பேசப்பெறுகின்ற பெரிய வளத்தையுடையன.

கொடையினிற் கீழ்ப்படுங் கொண்டல் யாவையுந்
தடைபடச் சிறையிலிட் டாங்குச் சார்கடு
நடை இரு முறச்செவி நான்ற வாய்க்களி
றடையவும் பிணித்தன அளவில் கூடமே. 15

கைம்மாறு கருதாது கொடுக்கும் பண்பிற் குறும் மேகங்கள் அனைத்தையும் போக்கொழியச் சிறை வைத்தாற்போல விரைந்த செலவினையும் இருபெரிய முறம்போன்ற காதுகளையும், தொங்கிய வாயினையும் உடைய களிறுகள் முற்றவும் அளவில்லாத யானைகட்டு மிடங்கள் அகப்படுத்தன.

அவையுடையோர் மேகத்தின் மேம்பட்ட கொடையினர் என்க

## குதிரைப் பந்தி

கரிஉமிழ் விலாழியுங் காய்சி னக்கடும்
பரிஉமிழ் விலாழியும் பாய்ந்து சேறுசெய்
தெருவெலாம் அந்நலார் சீற டிச்சுவ
டுருகெழு தாமரைத் தோற்றம் ஒக்குமே. 16

யானை உமிழும் வாய்நுரையும், சுடுகின்ற கோபமும், கடியநடையும் உடைய குதிரை உமிழும் வாய் நுரையும் பரவிச் சேறுபடுகின்ற தெருக்களிலெல்லாம் அந்நகர மகளிர் தம் சிற்றடி உற்ற சுவடு (பதுமம்) ரேகை பதிதலான் வடிவு கெழுமிய தாமரையின் பொலிவினை ஒத்துநிற்கும்.

சுலவுகொய் யுளையடிச் சுவடு தோறும்மேல்
கலனையின் உக்கசெம் மணிக திர்ப்பன
பலசுடர்த் தகழிகள் பரப்பி வைத்தெனக்
குலவுநல் வளத்தன குந்த வீதியே. 17

மண்டிலமாய்ச் செல்கின்ற கத்தரிக்கப் பெற்ற பிடரிமயிரினையுடைய குதிரையின் அடிச்சுவடுகளுள் எவ்விடத்தும் மேலிடுதவிசினின்றும் உதிர்ந்த மாணிக்கங்கள் கதிர் விடுதல், சுடரையுடைய பல அகல்கள் (தகழி) பரப்பிவைத்தாற் போல விளங்குகின்ற நல்லவளத்தன ஆகும்.

மல்லரை மயில்களை வான ரங்களைப்
புல்லிய முயல்களைப் பொருச ரங்களை
வல்லவா புறக்கொடை கண்ட வான்கதிப்
பல்லியல் புரவியின் பந்தி ஆயிரம். 18

மல்லரையும், மயில்களையும், குரங்குகளையும், சிறிய முயல்களையும், அம்புகளையும் வல்லபடி அவற்றைப் புறங்கண்ட பெரியகதிகளையுடைய பல இலக்கணமமைந்த குதிரையின் பந்திகள் அளவில்லாதன.

மதக்கரி தனைமுயல் வயங்கொள் காதையைப்
புதுக்கவீங் கிருளொளிப் பொலிவைப் பற்றியீர்த்
ததிர்ப்பதென் றுளங்கொளக் கரிய வாங்குர
கதத்தொகை பற்றுபொன் தேர்க ணக்கில. 19

மதத்தால் செருக்கும் ஆண் யானையை முயல் வெற்றிகொண்ட பழைய கதையான் வரும் விம்மிதத்தைப் புதுப்பிக்கச் செறிந்த இருள் ஒளிமிகுதியைப் பற்றி ஈர்த்து ஆரவாரியா நின்றது என மனங் கொள்ளும்படி கரிய குதிரைகள் பற்றி ஈர்க்கும் பொற்றேர்கள் கணக்கில ஆயின. அதிர்வு—நடுக்கம். குரகதம்—குதிரை.

எரிமணிச் சோதியுள் மூழ்கி ஈர்த்துச்செல்
பரிகளைக் காண்கிலர் பார்த்துச் சூரன்ஊர்
திருவுடை இந்திர ஞாலத் தேர்கொல்என்
றுருகெழச் செல்லுதேர் உலப்பில் வீதியே. 20

தேரிற் பதித்த மாணிக்கங்களின் பேரொளியுள் மூழ்குதலின் இழுத்துச் செல்லும் குதிரைகள் காணப்படாவாய் அத்தேர் மட்டும் காணப்பெற்று, இது சூரபதுமன் ஊர்ந்து செல்லும் 'இந்திரஞாலத்தேர்' கொலோ என அச்சமுறத் தோன்றும் தேர்கள் நீங்குதல் இல வீதிகள்.

எரி—தீ. திரு—குதிரை இன்றிச் செல்லும் தெய்வத் தன்மை. செம்மணி ஒளியுள் செந்நிறக் குதிரைகள் தோன்றுவாயின.

## வீரர் இருக்கை

நால்வகை நிலையினல் பயிலும் நாமவில்
வேல்வளை பலகைவாள் கற்கும் விஞ்சையர்
கோலவான் விஞ்சையர் குழாங்கள் நோக்குபு
சால்பினை வியத்தகு தலைமைப் பாலரே. 21

நால்வகையாக நின்று அச்சந்தரும் வில்லையும், வேலையும், சக்கரத்தையும், கேடகத்தையும், வாளையும் ஏந்தி விஞ்சை (வித்தை) கற்போர், அழகிய வானிடத்து வித்தியாதரர் குழுக்கள் நோக்கிக் கலை நிறைவை வியக்கத்தக்க முதன்மையர். கற்கும் அளவிலே இங்கிலையினர் என்பதும், விஞ்சையரைப் போற்றற்குரியர் விஞ்சையரே என்பதும் அறியற்பாலன.

நால்வகை நிலை: பைசாசம், மண்டிலம், ஆலீடம், பிரத்தியாலீடம். நாம்—அச்சம், ஈறு திரிந்தது.

### தொழில் செய்வோர் இருக்கை

கிம்புரி புரசைகள் கிடுகு கூவிரம்
அம்பொனிற் கலனைகுப் பாய மாதிய
வெம்படை ஏனவும் வேறு வேறுசெய்
பம்பிய வினைஞர்வாழ் இடம்பல் லாயிரம். 22

யானைக் கொம்பிலிடும் பூணும், அதன் கழுத்திலிடு கயிறும், தேரின் மரச்சுற்றும் (சட்டம்), தேர்க் கொடிஞ்சியும், குதிரைமே லிடும் தவிசும், கவசமும் கொடிய படைகள் பிறவும் வெவ்வே று செயல் நெருங்கிய வினை செய்வோர் வாழ் இடங்கள் பல்லாயிரம் ஆவன.

வெள்ளிக்குப்பாயம், (காஞ்சி) எனப் பின்வருதலும் காண்க.

நடைநகம் முதலிய உலவும் நாமநீர்ப்
புடைநகர் வளம்இது புகன்றுந் திங்கள்ஏர்
உடைநக மழைநிகர் ஓதி யார்பயில்
இடைநகர் வளம்இனி இயம்ப லுற்றதே. 23

யானை முதலிய உலவும் அச்சம்தரும் நீர் சூழ்ந்த நகர்ப்புறத்தின் வளம் இதுவரை கூறினோம். சந்திரனது அழகைக் கெடுக்கின்ற விரல் நகங்களும், மேகத்தையொத்த கூந்தலும் உடைய மகளிர் குடிகொண்ட இடைநின்ற நகரின் வளம், இப்பொழுது பேசப்பெறும்.

நடை நகம் — நடத்தலையுடைய மலை எனவே யானையாயிற்று. புகலுதல் — விரும்பிச் சொல்லுதல். 'போரெனிற் புகலும் புனைகழல் மறவர்' (புறநா-)என்புழிக் காண்க.

### இடைநகர்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

குடமுலைக் கெதிரென் றேதுங் குரும்பையை வெகுண்டு மின்னார்
பொடிஇடி உலக்கை மீப்போய்ப் புடைத்தன மீளா முன்னம்
முடிமிசை அதிரத் தாக்கிச் சிந்துமுப் புடைக்காய்த் தெங்கீங்
கிடர்இடர்க் கெதிர்செய் வோரின் வியத்தக எங்கும் ஓங்கும். 24

தென்னைமரம், குடத்தை ஒத்த கொங்கைக்கு நிகர் என்று புலவர் கூறும் தென்னங் குரும்பையைச் சீறி மின்போலு மகளிர் வாசனைப் பொடியை இடிக்கின்ற உலக்கை மேற்சென்று தாக்க அந்த உலக்கை மீளுமுன்பே அவர் அதிர்ச்சி அடையும்படி முடிமேல் தாக்கித் தேங்காயை உதிர்க்கும். இங்கிலவுலகில் துன்பம் செய்வோர்க்கு எதிரே துன்பம் செய்வோரைப் போல எவ்விடங்களிலும் வியப்புற மிக்கு விளங்கும்.

கோல்வளை கறங்கக் கொங்கை அசைதரக் குலையக் கூந்தல்
மேல்அணி கலகல என்ன வியர்வெழ உயிர்ப்பு நீள
வால்வரிப் புனைபந் தாடு மாதரார் செயல்காண் தோறுங்
கால்வரி கழலி னூர்க்குக் காமம்மீக் கூரும் மாதோ. 25

திரட்சியையுடைய வளைகள் ஒலிக்கவும், கொங்கை அசைதரவும், கூந்தல் சோரவும், மேன்மை அமைந்த அணிகலன்கள் 'கல் கல்' என்றொலிப்பவும், வியர்வை அரும்பவும், நெட்டுயிர்ப் பெறியவும் வெண்ணிறம் வாய்ந்த நூலாற் கட்டி அழகு செய்யப்பெற்ற பந்தினை ஆடு மகளிர்தம் செயல் திறனைக் காணுந்தோறும் கழலை யணிந்த வீரர்க்குக் காமம் மேன்மேல் எழும். 'வரிப்புனை பந்தொடு' (திருமுரு.-68-).

தமதுரு நிறத்தை வவ்வுந் தருக்கறிந் தொறுப்பார் போலத்
தமனியந் தகர்த்த சுண்ணம் ஒருவர்மேல் ஒருவர் வீசத்
தமனியச் சுண்ணம் எங்கும் பரந்தன தவழ்த லாலே
தமனிய உலகந் தன்னை அசிப்பன தடந்தேர் வீதி. 26

தம்முடைய வடிவின் நிறத்தைக் கவர்ந்தமையால் தோன்றிய செருக்கினை அறிந்து தண்டிப்பவர்போலப் பொன்னைப் பொடித்து அச் சுண்ணத்தை ஒருவர்மேலொருவர் மாறி மாறித் தூவ அப்பொற்பொடி எங்கும் பரந்து ஒளி தவழ்தலினால், பொன்னுலகை நோக்கித் தேர் செலற்குரிய அரச வீதிகள் எள்ளி நகுவன.

அசிப்பு-பரிகாசச் சிரிப்பு. 'அசிப்ப ஆரியங்கள் ஓதும்' (திருவிசை)

எரிமணி சோதி கால இருள்வர வறியா மாடத்
தரிவையர் கூந்தல் ஊட்டும் அகிற்புகை நாகத் தெய்திப்
பெரிதிருள் விளைப்ப நோக்கும் பெற்றியோர் தட்டுமாறு
மரீஇயின உலகம் என்னே யெனமனம் மருள்வர் அம்மா. 27

தீயொக்கும் ஒளியுடைய மணி, சுடரை உமிழ்தலால் இருள் வருதலை அறியாத மாடங்களில் மகளிர்கள் கூந்தலில் ஈரம் புலர ஊட்டும் அகிலினது புகை விண்ணுலகை அடைந்து பெரிதும் இருளைச்செய்ய அதனை நோக்கும் இயல்பினோர் ஆகிய தேவர்கள் விண்ணுலகும் மண்ணுலகும் நிலைமாறினது யாது காரணமென மனமயங்குவார்கள்.

தேவர்கள் மருளுதல்: எவர்கொல் பண்ணவர்கள் எவர்கொல் மண்ணவர்கள், எதுகொல் பொன்னுல கெனத்தட்டு மாறவும்' (மீனுட். பிள். காப். 11) தட்டுமாற—தடுமாற; அம்மா: வியப்பிடைச் சொல்.

### அகழி

மாற்றவள் பூசை ஆற்றி வரம்பெறு முறைமை கேளா
ஏற்றமார் கங்கை யாளுங் கம்பர்பால் வரத்திற் கெய்திச்
சாற்றருங் கச்சி மூதூர் வலங்கொளுந் தகைமைத் தாய
ஆற்றல்சால் அகழி ஆழம் அகலம்ஆர் அளக்க வல்லார். 28

தனக்கு மாற்றவளாகிய உமையம்மை பூசனையைச் செய்து வரம் பெற்ற முறைமையைக் கேள்வியுற்று உயர்ச்சியமைந்த கங்கை மாது திருவேகம்பப் பெருமானிடத்துத் தானும வரம்பெற அடைந்து புகழ்தற்கரிய காஞ்சி என்னும் பழம்பெரும் பதியை வலங்கொள்ளும் இயல்பினதாகிய வலிமை மிக்க அகழியின் ஆழத்தையும் அகலத்தையும் யாவர் அளந்து கூறவல்லவர்.

கொடிபடு பொதும்பர் சூழ நிரைதிரைக் கரத்தாற் செம்பொன்
நெடுமதில் பொதியப் புல்லுந் தண்கிடங் கிறைவர் ஏவக்
கடல்களே வளைய நோக்கிக் கம்பரை இறுகப் புல்லுஞ்
சுடர்மணிக் கங்கை மானுந் துளித்தநீர் தழும்பு மானும். 29

வண்டுகள் செறிந்த சோலைகள் மருங்குசூழ வரிசைபெற எழுந்த திரையாகிய கைகளால் சிவந்த பொன்னாலாகிய பெரிய மதில்களை இறுகத் தழுவும் குளிர்ந்த நீர்க்கிடங்கு, திருவேகம்பப் பெருமான் கங்கையைப் பிரிந்திருத்தலால் வருந் துன்பத்தைப் பொறுமல் கடல்களையே ஏவ அவை வந்து சூழ்தலை நோக்கிக் கம்பரை இறுகத் தழுவும் மணி அணி கொண்ட கங்கையை ஒக்கும். அவ்வகழி மதில்மேற் றுளித்த நீர் தழும்பினை ஒக்கும்.

திரைஎற்றி தரளம் பாங்கர்த் திரண்டுவால் ஒளிகள் வீசிக்
குரைபுனல் குளிக்கும் வேழக் குழாத்தைவெண் கயமாச் செய்யக்
கரைமிசைக் காண்போர் என்னே இம்மையே கடவுள் தன்மை
புரைதபத் தரும்இத் தீர்த்தம் எனஇறும் பூது கொள்வார். 30

திரைக்கரங்கள் எடுத்து வீசும் முத்துக்கள் பக்கங்களிற் செறிந்து வெள்ளிய கதிர்களை வீசி நீரில் மூழ்கி எழும் கரிய யானைகளை வெள்ளை யானைகளாகச் செய்தலால், கரையில் நின்று காண்போர் மூழ்கிய மாத்திரையே இப்பிறப்பிலே தெய்வத் தன்மையைக் குற்றந் தீரத் தரும் இத்தீர்த்தத்தின் சிறப்பு 'என்னே' என வியப்புறுவார். கைமேற் பயன் தரும் தீர்த்தமென்பது குறிப்பு. 'பின்னை என்ற தருள் செய்வார்' (திருஞா.)

கடம்படு களிநல் யானை குண்டகழ் கலக்கிக் கொட்பத்
தடங்கரை யேறற் கார்த்துத் தாள்தொடர் பிணித்துப் பாகர்
இடம்பட இருபால் ஈர்ப்ப இருங்கடல் அமுதம் உண்ணத்
தொடங்குநாள் சிலம்பு நட்டுச் சுராசுரர் கடைதல் மான. 31

மதநீர் பெருகுகின்ற செருக்கினையுடைய உத்தம இலக்கணமமைந்த யானை ஆழ்ந்த அகழியைக் கலக்கிச் சுழலுதலால், பெரிய கரைமேல் ஏறுதற்கு ஆரவாரித்துச் சங்கிலியைப்பூட்டிப் பாகர் இருமருங்கும் நின்று இழுத்தல், திருப்பாற்கடலில் அமுதம் பெற முயன்ற நாளில் மந்தரமலையை நட்டுச் சுரரும் அசுரரும் கடைதலை ஒத்து விளங்கும்.

மந்தரம் யானைக்கும், (வாசுகி) சங்கிலிக்கும், சுரர், அசுரர், யானைப் பாகர்க்கும் உவமம் ஆம்.

நவமணி கொழித்துப் பொங்கு நளிதிரை அகழி நாப்பண்
கவளமாக் கடத்த யானைக் கணஞ்சுலாய் உழக்குங் காட்சி
உவர்படாப் பௌவம் ஈதென் றுவந்துவந் தெழிலி தெண்ணீர்
சுவறவாய் மடுப்பக் கொட்குந் தோற்றமே யனைய தம்மா. 32

ஒன்பதுவகை மணிகளையும் கரையிற் கொழித்துப் பொங்கா நின்ற செறிந்த அலைகளையுடைய அகழியினடுவில், கவளங்கொள்ளும் பெரிய மதத்தையுடைய யானையின் கூட்டங்கள் சுழன்று உழக்கும் தோற்றம், மேகங்கள் உப்பமையாத கடலிது வென்று மகிழ்ந்து வந்து தெள்ளிய நீர் வற்றப் பருகச் சுழலும் தோற்றத்தை ஒத்திருந்தது.

இத்தகை அகழி யென்னும் இதுவும்ஓர் கடலே யாக
அத்திற விரட்டி யென்ற தேழென அறைவர் மேலோர்
தத்தலைக் கடைக்கால் வட்டச் சலதியும் இஃதும் மன்றச்
சுத்தநீர்க் கடலென் றெண்ணி ஒருமையின் தொகுத்தார் போலும்.

அகழி யென்னும் பெயருடைத்தாய் இதுவும் ஒரு கடலாக, அது காரணமாக (நால் இரட்டி) எட்டென்றது ஏழென்று கூறுவர் அறிவின் மிக்கோர். தத்துகின்ற அலைகளையுடைய, கூறுங்கால் கடையில் வைத் தெண்ணப்படும் சுத்த நீர்க்கடலும் இவ்வகழியும் சுத்த நீர்க்கடலாக லின் சாதியொருமையால் ஒன்றாக்கிக் கடல் ஏழென வகுத்தனர் போலும். அதன்; அன்சாரியைதொக்கது. எழுகடல்: உவர் நீர், பால், தயிர், நெய், கருப்பஞ்சாறு, தேன், நன்னீர் என்பன.

புடைபயில் பொதும்பர்த் தேனும் புனல்மலர்த் தேனும் பாய்ந்து
விடையவர்க் குமையாள் ஆட்ட வரும்மது வேலை யொக்கும்
குடநிகர் செருத்தல் மேதி கொட்புறச் சொரிந்த பாலால்
உடைதிரை அகழி தீம்பால் அளக்கரும் உற்ற லொக்கும். 34

நிலம், நீர், ஆகிய இருவகை மலர்த்தேனும் பாய்ந்து, உமையம்மை சிவபிரானுர்க்குத் திருமுழுக் காட்டத் தொகுத்த மதுக்கடலை யொக்கும் அகழி; புனிற்றெருமை சுழன்று திரிய மடி சுரந்த பாலால்அவ்வகழி பாற்கடலும் அங்குற்ற தொக்கும்.

நிலப்பூ, கோட்டுப்பூ, கொடிப்பூ ஆகிய மூவகையைப் பொதும்பராற் கொள்க,

பழமுதல் பொருள்கள் விற்கும் பாவையர் நாளும் அந்திப்
பொழுதின்அக் கலன்க ழீஇய வண்டலால் புனற்கி டங்கு
வழிபடும் உமையாள் எந்தைக் காட்டுமா வியங்கள் ஒன்றுங்
கழிவுறு சூழத் தேக்கிக் கிடந்ததே கடுக்கும் மன்னே. 35

பழங்கள் முதலிய பல்பொருள்களை பகல் முழுதும் விற்கும் மகளிர் நாடொறு மாலைக்காலத்தில் பாத்திரங்களைக் கழுவிய சேற்று நீரால் சூழ்ந்த அகழி வழிபாடு செய்யும் காமாட்சி அம்மையார் எமக்குத் தந்தையாகிய சிவபெருமானுக்குத் திருமுழுக்கு ஆட்டிய நிர்மாலியங்கள் சிறிதும் பெயராது திரண்டு கிடத்தலை ஒக்கும்.

இவ்விருபாடல்களானும் இறைவனுக்குச் செய்யும் பூசனையில் பொருட் குறை (உலோபம்) இன்றிச் செய்க எனக்குறிப்பிலுணர்த்தினர்

பாசடைக் கவயம் போர்த்துப் பகைஞரோ டிகலித் தானும்
பூசலை விளைப்ப அன்னோர் கணைபொரு புழைகள் தோறுந்
தேசுற எழுந்த சோரி யாமெனச் செய்ய கஞ்சம்
மூசுவண் டியின் ஆர்ப்ப மொய்த்துள தகழித் தெண்ணீர். 36

அகழியிலுள்ள தெள்ளிய நீரானது பசிய இலையாகிய கவசப் போர்வையிட்டுப் பகைவரொடு மாறுபட்டுத் தானும் போரைச் செய்ய, அப்பகைவர் அம்பு பாய்ந்த துளைதொறும் ஒளி மிக எழுந்த செந்நீர் (உதிரம்) ஆகுமெனச் செந்தாமரை மலரைப்போல மொய்க்கும் வண்டு ஆரவாரிப்பச் செறிந்துளது.

அகழித் தெண்ணீர் செய்ய கஞ்சம் மொய்த்து உளது. சினை வினை முதலொடு முடிந்தது. 'காலொடிந்து வீழ்ந்தான்' என்பது போலக் கொள்க. மதிலே அன்றி அகழியும் எனப்பொருள் தருதலின், 'தானும்' எனும் உம்மை இறந்தது தழீஇயது.

அணிமலர் அழகே நோக்கி அகழியுள் இழிகின் றோருந்
திணியும்முட் கொடுமை நோக்கிச் சேயிடை விலகு வோருங்
கணிகையர் கோலம் நோக்கிக் காதலித் தகப்பட் டோரும்
பிணியும்உட் கருத்து நோக்கி வெரீஇப்பெயர்ந் தகல்கின் றோரும்.

நிரையாக உள்ள மலர்களின் அழகொன்றையே கருதிப்பெற அகழியுள் இறங்குவோரும், (தாழ்வோரும்), செறிந்து நிற்கும் கொடியின் முள்ளாகிய கொடுமையை எண்ணி நெடுந்தொலைவில் விலகிப்போவோரும் ஆகிய இருதிறத்தரும், பொருட்பெண்டிர் அழகையேநோக்கிக்காமுற்றுத் தம் வயமிழந்து அவர் வயப்பட்டோரையும், நோயையும், உள்ளக் கருத்தையும் எண்ணி வெருவிப் புடை பெயர்ந்து அகல்கின்றோரையும் ஒப்பர்.

ஏகாரம் பிரிநிலை. 'உட்கொடுமை' எனின் முதலை முதலியவாகக் கொள்க. கணிகையர்-கருத்தினுற் சிறுமையர்; பரத்தையர், பிணியும்-தம் வசப்படும் (மனத்தால் காமுறுமை). பெயர்ந்து அகலல்-உள்ளத்தானும் உடம்பானும் பிரிதல்.

## மதில்

எழுசீரடி யாசிரிய விருத்தம்.

கம்பை யைத்த டுத்த பின்பு கம்ப ஞர ழைத்தலும்
பம்பி ஆர்த்தொ ருங்கு பௌவம் ஏழு முற்று மாறுணர்ந்
தம்பை அண்ட பித்தி காறும் ஆக்கு மாத்த டைபொர
வம்ப லர்க்கி டங்கு சூழ்ந்த மல்லல் நொச்சி ஓங்குமே. 38

கம்பாநதியைத் தடுத்துத் தோல்வியுறச் செய்த பின்பு, திருவேகம்பப் பெருமானர் அழைத்த அளவிலே எழுகடலும் செறிந்து ஆரவாரித்து ஒரு சேர வளைக்கும் வகையை அறிந்து, இறைவி அண்டச் சுவர் அளவும் ஆக்கும் பெருந்தடையை ஒப்ப மணந்தங்கிய மலர்களையுடைய அகழி சூழ வலிமை பொருந்திய மதில் உயர்ந்து நிற்கும். அழைத்தலும் உம்மை உடனிகழ்ச்சி. காறும்—அளவும். நொச்சி— (பகைவரை) வருத்துதலின் வந்த பெயர்.

திருக்கி ளர்ச்சி யிற்செ ருக்கு தேவ நாடு பாதலத்
தருக்கு நோக்கி வெஞ்சி னந்த லைக்கொள் காஞ்சி யவ்வலி
முருக்க எண்ணி முன்பு போய்வ ளைப்ப ஏவி மூண்டென
மருக்கி டங்கும் இஞ்சி யும்வி யத்த கும்வ ளத்தவே. 39

செல்வம் மிக்கு இறுமாக்கின்ற விண்ணுலகையும், இறுமாக்கின்ற பாதல உலகையும் நோக்கி கொடுங்கோபம் மீக்கொண்ட காஞ்சி, அவற்றின் வலிமையை அழிக்கக் கருதி முன்சென்று வளைப்ப ஏவினமையால் மூளுதல் என மணமுடைய கிடங்கும், மதிலும் அதிசயிக்கத் தகும் வளமுடையன.

திருக்கிளர்ச்சியின் தருக்கு எனவும் கூட்டுக. முன்பு போய்-முன்பொடு போய் (முன்பு—வலிமை) எனவும் கொள்க. 'வலிமுன்பின் வல்லென்ற யாக்கை' (கலித்-4-1)

கிடங்கின் எல்லை காண்ப தன்று கீழும் மேலு மாகநீள்
விடங்கர் தாள ணிந்த விண்டு நோக்க மேவி யன்மதில்
தடங்கொள் எல்லை காண்ப துந்த லைவர் தஞ்ச டைத்தலை
இடங்கொள் வெண்ட லைய லாமல் ஏவர் காண வல்லரே. 40

அகழியின் ஆழத்தளவை பிறர் காண்டற் குட் படுவதன்று; கீழும் மேலுமாகவும் நீண்ட அழகராகிய பெருமான் திருவடியில் மலராகச் சாத்தப் பெற்ற திருமாலின் விழியே காணும் இயல்பினது. அகன்ற மதில் இடங்கொண்ட உச்சியை அறிவதும் அம்முதல்வர் தம் சடை முடியைத் தனக்கு இடமாகக் கொண்ட வெள்ளிய தலைமாலையே அன்றிக் காண வல்லவர் எவர்.

திருமால் விழியை மலராகத் திருவடியிலிட்டமை திருமாற்பேற்றுப்படலத்திலும், வெண்டலைமாலை அணிந்தமை கந்த புராணம் ததீசி உத்தரப் படலத்திலுங் காண்க.

கச்சி வாணர் சென்னி தாள்கள் காண முன்ப றந்தகழ்ந்
தச்ச ழிந்த மால்வி ரிஞ்சர் அன்று சென்ற எல்லைகள்
நிச்ச யிப்ப அவ்வ ளவும் ஏக வைத்த நீள்குறி
நொச்சி யுங்கி டங்கு மென்ன நோக்கு வார்க்கி லங்குமே. 41

கச்சியிலெழுந்தருளியுள்ள இறைவருடைய திருமுடியையும், திருவடிகளையும் காணும் பொருட்டு, முன்னர் அன்னமாய் விசும்பிற்பறந்தும், பன்றியாய்ப் பூமியை இடந்தும் தம் உருவம் நீங்கிய பிரமனும் திருமாலும், சென்ற எல்லைகளை அறுதியிட்டுக் காட்ட வைத்த அளவே மதிலும் அகழியும் எனச் சிந்திப்பார்க்குத் தோன்றும்.

மால்விரிஞ்சர்: 'உயர்திணை மருங்கின் உம்மைத் தொகையே, பலர்சொல் நடைத்தென மொழிமனார் புலவர்' (தொல்-சொல்-421) கபிலபரணர் போலக்கொள்க. விரிஞ்சன்-விரிந்தன்-விரித்தன்-பிரமன். (நுண்ணிய நிலையினின்றும் பருநிலையை ஆக்கினோன்) ஒடுக்கியை ஒடுங்கி என்புழிப்போல, அன்று எனவே இன்று என் வருவிக்க. இம்மூன்று செய்யுள்களானும் அகழியும் மதிலும் ஒருங்கு பேசப்பட்டன.

இடித்த கழ்ந்து தம்இ ருக்கை எற்றி நீர்க்கி டங்கினில்
வெடித்தெ ழுந்து தாவு வாளை மீனை மீண்டு ருவகை
அடுத்து விக்க உண்டு தேக்கி அம்ப ரத்து மீனையுந்
தடுத்து வென்றி கொள்ள உள்ள சார்ம திற்பொ றிக்குலம், 42

தம்முடைய இருப்பிடத்தை இடித்து அகழ்ந்து மோதி, நீரையுடைய அகழியினின்றும் துள்ளி எழுந்து மேல் தாவிய வாளைமீனை மீண்டு அகழியை அடையாதபடி மதிலைச்சார்ந்துள்ள யந்திரக்கூட்டங்கள் அடுத்து விக்கும்படி விழுங்கி நிறைந்து ஆகாயத்தில் தோன்றுகின்ற மீன் (நட்சத்திரம்) களையும் போக்கொழியத் தடை செய்து வெற்றி பெற உள்ளன.

உடல்ப டைத்தி யக்க ஓர்நி மித்தன் உண்டெ னக்கொளத்
திடம்வ லித்த சான்ற தாய வனர் தாள்செ யப்படுந்
தொடர்பு டைப்பொ றிக்கு லஞ்சு ழன்றெ ழும்வி ழும்பகை
மிடல்கெ டத்தெ ழிக்கும் ஓடும் மீளும் இன்ன நீரவே. 43

உடம்பைப் படைத்து நடாத்த ஓர் கருத்தா (வினைமுதல்) உளன் என்றிவ்வுணர்ச்சி பெற, உறுதி மிக்க சான்றாகச் சிற்பிகள் தம்முடைய முயற்சியால் செய்யப்பட்ட மதிலொடு தொடர்புடைய யந்திரங்களும், பாவைகளும் சுழலும், விழும், எழும். பகைவர் வலிமை கெட உரப்பும் (அதட்டும்), ஓடும், மீளும் இத்தன்மையை உடையனவா யுள்ளன

அறிவில் யந்திரங்களின் தொழிற்பகுதி அறிவுடைய (நிமித்த காரணன்) ஒருவனால் அமையப் பெறுவது. அங்ஙனமே, உடம்பும், உடம்பினுட் கருவிகளும் சடப்பொருள்களாகையால் அவை தாமே தொழிற்படா. அவற்றைப் படைத்தியக்க வல்ல வினைமுதல் உண்டெனத் துணிதல் ஆம்.

இம்ம திற்பொ றிக்கு லம்எ திர்த்து ளோர்த மைச்செகுத்
திம்மெ னும்முன் வென்றி கொள்ளும் ஈது ணர்ந்து தெவ்விர்காள்
அம்ம ஈண்டு றேல்மின் என்று கைஎ டுத்த சைப்பபோல்
அம்ம தில்த லைத்து கிற்கொ டிநு டங்கு மாலரோ. 44

இந்த மதிலிலுள்ள யந்திரக்கூட்டம் தம்மோடெதிர்த்த பகைவரை இம்மென்னு முன் கொன்று வென்றி கொள்ளா நிற்கும். பகைவர்களே இதனை அறிந்து இவ்விடத்து வாரற்க என்று மேலே கையெடுத்துத் தடுத்தல் போல அந்த மதிலின் சிகரத்திற் கட்டிய துகிற்கொடிகள் அசையும்.

'இம்மென்னும் முன்' விரைவுக் குறிப்பு. அம்ம கேட்பித்தற் பொருளது. 'அம்மகேட் பிக்கும்' (தொல்-சொல்-276.)

கலி விருத்தம்

வளமகன் திருநகர்க் கிழத்தி மாமைசால்
இளமுலை திளைப்பக்கார் எழினி சேர்த்துபு
தளர்வற நாட்டிய தம்ப மேயெனக்
கிளர்மதி லிடந்தொறுஞ் செறியுங் கேதனம். 45

வளமாகிய தலைவன் கச்சித்திருநகராகிய தலைவியினுடைய அழகிய நிறமமைந்த இளமுலைப்போகங்கொள்ள அழகிய திரையைச்சேர்த்து நிலைபெற நிறுவிய தூணென்ன உயர்ந்த மதிலின் பல இடங்களிலும் துகிற் கொடிகள் செறியும்.

மகன்-கணவன் 'நோதகவுண்டோ நும்மக ஞர்க்கினி' (சிலப். 16-17) என்புழிப்போல. மாமை: "நீர்வள ராம்பற் றூம்புடைத் திரள்கால், நாருரித் தன்ன மதனின் மாமை" (நற்–6)

நேமிமால் வரைமிசைக் கிளைத்து நீண்டவே
யாமெனக் கொடிமிடை அம்பொன் மாமதில்
மீமிசைக் கோபுர மேலுஞ் சேறலால்
யாமினிப் புகல்வதற் குவமை இல்லையே. 46

சக்கரவாளகிரி என்னும் மலைமேல் முளைத்து நீண்ட மூங்கிலை ஒப்ப மதில் மேலும். கோபுரத்தின் மேலும் நின்று கொடிகள் நெருங்கி மேற் செல்லுதலால் அக்கொடிகளுக்கு ஒப்புக்கூறப் பொருளில்லை என்க.

அறுசீரடி யாசிரிய விருத்தம்

மகதநா டென்னக் காஞ்சி வைப்பினுங் கடைஞர் எய்தி
இகலற வளர்க்கும் எண்ணான் கறத்தினுக் கிடர்செய் யாமைத்
தகைஅணங் குமையாள் வைத்த தடைநிகர் மதில்சீர் முற்றும்
புகர்அற இயம்பப் புக்கால் புலவர்க்கும் உலப்பு றாதே. 47

மகத நாட்டில், கீழ்மக்கள் அறத்தினைத் தடை செய்தது போலக் கச்சித் தலத்திலும் கீழோர் அணுகி, ஒப்பற வளர்க்கும் முப்பத்திரண் டறங்களுக்கும் இடையூறு செய்யாதபடி அழகினையுடைய காமகோட்டி

யம்மை வைத்த தடை ஒத்த மதிலினது சிறப்பு முழுதும் குற்றமறக் கூறப்புகின் தேவர்க்காயினும் முற்றுருது.

இவ்வரலாறு (கச்சி. காஞ். கழு. 87-89) காண்க.

மிடைபுறத் தூர்க ளெல்லாம் விண்ணவர் நகரா அங்கண்
புடைநகர் அயன்ஊ ராகப் பூமகள் கொழுநன் றன்னூர்
இடைநக ராக மற்றை ஈசனூர் உலக மேயா
நடைபிற ழாத கீர்த்தி படைத்தஉள் நகரஞ் சொல்வாம். 48

புறத்தயலுள்ள ஊர்களெல்லாம் தேவர்நகராகிய அமராவதி ஆகவும், அப்புற நகர் பிரமனூராகிய சத்தியலோகமாகவும், இடைநகரம் இலக்குமி நாயகன் ஊராகிய வைகுந்தமாகவும், சூழச் சிவபுரமாய் விளங்கும் அகநகரின் சிறப்பைச் சொல்வாம்.

'ஒழுக்கம் வழுவாத புகழ் படைத்த அகநகர்' என ஈண்டே அதன் உயர்வை விளக்கினார். புடைநகர், இடைநகர், உள்நகர் என்பன பின் முன்னாகத் தொக்க ஆறும் வேற்றுமைத் தொகை. 'கீழ் நீர்' 'நுனிக் கொம்பர்' (திருக். 929, 476) என்புழிப்போல.

**அகநகர், பரத்தையர் வீதி**

அளிமதன் நூலி னுற்றல் ஆடவர் தம்மோ டாடிக்
களிமனைக் குள்ளால் தாங்கள் விளைத்திடுங் கலவி யெல்லாந்
தெளிதர மாடந் தோறுஞ் சித்திரந் தன்னிற் காட்டி
இளையரை மயக்கிக் காமம் ஏற்றுவோர் சேரி மல்கும். 49

காமநூல் முறைப்படி ஆடவரோடு கூடித் தாங்கள் நிகழ்த்தும் புணர்ச்சி விகற்பங்கள் யாவும் தெளிய மகிழ்ச்சியைத் தருகின்ற மனையிடத்து மாடங்களின் ஓவியங்களில் விளங்க உணர்த்தி அவ்வாடவரை மயக்கிக் காமம் மிகுவிக்கும் பரத்தையர் சேர்ந்து வாழுமிடம் மிகும்.

ஓரினத்தோர் சேர்ந்து வாழிடம் 'சேரி' ஆயிற்று.

வரிஅளி முரலா வாடா மாலைய இமையா நோக்க
தரைமிசைத் தோயாத் தாள சித்திரந் தயங்கு காட்சி
வரைவிலா மகளிர் இன்னோர் மாண்நலம் வேட்டு வானில்
சுரர்களும் எய்திச் செவ்வி பார்த்துறை தோற்றம் ஒக்கும். 50

கீற்றினை உடைய வண்டுகள் ஒலித்தலும் வாடுதலும் இல்லாத மாலையையும், இமையாத கண்களையும், தரையில் தோயாத கால்களையும் உடையவாய்ச் சித்திரம் விளங்குகின்ற காட்சி, பரத்தையராகிய அவர் தம் மாட்சிமைப்பட்ட இன்பத்தை விரும்பி வானிடத்துத் தேவரும் மண்ணுலகடைந்து காலம் வாயாது அப்பருவத்தை நோக்கிநிற்கும் தோற்றத்தை ஒக்கும்.

வண்டு ஒலிக்காத மாலை வாடாமையும், கண்ணிமையாமையும் காலிலந் தோயாமையும் தேவர்க்கும், சித்திரத்திற்கும் பொதுமையின் இங்ஙனம் கூறினர். வரைவிலா மகளிர்—'தந்நலம் விலை கொடுப்பார்

யாவர்க்கும் விற்பதல்லது அதற்கு ஆவார் ஆகாதாரென்னும் வரைவிலாத மகளிரது இயல்பு; உயர்ந்தோர் இழிந்தோ ரென்னுது விலை கொடுப்பார் யாவரையும் முயங்கும் மகளிர் (திருக். 92 அதி. பரி)

பூத்தபின் இரா று நாளுங் கிழத்தியர்ப் புணர்ந்து தம்மை
நீத்தன ரெனுஞ்சீற் றத்தால் நின்றஈ ரொன்பான் நாளும்
ஏத்தும்ஆ டவரைத் தங்கள் இளமுலைத் துருக்கம் ஏற்றிப்
பாத்திரு நிதிய மெல்லாம் ப்றித்தனர் கொள்ளை கொள்வார். 51

பூத்து நீராடிய பின் பன்னிரண்டு நாளும் தலைவியரைக் கூடியிருந்து தம்மை நீக்கினர் என்னும் கோபத்தால் எஞ்சிநின்ற பதினெட்டு நாளும் தம்மைப்புகழ்கின்ற தலைவரைத் தங்கள் இளங் கொங்கைளாகிய மலை மேற்கோட்டையில் ஏற்றிப் பெரும்பொருள் முழுதும் பறித்துக் கொள்ளை கொள்வா ராவர்.

பூத்து நீராடியபின் பன்னிரு நாட்கள் தலைவி கருத் தரிக்குங் காலமாகலின் அவ்வளவும் தலைவன் தலைவியைப் பிரியான் என அகப் பொருள் இலக்கணம் கூறும்.

'பூப்பின் புறப்பா டீரா று நாளும், நீத்தகன் றுறையா ரென்மனுர் புலவர், பரத்தையிற் பிரிந்த காலையான' (தொல். பொருள். 187) என்பதனும் அறிக. துருக்கம்–மலைமேற் கோட்டை. இருநிதி-கொடுக்கக்குறையாத பெருஞ்செல்வம். பாத்து–பல் பொருளாக வழி வகுத்து. கொள்ளை-கொள்ளுதல்; தாமொன்றும் கொடாது கொள்ளுதலைக் குறிக்கும்.

கோலத்தின் இசையின் யாணர்க் கூத்தினின் அவிந யத்திற்
சீலத்தின் கலவிச் செய்கைத் திறத்தினின் பிறவாற் ருனும்
ஞாலத்து மைந்தர் தம்மை மருட்டிநற் பொருள்கள் வவ்விக்
காலுற்ற சாற்று வேழக் கோதுபோல் கழிய நீப்பார். 52

அழகு, இசை, அழகிய கூத்து, பாவனை, ஒழுக்கம், புணர்ச்சிக் கூறுபாடுகள் எனும் இவற்ருனும் பிறவழியானும் உலகினிடத்து இளைஞரை மயக்குறுத்திப் பெரும்பொருள்களைக் கவர்ந்து சாற்றினை உமிழ்ந்த கரும்பின் கோதுபோல அகலக் கைவிடுவார். அவிநயம் – உறுப்புக்களால் தோற்றுவிக்கும் குறிப்பு. மைந்தர்–வன்மையார்; (பின் வன்மையிலர் ஆவர்) வேழம் கரும்பு விசேடம். மேற்பாடலில் வந்த 'பாத்து' அழகு முதலியவற்ருல் பகுத்து எனவும் ஆம்.

அலகில்நல் லறஞ்சூழ் காஞ்சி அமர்பெருஞ் செல்வராயுங்
குலமுறைச் சார்பால் வெந்நோய்க் கோட்பட்டார் இழிஞ ரேனுஞ்
சிலகொடுப் பனவுங் கொண்டு சேர்ந்துபொய் வஞ்ச மெல்லாம்
நிலைபெற அடைத்து வைத்த நெஞ்சின ராகி வாழ்வார் 53

அளவில்லாத நல்லறம் சூழ்ந்த காஞ்சியில் நிலைபெற்ற பெருஞ் செல்வராகப் பிறந்தும் பொருட் பெண்டிர் தாம் தோன்றிய குலத்திற்குரிய தொடர்பினல் பெருநோயுடைய ரெனினும், கடைஞரெனினும், சில கொடுப்பினும் கொண்டு கூடிப் பொய், வஞ்சகம், அவற்றின் இனமான பிறவும் செறித்து நிலைபெற வைத்த நெஞ்சினராகி வாழ்வார்.

காஞ்சியில் பிறந்தும் செல்வத்தில்மூழ்கியும் குலச்சார்பால் நோயர் எனினும், இழிஞராயினும், சில பொருள் கிடைப்பினும் கொள்வர் என இழிந்தநிலையைச் சிறப்பித்தவாறு. வேறு பொருள் சிறக்குமேற்கொள்க.

அலைவிழிக் கணிகை நல்லார் ஆடவர் தமக்கு நல்கும்
இலைநிக ரெனுமின் பத்திற் கின்பமும் சமமாக் கொண்டு
விலையென நிதியுங் கோடல் வியப்பிற்றே ஏற்ற மாக
மலைநிகர் தனங்கள் ஈந்தோர் மலைநிகர் தனமுங் கொள்வார். 54

பரத்தையர், ஒப்பில்லாத இன்பத்தை ஆடவர்க்குக் கொடுக்கும் வகையே தாமும் சமமாகக் கொண்டும் மேலும், விலையெனப் பெரும் பொருளை மிகையாகப் பெறல் அதிசயிக்கத் தக்கது. மலையை ஒத்த கொங்கைகளை (போகத்தை) ஈந்து ஓர்மலை எனத் தக்க பொருளை அவ் வாடவரிடத்துப் பெறுவர்.

'கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும், ஒண்டொடி கண்ணே உள' (திருக்- ) இலை நிகரெனும் இன்பம் என்று கூறினர்.

தவமறைக் கிழவன் மாயன் தாணுவென் றிவரும் இவ்வூர்க்
கவர்மனப் பரத்தை மாதர் கண்வலைப் பட்டே இன்றும்
இவறிய அலரோன் மாலோன் பித்தனென் றிப்பேர் பெற்றார்
சிவசிவ யாவ ரேயோ அவர்திறத் தகப்ப டாதார். 55

தவநெறிக்கு வித்தாய மறைக்குரிய பிரமனும், திருமாலும், சிவ பிரானும் இருமனப் பெண்டிர் தம் கண்ணாகிய வலையில் பட்டே இன்றும் இறுகப் பற்றிய அலரோன், மாலோன், பித்தன் என்ற இப்பெயர்களைப் பெற்றனர். அவர் சார்பிற்படாதார் யாவரே! சிவ சிவ!

அலரில் இருப்பவன், மாயையால் உயிர்களை மயக்குபவன் (பெருமையுடையவன்) 'பெருங் கருணையாளன்' எனும் பொருளில் அமைந்த பெயர்களை பழிச்சொல் உடையவன், மயக்கமுடையவன், பித்துடையவன் எனும் பொருளில் காமத்தால் இந்நிலையடைந்தனர் என்ப. சிவ சிவ இரக்கக்குறிப்பு. மும்மூர்த்திகளைக் காட்டிப் பிறர் எவர் இவர் வலையில் வீழாதார் என்பார் 'ஓ' எனும் இரக்கக் குறிப்பையும் காட்டினர்.

விற்றிடும் அல்குல் தன்னை மீளவுந் தமதே யாக்கி
மற்றைய நாளும் விற்கும் வரைவிலார் வீதி இச்சீர்
கற்றிலா வணிக மாக்கள் ஆவணக் கவினை நோக்கிப்
பற்றுவெண் டரளக் கோவைப் பத்தியால் சிரிக்கும் மன்னோ. 56

தம்மை ஒரொருவர்க் குரிமைப் படுத்தி விலைகொண்டு, மற்றைய நாளும் இங்ஙனமே அவ்வுடம்பை விலைப்படுத்தும் பொருட் பெண்டிர் வீதி, இச்செயலைக் கல்லாத வணிகர் தம் கடைவீதியின் அழகை நோக்கி முத்தமாலை வரிசைகள் எள்ளிநகும்.

இச்சீர் கல்லாமை, பொருளைக் கொடுத்துப் பொன்பெறல். வீதி தன்னுறுப்பாகிய முத்தமாலைகளின் ஒளிவீசுதலைப் பிறர் பேதைமையைக் கண்டு சிரிக்கும் என்றனர்.

இருமைவா ணிபத்தில் கூர்த்த மதியரும் இறும்பூ தெய்த
அருவமாம் இன்பந் தன்னை இம்மியின் அளவும் ஏரு
துருவமாம் பொருளுக் கேற்ப நிறுத்துவிற் றெழுக வல்ல
இருமனப் பெண்டீர் தம்முள் தருக்கிவாழ் இருக்கை ஈதால். 57

இருவகை வியாபாரத்தில் கூரிய அறிவுடையவரும் வியப்புறக் கண்ணிற்குப் புலனாகாத இன்பினை மத்தங்காய் புல்லரிசியின் அளவும் மிகாது புலனாகும் பொருளுக்குத் தக அளவுபடுத்தி விலைப்படுத்தி நடாத்துதலில் வல்ல இருமனப் பெண்டிர் தம் முள் தாமே அறிந்து செருக்கி வாழும் இருப்பிடம் இது.

இருமை – இருசெயல்; அவை கொடுத்தலும், கொள்ளலும். செருமுகத்து வெற்றியான் வருவது செருக்கு; தருதலான் (கொடை) வருவது தருக்கு எனக.

கடை வீதி

இன்னஈங் குளவோ என்னக் கடாதலும் இயம்பி யோர்கட்
கன்னஇங் குள்ள இல்லென் றிறுத்தலும் அறியா தியாரும்
என்னவுந் தருதி ரென்ன விலைகொடுத் தேற்ப ஈய
மன்னிஎப் பொருளும் என்றும் நிறையும்ஆ வணம் அனந்தம். 58

இவ்வியல்பின இங்குளவோ என வினவவும், அத்தன்மையன இங்குள்ளன; அன்றி இல்லை என்ன விடை கொடுத்தலும் அறியாமல் எவரும் எப்பொருளையும் விலையைக் கொடுத்து ஏற்பவும், வணிகர் கொடுப்பவும் ஆக எப்பொருளும் எப்பொழுதும் நிறைந்து நிலைபெறும் கடைவீதிகள் அளவில்லன.

செய்வினை அனைத்தும் தன்பால் சேர்த்துவைத் துயிர்க்குப் [பின்னர்
அவ்விறை ஆணையாற்றல் அளித்திடு மாயை யேபோல்
கொய்வளம் வருவ முற்றுங் கொண்டுபின் நாய்கர் மாறப்
பெளவநீர் உலகுக் கெல்லாம் உதவுவ பைம்பொன் மாடம். 59

உயிர்கள் செய்த இருவகை வினைகள் முற்றவும் தன்னிடத்து முன்னர்ச் சேர்த்து வைத்து அவ்வுயிர்களுக்குப் பின்னே முதல்வன் தனது சிற்சத்தி கூட்டுகின்ற முறையால் கொடுக்கின்ற மாயையைப் போல, உழைத்துத்திரட்டியவளப்பமுற்றும் வருவனவற்றைக் கொண்டு பின்னர் வணிகர், விலைப்படுத்தக் கடல் சூழ்ந்த உலகினர்க்குப் பொன் முதலாம் பொருளுடைய மாடங்கள் உதவுவன.

மா-ஒடுங்குதல். யா-வருதல். ஒடுங்கி வருதல். சூக்கும நிலையில் உலகம் ஒடுங்கிப் பின் மாயையில் வெளி வருதலின் மாயை எனப் பெற்றது. உமா–உமை, சீதா—சீதை போல மாயா, மாயை என ஆயிற்று. மாடம்-மாடுடைய இடம் மாடம். மாடு–செல்வம்.

அணங்கனுர் பரப்பி விற்கும் அணிகிளர் கோங்கந் தாரிற்
சுணங்கினைக் கணியென் றஞ்சிச் சுரும்பினம் உறுமை நோக்கிப்
பணங்கிளர் பாந்தள் அல்குற் பாவைமீர் என்னே பொற்பூ
மணங்கமழ் கின்ற தென்பார் ஆடவர் மருட்சி எய்தி. 60

கோங்கரும்பை ஒத்த குவி முலைமேல் தேமல் படர்ந்த மகளிர் பூவிற்போர், காமுகர் பூக்கொள்வோர். தூக்கிப் பிடித்த கோங்குமலர் மாலையின் இடையே தோன்றும் தேமலை வேங்கைப் பூவென மதித்து வண்டினம் அஞ்சி மொய்த்தில: வண்டுகள் மொய்யாமை பற்றிப் பொன் னுலாகிய பூவென மதித்து மணங்கமழ்வது என்னே என மருள்வர் அவ்வாடவர். அச்சம், மருட்சி இவை உண்மையுணரத் தடையாவன.

வீழ்பொருள் எடுக்க லாற்ரு உறுசனம் மிடைந்த வீதித்
தாழ்குழல் மடவார் மைந்தர் தங்களுள் முட்டுங் காலைக்
காழ்மணி முலையுந் தோளுங் கலந்துற உவகை பொங்கி
வாழ்நருஞ் சிலரே பல்லோர் வாடிநைந் தழுங்கு வார்கள். 61

வீழ்ந்த பொருளை எடுக்க இயலாத அளவில் மிகுமக்கள் செறிந்த வீதியில் மகளிருமைந்தரும் ஒதுக்குப் பெருது முட்டுங்காலை வருந்துவோர் பலர்; முகமும் அகமும் மலர்வோர் சிலர்.

ஒழுக்கம் உடையோர் பலராகவும், தப்பினோர் சிலராகவும் காட்டினர். உறு–மிகுதி. 'அவைதாம், உறுதவ நனியென வரூஉ மூன்றும், மிகுதி செய்யும் பொருள என்ப' (தொல். சொல். 299)

கலிநிலைத் துறை

நெருங்கு பல்சனம் முழக்கருக் கூலம்நீல் விடத்தைக்
கரந்த கம்பர்மேல் தெழித்துறுங் கடல்பெருந் தெருவால்
சுரந்து வந்துநாற் புறத்தினுஞ் சனமிகத் தொகுவ
பரந்த வீரையுள் புகுந்திடும் பற்பல நதியே. 62

நெருங்கிய பல மக்கட்குழாத்தின் முழக்கம் நீங்காத கடைத்தெரு கரிய விடத்தைக் கண்டத்தில் ஒளித்த திருவேகம்பர்மேல் உரப்பி (அதட்டி) எழுந்த கடலை ஒக்கும். பெரிய தெருக்களின் வழியாகப் பெருகி வந்து நாற்புறத்தினும் மக்கள் பெருகக் கூடுதல் பரந்த அக்கடலுள் புகுந்திடும் பலப்பல நதிகளை ஒக்கும்.

கூலம் எண்வகை: அவை நெல், புல், வரகு, தினை, சாமை, சோளம், மலைநெல், மூங்கில்நெல் என்பன.

### மற்றைய வீதி

அறத்தின் நீள்நகர் புவனசக் கரமென ஆன்ற
திறத்த பொன்மதில் ஏழுடைச் சின்மயக் கோயில்
புறத்த வான்மிசைப் புலவர்கண் ணூறுபட் டிடாமை
மறைத்தெ னக்குயின் உரிஞ்சுபூம் பந்தர்சால் மறுகு. 63

வானுலகத்திலுள்ள தேவர்கள் தம் கண்ணேறு படாமல் மறைத்தாற்போல மேகங்கள் தவழ்கின்ற பூம்பந்தர்கள் அமைந்த வீதிகள், அறத்தான் மிக்க கச்சித் திருநகரில் நிலவட்டம் என அமைந்த கூறு பாட்டினவாய் பொன்மயமான மதில் ஏழுடைய ஞானமயமாகிய கோயிலின் புறத்தில் உள்ளன.

அருள்நிலைத் தானங்கள் ஆதலின் சின்மயம் என்றனர். 'ஆலயந் தானும் அரனெனத் தொழுமே' எனவும், 'சிவாலயத்தையும் பரமேசுரனெனக் கண்டு வழிபடுக, எனவும் அருளிய திருவாக்குக்களை எண்ணுக.

மகரப் பொற்குழைப் பிரான்தளி சூழ்மதில் குறடும்
நகரச் சீரெயில் சுற்றும்மா ளிகைநிரை ஆரும்
திகழச் சூழ்தெரு ஆரிடை வெளியுமாய்ச் சிவன்தேர்ச்
சகடத் தேருடைச் சகடமற் றென்றெனத் தயங்கும். 64

மகரகுண்டலம் தரித்த திருவேகம்பப் பெருமான் திருக்கோயிலைச் சூழ்ந்த மதில் குடமாகவும், நகரைச் சூழ்ந்த மதில் வட்டையாகவும், மாட வரிசைகள் ஆர்க்கால்களாகவும், விளங்கச் சூழ்ந்துள்ள தெருக்கள் ஆர்க்கால்களின் இடைஇடையே அமைந்த வெளியிடங்களாகவும் கொண்ட சக்கரமாய்ச் சிவபிரான் மேற்கொண்ட நிலவுலகமாகிய தேர்க்குச் சக்கரங்களுள் ஒன்றாகிய சூரியன், தனது தேர்க்குச் சக்கரம் பிறிது ஒன்றென விளங்கா நிற்கும்.

சூரியன் தேர்க்குச் சக்கரம் ஒன்றெனப் பேசும் நூல்கள்.

சரிக்குங் குஞ்சர மதப்பெருங் கலுழியுந் தளவைச்
சிரிக்கும் மூரலார் களைந்ததார் நறவமுஞ் சேறாய்
விரிக்கும் வீதியில் அடிவழுக் காவகை வெயிலைப்
புரிக்குஞ் செம்மணி பதித்துமேல் நடப்பராற் புரியோர். 65

சஞ்சரிக்கும் களிறுகளினுடைய மதநீர்ப் பெருக்கின் குழம்பும் முல்லையரும்பைப் பரிகசிக்கின்ற பற்களையுடைய மகளிர் சூடிக் களைந்த, மாலைகளினின்றும் சிந்தும் தேனும் கலந்து சேறாய்ப் பரந்த வீதியில் கால் வழுக்காதபடி நகரமக்கள் ஒளியைத் தோற்றுவிக்கின்ற மாணிக்கங்களை அச்சேற்றிற் பதித்து அவற்றின்மேல் நடப்பார்கள்.

ஞெள்ளற் பாங்கரின் நறியநீர் வண்டலாட் டயரும்
அள்ளற் சேறுகள் புலர்த்துவான் இடையிடை அகழ்ந்து
பள்ளத் தாற்சிறு கால்பல வகுத்தெனப் பிறங்கும்
வள்ளற் காவலர் செலுத்துதேர்ச் சகடுபோம் வழியே. 66

வீதிகளின் மருங்கில் நறுமணங் கமழும் நீர் விளையாட்டைச் செய்யுமிடங்களில் குழம்பிய சேற்று நிலத்திடை வள்ளன்மையுடைய அரசர்கள் செலுத்துகின்ற தேருருளைகள் போம் வழிகள் மிகு வீழ்தலின், சேறு உலரும்பொருட்டு, ஆங்காங்குச் சிறுசிறுகால்கள் பள்ளங்களொடு வகுத்தாற்போல விளங்கும்.

கொடையே வெற்றிக்குக் காரணம் ஆதலின் 'வள்ளல்' என்றனர். காத்தலின் வல்லவர், காவலர்.

செய்ய திண்புயத் தெழிலினைக் கவர்ந்தமை தெரிந்து
வெய்ய மாந்தர்கள் வெதும்புறப் பன்முறை தாக்க
ஐய வோஎன அல்றுவ போல்அணி முழவம்
மைய வேலையுஞ் சமழ்ப்புற வயின்தொறுங் கறங்கும். 67

தொழில் திறத்தால் விரும்பப் படுகிற முழவம் வாசிப்போர், தம்முடைய செவ்விய திண்ணிய தோளழகைக் கரந்து கவர்ந்தமையைத் தெரிந்து கைப்பற்றி வருந்தும்படி பலமுறையும் தாக்குவர்போல முழக்க ஐயவோ என அரற்றுவ போல அழகிய மத்தளம் கரிய கடலும் ஒலியாது நாணும்படி அரங்குகள் தோறும் ஒலிக்கும்.

மைய—மேங்களுக்கு இடனாகிய எனினும் ஆம். குங்குமக்குழம்பால் செய்ய ஆகிய என்க. அணி, இலக்கணம்.

விலாழி நீரும்ஒண் சந்தன விரைச்செழுஞ் சேறுங்
குலாய வீதிகால் வழுக்குமென் றஞ்சுபு கோணல்
நிலாமு டித்தவர் திருவிழாத் தொழவந்து நெருங்கும்
வலாரி யாதியோர் அடிபடி உறுவகை நடப்பார். 68

யானையும், குதிரையும் உமிழ்ந்த நீரும், நறுமணம் கலந்த செஞ்சந்தனக்குழம்பும் கூடி விளங்கிய வீதிகளில் நடந்தால் சறுக்கு மென்றஞ்சியே வளைந்த இளம்பிறையைக் கண்ணியாக முடியிற் சூடிய சிவபெருமான் திருவிழாச் சேவிக்க வந்து குழுமும் இந்திரன் முதலியோர் அடிகள் நிலத்தில் தோயாதபடி உலவுவார்

புரசைத் திண்களி றுலாத்தரும் பொலஞ்சுடர் மறுகிற்
பரசப் போதரும் மன்னவர் பணிமுடி நெருக்கின்
அரசப் பன்மணி தெறித்துவீழ்ந் திமைப்பன அவியா
முரசப் பேரொலி அதிர்ப்பினில் உக்கமீ துடுப்போல். 69

கழுத்திடு கயிற்றையுடைய களிறுகள் உலவுகின்ற பொன்னொளி வீசும் அரசவீதிகளில் இறைவனை வணங்க நெருங்குகின்ற அரசர்கள் மணி முடி ஒன்றொடொன்று தாக்கி உதிர்ந்து வீழ்ந்த நாயக மணிகள், முரசொலி ஓயாது முழங்குகின்ற அதிர்ச்சியினால் உதிர்ந்த பெரிய நட்சத்திரங்களைப் போலச் சுடர் விடுவன.

அங்கண் வீதியின் அணிநலங் காணும்ஆ தரத்தின்
எங்கள் நாதனுந் திருவிழா என்பதோர் பெயரான்
மங்கை யாளொடும் மகாரொடும் வானவர் பழிச்சத்
திங்கள் தோறெழுந் தருளுமேல் அதன்வளஞ் சிறிதோ. 70

சில, பல வீதிகளின் பேரழகைக் காணும் விருப்பினுல், எங்கள் நாயகனும் 'திருவிழா' என ஏறட்டுக்கொண்டு அம்மையும், மைந்தரும் அடியவரும் சூழத் தேவரும் போற்றத் திங்கள்தோறும் திருவோலக்கம் கொண்டருளுவராயின் அந்நகரின் சிறப்புச் சொல்லில் அடங்கும் சிறிய அளவினதோ; அடங்காப் பெருமையது.

திங்கள்–திங்கட்கிழமை, மாதம். சண்டேசப் பெருமானுடன் என உம்மையாற்கொள்க. 'விருப்பொன்றில்லான் விரும்பினன்' என நகரின் சிறப்புக் கூறினர்.

பாலி யேமுதல் பலநதித் திவலைபாய்ந் தழகின்
பால வாயமா ளிகைஅடித் தலத்தினைப் பாராப்
பால வெண்சுதை மாடமேற் சிகரமும் பனிவிண்
பாலி யாற்றுநீர்த் திவலைகள் போர்ப்பவான் படரும் 71

பாலி முதலான பல நதிகளினுடைய அலையெறி துளிகள் பாய் தலான் அழகின் பாற்பட்ட மாளிகைகளின் அடியிடங்களைப் பால்போன்ற வெண்மையான சுண்ணும்பாலியற்றப் பெற்ற மாளிகைகளின் சிகரங்கள் நோக்கித் தாமும் குளிர்ந்த விண்ணிடத்துக் கங்கை நீர்த்துளிகள் போர்வைபோலப் பொதிந்துகொள்ள விசும்பை நோக்கி எழும்.

விண்பால்யாறு–விண்ணிடத்துள்ள நதி; கங்கை.

பன்னி றப்பரி கருங்கரி தொழிலமை பஃறேர்
இன்ன கீழ்நிலை வாயிலின் இயங்குதல் நோக்கி
மன்னு மேல்நிலை வாயில்வெண் கரிபசு மான்தேர்
அன்ன ஏனவுந் தன்னிடத் தியங்கவான் அணவும் 72

பல நிறங்களமைந்த குதிரைகளும், யானைகளும், தொழிற்றிறங் கூடிய பலவாகிய தேர்களும் இத்தன்மையவாகிய பிறவும் கீழ்நிலைவாயில் களின் வழிக்கொடு போதல் வருதல்களை நோக்கி, நிலைபெறும் மேல் மாடங்களின் அமைந்த வாயில்கள் வெள்ளையானை (ஐராவதம்), பச்சைக் குதிரை பூட்டிய தேர், அவைபோல்வன பிறவும் தன் வழியாகப் புடை பெயர வானைத்தோயும். சூரியன் குதிரை பச்சை நிறம் உடைமை: "இரவிபசும் புரவி" (கலிங். 85). "தனியாழித் தனிநெடுந் தேர்த் தனிப்பச்சை நிறப்பரியை............பனிப்பகைவன்" (வி. பா. வச. 1)

அலங்கு கீழ்நிலை மாடம்அங் கடுப்பினின் மாட்டும்
இலங்க கிற்புகை யான்விரை யேற்றுவர் மடவார்
புலங்கொள் மேல்நிலை மாடமும் புரிகுழற் கூட்டுந்
துலங்க கிற்புகை யான்மணங் களுலுறத் தொகுப்பார். 73

மகளிர், அடுப்பினில் எரிக்கும் அகில் விறகால் சூழும் நறும் புகையைச் சுடர்விடுகின்ற கீழ் மாடிகளில் பரப்புவர்; இடங்கொண்ட மேல்மாடங்களில் கூந்தற்கு ஊட்டும் அகிற்புகையான் மணஞ் செறியச் சேர்ப்பர்.

மேல் மாடிகளில் அட்டிற்புகையும் சேறலின், தொகுப்பார் எனப் பேசினர். கண்டோர் அறிவை அழகால் கவர்ந்து கொள்ளும் எனினும் 'புலங்கொள்' என்பதற்குப் பொருந்தும்.

இருசு டர்ப்பெருஞ் சிலைகளின் இயன்றமா ளிகைகள்
உருகு வெங்கதிர் தடவரச் சுடுகனல் உமிழும்
அருகு தண்கதிர் தடவரக் குளிர்புனல் அளிக்கும்
மருவி னோர்குணம் பிடிபடல் வையகத் தியல்பே. 74

சூரிய காந்தக் கல்லும், சந்திரகாந்தக் கல்லும் கொண்டியற்றிய மாளிகைகள் சூரியன் கிரணம் தீண்டுகையில் நெருப்புமிழும்; சந்திரனின் கதிர் தீண்ட நீருமிழும். ஆகலின், பொருந்தினோர் இயல்பு பொருந்தப் பெற்றோர்க்கும் வாய்த்தல் உலகியற்கையே ஆகும்.

இருவகைக் கற்களும் மாளிகைக் குறுப்பாகலின் உறுப்பியின் செயலாகக் கூறினர்.

நெறித்த கூந்தலார் மேல்நிலைச் சாளரக் கதவு
திறத்த லுந்தடை படும்அகிற் புகையெலாந் திரண்டு
புறத்தின் ஏகுவ வழுதிதன் சிறைப்படும் புயல்கள்
மறித்து விட்டநாள் விரைந்துவிண் சேறலை மானும். 75

மகளிர் மேல்வீடுகளிற் சன்னற் கதவுகளைத் திறந்த அளவிலே கூந்தலுக்கு ஊட்டிய அகிற்புகை முற்றவும் தடை நீங்கித் திரண்டு வெளியேறுதல் உக்கிர குமார பாண்டியரால் சிறைப்படுத்தப்பெற்ற மேகங்கள் மீளவிடுத்த நாளில் விரைந்து விண்புகுதலை ஒக்கும்.

நீர் புலரப் புகையூட்டுங்கால் சிக்கறுத்து நீட்டலின், 'நெறித்த கூந்தலார்' என்க. நுண்ணிய வழியினும் புகுதலிற் புகையாயிற்று. 'புகை புகா இடங்களிற் புகுவோன்' (கம்பர்) வாக்கெண்ணுக. வழுதி—பாண்டியன்.

தெரித்த பன்மணி மாடமேல் திகழ்ந்தபொற் குடத்து
விரித்த தண்கதிர்க் கடவுள்நின் றசைதல்வேட் கோவர்
திரித்து விட்டசக் கரமென லாகும்அத் திகிரி
பரித்த பச்சைமண் ணெனலாம் அதற்பயில் களங்கம் 76

நிலாமணி முற்றத்தில் வைத்த பொன்னாலியன்ற குடத்தின்மேல் கலை நிரம்பிய சந்திரன் நின்றசைதல், குயவர் சுழற்றி விட்ட சக்கரத்தின் அசைவினை ஒக்கும். அச்சந்திரனிடத்துள்ள மறு அச்சக்கரத்தில் ஈரக் களிமண்ணெனல் தகும். எனவே, பொற்குடம் அச்சக்கரத்தினின்றும் அறுத்தெடுத்த குடமொக்கும் என்க.

நிரவு நித்திலத் தோரணம் செழுங்கதிர் நிரைகள்
விரவி விண்ணெலாம் வெள்ளொளி விரித்தலான் அன்றே
பரவை மேழும் போதும்வீழ் பருவத்தும் அல்லால்
இரவி மண்டிலச் சேயொளி விளங்கிடா இயல்பே. 77

நிரம்பிய முத்துக்களாான் அமைந்த தோரணங்களினுடைய முதிர்ந்த கதிரொளி வரிசைகள் விண்ணிடம் முழுதும் பரவி வெள்ளொளியைப் பரப்புதலானே, கடல்மேல் தோன்றும் போதும் மறையும் போதும் (உதயாஸ்தமனம்) அன்றிச் சூரிய வட்டத்தினுடைய சிவந்த ஒளி புலப்படாத காரணம்.

சூரியன் விண்ணிடத்துள்ள அளவும், பலவாய் ஒளி மிக்குள்ள முத்துத் தோரண வெள்ளொளியில் மூழ்கித் திரிவுபடுகிருன்.

திங்கள் செங்கதி ராளனென் றுரைப்பதே தேற்றம்
அங்கண் நித்திலத் தோரணத் தொளியினில் அரிபோல்
தங்கி வெண்கதி ராயினன் அதற்குறுஞ் சான்று
துங்க மாலேயுங் காலேயுஞ் சிவந்துதோன் றுவதே, 78

சந்திரனைச் சிவந்த கதிர்களையுடையோன் என மதித்தலும், பிறர்க்குரைத்தலும் தெளிவுக் காட்சியாகும். சூரியனைப்போலச் சந்திரனும் முத்துத் தோரண வெள்ளொளியால் திரிந்து வெண்கதிர் ஆயினன். அவ்வொளி படாத மாலேயும், காலேயும் அச்சந்திரன் சிவந்து தோன்றுதலே அதற்குரிய சாட்சி என்க.

அங்கண்–(கச்சியில்) அவ்விடத்து. அந்தியும், சந்தியும் வழிபாட்டிற்குரிய காலமாகலின், துங்கம் (உயர்ச்சி.) இருகாலங்களுக்கும் நின்றது. உறுஞ்சான்று-போதுமான சாட்சி. சிவந்து தோன்றுதலும், தோன்ருமையும், இருகாலங்களும் எடுத்தோதுதலின் 'உறுஞ்சான்று' என்றனர். 'சாலுங்கரி' (திருக். ) என்புழிப்போல.

அணங்க ளுர்நகைத் திடுந்தொறும் ஆங்கவர் வளர்த்த
கணங்கொள் முல்லேகள் முகைப்பன அவர்நகைக் கவினே
இணங்கி நாம்கவர்ந் தொளித்தமை அறிந்தனர் என்றே
வணங்கி நாணினுல் உடன்சிரித் திடுவது மானும். 79

தெய்வப் பெண்ணனையவர் புன்சிரிப்புக் கொள்ளுந்தோறும் அம் மகளிர் வளர்த்த முல்லேக் கொடிகள் அரும்புதல், அவர்தம் பற்களின் அழகை நட்புப் பூண்டு வெளவி மறைத்தமையை அறிந்து சிரித்தனர் என்று நாணத்தால் வளைந்து ஒக்கச் சிரித்தலே ஒக்கும்.

நகை–பல், புன் சிரிப்பு. சிரிப்பிற் சிறிது பல் தோற்றுதலின் இரண்டற்கும் பெயராயிற்று. மகளிர் கற்பின் அறிகுறியாக முல்லே வளர்ப்பவர். மகளிரான் மலரும் மரங்கள் பத்து. சிரிப்பின் அரும்புவது முல்லேக்கொடி. சிரித்தலும் ஓர்வகை ஒறுப்பென்பது பெறப்பட்டது. கொடி அரும்பால் பொறை ஆற்ருது வணங்குதல்.

ஆட கத்தியல் மேல்நிலே மிசைஅணங் கனையார்
மாட கத்தனி யாழிசைக் குவந்துறும் வான
நாட கத்துவெண் களிற்றினே நளினமென் மலர்ப்பூம்
பாட கத்தடி நடையினுல் பருவர லுறுப்பார். 80

தெய்வ மகளிரை ஒப்பவர் மாளிகையின் மேலிடத்துத் தம் முறுக் காணி கொண்டயாழின் ஒப்பற்ற இசைக்கு உவந்து அங்குற்ற வெள்ளை யானையைப் பாடகமென்னும் அணி சூழ்ந்த தாமரை மலரை ஒக்கும் அடிகளின் நடையால் வருத்தம் உறச் செய்வர்.

யானையை வென்ற நடை பேசப் பெற்றது. இசைக்குக் கட்டுப் படல்: "காழ்வரை நில்லாக் கடுங்களிற் றொருத்தல், யாழ்வரைத் தங்கி" (கலித். 2-26,27) பருவரல்-துன்பம்; நுண்ணிய நிலையினின்றும் பரு நிலையை அடைவது. இன்பமும் பருநிலையை அனுபவிக்கும்பொழுது அடைவது எனினும் எதிருணர்ச்சியினால் துன்பம் வலுத்துக்காட்டும். காட்டு: ஓர் செயலில் இடைவரும் துன்பத்தை, தடையை' இடையூறு' என்கிறோம். இன்பத்தை அங்ஙனம் கூறாமை உணர்க.

பளிக்கு மேல்நிலத் தந்நலார் பணைமுலை ஞெமுங்கக்
களிக்கும் ஆடவர் தமைத்தழீஇக் காமப்போர்க் கலவி
விளைக்கும் ஆற்றலைக் குரவன்இல் விழைந்தவன் ஒருசார்
ஒளித்தி ருந்துகாண் போனெனச் சுருங்கையுள் நுழையும். 81

பளிங்கால் அமைக்கப் பெற்ற மேல் மாளிகையில் மகளிர் தம் பருத்த கொங்கை அழுந்தக் களிப்புறும் ஆடவரைத் தழீஇக் காமப் போராகிய புணர்ச்சி நுட்பங்களைக் குரு மனைவியாகிய தாரையை விரும் பிய சந்திரன் மறைந்து காண்பவனைப்போலக் கரந்துறையுள் நுழையும்.

சுருங்கை—தம்மைப் பிறர் அறியாவாறும் பிறர் தம்மைத் தாமறியு மாறும் உள்ள இடம். கள்ளவழி என்பர். "சித்திரச் சுருங்கை" (சீவ. 142) ஆசிரியரின் மனையை விரும்பும் பெரும்பாதகம் செய்வோன் இதுசெய்வன் என்பது குறிப்பு.

மேனி லத்தர மியத்திடைத் துயிலுமெல் லியலார்
ஆன னத்தெழில் கவர்ந்துசெல் மதியினை அவர்தங்
கான லர்க்குழற் காரளி பின்தொடர்ந் துதைப்ப
ஈன முற்றஅத் தழும்புவான் கறையென இலங்கும். 82

நிலாப்பயன் கொள்ளற்கமைந்த நிலாமுற்றத்துத் துயிலும் மகளி ருடைய முகத்தழகைக் கவர்ந்தோடுஞ் சந்திரனை அம்மகளிர் தம் மணங் கமழும் மலருறை கரிய வண்டு பின் சென்று உதைத்தலான் குறைபட்ட அவ்வடுப் பெரிய களங்கமாக விளங்கும்.

துயில்—துய்+இல்=நுகர்ச்சி இல்லாத நிலை (உறக்கம்). கண் துயில் என்பது துயில் என்றாயது எனின் காட்சி இல்லாத நிலை என்க.

உங்கண் மாதரார் முகத்தெழில் நோக்கிஓர் வடிவம்
கங்கள் நான்குளான் படைத்ததில் அவயவங் காண்பான்
அங்கண் முன்னுற வகுப்புழி அஞ்சனங் குலையப்
பங்க முற்றதென் றொழித்ததை மதியெனப் பகர்வார். 83

அந்நகரிலுள்ள மகளிர்தம் முகத்தழகை, நான்கு தலைகளையுடைய பிரமன் நோக்கி, அது போல ஓர் வடிவு கண்டதனுள் கண், நுதல் முதலிய அவயவங்காணவேண்டி முதலில் அழகிய கண்களை எழுது மிடத்து மை சிதையப் பழுதுற்ற தென் ஞெதுக்கியதைச் சந்திரனென்று உலகங் கூறும்.

உங்கண்—அந்நகர். உகரச் சுட்டு அடுத்து வந்த இடப்பெயர், (அங்கண் இப்படலம் 70 ஆம் செய்யுள் போலக்கொள்க) நோக்கு–அழகு, பார்வை. அழகை நோக்கும் பொழுது ஊன்றிப்பார்த்தற்கு இச்சொல் நயமுடையது. கம் கள்—தலைகள்.

இவ்வ ரைப்பினில் இரவியும் மதியமும் வழியே
செவ்வன் ஏகுறு தொதுங்குவ இவர்முகச் சீர்க்கும்
பவ்வ நேரகல் அல்குற்கும் வடிவொடு பணைத்தேர்
ஒவ்வு றுமைகண் டுட்கொளும் உட்கினல் அன்றே. 84

இந்நகரில் சூரிய சந்திரர்கள் உரிய வழியில் நேரே (உச்சிவழி) செல்லாது ஒதுங்கிச் செல்லுதல் இங்குள்ள மகளிர் தம் கடலை ஒத்த அகன்ற அல்குற்கும், அழகிய முகத்திற்கும் தேர்த்தட்டினனும், வடிவானும் ஒவ்வுறுமையை உள்ளங்கொள் நாணத்தினல் அல்லவா?

காமகோட்டத்திற்கு நேர் மேற்செல்லுதல் தகாதென ஒதுங்குவர் எனக் கந்தபுராணத்தும், திருத்தொண்டர் புராணத்தும் காண்க. உட்கு-அச்சம்.

தங்கள் வாள்முகம் மதியெனச் சார்தரும் பணிக்குத்
துங்க மாடமேல் மின்னனர் வேற்றுமை தோற்றத்
திங்கள் மாட்டறி குறியொன்று செய்துவைத் தனரால்
அங்கண் மாநிலங் களங்கமென் றிடப்படும் அதுவே. 85

தங்களுடைய ஒளி பொருந்திய முகங்களைச் சந்திரனென்று மதித்துப் பற்றுதற்குச் சாரும் இராகு என்னும் பாம்பிற்கு உயரிய மாளிகையிடத்திலுள்ள மின்னலையொப்பார் வேற்றுமை புலப்பட அச்சந்திரனிடத்து ஓரடையாளத்தைச் செய்து வைத்தனர். அதனை மக்கள் களங்கம் என்று கூறுவர்.

மறைந்தி டாமறுப் பயில்மதி முகத்தெழில் பெறுது
குறைந்து பார்க்கும்அங் கரிவைமார் கோண்நுதல் கடுப்ப
நிறைந்து பார்க்கும்மீண் டவர்முகம் நிகர்ப்பமற் றிவ்வா
றறைந்த திங்கள்தோ றலமரும் அக்கரைப் பசுப்போல். 86

மறையாதகளங்கமுடைய சந்திரன், அந்நகர மகளிர் முகத்தழகிற்கு ஒப்புப்பெருமல் அவர்தம் வளைந்த நெற்றிக்கு ஒப்பாதல் வேண்டிக் குறைந்து ஒப்புப் பார்க்கும். ஒவ்வாமையின், மீளவும் முகத்திற்கு ஒப்புண்டாகக் கலை நிறைந்து நோக்கும். இவ்வாறு கலை நிறைந்து முகத்திற்கு மொவ்வாமையானும், குறைந்து நெற்றிக்கும் ஒவ்வாமையானும் மாதந்தொறும் மறுகும் (சுழலும்); அக்கரைப் பசுவைப்போல.

ஆற்றின் அக்கரையிலுள்ள பசுவிற்கு அங்கு வெளிறு காணப் பட்டு இங்குப் பசுமை மிகுந்து தோன்றும். இங்கு வந்து காணும் போது அப்பசுவிற்கு அங்கே பசுமை மிகுதியாகத்தோன்றி ஓடும். சென்றும் மீண்டும் பன்முறையும் உழலுதலை அக்கரைக்கு இக்கரை பச்சை, இக் கரைக்கு அக்கரை பச்சை எனவும், தூரத்துப் பச்சை எனவும் கூறுவர்.

கதிர்செய் மாடமேல் புலவிதீர் கலவியின் முடிவின்
வெதிர்செய் தோளியர் கொண்கர்தம் மருமமேல் வதனம்
பதிய வைத்தனர் துயிலுவர் அற்றம்பார்த் திருந்து
புதுமு கத்தெழில் உடுபதி வௌவுறாப் பொருட்டே. 87

சோர்வு பார்த்திருந்து முகத்துப் புதிய அழகை விண் மீன்களின் நாயகனாகிய சந்திரன் கவர்ந்து கொள்ளாமைப் பொருட்டு ஒளி வீசுகின்ற மேன் மாடத்துள் ஊடல் தீர்ந்து கூடிய கூட்டத்தின் இறுதியில், மூங்கிலை ஒத்த தோளினையுடைய மகளிர் தம் கணவருடைய மார்பின் மேற் புறத்தில் தோன்றாதபடி உறங்குவர்.

புலவி இல்வழியும், மிக்கவழியும் இன்பில்லையாகலின் 'புலவி தீர் கலவி' என்றனர். செய் உவம வுருபு. அற்றம்—சோர்வு. 'விளக்கற்றம் பார்க்கும்' (திருக்.) புது எழில்—புணர்ச்சியா னமைந்த அழகு.

தேங்கும் ஊடலின் மாதரார் பறித்தெறி செங்கேழ்
ஓங்கு பன்மணி அவரடி வருந்திநைந் துளைய
ஆங்கு நாள்தொறும் பைதுறத் தவிர்வன கொடிதாத்
தாங்கள் செய்வினை தங்களுக் கேபகை யாமே. 88

நிறைந்த புலவியுள் மகளிர் பறித்து வீசிய செவ்வொளி முதிர்ந்த பல மாணிக்கங்கள் அம்மகளிரடிகள் வருந்தி உள்ளம் மெலிந்து வருந்த அவ்விடத்து நாடொறும் வருத்தம் செய்து விளங்கா நின்றன. தாங்கள் செய்தீவினை தங்களுக்குப் பகையாய் நின்று வருத்துதலைப் புலப்படுத்தும்

துன்பத்தால் உள்ளம் இருள் கூர்தலில் பசுமை உறல் (பைது+ உறல்) என்ப.

விருந்து நாள்தொறும் இடையறா தெதிருமே தகவால்
அருந்தி றற்சிறு புதல்வர்சூழ்ந் தணுகிடுந் திறத்தான்
முருந்து மூரலார்க் காயிடைக் கொழுநர்பால் மூண்ட
மருந்தில் ஊடலுஞ் சிறுவரை யன்றிமே வாதால் 89

விருந்தினரை நாளும் இடையீடின்றி எதிர்கொள்ளும் மேன்மை யாலும், அரிய திறலினையுடைய தம் இளம்புதல்வர் சூழுங் கூறுபாட்டா னும் மயிலிறகின் அடியினையொத்த பற்களையுடைய தலைவியர்க்குத் தலை வரிடத்துத் தோன்றிய பரிகரிக்கும் வாயில்களைக் கடந்த புலவியும் சிறு பொழு தளவன்றி நெடும் பொழுது நில்லாது.

விருந்தின் சிறப்பும் விளைபயனும் திருக்குறளைப் பல்கால் படித்து ஊன்றி உணர்தற் பாலன. அரியதிறல்: ஊடின மகளிரை நாயகரோடு சேர்த்து வைப்பதில் சமர்த்தர் சேடர்' (பிரதாபருத்ரீயம்) அதனைமேற்கொளல் என்க. "விருந்தெதிர் கொள்ளவும்.........அரும் பெறற் புதல்வனை முயங்கக் காணவும், ஆங்கவிந்தொழியுமென் புலவி" (கலித். 75. 27—30.)

மேல்நி லத்துவந் துலாவிடுங் கடவுள்மெல் லியலார்
தாழ்நி லத்துறுங் கூவல்கள் நோக்கிநந் தமைப்போல்
கீழ்நி லத்தவர் தாமும்இங் கெய்தினர் கெழீஇப்போம்
ஊழ்நி லைத்தபல் பிலங்கொலாம் உவையென வியப்பார். 90

மேல் நிலையில் வந்து திரிதரு தெய்வமகளிர் தாழ்ந்த நிலத்தி லுள்ள கிணறுகளில் நீரில் நிழலாகத் தம்வடிவையே நோக்கிப் பாதல உலகத்துப் பெண்டிரும் நம்மைப் போல இவ்விடத்தெய்தி அளவளாவிப் போம் முறையாக நிலை பெற்ற பல பிலவழி போலும் என மயங்கி அதிசயம் அடைவர்.

கலி விருத்தம்

கால மன்றிக் கனிவுற மாதளைக்
கேல வான்புகை ஏற்றுதல் போல்மினார்
சால வெம்முலைச் சாந்தம் புலர்த்திடு
நீல தூமம் நிமிர்ந்தெழும் எங்கணும். 91

பழுத்தற்கு உரிய பருவம் அன்றி முன்னே பழுக்க வேண்டி மாதளைக்கு ஏற்கப் பெரும்புகையை ஏற்றுதல் போல மின்னலை ஒத்த மகளிர் பெரிதும் விரும்பப்படும் கொங்கைக்கண் பூசிய சந்தனத்தை உலர்த்துகின்ற கரிய அகிற்புகை எவ்விடத்தும் பொங்கியெழும்.

வாழை புகையால் பழுத்தல்: "இளமகளிர், செழுமென் குழற்கூட் டகிற்புகையால் திரள்காய்க்கதலி பழுத்து நறை, பொங்கு மதுரை" (மீனாட். பிள். 89) நீலம்—கரிய அகில்; ஆகுபெயர். கரியபுகையுமாம்.

கொன்னும் வார்குழற் கூட்டுங் குரூஉப்புகை
அந்ந லாரைப் பொதிவ தவர்தமைத்
தன்னின் நீங்கின மின்னெனத் தண்முகில்
உன்னி வந்து வளைந்திடல் ஒக்குமே. 92

பெருமை பொருந்திய நீண்ட கூந்தற்கு ஏற்றிய கரிய நிறப்புகை முன்னர்க்கூறிய மின்னலை ஒப்பவரை மறைப்பது, தண்ணிய மேகம் தன்னை விட்டுப் பிரிந்து சென்ற மின்னென எண்ணி வந்து வளைத்துக் கோடலை ஒக்கும்.

வார்கொள் கொங்கை மலர்க்கணை ஏறிடும்
ஏர்கொள் தொய்யிற் கருப்புவில் ஏந்துவார்
தார்ம லர்க்குழல் நாரியர் தாங்கள்தாம்
வீர வேள்படை என்றறி விப்பபோல். 93

கச்சணிதற்குரிய கொங்கையினிடத்து மலரம்பு தொடுத்தகரும்பு வில்லினை அழகிய கோலமாக மலர் மாலையை அணிந்த கூந்தலையுடைய மகளிர் தாமே வீரமமைந்த மன்மதன் சேனை என்றறிவித்தல் போலத் தாங்குவார்.

கூந்தற்குப் பெருமையாவது "பூந்துகிலால் பொன்னால் பொதிகை மலைப்பிறந்த, சாந்தத்தால் பொன்மணியால் சாலப் புனைந்தாலும், ஏந்திழையார் தங்கள் எழிலெலாம் நெய்த்திருண்ட, கூந்தல்தான் இன்றேல் குறையுங்காண் என்பாரும்" எனும் செய்யுளை நோக்குக.

தொய்யில்—முலையினும், தோளினும் எழுதுகோலம். திருநாவுக் கரசு நாயனார் இறைவன் உடைமை எனச் சூல, இடபக்குறி பெற்றமை காண்க. காமாரி யிடத்தன்றி வேறெவ்விடத்தும் தோல்வியுறாதவன் ஆகலின் 'வீரவேள்' என்றனர்.

நாறு தோட்டு நளினம் இரண்டினில்
மாறி மாறிவீழ் வண்டின மாமெனக்
கூறு மாதர் குழீஇருந் தாடுசீர்
ஏறும் அம்மனைப் பாட்டிசை எங்கணும். 94

மணங்கமழும் இதழினையுடைய இரண்டு தாமரை மலர்களில் மாறி மாறி வீழ்கின்ற வண்டின் குழாமெனக், கூறுதற்குரிய மகளிர் குழுமி யிருந்து ஆடுகின்ற அம்மனைக்குத் தகச் சீரேறு பாட்டின் இசை எவ் விடத்தும் உள்ளன.

அகங்கை இரண்டிற்குத் தாமரை மலரும், அம்மனைக்கு வண்டுகளும் ஒப்பன ஆகும். சீர்—தாள அறுதி; (மது-கா. 160 உரை.)

தங்கள் பண்மொழிக் கொக்குந் தகைமையை
அங்கண் ஆய்பவர் ஏய்ப்ப அணிமலர்ச்
செங்கை மெல்விரல் சேர்த்தித் திவவியாழ்
எங்கும் மங்கையர் பாடுவர் எண்ணிலார். 95

தங்களுடைய மொழியில் தோன்றுகின்ற இசைக்கு ஒக்குமோ எனும் அவ்வியல்பை அப்பொழுதே ஆராய்பவரைப்போல அழகிய மலரனைய சிவந்த கையின் மெல்லிய விரலால் வார்க்கட்டமைந்த யாழ் எழீஇ எண்ணிலராகிய மங்கையர் எவ்விடத்தும் பாடுவர்.

டி வேறு

கொங்கையின் எதிருறக் கூசி ஞெலெனப்
பொங்கொளித் தாளம்பின் ஒலிப்பப் பூவைமார்
மங்கலச் சதிநெறி வழாமல் ஆடரங்
கெங்கணும் நூபுரத் திசையின் ஈட்டமே. 96

கொங்கைகளின் எதிரில் (முன்) செல்ல நாணினாற்போல மிக்க ஒளியினையுடைய தாளம் நட்டுவர் கையில் இருந்து பின்னொலிப்ப, நாகணவாய்ப் பறவையை ஒப்போர் மங்கலமாகிய தாளவொற்றின் வழி பிறழாமல் ஆடுகின்ற நாடக சாலைகளில் எவ்விடத்தும் சிலம்பிசையின் திரண்ட ஒலியே உள்ளன.

மைந்தர்பந் தெறிதலும் மாடப் பித்திகை
சிந்துவ பன்மணி செழியன் செண்டெடுத்
துந்தியன் றேச்சலும் உலப்பி லாநிதி
தந்திடும் வடதிசைச் சாரற் குன்றுபோல். 97

உக்கிர குமார பாண்டியர் முன்னாள் செண்டு கொண்டு வடதிசையிலுள்ள சாரலமைந்த மேரு மலையை வீசித் தாக்கிய அளவிலே வற்றாப் பெருஞ் செல்வத்தை அம்மேரு தந்தது போல, ஆடவர் பந்தினை வீசிய அளவிலே மாளிகைச் சுவரில் தாக்க அச்சுவர்கள் பல்வகை மணிகளைச் சிந்துவன.

திருவிளையாடற்புராணம் மேருவைச் செண்டாலடித்த படலத்துள் இவ்வரலாறு காண்க.

மணிப்பொலம் பூண்சிறார் விடுக்கும் வான்படந்
தணித்தொறும் விடுந்தொறுந் தணிந்து நீள்வன
கணிப்பரு நந்திநெட் டுயிர்ப்பின் காற்றிடைப்
பணிப்பகை முன்னுழல் பரிசு காட்டுமே. 98

மணிகள் பதித்துப் பொன்னால் இயற்றப்பெற்ற அணிகலன்களைத் தரித்த சிறுவர் வானில் பறக்க விடுக்கும் காற்றாடி, கயிற்றை இழுக்குந்தொறும் விடுந்தொறும் தாழ்ந்தும் நீண்டும் பறத்தல், அளத்தற்கரிய ஆற்றலையுடைய இடபதேவரது பெருமூச்சாகிய காற்றில் கருடன் முன்பு சுழன்று திரியும் நிலைமையைக் காட்டா நிற்கும்.

வான்—பெரிய எனலும் ஆம். தணித்தல்—தாழ்த்துதல். 'தண்பதம்' (திருக். 548.) என்புழிப்போல. பணி பாம்பு. பணிப்பகை-கருடன். திருமால் ஊர்தியாகிய கருடனை இடபதேவர் காற்றாடிபோல உள்ளுயிர்ப்பினால் மூக்குவரை இழுத்தும் வெளி உயிர்ப்பினால் வானிற் செலுத்தியும் செருக்கழித்த வரலாறு தழுவக்குழைந்த படலத்துட் காண்க.

மாடமேல் சிறுமகார் விடுக்கும் வண்படம்
பாடல்சால் இருசுடர் தம்மைப் பற்றுவான்
நாடின திரிதரு நாக மென்னவும்
ஆடுவ விசும்பிடை அமரர் நோக்கவே. 99

மேல் மாடத்திலிருந்து சிறுவர் விடுக்கும் பெரிய காற்றாடிகள் புகழ் நிரம்பிய சந்திரசூரியர் தம்மைப் பற்றும் பொருட்டு நாடித்திரிதரு இராகு கேதுக்கள் எனக் கருதும்படி வானிடத்துத் தேவர்கள் வியந்து காண ஆடுவன. எனவும், இறந்தது தழீஇய எச்சவும்மை.

அட்டிலில் குய்ப்புகை அணங்க னார்குழற்
கிட்டிடும் அகிற்புகை மகத்தெ ழும்புகை
முட்டிமேல் பரந்தெங்கும் மொய்த்த தோர்கிலார்
வட்டவான் செழும்புகை வண்ண மென்பரே. 100

சமையல் வீட்டில் எழும் தாளிதப் புகையும், மகளிர் குழற்கு ஊட்டும் அகிற்புகையும், வேள்வியிலெழும் புகையும் அளாவி மேலே பரவி எவ்விடத்தும் செறிந்ததை உணரார் வட்ட வடிவாயுள்ள ஆகாயம் முதிர்ந்த புகை நிறம் என்று கூறுவர்.

மூவகைப் புகையை அடுத்தவான் தன்னியல் திரிந்தது.

## வேள்விச் சாலை

இந்திரன் ஊர்திஇங் கெய்தித் தன்முடிச்
சுந்தரஞ் சிதைதரத் துதையச் சீறித்தன்
மந்திரப் புகையினல் வலாரி ஊரெழில்
சிந்திடச் செய்வசீர் வேள்விச் சாலையே. 101

தேவேந்திரன் ஊர்தியாகிய மேகம் சிகரத்தின் மேல் தவழ்ந்து அழகுகெட நெருங்குதலால், சிறந்த வேள்விச்சாலைகள் சினந்து தன்னிடத்து மந்திர விதியாலமைந்த வேள்விப்புகையால் இந்திரனது நகரத்தின் அழகைச் சிதையச் செய்யாநின்றன.

வலனை அழித்தமையால் இந்திரன் வலாரி ஆயினன்.

எழுசீரடி யாசிரிய விருத்தம்

ஆகுதித் தழலின் அறுதொழி லாளர் அருமறை மனுஎடுத்
தோதி, ஓகையிற் சொரிநெய் தெறித்தெழும் பிதிர்வும் ஒலிபடு
புலிங்கமுங் கொண்டு, மேகமாய்ப் படர்ந்த தூமமே இடித்து
மின்னிநீர் பொழிவன போலும், ஈகைசால் வேள்வி மறுத்துழி
மாரி இன்மையே இதற்குறு சான்றால். 102

அவியிடும் வேள்வித் தீயினிடத்து அந்தணர் அரிய மறைப்பொருளாகிய மந்திரங்களை எடுத்துக் கூறி, உவகையொடும் மழைபோலச் சொரிந்த நெய்யினின்றும் துள்ளியெழும் சிறுதிவலைகளையும் ஒலியெழுகின்ற தீப்பொறிகளையும் கொண்டு மேகமாய்ப் பரவிய புகையே இடியொலி காட்டி மின்னி மழை நீரைச் சொரிவன எனலாம். தேவர் கொடைக்கடனாய் அமைந்த வேள்வி செய்யாதொழிந்த வழி மழை இன்மையே இந்நிகழ்ச்சிக்குப் பொருந்திய சாட்சி.

எடுத்தோதல்: அவ்வச் சடங்குகட்குரிய மந்திரங்களை ஓதுதல். இனி, எடுத்தல், படுத்தல் முதலிய ஓசையுடன் எனலுமாம். உடன் பாட்டானும், எதிர்மறையானும் அறிய வருதலின் உறுசான்று என்க. (இப்படலம் 78 ஆம் செய்யுட் குறிப்பினும் காண்க.) அறுதொழிலாவன: ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்பன. 'நெய்த் திவலை மழைத்திவலை' என்றமையான் 'நீர் நாண நெய்வழங்கியமையும்', 'எண்நாணப் பல வேட்டமையும்' பெறப்பட்டன.

### அந்தணர் இருக்கை

பூசுரப் பெயரின் இருமொழிப் பொருட்கும் உரிமைபூண் டுறுநிலைக் கேற்பக், காசினி வரைப்பின் நாள்தொறும் வழாது கமழ்சுவை அடிசிலான் அதிதி, பூசையும் வேள்வி அவியினுற் கடவுள் பூசையும் ஒருங்குசெய் கடப்பா, டாசற ஆற்றும் பார்ப்பன வாகைஅறிஞர்வாழ் இடம்பல அவண. 103

பூசுரர் எனப் பகுபதமாய இருமொழியின் பொருளுக்கும் உரிய ராய் நின்ற நிலைக்குத் தக நிலவுலகின் நாடொறும் வழுவாமல் நறுமணம் கமழும் சுவை மிக்க உணவான் அதிதி (விருந்தினர்) பூசையும், வேள்வியி லிடும் அவியால் தேவ பூசனையும் ஒருங்கு செய்யும் கடப்பாட்டினைக் குற்ற மறச் செய்து முடிக்கும் பார்ப்பன வாகையை மேற்கொண்ட அறிஞர் வாழும் இடங்கள் பல அவ்விடத்துள்ளன.

மானுடயாகம் என்னும் விருந்தும், தேவயாகம் என்னும் வேள்வி யும் சிறக்க முடித்து வாகை சூடியோர் என்க.

### அரசர் இருக்கை

தகைபெறு வலியால் தெம்முனை முருக்கிக் காவற்சா காடுகைத் தெங்கும், திகிரிஒன் றுருட்டி முறையுளி செங்கோல் செலுத்துநர் கள்வர்மற் றுயிர்கள், பகைவர்தாம் தமர்என் றிவ்வயின் எய்தும் பயந்தடுத் துலகெலாம் புரக்கும், மிகுபுகழ் படைத்த அரசியல் வாழ்க்கை வீரர்வாழ் இடம்பல அவண. 104

தகுதி பெற்ற வலிமையால் பகைவர் போர்க்களத்தை அழித்துக் காத்தலாகிய சகடத்தைச் செலுத்தி எவ்விடத்தும் ஆணையாகிய சக்க ரத்தை ஒன்ருக்கி முறையொடு செலுத்தி அரசர், திருடர், உயிர்கள், பகைவர், தாம், தம் சுற்றம், இவ்விடங்களினின்று வரும் பயத்தைக் குடி களுக்குப் புகாமற் றடுத்து உலக முழுதும் காக்கும் மிகுபுகழைப் படைத்த அரசியல் வாழ்க்கையுடைய வீரர்கள் வாழும் இடங்கள் பல அவ்விடத்திலுள்ளன.

தகைபெறுவலி-தகைதல் (பிறரிடம் புகாது சிறை செய்யப்)பெற்ற வன்மையுமாம். "காவற் சாகாடு கைப்போன்" (புறநா. 185. 2.)

### வணிகர் இருக்கை

மேதகு விரிஞ்சன் அரும்பெறல் குறங்கை விழைதகை யாய்-எனப் படைத்தோர், ஏதிலர் பொருளும் தம்மபோல் பேணி வாணி-பம் ஈட்டுநர் வடாது, மாதிரத் தலைவன் புறங்கொடுத் திரியும் வளத்தினர் மறைநெறி ஒழுக்கம், ஆதரித் துயர்ந்த விழுக்குடி வணிகர் அமர்ந்துவாழ் இடம்பல அவண. 105

மேன்மை பொருந்திய பிரமனுடைய துடையைப் பெறலரிய விருப்பம் அமைந்த தாய் என்னும்படி அதனிடத்துத் தோன்றியவர்,

பிறர் பொருளையும் தம்முடைய பொருளைப்போலப் போற்றிவாணிகத்தால் பொருள் தேடுவோர். வடதிசைக்குத் தலைவனாகிய குபேரனும் தோற்றோடும் நிதிச் செல்வர். வைதிக ஒழுக்கங்களை விரும்பி ஒழுகுதலின் உயர்ந்த மேலான குடி வணிகர் விரும்பி வாழும் இடங்களும் பல அவ்விடத்தன.

வணிகர்முறை: "வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப், பிறவுந் தமபோற் செயின்" (திருக். 120) வணிகர் பிரமன் துடையிற் பிறந்தவர் என்பது மிருதி நூல் வழக்கு.

## வேளாளர் இருக்கை

முருகுயிர்த் தலர்ந்த மலரவன் தனது முகமுதல் உறுப்பெலாந் தாங்கிச், சரணமென் றுரைக்கும் உறுப்பினில் தோன்றிச் சாற்றும்அம் முகமுதல் உறுப்பின், வரும்ஒரு மூவர் தங்களை உழவின் வண்மையான் நிலைபெறத் தாங்கும், உரியவே ளாண்மை பூண்டபேர் தமக்கே உடையவர் இடம்பல அவண. 106

நறுமணம் கமழ்ந் தலர்ந்த மலரிலுறை பிரமன் தன்னுடைய முக் முதலாம் உறுப்புக்களை எல்லாம் தாங்குதலின் சரணமென்று கூறப்பெறும் உறுப்பினில் தோன்றி முகம், தோள், துடை என்னும் உறுப்புக்களில் தோற்றிய ஒப்பற்ற அந்தணர், அரசர், வணிகர் என்னும் இம் மூவகையோரையும் உழவு வளத்தால் நிலைபெறத் தாங்குதற்குரிய உபகாரம் எனும் பொருளை உடைய வேளாண்மையைத் தமக்கே உடைமையின் வேளாளர் ஆவார் இடங்கள் பல அவ்விடத்தன.

## மற்றையோர் இருக்கை

நால்வகை வருணத் துயர்குடிப் பிறந்த நல்லவர் இருக்கையைச் சூழ்வ, சால்புறும் அவரில் உயர்ந்தவர் இழிந்தோர் தங்களுள் குழீஇ மணந் தளித்த, பால்படும் ஏனைச் சாதிபே தத்தோர் பலர்களுந் தத்தம நெறியின், சீலராய்த் துவன்றி மரபுளி ஒழுகுந் திருமலி பல்வகைக் குடியே. 107

வேற்றுமை தெரிந்த நாற்பாலவாகிய வருணத்துள்ளும் உயர்ந்த குடியில் பிறந்த நல்லவர்தம குடியிருப்புக்களை அமைதிமிகும் அவருள் உயர்ந்தவரும் தாழ்ந்தவரும் தங்களுட்குழுமி மணம் புணர்ந்தீன்ற பிரிவு பெறும் பிறசாதி வேறுபாட்டினர் பலரும் தத்தம் மரபுக்கும் நிலைக்கும் வாய்ந்த நெறியின் வரும் ஒழுக்கத்தையுடையராய் நெருங்கி மரபொடு பொருந்த ஒழுகும் செல்வம் மிக்க பல்வகையான குடிகள் சூழ்வன.

## கழகம்

வளர்இலைத் தருப்பை நுனியெனக் கூர்த்த மதியினர் தொன்றுதொட் டுடைய, பளகறு கேள்விப் பயிற்சியர் மேற்கோள் முதற்பகர் மூன்றினும் தெருட்டி, இளையருக் குணர்த்தும் இலக்கண நெறியோர் ஈரிரு புலமையர் தம்முள், களவிகல் இகந்து குழாங்குழா மாகிக் கலைதெரி கழகமும் பலவால். 108

வளர்ந்த தருப்பை இலேயின் நுதியெனக்கூரிய அறிவினேயுடையவர்; தொன்று தொட்டு வருகின்ற குற்ற மற்ற செறிந்த கேள்விச் செல்வர்; மேற்கோள் முதலாகப் பேசப்பெறும் மூன்றனும் இளேயருக்குத் தெளிவுபடுத்தி உணரச்செய்யும் அளவை நெறியைக் கைக்கொள்வோர் நால்வகைப் புலமையார்; தங்களுள் உட்பகை புறப்பகை தவிர்ந்து, குழாம், குழாமாகி நூல்களே ஆராய்கின்ற கழகங்களும் பல உள்ளன.

கூரிய பரந்த அறிவு: "அஃகி அகன்ற அறிவு" (திருக் 175) தொன்று தொட்டுடைய பளகு—அறியாமையாகிய குற்றம். மூன்று, மேற்கோள், ஏது, எடுத்துக்காட்டு. நால்வகைக் கவிகள்: கவி, கமகன், வாதி, வாக்கி. கவி: ஆசு, மதுரம், சித்திரம் வித்தாரம் என்னும் நாற்கவி பாடுவோன். கமகன்: அரியபொருளேச் செம் பொருளாகப் பாடுவோன். வாதி: ஏதுவும், மேற்கோளும் எடுத்துக்காட்டுடன் பிறர் மதத்தை மறுத்துத் தன்மதத்தை நிறுத்துவோன். வாக்கி: உறுதிப்பொருள் நான்கனேயும் கேட்கவும், விரும்பவும் இனியனவாக விரித்துக் கூறுவோன்.

### சைவ மடம்

காமனே முனிந்து நெடுஞ்சடை தரித்துக் கவின்றகல் லாடை-
மேற் புனேந்து, யாமெலாம் வழுத்தும் துறவியென் றிருந்தும்
ஒருத்திதன் இளமுலேச் சுவடு, தோமுறக் கொண்டார் எனச்சிறை
யிடல்போல் சுடர்மனக் குகையுள் ஏகம்பத்(து), "ஓம்" மொழிப்
பொருளே அடக்கி ஆனந்தம் உறுநர்வாழ் இடம்பல உளவால். 109

மன்மதனே எரித்து, நீண்ட சடைமுடிதாங்கி, அழகிய காவிக்கல் தோய்த்த உடை அழகுற அணிந்து, நாம் துதி செய்கின்ற துறவி என வீறு பெற இருந்தும் ஒருத்தியாகிய உமையம்மையினது இளமை அமைந்த கொங்கைத் தழும்பைத் தமது துறவற நிலேக்குக் குற்றமாகக் கொண்டாரென்று சிறைச்சாலேயில் அடைந்தாற்போலத் தம்முடைய ஒளிகிளர் உள்ளத்துள் திருவேகம்பத் தெழுந்தருளியுள்ள ஓம் என்னும் மொழியின் பொருளாகிய இறைவரை அம்மந்திரத்தைத் தியானித்துப் பேரின்படையும் துறவோர் வாழும் இடங்கள் பல உள்ளன.

### திருக்கோயில்

இருள்மலந் துமிக்குஞ் சிவாகம முறையின் ஈரிரு பாதமும்
அனுட்டித், தருள்பெறும் ஆதிசைவர்களாதி அவாந்தர சைவரீ
ரூனோர், மருவிவாழ் மாட மாளிகைப் பத்தி மருங்குடுத் துயர்வனப்
பினதால், தெருள் தரும் அனுதி சைவர் வீற் றிருக்குந் திவளொளிப்
புரிசைஏ கம்பம். 110

சிவஞானத்தை உயிர்களுக்கு அருளும் அனுதி சைவராகிய திருவேகம்பப் பெருமான் எழுந்தருளியுள்ள திருக்கோயில், ஆணவ மல வலியைக் கெடுக்கின்ற சிவாகம முறையிற் சரியை, கிரியை, யோகம்,

ஞானம் எனும் நாற்பாதங்களின் வழி ஒழுகித் திருவருளைப் பெற்ற ஆதி சைவர் முதல் அவாந்தர சைவர் அடங்கச் சைவர் யாவரும் தத்தமக் குரிய இடங்களிற் பொருந்தி வாழ்தற்கிடனாகிய மாடமாளிகை வரிசைகள் சுற்றிச் சூழ்ந்துயர்ந்த அழகுடைய தாகும்.

மலம் நித்தியப் பொருளாகலின் அதன் வலியை என்க. சிவாக மம் : காமிக முதலிய இருபத்தெட்டும்.

## திருமதில்

கலி விருத்தம்

விண்ணழி வுறநிமிர் வீற டக்குவான்
அண்ணல்ஆ ணையின்இமில் ஊர்தி ஆண்டுறீஇ
எண்ணில உருவுகொண் டிருத்து நீரதே
பண்ணமை மதில்மிசை இடபப் பந்தியே. 111

செயல் முற்றுப்பெற்ற மதில்மேலுள்ள இடப வரிசை, விண் ணுலகு பெரிதும் அழியும்படி உயர்கின்ற மதிலின் செருக்கை அடக்கும் பொருட்டுச் சிவபிரானுடைய கட்டளையால் திமிலுடைய இடபம் அங்கு வந்து அளவில்லாத வடிவு கொண்டு வளராதபடி அழுத்துகின்ற இயல் பினை ஒத்துளது.

## திருக் கோபுரம்

ஒன்பது கோள்களும் உலாவி வைகுவான்
ஒன்பது மாடம்அங் கூழிற் செய்தன
ஒன்பது மணிகளின் இயன்ற ஒண்மைசால்
ஒன்பது நிலைதழீஇ ஓங்குங் கோபுரம். 112

நவக்கிரகங்களும் உலாவித் தங்குதற்கு ஒன்பது மாளிகைகள் அங்கு அடுக்காகச் செய்தாற் போல ஒன்பது வகை மணிகள் கொண்டி யற்றப்பட்ட ஒளிமிகுந்த ஒன்பது நிலைகளைத் தழுவிக் கோபுரம் உயர்ந்து தோன்றும்.

கார்முகில் உடுக்கையாக் கதிரின் வானவன்
மார்பணி மணியதா வட்ட மாமதி
சீர்நுதற் பூதியாச் செல்வக் கோபுரம்
பார்புகழ் புருடனில் ஓங்கும் பான்மைத்தே. 113

கரியமேகம் ஆடையாகவும், சூரியன் மார்பின் மணியாகவும் பூரணச் சந்திரன் அழகிய நெற்றியிலணியப் பெற்ற விபூதி ஆகவும் கொண்டு செல்வச் சிறப்பினையுடைய கோபுரம் உலகரால் புகழப்பெறும் ஓராடவர் போல உயர்ந்து ஓங்கும் இயல்பினது. விபூதி – சிறந்த செல்வம்.

நச்சியே கம்பரைத் தொழுது நாள்தொறுங்
கச்சியில் வாழ்பவர் இறுதிக் காலையில்
அச்சிவ லோகத்தை அணுக வைத்ததோர்
பொச்சமில் ஏணியும் போலுங் கோபுரம். 114

கச்சியில் எழுந்தருளியுள்ள திருவேகம்பநாதர் பொய்த்தலின்றி அன்பு செய்து நாளும் வணங்கி வாழ்பவர் உயிர்விடுங் காலத்தில் சிவ லோகத்தை ஏறி அடைவதற்கு வைக்கப்பெற்ற ஒப்பற்ற ஏணியையும் ஒக்கும் கோபுரம்.

பொச்சம் இன்றி நச்சுதல்: "பொக்கம் மிக்கவர் பூவும்நீ ரும்கண்டு, நக்கு நிற்பர் அவர்தமை நாணியே" (திருநா.)

எனனும் அருள்மொழி காண்க.

பரிதியின் நிழல்செயக் கதிர்க்கும் பன்மணித்
திருவியல் கோபுரச் செல்வ வாய்தலின்
முரசுகா லந்தொறும் முழங்குஞ் செவ்வியென்
றருகுற அமரரை அழைத்தல் மானவே. 115

தனது ஒளி சூரியன்மேற் படும்படி ஒளியை விடுகின்ற பல மணிகளைக் கொண்டு அழகுற இயற்றப் பெற்ற கோபுரம் அமைந்த செல்வத்திருவாயிலில் தேவரை வணங்க வருதற்குரிய காலம் ஈதென அழைத்தலை ஒப்பக் காலந்தோறும் முரசு முழங்கும்.

சூரியனை ஒப்ப ஒளிவிடும் எனினும் ஆம். செல்வவாய்தல்: "திருவா யிலினைப் பணிந்தெழுந்து செல்வத் திருமுன் றிலை அணைந்து" (திருத். திருநா) காலம், ஆறுகாலம் முதலியன. "காலம் நன்குணர்ந்து சினகரம் புகுந்து" (சோண.) 'விண்ணுலகிற்குக் கேட்கும் அளவினது முரசொலி

## கொடி

மடுத்தஐம் பாசம்ஆ வரணம் ஐந்தனல்
தடுத்தருள் கோயிலில் தம்பி ரான்எதிர்
எடுத்தபூங் கொடிமிசை இடபம் வான்மிசை
அடுத்ததோர் இடபத்தோ டளவ ளாவுமே. 116

உயிரை அகப்படுத்திய ஐம் பாசம் போலத் திருமதில் ஐந்தனல் தடுத்து அருள் செய்கின்ற திருக்கோயிலில் உயிர்களுக்குத் தலைவனாகிய பெருமான் திருமுன்னர் தூக்கிய அழகிய கொடியில் எழுதப்பெற்ற இடபம், ஆகாயத்தில் அடுத்ததோர் இடபராசியொடு கூடி நிற்கும்.

இனம் இனத்தொடு சேரும். ஐம்பாசமாவன: ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதானம் என்பன. ஐம்பாசம் மடுத்து அதனுள் விளங்கும் உயிரிடை மருவும் பதியை, ஐம் மதிலுள் திகழும் இடபத்தின் முன் விளங்கும் அருட்குறியொடும் வைத்துத் திருக்கோயிலின் அமைப் பைக் காண்க.

## தூபி

தங்குலத் திறைவிசெய் பூசைச் சால்பினை
அங்கண்நன் மகிழ்வொடுங் காணும் ஆசையின்
எங்குள வரைகளும் ஈண்டி னலெனப்
பொங்கெழில் சிகரங்கள் பொலிந்து தோன்றுமால். 117

தமது குல மலையரையன் பொற்பாவையாகிய உமையம்மையார் செய் பூசையின் சிறப்பினைக் கண்டு தொழும் விருப்பினால் எங்குள்ள மலைகளும் அங்கு வந்து நெருங்கினாற் போல மிகுந்த அழகினையுடைய (கோபுரத்துத்) தூபிகள் பொலிந்து காணப்பெறும்.

### மண்டபம்

கன்மநோய் குடைபவர் கடப்பச் செய்திடும்
பன்மலர் துவன்றிய தீர்த்தப் பாங்கரில்
பொன்மலர் மண்டபம் பொலிந்து தோன்றுவ
தென்மணிப் பேழையைத் திறந்த மூடிபோல். 118

மூழ்குவோர் இருவினையாகிய, நோயை நீக்கும் பல் வகை மலர்கள் செறிந்த தீர்த்தத்தின் கரையில் பொன்னொளி விரிந்த மண்டபம், அழகிய மணிகளைக்கொண்ட பெட்டிகளைத் திறந்த மூடிகளைப் போலத் தோன்றுவன.

### வேள்விச் சாலை

அறுசீரடி யாசிரிய விருத்தம்

சேந்தபொற் குண்டத் தோங்குஞ் சிகைத்தழல் மிசைஏ கம்ப
வேந்தைஆ வாகித் தேத்தும் புகைபொதி வேள்விச் சாலை
ஏய்ந்தசீர்த் தகர வித்தை முறைப்படி இதயக் கஞ்சப்
பூந்தழற் சிகைமேல் ஈசற் போற்றுமா யவனை ஒக்கும். 119

சிவந்த அழகிய வேள்விக் குண்டத்தி லெழும் தீக்கொழுந்தின் மேல் விளங்கி நின்றருள் செய்யும்படி திருவேகம்பப் பெருமானை எழுந்தருளுவித்துத் துதிக்கின்ற புகை நிரம்பிய வேள்விச்சாலை, சிறப்புப் பொருந்திய தகர வித்தையின்வழி உள்ளமென்னும் தாமரை மலரிற் பொலிவமைந்த சுடர்க் கொழுந்தின்மேற் சிவபிரானை எழுந்தருளுவித்துப் போற்றும் திருமாலை ஒக்கும்.

### திருவேகம்பர்

கோழ்அரை காம்பாச் சாகை வட்டம்மேல் குடையாப் பொற்பின்
வாழிய ஒருமா மீது வளநிழல் கவிப்ப ஆங்கண்
ஊழ்முறை உயிர்கட் கெல்லாம் ஐந்தொழில் ஓம்பி எம்மான்
ஆழ்புனல் உலகம் ஏத்த அரசுவீற் றிருக்கும் மன்னோ. 120

செழித்த அடிமரம் காம்பாகவும், கிளைகள் வட்டமாக அமைந்த மேற்குடையாகவும் அழகிய (ஏகாம்பரம்) ஒரு மாமரம் மேல் வளவிய நிழலைத்தர அந்நிழலில் படிமுறையாக உயிர்களுக்கெல்லாம் (பருவம் வர) ஐந்தொழிலை நிலைபெறச் செய்து எம்பெருமான் ஆழ்ந்த நீர் (ஆழி) சூழ்ந்த உலகம் துதிக்க அரசு செயா நிற்கும்.

மாமரம் வெண் கொற்றக்குடை. ஐந்தொழிலாவன: படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்பன. எவ்வுலகுள்ள உயிர் வருக்கங்களையும், உடம்பையும், உயிரையும் காத்து இங்கு வீற்றிருத்தல் எண்ணத் தக்கது.

பற்பல தேய மெல்லாம் பாங்குடைத் தொண்டை நாடு
பற்பல சங்க நாப்பண் படர்வலம் புரியாம் அங்கண்
பற்பல நகர மெல்லாம் வட்டமாப் படைத்த காஞ்சி
பற்பல வலம்பு ரிக்குள் சலஞ்சலப் பணில மாமால். 121

பற்பல நாடுகள் சூழ்ந்துற நடுவில் விளங்கும் தொண்டை நாடு, ஆயிரம் இடம்புரிச் சங்குகளின் நடுவில் இருந்த வலம்புரிச் சங்கொக்கும். பலப்பல நகர்களைச் சூழக்கொண்டு இடைநின்ற காஞ்சிபுரம், ஆயிரம் வலம்புரி சூழ நின்ற சலஞ்சலச் சங்கம் ஒக்கும்.

அத்திருக் காஞ்சி வைப்பின் அலகிலாத் தலங்கள் தம்முள்
பத்திசேர் மாடக் கம்பம் பாஞ்சசன் னியமாம் அந்த
உத்தமச் சுரிமு கத்துள் விலைவரம் புணராச் சாதி
முத்தமே ஒருமா மூலத் திருந்தருள் முக்கண் மூர்த்தி. 122

திருவினையுடைய கச்சி நகர்க்கண் உள்ளபல தலங்களினும் வரிசைபெற அமைந்த மாளிகைகளைக் கொண்டிடையே விளங்கும் திருவேகம்பம், ஆயிரம் சலஞ்சலச் சங்குகளின் இடையே வீற்றிருக்கும் பாஞ்ச சன்னியச் சங்கினை ஒக்கும். அவ்வாறுயர்ந்த சங்கினுள் விலை வரம்பறுக்க இயலாத உயர்ந்த முத்தினை ஒப்பவர் ஒப்பற்ற மாவடியில் எழுந்தருளியிருந்து அருள் செய்கின்ற முக்கண் முதல்வர்.

பன்மணி வெயில்கள் கான்று படர்இருள் சீப்ப வட்டப்
பொன்மதில் சூழ்ந்து நாப்பண் சதாசிவப் புத்தேள் வைகும்
தன்மையால் கச்சி மூதூர் தரைமிசை உயிர்கள் செய்த
கன்மம்ஓர்ந் தளிப்பான் வந்த கதிர்செய்மண் டிலமே யாமால். 123

கச்சிப்பழம் பெரும்பதி, பலமணிகள் ஒளியை உமிழ்ந்து பரவிய இருளை ஓட்ட, வட்டமும், பொன்மயமும் உடைய மதில் சூழ்ந்து விளங்க நடுவில் சதாசிவ மூர்த்தி எழுந்தருளியிருக்கும் இயல்பினுல் உயிர் செய் வினைப்பயன்களை அறிந்து அளித்தற் பொருட்டுத் தரைமிசை வந்த சூரிய மண்டிலத்தை ஒக்கும்.

விலக்கிலா அறநூல் சொன்ன முனிவரும் விதிவி லக்காம்
இலக்கியம் இதன்பால் கண்டே இலக்கணம் விதித்தார் போலும்
அலக்கண்நீத் தறம்எண் ணான்கும் அம்பையே வளர்க்கு நீரால்
கலக்கமில் அறங்கட் கெல்லாம் ஆகரங் காஞ்சி யன்றோ. 124

துன்பங்களைத் துடைத்து முப்பத்திரண்டு அறங்களையும் உமையம்மையே வளர்க்கும் இயல்பினுல், என்றும் நிலை கலங்காத அறங்கட்கெல்லாம் உறைவிடம் காஞ்சியே யாகும். ஆகலின், யாவருங் கைக்கொள்ள அற நூலை அருளிய முனிவரும் அறமாகிய இலக்கியமுணர்ந்து விதி விலக்காம் இலக்கணத்தை விதித்தனர் போலும்!

எள்ளினின் றெண்ணெய் எடுப்பது போல இலக்கியத்தினின் றெடுக்கப்படும் இலக்கணம்.

உவரிசூழ் உலகவைப்பின் உரையமை கேள்வி சான்ற
கவிகளென் றுரைப்போர் தம்முள் காஞ்சியைப் புகழார் இல்லை
அவரெலாம் புகழ்ந்தும் இன்னும் உலப்புறா அதன்சீர் முற்றுஞ்
சிவ்நிறை கல்வி சாலாச் சிறியனோ கிளக்க வல்லேன். 125

கடல் சூழ்ந்த நிலவுலகில் பொருளமைந்த கேள்வி நிரம்பிய கவிக ளென்று பேசப்படுவோர் தம்முள் காஞ்சி நகரைப் புகழாதார் ஒருவரு மிலர். புலவர் யாவரும் புகழ்ந்தும் முற்றுப்பெறாத அதனைச் சிற்றறி வினேன் ஆகிய யானோ எடுத்துக் கூற வல்லமையுடையேன்.

இத்திருக் காஞ்சி வைப்பின் பலதளி யிடத்தும் மேவி
அத்தகு கம்ப வாணர் அவரவர்க் கருளிச் செய்த
உத்தமக் காதை யெல்லாஞ் சூதன்அன் றுரைத்த வாறே
முத்தமிழ் அறிஞர் தேற மொழிபெயர்த் துரைப்பேன் உய்ந்தேன்.

காஞ்சிபுரத்தில் பல திருக்கோயில்களிலும் மேவித் திருவேகம்பப் பெருமான் அவ்வவர்க்கு வேண்டிய நலங்களை அருளிய வரலாறுகளைச் சூதபுராணிகர் அருளியவாறே முத்தமிழ் அறிஞர் தெளிய வடமொழியி னின்றும் தமிழ்மொழியிற் பெயர்த்துரைப்பேன் பிறவியினின்றும் தப்பினேன்.

நகரப் படலம் முற்றுப் பெற்றது.

ஆகத்திருவிருத்தம் 298



# பதிகம்

எழுசீரடி யாசிரிய விருத்தம்

சிவபரஞ் சுடரைக் காண்டகும் ஏதுச் செய்தவர் வினவிய வாறும், தவலருஞ் சிறப்பின் நந்திஎம் பெருமான் சனற்குமா ரனுக்குவெஞ் சாப, நவையறுத் தருளிச் செவியறி வுறுத்த நலமெலாஞ் சூதமா முனிவன், அவர்தமக் கியம்பிப் பிஞ்ஞகன் உமையாட் கருளிய உண்மைசெப் பியதும். 1

பதிகம்—பலவகைப் பொருள்களையும் தொகுத்துக் கூறுதல்- சமட்டி ஆகக் கூறுதல் என்ப வடமொழியாளர்.

சிவபெருமானை எளிதில் தரிசிக்கத் தகுந்த உபாயம் (சாதனம்) யாதெனத் தவஞ்செய்த முனிவரர்கள் சூத முனிவரை வினவியதும், கெடாத மேன்மையை யுடைய திருநந்தி தேவர் சனற்குமாரருக்குத் தாமே சாபம் தந்து பின்னர் நீக்கி உபதேசம் செய்த நலத்தையும், சிவ பெருமான் உமையம்மைக்குக் கூறியருளிய உண்மையையும் எடுத்துக் கூறியதும்.

செய்தவர், தவம் செய்தவர் என மாறுக. செவியறிவுறூஉ — உபதேசம். பிஞ்சகன்–இளம்பிறை, கங்கை, கொன்றை முதலிய தலைக் கோலம் உடையவன்;

கன்னியாழ்க் கிழவன் வரம்பெறு காரைக் காட்டினிற் பூசனை உஞற்றி, மின்னவிர் மணிப்பூண் சிவியெனும் மகவான் வீடுபே றெய்திய வாறும், பொன்னுடைப் புத்தேள் புண்ணிய கோடிப் புனிதனை அருச்சனை யாற்றி, அன்னஏ றுகைக்கும் அண்ணலோ டுலகை உண்டுமீட் டுதவிய வாறும். 2

மிதுனம், கன்னியா ராசிகளுக்குரிய புதன் வரம்பெற்ற திருக்கச்சி நெறிக் காரைக்காட்டினிற் சிவபிரானைப் பூசனை யாற்றி மின்னலைப்போல ஒளி வீசுகின்ற மணி அணியைப் பூண்ட சிவி யெனும் இந்திரன் வீடு பேற்றினை அடைந்ததும்; திருமகள்நாயகனாகிய திருமால் புண்ணியகோடி யில் உள்ள தூயோனைப் பூசனை செய்து அன்னம் ஊரும் பிரமனொடு உலகை உண்டு (ஒடுக்கி) மீளப் படைத்ததும்;

மிதுனம் கன்னி ராசிக்குரியோன்–புதன். உஞற்றி– செய்து. மக வான்–அசுவமேதம் நூறு செய்தோன்; இந்திரன்.

அத்தகு மாயோன் வலம்புரிக் களிற்றை அடியிணை வணங்குபு தனாது, கைத்தலத் திழந்த தெம்மருள் சிலைப்பிற் கதிர்வளை தனைப் பெறு மாறும், மெய்த்தபே ரன்பின் மலர்மிசைக் கடவுள் வேள்வி- செய் குயர்சிவாத் தானத், துத்தமன் அருளான் மாயனோ டுலகை உண்டுமீட் டுதவிய வாறும். 3

அச்சிறப்பினையுடைய திருமால் வலம்புரி விநாயகர் திருவடிகளை வணங்கிப் பகைவர் மனமயங்குதற்குக் காரணமாகிய ஒலியினையுடைய பாஞ்ச சன்னியத்தை மீளப்பெற்றதும், பிரமன் உண்மை யன்பொடும் யாகம் செய்து உயர்ந்து சிவாத்தானத்துப் பெருமான் அருளைப் பெற்றுத் திருமாலையும், உலகையும் உண்டு, மீளப்படைத்தவரலாறும் ;

கருகிருள் விடத்தை இறையவன் பருகக் காட்டிய அறக்கடை தணப்ப, இருமறை விதியாற் கடவுளர் மணிகண் டேசனை ஏத்திய வாறும், மருளுறு செருக்கிற் பொய்யுரை கிளந்த வல்வினை கழிதர வியாதன், பொருவருஞ் சார்ந்தா சயப்பெரு வரைப்பிற் பூசனை இயற்றிய வாறும். 4

பல்லுயிரும் கருக வந்த ஆலகால விடத்தை இறைவன் பருகுதற்குக் காரணமான பாவம் நீங்கப் பெரிய வேத விதிப்படி தேவர்கள் மணிகண்டேசப் பெருமானைப் பூசித்ததும் ; வியாச முனிவரன் மயக்கம் மிகு செருக்கினால் பொய் கூறி அதனால் வந்த தீவினை நீங்க ஒப்பரிய சார்ந்தாசயத்தில் இறைவனைப் பூசனை செய்ததுவும்;

அறன் கடை – பாவம் (திருக். 142)

வீட்டினை விழைந்தேழ் முனிவரும் பூசை வேறுவே றியற்றிய வாறும், கோட்டமில் கொள்கைப் பராசர முனிவன் தொழுதுதன் தாதையர்க் கொன்று, மாட்டிய அரக்கன் குலத்தொடு மடியச் செற்றதும் விளக்கொளி மாயோன், நாட்டம்மூன் றுடைய நாதனைப் பரவி நதிதடுத் தோம்பிய வாறும். 5

அத்திரி முதலிய முனிவர் எழுவரும் வீடு பேற்றினை விரும்பித் தனித்தனி இடங்களில் (சப்த தானம்) வழி பாடு செய்ததும்; மாறுபாடில்லாத கொள்கையையுடைய பராசர முனிவர் பூசை இயற்றித் தன் தந்தையைக் கொன்ற சுதாசன் என்னும் அரக்கன் தனது குலத்தோடு அழியத் தான் செய்த வேள்வியிற் கொலை செய்ததும்; விளக்கொளி வடிவமாய்த் திருமால் முக்கண் முதல்வனை வணங்கி வேகவதி நதியைத் தடுத்துப் பிரமன் யாகத்தினைக் காத்ததும்;

கொன்று மாட்டிய, ஒருபொருட் பன்மொழி. நாட்டம்—கண்.

ஈண்டிய புகழ்முத் தீச்சரம் பரசி ஈன்றவள் சிறையினை விடுவித், தாண்டகைக் கலுழன் நஞ்சுபில் கெயிற்றுப் பணிகளை அலைத்தெழு மாறும், நீண்டவன் உணராத் திருவடி போற்றி நெளியுடற் பணிகளும் எம்மான், பூண்டுகொண் டருளப் பெற்றமே தகவாற் புள்ளினை வினவிய வாறும். 6

ஆளுந் தன்மையினையுடைய கருடன், செறிந்த புகழமைந்த முத்தீசப்பெருமானை வணங்கி மாற்றவள் வைத்த சிறையினின்றும் தன் தாயை வீடுகொண்டு விடத்தை உமிழ்கின்ற பற்களையுடைய பாம்புகளை

வருத்தி எழும் வரலாறும்; நெளிந்து செல்லும் உடம்பினை யுடைய பாம்புகளும் நெடிய வடிவு கொண்ட திருமால் அறியாத்திருவடிகளைப் போற்றி எமமிறைவன் அப்பாம்புகளை அணிகலமாகப் பூண்டு கொண்ட வலிமையினால் கருடனை நோக்கிச் 'சுகமோ' என்று வினவியதும்; கருடனால் அலைக்கப் பெற்ற அப்பாம்புகள் அக்கருடனை அலைக்கும் வன்மை பெற்றமை குறித்துப் 'பணிகளும்' என்றோதினர்.

இறுதிநா ளிருவர் காயம்மேல் தாங்கி வியாழமும் இயமனும் வழுத்த, மறுவறு காயா ரோகண வரைப்பின் எம்பிரான் மன்னிய வாறும், அறுகணி வேணி மஞ்சள்நீர்க் கூத்தர் அடியிணை அருச்சனை செய்து, தெறுபுலன் அவித்த சித்தர்எண் ணரிய சித்திபெற் றுய்ந்திடு மாறும். 7

ஊழிக்காலத்தில் பிரமவிட்டுணுக்களுடைய உடலைத் தாங்கி வியாழனும் (குரு), இயமனும் துதிக்கக் குற்றமற்ற காயாரோகண மென்னுந்திருத்தலத்தில் எழுந்தருளியதும்; அறிவைக் கெடுக்கின்ற ஐம்புலன்களை வென்ற சித்தர்கள் அறுகினை யணிந்த சடைமுடியை யுடைய இறைவனை மஞ்சள் நீர்க்கரையில் அருச்சித்துச் சித்தி பெற்றதும்;

மாதவன் பரசிப் பிருகுவன் சாப வன்பயந் தபப்பெறு மாறும், மேதகும் ஒருசார் முனிவரர் மதங்கன் வெண்கரி போற்றிய வாறும், ஏதமில் வெள்ளி மொழிப்படித் ததீசி இட்டசித் தீசனைத் தொழுது, கோதறு வயிர யாக்கைபெற் றோங்கிக் குபன்றனைப் புறங்கண்ட வாறும். 8

திருமால் வணங்கிப் பிருகு முனிவருடைய கொடுஞ்சாப வினைவின் பெரும் பயம் கெடப் பெற்றதும்; மேன்மை பொருந்திய ஓர் சூழலில் முனிவரும், மதங்கரும், ஐராவதமும் போற்றியதும்; ததீசி முனிவர் குற்றமில்லாத சுக்கிரன் ஆணைப்படி இட்டசித்தீசனைத் தொழுது குற்றம் நீங்கிய வச்சிர சரீரம் பெற்றுயர்ந்து குபன் என்னும் அரசனைத் தோற்றோடச் செய்ததும்;

அந்தணன் கச்ச பாலயத் திறைஞ்சிப் படைத்திடும் ஆற்றல்பெற் றதுவும், பைந்துழாய்க் கூர்மம் ஆயிடைப் பரசிப் பாதகந் தவிர்ந்துய்ந்த வாறும், மைந்துறு மாண்ட கன்னிமா முனிவன் வழுத்திவான் அரம்பையர் ஐவர், சந்தனந் திளைக்கும் இளமுலைப் போகந் தரைமிசை நுகர்ந்துவாழ்ந் ததுவும். 9

பிரமன் கச்சபாலயத்தில் வணங்கி உலகைப் படைக்கும் ஆற்றலைப் (சத்தி) பெற்றதும்; பசிய துழாயணிந்த ஆமை வடிவுகொண்ட திருமால் அக்கச்சபாலயத்தில் வழிபாடு செய்து பெரும்பாவம் நீங்கிப் பிழைத்ததும்; வலிமை மிக்க மாண்ட கன்னி என்னும் பெருமுனிவன் இறைவனைப்பூசித்து, அப்பேற்றினால் விண்ணுலக வாழ்க்கையை மண்ணுலகில் வானுலக அரம்பையர் ஐவரொடும் நடத்தியதும்;

அந்தணன்—பிரமன். (தழு. 412லும் காண்க.) பெற்றதுவும், வாழ்ந்ததுவும் என்பனவற்றைக் "கெடுமென்றது ஒடுமென்றமையால், குற்றியலுகரம் ஒரோவழி இ ஈ ஐவழி என்னும் பொதுவிதி பெறுதலுங் கொள்க" (நன். 164).

அங்கியங் கடவுள் ஏத்திவிண் 'புலத்தார் அவிப்பொறை மதுகைபெற் றதுவும், பங்கமின் றிறைஞ்சிச் சவுனக முனிவன் வீட்டினைத் தலைப்படும் பரிசும், மங்கரு வெப்பு விழியவற் செகுத்த சுரகரம் வானவர் வழுத்திப், புங்கவர் பெருமான் சுக்கிலம் பருகு வெப்பு நோய் போக்கிய வாறும். 10

அக்கினி தேவன் துதித்து விண்ணிடத்தாராகிய தேவர்க்கு வேள்வியிற் கொடுக்கும் அவியைச் சுமக்கும் வன்மை பெற்றதும்; சவுனக முனிவர் பழுதில்லையாக வணங்கி முத்தியைத் தலைக்கூடியதும்; கேடிலாச் சுராக்கனை அழித்த சுரகரேசப் பெருமானைத் தேவர் வணங்கித் அப் பெருமானது சுக்கிலம் பருகிய சுரநோய் போக்கியதும்;

புலிப்பத முனிவன் கான்முளை போற்றிப் பொங்குதீம் பாற்கடல் பெற்று, வலித்திறல் பார்த்தன் வலவனை முடிமேல் மலரடி சூட்டிஆண் டதுவும், கலித்தெழும் இமையோர் மலைமகள் மொழியாற் கரிசறத் தெளிந்தருட் குறியில், சலிப்பறும் இயக்க வடிவுகொண் டணைந்த தலைவனைத் தொழுதுய்ந்த வாறும். 11

வியாக்கிர பாதமுனிவர் புதல்வராகிய உபமன்னிய முனிவர் போற்றி செய்து பாற்கடலைப் பருகுவதற்குப் பெற்று, மிகு வலிபடைத்த பார்த்தசாரதியாகிய கண்ணனுக்குத் திருவடி தீட்சை செய்து ஆட்கொண்டதும்; ஆரவாரித்தெழும் தேவர்கள் மலைமகள் திருவாக்கால் ஐயம், விபரீதமாகிய குற்றங்கள் நீங்கத் தெளிந்து திரிவில்லாத யட்ச வடிவு கொண்டணைந்த சிவபிரானைச் சிவலிங்க வடிவில் தொழுது பாவந் தீர்ந்ததும்;

ஏதமில் பதிற்றுப் பதின்மரோ டொரான் பதின்மரும் ஏத்திய வாறும், மாதர்மேற் றளியிற் கவுணியன் பாட்டால் மால்சிவன் உருவுபெற் றதுவும், ஆதரம் பூப்ப ஐங்கரப் புத்தேள் அனேகதங் காவதம் பரசிக், கோதற உலகம் எண்ணியாங் குதவக் கொடுத்திடும் இறைமைபெற் றதுவும். 12

குற்றமில்லாத உருத்திரர் நூற்றுவரொடும் பதினொண்மரும் துதித்ததும்; அழகிய திருமேற்றளியில் கவுணிய குலத்துதித்த திருஞான சம்பந்தர் திருப்பாட்டால் திருமால் சிவசாரூபம் பெற்றதும்; விநாயகப் பெருமான் அன்பு பெருக அனேக தங்காவதத்தில் இறைஞ்சி உலகோர் வேண்டிய வேண்டியாங்குக் குற்றமறக் கொடுக்கும் தலைமையைப் பெற்றதும்.

உருத்திரர் வழிபாடு திருமேற்றளிப் படலத்துட் காண்க.

மகதியாழ் முனியும் புத்தருக் கிறையும் வளம்பொழில் திருக்கயி லாயப், பகவனைத் தொழுது முப்புரத் தவரை மருட்டிய பாவம்மாற் றியதும், இகலுநர்ச் செகுப்ப இராகவன் வழுத்தி எறுழ்வலி எய்திய வாறும், புகழுறுங் கற்கி போற்றுபு கடைநாள் கயவரைப் புரட்டிய வாறும் 13

மகதியாழுக்குரிய நாரதரும், திருமாலும் சோலை சூழ்ந்த திருக் கயிலாயப் பெருமானைத் தொழுது திரிபுரத்தசுரரைச் சிவநெறியினின்றும் பிறழ்வித்த பாவம் தீர்ந்ததும்; இரகு வமிசத்துத் தோன்றிய இராமன் தன் பகைவரை அழிப்ப வேண்டி இறைவனைத் துதித்துப் பெருவன்மை பெற்றதும்; புகழ் மிகும் கற்கி (குதிரை) முதல்வனை வணங்கி யுக முடி வில் அசுரரை அழித்ததும்;

எறுழ்வலி — மிக்க வலிமை; (அந்தகேசம்—1ல் எறுழ்வலி) மீமிசைச் சொல். தலைவர் மூவர் தவிர முப்புரர் வழிபாடு கைவிட்டமையை முப்புராரி கோட்டப் படலத்துட் காண்க.

நறைமலர்ப் பனந்தார் முடியவன் வழுத்தி நலம்பயில் வரம்-பெறு மாறும், அறைகழல் மகவான் தொழுதுசெல் லுருவாய் அச்-சுதன் சென்னியைத் துணித்து, நிறைபெருங் கீர்த்தி கவர்ந்துமீட் டுய்யப் பூசனை நிகழ்த்திய வாறும், மறையவன் தலையைக் கொய்து-வெம் பலிதேர் வயிரவன் பூசித்த வாறும். 14

பலராமன் பேறு பெற்றதும்; இந்திரன் தொழுது (புற்றிடைச்) செல் வடிவாய்த் திருமாலின் தலையைத் தடிந்து, நிறைந்த பெரிய மிகு புகழைக் கவர்ந்து, பின்பும் பிழை தவிரப்பூசனை நிகழ்த்தியதும்; பிரமன் தலையைக் கொய்து அதன்கண் பலி தேர்ந்த வயிரவர் பூசை செய்ததும்.

செந்நீர் ஏற்றமையின் வெம்பலி என்றனர்; யான், எனது என் னும் இரண்டனையும் கைவிடப் பலி தேர்தலின் விரும்பத்தக்க பலி என் பார் வெம்பலி என்றனர் எனலுமாம்.

விண்டுநேர் விடுவச் சேனனார் பரவி வீரபத் திரன்நிறத் தணிந்த, வெண்டலை விழுங்கும் ஆழியை விகடக் கூத்தினால் எய்திய வாறும், மிண்டினால் வேள்வி ஆற்றிய தக்கன் வினைகெட அருச்-சித்த வாறும், விண்டவர் புரத்தின் உய்ந்திடும் மூவர் தொழுதுமெய் வரம்பெறு மாறும். 15

விடுவச் சேனர் வணங்கி வீரபத்திரர் மார்பிடையணிந்துள தலை மாலைத் தலை விழுங்கிய திருமாலின் சக்கரப்படையை விகடக்கூத்தினால் பெற்றதும்; தக்கன் செருக்கொடு செய்த வேள்வியை அழித்தவழி, அத் தக்கன் வழிபட்டுய்ந்ததும்; முப்புரப் பகைவரில் மூவராகிய சுபுத்தி சுதன்மா சுசீலர் தொழுது மெய்வரம் பெற்றதும்;

திருக்கைலையில் திருநந்தி தேவர் ஒப்ப வைகுந்தத்தில் விடுவச் சேனர் ஆகலின், திருமாலை ஒத்த விடுவச்சேனர் எனப் பெற்றனர். (நந்தி தேவர் அபரசம்பு எனப்பெறுவர்).

பொன்பெயர் படைத்தோன் கிளைஞரோ டெய்திப் பூசைசெய் தரசுபெற் றதுவும், கொன்பயில் விடையோன் அருள்வழி மாயோன் மடங்கலாய் அவனுயிர் குடித்துப், பின்புகும் தருக்கைச் சரபமாய்த் ததறப்பின் பிழைகெடப் பூசித்த வாறும், வன்புடை இரணி யாக்கனை இறுத்த பன்றிபின் வழிபடும் இயல்பும். 16

இரணியன் உறவினரொடும் போந்து வழிபாடியற்றி அரசு வீற்றிருந்ததும்; பெருமைபொருந்திய விடையுடைப் பரமன் ஆணைவழி மாயவனார் நரசிம்மமாய் இரணியனை அழித்துச் செருக்கித் தாம் உலகை அழிக்கையில்பெருமான் சார்த்தூலப்பறவையாய் அந்நரசிங்கத்தைச் செகுத்து அதன் தோலைப் போர்த்துக்கொள்ள நல்லுணர்வு பெற்றுத் திருமால் பழிதீர வழிபட்டதும்; வலிமை அமைந்த இரணியாட்சனை அழித்த வராகாவதார மூர்த்தி வழிபட்டதும்;

(இரணியன், இரணியாக்கன் என்பன பொன் வடிவினன், பொற்கண்ணன் என்பன ஆகும்.) உயிர் குடித்தல், இலக்கணை வழக்கு.

அந்தகன் பரசிப் புவிமுழு தாண்டு கடைமுறை அருள்பெறு மாறும், வெந்திறல் வாணன் இறுதியிற் பரவி விறற்கணத் தலைமைபெற் றதுவும், கந்தமென் மலர்கொண் டடிதொழு தோண காந்தனுங் கதிபெறு மாறும், மைந்துற வழுத்திச் சலந்தரன் கடைக்கால் வீட்டின்பம் மருவிய வாறும். 17

அந்தகாசுரன் வணங்கிப் புவி முழுதும் அரசு செலுத்தி முடிவில் வீடு பெற்றதும்; பெருவலியுடைய வாணன் முடிவிற் றுதித்து வன்மை அமைந்த கணநாதருட் டலைமையை, எய்தியதும்; ஓணனும், காந்தனும் மணம் கமழும் மலர் கொண்டு பூசனை செய்து முத்தி பெற்றதும்; சலந்தரன் வன்மை மிகத் துதித்து முடிவில் பேரின்பம் எய்தியதும்;

கேசவன் திருமாற் பேற்றினிற் போற்றிக் கிளரொளி ஆழிபெற் றதுவும், வேசறு பரசி ராமனேத் தெடுத்து வெம்மழுப் படைபெறு மாறும், தேசுறப் பரவி இரேணுகை யென்பாள் தெய்வத மாகிய வாறும், மாசறும் யோகா சாரியர் தொழுது வழங்குதம் பதம்பெறு முறையும். 18

திருமால் திருமாற் பேற்றினிற் போற்றிச் சுடர் விடுகின்ற சக்கரம் பெற்றதும்; தளர்ச்சியறு பரசிராமன் துதித்துக்கொடிய மழுவாயுதம் பெற்றதும்; தெய்வத் தன்மை பெற இரேணுகை பரவி அப்பேற்றினை அடைந்ததும்; குற்றம் இல்லாத யோகாசாரியர் தொழுது விளங்குகின்ற ஆசாரியர் பதவியை எய்தியதும்;

சித்தசன் போற்றி உலகெலாங் காமம் செறித்திடும் இறைமை பூண்டதுவும், அத்தனார் ஏவலாற்றினால் அணைந்த அகிலதீர்த் தங்களும் வணங்கிப், பைத்தபாப் பல்குல் பாகனார் தம்பாற் பற்பல வரங்கள்பெற் றதுவும், தத்துநீர்க் கிறைவன் அருச்சனை யாற்றித் தங்கும்அப் பதம்பெறு மாறும். 19

மன்மதன் பூசித்து உயிர்களுக்கெல்லாம் காமத்தைத் தோற்றுவிக்கும் அரசுரிமை தாங்கியதும்; இறைவன் கட்டளையினால் இங்குற்ற சருவதீர்த்தங்களும் வணங்கி மங்கை பங்களரிடத்துப் பற்பல வரங்கள் பெற்றதும்; வருணன் அருச்சித்து நீர்க்கிறைவன் என்னும் பதவியை எய்தியதும்;

சித்தசன்—திருமாலின் சித்தத்துள் தோன்றினோன்.

காசிவாழ் விசுவ நாதனுங் காஞ்சிப் பெட்பினால் அணைந்துவைகியதும், பூசனை உஞற்றிக் காற்றினான் கந்த வாகனாப் பொலிவுறுமாறும், மாசறு கோள்கள் ஒன்பதும் வழுத்தி எண்ணிய வரம்பெறுமாறுந், தேசுறு வாம தேவநன் முனிவன் தொழுதுவெம் பிறவி தீர்ந் ததுவும். 20

காசியில் எழுந்தருளியுள்ள விசுவநாதப் பெருமானும் விருப்போடும் காஞ்சியில் எழுந்தருளியதும்; வாயுதேவன் பூசனை செய்து வாசனையைச் சுமந்து செல்பவன் ஆகப் பொலிவெய்தியதும்; மாசிலாத நவக்கிரகங்களும் துதித்துக் கருதிய வரங்களைக் கொண்டதும்; புகழ்மிகு வாமதேவ முனிவர் தொழுது கொடிய பிறவி தவிர்ந்ததும்;

அகனுறப் பரசி மார்க்கண்டி முதலோர் இறப்பினைக் கடந்ததும் அயன்மால், இகலுறு செருக்கின் வருவினை தணப்ப இலிங்கம்அங் கருச்சித்த வாறுஞ், சகமெலாம் இறுத்து முக்கண்எம் பெருமான் தங்குவீ ராட்டகா சத்தின், முகில்நிறப் புத்தேள் பூசனை உஞற்றித் துகிர்நிறம் பெற்றிடும் முறையும். 21

மார்க்கண்டேயர் முதலானோர் இறைவனை உள்ளன்போடும் வணங்கி இறவாமை எய்தியதும்; மால் பிரமர் இருவரும் தம்முட்பகைத்தெழுந்த செருக்கினால் வந்த பாவம் தீரச் சிவலிங்க அருச்சனை புரிந்ததும்; உலகெலாம் ஒடுக்கிவீற்றிருக்கும் வீராட்டகாசப்பெருமானை வணங்கி திருமால் மேக நிறம் நீங்கப் பெற்றுப் பவளவண்ணம் படைத்ததும்;

மாண்டகு காமக் கண்ணியை வணங்கி மலர்மகள் சாபம்மாற் றியதும், பாண்டவர் முதலோர் தொழுதுநல் வரங்கள் பரித்ததும் வணங்கிசு சான, ஆண்டகை ஆசைக் கிறைமைஎய் தியதும் அச்சுதன் மச்சமாய்ப் போற்றி, வேண்டலர்ச் செகுத்து வேதநால் கொணர்ந்து வேதியர் தமக்களித் ததுவும். 22

திருமகள் மாட்சிமை பொருந்திய காமாட்சியம்மையை வணங்கிச் சாபம் நீங்கியதும்; பாண்டவர் முதலானோர் தொழுது நற்பேறுகள் பெற்

றதும்; ஈசானமூர்த்தி வணங்கி வடகீழ்த்திசைக்கு இறைவன் ஆயதும்; திருமால் மச்சமாய்ப் போற்றிச் சோமுகன் என்னும் அசுரனை அழித்து வேதத்தைச் கொணர்ந்து வேதியர்க்களித்ததும்;

மீயுயர் குறளோன் அவுணனைச் சிறையிற் புகுத்துமீண் டிறைஞ்சிய வாறும், மாயவன் பரவிக் கடல்விடந் தாக்கும் வெப்பு-நோய் மாறகின் றதுவும், நாயகி உருவிற் கவுசிகை தோன்றி நாதனைப் பூசித்த வாறும், தூயமா காளப் பாப்பர சிறைஞ்சித் தொல்லைவீ டுறப்பெறு மாறும். 23

வாமனன் மாவலியைச் சிறையிட்டுப் பின்னரும் போற்றியதும்; கரியோன் பரவி விடவேகத்தான் வந்த வெப்பு நோய் நீங்கியதும்; அம்மையார் கழித்த வடிவிற் கவுசிகை தோன்றி நாதனைப் பூசித்ததும்; மாகாளன் என்னும் பெரும் பாம்பு வழிபட்டு முத்தி யெய்தியதும்;

அண்ணலார் ஆணை மறுத்தவெந் தீமை அறுத்திடக் குமரகோட் டத்தில், நண்ணிவீற் றிருந்து சேயிலை நெடுவேல் நாயகன் பூசித்த வாறும், மண்ணெலாம் பரவும் மார்க்கண்ட முனிபால் வஞ்சகங் கருதிய மாயோன், கண்ணுதற் பிரானை அத்தலத் திறைஞ்சி அவ்வினை கழுவிய வாறும். 24

சிவபெருமான் கட்டளையை மேற்கொள்ளாத குறை தீரத் திருக்குமரகோட்டத்தில் முருகப்பெருமான் சேனுதிபதீசப் பெருமானைப் பூசித்ததும்; மக்கள் யாவரும் போற்றும் மார்க்கண்டேயரிடத்து வஞ்சங் கருதிய திருமால் அத்தலத்தே வணங்கிப் பாவத்தைக் கழுவாய் செய்ததும்;

சாத்தனுர் போற்றி உரிமைபெற் றதுவும் மங்களைத் தையல்-போற் றியதும், தீத்தொழில் அரக்கர்ச் செகுத்துவந் திராமன் பணிந்ததும் தேவர்கோன் வலவன், ஏத்திய வாறும் நாரணன் பரவிப் பாப்புரு இரித்ததும் மயானக், கூத்தனுர் முழுதுந் தழலிடை ஒடுக்கிப் பண்டனைக் கொலைசெய்த வாறும். 25

சாத்தனுர் போற்றிக் கணத் தலைமையைப் பெற்றதும்; மங்களை எனும அம்மை பூசித்ததும்; கொடுந்தொழிலையுடைய இராவணுதியரைக் கொன்றுவந்து இராமன மீளப் பூசித்ததும்; இந்திரன் தேர்ச்சாரதியாகிய மாதலி பூசித்ததும்; நாரணன் வணங்கிப் பாம்பு வடிவம் நீங்கியதும்; அனைத்துயிர்களின் உடம்பையும் வேள்வியிலிட்டுப் பெருமான் அவ்வழியாகப் பண்டாசுரனைக் கச்சி மயானத்தில் அழித்ததும்;

ஒவிய உலகைத்தோற்றுவான் எங்கோன் ஒற்றைமாமூலத்-தன் முளைத்துத், தாவறு சிறப்பின் இலளிதைப் பிராட்டி தனைப்-பயந் தாங்கவள் விழியின், மூவரைப் படைத்துச் செய்தொழில் வகுத்துச் செவியறி வுறுத்துமொய் கூந்தல், தேவியுங் கடவுள் மூவரும் பரவச் சிறப்பொடு வீற்றிருந் ததுவும். 26

ஒடுங்கிய உலகை மீளத் தோற்றுவித்தற் பொருட்டு எமது முதல்வன் ஒற்றை மாமரத்தடியில் எழுந்தருளிக் குற்றமில்லாத சிறப்பினையுடைய இலளிதா தேவியைப் படைத்து, அபபொழுதே அவள் விழிகளின் மும்மூர்த்திகளைத் தோன்றச் செய்து செயற்குரிய செய்கைகளைப் பிரித்துணர்த்தி அப்பிராட்டியும் கடவுளர் மூவரும் போற்றச் சிறந்து விளங்கா நின்றதும்;

திருவிளை யாட்டான் மந்தரத் துமையாள் சிவபிரான் விழியிணை புதைப்பக், கருகிருட் பிழம்பின் உலகெலாம் மூழ்கிக் கடப்பருங் கவலையுற் றதுவும், வருவினை தணப்பப் பூசனை புரிவான் மழவிடைச் செய்கையும் புகன்று, பெருநகர்க் காஞ்சிக் கிறையவன் விடுப்பப் பிராட்டிஅங் கெய்திய வாறும். 27

உமையம்மையார் மந்தரமலையிற் பொழுது போக்காக (திருவிளையாட்டாக) ச்சிவபிரானுருடைய இரு விழிகளையும் மூட, அவ்வளவில் பேரிருட் குழம்பில் உலகங்கள் யாவும் மூழ்கிக் கரையேறலாகாக் கவலை எய்தியதும்; பல்லுயிரும் வருந்தியமையால் வந்த வினை தீரப் பூசனை செயும் பொருட்டு மழவிடைச் செய்கையும் கூறிக் கச்சிப் பெருநகர்க்கு இறையவன் விடுப்பப் பெருமாட்டி ஆங்கெய்தியதும்;

மெய்த்தநல் லறங்கள் வளர்த்திடு மாறும் விண்டுவீச் சரம்அகத் தீசம், மத்தள மாத வீச்சரம் வணங்கிப் போந்துமாந் தருவடி முளைத்த, சத்தறி வின்பத் தனிமுதற் பொருளைத் தவத்தினாற் கண்டுகொண் டிறைஞ்சிப், புத்தமிழ் தனையாள் விதியுளி வழாமைப் பூசனை உஞற்றிய வாறும். 28

உமையம்மையார் நிலைத்த நல்லறங்கள் முப்பத்திரண்டும் வளர்த்திடும் இயல்பும்; விண்டு விசம், அகத்தீசம், மத்தளமாதவேசம் வணங்கி வலம்போந்து மாவின் மூலத்தில் எழுந்தருளியுள்ள 'சச்சிதானந்த' த்தனி முதற் பொருளைத் தவத்தினால் தரிசித்து உளங்கொண்டிறைஞ்சிப் புத்தமிழ்தம் அனைய அம்மையார் விதிவழி அருச்சனை ஆற்றியதும்;

கருணைமீப் பொங்குந் திருவிளை யாட்டால் அழைத்துறுங் கம்பைநீர்ப் பெருக்கைக், குருமணிக் குழையாள் கண்டுளம் பதைத்துக் குழகனைத் தழுவிய வாறும், திருமுலைச் சுவடும் வால்வளைத் தழும்புஞ் சிவபிரான் பொலிவுறப் பூண்டு, மருமலர்க் குழலாள் காணமுன் நின்று வரம்பல அருளிய வாறும். 29

கருணை மேன்மேலெழும் திருவிளையாடலால் இறைவன் விடுத்த கம்பைநீர்ப் பெருக்கை நிறமுடைய மணிகள் பதித்த தோட்டினை அணிந்த அம்மை கண்டு உள்ளம் பதைத்துக் குழகனைத் தழுவியதும்;

அம்மையாருடைய கொங்கைச் சுவடும், வெள்ளிய வளையல் வடுவும் சிவபெருமான் விளங்கப் பூண்டு ஏலவார் குழலி காண எழுந்தருளி வரம்பல அருளியதும்;

இமவரைப் பிராட்டி கவுரமா நிறம்பெற் றெம்பிரான் வதுவை-வேட் டதுவும், உமையவள் காள உரியினில் உயிர்த்த ஒளியிழை அவுணரை மாட்டி, விமலநா யகன்றன் அருள்பெறு மாறும் மேதகு விம்மிதத் திறமும், அமைவர ஒழுகும் ஒழுக்கமும் எங்கோன் அருட்சிவ புண்ணியப் பேறும். 30

இமயவல்லி பொன்னிறம் பெற்றுக் 'கவுரி' எனும் பெயர் ஏற்று எம்பெருமானைத் திருமணம் புணர்ந்ததும், உமையவள் தன் கருநிறச் சட்டையில் தோற்றிய காளி அவுணரைக் கொன்று புனிதன் அருள் பெற்றதும்; மேன்மை அமைந்த அற்புதமும்; பொருந்துதல் வர ஒழுகும் ஒழுக்கமும்; சிவபுண்ணியப் பயனும்; இப்புராணத்துட் கூறப்பெறும்.

மற்றுமோ ராற்றாற் கிளந்திடுந் திறத்தின் மால்வரைக் கயிலை-யின் உமையாள், கற்றையஞ் சடையார் விழியிணை புதைத்துக் காஞ்சியிற் பூசனை யாற்றும், பெற்றியும் அந்தர் வேதியுங் கரிகால் வளவர்கோன் பெருமையும் வினைநோய், செற்றிடுந் தீர்த்தம் முதலிய மூன்றின் சிறப்புமீண் டியம்பிடப் படுமால். 31

இனி, வேறொருமுறையிற் கயிலையில் உமையம்மையார் இறைவன் கண்களை இறுகப்பொத்திக்காஞ்சியிற் சிவ பூசைசெய்த இயல்பும், அந்தர் வேதி வரலாறும், கரிகாற் சோழன் பெருமையும், இருவினைகளையும், பிறவி நோயையும் போக்கும் தீர்த்தம் முதலிய மூன்றன் சிறப்புக்களும் ஈண்டுப் பேசப் பெறும்.

பதிகம் முற்றுப் பெற்றது.

ஆகத் திருவிருத்தம் – 329



# புராண வரலாற்றுப் படலம்

## நைமிசாரணியச் சிறப்பு

*எழுசீரடி யாசிரிய விருத்தம்*

மிடல்கெழு தவத்தோர் வேள்விசெய் வினைக்கு வேண்டிய வேண்டியாங் குதவக், கடவுளான் பயிலுங் காட்சியால் அவிஊண் கைக்கொளத் துதைந்தவா னவரால், தொடர்வுறும் ஓமப் புகை-தழீஇச் சுரும்பர் உளர்தராப் பன்மலர்ப் பொழிலால், அடர்தருங் காமர் கற்பக வனமே யாயது நைமிசா ரணியம். 1

வலிமை பொருந்திய தவத்தையுடையவர் யாகம்செய்தற்கு வேண்டிய பொருள்களை வேண்டியவாறே உதவும் காமதேனுவையும், அவி பெறக் குழீஇய தேவரையும் தன்னுட் கொண்டமையாலும், வேள்விப் புகையால் வண்டுகள் சஞ்சரியாத சோலைகளை உடைமையாலும், நைமிச வனம் அழகிய கற்பகச் சோலையே ஆயது.

வேண்டிய வேண்டியாங்கு உதவுவது தவம்: (திருக்குறள் –265, தவத்தவர்க்கு யானைகள் ஏவல் செய்தல்: "கான் யானை தந்த விறகில் கடுந்தெறல் செந்தீ வேட்டு" (புறநா. 251: 5-6), "செந்தீப் பேணிய முனிவர் வெண்கோட்டுக், களிறுதரு விறகின் வேட்கும்" (பெரும்: 498–499)

தாதவிழ் கடுக்கை நறுந்தொடை மிலைச்சுந் தம்பிரான் அடியல துணரா, மாதவர் இயற்று மகவினை சிதைப்ப வருகருந் தயித்தியர் அவர்தங், காதுவெஞ் சாப வலிக்குடைந் தோடுங் காட்சியே கடுக்கும்அம் மகத்தீ, மீதுயர்ந் தண்டச் சுவர்த்தலம் உரிஞ்ச விசும்பெழு நறும்புகைப் படலை. 2

வேள்வித் தீயினின்றெழுந்து அண்டப்பித்திகையில் உராய்கின்ற புகைப்படலம், நறுமணங்கமழும் கொன்றை மலர்மாலையைச் சூடுகின்ற உயிர்களுக்குத் தலைவனாகிய சிவபெருமான் திருவடிகளை அன்றிப் பிறிதுணராத பெருந்தவர் இயல்பாகச் செய்யும் யாகத்தைக் கெடுக்க வரும் கரிய அசுரர் அத்தவத்தோர் இடுங் கொடிய வெஞ்சாப வலிமைக்குப் புறமுதுகிட்டோடுங் காட்சியை ஒக்கும்.

முனிவர் வேள்வியை அசுரர் அழித்தலை தாடகைவதை முதலியவற்றுட் காண்க.

கருநதிரை அளக்கர் அகடுடைத் தெழுந்து கனையிருள் பருகு-வெங் கதிரோன், இருந்தவர் வேள்விக் களத்தவிப் பாகம் ஏற்பவந் தணுகுவோன் மான, மருந்தெனக் கிளைத்து வானுற நிவந்த வளம் பொழில் கிளைகளைக் கரத்தால், திருந்துற ஒதுக்கிக் குனிந்துபுக் குலாவிச் சேணிடைப் போய்நிமிர்ந் துறுமால். 3

வெள்ளிய அலைகளையுடைய கரிய கடலின் வயிற்றை (நடு)க் கிழித்தெழுந்து செறிந்த இருளைப் பருகும் சூரியன், பெருந்தவ முடையோர் வேள்வியில் தனக்குரிய அவியை ஏற்றுக்கொள்ள அணுகுவோனைப் போலத், தளிர், இலை, பூ, காய், கனி இவற்ருல் நோய்க்கு மருந்துபோலத் தழைத்து வானில் தோய உயர்ந்த வளமுடைய சோலையின் கிளைகளைக் கிரணக் கரங்களால் செவ்வனே ஒதுக்கி வளைந்து உள்புகுந்து உலாவி நெடுந் தொலைவிற் போய் உயர்த்தோங்கும்,

தளிர், இலை, பூ, காய், கனி முதலிய பலவும் மருந்தாய்ப் பயன் தரல்: "மருந்தாகித் தப்பா மரம்" (திருக்: 217).

சிறகர்வண் டிமிரும் வட்டவாய்க் கமலச் செழும்பொகுட்
டரசுவீற் றிருக்கும், மறைமுதற் கிழவன் முனிவரர் வேண்ட
வளைத்தனன் விடுத்தபுல் நேமி, இறவுரு நின்றும் ஆயிடை உறைவ
தெனக்கவின் காட்டிடுந் தேத்தீ, அறைதரச் செறிந்து நறவம்ஊற்
றெடுக்கும் அரும்பெறல் மதுவிரூல் வலயம். 4

பிரமன், முனிவரர் விருப்பம் நிறைவெய்தத் தருப்பைப் புல்லால் அமைத்து விடுத்த சக்கரம் அழியாது இன்றும், அவண் பொருந்தி உளவெனத் தேனீக்கள் ஒலிக்கும்படி பெருகித் தேன் ஊற்றெடுத்துப் பாயும் தேனடையாகிய வட்டங்கள் அழகு செய்யும்.

பொகுட்டு – தாமரைக்கொட்டை. தேத்து–தேனீ. பெறல் அரு மது: தேன்–பிறரால் சிருட்டிக்க இயலாதது.

விரும்பிய இடபந் தாங்குதோற் றத்தால் விளங்கெரி உருவி-
ணிற் பூத்த, வரும்பணி கொண்ட காட்சியாற் பெரிய வரையவண்
இருந்தவ ராக, இரும்புவி உய்யக் கோடலால் யாரும் ஏத்திடும்
பெற்றியால் உலவாப், பெரும்பெயர்க் கயிலைக் கடவுளே போலும்
பிறங்கொளி நைமிசக் கானம். 5

விரும்பிய இடபம் ஊர்தியாகத் தாங்குகின்ற காட்சியானும், விளங்குகின்ற தீயை ஒத்த வடிவினில் பொலிகின்ற அரிய பாம்புகளை அணியாகக் கொண்ட தோற்றத்திஞனும், மகாமேருமலை அவ்விடத்துப் பெரிய வில்லாகப் பெரும்புவியிலுள்ள வரை முப்புரரிடத்தினின்றும் உய்யக் கொள்ளுதலிஞனும், யாவரும் துதிக்கும் இயல்பிஞலும், கெடாத மகா வாக்கியத்தின் பொருளாய் விளங்கும் கயிலைமலைத் தலைவனையே ஒக்கும் விளங்குகின்ற ஒளியுடைய நைமிசாரணியம்.

(வே–ள்) இடப ராசியைத் தாங்கும் தோற்றத்தாலும், தீயின் நிறத்தை ஒத்த நிறமுடைய அரும்புகளைக்கொண்ட காட்சியாலும், பெருமக்களை அவ்வனத்தில் பெரிய தவசிகளாகக் கொண்டு உலக மக்களை உய்யக்கொள்ளுதலாலும், யாவரும் போற்றும் இயல்பிஞலும் சிவபிரானுக்கும், நைமிசவனத்திற்கும் சொல்லொப்புமையால் முடித்தார். வரும் இருசெய்யுட்களில் வனத்திற்கும் திருமால்பிரமர்க்கும் சொல்லொப்புமையால் முடித்துக் காட்டுவர்.

திசைமுகன் உந்தி யுறவளை நேமி சேர்ந்திடுங் கொள்கையால் என்றும், அசைவில்வா னவர்க்குப் புரைஅவி அமிழ்தம் அளித்த-லாற் பூமணம் பெறலால், வசைதபு காட்சிக் கருநிறக் கருவி மழை-முகில் மேனிவந் தழகாய், இசைதலாற் சார்ங்கம் ஏந்தியோன் நிகர்க்கும் இணையிலா நைமிசக் காடு. 6

நான்முகன் உந்திக் கமலத்திற் பொருந்த, பாஞ்ச சன்னியமும், சக்கரமும் வாய்ந்த இயல்பானும், துளக்கமில்லாத தேவர்க்கு நரைதிரை மூப்பு முதலிய குற்றங்களை அழிக்கின்ற அமிழ்தம் அளித்தலானும், பூதேவியை மணம் புணர்தலானும், குற்றம் நீங்கிய அறிவினையுடைய கரிய நிறமுடைய மின்னு முதலிய தொகுதிகொண்ட முகில்போலும் திருமேனி வந்து அழகாய் இயைதலாற் சார்ங்கம் என்னும் வில்லேந்திச் சார்ங்க பாணியாகிய திருமாலை ஒக்கும் நைமிசவனம்.

(வே-ள்) நான்முகன் செலுத்த வளைந்த சக்கரம் சேர்ந்திடும் கொள்கையானும், தேவர்க்கு அவிசாகிய அமிழ்தம் அளித்தலானும், பூவின் மணம் பெறலானும், மேகம் மேல் உயர்ந்து அழகாகப் பொருந்து தலானும் நைமிசாரணியம் திருமாலை ஒக்கும்.

மேனி வந்து-மேல் நிவந்து-திருமேனி வந்து; மேல் உயர்ந்து. உந்தி உற-உருட்ட; செலுத்த; உந்திக் கமலத்தில் பொருந்த.

குலவுகால் வாய்கள் மருவலால் அகலங் கொண்டமுந் நூல்-வயங் குதலால், சலமற வேத மொழிதலால் வனத்துத் தாமரை இருக்கைமே வுதலால், பலபொறிச் சுடிகைப் பையராச் சுமந்த பரவைசூழ் புடவியே முதலா, மலர்தலை உலகம் முழுதுமீன் றளித்த வள்ளலாம் நைமிசப் புறவம். 7

விளங்குகின்ற நால்வாய்கள் பொருந்துதலாலும், மார்பின்கண் முப்புரி நூல் விளங்குதலாலும், மாறுபாடு நீங்க வேத மொழிதலாலும், நீரின் எழுந்த தாமரை மலராகிய தவிசில் இருத்தலாலும், பல புள்ளிகள் கொண்ட உச்சியையும், படத்தையும் உடைய ஆதிசேடன் என்னும் பாம்பாற் சுமக்கப் பெற்ற கடல் சூழ்ந்த உலகம் முதலாய் விரிந்த உலகங்கள் முற்றவும் படைத்தளித்த பிரமனுக்கும் நைமிச வனம்.

(வே-ள்) யானைகள் மருவுதலும், விரிந்த மூன்று வேதங்கள் ஓதப் படுதலும், பொய் ஒழிதலின் குற்றம் ஒழிதலும், தாவுகின்ற மரை என்னும் மான்கள் உலவுதலும் உடைய நைமிசவனம்.

5, 6, 7 நைமிசவனத்தைச் சொல்லொப்புமையால் மும்மூர்த்திகளொடு ஒப்புக்காட்டல் அறிந்தின்புறத் தக்கது.

### முனிவர் குழாம்

புகலும்இவ் வனத்தில் வசிட்டன், வே தார ணியன், புலத்தியன், துரு வாசன்,-சுகன், வசுச் சிரவன், ஆணிமாண் டவியன், சுனப்புச்சன், சமுவர்த்தன், மணிமே-சகன், சுனச் சேபன், இரைக்குவன், சம்பு தற்பரன், ஆத்திரே யன்,சௌ-நகமுனி, புலகன், ஆசுவ லாய னன்,சம தக்கினி, சங்கன். 8

(விரும்பப்படும்) பேசப்பெறும் இந்நைமிச வனத்தில் வசிட்டன், வேதாரணியன், புலத்தியன், துருவாசன், சுகன், வசுச்சிரவன், ஆணி மாண்டவியன், சுனப்புச்சன், சமுவர்த்தன், மணிமேசகன், சுனச்சேபன், இரைக்குவன், சம்புதற்பரன், ஆத்திரேயன், சௌனக முனி, புலகன், ஆசுவலாயனன், சமதக்கினி, சங்கன்.

இரைவதன், குசுரு விந்தன்,மா தேசன், இலிகிதன், பராசரன், கற்கன்,-கிருது,அக் கினிபன், பருப்பதன், நாசி கேதன்,நா ரதன்,அசி கர்த்தன்,-உருரு,விச் சுவாமித் திரன்,குணி, பரத்து வாசன்,உத் தாலகன், வாசச்-சிரவன்,சாண் டிலியன், காசிபன், வாம தேவன்,தாற் பியன்,இர சனியே. 9

இரைவதன், குசுருவிந்தன், மாதேசன், இலிகிதன், பராசரன், கற்கன், கிருது, அக்கினிபன், பருப்பதன், நாசிகேதன், நாரதன், அசிகர்த்தன், உருரு, விச்சுவாமித்திரன், குணி, பரத்துவாசன், உத்தாலகன், வாசச்சிரவன், சாண்டிலியன், காசிபன், வாமதேவன், தாற்பியன், இரசனி.

8, 9ல் முனிவர்கள் பெயரை அடைமொழியின்றிக் கூறுதலுடன் சனற்குமாரப் படலம் 6-ஆம் செய்யுளில் மரங்களையும், தக்கேசப்படலம் 46-ஆம்செய்யுளில் வாச்சியங்களையும், அவ்வாறுகூறுதல் மகிழத்தக்கன.

கண்ணுவன் முதலாம் எண்ணரு முனிவர் கழிபெருஞ் சீர்த்தியர் மாசு, மண்ணிய மனத்தார் பசுபதி அடியார் வடிவெலாம் நீறுசண் ணித்த, புண்ணியர் மும்மைப் புண்டர நிரையார் அக்கமா லிகையர்போர் விடையூர், அண்ணல்வாழ் தலத்திற் பற்றினோர் அன்னோன் அருச்சனை இயற்றும்ஆர் வத்தார். 10

கண்ணுவன் முதலாகும் மதித்தற்கரிய மனனசீலராகிய முனிவர் மிகப் பெரும்புகழினர்; மனத்தால் தூயர்; பசுக்களுக்குப் பதியாகிய சிவனடியார் வடிவமுற்றும் முழுநீறு பூசிய புண்ணியர் திரிபுண்டரமாக நீறணிந்தவர்; உருத்திராக்க வடம் அணிந்தவர்; இறைவன் எழுந்தருளியுள்ள தலங்களிற் பற்றுடையவர், அப்பரனை அருச்சனை புரியும் பெருவிருப்பினர்.

மன மாசு மண்ணியோர்—மன அழுக்கைக் கழுவினோர். "மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்த மேனியான்" (திருநாவுக்கரசர்) சண்ணித்தல்—பூசுதல்.

அங்கமும் மறையும் தெளிந்தவர் வேதம் அந்தித்த அறிவினர் விமலர், தங்கும்அஞ் செழுத்தே கிளப்பவர் பொறியைத் தடுத்துயர்ந் தவர்மக மனைவி, செங்கன லோடும் உறைபவர் தமைப்போற் சிற்றுயிர் அனைத்தையுங் காணும், பொங்குபே ரருளின் எல்லையர் இனையோர் பொலிவுற ஒழுங்குடன் குழுமி. 11

வேதமும், வேதாங்கங்களும், சிந்தித்துத்தெளிந்தவர்; வேதத்தின் முடிவுகண்ட அறிவினர்; விமலர்க்கு உறையுளாம் திருவைந்தெழுத்தையே கணிப்பவர், ஐம்பொறியைத் தடுத்தலால் உயர்ந்தவர்; மனையாள் மகவொடும் செந்தீ வளர்ப்பவர்; தம்முயிரைப்போலச் சிற்றுயிர்களையும் எண்ணிப் பேரருளிற்கு அளவு கோலாயுள்ளவர்; இத்தன்மையோர் விளங்க ஓரிடத்துக் குழுமி,

அந்தித்த, அந்தம் என்பதன் அடிப்பிறந்த பெயரெச்சம்; 'கந்தித்த' என்பது-போலக் கொள்க. 'வனத்தின்கட் டீயோ'டும் சென்று தங்கல், (திருக். பரி. உரை.). வானப்பிரத்த நிலை இது.

கறைமிடற் றிறையைக் கண்ணுறக் காணுங் காட்சியாங்
கணிச்சியின் அல்லால், மறவினைக் கனிகள் மல்கிய உலக
வாழ்வெனும் நச்சுமா மரத்தை, இறுமுறை காண்ப தரிதெனத்
துணிந்தார் இதுபெறும் உபாயமற் றெவனென், றறிவினில்
நெடும்போ தாய்வுழி அவருள் அருந்ததி கொழுநன்ஈ தறையும். 12

திருநீலகண்டப் பெருமானை எதிர் தோன்றக் காணுங் காட்சியாகிய மழுப்படை கொண்டன்றிப் பாவச் செயல்களாகிய பழங்கள் மிகுந்த உலகவாழ்க்கை யென்னும் விடமாமரத்தை அழிக்கின்ற வகை காண்டல் அரிதென்று ஓர் முடிவிற்கு வந்தவர் அக்காட்சியைப் பெறும் உபாயம் யாதென் றறிவினில் நெடுங்காலம் ஆராய்கையில் அக்குழாத்தவருள் அருந்ததிக்குக் கணவராகிய வசிட்டர் இதனைச் சொல்வார்.

### தவம்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

தவமே மேலாம் நெறியாகும் தவமே சிவனார் தமைக்காட்டும்
தவமே துறக்கம் அடைவிக்கும் தவமே நரனைத் தேவாக்கும்
தவமே வலாரி திசைக்கிறைவர் சார்ங்கன் அயனும் ஆக்குவிக்கும்
தவமே கிடைப்பிற் கிடையாத துண்டோ என்று சாற்றினனால் 13

தவமே மேலாகிய சாதனம் ஆகும்; அத்தவமே சிவபிரானைத் தரிசிப்பிக்கும்; அதுவே சுவர்க்கத்திற் சேர்க்கும்; மானுடனைத் தேவனாக்கும்; இந்திரனும் ஆக்கும், ஏனைய திக்குப் பாலகர்கள் ஆக்கும்; திருமால் பிரமரும் ஆக்கும்; அத்தவமே வாய்த்தல் அரிது; அது வாய்ப்பின் வாய்க்காததுண்டோ என்று விரித்துரைத்தார்.

### அறம்

அறமே மறங்கள் முழுதழிக்கும் அறமே கடவுள் உலகேற்றும்
அறமே சிவனுக் கொருவடிவ மாகும் சிவனை வழிபடுவோர்க்
கறமே எல்லாப் பெரும்பயனும் அளிக்கும் யார்க்கும் எவ்விடத்தும்
அறமே அச்சந் தவிர்ப்பதெனு அறைந்தான் சாதா தபமுனிவன்.
14

அறமே பாவங்கள் அனைத்தினையும் போக்கும்; கடவுள் உலகிற் சேர்க்கும்; சிவபிரானுக் கோர் வடிவமும் ஆகும் சிவனை வணங்குவோர்க்கு வரும் பெரும் பயன் யாவுமே அறம் என்று அளிக்கும்; யாவர்க்கும், எவ் விடத்தும் அச்சத்தை தவிர்ப்பதும் அவ்வறமே எனச் சாதாதப முனிவன் பேசினன்.

## கொடை

கொடையே எவர்க்கும் எப்பேறுங் கொடுக்கும் நெறியிற் பிறழாத
கொடையே யாருந் தன்வழியின் ஒழுகச் செய்யும் குறைதீர்ந்த
கொடையே பகையை உறவாக்கும் குலவும் பூதம் அனைத்தினையுங்
கொடையே புரக்கும் என்றுள்ளங் கொள்ளப் புகன்றான் கவுதமனே. 15

கொடுத்தலானே யாவர்க்கும் எப்பயனும் கிடைக்கும்; அறவழியிற் றப்பாத கொடைக்குணமே யாவரையுந் தன் வழிப்படுத்து நடத்தும் (தன் ஏவல் கேட்பிக்கும்). குற்றந் தவிர்ந்த கொடையே பகைவரையும் உறவினராக்கும்; விளங்குகின்ற ஆன்மாக்கள் அனைத்தினையும் அதுவே காக்கும் என்றுள்ளங் கொள்ளும்படியாகக் கவுதமன் கூறினன்.

## வாய்மை

மெய்யே சிறந்த பெருநலமாம் மெய்யே எவையும் நிலைபெறுத்தும்
மெய்யால் அழல்கால் கதிர்பிறவும் தத்தந் தொழிலின் விலகாவாம்
மெய்யே எவைக்கும் இருப்பிடமாம் மெய்யே மெய்யே சிவமாகும்
மெய்யே பிரம பதமுமெனப் புகன்றான் வினைதீர் காசிபனே. 16

உண்மையே சிறந்த பெரு நன்மைக்கு ஏதுவாம்; எவற்றையும் நிலைநிறுத்தும்; நெருப்பு, காற்று, சூரியன் முதலிய பிறவும் தத்தம் தொழிலை நியதியாகச் செய்யவும் அதுவே ஏதுவாம்; சத்தியமே எவற்றினுக்கும் ஆதாரமாம்; அதுவே சத்தியமாகச் சிவமாகும்; மெய்யே பெரும் பதமும் எனப்பேசினார் காசிப முனிவர்.

## வேள்வி

எச்சம் ஒன்றே இருமையினும் மேலாம் இமையோர்க் குவப்பாவ
தெச்சம் ஒன்றே மகத்திறையாம் எம்மான் விழையப் படுவதுவும்
எச்சம் ஒன்றே நனிசாலச் சிறந்த பொருளும் இருங்கரும
எச்ச நிகர்வே றில்லையெனப் பரத்து வாசன் இயம்பினனால். 17

வேள்வி ஒன்றே இம்மையினும், மறுமையினும் நலம் பயக்கும் அவ்வேள்வியே கண்ணிமையாராகிய தேவரை மகிழ்ச்சியுறச் செய்வதும்; வேள்விக்குத் தலைவனாகிய எமது சிவபெருமானால் விரும்பப்படுவதும் அதுவே. மிக மிகச் சிறப்புடைய கருமமாகிய வேள்விக்கொப்பது வேள்வியே. அதற்கொப்பது வேறில்லை எனப் பரத்துவாச முனிவர் கூறினர்.

ஏகாரங்கள், பிரிநிலையொடு தேற்றமாம். சற்கருமங்களின் வேள்வி மிகல்: "எச்சத்தின் வேறும்எனைக் கருமங்கட் கெச்சம் போல" (தக்கேசப்

படலம்–17). வேள்விக்கு நாயகன்: "உயர் வேள்வியிறை நாம்", மகந்தனக் கரசன் முக்கண் வள்ளலே" (சிவாத்தானப் படலம் – 26. தக்கேசப்படலம் 19).

### மகவு

மகவே மேலாங் கதியாக்கும் மகவான் உலகந் தனைவெல்லும்
மகவின் மகவான் முடிவின்மை எய்தும் மகவின் மகவளித்த
மகவான் மேலைப் பதமுறுந்தென் புலத்தார் கடனை மாற்றுவதும்
மகவான் அன்றி யில்லையென வகுத்தான் தெரித்துக் கண்ணுவனே, 18

மக்கட்பேறே மேலாம் கதியினைப் பெறச் செய்யும். மகனின் மகனால் இந்திர உலகைத் தன் கீழ்ப்படுத்தும் நீடித்த இன்பம் தரப்பெறும்; மகனுக்கு மகன் மகனால் (பெயரன் புதல்வனால்) வீடு பேற்றினை நல்குவிக்கும்; பிதிரர் கடன் மகப் பெறுதலான் இறுக்கப் படுதலின், கடனைக் கொடுத்துக் கடத்துதலைச் செய்யும் எனக் கண்ணுவர் கூறினர்.

புத்திரன்–புத் என்னும் நரகின் மீட்பவன், இதனை "வெங்கைப் பழமலையார்க்கு, அத்திர மன்ன அயில்விழி யாளயில் வேலவனைப் புத்திரனென்னும் பொருள்பட ஈன்றிலள் பொன்னுரைத்த, சித்திரம் அன்னவள் புத்திரற் பூத்துச் சிறந்தனளே". (திருவெங்கைக் கோவை).

### துறவு

துறவே அறங்கள் எவற்றினுக்கும் பெரிதாம் விடையூர் தோன்றலுக்கும், துறவே உவகை வரச்செய்யும் துறவே அயன்மால் உலகளிக்கும், துறவே ஈச னிடத்திருத்தும் எவரும் மேலாச் சொல்லுவதும், துறவே யாமென் றெழுந்து நின்று சொற்றான் சைவத் துருவாசன். 19

இருவகைப் பற்றுக்கள் நீங்குதலே துறவாது செய் அறங்கள் எவற்றினும் மிக்கதாகும். காளையை ஊர்தியாக வுடைய இறைவன் திருவுள்ளத்துக் கருணையை எழத் தூண்டுவதும் அதுவே. அப்பற்றறுதலே சத்திய உலகையும், வைகுந்தத்தையும் ஒருங்கு தரும். துறவே ஈசன் அடியிணைக் கீழ் இருத்தும். யாவரும் பிறவற்றின் மேலாகப் போற்றுவதும் துறவறமே என இருக்கையினின்றும் எழுந்து நின்று வலியுறுத்திப் பேசினர் சிவசம்பந்தமுடைய துருவாச முனிவர்.

### சூத முனிவர் வரவு

வேறு

இன்ன வாறுபன் முனிவரும் இயம்பினர் பிணங்குழி இவர்ஈட்டு, நன்னர் வான்தவங் கொணர்ந்தென ஆயிடை நணுகினன் விடைஊரும், என்னை ஆளுடை இறையடி தைவரும் இடையறாத் தியானத்தான், பன்னு மெய்த்தவப் பராசரன் பயந்தருள் பண்ணவன் மாணக்கன். 20

இங்ஙனம் முனிவரர் பலரும் தத்தம் மனக் கருத்தையே வலியுறுத்திப் பேசி மாறுபடுகையில், தவமுடையராகிய தாங்கள் செய் நலமுடைய பெருந்தவம் கொணர்ந்தாற் போல நைமிச வனத்தை அணு கினர் விடையூரும் விமலன்றன் திருவடிகளை இடையறாத நினைவால் தடவுகின்ற பேசப் பெறும் உண்மைத் தவமுடைய பராசர முனிவர் ஈன்றருளிய வியாசர் தம் மாணுக்கராகிய சூதமுனிவர்.

விளங்கு நீற்றொளி கதிர்செய வீங்கிருள் அக்கமா லிகைவீசும், வளங்க னிந்தபொன் மேனியான் புண்ணியம் வடிவெடுத் தெனவந்தான், துளங்கு றாதுயர் புராணமுற் றளந்தறி தொல்லையோன் அமரர்க்காக், களங்க றுத்தவன் உண்மைதேர்ந் துயிர்க்கெலாங் கருணைகூர்ந் தருள்சூதன். 21

உயர்தற்குக் காரணமாகிய பதினெண் புராணங்களையும் முழுதும் அளந்தறிந்த பழையோனும், தேவர் பொருட்டு விடமுண்டு கண்டங் கறுத்தவன் உண்மை யியல்பை ஆராய்ந்து சலியாது நின்று உயிர்க் கெலாம் கருணை மீக்கூர்ந்து அருள் செய் சூதமுனிவரனும் ஆகியோன் விளங்கு திருநீற்றொளி கதிரைப்பரப்ப, உருத்திராக்கமாலை பேரிருளை வீசும் நலமுதிர்ந்த பொன் மேனியனைப் புண்ணியம் ஓருருக்கொண்ட தெனும் வடிவொடும் எழுந்தருளினன்.

## முனிவர் வினவுதல்

புக்க சூதனை முனிவரர் யாவரும் பொங்கிய பெருங்காதல்
மிக்க ஓகையின் எதிர்கொடு பூசனை விதியுளி வழாதாற்றித்
தக்க ஆதனத் திருத்தினர் வினவுவார் தறுகண்ஐம் புலவாழ்க்கை
ஒக்க நீப்பயாம் முன்னரே அருந்தவம் உஞற்றினம் அதனாலே. 22

நைமிச வனத்துட் புக்க சூத புராணிகரை முனிவரர் யாவரும் மிகு பெரு விருப்பினால் மிக்க மகிழ்ச்சியின் இருக்கை யெழலும் எதிர்செலவும் கொடு தகுந்த தவிசில் இருத்தி விதிமுறை வழுவாது பூசனை செய்து வினவுவார் வன்கண்மையுடைய ஐம்புல வாழ்க்கையை ஒருங்கு கைவிட "யாம் முன்னமே அரிய தவத்தைச் செய்தனம்" ஆகலின்,

வென்றி வெள்விடைப் பிரானடி காண்பதே வீடுபேற் றினுக்கேது, என்று தேறினம் காண்பதற் குபாயம்மற் றிதுவெனத் தெளிகில்லேம், ஒன்ற லாதன வேறுவே றுரைத்தனம் உயங்கினம் பிணங்குற்றேம், மன்ற கண்டிலேம் துணிவுமெய் யுணர்வினுன் மலக்குறும் பறச்செற்றோய். 23

வெற்றியையுடைய வெள்ளை விடைப் பெருமானடியைக் காண்டலே வீடுபெறுகைக்கு வழி என்று தெளிந்தேம். அத்திருவடிகளை அறிதற்குரிய உபாயம் இதுவெனத் தெளியும் வலியிலேம். வெவ்வேறுபட ஒவ்வொன்றை முத்தி சாதனமென வலியுறுத்துகின்றேம்; தளர்ந்தனம்; மாறுபட்டேம்; துணிந்து ஒருவழியை நிச்சயமாகக் காணேம்; மலத் தீமையை முற்ற அழித்தவரே! (முத்தரே).

எங்கள் பாக்கியப் பயனென நீஇவண் எய்திடப் பெற்றேம்யாம்
கொங்கு யிர்த்ததார்த் துளவனே வியாதன் அக் குலமுனி
அருளாலே, அங்கண் மூவறு புராணமும் உணர்ந்தனை அறமுதல்
பொருள்நான்கிற், பொங்கு சீர்த்தியோய் நீஅறி யாதது புவனம்-
மூன் றினுமில்லை. 24

யாங்கள் செய் புண்ணியப் பயனைப்ப நீ இங்கெழுந்தருளப் பெற்றேம் யாம்; நறுமணம் கமழ்கின்ற துழாய் மாலையையுடைய திருமாலே வியாசமுனிவர். அம்முனிசிரேட்டர் அருள் கொடு அவரிடத்துப் பதினெண்புராணமும் அறமுதலாகக் கூறும் நாற்பொருளும், மிகு புகழோய்! நீமுற்ற உணர்ந்தனை; நீ அறியாதது முப்புவனத்தினும் இல்லை.

ஆத லாற்பல நெறியினுந் துணிந்தவா றரன்திரு வடிகாண்டற்
கேது எங்களுக் கருளுதி வறிதுநீ ஏகலை உயர்வானிற்
பாத வம்பொரப் பெரியவர் காட்சியும் பயன்படா தொழியாதால்
சூத மாதவ என்றலும் அகங்களி துளும்பிஒ துவன்சூதன். 25

ஆதலாற் பல நூன்முறையானும் துணிந்த வகையால் அரன் திருவடியைத் தரிசித்தற்கு எளிதாயதோர் உபாயம் எங்களுக்கு அருள் செய்; பயனின்றி நீ செல்லலை; 'கற்பகத்தரு' ஒப்பப் பெரியோர் தரிசனமும் பயனுறுது ஒழியாது (பயன் படும்); சூத மாதவனே!" என்று கூறிய அளவிலே களிப்பு உள்ளத் தடங்காது மீதூர்ந்து சூதன் ஓதுவான் :

## சூதமுனிவர் விடை கூறுதல்

மொழியும் இப்பொருள் மூவறு புராணத்துட் காந்தமூ
விருகூற்றிற், கழிவில் சீர்ச்சனற் குமாரசங் கிதையினிற் காளிகா
கண்டத்தில், தழுவு தீர்த்தமான் மியத்தது நந்திபாற் சனற்குமா
ரன்கேட்டங், கழிவி லாஅருள் வியாதனுக் குரைத்திட அவனென-
னக் கருள்செய்தான். 26

பேசப்பெறும் இப்பொருள் (விடயம்) பதினெண் புராணத்துள் காந்த புராணத்தின் ஆறு பகுதியுட்பட்ட நிலைபெறு சிறப்பினையுடைய சனற்குமார சங்கிதையுட் காளிகா காண்டத்தில் தழுவப் பெறும் தீர்த்த மான்மியத்தது. அதனை, நந்தி யெம்பெருமானிடத்துச் சனற்குமார முனியும் அவர்பால் வியாசரும், அவ்வியாசர் பால் தாமும் அருளப் பெற்று வழிவழியாக வந்த திது.

நீயிர் பேரறி வாளராய் விரதநன் னெறியினிற் பிறழாமே
தூய மெய்த்தவ வலியினாற் பழமலத் துகளறுத் துமையோர்பால்
நாய னாரருள் பெற்றுளீர் ஆதலின் நன்றும்இப் பொருள்உங்கட்
கேய ஓதுவன் ஒருங்கிய மனத்தொடுங் கேண்மின்க ளெனலோடும்.

நீவிர் பேரறிவினராய்க் கொள்கையில் நிலைபெற நின்று புனிதமாகிய உண்மைத்தவ வலிமையினால் ஆணவ மல வலி கெடுத்து மங்கை பங்கனார் திருவருளைப் பெற்றுளீர்; ஆதலின், பெரிதும் இப்பொருள் உங்களுக்கமைய ஓதுவன்; நீவிர் யாவரும் ஒருங்கிய மனத்தராய்க் கேண்மின்கள் என்ற அளவிலே.

அண்டர் நாயகன் நடம்புரி நாயகன் அடியவர் உளக்கோயில்
கொண்ட நாயகன் திருவடித் தரிசனங் கூடுதற் குபாயஞ்சேர்
மண்டு தீர்த்தமான் மியத்துநீ பெற்றதெவ் வாறெனக் கடாவுற்ற
பண்டை மெய்த்தவர்க் கிருமையும் புலப்படப் பகரலுற் றனன்சூதன். 28

தேவர் தலைவனும், திருக்கூத்தினை ஓவாதியற்றும் முதல்வனும், அடியவர் உள்ளத்துள் விளங்கி வீற்றிருத்தலின் அவற்றைக் கோயிலாக் கொண்டவனும் ஆகிய பெருமான் திருவடி தரிசனப் பேறு வாய்த்தற்கு உபாயமும், சிறப்பு மிகும் தீர்த்த மான்மியத்துள் நீ பெற்ற வரலாறும் எங்ஙனம் என வினவிய பழைய மெய்த்தவர்க்கு இருவகையும் விளங்கச் சூதமுனிவர் விரித்துரைத்தனர்.

புராண வரலாற்றுப் படலம் முற்றுப்பெற்றது.

ஆகத் திருவிருத்தம் – 357

---

# சனற்குமாரப் படலம்

## மகாமேருச் சிறப்பு

எழுசீரடி யாசிரிய விருத்தம்

தொடுகடல் வரைப்பின், மன்பதைத் தொகைகள் சோழன்மீ
னவனென ஈண்டிப், படர்பொலங் குவைகள் கவர்ந்துறு வண்ணம்
பரிந்துகாப் பவரென அசுரர், கடவுளர் இயக்கர் சித்தர்கந் தருவர்
கின்னரர் சாரணர் பிறரும், உடனுற நெருங்கிப் போற்றமூ
வுலகும் உருவிமேல் நிவந்தது மேரு. 1

சகரரால் தோண்டப் பெற்ற கடல் சூழ்ந்த நிலவுலகில் மக்கள் சோழபாண்டியரெனத் திரண்டிங்குப்போந்து பரவிய பொற்குவியல்களைக் கைப்பற்றுதபடி வருந்தியும் காப்பவரை ஒப்ப அசுரரும், தேவரும், இயக்கரும், சித்தரும், கந்தருவரும் கின்னரரும், சாரணரும், பிறரும் ஒருங்கு நெருங்கிக் காப்ப மேரு மூவுலகும் ஊடுருவி மேலும் உயர்ந்தது.

கரிகாற் சோழரும், உக்கிரகுமார பாண்டியரும் மேருவைச் செண்டாலடித்தமை: "செண்டுகொண்டுகரி காலனொரு காலின் இமயச் சிமயமால்வரைதி ரித்தருளி" (கலிங்: 178). திருவிளையாடலுள் மேருவைச் செண்டாலடித்த படலம் காண்க. சேரும் கைப்பற்றினமை "அமைவரல் அருவி இமையம்விற் பொறித்து" (பதிற்: 2-ஆம் பதி-4).

சேர்ந்தன முழுதுந் தன்நிற மாக்குஞ் செய்கையால் தனக்கின மாகிச், சார்ந்தமா ணிக்க வண்ணர்ஏ கம்பர் தமக்கலால் வணங்கிடா தாகி, வார்ந்தபல் கோளும் நாள்களும் நாளும் வலம்வர இராப்பகல் விளக்கி, நேர்ந்தபே ராசை எட்டையும் பகுத்து நின்றதத் தமனியக் குன்றம். 2

தன்னை அடுத்த பொருளைத் தன் இயல்பாக்கும் அப்பொன்மலை, தன்னைப்போல உயிர்களைச் சீவ இயல்பு போக்கிச் சிவத்தன்மையாக்கும் மாணிக்கவண்ணராகிய திருவேகம்பவாணருக்கன்றி ஏனையோர்க்கு வணங்காமல் ஒளிமிகுந்த சூரியன் முதலிய நவக்கிரகங்களும், நட்சத்திரங் களும் எந்நாளும் வலம் வருதலால் இரவும் பகலும் விளக்க எட்டுப்பெருந் திக்குகளையும் பகுத்துக் காட்டி எல்லையாய் நின்றது.

மேருத் தன்மயமாக்குதல்: "கனக மலையருகே, போயின காக்கையும் அன்றே படைத்தது பொன்வண்ணமே" (பொன். 100). மேரு வில்லாக வளைந்தமை. சந்திர சூரியர் வலம் வருதல்: "ரவியுமதியமும் உடன் வலம்வருமலை" (தக்க: 43).

எண்சீரடி யாசிரிய விருத்தம்

நயக்கும் மற்றிதன் ஒளிபரந் திமையோர் நாடு பொன்னிறம் படைத்ததென் றெவரும், வியத்த குங்கிரி மணிபல வரன்றி மீது நின்றிழி முழங்குவெள் ளருவி, வயக்க மாண்டமுப் புரிசையன் றிறுத்த வள்ளல் பூட்டுவிட் டிருத்திய சிலையின், இயக்கம் மேவுபல் பொறியபன் னகநாண் இரைந்து கொண்டொளிர் தொடக்கமே ஒக்கும். 3

விரும்பும் இதன் ஒளி பரத்தலினால் தேவருலகு பொன்னிறம் படைத்ததென்று யாவரும் அதிசயிக்கத்தகும் மேருமலையில் பல மணிகளையும் வாரிக்கொண்டு மேல் நின்றிழியும் வெள்ளிய அருவியின் ஒலிகள் விளக்கத்தால், மாட்சிமைப் பட்ட திரிபுரங்களை அந்நாள் இறுதி செய்து உதவிசெய்த பெருமான் வாசுகியாகிய நாணியைத் தளர்த்தி நிறுத்திய வில்லின்கண் நெட்டுயிர்ப்புக் கொள்ளும் பல புள்ளிகளையும் வரிகளையுமுடைய அப்பாம்பின் மூச்செறிதலை ஒக்கும்.

இருத்துதல்—நேர்நிற்க நாணியைத் தளர்த்துதல். இளைப்பாறும் நெட்டுயிர்ப்பினை ஒக்கும் அருவி ஒலி.

மலைஎ வற்றையுஞ் சிறகரி வலாரி வயங்கெ டப்பொரு தழித்த-வன் வணக்குஞ், சிலையி னைப்பறித் தூங்குவைத் தென்னத் திவலை இந்திர திருவிலைக் காட்டும், அலைதி ரைப்புனல் அருவிசூழ் மேரு அம்பொன் மாற்றினில் அதிகமா யதுதான், நிலைபெ றத்தவர் எண்ணிலர் சூழீஇச்செய் நிறைத வக்கனல் கதுவலிற் போலும். 4

அலைக்கும் அலையையுடைய நீர் வடிவமாகிய அருவி சூழ்ந்த மேரு மலை எல்லா மலைகளையுஞ் சிறகினை அரிந்த இந்திரனது வெற்றிகெடப்

போர் செய்தழித்து அவ்விந்திரன் வளைக்கும் வில்லைப் பறித்து அவ்விடத்து வைத்தாற்போல அம்மலையிலுள்ள அருவியின் திவலைகள் அவ்விந்திர தனுசின் வடிவைக் காட்டா நிற்கும் அம்மலை அழகிய பொன் வகையுள் மாற்றினிலதிகமானது, நிலைபெற அளவிறந்த தவமுடையோர் ஒருங்குகூடிச் செய் தவ நெருப்புப் பற்றுதலால் போலும்.

நீர்த் திவலைகளில் சூரிய ஒளியாலும், மேருவின் ஒளியாலும் பல நிறங்கள் காட்டுதலின் இந்திரவில் என்றனர். 'பொன் சுடச் சுடரும்' (திருக். 267) 'தவாக்கினியில் ஒளி மிகுகிறது மேரு' என்பர்.

### சதசிருங்க மலைவளம்

தடாத பேரொளித் தமனியம் பழுத்த தண்ண றுச்சுனைக் குடுமியங் குவட்டு, வடாது மாமலைக் காந்தியின் பிறக்கம் மடங்கி டாதுபல் சுடர்விரித் தெழுந்த, கெடாத தோற்றமே உறழமற் றதன்மேற் சிளர்சு ரும்பினம் பெடையொடு தழுவி, விடாது பண்படு பொழிற்சத சிருங்க வெற்பெ னத்திசை போயதொன் றுளதால். 5

தடுத்தற்கரிய பெரிய ஒளி வாய்ந்த பொன்ஞெளி முதிர்ந்த குளிர்ந்த சுனைகளைக் கொண்ட சிகரங்களையுடைய வடக்கின் கண்ணுள்ள பெரிய மேருவின் ஒளியின் மிகுதி மடங்காத பல கிரணங்களையும் விரித்தெழுந்த அழியாத காட்சியையே ஒப்ப அம்மலை மேலிடத்து விளங்கும் ஆண்வண்டின் கூட்டம் பெட்டை வண்டுகளோடு தழுவிப் பிரியாது துயில் கொள்ளும் சோலை சூழ்ந்த 'சதசிருங்கம்' எனப் பெயர் கொண்ட சிகரம் திசையெலாம் புகழால் பரவியது உண்டு.

தண்+நறு = தண்ணிய தேன் எனினுமாம்.

குரவு, மாதவி, உழிஞை, மந்தாரம், குருந்து, பாடலம், பாலை, முந் திரிகை, மருது, போதி, பி டாஞெமை, ஓமை, வஞ்சி, காஞ்சி, குங் குமம், நமை, ஒடு, ஆண்,-அரை, த ளா, உதி, செருந்தி, சே, எகினம், அகில், ப லாசு, சந், தில்ல, மா, வில்லம்,-வரை,த மாலம், மா தளை, கணி, அதிங்கம், வகுளம், இன்னன நெருங்கின ஓங்கும். 6

குரா, குருக்கத்தி, சிறுபூளை, மந்தாரம், குருந்தம், பாதிரி, பாலை, முந்திரிகை, மருது, அரசு, பிடா, ஞெமை, ஓமை, வஞ்சி, காஞ்சி, குங்குமம், நமை, ஒடு, ஆண், அரை, முல்லை, ஒதி, செருந்தி, சே, புளி, அகில், முருக்கு, சந்தனம், தேற்று, மா, ஆச்சா, வில்வம், மூங்கில், பச்சிலை, மாதளை, வேங்கை, அதிங்கம், மகிழ், இவைபோல்வன நெருங்கி வளர்ந்தோங்கும்.

குருக்கத்தி, வஞ்சி, முல்லை இவை கொடிகள்; பிறமரங்கள். புராண வரலாற்றில் 8, 9 செய்யுட்களில் முனிவரர் பெயர் அடையின்றிப் பேசப்பெறும். இல்ல மா = இல்லம்+ஆ எனவும்! இல்லம்+மா எனவும் பிரித்து ஆ, ஆச்சாமரம்; மா, மாமரம்.

அன்றி ஞர்புரம் அழலெழ நகைத்த அண்ணல் சேவடிக் கன்பறு இயல்பின், மூன்று மெய்த்தவ யோகியர்க் கெல்லாந் தூய நற்றவச் சாலையு மாகித், தென்றல் ஊர்தரப் பூமணங் கஞலத் தெளிபு னற்சுனை அளவில கவின்று, பொன்றி டாக்கட வுளர்முதலோர்க்குப் போக பூமியும் ஆயதப் பொருப்பு. 7

அச்சத சிருங்கம் பகைவருடைய முப்புரங்களை நெருப்புப் பற்றப் புன்முறுவல் பூத்த பெருமையர் திருவடிக்கண் அன்பு நீங்கப்பெருத தன்மையினுல் செறிந்த மெய்த்தவ யோகியர் யாவர்க்கும் புனித நற்றவச் சாலையுமாகித் தென்றல் தவழ்தலினுலே மலர் மணம் எங்குஞ் செறியத் தெளிந்த நிர்மயமாகிய அளவில்லாத நீர்ச்சுனைகளாற் பொலிந்து அழியாத பிரமன் முதலியோர்க்குப் போக பூமியுமாயுள்ளது.

"அன்றிஞர் புரமெரித்தார்க் காலயம்" (திருத். பூச.) யோகத்திற்கும், போகத்திற்கும் இடனுய் விளங்குகிறது அது.

அங்கண் வாழ்தரும் அயன்மனைக் கிழத்தி அங்கி நாப்பண்நின் றருந்தவஞ் செயல்போல், கொங்கு லாந்துவர்ப் பங்கயத் திரைதேர் குறிப்பின் ஓதிமம் அசைவற இருக்கும், பொங்குவெண்டிரைத் தீர்த்தத்தின் மாடே புரங்க டந்தவர் வரம்அவட் குதவித், தங்கு காட்சியின் நறுமலர் பொதுளித் ததைக டுக்கைபொன் சொரிவன உடைத்தால். 8

அவ்விடத்து வாழும் பிரமனது மனைவியாகிய கலைமகள் நெருப்பின் நடுவில் நின்று செய்தற்கரிய தவத்தைச் செய்தல் போல, நறுமணம் பரவும் சிவந்த தாமரையில் இரைகவரும் குறிப்பொடு அன்னம் அசைவற்று நின்றிருப்ப, எழுந்தோங்கும் வெள்ளிய அலைகளையுடைய தீர்த்தத்தின் பக்கத்தில் திரிபுரங்களை வென்ற இறைவர் வரத்தை அக்கலைமகளுக்குத் தந்தருளி நிலைபெற்றிருக்குங் காட்சிபோல் நறுமணங் கமழு மலர்கள் செறிந்து நெருங்கிய கொன்றை மரங்கள் மலர் சொரிதலையுடையது.

அன்னம் செந்தாமரை மலரிடை அசைவற இருப்பக் கொன்றை நின்று அதன்மேல் மலர் சொரியுங் காட்சி, நாமகள் நெருப்பிடை அசைவற நின்று தவம் செய்யச் சிவபிரான் அருளுதலை ஒக்கும்.

மீது சந்திர சூரியர் கிரணம் விரவ லாமையின் ஒருபொழுதலர்ந்தோர், போது கூம்பும்அச் செய்கைஆங் கின்றிப் புரிமுறுக்குடைந் தென்றும்ஓர் இயல்பிற்,கோதில் பன்மணிக்கதிரொளி வருடக் குளிர்ந்த லர்ந்திரண் டவத்தையுங் கடந்து, மாதர் வெண்பிறைக் கண்ணியர் அடிசேர் மாந்தர் ஒத்துள வளஞ்சுனை மலர்கள். 9

வளமிக்க நீர்ச்சுனையிலுள்ள மலர்கள் தம்மேல் சந்திர சூரியர்களுடைய கிரணங்கள் கலத்தலில்லாமையால் ஓர் பொழுது அலர்ந்து மற்றோர் பொழுது குவியும் அச்செயல் அவ்விடத்தின்றிக் குற்றமில்லாத பல் மாணிக்கங்களினெளி தடவுதலாற் கட்டவிழ்ந் தெப்போதும் ஓரியல்பாய்

வாடாது மலர்ந்து கேவல சகல அவத்தை என்னும் இருநிலைகளையுங் கடந்து அழகிய இளம்பிறையை மாலையாகச் சூடிய இறைவரது திருவடியைச் சேர்ந்த சிவஞானச் செல்வர்களை ஒத்தன வளவிய சுனைமலர்கள்.

உயிர்கள் கருவிகளொடு கூடிய நிலை சகலமும், நீங்கியநிலை கேவலமும் ஆகும். இவை நீங்கிய நிலை சுத்தம் ஆகும். திருவருளே சார்பாக அறிதல், 'மலர்தலும் கூம்பலும் இல்லதாகிய அறிவுநிலை' (திருக்: 425). மூன்நிலைகளையும் வள்ளுவப் பெருந்தகையார் இருள்நிலை, மருள் நிலை, (தெருள் நிலை) மாசறுகாட்சி, என்ப. இருள்நீங்கி இன்பம் பயக்கும் மருள் நீங்கி, மாசறு காட்சி யவர்க்கு'' (திருக். 352).

வென்ற ஐம்புல வாழ்க்கையர் வடிவின் விளங்கு பூதியும் விரைகமழ் கடாத்த, குன்று போல்உயர் களிற்றுநீள் கோட்டுக் குலவுமுத்தமும் வேய்உகு மணியும், துன்றி வானிலாக் கற்றைகால் வெண்மை தூய பொன்மையை விழுங்கிய தேயோ, அன்றி அவ்வரைப் பொன்மையே வெண்மை தனைவி ழுங்கிய தோஅது அறியேம். 10

ஐம்புலன்களை வென்ற தவ வாழ்க்கையுடையவரது திருமேனியில் விளங்கும் விபூதியும், மணங்கமழும மதங்களையுடைய மலைபோல் உயர்ந்த களிற்றின் நீண்ட தந்தத்தினின்றும் சொரியும் முத்தும், மூங்கிலினின்றும் உதிர்கின்ற முத்தமும் பொருந்தி, வெள்ளொளித் தொகுதி உமிழ்கின்ற வெண்மை, களங்கமில்லாத பொன்மையை விழுங்கியதோ? அன்றி அம்மலையது பொன்மை வெண்மைதனை விழுங்கியதோ? அதனையறியேம்

இனைய சீர்பெறு சதசிருங் கத்தின் எண்ணி லாப்பெரு வளத்தன வாகி, நனைமலர்ப்பொழில் சண்பகம் சரளம் நரந்தம் தெங்குகோங் கரம்பைகள் உடுத்து, வனச நீள்சுனை மல்கிய பிரம வனமொன் றுள்ளது மற்றதன் நாப்பண், தனைநி கர்ப்பது நான்மறைக் கிழவன் தான மாயது பிரமமா நகரம். 11

இத்தன்மை வாய்ந்த சிறப்பினையுடைய சதசிருங்க மலையில் அளவிட அடங்காத வளங்களை யுடையன வாகித் தேனூறு மலர்களைக் கொண்ட சோலைகள் சண்பகமும், தேவதாரும், நாரத்தையும், தென்னையும, கோங்கமும், வாழையும் சூழத் தாமரைகள் மிக்க சுனைகள் நிறைந்த பிரமவனம் ஒன்றுள்ளது; அவ்வனத்தின் மத்தியில் பிரமனது தானமாயுள்ள பெரிய பிரம நகரம் தன்னைத் தானொப்பது உளது.

### சனற்குமார முனிவர் யோகுசெய் திருத்தல்

எழுசீரடி யாசிரிய விருத்தம்

பொற்பமர் இனைய நகர்க்கொரு பாங்கர்ப் பொங்கொளி மடங்கலே றென்று, பற்பல மடங்கல் சூழ வீற் றிருக்கும் பரிசெனத் தவளநீற் றொளியின், அற்புதக் கோலத் தறிஞர்சூழ்ந் தேத்த அருட்சனற் குமாரமா முனிவன், எற்பணிப் பெருமான் சரண்உளத் திருத்தி யோகுசெய் திருக்குநாள் ஒருநாள். 12

அழகும் பொலிவும் அமைந்த இப்பிரம நகர்க்கொரு புடையிலே விளங்கும் ஒளியையுடைய ஆண்சிங்கம் ஒன்று மிகப்பல சிங்கங்கள் மருங்குசூழ நிகரின்றி யிருக்கும் தன்மைபோல வெண்டிருநீற்றொளியால் சிவஞானக் கோலத்தையுடைய யோகியர்கள் சூழ்ந்து துதிக்கத் திருவருளையுடைய சனற்குமார முனிவர் எலும்பை அணிகலனாகக் கொண்ட பெருமானுடைய திருவடிகளை உள்ளத்துட் கொண்டு சிவயோகம் செய்து வருநாட்களில் ஓர் நாள்.

வைகறை எழுந்து கங்கைநீ ராடி வானவர் முனிவர்தென் புலத்தார், செய்கடன் உவப்பத் தெண்புனல் இறைத்து நியாசமுந் தியானமும் ஆற்றிப், பொய்களை விரசை அங்கியின் விதியாற் பூத்தநீ றங்கையின் எடுத்து, நைகரந் தீர்ந்த அன்பொடு நியாச நடைபெறு தியானமுன் னாக. 13

விடியற் காலையில் எழுந்து கங்கை நீரில் மூழ்கித் தேவர்களும், முனிவர்களும், பிதிரர்களும் செயத்தக்க கடப்பாட்டினை ஏற்றுக்கொண்டு மகிழ்ச்சி உறத் தெள்ளிய நீரை அருக்கியந்தந்து அங்க நியாசம், கர நியாசங்களையும், தியானத்தையும் செய்து உண்மை வாய்ந்த விரசா ஓமவிதியினால் மலர்ந்த திருநீற்றினை அகங்கையில் மகிழ்ச்சி கூடிய அன்புடன் அவ்விருவகை நியாச முறையின் வழியுள்ள தியான முதலாக,

அடைவுறு பஞ்சப் பிரமமந் திரத்தால் அங்கியென் றற்றொடக் கத்தான், முடிவில்சா பால மனுக்கள்ஏ ழாற்றூன் மூவிரண் டதர்வமந் திரத்தால், வடிவுறும் இடக்கை வைத்துமுன் முக்கால் மந்திரித் தறலினால் குழைத்துக், கடிகெழு சென்னி முதல்அடி காறும் பிரமம்ஓர் ஐந்தையுங் கழறி. 14

முறையாயுள்ள பஞ்சப் பிரம மந்திரத்தாலும் அங்கி என்பதை முதலிலுள்ள திருமந்திரத்தாலும், அழிவில்லாத சாபால முனிவர் தொகுத்த மந்திரங்கள் ஏழாலும் அதர்வவேத மந்திரங்கள் அறுவகையாலும் முன்பு அழகிய இடக்கரத்தில் வைத்து மூன்றுமுறை அம்மந்திரங்களை ஓதி நீராற்குழைத்து விளக்கம் அமைந்த தலைமுதல் முழங்கால்காறும் அந்தப் பஞ்சப் பிரம மந்திரங்களையும் திருத்தமாகக்கூறி,

நிறையஉத் தூளஞ் செய்துபின் திரியம் பகங்களால் நிகழ்த்தும்அஞ் செழுத்தால், அறலின்ஆ சமித்துப் பின்னருந் திரியா யுடந்திரி யம்பக மனுவான், முறையின்அஞ் செழுத்தால் புண்டர மூன்றும் முச்சுடர் முக்குணம் மும்மை, மறைகள்மூ வுலகு முந்நிறம் முத்தீ வடிவெனச் சிந்தையிற் கண்டு. 15

குறையற நிறைவுபட நீர்விடாது பொடியாகப் பூசிப், பின்னர்த் திரியம்பக மந்திரத்தாலும், செயற்படும் அஞ்செழுத்தாலும் நீர்கொண் டாசமனஞ் செய்து, மேலும் திரியாயுஷ மந்திரத்தாலும், திரியம்பக

மந்திரத்தாலும் முறைப்படி பஞ்சாக்கரத்தாலும் புண்டரம் மூன்றனையும் மூவகைப் பொருள்களின் வடிவாக உளத்துட் கொண்டு,

முக்சுடர்: சந்திர சூரியாக்கினிகள்; முக்குணம்; சாத்துவிகம்; இராசதம், தாமதம்; முந்நிறம்: வெண்மை, மஞ்சள், செம்மை; முத்தீ: ஆகவனீயம், தட்சணாக்கினியம், காருக பத்தியம்.

ஐந்துமூ விடத்தும் அழகுற அணிந்தாங் கருக்கற்குச் சந்நீர் உதவி, இந்திர திசையை நோக்குபு மோனம் எய்திநல் லாதனத் தும்பர்ப், பந்தமில் சுகஞ்சேர் இருக்கைய ஞகிப் பஞ்சபூ தத்தை-ஒன் றொன்றின், உந்துற ஒடுக்கி ஆவியைப் பிரம ரந்திரத் தொடுக்கிய பின்னர். 16

பதினைந்திடத்தினும் பொலிவு பெற அணிந்து அப்பொழுது சூரியனுக்கு அருக்கியங் கொடுத்துக் கீழ்த்திசையை நோக்கி மௌன மாயிருந்து நல்லாசனத்தின்மேல் பந்தத்தினின்று நீங்கிய சுகாசனத்தி விருந்து நில முதலிய ஐம்பூதங்களையும் முறையே ஒன்று ஒன்றிலொடுங்க ஒடுக்கிப் பிராணவாயுவைப் பிரமரந்திரத்தில் ஒடுக்கிய பின்பு,

ஒன்றினொன் றொடுக்கல்: பிருதிவியை அப்பினும், ஒடுங்கிய அப்புவைத் தேயுவினும், இதனை வாயுவினும், மூன்றனையும் தன்னுளொடுக்கிய வாயுவை ஆகாயத்தினும் ஒடுக்குதல். பிரமரந்திரம் — பிரமத்தை அடைதற்குக் காரணமான உச்சித் துவாரம்.

பாதகக் குழிசிப் புலேஉடல் தொடக்கைப் பவனபீ சத்தினல் உணக்கிப், போதர வன்னி பீசத்தால் வேவப் பொடித்தது வாரிபீ சித்தால், சீதமா நனைத்துத் தரணிபீ சத்தால் திரட்டிவே றுறுப்-பெலாம் பகுத்து, மேதகச் சத்தி பீசத்தால் நிறைத்து மேயபின் விதியுளி உயிரை. 17

பெரும் பாவங்களுக்குப் பாத்திரமாகிய இழிந்த பந்தமாகிய உடலை வாயு பீசாட்சரத்தினல் உலர்த்தி, மீள ஆக்கினேய மந்திரத்தால் வேவ நீறுக்கி, அதனை வாருண பீசாட்சரத்தால் குளிர நனைத்துத் பிருதிவி பீச மந்திரத்தால் ஒரு சேரத்திரட்டி மேன்மை பொருந்திய சத்தி பீசாட்சரத்தால் சிர முதலாக வெவ்வே றுறுப்பெல்லாம் பகுத்து நிறைவித்து மேவிய பின் விதிவழி உயிரை;

பாவனையால் அழித்து, ஆக்குதல். இருவினைகளுக்குப் பாத்திரமாய்த் தத்துவ தாத்துவிக உடம்பைப் பாவனையால் அழித்து அருள் வடிவான மீளவும் அமைத்தல்: பூதசுத்தி என்ப. "வஞ்சவினைக் கொள்கலனும் உடம்பை" (திருவிளையாடற் புராணம்).

ஆசுதீர் உடம்பின் முன்புபோல் இருத்தி அங்கண் ஆதாரபங் கயத்துத், தேசுறும் வன்ன ரூபியாய் நிறைந்த தேவியை முறை-வழா தமைத்துப், பேசிரு பத்தோ ராயிரத் தறுநா றுயிர்ப்பினைப் பிரித்தச பையினன், மாசறும் ஆனை முகப்பிரான் முதலோர் மகிழ்வுறும் படியவர்க் குதவி. 18

சுத்தி செய்யப்பெற்ற உடம்பில் முன்புபோல நிலைபெறச் செய்து அவ்வுடம்பில் மூலாதார முதலிய ஆறுதாரத் தானமாகிய தாமரை மலர்களில் விளக்கம் அமைந்த எழுத்து வடிவாய் நிறைந்த காயத்திரி தேவியை முறை வழுவாமல் நிறுவிச் சொல்லும் இருபத்தோராயிரத்தறுநூறு சுவாசங்களை அம்ச மந்திரத்தால் பிரித்துக் குற்றமற்ற விநாயகக் கடவுள் முதலியோர் மகிழ அவர்க்கு அவற்றை நிவேதித்து,

ஆறு ஆதாரம் ஆவன: மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்கினை என்பன. இவை முறையே நான்கு, ஆறு, பத்து, பன்னிரண்டு, பதினாறு, இரண்டு இதழ்களான் அமைந்த மலர் வடிவும் இதழ் ஒன்றுக்கு எழுத்தொன்றாக ஐம்பது எழுத்துக்களின் அமைந்த மந்திர வடிவும் கொண்டன ஆகும். "அகரமுத லெனஉரை செய் ஐம்பத்தொரக்ஷரமும்" (திருப்புகழ்).

ஆவியாம் இலிங்கத் தந்தரியாக அருச்சனை விதியுளி யாற்றி,
மேவிய பின்னர்ப் புறத்தினுஞ் சென்னி முகமுதல் விளம்புறுப்
பெல்லாந், தேவியை ஐம்பான் எழுத்துரு வான செல்வியை நலம்-
வர அமைத்துப் பாவுறும் பிராண யாமங்கள் முறையிற் செய்து-
பின் பரிதிகா ணளவும். 19

ஆன்மாவாகிய இலிங்கத்தில் அகப்பூசையாகிய அருச்சனையை நூல் விதித்தபடி நிகழ்த்திப் பின்பு புறத்தினும் தலை, கண், காது முதலிய உறுப்புக்களில் தேவியும் அகார முதலாகிய ஐம்பதெழுத்தின் வடிவான செல்வியுமாகிய காயத்திரி சத்தியைத் தாங்கருதிய நன்மை கைகூட அமைத்துப் பரவிநிற்கும் பிராணனைப் பதினாறு முறை தடுத்தல் விடுத்தல்களைச் செய்து, பின்னர்ச் சூரியோதயம் வரையிலும்,

அருமறைக் காயத் திரிப்பெரு மனுவை ஆயிரத் தெட்டுருக்
கணித்துக், கருதிய யோக சித்தியின் பொருட்டுக் கணேசனை
முன்புபூ சித்துப், பரிதிமண் டிலத்தும் தண்டிலந் தனினும் பகர்-
தரும் இலிங்கமூர்த் தியினும், மருவும்அங் குட்ட ரூபியாஞ் சிவனை
வரன்முறை அருச்சனை புரிந்து. 20

வேதத்துட் சிறந்த காயத்திரியாகிய அரிய பெரிய மந்திரத்தை ஆயிரத்தெட்டு முறை உருவேற்றித் தாங்கருதிய சிவயோகஞ் சித்தியாதற் பொருட்டு முன்பு விநாயகப் பெருமானைப் பூசை செய்து சூரிய மண்டிலத்தினும், வேள்வியினும், ஓதப்பெறும் இலிங்க வடிவினும் பொருந்திய பெருவிரலளவு வடிவின் விளங்கும் சிவபெருமானை வழி வழியாக வருகின்ற வழக்காற்றில் பூசையை விரும்பிச் செய்து,

யோகினைக் கூடித் தன்னுடை இதயத் தீசமென் றுரைக்கும்-
எட் டிதழும், சேகறும் வயிராக் கியமெனும் பொகுட்டும் செப்புவா
மாதிகே சரமும், ஆகிய கமலம் ஆவிஆ யாமத் தலர்தரக் கண்டுமற்
றதன்மேல், ஏகன்மும் மூர்த்தி யாகிமுக் குணங்கட் கிறைவன்மும்
மண்டில ஈசன். 21

யோகத்தைத் தலைப்பட்டு இறைவனை உடைய இருதயத்தில் அணிமா முதலிய எட்டு ஐஸ்வரியங்களே எட்டிதழ்களும், தீது தீர் வைராக்கியமே பொகுட்டும், எடுத்துப் பேசப்படும் வாமை முதலிய சத்திகளே மகரந்தமும் ஆகிய தாமரையைப் பிராணுயாமத்தால் கீழ்நோக்கியுள்ள தாமரை மேல் நோக்கி மலரக்கண்டு அத்தாமரையின் மேல் தியானிக்கப்படும் இறைவன் ஏகனுய், மும்மூர்த்தியாய், முக்குணங்களுக்கும், மும்மண்டிலத்திற்கும் ஈசனுமாகி,

வாமாதி: வாமை, சேட்டை, இரவுத்திரி, காளி, கலவிகரணி, பலவிகரணி, பலப்பிரமதனி, சர்வபூத தமனி என்பன. ஆவி ஆயாமம்-பிராணுயாமம். ஆயாமம்—தடுத்தல்.

முக்கணன் புட்டி வருத்தனன் நீலப் பொன்மயன் முதிர்கறை மிடற்றன், தக்கஈ சானன் வன்னிரே தாநற் சத்தியன் அருவினன் உருவன், புக்கசீர்ப் புருடன் விச்சுவ ரூபன் புருட்டுதன் சிவன்புரு கூதன், வைக்குமெய்ச் சத்துப் பராபரம் பரமான் மாமகத் துயர்-பரப் பிரமம். 22

முக்கண்களையுடையனும், அடியவர் ஆற்றலை மிகுப்பவனும், மங்கை பங்கனுய வடிவில் நீலமும் பொன்னிறமும் செம்பாதியாய் நீலப் பொன்மயனும், திருநீலகண்டனும், தக்க ஐஸ்வரிய முடையவனும், அக்கினி மயமான விந்துவையுடையவனும், சிற்சத்தியனும், அருவனும், உருவனும், அருவுருவனும், சிறப்புடைப் பௌருஷனும், உலக வடிவினனும், உயிர்களால் துதிக்கப்படுபவனும், சிவனும், முன் அழைக்கப்படுபவனும், மெய்ச்சத்துவும், மேலதற்கும் மேலதும்,

என்றெடுத் துரைக்கும் பெயர்களின் பொருளாய் இயம்பரும் பரவெளி நாப்பண், நின்றபே ரொளியின் பிழம்பினை இனைய சத்தியி னேடுநேர் நோக்கி, ஒன்றுதன் உயிரை அப்பெரும் பொருளோ டொன்றுவித் திருபகுப் பிறந்து, மன்றயோ கத்தின் அசைவற இருந்தான் மறையவன் ஈன்றருள் மதலை. 23

வேதா கமங்கள் ஆங்காங்கு எடுத்துரைக்கும் பெயர் நடுவண் நின்ற பெரிய ஒளியின் திரட்சியை அப்பரமாகாசமார் சத்தியால் நேரே நோக்கி ஒன்றற் குரிமையுடைய தன் அறிவை அப்பெரும் பொருளாகிய இறைவனே டொன்றுபடுத்தி அது தான் என்னும் வேற்றுமையற்றுப் பிரமன் புதல்வராகிய சனற்குமார முனிவர் யோகத்திற் சலிப்பின்றித் தெளிய இருந்தனர்.

## சிவபெருமான் திருவுலா

ஆங்கவன் அவ்வா றரியயோ கத்தின் ஆனந்த பரவச ஞகி, ஓங்குபே ரறிவின் விழித்தனன் உறங்கும் ஏல்வையின் உம்பர்தம் பெருமான், மாங்குயிற் கிளவி மலைமக ளோடு மலர்தலை உலகுகாத் தளிப்பான், வீங்கிய கருணை ஊற்றெழத் தரும வெள்விடை ஊர்தி-மேல் கொண்டு. 24

அவ்விடத்து அச்சனற்குமார முனிவர் அவ்வியல்பின் செய்தற்கரிய சிவயோகத்தால் ஆனந்த பரவசம் உடையவராகி ஓங்கு பேரறிவாகிய இறைவனிடத்துக் கலந்து சாக்கிராதீத நிலையில் இருக்கும் காலத்தில் தேவர்கள் பெருமான் மாமரத்தில் வதியும் குயிலிசைபோலுஞ் சொற்களையுடைய இமயவல்லியோடும் விரிந்த உலகைக் காத்தருளப் பெருங்கருணை பெருக்கெடுப்ப அறவடிவாகிய வெள்ளைவிடை இவர்ந்து,

உரகர்கந் தருவர் இராக்கதர் சித்தர் யோகிகள் ஆசைகாப் பாளர், நிரைமணி மோலி பாதுகை வருட நிகழும்ஆ காவுடன் ஊகூ, விரிபுகழ் ஏனை வீணைவல் லவரும் விருதெடுத் தோதியாழ் தடவ, இருவிசும் பகத்தின் இனிதெழுந் தருளி உலவினன் என்னைஆ ளுடையான். 25

நாகர், கந்தருவர், இராக்கதர், சித்தர், யோகிகள் இந்திரன் முதலிய எண் திசையைக் காவல் செய்பவர் தம் மணிமுடிகள் பெருமானுடைய பாதுகைகளை வணங்குதலால் தீண்டவும் நிகழும் ஆகாவும், ஊகூவும் பரவிய புகழுடைய ஏனை வீணை வல்லவராகிய கந்தருவரும் வெற்றிகளை எடுத்தோதி யாழ் வாசிப்பவும் பெரியகரிய விண்ணிலினிதாக எழுந்தருளி உலாப் போந்தருளினன் என்னை ஆளாகவுடையான்.

அதுசனற் குமாரன் யோகினில் வைத்த கருத்தினால் அறிந்திலனாகிக், கதுமென இருக்கை எழாமைகண் டெம்மான் கருணை-கூர்ந் துமையவ ளோடு, விதுவணி சடிலத் தெம்மையே உளத்தின் விழைதர இருத்திமற் றெம்பாற், பொதுவற ஒருக்கு மனத்தினன் என்னுப் புரிவொடுங் கோயில்புக் கனனால். 26

இறைவன் திருவுலாக் கொண்டமையைச் சனற்குமார முனிவர் யோகத்தில் சிந்தையைச் செலுத்தியிருந்தமையால் அறியாராக, அதனால் இருக்கையினின்றும் விரைய எழாமையைக் கண்ட எம்பெருமான் உமையம்மையோடும் கருணை மீக்கூர்ந்து, இளம்பிறையைச் சடையிடை முடித்த தம்மையே உள்ளத்துள் விரும்ப இருத்திப் பிறவற்றிற் குரிமையில்லையாம்படி ஒருவழிப் படுத்திய மனமுடையவர் எனத் திருவுளங்கொண்டு கருணையொடுந் திருக்கோயிலைச் சேர்ந்தனன்.

## சனற்குமார முனிவர் சாபமேற்றல்

நந்திஎம் பெருமான் நோக்கினன் வெகுண்டு நலமிலா ஒட்டகமேபோல், அந்தில்எம் பிரானை இகழ்திருந் ததனால் அவ்வுருவாகெனச் சபிப்பச், சிந்தைகூர் முனியும் ஒட்டகமாகிச் செழுநிலத் துழிதரு காலை, முந்தைஞான் றியற்று நல்வினைப் பயனான் முன்னினன் கச்சிமா நகரம். 27

நந்தியாகிய எமது பெருமான் பார்த்துக் கோபித்துச் சிறிதும் நலமில்லாத ஒட்டகத்தைப்போல அவ்விடத்தில் எமது பெருமானைப் பழித்திருந்ததனால் அவ்வொட்டகவடிவு பெறுகெனச் சபித்த அளவிலே

வருத்தமிக்க அச்சனற்குமாரர் ஒட்டகமாகி வளமிக்க நிலவுலகிற் றிரிதருங் காலத்தில் முன்னுளியற்றிய நல்வினைப்பயன் வந்துதவக் கச்சிமா நகரத்தை யடைந்தனர்.

## பிரமன் கச்சபேசரைப் போற்றல்

ஆயிடைக் கச்ச பேசனும் இறைவன் அமர்ந்தருள் கோயிலின் மாடே, காயும்ஐம் பொறியின் உலகெலாம் படைக்குங் கருத்தினன் மலரணைப் புத்தேள், தூயமா தவத்தின் இனிதுவீற் றிருக்குஞ் சூழலின் நணுகுத லோடும், தீயபா வத்தின் ஒட்டக வடிவாஞ் சிறுவனைக் கண்டனன் தாதை. 28

மலரை இருக்கையாகவுடைய பிரமன், உலகைச் சிருட்டிக்கும் ஆற்றல் பெறும் விருப்பொடும் காஞ்சியில் கச்சபேசப்பெருமான் எழுந்தருளியுள்ள திருக்கோயிலின் சார்பில் ஐம்பொறிகளை அடக்கிப் புனித மாதவம் செய்யுமிடத்தை ஒட்டகம் நண்ணிய அளவிலே, இறைவனைக் கண்டெழாத பாதகத்தால் ஒட்டக வடிவாய தன்மகனைக் கண்டனன்.

பாவடி நெடுங்கால் திரையெழு தோல்வாய்ப் பழியுடல் நெளிந்துநீள் கழுத்தின், யாவரும் இழிக்கும் ஒட்டக யாக்கை இளவலை நோக்கிநின் றந்தோ, சேவுயர்கொடியான் அடித்தொழும் பாற்றுந் திருவருட் குரியனும் இவனுக், காவஎன் செய்கோ என்மகற் இதுவந் தடுத்ததெவ் வாறென எண்ணி. 29

பரந்த அடியையும், நீண்ட காலையும் திரைந்தெழுந்த தோல் வாயையும், நெளிந்து நீண்ட கழுத்தையும், யாவரும் பழித்துப்பேசும் ஒட்டகவுடம்பையும் தாங்கிய தன் இளைய மகனைப்பார்த்து, ஐயோ, உயர்ந்த இடபக் கொடியையுடைய இறைவன் திருவடித் தொண்டு செய்தற்குக் காரணமாகிய திருவருளுக்குப் பாத்திரமாம் தன் மகனுக்கு இவ்வுடம்பு வந்து பொருந்தியது; ஆவ! என் செய்கோ! ஈது எவ்வாறென நினைந்து,

யோகினைக் கூடி முன்நிகழ் வனைத்தும் உணர்ந்தனன் அவ்வினை தவிர்ப்பான், ஆகம முறையாற் கச்சபே சன்பால் அடைந்துபூ சனைசெய்தேத் தெடுப்பான், மாகர்போற் றிசைக்கும் இளம்பிறை மோலி வள்ளலே உலகளித் தழிக்கும், ஏகனே ஆமை உருவொழித் தரியை ஆண்டநின் இணையடி போற்றி. 30

யோகத்திருந்து முன் நிகழ்ந்த செயல் முற்றவும் அறிந்து, தன் மகனுக்கு நேர்ந்த தீவினை தீரும்பொருட்டுக் கச்சபேசப் பெருமானை அடுத்து ஆகமமுறைப்படி பூசை செய்து போற்றும் பிரமன், விண்ணவர் துதிசெயும் பிறையை அணிந்த சடாமுடி புனைந்த வள்ளலே! உலகைத் தந்து காத்தொடுக்கும் ஒருவனே! திருமால் கொண்ட ஆமை வடிவை அழித்து அத்திருமாலை அடிமைகொண்ட நின் திருவடிகளுக்கு வணக்கம்.

மாகம்— ஆகாயம். செய்கு—செய்வேன்.

காசிகே தாரம் புட்கரங் குருக்கேத் திரங்கடி நைமிசங் களினும், ஓசைகொள் காஞ்சி அதிகமென் றுரைப்ப துரைப்பிர மாணமொன் றன்றால், ஈசனே நீயும் உமையுமே அல்லால் இந்நகர் படைத்தவர் இல்லை, தேசுற யானே கண்ணுறக் கண்டு தெளிந்த-தாம் எந்தவூ ழியினும். 31

காசி, கேதாரம் புட்கரம், குருக்கேத்திரம், விளக்கமுடைய நைமிசவனமுமாகிய இவைகளினும் புகழ் அமைந்த காஞ்சிபுரமே மிக்கது என்று கூறுவது ஆகமப் பிரமாணமும் ஆகும்; மேலும் ஈசனே, இந்நகரம் நீயும் உமையம்மையுமே சிருட்டித்தது. இந்நகரம் பிறரால் படைக்கப்பட்டதன்று. ஒவ்வோர் கற்ப முடிவினும் யான் நேரிற் கண்டு தெளிந்த திது.

ஆகம அளவையின் வலியுடைத்து காட்சி. "சுடலை சேர்வது சொற்பிர மாணமே" (திருநாவுக்கரசர்) எனவும், 'ஆகம அளவையான் உணர்த்தல் வேண்டா காட்சியளவை தன்னானே உணரப்படும்" (திருக். பரி. உரை. 37) எனவும் வருவன நினைவு கூர்க.

புரியுநின் அருளால் உயர்ந்தவர் அநேகர் புரவுபூண் டெட்டுரு வெடுத்தோய், வரிவிழி உமையாள் மணந்தபே ரின்ப வடிவமே இடும்பைநோய் அறுக்கும், கருணைவா ரிதியே இரங்கிடாய் எமக்குக் களைகண்நீ யன்றிவே றிலையென், றிருகணீர் சொரிய நெக்குநெக் குருகி ஏத்தினன் நாத்தழும் பேற. 32

"உயிர்களைக் காத்தற்பொருட்டு எண்வடிவு கொண்டோனே! வரி அமைந்த கண்களையுடைய உமையம்மையோடு கலந்த பேரின்ப வடிவே! பிறவித் துன்பமாகிய நோயை அறுக்கும் கருணைக் கடலே! விரும்பத் தக்க உனது கருணையால் உயர்ந்தவர் பலர். எமக்குப் பற்றுக்கோடு நீயே யன்றி வேறில்லையாதலால் இரங்கியருளாய்" என்று இருகண்களும் அன்புநீர் பெருகவும் நாத்தழும் பேறவும் நெகிழ்ந்து துதித்தான் பிரமன்.

இறைவனின் எண்வடிவை புண்ணியகோடீசப் படலம் 16-ஆம் செய்யுளிற் காண்க.

### கச்சபேசர் காட்சி கொடுத்தல்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

திசைமா முகன்வாழ்த் தொலி அஞ்செவியிற் சென்றேறலும் ஆரருள் உந்துதலான், மிசைவானவர் பூதகணம் புடையின் மிடை-யப்பெரு மான்எதிர் நின்றருளி, வசைதீர்தர வேட்ட வரந்தரு-கேம் மைந்தாஉரை செய்கென வாய்மலர, இசைபாடினன் ஓகை துளும்பிடநின் றிதுகூறுத லுற்றனன் வேதியனே. 33

நான்முகன் வாழ்த்தொலி திருச்செவியுட் சென்ற அளவே பெறுதற்கரிய திருவருள் தன்னைச் செலுத்துதலால், ஆகாயத்தில்

தேவரும் பூதகணங்களும் மருங்கில் நெருங்கப் பெருமான் எதிர் நின்று "குற்றந்தீர நீ விரும்பிய வரத்தைத் தருவேம் மைந்தனே! உரைசெய்க" எனத் திருவாய் மலர்ந்தருளக் கேட்ட பிரமன் இசை பாடினனாய் மகிழ்ச்சி ததும்ப நின்றிதனைக் கூறுவான்.

நின்றெண்டு வழாதவன் என்புதல்வன் நீடுந்தவ முற்று சனற்குமரன், முன்றிண்சத கோட்டிடை நின் இருதாள் முன்னிச்சிவ யோகு முயன்றுதவத், தொன்றும்பொழு தாயிடை நீவருதல் உணர்ந்தானலன் நிட்டை கருத்துறலால், அன்றங்கருள் நந்தி சபித்ததனால் அமர்ஒட்டக ஆக்கையன் ஆயினனே. 34

எனக்கு மகனாகிய நெடிய தவம் முற்றுப்பெற்ற சனற்குமாரன் நினக்குச் செய்தொண்டில் பிழைபடா தவனாய் முன்னர்த் திண்ணிய சதசிருங்கத்தில் நின்னிரு தாள்களை நினைந்து சிவயோக முயன்று தவத்தில் மனம் ஒன்றியபோது அங்கு நீ எழுந்தருளுதலை உணர்ந்திலன்; அதற்குக் காரணம் நிட்டையில் நிலைத்தமையால்; அவ்விடத்தப்பொழுது அருளுடைய நந்திபிரான் சாபங் கொடுத்தமையால் பொருந்திய ஒட்டக வடிவினன் ஆனான்.

## பிரமன் நந்திதேவரை வேண்டல்

இன்றேஇது தீர்த்தரு ளென்னஇரந் தேத்தித்தொழ எந்தையும் எம்மடியார், நன்றேகொடு செய்தன யாவைஅவை நம்மால்வில காஅத னன்மறையோய், பொன்றா திது நந்தி தவிர்ப்பனெனப் புரிவுற்றருள் செய்து மறைந்தனனால், அன்றேமல ராளி தவத்திறனால் அங்குற்றருள் நந்தியை வேண்டுதலும். 35

இப்பொழுதே இவ்வடிவினை நீக்கி அருள் செய்க எனக் குறையிரந்து துதித்துத் தொழ, எமது தந்தையும், எம்முடைய அடியவர் நன்றென உட்கொண்டு செய்தன எவையோ அவை நம்மால் விலக்கப் பெறுமற்றைக்குரிய பிரமனே, அதனால் இச்சாபம் அழியாது. நந்தியே அதனை நீக்குவன் எனக் கருணை செய்து மறைந்தனன். அப்பொழுதே பிரமன் தவ வன்மையால் அங்கெழுந்தருளிய நந்திதேவரைக் குறையிரப்பவும்,

அடியவர் பெருமையை அறிவுறுத்தல்: "ஈசனுக்கிழைத்த குற்றந் தேசிகன் எண்ணித் தீர்க்கும், தேசிகற்கிழைத்த குற்றந் தேசிகன் தீர்ப்பதன்றிப் பேசுவதெவனோ" (திருவி. இந். 68)

## நந்திதேவர் கருணை கூர்தல்

நந்திப்பெருமானும் மகிழ்ந்தலரோய் நங்கச்சப ஈசன் எதிர்ப் படலால், அந்தப்பொழு துன்புதல் வன்பெறுசா பந்தீர்ந்தது ஆயினும் அன்பர்கள்பால், பந்தித்த பெருங்கரு ணைகரன்என் பதுநாட்டினன் எம்மிறை நின்புதல்வன், கந்தப்பொழில் சூழ்வட மேருவின்அங் கண்ணெய்துக இவ்வுரு நீங்குமரோ. 36

திருநந்தி தேவரும் மகிழ்ச்சி எய்தி "அலரிலுறை பிரமனே! நம்முடைய கச்சபேசப் பெருமானது திருமுன் எதிர்ப்படுதலால் அப்பொழுதே உன்னுடைய புதல்வன் பெற்ற சாபம் தீர்ந்தது. ஆனாலும், எமது இறைவன் அடியவரிடத்துப் பந்தித்த பெரிய கருணைக்குறைவிடமானவன் என்பதை நிலை நிறுத்தினன் நின்மகன் மணங்கமழும் சோலை சூழ்ந்த வடதிசையில் உள்ள மேரு மலையை அடைவானாக. அவ்விடத்தில் அவ்வடிவம் நீங்கும்."

நவைதீர்ந்தபின் எம்அரு ளால்இவன்நம் மாணுக்கனு மாகி
நயந்துதவும், சிவதீக்கையை யுற்று விரிந்தகலைத் திரள்யாவும்
உறீஇச்சிவ ஞானமுணர்ந், தவமாற்றுவன் என்றருள் செய்தகல
அலரோன்அவன் மைந்தனை அன்புறுதன், இவர்வுற்ற கணத்த
ரொடும்புகுவித் திப்பாலரு மாதவம் முற்றியபின். 37

குற்றம் நீங்கிய பின்பு எமது அருளைப் பெற்று இவன் நமது மாணுக்கனுமாய் நாம் விரும்பியருளும் சிவதீட்சையைப் பெற்றுப் பல வகைப்பட்டு விரிந்த நூற்றிரளை யெல்லாம் ஆராய்ந்து சிவஞான நூலோதிக் குற்றத்தினின்று நீங்குவனென்று திருவருள் செய்து நீங்கப் பிரமன் அவ்விடத்துத் தனது புத்திரனை அன்பு மிக்க தனது பாவியீ கூட்டத் தொடும் மேருவிற் செல்ல விடுத்து அதன்பின் அரிய பெரிய தவத்தைச் செய்து முடித்த பின்,

உயர்கச்சியில் ஓங்கு பலாசடியின் உறைகச்சப ஈசன் அருட்-
கருணை, பயில்வுற்று முறைப்படி எவ்வுலகும் பண்டேயென நன்கு
படைத்தனன்மற், றியல்பின்வட மேருவின் நந்திபிரான்
இருக்குநிலை யத்தின் மலர்த்தலைவாழ், அயன்மைந்த னெடுஞ்செல்
கணத்தவர்அப் பெருமானடி ஏத்தி இயம்புவரால். 38

நகரங்கள் எவற்றினும் உயர்ந்த காஞ்சியில் ஓங்கிய முருக்கடியில் எழுந்தருளியுள்ள கச்சபேசப் பெருமானுடைய திருவருளைப் பெறுதலால், முறையே எல்லா உலகங்களையும் முன்பு போல நன்ருகச் சிருட்டித்தனன். வட மேருவில் நந்தியம் பெருமான் திருக்கோயிலைச் சாரச் சென்ற பிரம கணத்தவர் அப்பெருமானடியைத் துதித்துக் கூறுவர்.

### நந்தி தேவருக்குச் சனற்குமார முனிவர் மாணுக்கராதல்

வேதாளமை ஏயினன் நீயிர்கள்போய் மேருப்புடை நந்தி முதற்
குரவன், பாதாம்புயம் ஏத்திஇம் மைந்தன்அவன் மாணுக்கனு
மாம்படி சேர்த்திஇவண், போதீரென என்றருள் பெற்றவர்தாம்
போகத்தன் அருட்கணின் ஒட்டகமாம், கோதார்உரு நீத்தொளி
பெற்றவனை மாணுக்க னெனும்படி கொண்டனனே. 39

பிரமன் "மேருவின் கண் நீங்கள் போய் நந்தி தேவராகிய முதலாசிரியரது திருவடித் தாமரையை வணங்கி இம்மகனை அந்நந்தி தேவர் மாணுக்கனுகும்படி அடைவித்து இவ்விடத்து வருவீரென்று எம்மைக்

கட்டளையிட்டனன்" என்று கூறி, அருள் பெற்றுக் கணத்தவர் போகத் தமது திருவருட் பார்வையால் ஒட்டகமாகிய குற்றம் நிறைந்த வடிவை நீத்து ஒளி வடிவு பெற்ற அச்சனற் குமாரரை யாவரும் தமது மாணுக்க ரென்று கூற ஆட்கொண்டனர்.

ஷை வேறு

அன்னேன் அவன்பால் தீக்கையுறீஇ வழிபா டாற்றி முழுதுணர்ந்
முன்னர்ப் புராணம் நியாயநூல் கரும முதல்நூல் தருமநூல் [தான்
மன்னு சிக்கை ஏழ்சந்தை வழங்கும் ஒன்பான் வியாகரணம்
பன்னும் எண்ணூல் முக்கந்தம் பலவும் முறையின் ஓதினனால். 40

சனற்குமாரன், திருநந்திதேவரிடத்துச் சிவதீட்சை பெற்று அவர் அருள் வழி நின்று முன்னர்ப் புராணங்கள் முற்றவும் உணர்ந்தனன். பினனர், உத்தர மீமாஞ்சையும், முதலாகிய பூர்வ மீமாஞ்சையும், தரும நூலும், நிலைபெற்ற சிட்சையும், எழுவகைப்பட்ட சந்தையும், ஒன்பது வகைப்பட்டு வழங்கும் வியாகரணமும், சொல்லும் சோதிடமும் மூன்று வகைப்பட்ட கந்தமும் ஏனைய பல நூல்களுமாகிய அவற்றையும் முறையாகக் கற்று.

ஏயுங் கற்ப சூத்திரங்கள் இருக்கு முதலா நான்மறைகள்
ஆயுள் வேதம் வில்வேதம் அமல்காந் தருவம் அருத்தநூல்
பாய பலவும் விதிமுறையாற் பயின்று நந்திப் பிரான் அருள்சேர்
தூய முனிவன் பின்னரும்ஒன் றிரந்து வேண்டித் தொழுதுரைப்பான். 41

இவைகளோ டமைந்த கற்ப சூத்திரங்களும், இருக்கு முதலிய நான்கு வேதங்களும், ஆயுள் வேதமும், நிறைந்த வில்வித்தையும் இசை நூலும், தருக்க நூலும் ஆகிய பரந்த பல நூல்களையும் நூலில் விதித்த படி பயின்று நந்திதேவரது திருவருளையடைந்த களங்கமில்லாத சனற்குமார முனிவர் பின்னுமொரு பொருளைக்குறையிரந்து வணங்கிக்கூறுவர்

## சனற்குமார முனிவர் வேண்டுகோள்

ஷை வேறு

உன்புடைக் கல்வி யெல்லாம் உணர்ந்தனன் அவைகள் எங்கும்
இன்புடைச் சிவப்பே றென்றே முத்திஎன் றியம்பும் எந்தாய்
புன்புலை உடம்பு நீங்கிப் பரவெளிப் பொருளைக் கூடும்
அன்புடைப் பசுவே அன்றோ சிவன் இயல் பதனைச் சேரும். 42

உன்னிடத்துக் கலைகள் அனைத்தையும் உணர்ந்தேன். அந்நூல்கள் யாண்டும் இன்பத்தைத் தனக்கு உரிமையாகவுடைய சிவத்தைப் பெறுதல் ஒன்றே வீடுபேறென்று கூறும். எந்தையே! மிக இழிந்த உடம்பினைக் கைவிட்டுச் சிதாகாயமெனும் திருவருளோடு கூடுகின்ற தலையன்பினையுடைய ஆன்மாவே சிவத்துவம் பெறும்.

மானிடன் விசும்பைத் தோல்போற் சுருட்டுதல் வல்லோ னுயின்
ஈனமில் சிவனைக் காணு திடும்பைதீர் வீடும் எய்தும்
மானமார் சுருதி கூறும் வழக்கிவை ஆத லாலே
ஆனமர் இறையைக் காணும் உபாயமே அறிதல் வேண்டும். 43

மானிடன் ஆகாயத்தைத் தோல்போற் சுருட்ட வல்லனுனால் தாழ்வில்லாத சிவபிரானைத் தரிசித்தலின்றிப் பிறவித் துன்பத்தினின்று நீங்கி முத்தி அடையக்கூடும் என்று பெருமை நிறைந்த வேதங்கள் எடுத்துக் கூறும் வழக்கு இவையாதலால், விடையூரும் பெருமானைக் கண்டு தரிசிக்கும் ஏதுவையே அறிதல் வேண்டும்.

இவ்வுவமம் பின்னும் வருமாறு: "வளிதாழ் விசும்பைப் பசுந் தோல்போற் சுருட்ட வல்லோர், உளரேல் புடை வீங்கி எழுந்து திரண்டு உருண்ட, இளவெம்முலை பங்கனையன்றியும் இன்ப முத்தி, அளவிற் பெறலாம்என விண்ட ததர்வ வேதம்" (வயிர. 12). உவமம் சிறிது வேறுபடவும் வரும்: "பரசிவன் உணர்ச்சி இன்றிப் பல்லுயிர்த் தொகையும் என்றும், விரவிய துயர்க்கீ றெய்தி வீடுபே றடைதும் என்றல், உருவமில் விசும்பிற் றோலை உரித்துடுப் பதற்கொப் பென்றே, பெருமறை இயம்பிற் றென்னில் பின்னும்ஓர் சான்றும் உண்டோ" (கந்தபுராணம் உபதேசப் படலம்).

ஆங்கது பலவாற் றானும் அருளினை அவற்றி னுள்ளும்
தீங்கற எளிதில் கூடும் உபாயமுஞ் செப்பு கென்ன
ஓங்குசீர்ச் சனற்கு மாரன் உரைத்தலுஞ் செவிம டுத்து
வீங்குபே ருவகை பூப்ப விளம்புவான் நந்தி எங்கோன். 44

முத்திபெறும் உபாயத்தினைப் பலவகையாலும் அருள் செய்தீர். அப்பலவுள்ளும் குற்றமற எளிதாக அடையும் உபாயத்தையும் சொல்லக் கடவீர் என்று சிறப்புமிகு சனற்குமார முனிவர் வினவியபோது நந்தி தேவராகிய எமது பெருமானுர் திருச்செவி சாத்திப் பெருமகிழ்வு மிகத் தோன்றக் கூறியருளுவார்.

### நந்திதேவர் அனுக்கிரகம்

அருள்பெறு சனற்கு மாரன் அறுமுகன் கூறென் றுன்னைச்
சுருதியிற் கிளந்த வாற்றால் அறிவினில் தூயை முற்றும்
இருளற உணர்ந்தாய் நீயே இருந்தவத் தலைவன் கேட்டி
மருளிதீர்ந் துலக முய்ய வினயது வகுத்துச் சொல்வாம். 45

பெரிய தவசிரேட்டனே! கேளாய், திருவருள் பெற்ற சனற்குமார முனிவன் முருகப் பெருமான் அம்சம் என்று உன்னை வேதத்திற் கூறிய முறையால், நீயே அறிவில் தூய்மை உடையாய். ஆதலின், நாம் கூறிய நூல் முழுமையும் அறியாமை அறத் தெரிந்தாய். உயிர்கள் குற்றத்தி னின்று நீங்கிக் கடைத்தேற நீ வினவியதையும் வகைப்படுத்திக் கூறுவாம்.

அந்தணர் அரசர் நாய்கர் இருபிறப் பாளர் வேத
மந்திரக் குரியோர் நால்கு வகைநிலை இவர்கட் கென்ப
நிந்தையில் பிரம சாரி நிலைஉயர் மனையின் வாழ்க்கை
சுந்தர வனத்தின் வாழ்க்கை துறவறம் அந்நான் காமால். 46

அந்தணரும், அரசரும், வைசியரும், ஆகிய இவர் மூவரும் இரு பிறப்பாளர். இவர்கள் வேத மந்திரங்கட்கு உரிமையுடையவர். இவர்கட்கு நால்வகை நிலைகள் கூறுவர். அந்நான் காவன; பிரமசரியம், கிருகத்தம், வானப்பிரத்தம், சந்நியாசம் என்பன.

நால்வகை நிலை: 41 ஆம் திருக்குறளின் விசேடவுரை காண்க. 'நிந்தையில்' ஏனையவற்றொடும் கூட்டுக. மந்திரத்திற்கென்பது மந்திரக்கு எனக் குறைந்து நின்றது; 'நலக்கு' என்றாற் போல (திருக். 149.) உபநயனத்தின் வருமாற்றம் உயிர்வேறோர் உடம்பு பெற்றதுபோலும் ஆதலின் இருபிறப்பு என்ப. 'நல் வினையால், இக்கலைகளைக் கற்றுத் தான் வேறொரு பிறப்பானமை கூறினான்; (சீவக. 405. உரை).

கருநிலைக் கெட்டாம் ஆயுள் பதினொன்று கருதீ ராறும்
வருடத்தின் மறையோ ராதி மூவர்க்கும் மறையின் ஆசான்
தெருள்உப நயனஞ் செய்வன் முனிவர்தங் கடன்தீர்த் தற்குப்
பொருவிலா மறைகள் அங்கம் ஓதுதற் பொருட்டு மன்னோ. 47

முனிவர் கடனைச் செய்து முடித்தற்கு ஒப்பில்லாத வேதங்களும், ஆறங்கங்களுமாகிய இவைகளைக் கற்றோதுதற்கு ஆசிரியன், கருவில் நின்ற காலத்திற்கு எட்டாமாண்டில் அந்தணர்க்கும், பதினோராம் ஆண்டில் அரசர்க்கும், பன்னிரண்டாம் ஆண்டில் வைசியர்க்கும் வேதவழி ஞானம் பெற உபநயனம் செய்து முடிப்பான்.

எனவே, பிறப்பிற்கு ஏழாம் ஆண்டு முதலாகக் கொள்க.

ஆங்கதன் பின்னர்க் காமம் அறம்பொருட் பேற்றி னோடும்
ஓங்குசீர்ப் பிதிரர் வானோர் கடன்களின் ஒழிவும் வேண்டி
மாங்குயிற் கிளவி மென்றோள் மனைவியை மணப்பர் பின்னர்த்
தாங்கரும் வனத்துச் செல்வர் தவம்மிகக் கிடைத்தல் வேண்டி. 48

(பிரமசரிய நிலை முற்றுப்பெற்ற பின்னர்) முனிவர் கடனை முடித்த பின்பு, அறம், பொருள் இன்பங்களைப் பெறலோடும் புகழ் மிகுந்த பிதிரர், தேவர் ஆகிய இவ்விருவகையர் கடன்களை ஒழித்தலுமாகிய இவற்றை விரும்பி மாமரத்திலுள்ள குயிலிசை போலுஞ் சொல்லையும் மெல்லிய தோளையுமுடைய வாழ்க்கைத் துணைவியைக் கொள்வர். பின்னர்ப் பொறுத்தற்கரிய தவமிகவும் நிரம்ப மனைவியொடும் வனம் புகுவர்.

இங்கே கூறப்படுவனயாவும் மிருதி நூல் வழக்கு என அறிக. திருக்குறள் ஏழாவது அதிகார அவதாரிகையில் பரிமேலகர் எழுதுவன: அஃதாவது, இருபிறப்பாளர் மூவரானும் இயல்பாக இறுக்கப்படூஉம் கடன் மூன்றனுள், முனிவர் கடன் கேள்வியானும், தேவர் கடன் வேள்வியானும், பிதிரர் கடன் புதல்வரைப் பெறுதலானுமல்லது இறுக்கப்படாமையின், அக்கடனிறுத்தற் பொருட்டு நன்மக்களைப் பெறல்

கடனெலாம் விண்ட பின்பு கருதருந் துறவிற் செல்வர்
நடலைகூர் உலக வாழ்வை வெறுத்துநல் லறிவு தூய்தாய்
இடனுடைத் துறவிற் கென்றே இருவகை நியாயத் தோடு
மடனற நன்னூல் பற்றி மறைமுடி வுணர்தல் வேண்டும். 49

தேவர் முதலிய மூவர் கடன்களை செய்து முடித்த பின்பு எண்ணு தற்கரிய துறவு பூண்பர். வஞ்சம், பொய், துன்பம் ஆகிய இவை மிகும் உலக போகங்களை உண்டுமிழ்ந்த சோறுபோல வெறுத்து நல்லறிவு மேலும் தூயதாய் ஓரிடத்திற் றன்னைச் சிறை செய்து கொள்ளாத பரந்த இடங்கொண்ட துறவறச் செலவு மேற்கொண்டு இருவகை நியாய உணர்ச்சியுடன் அறியாமை நீங்கச் சிவஞான நூலைத் துணையாகக் கொண்டு வேதத்தின் முடிவை அறிய வேண்டும்.

இருவகை நியாயம் பூர்வம் உத்தரம் எனப்பே ரெய்தும்
ஒருவகை சிவபூ சைக்காம் ஒருவகை சிவப்பேற் றிற்காம்
சுருதியேஇலிங்கஞ்சொற்சேர்வெடுத்துக்கோள்இடமேசொல்லின்
வருபெயர் இவற்றான் மென்மை வன்மையென் றிவற்றை ஆய்தல்.

இருவகைப்பட்ட நியாய நூல்களும் பூர்வ மீமாஞ்சை எனவும் உத்தர மீமாஞ்சை எனவும் பெயர்பெறும். வேதத்திற் கரும காண்டத்தை ஆராய்வதாகிய பூர்வ மீமாஞ்சை சிவபூசைக்கு உரியதாகும். ஞான காண்டத்தை ஆராய்வதாகிய உத்தர மீமாஞ்சை சிவப்பேற்றிற்கு உரிய தாகும். பேசுமிடத்துச் சுருதியும், இலிங்கமும், சொற்றொடராகிய வாக்கியங்களும், எடுத்துக்கோளும், தானமும், குறியீடும் ஆகிய இவ்வாறு வகைக் கருவிகளினால் பொருள்களின் வன்மை மென்மைகளை ஆய்க. சுருதி, இலிங்கம் முதலிய ஆறும் ஒன்றினொன்று மென்மை ஆவன.

கடப்படு பூசை பூர்வ கருமநூல் நியாயத் தாகும்
தொடக்கம்ஈ றப்பி யாசம் அபூர்வதை பலமே சொல்லின்
எடுத்துரை அருத்த வாதம் இவைசிவப் பேறு கூறற்
கடுத்தஉத் தரநூல் உண்மை துணிவதற் கிலிங்கம் ஆமால். 51

கடமையாகக் கொள்ளப்படும் சிவபூசை பூருவமீமாஞ்சையால் பெறப்படும். சிவப்பேறு கூறற்கு அமைந்த நூல் உத்தரமீமாஞ்சை. உபக்கிரம உபசங்காரங்கள், அப்பியாசம், அபூர்வதை, பலம், உபபத்தி (எடுத்துரை), அருத்த வாதம் இவை யாவும் உத்தரமீமாஞ்சையின் பொருளை உண்மை தெளியக் கருவிகள் ஆகும்.

இரவெரி யாடுந் தேவை இம்முறை துணிந்த ஞானி
பிரணவ மனுவாற் போற்றிப் பேதுறா துடல்சாங் காறும்
பரவிடின் அவற்கு முக்கட் பரன்வெளிப் படுவன் பட்டால்
மருவுபே ரின்பந் துய்த்து விமலனில் வாழ லாமே. 52

உலகெலாம் ஒடுங்கிய அந்நிலையில் சூக்கும ஐந்தொழிலைச் செய்யும் இறைவனை இங்குக் கூறிய முறையில் வைத்துத் தெளிந்த மெய்யறிவுடையோன் பிறழாது பிரணவ மந்திரத்தால் உடம்பழியுமளவும் போற்றித் துதித்திடின் அவனுக்கு முக்கட் பரமன் வெளிப்படுவன். அங்ஙனம் வெளிப்பட்டால் அவ்விமலனோடு இரண்டறக் கலந்து பேரின்பம் நுகர்ந்து என்றும் ஒரு நிலையாக வாழலாம்.

பின்னவன் மாய வாழ்விற் பிறந்திறான் சிவமே சேர்வன்
முன்னருஞ் சிவப்பேற் றிற்கு முறைவரும் உபாயம் ஈதாம்
இந்நெறி சிறியோர் யார்க்கும் எளியதன் றெளிதாய் நேராம்
அந்நெறி முக்கண் எம்மான் பதிகளின் அமர்தலாகும். 53

பின்பு, அவன் உலக வாழ்க்கையில் பிறந்தழியாது சிவத்தையே அடைவான். நினைத்தற்கரிய சிவத்தைப் பெறுதற்கு முறையாக நூல்களின் வரும் உபாயம் இதுவாகும். இவ்வுபாயம் அறிவிற் சிறியோர் யாவர்க்கும் அடைதற்கரியதாகும். அவர்களுக்கு எளிதாய்க் கைகூடும் அவ்வழி முக்கண்களையுடைய எமது இறைவன் திருத்தலங்களில் வாழ்க்கை நடத்துதல் ஆகும்.

ஆயிடைச் சாக்கா டெய்தின் விலங்குநாய் அடுவான் புள்ளு
மேயபுன் மரங்களேனும் வீடுபே றடைவ துண்மை
நீயிதற் கையங் கொள்ளேல் என்றலும் நெடிது வாழ்ந்து
தூயசீர் நந்தி பாதம் தொழுதெதிர் குமாரன் கூறும். 54

சிவதலங்களுள் இறந்தால் மிருகமாகிய நாயும், கொடிய பெரிய பறவையும், ஓரிடத்தே மேவிய புல் மரங்களும் முத்தியடைதல் சத்தியம் ஆகும். நீ இதுபற்றிச் சிறிதும் ஐயப்பட வேண்டுவதில்லை என்ற அளவிலே நெடுங் காலம் மகிழ்ச்சியில் மூழ்கிப் பின்னர் பரிசுத்தமாகிய சிறப்பினையுடைய நந்திதேவர் பதங்களைத் தொழுது சனற்குமார முனிவர் எதிர் கூறுவார்.

சீர்த்தல வாழ்க்கை ஒன்றே செவ்வழி என்றாய் ஐய
பார்த்தலத் திறைவன் மேவும் பதிகள்எண் ணிலவாம் மிக்க
கீர்த்திசால் அவற்றுள் மேலாய்க் கிளர்சிவப் பேற்றான் முத்தி
ஆர்த்தியின் றுதவுந் தானம் யாதுநீ அருளு கென்றான். 55

ஐயனே, சிவதல வாழ்க்கை ஒன்றே முத்திக்குச் சிறந்த வழி என்று கூறினை. நிலவுலகில் இறைவன் வீற்றிருக்கும் தலங்கள் எண்ணில உள்ளன ஆகும். மிகு புகழமைந்த அத்தலங்களுள் மேலாய்ச் சிறந்த சிவத்தைப் பெறலால் முத்தியைத் துன்பமின்றி எய்துதற்கு இடமாகிய தலம் யாது அதனை நீ அருளுக என்றனன்.

பெருமுயற்சியின்றிப் பெரும் பயன் பெருமிடம் யாது என்றனர்.

என்றலும் நந்திப் புத்தேள் கணப்பொழு தெண்ணி முன்னாள்
வன்றிறல் விடையோன் தேவிக் குரைத்தது மனத்துட் கொண்டா
அன்றவர்ப் பணிந்து மைந்தா அரன்உமைக் கியம்பு மாற்றம் [ன்
நன்றுநீ கேட்டி யென்ன வரன்முறை நவில லுற்றான். 56

என்று கூறவும், நந்தியெம் பெருமான் ஒருகணம் சிந்தித்து முன்னேர்கால் மிக்க வலியமைந்த இடப ஊர்தியை உடைய பெருமான் உமையம்மையார்க்கு அருளிய அதனைத் திருவுளங்கொண்டு, அப்பொழுது இறைவனை உமையம்மையொடும் பணிந்து ஞானப் புதல்வனே! இறைவன் பெருமாட்டிக் கியம்பிய வரலாற்றை செவ்விதின் நீ கேள் என்று வந்தவாறே சொல்லத் தொடங்கினர்.

சனற்குமாரப் படலம் முற்றுப் பெற்றது.
ஆகத் திருவிருத்தம் 413



# தலவிசேடப் படலம்

## சிவபெருமான் திருவோலக்கச் சிறப்பு

எழுசீரடி யாசிரிய விருத்தம்

இழைத்தபன் மணிகள் காந்திவிட் டெறிக்கும் எரிசுடர்ப்
பேரொளிப் பரப்பு, மழைக்களத் திறையைத் தொழப்புகுந் திறல்-
சால் வானவர் நோக்கலாற் றாது, விழித்துணை இமைப்பச் செய்-
தொறும் அவர்அவ் விளைவறி யாதெமக் கென்னே, பழுத்ததோ
முடிவு காலமென் றழுங்கும் படியதோர் கனகமண் டபத்தில். 1

பதித்துள்ள பல் மணிகளும் சுடர் விட்டு வீசும் தீயொத்த சுடர் கொண்ட பெரிய ஒளிப்படலை, மேகத்தை யொத்த திருநீலகண்டம் உடைய பெருமானைத் தொழப் புகுந்த வலிமை நிரம்பிய தேவர் காணும் வலியின்றி இருவிழிகளும் இமைக்கும்படி செய்யுந் தொறும் அத்தேவர் இமைத்தலின் காரணத்தை அறியாராய் என்னே! எங்கட்கு வாழுங் காலம் பழுத்ததோ என்று வருந்துதற்குக் காரணமாகிய ஓர் பொன் மண்டபத்தில்,

ஊழி முடிவில் இமையாக்கண்ணும் இமைக்கும், பிறவும் நேரும். 'மரணமே கனிந்து நிற்கும்' எனும் விசேடவுரையில் பழுத்தல்—உடம்பு போதல் (சீவக-1389)

ஏறும்வலித் திரள்தோள் இரணியன் மருமத் திரத்தநீர் வாய்மடுத் தெழுந்த, வெறிமயக் கறுத்த பெருவலி நோக்கி விலக்குறு மும்மல மயக்கும், தெறுகென நரமா மடங்கல்தான் முழுதும் மடங்கலாய்த் திருவடி தாங்கி, உறுவது கடுக்கும் மடங்கலேற் றெருத்தத் தொளியெறி மணிப்பொலந் தவிசின். 2

திருமாலாகிய நரசிங்கம், மிக்க வலியினையும் திரண்ட தோளினையும் உடைய இரணியன் மார்பிடை இரத்தத்தைப் பருகினமையால் தோன்றிய பெருமயக்கை நீக்கிய பேராற்றலை நினைந்து போக்கற்கரிய மும்மலத்தாலாய மயக்கத்தையும் போக்கியருளுக என் றிந்நாள் முழுவடிவமும் சிங்கமேயாய்த் திருவடியைத் தாங்கிப் பெயராது இருத்தலை ஒக்கும் ஆண் சிங்கத்துப் பிடரியின் மிசை ஒளிவீசுகின்ற மணிகளிழைத்த பொன் மயமான இருக்கையின்.

ஏறும்வலி, ஒரு பொருட் பன்மொழி.

எரியவிர்ந் தனைய துவர்மணிச் சடிலத் தெறிதிரைக் கங்கையூ டலைந்து, பருவருங் கேண்மைச் சிறுபிறைக் கிரங்கிப் பற்றித்தன் இருக்கையிற் கொடுபோய்த், தெருமரா தளிப்பான் முழுமதி அணுகிச் செவ்விபார்த் துறைவது மானும், விரிகதிர்த் தரளத் தொங்கல்சூழ் வட்ட வெண்குடை மீமிசை நிழற்ற. 3

எரி ஒளிர்ந்தால் அனைய பவளம் போலும் சடையினிடத்து வீசுகின்ற திரையை உடைய கங்கையால் அலைக்கப் பெற்று வருந்துகின்ற உறவு பூண்ட இளம்பிறைக்கு இரங்கிக் கைப்பற்றித் தனது சந்திர மண்டிலத்திற்குக் கொண்டுபோய் மனங்கவலுறாது காக்கும் பொருட்டுப் பூரணச் சந்திரன் நெருங்கி அதற்குரிய சமயத்தை நோக்கி இருத்தலை ஒக்கும் விரிந்த கிரணங்களை வீசுகின்ற முத்துத் தொங்கல் சூழ்ந்த (சந்திர) வட்டமாகிய வெண்ணிறக் குடைமேல் நிழலைச் செய்ய,

எரியும் பவளமும் சடையை நோக்கின ஆகலின் அடுத்துவரலுவமையன்று. 'அடுக்கிய தோற்றம் விடுத்தல் பண்பே' (தொல்காப்பியம்.)

தொல்லைநாட் புகழ்கள் எங்கணும் நெருங்கத் துன்றிவெற் றிடங்கள் இன்மையினல், அல்லுறழ் மிடற்றுப் பிரானிடத் துயிர்த்த அற்றைநாட் கீர்த்திகள் இருபால், செல்லிடந் துருவிக் கொட்பபோல் அரிமான் செழுந்தவி சொடுமணிக் குடைக்கீழ், எல்லையும் மேலும் வெள்ளொளி பரப்பும் இடையினிற் சாமரை இரட்ட. 4

பண்டை நாட் புகழ்கள் எவ்விடத்தும் செறிந்து நெருங்கி வெற்றிடங்கள் இல்லாமையால், இருளை ஒத்த கண்டத்தையுடைய பிரானிடத்து (அந்நாள்) உதித்த புகழ்கள் இருமருங்கும் சென்றடையுமிடத்தைத் தேடிச் சுழலும் பரிசு போலச் சிங்கஞ் சுமந்த தவிசிற்கு மேலும் மணிகள் பதித்த குடைக்குக் கீழும் உள்ள எல்லையில் வெள்ளொளி பரப்புமிடையே சாமரைகள் மாறி மாறி மேலொடு கீழ் அசையவும்.

வேட்டவேட் டாங்கு வரங்கள்பெற் றேகும் விண்ணவர் அதுகொடு செருக்கிக் கோட்டமுற் றழியா தறிவுறுப் பவர்போல் கோட்டமுற் றழிகய முகத்தான், வாட்டிறற் சூரன் முதலியோர்ச் செகுத்த மருப்பொடு சுடர்வடி நெடுவேல், காட்டிய கரத்தின் அறுமுகத்தேவுங் கணேசனும் இருபுடை வயங்க. 5

சிவபெருமானிடத்து விரும்பிய பொருளை விரும்பிய போதே பெற்றுச் செல்லும் விண்ணிடத்தோர் அவ்வரத்தால் இறுமாப்புற்று மனம் மாறுபட்டு அழியாது வாழ அறிவுறுத்துவோரைப் போலச் செந்நெறியினின்றும் பிறழ்ந்து கொடுநெறி பயின்று அழிந்த கயமுகாசுரனையும், வாள் வலியுடைய சூரபதுமன் முதலானோரையும் முறையே அழித்த தந்தத்தையும், சுடர் விடுகின்ற வடித்த நீண்ட வேலையும் காட்டிய விநாயகப் பிரானும், முருகப்பெருமானும் இருமருங்கும் விளங்க வீற்றிருக்கவும்.

வரம்–வரவாற் பெற்ற பெயர்; செல்வம் போல. காட்டுதல், உணர்த்துதல்.

உருவினிற் பெருமை பெருமைஅன் றுருவிற் சிறுமையெய் தினும்உமை பாகன், அருளினிற் பெருமை பெருமைஎன் றுலக அகிலமுந் தெளிதரக் காட்டி, மருமலர்க் கிழவன் முதலியோர் புறத்து மன்னிட நகுநடைக் குறுத்தாட், பெருவயிற் றழல்கால் குழிவிழிப் பூதப் பெருங்கணம் அருகுநின் றேத்த. 6

வடிவால் வரும் பெருமை உண்மையிற் பெருமையுடைத்தன்று; சிறிய சிறுமையுள்ள வடிவு பெற்றிருப்பினும் உமையொருபாகன் அருளால் வரும் பெருமையே பெருமை என்று எல்லா உலகங்களுக்கும் தெளியும்படி உணர்த்திப் பிரமன் முதலியோர் நெருங்காமல் புறத்தொரு பக்கம் காத்திருப்பக், கண்டோர் நகுதற்குக் காரணமான நடையினையுடைய குறிய தாளையும், பெரிய வயிற்றினையும், நெருப்பை உமிழும் குழிந்த கண்களையுமுடைய பெரிய பூத கணங்கள் பக்கங்களினின்று துதிக்கவும்.

"இளையர் இனமுறையர் என்றிகழார் நின்ற, ஒளியோ டொழுகப் படும்" (திருக். 698) என்புழிக் காண்க.

கண்ணிணைக் கடங்காத் திருவுரு வழகைக் காண்தொறும் பண்டுதான் கொண்ட, பெண்ணுரு வெடுப்பக் கருதிநீள் முகுந்தன் பிரிவிலா தொருபுடை அமர்ந்த, பண்ணிசை மொழியாள் வனப்பும் எம் பெருமான் பார்வையும் நோக்கிமற் றெமக்கீங், கெண்ணிய எண்ணம் முற்றுறா தினியென் றெழுந்தவக் கருத்தினை மீட்ப. 7

இருவிழிகளுக்கு அடங்காத இறைவனின் திருவுருவப் பேரழகைக் காணுந்தொறும் முன்பு தான் கொண்ட மோகினி வடிவெடுப்ப நினைந்து திருமால் இடப்பாகங்கொண்ட பண்ணிசை மொழியினளாகிய அம்மையின் பேரழகையும் இறைவன் அம்மையையே நோக்கலின் அப்பார்வையையும் கண்டு இவ்விடத்து நினைத்த நினைவு எமக்கு முற்றுப்பெறாது இப்பொழுது என்றெழுந்த எண்ணத்தை மீட்டடக்கவும்.

வனப்பு—வகுப்பழகு; திரண்ட அழகு, அம்மையார் உடனிருப்பும், பேரழகும், இறைவன் திருக்குறிப்பும் நோக்கி முற்றுப் பெறுதெனப் புருடோத்தமன் கைவிட்டனன். ''மாற்குமால், கொள்ளுந் திருவழகு கொண்டு'' (கச்சி ஆ. 108, 109 கண்ணி)

ஆடலைத் தொடங்குந் தொறுந்திரு மேனி அழகினைக்
கண்களான் மடுத்து, வாடரு மயல்பூண் டவசராய்ச் சதியின்
வழிப்பதம் பெயர்தரா நிலையை, நாடகத் தலைவர்க் கெதிர்அடி
யேங்கள் நடிப்பதற் கஞ்சுதும் என்னுச், சேடமை வனப்பின்
உருப்பசி முதலோர் அவிநயச் செய்கையான் மறைப்ப. 8

பெருமை அமைந்த அழகினையுடைய ஊர்வசி முதலோர் நடனந் தொடங்குந் தொறும் இறைவனுடைய திருமேனி அழகைக் கண்களால் நிரம்பப் பருகித் தளர்ச்சியற வளர்ச்சியுற மயலெய்தித் தம் வசமிழந்தமையால் தாளவொற்றின்வழிக் கால் பெயராத நிலையை 'நாடகத்தைந் தொழில் நடத்தும் பிரான்' திருமுன்னர் அடியேங்கள் நடிப்பதற்கு அஞ்சுகின்றேமென்று கூறும் மாற்றத்தால் ஏமாற்றவும்.

அவிநயம்—அங்கங்களால் தோற்றுவிக்கும் குறிப்பு; நடித்தல் என்ற பொருளில் வந்தது; (உண்மையை மறைத்தல்),

மல்லலங் கமலத் திருவடி நோவ மறுவலும் மறுவலும் ஓடிக்,
கல்லொளி பரப்பு மணிமுடி அழுத்துங் கடவுளர் தொகையினை
விலக்கு, நல்லமெய்ப் பணியை நான்பெற நல்கி அவரவர்க் கருள்
செய்து போக்கி, எல்லைதீர் கருணை மலையின் ஓலக்கத் திருந்தனன்
என்னைஆ ளுடையான். 9

வளப்பமும் அழகும் அமைந்த தாமரை மலரனைய திருவடிகள் கனறும்படி மீண்டும் மீண்டும் சென்று ஒளியைப் பரப்புகின்ற மணிகள் அழுத்திய முடி அழுத்துதற்குக் காரணராய தேவர்கள் குழாத்தினை விலக்குகின்ற நல்ல சிவப்பணியை அடியேன் பெறுமாறு அருள்செய்து அவரவர் தமக்குள்ள குறைகளை அருள் செய்து விடை கொடுத்து அளவு தவிர்ந்த கருணை மலைபோல என்னை அடிமையாக உடைய பெருமான் பேரவையில் எழுந்தருளி யிருந்தனன்.

நந்தி தேவர் சனற்குமாரர்க்குக் கூறுதலின் 'நான்' பெற என்றனர். திருநந்தி தேவர் சந்நிதி விலக்கல், அவர்தம் தோத்திரத்தினும் காண்க.

அறுசீரடி யாசிரிய விருத்தம்

இருந்தருள் காலை வெண்கேழ் இமம்பொதி அடுக்கல் ஈன்ற
முருந்திள முறுவற் செவ்வாய் முகிழ்முலைக் கடவுட் கற்பின்
திருந்திழை உலகம் ஈன்ற செல்விமுத் தேவுங் காணப்
பெருந்தகை அடிகள் போற்றி இதுஒன்று பேச லுற்றாள். 10

திருவோலக்கங் கொண்டருள்கையில் வெண்ணிறமும், பனியும் நிறைந்த மலையரையன் ஈன்ற, மயிலிறகின் அடியினை யொத்த சிறிய பற்களையும் சிவந்த வாயையும், அரும்பிய கொங்கையையும் தெய்வக் கற்பினையும் திருந்திய அணிகளையும் உடைய உலகைப் பயந்த செல்வி மும்மூர்த்திகள் காணுப் பெருந்தகையாகிய சிவபிரான் திருவடிகளிற் பணிந்து ஈதொன்றைப் பேசத் தொடங்கினள்.

சிவபிரான், மும்மூர்த்திகளுக்கப்பாற்பட்டவன் எனச் சபாநாயகர் தோத்திரத்து விளக்கினர். 'சங்கார காரணனுயுள்ள முதலையே' (சிவஞா. முதற்) எனப் பொதுப்படக் கூறுது விதந்தோதியதற்குப் பன்னிரு திருமுறைகளினின்றும் மேற்கோள் காட்டி மும்மூர்த்திகளின் வேருவன் முதல்வன் என ஆசிரியர் விளக்கியிருத்தல் நினைவு கூர்க. உயிர்களுக்கு ஆக்கம் வினவலின், உலகீன்ற செல்வி என்றனர்.

### உமாதேவியார் வினு

கடப்படும் வீடு பேறுன் திருவடிக் காட்சி தன்னுல்
கிடைப்பதாம் மறைஈ ருய்ந்து கிளர்தவம் தியானம் நிட்டை
நடைப்படி முதிர்ந்து வாய்ந்த நல்லவர்க் கன்றி உன்றன்
அடித்துணை காண்டல் ஏனேர்க் கரிதரி தாகும் அம்மா. 11

வேதமுடிபினை ஆராய்ந்து விளங்குகின்ற தவமும், தியானமும், சமாதியும், முறைப்படி முதிர்ந்து கைகூடிய நல்லவர்க்கு உனது திருவடிக் காட்சியால் முறைப்பட முத்திபெறுதல் வாய்ப்பதாம்; அத்தகையோர்க் கன்றி ஏனையோர்க்கு உன்னுடைய இணையடிகள் தரிசித்தல் பெரிதும் அரிதாகும். நல்லார்—கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து முதிர்ந்தோர். (சிவஞா. மங்கலவாழ்த்து) அரிது அரிது, அடுக்கு துணிவின்மேற்று.

ஏனையோர் விலங்கு புட்கள் இங்குனேக் கண்டு முத்தி
மேனிலத் துறுவ தெவ்வா றென்றனள் வினுத லோடும்
ஊனுடை உயிர்கள் யாவும் உய்யுமா கருணை கூர்ந்து
மானமர் கரத்துப் புத்தேள் வாய்மலர்ந் தருளும் மன்னே. 12

ஏனையோரும், மிருகங்களும், பறவைகளும் இவ்விடத் துன்னைத் தரிசித்து முத்தியாகிய மேலுலகை உறுதல் எங்ஙனம் என்று வினவிய அளவிலே, உடம்பு கொண்ட உயிர்கள் யாவும் பிழைக்குமாறு திருவுள்ளம் வைத்து மானேந்திய திருக் கரத்தினையுடைய சிவபிரான் திருவாய்மலர்ந்து அருள்செய்வர்.

### சிவபெருமான் விடை

அரிபரந் தகன்ற உண்கண் அலர்முலை அணங்கு கேள்யாம்
பரவெளிப் பரப்பின் வைகும் பண்பினேம் உலகம் எங்கும்
விரவியே நிறைந்து நிற்பேம் விளங்கும்எம் நாலாம் பாதம்
தரைமுதல் உலகாம் மூன்று பாதம்வான் தலத்து மேவும். 13

செவ்வரி பரவி அகன்ற மையுண்கண்ணையும் பூரித்த கொங்கையையும் உடைய தேவியே, கேட்டி. யாம் சிதாகாசப் பரப்பிற்றங்குந் தன்மையை யுடையோம். எவ் வுலகத்தும் கலந்து நிறைந்து நிற்போம். எமது நான்காம் பாதம் தரைமுத லுலகங்களிற் பொருந்தும் மூன்று பாதங்களும் மேலுலகங்களிற் பொருந்தும்.

உயிர்களோடு ஒன்ருய் வேருய் உடனுய் நிற்பேம் என்றருளினர்.

ஆவகை வயங்கு நம்மை யாவரும் அறிய மாட்டார்
ஓவரும் பெருமை சான்ற உத்தம தலங்கள் தம்மின்
ஏவருங் காண வாழ்வேம் என்றலும் உவகை பொங்கி
யாவைஅத் தலங்கள் என்ருட் கெம்பிரான் அருளிச் செய்வார். 14

'அவ்வகையாக விளங்கும் நம்மை எவரும் அறியும் வலியிலர். ஒழிவில்லாத பெருமை மிக்க உத்தம தலங்களில் யாவருங் காண வாழ்கின்ரேம்' என்றருள் செய்ய, மகிழ் கூர்ந்து 'அங்ஙனம் விளங்கும் தலங்கள் யாவை' என்று வினவிய அம்மைக்கு எமது பெருமான் அருள் செய்வார்.

வேறு

திருச்சேது ஆலவாய் சிராப்பள்ளி திருவழூவூர் திருவை
யாறு, தருச்சூழும் இடைமருதூர் யாம்என்றும் நடம்புரியச்
சலியாத் தில்லை, கருச்சாடு முதுகுன்றம் அருணகிரி திருவிரிஞ்சை
கவினுர் ஓத்தூர், மருச்சூழுங் குழல்உமையே நின்னெடுயாம்
மகிழ்ந்துறையும் வளஞ்சூழ் **காஞ்சி.** 15

மணங்கமழும் கூந்தலையுடைய உமையே, திருச்சேது; (இராமேசம்) திருஆலவாய் (மதுரை), திரிசிராப்பள்ளி, திருவழுவூர், திருவையாறு, சோலை சூழும் திருவிடைமருதூர் யாமென்றும் தளராது நடம்புரியுந் தில்லை, பிறவியைப் போக்குகின்ற திருமுது குன்றம் (பழமலை), திருவண்ணுமலை, விரிஞ்சிபுரம், அழகு நிறைந்த திருவோத்தூர் யாம் நின்னுடன் மகிழ்ந்து வீற்றிருக்கும் வளஞ்சூழ் காஞ்சி.

"என்றும் இவர், ஆடப் பதம்சலியார் ஆக்கினுர்" (சிதம். மு. 21). புரிதல்–எப்பொழுதும் மேற்கோடல் (சிவ சூ2); எப்பொழுதும் சொல்லுதல் (திருக் பரி-5). எப்பொழுதும் என்பது ஈரிடத்தும் பெற்ரும்.

ஆலவனம் காளத்தி திருச்சயிலம் சித்தவடம் அடியார் சைவக்
கோலநிறை விரூபாக்கந் திரியம்ப கந்திருக்கோ கன்னம் இன்பம்
சாலஉத வுச்சயினி மாகாளம் காசிகே தாரம் என்றும்
காலன்உருப் பிரபாசம் இமயமலை மந்தரம்சீர்க் கயிலை யாதி. 16

திருவாலங்காடு, திருக்காளத்தி, திருப்பருப்பதம், சித்தவடம், சிவசாதனம் உடைய அடியார் நிறைந்த விரூபாக்கம், திரியம்பகம், திருக்கோகன்னம், சார்ந்தவர்க்கு இன்பம் நிறைய உதவும் உச்சயினியில் மகாகாளம்; காசி, கேதாரம், என்றும் யமபயம் இல்லாத பிரபாசம், இமயமலை, மந்தரம், சிறப்புடைய கயிலை முதலிய.

சித்தவடம், திருவதிகைக் கருகிலுள்ளது (சுந்தரர்க்கு இறைவன் திருவடி சூட்டிய இடம்). சிவசாதனம் அழகு: 'சைவ விடங்கின் அணி புனைந்து' (திருத்.) (விடங்கு—அழகு).

எண்ணிலவாம் யாம்மருவும் இடங்களென உரைத்தருள இறைவி கேளா, அண்ணலே இவற்றுள்ளும் சிறந்ததலம் யாதென்ன அருளிச் செய்வான், புண்ணியமெய்த் திருக்காஞ்சி எவற்றினும்மேம் படுபுரியாம் அவ்வூர் தன்னை, எண்ணினுங்கேட் பினுஞ்சொலினும் வணங்கினும்பே ரின்பவீ டெவர்க்கும் நல்கும்.

'யாம் மேவும் இடங்கள் அளவிலவாகும்' என உரைத்தருள, இறைவி கேட்டு 'அண்ணலே, இவற்றுள்ளும் சிறந்த இடம் யாதென்று' வினவ, அவ்விறைவர் அருளிச் செய்வாராய் அழிவில்லாத சிவபுண்ணியத்திற் கிடனாகிய திருக்காஞ்சி ஏனைய தலங்களினும் மேம்படு நகரமாகும்; அவ்வூரை நினைப்பினும், செவி ஏற்பினும், நாவாற் கூறினும், உடம்பால் பணிந்தாலும் அவர் யாவரே எனினும் அவர்க்குப் பேரின்பத்திற்குக் காரணமாய வீட்டினை நல்கும் அது.

தலைவனே, தலையாய தலங்களுட் தலைமைத் தானம் யாதென்று வினாவினர் அம்மையார்.

அப்பதியின் எஞ்ஞான்றும் மகிழ்கூர்ந்து நின்னொடுநாம் அமர்வேம் அவ்வூர், பற்பலர்சூழ் அவிமுத்தத் தலத்தினும்மேம் பட்டதுவாம் அவிமுத் தத்தின், இப்புவனங் காப்பயாம் விச்சுவநா தப்பெயரான் இலிங்கந் தாபித், தொப்பருஞ்சீர் பெறவைத்தேம் காஞ்சிநக ரிடத்தொருமா மூலந் தன்னில். 18

அக்காஞ்சியின்கண் எப்பொழுதும் யாம் உன்னுடனே வீற்றிருப்போம். அத்தலம் முனிவர் பலரும் சூழ்ந்து போற்றும் காசியினும் மேம்பாடுடையதாகும். காசியில் இப்பூமியைக் காத்தற்பொருட்டு யாமே விசுவநாதப் பெருமான் எனப்பெயர் அமைந்த சிவலிங்க வடிவம் நிறுவி ஒப்பில்லாத சிறப்பினை அச்சிவலிங்கம் பெறும்படி அமைத்தோம்; காஞ்சித் தலத்து ஒற்றை மாமரத்தின் கீழே.

தோற்றம்நிலை இறுதிமறைப் பருளென்னும் ஐந்தொழிலும் நடாத்த யாமே, ஏற்றமுடை ஏகம்ப நாதனெனுந் திருப்பெயர்பூண் டிலிங்க மானேம், தேற்றும்இத னாற்காஞ்சி எவற்றினுக்கும் அதிகமெனத் தெளிவாய் அங்கண், போற்றிஒரு நாளேனும் அமர்ந்துறையின் முத்திநிலை புகுத லாமால். 19

படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழில்களையும் நிகழ்த்துதற் பொருட்டு யாமே உயர்வுடைய திருவேகம்பநாதனெனும் திருப்பெயரைத் தாங்கிச் சிவலிங்கம் ஆனோம். தெளிவிக்கும் இக்காரணத்தால் காஞ்சிபுரம் எடுத்தோதிய தலங்கள்

எவற்றினுக்கும் மிக்கது எனத் தெளிவாயாக. அவ்விடத்தில் வழிபாடு செய்து ஒருநாளேனும் விரும்பித் தங்கினால் முத்தி நிலையைப் பெறுதல் கைகூடும்.

வழிச்செலவிற் புகுந்தேனும் மறந்தேனும் பொருளாசை மருவியேனும், கழிப்பருஞ்சீர்க் காஞ்சியினிற் கணப்பொழுது வதிந்தோருங் கலப்பர் முத்தி, பழிப்பிலாக் காஞ்சியெனத் தன்னியல்பான் ஒருபொழுது பகரிற் கண்ணில், ஒழிப்பரும்பா தகமனைத்தும் ஒழிந்துபெருந் துறக்கவீ டுறுதல் உண்மை. 20

வேற்றூர்க்கு அத்தலத்தின் வழியாகச் சென்றேனும், அறிவு சோர்ந்தேனும், பொருளீட்டு முயற்சியாலேனும், நீங்காத சிறப்பினையுடைய காஞ்சிபுரத்தில் கணநேரம் வசித்தவரும் முத்தியில் இரண்டறக் கலப்பர். புகழமைந்த காஞ்சி எனத் தன் முயற்சியின்றி (அபுத்தி பூர்வமாக) ஓர் கால் சொன்னாலும், ஓர் முறை எண்ணினாலும் கழுவாயில்லாத பெரும் பாவங்கள் யாவும் அனுபவியாது கழிந்து சுவர்க்கமும், முத்தியும் எய்துதல் சத்தியமாகும்.

அக்காஞ்சி கலிநாசப் பொருட்டுநாம் படைத்துவைத்த தாதலாலே, எக்காலும் அந்நகரின் அகத்துயரும் வினைத்துயரும் எய்தாவாகும், மைக்காளஞ் சுவைஅமிழ்தின் மணந்தவிழி மணிநீவி அல்குல் எட்டுத், திக்காளர் தமைப்பொதியும் பெருங்கீர்த்தி நகரவளஞ் சிறிது கேட்டி. 21

அக்காஞ்சியைக் கலியுகத்தில் நேரும் கொடுமை நீங்கும்படி நாமே படைத்தது; ஆதலால், எக்காலத்தும் அந்நகரிடத்தில் இடத்தான் வருதுன்பமும், தீவினையான் வருதுன்பமும் வந்து அங்கு வாழ்வாரை வாதியா ஆகும். கரிய விடமும், சுவையுடை அமிழ்தமும் கலந்த விழியையும் மேகலையும், கொய்சகமும் கொண்ட அல்குலையுமுடையோய்! நகர வளத்தினைச் சிறிது கேட்டிடுதி,

கலிமுதல்தீங் கணுகரிய வேலியெனச் சூழ்பொழிலுங் காவல் மாறா, நிலையுடையுட் சேனையெனக் குவளைவிழி நந்தனநீள் வனமுந் தேவ, குலநிறைபஃ றீபமென நிரைக்கமலக் குளிர்தடமுங் கயிலை தன்னில், இலகுறுபல் குவடென்னப் பலதளியும் உடைத்தாகும் எறிநீர்க் காஞ்சி. 22

பசி, பிணி, பகை முதலிய தீங்கு அணுகுவதற்கு இடங்கொடாத வேலிபோலச் சூழ்ந்த சோலையும், காவலினின்றும் நீங்காமல் நிற்கும் நிலையையுடைய அந்தரங்கத்தில் வைத்த சேனையைப்போலப் பேரெண் அளவினதாகிய விழியென நீண்ட நந்தன வனமும், பலதீபம் ஏற்றிய கோயிலை ஒப்ப நிரம்பிய தாமரை மலர்களையுடைய குளிர்ந்த பொய்கையும், கயிலை மலையில் விளங்குகின்ற பல சிகரங்கள் ஒப்பப் பல கோயில்களையும் அலை வீசுகின்ற நீர்நிலைகளைக் கொண்ட காஞ்சி யுடையதாகும்.

குவளை—பேரெண்; நெய்தலும் குவளையும் ஆம்பலும் சங்கமும்...... நுதலிய செய்குறி யீட்டம் (பரிபா. 2–13).

பம்பை கம்பை புண்ணியநீர் மஞ்சள்நதி வேகவதிபாலி சேயா, றென்பனஏ ழுலகும்இடும் ஏழ்மாலை யெனஒழுகும் எய்துவோரைச், செம்பதுமக் கரமெடுத்து விரையநகர் விளிப்பதுபோல் தெங்கு நீளும், வம்பவிழ்பூஞ் சோலைகளும் மழைமறைத்த கதிர்போல வயங்கும் மூதூர். 23

வழிபட வருவோரைச் செந்தாமரை மலரை ஒத்த கரத்தைத் தூக்கி நகரம் விரைய அழைப்பது போலத் தெங்கு நீண்டு அசையும், மணம் விரிந்த பூஞ்சோலைகளுள் மேகம் மறைத்த சூரியனைப்போல இடைஇடையே ஒளிவிடுகின்ற பழநகர்க்கு ஏழுலகும் சாத்திய மாலை போலப் பம்பை, கம்பை, புண்ணிய நதி, மஞ்சள் நதி, வேகவதி, பாலி, சேயாறு எனப்பெறும் ஏழ் நதிகளும் ஒழுகும்.

ஐயிருநூற் றுயர்சாகை சாகைகளாப் படைத்திங்கண் அமர்ந்து வாழும், ஐயனே என்முதலென் றெழுகோடி மனுக்கள்-உப மனுவால் யார்க்கும், ஐயமறத் தெரிவிக்கும் மறைமாவின் சாரூபம் அடைந்த போலும், ஐயநறு மாம்பொழில்கள் ,எஞ்ஞான்-றும் கனிகளரு தமலும் ஆங்கண். 24

ஆயிரம் வேத சாகைகள் கிளைகளாகக் கிளைத்து அம்மர நிழலில் விரும்பி எழுந்தருளியிருக்கும் தலைவனே என்னுடைய தலைவனென்று ஏழுகோடி மந்திரங்களும், உப மந்திரங்களும் யாவர்க்கும் தெளிய உணர்த்தும் வேதமாமரத்தின் சாரூபத்தை, அக்கச்சியில் உள்ள அழகிய நறிய மாஞ்சோலைகள் என்றும் பழங்கள் மாறுது செறியும் ஆகலின் அம்மாமரத்தின் சாரூபத்தைச் சோலைகளும் பெற்றன போலும்.

ஏழுவகையான முடிபுகளைக்கொண்ட மந்திரங்கள் : நம, ஸ்வாஹா, ஸ்வதா, வஷட், வௌஷட், பட், ஹும்பட் எனவரும்.

விப்பிரர்கள் முதல்நால்வர் சங்கரர்நெய் தொழிலர்மயிர் வினை ஞர் செக்கார், செப்பிடையர் தச்சர்கொல்லர் பொன்வினைஞர் தேவகணி கையர்கள் கூத்தர், விற்புருவப் பரத்தைமுத லோர் தெருக்கள் கலப்பின்றி வெவ்வே றாகிப், பொற்பநீண் டகன்றொ ழுங்காய் மதிக்கணிசெய் கதிர்களெனப் பொலியும் ஆங்கண். 25

பிராமணர் முதலிய நான்கு வருணத்தவரும், அனுலோமர் முதலிய கலப்பினரும், தறி நெய்வோரும், நாவிதரும், செக்காரும் (எண்ணெய் வாணிகர்) பேசப்படுகிற ஆயரும், தச்சரும், கொல்லரும், பொற்கொல்லரும் (தட்டார்), தேவகணிகையரும், கூத்தரும், வில்லை ஒத்த புருவத்தையுடைய பரத்தையர் முதலானோரும் வாழ்தற் கிடனாகிய தெருக்கள் ஒன்றொடொன்று தலை மயங்காது வெவ்வேறாய் அழகுற நீண்டு அகன்று ஒழுங்குபட்டுச் சந்திரனுக்கு அழகுசெய் கதிர்களைபோல அவ்விடத்துப் பொலிவுறும்.

தந்தைதாய் இரண்டொழியப் பிறவெலாங் கொளத்தகும்ஆ வணங்கள் மல்கும், எந்தஊர் வேதவே தாந்தங்கள் மூவுலகும் எடுத்துக் கூறும், அந்தஊ ரெனக்கோடி மடமயிலே கவ்வென்ப தயன்பே ரென்ன, முந்தும்இருக் கோதும்அஞ்சென் பகுதிஅடை வொடு பூசை மொழியும் மாதோ. 26

மடப்பத்தை யுடைய மயிலே, தந்தை தாயர் இருவர் தவிரப் பிற யாவும் விலைக்குக் கொள்ளத் தகும் கடைவீதிகள் நிறைந்த ஊர் எந்த ஊரோ வேதங்களும், வேத சிரசுகளும் மூன்றுலகங்களும் உயர்த்துக் கூறும் அந்த ஊரென்று கொள்வாய்; 'க' என்பது பிரமன் பேரென்று முன்னிற்கும் இருக்குவேதம் கூறு நிற்கும்; அஞ்ச் என்னும் பகுதி முறையோடு பூசனைமொழியும்.

க + அஞ்ச் = காஞ்சி.

திசைமுகனுல் அஞ்சிக்கப் படுதலினுல் காஞ்சியெனத் திசை-போய் மல்கும், இசையுடைய திருபிரம லோகமென்றும் இதனுற் பேர் எய்து மாற்றுன், அசைவிலா தங்குறைவோர் எல்லோர்க்கும் வீடுதவும் அவ்வூர் நாப்பண், வசைஇன்றித் திப்பியமாய்ப் புண்டரிகம் போல்எமக்கு வயங்குங் கோயில். 27

இத்தலம் நான் முகனுல் பூசிக்கப் படுதவின் காஞ்சி யெனப் பேர் பெற்றுத் திசைதொறும் பரந்து நிறைந்த புகழை யுடையது; பிரம லோக மென்றும் இக் காரணத்தால் பேர் பெற்றமையால் அவ்விடத் தினின்றும் நீங்காது அங்கு வாழ்வோர் யாவர்க்கும் வீட்டினை வழங்கும் அவ்வூரின் நடுவில் பழிப்பின்றித் தெய்வத் தன்மையுடையதாய்த் தாமரை மலரைப் போல எமக்குக் கோயில் விளங்கும்.

அங்கதனிற் சோதிலிங்க வடிவாகி யாம்என்றும் அமர்வேம் இவ்வா, றிங்கிரண்டாம் மறைவிளம்பும் சந்தோகா மறைஎம்மை ஒளிவான் என்னும், துங்கநகர் தனைப்பிரம புரமென்னும் இறுதி மறை சுவர்க்க மென்னும், பங்கமறு தயித்திரியஞ் சோதிசூழ் சுவர்க்கமெனப் பகரா நிற்கும். 28

அத்திருநகரில் யாம் ஒளி வாய்ந்த சிவலிங்க வடிவம் கொண்டு என்றும் விரும்பி வீற்றிருப்போம்; இவ்வகையாக இங்கு இரண்டாம் வேதமாகிய யசுர்வேதம் கூறுநிற்கும்; சாந்தோக்கிய உபநிடதம் எம்மை சிதாகாசப் பெருவெளி எனக்கூறும்; அவ்வுபநிடதமே அந்த உயர்ச்சி வாய்ந்த திருநகரைப் பிரமபுரமென்று கூறும். அதர்வ வேதம் சுவர்க்கம் என்று கூறும். குற்றமற்ற தைத்திரியம் ஒளிமிக்க சுவர்க்க மெனவும் கூறுநிற்கும்.

அப்பிரம புரங்காஞ்சி நகரல்லால் வேறில்லை யாகும் என்றே, செப்பும்உப நிடதமெலாஞ் சிவாகமங்க ளொடுமுழங்குஞ் செல்வீ இந்த, வைப்பினைச்சே யிடையானும் ஆயிடையா யினும்இருந்து வணங்கிற் கண்ணில், எப்பெரும்பா வமும்நீங்கி வீடெய்தும் உனக் குண்மை இயம்பி னேமால். 29

செல்வி! அந்தப் பிரமபுரம் காஞ்சி நகரமே அன்றி வேறில்லை யாகும் என்றே பேசப்பெறும் உபநிடதங்கள் யாவும் சிவாகமங்களோடு எடுத்துக் கூறும். இந்தத் தலத்தினை ஒருவன் நெடுந்தொலைவிலிருந்தாயினும், அத்தலத்திலிருந்தாயினும் கருதினாலும், வணங்கினாலும் எவற்றாலும் நீங்காத பெரிய பாவங்களும் நீங்கி வீடுபேறடைவன் உனக்குண்மையை உணர்த்தினோம்.

என்றிறைவன் உலகுய்ய வினவுமலைப் பெருமாட்டிக் கியம்பும் வாய்மை, அன்றுவினா வியசனற்கு மாரனுக்குத் திருநந்தி உரைத்தான் அன்னோன், வென்றபொறி வாதரா யணற்குரைப்ப அவனெனக்கு விளம்பல் செய்தான், குன்றனைய பெருந்தவத்தீர் சிவனைக்காண் பதற்கேது இதுவே கொண்மின். 30

என்று உயிர்கள் கடைத்தேற வினவும் இமாசலன் பயந்த உமையம்மையார்க்குக் கூறும் சத்திய மொழியை அந்நாள் வினவிய சனற்குமார முனிவர்க்குத் திருநந்திதேவர் உபதேசம் செய்தனர். அம்முனிவர் அதனை ஐம்பொறிகளையும் தவத்தால் வென்ற வியாச முனிவர்க்குக் கூற அவர் தம் மாணவராகிய (சூதபுராணிகர்) எனக்கு விரித்துரைத்தனர். மலையனைய மாதவமுடையீர்! சிவபெருமானைக் காணுதற்கு உரிய எளிய உபாயம் இதுவே. இதனை உறுதியாகக் கைக்கொள்ளுங்கள்.

### நூற்பயன்

பரவரும்மந் தணமாகும் இக்காதை மெய்யன்பிற் படிப்போர் கேட்போர், கரிசுறுநோய் நீங்கிநெடு நாட்புவியின் மக்களொடுங் களித்து வாழ்ந்து, வரகுணராய் மறுமையினும் பெரும்போகம் இனிதுண்டு மாறா முத்தி, விரவுவர்என் றுளங்கொள்ளச் சூதமுனி முனிவரர்க்கு விளம்பி னானால். 31

சொல்லுதற்கரிய மறையாகும் இவ்வரலாற்றை உண்மை அன்பொடும் கற்போரும், கேட்போரும், குற்றம் மிக்க நோய் நீங்கி நீண்ட காலம் பூமியில் மக்களொடும் மகிழ்ந்து வாழ்ந்து மேலான குணத்தராய்ப் பின்வரு பிறப்பினும் பெரும்போகம் நுகர்ந்து அழியாத முத்தியிற் கலப்பர் என்று மனம் ஏன்று கொள்ளும் வகையில் சூத முனிவர் ஏனைய முனிவரர்களுக்கு எடுத்துரைத்தனர்.

தலவிசேடப்படலம் முற்றுப் பெற்றது.

ஆகத் திருவிருத்தம் 444

---

# திருநெறிக் காரைக்காட்டுப் படலம்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

மெய்த்தவர் யாவரும் அங்கது கேட்டு விழித்துணை நீர்வாரக்
கைத்தலம் உச்சி முகிழ்த்து மயிர்ப்புள கங்கள் மலிந்தயர்வார்
முத்தி பெறற்குயர் காரணம் இன்று தொகுத்து மொழிந்தனைநீ
அத்தல மேன்மை அனைத்தும் விரித்தரு ளென்றலும் அச்சுதன். 1

உண்மைத் தவமுனிவர் அனைவரும் காஞ்சி மான்மியத்தைக் கேட்டு இருவிழிகளும் நீரைச் சொரியவும், கைகள் சிரமேற் கூம்பவும், மயிர் சிலிர்ப்பவும், இவை மிகுந்து தம் வசமிழந்து ஆனந்த பரவசராய் முத்தியைப் பெறுதற்குரிய உயர்ந்த காரணத்தை இப்பொழுது நீ தொகுத்துக் கூறினை அத்தல மேன்மையை முற்றவும் விரித்துரைத் தருளுதல் வேண்டும் என்ற அளவிலே அச்சுதமுனிவர்.

கச்சியுள் எண்ணறு தீர்த்தம் நிறைந்துள காமுறு பலதானம்
பொச்சமில் போகமும் வீடும் அளிப்பன போக்கரு மேன்மையவாம்
அச்சம் அறுத்து வியாதன் எனக்கருள் செய்த முறைப்படியே
இச்சையின் ஓதுவல் அந்தணிர் கேண்மின் எனச்சொல லுற்றனனல். 2

காஞ்சிபுரத்தில் அளவில்லாத தீர்த்தங்கள் நிறைந்துள்ளன. விரும்பப்படும் பல தலங்கள் பயன்கள் பொய்த்தலின்றிப் போகத்தையும் வீடு பேற்றினையும் நல்குவனவாய்ச் சொல்லுதற் கரிய மேன்மையன ஆகும். அச்சம் தவிர்த்து வியாசர் எனக் கருளியவாறே விருப்புடன் ஓதுவேன் அந்தணர்களே! நீவிர் கேண்மின் எனச் சொல்லத் தொடங்கினர்.

போக்குதல்-உணர்த்துதல். ''கரி போக்கினல்—சான்றால் உணர்த்தினல், போக்குதல், 'நூலாற் போக்கினன்' என்றாற் போல உணர்த்தன் மேற்று'' (சீவக. 889. நச்) 'இச்சையின் ஓதுவல்' என்றமையால் இச்சையொடும் கேண்மின்களென நினைவுறுத்தினர்.

இந்நக ரிற்புகல் சத்திய மாவிர தப்பெயரிற் குணபால்
தன்னிகர் மெய்த்தலம் ஒன்றுள தங்கமர் சத்திய விரதீசர்
என்னை யுடைப்பெரு மாட்டியும் ஓரிரு மைந்தரும் உடன்மேவ
மன்னி இருத்தலின் அத்தல மேன்மையை யாவர் வகுக்கவலார். 3

மேற்கூறிய சிறப்புக்களையுடைய காஞ்சியில் சத்தியமா விரதப் பெயரொடு கிழக்கில் தன்னையே தனக் கொப்பதாய மெய்த்தலம் ஒன்றுளது. அங்கு விரும்பி வீற்றிருக்கின்ற பெருமான் என்னை அடிமையாகவுடைய பெருமாட்டியும், ஒப்பற்ற மைந்தரிருவராகிய விநாயகப்பெருமானும், முருகப்பெருமானும் உடன் விரும்பி இருப்பத் தான் நிலைபெற இருத்தலினல் அத்தலத்தின் பெருமையை யாவர் வகுத்துரைக்க வல்லவர். ஒருவரும் இலர்.

புகல் இந்நகரில் என மாற்றுக. ஆவுடையாள் எனினும் பொது வினில் தீர்த்துத் தன்னை அடிமை கொண்டவள் என்றனர்.

மாடு—செல்வம்; பெருமாட்டி—பெருஞ் செல்வி.

சத்திய சத்தியர் சத்திய சோதகர் சத்திய சங்கற்பர்
சத்திய காமர் இருத்தலின் அப்பதி சத்திய விரதமதாம்
சத்திய நன்னெறி யார்க்கும் விரைந்தருள் செய்துறு தானமதிற்
சத்திய மாவிர தத்தடம் ஒன்றுள தத்தட நீராடி. 4

நிலைபேறுடைய திருவருளைச் சத்தியாக வுடையவர், நிலைபெற்ற செயலர், நிலைபெற்ற அறிவினர், நிலைபெற்ற இச்சையர் இருத்தலினால், அவ்விடம் சத்திய விரதம் ஆகும். நிலைத்த ஞானத்தைச் சேர்வார் யாவர்க்கும் விரைந்து அருளுதற் கிடனாகிய அத்தலத்திற் சத்தியமா விரதப் பொய்கையில் நீர் மூழ்கி.

தாதான்மிய சத்தியாகிய திருவருளொடு விளங்குபவர். அறி விச்சை செயல்களால் திரிவு படாதவர். (அயரா அன்பின் அரன் கழல் செலுமே' (அயராமை-அறிவென்றனர் ஆசிரியர்) சங்கற்பம் - நினைவு; ஆவது அறிவு. விரதம்—கொள்கை.

புதனமர் நாளினில் நீர்க்கட னாதி பொருந்த முடித்தங்கண்
இதமுறு சத்திய மாவிர தீசரை ஏத்தி வணங்குநர்தாம்
கதவினை தீர்ந்தருள் உண்மை உணர்ந்து கலப்பர்கள் முத்தியினை
மதமுறு காம மயக்கம் அனைத்தும் அறுத்துயர் முனிவீர்காள். 5

புதன் கிழமையில் தருப்பணம் முதலிய சிரத்தையுடன் முற்றுப் பெறச் செய்து அத்தலத்தில் பேரின்பம் உடைய சத்தியமா விரதீசரைத் துதித்துத் தொழுவோர் தங்கள் கொடிய வினை தவிர்ந்து திருவருளால் உண்மையை உணர்ந்து முத்தியினைத் தலைப்படுவர். செருக்கை மிகுவிக் கின்ற காமம் வெகுளி மயக்கம் இம்மூன்றனையும் வேரொடும் களைந்தமை யால் உயர்ந்த முனிவர்களே!

இனம்பற்றி வெகுளியையும் கொள்க. அனைத்தும் எனவே வேரொடும் என்க. முக்குறும்பு அறுத்தமையால் உயர்ந்த என்க.

மனைவியர் மக்கள் நிலங்கலை செல்வமும் மற்றெவை வேண்டிடினும்
அனையவை முற்றும் அளித்துயர் வீடும் அளித்திடும் அத்தீர்த்தம்
இனைய தடம்பதி இந்திர தீர்த்தமும் இந்திர புரமுமெனப்
புனைபெய ரும்பெறும் அப்பெயர் எய்திய காரண மும்புகல்வேன். 6

மனைவி, மக்கள், நிலம், கல்வி, செல்வம் மற்றும் உள்ள எப் பொருளை விரும்பி மூழ்கினும் அத்தீர்த்தம் அவற்றை முழுதும் அளித்து மேலும் வீட்டின்பமும் நல்கும். இத்தன்மையுடைய தடமும் பதியும் முறையே இந்திர தீர்த்தமும், இந்திர புரமும் எனக்காரணச் சிறப்புப் பெயரும்பெறும். அவை அப்பெயர் பெற்ற காரணத்தையும் சொல்வேன்.

## இந்திரன் அரசிருக்கை

மதுமல ராளிதன் மேதகு கற்பம் வராகம துறும்ஆறும்
முதுமனு வந்தர நாட்சிவி என்றொரு வாசவன் முன்னுளனல்
விதுவினை ஒப்பன் அரம்பைய ராகிய மென்குமு தங்களிடைப்
பொதுவறு தானவ மாக்கட லுக்குவடாதெரி கனல்போல்வான். 7

மேன்மை பொருந்திய பிரமனுடைய சுவேத வராக கற்பம் ஆறும் மனுவந்தர நாளில் சிவி என்னும் பெயர் கொண்ட இந்திரன் முன் இருந்தனன். அவன் தேவ மகளிர் குழாமாகிய மெல்லிய அல்லி மலர்களுக்குச் சந்திரனை ஒத்து விளங்குவன்; பொதுமை நீங்கிய சிறப்பினை யுடைய அசுரக் கடலுக்கு வடவா முகாக்கினியை ஒப்பன்.

போகமும், வேகமும் ஒருங்குடையன்.

கடவுளர் சேனைப் பங்கய பானு கற்சிறை அரிவயிரப்
படையவன் ஓர்நாட் கடவுள் அவைக்கட் பாசிழை வெதிர்பொரு
படவர வல்குற் சசிபுடை மேவப் பன்மணி அரியணைமேல் [தோள்
வடிவ மடங்கல் மேலோர் மடங்கல் போன்மென வைகினனல். 8

தேவர் சேனையாகிய தாமரைக்குச் சூரியனும், மலைகளின் சிறகுகளை அரிந்த வச்சிரப் படையை யுடையவனுமாகிய இந்திரன் ஓர் நாள் தேவசபையில் பசிய பொன் அணிகளையும், மூங்கில் ஒத்த தோளினையும் பாம்பினது படம் அனைய அல்குலையும் உடைய இந்திராணி மருங்கிருப்பப் பல மணிகள் பதித்த சிங்காசனத்தின் மேல் வடிவுடைய சிங்கத்தின் மேலோர் (ஆற்றலாற்) சிங்கம்போலுமென வீற்றிருந்தனன்.

சிங்கமென இருத்தல்: சனற்குமாரப் படலம் 12-ஆம் செய்யுளை நோக்குக. இந்திரனைச் சோமன், சூரியன், அக்கினி எனக் காட்டியது நயம். குமுதம், கடல், பங்கயம் இவைகள் அளவைக் குறிப்பனவும் நயமுடையன.

இருபுடை வெண்கவரித்தொகை துள்ள மிசைக்குடை எழில்செய்ய
விருதுகள் மாகதர் சூதர் முழக்க வியன்மணி மாநிதியைந்
தருவொடு தேனு விழிக்கடை நோக்கினை நோக்குபு தலைநிற்ப
அருகுறு கின்னரர் யாழ்அமிர் தஞ்செவி ஆர விருந்தயர. 9

இருமருங்கும் வெண்சாமரைத் தொகை எழவும், விழவும் ஆகத் துள்ளவும், மேலே குடை அழகு செய்யவும், கீர்த்திகளை இருந்தேத்துவோரும், நின்றேத்துவோரும் எடுத்துப் போற்றவும் சிந்தாமணி, சங்கநிதி, பதுமநிதி, ஐந்தரு, காமதேனு எனப்பெறும் இவை கோமகன் குறிப்பறிந்து நல்கக் கடைக்கண் பார்வையை நோக்கித் தத்தம் செயலின் முனைத்து நிற்கவும், கின்னரராகிய யாழ்வல்லோர் இசை அமிழ்தம் செவி நிரம்ப விருந்து செய்யவும்,

ஐந்தரு ஆவன: சந்தானம், அரிசந்தனம், மந்தாரம், பாரிசாதம், கற்பகம் என்பன. ஐந்தருவும், பிறவும் தெய்வத்தன்மையால் வேண்டியோர்க்கு வேண்டுவ உதவும்.

மணங்கமழ் தோளணி கற்பக மாலை துளித்த மதுப்புனல்பாய்ந்
துணங்கரும் இன்ப விழிப்புனல் ஒப்ப உறைத்து விழிக்கெல்லாம்
அணங்கு புரிந்திடல் கண்டு புலர்த்துநர் போல்அவிர் சாந்தாற்றி
நுணங்கிடை மங்கையர் ஒவற எங்கணும் நொய்தின் அசைத்தணுக.

தோளில் அணிந்துள்ள நறுமணம் வீசும் கற்பக மாலை துளிபடச் சிதறிய தேனாகிய நீர் பாய்ந்து வற்றாத இன்பக் (உவகைக் கண்ணீர்) கண்ணீர் போலத் துளித்து ஆயிரங் கண்களினும் வருத்துதலைக் கண்டு உலர்த்துநரைப் போல விளங்குகின்ற சிவிறி கொண்டு நுண்ணிய இடையினையுடைய தேவமகளிர் நீக்கமற எவ்விடத்தும் வீசி நெருங்கவும்.

அரம்பை உருப்பசி மேனகை முதலிய அரிமதர் விழிமடவார்
நிரம்பிய காம நலங்கனி அவிநய நெறிமுறை கரம்அசையப்
பரம்பு மிடற்றிசை விம்மிட விழிஇணை புடைபெயர் பயில்வினொடும்
வரம்பெறும் அற்புத மின்னவிர் கொடியென மகிழ்நடம் எதிர்புரிய.

அரம்பை, உருப்பசி, மேனகை முதலிய செவ்வரியும், களிப்பும் பொருந்திய கண்களையுடைய மாதர் நிரம்பிய காம இன்பம் பெருகுதற்குக் காரணமான பரத சாத்திர முறை பிறழாது கரங்கள் அசையவும், பரவிய கண்டப்பாடல் எழவும், இருவிழிகள் பிறழ்தலுடன் மேன்மை பெறும்.

வியப்புடைய ஒளி விளங்குகின்ற திவளுதலாற் பூங்கொடி என மகிழ் நிருத்தம் ஏற்பப் புரியவும்,

மருத்துவர் வானவர் கின்னரர் சித்தர் வசுக்கள் மருத்துக்கள்
உருத்திரர் சாத்தியர் கந்தரு வத்தர் உடுக்கள் நவக்கோள்கள்
திருக்கிளர் மெய்த்தவர் யோகிகள் கைஇணை சென்னி மிசைக்குவியா
நெருக்கினுள் எய்தி இறைஞ்சி மருங்குற நிரல்பட நிற்பவரோ. 12

மருத்துவர், வானவர் முதலானோர் சிரமேல் இரு கைகளையும் குவித்து நெருக்கத்துள் வணங்கி வரிசையில் நிற்பர்.

கணங்கொள் தயித்தியர் யாவரும் வந்து கடைத்தலை வாய்தலின்மா
டுணங்குபு செவ்வி கிடைத்திலர் நிற்ப ஒழிந்தவர் தங்குறைதீர்த் [ட்
தணங்கரும் இன்பவெள் ளத்தில் அழுந்தி அளப்பரு செல்வத்தான்
இணங்கலர் கோளரி இன்னணம் மேவுழி எண்ணினன் இவையெல்லாம்.

கூட்டமுடைய அசுரர் யாவரும் கடை வாயிலில் காலம் பெறாது வாடி நிற்ப ஏனையோர் தங்குறை தீர்த்துத் துன்பு நீங்கிய இன்ப வெள்ளத்துள் மூழ்கி அளக்கலாகாத செல்வத்தினாலே பகைவர்க்குச் சிங்கம் ஆவான் இங்ஙனம் இருக்கையில் இவையெல்லாம் எண்ணினான்.

## இந்திரன் அரசியலை வெறுத்தல்

ஷை வேறு

இருவினை ஒப்பு வாய்ந்த பருவம்வந் தெய்தலாலே
மருவருந் துறக்க வைப்பின் அரசியல் வாழ்க்கை தன்னை
அருவருத் துவர்த்துக் காவற் சிறையிடை அகப்பட் டோரின்
வெருவரும் பதைக்கும் அஞ்சும் வேறிவை கருத்துட் கொள்வான்.

இன்ப துன்பங்கள் இரண்டனையும் ஒப்பு நோக்கி, அவற்றிற்பற்று விடும் காலம் வந்தடைதலாலே, அடைதற்கரிய விண்ணுலக அரசியல் வாழ்வைக் கூசி வெறுத்துக்காவலாகிய சிறைக் கூடத்தில் அகப்பட்டோரைப்போல வெருவினன்; பதைத்தான்; அஞ்சினன்; வேறாய இவற்றைக் கருதினன்.

வெருவல், பதைத்தல், அஞ்சுதல்—அச்சத்தின் படி முறைகள்,

அழியும்இவ் விடய வாழ்விற் களித்திருந் தந்தோ கெட்டேன்
பழிபவக் கடலிற் காலப் பாந்தள்வாய்க் கிடந்தும் நாணேன்
வழிமுறை அறியா மாய வல்லிருட் படுகர்ச் சேற்றுள்
இழியும்ஊர்ப் பன்றி யேபோல் உழந்தஎன் அறிவு நன்றால். 15

நிலை நில்லாது அழியும் இந்த விடய சுகங்களில் மகிழ்ச்சி மிக்கு ஐயோ கெட்டேன்; பழிக்கப்படுகின்ற பிறவியாகிய கடலில் காலமென்னும் பாம்பின் வாய்க்கிடந்தும் நாணிலேன்; பிழைக்கும் வழி முறைகளை அறியவிடாது வஞ்சமும் வன்மையும் அமைந்த இருளில் பள்ளத்துட் பட்டசேற்றில் இழிந்துறும் ஊர்ப்பன்றியைப் போலத் துன்புற்றழிந்த என்னுடைய அறிவு நன்று.

நன்று அன்று என்பது பொருள்; குறிப்பின் இகழ்தல். அந்தோ, இரக்கக் குறிப்பு.

அருவினை உலகம் எல்லாம் படைத்தளித் தழிக்கும் காலம்
கருவுறும் எவையும் கால வயத்தவாம் காலந் தான்மற்
றொருபொருள் வயத்த தன்றால் உந்தியோன் கற்பத் தீரேழ்
பொருவில்இந் திரர்கள் மாய்வர் பொன்றுவர் மனுக்கள் தாமும். 16

காலம் என்னும் ஒரு தத்துவம் அடைதற்கரிய இருவினைகளையும் உலகம் எவற்றையும் சிருட்டித்துக் காத்து அழிக்கும்; உலகில் தோற்றும் யாவும் அக்காலத்தின் வசப்பட்டன ஆகும். காலம் தான் ஒரு பொருளின் வசப்பட்டதன்று. ஓர் பிரம கற்பத்தில் பதினன்கு இந்திரர்கள் அழிவார்கள். அங்ஙனமே மனுக்களும் பதினல்வர் இறப்பர்.

காலத்தில் தோன்றுதல்: 'ஞாலமே விசும்பே இவை வந்துபோம், காலமேஉனை என்றுகொல் காண்பதே' (திருவாசகம்).

ஓதும்இக் கற்பம் வேதற் கொருதினம் அந்நாள் முப்ப
தாதல்ஓர் மதியாம் திங்கள் ஆறிரண் டாயின் ஆண்டாம்
ஏதமில் வருடம் நூறேல் இருவகைப் பரார்த்த மாகப்
போதரும் போதில் அன்னோன் பொன்றுவன் மன்ற மாதோ. 17

சொல்லப்படும் இந்தக் கற்பம் பிரமனுக் கொருதினமாய் அந்நாள் முப்பது கொண்டது ஓர் மாதமாம். அங்ஙனம் பன்னிரண்டு கொண்டது ஓர் வருடமாம். குற்றமில்லாத அவ்வருடங்கள் நூறுயின் இருவகைப் பரார்த்தங்களாக நடைபெறும். அக்காலத்தில் அப்பிரமன் நிச்சயமாக அழிவான். கால அளவைப் படலத் திறுதியிற் காண்க.

அம்மலர்க் கிழவன் காலம் அரிக்கொரு தினம்அன் னோனும்
அம்முறைத் திங்கள் கூடும் ஆண்டுநூ றெய்திற் பொன்றும்
அம்மவோ சீசீ இந்த அநித்திய வாழ்வு வேண்டேன்
இம்மையில் வீடு பேற்றிற் குபாயமே அறிதல் வேண்டும். 18

அப்பிரமன் ஆயுட் காலம் திருமாலுக்கொருநாள்; அத்திருமாலும், நாளும், மாதமும், ஆண்டுமாக நூறு எய்தில் அழிவான். அம்மவோ சீசீ இந்த நிலைபேறில்லாத இவ்வாழ்க்கையை விரும்பேன். இப்பிறப் பிற்றுனே முத்தியடையும் உபாயத்தை அறிதல் வேண்டும்.

அம்மவோ இரக்கப்பொருளும், சீசீ இகழ்ச்சிக் குறிப்பும் கொண்டன.

எண்ணருந் தவம்தா னங்கள் பட்டினி எச்சந் தானே
புண்ணிய நன்னீ ராடப் போதலோ முத்திக் கேது
நண்ணும்இவ் வனைத்துந் தேற நமக்கெலாங் குருவாம் பொற்பேர்
அண்ணலை வினவு மென்னத் துணிந்தனன் அமரர் கோமான். 19

நினைப்பரிய தவமோ, தானமோ, உபவாசமோ, வேள்வியோ, தீர்த்த யாத்திரையோ முத்தி அடைதற்கு ஏதுவாகப் பொருந்தும் எனத் தெளிய அறிய நம்மனோர் யாவர்க்கும் குரு ஆகும் பொன் எனப் பெயரிய வியாழ பகவானை வினவுதும் எனத் துணிந்தனன் இந்திரன்.

நீராட்டோ என்னுது நீராடப் போதலோ எனக் கூறியது 'தீர்த்த யாத்திரை' எனல் பற்றியென்க. குரு—அஞ்ஞானத்தைப் போக்குவோர். தானம்—அறவழியிற் றேடிய பொருளைத் தன் குறைதீரத் தக்கோர்க்குக் கொடுத்தல். 'சிவி' என்னும் பெயரும், புகழும் திசையெலாம் பரவிய தேவர்களுக்குத் தலைவன்.

அவையகத் துள்ளார்க் கெல்லாம் விடைஅளித் தெழுந்து போந்து
நவையற விரைவின் அந்தப் புரத்தினை நணுகி அங்கண்
புவிபுகழ் குரவற் கூவிப் போற்றிநின் றிதனை விள்வான்
சிவியெனத் திசைபோங் கீர்த்தித் தேவர்கட் கிறைவன் மன்னோ. 20

அவையில் இருந்தோர் யாவர்க்கும் விடைகொடுத்து எழுந்து போய் விரைவாகத் தனியிடத்தை அணுகி அவ்விடத்து உலகெலாம் புகழும் ஆசாரியனை அழைத்துப் போற்றித் தக்க ஆதனத் திருத்தித் தான் நின்று குற்றம் (ஐயம்) தீர இதனைக் கூறுவான்.

### இந்திரன் தேவகுருவிடம் முறைகூறல்

இவ்வர சியற்கை தன்னில் இனியெனக் காசை இல்லை
அவ்விதி முகுந்தன் ஏனோர் வாழ்க்கையும் அவாவு கில்லேன்
மெய்வகை உணர்ந்து முத்தி மேவுதற் குபாயம் ஒன்று
செவ்வன்ஓர்ந் துரைத்தி என்னத் தேசிகன் தேர்ந்து சொல்வான்.

'இனி எனக்கு இவ்வரசு நடாத்துதலில் விருப்பமில்லை. பிரமன், மால், பிறருடைய பதங்களையும் விரும்புகிலேன். பொய்த்திறம் தவிர்ந்து மெய்வகை உணர்ந்து முத்தியை அடைதற்குரிய தலையாய உபாயத்தை ஆராய்ந்து செவ்விதாக உரைத்தருள்க' என இந்திரன் கூற ஆசாரியன் ஆய்ந்து சொல்வான்.

### இந்திரனுக்குத் தேவகுரு உபதேசித்தல்

நன்றுநீ வினவு முத்தி நற்றவம் வேள்வி தானம்
கன்றுபட் டினிவே றென்றாற் காண்பரி தாகும் மைந்தா
துன்றிய மாய வாழ்க்கைத் தொடக்கறுத் துய்யக் கொள்வான்
என்றும்எம் பெருமான் உள்ளான் அவன்திறம் இயம்பக் கேட்டி.

மைந்தனே, நீ முத்தியை வினவுவது நலம்பயப்பது. நல்ல தவம், யாகம், தானம், உடம்பு வருந்துதற்குக் காரணமாகிய உபவாசம், முதலியவற்றானும் இவைபோன்ற பிற வழியானும் காண்டல் இயலாததாகும். தொடர்பு பட்ட வஞ்சக வாழ்க்கையின் பந்தம் அறுத்துப் பிழைக்கச் செய்பவன் எப்பொழுதும் எமது பெருமான் உள்ளனன். அவன் இயல்பு சொல்லக் கேட்டி.

என்றும் உள்ளான் பெத்தத்தும் முத்தியினும் அருளுதல் குறித்தது. "எப்போதும் இனியான்" (திருநா-7.)

கலி விருத்தம்

குறைவிலா மங்கலக் குணத்தன் ஆதலின்
நிறைமலம் அநாதியின் நீங்கி நிற்றலின்
அறைகுவர் சிவனென அறிவின் மேலவர்
இறையவன் பெருமையை யாவர் கூறுவார். 23

குறைவின்றி நிறைந்த மங்கல குணத்தை உடையவன் ஆதலாலும் நிறைந்த ஆணவ மலத்தினின்றும் இயல்பாகவே நீங்கி நிற்றலாலும் அறிவினால் மிக்கோர் சிவனென அவனைக் கூறுவர். இறைவனுடைய பெருமையை யாவரே முற்றக் கூறவல்லவர்.

மேலெனப் படுவன எவைக்கும் மேலவன்
மாலெனப் படுவன எவையும் மாற்றுவான்
நூலெனப் படுவன எலாம்நு வன்றவன்
வேலெனப் படும்விழி பாகம் மேயினன். 24

வேலெனப் பேசப்பெறும் விழியினையுடைய அம்மையைப் பாகத்திற் பொருந்தினேன். மேலெனப்படும் உருத்திர பதங்களைக் கடந்த மேலோன், பெருமையன எவற்றையும் மாற்றுதலாற் பெருமையன் வேதியனுக்கு வேதம் தந்த வேதியன்.

மேலோன், மாலோன், வேதியன் என மும்மூர்த்திகளைக் கொண்டு கூறியது. 'யாவர்க்கும் மேலாம் அளவிலாச் சீருடையான்' (திருவாசகம்). வேத நாயகன் வேதியர் நாயகன்' என்பன காண்க.

பங்கயன் றன்னைமுன் படைத்து மால்முதல்
புங்கவர் தம்மைப்பின் உதவும் பொற்பினன்
அங்கவன் இலனெனில் அகில லோகமும்
பொங்கிய வல்லிருள் பொதிந்த நீரவே. 25

பிரமனை முதலில் படைத்துத் திருமால் முதலான தேவரைப் பின்னர்ப் படைக்கும் பொலிவினால், அச் சிவபெருமான் இலனாயின் எல்லா உலகங்களும் மிகுந்த வலியுடைய இருள் மூடிய இயல்பினவே.

"படைப்போற் படைக்கும் பழையோன், காப்போற் காப்பவன், சகலநிலை, சுத்தநிலை இல்லையாய்க் கேவல நிலையேயாய் ஆணவத்தோடத்துவிதமாய் இருளில் அழுந்திக் கிடத்தலின் 'இருள் பொதிந்த நீர' என்றனர்.

பகல்இர விலதுள தெனும்ப குப்பிலா
அகலரும் இருள்பொதி அநாதி காலையில்
உகலரும் பரசிவன் ஒருவனே உளன்
மிகுமுணர் வவனிடை வெளிப்பட் டோங்குமால். 26

முத்தநிலை பெத்தநிலை அன்றிச் சகல நிலை கேவலநிலை எனப் பெறும் பாகுபாடில்லாத எஞ்ஞான்றும் அகலாத ஆணவ இருள் ஆன்மாக்களை மூடியிருந்த காலங்கடந்த நிலையில் அழிவில்லாத பரமசிவன் ஒருவனே அவ்விருளில் தோயாதவனாக நீங்கி நின்றனன். பேரறிவு அவனிடத்து வெளிப்படுதலான் வியாபகனாவன் அவன்.

அநாதி கேவலநிலை இதனாற் கூறப்பட்டது. "காரிட்ட ஆணவக் கருவறையில் அறிவற்ற, கண்ணிலாக் குழவியே போல், கட்டுண்டிருந்த எமை" (தாயுமானார்).

எங்குள யாவையும் இவன்வ யத்தவாம்
எங்கணும் இவன்ஒரு வயத்தின் எய்திடான்
எங்கணும் விழிமுகம் எங்கும் கால்கரம்
எங்கணுந் திருஉரு இவனுக் கென்பவே. 27

இவன் ஒருவனே பசுபதியாகலின் எப் புவனத்துள்ளனவும் விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் ஆதற்குரிய யாவும் இவன் வழி நிற்பன ஆகும், உலகங்கள் அவனுக்கு அடிமையும் உடைமையும் ஆகலின்

தன் வயத்தனுவன் (சுதந்திரன்). எல்லாம் அறிபவன் ஆகலின் எங்கணும் விழி எனவும், எவ்விடமும் அவன் திருமுன்பு (சந்நிதி) ஆகலின் எங்கும் முகம் எனவும், புடை பெயர்ச்சியின்றி நீக்கமற நிறைதலின் எங்கும் கால், சங்கற்ப மாத்திரத்தாற் செய்தலின் (நங்கையினுற் செய்தளிப்பன் நாயகன்) எங்கும் கரம் எனவும், சிதாகாய (ஞானம்) மே திருவுருவாகலின் எங்கணும் எனவும், ஆசிரியர் அறிவினும் அணித்தாக விளங்கலின் இவன் எனவும், அருளாசிரியர் அனைவரும் கண்ட வழக்காகலின் என்ப எனவும் கூறினர்.

அரியயன் அமரர்கள் அசுரர் யோகிகள்
இருளறு வேதவே தாந்தம் யாரும்இப்
பெரியவன் அடியிணை காணும் பெட்பினுல்
தெரிகிலர் மாறுகொண் டின்னுந் தேடுவார். 28

திருமாலும், பிரமனும், தேவரும், அசுரரும், யோகியரும் மயக்கறுக்கும் வேத, வேதாந்தங்களும் ஆகியோராகிய இவர் யாவரும் இப்பெரியோனைக் காணும் விருப்பினுல் முயன்று காண்கிலர் மாறுபாடுற்று இன்னமும் தேட முயல்வர்.

'அரிய காட்சியராய்த்தம தங்கைசேர், எரியர் ஏறுகந் தேறுவர் கண்டமும், கரியர் காடுறை வாழ்க்கையர் ஆயினும், பெரியர் ஆரறி வாரவர் பெற்றியே'.

காணலாகா நிலையாற் காணலுற்றுர் என்பார் 'மாறு கொண்டு' என்றனர். காணும் நிலையாவது; அவனருளே கண்ணுகக் காணுதல்.

அவனவள் அதுவெனும் அவைதொ ரூன்றும்இச்
சிவனலான் முத்தியிற் சேர்த்து வார்இலை
துவளரும் இம்முறை சுருதி கூறுமால்
இவனடி வழிபடின் முத்தி எய்துவாய். 29

உலகம் முப்பகுப்பினது. அவையாவன: அவன், அவள், அது என்பன. இம் முப்பகுப்புப் பிரபஞ்சத்தினும் கலந்து அவையேயாய் நிற்கும் சிவபிரான அன்றி முத்தியிற் சேர்ப்பவர் இல்லை; அவனே சேர்ப்பன். வேதங்கள் இவ்வியல்பை உறுதி பெறக் கூறும். இவனடியை வழிபடின் முத்தியை அடைவாய்.

'அவன் அவள் அதுஎனும் அவை' (சிவ. சூ. 1) ஆசிரியர் திருவாக்கை முன்ஞேர் மொழி பொருளொடு அவர்கள் மொழிகளையும் பொன்னேபோற் போற்றிக் கொள்ளுதல் என்க.

பன்னுவ தெவன்பல பரிந்து நெஞ்சினும்
அந்நியர் தமைஒழித் தரனை ஏத்துதி
இன்னதே வீட்டினுக் கேது வாமெனும்
பொன்னுரை மனக்கொடு புகலு வான்சிவி. 30

பலவாக விரித்துரைப்பது என்னை நெஞ்சானும் பிற தெய்வங்களை நினையாது விலக்கி அரனையே அன்பொடு துதிசெய்; இதுவே முத்திக்குக் காரணமா மென்னும் பிருகற்பதியின் வார்த்தையை மனங்கொண்டு சிவி யென்னும் இந்திரன் வினவுவான்.

நெஞ்சினும் என்புழி உம்மை, எச்சத்தோடு இழிவு சிறப்பு. பொன் போலும் உரையென்னும் நயங்கொள்க. அரன்–பாசங்களை அரிப்பவன்.

குரவனே அயன்அரி குரவ னேசிவன்
குரவனே தந்தைதாய் குரவ னேயெலாம்
குரவனே என்றுநூல் கூறும் உண்மையைக்
குரவனே என்னிடை இன்று காட்டினாய். 31

ஆசிரியனே பிரமன், ஆசிரியனே திருமால்; அவனே; தந்தை; அவனே தாய்; அவனே நண்பன் முதலானோர் யாவரும் என்று நூல் கூறும் உண்மைப் பொருளை ஆசிரியனே நீ என்னிடத்தில் இன்று உணர்த்தினை.

இவர்கள் வாயிலாகப் பெறும் நலமெல்லாம் குரவனின் வழிப் பெறும் நன்மைக்குத் துணை செய்தலின் இங்ஙனம் கூறினார்.

உன்பெருங் கருணையால் உறுதி பெற்றுளேன்
இன்பொடும் எவ்விடத் தெவ்வி திப்படி
பொன்பொதி சடையனைப் போற்று மாறிது
அன்பொடும் அடியனேற் கருளு கென்றலும். 32

உனது பேரருளால் உறுதிப் பொருளைப் பெற்று உளன் ஆயினேன்; மகிழ்ச்சி யொடும் எத்தலத்தில் எம்முறைப்படி பொன்போலும் நிறங்கொண்ட பொதிந்த சடையையுடைய பெருமானை வழிபடு முறையை அன்போடும் அடியேற் கருளுக என்று சிவி கூற,

கடலுடை வரைப்பினிற் காஞ்சி மாநகர்
இடனுடைக் குணக்கினில் எய்தி னாரெலாம்
விடலருஞ் சத்திய விரத தானத்தின்
முடிவில்சத் தியவிர தேசன் முன்பரோ. 33

கடலை ஆடையாகவுடைய நிலவுலகிற் காஞ்சிமா நகரில் இடம் விரிந்த கிழக்கெல்லையில் சார்ந்தோர் யாவரும் நீங்குவதற்கரிய சத்திய விரதீசர் திருமுன்னர்,

"மேவினார் பிரியமாட்டா விமலனார்" (திருத். கண்ண–34).

மேற்றிசைச் சத்திய விரத தீர்த்தம்ஒன்
றுற்றவும் மேன்மைபெற் றுடைய தாயிடைப்
போற்றுறும் பசுபதி விரதம் பூண்டுசென்
றாற்றெழுந் துறுதடத் துதகம் ஆடியே. 34

மேற்குப்பக்கத்தில் சத்திய விரத தீர்த்தம் ஒன்று மிகவும் மேன்மை பெற்றுடையது. நூல்களெல்லாம் பெரிதும் போற்றும் சைவ விரதம் மேற்கொண்டு அவ்விடத்துச் சென்று ஊற்று எழும் தட நீராடி.

பசுபதி விரதம்–சிவசங்கற்பம், உதகம்–நீர்.

விதியுளி முடித்துநித் தியநை மித்திகம்
புதியநீ றுடலெலாம் பொதிந்து புண்டரம்
மதிநுதல் விளங்கிட அக்க மாமணி
நிதியெனப் பூண்டுநல் லொழுக்கம் நீடியே. 35

நான்முறை தெரிந்த சீலத்தில் நாட்கடனும், விசேட நிகழ்ச்சியும் ஒருங்குற முடித்துப் புதிய திருநீற்றை உடம்பு முழுதும் பூசி (முழுநீறு பூசி) மதிக்கத்தக்க நுதல் விளக்கம் பெறத் திரிபுண்டரமாகத் தீட்டி உருத்திராக்கவடம் பெருஞ்செல்வமாக மதித்தணிந்து நல்லொழுக்கத்தில்தங்கி,

தெள்ளொளிப் பளிங்கெனச் சிறந்த செவ்விசால்
வெள்ளொளிச் சத்திய விரத நாதனை
உள்ளகக் கமலத்தின் வழிபட் டுண்மையான்
நள்ளலர்க் கடந்தவ முத்தி நண்ணுவாய். 36

பகைவரைக்கடந்த இந்திரனே, தெளிந்த ஒளியினையுடையபளிங்கு போலச் சிறந்த பொலிவமைந்த வெள்ளிய ஒளியினையுடைய சத்திய விரத நாதனை உள்ளத் தாமரையில் உண்மையோடு வழிபாடு செய்து முத்திப்பேற்றினை அடைவாய்.

புறப்பகையையும், அகப்பகையையும் வென்றவன் ஆகலின், 'நள்ளலர்க் கடந்தவ' என விளிக்கப்பட்டனன்.

என்றலும் இந்திரன் இறைஞ்சி என்கொலோ
வென்றிகொள் சத்திய விரதங் கேள்வியால்
தொன்றுள தொடர்புபோல் சுழலும் என்மனம்
சென்றுபற் றியதெனக் குரவன் செப்புவான். 37

என்று கூறியபோது இந்திரன் வணங்கிப், பொறிவழிச் சென்று கொட்புறும் என்மனம் வென்றி கொண்ட சத்திய விரதத்தைக் கேட்ட மாத்திரையால் முன்பு பயிற்சி பெற்றாற்போலச் சென்று பற்றியதற்குக் காரணம் யாதோ' என வினவ வியாழப் புத்தேள் விடை கூறுவார்.

உள்ளது கூறினை உம்மை ஆயிடை
அள்ளிலைக் குலிசநீ அணைந்து புந்திநாள்
வெள்ளநீர்ச் சத்திய விரதம் மூழ்கினண்
டெள்ளரும் விண்ணகர்க் கிறைமை எய்தினாய். 38

கூரிய இலை வடிவமைந்த வச்சிராயுதத்தை உடையை "ஆகிய நீ உள்ளது கூறினாய் முற்பிறப்பில் அவ்விடத்தை அணுகிப் புதன்கிழமையில் சத்திய விரத தீர்த்தத்தில் மூழ்கி இப்பொழுது இகழ்ச்சியில்லாத விண்ணுலகிற்குத் தலைவன் ஆயினை.

ஒருபொழு தாடினர் உம்பர் கோனிடம்
இருபொழு தயனிடம் எண்ணும் முப்பொழு
தரியிடம் நாற்பொழு தாயின் முத்தியே
மருவுவர் யார்அதன் வண்மை கூறுவார். 39

ஓர் பொழுது சத்திய விரதத்தில் நீராடினர் இந்திரபதம் பெறுவர்; இருபொழுது மூழ்கினோர் பிரமபதம் அடைவர்; முப்பொழுது மூழ்கியோர் திருமால் பதவியைப் பெறுவர்; நாற்பொழுது மூழ்கினராயின் வீட்டினைத் தலைப்படுவர். அத்தீர்த்தத்தின் கொடைக்குணத்தையாவர் கூற வல்லவர்.

புந்திநாள் முழுகுநர் புகுவர் முத்தியின்
அந்தநாள் மூழ்கலின் அரச நீயும்இப்
பந்தமில் வீடுறற் பாலை யாயினை
மந்தணம் இதுவெனக் கேட்ட வாசவன். 40

அரசனே, புதன்கிழமை அத்தீர்த்தத்தில் மூழ்குவோர் முத்தியைத் தலைப்படுவர். நீயும் அந்நாளில் மூழ்கினமையால், இப்பாச மில்லாத வீட்டினை அடைதற்குரிமை உடையை ஆயினை; இதுவே இரகசியம் (உட்கிடை) எனக் கூறச் செவிமடுத்த இந்திரன்,

பந்தம் இல் வீடு–'முப்பத்தாறு தத்துவங்களுக்கும் அப்பாற்பட்ட சிவனடியைச் சேரும் முத்தி' (சிவ-சி-264) பந்தம் உள்ளன: 'இம்மையே' என்னுஞ் செய்யுளினும் (சிவஞான சித்தியார்) 'அரிவையர்' என்னும் செய்யுளினும் (சிவப்பிரகாசம்) காண்க. மந்தணம்–இரகசியம் (தலவிசேடப் படலம் 31)

இப்பெருந் தீர்த்தநீர் எற்றை ஞான்றினும்
அப்புத வாரநாள் அதிக மாயதென்
செப்புதி என்றலுந் தேசி கப்பிரான்
ஒப்பறு கருணையின் உரைத்தன் மேயினான். 41

சத்திய விரத தீர்த்தநீர்க்கு மற்றைய ஆறுநாட்களினும் புதன் கிழமை சிறப்பு மிகுவது என்னை? அதனைக் கூறுக எனலும் ஞான மூர்த்தியாகிய குரு உவமையில்லாத பெருங் கருணையினாலே உரைத்தலை விரும்பினார். வாரம்–உரிமை.

## புதன் வழிபட்ட வரலாறு

கொச்சகக் கலிப்பா

மதிக்கடவுள் தாரைதனை மணந்தீன்ற மகவான
புதக்கடவுள் கிரகநிலை பெறுவதற்குப் புரிதாதை
கதித்துரைத்த மொழியாறே கருதருஞ்சத் தியவிரதப்
பதிக்கண்அணை துயர்தீர்த்தம் படிந்தாடித் தவஞ் செய்தான். 42

சந்திரன் பிருகற் பதியின் மனைவியாகிய தாரையைக் கூடிப்பயந்த மகவாகிய புதன்' கிரக பதவியை அடைதல் வேண்டி, விரும்புகின்ற தந்தை எழுச்சியுற்று உரைத்த மொழிப்படியே நினைக்கவும் அரியசத்திய விரதத் தலத்தை அணைந்து உயர்தற்குக் காரணமாகிய தீர்த்தத்தில் மூழ்கித் தவமியற்றினான்.

சந்திரனைக் குரவன் இல் விழைந்தவன் என்றனர். (திருநகரப். 81)

மேதகுசத் தியவிரதப் பெருமானும் வெள்விடைமேல்
மாதுமையா ளுடன்ஏறி வயக்கரிமா முகன்இளையோன்
காதல்புரி அருள்நந்தி கணநாதர் புடைசூழ
ஆதரமோ டெழுந்தருளித் திருக்காட்சி அளித்தருள. 43

மேன்மை பொருந்திய சத்திய விரதேசரும் வெள்ளிய விடைமேல் உமையம்மையுடன் எழுந்தருளி வெற்றியமைந்த யானை முகத்தையுடைய மூத்த பிள்ளையாரும், இளைய பிள்ளையாரும் ஆன்மாக்களிடத்து விருப்பம் செய்யும் நந்தி தேவரும கணநாதரும் பக்கத்திற் சூழ்ந்து வரக்கருணை யோடெழுந்தருளித் திருக்காட்சி அளித்தருள.

கண்டுபர வசனாகிக் கைதொழுது பெருங்காதல்
மண்டிஎழ மயிர்சிலிர்ப்ப மனத்தடங்காப் பேருவகை
கொண்டுநில முறவீழ்ந்து குழைந்துருகி விழிதுளிப்பத்
தொண்டனேன் உய்ந்தேன்என் றெழுந்தாடித் துதிசெய்வான்.

தரிசித்துப் பரவசனாகிக் கைகூப்பிப் பேரன்பு மீதூர்ந்தெழவும், புளகிக்கவும், மனத்தி லடங்காத பெருமகிழ்ச்சி கூர்ந்து பூமியின் மேற் பொருந்த விழுந்து மனங்குழைந்துருகிக் கண்கள் நீர்சிந்த அடியனேன் பிழைத்தேன் என்று எழுந்து ஆடித் துதி செய்யாநின்றான்.

நெடியோனும் மலரவனும் நேடரிய திருவடிகள்
அடியேனுக் கெளிவந்த அருட்கருணைத் திறம் போற்றி
ஒடியாத எண்குணங்கள் உடையானே எனையுடையாய்
கடியார்சத் தியவிரத நாயகநின் கழல்போற்றி. 45

திருமாலும், பிரமனும் தேடிக் காணுதற்கு அரிய திருவடிகள் அடியேனுக்கெளிதாக எழுந்தருளிய பெருங் கருணையின் நலத்திற்கு வணக்கம். கெடாத எண்குணங்களும் உடையவனே என்னையும் அடிமை யாக உடையவனே! காவலமைந்த சத்திய விரத நாயகனே நின் திருவடி களுக்கு வணக்கம்.

எண்குணங்களாவன: தன் வயத்தனாதல், தூய உடம்பினனாதல், இயற்கை யுணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங் களின் நீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்ப முடைமை என்பன.

என்றேத்தி எந்தையென யான்கிரக நிலைபெறவுங்
குன்றாதுன் திருவடிக்கீழ் மெய்யன்பு கூர்ந்திடவும்
இன்றாதி என்வாரத் தித்தீர்த்தம் படிந்துபொறி
வென்றோர்முன் னையின் இரட்டிப் பயன்எய்தி வீடுறவும். 46

என்று துதித்து எனது தந்தையைப்போல யான் கிரகபதம் பெறவும், உனது திருவடிக்கீழ் குறையாது உண்மையன்பு சிறக்கவும், இன்றுமுதல் (புதன்) என் கிழமையில் இத் தீர்த்தத்தில் மூழ்கி ஐம் பொறிகளை வென்றோர் முன்னையினும் இருமடங்கு பயன் பெற்று (நுகர்ந்து முடிவில்) வீட்டினை எய்தவும்.

வேண்டுமென் இரந்தேற்ப அளித்தருளி வெள்விடைமேல்
ஆண்டகைஅங் ககன்றனனால் அன்றுமுதல் அத்தீர்த்தம்
பூண்டபுத வாரத்துச் சிறப்பெய்தும் புந்தியுறக்
காண்டியெனுங் குரவன்உரை காரூர்தி செவிமடுத்தான். 47

வேண்டுமென இரப்ப அருள்செய்து விடைப்பாகன் திருவுருக் கரந்தனன். ஆகலின் புதன்கிழமை அத்தீர்த்தத்திற்கு மிகு சிறப்பாம். மனங்கொளக் காண்பாயாக என்னும் குருவின் மொழியை மேகவாகன னாகிய இந்திரன் செவி மடுத்தான்.

## இந்திரன் சத்தியவிரதம் அடைந்து வழிபடுதல்

அப்பொழுதே அரசுரிமை அம்மறையோன் புடைவைத்துச்
செப்பருஞ்சத் தியவிரதத் திருநகரின் விரைந்தெய்தி
முப்பொழுதும் நீராடி முழுநீறு மெய்பூசி
மெய்ப்படுகண் டிகைபூண்டு புண்டரமும் நுதல்விளங்க. 48

அரசாட்சியைக் குருவினிடத்து அப்பொழுதே சேர்த்திச் சத்திய விரதத் திருத்தலத்தினை விரைந்தடைந்து மூன்று பொழுதினும் நீரில் மூழ்கி மெய்ம் முழுதும் விபூதியைப்பூசி உருத்திராக்கவடமும் நெற்றியில் திரிபுண்டரமும் விளங்கப்பூண்டு.

உருத்திரமும் கணித்துள்ளப் புண்டரிகத் துமைபாகன்
திருப்பதங்கள் சிந்தித்துக் கோயிலினுள் சென்றெய்தி
அருத்தியொடும் பூசனைசெய் தாராமை மீக்கொள்ளப்
பெருத்தெழுந்த பேரன்பிற் பெருமானைத் துதிக்கின்றான். 49

உருத்திரமும் அறிவாற்கணித்து இருதய தாமரையில் மங்கை பங்கன் திருவடிகளைத் தியானித்துத் திருக்கோயிலின் உள்புக்கு விருப் புடன் பூசனை செய்து அடங்காமை மேலெழப் பெருகி எழுந்த முறுகிய அன்பிற் பெருமானைத் துதிசெய்கின்றான்.

ஆரா அன்பு: "நீடுபூசனை நிரம்பியும் அன்பினால் நிரம்பார்"

## இந்திரன் துதித்தல்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

மறைமுடி வின்னுந் தேரு மலர்சிலம் படியாய் போற்றி
அறைபுனல் உலகம் எல்லாம் படைத்தளித் தழிப்பாய் போற்றி
சிறைநிறை வாசத் தெண்ணீர் சத்திய விரத தீர்த்தத்
துறைகெழு வரைப்பின் மேய சுந்தர விடங்கா போற்றி. 50

வேதங்கள் இன்னும் அறியாத, மலர்ந்தும் சிலம்பை அணிந்தும் உள்ள திருவடி உடையோனே காத்தருள்க; ஒலிக்கின்ற கடல்சூழ் உலகமும் பிறயாவும படைத்துக் காத்து அழிப்பாய் காத்தருள்க; கரையினையுடைய நறுமணங் கமழும் சத்திய விரதத் தீர்த் தத்துறை பொருந்திய இடத்தில் எழுந்தருளியுள்ள பேரழகனே போற்றி.

அண்ணலே விடயத் துன்பம் ஆற்றிலேன் ஓலம் ஓலம்
எண்ணறும் யோனி தோறுந் திரிந்தலைந் தெய்த்தேன் ஓலம்
கண்ணினுள் மணியே வேறு கண்டிலேன் களைகண் ஓலம்
புண்ணிய முதலே இன்பப் பூரண ஓலம் ஓலம். 51

தலைவனே ஐம்புலத்துன்பங்களைப் பொறுக்கும் வலியிலேன் முறையோ! முறையோ! அளவிடற்கரிய சிவபேதங்களுள் பிறந்திறந்து வருந்தி இளைத்தேன் முறையோ! கண்ணினுள் மணியை ஒப்பவனே உன்னை ஒழிய வேறு பற்றுக்கோடு காண்கிலேன் ஓலம்! புண்ணியத்திற்கு வித்தே! நிறைந்த இன்பனே ஓலம்! ஓலம்;

புழுப்பொதிந் தசும்பு பாயும் புன்புலை உடலே ஓம்பிக்
கழித்தனன் கால மெல்லாம் கடையனேன் பொறிகள் யாண்டும்
இழுத்திழுத் தலைப்ப நொந்தேன் இனித்தினைப் பொழுதும் ஆற்
சழக்கறுத் தருள்வாய் உன்றன் சரணமே சரணம் ஐயா. [றேன்.

புழுக்கள் மலிந்து அழுக்குநீர் பாயும் மிகவும் இழிந்த உடலையே வளர்த்து காலமெல்லாம் போக்கினேன். மெய், வாய், கண், மூக்கு, செவி எனப் பெயரிய ஐம் பொறிகளும் எவ்விடத்தும் மாறி மாறி ஈர்த்து வருத்த வருந்தினேன்; இனித் தினை அளவு காலமும் பொறேன். பொய்தவிர்த்து அருள்வாய். ஐயனே! உன்றன் திருவடியே புகலிடம்.

'புழு வழுக்கு மூடி, மலஞ்சோரும் ஒன்பது வாயிற்குடிலை', "ஏழைத் தொழும்பனேன் எத்தனையோ காலமெல்லாம்" 'எறும்பிடை நாங்கூழெனப் புலனால் அலைப்புண்டு' 'மாறிநின்றென்னை மயக்கிடும் வஞ்சப் புலன்' 'தினைத்தனையேனும் பொறேன் துயராக்கையின் திண்வலையே' 'சழக்கனேன் வந்து சார்கிலேன்' (இரு செய்யுட்களும் திருவாசகத்தில் ஊறி எழுந்தவை).

## இந்திரனுக்குச் சத்தியவிரதீசர் காட்சி கொடுத்தருளுதல்

அடைக்கலம் அடியேன் என்றென் றழுதிரந் தயருங் காலை
விடைத்தனிப் பெருமான் அன்னோன் பத்தியின் விளைவு நோக்கி
நடைப்பிடி உமையா ளோடு நண்ணிநீ வேண்டிற் றென்னை
எடுத்துரை தருதும் என்றான் இந்திரன் தொழுது வேண்டும். 53

அடியேன் உன் அடைக்கலப் பொருள் என்று பல்காற் கூறி, அழுது குறையிரந்து தளர்ந்த பொழுதில் விடை ஊரும் தன்னொப்பாரிலி அவன் பேரன்பின் முதிர்ச்சியை நோக்கிப் பெண் யானையின் நடையுடைய பெருமாட்டியோடும் எழுந்தருளி நீ விரும்பியது யாது அதனைக் கூறுதி தருவோம் என வாய்மலர, இந்திரன் வணங்கி வேண்டுவான்.

வினைவழிப் பிறந்து வீந்து மெலிந்தநாள் எல்லை இல்லை
அனையவற் றடிகேள் உன்றன் அடிதொழப் பெற்றி லேனால்
நினைவருந் தவத்தால் இன்று நின்னருட் குரியன் ஆனேன்
இனிவரும் பிறவி மாற்றி என்றனை உய்யக் கோடி. 54

அடிகளே நல்வினை தீவினைகள் செலுத்து மாற்றால் பிறந்தும் இறந்தும் தாக்குண்டு மெலிந்த காலங்கள் கணக்கில; அக்காலங்களில் உன்னடியைத் தொழும்பேறு வாய்த்திலேன்; எண்ணவும் முடியாத தவப் பயனால் இப்பிறப்பில் நின் திருவருளுக்குப் பாத்திரம் ஆயினேன்; இனி வரும் பிறவி(உளஎனின்) அதனை ஒழித்து என்னை உய்ய ஆட்கொள்வாய்.

இத்தலந் தீர்த்தம் என்றன் பெயரினான் இலக வேண்டும்
அத்தனே என்ன லோடும் அவ்வகை அருளி மீளா
முத்திசேர் கணநா தர்க்குள் முதல்வனாந் தன்மை நல்கிப்
பைத்தபாம் பாரம் பூண்ட பண்ணவன் இலிங்கத் தானான். 55

எந்தையே இத்தலமும், இத்தீர்த்தமும், இந்திரபுரமும் இந்திர தீர்த்தமும் எனப் பெயர் விளங்க வேண்டும் எனவேண்ட அவ்வாறே அருள்செய்து மீண்டும் பிறவாது முத்தியைச் சேரும் கணநாதர்களுக்கு முதல்வனாந் தலைமையை நல்கிப் படம் விரித்த பாம்பினை ஆரமாகப் பூண்ட செவ்வியோன் சிவலிங்கத்துள் மறைந்தருளினன்.

சாலோகாதி பதமுத்திகள் பெறுவோர் இருவகையர் ஆவர். மீளத்தோன்றிப் படிவழியே அடுத்தடுத்த பெரும்பதத்தான் முத்தி பெறுவர் ஒருவகையர். காலம் வருமளவும் ஆண்டே யிருந்து முத்தி சேர்வர் மற்றொரு சாரார். சிவி என்னும் இந்திரன் கணநாதர்க்குத் தலைவனாயிருந்து அக்கணநாதர்களைப் போலக் காலாந்தரத்தில் திருவடி கூடும்பேறு பெற்றனன்.

அற்றைநாள் முதல்அச் சூழல் இந்திர புரமாம் அங்கண்
கற்றைவார் சடையீர் ஓர்கால் கண்ணுறப் பெற்றோர் தாமும்
வெற்றிவேற் காலன் றன்பால் விரவிடார் கருவில் எய்தார்
இற்றதன் பெருமை முற்றும் யாவரே இயம்ப வல்லார். 56

நீண்ட சடைமுடியினையுடைய முனிவர்களே! அந்நாள் முதலாக அவ்விடம் இந்திரபுரம் என்னும் பெயருடைய தாகும். அதனைக்காணும் பேறு பெற்றோரும் வெற்றி வேலையுடைய காலன் கைப்படார்; மேலும் பிறப்பெய்தார் அதன் பெருமையை இவ்வளவினது என்று முற்றும் வரையறுத்துக் கூற வல்லார் யாவர்.

சத்திய் விரதம் காரைத் தருவனஞ் செறித லாலே
சித்திசேர்ந் தவர்க்கு நல்குந் திருநெறிக் காரைக் காடென்
றித்திருப் பெயரின் ஓங்கும் என்பரால் மாசு தீர்ந்த
உத்தமக் கேள்வி சான்ற உணர்வுடை உம்பர் மேலோர். 57

குற்றத்தினின்று நீங்கிய தலைமை அமைந்த கேள்வியின் மிக்க அறிவினையுடைய மேன்மக்கள் சத்திய விரதம் என்னும் தலம் காரை மரங்கள் செறிதலாலே சேர்ந்தவர்க்குச் சித்தி நல்குந் திருநெறியையுடைய காரைக்காடு என்று இத்திருப்பெயரின் உயர்ந்து விளங்கும்.

அருள் நெறி, திருநெறி, ஒளி நெறி, பெருநெறி என்பன சிவ ஞானத்தைக் குறிக்கும்.

திருநெறிக் காரைக்காட்டுப் படலம் முற்றுப் பெற்றது
ஆகத் திருவிருத்தம் 501

## காலப் பிரமாணம்.

நிமிஷம் பதினைந்து கொண்டது ஒருகாஷ்டை; காஷ்டை முப்பது கொண்டது ஒருகலை. கலை முப்பது கொண்டது ஒரு முகூர்த்தம். முகூர்த்த மென்பது இரண்டுநாழிகை. முகூர்த்தம் முப்பதுகொண்டது பகலும் இரவுங் கூடிய ஒருநாள். நாள் பதினைந்து கொண்டது ஒரு பக்ஷம். பக்ஷம் இரண்டு கொண்டது ஒரு மாசம். மாசம் ஆறுகொண்டது ஒரு அயனம். அயனம் இரண்டுகொண்டது ஒரு வருஷம். மக்கள் வருஷம் ஒன்று தேவர்களுக்கு ஒரு நாளாம். தேவர்களுக்கு உத்தராயணம் பகலும், தக்ஷிணாயனம் இராத்திரியுமா யிருக்கும். மனுஷவருஷம் முந்நூற்றறுபது கொண்டது தேவர்களுக்கு ஒரு வருஷமாம். தேவ வருஷம் பன்னீராயிரங் கொண்டது ஒரு சதுர்யுகமாம்,

| யுகம். | தேவ வருஷம். | மக்கள் வருஷம் |
|---|---|---|
| கிருதயுகம் | 4800 | 17,28,000 |
| திரேதாயுகம் | 3600 | 12,96,000 |
| துவாபரயுகம் | 2400 | 8,64,000 |
| கலியுகம் | 1200 | 4,32,000 |
| சதுர்யுகம் | 12,000 | 43,20,000 |

இப்படிச் சதுர்யுகம் ஆயிரம் திரும்பினுல், பிரமாவுக்கு ஒரு பகலாகும்; பின்னும் ஆயிரந் திரும்பினுல் பிரமாவுக்கு ஓரிராத்திரியாகும். ஆகவே இரண்டாயிரஞ் சதுர்யுகங் கொண்டது பிரமாவுக்கு ஒருநாளெனப்படும். இந்த நாள் முப்பது கொண்டது ஒருமாசம். இந்த மாசம் பன்னிரண்டு கொண்டது ஒருவருஷம். இந்த வருஷம் நூறுனுல், பிரமாவுக்கு ஆயுசு முடியும். இவ்வியல்புடைய பிரமாக்கள் எண்ணில்லாதவர்கள் பிறந்திறந்தார்கள். பிரமாவினுடைய ஆயுசு பரமெனப் பெயர் பெறும். அதிற் பாதியாகிய ஐம்பது வருஷம் பரார்த்தமென்று சொல்லப்படும்.

பிரமாவினுடைய பகலாகிய ஆயிரஞ் சதுர்யுகத்திலே பதினுன்கு மநுக்கள் அதிகாரம் பண்ணுவார்கள். அவர்கள் பெயர்:- சுவாயம்புவர், சுவாரோசிஷர், ஔத்தமர், தாமசர், ரைவதர், சாக்ஷுஷர், வைவஸ்வதர், சூரியசாவர்ணி, தக்ஷசாவர்ணி, பிரமசாவர்ணி, தருமசாவர்ணி, ருத்திரசாவர்ணி, ரோச்சியர், பாவியர் என்பவைகளாம். ஒவ்வொரு மநுவந்தரத்துக்கு எழுபத்தொரு சதுர்யுகமாகும். எழுபத்தொரு சதுர்யுகம், தேவமானத்திஞலே எட்டு லக்ஷத்தைம்பத்தீராயிரம் வருஷங்களாம். மனுஷ்யமானத்திஞலே முப்பது கோடியே அறுபத்தேழு லக்ஷத்திருபதினுயிரம் வருஷங்களாம். ஒருமநுவந்தரத்துக்கு எழுபத்தொரு சதுர்யுகமாகப் பதினுன்கு மநுவந்தரத்துக்கும் தொளாயிரத்துத் தொண்ணூற்றுநான்கு சதுர்யுகமாகும். பிரமாவின் பகலிலே மிஞ்சிய சதுர்யுகம் ஆறு.

இவ்வாறு பதினுன்கு மநுவந்தரங்களாஞல், பிரமாவுக்கு ஒரு பகலாம். இதன் முடிவிலே தினப்பிரளயம் உண்டாகும். அப்பொழுது பிரமா அப்பகலளவினதாகிய இராத்திரியிலே யோகநித்திரை செய்வர். இப்படி ஆயிரஞ் சதுர்யுகவளவையையுடைய இராத்திரி கடந்தபின்பு பிரமாவுக்கு ஒருபகல் ஒருகற்பமெனப்படும். கற்பமாவது சிருட்டிமுதற் பிரளயமிறுதியாகிய காலம். ஒருகற்பத்துக்கு மனுஷவருஷம் நானூற்று முப்பத்திரண்டுகோடி.

பிரமாவினுடைய ஒருபகலிலே பதினுன்கிந்திரர்கள் இறப்பர்கள். ஒருமாசத்திலே நானூற்றிருபதிந்திரர்கள் இறப்பர்கள். ஒரு வருஷத்திலே ஐயாயிரத்து நாற்பதிந்திரர்கள் இறப்பர்கள். பிரமாவுடைய ஆயுளளவையிலேஐந்துலக்ஷத்து நாற்பதினுயிரம் இந்திரர்கள் இறப்பர்.

தற்காலத்தில் இருக்கின்ற பிரமாவுக்கு முதற்பரார்த்தமாகிய ஐம்பது வயசுஞ்சென்றன. இப்போது நடப்பது இரண்டாம் பரார்த்தத்தில் முதல்வருஷத்து முதன்மாசத்து முதற்றினம. இது சுவேதவராக கற்பமெனப்படும். பிரளயசலத்தில் முழுகியிருந்த பூமியை விஷ்ணு வெள்ளைப்பன்றி யுருவங்கொண்டு மேலே எடுத்த கற்பமாதலிற் சுவேதவராககற்பமெனப்பட்டது. இத்தினத்திலே சுவாயம்புவமநு, சுவாரோசிஷமநு, ஔத்தமமநு, தாமசமநு, ரைவதமநு, சாக்ஷுஷமநு என்னும்

ஆறு மநுக்கள் இறந்துபோனார்கள். இப்போது ஏழா மநுவாகிய வைவஸ்த மநுவினுடைய காலம் நடக்கின்றது. இவருடைய காலத்திலே இருபத்தேழு சதுர்யுகங்கள் சென்றன. இப்பொழுது இருபத்தெட்டாஞ் சதுர்யுகத்துக்கலியுகம் நடக்கின்றது.

---

## புண்ணிய கோடீசப் படலம்

கலிநிலைத் துறை

செச்சைச்சடை அந்தணிர் தேமலர் ஓடை சூழ்ந்த
மெய்ச்சத்திய மாவிர தத்தல மேன்மை சொற்றும்
கச்சிப்பதி யிற்கவர் புண்ணிய கோடி மேன்மை
நச்சிப்புகல் கின்றனம் நன்கு மதித்துக் கேண்மின். 1

சிவந்த சடையினையுடைய அந்தணர்களே! தேன் மருவிய மலர்களைக் கொண்ட நீர்நிலை சூழ்ந்த சத்திய விரதத் தலத்தினது உயர்வைக் கூறினேம். இனிக் காஞ்சியில் உள்ளத்தைக் கவர்கின்ற புண்ணிய கோடியின் மேன்மையை விரும்பிச் சொல்கின்றனம் நன்றாகப் பொருட்படுத்திக்கேண்மின்.

'சைவம் விட்டிட்ட சடை' சைவ வேடத்தது. இறைவன் புகழைப் பராமுகமாகக் கேட்டல் பாதகமாம்; 'வலை வீசிய திருவிளையாடல்' காண்க. 'கவர்வு விருப்பாகும்' (தொல். சொல்).

மின்பாய்பொழிற் சத்திய மாவிர தத்த லத்தின்
தென்பாலது புண்ணிய கோடிநந் தேவன் வைப்பு
வன்பாலர்கள் எய்தரும் புண்ணிய தீர்த்த மாடே
என்போலி கட்கும் சிவப்பேறெளி தெய்தும் அங்கண். 2

புண்ணிய கோடி எனப்பெறும் நம்முடைய தேவன் இருக்கை. மேகந்தவழ் பொழில் சத்திய விரதத்தலத்தின் தெற்குத் திசையது, அன்பிலார் அடைதற்கரிய புண்ணிய தீர்த்தத்தின் மருங்கே தன்னைப் போல அன்பிலார்கட்கும் சிவ வாழ்வு எளிதினில் வாய்க்கும் அவ்விடத்தில்,

அன்பிலர் எய்தொணாதது; எய்திற்பயன் எளிதிற்கிட்டுவது; அன்பு சிறிது வைப்பினும் அப்புண்ணியம் கோடி மடங்காய்ப் பெருகுமாகலின் என்க.

### இறைவனிடத்துத் திருமால் வரம்பெறல்

மலர்மேயவன் மேகநல் வாகன கற்பம் ஒன்றில்
தலமேம்புகழ் நாரணன் தாமரை யாளி யாதி
உலகேழையும் ஈன்றிடும் ஆசையின் உம்பர் கோனைப்
பலநாள் முகிலின் உருக்கொண்டு பரித்தல் செய்தான். 3

பிரமனுடைய கற்பங்களுள் ஒன்ருகிய மேகவாகன கற்பத்தில் ஏழ்தலமும் புகழும் நாரணன், பிரமன் முதலாக ஏழுலகினையும் அவற்றிடைச் சர அசரங்களையும் படைக்கும் விருப்பினுல் தேவ தேவனைப் பல நாள் மேகத்தின் வடிவங்கொண்டு தாங்கினுன்.

ஓரோர் கற்பம் நிகழும் ஓர் நிகழ்ச்சியால் பெயர் பெறும்; காட்டு: 'சுவேதவராக கற்பம்' (வெள்ளைப்பன்றி வடிவு திருமால் கொண்ட வரலாறு பின்வரும்).

நம்மான் இரங்கிக் கடைக்கண்அருள் நல்கி மாலோய்
வம்மோசுரர் ஆண்டினில் ஆயிர ஆண்டு மற்றிங்
கிம்மேக உருக்கொடு தாங்கினை எம்மை வேண்டும்
அம்மாவரம் நல்குதும் ஓதுதி என்ன அன்னேன். 4

நம்பெருமான் திருவுளமிரங்கித் திருக்கடைக்கண் பார்வையைச் சாத்தி, 'மாலே, வாராய் தேவ அளவையில் ஆயிரவருடம் இவ்விடத்தில் இம்மேகவடிவங் கொண்டு தாங்கினை. எம்மை, வேண்டுகின்ற அப்பெருவரங்களைத் தருவோம் சொல்' என, அத்திருமால்,

வம் என்று ஒருமையில் வந்து, மோஎன்னும் முன்னிலை அசையை ஏற்றது.

எந்தாய்ஒரு நின்திரு மேனி இடப்பு றத்து
வந்தேன் அடியேன் உயர்நின்அருள் வண்மை தன்னுல்
நந்தாதஇவ் வாழ்க்கையும் எய்தினன் ஞாலம் முற்றும்
பைந்தாள்மல ரோனையும் இன்று படைத்தல் வேட்டேன். 5

எந்தையே, அடியேன் நினது திருமேனியில் இடப்புறத்துத் தோன்றினேன். உயர்ந்தநின் அருட்கொடையால் கெடாத இவ்வாழ்வும் பெற்றனன். உலக முழுதுடன், பசியநாளமுடைய தாமரை மலரை இருக்கையாகக் கொண்ட பிரமனையும் சிருட்டிசெய்தலை விரும்பினேன்

எந்தாய்-என்றந்தை என்னும் பொருளுடன், நின் திருமேனியில் வந்தனன் என்பதற்கேற்ப எம் தாய் எனும் நயம் எண்ணுக.

அவ்வாற்றல் அளித்தரு ளென்னும் அரிக்கு நாதன்
இவ்வாற்றல் கச்சிப் பதிஎய்தி இலிங்கந் தாபித்
தொவ்வாநளி னங்களி னுலுயர் பூசை ஆற்றின்
செவ்வேபெறு கிற்பை எனத்திரு வாய்ம லர்ந்தான். 6

படைக்கும் வலிமையைத் தந்தருள்க என்று கூறும் திருமாலுக்குச் சிவபிரானுர் காஞ்சியை அடைந்து சிவலிங்கம் நிறுவித் தனக்கு ஒப்பில்லாத தாமரை மலர்களினுல் உயர்ந்த பூசனை செய்தால் அப்படைக்கும் ஆற்றலைத் திருந்தப் பெறும வன்மையை யுடையை ஆவாய் எனத் திருவாய் மலர்ந்தருளினுர்.

## திருமால் காஞ்சியில் இறைவனை வழிபடுதல்

அங்கப்பொழு தேவிடை கொண்டருட் காஞ்சி எய்திப்
பொங்கிப்பொலி தீர்த்த நறும்புன லாடிச் சூழும்
தெங்கிற்பொலி இந்திர நன்னகர்த் தென்தி சைக்கண்
துங்கச்சிவ லிங்கம் இருத்தி மெய் யன்பு தோன்ற. 7

அப்பொழுது விடைபெற்றுக்கொண்டு விசேட அருளுக்கிடனாகிய காஞ்சியை அணுகி மிக்குப் பொலிகின்ற தீர்த்தத்தில் மூழ்கித்தென்னை மரங்கள் சூழ்ந்து பொலிவுறும் இந்திர புரத்திற்குத் தென் திசையில் ஏனைத் திருவுருவங்களினும் உயர்ச்சி மிகும் சிவலிங்கப் பிரதிட்டை செய்து விளங்க ஆவாகித்து மெய்யன்பு உண்டாக.

மெய் அன்பு–பொது அறுபத்தி.

தெண்ணீர்த்தடம் ஒன்று வகுத்துத் திருந்த மூழ்கி
வெண்ணீற்றணி அக்க மணித்தொடை மெய்வி ளங்கக்
கண்ணீர்க்கம லம்பல கொய்து கருத்து வாய்ப்ப
வண்ணீர்ச்சிவ பூசனை நித்தலுஞ் செய்து வாழ்ந்தான். 8

தெளிந்த நீர்சூழ்ந்த தடம் ஒன்றனை வகுத்தமைத்துச் செவ்வனே நீராடி வெண்ணீற்றணியும், உருத்திராக்கத் தாழ்வடமும் மேனியில் விளங்கத் தேனாகிய நீருடைத் தாமரை மலர்கள் பல கொய்து மனம் ஒன்ற வளப்பத் தன்மை வாய்ந்த சிவபூசனையை நாடொறுஞ் செய்து வாழ்ந்தனன்,

## கசேந்திரன் தொண்டு செய்தல்

ஷை வேறு

அன்னோன் ஏவல் மெய்ப்பணி ஆற்றும் அன்புந்தத்
தன்னே ரில்லா ஓர்மத வேழந் தான்எய்தி
என்நா யகனே என்பணி கொள்வாய் என்றேத்திப்
பொன்வாள் தோன்று முன்னர் எழுந்து புனலாடி. 9

அத்திருமாலின ஏவலாகிய மெய்த்தொண்டு செய்யும் அன்பு தூண்டுதலாலே தனக்குச் சமம் தானேயாய ஓர்மத யானை அங்குற்று 'என் தலைவனே: என் தொண்டினை ஏனறு கொள்வாய்' எனத் துதித்து இசைவு பெற்றுச் சூரியன் உதிக்கு முன்னர்த் துயில் எழுந்து நீரில்மூழ்கி.

பொன் வாள்—பொன் போன்ற ஒளி; சூரியன் ஆகுபெயர் (சிவ. சூ. ) ஆசிரியர் உரை காண்க.

நாளலர் தாமரை பாதிரி வில்லம் நறும்புன்னை
தாளுயர் சண்பகம் மல்லிகை தண்கமு நீர்மௌவல்
கோளறு கோங்கு முதற்பல கொய்து கொடுத்தென்றும்
வேளை அளித்தவன் உள்மகிழ் வித்திடும் அந்நாளில். 10

அன்றலர்ந்த தாமரை மலரையும், பாதிரி, நறிய புன்னை, அடி உயர்ந்த சண்பகம், மல்லிகை, தண்ணிய கழுநீர், முல்லை இவற்றின் மலர்களையும், வில்வத்தையும் என்றும் பறித்துக் கொடுத்து மன்மதனைப் பயந்த திருமாலின் உள்ளத்தை மகிழச் செய்திடும் அந்நாட்களில், யானை முனிவரர்க்குத்தொண்டு செய்தலை இலக்கியத்துட்காண்க.

## கசேந்திரனை முதலை பற்றல்

ஓர்பகல் நீர்நிறை பூந்தடம் ஒன்றுறு பூக்கொய்வான்
சீர்தரு திண்கரி சேறலும் அங்கொரு வன்மீனம்
நீரிடை நின்று வெகுண்டடி பற்றி நிமிர்ந்தீர்ப்பக்
காரொலி காட்டி அகன்கரை ஈர்த்தது காய்வேழம். 11

ஓர் நாள் நீர் நிறைந்த பூக்களையுடைய குளத்தில் முளைத்த மலர்களைக் கொய்யும் பொருட்டுச் சிறப்பமைந்த திண்ணிய யானை சென்ற அளவிலே அத்தடத்தில் ஒரு முதலை நீரில் இருந்து சினங்கொண்டு அடியைப் பற்றிச் செருக்கொடு நீரிடை இழுப்ப, இடியொலி எழுப்பி அகன்ற கரையை நோக்கி இழுத்தது சினங்கொண்ட யானை.

இவ்வகை தண்புன லிற்கரை மீதிவ் வோவாமே
தெவ்வுடன் ஈர்ப்புழி யாண்டுகள் எண்ணில சென்றேகக்
கைவரை ஆற்றரி தாய்அல றிக்கரு மாமேகத்
தவ்வடி வோனை அழைத்தது மூல மெனக்கூவி. 12

இவ்வகையாக முதலையும் யானையும் முறையே குளிர்ந்த நீரிலும், கரைமீதும் செல்ல ஒழியாது, பகைமை உணர்ச்சியுடன் இழுக்கும் காலை வருடங்கள் எண்ணில சென்றொழிய யானை வலிபொறாது வெருவி மிகக் கரியமேக வடிவினனாகிய திருமாலை 'மூலமே' எனக் கூவி அழைத்தது.

## திருமால் கசேந்திரனைக் காத்தல்

அண்ட ரெலாம்யாம் மூலம் அலேமென் றகல்போழ்தில்
புண்டரி கக்கட் புண்ணியன் நன்புள் ளரசின்மேல்
கொண்டெதி ரெய்திக் கரிஅர செய்துங் கொடுவெந்நோய்
கண்டுளம் நெக்கான் அஞ்சலை அஞ்சேல் களிறென்னா. 13

தேவர் யாவரும் 'யாம் மூலம், அல்லேம்' ஆகலின் நம்மை அழைத்திலதென்று அகல்கின்ற பொழுதில் தாமரை மலரையனைய கண்ணுடைப் புண்ணிய மூர்த்தியாகிய திருமால் நல்ல கருடவாகனத்துத் தோன்றி எதிர் சென்று கசேந்திரனது கொடுந்துன்பம் கண்டு உளம் நெகிழ்ந்து கசேந்திரனே அஞ்சாதே! அஞ்சாதே!! என்று கூறி, புண்ணியனை நண்ணிய புண்ணியனைப் புண்ணியன் என்றனர்.

ஆழி யெறிந்தான் அதன்உயிர் உண்டான் கரியோடும்
வாழிய காஞ்சி மாநகர் எய்திச் சிவபூசை
வேழம் அளிக்கும் மேத்கு பள்ளித் தாமத்தால்
ஊழ்முறை ஆற்றித் தவம்நனி செய்தங் குறைகாலை 14

சக்கரப் படையை வீசினன்; அம்முதலையின் உயிரைக் கொண்டனன்; கஜேந்திரனுடன் புண்ணிய கோடீச தலத்தை அடைந்து அக் கஜேந்திரன் அளிக்கும் மேன்மை பொருந்திய பூமாலை கொண்டு சிவபூசை விதிப்படி செய்து, பெருந்தவம் செய்து அங்குறுநாள்;

எண்ணரு வானோர் இன்னமும் நாடற் கரியானைக்
கண்ணிணை ஆரக் காண்டகு காதல் கைமிக்கங்
குண்ணிகழ் அன்பால் நெக்குரு கிக்கண் உறைசிந்தப்
புண்ணிய வேதப் பழமொழி ஓதிப் புகழ்கிறபான். 15

அளவிடற்கரிய தேவர் இன்றுந் தேடற்கரிய பரமனை இருகண்களாலும் பொருந்தக் காணுதற்குப் பெருவிருப்பம் கைகடந்தெழ உள்ளத்துநிகழும் அன்பு காரணமாக நெகிழ்ந்து உருகிக் கண்ணீர்த் துளிகள் துளிப்பப் புண்ணியந் தரும் வேதப் பழம் பாடலை ஓதிப் புகழ்கிறபான்.

ஓதுதற்கிலக்கணம்: 'காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி ஓதுவார்' என்புழிக் காண்க.

## திருமால் துதித்தல்

கொச்சகக் கலிப்பா

நீராய் நிலனாய் நெருப்பாய் வளிவானாய்
ஏரார் இருசுடராய் ஆவியாய் யாவைக்கும்
வேராகி வித்தாய் விளைவாகி எல்லாமாம்
பேராளா எங்கள் பிரானே அடிபோற்றி. 16

நீரும், நிலனும்; நெருப்பும், காற்றும், வானமும், விசும்பிடை எழுதரும் சந்திர சூரியரும், ஆன்மாக்களும் ஆம் இவைகளாகியும், எவற்றினுக்கும் மூலமாகியும், காரணமும் காரியமும் ஆம் எல்லாமாகியும் நிற்கும் பெருமையனே! எங்கள் தலைவனே! நின் திருவடிக்கு வணக்கம்.

எண்வகை வடிவு விளக்கம்: (திருவே. 67, 68, 69,)

அண்டபகி ரண்டம் அனைத்தும் அகத்தடக்கிக்
கொண்டுநிறைந் தோங்கியபே ரின்பக் குரைகடலே
தொண்டரெலாம் உண்ணத் தெவிட்டாச் சுவைஅமிர்தே
தண்டலைசூழ் கச்சித் தலைவா அடிபோற்றி. 17

இந்த அண்டத்தையும், பிற அண்டங்களையும் தன்னுட்கொண்டு நிறைந்து உயர்ந்த பேரின்பமாகிய கடலே! மெய்யடியர் யாவரும் மேன்மேற் பருகவும் விருப்புக்குறையாத சுவையினையுடைய அமிழ்தே! சோலை சூழ்ந்த கச்சி நகர்க்குத் தலைவனே நின் திருவடிகளுக்கு வணக்கம்.

பேரின்பமாகிய கடல் ஒலித்தலின்மையின் குரை இன அடை,

மாறா அறக்கடவுள் மான அடியேனும்
ஏறாகித் தாங்க அருள்சுரந்த எம்மானே
சீறா துமைகளிப்பத் தேவியாக் கொண்டெனைநின்
கூறாட வைத்தகுணக் குன்றே அடிபோற்றி. 18

என்றும் நிலைமாறுத தரும தேவதையை ஒப்ப அடியேனும் விடையாகித் தாங்க அருள்பாலித்த எனது பெருமானே! உமையம்மையார் வெகுளாது மகிழ்ச்சி கொள்ள என்னைத் தேவியாகக் கொண்டு நின் இடப்பாகத்தில் இருத்திய குணமலையே! நின் திருவடிகளுக்கு வணக்கம்.

திருமால் விடையாதல்: (தழுவக். 79).

திக்காடை யாதி அணியோடு தீவினையேன்
அக்கோடு கண்ணே டுரிஎன் பணிந்தானே
இக்காய் மழுமுதலாம் வான்படையோ டென்றனையும்
தக்கோர் புகழ்கணையாக் கொண்டாய் சரண்போற்றி. 19

திசையாகிய உடை முதலிய அணிகளோடு தீவினையேன் பன்றிக் கொம்பையும், மீன்விழி எலும்பையும், ஆமை ஓட்டினையும், நரசிங்கத்தின் தோலையும், முழு எலும்பையும் அணியாகக்கொண்டோனே! வெகுண்டு அழிக்கின்ற மழு முதலாம் பெரும்படையோடு என்னையும், தக்கோர் யாவரும் புகழ்கின்ற அம்பாகக்கொண்டோனே! நின் திருவடிகளுக்கு வணக்கம்.

அழகு செய்தலும், அணிதலும் கருதி ஆடையை அணி என்றார். நலம் செய்து, செருக்கினமையால் தீவினையேன். மீன் கண்: 'மாய மீன்விழி பறித்தவன்' (வலம். 24). திகம்பரன்–நக்கன், இருபெயரும் நிருவாணன் என்னும் பொருள் தரும். பிட்சாடனர் கோலம் நோக்குக. எலும் பணிதல்: "கங்காளம் (முழு எலும்பு) ஆமா கேள் காலாந்தரத் திருவர், தங் காலம் காணத் தரித்தனன் காண்சாழலோ' (திருவா. சாழல்)

மெய்யடியார் சாத்தும் விரைமலர்போல் அன்பிலாப்
பொய்யடியேன் ஊன்விழியுங் கொண்டருளும் பொன்னடி
செய்யானே நந்தி கணத்தவர்போல் சேயேனும் [யாய்
எய்திஅருட் கூத்தின் இயமுழக்கும் பேறளித்தோய். 20

உண்மை அன்பர் சாத்துகின்ற வாசனை வீசுகின்ற மலரை ஒப்பப் பொய்யன்பினனது இழிந்த விழியையும் கொண்டருளும் பொன்போலுயர்ந்த திருவடியினனே. செம்பொருளே! நந்தி கணநாதர் போலன்றிப் பத்திக்கு நெடுந்தொலைவினனாகிய யானும் அணுகித் திருவருள் செய்கின்ற திருநடனத்திற்கு மத்தள முழக்கும் பேற்றினை அளித்தவனே.

திருமால் மத்தள முழக்கல்: மத்தள மாதவேச வரலாற்றினும் (தழுவக்குழைந்த படலம்). விழியிடந்தருச்சித்தல்: திருமாற் பேற்றுப் படலத்தினும் காண்க.

ஆலம் அளக்கர்எழும் அந்நாள் அடைக்கலமென்
றோலமிடும் எங்கட் குயிரளித்த சீராளா
காலமே காலங் கடந்த பெருங்கருணைக்
கோலமே ஆனந்தக் குன்றே அடிபோற்றி. 21

திருப்பாற்கடலில் விடமெழுந்த அந்நாளில் உன் திருவடிக்கு அடைக்கலம் என்று சரண்புகுந்து ஓலமென்று முறையிடும் எங்களுக் குயிரை நல்கிய கண்ணோட்ட முடைய கருணையாளனே! காலதத்துவமே! காலாதீத வடிவினனே! ஆனந்த மலையே அடிக்குப் போற்றி!

## இறைவன் காட்சி கொடுத்தருளுதல்

கலி விருத்தம்

என்னப் பலபன் னியிரந் தயரும்
பொன்னுக் கிறைமேல் அருள்பொங் கியெழ
மின்னற் சடையோன் விடைமீ துவரை
அன்னத் தொடுகாட் சிஅளித் தனனால். 22

என்றிவ்வாறாகப் பலகூறிக் குறையிரந்து தளரும் திருமகளுக்கு நாயகன்பால் அருள் மிக்கு எழுதலினாலே மின்னலை ஒத்து ஒளி விடும் சடையுடைய பிரான் இடபவூர்தியில் இமயமலை அரசன் மகளாகிய அன்னத்தொடும் அத் திருமாலுக்குத் தரிசனம் தந்தனன்.

எத்தனையும் காண அரியன் காண எளியனுயினன் ஆகலின் கருணை செய்தனன் என்பார் அளித்தனன் என்றனர்.

கண்டான் இருகண் களிகூ ரமகிழ்
கொண்டான் வறியோன் கொழுதெள் ளமுதம்
உண்டா னெனஓ டினன்ஆ டினனால்
வண்டா மரைமா துமணா ளனரோ. 23

வண்டுகள் பொருந்திய தாமரை மலரில் இருக்கின்ற இலக்குமி நாயகனாகிய திருமால் இருகண்களும் களிப்பு மீதூரக்கண்டனன்; மகிழ்ச்சி கொண்டனன்; தேவ போகத்திற்குரிய னல்லாத வறிய னொருவன் அமிழ்தம் உண்டவனைப் போல ஓடினன் ஆடினன்.

அன்புநிலை : 'கும்பிட்டுத் தட்டமிட்டுக் கூத்தாடித் திரியே' (சிவஞா.)

அதுகண் டுமைபால் அருள்நோக் குதவி
விதுவொன் றுபொலஞ் சடைவிண் ணவனேர்
முதிருங் குறுமூ ரல்முகத் தலர
மதுசூ தனகேட் டிவரந் தருகேம். 24

இளஞ் சந்திரனைப் பொன்மயமான சடையிற்சூடிய பெருமான் திருமாலின் பேரன்பின் செயலைக்கண்டு இடப் பாகத்து அம்மையைத் திருக்கண் சாத்தி அழகு கனியும் புன்சிரிப்பு முகத்தில் தவழ மதுசூதனனே! வேண்டிய வரத்தைக் கேள். அவற்றைத் தருவேம் யாம் என்றருளினர்.

படைப்புத் தொழில் திருமாலுக்கு முற்றுப் பெற அம்மையப்பர் அருள்வேண்டும் ஆகலின் 'உமைபால் அருள்நோக்குதவி' என அருளினர்.

நரர்வா னவர்தம் மினுநா ரணநீ
பெருவான் வலிபெற் றனைஎம் அருளால்
பொருபோ ரினுள்எம் மினும்வென் றிபுனை
வரம்எம் மிடைமுன் பெறுமா தவனே. 25

எமது அருள்வலிமையால் பகைவரொடு பொருகின்ற போரில் எம்மிடத்தும் வெற்றி கொள்ளும் ஆற்றலை எம்மிடத்து முன்பெற்றுள்ள திருமகள் நாயகனே! நாரணனாகிய நீ மானிடர் தேவர் யாவரினும் மிகப் பெருவலி பெற்றுள்ளாய்.

திருமால் தன்னையும் வெல்லும் வரத்தைப் பெருமான் தருதல் வாணேசப்படலம் 74-ஆம் செய்யுளிற் காண்க.

எனஅங் கருள்செய் தலும்இந் திரைகோன்
மனம்ஒன் றவணங் கிவணங் கியெழுந்
துன்தம் புயபா தயுகத் தடியேற்
கனகம் பெறுபத் தியளித் தருளாய். 26

என அவ்விடத் தருள்செய்த அளவிலே இலக்குமி நாயகன் மனம் பொருந்தப் பலகாலும் வணங்கி எழுந்து உனது தாமரை மலரனைய அடியிணைகளில் அடியேனுக்குத் தூய பேரன்பினை அளித்து அருள் செய்யாய்.

இந்திரை-இலக்குமி. யுகம்-இரண்டு. அனகம்-தூய்மை.

வரதா மறையோ னொடுமற் றுலகும்
வரதா தரல்வேட் டமனத் தினன்யான்
வரதா வரமீ துவழங் குதிநீ
வரதா எனவோ திவழுத் தினனால். 27

வரதனே, மேன்மை பொருந்திய பிரமனோடு உலகங்களையும் படைத்தலை விரும்பிய மனத்தையுடையேன் அடியேன். வரதனே! வரமாக இதனை வழங்குவாய் நீ. வரதா எனக் கூறித் துதித்தனன்.

நின்னா சைநிரம் பவரங் களெலாம்
இன்னே கொளநல் கினம்ஏ ரிழைமா
மன்னு பலகால் வரதா எனநீ
சொன்னாய் எமைஅன் புதுளும் புறவே. 28

அழகிய அணி பூண்ட இலக்குமி நாயகனே! நின் விருப்பம் முற்றுப்பெற வரங்கள் யாவும் இப்பொழுதே கொள்ளும் வகை அளித்தோம். வரதா எனப் பலமுறை எம்மை அன்பு ததும்ப அழைத்தனை. ஆகலின்

வாசத் துளவோய் இனிநீ வரத
ராசப் பெயராற் பொலிவாய் எமதாள்
பூசித் தனைபுண் டரிகங் களினால்
பேசிற் பதுமாக் கனெனப் பெறுவாய். 29

நறுமணங்கமழும் துழாய் மாலையோனே! இனி நீ வரதராசன் என்ற பெயரொடும் விளங்குக! தாமரை மலர்களைக் கொண்டெம்முடைய திருவடிகளைப் பூசித்தமையால் சொல்லுமிடத்துப் பதுமாக்கன் (பதுமாட்சன்) எனப் பெயர் பெறுவாயாக.

அறுசீரடி யாசிரிய விருத்தம்

என்றருள் புரிந்த வள்ளல் இணையடி வணங்கி மாயோன்
வென்றிவெள் விடையாய் இன்னும் விண்ணப்பம் ஒன்று கேட்டி
நின்திருப் பாதபூசை நித்தலும் அடியேன் ஆற்ற
நன்றும்இவ் வத்தி ஏவற் பணிநயந் தொழுகிற் றன்றே, 30

என்றருள் புரிந்த வள்ளலாரின் இரு திருவடிகளையும் திருமால் வணங்கி 'வெற்றிவாய்ந்த வெள்ளிய இடப ஊர்திப் பெருமானே! மேலும் ஓர் வேண்டுகோள் உளததனைக் கேட்பாயாக; உனது திருவடிப் பூசனையை நாள்தோறும் அடியேன் செய்து வரப் பெரிதும் இந்த யானை ஏவிய திருத்தொண்டினை விரும்பிமேற்கொண்டு நடந்தது.

என்னிடை அன்பு சாலப் பூண்டதால் இதன்பேர் தன்னால்
உன்னெதிர் அடியேன் வாழும் உயர்வரைக் குடுமி ஓங்கல்
மன்னுசீர் உலகின் அத்தி கிரியென வழங்கல் வேண்டும்
கன்னலஞ் சிலைவேள் ஆகம் கனல்விழிக் குதவ வல்லோய். 31

கரும்பு வில்லைத் தாங்கிய மன்மதனை நுதற்கண்ணிற்கு நீறெழ உதவிய வல்லமை உடையோய்! உமது திருமுன் அடியேன் வாழும் உயர்ந்த மூங்கில்களைக் கொண்ட சிகரமமைந்த மலை, என்னிடத்துப் பேரன்பு பூண்ட இவ் யானையின் பெயரால் நிலைபெற்ற சிறப்பினையுடைய உலகில் 'அத்திகிரி' என வழங்குதல் வேண்டும்.

புண்ணிய தீர்த்தப் பொய்கை புனல்படிந் திங்கு ளார்செய்
புண்ணியம் ஒன்று கோடி மடங்குறப் புரிந்து மற்றிப்
புண்ணிய கோடி வைப்பின் உயிர்க்கெலாங் கருணை பூத்துப்
புண்ணிய கோடி நாத இலிங்கத்திற் பொலிக நாளும். 32

புண்ணிய தீர்த்தத்தில் படிந்து இங்குத் தங்குவோர் செய்கின்ற புண்ணியம் ஒன்று கோடிமடங் காகப்பெருக அருள் புரிந்து இப்புண்ணிய கோடி என்னும் தலத்தில் உயிர்களுக்கெல்லாம்திருவருள் பாலித்துப் புண்ணியகோடி நாத இச்சிவலிங்கத்தில் என்றும் விளங்குக.

அடியனேன் தண்டா தென்றும் நின்னெதிர் அமர்ந்து போற்றக்
கடிகெழு கற்பத் தண்தார்க் கடவுளர் முனிவர் யார்க்கும்
முடிவறு வரங்கள் நல்கி முழுதருள் சுரந்து வாழி
கடியவெஞ் சீற்றத் துப்பிற் கூற்றுயிர் பருகுந் தாளோய். 33

வழிபடுவோர்க்கு யமபயம் போக்கி அருள்வோனே ! அடியனேன் என்றும் நீங்காமல் நின் எதிர் விரும்பியிருந்து துதிப்பவும், வாசனை பொருந்திய கற்பக நறுமலர் மாலைகள் அணிந்த தேவர்க்கும் முனிவர்க்கும் யாவர்க்கும் முடிவில்லாத வரங்களை அருளி அருள் பாலித்து வாழி.

அண்ணலே என்று வேண்ட அவற்கவை அருளி எங்கோன்
புண்ணிய கோடி நாத இலிங்கத்துட் புக்கான் அந்நாள்
கண்ணுதற் பரனை மாயன் காருருக் கொண்டு தாங்கும்
வண்மையாற் கற்பம் மேக வாகனப் பெயர்பூண் டன்றே. 34

தலைவனே, என்று இரந்து நிற்பத் திருமாலுக்கு அவ்வரங்களைத் தந்து எம் தலைவன் புண்ணியகோடீச லிங்கத்துட் புக்கொன்றாயினன். அக்காலத்தில் நெற்றிக் கண்ணுடைய பிரானைத் திருமால் மேக வடிவு கொண்டு தாங்குதலால் அக்கற்பம் 'மேக வாகன கற்பம்' எனப்பெறும்.

புண்ணிய கோடீசப் படலம் முற்றுப் பெற்றது.

ஆகத் திருவிருத்தம் 535

# வலம்புரி விநாயகப் படலம்

*கலி விருத்தம்*

நலம்புரி புண்ணிய கோடி நாதர்தம்
புலம்புரி பெருமையைப் புகன்று ளேம்இனி
நிலம்புரி தவத்தினீர் அத்தி நீள்வரை
வலம்புரி விநாயகன் மாட்சி செப்புவாம். 1

நிலத்தவர் செய்த தவப்பயனுக விளங்குவீர், நலத்தைத் தருகின்ற புண்ணிய கோடீசர் தமது மெய்யுணர்வைத் தருகின்ற பெருமையைக் கூறினேம். இனி அத்திகிரியில் வலமபுரி விநாயகருடைய மாட்சியைக் கூறுவாம்.

முன்னைநாள் அயன்அரி முனிவர் வானவர்
கின்னரர் ஓரிடைக் குழுமித் தங்களுள்
பன்னுத லுற்றனர் படிறர் செய்வினை
அந்நிலை ஊறின்றி அழுகின் முற்றுமால். 2

முன்னோர் காலத்தில் திருமால், பிரமன், முனிவர், விண்ணோர் முதலானோர் யாவரும் ஒரிடத்துக் குழுமித் தங்களுள்பேசத் தொடங்கினர், 'வஞ்சகராகிய அசுரர் செய்கின்ற சூழ்ச்சிகள் அப்பொழுதே இடையூறின்றிச் செவ்விதின் முற்றுப்பெறுமாகலின்,

அங்கவர் தமக்கிடை யூற்றை ஆக்கவும்
நங்களுக் கூறுதீர்த் தினிது நல்கவும்
இங்கொரு கடவுளைப் பெறுதற் கெம்பிரான்
பங்கயத் திருவடி பழிச்சி வேண்டுவாம். 3

அந்நிலையே அவர்தம் வஞ்சகச் செயல்களுக்குத் தடையுண்டாக்கவும், நஞ்செயல்களுக்குத் தோன்றும் தடைகளை நீக்கி இனிது முற்றுப் பெறுவிக்கவும் இந்நிலையில் ; ஓர் கடவுளை எய்துதற்கு எமது பெருமானுடைய தாமரை மலரனைய திருவடிகளைத் துதித்து வேண்டுதலைச் செய்வோம்.

## இமையவர் இறைவனை வேண்டல்

என்றுளந் துணிந்தனர் எய்தி மந்தரக்
குன்றமீ தெம்பிரான் கோயி லுள்ளுறுச்
சென்றனர் தொழுதனர் செவ்வி நோக்கிமுன்
நின்றனர் மறைகளால் துதிநி கழ்த்தினர். 4

என்றுள்ளத்து முடிவு செய்தனர். மந்தர மலையை அடைந்து, திருக்கோயிலினுட்புக்குஎம்முடைய பெருமான் திருமுன்புசென்று நின்று தொழுது தங்குறை இரத்தற்குரிய காலத்தை நோக்கி முன் நின்று வேத தோத்திரங்களைச் செய்தனர்.

அறுசீரடி யாசிரிய விருத்தம்

சற்றிது திருவுளஞ் செய்துகேட் டருளுதி தலைவ னேவெங்
குற்றமே துறுமனத் தானவக் கொடியவர் தொடங்கு செய்கை
முற்றுறா தூறுபட் டழியவும் எம்மனோர் முயன்ற செய்கை
இற்றுறா தூறுதீர்ந் தாகவுங் கருணைசெய் எனஇ ரந்தார். 5

தலைவனே, இதனைச் சிறிது திருவுள்ளம் வைத்துக் கேட்டருள் செய்வாயாக. கொடுங் குற்றங்களையே செறித்த மனத்தினையுடைய தானவராகிய கொடியோர் தொடங்குகின்ற செயல் முற்றுப்பெறாது இடையூறுற்று அழியவும், யாங்கள் முயன்ற செயல் அழியாது தடை தவிர்ந்து முடிவு பெறவும் திருவருளைச் செய் யென வேண்டினர்.

'தம்மை யடைந்தார் வினைதீர்ப்ப தன்றோ, தலையாயவர்தம் கட னுவது' ஆதலின், தலைவ என்றனர்.

## விநாயகர் திருவவதாரம்

அம்மொழி செவிமடுத் தருள்புரிந் தகிலமும் உய்யு மாற்றால்
இம்முறை புரிதுமென் றவர்க்கெலாம் விடைஅளித் தெழுந்து போந்து
கொம்மைவெள் விடையினான் சித்திரச் சாலையைக் குறுகி அங்கண்
செம்மைசால் சித்திரம் யாவையும் நோக்கினான் தேவி யோடும். 6

அவர் வேண்டுகோளைத் திருச்செவியில் ஏற்றுப் பொது வருள் புரிந்து உலகங்களெல்லாம் நலம் பெறும் பொருட்டால் இவ்வழியைச் செய்வோம் என்றவர்க் கெல்லாம் விடை கொடுத்து அங்கிருந்தெழுந்து போய்த் தேவியொடும் வெள்ளை மழ விடையினான் சித்திரங்கள் அனைத்தையும் நோக்கிக் கொண்டிருந்தனன்.

வானகத் தச்சனால் அகிலமுஞ் சித்திரித் தெழுதி வாய்ந்த
ஊனமில் சாலையுள் எழுதுமா மனுக்களோ டுபம னுக்கள்
ஆனஎல் லாம்உமைக் கெம்பிரான் காட்டுபோ தவற்றுள் ஆதித்
தானமார் இருவகைப் பிரணவ மனுக்களைத் தையல் கண்டாள். 7

தேவ தச்சனாகிய மயனால் முழுதுஞ் சித்திரித்து எழுதப் பெற்றுப் பொருந்திய குற்றமில்லாத சாலையுள் எழுதப் பெற்றுள்ள பெரு மந்திரங்களோடு உடன்கூறப் பெறும் உபமந்திரங்கள் ஆகிய எவற்றையும் எம்பெருமான் உமாதேவியார்க்குக் காட்டுங்காலை அவற்றிடை முதலிடங் கொள்ளும் இருவகைப் பிரணவ மந்திரங்களை அம்மையார் நோக்கினர்.

உவகையாற் பற்பல்கால்நோக்கிஇங்கிவைஎவைஉரைத்திஎன்னச்
சிவபிரான் தேவியைத் தழீஇயினன் கூறுவான் செல்வி கேட்டி
தவவில்இப் பிரணவம் நமதுகாண் மூவரைத் தந்த தாகும்
நவிலின்மற் றதுநின தாகும்முச் சத்தியை நல்கு மூலம். 8

மகிழ்ச்சியொடும் பன்முறை ஊன்றிப்பார்த்து இவற்றின் இயல்புகள் யாவை அவற்றைக் கூறுதி என்னச் சிவபிரானுர் உமர்தேவியைத் தழீஇக் கொண்டு கூறுவார்: செல்வீ! மனம் ஒன்றிக்கேள், கேடில்லாத இப்பிரணவ மந்திரம் நமக்குரியது. அது மூவரைத் தோற்றுவித்ததாகும். சொல்லுங்கால், அது நினக்குரியதாகும். அவ்வுப மனு முச்சத்தியைத் தோற்றுவிக்கும் முதற்பொருள் ஆகும்.

மூவர்: பிரமன், மால், உருத்திரர். முச்சத்திகள்: வாணி, திரு, உமை.

மும்மறை முதல்எலாம் ஈன்றிடும் இருமுது குரவ ரான
இம்மனுக் கரியொடும் பிடியெனத் தோன்றலின் இவைக ளாகி
அம்மநாம் புணர்தும்என் றவ்வுருக் கொண்டனர் ஆடு காலைச் [றே.
சும்மைநீர் உலகெலாம் உய்யவந் துதித்தனன் தோன்றல் அன்

மூன்று வேதங்கள் முதலான எவற்றையும் தோற்றுவிக்கும் தந்தை தாயரான இம்மந்திரங்கள் ஆண் யானையின் வடிவும் பெண்யானையின் வடிவுமாகக் காட்சிப் படுதலின் இவற்றின் வடிவு கொண்டு, நாம் கூடுவேம் என்றருளி அவ்வடிவு கொண்டு பொருந்துங் காலை ஒலிக்கின்ற நீர் சூழ்ந்த உலகெலாம் உய்யுமாறு தோன்றல் அப்பொழுதே வந்து தோன்றினன்.

கய்முகப் பிள்ளையை இருவருங் காதலான் எடுத்த ணைத்து
வயமுற மடித்தலத் திருத்திமெய்க் கலன்பல அணிந்து வாழ்த்த
இயல்புடைப் புதல்வனும் உவகையான் எழுந்தெதிர் நடித்தல் செய்தான்
நயனம்மாக் களிகொள நோக்கினுள் உலகெலாம் ஈன்ற நங்கை. 10

யானைமுகமுடைய அப்பிள்ளையைப் பிரானும், பிராட்டியும் விருப்பொடும் கையில் எடுத்து மார்போடணைத்து மடியில் இருத்தித் திருமேனியில் பல அணிகளையும் சாத்தி வெற்றியுண்டாகென வாழ்த்த இயல்பின் வரும் மூத்த பிள்ளையாரும் மகிழ்ச்சியொடும் எழுந்து திருமுன்பில் திருக்கூத்தியற்றினுர். எல்லா உலகங்களையும் ஈன்று அவற்றின் ஆடல் காணும் அம்மையார் தம் கண்கள் பெருங் களி கொள்ள நோக்கியிருந்தனர்.

எல்லா நலங்களும் இயல்பின் வந்த புதல்வன் என்பார் இயல்புடைப் புதல்வன் என்றனர்.

அங்கையான் ஒத்திநின் ருடல்கண் டகங்களி துளும்பி ஐயன்
பங்கயப் பதந்தொழு திறைவநீ பயந்தசேய் இவனை யின்னே
எங்குள கணங்களும் பல்கண நாதரும் எவரும் ஏத்தத்
துங்கமாம் இறைமைஈந் தருளென வேண்டலுஞ் சூல பாணி. 11

சப்பாணி கொட்டி நின்றுடலைக் கண்டு உள்ளத்துள் மகிழ்ச்சி ததும்பி, முதல்வனுடைய மலரனைய திருவடிகளைத் தொழுது 'இறைவனே நீ பயந்த இம்மகனை இப்பொழுதே பதினெண் கணங்களும்,

சிவகணத்தலைவர் பலரும், யாவரும் துதிக்க உயர்ச்சி வாய்ந்த தலைமை தந்தருளாய்' என்று வேண்டும் அளவிலே சிவபெருமான்,

அக்ங்கை-உள்ளங்கை. தாள் அறுதியில்நின்று என்க. பாணி-கை.

கடவுளர் முனிவரர் அயனரி பலகண நாத ரெல்லாம்
உடன்வரத் திருவுளஞ் செய்தழைத் தோதுவான் மடித்த லத்தின்
மிடலுடைச் சிறுவனை இருத்திமற் றிங்கிவன் வெற்பின் வந்த
மடமயிற் கினியவன் யாம்பெறு மூத்தமா மைந்தன் ஓர்மின். 12

திருமாலும், பிரமனும், பலகண நாதரும், முனிவரரும், தேவரும், பிறரும் உடனே வரவேண்டு மென்று திருவுள்ளத் தெண்ணிய அளவிலே வந்து கூட அவர்களை நோக்கி, வன்மை அமைந்த விநாயகப் பிரானை மடியில் இருத்தி ஓதுவார் மலையரையன் மகளுக்கினியவன் இவன் யாம் பெற்ற மூத்த மைந்தன் ஆவன்; இதனை ஓர்மின்,

இவனைஇவ் வுலகெலாந் தொழுதெழும் இறைமையின் இருத்துகின்றேம், குவிமுடி சூட்டுவான் வேண்டுப கரணநீர் கொணர்மின் என்றே, அவர்அவை கொணர்ந்தபின் மைந்தனை மடங்கல்ஆதனத்தின் ஏற்றிச், சிவபிரான் திருவபி டேகநீ ராட்டினன் மகுடஞ் சேர்த்தான். 13

இவனை இவ்வுலகங்கள் யாவும் தொழுது வழிபடும் தலைமைத் தானத்தில் இருத்துகின்றேம். கவிக்கின்ற முடிசூட்டு விழாவிற்கு வேண்டும் பொருள்கள் நீவிர் கொண்டு வம்மின் என்றருள, அவர்கள் அவற்றைக் கொணர்ந்த பின்னே சிவபெருமானார் மகனாரைச் சிங்காசனத்தில் ஏறச் செய்திருத்தித் திருமுழுக்காட்டித் திருமுடி சூட்டினார்.

அரசினுக் குரியநல் லணிகளான் அலங்கரித் தன்பு கூரப்
பிரமனை மாயனைத் தேவரை முனிவரைப் பெட்பின் நோக்கி
உரனுடை உமக்கெலாம் நாயகன் இவன்இடை யூற்றி னுக்கும்
கரவிலா நாயக னாகநாம் வைத்தனம் கண்டு கொண்மின். 14

அரசுஏற்றற்குரிய நல்லாடை அணிகள் பிறவற்றால் அலங்கரித்து அன்பு பெருகப் பிரமனையும், திருமாலையும், தேவரையும், முனிவரையும் விருப்பொடும் நோக்கி "இவன் வலிமையுடைய உங்கட்கெல்லாம் நாயகன் ஆவன். விக்கினங்களுக்கும் வெளிப்பட நாயகனாக நாம்வைத்தனம் கண்டு கொண்மின்!"

தீயவத் தானவர்க் கூறிழைப் பான்இவன் என்று செப்பும்
தூயவன் வாய்மொழி தலைமிசைக் கொண்டனர் துதித்தி றைஞ்சி
மாயவன் முதலியோர் கணேசனை வணங்கினர் கையு றைகள்
ஏயுமா றுதவினர் விடைகொடு தத்தம திருக்கை சேர்ந்தார். 15

"இவன், கொடிய அசுரர்கள் செயலுக்கு இடையூறு செய்வான்' என்று கூறும் புனிதன் திருவாய்மொழியைத் தலைமேற் கொண்டனர்; தொழுது தோத்திரங்கள் சொல்லித் திருமால் முதலானோர் கணேசனை யும் வணங்கினர். தத்தம் தகுதிக்கேற்பக் காணிக்கை வழங்கினர். விடை பெற்றுக்கொண்டு தத்தமக்குரிய பதங்களை அடைந்தனர்.

## விநாயகர் திருவிளையாடல்

கலி விருத்தம்

பொருவருந் தடநெடும் புழைக்கை ஏந்தலும்
இருமுது குரவர்தாள் இறைஞ்சி மேவுநாள்
ஒருவருங் கணங்களோ டுலவி எங்கணும்
திருவிளை யாடலிற் சிந்தை வைத்தனன். 19

ஒருவரும் நிகரில்லாத பெரிய நீண்ட தும்பிக்கையுடைய தோன்றலும், இருமுது குரவராகிய தந்தை தாயர்தம் திருவடிகளிற் பணிந் தெழுந்து ஒழுகும் நாட்களுள் ஓர் நாள் விட்டுப்பிரியாத கணங்களோடும் எவ்விடத்தும் உலவித் திருவிளையாடலிற் சிந்தையைச் செலுத்தினர்.

ஒளித்துநின் றுடன்பயில் உழைச்சி றார்மிசைத்
தெளித்தெழு புழைக்கைநீர்த் திவலை தூஉய்இது
துளித்தது முகிலெனச் சொல்லி உள்ளகங்
களிப்பவான் கருமையைக் காட்டி வஞ்சித்தும். 17

மறைந்து நின்று உடன் பயிலும் நீங்காச் சிறுவர் மேல் தெளித்து எழுகின்ற உட்டுளையுடைய துதிக்கையில் உள்ள நீர்த்துளிகளைத் தூவி இதனை முகில் துளித்தது எனச் சொல்லி உள்ளுக்குள் மகிழ்ந்து கரிய மேகங்களைக் காட்டி ஏமாற்றியும்,

புழைக்கையின் மோந்துயிர்ப் பெறிந்து பூமியைக்
குழித்துமுன் அணிந்தன பழமை கூர்ந்தஎன்
றொழித்தகல் பாதலத் துரகம் யாவையும்
இழுத்தெடுத் தணியெனப் புயத்தின் ஏற்றியும். 18

துதிக்கையால் தரையை மோந்து நெட்டுயிர்ப்பு விட்டுப் பூமியைக் குழிபடச் செய்து முன்னம் அணிந்துள்ள பாம்புகள் பழமை மிகுந்தன என்றகற்றி அகன்ற பாதலத்தில் (நாகலோகத்தில்) உள்ள பாம்புகள் எவற்றையும் இழுத்தெடுத்து அணிகலனெனப் புயத்தின் ஏற்றியும்,

ஒன்பது கோள்களும் உடுக்க ணங்களும்
துன்பறப் பிணித்தசை துருவ சூத்திரம்
வன்பனைக் கரத்தினுற் பறித்து மார்பிடை
அன்பமர் நவமணி ஆரமாக்கியும். 19

ஒன்பது கிரகங்களையும், இருபத்தேழு நட்சத்திரங்களையும் துன்பம் உருதபடி கட்டி அசைக்கின்ற துருவ நட்சத்திரத்தி னின்றும் கயிற்றை வலிய பனைமரம் போன்ற துதிக்கையாற் பறித்து விருப்பம் மருவிய நவமணி மாலையாக அணிந்தும்,

துருவன் செய்கை: 'துருவனார் பிணித்துச் சுற்றுஞ் சூத்திரந்தட் பக் கொட்கும், உருவவான் கோளும் நாளும்' (கச்சி. காஞ். நக. 267.)

என்னைநீர் கண்டெழா திருப்ப தென்னெனப்
பன்னகம் எவற்றையுங் கனன்று பற்றிவான்
மன்னிட வீசிஅங் குடைந்த வான்நதி
தன்னுடைத் தந்தைபோற் சடிலத் தேந்தியும். 20

என்னை நீர் கண்டு எழுந்து நில்லாமை என்ன காரணம் என்னப் பல மலைகளையும் வெகுண்டு பற்றி வானில் போம்படி வீசி அதனால் உடைபட்ட ஆகாய கங்கையைத் தன்னுடைய தந்தையாகிய சிவபிரானைப்போலச் சடையில் தாங்கியும்,

கலிநிலைத் துறை

இவ்வ கைப்பல சிறுகுறும் பெங்கணும் இயற்றிக்
கௌவை நீர்விளை யாட்டினிற் காதலன் ஒருநாள்
பௌவம் யாவையும் உழக்கினன் பாற்கடல் புகுந்தான்
கொவ்வை வாய்உமை பயந்தருள் குஞ்சரக் குரிசில். 21

இவ்வாறு பல சிறிய திருவிளையாடல்களை யாண்டும் புரிந்து ஒலியுடைய நீர் விளையாட்டினில் விருப்பினனாகி ஓர்நாள் கடல்கள் அனைத்தையும் கலக்கினன்; கொவ்வைக் கனிபோலும் அதரங்கள் அமைந்த உமையம்மையார் தந்த யானைமுக முடைய பெருமையிற் சிறந்த பெருமான் திருப்பாற் கடலிற் புகுந்தனன்.

புகுந்து வெள்ளநீர் முழுவதும் புழைக்கையின் மடுத்தான்
மிகுந்த பன்மணி நீருறை உயிர்கள்வெம் பணிக்கோன்
முகுந்தன் உந்தியன் றிருந்தநான் முகப்பிரான் முகுந்தன்
சகுந்த மன்னவன் திருவும்அப் புழைக்கையுள் சார்ந்தார். 22

புகுந்து பாற்கடலில் முற்றும் துதிக்கையில் முகந்து கொண்டனன்; பல்வகையான மணிகளின் தொகையும், நீரில் உறைகின்ற உயிர் வருக்கங்களும், பாப்பரசாகிய ஆதிசேடனும், திருமாலின் கொப்பூழில் விளங்குகின்ற நான்முகனும், திருமாலும், பறவை அரசனாகிய கருடனும், திருமகளும் அத்துதிக்கையுள் சார்ந்தனர்.

வறுங்க டற்பரப் பகட்டினில் எஞ்சுகூர் மங்கள்
உறுங்க ரும்பெருஞ் சேற்றிடை ஒளிப்பன முன்னாள்
நறுந்து ழாய்அணி ஆமையை நலிவுறப் பற்றிக்
குறும்ப டக்கிய பிரான்வரு திறங்குறித் தனபோல். 23

நீர் வறந்த கடற் பரப்பினது நடுவில் புழைக்கையுள் புகுந்தவை போகப், புகாது நின்ற ஆமைகள் மிகக்கரிய பெருஞ்சேற்றில் ஒளிப்பன முற்காலத்தில் நறிய துழாய் அணியும் திருமாலாகிய ஆமையைப் பற்றிக் கொடுமையை அடக்கிய பிரான் வருதிறங் கருதின போல.

துழாய் அணி ஆமை என்பது பாணந்தான் மண்தின்ற பாணமே என்னும் சொற்றொடர் போன் றின்புறுத்தும், பிரானிடத்து வருதிறங் குறித்தது போல என்னும் பொருள் தருதலும் காண்க. கச்சபேசப்படலத்துள் காண்க. ஆடு பகை எனின் குட்டி உறவோ எனக் கொள்க.

மாய மீன்விழி பறித்தவன் முன்வரும் இளவல்
மேய வாறுகண் டனவெனத் துடிப்பன சிலமீன்
பாய பூம்புனல் அரசன்நம் பனுக்கிடுந் திறைபோல்
சேய பன்மணி வயின்தொறும் இமைப்பன சிலவே. 24

திருமாலாகிய அவதார மீன் கண்ணைப் பறித்த சாத்தனார்க்கு முன்னே தோன்றிய பிள்ளை வந்தவாறு கண்டு துடிப்பன போலத் துள்ளுவன சில மீன்கள்; பரவிய பூக்களையுடைய நீ ரரசனாகிய வருணன் விரும்பத்தக்கவனாகிய விநாயகப் பெருமானுக்கு இறுக்குங் கப்பம்போலச் செந்நிறம் வாய்ந்த பலமணிகள் சில இடந்தொறும் ஒளிவிடுவன.

ஐயன் வார்செவிக் காற்றினில் அலைகள்மிக் கெறிந்து
வெய்ய பேரொலி காட்டுவ பிறவியன் கடல்கள்
மைய கன்றதம் கிளைவறங் கூர்ந்தமை காணூஉக்
கையெ றிந்தழு திரங்கிவீழ்ந் தரற்றுவ கடுக்கும். 25

தலைவனாகிய விநாயகப் பெருமான் நீண்ட காதுகளை அசைத்தலின் எழுகின்ற காற்றினால் ஏனைய அகன்ற கடல்கள் அலைகள் வேகமாக வீசிப் பேரொலி மிகச் செய்தல், குற்றமற்ற தம் சுற்றமாகிய பாற்கடல் வறுமை மிக்கமைகண்டு கையால் வயிற்றிலடித்துக்கொண்டு அழுதிரங்கி வீழ்ந்து அழுதலை ஒக்கும்.

இன்ன வாறுபாற் கடல்வறந் தழிவுற இருங்கை
தன்னில் ஏற்றநீர் மீளவுந் தரைமிசை விடுத்தான்
அன்ன நீருடன் வீழ்ந்தனர் அயன்அரி முதலோர்
துன்னு நீர்படு துரும்பெனத் திசைதொறுஞ் சிதறி. 26

இங்ஙனம் பாற்கடல் வற்றி அழிவெய்தத் துதிக்கையில் ஏற்ற நீரை மறுபடியுந் தரைமேல் விடுத்தான். அப்பிரமனும், திருமாலும், ஏனையோரும் நீரிற்பட்ட துரும்பு போலத் திசைதொறுஞ் சிதறிய நீருடனே வீழ்ந்தனர்.

பின்னர்ஓரிடைத் திரண்டுடன் குழீஇயினர் பெரிதும்
இன்ன லுற்றமை தத்தமுட் பேசினர் எளியோம்
முன்னை நல்வினைப் பயத்தினால் இன்றுமூ துலகம்
தன்னில் வந்தவா மறுபிறப் பெனமதித் தனரால். 27

பின்பு யாவரும் ஓரிடத்துத் திரண்டு தம்முள் நெருங்கி மிகவுந் துனப முற்றமையைத் தங்களுட் கலந்து பேசும் அரிஅயன் முதலோர் புன் மையே மாகிய நாம் முன்பு .செய்த நல்வினையின் பயனுல் இன்று பழைய வுலகில் வந்தவகை புதிதெனற் குரிய மறு பிறப்பே என எண்ணினர்.

## திருமால் சங்கிழந்தமை அறிதல்

மருட்சி தீர்ந்தபின் மாயவன் இடக்கையின் வழுவும்
உருட்சி கூர்ந்தவெண் சங்கினைக் காண்கிலன் உயங்கி
வெருட்சி கொண்டனன். தேடினன் வியன்திசைப் புறத்துத்
தெருட்சி கொண்டது ஒலிப்பது கேட்டனன் செவியில். 28

திருமால், மயக்கம் நீங்கித் தெளிவு தோன்றிய அளவில் இடக் கையினின்றும் வழுவிய திரண்ட வெள்ளிய பாஞ்ச சன்னியத்தைக் கண் டிலனுய், வருந்தினன்; அஞ்சித் தேடினன்; பரந்த திசைப்புறத்தில் அச் சங்கு தெளிந்து ஒலித்தலைத் தனது செவியிற் கேட்டனன்.

ஓசை யால்அது பாஞ்சசன் னியமென உணர்ந்தவ்
வாசை யிற்சிலர் தமைச்செல விடுத்தனன் அவர்போய்
மாசில் ஐங்கரப் பிரான்கணம் வாயிடைக் கொண்ட
வேச றுஞ்சுரி முகத்தினைக் கண்டுமீண் டுரைத்தார். 29

முழக்கினுல் அது பாஞ்ச சன்னியத்தின் முழக்கமென உணர்ந்து அவ்வோசை வருந்திசையில் சிலரைச் செல்லச் செலுத்தினுன்; அவர் ஓசை வழியே போய்க் குற்றமற்ற ஐங்கரப்பெருமானுடைய கணத் தவருள் ஒருவர் வாயிடைக்கொண்ட தளர்வற ஒலிக்கும் அச்சங்கினைக் கண்டு மீண்டு வந்து கூறினர்.

## திருமால் திருக்கைலை யடைதல்

சொன்ன வாசகம் கேட்டுளந் துளங்கிமற் றினிநான்
என்னை செய்வல்என் றுசாவினன் கணங்களோ டெழுந்து
பன்ன கப்பகை அரசுமேல் கொண்டனன் படர்ந்தான்
கன்னி பாகன்வீற் றிருந்தருள் வெள்ளியங் கயிலை. 30

கணத்தவர் கூறிய உரை கேட்டு மனங்கலங்கி, இனி நான் எவ் வழி அதனைப் பெறுவேன் என்று ஆராய்ந்தான்; குழாத்தொடும் எழுந்து உமையம்மையை யிடங்கொண்ட பெருமான் வீற்றிருக்கும் திருக்கயிலைக் குப் பாம்பிற்குப் பகையாகிய கருடன் மேற்கொண்டு சென்றனன்.

அங்கு நந்திதன் அருளினுல் தடைகடந் தணுகி
எங்கள் நாயகன் திருமுன்பு வீழ்ந்துதாழ்ந் தெழுந்து
பங்க யக்கரம் குவித்துநின் றிமவரை பயந்த
நங்கை யோடுறை செவ்விகண் டின்னது நவில்வான். 31

முதல் வாயிலில் நந்தி தேவர் தம் அருளைப் பெற்றுத் தடை நீங்கி உள் நெருங்கி 'எங்கள் நாயகன்' திருமுன்னர் தாழ்ந்து வீழ்ந் தெழுந்து தாமரை மலரனைய கரங்களைக் குவித்து நின்று உமையொடும் பெருமான் எழுந்தருளியுள்ள காலம் நோக்கி இதனை வேண்டுவான்.

அண்ண லேஉன தாணையின் அடியனேன் கடலுள்
கண்வ ளர்ந்தனன் ஆயிடை ஆடல்செய் கணேசப்
பண்ண வன்கடற் புனலொடும் என்னையும் பனைக்கை
யுண்ம டுத்தனன் விடுத்தனன் மீளவும் உலகில். 32

தலைவனே, உன்னுடைய ஏவலுட்பட்டுத் திருப்பாற் கடலுள் அறிதுயில் கொள்ளுங்காலை, அவ்விடத்துத் திருவிளையாடலைப் புரியும் கணேசப் புத்தேள் கடல் நீரொடும் என்னையும் பனையை ஒத்த துதிக்கையில் முகந்து கொண்டனன்; மீளவும் உலகில் விடுத்தனன்.

காவல் நிமித்தமாகக் கொள்வன யாவும் சிவபெருமான் கட்டளை ஆதலின், 'உனது ஆணையிற் கண் வளர்ந்தனன் என்றனர். தொழிலாற் றளர்ந்த கண் ஒளிவளர்தல் உறக்கத்தான் ஆகலின், அதனைக் 'கண் வளர்தல்' என்பது வழக்கு.

மறுகு சூழ்மணி மன்றுளாய் நின்னருள் வலியான்
மறுபி றப்பென உய்ந்துநின் பால்வரப் பெற்றேன்
மறுகும் அப்பொழு தென்கையில் வழீஇன சங்கை
மறுவில் ஐங்கரப் பிரான்கணத் தொன்றுவெள வியதால்.

அன்பர் உள்ளம் சுழன்று சுழன்று வருதற்கிடனாகிய அழகிய அம்பலவனே! நின் திருவருள் வலியால் (புனர்ஜன்மம்) மறுபிறப்பென மதிக்கத்தக்க வகையில் பிழைத்து நின்னிடத்து வரப்பெற்றேன்; மனம் சுழலும் அப்பொழுது என்கையினின்றும் நழுவிய வலம்புரிச் சங்கைக் குற்றமில்லாத விநாயகப் பெருமான் கணத்துள் ஒன்று கவர்ந்து கொண்டது.

தானோர் வழக்கைக் கொண்டு போதலின் 'மன்றுளாய்' என்றனர். தன்னையும், ஏனை உயிர்களையும் காத்தல் இறைவன் செயலாகலின் 'நின அருள் வலியால் ......உய்ந்து' என்றும், திருவிளையாடல் ஓர் நலம் குறித்தே நிற்குமாகலின் 'மறுஇல்' என்றும் கூறினர்.

ஐய னேஅது அடியனேன் கரத்தெய்த அருளிச்
செய்ய வேண்டும்என் றிரந்திரந் திறைஞ்சலுஞ் சிறுமான்
கையன் எம்பிரான் கவுரிபாற் கட்கடை செலுத்தி
வையம் உண்டவ கேளென வாய்மலர்ந் தருள்வான். 34

தலைவனே, சங்கம் அடியனேன் கரத்தில் வந்து தங்க அருள் செய்தல் வேண்டும் என்று பலகால் தாழ்ந்து கூறி வணங்குதலும் மானேந்திய பிரானார் கவுரிபால் கடைக்கண் பார்வையைப் போக்கி உலகினையுண்ட திருமாலே கேளென்று திருவாய் மலர்ந்தருள் செய்வார்.

திருமால் தம் காவல் கடந்த வலம்புரி, பெருமான் காப்பில் இருத்தலின், இங்ஙனம் வேண்டினர். உன் மகன் குறும்பினைப்பாராய் எனக் கவுரிபாற் கட்கடை செலுத்தினர். பிரகிருதி மாயாபுவனந்தம் வியாபித்துள்ளவர் ஆகலின், 'வையம் உண்டவ' என்றனர்; உனக்குரைப்பது உலகுக் குரைப்பது ஆம் எனவும் ஆகும்.

வலம்பு ரிந்தபே ராண்மையோய் யாம்இது வல்லேம்
வலம்பு ரிச்சங்கு நீபெறக் காஞ்சியில் வைகி
வலம்பு ரிக்கண பதியைநின் அத்திமால் வரைமேல்
வலம்பு ரிந்துதா பித்தருச் சனைபுரி மரபால். 35

வெற்றியைச் செய்த பெருவீரனே! யாம் இதனைச் செய்யும் வன்மையுடையேம் அல்லம். பாஞ்சசன்னியத்தை நீ பெறற் பொருட்டுக் காஞ்சியில் தங்கி வலம்புரிச் சங்கினைத் தருதற்குரிய கணபதியை நின்னுடைய அத்திகிரியில் எழுந்தருளுவித்துவலம்வந்து முறைப்படி அருச்சனைசெய்

வலம்புரிந்த பேராண்மையோய் முன்பின் தொடர்புகளை நோக்குங்கால் குறிப்பின் இகழ்ந்தது போலும். மேலும், வல்லேம் என்பது அதனை வலியுறுத்துகிறது. விநாயகரை வழிபாடு செய்து பெறலாயிருக்க அது செய்யாமையையும் நோக்குக. வல்லேம்: 'வல்லார் திறை கொடுப்பர், வல்லார் திறை கொள்வர்'' இலக்கணக் கொத்தின் ஆசிரியர் காட்டுதலின் இரண்டிற்கும் வரும் (உடன்பாடு, எதிர்மறை).

## திருமால் விநாயகரை வழிபடல்

அன்ன வன்திரு வருளினாற் பெறுகெனும் அருளைச்
சென்னி மேல்கொண்டு விடைகொண்டு மீண்டுகாஞ்சி யினில்
கொன்னும் மேற்றிசை வாயிலார் குகையுடை அத்திக்
கன்ன கந்தனில் வலம்புரிக் கணேசனை இருத்தி. 36

அவ்வைங்கரப் பிள்ளையின் அருளால் சங்கினைப் பெறுக என்னும் அருள் வாக்கைச் சிரமேற்கொண்டு விடை பெற்றுக்கொண்டு மீண்டு வந்து காஞ்சிபுரத்தில், பெருமை மிகும் மேற்றிசையில் வாயில் அமைந்த குகையுடைய அத்திகிரி யென்னும் கல்மலையில் வலம்புரி விநாயகப் பெருமானைத் தாபித்து,

தருக்கு நீங்கிஆவாகனம் பாத்தியா சமனம்
அருக்கி யம்புனல் ஆட்டுடை பூணுநூல் கந்த
வருக்கம் தூபதீ பம்பல பண்ணிய வருக்கம்
குருக்கொள சுண்ணமார் பாகடை குளிர்புனல் பிறவும். 37

முனைப் பிழந்து வருவித்துக், கால்கழுவு நீர், பருகுநீர், சிரத்தில் தெளிக்கும் நீர், திருமுழுக்காட்டல், உடை, பூணுநூல், கலவைச் சந்தனம், நறும் புகை, விளக்கு, சிற்றுண்டி வகை (நிவேதனம்), நிறங்கொண்ட வாசனைப்பொடி, அரிய பாக்கு வெற்றிலை, குளிர்ந்த நீர், வேறுள்ளனவும்,

ஓங்கு தந்திகா யத்திரி மனுவினுல் உதவி
வீங்கு காதலால் வலஞ்செய்து புவியிடை வீழ்ந்தான்
ஆங்கு நின்றுகை கொட்டினன் ஆடினன் அழுதான்
தீங்கு தீர்மறை மொழிகளால் துதிபல செய்தான். 38

உயர்ந்த விநாயக காயத்திரி மந்திரத்தால் இவற்றை உதவிப் பெரு விருப்பொடும் வலம் வந்து நிலமுற வணங்கி எழுந்து நின்று கைகொட்டி ஆடினன்; பாடினன்; அழுதனன்; குற்றம் தவிர்ந்த வேதமந்திரங்களால் தோத்திரம் பல செய்தனன.

## திருமால் விநாயகரைத் துதித்தல்

கொச்சக் கலிப்பா

ஐயா மறைமுடிவுந் தேராத ஆனந்த
மெய்யா பிரணவத்தின் உட்பொருளே வேழமுகக்
கையாய் வெளியாய் கரியானே பொன்மையாய்
செய்யாய் பசியாய் பெருங்கருணைத் தெய்வமே. 39

ஐயனே, வேத வேதாந்தங்களாலும் தெளியப்பெருத ஆனந்த வடிவினனே! சிவசத்தி பிரணவத்தில தோனறினமையாலும், ஓங்கார வடிவமாக விளங்குதலாலும் அதனின் உட்பொருளே! யானை முகமும், தும்பிக்கையும் உடையவனே! ஐந்து நிறத் திருமேனியனே! பெருங் கருணையையுடைய தேவே!

ஐம்பெரும் பூதநாயகன் என்பார் ஐந்து நிறங்களையும் எடுத்தோதினர். சச்சிதானந்த வடிவினனே என்பார் 'மறை முடிவுந் தேராத ஆனந்த மெய்யனே' என்றனர்.

நல்லோர்க்கும் வானோர்க்கும் நண்ணும் இடையூற்றுக்
கில்லாமை நல்க அவதரித்த எம்மானே
வல்லார் முலைஉமையாள் ஈன்ற மழகளிறே
பொல்லார்க்கும் தானவர்க்கும் ஊறிழைக்கும் புத்தேளே. 40

நல்லவர்க்கும், தேவர்க்கும் நேரும் இடையூற்றினைத் தவிர்த்து அருள்செய்ய வந்த விக்கினராசனே! சூதாடு கருவியை நிகர்க்கும் கொங்கையை உடைய உமையம்மை பயந்த இளங்களிறே! கொடியோர்க்கும், அசுரர்க்கும் இடையூற்றைச் செய்யும் வேழமுகப்பிரானே!

சூரன்உயிர் உண்டு சுரர்உலகங் காத்தளித்த
வீரனுக்கு முன்பிறந்த வித்தகா முப்புரமுஞ்
சேர உருத்த திருவாளன் ஈன்றெடுத்த
வாரணமே எந்தாய் வலம்புரிக் குஞ்சரமே. 41

சூரபதுமனை வீட்டித் தேவருலகைக் காவல் செய்தருளிய முருகப் பெருமானுக்கு முன்னர்த் தோன்றிய சதுரப்பா டுடையவனே! திரிபுரத்தையும் ஒருங்கு சாய்த்த செல்வன் பயந்து வளர்த்த யானையே! எனது தந்தையே! வலஞ்சுழித்த தும்பிக்கையுடைய குஞ்சரமே!

களை எடுத்தன்றிப் பயிர்வளர்த்தல் இயலாத வாறு வல்லசுரர் மாள நல்லசுரர் வாழவல்ல வடிவேல் தொட்டமை பேசப் பெற்றது.

பண்ணியமும் வெண்கோடும் பாசாங் குசப்படையும்
நண்ணியசெங் கைத்தலத்து நாதா ஒருகோட்டுத்
தண்ணிய வெண்பிறைத் தாழ்சடையாய் மெய்யடியார்
எண்ணிய எண்ணியாங் கீந்தருளும் வள்ளலே. 42

மோதகமும், தந்தமும், பாசமும், அங்குசமும் பற்றிய செவ்விய கரதலமுடைய நாதனே! ஒற்றைத் தந்தமும், குளிர்ந்த வெள்ளிய பிறைதவழ் சடையும் உடையோனே! உண்மைப் பணிசெய் தொண்டர் எண்ணிய பொருளை எண்ணியவாறே எளிதிற் பெற அருளும் கொடைக் குணம் உடையோனே!

வழிபடுவோர்க் கெய்ப்பிடத்தின் வைப்பே உமையாள்
விழிகளிப்ப முந்நீர் விளையாடுங் காலை
பொழிமதக்கை யூடு புகுந்துவரப் பெற்றேன்
இழிவகன்று மெய்த்தூய்மை எய்தினேன் யானே. 43

அருள்வழி நிற்போர்க்குத் தளர்ச்சி யுற்ற வழித் தாங்கும் திருவே! உமையம்மையார் விழிகளுக்கு விருந்து செய்யக் கடலிற்புகுந்து திருவிளையாடல் செய்தபோது மதம் பொழிகின்ற தும்பிக்கையுட் புகுந்து வெளியில் வந்தமையால் இழிவு தவிர்ந்து புனிதமான உடம்பை அடைந்தேன் யான். இழிவு—'அழுக்குமெய்' (சுந்தரர்)

அங்கப் பொழுதின் அடியேன் கரத்தகன்ற
துங்கப் பணிலம்உனைச் சூழுங் கணநாதன்
செங்கைத் தலத்துளதால் செல்வா எனக்கதனை
இங்கிப் பொழுதே அளித்தருளாய் என்றிரப்ப. 44

அவ்விடத் தக்காலத்தில் அடியேன் கரத்தினின்றும் நழுவிய உயர்ந்த பாஞ்சசன்னியம் உன்னைச் சூழ்ந்தேவல் செய்யும் கணத் தலைவன் செங்கைத் தலத்தில் உள்ளதாகலின் செல்வனே எனக் கதனை இன்னே அளித்தருளாய் என்று குறையிரப்ப,

காதலர்க்கு எய்ப்பினில் வைப்பாகலின், இப்பொழுதே அருளுக என்றனர். 'பின்னை என்னு தருள் செய்வார் பெரிய பெருமானடிகளே' (திருஞா. )

### திருமால் சங்கு பெறுதல்

வேண்டுந் திருநெடுமாற் கெங்கோன் வெளிநின்று
காண்டகைய பூத கணங்கரத்துக் கொண்டிருந்த
மாண்டபுகழ்ச் சங்கம் அளித்தருளி மாயோனே
ஈண்டு நினக்கின்னும் வேண்டுவதென் னென்றருள. 45

குறை இரக்கும் திருமகள் நாயகனுக்கு எமது பெருமான் காட்சி தந்து காணத் தக்க கணநாதன் தனது கைக்கொண்டிருந்த மாட்சிமைப் பட்ட புகழையுடைய சங்கத்தை அளித்தருளித் திருமாலே இப்பொழுது உனக்கு இன்னும் வேண்டுவது யாது அதனைக் கூறென்றருள,

வெளி நிற்றல்: 'பிரசன்ன வதனம்' என்றமை காண்க.

முன்னாய புண்ணியகோ டீசர் திருமுன்பென்
றன்னேடிவ் வத்தித் தடங்கிரியில் வீற்றிருந்திங்
கென்நாளும் எல்லார்க்கும் எவ்வரமும் ஈந்தருளாய்
மன்னாஎன் றேத்த மகிழ்ந்தங்கண் வைகினனால். 46

எப்பொருளுக்கும் முன்னாய புண்ணிய கோடீசர் திருமுன்பு இவ் வத்திகிரியில் என்னோடெழுந்தருளி யிருந்து எந்நாளும் யாவர்க்கும் அவரவர் வேண்டிய வரத்தையும் ஈந்தருள்வாய் அரசே! என்று துதிக்க மகிழ்ந்து அவ்விடத்துத் தங்கினன்.

ஒன்னலரை வாட்டும் உலவைப் படைத்தேவும்
பன்னகப்பூம் பாயல் திகிரிப் படைக்கோவும்
அன்னநடைக் குன்ற மால்வரையின் ஆருயிர்கட்
கென்ன வரமும் அளித்தென்றும் மேவுவார். 47

பகைவரை அழிக்கும் தந்தத்தை ஆயுதமாகக் கொண்ட விநாயகப் பெருமானும், ஆதிசேஷனாகிய பொலிவுடைப் படுக்கையையும் சக்கரப் படையையும் உடைய வரதராசரும் அந்த அத்திமலையில் அரிய உயிர்கள் எவற்றினுக்கும் எத்தகைய வரமும் அருள் செய்து என்றும் நீங்காது வீற்றிருப்பர்.

பெருமானுக்கு உறவும், பகையுமின்மையின்; நல்லோர்க்குப் பகைவர் என்க. உலவை—விலங்கின் கொம்பு. உலவை: "தாமமால் ஓடை யானைத் தரள நீளுலவை" (கச்சி. காஞ். கழுவாய்ப் படலம் 397) பன்னகம்—பாம்பு; காலால் நடவாதது என்பதுபொருள். மார்பால் ஊர்தலின் உரகம் எனப்படுதல் காண்க. அந்தோ—அன்னோ என்புழிப்போல, அந்த, அன்ன என்றாயது.

மற்றிதனைக் கற்றோருங் கேட்டோரும் மாசிலர்க்குச்
சொற்றவரும் ஊறு தவிர்ந்தென்றுந் தொல்லுலகில்
பெற்றமக வாதிப் பெருஞ்செல்வத் தோடுறைந்து
பற்றறுத்து மேலைப் பரபோகம் மேவுவரால். 48

இந்த வரலாற்றைக் கற்றவரும், குற்றமற்றவர்க்குக் கூறினவரும் இடையூறு நீங்கி மூதுலகில் மக்கள் முதலாம் பெருஞ் செல்வத்தோடும் வாழ்ந்து இருவகைப் பற்றும் நீங்கி மேன்மை பொருந்திய பேரின்பமும் அடைவர்,

கற்றல், கேட்டல், கற்பித்தல் ஆகிய இவை ஞானபூசை ஆகலின் பயன் கூறினர். "ஞானநூல் தனைஓதல் ஓதுவித்தல் நற்பொருளைக் கேட்பித்தல் தான் கேட்டல் நன்று, ஈனமிலாப் பொருளதனைச் சிந்தித்தல் ஐந்தும்இறைவனடி அடைவிக்கும் எழில்ஞானபூசை" (சிவ.சித்.276)

வலம்புரி விநாயகப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் 583.



# சிவாத்தானப் படலம்

கலி விருத்தம்

அலம்புநீர் வாவிசூழ் அத்திமா மலைமிசை
வலம்புரி விநாயகன் வரவிது போதினன்
நலம்புரி பூசைசெய் நவில்சிவாத் தானமாம்
புலம்புரி பெருமையைப் புகலுதுங் கேண்மினே. 1

ஒலிக்கின்ற நீர் நிரம்பிய வாவிகள் சூழ்ந்த அத்திகிரியில் எழுந்தருளியுள்ள விநாயகப்பெருமான் வரலாறு இதுவாகும், பிரமன் நன்மையைச் செய்கின்ற சிவபூசையைச் செய்தமையால் பேசப் பெறுகின்ற சிவாத்தானமாம் தலம் விரும்புகின்ற பெருமையினைக் கூறுவேம்; முனிவர்களே! நீவிர் அதனைக் கேண்மின்.

போதினன்—மலரோனாகிய பிரமன். நலம் புரிதல்-நன்மையை எக்காலத்தும் செய்தல். பசு, பாச அறங்கள் பயன் கொடுத்து அழிந்து விடும். பூசைசெய்தலின் வரு பயன்கள் ஞானத்தைப் பயத்தலின் என்றும் அழிவில என்க.

ஆதிநாள் சிவனிடத் துதித்தவன் அருளினாற்
பேதியா துலகெலாம் படைத்திடப் பெற்றுள
சீதநாண் மலர்மிசைத் திசைமுகன் றன்னைமால்
மூதுல கோடும்உண் டாக்கினன் முறைமையால். 2

படைப்புக் காலத்தில் திருமால், சிவபிரானுடைய இடப்புறத்துத் தோன்றி, அப்பெருமான் திருவருளால் எல்லா உலகங்களையும் மாறுபாடின்றிப படைத்தலைச் செய்யும் உரிமை உடைய குளிர்ந்த அப்பொழு தலர்ந்த மலர்மேலுள்ள பிரமனையும் உலகங்களையும் முறையாற் சிருட்டித்தனர்.

நாள்மலர்—நாளும் மலர், தெய்வத்தன்மையால் கூம்பாதமலர் ஒடுங்கிய உலகே தோன்றுதலின் முறைமையால் எனவும் கூறினர்.

### நாரணனைப் படைக்க நான்முகன் வேண்டல்

அதுமனத் தெண்ணினன் அழுக்கறுத் திளநிலா
விதுமுடிப் பிரான்திருக் கயிலையின் மேயினன்
பொதுவறத் தொழுதனன் போற்றிநின் றுரைசெய்வான்
மதுமலர்ப் பொகுட்டணி மாளிகைப் பண்ணவன். 3

தன்னைத் திருமால் சிருட்டித்தலை நினைந்து பொறாமை கொண்டு திருக்கைலை மலையை அடைந்து இளநிலவுடைய பிறையைச் சடையிற் சூடிய பெருமானைச் சிறப்புற வணங்கித் துதித்து நின்று தேனையுடைய தாமரைமலர்ப் பொகுட்டில் வீற்றிருக்கும் பிரமன் கூறுவான்.

யாவும் படைக்கும் தன்னையும் படைக்கும் பெருஞ்செல்வம் திருமாலுக்குள்ளது குறித்து அழுக்காறு கொண்டனன்.

பெருமநின் இடப்புறத் தரிதனைப் பெற்றனை
அருளொடும் வலப்புறத் தென்னைஈன் றளித்தனை
உருவவை குந்தமுஞ் சத்திய உலகமும்
இருவரும் பெற்றுளேம் எந்தைநின் னருளினல். 4

பெருமானே, உனது இடப்பாகத்தில் திருமாலைப் பெற்றனை; வலப் பக்கத்தில் கருணையொடும் அடியேனை ஈன்றருள் செய்தனை. இருவர்க்கும் முறையே அழகிய வைகுந்த வாழ்வும், சத்திய உலக வாழ்வும் நீவிர் அருள் செய்ய இருவேமும் பெற்றுளேம்.

படைப்பதுங் காப்பதும் பணிஎமக் காக்கினை
தொடைப்பொலங் கொன்றையந் துணர்துறுஞ் சடைமுடி
விடைக்கொடிப் பகவனே விருப்பொடு வெறுப்பினை
உடைத்தநின் னருட்கிரு வேங்களும் ஒத்துளேம். 5

படைப்பதும், காப்பதுமாகிய இரு செயல்களையும் இருவேமாகிய எம்மிடத்தில் அருளொடும் வைத்தனை. பொன் மயமாகிய கொன்றை மலர்க் கொத்துகள் செறியும் மாலையையும் சடை முடியையும், விடை எழுதிய கொடியினையு முடைய பகவனே! விருப்பு வெறுப்பற்ற சம நோக்கில் விளங்கும் நின் திருவருளுக்கு யாங்கள் இருவரும் ஒப்பாவேம்.

பத்திசெய் துன்னருள் பெற்றுவெம் பாம்பணை
உத்தமன் என்னைஇவ் வுலகொடும் ஈன்றனன்
அத்திறத் தியானும்அம் மாயனே டகிலமுஞ்
சித்தனே படைக்குமா திருவுளஞ் செய்குவாய். 6

பேரன்பு வைத்து, உன் திருவருளைப்பெற்று ஆதிசேடனைப் பாயலாகக் கொண்ட புருடோத்தமன் அடியேனையும் இவ்வுலகையும் ஒருங்கு படைத்தனன். அவ்வாற்றல் யானும் அம்மாயனையும் அகில உலகங்களையும் படைக்கும் திறம் மெய்யறிவினனே திருவுள்ளத் தெண்ணுக.

எம்மை ஈரிடத்துத் தந்து, ஈரிடந் தந்து, இருதொழில் அளித்த பகவனே விருப்பு வெறுப்பகன்ற நின் திருவருளுக்கு இருவேமும் சமமாவேம் இங்ஙனம் ஒத்த எம்மில் என்னைத் தந்தவனைத் தந்திடும் பேற்றில் ஒவ்வாமை காட்டினை என்றனன் பிரமன்.

என்றசொற் செவிமடுத் தெம்பிரான் உரைசெய்வான்
ஒன்றுகேள் மைந்தனே உனக்கிது வேண்டுமேல்
சென்றுகாஞ் சியின்எமைப் பூசைசெய் திருத்தியால்
மன்றஅங் கெய்திநீ வேட்டவா வழங்குதும். 7

என்று கூறிய வேண்டுகோளைத் திருச்செவி சாத்திய பெருமானார் திருவாய் மலர்ந்தருளுவர். மைந்தனே! யாம் கூறும் ஒன்றனைக் கேட்பாயாக. திருமாலைப் படைக்கும் ஆற்றல் வேண்டுமாயின் திருக்காஞ்சியை அடைந்து அவ்விடத் தெம்மைப் பூசனைசெய் திருத்தி. யாம் அங்குப் போந்தருளி நீ விரும்பியபடி நிச்சயமாக வழங்குவேம்.

அருளுவோர் தாமே யாகியும், இட விசேடத்தொடு படுத்து அருளுதலைக் காஞ்சியில் அளிப்பேம் என்றனர்.

### காஞ்சியில் பிரமன் கடவுளை வழிபடல்

ஐயுறேல் என்றலும் அம்புயன் தாழ்ந்தெழுந்
தொய்யெனக் கச்சியிற் போந்துமை கோன்வளர்
கொய்பொழிற் புண்ணிய கோடியின் குணதிசை
எய்துதன் பெயரினால் இலிங்கம்ஒன் றிருத்தினான். 8

ஐயம் கொள்ளாது தெளிக என்ற அளவிலே தாமரையோன் வணங்கி எழுந்து விரையக் காஞ்சியை அடைந்து மலர் கொய் பொழில் சூழ்ந்த உமாபதி தங்கியுள்ள புண்ணிய கோடி இடத்திற்குக் கீழ்த்திசையில் பிரமீசன் என்ற பெயர் அமைந்த ஓர் சிவலிங்கம் தாபித்தான்.

போக்கரும் பிரமதீர்த் தப்பெயர்ப் பொய்கைஒன்
றாக்கினான் அங்குநீ ராடிநல் வினைமுடித்
தூக்கமார் அன்பினால் மலரெடுத் துடையவன்
பூக்கமழ் சேவடிப் பூசனை செய்தபின். 9

குற்றமற்ற பிரம தீர்த்தம் என்னும் பெயரினையுடைய தடமொன்றைத் தோற்றுவித்தனன். அத்தீர்த்தத்தில் மூழ்கி அனுட்டானம் முடித்து மலர் கொய்து எழுச்சி பொருந்திய அன்பொடும் உயிர்கள் யாவும் அடிமை ஆகவும், உயிரில் பொருள்கள் யாவும் உடைமையாகவும் உடைய பெருமானுடைய மலர் மணம கமழும் திருவடிகளைப் பூசனை புரிந்த பின்னே,

### நான்முகன் வேள்வி செய்தல்

தீயவிர் குடங்கையான் திருவுளங் களிவரக்
காயமுற் சோமயா கஞ்செயக் கருதினான்
ஆயஅக் கருத்துணர்ந் தண்டரும் முனிவரும்
ஏயினர் ஆயிடை விண்ணவர் கோனெடும். 10

தீப்பிழம்பாய் ஒளிர்கின்ற மழுப்படையை உள்ளங்கைக் கொண்ட சிவபிரானது திருவுள்ளத்தில் மகிழ்ச்சி தோன்றத் தீயுடைய குண்டத்திற் சோமயாகம் புரிய நினைத்தான்; அக் கருத்தினை உணர்ந்த தேவரும், முனிவரும், இந்திரனோடும் அவ்விடத்திற்கு வந்தனர்.

மங்கருந் திறல்மொழிக் கிழத்திவா னுட்டவர்
தங்களின் நீங்கிநீர் தன்னகத் துற்றனள்
பங்கயன் வேள்வியைப் பற்றும்அக் காலையில்
துங்கமார் தருக்களில் தொக்கனள் என்பவே. 11

கேடிலாத வலிமை அமைந்த நாமகள் வானுலகோர் தங்களின் அகன்று நீரிடைக் கரந்தனள். பிரமன் யாகத்தை மேற்கொள்ளும் அப்பொழுதில் உயர்ச்சி மிகும் மரங்களில் நுட்பவடிவின் மறைந்தனள்.

என்ப என்னும் இந்த அசைநிலையைச் சீவக சிந்தாமணியில் யாண்டும் காணலாம்.

எழில்வளர் நாமகள் என்றும்இவ் வுலகிடை
முழவினில் வீணையில் முழங்குதீங் குரல்படுங்
குழலினில் இசையெனக் குலவுகின் றுளெனப்
பழமறை முழுவதும் பன்னும்இவ் வகையரோ. 12

அழகு வளர்கின்ற சரசுவதி எந்நாளும் இவ்வுலகில் உள்ள மத்தளம், வீணை, ஒலிக்கின்ற இனிய ஒலி எழும் (புல்லங்)குழல் இவற்றிடை இசை வடிவமாகத் திகழ்கின்றனள் என்றித்திறம் தொன்று தொட்டுள்ள வேதங்கள் யாண்டும் முழங்கும்.

ஆதலிற் காண்கிலான் அயனுஞ்சா வித்திரி
வேதகா யத்திரி என்னும்மின் னுருடன்
ஏதமில் தீக்கையுற் றிருமகச் சாலையுள்
போதலுங் கலைமகள் கேட்டுளம் புழுங்கினாள். 13

ஆதலாற், பிரமனும் கலைமகளைக் காணாதவனாகிச் சாவித்திரி, வேதகாயத்திரி யென்னும் மனைவியருடனே குற்றமில்லாத தீக்கை மேற்கொண்டு பெரிய வேள்விச்சாலையுட் புகுதலும் நாமகள் கேட்டு உள்ளம் வெதும்பினாள்.

**நாவின் கிழத்தி நதியாய் வருதல்**

திருமகச் சாலையைப் பாழ்படச் செய்வலென்
றிருவிசும் பூழிநாள் இடித்தெனக் கொதித்தெழுந்
தொருநதி வடிவுகொண் டுருகெழத் தோன்றினாள்
கருநிலை உயிரெலாம் ஈன்றருள் காரணி. 14

கருவுறற்கு ஏதுவாகிய ஆன்மாக்களுக்கு உடம்பு கொடுக்கும் சரசுவதி தெய்வத் தன்மை அமைந்த வேள்விச் சாலையை அழிப்பேன்

என்று கற்ப முடிவில் எழும் மேகங்கள் வானிடை இடித்தல்போலக் குமுறி எழுந்து சினங்கொண்டு ஓர் நதி வடிவங்கொண்டு யாவருக்கும் அச்சம் மிகும்படி வந்தனள்.

கலிநிலைத் துறை

மலர்மிசை வருதிசை முகன்உயர் மகவினை புரிஇடமே
அலஅவன் உறைஉல கமும்உடன் அழிவுசெய் திடஎழல்போல்
பலகுமி ழிகள்அலை திரைநுரை பயில்வுற அகல்ககனத்
தலமிசை நிமிர்விசை யொடுவரு தகையது குலநதியே. 15

பெருமை பொருந்திய அந்நதி, திருமாலின் உந்திக் கமலத்துத் தோன்றிய நான்முகன் செய் உயர்ந்த வேள்வித் தலத்தையே அன்றி அவன் வாழ்க்கையிடமாகிய சத்தியலோகத்தையும் ஒருங்கழித்தற் பொருட்டு எழுதலை ஒப்பப் பல நீர்க்குமிழிகளும், அலைகளும், திரைகளும், நுரைகளும் நெருங்க அகன்ற வானிடத்தின் மேலும் நிமிர்ந்து வேகமாக வருந் தன்மையையுடையது.

வரிஅளி யினம்உளர் நறைமது மலரவன் மகவினையைப்
புரிவுற இடம்உத வியதொரு புவிஇது எனவெகுளா
விரிபண மணிவிட அரவிறை வெருவர உடல்நெளிய
அரிலறு கடல்நிலம் முழுவதும் அகழ்வது குலநதியே. 16

வரிகளையுடைய வண்டுகள் ஒலிக்கின்ற மணத்தையும் தேனையும் உடைய தாமரை மலரில் உறை பிரமன் வேள்வியைச் செய்ய இடம் உதவிய கொடிய பூமி ஈதென வெகுண்டு, விரிந்த படமும், மாணிக்கமும், விடமும் உடைய பாம்பரசனாகிய ஆதிசேடனும் உடல் நெளிந்து அஞ்சவும் குற்றம் அற்ற கடல் சூழ்ந்த நிலம் முழுவதையும் அகழும் இயல்பினது, மேன்மை அமைந்த நதி.

விரவிய மறைவிதி யுளிமக வினைபுரி உபகரணத்
திரவிய முழுதுத வினஇவை எனஎழு சினமதனல்
பரவிய புனல்நிறை கழனிகள் பலகய நிரைபொழிலின்
உரவியல் வளமுழு தழிவுசெய் துறுவது குலநதியே. 17

வரநதி, வேதவிதிப்படி செய்யும் வேள்வி செயற்குரிய துணைக் கருவிகளாகிய பொருள்க்ள் ஒன்றொன்று தலை மயங்கிய இவை முழுதும் தந்தன இவை தாமே என்று எழுகின்ற கோபத்தால் பரந்த நீர் நிறை வயல்கள், பலநீர் நிலைகள், வரிசை பெற்ற சோலைகள் இவற்றினுடைய திண்ணிய வளமுழுவதும் அழிவு செய்துறும் இயல்பினது.

ஒடிவறு மகமது தனில்அவி உணவரும் இருசுடரை
இடைவழி யினில்எதிர் உறுதலும் எழுவெகு ளியினெடுகைப்
பிடியென உடன்விரை வொடுகொடு பெயர்வது பொரஇருகேழ்க்
கடிகெழு மரைமலர் பலகொடு கடுகிடு வதுநதியே. 18

கெடாத வேள்வியில் தரப்பெறும் அவிப்பாகம் நுகர வரும் சந்திர சூரியரை வழியிடையே எதிர்வரக் கண்ட அளவிலே எழுந்த கோபத்தால் கைப்பற்றி உடன் கொண்டு வருவது ஒப்ப இருவகை நிறமுடைய வெண்டாமரை செந்தாமரை இவற்றின் மணம் பொருந்திய மலர்களைப் பல கொண்டு விரைவது, சுரநதி.

அயனிடை உறும்வெகு ளியின்அணை பொழுதிணை விழியவைசேந்
தியல்வது பொரரளரி மருள்குவ ளைகள்இடை இடைஒளிர
வெயரென உறைசித றிடமுலை மிடைஅணி துகில்குழறித்
துயல்வரல் பொரவரை யொடுதிரை தொகவருவ் வதுநதியே. 19

பிரமனிடத்து மிகும் வெகுளியொடு அணைகின்ற பொழுதில் இரு விழிகளும் சிவந்து தோன்றுவ போல நெருப்பினை ஒத்த செங்கழுநீர்ப் பூக்களும் இடை இடையே மிளிரவும், வியர்வை என நீர்த்திவலைகள் சிதறிடவும், கொங்கைமேற் றுகில் குலைந்து அசைதலை ஒப்ப மலைகளும திரைகளும் கலந்து மேலெழலும் விலகலும் ஆக வருவது, அந்நதியே.

வெகுளியொடு விரைவின் நிகழ்வன: கண் சிவத்தலும், வெயர்வை பொங்கலும், ஆடை குலைதலும் ஆவன.

அவிஉண நிறைசுரர் பலரையு மலைசெய எழுசெயல்போற்
கவிழ்தலை யனகுவ டுகளொடு வெதிர்களி றொடுகடுகிப்
புவிமுதல் அறவரு பிரளய நிலையுணர் புரையவருஞ்
செவியொடு விழிவெரு வரவரு திறலது குலநதியே. 20

அவிப்பாகம் பெற நிறைந்த தேவர் யாவரையும் வருத்த வருகின்ற செய்கைபோல மலைச்சிகரங் கீழ்ப்பட அடிமலை நீர்மேற் பொருந்தவும், மூங்கில்களும் தலைகீழாகவும் புரட்டி விரைந்து பூமி முற்றவும் கெடும்படி வரும் பிரளய நிலையைக் கண்டுணர்ந்த மேலோரும் காதொடு கண்களும் ஓசையைக் கேட்டும் நிகழ்ச்சிகளைக் கண்டும் அஞ்ச வரு வலிமையையுடையது, சுரநதி.

"மண்பா தலம்புக்கு மால்கடல் மூடிமற் றேழுலகும், விண்பால் திசைகெட் டிருசுடர் வீழினும்" அஞ்சாத நெஞ்சினரும் அஞ்ச வந்தது சுரநதி. வேள்வியை உடன்படும் தேவரும் கலைமகளுக்குப் பகைவராகலின் இங்ஙனம் கூறினர்.

அள்ளவி நிறைகள முழுவதும் அழிவுசெய் தபின்அதனின்
உள்ளுற நடவென மிகுசின மொடுகற கறவழிபாற்
கள்ளிகள் பலபல கொடுவிடு கணைநுதி நிகர்அயில்வாய்
முள்ளுடை முதல்பல பலகொடு முடுகுவ துயர்நதியே. 21

உயர்ந்த அந்நதி செறிந்த அவிசுகள் நிறைந்த யாகசாலையைச் சார்ந்த இடங்களும் முழுவதும் அழித்த பின்னே அவ்விடத்தில் நடவாக (நாற்று) நடுதற்கென்று பெருங்கோபங்கொண்டு கறகற என்னும் ஒலியுடன் வழிகின்ற பாலையுடைய கள்ளிகள் பலப்பல

கொண்டு விடுகின்ற அம்பினை யொப்பக் கூர்மை வாய்ந்த முட்கள் பொருந்திய அடிகளையுடைய செடிகள் பலவுடன் விரையும் இயல்பினது.
பகைவர் நிலத்தை அழித்துக் கள்ளி நடுதல் பேசப் பெற்றது.

மேற்படு கலைமகள் நதியென வேற்றுரு வுறுசால்பிற்
கேற்புற அவயவ மவைகளும் ஏத்தெழில் உருமாறித்
தோற்றிய வெனஅறல் மிசைவரு தூத்திரள் மணிமலர்கள்
போற்றுறு பலகொடி யுடன்எழில் பூத்தணை வதுநதியே. 22

நதி, மேன்மை பொருந்திய சரசுவதி நதிஆக வேற்று வடிவங் கொண்ட அந்நிலைக்குப் பொருந்த அவள் தன்னுடைய அவயவங்களும் புகழ்ப்பெறும் வடிவுமாறிப் புலப்படுவனபோல நீர்மேல் வரு தூய்மை யுடைய மாணிக்கங்களும், மலர்களும், போற்றப்பெறும் பல கொடி களுடனே அழகு பொலிந்து அணையா நின்றது.

முத்துக்களும், நீலோற்பல மலரும், தாமரை மலரும், அரும்பும், செவ்வல்லி மலரும், வஞ்சிக்கொடியும் பிறவும் தழுவி வந்தனவென்க.

வருநெறி எதிருறு புரிசைகள் மாளிகை நிரைஅகழ்ற்
றுருமிடி யெனஅதிர் தரும்ஒளி யோடொரு நதிவடிவாய்ப்
பருவரல் செய்யஇம் முறைவரு பாரதி செயலதனை
முருகலர் அளியென இசைபயில் நாரத முனிகண்டான். 23

வருவழியில் எதிர்ப்படுகின்ற மதில்கள், மாளிகைகளின் நிரைகள் இவற்றை அகழ்ந்து அச்சந்தரும் இடிபோல, அதிர்ச்சி செய்யும் ஓசை யோடொரு நதியின் வடிவாகித் துன்பத்தைச் செய்யும் இவ்வியல் பொடும் வந்த சரசுவதியின் செயல்தன்னை மணங்கமழும் மலரிடை வண்டினைப்போல இசை பயிலும் நாரத முனிவர் கண்டனர்.

### நாரத முனிவர் நதிவரவு கூறல்

வேறு

கண்டு செய்யசடை கட்டவிழ ஓடி முனிவன்
புண்ட ரீகனை வணங்கிஎதிர் நின்று புகல்வான்
அண்டர் நாயகநின் வேள்வியை அழிக்க முனிவு
கொண்டு வாணிநதி யாய்க்குறுகு கின்றனளரோ. 24

நோக்கிச், சிவந்த சடை பிணிப்பு அவிழ்ந்து சோரும்படி நாரதர் ஓடித் தாமரையோனை வணங்கி முன்நின்று கூறுவார். தேவர் தலை வனே! நீ இயற்றும் யாகத்தை கோபங்கொண்டு அழிக்க விரும்பி சரசு வதி நதி வடிவமாய் நெருங்கி வருகின்றனள்.

கடிது நீதடை இயற்றுதி யெனக்க ழறலும்
படியில் நான்முகன் உளத்தில்உமை பங்கர் இருசே
வடிஇ ருத்தினன் அறிந்தனர் அனைத்தும் இறைவர்
நெடிய மாயனை விளித்திது நிகழ்த்த லுறுவார். 25

'விரைவாக நீ அதனைத் தடைசெய்' என அழுத்தமாகக் கூறிய அளவிலே ஒப்பில்லாத நான்முகன் உமாதேவி நாயகருடைய இரு திருவடிகளையும் மனத்திடை வைத்துத் தியானித்தனன். சிவபிரான் யாவும் அறிந்து நீண்ட வடிவினனாகிய திருமாலை அழைத்திதனைக் கூறுவார்.

வேள்வி நீவரத ராசஉயர் வேள்வி இறைநாம்
வாழி அம்மகம் அழிப்பநதி வாணி வரலால்
காழ றக்கடிது காத்திடுதி என்று கருதார்
பாழி மும்மதில் அழித்தவர் பணித்த ருளலும். 26

வரதராசனே! நீ யாக வடிவினன்; நாம் உயர்ந்த யாகத்திற்குரிய பயனை அருள்வோ மாகலின் அதற்குத் தலைவராவேம்; அவ்வேள்வியை அழித்தற்குச் சரசுவதி நதிவடிவாய் வருதலால், அவள் செருக்கொழிய விரைந்து காப்பாய் என்று பகைவருடைய வன்மை அமைந்த முப்புரங்களை அழித்தவர் ஏவிய அளவிலே,

வாழி, அசைநிலை; காழ்–உறைப்பு; இங்குச் செருக்கு.

## நாரணன் நதியைத் தடுத்தல்

உந்து வேள்வியினை காப்பமனம் ஊக்கி எதிர்சென்
றைந்தி யோசனையில் நாகணை விரித்த தன்மிசை
மைந்து நீலமலை போல்வழி மறுத்து மலரோன்
தந்தை கண்வளர்தல் கண்டனள் கலைத்த லைவியே. 27

விருப்பினால் செலுத்தப்படும் வேள்விச் செய்கையைக் காத்தற் பொருட்டு உள்ளம் எழுச்சியுற்று எதிர்போய் ஐந்தி யோசனை தொலைவில் ஆதிசேடனாகிய பாம்பணையை விரித்ததனமேல் வலிமை அமைந்த நீல மலையைப் போல நதிவரும் வழியைத் தடுத்துப் பிரமனுக்குத்தந்தை அறிதுயில் கொள்ளுதலைச் சரசுவதி கண்டனள்.

நாகம் என்பதிலுள்ள 'அம்' தொக்கது; 'பெற்றம் ஒன்றுயர்த்த பெருமான்' என்பது 'பெற்றொன்றுயர்த்த பெருமான்' எனவும், 'வாதம் செயத் திருவுள்ளமே' என்பது 'வாது செயத் திருவுள்ளமே' எனவும் வந்தன போலக் கொள்க. ஊக்கி என்னும் சினை வினை, சென்று என்னும் முதல் வினையொடு முடிந்தது.

கண்டு சேயிடை அகன்றுநெறி கண்டு வடபால்
மண்டி ஏகஅது நோக்கிஅரி பாதி வழியின்
மிண்டி நாப்பண்விழி துஞ்சமலர் வாணி விலகிக்
கொண்ட வேகமொடு தென்திசை யுறக்கு றுகினாள். 28

நெடுந் தொலைவில் வரும்போது நோக்கி அவ்வழியை நீங்கிப் புது வழியை உண்டாக்கி வடதிசை வழிக்கொண்டு மிக்குச் செல்லத், திருமால் அதனை நோக்கிப் பாதி வழியின் நெருங்கி நடுவில் விழிதுயிலச் சரசுவதி விலகி மேற்கொண்ட வேகத்தொடும் தெற்குத் திசையைக் குறுகினள்.

பின்னும் அங்கவன் விடாதுபிணை கச்சி நகரந்
தன்னி டைக்குலை யெனக்கிடை கொளத்த வளமான்
முன்னர் நோக்கிமுடி சாய்த்துநனி நாணம் முதிர
அன்ன தென்திசையில் நீளிடை அகன்று விலகி. 29

மேலும் அத்திருமால் விடாமல் அந்நதிசேர்கின்ற காஞ்சியில் கரைபோலக் கண்வளரப் படுத்துக் கிடத்தல் வெண்ணிறமுடைய சரசுவதி முன்னே பார்த்து மிகப்பெரிய நாணத்தால் தலையைச் சாய்த்து அந்தத் தென்திசையினின்றும் நீண்ட தொலைவில் மிக விலகி,

அன்ன—அந்த என்னும் சுட்டுப் பொருளில் முன்னும் வந்தது;

வேள்வி செய்கள மதன்குண திசைக்கண் விரவி
ஆழி யிற்செல நடந்தனள் அயன்றன் மனைவி
தாழ்வு தீர்ந்தயன் உகந்தனன் மகிழ்ந்து தலைவன்
சூழ்க ணங்களொடு மாயனெதிர் தோன்றி அருள்வான். 30

பிரமனுக்கு வாழ்க்கைத் துணைவியாகிய சரசுவதி யாகஞ் செய்கின்ற இடத்திற்குக் கிழக்குப் பக்கத்திற் பரவிக் கடலை நோக்கி விரைந்தனள். பிரமன் தாழ்வு நீங்கி உயர்ந்தனன். சிவபிரான் திருவுளமுவந்து சூழுஞ்சிவகணங்களொடும் திருமாலின் எதிர் தோன்றி அருள் செய்வான்.

மாயன்-கரிய நிறமுடையோன் (பரி. 3. 2). உகப்பே உயர்வு (தொல். சொ.) தலைவன்-யாகபதி.

## மாலும் நதியும் வண்பெயர் பெறுதல்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

சொன்ன வண்ணஞ் செய்தநீ சொன்ன வண்ணஞ் செய்தவன்
என்ன என்றும் ஓங்குதி இத்தி ருப்பெ ருநதி
மன்னு வல்வி னையெலாம் வாட்டு வேக வதியென
இந்நி லத்தி னிற்சிறந் தின்ப வாழ்வ ளிக்கவே. 31

சொன்ன வண்ணம் செய்தமையால் நீ சொன்ன வண்ணஞ் செய்த பெருமாள் என்று எந்நாளும் உயர்க. இந்தத் தெய்வத் தன்மையுடைய பெருநதி மிகும் வலிய வினை எவற்றையும் அழிக்கும் வேகவதி நதியென இந்நிலத்தினில் ஏற்றமுற்றுத் தன்கண் மூழ்குவோர்க்கு இன்ப வாழ்வினை அருள் செய்க.

சொன்ன வண்ணம் செய்த பெருமாள் எனினும் யதோக்தகாரிப் பெருமாள் எனினும் ஒக்கும்.

இரவி ருட்கண் இந்நதி இப்ப திக்கண் எய்திடும்
வரவு காண நீஒரு வாள்வி ளக்கொ ளியென
விரவி னுய்வி ளக்கொளி விண்டு வென்ன மேவுகென்
றருளி எந்தை இம்முறை வேள்வி காத்த ளித்தபின். 32

இரவின்கண் இருளில் இவ்வேகவதி இந்நகரில் வரும் வரவைக் காண நீ ஒப்பில்லாத விளக்கொளியைப் போலக் கலந்தாய் ஆதலின் விளக்கொளிப் பெருமாளென்னப் பேர் வாய்ந்து விளங்குக என்றருளி எமது தந்தையாகிய பெருமான் இம்முறையாக வேள்வியை ஓம்பிக் காத் தளித்த பின்னர்,

நன்னர் ஆற்று நீரென நண்ணி னுள்த ருக்களில்
மன்னி நிற்ப நோக்கிவன் ருரு விற்செய் தண்டினே
டின்ன வாணி தன்னைஏற் றேய்ந்த தீக்கை யுற்றனன்
துன்னு சீர்க்க லையினுற் சோமம் ஏற்ற பின்னரோ. 33

நலமமைந்த ஆற்று நீரென நண்ணிய கலைமகள் மரங்களில் நிலை பெற்றிருப்ப அறிவால் நோக்கி வலிய தருக்களில் செய்யப்பெற்ற அத் தண்டினை ஏற்று அதனிடை விரவிய முறையின் சரசுவதியை உடன்கொண்டு பொருந்திய தீக்கை உற்று சிறப்புத் துன்னும் அம்சத் (கலை) தினுல் சோமயாகம மேற்கொண்ட பின்,

இப்படலம் 11, 15, ஆம் செய்யுளை நோக்குக. நோக்கம் - நோக்கு அல் நோக்கம்.

இன்ன வட்ப குத்திநீ இருத்து விக்கெ னப்படும்
அன்ன வர்க்கெ னக்கிளந் தம்பு யத்தன் அக்கதை
நன்ம யித்தி ராவரு ணன்க ரத்த ளிப்பஅம்
மின்னை வாங்கி மீட்டவர் வேதன் மாட்டி ருத்தினர். 34

யாக புரோகிதரெனப் பெறும் அத்தன்மையால இக்கலைமகளை அத்தண்டத்தி னின்று வேறு பிரிப்பாய் நீ என்று கூறிப் பிரமன அத் தண்டத்தை அகத்திய முனிவர் கையிற்கொடுக்க அந்தக் கலைமகளை அத் தண்டத்தினினறும் வாங்கிப் பிரித்து அவ்விருத்துவிக்குகள் அப் பிரமன் பக்கத்திலிருத்தினுர்கள்.

ஷை வேறு

மீண்டு திசைமுகன் றன்பால் மேவிய வாணி மகிழ்ந்தாங்
கீண்டிய தன்னுருக் கொண்டே எச்சத் துணைவியு மாகிக்
காண்டகு பாங்கர் இருப்பக் காதலன் வேள்வி முடித்தான்
ஆண்டை விதிமுறைத் தெண்ணீர் ஆடினன் வல்வினை வென்றுன்

மீளவும் நான்முகன் தன்னிடத்துப் பொருந்திய கலைமகள் மகிழ்ந்து அவ்விடத்துத் தன் வடிவை விரையக்கொண்டு யாக பத்தினியாய் அழகு மிகத் தன் கணவன் பக்கத்திலிருப்ப அவ்வம்மை கணவனுகிய பிரமன் வேள்வியை முற்றுவித்து அப்பொழுதே விதிப்படி அவமிருத ஸ்நானம் செய்து வலிய வினைகளின் நீங்கினுன்.

யாக முடிவில் செய்யும் அவமிருத ஸ்நானம்: 'புகழ் அபவிரத நன்னீர் ஆடினுன்' என வருதல் காண்க. (கச்சிம. 21). பாங்கர்—நல்லிடம்.

## இறைவன் காட்சி கொடுத்தல்

அங்கண் இலிங்கத்தின் முன்னர் அணைந்து மனைவியர் மூவர்
துங்க வசிட்டன் முதலோர் சுராசுரர் சூழ்ந்து துதிப்பத்
தங்கும் அவைக்கண் இருந்து சம்புவை உள்ளத்தி ருத்திப்
பொங்கிய அன்பில் தியானம் புரிந்து வழிபடும் போது. 36

சிவாத்தானத்திற் சிவலிங்கப் பெருமான் திருமுன்பு சென்று சரசுவதி, சாவித்திரி, காயத்திரி என்னும் மனைவியர் மூவரும் தவத்தாலுயர்ந்த வசிட்டர் முதலானோரும், தேவரும், அசுரரும் உடன் சூழ்ந்து துதிக்க அவர் அவைக்கண் தங்கியிருந்து இறைவனைத் தனது உள்ளத்தில் எழுந்தருளுவித்து மேலெழுந்த அன்பினாற் றியானித்து வழிபடுங் காலத்தில்,

சம்பு—சுகம் உண்டாக்குபவன்; 'எம்பிரான், இன்பம் ஆக்கலின் சம்பு' (பரசு. 44),

வான இயங்கள் கலிப்ப மலர்மழை அண்டர் சொரிய
ஊனமில் சாமரை ஏந்தி உருத்திர மாதர் இரட்டப்
பான்மை யினாற்கந் தருவர் பாடி விருதெடுத் தோத
ஞான சனந்தர் முதலோர் நண்ணி இருபுடை யேத்த. 37

தேவ துந்துமிகள் ஒலிக்கவும், தேவர்கள் மலர் மழை பொழியவும், உருத்திர மகளிர் குற்றமில்லாத சாமரையை ஏந்தி வீசவும், கந்தருவர் தம் இயல்பால் வெற்றிவிருதுகளை எடுத்துப் பாடிப் புகழவும், ஞானம் கைவரப் பெற்ற சனந்தர் முதலானோர் நெருங்கி இருமருங்கும் நின்று துதிக்கவும்,

சனந்தர் முதலோர்: சனந்தர், சனாதர், சனற்குமாரர், சனகர் எனப்பெறுவோர். ஊனமில்சாமரை: 'மயிர்நீப்பின் வாழாக் கவரிமா' ஆகலின் என்க.

எண்டிசை யாளர் முடிகள் இணையடி தாங்கி நடப்ப
வண்டுளர் கோதை உமையை மடித்தல மீதுறக் கொண்டு
பண்டை மழவிடை ஏறிப் பண்ணவர் தம்பெரு மானும்
விண்டலம் ஏர்கொள எய்தி விழைதகு காட்சி அளித்தான். 38

அட்டதிக்குப் பாலர்கள் தமது தலைகளில் இரண்டு திருவடிகளைத் தாங்கி நடப்பவும், கடவுளர் தலைவனாகிய இறையவனும் வண்டுகளொலிக்கும் மலரணிந்த கூந்தலையுடைய உமையம்மையைத் தன் மடித்தலத்தின்மேற் பொருந்த இருத்தி பண்டைய இளையவிடையை ஊர்ந்து தேவர் பிரானாரும் விண்ணிடமெல்லாம் அழகுவிளங்கத் தோன்றி விரும்பத்தக்க தரிசனம் தந்தருளினர்.

இணையடி-திருப்பாதுகைகள். என்றும் இளமை மாறாத விடை என்பார் பண்டை மழவிடை ஏறி என்றனர். "பழைய மழவிடை ஏறி' (திருத். மான. 31) என்புழிப்போல.

கண்டு விரிஞ்சன் எழுந்து கரையறு காதல்கை மிக்குக்
கொண்ட புளகங்கள் மல்கக் குவித்தகை சென்னியில் ஏற
விண்ட மொழிகள் குழற இன்பவெள் ளத்திடை ஆடி
மண்டனில் வீழ்ந்து வணங்கி மறைமொழிகொண்டுதுதிப்பான்

பிரமன் கண்டு இருக்கைவிட்டெழுந்து எல்லையற்ற பேரன்பு கைகடந்து மயிர் சிலிர்த்தல் மலியவும், குவித்தகைகள் சிரமேலேறவும், நாத்தழுதழுத்து வெளிப்படு மொழிகள் குழறவும் பேரின்ப வெள்ளத்துள் திளைத்து நிலமுற வீழ்ந்து வணங்கி மறைமொழிகளால் துதி செய்வான்.

## நான்முகன் போற்றி செய்தல்

வேறு

அடியவர் இழைத்த குற்றம் அனந்தமும் பொறுப்பாய் போற்றி
கொடியவர் தம்மைச் செய்யுங் குற்றங்கண் டொறுப்பாய்போற்றி
ஒடிவறு வணக்க முற்றுங் கைக்கொளும் உடையாய் போற்றி
முடிவிலா மொழிகட் கெல்லாம் வாச்சிய முதலே போற்றி. 40

அடியவர் செய்த குற்றம் அனைத்தையும் பொறுத்துக்கொள்வோனே வணக்கம். செய்யும் குற்றம் நோக்கி அது தீரத் தீயோரைத் தண்டம் செய்வோனே வணக்கம். குற்றமற்ற வணக்க முழுதும் கைக்கொள்ளும் அனைத்துயிரையும் அடிமையாக உடையோனே வணக்கம். அளப்பிலா மொழிகளாம் வாசகம் அனைத்திற்கும் பொருள்களின் முதற்பொருளே வணக்கம்.

பிற தெய்வங்கள் சிற்றறிவும், சிறுதொழிலும், வினைவயமும், பிறப்பிறப்பும், சுதந்தரமின்மையும் உடையன. இவை அநாதியே (இயல்பின்) நீங்கி உள்ள சிவபெருமானே முற்றறிவும், தனி முழு முதலுமாய் அத்தெய்வங்களிடமாக நின்று ஏன்றுகொண்டு பயனை அளிப்பவன். ஆகலின் வணக்க முழுதும் கைக் கொளுதற்குரிய உரிமை இயல்பாக உடையன் என்க.

சீதநீர் உலகம் போற்றுந் தேவர்க்குந் தேவே போற்றி
கோதற உண்மை காட்டுங் குரவர்க்கும் குருவே போற்றி
பூதநா யகனே போற்றி புரீசர்க்கும் ஈசா போற்றி
பாதியில் உமையை வைத்த பசுபதி போற்றி போற்றி. 41

குளிர்ந்த நீர் சூழ்ந்த உலகிடை ஆன்மாக்கள் துதி செய்யும் கடவுளர்க்குக் கடவுளே (தேவ தேவனே) காத்தருள்க! குற்றமற உண்மைப் பொருளை அனுபவப் பொருளாக உணர்த்தும் ஆசாரியர்க்கும் ஆசாரியனே காத்தருள்க! ஐம்பெரும்பூதங்களுக்கும் தலைவனே காத்தருள்க! விரும்பப்படுகின்ற ஐஸ்வரிய சம்பந்தமுடையவர்க்கும் ஈசனே (மகேசனே) காத்தருள்க! இடப்பாதியில் உமையம்மையை ஏற்றருளிய பசுபதியே காத்தருள்க! காத்தருள்க!!

ஒருமுறை பத்து நூறு யிரமுறை உனதாள் போற்றி
மருவரும் பொருளே போற்றி மறுவலும் போற்றி போற்றி
இருள்கிற மிடற்றாய் போற்றி யென்றுநாத் தழும்ப ஏத்தித்
திருமலர்க் கடவுள் போற்றச் சிவபிரான் அருளிச் செய்யும்.

ஒரு முறை, பத்து முறை, நூறு முறை, ஆயிர முறை உன்னுடைய திருவடிகளுக்கு வணக்கம். எப்பொருளிலும் உடனாய் நிற்கும் அரிய பொருளே வணக்கம். மறுமுறையும் வணக்கம், வணக்கம். திருநீலகண்டனே வணக்கம் என்று பிரமன துதித்துப் போற்றச் சிவபிரான் அருளிச் செய்வர்.

## இறைவன் வரங் கொடுத்தருளல்

உவந்தனம் மறையோய் உன்றன் பத்தியின் உறுதி நோக்கிச்
சிவந்தரும் எம்பால் நீமுன் வேட்டவா திருமா லோடும்
பவந்தரும் உலக மெல்லாம் படைத்தியால் என்று நல்கத்
தவந்திகழ் வேதன் மற்றும் இதுஒன்று தாழ்ந்து வேண்டும். 43

வேதியனே! உன்னுடைய பேரன்பின் பிறழாமையை நோக்கி மகிழ்ந்தனம். நன்மையைச் செய்யும் எம்மிடை நீ முன்னர் விரும்பியவாறு திருமாலொடும் பிறப்புப் பெறும் உலக முழுதும் சிருட்டி செய்வாயாக என்று அருள் செய்யத் தவத்தால் விளங்குகின்ற பிரமன் மேலும் ஈதொன்றைத் தாழ்ந்து வேண்டுவான்.

என்றன்ஆத் தான மாக யான்உறை இருக்கை தன்னை
உன்றன்ஆத் தான மாகக் கோடலான் உம்பர் ஏறே
நன்றும்இத் தானம் என்றும் நவில்சிவாத் தானப் பேரால்
நின்றிட இங்கு நாளும் நீஇனி துறைதல் வேண்டும். 44

என்னுடைய இருப்பிடமாக யான் உறைகின்ற இவ்விருக்கையை உன்னுடைய இருப்பிடமாகக் கொள்ளுதலினால் தேவர் தலைவனே! பெரிதும் இவ்விடம் என்றும் பேசப்பெறும் சிவாத்தானம் எனும் பெயரால் நிலைபெற இங்குஎக்காலத்தும்நீ இனிதாக எழுந்தருளியிருத்தல்வேண்டும்

நின்னருட் குரியே னாகி நின்பணி தலைநின் றுன
உன்னடி யிணைக்கீழ்ப் பத்தி உலப்புறா தடியேன் என்றும்
நன்னெறி ஒழுகச் செய்யாய் நவில்சிவாத் தானத் தெய்தி
என்னரே யெனினும் நின்னை ஏத்தினோர் உய்யக் கோடி. 45

நின்னருளிற்குப் பாத்திரனாகி நின் அருள் தொண்டில் தலைநின்று உன்னுடைய திருவடிகளின்கீழ நீங்காத பேரன்பு கெடாது அடியன் எந்நாளும் திருநெறியில் ஒழுகுமாறு அருளைச் செய்வாய். சிவாத்தானம் எனப்படும் இங்கெய்தி நின்னைத் துதித்தோர் எத்துணைக் கீழ்மக்களெனினும அவரையும் உய்யக்கொள்வாய்.

இறைவனிடத்துப் பேரன்பும், நிலைபெற ஒழுக்கில் நிற்றலும் அவனே அருள் செய்யவேண்டு மாகலின் குறையிரந்தனர். என்னரே எனினும் எனபதன் பொருளை 'என்னரே யாயினும் யாவதொன் றெண்ணுதல்' (கந்த புராணம்) என்புழிக் காண்க.

உவாமுதற் சிறந்த நாளின் உடைதிரைப் பிரம தீர்த்தத்
தவாவுடன் ஆடிச் செய்யுங் கடன்முடித் தடிகேள் உன்னைத்
தவாதசீர்ச் சிவாத்தா னத்து வழிபடுந் தகையோர் செல்வக்
குவாலொடும் இனிது வாழ்ந்து முத்தியிற் கூடச் செய்யாய். 46

அடிகளே! பௌர்ணிமி, அமாவாசை முதலிய சிறந்த நாட்களில் கரையில் மோதி உடைகின்ற திரையையுடைய பிரம தீர்த்தத்தில் விருப்புடன் மூழ்கிச் செய்யும் அனுட்டானுதிகள் முடித்து உன்னைக்கெடாத சிறப்பினையுடைய சிவாத்தானத் தலத்தில் வழிபாடு செய்யும் தக்கோர் பெருஞ் செல்வக் குவியலொடும் இனிது வாழ்ந்து கழித்து முத்திப் பேற்றினைத் தலைப்படச் செய்வாய்,

என்றிரந் தேத்த எல்லாம் அருள்புரிந் திலிங்கத் தெங்கோன்
ஒன்றினன் அயனும் மாலை உலகொடும் விழுங்கி மீளத்
தோன்றுபோல் முறையான் நல்கித் துகளறு சிவாத்தா னத்தின்
மன்றவன் அருளான் முன்னர் வைகினன் உவகை கூர்ந்து. 47

என்று குறையிரந்து துதிக்க யாவும் திருவருள் பாலித்து எம்பெருமானார் சிவலிங்கத்தில் வேறற விளங்கினர். பிரமனும் திருமாலை உலகொடும் ஒடுக்கி மீளவும் அவ்வொடுங்கியவாறே தோற்றுவித்துக் குற்றமற்ற சிவாத்தானத்தில் கூத்தப் பிரானின் திருவருளால் அவர் திருமுன்பு மகிழ்ச்சி மீக்கூர்ந்து வைகினன்.

எழுசீரடி யாசிரிய விருத்தம்

முந்துற மனத்தைத் தோற்றினன் அதன்பால் முழங்குகா
யத்திரி யதனில், சந்தைகள் அவற்றிற் சாமம்அச் சாமந் தன்னிடை
யெசுர்கள்அங் கவற்றின், மைந்துடை நெடுமால் அவனிடைப்
பைங்கூழ் பயிர்களின் மதியம்அம் மதியின். உந்துறும் பசுக்கள்
பசுக்களின் மகவான் உவனிடை உலகெலாந் தந்தான். 48

முன்னதாக மனத்தைப் படைத்தனன். அம்மனத்தின்கண் ஒலிக்கின்ற காயத்திரி மந்திரத்தையும், வேதசந்தசுகளும், அவற்றில் சாமவேதத்தையும், அதனிடை எசுர் வேதத்தையும், அங்கவற்றின் வலிமை அமைந்த திருமாலையும், அவரிடைப் பசிய பயிர்களையும், அப்பயிரிடைச் சந்திரனையும், அச்சந்திரனிடத்து வெளிப்படும் பசுக்களும், பசுக்களினின்றும் இந்திரனையும், அவனிடத்து உலகம் யாவையும் உதவினன்.

சந்தசு—ஆரியயாப்பின் இலக்கணம.

இம்முறை ஒருவர் ஒருவரைப் படைத்துச் செருக்கும்மற்
றிவர்களைப் பரமென், றும்மைவல் வினையான் மருளுநர் மருள்க
உண்மைநூல் உணர்ந்தருள் கூடுஞ், செம்மையோ ரெல்லாம் விட—
மிடற் றடக்கித் தேவரைப் புரந்துயர் குணங்கள், மும்மையுங்
கடந்த முதல்வனே எவர்க்கும் மூலகா ரணனெனத் தெளிவார். 49

இங்ஙனம் ஒருவர் ஒருவரைச் சிருட்டித்தலால் செருக்கடையும் இவர்களை முதற்பொருளென்று நினைந்து முற்பிறப்பிற் செய்த தீவினையால் மயங்குவோர் மயங்குவோராக. மேலைத்தவத்தால் மெய்ந்நூல்களை உணர்ந்து திருவருளைத் தலைப்படும் திரிபிலராய செவ்வியோர் யாவரும் விடத்தைக் கண்டத் தடக்கித் தேவரைக் காத்து, முக்குணங்களையும் கடந்து உயர்ந்த தனிமுழுமுதற்பொருளே யாவர்க்கும் மூலகாரணனெனத் தெளிவார் ஆவர்.

ஓரோர் செயலையும் இறைவன் அருளாற் பெற்று அதனை மறந்து செருக்கி இழிநிலை யடைந்த செய்தியைப் பல வரலாறுகளிற் காணலாம். வல்வினையால் எனவே தவத்தால் என அதற்குரிய காரணம் வருவிக்கப்பட்டது. 'உயர்' என்னும் அடை குணங்களுள் ஏற்றிழிவு உடையவற்றிற்குப் பொருந்தாமையான், கடந்து உயர்ந்த எனக்கொள்ளப்பட்டது. 'நிர்க்குணன்' குணாதீதன் என்னும் திருநாமங்கள் இம்மூன்றனையும் கடந்தமையை விளக்கும். 'எண்குணன்' என்பது அருட்குணங்கள் எட்டனையும் உடையோன் ஆகவே முரணின்மை அறிக. மும்மை—மூன்று. 'தெரிமாண் தமிழ் மும்மைத் தென்னம் பொருப்பன்' என்புழிப் போல. 'பிரமன் முதலான முத்தேவர் அவாந்தர காரணர்' சிவபிரான் ஒருவனே காரணர்களைப் படைத்துக் காத்து அழிக்கும் மூல காரணன் எனத்தெளிதல் வேண்டும்.

சிவாத்தானப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் -632

---

# மணிகண்டேசப் படலம்

எழுசீரடி யாசிரிய விருத்தம்

ஞிமிறுகால் உழக்க முகைஉடைந் தலர்ந்து நெட்டிதழ் வாய்-
தொறும் நறவம், உமிழ்மலர்த் தடஞ்சூழ் திருச்சிவாத் தானத்
துண்மையைத் தெரிந்தவா றுரைத்தாம், அமிழ்தமும் கைப்பக்
குழாங்குழா மாகி அறிஞர்தாம் கழகங்கள் தோறும், தமிழ்தெரி
காஞ்சி வரைப்பினில் மணிகண்டேச்சரத் தலத்தியல் புரைப்பாம்.

வண்டு காலால் மிதிக்க அரும்பு முறுக்குடைந்தலர்ந்து நீண்ட இதழ்களினிடந்தொறும் தேனைச் சொரிகின்ற மலர்கள் நிரம்பிய தடங்கள் சூழ்ந்த செல்வச் சிவாத்தானத்தினது தோற்றத்தை அறிந்த அளவிலே கூறினேம். நாவால் நுகரப்படும் தேவருணவாகிய அமிழ்தமும் கசக்கும்படி அறிஞர்கள் கூட்டம் கூட்டமாய்க்கழகங்கள்தோறும்இருந்து தமிழை ஆராய்கின்ற காஞ்சி எல்லையில் 'மணிகண்டேசம்' என்னும் திருத்தலத்தின் வரலாற்றினைக் கூறுவாம்.

மிஞிறு என்பது எழுத்து நிலைமாறி ஞிமிறென்றாயது, சிவிறி விசிறி ஆயதுபோல. இதனை 'மிஞிறு ஞிமிறாக விளங்க' (கச்சி. ஆ. 414). உண்மை-தோற்றம். 'உண்மை பிறத்தலையும்' (திருக். பரி. 336).

அமரரும் அசுரரும் அயன்தனை இரத்தல்

பாட்டளி உளரும் கற்பக நறுந்தார்ப் பனிமுடிக் கடவுளர் தாமும், வாட்டிறல் படைத்த அசுரரும் முன்னாள் வல்வினை இறப்-பினுக் கஞ்சி, வேட்டனர் சாவா மருந்தினைப் பெறுவான் வெறி-நறுக் கொப்புளித் தலர்ந்த, தோட்டணிக் கமலக் கிழவனை எய்தித் துணையடி பழிச்சிநின் றுரைப்பார். 2

இசை பாடி வண்டுகள் சுழலும் கற்பக மலரின் நறிய மாலையை அணிந்த குளிர்ச்சியையுடைய முடி சூடிய தேவரும் வாள் வலிமை படைத்த அசுரரும் முற் காலத்தில் நீக்கலாகா வினைவழி நிகழும இறப்பினுக்கு அஞ்சிச் சாவாமைக்குக் காரணமாகிய மருந்தினைப் பெறு வான் விரும்பி வாசனை கொண்ட தேனையுமிழ்ந்தலர்ந்த இதழ் வரிசை யையுடைய தாமரை மலரில் விளங்கும் பிரமனை அடைந்து இணையடி களைத் துதித்து நின்றுரைப்பார்.

கற்பக மலரில் வண்டு மூசாமையின், இனவடை. 'சாவா மருந்து-உண்ணப்படும் பொருள் அமிர்தம். 'சாவா மருந்து சாவாமைக்குக் காரணமாகிய மருந்து' (திருக். பரி. 82).

முக்குணப் பகுப்பின் மூவுருக்கொண்டு முத்தொழில் இயற்றி-யோய் எங்குந், தொக்கநின் விழிப்பின் இமைப்பினில் எமக்குத் தோற்றமும் ஒடுக்கமும் ஆமால், ஒக்கநாம் இறப்புக் கஞ்சிவந் தடைந்தேம் உலப்புறு திருந்துபோர் புரியத், தக்கதோர் உபாயந் தெரித்தெமக் குரையாய் தலைவனே என்பது கேட்டு. 3

இராசதம், சாத்துவிகம், தாமதம் என்னும் முக்குணப் பகுப்பினால் பிரமன், மால், உருத்திரன் வடிவு கொண்டு படைத்தல், காத்தல், அழித் தல் என்னும் முத்தொழில் யாண்டும் நடாத்துவோய்! உனக்கமைந்த பகலிரவினில் பல்பிறப் பிறப்புக்கள் எங்களுக்கு நிகழும். யாம் ஒருசேர இறப்பினுக்கஞ்சி வந்தடைந்தோம். இறவாது வாழ்ந்து போரைச் செய் யத் தகுந்ததோர் உபாயத்தை ஆராய்ந்து எங்களுக்கு உரைத்தல் வேண்டும் தலைவனே என்று கூறக் கேட்டு,

காலபேதம் அதிகாரிகளின் திறத்தால் இங்ஙனம் வருவனஉள. 'சத்துவ முதலிய குணங்களான் மூவராகிய முதற் கடவுள்'............ (திருக். 1 ஆம் அதி. அவதாரிகை). பிரமனுக்குரிய ஒரு பகலில் பதினான்கிந் திரர்கள் இறப்பார்கள். காலப்பிரமாணம என்னும் தலைப்பிற் காண்க.

மடநடைக் கலைமான் இளமுலை திளைக்கும் மார்பினான் அவ-ரொடும் எழுந்து, நடலைதீர் காட்சி வைகுந்த வரைப்பின் நண்ணுபு விழியுறக் கண்டான், படவரா அணையின் முனிவரர் பழிச்ச மலர்-மகள் பதாம்புயம் வருட, அடர்சிறைக் கலுழன் முதலியோர் சூழ அறிதுயில் அமர்ந்தநா யகனை. 4

மடப்பம் வாய்ந்த நடையினையுடைய கலைமகளின் போக நுகரும் பிரமன் அவரொடும் போய் துன்பம் தீர்ந்த இனிய காட்சி அமைந்த வைகுந்த உலகத்தை நண்ணி ஆயிரம் படங்கொண்ட ஆதிசேடனாகிய பாயலில் முனிவர்கள் துதிசெய்யத் திருமகள் பாததாமரைகளைத் தைவரச் செறிந்த சிறகுகளையுடைய கருடாழ்வார் முதலியோர் சூழ்ந் திருப்ப யோக நித்திரையில் விரும்பியிருந்த நாயகனைக் கண்களி கூரத் தரிசித்தனன்.

மலரவன் முதலோர் மாயனைவேண்டல்

கண்டுநாத் தழும்பத் தனித்தனி துதித்துக் கண்துயில் எழுப்பி-முன் வணங்கி, முண்டகன் முதலாஞ் சுராசுரர் குழுமி மொழிவ-ரால் இறப்பினுக் கஞ்சி, ஒண்டளிர்ச் சரணஞ் சரணமென் றடைந்தேம் உலப்பினைக் கடக்குமா றெமக்குத், தண்துழாய் அலங்-கற் கருணையங் கடலே சாற்றென நாரணன் எழுந்து. 5

கண்டு நாத்தழும் பேறத் தனித்தனி துதிசெய்து துயிலெடை நிலையால் துயிலெழுப்பித் திருமுன்னர் வணங்கி மலரோன் முதலாம் சுரரும் அசுரரும் நெருங்கி மொழிவர் 'யாம் இறப்பினை அஞ்சினேம்; ஆகலின் விளக்கமுடைய தளிரையொக்குந் திருவடிகளைப் புகலடைந்தேமாகிய எங்கட்கு இறப்பினைத் தவிர்க்கும் வகை தண்ணிய துழாய் மாலையைத் தரித்த கருணையங்கடலே சாற்றுக' என நாரணன் எழுந்து,

நெடிதுபோ தெண்ணிச் செய்வகை துணிந்து நீயிர்மற் றஞ்ச-விர் இனிநாம், முடிவுறு திருப்பக் கடல்கடைந் தெடுத்து முனிவறப் பருகுவாம் அமிழ்தம், கடிபடும் அமிழ்தம் பருகிடின் இறப்பைக் கடக்கலாம் என்றலுங் களிகூர்ந், தடியினை வணங்கிக் கடையுமா றெவ்வா றளக்கரை எனவினு யினரால். 6

நீண்டபொழுது சிந்தித்துச் செயல் வகையைத் தெளிய உணர்ந்து 'நீவிர் அஞ்சுதலைத் தவிர்வீர்! நாம் இனி இறவாதிருத்தற்குத் திருப்பாற் கடலைக் கடைந்தெடுத்து வெறுப்பற (விருப்புற) அமிழ்தத்தைப் பருகுவாம்; நறுஞ்சுவையுடைய அமிழ்தைப் பருகிடின் மரணத்தைத் தவிர்க்கலாம்' என்று கூறிய அளவிலே மகிழ்ச்சிமிக்குத் திருவடிகளில் வணங்கித் 'திருப்பாற்கடலைக் கடையும் வகை எங்ஙனம் என' வினவினர்.

இந்திரை கொழுநன் உளத்திடை எண்ணி எறிபுனல் அருவி-யஞ் சாரல், மந்தரப் பறம்பு மத்தென நாட்டி வாசுகி கயிறெனப் பூட்டிச், சுந்தரத் திருப்பாற் கடலினைக் கடைந்து சுவைஅமிழ் தெடுத்துமென் றுரைப்ப, அந்தநாள் அவர்தாம் பெற்றபே ருவகை யாரெடுத் தியம்பவல் லவரே. 7

இலக்குமி நாயகன் உளத்தினில் நினைந்து, 'அலை எறிகின்ற புனல் கொண்ட அருவி சூழ் சாரலினையுடைய மந்தர மலையை மத்தாக

நாட்டி வாசுகியாகிய பாம்பைக் கயிருகப் பூட்டி அழகிய திருப்பாற்கடலைக் கடைந்து சுவையுடைய அமிழ்தம் பெறுதும், என்று விளக்கம் கூறிய அப்பொழுது அவர்கள் தாம் பெற்ற பெருமகிழ்ச்சியை யாவரெடுத் தியம்ப வல்லவர்.

கடல் கடைந்தமுது காண முயலல்

கரைபொரு திரங்கும் வெண்டிரைத் திருப்பாற் கடலிடை
யாவரும் எய்தி, நிரைமணிக் குவட்டு மந்தரம் நிறுவி நெளிஉடல்
வாசுகி சுற்றி, வரைபடு திரள்தோள் அசுரருஞ் சுரரும் வலிப்புழி
அவர்தமை நோக்கி, விரைநறுந் துளிக்கும் பசுந்துழாய் அலங்கல்
விண்ணவன் ஒன்றுபே சுவனல். 8

கரையிடை மோதி ஒலிக்கும் வெள்ளிய திரைகளையுடைய பாற் கடலில் யாவரும் எய்தி வரிசையாக் கிடக்கின்ற மணிகளைக்கொண்ட சிகரங்களை யுடைய மந்தர மலையை நிறுவி நெளிகின்ற உடலுடைய் வாசுகியைச் சுற்றி மலையை ஒத்த திரண்ட தோளசுரருந் தேவரும் இரு தலை பற்றி வலித்திழுக்குங் காலை நறுமணம், தேன் இவற்றைச் சிந்தும் பசிய துளவ மாலையணிந்த திருமால் அவர் தங்களைப்பார்த்து ஒன்று கூறுவர்.

இருதிறத் தவருள் வான்சுவை அமிழ்தம் எறுழினற் கடைந்-
தெடுத் தவரே, பருகிடத் தகுமால் ஏனையோர் எய்தற் பாலதன்
றென்பது கேட்டுப், பொருதிறல் அசுரர் மகிழ்ந்தெழுந் தார்த்துப்
பொறிஅரா இருபுடை பற்றித், தருவலி மிகையால் ஈர்த்தனர்
அசலம் தன்பெயர் நாட்டிய தன்றே. 9

வானவர் தானவராகிய இரு பகுப்பினருள் தம் வலிமையாற் கடைந்து மிகுசுவையுடைய அமிழ்தைக் கண்டவரே பருகிடத்தக்கவர் ஆவர். பிறர் எய்தற் பாலரல்லர் எனக் கூறக்கேட்டுப் போர்செய்யும் வலிமை அமைந்த அசுரர் மகிழ்ச்சியும் எழுச்சியும் கொண்டு ஆரவாரித் துப் புள்ளிகளையுடைய வாசுகியின் இருமருங்கும் பற்றி மிகு வலிகொண் டிழுத்தனர். அசலம் பிறழாது நின்று தன்பெயரை நிலைநிறுத்தியது.

அமிழ்தம் கண்டவரே அதற்குரியர் எனக்கேட்டு வலியுடையேம் யாமே என மதித்தமையின் அசுரர் ஆரவாரித்தனர். அசலம்—அசைத லில்லது பற்றி மலைக்குப் பெயர். அசையாது நின்று பெயரை நிறுவி யது என்க.

இயக்கல்ஆற் றுமை இளைத்ததா னவரை எதிருறுங் கடவுளர்
நோக்கி, வியத்தக எழுந்து நீர்இனி விடுமின் விடுமின்என் றெய்-
திவா சுகியை, வயத்துடன் பற்றி ஈர்த்தனர் அவரும் வலிஇழந்
தெய்த்தனர் நின்றார், செயத்தகுந் திறமெ தினியென யாருஞ்
சிந்தையிற் கவலைகூர் பொழுது. 10

அசைத்தலும் ஆற்றுது உளம் மெலிந்த அசுரரை எதிர் நிற்கும் தேவர் குழாம் நோக்கி அதிசயிக்கத்தகும் வகையில் உள்ளத் தெழுச்சி கொண்டு நீவிர் இனி விடுமின் விடுமின் என்று நெருங்கி வாசுகியை வலியுடன் பற்றி இழுத்துத் தேவரும் வன்மை யிழந்து இளைத்து நின்றனர். செயத்தக்க வகை இனியா தென யாவரும் மனக்கவலை மிகக் கொள்ளும் அப்பொழுதில்,

விடுமின் விடுமின் என்னும் அடுக்குத் தாம் வெல்வர் என்னும் துணிவு பற்றியது.

வலன்உயிர் செகுத்த வானவன் உயிர்த்த வாலியாங் குரக்கி-
னத் தலைவன், பலகட லிடத்துஞ் சென்றுபாண் டரங்கன் பதாம்-
புயம் அருச்சனை புரிவான், புலன்உயர் சிறப்பின் ஆயிடை இயல்-
பாற் போதலும்மாலயன் முதலோர், நலமுற நோக்கி உவகைமீ
தூர நல்வர வேற்றுநின் றனரால். 11

வலன் என்னும் அசுரனை அழித்த வலாரி என்னும் இந்திரன் ஈன்ற வாலியாகிய குரங்கரசன் பலகடல்களினும் உள்ள தீவுகளிற் புகுந்து சிவபிரான் திருவடி மலர்களில் அறிவாலுயர்ந்த சிறப்பினுல் அருச்சனை புரிவோனுய் அவ்விடத்தில் இயல்பாக வருதலும் பிரமன் மால் முதலானோர் தூரத்தே கண்டுழி இன்முகம் காட்டி மகிழ்ச்சி மேன் மேற் பெருக நல்வருகையான் எதிர்கொண்டனர்.

வந்தவன் அயனை மாயனை வணங்கி வானவர்க் கஞ்சலி
அளித்துச், சிந்தனை ஒருக்கி நீர்இவண் முயலுஞ் செயல்இது என்-
னென வினவக், கந்தமா மலரோன் உள்ளவா றுரைத்துக் கருத-
ருந் தெய்வம்இங் குன்னைத், தந்ததால் எமக்கு நீதுணை செய்யத்
தகுமென இறுத்தனன் அவனும். 12

வந்த வாலி பிரமனையும், மாயனையும் வணங்கி, தேவர்களைக் கைகூப்பித் தொழுது 'நினைவை ஒருமுகப்படுத்தி நீவிர் இங்கு முயலும் இச் செய்கை என்னை' என வினவவே, நறுமணங்கமழும், பெருமை பொருந்திய மலரவன் நிகழ்ந்தவாறு கூறி 'நினைத்தற்கரிய தெய்வமே இவ்விடத் திப் பொழுது உன்னைக் கொணர்ந்து தந்ததாகலின் எங்கட்கு நீ துணை செய்தல் வேண்டு'மென விடை கூறினன். அவ்வாலியும்,

வணங்குமுறை: வணங்கி, அஞ்சலி அளித்து என்றமையின் பொது நோக்கொழித்துச் சிறப்பு நோக்குக் கொள்ளவேண்டும். 'பொது நோக் கொழிமதி புலவர் மாட்டே' எனவும். (புற. ). தெய்வம் தால்: 'தேவரிற் பெற்ற' எனும் திருக்கோவையாரையும் 'முயற்சியும் உளப்பாடு மின்றித்தேவராலே பெற்ற' என்னும் அதன் உரையையும் நோக்குக.

பெருவலி படைத்த சுராசுரர் குழுமிப் பெறலருந் திறத்தி-
னில் எளியேன், ஒருவனே வல்லேன் யாமெலாம் ஒருங்குற் றுத-
தியைக் கடைதுமேல் தெய்வந், தருவது காண்டும் எனநகைத்
தியம்பித் தானவர் கடவுள ரெல்லாம், வருகென விளித்து வாலிமா
சுணத்தின் வாற்புறம் பற்றிநின் றீர்த்தான். 13

பெருவலிமை பெற்ற சுரரும் அசுரரும் கூடி வெற்றி பெறற்கு இயலாத வகையினில் எளியேனுகிய ஒருவன் வல்லன் ஆவனே யாமெல் லோமும் ஒருங்கு கூடிக் கடலைக் கடைவேமாயின் தெய்வம் செய்தலைக் காண்பேம் என நகைத்துக் கூறித் தேவரையும் அசுரரையும் வருகென அழைத்து வாலி பெரும்பாம்பின் வாலினது பக்கத்தில் பற்றி நின் றிழுத்தான்.

நாம் முயலுதும், தெய்வம் விட்ட வழி காண்டும் என்போன் தெய்வ வலியை அவர்கள் பொருட்படுத்தாமைக் குறிப்பிற் கண்டி கழ்ந்தனன் என்பார் நகைத்தென்றனர்.

பருங்கொலைப் படத்தை அசுரருஞ் சுரரும் பற்றினர் தனித்-
தனி ஈர்த்தும், ஒருங்குநின் றீர்த்தும் ஆற்றலா துடைந்து தன்-
புடை ஒதுங்குதல் காணூஉக், கருங்கழல் வாலி விடுமின்நீர் என்-
ணுக் கட்செவி வாலமும் பணமும், இருங்கையிற் பற்றி முறுகுற
வாங்கி ஈர்த்தனன் கடைந்தனன் புணரி. 14

கொலைசெய் பெரும்படப் பக்கத்தை அசுரரும், தேவரும் பற்றி ஓரோர் சாராரே ஈர்த்தும் ஒருங்கு கூடி இழுத்தும் ஆற்றுது தோற்றுத் தன் பக்கம் வந்தொதுங்குதலைக் கண்டு (சமமாகாமை கண்டு) பெருமை பொருந்திய வீரக்கழலை அணிந்த வாலி 'விடுங்கோள் நீவிர்' என்று பாம்பினுடைய வாற்புறமும் தலைப்புறமும் ஆகிய இருபக்கமும் இரு கையினும் பற்றிக் கடுமை பொருந்த வலித்திழுத்துக் கடலைக் கடைந்தனன்.

வாலம்-வால்; வேனல் வரி அணில் வாலத் தன்ன' (புறம்-307-4)

ஒருகரம் முடக்கி ஒருகரம்நீட்டி உவவுநீர் மதுகையிற்
கடைபோ, தருவரைக் குடுமி மந்தரங் கடலுள் ஆழ்தலுங் கச்சப
வடிவாய்த், திருமறு மார்பன் தாங்கஅச் சயிலம் தெண்கடல்
மீச்செல மிதப்பக், கருமுகில் வண்ணன் கரமிசை நீட்டிக்
கனங்கொள இருத்தினன் வரையே. 15

ஒரு கரத்தை முடக்கி மற்ருேர் கரத்தை நீட்டி இங்ஙனம் பல முறை நீட்டியும் முடக்கியும் பாற்கடலை வலிமையாற் கடைகின்றபோது மத்தாகிய மந்தரமலை கடலுள் ஆழ அப்பொழுதே ஸ்ரீவற்சமென்னும் மறுவினை மார்பின்கண் உடைய திருமால் ஆமை வடிவாய் அம்மலையைத் தாங்க மேலெழுந்து கடலில் மிதத்தலான் கரிய மேகம் போன்ற அம் மாயோன் கரத்தை மேலே நீட்டி மலையைக் கனமுண்டாக அழுத்தினன்.

அறுசீரடி யாசிரிய விருத்தம்

இருத்திய பின்னரியேறும் இடம்வல மாக வரையைத்
திரித்துக் கடுகச் சுழற்றித் தெண்டிரை வேலை அலறிச்
சுரித்து விரித்துப் பரந்து துள்ளிக் கொதித்தெழுந் தாட
வருத்திக் கலக்கி மறுக வலித்துக் கடைந்திடு காலை. 16

கையால் இருத்திய பின் குரங்கேருகிய வாலியும் மலையை இடமும் வலமுமாகப் பல பக்கங்களிலும் திருப்பி விரையச் சுழல்வித்துத் தெளிந்த திரையையுடைய கடலாற்றி நீரை மறித்து வீசி விரித்துப் பாவித் துள்ளிப் பொங்கி யெழுந்தாட வருத்திக் கலக்கிச் சுழல் வல்லென வாங்கிக் கடைந்திடு பொழுதில்,

வெரூஉவர விடமெழல்

ஆற்றரி தாகி இளைப்புற் றரவிறை வாயின் நுரைகள்
காற்றி உயிர்ப்பு விடலுங் கடுஞ்சுடு நீர்க்கட லெங்கும்
தோற்று நுரைகள் பரம்பித் தொக்க கலப்பிடை நின்றும்
கூற்றுறழ் ஆலால மென்னுங் கொடுவிடந் தோன்றிய தன்றே. 17

வாசுகி பொறுக்க இயலாததாகி இளைத்து வாயினின்று நுரைகளைக் கக்கிப் பெருமூச்செறிய மிகவும் சுடுகின்ற நீர்மயமாகிய கடலில் எவ்விடத்துந் தோன்றிய அந்நுரைகள் பரவிக் கூடிய கலப்பில் நின்றும் இயமனை ஒத்த ஆலாலம் என்னும் கொடிய விடம் தோன்றியது

அளக்கர் முழுதும் வறப்ப அண்ட கடாகம் அழற்றத்
துளக்கில் உயிர்த்தொகை முற்றுஞ் சுட்டெழும் வல்விடத் [தீயின்
கிளக்கரு வெம்மை கதுவிக் கேழுடல் வாடி வெதும்பி
விளக்க முறும்புகழ் வாலி வெரீயினன் ஓட்ட மெடுத்தான். 18

கடல் முழுதும் வற்றவும், அண்டத்துச்சியும் தீய்ந்து ஒழியவும், நடுக்கமில்லாத உயிர் வருக்கங்களையும் நடுக்குறச் சுட்டும் எழும் கொடிய விடமாகிய நெருப்பின் சொல்லற்கரிய வெப்பம் தாக்கி நன்னிறமேனி வாடி வெதும்பி வென்றியால் விளக்கம் மிகும் புகழினையுடைய வாலியும் அஞ்சினனாய் ஓட்டம் எடுத்தான் (கம்பி நீட்டினான்).

வருகனல் வல்விடந் தாக்கி மாயவன் வெண்ணிற மேனி
கருகினன் அன்றுதொ டங்கிக் கரியனெனப்பெயர் பெற்றான்
திருமல ரோன்உடற் பொன்மை தீர்ந்து புகைநிறம் உற்றான்
வெருவு திசைக்கிறை யோரும் வேற்றுரு வெய்தி அழுதார். 19

கடலினின்றும் வருதீயை யொத்த கொடிய விடம் மோதினமையால் திருமாலின் வெண்ணிறமேனி கருகினன். ஆதலின் அன்று முதல் கரியனென்னும் பெயரைப் பெற்றனன். பிரமன் தன் திருமேனிப் பொன்னிறம் தவிர்ந்து புகை நிறம் எய்தினான். யாவரும் அஞ்சும் ஆற்றலுடைய எண்திசைத் தலைவரும் (இந்திரன் முதலானோரும்) வேற்று வடிவினராகி அழுதனர்.

திருமால் வெண்ணிறம் உடைமை: "கடல் கடைந்திடச் செல்லுறாஉம் வெள்ளைமால்" (பக்கம் 11-இல்.) காண்க.

கடவுளர்யாரும் கைலையை யடைதல்

யாரும் பதைபதைத் தோட்ட மெடுத்தினிச் செய்வதென் னென்று
சார்பு பிறிதொன்றுங் காணார் தாளொடு தாள்கள் இடற
நாரண னேமுதல் வானோர் நண்ணினர்க் கின்ப மளிக்குஞ்
சீர்கெழு வெள்ளிக் கயிலைத் திருமலை நோக்கி நடந்தார். 20

யாவரும் துடிதுடித்து விரைந்தோடி இப்பொழுது செய்வதென்னை என்று பற்றுக்கோடு வேறொன்றுங் காணாராய் நாரணன் முதலான தேவர் நண்ணினர்க்கு இன்பமளிக்குஞ் சிறப்புக்கெழுமிய வெள்ளிமலை எனவும் திருக்கயிலை எனவும் பேசப்பெறும் திருமலையை நோக்கிக் காலொடு கால் தடுத்துத் தள்ளாட நடந்தனர்.

சார்ந்தவர்க்கு இன்பன்: 'சார்ந்தார்க்கு இன்பங்கள் தழைக்கும் வண்ணம் நேர்ந்தவன்' (திருஞா. திருவல்லம்)

வெங்கதிர் தாக்க உடைந்தோர் மென்னிழல் சேர்ந்தெனச்சென்று
மங்கல வெற்பினை எய்தி வஞ்ச விடத்துயர் நீங்கி
அங்கண் வரையை வணங்கி அருளொடும் ஏறி இளங்கால்
தங்கிய போக புரமுன் சற்றிளைப் பாறி இருந்தார். 21

சூரிய கிரணம் தாக்குதலால் மெலிந்தோர் மெல்லிய நிழலைச் சேர்ந்தாலென மங்கலமாகிய திருமலையைச் சென்றடைந்து கொடிய விடத்தினது துயரம் தவிர்ந்து அவ்விடத்து மலையை வணங்கி அன்போடும் ஏறித் தென்றற் காற்றுத் தவழ்கின்ற போக புரத்தின் முனபு சிறிது இளைப்பாறி யிருந்தனர்.

வேறு

படைத்தபெருந் துயர்நீங்கி நாற்றிசையுங் கண்விடுத்துப் பார்ப்போர் அங்கண், விடைக்கொடியோன் திருக்கயிலை விரிசுடர்வெண் கதிர்நீட்டும் விளக்கந் தன்பால், அடைக்கலமென் றுறுந்தம்மைத் தொடர்ந்துவருங் கொடுவிடம்அங் கணைவுறாமைப், புடைத்துந்தித் தள்ளுவான் நீட்டுதடங் கைகளெனப் பொலிவ கண்டார். 22

தாங்களே தோற்றுவித்துக் கொண்ட பெரியதுன்பத்தினின்றும் நீங்கி நாற்றிசையும் சுற்றிப் பார்ப்போராகிய திருமாலாதி தேவர்கள் அவ்விடத்தில் இடபக்கொடியை யுடையவனது திருக்கயிலை விரிந்த சுடர்விடு வெள்ளியகதிர்கள் நீட்டுதலான் ஆகும் விளக்கம் தன்னிடத்து அடைக்கலம் என்று வந்துறும் தங்களைத் தொடர்ந்து துரத்தி வருங் கொடிய விடம் அங்கே வந்து வருத்தாதபடி அடித்துப் பிடர் பிடித்துத் தள்ள நீட்டுகின்ற நீண்ட கைகளை ஒப்பப் பொலிவன எனக் கண்டனர்.

கடல்அகடு கிழித்தெழுந்த விடவேகம் ஆற்றாது கழிய நொந்தார், இடர்பெரியர் அளித்தக்கார் அந்தோஎன் றிரங்கினபோல் இலகும் வெள்ளித், தடவரைமேல் தூங்கருவி பனித்திவலை நீர்தங்கள் முகத்து வீசப், படரும்நெடுந் தடங்கொடிகள் சாந்தாற்றித் தொழில் செய்யும் பான்மை கண்டார். 23

கடலில் நடுவிடத்தைக் கிழித்தெழுந்த விடத்தினது தாக்கும் வேகத்தைப்பொருது பெரிதும் வருந்தினர்; பேரிடர் உற்றனர்; காப்பாற்றத் தக்கவர் இவர்; ஐயோ என்றிரங்கி அருளுதலைப்போலப் பிரகாசிக்கும் பெரிய வெள்ளிமலையினின்றும் இழிகின்ற அருவியின் குளிர்ந்த நீர்த்துளிகள் தங்கள் முகத்தில் வீசவும், மேற்செல்லும் நீண்ட பெரிய கொடிகள் சிவிறியினைப்போல இளைப்புத்தீர அசையவும் ஆய செயல் செய்யும் தன்மையைக் கண்டனர்.

அச்சமுற வருவிடத்தை யானெடுத்துப் பருகுவலென் றூற்றல் சாலப், பச்சைவரை உயர்கயிலைப் பறம்புவாய் அங்காந்த பரிசே போலச் ,செச்சைமணி கிடந்திமைக்கும் முழைகள்தொறும் வெண்ணீறு திகழப் பூத்த, பொச்சமிலா முனிவர்குழாம் நிரைநிரையா வீற்றிருக்கும் பொலிவு கண்டார். 24

அச்சம் மிகும்படி வாரா நின்ற விடத்தை நான் எடுத்துப் பருகுவேன் என்று வலிமை நிரம்பிய பசிய மூங்கில்களைக் கொண்ட உயர்ந்த கயிலைமலை வாயைத்திறந்த தன்மை போலச் செம்மணியாகிய மாணிக்கங்கள் கிடந்த ஒளிவிடும் குகைகள் தொறும் வெண்ணீறு விளங்கப் பொலிவு பெற்ற பொய்யிலாத முனிவர் கூட்டம் வரிசை வரிசையாக நிகரின்றியிருக்கும் விளக்கத்தைக் கண்டனர்.

அங்காத்தல்—வாய் திறத்தல். செச்சை—சிவப்பு. பறம்பு—மலை. முனிவரர் தீங்கின்றியிருத்தலும் காரணமென்க.

அழுந்தாழிப் புனலகத்து வடவையும்அக் கடுவெம்மைக் காற்று தங்கண், எழுந்தோடி முன்னுகத் திருக்கயிலைப் பருப்பதத்தில் எய்தி முன்னு, விழுந்தாறு தன்னில்வரங் கிடப்பதென வயங்கும் ஒளி மேவு செக்கர்ச், செழுந்தாம மணிபடுத்த நெறிநோக்கி அந் நெறிமேற் சேற லுற்றூர். 25

ஆழ்ந்த கடல் நீரிடைக் கரந்து நிற்கும் வடவாமுகாக்கினியும் அக்கொடிய விட வெம்மைக்குச் சிறிதும் பொருது அவ்விடத்தினின்றும் பெயர்ந்தோடித் தமக்கு முன்னமே திருக்கயிலைமலையை அடைந்து திரு முன் வழியில் வரங்கிடப்பதென விளங்கும் ஒளி மிகுந்த செந்நிறம் வாய்ந்த வளவிய மாணிக்கங்களை ஒழுங்காகப் பதித்த வழியைக் கண்டு அவ் வழியே மேற் செல்லலுற்றனர்.

வடவா முகாக்கினி பெட்டைக் குதிரையின் முகம் போலும் ஓர் அக்கினி, அது கடல் நீரைப் பொங்கி எழாது தடுத்து வைப்பது. வரம் வேண்டுவோர் சந்நிதியில் வீழ்ந்துகிடத்தல் வழக்கு: நிற்றலினும் இருத்தலில் ஒருவர் முயற்சி குன்றும். அதனினும் முனைப்புக் குன்றுவது கிடத்தலில். இறைவன் அருள்வழி நின்று பொறிபுலன் வழிகளின் நில்லாமையை அவன் வழி நிற்றலென்றும்; கிடத்தலென்றும் கூறுவோம். நினைவிற்கு அறிகுறியாகத் திருக்கோயில்களின் வழியில் இன்றும் வீழ்ந்துகிடத்தலைச் சில தலங்களில் காண்கிறோம். அதனைப்பாடு கிடத்தல், வரம் கிடத்தல் என்க. 'வரங்கிடந் தான் தில்லை யம்பல முன்றிலம் மாயவனே' (திருக்கோ. 86) என்புழிக் காண்க.

இந்திரனூர் பட்டதுயர்க் குளம்இரங்கி அவர்ஊரும் எழிலி சேர, வந்தணுகி எந்தைபிரான் எதிர்நின்று முறையிட்டால் மான முன்னர், முந்துகுட முழமுதலாம் பேரியங்கள் பலமுழங்கு முழக் கங் கேட்டுச், சிந்தைநனி களிகூரச் சார்ங்கன்அயன் முதலியோர் திளைத்துச் சென்றார். 26

தேவேந்திரன் அடைந்த துன்பத்திற்கு மனம் குழைந்து அவ விந்திரன் ஊர்ந்து செல்லும் மேகம் எமது பெருமான் திருமுன் மிக நெருங்கி நின்று தனது தலைவன் குறையை முறையிடல் ஒப்பச் சந்நிதி யில் குட குழா முதலிய பல வாச்சியங்கள் இடியினது முழக்கம்போல முழங்க அம்முழக்கத்தைச் செவிமடுத்து உள்ளம் பெருங்களிகூரச் சார்ங் கம் என்னும் வில்லை ஏந்திய திருமால் அயன் முதலானோர் களிப்பில் மூழ் கிச் சென்றார்.

மங்கல முழக்கங்கள் நன்னிமித்தம் ஆவன.

யாம்எய்தி முறையிடும்போ தருள்தருமோ முனிந்திடுமோ எம்மான் என்று, நாம்எய்திச் செல்வோர்கள் ஆங்காங்குப் பூதகண நாதர் கூடித், தோம்எய்திப் பிழைத்தோருஞ் சரணடை- யின் அருள்சுரக்கும் எங்கோன் என்று, தாம்எய்தித் தம்மியல்பிற் புகழெடுத்தோ துவகேட்டுத் தளர்வு தீர்ந்தார். 27

நாம் திருமுன்பெய்தி குறைதீர வேண்டுங்கால் நமது பெருமான் அருள் செய்வரோ, வெகுள்வரோ என ஐயங்கொண்டதனால் அச்ச மடைந்து செல்லுந் திருமால் முதலானோர், பலப்பல இடங்களில் பூத கணநாதர்கள் தம்முட்கூடி அறிவின்மையால் பிழை செய்தோரும் புக லடையின் அருள் சுரந்து காப்பன் எம் தலைவன் என்று தம்முடைய அநுபவங்களைத் தம் இச்சையில் இறைவன் புகழைத்தூக்கிச் சொல்லுவ கேட்டுத் தளர்ச்சி நீங்கினர்.

திருவருளை நினையாது சென்று துன்பத்தில் சிக்கிக்கொண்டனர். ஆதலின், பிழைபொறுக்குமோ, அப்பிழையை அனுபவிக்க வெகுளுமோ என ஐயுற்றனர். எதிர் பாராத வகையில், தம் ஐயம் தீர்த்தலின் 'தம் இயல்பில்' எனக்கூறினர். இவ்வாறே 'இயல்பால்' 11-ஆம் செய்யுளி லும் வந்தது. நாம்—அச்சம். தோம்—குற்றம்.

தம்மினத்தோர் வரவுதனை முன்னெய்தி அறிவிப்பச் சார்வோ ரென்ன, அம்மலைவாழ் எண்ணிலா அரிபிரமர் சேவைசெய்யும் அமையம் பார்த்துக், கொம்மைமழ விடைப்பெருமான் கோயிலி- னுட் சென்றணையக் குறித்து நோக்கி, விம்மிஎழும் பெருமகிழ்ச்சி தலைசிறப்ப மாலயனும் விரைந்து செல்வார். 28

தம் இனத்தவராகிய திருமால் பிரமன் வருகையை முன்சென்று அறிவிக்கச் சார்வாரைப் போல அம்மலையிற் சென்று கூடிய அளவில் ராகிய அரிபிரமாக்கள் திருத்தொண்டு செய்யும் சமையத்தைப் பார்த்து

மிக்க இளமை பொருந்திய விடையை உடைய பெருமானது திருக்கோயி லினுட் சென்றணைதற்கு எண்ணிப் பார்த்துப் பூரித்தெழும் பெரிய மகிழ்ச்சி தலையாய உயர்வெய்தத் திருமாலும் பிரமனும் விரைந்து செல்வார்.

எம்பிரான் உருக்கொண்டங் குறைவோரை அவனெனச்-
சென்றெய்தி ஓர்பால், அம்பிகைஇ லாமையினால் அவனல்லர் எனத்-
தெளிந்தே அப்பால் ஏகிச், செம்பதுமை வளர்மார்பன் அயன்-
முதலாம் யாவர்களுஞ் சேர ஈண்டி, நம்பன் அமர்ந் தினிதுறையும்
திருக்கோயிற் கடைத்தலையை நண்ணினரால். 29

செந்தாமரையவளாகிய திருத்தங்கு மார்பினனும், பிரமனும், ஏனைய தேவர்களும் யாவரும் ஒருங்கு சேர்ந்து எம்முடைய தலைவனாகிய சிவபிரானது திருவுருவாகிய சாரூபம் பெற்றுத் திருக்கயிலையில் எழுந் தருளுவோரைப் பெருமானென அணுகி இடப்புறத்து உமையம்மையார் பங்குகொள்ளாத வடிவு நோக்கி அப்பெருமானல்லர் என ஐயந்தீரத் தெளிந்து அதற்குமேலும் போய் நம்பன் விரும்பி இனிது விற்றிருக்குந் திருக்கோயிலின் கடை வாயிலை நண்ணினர்.

கணங்கள்மிடை முதல்தடையில் தடையுண்டு நின்றனர்கள்
கருமதேவர், உணங்குதயித் தியர்இரண்டிற் கடவுளர்கள் மூன்றில்-
ஒரு நான்கு தன்னில், அணங்கறுசாத் தியர்முதலோர் மருத்துக்-
கள் முனிவரெலாம் ஐந்தில் ஆறில், நிணங்கமழ்வேல் திசைக்கிறை-
வர் எண்மர்களுந் தடையுண்டு நின்றார் அன்றே. 30

சிவகணங்கள் நெருங்கியுள்ள முதல் வாயிலில் கரும தேவரும், இரண்டாந் திருவாயிலில் வாடிய அசுரரும், மூன்றில் தேவரும், நான்கில் வருத்தந் தவிர் சாத்தியர் முதலோரும் மருத்துக்களும், ஐந்தில் முனிவர் களும், பகைவருடைய ஊன்நாற்றம் வீசும் வேலையுடைய எண்டிசைத் தலைவரும் தடையுண்டு நின்றனர்.

வேள்வி முதலிய நல்வினை செய்து அவற்றின் பயனாகத் தேவ ரானோர் கருமதேவர். பிரமன் படைப்பிலே தேவராகத் தோன்றினோர் கடவுளர். சாத்தியர்-தருமன் புதல்வர் பன்னிருவர் எனவும், மருத்துவர்-தேவ வைத்தியர், அசுவினி தேவர்கள் காற்று வடிவமாய்ச் சஞ்சரிக்கும் நாற்பத்தொன்பதின்மர் எனவும் கூறுப.

இறைவனை வணங்கல்

தாமரையோன் திருமாலுந் தடையின்றி அணைந்துதனித்
தடையின் வைகும், தேமருதார் நந்திபிரான் அடிபணிந்தார்
அவன் கொண்டு செலுத்தச் சென்று, காமருசீர் அரம்பையர்கள்
ஆடலொடு பாடலருக் கடியார் செல்வப், பூமருபே ரவைநாப்பண்
அமர்ந்தருளும் பெருவாழ்வின் பொலிவைக் கண்டார். 31

பிரமனும், திருமாலும் தடையுண்ணுது அணைந்து திரு அனுக்கன் திருவாயிலில் வைகும தேன் மருவும் மாலையை அணிந்த நந்தி பெருமான் திருவடியைப் பணிந்து அப்பிரமன் கொண்டு செல்லச் சென்று உள்புக்கு விருப்பம் மிக்க அழகு வாய்ந்த அரம்பையர்களின் ஆடலும் அதற்கியையப் பாடலும் நீங்காத விளக்கம் நிரம்பிய செல்வப் பொலிவமைந்த பேரவைக்கண் நடுவில் அமர்ந்தருளும் பெருவாழ்வாகும் பெருமான் பொலிவினைக் கண்டனர்.

பெருவாழ்வு :'செம்பொன் மலைவல்லி தழுவக்குழைந்த மணிமேனிப் பெருவாழ்வு' (திருத். திருநா. ) தனித்தடை – பொது வாயிலின் வேருய சிறப்பு வாயில். 'தடை பலபுக்க பின்பு தனித்தடை' (திருத். மெய்ப், 9.)

கண்டுபெருங் களிகூர்ந்து கணநாதர் பிரம்படியிற் கலங்கி
ஏங்கி, மண்டியபே ரச்சமுடன் அன்பும்இரு புடைஈர்ப்ப வணங்கித்
தாழ்ந்தே, அண்டன்எதிர் நீளிடைநின் றஞ்சலிசென் னியில்ஏற
விழிநீர் வாரக், கொண்டமயிர்ப் புளகமுறப் பலமுறையும் பணிந்-
தெழுந்து குடந்தம் பட்டார். 32

தரிசித்துப் பெருங்களிப்பு மிக்குக், கணநாதர் சந்நிதியை மறைப்பவரைப் பிரம்படியால் ஒதுக்கலின் கலக்க முற்றிரங்கிச் செறிந்த பேரன்பும் பேரச்சமும் இறைவன் மருங்கிலும், புறத்திலும் இழுப்பத் தாழ்ந்து வணங்கி அண்டங்களை எல்லாம் உடையனுகிய பெருமான் திருமுன்பு நீண்ட தொலைவில் நின்று இருகரங்களும் சிரமிசை ஏறவும், விழி நீர் பெருகவும், மயிர் சிலிர்ப்பவும், பல முறையும் வணங்கி எழுந்து வளைந்து கரங்குவித்தார்.

அன்பும் அச்சமும்: 'அன்பு நீங்கா அச்சமுடன் அடுத்த திருத்தோ ழமைப்பணியால்' (திருத். ஏயர்.)

கொச்சகக் கலிப்பா

தூரத்தே இவர்நிற்ப அணித்தாகத் தொழுதணைந்து
வாரத்தால் நந்திபிரான் மலரோனுந் திருமாலுஞ்
சேரத்தாம் வந்ததிறம் விண்ணப்பஞ் செயக்கொன்றை
ஈரத்தா ருடையானும் ஈண்டவரைத் தருகென்ருன். 33

திருமாலும், பிரமனும் வணங்கித் தூரத்தே நிற்க, நந்தி பிரானர் அன்பொடும தொழுதணுகிச் சேரஅவர்கள் வந்ததிறத்தினை இறைவன்பால் வேண்டுகோள் செய்யத் தேனர் ஈரிய கொன்றை மலர் மாலையைத் தரித்த பெருமானும் அவரை ஈண்டுக் கொணர்க என்றனன்.

ஈண்டு—விரைந்து, இவண். இருபொருளும் கொள்க.

நந்திபிரான் திருப்பிரம்பை அசைத்தருள நாண்மலர்மேல்
அந்தணனும் நெடியோனும் அஞ்சலிசேர் கரத்தோடும்
வந்தணுகி மருங்குறலும் மணிநிலா நகைமுகிழ்ப்பப்
பைந்தொடியாள் ஒருகூற்றிற் பரம்பொருள்மற் றிதுகூறும்.

திருநந்தி தேவர் திருப்பிரம்பை அசைத்தலால் அழைத்தருள அன்றலர்ந்த மலரின்மேல் விளங்கும் பிரமனும், திருமாலும் குவித்த கரத்தொடும் வந்து நெருங்கிப் பக்கத்தில் உறுதலும் அழகிய ஒளி தவழ் புன்சிரிப் பரும்பப் பசிய தொடியினை அணிந்த உமையம்மையை ஒரு கூற்றிற் கொண்ட பரம் பொருள் மற்றிதனைக் கூறும்.

திருமால், பிரமன் இருவர் பதமும் திருநந்தி தேவர் பிரம்பால் அழைக்கும் அளவுக்குட்பட்ட பெருமையது. 'மலர்க்கொன்றைத் தொங்கலான் அடியார்க்குச் சுவர்க்கங்கள் பொருளலவே'(திருஞா. ).

மாயன்நீ இருந்தைஉரு வாய்த்தனைஎன் மலர்மேவும்
தூயநீ புகைஉருவந் தோற்றினைஎன் னென்றருளும்
ஆயபொழு தாண்டாண்டுக் கணநாதர் அலைப்பமெலிந்
தேயமுறை முறையிட்டார் புறம்நின்ற இமையவர்கள். 35

கரியோனே! நீ கரியினது நிறம் வாய்த்தனை என்னை? மலரில் மேவும் பொன்னிறமுடைய தூயனாகிய பிரமனே புகை வடிவம் பெறுதற்குக் காரணம் எவன்? என்று வினவியருளும் அது காலை ஆங்காங்குக் கணநாதர் வருத்த உளம் மெலிந்து பொருந்திய முறையில் முறையிட்டனர் புறத்தில் நின்ற தேவர்கள்.

ஏயமுறை: திருமால் பிரமர் தம் துயரை அடக்கி வெளிவிட உள்ளனர். அவரிற்குறைந்த அறிவும், பதமும் உடையோர் தத்தம் தகுதிக்கேற்ப ஆரவாரித்து முறையிடல்.

ஆங்கவர்கள் மிகமுழக்கும் அரஓசை திருச்செவியேற்
றீங்கிதெவன் என்றருள அம்புயத்தோன் எதிர்வணங்கிப்
பாங்குடைய சுராசுரர்உன் பாதங்கள் தொழப்போந்தார்
பூங்கழற்கால் வெம்பூத கணந்தடுப்பப் புறம்நின்றார். 36

தேவர்கள் மிக முழக்கும் 'அரஹர' என்னும் ஒலியைத் திருச்செவியில் ஏற்று 'இம்முழக்கம் என்' னெனப் பெருமான் வினவியருள அவர் திருமுன் வணங்கிப் பிரமன் 'நல்லொழுக்கமுடைய சுரரும், அசுரரும் உன்னுடைய திருவடிகளைத் தொழப் போந்து பொலிவுடைய கழலையணிந்த வெவ்விய பூதகணந் தடுத்தலால் புறத்தில் நின்றனர்.

விளித்தருளிக் கருணைசெய வேண்டுமெனத் திருநோக்கம்
அளித்தெந்தை நந்திதனைப் பணித்தருள அவன்எய்தித்
தெளித்தெழுபல் கணத்தோரைத் தடுத்துள்ளாற் செல்கவெனத்
துளித்தமதுப் பிரம்பசைத்துச் சுராசுரரைப் புகுவித்தான். 37

அழைத்தருளிக் கருணை செய்யவேண்டு'மெனக் குறையிரப்ப எம் தந்தையார் திருநந்தி தேவர்மீது திருக்கண் சாத்துதலாற் பணித்தருள அவர் சென்று உரப்பி எழுகின்ற பல் பூத கணத்தவரைத் தடுத்து 'உள்ளே புகுக' எனத் தேன் திவலை சிந்துகின்ற பிரம்பை அசைத்துச் சுரரையும் அசுரரையும் புகுவித்தனர்.

உய்ந்தனம்உய்ந் தனம்என்றே உம்பர்களுந் தானவரும்
முந்திமணி வாய்தலிடை முடிநெருங்க நுழைந்தேகி
எந்தைபிரான் வீற்றிருக்கும் ஓலக்கம் எதிர்நோக்கிப்
புந்திநிறை களிகூரத் தொழுதெழுந்து போற்றினர். 38

'உய்ந்தேம்! உய்ந்தேம்!!' என்றே தேவர்களும் அசுரர்களும் ஒருவரை ஒருவர் முந்தி மணிகள் பதிக்கப்பெற்ற வாயிலில் முடியொடு முடிமோத நுழைந்து போய் எமது பெருமான் வீற்றிருக்கும் பேரவைக் காட்சியை எதிர்கண்டு உள்ளம் நிறைந்த களிப்பெய்தத் தொழுதெழுந்து துதி செய்தார்.

பிரமன் முறைப்பாடு

அங்கவரை எதிர்நோக்கி நகைத்தருள்கூர்ந் தருள்வாரி
பங்கயத்தோய் உருமாறி முகஞ்சாம்பி மெய்பனிப்ப
இங்கிவர்கட் குற்றதெவன் என்றருள மறைப்புத்தேள்
செங்கையிணை முகிழ்த்திறைஞ்சி விண்ணப்பஞ் செய்கின்றான். 39

அப்பொழுதத் தேவரை எதிர் நோக்கிப் புன்சிரிப்புடன் அருள் மிகுந்து அருட்கடலாகிய பிரான் 'தாமரை மலரோனே! நிறமாறி முகஞ் சோர்ந்து மெய்நடுக்கமுறும்படி இவர்களுக்குற்ற இடையூறு யா'தென்று வினவியருளப், பிரமன் செவ்விய கரங்களைக் கூப்பி வணங்கி முறையிடுகின்றான்.

ஐயனே அடியேங்கள் அறியாமைத் தொடக்குண்ட
கையரேம் ஆதலின்உன் கண்ணருள்பெற் றெய்தாது
வெய்யநறுஞ் சுவைஅமிழ்தம் பெறற்பொருட்டு வெவ்வினையேம்
பையரவான் மந்தரத்தாற் பாற்கடலைக் கடைந்தேமால். 40

தலைவனே! அடிமைகளாகிய யாங்கள் அறியாமையின் வயப்பட்ட சிறுமையை உடையேம். ஆதலின், நினது திருக்கடைக்கண்ணருளைப் பெற்றுப் புகாது விரும்பத்தக்க நறிய சுவையினை யுடைய அமிழ்தத்தைப் பெறும் பொருட்டாகத் தீவினையினேம் வாசுகியையும், மந்தரத்தையும் துணையாகக் கொண்டு பாற்கடலைக் கடைந்தேம்.

அடிமைகள் தலைவன் வழிநின்று செயல் புரியாமைக்குக் காரணம் கூறுவார் சிறுமையேம், வெவ்வினையேம் என்றனர்.

துன்றியதீஞ் சுவைஅமிழ்தந் தோன்றாது விடந்தோன்றி
இன்றுசரா சரம்அனைத்தும் எரிசெய்து நீறாக்கிற்
றன்றினர்ஊர் எரித்தாய்உன் அருளன்றி முயல்வதெலாம்
ஒன்றொழிய ஒன்றாம்என் றுரைக்குமொழி மெய்யாமே. 41

பகைவர் தம்முடைய முப்புரங்களை எரித்தோனே! செறிந்த இனிய சுவையுடைய அமிழ்தம் தோன்றாமல் அதற்கு மாறாக விடந்

தோன்றி இன்று இயங்கியற் பொருள், நிலையியற் பொருள், அனைத்தினையும் எரித்துப் பொடி படுத்திற்று. உன் அருளொடு மாறுபட்டு முயல்வன யாவும் ஒன்றை நினைக்கின் அது ஒழிந்திட்டு வேறு ஒன்றாகும் என்று கூறும் மறைமொழி மெய்யே ஆகும்.

அன்றுதல் - மாறுபடுதல். "அன்றினார் புரம் எரித்தார்க்கு" (திருத். பூச: 1.) முயலுதல்-முனைப்போடு செய்தல். இன்று - ஊழியல்லாத இந்நாள்.

இற்றொழிந்தோர் ஒழியவே றெஞ்சியயாம் சிலர்வந்திங்
குற்றனம்வண் ணமும்மாறி உயங்கினேம் நீயலதோர்
பற்றிலேம் இவ்வளவில் உலகமெலாம் பாழாகும்
சற்றும்இனித் தாழாது தண்ணளிசெய் திரங்காயால். 42

"இறந்தொழிந்தோர் கழிய வேறாக மிகுந்த சில்லேமாகிய யாம் இங்கு வந்து சேர்ந்தனம்; நிறமும் மாறி வாடினோம்; நீ யன்றி வேறோர் களைகண் இல்லோம்; இவ்வளவில் உலக முற்றும் பாழ்படும். இனிச் சிறிதும் காலம் நீட்டியாது தண்ணிய கருணை செய்து இரங்கி அருளுக.

இதுபொழுது காத்திலையேல் எமக்கிறுதி இன்றேஆம்
விதுமுடித்த பெருங்கருணை வெள்ளமே என்றிரந்தான்
மதுமலர்த்தார் விண்ணவரும் மனங்கலங்கி முறையிட்டார்
அதுவுணர்ந்தெம் பெருமானும் அஞ்சலீர் என்றருளி. 43

'இன்னே காவாயெனின் எமக்கு வாழ்நாள் முடியும்காலம் இன்றே ஆகும். இளம்பிறையை அணிந்துவாழ்வித்த பெருங்கருணைப்பெருக்கே!' என்று யாசித்தான். தேன் பொருந்திய கற்பகமலர்மாலையைத் தரித்த தேவரும் மனமயங்கி முறையிட்டனர். அதனைத் திருவுளங் கொண்டு எம்முடைய பெருமானும் 'நீவிர் அஞ்சன்மின்' என்றருள் செய்து.

இறைவன் விடமுண்டருளுதல்

கலி நிலைத்துறை

இருந்த வாறுளத் தெண்ணினன் மலர்க்கரம் நீட்டக்
கருந்த முற்கடு கமலமீச் சிறைஅளி கடுப்பப்
பெருந்தி ருக்கரத் தெய்திஎர் செய்துபே ராளன்
திருந்து பார்வையிற் சிற்றுரு வாய்அடங் கியதால். 44

யாவருங் காண இருந்த அங்கிலையே திருவுளம் பற்றித் தாமரை மலரை ஒக்கும் கரத்தை நீட்டவும் கரியதும் நெருப்புப் போல்வதும் ஆகிய விடம் தாமரை மலர்மேல் சிறகுகளையுடைய வண்டினை ஒப்பப் பெருமையமைந்த திருக்கரத்தில் எய்தி அழகு காட்டிப் பெருவீரன் செவ்விய திருநோக்கில் சிறிய வடிவாய் அடங்கியது.

அண்டர் மாலயன் உலகெலாம் அதிர்வுறப் பரந்து
மண்டு வெஞ்சினக் கடுவலி போய்மலர்க் கரத்தின்
ஒண்ட ளிர்ப்பதத் தடியவர் சிந்தைபோல் ஒடுங்கக்
கண்ட எம்பிரான் பெருமையார் கட்டுரைத் திடுவார். 45

திருமால் பிரமன் தேவர் இவர்கள் தம் இருக்கைகளாகிய வைகுந்தம், சத்தியலோகம், அமராவதி ஆகிய இவ்விடங்களில் யாவரும் நடுக்கங் கொள்ளும்படி பரவிச்செறிந்த கொடிய சினங்கொள் விட வேகம் தணிந்து மலரனைய திருக்கரத்தில், விளக்கம் அமைந்த தளிர் போலும் திருவடியின் கிழ் அடியவர் சிந்தை ஒடுங்குவது போல ஒடுங்கும்படி எண்ணி அமைத்த எம்பெருமானது பெருமையை யாவர் உறுதிபெற உரைக்க வல்லார்.

உலகெலாம் விழுங்கும் பரப்பமைந்த உள்ளத்தைத் திருவடிக்கீழ் அடக்கும் அப்பெருமான் வல்லமையைக் குறிப்பிடும் இவ் அனுபவ அறிவு ஆசிரியர் தம் பெருமையை விளக்கும்.

தன்ன டித்தொழும் பாற்றும்ஓர் தமிழ்முனி கரத்தில்
உன்னு முன்கடற் புனலெலாம் உழுந்தள வாமேல்
அன்ன தெண்கடல் தோன்றிய பெருவிடம் அம்மான்
பொன்ன லர்க்கரத் தடங்கிய தென்பதோர் புகழோ. 46

இறைவனுடைய அடித்தொண்டு செய்யும் ஒப்பற்ற தமிழ் முனிவராகிய அகத்தியர் கரத்தில் நினைக்கு முன்னே கடல் நீர் முற்றும் உழுந்தளவாய் வந்து தங்குமேல் அனைய தெளிந்த கடலில் தோன்றிய பெருநஞ்சம் இறைவன் அழகிய மலர் போலும் திருக்கரத்தில் அடங்கிய தென்று கூறுவது புகழ்தற்குரியதோ? உழுந்து—உளுந்து

தன்—சிவபிரான். நினைக்குமுன் என்பது விரைவு குறித்து வரும் வாய்பாடு. அம்பு படுமுன் தலை துணிந்தது. மருந்து என்னுமுன் நோய் தீர்ந்தது. 'தென்னு என்னு முன்னம் தீசேர் மெழு கொப்பாய்' (திருவா.) இங்கு 'இருவினைப்பாச' (திருத். திருநா. ) என்னும் திருப்பாட்டு நினைவில் தோன்றும். கடலில் தோற்றியது ஏகதேசப் பொருள்.

சேயி தழ்த்தடம் பங்கயக் கரத்திடைச் சிவனுங்
காயும் நஞ்சினைக் காண்தொறும் பதைக்கும்வா னவரைப்
பாயு மால்விடைப் பண்ணவன் பரிந்தெதிர் நோக்கித்
தூய வெண்ணிலாக் குறுநகை முகிழ்த்தனன் சொல்வான். 47

சிவந்த இதழ்களைக் கொண்டு விரிந்த தாமரை மலரனைய திருக்கரத்தில் பொருந்திய உலகை அழிக்கும் விடத்தைக் காணுந் தொறும் நடுக்குறும் தேவரைப் பாய்ந்து செல்லும் பெரிய விடை ஏறும் பரமன் அருள் கூர்ந்து எதிர்நோக்கி வஞ்சங் கலவாத வெள்ளிய ஒளி பரவிய புன்சிரிப்பு முகிழ்த்துக் கூறுவான்.

நடுங்குகின்றனர் ஆதலின் திருவிளையாட்டால் மகிழ்விக்கக் குறுநகை முகிழ்த்துக் கூறுவார்.

செறியும் நஞ்சினை உண்குமோ சேயிடைச் செல்ல
எறிகு மோபுகல் மின்கனென் றருள்செய இமையோர்
வறிது மூங்கையர் போறலும் ஒருபுடை மணந்த
நெறிக ருங்குழல் மலர்முகம் நோக்கினன் நிகழ்த்தும். 48

'வேகம் செறியும் விடத்தை யாம் உண்பேமோ? நெடுந் தொலைவில் அகல எறிவேமோ? கூறுமின்க'ளென்று வினவத்தேவர்கள் வாளா ஊமையரை ஒத்தலும் ஒரு மருங்கு கூடிய நெறித்த கரிய கூந்தலையுடைய அம்மையின் மலர்போலும் முகத்தை நோக்கினனுய்க் கூறுவான்.

இறைவன திருவிளையாட்டான் வினுவத் தேவர். தாம் செய்த பிழையின் விளைவை இறைவனை ஏன்று கொள்க என்னும் மனத்துணிவு இன்மையானும், எறிந்தால் தம் உயிர்க்கு இறுதி உண்டாம் என்னும் அச்சத்தானும் வாளா இருந்தனர்.

அரிவை கேட்டிஇக் கொடுவிடம் அகிலமும் ஒருங்கே
எரிம டுத்ததுன் பார்வையால் இன்னமு தாமால்
புரிவ தொன்றிலை பருகினுற் புகறிநீ என்ன
வரிவி ழிக்கடை தோய்மணிக் கணங்குழை மடமான். 49

அரிவையே கேட்பாய், இக்கொடிய விடம் எல்லா உலகங்களையும் ஒரு சேரத் தீவாய்ப் பெய்தது. உனது அருட் பார்வையால் அது இனிய அமுதமாம். இதனைப் பருகின் இது செய்வதொன்றில்லை. செவ்வரி பரவிய கண்ணின் கடை சென்று தோய்கின்ற மணிகள் பதித்துத் திரண்ட காதணியை யுடைய இளமானனைய அம்மையார்.

உலகெ லாந்தரும் அன்னைஅவ் வுலகின்மேல் வைத்த
அலகி லாப்பெருங் கருணையாற் கொழுநன்மாட் டமைந்த
தலைமை அன்பினுன் மலர்முகம் ஒருபுடை சாய்த்துக்
குலவு செங்கையின் விடத்தினை நோக்கினள் குறித்து. 50

எல்லா உயிர்களையும் ஈன்றருளிய அன்னையாகிய உமையம்மையார் அவ்வுயிர்கள் மேல் வைத்த அளவுட்படாத பெருங் கருணையாலும், நாயகனிடத்து வைத்த தலை சிறந்த அன்பினுலும் தாமரை மலர்போன்ற முகத்தை ஒரு புடை கோட்டி விளங்குகின்ற திருக்கையின் விடத்தினைக் கருதி நோக்கினள.

உயிர்கள் மேல் வைத்த கருணையால் எறியவும், கணவனுரிடத்துள்ள பேரன்பால் நுகரவும் இசையாது நோக்கினர். நோக்கால் விட வேகம் தணித்தல்: ''ஆலம் உண்டமுதம் பொழிதரு நெடுங்கண் அம்பிகை'' (வில்வி. அருச். ) இறைவனை விடம் தன் வயப்படுத் தாமை அம்மை அறிந்து வைத்தும், நோக்கியது அன்பின் செயல்.

மாழை உண்கணி நோக்கலும் திருவுளம் மகிழ்ந்து
பாழி மால்விடை கொடிமிசை உயர்த்தருள் பகவன்
ஏழை வானவர்க் கிரங்கியே இனிதுகண் ணுேடி
ஆழி வல்விடம் பருகினுன் அகிலமும் உய்ய. 51

மாவடுவை ஒத்த மையுண் கண்ணியாகிய உமையம்மையார் நோக்கிய அளவிலே திருவுள்ளம் மகிழ்ச்சி உற்று வலிமையும் பெருமையும் அமைந்த விடை எழுதிய கொடியை மேல் உயர்த்தருள் பகவன் (அபலை) ஏழையராகிய தேவர்க்கு இரங்கியே இனிது கண்ணோட்டம் வைத்து உலகம் உய்யும்படி கடலில் தோன்றிய கொடிய விடத்தைப் பருகினன்.

பருகு வெங்கடு மிடற்றிடை ஏகுழிப் பாரா
மரும லர்ப்பிரான் முகுந்தனே வஞ்சகஞ் செம்மான்
திருமி டற்றினுக் கழகுசெய் தமரர்சே யிழையார்
அருமி டற்றுநூல் காத்தது காண்கென அறைந்தான். 52

பருகும் கொடிய விடம் கண்டத்திடைச் செல்லும்போது பிரமன் பார்த்துத் திருமாலே! வஞ்சவிடம் எம்பிரான் திருக்கழுத்தினுக் கழகு செய்து தேவ மகளிர் திருக்கழுத்தில் விளங்கும் அரிய தாலி நூலைக் காத்ததனைக் காண்கெனக் கூறினன்.

அமுதம் நோக்குகையில் மாறுக எழுந்தமையின் வஞ்ச நஞ்சாயிற்று.

மிடற்றுச் செக்கர்வான் மிசைவிடக் கருமுகி லுறநோய்
கெடத்த ளிர்த்தபைங் கூழெனச் சுராசுரர் கெழுமிக்
கடற்பெ ரும்புனல் உடைத்தெனக் காதல்மீக் கூர
அடற்க ணிச்சியோய் சயசய போற்றிஎன் றார்த்தார். 53

திருக்கழுத்தாகிய செவ்வானில் விடமாகிய கரியமேகம் எழுதலால் நோய் கெடும்படி தழைத்த பசியபயிர் எனச் சுரரும் அசுரரும் குழுமிக் கடலிடத்துள்ள பெருவெள்ளம் கரைபுரண்டாலென்னப் பெருவிருப்பம் மேன்மேலெழ வன்மை அமைந்த மழுப்படையோனே வெல்க! வெல்க!! வணக்கம் என்று ஆரவாரித்தார்.

நார ணாதியர் கிளர்ச்சியை நோக்கிநன் கருளிக்
கோர வல்விடம் மிடற்றிடை அமைத்தனன் குழகன்
ஆர வாயிடை வயிற்றிடை யன்றிமற் றிடைக்கண்
ஆர மைத்திட வல்லவர் அமிழ்தமே யானும். 54

என்றும் இளையன் ஆய சிவபிரான் திருமாலாதி தேவர் பரபரப்பினை நோக்கி நன்றருள் செய்து கொடிய வலிய விடத்தைக் கண்டத்தில் பொருந்த வைத்தனன். வாயில் அல்லது வயிற்றிடைப் பொருந்த வைத்தலன்றி இவ்விரண்டன் இடையாகிய கண்டத்தில் அமிழ்தமே எனினும் யாவர் அமைத்திட வல்லவர்.

குழகன்: "மூப்பது மில்லை பிறப்பதும் இல்லை இறப்பதில்லை" (சுந்தரர் : மூப்பதுமில். 1.) ஆகலின் குழகன் என்க. யாவரும் வெரூஉம் நஞ்சைக் கண்டத் தடக்கி எல்லாம் வல்லவன எனபதை நிலைநாட்டினன்.

சகமெ லாம்பொடி படுத்தெழுந் தழல்விடம் மிடற்றில்
திகழ வைத்தனன் முப்புரம் எரியெழச் சிரித்தோன்
அகல ருந்திறத் தெண்குணம் அமைந்தபே ராண்மைப்
பகவன் மேன்மைமற் றெம்மனோர் அளவிடற் பாற்றோ. 55

உலகங்கள் அனைத்தையும் நீறுக்கிஎழுந் தீயை ஒக்கும் விடத்தைக் கண்டத்தில் விளங்க வைத்தனன் முப்புரம் தீயில் மூழ்கச் சிரித்த பிரான் எஞ்ஞான்றும் நீங்காத எண்குணங்கள் நிறைந்த பெருஞ் சேவகம் நிரம்பிய பகவனின் மேம்பாடு எம்மனோரால் வரையறுக்கப்பெறும் இயல்பினதோ.

ஐசுவரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம் என்னும் ஆறு குணங்களையும் உடையவன் பகவன் எனக் கூறுவர்.

கந்த ரத்திடை அடக்கிய கறைவிடங் காணூஉச்
சுந்த ரத்திரு மாலயன் சுராசுரர் முனிவர்
இந்தி ராதியர் கவலைதீர்ந் தெண்ணருங் களிப்பால்
சிந்தை அன்பொடும் அஞ்சலி சென்னிமேற் கொண்டு 56

திருக்கழுத்தில் அடக்கிய கறுப்பு நிறமாகிய விடத்தைக் கண்டு அழகிய திருமகள் நாயகனும், பிரமனும் சுரரும், அசுரரும், முனிவரும் இந்திரன் முதலானோரும் துயரம் தவிர்ந்து நினைப்பரிய களிப்பினாலே சிந்தையில் எழுந்த அன்புடனே குவித்த கரங்களைத் தலைமேற்கொண்டு,

நீல கண்டனே போற்றிஎண் குணங்களால் நிறைந்த
மூல காரண போற்றிமுன் சிறுவனுக் கிரங்குங்
கால காலனே போற்றிஇன் றெம்முயிர் காத்த
ஏல வார்குழல் பங்கனே போற்றிஎன் றிசைத்தார். 57

'திருநீலகண்டனே போற்றி; எண்குணங்களால் நிரம்பிய மூல காரணபோற்றி; முன்னர் மார்க்கண்டேயர்க்கு இரங்குங் காலனுக்குக் காலனேபோற்றி; இன்று எங்கள் உயிரைக் காத்த ஏலவார்குழலி பங்கனே போற்றி' என்றியம்பினர்.

சிவபுண்ணியப் படலத்துள் நீலகண்டர் திருவுருவப்பாடலைக்காண்க

என்ற போதருள் சுரந்துமக் காற்றல்இன் றளித்தேம்
தொன்று போற்கடல் கடைந்துவான் சுவைஅமிழ் துண்பீர்
பொன்றி லீரெனத் திருவருள் புரிந்தனன் புனிதன்
ஒன்று பின்னரும் வேண்டுவர் மால்முதல் உம்பர். 58

என்று துதித்தபோது புனிதன் கருணை கூர்ந்து 'உங்கட்குக் கடல் கடைந்திடும் ஆற்றலை இப்பொழுது நல்கினேம். முன்புபோல நீவிர் அக்கடலைக் கடைந்து உயர்ந்த சுவையுடைய அமிழ்தம் பெற்று உண்பீர்; அதனால் நெடுங்காலம் அழிவிலீர்' எனத் திருவருளைப் புரிந்தனன். பின்னரும் திருமால் முதலானோர் ஒன்றனை வேண்டுவர்.

பொதுமை நீத்துநின் திருவடிக் கன்புபூண் டொழுகக்
கதுவு நின்னருள் நாள்தொறும் எம்வயிற் கலப்ப
விதுமு டிச்சடை வள்ளலே அருளென வேண்ட
அதுவ ழங்கினன் விடைகொடுத் தருளினன் அமலன். 59

'ஏனைத் தேவரொடும் ஒப்பவையாது அவர் தம்மை விலக்கி நின் திருவடிக்கே சிறப்புடைய அன்பு பூண்டொழுகவும், நீங்காது இறுகப் பற்றியுள்ள திருவருள் எப்பொழுதும் எம்மிடைவிரவவும் இளம்பிறை சூடிய சடைமுடி வள்ளலே அருள்செய்' என வேண்ட அவ்வரத்தை அவர்களுக்கருள் செய்து இயல்பாகவே பாசங்களின் நீங்கியோன் அவர் தம்மைச் செல்ல விடுத்தனன்.

பிரான் திருவடிக்கன்பும், அதனாற் பெறும் அருளும் அப்பெருமானே அருள் செய்தல் வேண்டும். "ஆங்கவ னருளால் பத்திநன் குண்டாம் பத்தியால் அவனரு ளுண்டாம்" என்னும் திருவாக்குணர்க. "அராப்புனை வேணியன் சேய்அருள் வேண்டும் அவிழ்ந்த அனபால், குராப்புனை தண்டையந் தாள்தொழல் வேண்டும்" (கந்தரலங்காரம்) ஆலம்தான் உகந்து அமுது செயவித்தவனாகலின் 'வள்ளலே' என்றனர்.

காஞ்சியை அடைந்து கடவுளர் வழிபடல்

மீண்டு மால்அயன் முதலிய விண்ணவர் குழுமி
ஈண்டு நம்பொருட் டிருள்விடம் பருகினன் இறைவன்
பூண்ட இப்பெரும் பிழைஅறும் படிசிவ பூசை
யாண்டு செய்துமென் றெண்ணினர் தெளிந்தனர் இதனை. 60

மீளவும் திருமால் அயன் முதலிய தேவர் யாவரும் கூடி 'இப்பொழுது நம்பொருட்டுக் கரிய விடத்தை இறைவன் பருகினன். ஆகலின் மேற்கொண்ட இப்பெருங்குற்றம் நீங்கும்படி சிவபூசனையை எவ்விடத்துச் செய்வோம்'என்றாராய்ந்து இதனை நிச்சயித்தனர்.

தலமும் தீர்த்தமும் மூர்த்தியும் சிறந்தமெய்த் தானங்
குலவு காஞ்சிமா நகரமாம் அந்நகர் குறுகி
நலமு றச்சிவ பூசனை உஞற்றிடின் நசியா
அலகில் பாவமும் நசிக்குமென் றப்பதி எய்தி. 61

மூர்த்தி, தலம், தீர்த்தம் இம்மூன்றாலும் சிறப்புடைய மெய்த்தலம் விளங்குகின்ற காஞ்சி என்னும் பெருநகரம் ஆகும். அந்நகரைக் குறுகி நன்மை மிகச் சிவபூசனையைச் செய்திடின் அளவில்லாத அழியாத பாவங்களும் அழியும் என்றப் பதியை அடைந்து,

அன்று தம்உயிர் அளித்தது மணிகண்ட மென்னும்
நன்றி யான்மணி கண்டநா தப்பெயர் இலிங்கம்
வென்ற புண்ணிய கோடிநா தர்க்குமேல் பாங்கர்
ஒன்றும் அன்பினால் இருத்தினர் பூசனை உஞற்றி. 62

திருப்பாற் கடலைக் கடைந்த அந்நாள் தம்முடைய உயிரைப் பாது காத்தளித்தது நீலமணியை ஒக்கும் திருக்கழுத்தென்னும் செய்ந்நன்றி யால், வென்ற புண்ணியகோடி நாதர் எழுந்தருளியுள்ள தலத்திற்கு மேற்குப் பக்கத்தில் மணிகண்டநாதப்பெயர் பூண்ட சிவலிங்க மூர்த்தி யைத் தாபித்து மனம் ஒன்றிய அன்பினால் பூசனையைச் செய்து,

மணிகண் டேசர்தம் அருளினால் வன்பிழை தவிர்ந்து
பணியி னாற்கடல் கடைந்தமிழ் தெடுத்தனர் பருகித்
தணிவில் வெஞ்சினத் தானவர் தமைத்துரந் தகற்றிப்
பிணியும் நீங்கினர் இறப்புறாப் பெருநலம் பெற்றார். 63

மணிகண்டேசப் பெருமான் திருவருளினால் அதிபாதகம் நீங்கி வாசுகி எனனும் பாம்பினால் கடலைக்கடைந்து அமிழ்தம் எடுத்துப் பரு கித் தணியாத கொடுங் கோபமுடைய அசுரர் தம்மைத் துரத்தி அகற்றி நோயும் நீங்கினர்; இறவாத பெருநலமும் பெற்றார்.

தானவர்க்கு அமுது கொடாமையைத் துரந்து அகற்றி என்பதனால் பெறவைத்தார். மாசாத்தன் தளிப்படலம் முதலியவற்றில் காணலாம்.

பணாமணீச வரலாறு

அத்த லத்திடைத் தன்பிழை அகலவா சுகியும்
பத்தி யிற்பணா மணீசனைப் பண்புற இருத்திச்
சுத்த நீர்நிறை அனந்ததீர்த் தத்தடந் தொட்டு
நித்தம் அக்கரைக் கண்இருந் தருச்சனை நிரப்பி. 64

அத்தலத்தின்கண் தனது பிழைதீர வாசுகி என்னும் பெரும் பாம்பும் பேரன்பிற் பணாமணீசனை விதிப்படி தாபித்துத் தூயநீர் நிறைந்த அனந்த தீர்த்தத் தடம் வகுத்து நாடோறும் அக்கரையிலிருந்து அருச் சனை முற்றுறச் செய்து,

பணாம ணீசனைத் தன்பண மணிகளாற் பரவி
நணாவ கத்தமர் நம்பனே நலிவுசெய் விடத்தை
உணாவெ னக்கொளும் உத்தமா எனத்துதித் துமையாள்
மணாளன் மேனியில் இழையெனப் பயில்வரம் பெற்றான். 65

பணாமணீசப் பெருமானைத் தன்னுடைய படத்தின் இரத்தினங்க ளால் பூசனை செய்து திருநணா என்னும் தலத்தில் எழுந்தருளியுள்ள விரும்பியடையத்தக்கவனே! வருத்தம் செய்த விடத்தை உணவு போலக் கொண்டு பருகும் தலைவனே! எனத் துதி செய்து உமையம்மை மணா வாளன் திருமேனியில் அணிகலமாகத் தங்குகின்ற வரத்தினைப் பெற்றனன்.

வாசுகி பாலில் விடம் பெய்த பிழையுந் தவிர்ந்து அணிகலனாக இறைவன் திருமேனியில் விளங்கவும் பேறு பெற்றனன்.

கொங்க லர்ந்தபூந் துணர்தொறும் நறுநறாக் கொழிக்கும்
பொங்கர் சூழ்கலிக் கச்சியுட் பழமறைப் பொருளாய்
அங்கண் வாழ்மணி கண்டனை அருச்சனை ஆற்றித்
துங்க முத்தியிற் சேர்ந்தவர் தொகுப்பின்எண் ணிலரால். 66

நறுமணம் விரிந்த 'பூங்கொத்துக்கள் தோறும் நறிய தேன் செழித்து ஒழுகும் சோலைகள் சூழ்ந்த கலிக்கச்சியுள் அநாதியாய் உள்ள மறைகளின் விளங்கும் பொருளாகி அவ்விடத்தும் விளங்கி வீற்றிருக்கும் மணிகண்டேசனைப் பூசனை புரிந்து உயர்ந்த முத்தியிற் றலைப்பட்டோர் தொகை கூறப்புகின் அளவிலராவர்.

கலி–பெருமை, பொலிவு, எழுச்சி, வலி, ஒலி முதலிய பொருள்களைக் குறிக்கும். 'கலிக்கச்சி' 37-ஆம் பக்கம் 100 செய்யுளிலும் காண்க. துங்கமுத்தி-இரண்டறக்கலத்தல்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

அடுங்காலம் இதுவென்ன விடம்எழலும் நனிவெருவி அயன்-மால் ஏனோர், கொடுங்காலன் றனைக்குமைத்த குரைகழற்கீழ்ச் சரண்புகுதக் கொதித்து வாழ்நாள், பிடுங்காமல் அருள்புரிந்த பரம்பொருளை யன்றியும்ஓர் பிரான்உண் டென்ன, நடுங்காதார் தமைக்காணப் பெற்றிடினும் என்னுள்ளம் நடுங்கு மாதோ. 67

சங்கார காலம் ஈதென்று மதிக்குமாறுவிடம் தோன்றிய அளவிலே பெரிதும் நடுக்க மெய்திப் பிரமன் திருமால் முதலானோர் வலிமை அமைந்த இயமனை உதைத்துருட்டிய ஒலிக்கின்ற வீரக் கழலணிந்த திருவடிக்கீழ் அடைக்கலம் புகச் சினந்து வாழ்நாளைப்பறியாமல், அமுதம் தந்து வாழ்வித்த பரம்பொருளை அன்றியும் ஓர் தலைவனுளன் என்னக் கேட்டு நடுங்காதார் தமைக்காணப் பெற்றிடினும் என் உள்ளம் நடுக்கம் எய்தும்.

இயமனை உதைத்த பிரானுகலின் மரண பயத்தை நீக்குபவன் அவனே; அச்சுதன், அமரர் என்னும் சொற்பொருள்களாகிய அழியாதவன், மரணமில்லாதவர் என்பதன் தாற்பரியம் மக்களை நோக்க நெடுங்காலம் வாழ்பவர் என உணர்த்தும்.

எம்பிரான்' 'திருமாலையும் சிலர் தெய்வமென்று கூற விடமுண்டு அவர்தம்மைக் கருணையால் காத்தனர் என்று திருவெங்கையுலா கூறும். எனவே, விடமுண்டிலரேல் பெயர்தானும் இல்லையாக மறைந்தொழிவர். வணங்குவோரும் இலர் என்பது கருத்து. 'பரங்கெடுப்பவன் நஞ்சையுண்டு' (திருஞா. மழபாடி.). 'சிராப்பள்ளித் தலைவரை நாளும் தலைவரல்லாமை யுரைப்பீர்காள் நிலவரை நீலமுண்டதும் வெள்ளை நிறமாமே' (திருஞா.) நீங்கள் பரம்பொருளென்னக் கொள்ளாதவழி விடம் வெருத்துப்போமோ? நீலகண்டம்' அவனே பரம்பொருளென்பதையுணர்த்தும்'.

மணிகண்டேசப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் 699

# சார்ந்தாசயப் படலம்

கலிநிலைத் துறை

வளைத்த பாப்பணி அணிமணி கண்ட நாயகனும்
முளைத்த வெண்பிறைக் கண்ணியோன் வரவிது மொழிந்தாம்
விளைத்த சூளினால் இளைத்துறும் வியாதனைக் காத்த
இளைத்துச் சார்ந்தவர் சார்பினன் வரவினி இசைப்பாம். 1

புற்றிடமாக வாழும் பாம்பாகிய அணியை அணிந்த மணிகண்டேசப் பெருமானும் அரும்பிய வெண்பிறையைக் கண்ணியாக உடைய பிரான் வரலாறாகிய இதனை மொழிந்தாம். தாம் செய்த சபதத்தினால் இளைத்துச் சரண்புகுந்த வியாத முனிவனுக் கருள்செய்த சார்ந்தவர்க்குச் சார்பினன் ஆவோன் வரலாற்றினை இனிக் கூறுவாம்.

வளைத்த இன அடை. "புற்று டரவா புக்கொளி யூரவி நாசியே" எனவும், "புற்றில் வாளர வார்த்த பிரானை" எனவும் (சுந்தரர் தேவாரம்) காண்க. பிறத்தலால் வருபெயர் பிறை. கண்ணியாகச் சூடல்: "மாதர் பிறைக் கண்ணியானை" (திருநா. திருவையாறு.) சார்ந்தார் ஆச்ரயம்- சார்ந்தார்க்கு ஆதரவு.

வியாசர் முனிவர்க்கு விடுத்த விரிவுரை

பராச ரப்பெயர் முனிவரன் பழுதறு வரத்தால்
தராத லத்திடைத் தோன்றினான் மறைதனிப் பதினெண்
புராணம் ஏனவும் பகுத்துயர் புரவுபூண் டோங்கிப்
பிரானெ னத்தகு வியாதனும் பெரியவன் மேனாள். 2

பராசர முனிவரர் செய்குற்றமற்ற தவத்தால் தரையிடை அவதரித்து, வேதங்களையும், ஒப்பற்ற பதினெண் புராணங்களையும், பிற நூல்களையும் பகுத்துயர் காவல்பூண் டுயர்ந்து தலைவனெனத் தக்க வியாதனும் பெரியவன் முன்னாளில்,

கொடிய பாதகக் கலியுகம் வருநிலை குறித்துப்
படியில் யாங்கினிச் செல்வதென் றஞ்சிமெய் பனித்துக்
கடிந றும்புனற் கங்கைசூழ் காசியின் எய்தி
முடிவில் மாதவஞ் செய்துவீற் றிருந்தனன் முறையால். 3

கொடிய பாவச் செயல்களைப் புரிதற்கு இடனாகிய கலியுகம் வரும் பரிசு கருதி, நிலவுலகில் எவ்விடத்திக் கலியின் கொடுமையைப் போக்குவதென் றுள்ளத்துள் அச்சமெய்தி, உடல் நடுங்கி முடிவாக விளக்கமும், மலர்களால் நறுமணமும் கொண்ட கங்கைநீர் சூழ்ந்த காசியை அடைந்து அழிவில்லாத பெருந்தவத்தை நூல் விதிப்படி செய்து மகிழ்ச்சியோடிருந்தனன்.

காலவன்மையால் வரும் பாவங்களை இட வலிமையால் போக்கிக் கொள்ள எண்ணினர். அஞ்சுவ தஞ்சல் அறிவார் தொழிலாகலின் அஞ்சினர் என்றனர்.

அங்கண் மெய்த்தவர் யாவரும் அவனடி வணங்கி
இங்கெ மக்குநீ மறைமுடி புண்மைஈ தென்னச்
செங்கை நெல்லியின் தெளிவரத் தெருட்டுகென் றிரந்தார்
வெங்கொ டும்பகை வினைக்குறும் பெறிந்துயர் வியாதன். 4

அக்காசியில் வதியும் உண்மைத் தவமுடையோர் யாவரும் வியாசர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, "நீ இப்பொழு தெங்களுக்கு உபநிடதங்களின் உண்மைப் பொருள் இதுவாகும் என்று உள்ளங்கை நெல்லிக் கனியெனத் தெளிவுண்டாகுமாறு தெளிவி" என வேண்டினர். மிகக்கொடிய வினையாகிய பகைக்காட்டை ஞானவாளால் ஏறிந்தமையால் உயர்ந்த வியாத முனிவர்,

நூல்களின் வன்மை மென்மைகளை அறிந்து இடத்திற்கும், காலத்திற்கும், ஏற்புடைப் பொருளிற்கும் கொடுக்கப்பட்டிருக்கும் நிலைகளைக் கழித்து முன்னொடு பின் முரணுதவாறு காண்டல் அரிதாகலின் முடிந்த உண்மைப் பொருளை வினவினர்.

மிருதி நூல்புரா ணத்தொகை வேதநூல் அங்கம்
இருவ கைப்படு நியாயம்ஆ யுள்மறை எழிற்கந்
தருவ வேதம்வில் வேதமோ டருத்தநூல் இவற்றின்
பொருளின் உண்மைமற் றிதுஇது வெனத்தனி புகன்றான். 5

மிருதி பதினெட்டனையும், புராணம் பதினெட்டனையும், வேதம் நான்கனையும், அங்கம் ஆறனையும் நியாயநூல் இரண்டனையும், ஆயுள் நூலையும், கந்தர்வ நூலையும், வில்வித்தைகளையும், பொருள் நூலையும் தனித்தனியாக அவற்றின் உண்மை முடிபுகளைக் கூறினான்.

பெருவ லித்தவ முனிவரர் கேட்டுளம் பிறழா
தொருவ ழிப்படத் துணிந்தொரு வார்த்தையின் எமக்குச்
சுருதி நூல்முடி பிதுவெனத் தொகுத்துரை என்றார்
மருளின் மூழ்கிய சிந்தையின் வியாதமா முனிவன். 6

பெருவன்மை தவத்தால் வாய்த்த முனிவர்கள் அவ்வனைத்தையும் ஒருமுகமாகக்கேட்டு 'மனம் திரியாது ஒருவழிச் செல்ல அறுதியிட்டு ஒரு வார்த்தையின் எங்கட்கு வேதநூல் முடிபிது என வகுத்துச் சொல்லிய தமையும் தொகுத்துச் சொல்' என்றனர். மயக்கத்தின் மூழ்கிய சிந்தையையுடைய வியாச முனிவரன்.

உறுவர் யாரையும் நோக்கிமுன் உரைக்குமா றுகத்
தறுகண் ஆண்மையிற் கூறுதல் உற்றனன் தவத்தீர்
அறிவு நூலெலாம் பன்முறை ஆயினுந் தெளியப்
பெறுவ தொன்றது நாரண னேபரப் பிரமம். 7

முனிவர் யாவரையும் நோக்கால் தழீஇக்கொண்டு முன்பு கூறிய விளக்கத்திற்கு முரணாக வன்கண்மையின் ஆட்சியால், 'தவமுடையீர், அறிவு நூல்களனைத்தினையும் பலகால் ஆராய்ந்தாலும் ஐயமறத் தெளியப் பெறுவது ஒன்றே உள்ளது. அது தான் நாராயணனே முழுமுதல்வன் எனத் தெளிவதாம்.

உறு என்னும் உரிச்சொல்லடியாகப் பிறந்த பெயர் மிக்கோர் ஆகலின், முனிவரைக் குறிப்பதாம்.

வண்ண மாமறை நூற்குமேல் நூலிலை மதியோர்
எண்ணு கேசவன் றனக்குமேல் தெய்வமும் இல்லை
கண்ணும் எவ்வகை நூல்கட்குந் துணிபிது காண்மின்
உண்மை உண்மையீ தெனக்கரம் எடுத்துநின் றுரைத்தான். 8

"சந்தங்கள் அமைந்த பெருமறைக்கு மேம்பட்ட நூலும் இல்லை; அறிவுடையோர் தியானஞ் செய்கின்ற நாராயணனுக்கு மேற்பட்ட தெய்வமும் இல்லை. ஆராயும் எத்திறத்து நூல்களும் கண்ட முடிந்த பொருள் இதனைக் கருத்திருத்துமின்; இது சத்தியம்! சத்தியம்!!" எனக்கரத்தை மேலே உயர்த்திக் கொண்டு கூறினன்.

கரத்தை மேலுயர்த்திச் சூளுரைத்தல் இதனால் அறியப்படுகிறது.

கேட்ட மாதவர் வெரீஇயினர் கிளர்மறைப் பொருட்குக்
கோட்ட மாம்இது எம்மனோர் கோட்டக்க தன்றால்
நாட்டி ஈங்கிவன் புகன்றதென் னென்றுளம் நடுங்கி
நீட்டு செஞ்சடை முனிவரன் றன்னைநேர் நோக்கி. 9

செவி ஏற்ற பெருந்தவ முனிவரர் அஞ்சினர். "விளங்குகின்ற வேதத்திற்கு மாறுபா டுற்றதாம் இப்பொருள். எம்போல்வார் எவரும் கொளத்தகாதது ஆகும். இப்பொழுது இவன் வலியுறுத்திக் கூறுவதென்னை" என்று உள்ளம் நடுநடுங்கி நீண்ட சிவந்த சடையினையுடைய முனிவரனைப் பொருந்த நோக்கி,

கோட்டம்—விருத்தம், சிவவேடம் புனைந்து கூறினன் என்பார் செஞ்சடை முனிவரன் என்றனர். நீட்டு என்னும் பிறவினை தன் வினைக்கண் நின்றது.

வாத ராயண நீஇவண் மொழிதரு மாற்றம்
வேத நூற்பொருள் உண்மையே யாமெனில் விசுவ
நாத னார்திரு முன்பெமக் குரைஎன நவின்றார்
ஓது கேனென மூர்க்கனும் எழுந்துசென் றுற்று. 10

'வியாதனே, நீ ஈண்டுப் பேசுகின்ற பேச்சு வேத நூலின் சத்திய வாக்கேயானால், விசுவநாதப் பெருமானார் திருச்சந்நிதியில் எங்களுக்குச் சொல்" என யாவரும் ஒருமுகமாகக் கூறினர். மூர்க்கனும் கூறுவேன் எனஎழுந்து சென்றடைந்து,

நாணற்புல்லின் தொடர்பால் முருகன் சரவணபவன் ஆயினன். அங்ஙனே இலந்தைக் காட்டின் தொடர்பால் வியாசன் வாதராயணன் ஆயினன். மாற்றம்—மாறுபாட்டுரை என்னும் பொருள் தருதலும் நயம் ஆம். கொண்டது விடாமை பற்றி மூர்க்கன் எனப்பட்டனன்.

விச்சு வேசன்முன் நின்றிரு கரமிசை நிமிர்த்தாங்
கச்ச மின்றிமுன் புகன்றதே புகன்றனன் அந்தோ
விச்சை நூல்பல கற்பினுஞ் சிவன்அருள் விரவாக்
கொச்சை யோர்தமை விடுவதோ கொடுமலச் செருக்கு. 11

காசியில் எழுந்தருளியுள்ள விசுவநாதர் திருமுன் நின்று இரு கரங்களையும் மேலெடுத்து நிமிர்த்து அச்சமின்றி முன்கூறிய அதனையே மேலும் கூறினன்; அந்தோ! அறிவு நூல் பலவற்றைக் கற்றாலும் திருவருளைப் பெறாத இழிந்தவர் தம்மைக் கொடிய ஆணவமலத்தான் ஆகிய இறுமாப்பு விட்டு நீங்குமோ? நீங்காது என்றபடி.

தெய்வத்தின் முன் கூறும் சூளினை 'முன் தேற்று' எனவும், 'கடுஞ்சூள்' எனவும் இலக்கண இலக்கியங்கள் கூறும். அந்தோ, இரக்கம்.

அறிவு போல்அடர்ந் தெழும்அறி யாமையின் வலியால்
பொறிஇ லான்இது கிளப்பவும் வெகுண்டிலன் புனிதன்
மறுவில் கூற்றெலாந் தன்பெயர் எனுமறை வழக்கால்
வெறிம லர்க்குழல் உமையொடு மகிழ்ந்துவீற் றிருந்தான். 12

அறிவு போல மீதூர்ந்தெழும் அஞ்ஞானத்தின் மிண்டினாலே அறிவிலியாகிய வியாதமுனி இதனைக் கூறவும் சிவபிரான் குற்றமில்லாத திருப்பெயர்கள் யாவும் தனக்குரியனவே என்று வேதங்கள் கூறுமுறைமையால் முனிந்திலனாய் மணம்வீசுகின்ற மலரையணிந்த கூந்தலை யுடைய உமையம்மையோடும் மகிழ் கூர்ந்து வீற்றிருந்தனன்.

அறியாமை, தன்னையுடையவனை அறிவு போலத் தோற்றி வஞ்சிப்பது. அறியாமையை அறியாமைஎன்றே உணர்வது அறிவுடைமை; அது எங்ஙனம் அறியாமையில் தோற்றும். 'கல்லா தவரும் நனிநல்லர் கற்றார் முன் சொல்லா திருக்கப் பெறின்' (திருக் 403) விசேட வுரையை நோக்குக.

நந்தி யெம்பிரான் வெகுண்டுநாண் மலர்க்கரம் எடுத்த
அந்த வண்ணமே அசைவற நிற்குமா சபிப்ப
மந்த னாயினன் நிமிர்த்தகை மடக்கவல் லாமை
நிந்தை யாற்சிலைத் தூணமொத் தசைவற நின்றான். 13

திருநந்தி தேவராகிய எம்பெருமானார் உள்ளம் கொதித்துத் தூக்கிய கையை அப்படியே அசையாதபடி நிற்குமாறு சாபம் கொடுக்கக், கூரிய அறிவிலனாகிய வியாதன் நிமிர்த்தகையைமடக்க இயலாமையினால் சிவநிந்தனையினாற் கற்றூணை ஒத்துச் சிறிதும் அசைவற நின்றனன்.

தெற்றற் செஞ்சடை யெம்பிரான் திருமுன்பு நாட்டும்
வெற்றித் தம்பமொத் திலகிவல் விடும்பைகூர் வியாதன்
பற்றிச் சிந்தையில் நெடியமால் இணையடி பரவ
அற்றைப் போதுமுன் தோன்றிநின் றச்சுதன் அறைவான்.

பின்னிக் கிடக்கின்ற சிவந்த சடைமுடியையுடைய எமது பெருமான் சந்நிதியில் நாட்டிய வெற்றியின் அறிகுறியாய தூணைப்போல விளங்கிக் கொடுந்துன்பம் மிகுந்த வியாதமுனிவரர் தமது மனத்தில் திருமாலின் திருவடிகளை இறுகப்பற்றித் துதிக்க அப்பொழுது திருமால் அவர்முன்னே காட்சி தந்திதனைக் கூறுவர்.

வெற்றித்தூண் : "கலையானும், வாழி வென்றுவென் றலைகடல் வரைப்பெலாம் நாட்டும், கேழில் வாகைய மதலையும்...........விறந்தன அநேகம்" (கச்சி. காஞ். நக. 183.)

என்ன காரியஞ் செய்தனை என்னையுங் கெடுத்தாய்
பன்ம றைப்பரப் பியாவையும் பாற்படுத் தவற்றுட்
சொன்ன மெய்ப்பொருள் உண்மையைத் துணிந்தநீ அந்தோ
கொன்னும் இம்மயக் கெவ்விடைப் பெற்றனை கூறாய். 15

என்ன காரியத்தைச் செய்து கெட்டனை! நீ கெட்டதுமன்றி என்னையும் கெடுத்தனை. பல வேதங்களாகிய கடல்கள் அனைத்தையும் வகைப்படுத்தி அவற்றுட் கூறிய மெய்ப்பொருளுண்மையை நிச்சயித்து தெளிவு படுத்திய நீ, ஐயோ அஞ்சத்தகும் இம்மயக்கத்தை எவ்விடத்துப் பெற்றனை அதனைக் கூறாய்.

ஒருவரிடத்தில்லாத உயர்வுகளை ஏற்றிக் கூறுவோர் அவர்க்குக் கேடு சூழ்வோர் ஆவர் ஆகலின் 'என்னையும் கெடுத்தாய்' என்றனர். வேதந்துறைப்படுத்து வேத வியாசனாய நீ அதனொடு பொருந்தாமையின் 'இம்மயக்கு எவ்விடைப் பெற்றனை கூறாய்' எனக் கூறினர். வினான்று அவலங்குறித்து நின்றது. திருக்கோவையார் 23 - ஆம் செய்யுளின் விசேடவுரை காண்க.

"ஏனை யாரையும் அறத்துறந் தியாவரும் என்றும்
பான்மை யில்தியா னஞ்செயப் படும்ஒரு முதல்வன்
மேன்மை கூர்சிவன் ஒருவனே" எனவிரித் தன்றே
நான்ம றைத்தலை யாம்அதர் வச்சிகை நவிலும். 16

"பிரமன் முதலிய தேவர்கள் யாவரையும் முற்றக் கைவிடுத்து யாவராலும் எக்காலத்தும் முறையால் தியானஞ் செய்யப்படும் ஒப்பற்ற முதல்வன் மேன்மை மிகுந்த சிவபிரானொருவனே பரமென்று விரித்து நானகு வேதங்களுள் தலைமை வாய்ந்த அதர்வசிகை என்னும் உபநிடதம் கூறும்."

யாமெ லாம்அவன் இணையடித் தியானஞ்செய் பசுக்க
ளாமெ னத்தெளி அவனருள் சேர்தலிற் பசுவும்
பூமி சைத்தியா னப்பொரு ளாமெனப் புனைந்து
தோம றச்சில நூல்புகல் உண்மையுந் துணியாய். 17

"யாங்கள் யாவரும் அவனுடைய இரு திருவடிகளையும் மனத் திருத்தி வழிபடும் பசுக்களாவேம் என உறுதியாக அறிந்துகொள். அவனுடைய திருவருள் எங்களிடத்தில் தங்குதலின் பசுக்களாகிய எங்களையும் நிலவுலகில் தியானஞ் செய்யப்படும் பொருளாமென்று புனைந் துரையாகக் குற்றமறச் சில நூல் கூறும் உண்மையையும் நீ துணியாய்."

அறிஞர் கொண்டகோட் பாடிது அறிந்திலை அம்மா
பிறிவில் ஆணவச் செருக்கினின் மயங்கிய பேதாய்
வெறிய நீஇனி உய்வது வேட்டனை யாயின்
குறிபி றழ்ந்திடா தென்னுரை மெய்யுறக் கோடி. 18

"வேறற நின்ற ஆணவ மலச்செருக்கால் அறிவுமயங்கியபேதையே! மெய்யறிவுடையோர் கொண்ட கொள்கை இது. இதனை யறியாதொழிந் தனை; பித்தேறிய நீ இனி பிழைத்தலை விரும்பினை ஆனால் குறிக்கோளி னின்றும் வழுவாது யான் கூறும் நல்லுரையைச் சத்தியமாகக் கைக் கொள்வாய்."

மந்தி ரத்தழல் மகத்தினுக் கிறையவன் மகவான்
சந்த மாமறைக் கிறையவன் தாமரைக் கிழவன்
இந்தி ராதியாம் உலகினுக் கிறையவன் யானே
மைந்த னேயெனக் கிறையவன் மணிமிடற் றிறையோன். 19

மகனே மந்திரம் ஓதி வளர்க்கப்படும் தீவினையுடைய வேள்விக்குத் தலைவன் இந்திரனே. யாப்பமைந்த சிறப்புடைய வேதத்திற்குத் தலைவன் பிரமனே. யானே இந்திரன் முதலானோர் வாழ்கின்ற உலகங்களுக்கு நாய கன் ஆவேன். நீலகண்டம் உடைய சிவபிரான் எனக்கு இறையவன்.

அகில நாயகன் அவற்குமேல் இறையவன் இல்லை
அகில லோகமும் அவன்திரு ஆணையின் நடக்கும்
அகில லோகமும் படைத்தளித் தழிப்பவன் அவனே
அகில நூல்களும் உரைத்திடுந் துணிவிது வாமால். 20

எல்லாப் பொருள்களுக்குந் தலைவனாகிய அச் சிவபெருமானுக்கு மேற்பட்ட தலைவன் ஒருவனுமில்லை. எல்லா உலகங்களையும் படைத்துக் காத்தழிப்பவன் அவ்விறைவனே என்று வேத முதலிய எல்லா நூல் களும் எடுத்துக் கூறும் முடிந்த பொருள் இதுவேயாம்."

வானம் ஏத்தயான் வைகுந்த வாழ்வுபெற் றதுவும்
ஞான நான்முகன் சத்திய உலகம்நண் ணியதும்
ஏனை விண்ணவர் தத்தம வாழ்க்கைஎய் தியதும்
ஆனு யர்த்தவன் அருட்குறி அருச்சனைப் பயனால். 21

"வானோர் துதி செய்ய யான் வைகுந்த ஆட்சி பெற்றதும், அறிவுடைய பிரமன் சத்தியலோக வாழ்க்கையை எய்தியதும், ஒழிந்த விண்ணுலகோர் தத்தமக்குரிய வாழ்க்கையை அடைந்ததும், இடப ஊர்தியை யுடையவன் சிவலிங்க வழிபாட்டின் பயனுவன."

அருச்சனைப்பயன் : இரணியேசப்படலம் 6, 7 செய்யுளைக் காண்க.

விண்டு வியாச முனிவரை வெகுளுதல்

அன்ன வன்திரு வடிகளே சரணம்என் றடைமோ
இன்ன தாயநின் மயக்கினை விடுமதி இன்றேல்
பின்னல் வேணிநீ கெட்டனை பிறரையுங் கெடுக்க
உன்னு கின்றனை எனவெகுண் டுரைத்தனன் திருமால். 22

"அப்பெருமான் திருவடிகளையே அடைக்கலம் என்று அடைதி; இங்ஙனம் ஆய தடுமாற்றத்தை விடுதி; இல்லையாயின், பின்னிக் கிடக்கின்ற சடையுடையோனே, நீ கெட்டொழிந்தனை; பிறரையும் கெடுக்க நினைக்கின்றனை'" எனத் திருமால் கோபத்தொடும் கூறினன்.

மோ, மதி முன்னிலை அசைகள்.

வாயு றுத்திய கடுமொழி கேட்டனன் மற்றைத்
தூய வானவத் தொகையெலாந் துரும்பெனக் கழித்தாள்
பாயு மால்விடைப் பகவனே பரமெனத் தெளிந்தான்
ஏயு மாறருள் கிடைத்துயர் இருந்தவத் தலைவன். 23

உண்மையை உள்ளடக்கிய கடுப்போன்ற மொழியைக் கேட்டனர். ஏனைய கடவுளர் குழாத்தை முற்றும் துரும்பு போல மதித்துக் கழித்தனர். பாய்கின்ற பெரிய விடையையூர்கின்ற பகவனே முதற்பொருள் எனத் தெளிந்தனர். பொருந்துமாறு அருள் வாய்த்து உயர்ந்த பெரிய தவத்தலைவராகிய வியாசர்.

மெய்த்த வத்தவர் தமையெதிர் நோக்கிமே தகையீர்
இத்த கைத்தமால் உமக்கும்என் போலஎய் தியதோ
சுத்த மாமறை முழுவதுந் துகளறத் தெரிந்த
சித்தர் காள்எனை வினவிய தென்கொலோ செப்பீர். 24

உண்மைத் தவமுடையவர்களை நேர் "நோக்கி மேன்மை அமைந்தவர்களே! இவ்வியல்பினையுடைய மயக்கம் உங்கட்கும் என்னைப்பற்றியது போலப் பற்றியதோ! தூய பெருமறை முழுவதும் குற்றமற ஆராய்ந்த சித்தத்தை யுடையவர்களே! அறிந்து வைத்தும் என்னை வினவியது யாது காரணம் கூறுமின்."

விச்சு வன்சிறைப் புள்ளர சுயர்த்தவன் விளம்பும்
விச்சு வாதிகன் எறும்வலிச் சினவிடை ஊர்தி
எச்ச மேசுரும் புளர்துழாய் அலங்கலான் என்ப
எச்ச நாயகன் பொலந்துணர் இதழிமா லிகையான். 25

"கருடக்கொடி உயர்த்த திருமால் உலகமாயிருப்பவன்; பேசப் பெறும் உலகிற்கு அப்பாற்பட்டோன் வலிமைமிக்க காய்கின்ற விடையை ஊர்தியாக உடைய சிவபிரான். யாக வடிவினன் வண்டுகள் ஒலிக்கின்ற துளவ மாலையை யணிந்த திருமால் என்று கூறுவர். வேள்வி நாயகன் பொன்மயமான கொத்துக்களையுடைய கொன்றைமலர் மாலையையணிந்த சிவபெருமான்."

"வேள்விநீ வரதராச உயர் வேள்வி இறை நாம் என முன்னும் வந்தது (சிவாத். 26.)

மாயை யாம்கொடு முரன்றனைச் செகுத்துயர் வயவன்
மாயை யாள்பவன் முப்புரம் கனற்றிய வள்ளல்
சாயல் மாமயில் வனிதையே நாரணன் தரியார்
சாய வென்றசீர்ப் புருடனும் கண்ணுதல் தலைவன். 26

"கொடிய முராசுரனை அழித்துயர்ந்த வலியோனாகிய திருமால் மாயை ஆகும். திரிபுரத்தைச் சிரித்தெரித்த வள்ளலாகிய சிவபிரான் மாயையைச் செலுத்துவோன். நாரணன் பெருமையுடைய மயில்போலுஞ் சாயலையுடைய பெண் ஆவன். நெற்றிக் கண்ணுடைய பகைவரை அழிய வென்ற சிவபிரான் சிறப்புடைய புருடன் ஆவன்."

என்ன மாமறை மிருதிநூல் புராணம்மற் றெவையும்
பன்னு கின்றதில் ஐயுறற் பாலதொன் றுளதோ
புன்ம ருட்சியில் மயங்கினேன் புலங்கொளத் தெருட்டா
தென்னை இவ்வணங் கண்டனிர் இதுநுமக் கழகோ. 27

"என்று பெருமறையும், தரும நூலும், பதினெண்புராணங்களும், பிறவும் கூறுமவற்றுள் ஐயம் எழற்பாலது சிறிதும் உண்டோ? இல்லை. புல்லிய மயக்கத்தில் மயங்கின என்னை அறிவு பெறத் தெருட்டாமல் என்னை இவ்வாருக்கினீர். இவ்வியல்பு நுங்கட்குத் தகுவதொன்றோ?"

இது நுமக்கு நன்றன்று என்றபடி. திருமுன் பொய்ச்சூளுரைத்துப் பழியும், பாவமும் எய்திக் கை நின்றமையைக் கருத்திற் கொண்டு 'இவ்வணம் கண்டனிர்' என்றனர்.

சிவனை யாவரே அருச்சனை செயாதவர் சிவன்மற்
றெவரை யாயினும் அருச்சனை இயற்றிய துண்டோ
கவர் மனத்தினை ஒழித்தினி யாமெலாங் கவலா
தவன் மலர்த்துணைச் சரணமே அடைதும்என் றியம்பி. 28

"சிவபிரானைப் பூசனை செயாதவர் எவரே?" ஒருவருமிலர். "அச் சிவபிரான் வேறெத்தேவரையாயினும் வழிபாடு செய்ததுண்டோ?" இல்லை, "மனக்கருத்து இனி இரட்டுறுது யாம் எல்லோமும் உள்ளம் அன்பு பட்டு அப்பெருமான் இரு திருவடித்தாமரை மலர்களையே புகலாக அடைவேம்" என்றுகூறி,

விடையவன் வென்றியை வியாசர் வகுத்தல்.

பவள முண்டகக் கிழத்திதோய் பணைப்புயக் குரிசில்
தவள மேனியை நீனிறம் ஆக்கிவெண் சலதி
துவள வந்தெழும் கொடுவிடம் மிடற்றினில் தூங்கக்
கவளம் ஆக்குநின் பெருமையார் கணித்திட வல்லார். 29

"பவளம் போலும் நிறமுடைய செந்தாமரை மலரைக் காணியா உடைய திருமகள் தோய் திரட்சியையுடைய புயத்தினைக் கொண்ட தோன்றலாகிய மாலின் வெண்ணிற மேனியை நீலநிறம் ஆக்கிய பாற் கடல் கெட எழுந்த கொடிய விடத்தினைக் கண்டத்தில் தங்க உணவாக அமைக்கும் நினது பெருமையை யாவரே வரையறுத்து மதித்திட வல்லர் ஆவர்."

சிரித்தெ ரித்தனை முப்புரம் திறற்சமன் வாழ்நாள்
இரித்த ழித்தனை உதையினில் இலங்கையார்க் கிறையை
நெரித்து வீழ்த்தினைபெருவிரல் நுதியினின் நீறுப்
பொரித்து விட்டனை காமனைப் பொறிநுதல் விழியால். 30

"திரிபுரங்களைப் புன்சிரிப்பால் எரித்தனை. வலிமை பொருந்திய இயமனைத் திருவடியால் உதைத்து வாழும் நாள் கெடுத்தனை; காற் பெருவிரல் நுதியினல் கைலைமலையைச் சிறிதே அழுத்தி இராவணனை நசித்து விழ வீழ்த்தினை; மன்மதனை நெற்றிக்கண் தீயினுல் நீற்றினை";

பிரம ஞர்சிரம் உகிரினிற் பேதுறக் கொய்தாய்
சுரர்கள் யாரையும் சிறுவிதி வேள்வியில் தொலைத்தாய்
நரம டங்கல்மீன் வாமனன் கூர்மம்நற் கேழல்
உரமெ லாம்அறத் தடிந்தனை ஒவ்வொரு கூற்றுல். 31

பிரமன் வருந்த அவனது சிரத்தை நகத்திறுற் கொய்தனை; தேவர்கள் யாவரையும் தக்கன் வேள்வியில் தகர்த்துத் தொலைவு செய்தனை; திருமால் கொண்ட அவதாரங்களாகிய நரசிங்கம், மச்சம், ஆமை, பன்றி இவற்றை வன்மை முழுதும் கெட வீட்டினை; வாமன மூர்த்தியை அழித்தனை.

அந்த கன்றனை மாயனைச் சூலமீ தமைத்த
எந்தை நின்பெருந் தகைமையான் என்னறிந் திசைப்பேன்
சிந்தை மையலில் தொழுத்தையேன் செய்பிழை பொறுத்தே
உந்து பேரருட் கருணையால் உய்வகை அருளாய். 32

அந்தகாசுரனையும், விடுவச் சேனனையும் சூலமிசைக் கோர்த்த எந்தையே! நின்னுடைய பேரருட்டிறத்தை யான் என்னறிந்தேத்துகேன்! உள்ளத்தழுக்கில்லாத அடிமையேன் செய்த பிழையைப் பொறுத்தே செலுத்துகின்ற மாபெருங்கருணையால் உய்யும்வழியை அருள்செய்வாய்.

இரணியாட்சன், சோமுகன், இரணியன் ஆகிய இவர்களை அழிக்கவும் பாற்கடலில் மந்தரமலையைத்தாங்கவும் திருமால் முறையே கொண்ட வராக, மச்ச, நரசிங்க, கூர்மாவதாரங்களின் முடிவில் செருக்குற்று உலகிற்குத் தீங்கிழைத்த வழி அவைகளின் செருக்கைப் போக்குதற்கு முறையே முருகர், ஐயனர், வீரபத்திரர், விநாயகர்களால் அவற்றை அழிப்பித்தமை கருதி ஒவ்வோர் கூற்றுல் (அம்சம்) என்றனர். அமைச்சரை அணுக்கராதல் பற்றி அரசரென்றுற் போல விடுவச் சேனனை மாயன் என்றுர், வயிரவேசப்படலம் 29-ஆம் செய்யுளிற் சூலமிசைக் கிடந்தமை காண்க.

என்று கண்கள்நீர் சொரியநாத் தழும்பநின் றேத்தி
ஒன்று காதலான் நெக்குநெக் குருகிஆன் பிரிந்த
கன்று போல்பதைத் தலந்திரந் தயரும்அக் காலைக்
கொன்றை வார்சடைக் குழகனும் கருணைகூர்ந் தருளி. 33

என்று கூறிக் கண்கள் நீரை மழைபோலப் பொழியவும், நாத்தழும்பேறவும் நின்று துதித்து ஒருமுகப்படுத்திய அன்பினால் நெகிழ்ந்து நெகிழ்ந்து தாயைப் பிரிந்த பசுக்கன்று போல நடுக்கமுற்று மனஞ்சுழன்று வேண்டி வருந்தும் அப்பொழுது கொன்றைமலர்மாலையைத் தரித்த நீண்ட சடையினையுடைய குழகனும் கருணை மீக்கூர்ந்தருளி.

அன்புக்கு ஆவும் கன்றும் உவமை: பக்த வத்ஸலன் என்னும் பெயர் காண்க.

இறைவன் திருவாய்மலர்ந்தருளல்

வெள்ளி யங்கிரி எழுந்தென விளங்கொளி விடைமேல்
வள்ளை வார்குழை உமையொடு மகிழ்ந்தினி தேறிப்
பிள்ளை வாரணக் கடவுளும் பிறங்கெரி வடிவேல்
அள்ளி லைப்படை ஏந்தலும் இருபுடை அணுக. 34

வெள்ளிமலை கால் கொடு நடந்தாற் போல வெள்ளொளி விளங்குகின்ற இடப ஊர்தி மேல், காதில் அழகிய நீண்ட காதணி பூண்ட உமையம்மையொடும் மகிழ்ந்தினி தேறி விநாயகப்பெருமானும், விளங்குகின்ற சுடர் வடிவேலாகிய கூரிய இலைபோலும் வடிவமைந்த ஆயுதம் தரித்த முருகப் பெருமானும் முறையே வலமும் இடமும் நெருங்கவும்,

பிறங்கு சக்கர பாணியும் பிரமனும் இருபால்
அறங்கு லாந்திரு வடியிணை தாங்கினர் நடப்ப
மறங்கு லாம்படைக் கடவுளர் வான்மிசை மிடைந்து
கறங்கு வண்டுளுக் கற்பக மலர்மழை பொழிய. 35

விளங்குகின்ற திருமாலும் பிரமனும் இருபக்கத்திலும் ஞானம் திகழ்கின்ற திருவடி மலர்களைத் தாங்கிச் செல்லவும், வீரமுடைய படைகளையுடைய தேவர் வானிடை நெருங்கி ஒலிக்கின்ற வண்டுகள் மொய்யாத கற்பக மலர் மழையைப் பொழியவும்,

அறம்—பரபோகம்; "பொன்னும் பொருளும் போகமும் அல்ல அன்பும், அருளும், அறனும்" (பரி. .) என்புழி அறம் அப்பொருட்டாதல் காண்க.

எட்டு மாதிரத் தலைவரும் போற்றெடுத் திறைஞ்ச
வட்ட வெண்குடை நந்திதன் திருக்கரம் வயங்கக்
கட்டு சாமரை உருத்திர கன்னியர் இரட்ட
ஒட்டி மாகதர் சூதர்கள் வாழ்த்தொலி எடுப்ப. 36

இந்திரன் முதலிய எண்திசைத் தலைவரும் புகழ்ந்து துதிக்கவும், திருநந்தி தேவர் திருக்கரத்தில் வெண்கொற்றக்குடை விளங்கவும், கட்டிய சாமரையை உருத்திர கணிகையர் இருபுறத்தும் இரட்டுற வீசவும், கூடிய இருந்தேத்துவோராகிய மாகதரும், நின்றேத்துவோராகிய சூதரும் வாழ்த்தொலி எடுத்தோதவும்,

நீண்ட செஞ்சடைப் புதுமதி இளநிலா விரிப்ப
ஈண்டு பூதவெங் கணங்களோ டெதிரெழுந் தருளி
மூண்ட பேரருள் ஊற்றெழக் குறுநகை முகிழ்த்து
மாண்ட சீர்முனித் தலைவனை நோக்கிவாய் மலரும். 37

நீண்ட சிவந்த சடையிடைப் பிறை தண்ணிய கதிரை விரிப்பவும், திரண்ட விரும்பத்தக்க பூதகணங்களுடன் எதிரெழுந்தருளி மேன்மேலெழுகின்ற பேரருள் ஊறிப் பெருகும்படி புன்முறுவல் பூத்து மாட்சிமைப்பட்ட சிறப்பினையுடைய முனிவர் தலைவராகிய வியாசரை நோக்கித் திருவாய் மலர்ந்தருள் செய்வர்.

அறுசீரடி யாசிரிய விருத்தம்

எவனைநீ மதித்து நம்முன் சூளுற விசைத்தாய் இந்நாள்
அவன் இதோ காண்டி மற்றெம் அடியிணை தாங்கி நின்றான்
சவலைநீ பேதை நீரால் சாற்றினை எம்மைத் தேறா
துவலையாம் மதத்தில் பட்டோர் இடும்பைநோய் உழப்பர்கண்டாய்.

"எவனை நீ போற்றி நம் திருமுன்பு உறுதிமொழி கூறினாய்; இப்பொழுது அவன் இங்கு எம்முடைய திருவடி மலர்களைத் தாங்கி நிற்கின்றான் அதனைக் கண்டிடுதி. அறிவு முதிராத இயல்பினை உடைய நீ பேதைமையால் பலரறியப் பரப்பினை. எம்மியல்பைத் தெளியாது பொய்ச்சமய நெறி நின்றோர் பிறவி நோயான் வருந்துன்பத்தை அநுபவிப்பர்".

"உவலைச் சமயங்கள் ஒவ்வாத சாத்திரமாம் சவலைக் கடலுளனாய்க் கிடந்து தடுமாறும்" என்புழிக் (திருவா. தெள். 17.) காண்க.

வடிவுடை எமதி டப்பால் வந்தவன் மாயன் ஏனைக்
கடிமலர்ப் பொகுட்டு மேய கடவுள்எம் வலப்பால் வந்தோன்
இடிபுரி தகையோய் இன்ன இருவரும் எம்பால் அன்பாம்
அடியவர்க் கடிமை பூண்டே அணுக்கராய் அமர்வர் கண்டாய். 39

"எம்முடைய அழகிய இடப்புறத்தில் திருமால் வந்தனன். நறு மணங் கமழும் தாமரைப் பொகுட்டில் மேவிய பிரமன் மற்றைய வலப் புறத்தில் வந்தனன். அறிவும் அன்புமுடைய திருத்தொண்டர் தமக்கு அணுக்கத் தொண்டராய் அவர் ஏவல் வழி நிற்பவர் ஆவர் இவர் இதனை நன்கு தெளிதி.

இடி--இடித்தல்; முதனிலைத் தொழிற்பெயர்; கழறுதல். புரி—புரிய—மிகச் செய்ய. புரி என்னும் முதனிலை புரிய என்னும் வினை எச்சப் பொருள் தந்தது, 'செய்தக்க அல்ல செயக் கெடும்" (குறள்–466.) என் புழிப்போல. அளி—அளிக்க (மணிகண். 23-)

கற்பங்கள் தோறுந் தோன்றும் கணக்கிலாப் பிரமர் மாயர்
முற்பொன்று தலைகள் கோத்து நாற்றிய முளிபுன் மாலை
பொற்பொன்று நமது சென்னி புயம்அரை சரணம் எங்கும்
சிற்பங்கள் விளங்கப் பூண்ட திறம்இது நோக்கிக் காணாய். 40

கற்பங்கள் தோறும் தோன்றுகின்ற அளவுட்படாத பிரமர்களும், திருமால்களும் முன்முன் அழிய அத்தலைகளைக் கோத்துத்தொங்கவிட்ட உயர்ந்த புல்லிய மாலைகளைப் பொலிவமைந்த நம்முடைய சிரத்தினும், தோளினும், இடையினும், திருவடியினும், பிறஇடங்களினும் அவர்கள் தம் சிறுமை விளங்கத் தாங்கிய திறம் இதனை ஊன்றி உணர்தி.

பிறத்தலும் இறத்தலும் பிறவும் பரத்துவம் இன்மையைப் புலப் படுத்தும் என்க. முன்-முன்னைய கற்பங்கள்

மாண்டவிண் ணவர்கள் எற்பு மாலையும் பலவும் பூண்டேம்
ஈண்டிவை பூண்ட தெற்றுக் கென்றியேல் நின்போல் வார்க்குப்
பூண்டமால் ஒழிப்பான் அன்னோர் பொன்றுறும் அநித்த வாழ்வும்
காண்டகும் எமது நித்தத் தன்மையுங் காட்டக் கண்டாய். 41

இறந்த தேவர்களுடைய முழு என்பு மாலைகளையும், சில பல உறுப்புக்களையும் பூண்டுள்ளேம். இவை பூண்டுள்ள தெதன் பொருட் டெனில் நின்னைப்போல அறிவு மயங்குவார்க்கு அம்மயக்கத்தைத் தெளி விப்பான் அவர்கள் இறத்தலை உடைமையின் நிலைபெறு வாழ்க்கையை யும், காண்டற்கு ஏதுவாம். எமது என்றும் பொன்று நிலைமையை காட்டுதற்கென அறிதி.

சொன்மறை முடிபு தேறுந் தூயருள் தலைவன் நீயே
பன்முறை உலகம் எல்லாம் படைத்தளித் தழிக்கும் எம்மை
நன்மைகூர் வழிபா டாற்றி முத்தியில் நண்ணு கென்னுப்
புன்மருள் அகல நல்கி மறைந்தனன் பூத நாதன். 42

புகழமைந்த வேத நூன் முடிபினைத் தெளியுந் தூயவர்களுட் டலைவன் நீயே ஆகலின் பலமுறையும் உலகம் அனைத்தினையும் படைத்தும், காத்தும், அழிக்கும் எம்மையே நலம் மிகுதற்கு ஏதுவாகிய வழிபாட்டைச் செய்து முத்தியில் நண்ணும் என்று புல்லிய மயக்கம் நீங்க வாய்மொழி தந்தருளி ஆன்ம நாயகன் திருவுரு மறைந்தருளினன்.

ஓரோர் காலத்து ஓரோர் பகுதியைப் படைத்தல் முதலிய ஒன்றிரு செயல்களை வினைக்கீடாக இறைவன் ஆணையால் நடத்துவோர் முதல்வர் எங்ஙனம் ஆவர்? எக்காலத்தும் எல்லா உலகங்களையும் ஐந்தொழில் செய்தருளும் முதல்வனே தலைவன் எனவும் உணர்த்தியருளினர்.

நாயகன் கிளந்த எல்லாங் கேட்டுளம் நடுங்கி அஞ்சித்
தீயனேன் அந்தோ கெட்டேன் என்இது செய்தேன் இந்நாள்
ஏயும்இம் மடமைக் கேதி யாதென வியாதன் எண்ணி
ஆயதோர் மூர்த்தம் எம்மான் அடியிணை சிந்தை செய்து. 43

நாயகன் கூறிய யாவற்றையும் கேட்டு உள்ளம் நடுக்கமுற்று மேலும் அஞ்சிக் கொடியனேன் ஐயகோ! கெட்டேன்! என்னே! இது செய்தேன்! இப்பொழுதுதித்த இவ்வறியாமைக்குக் காரணம் யாதென வியாதன் ஊன்றி நினைத்து, ஓர் முகூர்த்த காலம் எமது பெருமான் அடியிணைகளைச் சிந்தையில் தியானம் செய்து,

விருதுடைக் காசி வைப்பின் விச்சுவ நாதன் யார்க்கும்
அருள்வது மெய்யே யாகும் ஆயினும் ஈங்கு வாழ்வார்
தெருமரத் தேவர் கூடி ஊறுகள் செய்ப என்ப
இருவினை யுடையேன் இங்கு வைகுதற் கிடையூ றீதால். 44

ஏனைய தலங்களினும் வெற்றியுடைய காசியில் விசுவநாதப் பெருமான் எவர்க்கும் திருவருளை வழங்குவது உண்மையே ஆகும். ஆனாலும் இவ்விடத்து வாழ்பவர் உள்ளங்கலங்கத் தேவர் கூடி நற்செய்கைகளுக்கு இடையூறுகள் செய்வர் என்று கூறுவர். நல்வினை தீவினைகளின் வயப்பட்ட யான் இவண் வதிதற்கு இடையூறிதுவாகும்.

இடையறு காசி மூதூர் தன்னினும் இருமை சான்ற
இடையறாக் காஞ்சி மூதூர் எம்பிராற் கினியதாகும்
இடைஒசி முலையாள் பாகன் கருணையால் எவர்க்கும் அவ்வூ
ரிடைஇடை யூறொன் றின்றி முத்திவீ டெளிதின் எய்தும். 45

இடைக்காலமாகிய ஊழியில் அழிகின்ற காசிஎன்னும் பழம்பெரும் பதியினும் போகமும், பரபோகமும் ஒருங்கமைந்த ஊழியினும் அழியாத காஞ்சி என்னும் பழம் பெரும்பதி எம் தலைவற்கு இனி துறைதற்கிடனாகும். இடையை வருத்துகின்ற கொங்கையினையுடைய உமையம்மையை இடப்பாகங்கொண்ட பெருமான் திருவருளால் யாவர்க்கும் அக்காஞ்சிமாநகரம் நன்முயற்சியின் இடையில் இடையூறு சிறிதும் இன்றி முத்தி வீட்டினை எளிதினில் எய்துவிக்கும்.

திவோதானன் என்னும் அசுரன் பொருட்டு இறைவன் ஓர் கால் காசியை நீங்கினன் எனவும், அங்ஙனம் காஞ்சியில் ஓர் காலும் நீங்காமையின் இடையருக் காஞ்சி எனவும் கூறும்.

காசியின் இறப்ப முத்தி காஞ்சியை நினைப்ப முத்தி
ஆசற உதவும் என்னும் அரும்பொருள் துணிந்து சிந்தை
மாசுதீர் முனிவர் கோமான் விரைந்துமா ணாக்க ரோடும்
தேசினால் திசைபோங் காஞ்சித் திருநகர் அடைந்தான் மன்னோ. 46

காசியிற் சென்றங்கிறந்த வழியும் அங்ஙனமின்றிக் காஞ்சியை இருந்த இடத்தே நினைத்த அளவிலும் முத்தியைக் குற்றமற உதவும் என்று கூறும் அரிய நூற் பொருளை உறுதிபெற மதித்துச் சிந்தையில் குற்றந் தவிர்ந்த முனிவர் தலைவராகிய வியாசர் மாணவராகிய முனிவர் பலரொடும் எண்டிசையும் புகழ் பரவும் காஞ்சித்திருநகரை அடைந்தனன்.

வியாசர் சார்ந்தாசய விமலனை வழிபடல்

திகழ்சிவ கங்கை யாடித் தேமலர் ஒருமா மூலப்
பகவனை வழிபா டாற்றி மஞ்சள்நீர் நதியின் பாங்கர்
நிகழ்மணி கண்ட நாத நெடுந்தகை நிருதி வைப்பில்
தகவினால் இனைத்துச் சார்ந்தார் சார்பினான் றனைத்தா பித்து. 47

விளங்குகின்ற சிவகங்கை எனப்பெறும் தீர்த்தத்தில் மூழ்கித் தெய்வத் தன்மை பரவிய ஒற்றைமா (ஏகாம்பரம்) வடியில் எழுந்தருளியுள்ள பகவனை வழிபாடியற்றி மஞ்சள் நீர் நதிக்கரையின் பக்கத்தில் அருள் திகழ்கின்ற மணிகண்டநாதப் பெருமான் தலத்திற்குத் தென் மேற்குத் திசையில் மெலிந்து அடைதற்குரிய தகவொடும் சார்ந்தார் சார்பினான் தனைப்பதிட்டை செய்து,

விதியுளிப் பூசை யாற்றி விழைதகத் துதிக்குங் காலை
மதிபொதி சடில மோலி வரதனும் மகிழ்ச்சி பொங்கி
எதிரெழுந் தருளி வேண்டும் வரமெவன் இயம்பு கென்ன
முதிர்பெருங் காதல் நீடி முனிவரன் வேண்டு கிற்பான். 48

விதிப்படி பூசை செய்து விரும்பம் அமையத் துதி செய்யும் பொழுது இளம்பிறையை அணிந்த சடாமுடியுடைய வரதன் மகிழ்ச்சி மேலிட்டுத் திருக்காட்சி எதிரே தந்து 'வேண்டும் வரம் யாது கூறுக' என்றலும் முறுகி வளர்ந்த பேரன்பு தங்கி முனிவருள் மேலோன் வேண்டுவான்.

ஐயனே இனைத்துச் சார்ந்தேற் கரும்பெறற் சார்பாம் இந்தத்
தெய்வலிங் கத்து நாளும் செழித்துவீற் றிருந்து ஞாலம்
உய்வகை அவர வர்க்கு வேட்டன உதவாய் நின்தாள்
மெய்வகைப் பத்தி நாயேற் கருள்இவை வேண்டும் என்றான். 49

"தலைவனே, மெலிந்து சார்ந்த அடியேனுக்குப் பெறுதற்கரிய பற்றுக்கோடாம் இந்தத் தெய்வத் தன்மையுடைய சிவலிங்கத்தில் எந் நாளும் தழைத்து வீற்றிருந்து உலகம் பிழைக்குமாறு அவரவர்க்கு விரும்பிய பொருள்களை உதவுக; நின்னுடைய திருவடிக்கண் மெய்த்திற மாய பேரன்பை நாயேனுக்கு அருளுக. இவை வேண்டுவல்" என்றனன்.

அவ்வவர் தகுதிக்கேற்ப விரும்புவ வெவ்வேறுகலின் வேட்டன உதவி என்றனர். 'வேண்டும் பொருளிற்றலையிலது' ஆகலின் என்க. அவா வானும் அச்சத்தானும் அன்றி வழிபடும் பேறுமெய்ப்பத்தி என்க.

அவ்வரம் முழுதும் அந்நாள் வியாதனுக் கருளி எங்கோன்
பௌவநீர் உலகம் போற்றப் பைத்தபாம் பல்குற் செங்கேழ்க்
கொவ்வைவாய்க் களபக் கொங்கைக் குலவரைப் பிடியி னோடும்
செவ்விதின் வியாத சார்ந்தாச் சிரயமா இலிங்கத் துற்றான். 50

அவ்வரங்கள் அனைத்தையும் அப்பொழுது வியாசருக் கருள் செய்து எம்பிரான் கடல்சூழ்ந்த உலகோர் துதிக்கப் பாம்பினது விரித்த படம்போன்ற அல்குலையும், சிவந்த நிறமுடைய கொவ்வைக்கனிபோலும் இதழ்களையும் களப மணிந்த கொங்கையினையும் உடைய மேன்மை பொருந்திய மலையரையன் மகளொடும் நன்கு வியாச சார்ந்தாச்சிரய பேரிலிங்கத்துள் விரவினன்.

முழுதுணர் கேள்வி சான்ற வியாதனே முறைமை மாறிப்
பழுதுபூண் டிவ்வா றெள்ளப் பட்டனன் என்னில் அன்றோ
வழுவறு நூல்ஒன் றேனும் உள்ளவா றுணர மாட்டா
இழுதையோர் தெளிவர் கொல்லோ இருவருக் கரியான் உண்மை.

முழுதும் உணர்ந்தும், கேட்டும் நிரம்பிய வியாசனே பிறழ்ந்து பழியும் பாவமும் ஏற்று இங்ஙனம் இகழப்பட்டனன். என்றால், அந்தோ! குற்றமற்ற நூல் ஒன்றாயினும் உள்ளபடி உணரும் வன்மையில்லாத அறிவிலோர் திருமால் பிரமருக்கறியப் படாதவன் உண்மையைத் தெளி வரோ.

சார்ந்தாசயப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் — 750



# சத்த தானப் படலம்

கலிநிலைத் துறை

சாத்திரம் வல்ல வியாதனை ஆண்டருள் சார்ந்தாரைக்
காத்த பிரான்திறம் இங்கிது கட்டுரை செய்தேமால்
ஏத்தரு மஞ்சள் நதிப்புடை ஏழ்முனி வோர்எந்தாய்
சோத்தென ஏத்திய ஏழிட மேய வளஞ்சொல்வாம். 1

சாத்திரங்கள் கற்று வல்ல வியாச முனிவரரை அடிமை கொண்டு அருளைச் சார்ந்தவரைக் காத்த பெருமான் கருணைத் திறத்தை இது வரை உறுதி பெற உரை செய்தேம். உயர்வு கூறற்கரிய மஞ்சள் நதிக் கரையில் முனிவரர் எழுவர் 'எந்தையே சோத்தம்' எனத் துதித்தற்கிடனாகிய ஏழிடங்களில் இறைவன் எழுந்தருளிய பேற்றினைச் சொல்வாம்.

சோத்தம்—இழிந்தோர் செய்யும் அஞ்சலி.

அத்திரி குச்சன் வசிட்டன் அருட்பிரு குப்பாசங்
கைத்துயர் கௌதமர் காசிப ரோடங் கிராவென்றேழ்
மெய்த்தவ ரும்பனி சூழ்இம யக்கிரி மேல்முன்னாள்
உத்தம மான அருந்தவம் ஆற்ற லுறுகாலை. 2

அத்திரி, குச்சன், வசிட்டன், அருளுடைய பிருகு, பாசப்பொருள்களின் உவர்த்து நீங்கி உயர்ந்த கௌதமர், காசிபர், அங்கிரா எனப் பெயரிய உண்மைத் தவமுனிவரர் எழுவரும் பனி சூழ்ந்த இமயமலையின் மேல் முற்காலத்து உத்தமமான அரிய தவத்தைச் செய்யும்பொழுது,

பனி சூழ்தலின் இமயகிரி என்றாயது; இமம்-பனி.

ஆயிதழ் அம்புய வாழ்க்கை நெடுந்தகை ஆங்கெய்தி
நீயிர் விழைந்தமை கூறுமின் என்றலும் நேர்போற்றிப்
பாயிருள் சீத்து விளங்கொளி கான்றெழு பானுப்போல்
மீயுயர் தோற்ற முறுந்தவ வேந்தர் விளம்புற்றார். 3

பிரமன் அவர் முன் தோன்றி நீவிர் விரும்பிய பொருளைக் கூறுமின் என்ற அளவிலே எதிர் வணங்கிப் பரவிய இருளைத் துரத்தி விளக் கொளியை வீசி எழுகின்ற சூரியனைப்போல மிக உயர்ந்த தோற்றமுடைய தவத்தினுக்கு வேந்தர்கள் விளம்புதலுற்றனர்.

முதுக்குறை வாளர் பெறத்தகு முத்தி அருட்செல்வம்
மதிக்குறை வுற்றுழல் வோர்களும் மற்றெளி திற்கூடப்
புதுக்கும் உபாயம் எமக்கரு ளென்ன மலர்ப்போதன்
விதுக்குறை சூடி மலர்ப்பதம் ஏத்தி விரிக்கின்றான். 4

பேரறிவினர் பெறத்தகு முத்தியாகிய திருவருட் செல்வத்தைக் குறைந்த மதியினராய்ப் பிறப் பிறப்பிற் பட்டுச் சுழல்வோர்களும் எளிதினிற் கைகூடப் புதிதாய சூழ்ச்சியை எமக்கருள் செய் என்ன மலரிலுறை பிரமன் இளம்பிறையைத் தரித்தவராகிய சிவபெருமான் திருப்பதங்களைப் போற்றிப் பின்னர் விரித்துரைக்கின்முன்.

பற்றிக லற்றுக் குற்றமில் சிந்தைப் பனவீர்காள்
கற்றுயர் காட்சிக் கொற்றமி லோருங் கருநோய்தீர்
பெற்றியின் உற்றுப் பெறலரு முத்திப் பேறெய்தும்
அற்றமில் ஏதுக் கேண்மின் நுமக்கின் றறைகிற்பேன். 5

உறவும், பகையும் நீங்கிக் குற்றமற்ற மனத்தையுடைய அந்தணிர்காள்! கற்றமையால் உயர்ந்த அறிவு வலியிலரும் பிறவிநோய் தீரும் பரிசு கிடைத்துப் பெறற்கரிய சிவப்பேற்றினை அடையும் தளர்ச்சியில்லாத வலிவுடைய உபாயம் நுங்கட்கின்றறைவேன்; அதனைக்கேளுங்கள்.

அறுசீரடி யாசிரிய விருத்தம்

தருமமென் றியம்பும் ஒன்றே தழல்விடம் பருகும் எங்கோன்
திருவுளங் கருணை பூப்பச் செய்யும்அவ் வருளால் யார்க்கும்
மருவரு முத்திப் பேறு வாய்க்கும்அத் தருமந் தானும்
அருள்சிவ தருமம் ஆவித் தருமம்என் றிருகூ றுமால். 6

தருமம் என்று கூறப்பெறும் ஒன்று தானே தீயை ஒக்கும் விடத்தைப் பருகும் எமது பெருமான் திருவுள்ளத்தில் கருணை தழைப்பச் செய்யும். திருவுள்ளக் கருணை மேலிட்டால் யாவராயினும் அவர்க்குப் பொருந்துதற்கரிய சிவப்பேறு கைகூடும். அத்தகு தருமமும் அருளைத் தரும் சிவபுண்ணியம் எனவும், பசு புண்ணியம் எனவும் இருவகைப்படும்.

பளகறும் இட்டி யாதி பசுதரு மங்கள் காலத்
தளவையிற் கழியும் என்றும் வச்சிர அரிசி மானத்
தளர்வுறு நிலைபே றெய்தும் உயர்சிவ தருமம் அன்பால்
உளமுறச் சிவனை எண்ணல் முதற்பல உளவாம் அன்றே. 7

குற்றம் தவிர்ந்த வேள்வி முதலிய பசு புண்ணியங்கள் தத்தம் பயனைக் கொடுத்துக் கால அறுதியிற் கழிந்து போம். உயர்ந்த சிவ புண்ணியங்கள் என்றும் அழியாது வயிரத்தால் செய்யப்பெற்ற அரிசியை ஒப்பத் தளர்ச்சி எய்தாத நிலைபேற்றினை எய்தும்; அன்போடும் உள்ளத்துள் ஊன்றச் சிவபெருமானை மனத்தால் எண்ணுதல் முதல் பலஉள்ளனவாகும்.

பசு தருமங்கள் தத்தம் பயன்களை உதவிப் பின்பு அழிந்து விடும். சிவதருமங்கள் பயனையும் உதவி அழியாது மேலும் ஞானத்திற்கு ஏதுவாய் வீட்டினை நல்கும். மனம், மொழி, மெய் இவற்ருல் செய்தல், செய்வித்தல், உடன் படல் ஆக வளர்த்தல் கூடும். அழிதலும், அழியாமையும் உடைய இவ்விரண்டன் வேறு பாடுகள் மெய்கண்ட தேவ

நாயனர் திருவாக்கால் அறிக "பசித்துண்டு பின்னும் பசிப்பானை ஒக்கும். இசைத்து வருவினையில் இன்பம்–இசைத்த, இருவினை ஒப்பில் இறப்பில் தவத்தான், மருவுவனும் ஞானத்தை வந்து" (சிவஞா. சூ. 8. அதி. 1.)

சிவலிங்கப் பதிட்டை செய்தல் எவற்றுளும் சிறந்த தாகும்
சிவபத்தர் பதிட்டை தானும் அன்னதே இவைதாம் செல்வச்
சிவன்அமர் தலங்கள் தம்மிற் செய்பயன் கோடி மேலாம்
சிவநிறை காஞ்சி வைப்பிற் செய்திடின் அனந்த கோடி. 8

சிவலிங்கம் தாபித்து அருச்சித்தல் ஏனைய சிவ புண்ணியங்களுள்ளும் மிக்கதாகும். சிவனடியவர் வழிபாட்டுப்பயனும் அதுவேயாகும். இத்தொண்டுகள் செல்வனாகிய சிவபிரான் விரும்பி வீற்றிருக்கும் சிவ தலங்களில் செய்யப்பெறுமேல் பயன் மிக்குளவாகும். நலம் நிறைந்த காஞ்சிநகர்க்கண் செய்யப் பெறின் அளவில் கோடியாய்ப் பல்கும்.

'தாபர சங்கமங்கள் என்றிரண் டுருவில் நின்று, மாபரன் பூசை கொண்டு மன்னுயிர்க் கருளை வைப்பன்' ஆகலின் அடியவர் வழிபாடும் ஆண்டவன் வழிபாடும் ஒக்கும் என்க. காலத்தானும், இடத்தானும் பயன்கள் மிகும் என்க.

காஞ்சியை நினைப்பிற் காசிக் கடிநகர் வசித்த பேறும்
காஞ்சியே எவற்றி னுள்ளுஞ் சிறந்தது காண்மின் என்னுங்
காஞ்சிசூழ் அல்குல் வாணி கணவனார் மொழியுட் கொண்டு
காஞ்சியை அடைந்தார் மாசு கடிந்துயர் எழுவர் தாமும். 9

"காஞ்சியை நினைப்பினும் விளக்கம் பொருந்திய காசியில் வசித்தலான் வரும் புண்ணியம் வாய்க்கும். காஞ்சியே தலங்கள் எவற்றினும் மிக்கது ஆகும் என்றறிமின்" என்று கூறும் மேகலை யணிந்த சரசுவதி நாயகன் மொழியை மனத்துட்கொண்டு மனக்குற்றம் அகன்று உயர்ந்த முனிவரர் எழுவரும் திருக்காஞ்சியை அடைந்தனர்.

அருட்சிவ கங்கை நன்னீ ராடிஏ கம்ப வாணர்
திருப்பதந் தொழுது மஞ்சட் செழுநதிக் கரையின் எய்தி
அருத்திகூர் வியாத நாதன் அணிமையில் தத்தம் பேரான்
இருத்தினர் இலிங்கம் பூசை இயற்றினர் ஆர்வத்தோடும். 10

அருள் வடிவாகிய சிவகங்கைத் தீர்த்தத்தில் மூழ்கித் திருவேகம்பப் பெருமான் திருவடிகளைத் தொழுது மஞ்சள்நீர் நதிக்கரையினை அடைந்து பேரன்பு மிக்க வியாச முனிவரர்க்கு அருள் செய்த வியாச நாதேசுவரர்க்கு அருகில் தங்கள் தங்கள் பெயரால் இலிங்கம் தாபித்துப் பேராதரத்துடன் பூசனை இயற்றினர்.

பச்சிலை பழம்போ தேனும் பறித்திட்டுப் பத்தி செய்வோர்க்
கெச்சமில் இருமைப் பேறும் அளித்தருள் இறைவா போற்றி
முச்சக முதலே போற்றி முலைச்சுவட் டணியாய் போற்றி
நச்சினார்க் கினியாய் போற்றி எனத்துதி நவிலுங் காலை. 11

யாதானும் பச்சிலை எனினும், பழைய மலர் எனினும் ஆகக் கொய்து அருச்சித்துப் பேரன்பு செலுத்துவோர்க்குக் குறைவில்லாத போகமும், பர போகமும் நல்கி அருள் செய் இறைவனே போற்றி! மூவுலகிற்கும் முதல்வனே போற்றி! தனத்தழும்பாகிய அணி பூண் டோனே போற்றி! விரும்பினார்க் கினியாய் போற்றி! என்று தோத்திரஞ் செய்கின்ற பொழுதில்,

ஆயிடை வெளிநின் றெம்மான் அத்திரி பிருகு வாதித்
தூயரை நோக்கி வைவச் சுதமனு வந்த ரத்தில்
நீயிர்எம் ஆணையாற்றான் நிகழும்ஏழ் முனிவர் ஆமின்
மாயிரு முத்தி ஈற்றின் வழங்குதும் என்று பின்னும். 12

எமது பிரான் அவ்விடத்தில் வெளித்தோன்றி அத்திரி, பிருகு முதலிய தூய முனிவரரை நோக்கி "வைவச்சுத மனுவந்தரத்தில் நீவிர் எம்முடைய ஆணையின்படி விளங்கும் முனிவரர் எழுவீர் ஆவீராக! நிலையாய முத்தி (ஒன்றி ஒன்றாநிலை) யை முடிவில் வழங்குவேம்" என் றருளி மேலும்,

ஏழ்இலிங் கத்தும் எம்மைத் தரிசித்தோர்க் கிருமைப் பேறும்
வாழ்வளித் தருள்கேம் என்று வரங்கொடுத் தகன்றான் ஐயன்
பாழ்வினை அறுக்குஞ் சத்த தானத்திற் பணியப் பெற்றோர்
ஊழ்வலித் தொடக்கு நீங்கி உம்பர்கோன் அடியிற் சேர்வார்.

சிவலிங்கம் ஏழனிடத்தும் எம்மைத் தரிசித்தோர்க்குப் போகமும், பரபோகமும் ஆம் வாழ்வை அருள் செய்வேம்" என்று வரங்களை அருளி ஐயன் வெள்ளிடை நின்றும் திருவுருக் கரந்தனன். வினையைப்பெருக்க லும் நுகர்ந்து ஒழித்தலுமாகிய பாழே கழிக்கும் வினைப்பாசங்களை அறுக் கும் இடமாகிய (ஏழிடங்கள்) சத்ததானங்களில் வணங்கினோர் ஊழையும் வென்று இறைவனது திருவடி நிழலிற் றங்குவர்.

சத்த தானப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—763.



# பராசரேசப் படலம்

கலி விருத்தம்

தருமம்பிற ழாத சத்ததா னத்தின்
பெருமைஉரை செய்தாம் சத்திபெறு மைந்தன்
தருதந்தையர்க் கொன்ற அரக்கர்தம தாவி
பருகவழி பட்ட பராசரஞ் சொல்வாம். 1

தன்னியல்பிற்றிரியாத இருவகைத் தருமங்களுக்கும் இடமாகிய ஏழிடங்களின் பெருமையைப் புகழ்ந்தோம். சத்தி முனிவர் ஈன்ற பராசரர், தமக்குந் தந்தையையும், தந்தையுடன் பிறந்தோரையும் கொன்ற அரக்கர் தம்முடைய உயிரைப் பருகும் ஆற்றலைப் பெற வழிபாடு செய்த பராசரேசத்தைப் பற்றிக் கூறுவாம்.

கௌதமன் கைதவம்

மத்தப்புலன் வென்ற வசிட்டன் தரவந்தார்
பத்தையிரு மக்கள் பதுமத்தவன் ஒப்பார்
சத்திமுத லானோர் தகவால்இவர் வாழ்நாள்
சுத்தநெறி தேர்விச் சுவாமித்திரன் என்போன். 2

மயக்குகின்ற ஐம்புலன்களையும் தன் வழிப்படுத்திய வசிட்ட முனிவர் ஈன்ற மக்கள் நூற்றுவரும் பிரமனை ஒப்பவர்; சத்தி முதலாகிய அவர் தகவொடும் வாழ்கின்ற காலத்தில் நன்னெறியை நாடுகின்ற விசுவாமித்திரன் எனப்படுவோன்.

அசித்துப்புரஞ் செற்றோன் அருளான்உயர்ந் தோங்கும்
வசிட்டனுடன் என்றும் மாறுகொண் டுள்ளான்
வசிக்குந்தவ வாழ்க்கை வசிட்டன்குல மெல்லாம்
நசிக்கும்படி ஒன்று நாடிஇது செய்தான். 3

சிரித்துப் புரத்தை எரித்தோன் திருவருளால் மிகவும் உயர்ந்த வசிட்ட முனிவனுடன் எந்நாளும் பகை கொண்டுள்ளானாகலின், தவ வாழ்வில் காலம் கழிக்கும் அவ்வருட்டவ முனிவன் மரபு முற்றும் கெடும்படி ஓர் சூழ்ச்சியை ஆராய்ந்து இதனைத் துணிந்தனன்.

மன்னர்வழித் தோன்றி வசிட்டன்சா பத்தால்
துன்னும்அரக் கன்னும் சுதா சன்எனும் பேரோன்
றன்னைவிளித் தேவத் தறுகண்ணவன் எய்தி
இந்நூற்றுவர் தம்மை எடுத்துவாய்ப் பெய்தான். 4

அரசர் குலத்தில் தோன்றி வசிட்ட முனிவர் சாபத்தினால் மீண்டு செறியும் அரக்கனும் சுதாசன் என்னும் பெயரினையுடையவன் தன்னை அழைத்துத் தூண்ட வன்கண்மையுடைய அவன் எய்தி அவர் நூற்று வரையும் எடுத்து விழுங்கினான்.

வடமீனவ ளோடும் வசிட்டன் அது கேட்டுப்
படர்கூர்ந்தழு தேங்கி ஆற்றிப்பறம் பேறிப்
புடவிமிசை வீழப் பூமாதுளம் நெக்காள்
உடல்விண்டொழி யாமே தாங்கிஉய் வித்தாள். 5

அருந்ததியோடும் வசிட்டன் அதனைக் கேட்டறிந்து துன்பம் மிக்கு அழுதிரங்கித் தவிர்ந்து மலைமேலேறி அங்கிருந்து உயிரை விடும்பொருட்டுப் பூமியில் வீழ உடம்பு சிதைந்தொழியாதவாறு நிலமகள் உள்ம் நெகிழ்ந்து தாங்கி உயிர் பிழைக்கச் செய்தனள்.

வன்பர்ப்பதம் ஏறி வீழ்ந்தும்மா யாமே
அன்பிற்புவி தாங்க அயர்ச்சிதெளிந் தேங்கி
இன்பமக வெல்லாம் இழந்தசோ கத்தால்
துன்பக்கரை காணார் புலம்பிச்சோர் காலை. 6

திண்ணிய மலைமிசை ஏறி வீழ்ந்தும் இறவாதபடி பூமிதேவி அன்பினால் தாங்க அவசம் தெளிந்து இரங்கி மனையறத்தில் இன்பமிகும் மக்கள் நூற்றுவரையும் இழந்த புத்திரசோகத்தால் துயரக்கடலில் மூழ்கினோர் அதனினின்றும் உய்யும் வழி காணாராய் வருந்தித் தளரும்போது,

பராசரர் பிறத்தல்

கொன்னும்வசிட் டன்தன் குலமைந்தரின் மூத்தோன்
மன்னுந்தவச் சத்தி யென்பான்மனை யாட்டி
அன்னசெயல் கேளா அரற்றிக்கருப் பத்தால்
துன்னும்வயி றெற்றிப் புரளுந்துயர் கண்டாள். 7

மனவலி யிழந்த வசிட்ட முனிவரர் பெருமை பொருந்திய மக்களின் மூத்தோராய நிலைபெறுந் தவத்தினையுடைய சத்தி முனிவர்தம் வாழ்க்கைத் துணைவி தன் கணவனுரும், மைத்துனர் தொண்ணூற்றொன்பதின்மரும் துஞ்சிய செய்தி அறிந்து பெருக அழுது கருவுற்றிருத்தலால் இறுகும் வயிற்றிடை மோதிப் புரளுந் துன்பத்தினைக் கண்டாள்,

ஆவாஎன் செய்தாய் அந்தோகெட் டேன்என்
தாவாச்சந் தானத் தானந்தனை எற்றி
மூவாக்குலம் முற்றும் முடிக்கமுயல் கின்றாய்
பாவாய்என நைந்து கூறப்பணைத் தோளி. 8

பாவையே! ஆவா என்ன செய்தாய்! அந்தோ கெட்டேன்! என் அழியாத சந்ததி இருக்கையாகிய வயிற்றிடை எற்றி முதிர்ந்து கெடாத வமிசம் முழுதும் முடிக்க முயல்கின்றனை;' எனக் கூறி வருந்தியவழி மூங்கில் போலும் தோளினள்.

ஆவா என் செய்தாய் அந்தோ கெட்டேன்! இச்சொற்றொடர் இரக்கக் குறிப்பின் உச்ச நிலையை எட்டுகிறது.

மாமன்மொழிக் கஞ்சி வாளாஅமர் போது
தூமென்மலர்க் கூந்தல் எற்றுந்துயர்க் காற்றாப்
பூமென்கருப் பத்துட் பொலியுங்குழ விநைந்
தாமென்கனி வாய்விண் டழுபேரொலி கேட்டு. 9

மாமனுருடைய மொழிக்கு அச்சங்கொண்டு வறிதேயிருந்தபோது தூய மெல்லிய மலரணிந்த கூந்தலாள் மோதிய துன்பத்திற்குப்பொறாத பூப்போலும் மெல்லிய கருவினுட் பொலியுங் குழவி வருந்தி மெல்லிய கொவ்வைக் கனிபோலும் நிறத்தினையும், மேன்மையையும் உடைய வாய் விட்டழுகின்ற பேரொலி கேட்டு,

அறுசீரடி யாசிரிய விருத்தம்

இவ்வோதை எவர்ஓதை யெனவசிட்டன் தன்உள்ளத்
தெண்ணு நிற்கும், அவ்வேல்லைப் படநாகச் சேக்கைமிசைக்
கண்படுக்கும் அறவோன் தோன்றிச், செவ்வாய்மை முனிவரநின்
சந்தானந் தழைத்தோங்கத் தேயம் வாழ, ஒவ்வாதார்
குலஞ்சிதைய நின்மகனுக்கொருமைந்தன் உதிக்கின்றானால். 10

'இவ்வொலி எவர் குரலொலி' என வசிட்டன் தன் உள்ளத் தெண்ணி நிற்கும் அப்பொழுது படப்பாம்பின் பாயலில் கண் வளரும் அறவோனாகிய திருமால் தோன்றிச் "செவ்விதாகிய சத்தியத்திற் பிறழாத முனிவரனே! நின் குலந்தழைக்கவும், உலகோர் வாழவும், பகைவர் குலம் அழியவும் நின்மகனாகிய சத்திய முனிக்கு ஒப்பற்ற மைந்தன் பிறக்கின்றான்."

அணங்கொருபால் அமர்ந்தபிரான் திருவடிக்கு மெய்யன்பன்
அகில நூலும், உணர்ந்துதெளிந் தெனைஒப்பான் பாணியா
தின்னேவந் துறுமா காணென்,றிணங்கமொழிந் தேகியபின்
வசிட்டனுந்தன் மனக்கவலை யின்றி வாழ்ந்து, வணங்கும்இடை
அருந்ததியோ டானந்தந் தலைசிறப்ப வைகும் போது. 11

மங்கை பங்கன் திருவடிக்கு மெய்யன்பு பூண்டவனும், அனைத்து நூல்களையும் ஓதி உணர்ந்து தெளிந்தெனை ஒப்பவனும் ஆகிய அவன் தாமதியாது இப்பொழுதே தோன்றுவன் காணுங்கோள்'' என்று உடன்படக் கூறி ஏகிய பின்னர் வசிட்ட முனிவரும் தம் மனக்கவலை தவிர்ந்து மகிழ்ந்து நுணங்கும் இடையினையுடைய அருந்ததியோடும் கழிபேருவகை மீதூரவைகும்போது,

சத்திமனைக் கிழத்திஅதிர் சந்திபால் உலகுய்யத் தருமம் வாழ, உத்தமச்சீர்ப் பராசரன்வந் தவதரிப்ப இராக்கதர்தம் ஊர்கள் தோறும், மொய்த்தெழுந்து குருதிமழை பொழிந்தனவால் முனித்தலைவன் மகவை நோக்கி, மெய்த்தமனங் களிகூர்ந்து சாதமுதற் சடங்கனைத்தும் விதியிற் செய்தான். 12

உலகோர் வாழவும், தருமம் தழைப்பவும் சத்தி முனிவர் மனைவியாகிய அதிர்சந்தியினிடத்துப் பெருஞ் சிறப்பினை யுடைய பராசரர் வந்தவதாரஞ் செய்ய அரக்கர்களின் இருப்பிடங்களில் எல்லாம் செறிந்தெழுந்து இரத்தமழை பொழிந்தன. வசிட்டர் குழவியைப் பார்த்து மெய்த்தவமுடைய உள்ளம் மகிழ்ச்சி மிகுந்து சாதகன்மம் முதலான சடங்குகள் யாவும் நூல் முறையிற் செய்தனன்.

இளம்பிறைபோல் வளர்மைந்தன் ஒருஞான்று மடித்தலமீதிருந்து நோக்கி, வளம்பயிலும் மங்கலமின் றிருந்தனையால் யாண்டையன்மற் றெந்தை என்ன, உளம்பரியப் பயந்தாளை வினவுதலும் அவள்கேட்டங் குள்ளம் மாழ்கி, விளம்புவாள் பிள்ளாய்உன் தந்தைதனை வெகுண்டரக்கன் மிசைந்தான் என்று. 13

இளம்பிறையை ஒத்து நாடொறும் வளர்கின்ற மைந்தன் ஓர்கால் தாயின் மடிமீதிருந்து ஊன்றி நோக்கி 'நலஞ்செறியும் மங்கலநா லின்றி இருந்தனை என் தந்தை எவ்விடத்துள்ளனன்' என வருத்தம் தோன்ற ஈன்ற தாயை வினவியபோது அத் தாய் வருந்திப் 'பிள்ளாய்! உன் தந்தையைச் சினத்துடன் அரக்கன் விழுங்கினன்' என்று கூறி,:

அழுதிரங்கிக் கண்ணீரான் இளமைந்தன் றனைஆட்ட அருகு சூழ்ந்த, வழுவகன்ற முனிமடவார் முனிவரரும் அருந்ததியும் வசிட்டன் றானும், தொழுதியெனக் கிடந்தரற்றி அழக்கண்டு சூலிதிருவருளால் இன்னே, முழுதுலகும் வாய்மடுப்பல் எனவெகுண்டான் முனிவர்இள ஏறு போல்வான். 14

அழுது, வருந்திக் கண்ணீரால் தன் மகவைக் கழுவியபோது அருகிற் சூழ்ந்திருந்த குற்றமற்ற முனிவரர் பன்னியரும், முனிவரரும், அருந்ததியும், வசிட்டரும் பறவைக் கூட்டத்தொலியெனக் கூவி அழுதலைக் கண்டு முனிவரருள் இளஞ்சிங்கம்போன்ற பராசரர் 'சூலபாணியின் திருவருளால் இப்பொழுதே உலக முழுதையும் எடுத்து விழுங்குவேன் எனக் கூறி' வெகுண்டனன்.

வசிட்ட முனிவர் உபதேசம்

அம்மொழிகேட் டுயர்வசிட்டன் உலகெல்லாம் என்செய்யும் அப்பா அந்த, வெம்மைநிலை அரக்கர்குலம் வேரறுப்பச் சிவபூசை விழையாய் என்ன, இம்முறையேல் விடையூர்தி என்பூசை கொண்டருளி இன்னே நல்குஞ், செம்மைநூல் துணிபான சிறந்ததலம் யாததனைச் செப்பு கென்றான். 15

அம்மொழியைச் செவியேற்ற உயர்ந்த வசிட்ட முனிவர் 'அப்பனே, பாவம்! உலகமென் செய்யும். கொடுமை நிலைபெற்ற அரக்கர் கூட்டத்தை வேரோடும் களையும் ஆற்றலைப் பெறச் சிவபூசனையை விரும்புவாய்' என்று கூற 'இது வழியாயின், விடையூரும் பரன் என்னுடைய பூசனையை ஏற்றருளி இப்பொழுதே ஆற்றலை நல்கும் உண்மை நூல்வழிச் சிறந்த தலம் யாது? அதனைக் கூறுக' என்றனன்.

கலி விருத்தம்

என்றலும் நன்றுநீ வினய திந்நலந்
துன்றிய பெரும்பதி தூய வானவர்
முன்றிலும் அரங்கமும் முகில்உ ரிஞ்சநீள்
மன்றமும் முழவறாக் காஞ்சி மாநகர். 16

என்று வினவலும், 'நீ நன்றே வினயினை. விரைந்தருள் செய்யும் இந்த நன்மை செறிந்த பெருந்தலம் சிவபிரான் திருக்கோயில்களின் முன்பினும், நாடக சாலைகளினும், மேகங்கள் தவழும்படி நீண்ட பொது விடங்களிலும் முழவொலி மாறாத காஞ்சிமா நகரம்.

மறுவறு வானவர் மனிதர் மற்றுளோர்
உறுபெருந் தவர்எனை உள்ளிட் டோர்களும்
பெறலரும் பேறுபெற் றெய்தும் பெட்பின
திறுவழி நினைப்பினும் முத்தி ஈவது. 17

குற்றமற்ற தேவரும், மனிதரும், மிகப் பெருந்தவருள் என்னை உள்ளிட்டவர்களும், பிறரும் பெறலரிய பேற்றினைப் பெற்றுறும் விருப்பினது; இறக்கும்பொழுது நினைப்பினும் முத்தியைத்தரும் பெருமையது.

பன்னருங் கொடியவெம் பாத கர்க்கும்அப்
பொன்நகர் வரைப்பின்ஓர் தினத்துள் போர்விடை
மன்னவன் திருவருள் வாய்க்கு மேயெனின்
உன்னைஒப் போர்க்கினி ஓதல் வேண்டுமோ. 18

பேசற்கரிய மாபாதகர்க்கும் அந்நகரிடை ஓர் நாளளவிற்குள் பொருவிடை ஒன்றுடைப் புண்ணியமூர்த்தி தன் திருவருள் கிடைக்கப் பெறுமெனின் உன்னைப்போல் உயர்ந்தவர்க்கும் அருள் வாய்த்தலை ஓதுதலும் வேண்டுமோ? வேண்டா என்க.

கைமுதிக நியாயத்தாற்கூறல். 'துன்னியார் குற்றமும் தூற்றுமரபினர், என்னைகொல் ஏதிலார் மாட்டு' என்புழிப்போல என்க.

ஆயிடைச் செல்கெனும் வசிட்டன் அம்புயத்
தூயமென் மலர்ப்பதந் தொழுதெ ழுந்துதன்
தாயினை விடைகொடு தடங்கொள் காஞ்சியில்
காய்பொறிப் பராசரன் கடுக எய்தினன். 19

'அங்குச் செல்க' எனக்கூறும் வசிட்டருடைய தாமரை மலர் போலும் பாதங்களை வணங்கி எழுந்து தன் தாயையும் தொழுது விடுத்துத் தடங்கள் சூழும் காஞ்சிமா நகரில் ஐம்பொறிகளையும் சிறியடக்கிய பராசரன் விரைய அடைந்தான்.

கம்பைநீ ராடிஏ கம்ப நாயகர்
தம்பனி மலர்ப்பதந் தாழ்ந்து மஞ்சள்நீர்
வம்பவிழ் கரைமிசை மணிகண் டேச்சர
நம்பர்தம் வடகுட ஞாங்கர் நண்ணினன். 20

சிவகங்கையில் மூழ்கித் திருவேகம்பப் பெருமான் தமது குளிர்ந்த மலரை ஒக்கும் பதங்களைத் தொழுது நறுமணங் கமழும் மஞ்சள் நதிக் கரையில் மணிகண்டேசப் பெருமான் தலத்திற்கு வடமேற்குப் பக்கத்தினை நண்ணினன்.

சிவகங்கையில் நீராடித் திருவேகம்பப் பெருமானைத் தொழுத பின்னரே தத்தம் பெயரால் சிவலிங்கமும், தீர்த்தமும் கண்டு பயன் பெற்றனர். யாவரும் எனக் கருத்திருத்துக.

தன்பெயர் இலிங்கம்ஒன் றிருத்தித் தாவிலா
அன்பினின் மலர்எடுத் தருச்சித் தேத்துழிப்
பொன்புரி வேணியோன் கருணை பூத்தெதிர்
வன்பழ விடைமிசை வந்து தோன்றியே. 21

பராசரேசப்பிரான் எனப்பெயரிய சிவக்குறி நிறுவிக் குற்றமற்ற மெய்யன்பொடும் மலர் கொய்து அருச்சனை செய்து துதி செய்த வழிப் பொன் விரும்பத்தக்க ஒளியுடைச் சடைப்பெருமான் கருணை மலர்ந்து வலிமை அமைந்த பழைய இடபமேல் வந்தெதிர் தோன்றி,

வேட்டன கூறுகென் றருள வேதநூற்
பாட்டினாற் பலமுறை பழிச்சித் தாழ்ந்துமுன்
வாட்கதிர் ஐம்படை மார்பிற் கிண்கிணித்
தாட்டுணை மழமுனி சாற்றல் மேயினன். 22

'விரும்பியவற்றைக் கூறுக' எனப் பெருமான் வாய்மலரப், பேரொளியைப் பரப்புகின்ற ஐம்படையணிந்த மார்பினையும், கிண்கிணியணிந்த இரு காலினையும் உடைய இளைய முனிவரன் வேத நூற்பாக்களால் பலமுறையும் துதித்து வணங்கி முன் நின்று கூறத் தலைப்பட்டனன்.

காத்தற் கடவுளாகிய திருமாலினது சங்கு, சக்கரம், தண்டு, வாள், வில் என்னும் ஐந்து ஆயுதங்களின் வடிவாகச் செய்து மார்பிற் சாத்துதல் குழந்தைகட்குத் தீயன நிகழாதிருத்தற் பொருட்டென்க. இலக்கியங்களில் ஆங்காங்குப் பேசப்பெறும் ஐம்படையும், கிண்கிணியும் பாலப்பருவத்தை வலியுறுத்தும். வாள் கதிர்-பேரொளி; மீமிசைச்சொல்.

எறுழ்விடைப் பரிமிசை எந்தை எந்தைஓர்
குறுவலி அரக்கனாற் கோட்பட் டான்அவன்
உறுகுல முழுவது மறலி ஊர்புகத்
தெறுவரம் எனக்கருள் செய்ய வேண்டுமால். 23

வலிமை அமைந்த விடையாகிய ஊர்தி மேல்விளங்கும் எந்தையே! என் தந்தையாகிய சத்திய முனிவன் ஓர் அற்பவலியுடைய அரக்கனாற் கொலையுண்டனன். அவன் தோற்றிய அசுர குலமுழுதும் இயமனுடைய ஆளுகைக்குட்பட; அழிக்கின்ற ஆற்றலை அடியேனுக்கருள் செய்ய வேண்டும்.

எந்தை-இறைவன் உயிர்த்தந்தையாய்ப் பெத்த முத்தியினும் அருள்வோன்; சத்திய முனி உடற்றந்தையாய் இப்பிறப்புத் தோன்ற இறைவன் படைப்பிற்குக் கருவியாய் நின்றவன்.

ஈண்டுநீ இனிதமர்ந் தெவர்க்கும் இன்னருள்
மாண்டகு சிறப்பினின் வழங்க வேண்டுமால்
ஆண்டகை என்றிரந் தன்பு மேதக
வேண்டலும் எம்பிரான் விளம்பல் மேயினான். 24

'ஆண் தகையே! நீ விரும்பி வீற்றிருந்து யாவர்க்கும் திருவருளை மாட்சிமை அமைந்த சிறப்பொடும் வழங்க வேண்டும்' என் றிரந் தன்பு மேம்பட வேண்டிய காலை எமது பெருமான் எடுத்தோதினர்.

பராசரர் வரம்பெறல்

மைந்தநின் பூசையில் தம்பி மாரொடு
நுந்தைமற் றெமைஅடைந் துற்று நோன்மைசால்
அந்தண னும்உனைக் காணும் ஆசையின்
முந்துற நின்றவா காண்டி மொய்ம்பினோய். 25

'மைந்தனே! நின்னுடைய பூசனையின் பயனாகத் தம்பிமாரொடும் உனது தந்தை எம்மைச்சார்ந்து வலிமை அமைந்த அந்தணனும் உன்னைக் காணவேண்டும் விருப்பினால் முற்பட நின்ற வகையைக் காணுதி; தவவன்மையுடையோனே!

மகன்செய் பூசனை தந்தையையும், சிறிய தகப்பன்மாரையும் சிவதரிசனத்திற்குரிமைப் படுத்தியது. பண்புடை மக்களை ஈன்றதன் பயன் (திருக். )

அரக்கரைக் கொலைசெயும் வேள்வி யாற்றிஅந்
நெருப்பினில் அவர்தமை நீறு செய்திஇவ்
வரைப்பினில் என்றும்நாம் மகிழ்ந்து வாழ்துமென்
றுரைத்தனன் மறைந்தனன் வேதத் துச்சியில். 26

கொலை செய்தற்குரிய வேள்வியை இயற்றுதி. அவ்வேள்வித் தீயில் அரக்கரை நீறுபட அழித்தி. இச்சூழலில் யாம் என்றும் மகிழ்ந்து வாழ்வோம்' என்றருளி வேத சிரசில் மறைந்தனன்.

பராபரன் திருவருள் பெற்றுப் பாய்புகழ்ப்
பராசர நெடுந்தகை பணைத்த வேள்வியில்
பராய்மனத் தரக்கரை நீற்றிப் பாற்றினன்
பராயசீர் உறுவர்தம் பகர்ச்சி யாற்கதம். 27

மேலோர்க்கு மேலோன் திருவருளைப் பெற்றுப் பரவிய புகழை யுடைய பராசரர் என்னும் பெயர்பூண்ட பெருந்தகை கிளைத்தெழுந்த தீயையுடைய வேள்வியில் வலியபராய் மரத்தை ஒக்கும் மனவலி படைத்த அரக்கரை அழித்துப் பரவிய சிறப்பினையுடைய முனிவர் நல் லுரையால் கோபத்தை ஒழித்தனன்.

எழுசீரடி யாசிரிய விருத்தம்

விரிபுனல் படிந்தோர் பருகினோர் தீண்டப் பெற்றுளோர் தமக்கும்வீ டளிக்கும், முரிதிரை முகட்டு வராலினம் உகளும் முழங்-கொலி மஞ்சள்நீ ராற்றங், கரைமிசைத் தகைசால் முனிவரர் வழுத்துங் கண்ணுதல் வளாகங்கள் இன்னும், உரைசெயப் புக்கால் உலப்புறு காண்மின் உயர்நிலைப் பெருந்தவ முனிவீர். 28

உயர்நிலையையுடைய பெருந்தவ முனிவர்களே! பரப்பமைந்த தீர்த்தத்தில் மூழ்கினோர், பருகினோர், தீண்டினோர் யாவர்க்கும் முத்தியை நல்கும் முரிகின்ற திரைமேல் வரால் கூட்டங்கள் புரளும் ஒலிக்கின்ற ஒலியுடைய மஞ்சள் நதிக்கரைமேல் தகுதி அமைந்த முனிவரர் துதி செய்யும் சிவபிரான் தலங்கள் மேலும் கூறப்புகின் முடிவுறு உணர்மின்.

இட்ட சித்தீச்சரம் 9-ஆம் செய்யுளொடும் ஒப்பு நோக்குக.

பராசரேசப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-791.



# ஆதீபிதேசப் படலம்

கலி விருத்தம்

பராரை மாநிழற் பண்ணவன் மேவிவாழ்
பராச ரேசம் பகர்ந்தனம் மாதவன்
பராய பைம்பொழில் ஆதீபி தேச்சரம்
பராக மாவினைப் பற்றற ஓதுவாம். 1

பருத்த அடியினையுடைய ஒற்றைமா நிழலில் எழுந்தருளியுள்ள திருவேகம்பப் பெருமான் விரும்பி யுறைகின்ற பராசரேசம் என்னும் தலத்தினைப் பற்றிப் பேசினோம். திருமகள் நாயகன் வணங்கிய பசிய சோலையில் உள்ள விளக்கொளிப் பெருமான் வரலாற்றை வினையாகிய தொடக்குப் பொடிபட ஓதுதலைச் செய்வாம்.

அன்ன ஊர்தி மகத்தை அழிப்பலென்
றுன்னி வாணி நதிஉருக் கொண்டநாள்
கன்னி பால்வளர் கண்ணுதல் ஏவலின்
முன்னர் ஏகி முகுந்தன் தடுத்தனன். 2

'அன்னத்தை வாகனமாக உடைய பிரமன் வேள்வியை அழிப்பேன்' என்று மதித்துச் சரசுவதி நதி வடிவு கொண்ட நாளில் உமையம்மையை இடங்கொள் கண்ணுதலோன் திருஆணையின் வெள்ளம் வருமுன் எதிர்சென்று திருமால் தடுத்தல் செய்தனன்.

அங்கங் கெய்தித் தடுத்தும் அடங்கிடாப்
பொங்கு வேகப் புதுநதி நள்ளிராத்
துங்கக் காஞ்சியில் துண்ணெனத் தோன்றலுஞ்
சங்க பாணி தளர்ந்தழி வுற்றரோ. 3

பல விடங்களிற் சென்று தடுத்தும் மடங்காது பொங்கி எழுந்த வேகவதி என்னும் புதிய நதி நடு இரவில் உயர்ச்சி மிகு காஞ்சிநகர்க்கண் அச்சந்தோன்றத் தோன்றலும் பாஞ்ச சன்னியத்தைக் கைக்கொண்ட திருமால் உள்ளம் சோர்ந்து அழிவெய்தி,

பெருவி ளக்கொளி யாகிப் பிறங்கிமற்
கருணை மால்கரி காத்தவன் சூழலின்
அருகு மேற்றிசை ஆதீப தேசமென்
றொருசி வக்குறி உங்கண் இருத்தியே. 4

பெரிய விளக்கொளியாகி விளங்கி வளங்கொண்ட கருணையுடன் பெரிய யானையை (கசேந்திரனை)க் காத்த திருமால் எழுந்தருளியுள்ள தலமாகிய அத்திகிரிக்கு மேற்றிசையில் ஆதீபித ஈசம் என்னும் அவ்விடத்தில் ஒப்பற்ற சிவலிங்கத் திருவுருவம் நிறுவியே,

பூசை யாற்றிப் புரிவரம் பெற்றெழுந்
தோசை நீத்தந் தடுத்துயர் வேள்விகாத்
தாசை ஆடை யவன்எதிர் வைகினன்
வீசு சோதி விளக்கொளி அண்ணலே. 5

பூசனை வலம் உண்டாகச் செய்து விரும்பிய வரத்தைப் பெற்று எழுச்சியொடு சென்று பேரொலியுடன் வந்த வெள்ள நீரைத் தடை செய்து உயர்ந்தயாகத்தினை இடையூறு நீக்கிக் காவல் செய்து திசையை ஆடையாகவுடைய விளக்கொளிப் பெருமான் திருமுன்னர் விளக்கொளிப் பெருமாள் என்னும் திருப்பெயருடன் எதிரில் வீற்றிரா நின்றனர்.

செங்கண் மால்தொழும் ஆதீபி தேச்சரம்
பொங்கு காதலிற் போற்றப் பெறுநர்தாம்
இங்கண் வேண்டும் வரங்களும் எய்திமற்
றங்கண் முத்திப் பதமும் அடைவரால். 6

செந்தாமரை மலர்போலும் கண்களையுடைய திருமால் வணங்கும் ஆதீபிதேச்சரப் பெருமானை மிகுகின்ற பேரன்பில் வழிபாடு செய்வோர் இவ்வுலகில் வேண்டும் நலங்களையும் பெற்று வாழ்ந்து அவ்வுலக நலமாகிய முத்திப்பேற்றினையும் அடைவர்.

ஆதீபிதேசப் படலம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம்–797.

## முத்தீசப் படலம்

கலி விருத்தம்

கற்றைச் செஞ்சடைக் காமரு கொள்கையீர்
அற்றம் நீத்தருள் ஆதீபி தேச்சரஞ்
சொற்ற னம்புள் ளரசு தொழுதுசீர்க்
கொற்றம் உற்றமுத் தீச்சரங் கூறுவாம். 1

தொகுதி அமைந்த சிவந்த சடையும் யாவரும் விரும்புகின்ற தவக்குறிக்கோளும் உடையீர்! குற்றத்தைப் போக்கி அருளுகின்ற விளக்கொளிப் பெருமான் இயல்பினைக் கூறினம். கருடன் வழிபாடு செய்த சிறப்பினையுடைய வெற்றியைப் பெறற்கிடனாகிய முத்தீச்சரத்தின் வரவினைக் கூறுவாம்.

கத்துரு சுபருணை காசிபர்முன் கலாம்

மன்னு காசிபன் றன்மனை யாட்டியர்
பன்னு கத்துருப் பாவை சுபருணை
என்னும் மாதர் இருவருந் தம்உரு
நன்ன லத்தை நயந்துகொண் டாடினர். 2

பெருமை மிகும் காசிப முனிவர் தம் மனைவியர் கத்துரு சுபருணை எனப்பெயர் பெறும் இருவரும் தத்தம் வடிவின் பேரழகைத் தாங்களே போற்றிப் பாராட்டினர்.

அழகியர் என்பார் 'பாவை, மாதர்' என்றனர்.

தத்தம் மேனித் தகைநலஞ் சாற்றுபு
மெய்த்த பூசல் விளைத்தனர் தோற்றவர்
உய்த்த வெஞ்சிறை மேவுகென் றொட்டினர்
அத்த வத்தனை அண்மி வினயினர். 3

தங்கள் தங்கள் உடம்பழகின் நுட்பங்களை விரித்துரைத்து (விளையாட்டாக அன்றி) மெய்யே போர் மூண்டனர். அழகில் தோற்றவர் வைக்கப்படுகின்ற கொடிய சிறையிற் கிடப்பாராக என்று சபதஞ் செய்தார். அந்தத் தவமுனிவராகிய காசிபரை அணுகித் தம்முள் 'பேரழகியர் யாவர்' என வினவினர்.

பைத்த பாப்பகல் அல்குற் பனிமொழிக்
கத்து ருப்பெயர்க் காரிகை வேறலாற்
சுத்த நீர்மைச் சுபருணைப் பேரிய
மைத்த கண்ணியை வெஞ்சிறை மாட்டினள். 4

பாம்பினது படம் போன்ற அகன்ற அல்குலினையும் மெல்லிய மொழியினையும் உடைய கத்துரு என்பவள் வெல்லுதலாலே தூய இயல்பினையும் சுபருணையென்னும் பெயரினையும் உடைய மையுண்ட கண்ணியைக் கொடிய சிறையிடைப் படுத்தனள்.

வீடு செய்யென அங்கவள் வேண்டலுங்
கூடு மூன்றும் விசும்பிற் குளிர்மதிப்
பாடு தோன்றும் அமிழ்தம்அப் பண்ணவர்
நீடு காவலின் உள்ளது நேரிழாய். 5

சுபருணை தன்னைச் சிறையினின்றும் விடுதலை செய்யென வேண்டுகையில், நேரிழாய்! எண்ணில் மூன்றுவதாகக் கூடுகின்ற விண்ணிடைக் குளிர்ந்த சந்திரனிடத்துத் தோன்றும் அமிழ்தம் தேவர்கள் பெருங் காவலிலுள்ளது.

மூன்றும் விசும்பு; "நிலமீதும் அந்தரத்தும் நெறிதாழ் கூந்தல் அரம்பையர் வாழ், புலமீதும்" (கயிலாயப்படலம்) என வருதல் காண்க. தேவர் சந்திர கிரணத்தை உண்பரெனல்: "பிறைவளர் நிறைமதி உண்டி அணிமணிப் பைம்பூண் அமரர்க்கு" உலகு பயம் பகர ஓங்கு பெரும் பக்கம், வழியது பக்கத் தமரருண்டி மதி." (பரிபாடல்)

அதுகொ ணர்ந்திங் களித்துநின் வெஞ்சிறை
விதுமு கத்தி விடுவித்துக் கொள்ளெனக்
கதிர்செய் பூண்முலைக் கத்துரு கூறலும்
மதிஅ ழிந்து வருந்திச் சுபருணை. 6

'முழுமதி முகத்தி! இங்கு அவ்வமுதத்தைக் கொணர்ந்து கொடுத்து நின் கடுங்காவலை விடுவித்துக்கொள்க' என்று ஒளி வீசுகின்ற அணிகளை அணிந்த கத்துரு கூறிய அளவிலே சுபருணைகேட்டு அறிவழிந்து வருந்தி,

கருடன் பிறத்தல்

ஆசில் மெய்த்தவம் ஆற்றி அரும்பெறற்
காசி பன்அருள் பெற்றுக் கலுழனை
மாசி லாத மகவென ஈன்றனள்
பேசி னாள்அம் மகற்கிது பெற்றியே. 7

குற்றமற்ற மெய்த்தவமாகிய சிவார்ச்சனை புரிந்து பெறற்கரிய காசிப முனிவர் அருளால் கருடனைக் குற்றமற்ற நன்மகவென ஈன்று அம்மகனிடத்துத் தன்னியல்பை விளக்கினாள்.

பூசனை தவம்: "தவமுயல்வோர் மலர் பறிப்ப" (திருஞா. கழுமலம் மேகராகக் குறிஞ்சி).

கேட்டெ ழுந்து கிளர்ந்து விடைகொடு
கோட்ட மில்புட் குலத்தர சன்னைதன்
வாட்டம் நீப்ப வலிந்து கடுகிவிண்
நாட்டின் இன்னமிழ் துற்றுழி நண்ணினான். 8

மாறுபாடில்லாத கருடன் தன் தாய் சொற்கேட்டு எழுச்சியொடெழுந்து அவள் வருத்தத்தைத் தவிர்ப்ப மிக விரைந்து பறந்து விண்ணுலகில் அமிழ்தம் உள்ள இடத்தை அடைந்தனன்.

அங்கண் வைகிய காவல ராயினர்
தங்கள் வீரந் தபப்பொரு தேற்றெதிர்
வெங்கண் வெண்கய வேந்தனை ஒப்பினான்
பொங்கு வேகப் பொலஞ்சிறைக் காற்றினால். 9

அவ்விடத்தில் அமிழ்திற்குக் காவலர் வீரங்கெடப் பொருது பின் எதிர்த்த வன்கண்மையுடைய ஐராவதத்திற்குத் தலைவனாகிய இந்திரனைப் பொன்னிறச் சிறகின் காற்றினால் புறங்காண ஓட்டினான்.

அமிழ்தம் வௌவி அகல்வுழி மால்எதிர்ந்
துமிழ்சி னத்தின் உருத்துவெம் போர்செயத்
தமிய னாய உவணனுந் தாக்கினான்
இமிழி சைப்போர் இருவர்க்கும் மூண்டதே. 10

அமிழ்தத்தைக் கைப்பற்றிக் கொண்டகலுங் காலைத் திருமால் பகைத்துப் பொங்கி வழிகின்ற கோபத்துடன் உள்ளம் கொதித்துக் கொடிய யுத்தத்தைச் செய்ய நிராயுத பாணியாய கருடனும் மோதினான்; ஒலிக்கின்ற ஓசையையுடைய சண்டை இருவர்க்கும் நெருப்புப் போல முறுகி முதிர்ந்தது.

ஏழ டுக்கிய மூந்நாள் இருவரும்
தாழ்வொன் றின்றிச் சமர்பெரி தாற்றுழி
ஆழி மாயன் அகமகிழ் கூர்ந்துயர்
பாழி வன்சிறைப் பார்ப்பினை நோக்கியே. 11

இருபத்தொரு நாள் இருவரும் சலிப்பின்றிப் பெரும் போர்செய்தவழிச் சக்கரத்தையுடைய திருமால் உள்ளம் மகிழ்ச்சி மிக்குச் சிறந்த வலிமையையும் வலிய சிறகினையும் உடைய பறவைக் குஞ்சாகிய கருடனை நோக்கியே,

திருமால் வரம் பெறல்

வன்புள் வேந்தநின் வீரம் மகிழ்ந்தனன்
என்பு டைவரங் கொள்ளென ஈங்கிவன்
உன்பெ ருந்திறற் குள்மகிழ்ந் தேன்மற்றென்
றன்பு டைவரங் கொள்ளெனச் சாற்றினான். 12

'வலிமை அமைந்த பறவை அரசனே! நின்னுடைய வீரத்தைக் கண்டு மகிழ்ந்தேன். என்னிடத்து விரும்பும் வரத்தைப் பெற்றுக்கொள்' என்று கூறக், கருடனும் 'உன்னுடைய பேராற்றலுக்குள்ளம் மகிழ்ச்சி எயதினேன். என்னிடத்து நீ வேண்டிய வரத்தைப் பெற்றுக் கொள்க' எனக் கூறினன். (என்றன்என்புழித் தன் சாரியை.

மாயன் அம்மொழி கேட்டு மகிழ்ச்சியின்
தூயை ஓதிய சொல்தவ றாயெனின்
நீயெ னக்கு நெடுந்தகை ஊர்தியாய்
ஏயும் இவ்வரம் யான்கொள நல்கென்றான். 13

திருமால் அம்மொழியினைக் கேட்டு மகிழ்ச்சியொடும் 'பெருந்தகையே! நீ மனமொழி மெய் இவற்றால் பரிசுத்தம் உடையை ஆவை;

கூறிய வாக்குப் பொய்த்திலை எனின் எனக்கு வாகனமாகப் பொருந்தும் இவ்வரத்தை யான் கொள்ளுமாறு நல்குக' என்றனர்.

வஞ்சம் புரிதலின், மாயன் என்றனர். 'மாயன் மாயத்துப்பட்ட மனத்தரே' (திருநாவுக்.)

ஆர்த்தி கூர்தர அம்மொழி கேட்டொரு
மூர்த்தம் எண்ணி உயிர்த்து மொழிந்தமெய்
வார்த்தை யிற்பிறழ் வஞ்சிஅற் றுகெனச்
சீர்த்தி யாளன் விடைபெற்றுச் சென்றனன். 14

வருத்தம் மிகும்படி அம்மொழியைக் கேட்டு ஒரு முகூர்த்த நேரம் நினைந்து வெய்துயிர்த்துச் சொல்லிய மெய் வார்த்தையில் மாறுபடற்கு அஞ்சி அவ்வாருகுக என்று மிகு புகழோன் விடைபெற்றுச்சென்றனன்.

உயிர்த்து—பெருமூச்செறிந்து எனினுமாம். தன்னைக் கொடுத்த மையின் இசைவுபெற்றுச்சென்றனன் ஆதலின்'விடைபெற்று'என்றனர்.

கருடன் வரம் பெறல்

மறுவில் கத்துரு மாட்டுச் சுதைக்குடங்
குறியெ திர்ப்பை கொளக்கொடுத் தன்னையைச்
சிறையின் நீக்கினன் சீறர வங்கள்பால்
கறுவு செய்து கொலைசெயுங் காதலான். 15

குற்றமில்லாத கத்துருவினிடத்தில் அமிழ்துடைக் குடத்தை விலையாகக் கொடுத்துத் தன் தாயை விடுதலை செய்து சீற்றம் கொள்கின்ற பாம்புகளொடு பகை கொண்டு வயிரமுற்றுக் கொலை செய்யும் விருப்பினன்,

குறி எதிர்ப்பு: பெற்ற அளவிற்கு ஒப்ப எதிராகக் கொடுப்பது. கறுவு-வயிரம். (திருநாட். 85.)

கச்சி வைப்பினை எய்திஆ தீபிதக் கடிநகர் வடகீழ்பால், நச்சும்
அன்னைதன் சிறைக்குவீ டருளும்முத் தீசனை நயந்தேத்தி, இச்சை
யாற்றினிற் பெற்றனன் எறும்வலிப் பணிக்கூட்டம், அச்ச
முற்றிடச் சிறகெழு வளியினில் அலைத்தெழு புள்வேந்தன். 16

கச்சி மாநகரை அடைந்து 'ஆதீபிதம்' என்னும் விளக்கமமைந்த தலத்திற்கு வடகிழக்கில் விரும்புகின்ற தன் தாயாகிய சுபருணைக்குச் சிறையினின்று விடுதலையை மகவால் அருளிய முத்தீசப் பெருமானை விரும்பித் துதி செய்து விருப்பப்படி பெரு வரங்களைப் பெற்றனன். பெரு வன்மையுடைய பாம்பின் கூட்டங்களை அச்சம் மிகும்படி சிறகிடை வெளிப்படு காற்றினல் வருத்தி எழுகின்ற பறவை அரசனுகிய கருடன்.

சித்த மாசொரீஇ விளங்குமெ காலியார் திருக்குறிப் புத்தொண்டர்
அத்த லத்தினில் வீடுபே றெய்தினர் மற்றும்ஆ யிடைப் போற்றி
முத்தி சேர்ந்தவர் எண்ணிலார் மதிமுடி முழுமுதல் அடிப்போதின்
வைத்த சிந்தையின் முக்குறும் பெறிந்துயர் மாதவத் தலைவீர்காள்.

பிறையை முடியில் அணிந்த முதல்வர்க்கு முதல்வன் திருவடி மலர்களில் பதித்த உள்ளத்தால் முக்குற்றங்களைத் தறித்து உயர்ந்த பெருந்தவத் தலைமையை யுடையீர்! ஆணவாதி அழுக்கினை நீக்கி மெய்யறிவான் விளங்கும் ஏகாலியர் மரபின் வந்த திருக்குறிப்புத் தொண்ட நாயனார் அத்தலத்தினில் வீடு பேற்றினை அடைந்தனர். மேலும் அம் முத்தீசப் பெருமானை வழிபாடு செய்து முத்தியைத் தலைப்பட்டவர் அளப்பிலர் ஆவர்.

காமம், வெகுளி, மயக்கம் ஆகிய முக்குற்றங்கள். இறைவன் திருவுள்ளத்து நிகழும் திருக்குறிப்பினை உணரும் அடியவர் திருவுட்கிடை உணர்ந்து அவர் வழி நின்ற நாயனார் ஆகலின், திருக்குறிப்புத்தொண்ட நாயனார் ஆயினார் என்க. சித்தமாசு ஒருவல்: (திருத். ஏனாதி. 114.) எறிதல்; குறிப்புருவகம். முற்றுருவகங்கள்: (சிவபுண்ணியப் படலம் 3.)

முத்தீசப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்–814.



# பஞ்சதரேசப் படலம்



அறுசீரடி யாசிரிய விருத்தம்

கவைய டிக்கய வாய்க்கரு மேதிகள் உழக்கிய கடிவாவிச்
சுவைந றும்புனல்வாளைமீன் குதிக்கும்முத் தீச்சரத்தியல்சொற்றும்
குவைம லர்ச்செழும் பொதும்பரிற் பாட்டளி கொழிநறுமடுத்தும்பர்
அவைவி யத்தகப் பண்பயில் பஞ்சதரேச் சரம்இனி அறைகிற்பாம்.

பிளவுபட்ட குளம்பினையும், பெரிய வாயினையும் உடைய கரிய எருமைகள் கலக்கிய வாசனை வீசுகின்ற தடாகங்களிற் சுவையும், நறுமணமும் கொண்ட நீரிடை வாளைமீன்கள் துள்ளும் முத்தீச்சரத்தின் உண்மையை உரைத்தாம். இனிக், கொத்துகளாகப் பூத்த மலர்களை யுடைய வளங்கெழுமிய சோலையில் இசை பாடுகின்ற வண்டுகள் செழுந் தேனை நிரம்ப உண்டு யாழ்வல்ல விண்ணவர் குழாம் கண்டு இறும்பூதெய்தப் பண்பாடும் இடமாகிய பஞ்சதரேச்சரம் பற்றிப் பேசுவாம்.

பழுக்கச் சுட்டபொற் பிழம்பெடுத் தப்பிய பரிசுறழ் திருமேனிக்
கழுக்க டைப்படை ஏந்துமுத் தீசன்ஒண் கழலடி தொழும்பேற்றால்
இழுக்கித் தங்கிளை முருக்குறுங் கலுழனதெறுழ்வலித்திறம்நோக்கி
வழுக்கில் வெம்பணிக் குலங்களும் பிரானடி வழிபட நினைவுற்று. 2

சிவக்கக் காய்ச்சிய பொற்குழம்பைப் பதித்த தன்மையை ஒத்த திருமேனியையும், சூலப்படையையும் உடைய முத்தீசப் பெருமான் விளக்க மமைந்த வீரக்கழலணிந்த திருவடியைத் தொழும் புண்ணியத்தால் தம் இனத்தைத் தாழ்வுறுத்தி அழிக்கின்ற கருடனது மிக்க வலிமையை நோக்கித் தவறில்லாத கொடிய பாம்பினமும் பெருமானது பாத மலர்களை வழிபட எண்ணி,

தழங்கு தீங்கிணை முழக்கரு தடநெடுங்கச்சிமா நகர்சார்ந்து,
முழங்கு வெண்டிரை சுழித்துவான் நிமிர்ந்துநான் முகன்மகந் தபச்
சீறி,வழங்கு நன்னதி வடக்கண் ஆதீபித வளநகர்த்தென்பாங்கர்ப்
பழங்கண் நோயறப் பணதரேச் சரன்றனைப்பத்தியில் தாபித்து.3

ஒலிக்கின்ற இனிய 'கிணை' என்னும் மருதநிலப்பறையின் ஒலி மாறாத நீண்டும் அகன்றும் விளங்கும் காஞ்சிமா நகரைச் சார்ந்து, முழங்குகின்ற வெள்ளிய திரைகளுடன் சுழியிட்டு வானளவும் நிமிர்ந்து பிரமனுடைய வேள்வி கெடச் சீறி நடக்கின்ற வேகவதி நதிக்கு வடக்கில் 'ஆதீபிதம்' என்னும் தெய்வத்தலத்திற்குத் தென் திசையில் துன்ப நோய் தீரப் பணதரேசப்பரனைப் பேரன்பினால் இருத்தி,

விதிமுறைச்சிவ பூசனை யாற்றிமால் விடைக்கொடிப் பெருமானின், புதிய பூங்கழல் அருச்சனைப் பேற்றினாற் புள்ளிறை மிடல் எய்தி, அதிர்வு றுத்தெமை அலைத்திட வெரீஇயினம் அடைக்கலம் புகுந்தேம் யாம், கதிஎ மக்குவே றில்லைஎன் றிரத்தலுங் கண்ணுதல் அருள்கூர்ந்து. 4

நூல் விதித்தபடி சிவபூசனையை இயற்றிப் பெருமையுடைய விடைக் கொடியை உயர்த்திய சிவபெருமானின் புதிய மலர்போலும் கழலணிந்த திருவடிகளை அருச்சித்த சிவபுண்ணியத்தினால் கருடன் வலிமை உற்று எம்மை அச்சுறுத்தி வருத்திட யாம் அஞ்சினோம்; சரணடைந்தோம்; அடைக்கலம் புகுமிடம் வேறில்லை' என்று குறையிரத்தலும் கண்ணுதலோன் அருள் மிகுந்து,

பன்ன கங்களைப் பணியெனத் தாங்கினன் பன்னகாபரணன்றன் இன்ன ருட்பெறும் மதுகையான் மற்றவை எந்தைபால் அரியோடும் துன்னு வெம்பகைக் கலுழனைக் 'கலுழனே சுகங்கொல்' என் றஞ்சாமே, பன்னி மேன்மையின் வினயின இம்மொழி பாரெலாம் எடுத்தோதும்.

பாம்புகளை அணிகலன்களாகத் தரித்தனன் ஆகலின், பாம்பாபரணனுடைய இனிய அருளைப்பெறும் வலிமையால், அப்பாம்புகள், இறைவனிடத்தே திருமாலோடும் வந்த கொடிய பகையையுடைய கருடனைக் 'கருடனே சுகமோ' என்றச்சமின்றி மேன்மையின் வினவிய இதனைப் பாரெலாம் பலகாலும் எடுத்துப் பாராட்டும்.

பாம்புகள் வினுதல்: "மெலியோர் வலிய விரவல்லரை அஞ்சார், வலியோர் தமைத்தாம் மருவில்—பலியேல், கடவு ளவிர்சடைமேற் கட்செவி அஞ்சாதே, படர்சிறையப் புள்ளரசைப் பார்த்து" நன்னெறி.

சிறிய ராயினர் சார்பினை விழையன்மின் திறல்கெழு-
பெரியோரராம், அறிஞ ராயினர் சார்பினை விழைமினோ அலரிதழ்
விரிகொன்றை, வெறிந றுந்தொடை எம்பிரான் சார்பினை
விழைதலால் உரகங்கள், மறுவில் ஆற்றல்சால் கலுழனை வினுயின
வாழ்ந்தனை யோவென்ன.

சிறியராவார் சார்பினை விரும்பேன்மின்! வலிமை பொருந்திய பெரியோர் ஆகும் அறிஞர் தொடர்பினை விரும்புமின்'. பாம்புகள் இதழ் அலர்ந்து விரிகின்ற கொன்றையின் நறுமணங்கமழும் மாலையை அணிந்த எமது பெருமான் சார்பினை விரும்புதலால், குற்றமற்ற வலிமை நிரம்பிய கருடனை 'நல்வாழ்க்கையையோ? என்ன வினுவின.

பவளச்செந்தளிர் நீட்டிய பைம்பொழிற் பணதரேச் சரவைப்
பிற், குவளைக் கண்ணியோ டுயிர்க்கெலாம் இன்னருள் கொழித்து-
வீற் றிருந்தோங்கும்; கவளக் கைவரை உரித்தவன் இக்கதை
கற்றவர் கேட்டோர்க்கும், தவளப் பூதிகொள் மேனியீர் வெம்-
பணித் தழல்விடம் அணுகாதால். 7

பவளம் போலும் சிவந்த தளிரைக் காலுகின்ற பசிய சோலைகள் சூழ்ந்த பணதரேசத்தில் நீலோற்பல மலரனைய கண்ணியோடும் உணவு கொள் கைம்மலையாகிய யானையை உரித்து அதன் தோலைப் போர்த்தவன் ஆன்மாக்களுக்கெல்லாம் திருவருள் செழிக்கச் செய்து வீற்றிருந்து விளங்குவன். வெண்மையான விபூதியை அணிந்த திருமேனியை யுடையீர்! இக்கதையைக் கற்றவர்க்கும் கேட்டோர்க்கும் கொடிய பாம்பின் தீய விடம் அணுகாது.

பணதரேசப் படலம் முற்றிற்று
ஆகத் திருவிருத்தம்-821.

# காயாரோகணப் படலம்

எழுசீரடி யாசிரிய விருத்தம்

வயிறுளைந் தலறிச் சங்கினம் உயிர்த்த மணிநிலா எறித்திருள் சீத்துப், பயில்விரை முளரி இலஞ்சிசூழ் கிடந்த பணாதரேச் சரம்இது பகர்ந்தாம், துயில்வர வறியாப் பல்லியந் துவைக்குந் தூமணித் தெற்றிசூழ் காஞ்சிக், குயிரெனச் சிறந்த உத்தமத் திருக்கா ரோணத்தின் உண்மையை உரைப்பாம். 1

வயிறு வருந்தி ஒலிட்டுச் சங்கினங்கள் ஈன்ற முத்துக்கள் ஒளிவீசி இருளை அகற்றித் தங்குதற் கிடனாகிய மணமுடைய தாமரை மலர்களைக் கொண்ட தடாகங்கள் சூழ்ந்த பணாதரேச்சர வரலாற்றினை உரைத்தாம், பலவாச்சியங்களும் இடையறாது முழங்கும் தூயமணிகளான் அமைந்த திண்ணைகள் சூழ்ந்த காஞ்சிமா நகரத்திற்கு உயிர்போலச் சிறந்த தலைமை வாய்ந்த திருக்காயாரோகணத்தின் தோற்றத்தைக் கூறுவாம்.

படுங்கலை முகூர்த்தங் காட்டைகள் என்றாப் பகல்இராப் பக்கமே திங்க, ளொடும்புணர் இருது ஆண்டுகத் தொடக்கத் தோதிய அவயவப் பகுப்பான், இடும்பைதீர் காலங் கழிவுறுங் காலத் தெல்லையில் யாவரும் இறுவர், நெடும்புலக் குறும்பு கடந்துளீர் உலகின் நிலைப்பதோர் பொருளும்மற் றின்றால். 2

தொடர்ந்து வருகின்ற ஐம்புலக் குற்றங்களைக் கடந்தவர்களே! அரி பிரமர்தம் ஆயுளளவை, பிரிவுபடுகின்ற கலை, முகூர்த்தம், காட்டைகள் எனவும், பகல், இரவு, பட்சம், மாதம், மாதங்கள் இரண்டு கூடிய இருதுகள், ஆண்டுகள், யுகமாகிய தொடக்கத்தோடு கூடிய அவயவப் பகுப்பினால் துன்பம் தவிர் காலமும் அழிவுறும் அப்போது யாவருமே அழிவர். உலகினில் அழியாது நிலைபெறும் பொருள் ஒன்றுமில்லை.

காலம் இயற்கையானும், செயற்கையானும் அவயவப் பகுப்புடைய தாய்ப் பொருள்களின் தோற்றம், நிலை, இறுதிக்குத் துணையாய் நின்று அது தானும் அழியும்.

ஈண்டுமஃர் இருபான் ஆயிரந் தலைஇட் டியன்றநாற் பத்துமூன் றிலக்க, யாண்டெனப் படுவ நான்குகத் தளவை இம்முறை ஆயிரம் இறந்தாற், காண்டகும் அயனுக் கொருபகல் அதுவே கற்பமாம் இரவும்அத் துணைத்தவ், வாண்டகைக் கந்நாள் முப்பதோர் திங்கள் அஃதொரு பன்னிரண் டாண்டே. 4

கிரேதாயுக முதலிய நான்கு யுக அளவைகள் கூடிய நாற்பத்து மூன்றிலக்கத்து இருபதினாயிரம் வருடங்கள் என்று சொல்லப்படுவன இம்முறை யாக ஆயிரம் கடந்தால் மதிக்கத்தகும் பிரமனுக்கு ஒரு கற்ப மாம். இராப்பொழுதும் அவ்வளவினது. அவ்வாறமைந்த நாள முப் பது ஓர் மாதம். அம்மாதம் பன்னிரண்டு கொண்டது ஓர்வருடமாகும்.

பகர்ந்தஆண் டொருநூ றிருவகைப் பராத்தம் பற்றறில் வெள்ளிவண் டோடு, தகர்ந்திட உடைந்து மூடங்குகால் ஞிமிறு தழங்கிசைப் பேட்டொடு நறுந்தேன், நுகர்ந்துபண் பயிற்றும் பொருட்டலர் கமலநோன்மலர் அணங்கினுக் கரங்கம், நிகர்ந்தநா வகத்துப் பழமறை கொழிக்கும் நெடுந்தகைக் கிறுதிவந் துறுமால்.

மேற் கூறப்பட்ட அவ்வருடம் ஓர் நூறு இருவகைப் பரார்த்த மாகும். இக்கால அளவை ஒழிந்தால் வளைந்த காலையுடைய ஆண் வண்டுகள் இசை எழுப்புகின்ற பெண் வண்டுகளுடன்; வெண்ணிற முடையது ஆகிய வளவிய இதழ் முறுக்கு அவிழும்படி மிதித்து நறிய தேனைப்பருகிப் பண்பாடும் பொருட்டினையுடைய அலர்தாமரை பொறுக் கின்ற சரசுவதிக்கு அரங்கினை ஒத்த நாவினிடத்துப் பழமை பொருந்திய வேதங்களை ஆராய்கின்ற பிரமனுக்கு வாழ்நாள் முற்றுப்பெறும்.

பிரமன் நாவில் கலைமகள் களிநடம்புரிகின்றனள் என்பார் அரங்கம்' எனக்கூறினர். அடுத்த செய்யுளில் மாயோன் மார்பில் திரு, விளையாடல் கூறப்பெறும்.

அங்கது முகுந்தன் றனக்கொரு பகலாம் அம்முறை யாண்டுநூ றெய்தின், செங்கதிர்ப் பரிதி மழுங்கவிட் டெறிக்குஞ் சேயொளி விலைவரம் பிகந்த, பைங்கதிர்க் கடவுட் கவுத்துவம் இமைப்பப் பசுந்துழாய் துயல்வரு மார்பில், கொங்கலர் கதுப்பின் திருவிளை யாடுங் குரிசிலும் எய்துவன் ஒடுக்கம். 5

பிரமன் ஆயுள் நாள் திருமால்தனக்கு ஒருபகலாகும். அங்ஙனம் ஆண்டுகள் நூறு நிரம்பினால், சிவந்த கிரணங்களையுடைய சூரிய ஒளி கெடும்படி சுடர்விடும் சிவந்த ஒளியினையும் விலையின் எல்லையைக் கடந் ததும் தண்ணிய கிரணத்தினையும், தெய்வத்தன்மையினையும் உடைய கவுத்துவம் விட்டொளிரும்படி பசிய துளவமாலை அசைகின்ற மார்பில் நறுமணம் கமழும் கூந்தலையுடைய திருமகள் விளையாடும் திருமாலும் ஒடுக்க முறுவன்.

செங்கதிர்............குரிசிலும், அவனும் என்னும் பொருள் தரு தலில் சுட்டுப்பெயர் மாத்திரையாய் நின்றது. 'கற்பா டழித்த கனமா மணித் தூண்செய் தோளான்' (சீவக. பதிகம். 14.) என்புழிப்போல.

இருவரும் ஒருங்கே இறவருங் காலை எந்தையே ஒடுக்கிஆங் கவர்தம், உருவம்மீ தேற்றிக் கோடலாற் காயா ரோகணப் பெயர்அதற் குறுமால், வருமுறை இவ்வா றெண்ணிலா விரிஞ்சர் மாயவர் காயம்மேல் தாங்கிக், கருணையால் அங்கண் நடம்புரிந் தருளும் காலமாய்க் காலமுங் கடந்தோன். 6

திருமாலும் பிரமனும் ஒருசேர அழிவெய்தும் நாள் எந்தை யாகிய சிவபெருமானே அவர் தம்மை ஒடுக்கி ஆங்கே அவர்தம் சரீரங் களைத் தம்மேற் பூண்டு கொள்ளுதலால் 'காயாரோகணம்' என்னும் பெயர்

அத்தலத்திற்குப் பொருந்தும். காலமென்னும் தத்துவமுமாகிக் காலத்தையுங் கடந்து நிற்கின்ற பெருமான் வழிவழியாக இங்ஙனம் வருகின்ற அளவில்லாத பிரமர்களையும் திருமால்களையும் திருமேனியில் தரித்துக் கருணையொடும் அவ்விடத்து நடம்புரியா நிற்கும்.

காயம்+ஆரோகணம்=காயாரோகணம்; உடம்பை (சிவபிரான்) ஏற்றல். காலத்திற்குக்காலமாவான்; 'கலையித்திரி' சத்தியாய் நிற்றலை 'வித்தையோ' (சிவஞா. சி. 86.) என்பதன் விசேடவுரை காண்க.

ஆதலாற் சிறந்த திருநகர் அதனை அடைந்துளோர் இருமை-யும் எய்தி, மேதகு துரியங் கடந்தபே ரின்ப வீட்டினைத் தலைப்பட வல்லர், சீதள கமலப் பொகுட்டணைக் கிழத்தி செஞ்சடைப் பிரானைவில் லத்தால், கோதற வழிபட் டச்சுதன் தனக்குக் கொழுநனைப் பெற்றனள் அங்கண். 7

ஆதலான் மேம்பட்ட திருநகரம் அதனை அடைந்தவர் இம்மை மறுமைப்பயன்களைப் பெற்று மேன்மை தங்கிய துரியங்கடந்த பேரின்ப வீட்டினைத் தலைப்படவல்லர் ஆவர்; திருமகள் சிவந்த சடையுடைப் பெருமானை வில்வங்கொண்டு அங்கே குற்றமற வழிபாடு செய்து திருமாலைத் தனக்குக் கணவனாகப் பெற்றனள்.

பிறங்கொளி விசும்பிற் குரவனும் வியாழப் பெருந்தகை ஆயிடை எய்திக், கறங்கிசை விளரிப் பாட்டளி இமிர்ந்து களிமதி உண்டுதேக் கெறிந்தங், குறங்குபொன் இதழி நறுந்தொடை வேணி ஒருவனை அருச்சனை யாற்றி, அறங்கரை சிறப்பிற் சேந்த-நாத் தழும்ப ஆரண மொழிகளால் துதிப்பான். 8

பேரொளியுடைய வானிடைத் தேவர்க்கு ஆசாரியராம் வியாழப் புத்தேள் காயாரோகணத்தை அடைந்து ஒலிக்கின்ற இசையாகிய விளரிப்பண்ணைப்பாடுகின்ற வண்டுகள் ஒலித்து களிப்பைத் தரும் மதுவைப்பருகி எதிரெடுத்து மயங்கி உறங்குகின்ற பொன்னெக்கும் கொன்றை மலர்மாலையை அணிந்த சடையுடை ஒப்பற்ற பெருமானை அருச்சனை செய்து அறங்கூறுகின்ற சிறப்பினையுடைய சிவந்த நா வடுப்-பட வேதப்பாக்களால் துதி செய்வான்.

ஒருவன்: 'ஒப்புனக்கில்லா ஒருவனே' (திருவாசகம்)

பிரமணன் நீயே கடவுளர் தம்முள் பிஞ்ஞகா ஏனையோர் தம்முள், பிராமணன் யானே பிராமணன் றனக்குப் பிராமணன் கதிஉனை இகழ்வோன், பிராமணன் அல்லன் தன்குல தெய்வம் விண்டுபின் னென்றனைத் தொழும்அப், பிராமணற் கிரண்டும் பயப்படா நிரையம் புகுவன்என் றுயர்மறை பேசும். 9

தலைக்கோலம் அணிந்த பிஞ்ஞகனே! கடவுளர் தம்மில் வைத்து நீயே பிராமணன். ஏனையோரிடை வைத்து யானே பிராமணன் ஆவன். பிராமணனுக்குப் புகலிட மாவோன் பிராமணனே. உன்னை வழிபடாமையால் இகழ்வோன் பிராமணனாகான். தன் குலதெய்வத்தை விடுத்து வேறோர் தெய்வத்தை வணங்கும் அப்பிராமணனுக் கிரு தெய்வமும் கைகொடாமையால் அவன் நரகிடைப்புகுவன் என்றுயர்ந்த வேதம் கூறும்.

அப்பிராமணன் பிறப்பால் பிராமணனாய் உரிய ஒழுக்கத்தைக் கைவிட்டமையால் பிராம்மணன் அல்லனாய் அப்பிராமணனாவன். இரு பயனும் இழத்தல்; போகமும், பரபோகமும் இழந்து நரகெய்தல்.

அடியனேன் உன்தாள் அடைக்கலம் நீயே அன்னையும் அத்தனும் குருவும், துடிஇடைப் பதுமை கேள்வனும் அயனுந் தொடர்வருஞ் சோதியே செல்வக், கொடிமிசை இடபம் உயர்த்-தருள் கருணைக் குன்றமே அருட்பெருங் கடலே, படிபுகழ் மறை-நூல் வடித்ததெள் ளமிழ்தே பகவனே இணையடி போற்றி. 10

'அடியனேன் உன் அடைக்கலப் பொருள். தாயும், தந்தையும், குருவும் நீயே ஆவாய். துடியனைய இடையினையுடைய திருமகள் நாயக னும், பிரமனும், தொடரலாகாச் சோதியே! சிறப்புடைய இடபக் கொடியையுடைய கருணை மலையே! கிருபா சமுத்திரமே! உலகோர் புகழ் வேதநூல் வடித்தெடுத்த தெளிந்த அமிழ்தமே! பகவனே திருவடிகளுக்கு வணக்கம்.

என்றெடுத் தேத்தும் ஆண்டளப் பானுக் கெம்பிரான் எதிர்-எழுந் தருளி, நன்றுநீ வேட்ட கூறுகென் றருள வீழ்ந்துவீழ்ந் திறைஞ்சினன் நவில்வான், குன்றவில் குழைத்துப் புரிசைமூன் றிறுப்பக் குறுநகை முகிழ்த்தருள் குழகா, நின்திரு வடிக்கீழ் இடையறாப் பத்தி நெறிஎனக் கருள்செய வேண்டும். 11

என் றுயர்த்துப் புகழும் குருவினுக் கெமது பெருமான் எதிர் தோன்றிப் பெரிதும் நீ விரும்பிய கூறுக என்றருள் செய்யப் பன்முறை வணங்கிக் கூறுவான் 'மேரு மலையை வில்லாக வளைத்து முப்புரத்தை யும் அழிக்கவேண்டிப் புன்சிரிப் பரும்பி யருளிய குழகனே! நின் திரு வடிக்கண் ஓர் காலும் மறவாத பேரன்பினை எனக்கருள் செய்யவேண்டும்!'

வியாழன், மேட முதலிய இராசிகளில் ஆண்டொன்றிற்கு ஓரிராசி யாகக் கால அளவு கொள்ளுதலின், ஆண்டளப்பான் எனப்பெறுவர்.

வளங்கெழு வேக வதிநதித் தென்பால் வயங்கும்இத் தீர்த்த-நீர் படிந்து,விளங்கும்என் வாரத் துன்னடிச் சேவை விழைதகப் பெற்றுளோர் தத்தம், உளங்கொளும் உறுதிப் பயன்அளித் தருளி முத்தியும் உதவிஈண் டென்றும், இளங்கதிர் முலையோ டினிதமர்ந் தருளாய் இவ்வரம் வேண்டும்என் றிரந்தான். 12

வளமருவும் வேகவதி நதியின் தெற்குப் பக்கத்தில் விளங்கும் இத் தீர்த்தத்தில் மூழ்கி விளங்கும் என் வாரத்தில் (வியாழக்கிழமை) உன்னடித் துணையை விரும்பி வழிபட்டோர் தத்தம் மனங்கொள்ளும் உறுதிப் பயனை அருளி மேலும் முத்தியையும் உதவி இந்தத் தலத்தெந் நாளும் இளமையும் கதிர்ப்பும் உடைய கொங்கையாளோ டினி தமர்ந் தருளும் இவ்வரங்கள் வேண்டுமெனக் குறையிரந்தனன்.

திருமகள் வழிபட்டமையின் இந்நாள் அத்தீர்த்தத்திற்குத் தாயார் குளம் எனப்பெறும். திருமகள் வழிபாட்டாற் செல்வமும், குருவழி பாட்டான் மெய்யறிவும் வழிபடுவார்க்குக் காயாரோகணப் பெருமான் அருள் செய்வர்.

இயமன் வழிபாடு

அங்கவை வழங்கிக் கடவுளர்க் காசான் ஆம்பெருந் தகைமையும் நல்கிச், சங்கவெண் குழையான் இலிங்கத்தின் மறைந்தான் தருமன்அங் கெய்திஏத் தெடுப்பப்,புங்கவன் தோன்றித் தென்திசைக் கிறையாம் புரவளித் தெமைவணங் குநர்க்கு, மங்கருந் தண்டம் இயற்றில்அன் றுனக்கு மாளும்இப் பதமென விடுத்தான்

அவ்வரங்களை அருள் செய்து தேவர்களுக் காசாரியனும் பெருந் தகுதியையும் தந்து வெள்ளிய சங்கக் காதணியினனாகிய பெருமான் சிவலிங்கத்தில் மறைந்தருளினன். இயமன் அத்தலத்தினை அடைந்து துதிப்பப் பெருமான் எழுந்தருளித் தென்திசைக் கிறைவனும் காவலைத் தந்தருளி 'எம்மை வணங்கும் அடியவர்க்கு மங்குதற்குரிய கடுந்தண்டனை இயற்றின் அன்றே இப்பதவி உனக்ககலும்' எனக்கூறி விடுத்தனன்.

தென்புலத் தவர்க்குச் செய்கடன் ஆங்குச் செலுத்திடின் வீடுபெற் றுய்வார், மின்பழுத் தன்ன நெறித்தவார் சடிலம் வீழென வெரிந்புறங் கிடப்பப், பொன்பழுத் தனைய ஐந்தழல் நாப்பண் புரிதவக் கொள்கையீர் அனேகர், அன்புசெய் தங்கண் பேறுபெற் றுயர்ந்தார் அத்தல மேன்மையார் மொழிவார். 14

பிதிரர்க்குச் செயத்தகு கடனை ஆங்கே செய்து முடித்தால் வீட்டினைப் பெற்றுய்வர். மின்னல் முதிர்ந்தாலொத்த நெறித்து நீண்ட சடை விழுதுபோல முதுகிற்கிடக்கப் பழுக்கக் காய்ச்சிய பொன்னனைய பஞ்சாக்கினியிடையே அருந்தவம் புரிந்த கொள்கையை யுடையீர்! எண்ணிலர் அத்தலத்தில் அன்பு செய்து பல்வகை நலங்களும் பெற்றுயர்ந்தனர். ஆதலின், அத்தலத்தின் உயர்வை முற்றும் கூறுவார் யாவர்?

வெரிந்புறம்—முதுகு. நெருப்பிடைப் பொன் அழுக்ககன்று மாற்றுயர்தல் போலத் தவத்தால் அழுக்ககன்று அறிவொளி பெறுவர் எனக்கூறினர். "சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பம், சுடச்சுட நோற்கிற் பவர்க்கு" (திருக். 267.)

காயாரோகணப் படலம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம்—835.

# சித்தீசப் படலம்

கொச்சகக் கலிப்பா

மருக்காவி வண்டுத மதுஊற்றும் வாவித்
திருக்காயா ரோகணத்தின் சீர்மைஇது சொற்றும்
கருக்காயும் மற்றதற்கு வடகீழ்சார் கண்டோர்
தருக்காத சித்தீசந் தன்னியல்பு சொல்வாம். 1

நறுமணத்தையுடைய குவளைமலர் வண்டு நுகர மதுவை ஊற்றும் தடாகத்தைக் கொண்ட திருக்காயாரோகணத்தின் சிறப்புடைமையைக் கூறினும். பிறவியைப் போக்குகின்ற காயாரோகணத்திற்கு வடகிழக்கில் தரிசித்தோர் மலவலிகெடுதலின் முனைப் பிழத்தற்கேதுவாகிய சித்தீசத்தின் தன்மையைக் கூறுவாம்.

ஊதுதல்-நுகர்தல். (கலி. மரு. 1 : 7.)

எண்சீரடி யாசிரிய விருத்தம்

கம்பை மாநதி யின்க ரைப்பெருங் காதல் கூர்தவம் ஆற்று
மால்வரைக், கொம்பு மஞ்சளின் காப்ப ணிந்துமெய் குளிர ஆடுநீர்
மணங்க மழ்ந்தெழூஉப், பம்பு மஞ்சள்நீர் நதிஎ னப்புடை பரந்து
சேறலும் பாய்பு னற்சடை, எம்பி ரான்அருள் பொங்கும் ஓகை-
யின் இலிங்க மாய்அவண் எழுந்து தோன்றினன். 2

கம்பாநதியின் கரையில் பெருங்காதல் மிகத்தவமாகிய பூசனையைச் செய்யும் இமயப் பெருமலை பயந்த பூங்கொம்புபோல்வாராகிய உமாதேவியார் மஞ்சட் காப்பினைத் திருமேனியிலணிந்து அம்மேனிபடிய ஆடிய நீர் நறுமணம் வீசி எழுந்து நிறைந்த மஞ்சள் நீர் நதியாக அப்பக்கங்களிற் பரவிச் செல்லும் அளவிலே பாய்ந்து வந்த கங்கையை ஏற்ற சடையுடைய எம்பெருமான் அருள் மிகும் உவகையால் அந்நதிக்கரையில் சிவலிங்க வடிவில் வெளிப்பட்டு விளங்கினன்.

மேனியைக்காத்தலின், மஞ்சட் காப்பு, நெல்லிக்காப்பு என இவ்வாறு கூறுதல் வழக்கு.

கூடு கொள்கையால் குலவு மஞ்சள்நீர்க் கூத்த னென்றுபேர்
கொண்ட நாயகன், ஆடு தாளிணை சித்தர் பற்பலர் அணைந்து
போற்றிவான் சித்தி எய்தலாற், பாடு சான்றசித் தீச னும்பெயர்
பார்வி ளங்கும்அவ் வண்ணல் சந்நிதி, மாடு கூவல்ஒன் றுன்னி
னோர்க்கெலாம் வழங்கு சித்திசால் சித்த தீர்த்தமே. 3

கூடிய கொள்கையொடுந் திகழும் 'மஞ்சள் நீர்க்கூத்தர்' என்று திருப்பெயரேற்ற முதல்வர் ஆடுகின்ற திருவடிகளைச் சித்தர் பலரும் அணைந்து துதித்துச்சிறந்த சித்திகளைப் பெறுதலால் பெருமை நிரம்பிய சித்தீசப்பெயர் உலகிடை விளங்கும் அமமுதல்வர் சந்நிதியின் பக்கத்தில் கிணறொன்று கருதினோர் யாவர்க்கும் அருளும் சித்தி நிறைந்த சித்த தீர்த்தம் உள்ளது.

ஒற்றை ஆழியங் கொடிஞ்சி வையமீ தொளிப ரப்பிவீங்
கிருள்து மித்தெழுங், கற்றை வெங்கதிர்க் கடவுள் நாளினும் கருமு
டத்திறல் காரி நாளினும், எற்று தெண்டிரைச் சித்த தீர்த்தநீர்
எய்தி ஆடிஅவ் வேந்தல் தாள்தொழும், கொற்ற வாழ்வினர்க்
கெழுபி றப்புநோய் கோடி யோசனைக் கப்புறத்ததே. 4

ஒற்றைச்சக்கரமமைந்த கொடிஞ்சி என்னும் உறுப்பினையுடைய தேர்மிசையிருந்து ஒளியைப்பரப்பிச் செறிந்த இருளை அழித்தெழும் தொகுதியும் வெம்மையும் கொண்ட கிரணங்கள் மருவிய சூரியனுக்குரிய நாளினும், கரிய நிறமும், கால்முடமும், வலிமையும் கூடிய சனிக்குரிய நாளினும் மோதுகின்ற திரை எழுகின்ற சித்ததீர்த்த நீராடி அச்சித் தீசரை வணங்கும் வெற்றி அமைந்த வாழ்வினையுடையவர்க்குப் பிறவி நோய் கோடியோசனைக் கப்புறத்தது ஆகும்.

சித்ததீர்த்தம் பிறவிப்பிணிக்கு மருந்தாம் என்க. மூழ்குதற்குரிய காலம் ஞாயிறு, சனிக்கிழமைகள் என்க. கொடிஞ்சி-தாமரைப்பூவடிவிற் செய்து தேர்த்தட்டின் முன் நடுவது.

சித்தீசப் படலம் முற்றிற்று
ஆகத் திருவித்தம்–839.

---

## அரிசாப பயந்தீர்த்த தானப் படலம்

---

எண்சீரடி யாசிரிய விருத்தம்

புரிமு றுக்குடைந் தவிழ ஆறடிப் புள்மு ரன்றுவாய் மடுக்கும்
இன்னறை, விரிம லர்த்தடம் புடைஉ டுத்தசித் தீச மேன்மையின்
விளைவி யம்பினும், உரிய மற்றதன் உத்த ரத்துறும் உவண
ஊர்திஆச்சிரம வைப்பினில், திரிவி லாஅரி சாப வெம்பயந் தீர்த்த
வானவன் சீர்த்தி கூறுவாம். 1

சுருளாகிய கட்டு நெகிழ்ந் தவிழ அறுகாலையுடைய வண்டுகள் ஒலித்து வாய் பருகும் இனிய தேன் பரவு மலர்களையுடைய தடாகங்கள் பக்கங்களிற் சூழ்ந்த சித்தீசப் பிரான் திருவருட் செயலை விளம்பினேம். அதற்கு வடக்கில் திகழும் கருடவாகனமுடைய திருமால் ஆச்சிரமத்தில் தப்பாத அரிசாப கொடிய பயத்தைத் தீர்த்த சிவபிரானுடைய மிகுந்த புகழைக் கூறுவாம்.

திருமால் கியாதியைக் கோறல்

செப்பு முன்னைநாள் அதிதி மைந்தருந் திதியின் மக்களும் இடைய ருதுபே, ரப்புமாரிபெய் தெண்ணில் ஆண்டுகள் அழுக்க றுத்துவெஞ் சமர்இ யற்றுழி, மைப்பு றுத்தகண் அரம்பை மார்முலை உழுத மார்பினர் வலிஇ ழத்தலும், துப்பெ றிந்தபூங் கமல வாள்விழித் தோன்றல் எய்திவெம் படைவி திர்த்தனன். 2

முன்னோர் காலத்தில் அதிதியின்மைந்தர் எனப்பெறும் தேவரும், திதியின்மைந்தரெனப் பெறும் அசுரரும் பொருமையுற்றுப் பேரம்பு மழையைச் சொரிந்து அளவிலாத வருடங்கள் இடையருது போர்புரிந்த வழி, மைதீட்டிய கண்களையுடைய அரம்பையர் கொங்கை தோயும் மார்பினையுடைய தேவர் வன்மை இழந்த அளவிலே செவ்வொளி வீசுகின்ற தாமரை மலரை ஒத்த ஒளி பொருந்திய கண்களையுடைய திருமால் எய்திக் கொடிய சக்கரத்தைச் சுழற்றினன்.

எஞ்சு தானவர் அஞ்சி ஓட்டெடுத் திருமை யோகுசெய் பிருகு மாமுனி, தஞ்ச மாமனைக் கிழத்தி பூமகள் தாயெ னப்படுங் கியாதி தன்புடை, வஞ்சம் இன்றிவந் தடைக்க லம்புக வருந்து றேன்மி-னென் றபய நல்கிஅப், பஞ்சின் மெல்லடிப் பாவை ஆச்சிர மத்தின் உள்ளுறப் பாது காத்தனள். 3

தோல்வியுற்ற அசுரர் புறங்கொடுத் தோடிப் பெருமை பொருந்திய யோகத்தைச் செய்கின்ற பிருகு மாமுனிவரைப் பற்றுக் கோடாக உடைய அவர்தம் வாழ்க்கைத் துணைவியும் இலக்குமிக்குத் தாயுமான கியாதியினிடத்துப் புறக்கணியாது காப்பரெனத் துணிந்து வந்து சரணடைய 'வருந்தற்க' என்றடைக்கலம் ஏற்றுச் சுகுமாரத் தன்மையுடைய அப்பாவை போல்வாள ஆச்சிரமத்தில் மறைவிடந்தந்து பாதுகாத்தனள்.

சீற்றம் மிக்கெழச் சேந்த கண்ணினன் திகிரி ஓச்சிஅங் கெய்து மாதவன், போற்றி வாய்தலின் வைகு மாமியைப் பொருக்கெ னச்சிரந் துணித்து வீழ்த்தலும், ஏற்றெ ழுந்தகூ கூஒ லித்திரள் இருசெ வித்துளை ஏறு மாமுனி, மாற்ற ருந்திறல் யோகு நீங்கி-முன் மனைவி பட்டதும் மற்றும் நோக்கினன். 4

கோபம் பொங்கி எழுதலினால் சிவந்த கண்களையுடையவனாய்ச் சக்கரத்தைச் சுழற்றிக் கொண்டங் கெய்திய திருமால் பாதுகாப்பாகத் தலைவாயிலில் தங்கும் தனது மாமியின் சிரந்தன்னை விரைய வெட்டி வீழ்த்தியபோது மிக்கெழுந்த கூ கூ என்னும் ஒலிப்பெருக்கம் இருசெவிகளின் துளைவழி ஏற்ற மாமுனிவரர் போக்கரிய வலிமையமைந்த யோகம் நீங்கி மனைவி சக்கரத்தால் எறியப்பட்டதும் பிறவும் நோக்கினர்.

திருமால் சாபம் பெறல்

கண்டு மாழ்கினன் துயரின் மூழ்கினன் கண்கள் சேந்-
தனன் இதழ்து டித்தனன், மண்டு வெங்கனற் பொறிதெ றிப்ப-
அம் மாத வன்றனை வெகுண்டு நோக்கினன், ஒண்ட ளிர்க்கரத்
தரிவை தன்னைமற் றுனக்கு மாமியைத் தறுக ணாளனாய், மிண்டி-
னற்கொலை செய்து வீட்டினாய் வெய்ய பாவிநீ உய்யு மாறெவன். 5

கண்டு மயங்கினர்; துன்பக்கடலில் மூழ்கினர்; கண்கள் சிவந்தனர்; வாயதரம் துடித்தனர்; மிகுந்த வெய்ய நெருப்புப் பொறிகள் தெறிக்க அத்திருமகள் நாயகனைச் சினந்து பார்த்தனர். நிறமமைந்த மாந்தளிர் போலும் கையுடைய அரிவையை மேலும் உனக்கு மாமியை வனகண்மையனாய் வலிமையாற் கொலை செய் தழித்தனை. கொடும்பாவி நீ எங்ஙனம் பிழைப்பாய்.

எடுத்தி யம்பிய சைவ மேளவற் றுள்ளும் உத்தம மென்னில்
யாங்களும், கடுத்த தும்பிய கண்ட னாடிக் கமல மன்றிவே றறிகி
லேமெனில், தொடுத்து ரைக்கும்இச் சத்தி யத்தினல் துயரு ழந்து-
நீ நரக வல்வினை, மடுத்த வெம்பிறப் பொருப தெய்துக வழுவு
பாதகக் குழிசி யாயினாய். 6

குற்றமுடைய பாதகத்திற்குப் பாத்திரமானவனே! எச்சமயத்திற்கும் மேம்பட உயர்த்திக் கூறப்பெற்ற சைவமே தலையாய சமயமென்னில், யாங்களும் விட மிகுந்த களத்தினையுடைய சிவபிரானார் திருவடித் தாமரைகளை அன்றி மற்றோர் தெய்வத்தைக் கனவிலும் மதியேமெனில், இவற்றொடு தொடர்பு படுத்துக் கூறும் இம்மொழி சத்தியமே ஆனால் துன்பத்தில் துளைந்து நீ கொடிய நரகுபோலும் துன்பத்தினை உட்கொண்ட கொடிய பிறவி ஒருபத்தில் உழல்வாயாக.

குழிசி—பாத்திரம். "பாதகக் குழிசிப் புலைஉடல்" 116-ஆம் பக்கம்) காண்க.

நின்ற னக்கடித் தொண்டு பூண்டவர் நெறியலாப்புறத்
தாற்று நூல்வழித், துன்று தீக்கையுற் றென்றும் முப்புரஞ் சுட்ட
எம்பிரான் திருவ டிப்பிழைத் தொன்று மூன்றுதண் டேந்தி
ஈனராய் உலப்பி லாதவெந் நிரைய மேவுக, மன்ற அங்கவர்க்
கண்டு ளோர்களும் மறலி ஊரினைக் குறுகி மாய்கவே. 7

நினக்குச் சேவை செய்வோர் சிவநெறி யல்லாத புறச் சமய நூல்வழிப் பொருந்திய தீக்கையை அடைந்து முப்புரத்தைச் சிரித்தெரித்த பெருமான் திருவடித் தொண்டினில் வழுவி ஏக தண்டம், திரிதண்டம் தாங்கி இழிசனராய்க் கரையேறலாகா,தகடுநரகினைப் பொருந்துக. அவரை மதித்தொழுகினோரும் நிச்சயமாக, இறந்து இயமன் இருக்கையை எய்தி நரகிடைக் கிடக்க.

ஏக தண்டம், திரி தண்டம் தாங்கியுழல்வோர் முறையே சுமார்த்த வைணவ சந்நியாசிகள். ததீசி முனிவர், பிருகு முனிவர், அகத்தியர், நந்தியெம்பெருமான் முதலானோர் சாபங்களை ஏற்றமை கந்த புராணம் முதலாகப் பல விடங்களிலும் காண்க.

எவ்வ மேமிகுந் தமோகு ணம்பயின் றிழிந்த யோனியின் மீன
மாதியாம், வெவ்வி னைப்பவந் தோறும் இன்னலே விரவு வாயென
வெய்ய சாபம்இட், டவ்வி யத்தொகை இரிய நூறும்அப் பிருகு
வெள்ளியால் ஆவி பெற்றெழு, நவ்வி வாள்விழி மனைவி தன்னொடு
நாரி பாகனை வழுத்தி வைகினன். 8

'துன்பமே பெருகுந் தமோகுணம் பொருந்தி இழிந்த பிறப்பிடை மச்சம், கூர்மம் முதலிய கொடிய தீவினைப்பயனாகிய பிறவி தோறும் துன்பமே மருவுவா' யென்று கொடிய சாபத்தைத் தந்து தீவினை ஒழிய அழிக்கின்ற அப்பிருகு முனிவர் சுக்கிரனால் உயிர் பெற்றெழுந்த மனைவியாகிய மான்போலும் மருண்ட நோக்கும் ஒளியும் அமைந்த கண்களையுடைய கியாதியோடும் மங்கை பங்கனைத் துதித்திருந்தனன்.

திருமால் காஞ்சியை யடைந்து தவம் புரிதல்

நிறைமொ ழித்தவப் பிருகு ஓதிய சாபம் எய்திநெஞ் சழுங்கி
ஏங்குபு, நறைம லர்த்துழாய்ப் படலை மார்பினன் நாடி னன்இதன்
தீர்வி யாதெனப், பிறைமு டிச்சடைப் பிரான்உ ளன்மனுப் பிரமம்
ஐந்துள யாமு ளேம்இனிக், குறைஎ மக்கெவன் என்று தேறினன்
கொழிதி ரைப்புனற் கச்சி எய்தினன். 9

பயனால் நிறைந்த மொழியினையும் தவத்தினையு முடைய பிருகு முனிவர் விடுத்த சாபத்தைப் பெற்று மனம் வருந்தி ஏக்கமுற்றுத் தேன் பொருந்திய மலர்த்துளவ மாலையை யணிந்த மார்பினையுடைய திருமால் இச்சாபத்தைப் போக்கு முறை யாதென ஆராய்ந்துபிறையை முடிக்கண் அணிந்த பெருமானுளன் கணித்தற்குப் பஞ்சப்பிரம மந்திரம் உள வழிபடவும் கணிக்கவும் யாமும் உளேம் இனி எமக்குக் குறை யாவுள என்று தெளிந்து நீர் சூழ்ந்த கச்சித்தலத்தினை அடைந்தனன்.

நிறைமொழி—அருளிக் கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வப் பயன்களைத் தந்தே விடும் மொழி. 'நிறைமொழி மாந்தர் ஆணையிற்கிளந்த, மறைமொழி தானே மந்திரம் என்ப' (தொல்.) 'கற்றுக்கொள்வன வாயுள நாவுள, இட்டுக்கொள்வன பூவுள நீருள, கற்றைச் செஞ்சடை யானுளன் நாமுளோம், எற்றுக் கோநமன் றால்முனி வுண்பதே! (திருநா. ) என்னும் அருள்மொழி உணர்க.

தூய நீர்ச்சிவ கங்கை வாவியுள் தோய்ந்தெ ழுந்தொரு மாவின்
நீழல்வாழ், நாய னாரடி வழுத்தி ஏகிஅஞ் ஞாங்கர் வைகும்ஆச் சிர-
மம்ஒன் றமைத், தாயி டைச்சிவ லிங்கம் ஒன்றுகண் டன்பு கூர்தர
அருச்சித் தேத்திஅங், கேயு மாறருள் பெற்று மாதவம் இயற்ற
லுற்றனன் வயப்புள் ளூர்தியே. 10

கருடனை ஊர்தியாகவுடைய திருமால், சிவகங்கையில் நீராடி எழுச்சியுற்று ஒற்றைமாமரத்தின் நிழலில் எழுந்தருளியுள்ள ஏகாம்பர நாதர் திருவடிகளைத் துதிசெய்து போய் அவ்விடத்தில் தவச்சாலை ஒன் றமைத்துச் சிவலிங்கம் தாபித்துக் காதல்கூரப் பூசனை செய்து போற்றிப் பொருந்துமா றருள் பெற்றுப் பெருந்தவத்தைச் செய்ய லுற்றனன்.

பூதிமேனியன் நெற்றி நீட்டுமுப் புண்ட ரத்தினன் அக்க மாலையன், சீத வேணியோன் திருஉ ருத்திரஞ் செப்பு நாவினன் அடகு நீர்கனி, வாத உண்டியன் பிரமம் ஐவகை மனுக்க ணித்துளக் கமலம் நள்ளுற, மாது பாகனை இருத்தி ஐந்தழல் மத்தி நின்றருந் தவம்உ ஞற்றினன். 11

விபூதியை உத்தூளனமாகத் திருமேனியிலும், திரிபுண்டரமாக நெற்றியிலும் அணிந்தும், உருத்திராக்க வடம்பூண்டும், கங்கையைச் சடையில் தரித்த பெருமான் சீருத்திரம் நாவாற் கணித்தும், இலையும், நீரும், பழமும், காற்றும் ஆகிய இவற்றை உணவாகக் கொண்டும், ஐவகையாகிய பஞ்சப்பிரமமந்திரத்தைக் கணித்தும், உள்ளத் தாமரை யின் நடுவிற் பொருந்த மங்கை பங்கனை எழுந்தருளுவித்துப் பஞ்சாக் கினி மத்தியில் நின்றரிய தவத்தைப்புரிந்தும் விளங்கினன்.

திருமால் இறைவன் திருவருள் பெறுதல்

இன்ன வாறுபல் லாண்டு மாதவம் இவன்இ யற்றுழி முக்கண் நாயகன், பொன்இ மாசலப் பூவை தன்னொடும் புடைமி டைந்துபல் கணங்கள் போற்றுறப், பன்னும் அவ்விலிங் கத்தி னின்றெழூஉப் பாய்வி டைப்பரி மேல்அ ணைந்துநீ, நன்னர் வேட்டன கூறு கென்றலும் நறுந்து ழாய்மலர்ப் படலை மோலியான். 12

இங்ஙனம் பல வருடங்கள் பெருந்தவத்தைத் திருமால் புரியுங்கால் கண்ணுதலோன் அழகிய இமய வல்லியொடும் பல பூதகணங்கள் நெருங்கிப்போற்றுதல் நிகழத் திக்கும் அச்சிவலிங்கத்தினின்றும் வெளிப்பட்டுப் பாய்ந்து செல்லும் இடப ஊர்திமேல் எழுந்தருளி நீ விரும்பிய நல்வரங்களைக் கூறுக என்ற அளவிலே நறிய துளவ மாலையையணிந்த அம்மால்.

எட்டு றுப்பினும் ஐந்து றுப்பினும் இருநி லத்திடை வீழ்ந்து வீழ்ந்தெழுந், தட்ட மூர்த்தியாய் போற்றி என்னையாள் அண்ண லேஅடி போற்றி என்வினைக், கட்ட றுத்தவா போற்றி மாறிலாக் கருணை வெள்ளமே போற்றி போற்றிஎன், றுட்ட தும்பிய காத லால்தொழு துருகி நீர்விழி சொரிய விள்ளுவான். 13

அட்டாங்க பஞ்சாங்க வணக்கங்களால் பலமுறையும் வீழ்ந் தெழுந்து ‘அட்டமூர்த்தி வடிவினனே வணக்கம்; அடியேனை ஆளாகக் கொண்ட தலைவனே திருவடிக்கு வணக்கம; வினைப்பாசம் அறுத்தவனே

வணக்கம்; ஒப்பில்லாத கருணைக்கடலே வணக்கம்! வணக்கம்!! என்று மனத்துணின்றும் பொங்கிவழிகின்ற பெருவிருப்பினால் தொழுது உள்ளம் உருகிக்கண்கள் நீர்சொரியக் கூறுவான்:

எட்டுறுப்புக்கள்: தலை, கைகள், காதுகள், மோவாய், தோள்கள். ஐந்துறுப்புக்கள்: தலை, கைகள், முழந்தாள்கள். 'மாறிலாதமாக் கருணை வெள்ளமே' (திருவா. சத. 19.) என்னும் அருள்மொழியை எண்ணுக.

ஐய னேஉனைச் சரணம் எய்தினேன் அடிய னேன்இனி மற்றொர் பற்றிலேன், பொய்யில் கேள்விசால் பிருகு மாமுனி புகன்ற சாபநோய்க் கஞ்சி நொந்துளேன், உய்யு மாறருள்செய்ய வேண்டும்என் றுரைத்த லந்துநின் றிரப்ப எம்பிரான், மையுலாம் விழிப் பதுமை கொங்கைதோய்மார்பகேளென வாய்மலர்ந்தனன்.

'தலைவனே, உன் திருவடியைப் புகலடைந்தேன் அடியேன், இனி, வேறோர் களைகண் இல்லேன்; மெய்க்கேள்விச் செல்வம் நிரம்பிய பிருகு முனிவர் கூறிய சாப நோய்க்கு அச்சங்கொண்டுளேந்தேன்; பிழைக்கும் வகை அருள் செய்யவேண்டுமென்று வருந்திக் குறையிரந்த பொழுது, எமது பெருமான் மைதீட்டிய கண்களையுடைய இலக்குமி போகநாயகனே! இதனைக் கேட்பாயாக எனத் திருவாய் மலர்ந்தருள் செய்தனன்.

கலிநிலைத் துறை

நடுநி கந்திடா நம்அடித் தொழும்பரால் நாட்டப்
படுவ தொன்றெது அஃதவ்வப் பயன்றனைப் பயந்தே
விடுவ தல்லது பழுதுறா தின்றுநீ மெலிய
அடும்இச் சாபமும் அனுபவித் தல்லது விடாதால். 15

நடுவு நிலைமையிற் பிறழாத நம் அடியவரால் நிலைபெற நிறுத்தப் படுவன எவை எவையோ அவ்வவை தத்தம் பயன்களைப் பயந்தே விடுவன. அல்லாமல் வழுவுவன அல்ல. இந்நாள் நீ மெலிவடைய வருத்தும் இச்சாபப் பயனும் அனுபவித்தன்றிக் கழிவன அல்ல.

தாங்கு கொள்கையின் உயர்ந்தநம் அடியவர் தமக்கோர்
தீங்கி ழைத்திடுங் கொடியரைச் செருப்பதே கருமம்
ஆங்கும் வல்லிருட் குழிவிழுந் தழுங்குவர் அந்தோ
யாங்கண் உய்வர்எம் அடியவர் தமக்கிடர் இழைத்தோர். 16

ஏந்திய கொள்கையினால் உயர்ந்த நம்முடைய அடியவர் தங்கட்கோர் தீங்கினை இயற்றும் கொடியவரைக் கொலையால் ஒறுத்தலே செயத்தக்க கருமம் ஆகும். மேலும், மறுமையிலும் கொடிய நரகக்குழியில் விழுந்து வருந்துவர். அந்தோ! எம்முடைய அடியவர் தங்கட்குத் துன்பம் செய்தோர் எங்ஙனம் பிழைப்பர்.

பெருகும் அன்பினுல் எம்மைநீ வழிபடும் பேற்ருல்
இருமை சால்முனி சபித்திடும் ஐயிரு பிறப்பும்
திரிபு ருதுல கினுக்குப காரமாம் தெளிநீ
அருளும் ஐந்தினில் ஐந்தினில் தண்டமும் புரிகேம். 17

'வளரும் அன்பொடும் எங்களை வழிபடும் நல்வினையால் பெருமை நிரம்பிய பிருகு முனிவர் சபித்திடும் பத்துப் பிறப்பும் தப்பாமல் உலகினர்க்கு உதவி செய்யும் பிறவி வாய்க்கும். அதனை நீ உணர்தி, ஐந்து பிறப்பினுள் நிக்கிரகமும் புரிந்து கொள்வேம்!

என்று வாய்மலர்ந் தருளலும் நெடியவன் இறைஞ்சி
நன்றும் உய்ந்தனன் அடியனேன் ஞாலத்தின் நீயே
சென்று தண்டமும் அருளும்மற் றியான்பெறச் செய்யின்
மன்ற இப்பெரும் பேற்றினும் பேறுமற் றுளதோ. 18

என்றிறைவன் வாய்மலர்ந்தருளிய அப்போதே திருநெடுமால் வணங்கி 'அடியனேன் பெரிதும் வாழ்வுடையேன் ஆனேன். உலகில் நீயே எழுந்தருளிவந்து யான் தண்டனையும் அருளும் பெற உதவுவாய் என்னின் நிச்சயமாக இப்பெரும்பாக்கியத்தினும் பாக்கியம் வேறு ஒன்றுளதோ? (இல்லை.)'

'ஒறுத்தால் ஒன்றும்போதுமே' (திருவாசகம்). இறைவன் தந்த சூலையைப்பாராட்டல். (திருத். திருநாவு.)

இன்னும் ஓர்வரம் வேண்டுவல் எளியனேற் குன்பால்
மன்னும் மேதகும் உழுவல்அன் பருள்மதி வள்ளால்
பன்னும் இவ்வரி சாபவெம் பயந்தவிர் இலிங்கந்
தன்னில் என்றும்நீ அமர்ந்தருள் என்றலுந் தலைவன். 19

'வள்ளலே' மேலும் ஓர் வரத்தைப்பெற விரும்புவேன். திருவருள் வலியிலாதேற்கு உன திருவடியில் நிலைபெறும் எழுமையுந் தொடர்ந்த மேம்பட்ட அன்பினை அருள் செய்வாய். பேசப்பெறும் அரிசாப பயந் தீர்த்த இந்த இலிங்கத்தில் எழுந்தருளியிருந்து என்றும் அருள் செய்வாயாக என வேண்டலும் எம் தலைவன்.

வேட்ட யாவையும் வழங்கினன் உவகைமீ தூர்ந்து
பாட்ட ளிக்குலம் விருந்தயர் பசுந்துழாய் மார்பன்
தோட்ட லர்க்கரங் குவித்தெதிர் நிற்பமுச் சுடராம்
நாட்டம் மூன்றுடை நாயகன் இலிங்கத்தின் மறைந்தான் 20

விரும்பிய அனைத்தையும் ஈந்தருளி இசை பாடுகின்ற வண்டின் கூட்டம் விருந்தாகத் தேனை நுகர்கின்ற பசிய துளவினையுடைய திருமார்பினனாகிய மாயோன் மகிழ்ச்சி மேலெழுந்து இதழ் கொண்ட மலரனைய கரம் குவித்து எதிர் நின்று துதி செய்ய சோமசூரியாக்கினிகளை முக்கண்களாக உடைய பெருமான் சிவலிங்கத்தில் மறைந்தருளினன்.

திரிகால ஞானேசம்

அனைய சூழலின் குணதுமுக் காலமும் அறிவான்
முனிவர் சிற்சிலர் எய்திமுன் இலிங்கம்ஒன் றிருத்தி
இனிய பூசனை இயற்றிட அவர்க்கது ஈந்தார்
கனியும் அன்பருக் கருளும்முக் காலஞா னேசம். 21

அத்தகைய வரைப்பினுக்குக் கிழக்கின் கண்ணது முக்காலங்களையும் அறியும் அறிவு பெறற் பொருட்டு முனிவரர் சிலர் அடைந்து சிவலிங்கம் நிறுவி இனிய சிவபூசனையைப்புரிய அவர் தமக்கு முக்கால உணர்வை ஈந்த பிரானுர் பழுத்த அன்பினர்க்கு அருளுதல் புரியும் திரிகால ஞானேசம்.

மதங்கேசம், அபிராமேசம்

விதந்த மற்றிதன் வடக்கது வெம்புலன் அடங்க
மதங்க மாமுனி அருச்சனை புரிமதங் கேசம்
அதன்கு டக்கபி ராமேசம் அச்சுதன் குறளாய்ச்
சிதைந்து மாவலி தபத்தெற வழுத்திய வரைப்பு. 22

எடுத்தோதிய இம்முக்கால ஞானேசத்தினுக்கு வடக்கில் உள்ளது கொடிய ஐம்புலன்களுமடங்க மதங்கமாமுனிவர் வழிபாடு செய்த மதங்கேசம்; அதற்கு மேற்கில் திருமால் வாமனவடிவினனாய் மாவலி சிதைந்துகெடும்படி அழிக்கத்துதிசெய்ததலம் அபிராமேசம் உள்ளது.

வெம்மை-விருப்பமும் ஆம். அச்சுதன்-அழியாதவன்; திருமால். காயாரோகணப் படலம் காண்க. அபிராமேசப் படலம் பின்வரும்.

ஐராவதேசம்

அத்த ளிக்குட பாலதன் றிமையவர் கடைபேர
தத்தி மேலெழும் வெண்கரி அருச்சனை ஆற்றி
அத்தி கட்கர சாகிவிண் அரசினைத் தாங்க
அத்த ஞர்அருள் பெறும்அயி ராவதேச் சரமால். 23

தேவர்கள் திருப்பாற் கடலைக்கடைந்த அந்நாளில் அக்கடலில் தோன்றிய ஐராவதம் எனப்பெறும் வெள்ளையானை அருச்சனை செய்து யானைகளுக்கு எல்லாம் அரசு என்னும் தெய்வத்தன்மை பெற்று இந்திரன் ஊர்தியாகச் சிவபிரானை அருச்சித் தருள் பெறும் ஐராவதேசம் அபிராமேசத்திற்கு மேற்குத்திசையில் உள்ளது.

அத்தி முன்னது கடல்; பின்னது யானை.

இவைகளின் பெருமை

துவற்று தேத்துளி துறுமலர்ப் பொதும்பர்சூழ் கிடந்த
இவற்றுள் ஒன்றனில் எந்தைதாள் வழிபடப் பெற்றோர்
கவற்றும் வல்வினைப் பிறவிவித் தாயகா மாதி
அவற்றின் நீங்குபு மழுவலான் அடியிணை சேர்வார். 24

துவலையாகச்சிந்துகின்ற தேன் துளிகள் செறித்த மலர்களையுடைய சோலைகள் சூழ்ந்த இத்தலங்களுள் வைத்து ஓர் தலத்தில் இறைவன் திருவடிகளை அருச்சனைபுரிவோர் வருத்தும் கொடிய வினைக்குக் காரணகாரியமாகிய பிறவிக்கு ஏதுவாகிய காமமுதலிய முக்குற்றங்களின் நீங்கிப் பரசு பாணியர் திருவடிகளைத் தலைப்படுவர்.

அரிசாப பயந்தீர்த்த தானப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்–863.

# இட்ட சித்தீச்சரப் படலம்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

திகழ்அரி சாபம் தீர்த்த திருநகர் முதல்வா ஞடர்
புகழ்அயி ராவ தீசப் பொன்மதில் வரைப் பீருக
நிகழ்தரு தளிகள் சொற்றும் நிறைஅயி ராவ தேசத்
திகழ்தருந் தென்சார் இட்ட சித்தீசத் துண்மை சொல்வாம்.1

விளங்கும் அரிசாப பயந்தீர்த்த தானம் முதல் விண்ணவர் புகழும் அழகிய மதில் சூழ்ந்த ஐராவதேசப் பெருமான் தலமுடிவாகத் திருவருள் நிகழ்தற்கு இடனுகிய திருக்கோயில்களைப் பற்றிக் கூறினேம். அருள் நிறைவுடைய ஐராவதேசத்திற்குத் தென்மேற்கில் திகழ்தரும் இட்ட சித்தீசத்தின் இயல்பினைக் கூறுவோம்.

தொழுதகு பெருமை சான்ற சுக்கிரன் அங்கண் எய்திக்
கெழுதகு பூசை ஆற்றிக் கிடைத்தனன் சித்தி எல்லாம்
முழுதருள் பெற்ற அன்னேன் மொழிவழித் ததீசி எய்தி
வழிபடு முறையின் ஏத்தி வச்சிர யாக்கை பெற்றான். 2

பலருந் தொழத்தக்க பெருமை அமைந்த சுக்கிரன் இணங்குதற்குத் தக்க பூசனையை அவ்விடத்திற் செய்து சித்திகள் யாவும் கைவரப் பெற்றனன். திருவருளைப் பெற்ற அச்சுக்கிரன் உபதேசப்படி ததீசி முனிவர் ஆங்கு விதிவழிப் பூசனையைப் புரிந்து வச்சிரயாக்கையைப் பெற்றனர்.

அருள் பெற்ற சுக்கிரன் ததீசியை ஆற்றுப் படுத்தினர்.

உதீசிமா நாகங் கோட்டி முப்புரம் ஒறுத்த அயிரா
வதீசனுக் கணிய தென்பால் வைகிய உணர்வுக் கெட்டா
அதீதனை வழுத்தி அந்நாள் வச்சிர யாக்கை பெற்ற
ததீசியின் செயல்வி ரித்துச் சாற்றுவன் முனிவீர் கேண்மின்.3

முனிவர்களே ! வடக்குத் திசையிலுள்ள மேரு மலையை வில்லாக வளைத்து முப்புரத்தைச் சிரித்தழித்த ஐராவதேசப் பெருமானுர்க்கு அணித்தாய தென் திசையில் எழுந்தருளிய உயிரறிவைக் கடந்து நிற்கின்ற பிரானைப் பண்டை நாள் துதி செய்து வச்சிர சரீரம் பெற்ற ததீசி முனிவரர் செய்கையை விரித்துக் கூறுவன் கேளுங்கள்.

அதீதன்—கடந்தவன்; இது வாளா பெயராய் நின்றது. 'அடியளந்தான் தாயதெல்லாம்' (திருக். 610.)

ததீசி முனிவர் செய்கை

பிருகுவின் மரபில் தோன்றும் பிறங்குசீர்த் ததீசி மேலோன்
அருவிமா மதமால் யானைக் குபன்எனும் அரசன் தன்னே
டொருவருங் கேண்மை எய்தி அளவளாய் உறையுங் காலை
இருவரும் ஒருநாட் கூடி நகுபொழு தினைய சொல்வார். 4

பிருகு முனிவர் குலத்துள் தோன்றிய விளங்கிய சிறப்பினையுடைய ததீசி முனிவரர் அருவியைப்போல மதமொழுகுகின்ற பட்டத்து யானையையுடைய குபன் என்னும் அரசனேடு நீங்கற்கரிய நட்புப்பூண்டு மிக்குக் கலந்து பொருந்தி யிருக்கும் காலத்தோர் நாளில் இருவரும் இன்பப் பொழுது போக்கில் இவ்வாறு கூறுவர்.

விப்பிரர் கொல்லோ அன்றி வேந்தரோ பெரியர் என்னும
அப்பொழு தந்த ணாளர் அரசரிற் சிறந்தோ ரென்னச்
செப்பினன் ததீசி மன்னன் மன்னரே சிறந்தோர் என்றுன்
இப்பரி சிருவ ருக்கும் எழுந்தது வயிரப் பூசல். 5

அந்தணர் பெரியரோ? அரசர் பெரியரோ என்னும் வினவை எழுப்பிய பொழுது அந்தணர் அரசரினும் சிறந்தோ ரென்று ததீசி முனிவர் கூறக்கேட்ட அரசன் அரசரே சிறந்தோர் என்று கூறினன். இம்முறையில் இருவருக்கும் மனக்காழ்ப்பு உண்டாகிப் பெரும்போர் மூண்டது.

அழலென முனிவன் சீறி அடித்தனன் அடித்த லோடும்
மழலைவண் டிமிரும் தாரான் வச்சிரம் சுழற்றி வீசிப்
பழமறை முனிவன் ஆக்கை இருதுணி படுப்ப அன்னேன்
கிழமைகூர் வெள்ளி தன்னை நினைந்துகீழ் நிலத்து வீழ்ந்தான்.

முனிவன் நெருப்புப்போலச் சினங்கொண்டு அடித்தனன்; அடித்த அளவிலேமென்மை பெற்ற வண்டுகள் ஒலிக்கின்ற மாலையை அணிந்த குபன் வச்சிராயுதத்தைச் சுழற்றி வீசிப் பழைய மறைகளை உணர்ந்த முனிவரன் உடம்பை இருதுண்டு பட வெட்டி வீழ்த்த அம் முனிவன் உரிமை பூண்ட சுக்கிரனை நினைந்து கீழே நிலத்தில் வீழ்ந்தனன்.

சுக்கிரன் உபதேசம்

சுக்கிரன் உணர்ந்து போந்து துணியுடல் பொருத்திக் கூட்டி
அக்கணத் தெழுப்பித் தேற்றி அறைகுவான் முனிவ கேண்மோ
நக்கலர் கமல வாவிக் காஞ்சியின் நணுகி அன்பான்
முக்கணாற் றொழுதி யாண்டுங் கொலையுறு முதன்மை கோடி. 7

சுக்கிரன் முனிவர் நினைவை உணர்ந்து வந்து துணிபட்ட உடம்பைப் பொருத்திச்சேர்த்து அந்நிலையே உயிர் பெறச்செய்து தேறுதல் கூறி,மேலும் 'முனிவனே கேட்டி' எனக்கூறுவான்; 'ஒளிவிட்டு மலர்கின்ற தாமரைத்தடங்கள் நிரம்பிய காஞ்சி நகரைத்தலைப்பட்டு முக்கண் முதல்வனை அன்பொடுந் தொழுது எப்பொழுதும் எவ்விடத்தும் கொல்லப்படாத நிலைமையைக் கொள்ளுதி!

இழைமணி மாடக் காஞ்சி இட்டசித் தீச வைப்பின்
மழைதவழ் மிடற்றுப் புத்தேள் மலரடி வழுத்திப் பெற்றேன்
விழைதகு மிருத சஞ்சீ வினிஇது அதன்தென் பாங்கர்த்
தழைபுகழ் இட்ட சித்தி தரும்புனல் தடம்ஒன் றுண்டால். 8

மணிகள் இழைக்கப் பெற்ற மாடங்களைக் கொண்ட காஞ்சியில் உள்ள இட்ட சித்தீசத் தலத்திடை மேகம்போலும் கண்டத்தினையுடைய சிவபிரான் திருவடிகளைத் துதித்து விரும்பத் தக்க மரணந் தவிர்க்கும் மருந்தாகிய மிருத சஞ்சீவினியைப் பெற்றேன. அத்தலத்திற்குத் தெற்கில் தவழ்கின்ற புகழ் கொண்ட இட்ட சித்தியைத் தரும் தீர்த்த முடைய தடாகம் ஒன்றுளது.

அத்தடம் படிந்தோர் தம்பால் ஆருள் சுரக்கும் ஈசன்
பத்தியால் அதனைக் கண்டோர் தீண்டினோர் பருக லுற்றோர்
புத்தியோ டாடப் பெற்றோர் அறம்பொருள் இன்பம் வீடாம்
சித்திகள் பெறுவார் என்றால் அதன்புகழ் செப்பற் பாற்றே. 9

அத்தீர்த்தத்தில் மூழ்கினோர், தமக்குப் பிறர்க்கரிய பேரருளைப் பாலிப்பன ஈசன். பேரனபொடும் அவ்விட்ட சித்தித் தீர்த்தத்தைத் தரிசித்தோரும் தீண்டினோரும், பருகினோரும், புத்தி பூர்வமாக மூழ்கினோரும் அறத்தையும், பொருளையும், இன்பத்தையும், வீட்டினையும் பெறுவர் என்றால் அத்தீர்த்தத்தின் புகழ் பேசும் பான்மையதோ?

எழுசீரடி யாசிரிய விருத்தம்

மல்லல் நீர்அரி வாரம் மூழ்கிடின் மகவி லான்மக வீன்றிடும்
இல்லம் இல்லவன் மனைவி எய்துவன் ஆயுள் இல்லவன் அஃதுறும்
கல்வி இல்லவன் கல்வி எய்துவன் கண்ணி லான்விழி பெறுகுவன்
செல்வம் இல்லவன் செல்வம் மேவுவன் அரசி லான்அரசு செய்யுமால்.

வளமமைந்த தீர்த்தத்தில் ஞாயிற்றுக்கிழமை மூழ்குவாராயின் மகப்பேறிலார் தடை நீங்கி மகப்பெறுவர். திருமண நிகழ்ச்சிக்குப் பகை யாவனநீங்கி வாழ்க்கைத் துணைவியை எய்துவன்; அற்பாயுள் உடைய வர் தீர்த்தப் பயனால் நீடிய வாழ்நாளை அடைவர். கல்வியில்லவன் நற் கல்வியைப் பெறுவன்; பிறவிக்குருடர் பிழை தவிர்ந்து கண்ணுடைய ராவர். வறுமை நீங்கிப் பெருநிதி பெறுவன் வறிஞன். அரசிழந்தவன் அரசு பெறுவன் என்க.

அரி—சூரியன், அவனுக்கு உரிய நாள் ஞாயிற்றுக்கிழமை.

அலகை பூதம தாதி பற்றி அலைக்க நின்றவர் இரவிநாள்
குலவும் அத்தடம் ஆடின் அங்கவை கோடி யோசனை பின்னிடும்
கலிகெ ழுந்துயர் குட்ட வெம்பிணி முயல கன்பெரு நோயெலாம்
விலகி நீங்கும்அந் நீர்ப டிந்திடும் அக்க ணத்திது மெய்மையே. 11

பேய், பூத முதலிய பற்றி வருத்த வருந்தியோர் ஞாயிற்றுக்கிழமையில் விளங்குகின்ற இட்டசித்தித் தீர்த்தத்திற்படிந்தால் அவைமெலிந்து புறங்காட்டிக் கோடி யோசனைக்கப்பாலோடும். அதுவரை வருத்திய பெருந்துன்பம் செய் குட்டநோய், முயலகன் முதலிய கொடு நோய்களும் மூழ்கினோரை அக்கணமே விட்டுப்போயகலும்; இவை சத்தியமேயாகும்.

பேய் முதலிய: "பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோ டுள்ளநினை, வாயினவே வரம்பெறுவர் ஐயுறவேண் டாவொன்றும், வேயனதோ ளுமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர், தோய்வினையா ரவர்தம்மைத் தோயாவாந் தீவினையே" (திருஞா. வெண்காடு—2) என்னும் திருமொழி காண்க.

காத ளாவிய குழைகி ழித்துவி டங்க னிந்து குமிழ்ம்மிசை
மோது மையரி வாள்த டங்கண் முகிழ்த்த கொங்கை நுணங்கிடை
மாத ராயினும் மைந்த ராயினும் வந்து பூம்புனல் ஆடினோர்
யாதி யாது விரும்பி னாலும்அவ் விட்ட சித்தி அளிக்குமால். 12

காதில் மருவிய தோட்டினைத் தகர்த்து விடத்தன்மை முதிர்ந்து குமிழம பூப்போலு மூக்கிடை மோதி மையொடும செவ்வரி பரவி ஒளியுடைய அகன்ற கண்களும, அரும்பிய கொங்கைகளும், நுண்ணிய இடையும் ஆகிய இவற்றையுடைய மாதரேயாக மைந்தரேயாக வந்து தீர்த்தத்தில் மூழ்கினோர் எவ்வெவை விரும்பினும் அவ் விட்ட சித்தித தீர்த்தம் அவர்க்கு அவ்வவற்றை நல்கும் நலத்தவாம்.

முந்து கந்தனில் வாணி தன்னொடு முளரி மெல்லணை நான்முகன்
வந்து மேதகும் இட்ட சித்தி மலர்த்த டந்தனில் ஆடிநன்
றுந்து சத்திய லோக வாழ்க்கை படைத்தி டுந்தொழி லோடுற
இந்து சேகரன் அருள்கி டைத்தனன் எற்றும் வலித்தவ முனிவனே

பெருவன்மையை யுடைய தவமுனிவனே! கிரேதாயுகந்தனில் சரசுவதியொடும் தாமரைமலர்த் தவிசினனாகிய பிரமன் வந்து மேன்மை பொருந்திய இட்ட சித்தித் தீர்த்தத்தில் மூழ்கி நலமிகு சத்திர லோக வாழ்க்கையும் சிருட்டித் தொழிலையும் பெறச் சந்திர சேகரனாகிய இட்ட சித்தீசப் பெருமான் திருவருள் வாய்க்கப் பெற்றனன்.

ஏயும் நற்றிரே தாயு கத்தினென் றாம்ப டிந்து மறைத்தனு
ஆயி ரங்கதிர் ஆண்டு தன்றினத் தத்த டம்படிந் தோர்க்கரன்
மேய சித்திகள் விரைவின் நல்கவும் விருச்சி கத்தின்அந் நாளுறின்
வாயும் அப்பயன் மிகவி ரைந்து வழங்க வும்வரம் எய்தினன். 14

பொருந்தும் நல்ல திரேதாயுகத்தில் அவ்விட்ட சித்தித் தீர்த்தத்தில் சூரியன் நீராடி வேத வடிவினையும் ஆயிரங் கிரணங்களையும் பெற்று ஆளுதல் புரிந்து தனக்குரிய ஞாயிற்றுக்கிழமையில் மூழ்கினோர்க்குச் சிவபிரான் விரும்பிய பேறுகளை விரைவில் அருளவும், கார்த்திகை மாதத்தில் அஞ்ஞாயிற்றில் மூழ்கிற் பொருந்தும் அப்பயனை அதனினும் விரைந்து வழங்கவும் வரத்தைப் பெற்றனன்.

துவாப ரத்தரி பூவின் மாதொடு தோன்றி அத்தடம் ஆடினன்
தவாது பல்லுயிர் காக்கும் வாழ்வொடு மால்பதந்தனைப்பெற்றனன்
உவாம திக்கலை ஆன னம்பிகை கலியு கத்தில்அந் நீர்படிந்
தவாநி றைந்தருள் கம்ப நாயகர் பாதி மேனி அடைந்தனள். 15

துவாபர யுகத்தில் திருமால் திருமகளோடும் ஆங்கு வந்து தீர்த்தத்தில் மூழ்கினன். அதன் பயனால் பல்லுயிர்களையும் கெடாமற் காக்கும் வாழ்வோடு வைகுந்தப் பதவியையும் ஏற்றனன். பூரணை நாளின் முழுமதி யனைய திருமுகத் தம்பிகையார் கலியுகத்தில் அந்நீரில் மூழ்கிப் பெருவிருப்புடன் அருள் செய்கின்ற திருவேகம்பப் பெருமான் திருமேனியில் செம்பாதி பாகம் பெற்றனர்.

இவர்கள் நால்வரும் நான்கு கங்களுக் கிறைவ ராயினர் மற்றும்இச்
சிவமு றும்புனல் ஆடி முன்தின கரன்இ ழந்தபல் எய்தினன்
தவள மாமதி முயல கப்பிணி சாடி னன்பகன் என்பவன்
துவளு மாறுயர் வீர பத்திரன் தொட்ட வாள்விழி பெற்றனன்.16

இவர்கள் நால்வரும் அவ்வவ் யுகங்களுக்குத் தலைவரும் ஆயினர். மேலும், நலமமைந்த இத்தீர்த்தத்தில் மூழ்கிச் சூரியன் தக்கன் யாகத்தில் இழந்த பல்லைப் பெற்றனன். வெண்ணிறமுடைய சந்திரன் முயலகன் என்னும் கொடுநோயினின்றும் மீண்டனன். பகன் என்னும் சூரியன் வருந்தும்படி உயர்வு மிகும் வீரபத்திரர் தோண்டிய ஒளி பொருந்திய கண்களைப் பெற்றனன்.

வடதி சைக்கிறை வரைம டக்கொடி வடிவு நோக்கி இழந்தகண்
ணுடன் அரற்கொரு நட்பும் எய்தினன் ஒது துச்சரு மேளனும்
உடல்கணைக்கரு விழிஉ ருப்பசியுகள கொங்கை மணந்தனன் [னன்
மிடல்கொள் கண்ணன் அளித்த சாம்பனுங் குட்ட வெம்பிணி நீங்கி

குபேரன் இமயமலை வல்லியாரை நோக்கிக் கண் ஒளி மழுங்கி இத் தீர்த்தப் பயனால் மீள ஒளி பெற்றனன். மேலும் சிவபெருமானுக்கோர் நண்பனுமாயினன். துச்சருமேளன் என்பானும் வருத்துகின்ற அம்பு போலும் கரிய விழியினையுடைய ஊர்வசியின் கொங்கையைத் தோயும் வாழ்வு பெற்றனன். வலிமை அமைந்த கண்ணன் ஈன்ற சாம்பனும் குட்டம் என்னும் கொடிய நோய் நீங்கினன்.

ஊரு:—துடை; பிரமன் துடையிற் பிறந்தவள் ஆகலின் ஊர்வசி எனப்பட்டனள். சாம்பன் தந்தையாற் பெற்ற சாபம் நீங்கப் பெற்றனன்.

நிடதம் மன்னிய நளன்அ யோத்திஇராமன்நீள்புகழ்ப் பாண்டவர்
மடனில் இங்கிவர் முத்தி றத்தரும் மருவலாரை அழித்து வென்
றிடன்இ ழந்திடும் இறைமை எய்தினர் இரியும் ஐம்புல வாழ்க்கை
தடவு மென்மலர் இட்ட சித்தி தருந்த டம்படி பேற்றினால். [யோய்

ஐம்புலன்களை அடக்கிய வாழ்க்கையை உடைய ததீசியே! பெருமையையுடைய மெல்லிய மலர்களைக் கொண்ட இட்டசித்தித் தீர்த்தத்தில் மூழ்கிய பயனால் நிடத நாட்டு நள மன்னனும், அயோத்தி மன்னனும் சிராமனும், பெரும் புகழுடைய பாண்டவரும் ஆகிய அறிவுடைய இம்முத்திறத்தரும் தத்தம் பகைவரை அழித்து வெற்றி கொண்டு இழந்த இடங்களுக்கு மன்னர் ஆயினர்.

அறுசீரடி யாசிரிய விருத்தம்

தோற்றமார் வடாது வெந்நோய் துமித்திடுந் தரும தீர்த்தம்
போற்றருங் குணாது விண்ணோர் புகழ்தரும் அருத்த தீர்த்தம்
கூற்றுறுந் தெனாது மாறாக் குரைபுனற் காம தீர்த்தம்
சாற்றிய குடாது முத்தித் தீர்த்தம்அத் தடத்துள் ஓங்கும். 19

மங்கலத்தினால் முன்வைத் தெண்ணப்படுகின்ற வடக்கில் கொடு நோய்களைப் போக்குகின்ற தரும தீர்த்தமும், போற்றுதலைக்கடந்த கிழக்கில் விண்ணவர் புகழ் அருத்த தீர்த்தமும், புகழ்ச்சி பெறும் தெற்கில் எஞ்ஞான்றும் ஒலிக்கின்ற நீருடைய காமதீர்த்தமும், பேசப்பெறும் மேற்கில் முத்தித்தீர்த்தமும், அவ்விட்ட சித்தித்தீர்த்தத்துள் உயர்வெய்தும்.

நாற்பயன் உதவுந் தீர்த்தம் நான்குடை இணைய தீர்த்தம்
ஏற்புறத் திங்கள் தோறுஞ் சிறந்ததே எனினும் சால
மேற்படும் இடபம் கும்பம் விருச்சிகம் கடகந் தன்னில்
பாற்படும் அவற்றின் மேலாம் கார்த்திகைப் பானு வாரம். 20

அறம், பொருள், இன்பம், வீடென்னும் நாற்பயனையும் உதவும் நான்கு தீர்த்தங்களைக் கொண்ட இத்தீர்த்தம் இயையுமாறு எல்லா மாதங்களிலும் சிறந்ததே ஆயினும் பெரிதும் சிறப்புறும வைகாசி, மாசி, கார்த்திகை, ஆடி மாதங்கள், இம்மாதங்களினும் கார்த்திகை மாதமும் அம்மாதத்துள் வரும் ஞாயிற்றுக்கிழமைகளும் அவற்றினும் மிக்கனவாம்.

பானுநாள் விடியற் போதின் அத்தடம் படிந்தோர் யாவ
ரேனும்அங் கவர்கள் எய்தும் பேறவர் இயம்பற் பாலார்
தானம்நீ ராடல் ஓமம் கணித்தல்அத் தடவுக் கஞ்சத்
தேனலர் இட்ட சித்தி தீர்த்தத்தொன் றனந்த மாமால். 21

ஞாயிற்றுக்கிழமை வைகறைப் போதில் அந்நீரில் மூழ்கினோர் யாவராயினும் அவர் பெறும் பேற்றினை யாவர் கூறும் பான்மையர். தானம் கொடுத்தலும், நீர் மூழ்கலும், வேள்வியியற்றலும், மந்திரம் செபித்தலும் அத்தீர்த்தத்தோடு தொடர்புறுமேல் பயன ஏனைய இடங்களினும் மிகும்.

ஆதலின் அங்கண் மூழ்கி அருங்கொலை யுருத மேன்மை
தீதறப் பெறுகென் றோதி மிருதசஞ் சீவி னிப்பேர்
மேதகு மனுவும் நல்கிச் சுக்கிரன் விடுப்பப் போந்து
கோதிலா முனிவன் ஓகை கூர்ந்துகாஞ் சியினைச் சேர்ந்தான். 22

'ஆதலான், அத்தீர்த்தத்தில் நீராடி அரிய திறத்தானும் கொலை எய்தாத சிறப்பினைக் குற்றமறப் பெறுக' என்றெடுத்தோதி 'மிருத சஞ்சீவினி' என்னும் மேன்மை யமைந்த மந்திரத்தினையும் அருளொடுஞ் செவியறிவுறுத்துச் சுக்கிரன் ததீசியைச் செலுத்தக் குற்றமற்ற அத்ததீசியும் மகிழ்ச்சி மீக்கூர்ந்து காஞ்சிமா நகரைச் சேர்ந்தனன்.

ததீசிமுனிவர் வச்சிர யாக்கை பெறுதல்

சேர்ந்தவன் இட்ட சித்தி தீர்த்தநீர்ப் படிந்து கண்ணீர்
வார்ந்திட இட்ட சித்தி வரதனை அருச்சித் தன்பு
கூர்ந்தனன் சின்னாட் பின்னர்க் குழப்பிறை மோலி தோன்றி
ஈந்தனன் வயிர யாக்கை இனிவருங் கொலைஎய் தாமே. 23

அம்முனிவன் இட்டசித்தி தீர்த்தத்தில் மூழ்கிக் கண்களில் அன்பு நீர் பாய இட்டசித்தீசப் பெருமானை அருச்சனை செய்து அன்பு மிகுந்தனன். சில நாட்களுக்குப் பின்னே சந்திர சேகர மூர்த்தி எதிரெழுந்தருளி இனிக்கொலை யுண்ணுதவாறு ததீசி முனிவர்க்கு வச்சிர சரீரத்தைத் தந்தருளினர்.

அவ்வகை வரங்க ளெல்லாம் அண்ணல்பாற் பெற்று மீண்டு
மெய்வகைத் ததீசி எய்தி வேத்தவை வேந்தன் சென்னி
எவ்வமில் இடத்தாள் ஓச்சி உதைத்தனன் இவனுக் கென்று
தெவ்வெனச் சமரின் ஏற்ற மாயனைச் செயிர்த்து வென்றான். 24

அத்தகைய வரங்கள் யாவும் இறைவனிடத்தே ஏற்றருளி மீண்டு சென்று மெய்ச் சார்புடைய ததீசி முனிவர் அரசவையை அணுகிக் குபன் என்னும் அரசனுடைய தலையைத் தன் குற்றமற்ற இடக்காலால் வீசி உதைத்தனர். அவ்வரசன் பொருட்டுப் பகைத்துப் போரில் எதிர்ந்த திருமாலையும் வெகுண்டு வென்றனர்.

இடனுடைப் புரிசை சுற்றும் இட்டசித் தீச வைப்பில்
குடதிசை முகமா வைகுங் குழகனை வழிபட் டின்னும்
நடலைதீர்ந் திட்ட சித்தி நண்ணினர் எண்ணி லாதார்
புடவியில் அதன்றன் நீர்மை யாவரே புகலும் நீரார். 25

இடங்கொண்ட மதில்சூழ்ந்த இட்டசித்தீசத்தில் மேற்கு முகமாக எழுந்தருளியுள்ள பெருமானை மேலும் வழிபட்டுத் துன்பம் தவிர்ந்து விரும்பிய சித்திகளைப் பெற்றவர் அளவிலராவர். உலகில் அத்தலத்தின் மேன்மையை முற்றவும் யாவரே கூறும் நிலைமையர் (ஒருவருமிலர்.)

இட்ட சித்தீச்சரப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—888

## கச்சபேசப் படலம்

கலிநிலைத் துறை

ஓடரிக் கண்ணியார் ஆடலும் பாடலும் ஒவுறுச்
சேடமை இட்டசித் தீசமேன் மைஇது செப்பினும்
ஆடமைத் தோளிஓர் பாகர்வாழ் அன்னதன் தென்புடைத்
தோடவிழ் சோலைசூழ் கச்சபே சத்தியல் சொல்லுவாம், 1

பரவிய செவ்வரிக் கண்ணுடைய மகளிரது ஆடலும் பாடலும் ஒருகாலும் ஒழியாத பெருமை அமைந்த இட்ட சித்தீச்சரத்தின் உயர்வைக் கூறினோம். அசைகின்ற மூங்கிலை ஒத்த தோள்களையுடைய உமையம்மையை ஓர் கூற்றிற் கொண்ட பெருமான் எழுந்தருளியுள்ள இடத்திற்குத் தெற்கில் இதழ்கள் விரிகின்ற மலர்களையுடைய சோலை சூழ்ந்த கச்சபேசத்தின் இயல்பினைக் கூறுவாம்.

பெருமான் உலகினைப் படைத்தல்

ஐவகைப் பூதம்மால் அயன்முத லாயபல் சராசரம்
எவ்வகை யுள்ளவும் ஈறுசெய் திமயமா மயிலொடும்
அவ்விர வாட்டயர்ந் தங்கவை மீளவும் ஆக்குவான்
தெவ்வடு குறுநகைச் சிற்பரன் திருவுளஞ் செய்தனன். 2

திரிபுரராகிய பகைவரைப் புன்சிரிப்பால் அழித்தருளிய மெய்யறிவின் மேலோன் மலையரையன் மகளாகிய மயில்போலுஞ் சாயலுடைப் பெருமாட்டியொடும் தனித்திருந்து ஐம்பெரும்பூதங்கள், திருமால் பிரமன் முதல் பல் சராசரங்கள் ஆகிய எவ்வியல்பினவாய் உள்ள அனைத்தினையும் அழித்து அவ் இரவிடை அம்மையார் காணத் திருநடம் புரிந்து அவற்றை மீளவும் படைத்தற் பொருட்டுத் திருவுளம் பற்றியருளினன்.

கன்ம மலம் பரிபாக மாதற்பொருட்டு ஒடுக்கி, ஆணவ மலம் பரிபாக மாதற்பொருட்டு மீளவும் தோற்றுவிப்பன். தத்துவ தாத்துவிக விளக்கங்கள் யாவும் ஒடுங்கி ஆன்மாக்கள் அறியாமை வயத்தவாய் நிற்றலை இரவு என்பர். எஞ்சி நிற்பது அந்நிலையில் தானும் தன் சிற்சத்தியுமே ஆகலின் மயிலொடும் என்றனர்.

உலகெலாம் அழிவுறுங் காலையுந் தன்னுடைக் காவலிற்
குலவுசீர்க் காஞ்சியிற் சோதிலிங் கத்துருக் கொண்டெழுந்
திலகுதன் சத்தியான் முன்புபோல் யாவையும் நல்கினன்
அலகிலா நாமரு பங்களும் ஆக்கினன் அண்ணலே. 3

எல்லா உலகங்களும் அழிவுற்ற காலத்தும் தன்னுடைய பாதுகாப்பான் விளங்குகின்ற சிறப்பினையுடைய காஞ்சிபுரத்தில் சோதி மயமான சிவலிங்கத்தினின்றும் திருவுருக்கொண்டு தோன்றித் தனது சிற்சத்தியின் துணையால் முன்பு போல எல்லாப் புவனங்களையும் படைத்தனன். அவற்றிடை அளவிடப்படாத இயங்கியற் பொருள்களையும் நிலையியற் பொருள்களையும் படைத்தருளினன் தலைவனாகிய சிவபிரான்.

"ஈறுசேர் பொழுதினும் இறுதி இன்றியே, மாறிலா திருந்திடு வளங்கொள் காஞ்சி" (கந்த. பாயிரம்) இறைவன் படைப்பிலும், காப்பினும் அமைந்தது காஞ்சி. ஏனையோர் போலக் கரணத்தானன்றிச் சங்கற்ப மாத்திரையாற்செய் தருளுவன் ஆகலின் 'தன்சத்தியால்' என்றனர்.

பிரமன் வழிபட்டது

போற்றுசீர் அவ்விலிங் கத்தினைப் போற்றினோர் யாவரும்
மாற்றரும் வீடுபே றெய்துவர் நான்முகன் வாணியோ
டாற்றலான் ஆயிடை மாதவம் ஆற்றிஅவ் வங்கணன்
ஊற்றமார் அருளினல் படைத்திடுந் தலைமைபெற் றோங்கினன். 4

வழிபடற்குரிய சிறப்பினையுடைய அவ்விலிங்கத்தினை வழிபாடு செய்தோர் யாவரும் ஒப்பில்லாத முத்தியைத் தலைப்படுவர். நான்முகன் சரசுவதியோடும் அங்கு வந்து பெருவன்மையாற் பெரிய தவத்தைச் செய்து அழகிய கண்ணோட்ட முடைய சிவபிரான் சுரக்கின்ற பேரருளால் சிருட்டித் தொழிலுக்குத் தலைவனாகி உயர்ந்தனன்.

ஊற்றம் - திரிபில்லாத வலிமை.

திருமால் ஆமையாய் வழிபட்டது

முன்னொரு பிரமகற் பத்திடை நாரணன் மூரிநீர்
மன்னுமந் தரமலை யாமையாய்த் தாங்கிவார் கடல்கடைந்
தின்னமு தஞ்சுரர்க் கீந்தபின் வெஞ்செருக் கெய்திஆங்
கன்னமுந் நீர்முழு துழக்கினன் உலகெலாம் அஞ்சவே. 5

முன்னொரு பிரமகற்பத்தில் திருமால் பெருங்கடலில் மத்தாக மன்னும் மந்தர மலையை ஆமை வடிவு கொண்டு தாங்கித் திருப்பாற்கடலைக் கடைந்து இனிய அமுதத்தைத் தேவர்களுக்கு உதவிய பின்பு கொடிய செருக்கடைந்து உலக முழுதும் அஞ்சும்படி அக்கடல் முழுதும் திரிந்து கலக்கினன்.

அச்சம்நீத் தாருயிர் உய்வகை அருள்சுரந் தாங்குறீஇக்
கச்சபத் தின்னுயிர் செற்றதன் ஓட்டினைக் கதுமென
நச்சிய வெண்டலை மாலிகை நடுவுறக் கொண்டனன்
பச்சிளங் கிள்ளைபால் வீற்றிருந் தருளிய பண்ணவன். 6

பசிய இளங்கிளி போலும் உமையம்மையாரைப் பாகங் கொண்ட பரமன் அச்சம் நீங்கி உயிர்த்தொகைகள் உய்யும்படி கருணை மீக்கூர்ந்து அவ்விடத்திற்குப் போய் ஆமையின் இனிய உயிரை விரையப் போக்கி அதன் ஓட்டினை விரும்பிய வெண்டலை மாலை நடுவிற் பொருந்தக் கொண்டனன்.

இப்பெரும் பிழைதவிர்ந் துய்யுமா நாரணன் எம்பிரான்
வைப்பெனுங் காஞ்சியிற் சோதிலிங் கத்தினை வழிபடூஉ
மெய்ப்படும் அன்பினால் இரந்திரந் தேத்தலும் விடைமிசைத்
துப்புறழ் செஞ்சடைத் தோன்றல்அங் கவன்எதிர் தோன்றினன்.

இப்பெருங்குற்றம் நீங்கிப் பிழைக்கும்படி திருமால் எமது பெருமானுக்குரிய தலமெனும் காஞ்சியிற் சோதிலிங்கத்தினை வழிபாடு செய்து உண்மையன்பினால் பல்கால் குறையிரந்து துதிசெய்யும்போது இடப வாகனத்தின்மேல் பவளத்தொடு மாறுபடும் சிவந்த சடையுடை அண்ணல் அத்திருமால் முன் தோன்றினர்.

அமுதம் தந்து செருக்கி அழிவுசெய்தல் பெரும் பிழை என்றனர்.

காண்டலுங் கண்கள்நீர் வார்தரக் கரையறு காதலின்
பூண்டபே ரன்பினால் வீழ்ந்துவீழ்ந் திறைஞ்சினன் போற்றினன்
ஆண்டகாய் ஆருயிர்த் தலைவனே அங்கணா அடியனேன்
வேண்டுவ யாவையும் தந்தருள் என்றெதிர் வேண்டினன். 8

கண்ட அளவிலே கண்களில் நீர் கரை புரண்டொழுக எல்லை கடந்த விருப்பிற்றுங்கிய பேரன்பினால் பல்கால் வீழ்ந்திறைஞ்சிப்போற்றி அனைத்துயிர்களையும் ஆளும் திறத்தினன் ஆகலின் ஆண்டகையே! ஆருயிர்த்தலைவனே! அங்கணனே! அடியனேன் விரும்புவன யாவும் தந்தருள் செய்க' என வேண்டினன்.

திருவருள் பெற்றவர்க்கு நேரே தலைவனாகலின், 'ஆருயிர்த் தலைவனே' எனவும், பிழையைக் களைந்து ஆமை ஓட்டை மார்பிடை யணிந்தமையால் கண்ணேோட்டமுடையவன் என்பார் அங்கணா! எனவும்கூறினர்.

மழுவலான் இணையடிப் பொதுவறு பத்தியும் மால்பதத்
தழிவிலா இறைமையும் அவ்விலிங் கந்தனக் கன்றுதொட்
டொழிவருங் கச்சபே சத்திரு நாமமும் உம்பரார்
தொழுதெழ ஆங்கரன் உமையொடும் இனிதமர் தோற்றமும். 9

மற்றைத் தேவரைக் கனவிலும் மதியாத மழுவேந்தியின் திருவடித் தாமரைகளிலே பதிந்த பேரன்பும் வைகுந்தப் பதவியில் இடையில் அழியாத தலைமையும் அச்சோதிலிங்கந் தனக்கு அன்று முதல் என்றும் கச்சபேசத் திருப்பெயரும் விண்ணோர் தொழுதுயர்வுற அவ்விடத்தில் அரன் உமையம்மையொடும் இனிது வீற்றிருக்கும் வெளிப்பாடும். கச்சபம்—ஆமை. கச்சப+ஈசர் = கச்சபேசர்.

அத்தலந் திகழ்அவி முத்தமாந் தலத்தினும் அதிகமா
வைத்திடுந் தலைமையும் வரமெனக் கொண்டனன் வள்ளலும்
சித்தம்நீ டுவகையின் அங்கவை முழுவதுந் தேத்துழாய்ப்
பத்தனுக் கருள்புரிந் தாயிடை மறைந்தனன் பரையொடும். 10

அத்தலம் விளங்குகின்ற காசியினும் மேன்மையதாக வைத்திடுந் தலைமைப்பாடும் ஆகிய இவ்வரங்களை வேண்டினன். வள்ளலும் திருவுள்ளம் மகிழ்ந்து தேன் சிந்துகின்ற துழாய் மாலையை அணிந்த அன்பராகிய திருமாலுக்கு அவை முற்றும் அருள் செய்து உமாதேவியாரோடும் ஆங்கு மறைந்தருளினர்.

அன்றுதொட் டென்றும்அக் காஞ்சியின் நீங்கலா தமர்ந்திடுங்
கொன்றைவார் சடையனைக் கச்சபே சன்றனைக் கும்பிடச்
சென்றவர் கண்டவர் கருதினர் யாவருந் தீதுதீர்ந்
தொன்றிஒன் றாகிலை மாறிலா முத்திபெற் றுய்வரே. 11

அன்று முதல் என்றும் அத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் கொன்றைமலர் மாலையை அணிந்த சடையுடைப் பெருமானைக் கச்சபேசப் பெருமானைத் தொழச் சென்றவரும், தரிசித்தோரும், எண்ணினேரும் யாவரும் மலம் நீங்கி ஒன்றியும் ஒன்றாத நிலையாகிய ஒப்பில்லாத முத்தியைப் பெற்றுய்வர்.

ஒன்றியும் ஒன்றா நிலை—உடனாய் நிற்றல். ஏனைய பத முத்தியின் நீங்கிய முத்தி—மாறிலா முத்தி.

துர்க்கை முதலியோர் வழிபாடு

துர்க்கையுஞ் சாத்தனும் இரவியும் வயிரவத் தோன்றலும்
நற்கரி முகனுடன் ஐவருங் கச்சப நாயகன்
பொற்கம லப்பதம் பூசனை யாற்றிஅங் குடன்அமர்ந்
தொற்கமில் கணங்களோ டப்புரிக் காவல்பூண் டுறுவரால். 12

துர்க்கையும், ஐயனும், சூரியனும், வயிரவ மூர்த்தியும், விநாயகப் பெருமானும் ஆகியோர் ஐவரும் கச்சபேசப் பெருமான் பொற்பாத மலர்களைப் பூசனை புரிந்து உடன் வீற்றிருந்து தளர்ச்சியில்லாத கணங்களொடும் அத்தலத்தைக் காவல் செய்வர்.

சத்தியமொழி விநாயகர் சிறப்பு

அந்தணீர் கச்சபே சக்குட வைப்பினில் ஆயிதழ்க்
கந்தமா மலர்மிசைச் செல்விதன் கணவனார் போற்றிசெய்
துய்ந்தசத் தியமொழி விநாயகன் உளன்அவற் போற்றினார்
எந்தஊ றுந்தவிர்ந் திம்மையே வேட்டவை எய்துவார். 13

அந்தணீர்! கச்சபேசத் தலத்திடை மேற்றிசையில், கணந்தங்கிய மலரிடை இருக்கும் திருமகள் நாயகன் வழிபாடு செய்து நலம் பெற்ற சத்தியமொழி விநாயகர் கச்சபேசத் தலத்திடை மேற்றிசையில் எழுந்தருளி யுள்ளனர். அவரைப் போற்றுதல் புரிந்தோர் எவ்வகை இடையூறுகளும் நீங்கி இப்பிறப்பிலே விருப்பியவற்றை அடைவார்.

கச்சபேசப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—901

# சகோதர தீர்த்தப் படலம்

எழுசீரடி யாசிரிய விருத்தம்.

வெள்ளிக்குப் பாயம்போர்த்தெனப் பொதிந்த வெண்டிரு
நீற்றொளிக் கதிர்கள், அள்ளிக்கொள் வனைய மேனியீர் கச்ச
பாலயம் அறைந்தனம் மலநோய், தள்ளிப்பே றுதவும் அத்தலக்
குடபால் சகோதர தீர்த்தநீர்க் கரையில், புள்ளித்தோ லாடை
புனைந்தநம் பெருமான் பொலிவுறும் இருக்கைகள் மொழிவாம்.

வெள்ளிச் சட்டையைப் போர்வையாகக் கொண்டால் அனைய பொதியப் பூசிய வெள்ளிய திருநீற்றின் ஒளியுடைக் கதிர்கள் அள்ளிக் கொள்ளலாம்படி விளங்கும் திருமேனியை யுடையீர்! கச்சபாலயத்தின் பெருமையைக் கூறினோம். அத்தலத்திற்கு மேற்கில் ஆணவ மலத்தினால் ஆகும் பிறவி நோயைச் சாய்த்து வீடுபேற்றினை அருளும் சகோதர தீர்த்தக் கரையில் புள்ளிகளையுடைய மான்தோலை உடையாகப் புனைந்த நம்முடைய பெருமான் வீற்றிருக்கும் தலங்களைக் கூறுவாம்.

கச்சப+ஆலயம்=கச்சபாலயம். ஆமை உருக்கொண்ட திருமால் பூசித்தமையின் அப்பெயர் எய்தியது. "புள்ளித் தோலாடை புனைந்தானை" (திருவிளை. இந்தி.)

மாண்ட கன்னீச வரலாறு

மன்னுமெய்க் கிளவிக் கரிமுகன் தென்பால் மாண்டகன்
னீசனை வழுத்திக், கன்னிஓர் பாகன் அருளினுன் மாண்ட கன்-
னிமா முனிவரன் என்பான், மின்னிடைக் கடவுள் மடந்தையர்
ஐவர் வீங்கிள வனமுலை திளைத்துப், பொன்னுல கிடத்தின் நுகர்-
பெரும் போகம் புவிமிசை இருந்தவா நுகர்ந்தான். 2

நிலைபெறும் சத்தியமொழி விநாயகர் இருக்கைக்குத் தெற்கில் மாண்ட கன்னீசனைத் துதி செய்து உமையொரு கூறனுகிய அப்பிரான் அருளினுல் மாண்ட கன்னி முனிவரன் மின்னை ஒக்கும் இடையினை யுடைய தேவ மகளிர் ஐவர்தம் பெருத்த இளைய அழகிய கொங்கைப் பெரும் போகத்தை விண்ணுலகினை விடுத்து மண்ணுலகில் இருந்த வாறே நுகர்ந்தனன்.

மதமலம் அறுக்குஞ் சகோதரத் தடநீர் வரைப்பிடை வளா-
கம்ஒன் றியற்றி, அதனிடை இனிது வீற்றிருந் தரம்பை அங்கலார்
இளமுலைப் போகஞ், சதமகன் சமழ்ப்ப நுகர்ந்தனன் நெடுநாள்
கடைமுறை முத்தியிற் சார்ந்தான், சிதர்அரித் தடங்கண் ஐயரம்
பையர்தந் தீர்த்தம்என் றுரைப்பதத் தடமே. 3

செருக்குதற்கு ஏதுவாகிய ஆணவ மலவலியை மூழ்கினர்க்குக் கெடுக்கும் சகோதர தீர்த்தத்தின் பாங்கர் இடம் ஒன்றை யமைத்துக் கொண்டு அதன்கண் இனி திருந் தழகிய அரம்பையராகிய நன்மகளிர் போகத்தை இந்திரனும் நாணும்படி நெடுங்காலம் அனுபவித்துப் பின் வெறுத்து முடிவில் முத்தியைத் தலைப்பட்டனர் மாண்டகன்னி முனிவ ரர். அத்தீர்த்தமே செவ்வரி பரவிய அகன்ற கண்களையுடைய ஐயரம் பையர் தீர்த்தம் எனப் பேசப்பெறும்.

வரிவிழி சேப்பக் குடமுலை மதர்ப்ப வால்வளை கறங்கவண்
டிமிருந், தெரிமலர்க் கூழைத் தையலார் குடையுந் தெண்புனல்
தடம்அதன் குலைமேல், எரியலர் குடங்கை மாண்டகன் னீசன்
இனிதமர் இருக்கையின் குடசார், அரில்அறுத் தருள்வன் னீசம்-
ஒன் றுண்டால் அதுவருங் காரணங் கேண்மின். 4

செவ்வரி பொருந்திய கண்கள் சிவப்பவும், பொற்குடத்தை ஒத்த கொங்கைகள் விம்மவும், வெள்ளிய வளைகள் ஒலிக்கவும், வண்டுகள் ஒலிக் கின்ற ஆராய்ந்த மலரணிந்தகூந்தலையுடைய அழகிய மகளிர் மூழ்குகின்ற தெளிந்த நீரையுடைய தடாகத்தின் கரைமேல் மழுவை அகங்கையிற் கொண்ட மாண்ட கன்னீசப் பெருமான் இனிதெழுந் தருளியுள்ள தலத்திற்கு மேற்கில் குற்றம் நீக்கி அருள் புரியும் வன்னீசம் என்றோர் தலம் உளது. அப்பெருமான் வரலாற்றினையும் கேளுங்கள் மாதவத்தீர்!

வன்னீச வரலாறு

மூதழற் கடவுள் தன்னுடன் பிறந்த முன்னவர் மும்மையர் உள்ளார், பேதுறு மதுகை மூவரும் விண்ணோர் பெறும்அவி சுமக்கலாற் றாது, மேதகும் ஆவி இறந்தனர் அதனை விரிதழற் பண்ணவன் நோக்கி, யாதினிப் புரிவல் எனக்கும்இவ் விடும்பை எய்துமே என்றுள மழுங்கி. 5

பெரிய அக்கினி தேவனின் தமையன்மார் மூவர் மயங்காத வலிமையுடையர். தேவர் வேள்விவழிப்பெறும் அவியைச் சுமக்கும் வலியிலராய் மேன்மை பொருந்திய அம்மூவரும் உயிரை இழந்தனர். அதனை உணர்ந்த அக்கினி தேவன் 'இனி யாது செய்வேன்; எனக்கும் மரணத் துன்பம் நேருமே' என்றெழுச்சி குன்றி,

மகோததி யனைய ஐயரம் பையர்தம் வாவியி னுள்ளுறக் கரந்து, சகோதரர் தம்மை இழந்தஎன் றனக்குச் சகோதரம் நீதடம் புனலே, உகாதெனைப் புரத்தி என்றுரைத் தங்கண் உறைந்தனன் அன்றுதொட் டளிகள், முகேரெனப் பாயும் மலர்த்தடம் அதற்கு மொழிபெயர் சகோதர தீர்த்தம். 6

பெரிய கடலை ஒத்த ஐயரம்பையர்தம் தீர்த்தத்தினுள் புகுந்து மறைந்த 'உடன் பிறந்தோரை இழந்த எனக்குப் பெருந்தீர்த்தமே! உடன் பிறந்தோய் நீயே ஆகலின் புறத்தில் தள்ளாது தழீஇ என்னைக்காத்தி' என்றிரந்துகூறி அதனிடைக் காலங்கழித்தனன். அந்நாள் முதல் முகேரென்னும்வண்டுகள் ஒலியெழச் சுழலும் மலர்களையுடைய அத்தீர்த்தம் சகோதர தீர்த்தம் எனப் பெயர் வழங்கும்.

எரிதழற் புத்தேள் அன்னணம் உறைய இமையவர் எங்கணுந் துருவிப், பெரிதிளைப் பெய்தி ஆண்டுவந் துறலும் பெருந்தடத் துறையுமீன் அவர்க்குத், தெரிதர இயம்பிற் றுகவெங் கனலோன் செயிர்த்தடைக் கலம்புகுந் தேனைப், பரிவுறக் காட்டிக் கொடுத்தநீர் தூண்டிற் படுகொலை யுறுகெனச் சபித்து. 7

அக்கினிதேவன் அங்ஙனம் மறைந்து வாழத் தேவர் எவ்விடத்தும் தேடிப் பெறாது பெரிதும் இளைத்து அங்கு வந்து சேர்தலும் அத்தீர்த்தத்தில் உள்ள மீன்கள் அத்தேவர்கள் அறிந்துகொள்ளும் வகையில் உணர்த்த அக்கினி சினங்கொண்டு 'அடைக்கலம் புக்க என்னை வருந்துறக் காட்டிக் கொடுத்த நீவிர் தூண்டிலிற் பட்டுக் கொலையுறுக எனச் சாபம் தந்து,

மின்னென வெளிக்கொண் டிரந்துநின் றழைக்கும் விண்ணவர் தங்களை நோக்கி, முன்னுறப் போமின் வருவல்என் றியம்பி முளரிநீர்த் தடமதன் கரையின், மன்னுவன் னீச வள்ளலை இருத்தி மரபுளி அருச்சனை யாற்றி, அன்னவன் அருளாற் பெற்றனன் இமையோர் அவியெலாஞ் சுமந்திடும் ஆற்றல். 8

விரைய வெளிப்பட்டுக் குறையிரந்துவேண்டி நிற்கும் தேவர் தங்களைப் பார்த்து 'முன்னே செல்லுமின்! பின்னே வருவேன்' என்று கூறித் தாமரைப் பொய்கையின் கரையில் நிலைபெறும் வன்னீச வள்ளற் பிரானை நிறுவி விதி வழிப் பூசனை புரிந்து அப்பிரான் திருவருளைப் பெற்றுத் தேவர்க்கு வேள்வியில் தரப்படும் அவியை முற்றும் சுமக்கும் ஆற்றலைப் பெற்றனன்.

தமையன்மார் மூவர் சுமக்கலாற் றாது தளர்வுறும் அவியெ-
லாந் தானே, கமையுறப் பொறுக்கும் மதுகைபெற் றிமையோர்
குழாத்தினுட் கலந்தனன் கனலோன், இமையவில் வாங்கிப்
புரிசைமூன் றிறுத்த எந்தைவன் னீசனை அண்மி, அமைவரும்
அன்பால் வழிபடப் பெற்றோர் அருந்திறல் எய்திவீ டடைவார். 9

தமையன்மார் மூவர் சுமக்க இயலாது தளரும் அவியை முற்றும் தானொருவனே பொறுமையொடும் பொறுக்கும் வலிமையை எய்தித் தேவர் குழுவினுள் சென்று சேர்ந்தனன் அக்கினி தேவன். மேருவை வில்லாக வளைத்து மும்மதிலை அழித்த எமது தந்தையாகிய வன்னீசப் பெருமானைச் சார்ந்து பொருந்துதல் வரும் பேரன்பால் வழிபடும் வாய்ப்பினர் பேராற்றல் பெற்று வாழ்ந்து முத்தியையும் பெறுவர்.

சவுனகேச வரலாறு

விளம்புவன் னீசந் தனக்குமேல் பாங்கர் விழைதகுஞ் சவுன-
கேச் சரத்திற், களங்கனி விளர்ப்ப விடங்கிடந் திமைக்குங் கறை-
மிடற் றடிகளை இருத்தி, வளம்பயில் காதற் சவுனக முனிவன்
மரபுளி அருச்சனை யாற்றி, உளம்பயில் மலநோய் தவிர்ந்துபே
ரின்ப வீடுபே றுற்றதவ் வரைப்பு. 10

பேசப்பெறும் வன்னீசத் தலத்திற்கு மேற்கில் விரும்பத்தக்க சவுனகேசத் தலத்தில், களாம்பழமும் வெளிறுபட நீலம் காட்டும் விடங் கண்டத்தில் தங்கி ஒளிவிடும் திருநீலகண்டப் பெருமானை எழுந்தருளுவித்து நலமிகும் பேரன்புடைய சவுனக முனிவர் விதிப்படி அருச்சனை செய்து உயிரைப்பற்றியுள்ள ஆணவ மலத்தான் ஆகும் பிறவி நோய் நீங்கிப் பேரின்ப வீட்டினைத் தலைப்படுதற் கிடனாகியது அத்தலம்.

சகோதர தீர்த்தப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-911



# சுரகரேசப் படலம்

எண்சீரடி யாசிரிய விருத்தம்

தாண்டவம் ஆடுதல் வல்லபெம்மான் தங்குஞ் சகோதர தீர்த்-
தப் பாங்கர், மாண்டகன் னீசம்வன் னீசம் விண்ணும் மண்ணும்
புகழுஞ் சவுன கேசம், ஈண்டு விளங்க எடுத்து ரைத்தாம் எம்மை-
யும் நல்கிடுஞ் சவுன கேசத், தாண்டகை வைப்பின் வடக்கண்
மேவும் அண்ணற் சுரகரம் பன்னு கிறபாம். 1

சகோதர தீர்த்தக் கரையில், தாண்டவம் புரிய வல்ல தம்பிரான் எழுந்தருளியுள்ள மாட்சிமை பொருந்திய கன்னீசம், வன்னீசம், விண்ணவரும் மண்ணவரும் புகழ்ந்து போற்றும் சவுனகேசம் எனப்பெறும். தலங்களின் வரலாறுகளை இவ்விடத்து விளக்கினோம். இனி, இம்மை மறுமை, முத்தி ஆகிய நலங்களை அருள் செய்யும் சவுனகேசப்பெருமான் எழுந்தருளியுள்ள தலத்திற்கு வடக்கில் மேவும் பெருமையுடைய சுரகரேச வரலாற்றினைப் பாராட்டிக் கூறுவாம்.

'தாண்டவம் புரிய வல்ல தம்பிரா னார்' (திருத். அப்பூதி. 1.)

மந்தரமலைச் சிறப்பு

கலி விருத்தம்

சுந்த ரத்திரு மால்முதற் சூழ்சுடர்
அந்த ரத்தவர்க் காரமு தீந்தது
கந்த ரத்து முனிக்கணம் யோகுசெய்
மந்த ரப்பெயர் மால்வரை உண்டரோ. 2

அழகிய திருமகள் நாயகனாகிய மால் முதலான சுடர் சூழ்கின்ற விண்ணவர்களுக்கு அரிய அமுது பெற மத்தாக விளங்கியதும், குகைகளில் முனிவர் குழாங்கள் யோகம் செய்தற் கிடனாயதும் ஆகிய மந்தரம்' எனப் பெருமை பொருந்திய மலை உள்ளது.

சுற்றும் யாளி முழைதொறுந் துஞ்சுவ
வெற்றி மத்தென வேலை கடைந்தநாள்
அற்றம் நீக்கும் அமுதம் இடைஇடைப்
பற்றி நின்றிடும் பான்மை நிகர்க்குமால். 3

திரிதரும் யாளிகள் குகைகள் தோறும் உறைதல் வெற்றிக்கு ஏதுவாகிய மந்தரம் மத்தாகப் பாற்கடலைக் கடைந்த நாளில் குற்றத்தைப் போக்கும் அமுதம் இடை இடையே பற்றி நின்றிடும் பரிசினை ஒக்கும்.

மத்திற் படியும் வெண்ணெயை ஒக்கும் யாளிகள் என்க. அற்றம்; நரை, திரை, மூப்பு.

வஞ்சிக் கப்படு தானவர் வாரியின்
விஞ்சத் தீஞ்சுதை வேறு கடைந்தெய்தத்
தஞ்சத் தற்பெயர்ப் பான்அகழ் தன்மையி
னஞ்சப் புற்றங் ககழ்வ குடாவடி. 4

ஏமாற்றப்பட்ட அசுரர் திருப்பாற் கடலினின்றும் இனிய அமுதை வேருகக் கடைந்து மிகப் பெறற் பொருட்டுத் தன்னை (மந்தர மலை) எளி தாகப் பெயர்க்கும் இயல்பில் யாவரும் அஞ்சும்படி கரடிகள் புற்றினை அகழ்வன.

துன்னு தானவர் சூழுஞ் செயலறிந்
தன்ன குன்றம் பெயர்ப்பரி தாகமா
மன்னு மார்பினன் பள்ளிகொள் மாட்சியின்
மின்னு நீல்முகில் மீமிசைத் துஞ்சுமால். 5

தொகையாகச் செறிகின்ற அசுரர் ஆராய்ந்து சுற்றிப் பெயர்க்கும் செயலைத் திருமகளுறைகின்ற மார்பினனாகிய திருமால் அறிந்து அம்மலையைப் பெயர்க்க இயலாதபடி கண்வளர்கின்ற தோற்றம்போல மின்னுமிழும் கரியமேகம் அதன் மேற்றவழும்.

திரிபு

செல்வி யங்குழல் வண்டிமிர் தேக்கடி
வல்லி யங்குழ வாட்கண் படுப்புவ
அல்லி யங்குழ லார்வெறி யாடிய
பல்லி யங்குழ லாற்பனித் தஞ்சுமால். 6

மேகங்கள் தவழாநின்ற (உன்னதத்தையும்) சுழன்று திரியாநின்ற வண்டுகள் (தேனுண்டு) இசைபாடும் (பூங்கொத்தையு முடைய) தேக்க மரத்தின்கீழ் புலி தனது குட்டியை ஒள்ளிய கண் துயிலச் செய்யும். அகவிதழால் (ஆகிய மாலையை அணிந்த) அழகிய கூந்தலையுடைய குறமகளிர் வெறியாட டயரு மிடத்தில் நிகழும் பலவாச்சியங்களி னொலியாலும் வேய்ங்குழ லொலியாலும் நடுக்குற்று அஞ்சும்.

குழ—இளமை; ஆகு பெயராய்க் குட்டிமேல் நின்றது. ஆல்-அசை.

இரண்டடிப் பாடக மடக்கு

காம ரம்பு கனற்றம ரம்பரர்
காம ரம்பு கனற்றம ரம்பரர்
ஏம மல்கி யிருந்துணர் கான்றரு
ஏம் மல்கி யிருந்துணர் கான்றரும். 7

காமர் அம்பு கனற்று அமர் அம்பரர்-மன்மத பாணம் உடற்று நின்ற போரினுக்கு (உடைந்த) தேவர்கள், புகல் காமரம் நல்தமரம்—பாடும் காமரமென்னும் ஓரிசையாகிய நல்ல ஒலியை, பார் ஏமம் அல்கி இருந்து உணர் கான் தரு—அந்நியரான குறவர் மறைவிடத்திற் றங்கியிருந்து கேட்டு இசை விகற்பங்களை ஆராயும காட்டின் கண்ணுள்ள

மரங்களினது, ஏமம் மல்கி இருமை துணர்கான தரும்—பொன்னொளி நிறைந்து விளங்காநின்ற பெரிய பூங்கொத்துக்கள் வாசனையை வீசும்.

மன்மத பாணம் உடற்றுநின்ற போரினுக்கு (உடைந்த) கின்னரர்கள் பாடுங் காமரமென்னும் (ஓரிசையாகிய) நல்ல ஒலியை அந்நியரான மலைவாழ்நர் மறைவிடத்திற் றங்கியிருந்து (கேட்டு இசைவிகற்பங்களை) ஆராயும் நாட்டின் கண்ணுள்ள மரங்களினது பொன்னொளி போல நிறைந்து விளங்காநின்ற பெரிய பூங்கொத்துக்கள் வாசனையை வீசும்.

அம்மலையிலுள்ள குறவரும் பண்விகற்பங்களுணர்ந்தோர் என்பார், உணரென்றார். காமர், உயர்வின்கண் வந்த பால்வழுவமைதி.

வண்ட லம்படர் மாவரை யாரமை
வண்ட லம்படர் மாவரை யாரமை
பிண்டி யைவன நாறிய வில்லமுன்
பிண்டி யைவன நாறிய வில்லமும் 8

வண்மை தலம் படர் மா வரையார்—வளவிய இடங்களிற் செல்லும் கரிய மலையின் கண்ணுள்ள குறவர், அமை பிண்டி ஐவனம் நாறிய இல்லம் முன்—செய்தமைத்த தினை மாவும் மலை நெல்லும் பொருந்திய குடிசைகளின் முன்னர், பிண்டி ஐ வனம நாறிய வில்லம் உம்—அசோகும் அழகிய சுனைநீரும் மணம் வீசாநின்ற வில்வ மரமும், வண்டு அலம்பு அடர் மா அரை ஆர் அமை—வண்டுகள் இசை பாடாநின்ற நெருங்கிய மாமரமும் தூரையுடைய ஆத்தியும் மூங்கிலும் உள்ளன.

நான்காமடியில் உடம்படு மெய்யாகக் கொண்டு இல்லம் தேற்றாமரமெனினும் அமையும். விரிந்தும் தொக்கும் நின்ற உம்மைகள் எண்ணுப் பொருளில் வந்தன.

வான ரம்பைய ராவிற் பயந்துதாய்
வான ரம்பைய ராவிற் பயந்தரத்
தானி ரப்பவி யக்கணத் துண்டிசை
தானி ரப்பவி யக்கணந் துஞ்சுமே. 9

வானரம் பை அராவின் பயந்து வான் தாய்—குரங்கானது படத்தையுடைய பாம்பிற்குப் பயந்து ஆகாயத்தில் தாவி, அரமபையர் ஆவில் பயம் தர—அங்ஙனம் வசிக்கும் தெய்வமகளிர் காமதேனுவின் ஒளி பொருந்திய பாலைக் கறந்தூட்ட, தான் நிரப்பு அவிய கணத்து உண்டு—அக்குரங்கு தான் (பசி என்னும்) வறுமை கெடக் கணப்போதினுண்டு, தால் இசை நிரப்ப வியம் அம் கண் துஞ்சும்—அம்மகளிர் நாவாலிசையைப் பாட (தாலாட்டுப் பாடல் செய்ய என்றபடி) பெருமையாகிய அழகிய கண் துயிலும்.

ஏ-ஈற்றசை. அராவின்—உருபு மயக்கம்.

## சித்திர கவி

முரச பந்தம்

வஞ்சி விருத்தம்

தான மாந்தரு மஞ்சரி
வான மாந்தரு மஞ்சரி
தான மாந்தரு மஞ்சரி
வான மாந்தரு மஞ்சரி. 10

ஒவ்வோரடி ஒவ்வொரு வரியாக நான்கடியும் எழுதி, மேலிரண்டு வரியும் தம்முட் கோமூத்திரியாகவும் கீழிரண்டு வரியும் தம்முட் கோமூத்திரியாகவும் சிறுவார் போக்கப்பட்டும, மேல்வரி இரண்டாம் வரியினும் மூன்றும் வரியினும் நான்காம் வரியினும் கீழுற்று மீண்டு மேல் நோக்கவும், கீழ் வரியினும் அவ்வாறே மேலுற்று மீண்டு கீழ் நோக்கவும் பெருவார் போக்கப்பட்டும் இந்த வார் நான்கும் நான்கு வரியாக வருவது.

தானம் ஆம் தருமம் சரி–சோடச தானமும் உண்டாகிய முப்பத்திரண்டறங்களும் (உலகத்தில்) சஞ்சரிக்க, வானம் ஆம் தரும் அம் சரி–மேகங்கள் நீரைப் பொழியா நின்ற அழகிய அம்மலையின் பக்கத்தில், தானம் மாந்தரு மஞ்சரி–யானையின் மத சலங்களும் மாமரங்களின் பூங்கொத்துக்களும், வானம் மாந்தர் உம் அஞ்சு அரி–விண்ணுலகத்திலுள்ளோரும் மண்ணுலகத்திலுள்ளோரும் அஞ்சாநின்றசிங்கங்களுமுள்ளன.

சரி என்னும் முதனிலைத் தனி வினை வினை எச்சப் பொருளில் வந்தது. தானம், மாந்தரு, மஞ்சரி, அரி இவை விகுதி பெறாது வந்த சாதி யொருமை. வானம் இடவாகு பெயர். தொக்கும், விரிந்தும் வந்த உம்மைகள் எண்ணுப் பொருளில் வந்தன.

தகர விகற்பத்தான் வந்த மடக்கு

கலி விருத்தம்

தத்தை தித்தித்த தோதிதை தாதுதேத்
தொத்து தித்துத் திதித்ததத் தித்துதாத்
துத்தித் தேதத்த தீதுதை தீத்தத்தத்
தொத்த் தாது ததைத்துத் துதித்ததே. 11

தத்தை தித்தித்தது ஓது இதை–கிளிகள் தித்தித்த வசனங்களைப் புகலா நின்ற புதிய தினைப்புனம், தாது தேம் தொத்து உதித்து திதித்தது–(வேங்கை மரங்களில்) மகரந்தத்தையுந் தேனையுமுடைய பூங்கொத்துக்கள் அரும்பக் குறமகளிர் காவலுடையதாய், அத்தித்து–யானையின் கொம்புகளும், தூ துத்தித்து- பாம்பினது புனிதமான தலையின் கண்ணுள்ள ரத்னங்களும், ஏதத்த தீது உதை தீதத்து அத்து ஒத்த தாது- துன்பப் பகுதியவான தீங்குகளை ஓட்டா நின்ற நெருப்பிற் சுடப் படுதலால் (மாற்றுயர்ந்து) சிவந்த நிறம் பொருந்திய பொற்கட்டிகளும், ததைத்து துதித்தது–நெருங்கப் பெறுதலால் (யாவரும்) புகழுந் தன்மையை யுடையது.

தித்தித்தது, வினைமுற்றுப் பெயர். திதித்த தென்னும் வினை முற்று வினை எச்சமாய்த் துதித்த தென்னும் முற்று வினையைக்கொண்டு முடிந்தது. யானைக்கொம்பு முதலியவை குறிஞ்சிக் கருப் பொருளாத லானும், அந்நிலத்துள்ள புனத்தின் சிறப்புக் கூறுதலானும் அத்தித்து துத்தித்து என்னும் குறிப்பு வினைமுற்றுப் பெயர்கள் கொம்பையும் மணியையும் உணர்த்தின. துத்தி, இருமடியாகு பெயர். துத்தி-படப் பொறி. அது படத்தையுணர்த்தித் தானி யாகு பெயராய்த் தலையை யுணர்த்திற்று. உதித்து, செயவெ னெச்சத்திரிபு. தத்து, படு விகுதி குன்றி வந்த செயப்பாட்டு வினையெச்சம். ததைத்து, மெல்லொற்று வல்லொற்றாய் வந்த பிறவினை எச்சம்.

கோமூத்திரி

வான ளாவின வார்கனி யாவிரை
கான ரூவிள வார்கடி யாவரை.
தேன லம்பின தீங்கட மாருமான்
தான வம்பன ரூங்கெட வூருமால். 12

இரண்டிரண்டு வரியாக ஒரு செய்யுள் எழுதப்பட்டு மேலும் கீழும் ஒன்று இடையிட்டு வாசித்தாலும் அச்செய்யுளே வருவது.

வான் அளாவின வார் கனி ஆவிரை—ஆகாயத்தை யளாவிய நீண்ட கனிகளையுடைய ஆவிரையும், கான் அரு விள ஆர் கடியா வரை—வாசனை நீங்காத விளா மரமும் ஆத்தி மரமும் நீங்காத அம்மலையின் கண்ணுள்ள, தேன் அலம்பின தீம் கடம் ஆரும் மான் தானம் அம்பு—வண்டுக ளாரவாரிக்க இனிய மதம் நிறைந்த யானைகளின் மத நீரானது, அனல் தாம்கெட ஊரும்—(புனங்களிற் பற்றிய) நெருப்பு அவியச்செல்லும்.

ஆல், அசை. தாம் சாரியை.

கூட சதுக்கம்

கந்த மல்கிய காவிற் குலாய்க்கமழ்ந்
தந்தி மானு மவிர்தளிர்க் கொக்குதிர்
செந்து வர்க்கனி தித்திக்கு மாசினி
மந்தி மாந்தி மகிழ்ந்து குதிக்குமால். 13

ஈற்றடி எழுத்துக்கள் ஏனை மூன்றடியுள்ளும் கரந்துநிற்க வருவது கூட சதுக்கம். கூடம்-மறைவு. சதுக்கம்-நான்காவது.

கந்தம் மல்கிய காவில் குலாய்—வாசனை நிறைந்த சோலையின் கண் குலவி, கமழ்ந்து அந்தி மானும் அவிர் தளிர் கொக்கு உதிர் செம்மை துவர் கனி—வாசனை வீசி வண்ணத்தாற் செவ்வானத்தை நிகர்க்கும் விளங்குந் தளிரையுடைய மாமரத்தினின்றும் உதிர்ந்த சிவந்த பவளம் போன்ற கனியையும், தித்திக்கும் ஆசினி-தித்தியா நின்ற ஈரப்பலாவின் கனியையும், மந்தி மாந்தி மகிழ்ந்து குதிக்கும்—பெண் குரங்குகள் புசித் துக் களிகூர்ந்து குதித்து விளையாடும்.

அந்தி மானுந்தளிர், பண்பு பற்றி ஒரு பொருளோடு பல பொருள் வந்த உவமை அணி.

மாத்திரைச் சுருக்கம்

விடியற் காலத்தோர் மாத்திரை வீந்ததும்
மடியும் நஞ்சொன் றுமாய்ந்ததும் ஒன் றுமாய்
கடிகொள் அந்தியிற் கானவர் தங்களொன்
றோடியு நீளறை யார்ப்பொ டுலம்புமால். 14

ஒரு பொருள் பயக்கும் ஒரு சொல் ஒரு மாத்திரையைக் குறைப்ப வேறு பொருள் பயக்கும் சொல்லாய் வருவது மாத்திரைச் சுருக்கம்.

விடியற்காலத்து—விடியலாகிய காலத்தில் (விடியல்–காலை) ஓர் மாத்திரை வீந்தது உம்–ஒரு மாத்திரையைச் சுருக்கக் கலையென்றுயிற்று, கலை–கலைமான் ஒலியும், மடியும் நஞ்சு–மடியச் செய்யும் தன்மையையுடைய நஞ்சு, (நஞ்சு–காரி,) ஒன்று மாய்ந்தது உம்–ஒரு மாத்திரையைச் சுருக்கக் கரி என்றுயிற்று, கரி—யானை யொலியும், ஒன்று மாய் கடிகொள் அந்தியில்–ஒரு மாத்திரை குறைந்த அச்சத்தைத் தராநின்ற மாலையில் (அந்தி-மாலை.) (ஒரு மாத்திரை குறைந்த மாலை என்றமையால் மலை யென்றுயிற்று.) அம்மலையில் வசிக்கும், கானவர் தங்கள் ஒன்று ஓடியும் நீள் அறை–குறவர்களது ஒரு மாத்திரை குறைந்த நீண்ட பாறையினது (அறை—பாறை) (ஒருமாத்திரை குறைந்தபாறை யென்றமையால் பறை யென்றுயிற்று) பறை–பறையினது, ஆர்ப்பொடு உலம்பும்–சத்தத்தோடு கூடி ஒலிக்கும்.

கலைமான், யானை இவற்றின் ஒலியுடன் குறிஞ்சி நிலப் பறையும் ஒலிக்கும். விடியல் காலம் இனஞ் சுட்டிய இருபெயரொட்டுப் பண்புத்தொகை. விடியல் சூரியோதயத்தின் முன்னர்த்தாகிய சிறு பொழுது, ஈண்டு விடியலைக் காலை என்றது பொதுப்பட வழக்குப் பற்றி யென்க. மடியும், பிறவினை விகுதி தொக்கு நின்ற பெயரெச்சம்.

மாத்திரை வருத்தனை

அளபொன் றேறிய வண்டதி ரார்ப்பினல்
அளபொன் றேறிய மண்ணதிர்ந் துக்கன
அளபொன் றேறிய பாட்டல ரீர்ஞ்சுனை
அளபொன் றேறழ கூடலைந் தாடுமால். 15

ஒரு பொருள் பயக்கும் ஒரு சொல் ஒரு மாத்திரை பெற்று வேறு சொல்லாய்ப் பொருள் பயந்து நிற்பது மாத்திரை வருத்தனை.

அளபு ஒன்று ஏறிய வண்டு–ஒரு மாத்திரை கூடிய வண்டு, (வண்டு—அளி) (அள பொன்றேறிய அளியென்றமையால்) (ஆளி–யாளி என்னும் ஓர் மிருகம், அதிர் ஆர்ப்பினல்–ஒலிக்கும் முழக்கத்தால், (அளபு ஒன்றேறிய மண்–ஒரு மாத்திரை கூடிய மண் (மண்–தரை.) (அளபொன்றேறிய தரை யென்றமையால்) தாரை–நட்சத்திரங்கள், அதிர்ந்து உக்கன–கம்பித் துதிர்ந்தன, அளபு ஒன்று ஏறிய பாட்டு–ஒரு மாத்திரை கூடிய பாட்டு, (பாட்டு–கவி.) (அளபொன்றேறிய கவியென்றமையால்)

காவி—நீலோற்பலங்கள், அலர் ஈரம் சுனை—அலரா நின்ற குளிர்ந்த சுனையி லுள்ள நீரானது, அளபு ஒன்று ஏறு அழகு ஊடு—ஒரு மாத்திரை கூடிய அழகு ஊடு (அழகு—வனப்பு) (அளபொன்றேறிய வனப்பு என்றமையால்) வானப்பு, வான் அப்பு ஊடு-ஆகாச கங்கையினிடத்தில், அலைந்து ஆடும்-கலந்தசையும்

ஆளி முழக்கத்தில் நட்சத்திரங்கள் விண்ணினின்று உதிரும் என்பதும், சுனைநீர் ஆகாச கங்கையோடு கலக்கும் என்பதும் கருத்து. ஈரம் ஈரென நின்றது செய்யுள் மரூஉ. சுனை, இட ஆகுபெயர்.

எழுத்து வருத்தனை

காந்தள் போல்வன காமுகர் வீழ்வன
போந்து சேர்ப்பர்கள் பூக்குறி வைப்பன
சாந்தம் நாறிய சாரலின் நாரிமார்
ஏந்து சீர்எழிற் கைதகை கேதகை. 16

ஒரு பொருள் பயப்பதோர் சொல் கூறி, அதனில் ஒவ்வோர் எழுத்துச் சேர்க்க வெவ்வேறு பொருள் பயப்பது எழுத்து வருத்தனை.

சாந்தம் நாறிய சாரலின் நாரிமார் ஏந்து சீர் எழில் கை—சந்தன மரம் வாசனை வீசாநின்ற அம்மலைப் பக்கங்களில் வசிக்கும் குறமகளிரது சிறப்பு வாய்ந்த அழகிய கைகள், காந்தள் போல்வன—காந்தள் மலரை யொப்பனவாம், நாரிமார் தகை—அம்மடவார் வனப்பு, காமுகர் வீழ்வன—காமிகளால் மயங்கி வீழப்படுவனவாம், போந்து சேர்ப்பர்கள் பூ குறி வைப்பன கேதகை—(இரவுக் குறிக்கண்) வந்து (தலைவி வரப் பெருமை யால் தாம் வந்தமையறிதற்கு) தலைவர்களால் அழகிய அறிகுறியாக வைக்கப்படுவன தாழை மலர்கள்.

கை தகை கேதகை என்பன வற்றைக் கை தகை கேதகை எனப் பிரித்துக் காந்தள் போல்வன காமுகர் வீழ்வன போந்து சேர்ப்பர்கள் பூக்குறிவைப்பன என்பவற்றோடு முறை நிரனிறையாகக் கொள்க. கேதகை, பொருளாகு பெயர். இரவுக் குறிக்கட் போந்த தலைவர் தலைவி வரப்பெருமையின் குறிவைத்துச் சென்றமை தலைவிக்கு இரங்கலைத்தரும் ஆதலின் இரங்கலுரிப் பொருட்குரிய நெய்தற் றலைவராகச் சேர்ப்ப ரென்றார்.

உபய நாக பந்தம்

ஆம்ப னீண்மருப் பாரமு மாசறு
காம்பு மாண வுகுங்கதிர் முத்தமும்
பூம்ப சும்பொழி னீடும் புரையிரு
ளோம்பிப் பப்பொளி மேவுமுட் டாதரோ. 17

இரண்டு பாம்பு தம்முள் இணைவனவாக உபதேச முறையான் வரையப்பட்டு, அவற்றுள் இரண்டு கவி எழுதப்பட்டுச் சந்திகளினின்ற எழுத்தே மற்றை யிடங்களினும் உறுப்பாய் நிற்க வருவது உபய நாக பந்தம்.

ஆம்பல் நீள் மருப்பு ஆரம் உம்-யானையினது நீண்ட கொம்பிற் பிறந்த முத்தமும், மாசு அறு காம்பு மாண உகும் கதிர் முத்தம் உம்-குற்றமற்ற மூங்கில்கள் மாட்சிமைப் படச் சிந்திய கிரணங்களையுடைய முத்தமும், பூ பசுமை பொழில் நீடும் புரை இருள் ஓப்பி—பூக்களையுடைய பசிய சோலையின் கண் நீடிய பெரிய இருளை யோட்டி, முட்டாது பப்பு ஒளி மேவும்-குறைபாடில்லாமல் பரவிய ஒளியை வீசும்.

முத்தங்களினொளி சந்திர கிரணம் போலக் குறைபாடின்றி இருளை யோட்டு மென்பது கருத்து.

செம்பொ னன்சுனை சேர்முகை நீலமா
வம்பு நீடு மருங்களி யாரவிள்
கொம்புப் பூமலி பொன்னவிர் குன்றத்தூர்
பம்பு சேணதி பாமருட் டாருமே. 18

செம்பொன் நன்மை சுனை சேர் முகை நீலம் மா வம்பு நீடு மருங்கு அளி—சிவந்த பொன்னாலாகிய நல்ல சுனையிற் பொருந்திய முகைத்த நீலோற்பலங்களின் பெருமை பொருந்திய வாசனை நீடிய பக்கங்களில் (சஞ்சரிக்கும்) வண்டுகள், ஆர விள் கொம்புப் பூ மலி பொன் அவிர் குன்றத்து ஊர் பம்புசேண் நதி-மிகவும் மலர்ந்த கோட்டுப் பூக்கள் நிறைந்த பொற் கட்டிகள் விளங்கா நின்ற அம்மலையின்கண் தவழாநின்ற நெருங்கிய ஆகாய கங்கையில், பா மருட்டு ஆரும்—பாய்ந்து ஆகாய கங்கையைச் சுனைநீரென்றே மயங்குதலைப் பொருந்தும்.

பா என்னும் முதனிலைத் தனி வினை வினையெச்சப் பொருளில் வந்தது. மருட்டு, தொழிற்பெயர்.

சுழி குளம்

வஞ்சித் துறை

மதிபகவே யான்ற
தினைமணிமா வாவன்
பமர்துறுசே வாயா
கனிதுவன்று மாவே. 19

ஒரு செய்யுள் எவ்வெட்டெழுத்தாக நான்கு வரி எழுதப்பட்டு, மேனின்று கீழிழிந்தும் கீழ் நின்று மேலேறியும் புறநின்று வந்து உள் முடிய அவ்வரி நான்குமேயாகி அச்செய்யுளே வருவது.

மதி பகவேய் ஆன்ற தினை மணி—சந்திரனுடல் பிளவு பட (உயர்ந்த) மூங்கில்க ளமைந்த தினைப்புனத்திற் சென்று, மா ஆ அன்பு அமர் துறுசே ஆயா-பெரிய பசுக்களுடன் அன்பு பொருந்திய நெருங்கிய இடபங்கள் (அப்புனத்திலுள்ள தினைக் கதிர்களை மேய்ந்து) (உடல்) வாடா,மா கனி துவன்றும்—(அம்மலையிலுள்ள) மாமரங்கள் (எப்போதும்) கனிகளால் நெருங்கி நிற்கும்.

மணி, ணகரம் தொகுத்தல் விகாரம்.

சருப்பதோபத்திரம்

கலி விருத்தம்

வீயா வாமா மாவா யாவீ
யாவா யாரா ராயா வாயா
வாயா டேமா மாடே யாவா
மாரா மாதோ தோமா ராமா. 20

நிரையாக அறுபத்து நான்கறை கீறி, எவ்வெட்டெழுத்தால் ஒவ்வோரடியாகத் தொடுத்த நான்கடியும் மேனின்று கீழிழியவும் கீழ் நின்று மேலேறவும் எழுதப்பட்டு, மேனின்று கீழிழியவும் கீழ் நின்று மேலேறவும், முதல் தொடங்கி யிறுதியாகவும் இறுதி தொடங்கி முதலாகவும், மாலை மாற்றாக நான்கு முகத்திலும் வாசித்தாலும் அச்செய்யுளே வருவது சருப்பதோபத்திரம்.

ஆமா வீயாவாம்—(அம்மலையிலிருக்கும்) காட்டுப் பசுக்கள் (எந்நாளும்) இறவாவாம், வாயா வீ ஆ ஆராயா வாயார் ஆயா—கிடைத்தற்கரிய பூக்களைப் பசுக்களாராய்ந்து வாய் நிரம்பக் குதட்டிப் புசித்து (உடல்) வாடாவாம், வாய் ஆடு மா மாடு ஏயா—பொருந்திய வரையாடுகள் (தமக்குக் குறைவின்மையின்) பெரிய (அம்மலைப்) பக்கங்களிலுள்ள வேறிடத்திற் செல்லாவாம், ஆம் ஆர் ஆம்—அருவி நீரும் ஆத்தி மரமும் எங்குமுளவாம், மாது மா தோம் ஆரா—அழகிய மாமரங்கள் (குறைவின்றி நிற்றலின்) குற்றத்தைப் பொருந்தா.

ஏகாரம் தேற்றப் பொருளிலும் ஓகாரம் அசை நிலைப் பொருளிலும் வந்தன. அம்மலை தெய்வத் தன்மையுளதாதலின், அங்கிருக்குங் காட்டுப் பசுக்கள் வீயா என்றார். தெய்வ மணமும் வாடாமையுமுளதாதலின், கிடைத்தற் கரிய மலர் பருவ காலமன்றி எந்நாளும் பூத்துக் காய்த்துப் பழுத்து நிற்றலின், அவை இன்மை யென்னுங் குற்றங்கள் கண்டோர் சொல்லப் பொருந்தா என்பார் மா தோம் ஆரா என்றார். வாயார் என்பது வினையெச்சப் பொருள் தந்தது.

மாலை மாற்று

தேடா வாழை மாவீ டாதே
தேனா ராமா வாழா யாதே
தேயா ழாவா மாரா னாதே
தேடா வீமா ழைவா டாதே. 21

ஒரு செய்யுளை ஈறு முதலாகக் கொண்டு வாசிப்பினும் அச் செய்யுளே வருவது மாலை மாற்று.

தேன் தா வாழை மா விடாது—வானத்திலுள்ள விருச்சிக ராசியைத் தோயாநின்ற (உன்னதத்தையுடைய) வாழை மரங்களும் மாமரங்களும் (எந்நாளும்) கெடாமல் நிற்கும், தேன் ஆர் ஆமா வாழ் ஆயாது—(சோலையிலுள்ள மலர்கள் ஒழுக்கும்) தேனைப் புசித்துச் (சஞ்சரிக்கும்)

காட்டுப் பசுக்கள் தம் வாழ்விற் கெடாது நிலைபெறும், தேயாழ் ஆ ஆம்-தெய்வத் தன்மையுடைய மிதுன ராசியைத் (தீண்டா நின்ற உயர்ச்சியையுடைய) ஆச்சா மரங்கள் பல்கி நிற்கும், ஆர் ஆறாது—ஆத்தி மரங்கள் நீங்காது நிலைபெறும், தேடா வீ மாழை வாடாது—எளிதிற் கிடைக்கும் மலர்களையுடைய புளிமா மரங்களும் உலராது நிற்கும்.

ஏகாரம் நான்கும் ஈற்றசை. அம்மலை தெய்வத்தன்மையும், கயிலை முதலியவற்றோ டொன்றாகச் சேர்த்தெண்ணப்படு மான்மியமு முளதாதலின், அங்கிருக்கும் மரங்களும் மிருகங்களும் கெடா என்பார், 'வாழை மாமாழை வீடா' தென்றும், 'ஆமா வாழாயா' என்றும் கூறினார்.

காதை கரப்பு
கலி விருத்தம்

இனநீடிய யானைவி லாரு லாவ
வனமோடிட மாதவி யாரு நாவி
புனமோடினை யாதவி லாருண் மன்னி
யனல்வாயவி யாருவ கன்றி மாதோ. 22

ஒரு செய்யுள் முடிய எழுதப்பட்டு, அதன் ஈற்று மொழியின் முதலெழுத்துத் தொடங்கி ஒவ்வோரெழுத்து இடையிட்டு வாசிக்கப் பிறிதொரு செய்யுள் போதுவது காதை கரப்பு.

வில்லார் உலாவ நீடிய யானை இனம் வனம் ஓடிட—வில்லையுடைய குறவர்கள் உலாவுதலைக் கண்டு அச்சமுற்ற யானையின் கூட்டங்கள் காட்டில் விரைந்தோடும் அரவத்தைக் கேட்ட, மாதவி ஆரும் நாவி—குருக்கத்தி மரங்களின் (மறைந்து) தங்கிய கத்தூரி மிருகம், புனம் ஓடினையாத வில்லார் உள் மன்னி—தினைப்புனத்தின்கட் பயந்தோடிக் (குறை வின்மையின்) வருந்துதலில்லாத குறவர் குடிசையுட் சேர்ந்து, அனல்வாய் கன்றி அவி ஆருவ-(அக்குடிசையிலுள்ள) நெருப்பிற் பட்டு வாடி (அக்குறவர்கட்கு) உணவாகப் பொருந்தும்.

வாய் என்னும் முதனிலை, வினையெச்சப் பொருளில் வந்தது.

காதைகரப்பிற் கரந்தது
வஞ்சித் துறை

கருவி வானனி
மருவி யாடின
விருவி மாடின
வருவி யாடின. 23

கருவி வான் நனி ஆடின அருவி—உலகத்திற்குத் துணைக்காரணமாகிய மேகங்கள் மிகவும் பொழியாநின்ற நீராலாய (அம்மலையினின்று விழும்) அருவியின் நீர்ப்பெருக்கில், மாடு இருவி இனம் மருவி ஆடின—பச்கத்திலுள்ள தினைத்தாட் கூட்டங்கள் பொருந்தி மூழ்கா நிற்கும்.

திரிபங்கி

காப்பியக் கலித்துறை

சந்தன மார்-தடஞ் சாரலெ லாம்-தனி வானளவுங்
கொந்தலர் வீ-நெடுங் காவினெ லாம்-குனி மாந்தருவின்
நந்திய தேன்-படுஞ் சூழலெ லாம்-நனி மாந்தர்விழை
கந்தநி லாம்-கடந் தாழ்கரி போம்-கனி வீழ்ந்தழியும். 24

ஒரு செய்யுளாய் உறுப்பமைந்து ஒரு பொருள் பயப்பதனை, மூன்ருகப் பிரித்து எழுத, வெவ்வேறு செய்யுளாய்த் தனித்தனியே பொருள் பயந்து, தொடையுங் கிரியையும் தனித்தனியே பொருள் பயந்து, தொடையுங் கிரியையும் தனித்தனியே காண வருவது திரிபங்கி.

சந்தனம் ஆர் தடம் சாரல் எலாம் நனி மாந்தர் விழை கந்தம் நிலாம்—சந்தன மரங்கள் நிறைந்த விசாலித்த மலைப் பக்கங்களெல்லாம் மிகவும் மனிதர் விரும்பும் மலர் வாசனை விளங்கும், தனி வான் அளவும் கொந்து அலர் வீ நெடுமை காவின் எலாம் கடம் தாழ் கரிபோம்—ஒப்பற்ற ஆகாயத்தை யளாவிய பூங்கொத்தின்கண் அலர்ந்த பூக்களை யுடைய நெடிய சோலைகளி லெல்லாம் மதமொழுகா நின்ற யானைகள் சஞ்சரிக்கும், சூழல் எலாம் குனி மாந்தரு இன் நந்திய தேன் படும் கனி வீழ்ந்து அழியும்—அம்மலையினிட மெல்லாம் (கனிப் பொறையால்) தலை வளைந்த மாமரங்களினது மிகுந்த தேனபொருந்தியகனிகள்சிந்திஅழியும்.

சாரலெலாம், காவினெலாம், சூழலெலாம் என நிறுத்தி, கந்தம் நிலாம், கரிபோம், கனி வீழ்ந்தழியும் என்பவற்றை முறை நிரனிறையாகக் கொள்ளப்பட்டது.

மேலைச்செய்யுளிற் பிரித்த செய்யுட்கள்

வஞ்சித் துறை

சந்தன மார்
கொந்தலர் வீ
நந்திய தேன்
கந்தநி லாம். 1

சந்தன மரங்களில் நிறைந்த கொத்தாக மலர்ந்த பூக்களில், நிரம்பிய தேனும் நிரம்பிய வாசனையும் நிலைபெறும்.

தடஞ்சா ரலெலாம்
நெடுங்கா வினெலாம்
படுஞ்சூ ழலெலாம்
கடந்தாழ் கரிபோம். 2

அகன்ற மலைச் சாரல்கள் தொறும், நீண்ட சோலைகள் தொறும் மிகும் முனிவரர் இருக்கைகள் தொறும், மத மொழுகும் யானைகள் உலவும்.

தனிவா னளவுங்
குனிமாந் தருவின்
நனிமாந் தர்விழை
கனிவீழ்ந் தழியும். 3

ஒப்பற்ற வானத்தை அளாவிய, கனிகளால் வளைந்த மாமரங்களினது மனிதர்கள் மிக விரும்புங் கனிகள் வீழ்ந்து அழியும்.

பிறிது படுபாட்டு

கலி விருத்தம்

ஆன்றூர்ந்த காவி னளியாடு பூந்தேன்
மான்றின்ற வேரன் மணியீர்ங்க வுண்மாச்
சான்றோங்கு காட்டிற் றயங்குமணி முத்தோ
டேன்றூர்ந்து நாட்டி னடக்கவெழு மார்த்து. 25

ஆன்றூர்ந்த காவி னளியாடு பூந்தேன்மான்
றின்றவே ரன்மணி யீர்ங்கவுண்மாச் - சான்றோங்கு
காட்டிற் றயங்கு மணிமுத்தோ டேன்றூர்ந்து
நாட்டி னடக்கவெழு மார்த்து.

ஒரு செய்யுள் அடியையுந் தொடையையும் வேறு படுப்பச் சொல்லும் பொருளும் வேறு படாது வேறொரு செய்யுளாய் வருவது பிறிது படு பாட்டு.

ஆன்று ஆர்ந்த காவின் அளி ஆடு பூ தேன்—பெருமை அமைந்து நிறைந்த சோலையிலுள்ள வண்டுகள் குடைந்தாடா நின்ற பூவினின்றொழுகும் தேன் பெருக்கானது, மான்று வேரல் ஈன்ற மணி-ஒன்றோடொன்று பின்னிக்கொண்டிரா நின்ற மூங்கிற்கணுக்கள் பெற்ற முத்துக்களை, சான்று ஓங்கு காட்டில் ஈரம் கவுள் மா தயங்கு மணி முத்தோடு ஏன்று ஊர்ந்து-(மரங்களால்) நிறைந்துயர்ந்த காட்டிற் சஞ்சரியாநின்ற குளிர்ச்சி பொருந்திய கபோலத்தையுடைய யானையினது (தந்தங்களினின்றும் உதிர்ந்த) விளங்கா நின்ற அழகிய முத்துக்களோடு வாரிக்கொண்டு (அந்நில முதலியவற்றில்) பரந்து, நாட்டின் நடக்க ஆர்த்து எழும் — மருத நிலத்திற் செல்லச் சத்தித்து எழா நிற்கும்.

எண்சீரடி யாசிரிய விருத்தம்

இனைய வளம்பல பெற்று நீடி இம்பரும் உம்பரும் ஏத்த வாய்ந்து, நனைமலர்க் காவு மருங்கு டுத்து நளிர்மழைப் போர்வை-தன் மெய்யிற் போர்த்துக், கனைகதிர்ப் பன்மணிச் சென்னி மேல்வான் கங்கை தலைச்சுற்று மான ஓங்கிப், புனைபுகழ் மல்க அரசு வைகும் பொற்பமர் மந்தர வெற்பின் மாதோ. 26

இத்தகைய் வளங்கள் பலவும் உடைத்தாய் நிலை பெற்று மண்ணவரும் விண்ணவரும் துதிக்க வாய்ப்புடைத்தாய்த் தேன் பொருந்திய மலர்களைக் கொண்ட சோலைகள் சுற்றிச் சூழ்ந்து குளிர்ச்சி பொருந்திய மேகமாகிய போர்வையைத் தன் வடிவிற் போர்த்துக் கொண்டு நெருங்கிய கிரணங்களையுடைய பல்வகை மணிகளையுடைய முடிமிசை ஆகாய கங்கை தலைப்பாகையை ஒப்ப உயர்ந்து அழகிய புகழ் மிக்கு நிற்ப அரசு வீற்றிருக்கும் பொலிவமைந்த மந்தர மலையில்,

குமார சம்பவம்

ஆருயிர் யாவையும் உய்யு மாற்றால் அற்புத மேனி எடுத்து நின்று, பேரருள் ஐந்தொழில் ஆட்டு கந்த பிஞ்ஞகன் கந்தனை நல்க வேண்டிச், சீரிமயத்து மடப்பி டியைத் திருமணஞ் செய்த-பின் எய்தி அங்கண், ஏரியல் அந்தப் புரத்தின் மன்னி இன்பக் கலவி நடாத்த லுற்றான். 27

அரிய உயிர்கள் அனைத்தும் உய்யும் பொருட்டு ஞானத்திருவுருவந் தாங்கி நின்று பேரருட்டிறத்தால் ஐந்தொழிலைப் புரிந்தருளும் பெருமான் முருகப் பெருமானைத் தந்தருள விரும்பிச் சிறப்புப் பொருந்திய இமய வல்லியைத் திருமணங்கொண்டு அம்மந்தர மலையை அடைந்து அழகு திகழ்கின்ற அந்தப் புரத்திலிருந்து இன்பத்திற்குக் காரணமாகக் கூடி யிருந்தனர்.

வண்டிமிர் கூந்தல் இமய வல்லி வனமுலை தாக்க மகிழ்ந்து புல்லிக், கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றுப் பன்னாட் கலவிப் பெரு-நலந் துய்க்குங் காலை, அண்டர் உணர்ந்து வெருவி அஞ்சி அம்பி-கை தன்பாற் கருப்ப வீறு, கொண்டிடு முன்னஞ் சிதைவு செய்யுங் கொள்கையின் அங்கியை ஏவினார்கள். 28

வண்டுகள் ஒலிக்கின்ற கூந்தலை யுடைய இமய வல்லி அழகிய கொங்கைகள் தீண்ட மகிழ்ந்து தழீஇக் கண்டும், கேட்டும், உண்டும், உயிர்த்தும், தீண்டியும் பல்காலம் கூடியிருந்துழித் தேவர் அறிந்து பேரச்ச மெய்தி அம்மைபால் கருப்ப வளர்ச்சி அடையு முன்பே அதனை அழிக்கும் முயற்சியில் அக்கினி தேவனை ஏவினார்கள்.

ஏவலும் அங்கிமற் றங்கண் ஏகி எம்பெருமான்கோயில் வாயில் முன்னர்த், தேவி உகைக்கும் மடங்கல் வைகுஞ் செய்கையை நோக்கி நடுங்கி மீண்டு, மேவிய விண்ணோர் குழாத்தை நண்ணி வினவும் அவர்க்கு விளைந்த தோதி,நீவிர்க ளேஅவண் எய்தி ஊறு நிகழ்த்திடு மின்க ளெனக்க ரைந்தான். 29

ஏவியதும் அக்கினி மந்தர மலையை எய்தி எம்முடைய பெருமான் திருக்கோயிலின் வாயிலில் அம்மையார் செலுத்துகின்ற வாகனமாகிய சிங்கத்தைக் கண்டு நடுங்கித் திரும்பித் தேவர் கூட்டத்தை நெருங்கி வினவுகின்ற அவர்க்கு நிகழ்ந்தது கூறி நீவிர் அங்கெய்தி இடையூற்றை நேரே செய்ம்மின்' எனக்கூறினன்.

அரியய னாதி அமர ரெல்லாம் அம்மொழி கேட்டுள் அழுங்கி நொந்து, பெரிதுயர் மந்தரப் பாங்கர் எய்திப் பேணி நிலமிசை வீழ்ந்தி றைஞ்சி, உரிய முறையிற் பழிச்சி நின்றே ஓலிடும் மாற்றம் உணர்ந்து நம்மான், தெரிவையொ டாடும் புணர்ச்சி நாப்பண் சென்றனன் வெற்றரை யோடும் அங்கண். 30

திருமாலும் பிரமனும் முதலாய தேவர் யாவரும் அதனைக் கேட்டு மனம் பெரிதும் நொந்து மிகவும் உயர்வுடைய மந்தர மலையை அணுகிப் போற்றி நிலமுற வணங்கி விதிப்படி துதிசெய்து முறையிடும் குறையைத் திருச் செவி ஏற்ற பெருமான் உமையம்மை யொடும் கூடியிருந்த அங்கிலேயே நிருவாணராய் அத்தேவர் முன் எழுந்தருளினர்.

கண்டனர் காமனைச் செற்ற கோவைக் கழிபெருங் காதல் கரைஇ கப்பப், புண்டரி கக்கண் முகுந்தன் வாசப் பூந்தவி சாளி உருத்தி ரர்கள், அண்டர் மருத்துவர் சாத்தி யர்கள் அனைவரும் எல்லையில் அன்பு பொங்கிக், கொண்ட மயிர்ப்புள கங்கள் மல்கக் குவித்த கரத்தொடும் ஏத்த லுற்றார். 31

மன்மதனை நீற்றிய பெருமானை மிகப்பெரும் பேரன்பு கரைகடந்து செல்லக் கண்டு தரிசித்தனர். தாமரைக்கண்ணராகிய திருமாலும், வாச மலருறை பிரமனும், உருத்திரரும், தேவரும், மருத்துவரும், சாத்தியரும் ஆகிய யாவரும் அளவற்ற அன்பு பெருகி மயிர் கூச் செறிய அஞ்சலி முகிழ்த்த கையினராய்த் துதிக்க லுற்றனர்.

காமனை அழித்த கண்ணுதற் பெருமான் செய்கை, திருவிளையாட்டாகலான் தீங்கு நிகழா என்பார் இது கூறினர்.

வெள்விடை பூங்கொடி மீது வைத்து வென்றி மழுப்படை ஏந்தி வஞ்சக், கள்ளர் கருத்தின் அகப்ப டாத கண்ணுதற் சாமி-நின் தாளி ணையில், அள்ளல் அளக்கர் அமிர்தந் தன்னாற் பூசனை யாற்றி அமிர்த ரானோம், எள்ளரு மாமலர் இட்டி றைஞ்சிச் சுமன ரெனும்பெயர் எய்தி னோமால். 32

பொலிவமைந்த கொடியில் வெள்ளிய விடையை அமைத்து வென்றி பொருந்திய மழுவாயுதத்தைத் தரித்துக் கரவாடும் வன்னெஞ்சர்க் ககப்படாத நெற்றிக் கண்ணுடைய நிமலனே நின்னுடைய திருவடிகளில் திருப்பாற் கடலில் அள்ளிக் கொள்ளக் கிடைத்த அமிழ்தினாற் பூசனை செய்தமையால் அமிர்தர் எனப் பெற்றோம். மேலும், இகழ்தற்கரிய பெருமையுடைய மலர்களை இட்டு வணங்கிச் சுமனர் என்னும் பெயரையும் பெற்றவர் ஆயினோம்.

அள்ளல், சேறுமாம். சுமனசு— மலர், நன்மனம்.

ஆழி யுடைப்புவி மீதொர் சிற்றூர் ஆள்பவர் தம்மை அடுத்த வரும், தாழ்வரும் இன்ப மகிழ்ச்சி எய்தித் தகைபெற வாழுகின் றூர்கள் என்னில், பாழி உயர்அகி லாண்ட கோடிப் பரப்பு முழு- தும் அரசு செய்யும், மாழை விழிஉமை பாக நின்னை வந்தடுத் தேங்களுக் கென்கு றையே. 33

கடல்சூழ்ந்த நிலவுலகில் ஓர் சிற்றூரை ஆட்சி செய்பவரை அணுகினவரும் குறைவில்லாத இன்பத்தையும் மகிழ்ச்சியையும் அடைந்து சிறப்புற வாழ்கின்றனரெனில் வலிமை மிக்க பல்கோடி அண் டப் பரப்புகள் முற்றவும் திருவருட் செங்கோல் செலுத்தும் மாவடு வகி ரனைய கண்ணி பங்கனே! நின்பால் அடைக்கலம் புகுந்தேமாகிய எங்க ளுக்குக் குறை யாதுளது?

துறந்தவர் உள்ளக் கமல மேவுஞ் சோதித் திருவுரு போற்றி போற்றி, மறந்திகழ் வோரை எறிந்து வீசும் மறந்திகழ் வாட்படை யாளி போற்றி, உறந்த மலர்ப்பதம் போற்றி யாங்கள் உன்றன் அடைக்கலங் கண்டு கொள்ளென், றறந்தலை நின்ற அமரர் போற்ற அங்கணன் நோக்கி அருள்சு ரந்து. 34

நின்னையே பற்றிப் பிறவற்றைக் கைவிட்டவர் மனத்தாமரை மலரில் வீற்றிருக்கும் பேரொளி வடிவினனே போற்றி! போற்றி! மாறு பாடுடையவரைச் செருக்கும் வீரம் விளங்குகின்ற ஒளியுடைப் படைகளை ஆள்பவனே போற்றி! நுணுகிய மென்மலரை யொக்கும் திருவடிகளுக்கு வணக்கம். அடியேங்கள் உன்னுடைய அடைக்கலம் கண்டு கொள்ளாய் என்று தருமத்தின் தலைநின்ற திருமால் முதலிய தேவர்கள் துதிக்கச் சிவபெருமான் திருவுள்ளங் கொண்டு அருள் கூர்ந்து,

"உடை யாயென்னைக் கண்டு கொள்ளே" (திருவா-திருச்சதகம்-1) என்னும் திருமொழியை எண்ணுக. அறந்தலை நிற்றல்: தலை அசை நிலை; அறநெறியில் உறுதி பெற நிற்றலுமாம். "தீத்தொழிலில் தலைநின்ற கொடியர்" (கயிலாயப் படலம்) எனவும் வருதல் காண்க.

வேண்டுவ கூறுமின் நுங்கட் கின்னே மேவர நல்குதும் என்ற ருள, ஈண்டிய மாயனை உள்ளிட் டோர்தம் ஏவலின் நான்முகன் ஏத்தி எந்தாய், மாண்ட மலைமகள் பாற்க ருப்பம் வாய்ப்பது வேண்- டிலர் மால்மு தலோர், காண்டக வந்தனர் மேல்இ யற்றுங் கடன்- அறி யேங்கள் எனக்க ரைந்தான். 35

'வேண்டுவனவற்றைக் கூறுமின் அவற்றை உங்கட்கு இப் பொழுதே பொருந்துமாறு அருள் செய்வேம்' என்று திருவாய் மலரக், கூடியிருந்த திருமாலை உள்ளிட்ட தேவர்களுடைய ஏவலினால் பிரமன் துதிசெய்து "எந்தையே! மாட்சிமையுடைய இமய வல்லியினிடத்துக் கருப்பம் வாய்த்தலை மால் முதலானோர் விரும்புகிலர் ஆதலின் தேவரீ ரைக் காணுமாறு வந்துள்ளனர். இனி மேற்செய்யத் தக்க கடமையை அறியேமாகின்றேம்" எனக் கூறினான்.

அறுசீரடி யாசிரிய விருத்தம்

தனக்கெனச் சிறிதும் வேண்டாத் தன்மையன் உயிர்கட் கென்றே
நினைப்பரு நடனம் பூண்ட நின்மலன் அற்றேல் இந்தப்
பனித்தமுத் துருக்கி யன்ன வெண்புனல் பருகு மின்கள்
எனப்புகன் றருள வல்லே எரிஇறை அங்கை ஏற்றான். 36

தனக்கென் றொன்றையும் விரும்பானாய் உயிர்களின் பொருட்டே நினைக்கவும் இயலாத திருக்கூத்தினை மேற்கொண்ட இயல்பாகவே பாசங்களின் நீங்கியோன் 'அத்தன்மைத் தாயின் குளிர்ந்த முத்தினை உருக்கினாலொத்த இவ் வெள்ளிய புனலைப் பருகுமின்' என்னக் கூறியருள அக்கினி தேவன் விரைந்து உள்ளங்கையில் ஏற்றனன்.

தனக்கோர் பயன் கருதாமை: "ஆடும் மெனவும் மருங்கூற்ற முதைத்து வேதம், பாடும் மெனவும் புகழல்லது பாவ நீங்கக், கேடும் பிறப்பும் மறுக்கும் மெனக் கேட்டிராகில், நாடுந் திறத்தார்க் கருளல்லது நாட்டலாமே" (திருஞா. திருப்புரசுரம்.) என்னும் அருட்டிரு மொழியையும், "ஆடும் மெனவாந் திருப்பாட்டி னமைத்த மூன்றும், நீடும் புகழோ பிறர் துன்ப நீக்குதற்கோ வென்று, தேடும் முணர்வீ ருலகுக்கிவை செய்த தீசர், கூடுங் கருணைத்திற மென்றனர் கொள்கை மேலோர்.', (திருத். திருஞா. 839.) என்னும் திருவாக்குரையையும் காண்க. 'அற்றேல்', அம்மையார் திருவயிற்றில் கரு நீடாமையை.

எண்ணரும் வருடங் காறும் ஆயிர இரவிப் பொற்பின்
அண்ணல்பால் நின்று வீழும் அதனைஅவ் வனலோன் உண்ண
விண்ணவர் எவர்க்கும் அந்நாள் மேவருங் கருப்பம் நீடத்
துண்ணெனத் துளங்கி வெப்பு நோயினில் தொடக்குண் டார்கள்.

எண்ணரிய வருட வரையிலும் ஆயிர சூரியர் ஒளியுடைத்தாய் இறைவனிடத்து நின்றும் வீழும் அவ்வீரியத்தை அவ்வக்கினி தேவன் பருகினமையால் தேவர் யாவர்க்கும் பொருந்துதல் வரும் கருப்பம் தங்கிக் காலம் நீட்டிக்க நடுக்குற்று வருந்திச் சுரநோயிற் பிணிப்புண்டனர்.

அக்கினி அவியைப் பெற்றுத் தேவர்க்கெல்லாம் ஆக்குவன்; அவ்வாறே ஈண்டும் பருகினமையால் தேவர்கள் கருவுற்றனர். இறைவன் வீரியம் தீயின் இயல்புடைமையானும், மேல் நோக்கும் தன்மையுடைமையானும் வன்னிரேதா, ஊர்த்துவரேதா என்னும் திருநாமங்கள் உடையர். சனற்குமாரப் படலம் 22-ஆம் செய்யுளைக் காண்க.

மீளவும் இரந்து வேண்டும் விண்ணவர் குழாத்தை நோக்கி
வாளெனப் பிறழ்ந்து நீண்டு மதர்த்தரி பரந்து கூற்றை
ஆளெனக் கொண்டு மைதோய்ந் தகல்விழிச் சேனை வில்வேட்
காளையை முனிந்த வீரன் கருணையால் விளம்ப லுற்றான். 38

பின்னரும் குறையிரந்து வேண்டும் தேவர் குழுவினை வாட்படையை ஒப்பப் பிறழ்ந்து நீண்டு அமர்த்துச் செவ்வரி பரவி இயமனை அடிமை கொண்டு மையில் தோய்ந்தகன்ற கண்களையுடைய மகளிராகிய படைத் துணைவரைக் கொண்ட வில்லுடை வீரனாகிய மன்மதனை நுதற் கண்ணால் நீற்றியபெருமானார்கருணையொடும் நோக்கித்திருவாக்கருளினர்.

"காமனைச் செற்ற கோ" என 31-ஆம் செய்யுளினும் காண்க. "நேரிழையைக் கலந்திருந்தே புலன்கள் ஐந்தும் வென்றவன்" (தேவாரம்)

கராத்துயிர் பருகி வேழங் காத்தவன் முதலாய் நீவிர்
பராய்த்தொழுங் காஞ்சி வைப்பிற் பயில்சுர கரேச மென்னச்
சுராக்கனும் அவுணன் ஆவி தொலையநாம் அமைத்த தானம்
இராக்கதிர் எறிக்கும் இந்து முடிநமக் கினிய சூழல். 39

முதலையைச் செகுத்துக் கசேந்திரனைக் காத்த திருமால் முதலாம் நீவிர் துதித்து வணங்கும் காஞ்சிமா நகரில் பொருந்திய சுரகரேசம் என்னும் திருப்பெயரில் சுராக்கன் என்னும் அசுரனை அழித்தற் கிடனாக யாம் அமைத்த தலம் இரவில் நிலவொளி வீசும் சந்திரனை முடியிற்சூடிய நமக்கினிய இருக்கை ஆகும்.

'சுராக்கனை' அழித்த வரலாற்றை (257-266 கச்சி. காஞ்.) இருபத்தெண்டளிப் படலம் காண்க.

சுரகரே சத்தின் பாங்கர்ச் சுரகர தீர்த்தம் உண்டால்
விரவிநீர் படிந்தோர் பாவ வெப்புநோய் முழுதும் நீங்கும்
இரவிநாள் கழிய நன்றும் நீர்அவண் எய்தி நம்மைப்
பரவிநீ ராடில் இந்த வெப்புநோய் பாறுங் காண்மின். 40

சுரகரேசத்தை அடுத்துச் சுரகர தீர்த்தம் உள்ளது. உள்ளங் கலந்து அத்தீர்த்தத்தில் முழுகினோர் பாவமும், சுரநோயும் முற்றும் தவிர்ந்துவிடும். ஞாயிற்றுக்கிழமை மூழ்குதல் பெரிதும் நலத்ததாகும். நீவிர் அங்குச் சென்று அத்தீர்த்தத்தில் நீராடிச் சுரகரேசத்தில் வழிபாடு செய்தால் இந்த வெப்பு நோய் ஒழிந்துபோம் காண்மின்.

ஆயிடை நீங்கிப் பின்னர் மேருவை அணுகி அங்கண்
மேயஇக் கருப்பந் தன்னை விடுமின்என் றகன்று நீங்க
மாயனே முதலாம் விண்ணோர் மகிழ்ந்தெழும் உள்ளத் தோடுந்
தூயசீர்க் காஞ்சி எய்திச் சுரகரந் தன்னைக் கண்டார். 41

பின்னர் அவ்விடத்தை அகன்று மேரு மலையை அடுத்து அவ்விடத்தில் மேவிய கருப்பத்தை விடுமின்" என்று அருள் செய்து பெருமான் நீங்கத் திருமால் முதலாம் தேவர் மகிழ்ந்து ஊக்கமொடும் தூய சிறப்பினையுடைய காஞ்சிமாநகரை அடைந்து அத்தலத்தைக்கண்டனர்.

காண்டலும் உவகை பொங்கிச் செயத்தகு கடன்கள் முற்றித்
தீண்டினோர் பிறவி மாய்க்குஞ் சுரகர தீர்த்தம் ஆடி
மாண்டரு சுரக ரேச வள்ளலை அருச்சித் தேத்தி
வேண்டினர் வேண்ட லோடும் வெப்புநோய் ஒழியப் பெற்றார். 42

கண்டளவே மகிழ்ச்சி மீக்கூர்ந்து செய்யத்தக்க கடன்களை விதி வழி முற்றச் செய்து தீண்டினோர்க்கும் பிறவி நோயைப் போக்கும் சுரகர தீர்த்தத்தில் படிந்து மாட்சிமையைத் தருகின்ற சுரகரேச வள்ளற் பெருமானை அருச்சனை புரிந்து தொழுது துதித்துக் குறையிரந்தனர். அவ்வளவிலே சுரநோய் நீங்கப்பெற்றனர்.

பெற்றபின் அங்கண் நீங்கிப் பெறலரு மேருக் குன்றின்
உற்றமாத் திரையின் அன்னோர் வயாவுநோய் ஒழிவு பெற்றார்
மற்றவர் அகட்டின் நீங்கி வளங்கெழு சுடர்பொற் சோதி
பற்றிளம் பரிதி நூறா யிரமெனப் பரந்து தோன்றி. 43

சுரநோய் நீங்கிய பின்னர் அடைதற்கரிய மேரு மலையை நெருங்கிய அளவிலே தேவர் யாவரும் கருப்ப வேதனை தவிர்ந்தனர். அவர் தம் வயிற்றினின்று நீங்கிச் சுடர் விடும் பொன்னொளி இளஞ் சூரியர் ஓரிலக்க மென்ன ஓரொளி பரவித் தோன்றி,

வயா—வேட்கைப் பெருக்கம்.

வடவரை முழுதுஞ் செம்பொன் வண்ணமாச்செய்து தெண்ணீர்த்
தடநெடுங் கங்கை யாற்றாற் சரவணப் பொய்கை மேவிக்
கடவுளர் முனிவர் எல்லாம் உய்யுமா கருணை காட்டிச்
சுடர்வடி நெடுவேல் அண்ணல் அறுமுகன் தோன்றி னானால். 44

மேரு மலை முழுதினையும் செம்பொன் நிறத்துத் தன் வயமாக்கித் தெளிந்த நீர்ப் பரப்பினையுடைய கங்கையாற்றின் வழியே சரவணப் பொய்கையில் வீற்றிருந்து தேவரும் முனிவரும் யாவரும் பிழைக்குமாறு அருள் பாலித்துச் சுடர் வடி நெடுவேல் அண்ணலாகிய ஆறுமுகப் பெருமான் தோன்றி யருளினார்.

சுரந்தவிர்த் தமரர்க் காத்த சுரகர தீர்த்தம் ஆடி
வரந்தருஞ் சுரக ரேச வள்ளலை வணங்கிப் போற்றி
நிரந்தரம் அன்பு செய்யப் பெற்றவர் நெடுநீர் ஞாலத்
தரந்தைநோய் தவிர்ந்து முத்திப் பேற்றினை அடைவர் மாதோ. 45

சுரநோயைத் தவிர்த்துத் தேவரைக் காத்த சுரகர தீர்த்தத்தில் படிந்து வரங்களை ஈந்தருளும் சுரகரேச வள்ளலைத் தொழுது போற்றி இடையறாத பேரன்பினைச் செய்தவர் கடல்சூழ் புவியில் துன்பந்தரும் நோய்கள் நீங்கி முத்திப் பேற்றினையும் எய்துவர்.

சுரகரேசப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் —956

# தான்தோன் றீச்சரப் படலம்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

கிளைத்தெழுங் குழவித் திங்கட் கீற்றிளங் கொழுந்து மோலி
வளைத்தழும் பாளன் வைகுஞ் சுரகர வளாகஞ் சொற்றும்
திளைத்தவர் கருவில் எய்தாச் சுரகர தீர்த்தத் தென்பால்
இளைத்தவர்க் கிரங்குந் தான்தோன் றீச்சரத் தியல்பு சொல்வாம். 1

இளம்பிறையைத் தரித்த சடை முடியையும் காமாட்சியம்மையாரின் வளையல் வடுவினையும் கொண்ட பெருமான் வைகும் சுரகரேசத்தின் உண்மையைக் கூறினும். படிந்தவர்க்குப் பிறவி நோயைப் போக்கும் சுரகர தீர்த்தத்திற்குத் தெற்கில் உள்ளம் மெலிந்தவர்க்கு இரங்கி அருள் செய்யும் தானே தோன்றிய ஈச்சரத்தினது தன்மையைக் கூறுவாம்.

முழுமலத் தொடக்கு நீங்கி ஆருயிர் முத்தி சேர்வான்
மழுவலான் தானே தோன்றும் வாய்மையால் தான்தோன் றீசக்
கெழுதகு பெயரின் ஓங்கும் கிளக்கும்அவ் விலிங்கந் தன்னைத்
தொழுதொரு சிறுவன் தீம்பால் பெற்றவா சொல்லக்கேண்மின்.2

ஆணவ மலப்பிணிப்பு நீங்கி அரிய உயிர்கள் முத்தியைப் பெறற் பொருட்டு மழுவுடையோன் தானே வெளிப்பட்டருளியமையின் தான் தோன்றீசப் பெருமான் என்னும் பொருந்திய திருப்பெயரின் மிக்கு விளங்கும் சிவபிரானை வழிபாடு செய் தோர் சிறுவர் இனிய பால் பெற்ற வகையைக் கூறக் கேண்மின் தவ முதல்வர்களே !

உபமன்னியர் பாற்கடல்உண்ட வரலாறு

சலிப்பறு தவவ சிட்டன் தங்கையை மணந்து ஞானப்
புலிப்பத முனிவன் ஈன்ற புகழ்உப மனியன் என்னும்
ஒலிச்சிறு சதங்கைத் தாளோன் மாதுலன் உறையுள் மேவிக்
கலிப்பகைச் சுரபித் தீம்பால் உண்டுளங் களித்து வாழ்நாள். 3

என்றும் நிலை கலங்காத தவத்தையுடைய வசிட்ட முனிவர்க்குத் தங்கையை மெய்யறிவினராகிய வியாக்கிர பாதர் மணந்து ஈன்ற புகழைப் பெறும் உப மன்னியர் என்னும் ஒலிக்கின்ற கிண்கிணி அணிந்த சிறுவர் மாமன் தவச்சாலையில் தங்கி வறுமைக்குச் சத்துருவாகிய காமதேனுவின் இனிய பாலைப்பருகி உள்ளம் மகிழ்ச்சி மீக்கூர்ந்து வாழும் நாளில்,

தாதையுந் தாயும் ஏகித் தநயனைக் கொண்டு தங்கள்
மேதகும் இருக்கை புக்கு மேவுழிச் சிறுவன் தீம்பாற்
காதரம் எய்தி அன்னை அடிபணிந் திரப்ப அந்நாள்
கோதறு நெல்மா நீரிற் குழைத்திது கோடி என்றாள். 4

தந்தையும் தாயும் சென்று தம் மகனைக்கொண்டு தம் தவச்சாலையை அடைந்த பொழுது சிறுவர் அப்பாலை விரும்பித் தாயைப் பணிந்து வேண்ட குற்றமற்ற நெல்லரிசியால் ஆக்கிய மாவை அப்பொழுது நீரிற்கரைத்துத் இதனைக் கொள்ளுதி என்று கொடுத்தனர் தாயார்.

ஏற்றனன் பருகித் தீம்பால் அன்றிது புனல்என் றோச்சி
மாற்றினன் மாது லன்றன் மனைவயின் பருகுந் தீம்பால்
ஆற்றவும் நினைந்து தேம்பி அழுதழு திரங்க நோக்கிக்
கோற்றொடி நற்றாய் நெஞ்சம் உளைந்திது கூற லுற்றாள். 5

பெற்றுப் பருகி 'இது தீம்பால் அன்று; நீர்' என்று மனங்கொண்டு வீசி எறிந்து மாமனது மனைக்கண் பருகிய பாலைப் பெரிதும் எண்ணித் தேம்பி விடாப்பிடியாக அழு தேங்கத் திரண்ட வளையினை அணிந்த ஈன்ற தாயார் கண்டு மனம் வருந்தி இதனைக் கூறினர்.

தவம்புரி நிலையின் வைகுஞ் சார்பினேம் அதாஅன் றுமுன்னாட்
சிவன்றனை வழிப டாமை இலம்படுந் திறத்தி னேங்கள்
அவந்தெறும் ஆன்பால் யாண்டுப் பெறுகுவம் அப்பா முக்கண்
பவன்றனை வழிபா டாற்றிப் பால்மிகப் பெறுதி கண்டாய். 6

தவத்தைச் செய்யும் ஆச்சிரமத்தில் தங்கும் சார்பினையுடையேம். அஃதன்றியும் முற்பிறப்புக்களில் சிவபிரானை வழிபாடு செய்யாமையால் இப்பிறப்பில் வறுமையுற்ற இயல்பினையுடையேமாகிய யாங்கள் துன்பத்தைப் போக்குகின்ற பசுப்பால் எங்கே பெறுவேம்! முக்கண் மூர்த்தியாகிய சயம்புவைப் பூசனை செய்து பால் மிகவும் பெறுதி.

பவன்—உலகத் தோற்றத்திற்குக் காரணமானவன்; அழிவில்லாதவன் எனினும் ஒக்கும். வறுமைக்குக் காரணம்! '-இலர் பலர்' (திருக். 270.) அவம் தெறல்: 'செல்வப் பெருக்க முடையார்க்கு உணவாகிய ஆன்பால் உடம்பு நோயின்றி வளரச் செய்யும் மருந்தும் ஆதல்' (ஆசிரியர் அருளுரை சிவஞா. 12ஆம் சூத்திரம்.)

கச்சிமா நகரத் தெய்திக் கண்ணுதல் பூசை ஆற்றி
இச்சையின் ஏற்ற மாகப் பெறுவைஎன் றியம்பும் அன்னை
மெச்சிட விடைகொண் டேகி விழைதகு காஞ்சி எய்தி
முச்சகம் புகழுந் தான்தோன் றீச்சர முதலைக் கண்டான். 7

'காஞ்சி மாநகரை அடைந்து சிவபிரான் பூசனையை இயற்றி விருப்பினும் மிகுதியாகப் பெறுவாய்' என்றறிவுறுத்தி அன்னை பாராட்ட அப்பொழுதே விடை பெற்றுக்கொண்டு விரும்பத்தக்க காஞ்சியை அடைந்து மூவுலகும் புகழும் தான் தோன்றீச்சர முதல்வனைத் தரிசித்தனன்.

கண்டுளங் குழைந்து நெக்குக் கரையிலாக் காதல் பொங்கித்
தொண்டனேன் உய்ந்தேன் என்று தொழுதெழுந் தாடிப் பாடி
இண்டைவார் சடிலத் தண்ணல் இணையடி அருச்சித் தங்கண்
அண்டரும் வியக்கு மாற்றால் அருந்தவம் புரியும் எல்லை. 8

'கண்டு உள்ளம் கனிந்து நெகிழ்ந்து எல்லையற்ற பேரன்பு ததும்பித் தொண்டனேன் பிழைத்தேன்' என்று கூறித் தொழுது எழுந்து ஆடிப் பாடி இண்டை மாலையைத் தரித்த நீண்ட சடை முடியண்ணலின் துணையடிகளை அருச்சித்து ஆங்கே தேவரும் இறும்பூது கொள்ளும் முறையால் அரிய தவத்தைச் செய்யும் பொழுது,

"கும்பிட்டுத் தட்டமிட்டுக் கூத்தாடல்" (சிவ. சி. 12-2) உவகை மிகுதியில் நிகழும் மெய்ப்பாடு (ஆசிரியர் திருமொழி.) இண்டை—வட்டமாகச் சமைக்கும் முடிமாலை. இந்திரன் வனத்து மல்லிகை மலரின் இண்டை சாத் தியதெனு நிறைந்த, சந்திரன் முடிமேல் வந்துறுஞ் சோண சைலனே கைலை நா யகனே' (சோண. 57.) என்புழிக் காண்க.

தகைபெறுஞ் சயம்பு லிங்கத் தலத்துறை கணிச்சிப் புத்தேள்
உகைமுகில் ஊர்தி அண்ணல் உருவுகொண் டெய்திப் பத்தி
மிகையினை அளந்து தானுந் தன்மையை விளங்கக் காட்டி
நகைமுகம் அருளித் தீம்பாற் கடலினை அழைத்து நல்கி. 9

பெருமைபெறும் தான்தோன்றீச்சரப் பெருமானாகிய மழு ஏந்தி, மேகத்தைச் செலுத்துகின்ற வாகனமாக வுடைய இந்திரன் வடிவுகொண்டெழுந்தருளிப் பேரன்பின் மிகுதியை அளந்து தானே அவ்வுருக் கொண்ட தன்மையைத் தெளிய உணர்த்தி நகை முகங்காட்டி அருளி இனிய பாற்கடலை வருவித்து அளியொடும் ஈந்து,

சயம்பு, சுயம்பு, தான்தோன்றீசன் என்பன ஒரு பொருளன.

பெருமானார் இந்திரன் வடிவிற்காட்சியருளிச் சிவபிரானை இகழப் பொறுது உபமன்னிய முனிவர் அகோர மந்திரம் ஓதித் திருநீற்றைத் தெறித்து அவ்விந்திரனை அழிக்கப் புகுகையில் நந்தி தேவர் தடுத்தமையால் தோல்வியுற்ற முனிவரர் மூலாக்கினியால் உயிர்விடத் துணிந்த அளவில் இறைவன் திருவுருக்காட்டி யாண்டனர். நகை முகம் அருளல்: 'நகைமுக விருந்து செய்தான்' (சீவ.)

முற்றுணர் தெளிவும் மூவா இளமையுஞ் சாக்கா டெய்தாப்
பெற்றியும் உதவி இன்னும் வேண்டுவ பேசு கென்றான்
கற்பகம் சுரபி சிந்தா மணிவனை கமல மெல்லாம்
பற்றுடை அடியார் ஏவற் பணிசெயப் பணிக்கும் வள்ளல். 10

கற்பகத் தருவும், காமதேனுவும், சிந்தாமணியும், சங்க நிதியும், பதும நிதியும் மற்றுள்ளனவும் ஆகிய இவற்றைத் தன்னிடத் தன்பு பூண்ட தொண்டர்க்கு ஏவல் செயப் பணிக்கும் வள்ளலாகிய பெருமானார் யாவற்றையும் தெளியும் மெய்யறிவையும், மூப்படையாத இளமையையும், இறவாத இயல்பினையும் அருளி இன்னும் விரும்பியவற்றைக் கேளென்றனர்.

என்னலும் முனிவன் போற்றி எளியனேற் குனது நோன்தாள்
மன்னுபே ரன்பு வேண்டும் மற்றும்இவ் விலிங்க மூர்த்தி
தன்னில்எக் காலும் நீங்காத் தண்ணருள் கொழித்து வாழ்ந்து
துன்னினேர் எவர்க்கும் பாவம் துமித்துவீ டுதவ வேண்டும். 11

திருவாக்கைக் கேட்ட அளவிலே உப மன்னிய முனிவர் துதித்து வலியிலேனுகிய அடியேனுக்கு உன்னுடைய வலிமை அமைந்த திருவடிக்கண் நிலைபெற்ற பேரன்பு வேண்டும்; மேலும் இவ்வருட் குறியில் எந்நாளும் நீங்காத தண்ணிய அருளை வெளிப்படுத்தி வீற்றிருந்து அறிவால் அணுகினேர் யாவர்க்கும் பாவத்தைக் கெடுத்து முத்தியையும் உதவுதல் வேண்டும்.

'நோன்ருள்—வினைத்தொகை. நோன்றல் – பொறுத்தல். 'எடுத்துச் சுமப்பானை' என்ருர் புடை நூலாசிரியரும்' (சிவஞா. 12.) (அறியாமையை உடைத்தற்குக் காரணமாகிய) வலியினையுடைய தாளினையும் (திருமுரு. 4. உரை.) கொழித்தல்-மேலிடல்.

என்றுநின் றிரந்து போற்றும் இளவலுக் கருளிச் செய்து
மன்றலங் குழலி யோடும் இலிங்கத்தின் மறைந்தான் ஐயன்
அன்றுதொட் டறிஞர்க் கெல்லாம் அருட்பெருங் குரவனுகி [னேன்.
வென்றிவெள் விடையான் சைவம் விளக்கிவீற் றிருந்தான் அன்

என்று கூறித் திருமுன் நின்று குறையிரந்து துதி செய்யும் மழ முனிவர்க்குத் திருவருள் புரிந்து ஏலவார் குழலியோடும் ஐயன் சிவலிங்கத்தில் மறைந்தருளினன். அந்நாள் முதல் உபமன்னிய முனிவர் அறிஞர் யாவர்க்கும் பேரருளையுடைய ஆசாரியராகிவென்றி வாய்ந்த வெள்ளை விடையுடைய பெருமானது சிவநெறியை விளக்கி வீற்றிருந்தார்.

கண்ணன் சிவதீக்கை பெறல்

பிருகுமா முனிவன் சாபப் பிணிப்பினுற் பிறந்து வீயும்
மருமலர்த் துளவோன் கண்ண னுயநாள் மனித யாக்கை
அருவருப் பெனஆங் கெய்தி அத்தகு முனிவன் றன்பால்
திருவளர் தீக்கையுற்றுத் தேகசுத் தியினைப் பெற்ருன். 13

பிருகு முனிவர் சாபத் தொடர்பினுல் பிறந்து இறத்தலைச் செய்யும் மணங்கமழும் துளவ மாலையை யணிந்த திருமால் கண்ணபிரானுய்த் தோன்றிய காலத்தில் இம்மானுட யாக்கை அருவருக்கத் தக்கதென அவ்விடத்தை யடைந்து யாவரும் போற்றும் இயல்பினையுடைய உபமன்னிய முனிவரிடத்து அருட்செல்வ வளர்ச்சிக்குக் காரணமாகிய சிவ தீக்கை பெற்றுச் சரீர சுத்தியினை அடைந்தனர்.

பாண்டவர் தூத னென்னப் பயிலிய பெயரான் அங்கண்
ஆண்டகை அடிகள் போற்றி வைகினுன் அன்று தொட்டு
நீண்டுல களந்த மாலை நிறைதிரு நீற்றுக் கோலம்
பூண்டுயர் சைவன் என்னப் புகன்றிடும் உலக மெல்லாம். 14

பாண்டவ தூதர் என்னப் பயிற்சிபெற்ற பெயரால் அவ்விடத்துச் சிவபெருமான் திருவடிகளை வழிபாடு செய்திருந்தார். அந்நாள் முதல் வாமன மூர்த்தியாய் வந்து திரிவிக்கிரம மூர்த்தியாகி உலகையளந்த திருமாலே நிறைந்த திருநீற்று வேடம் தாங்கி உயர்ந்த சைவர் என்ன உலகோர் போற்றுவர்.

தான்தோன் றீச்சரப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—970

# அமரேசப் படலம்

கலி விருத்தம்

தெத்தேயென வரிவண்டினம் முரலமதுச் சிந்துந்
தொத்தேர்மலர்ப் பொழில்சுற்றுசு வாயம்புவஞ் சொற்றும்
முத்தார்துறை அதன்கீழ்த்திசை முப்பத்துமுக் கோடிப்
புத்தேளிரும் வழிபாடுசெய் அமரேச்சரம் புகல்வாம். 1

அழகிய வண்டினங்கள் தெத்தே என ஒலிக்கத் தேனைத் துளிக்கின்ற மலர்க் கொத்துக்களையுடைய சோலை சூழ்ந்த தான்தோன்றீச்சரத்தைப்பற்றிக் கூறினும். முத்துக்களைக் கொழிக்கின்ற சுரகர தீர்த்தத்தின் கிழக்குத்திசையில் முப்பத்து முக்கோடி தேவர்கள் வழிபாடு செய்த அமரேச்சரத்தைப் பற்றிப் பேசுவாம்.

தேவாசுரயுத்த வரலாறு

வரிவண்டின முரலாமண மாலைக்கட வுளரும்
முரிநுண்ணிடைத் திதிமைந்தரும் முன்னாள் ஒருகாலத்
தெரிமண்டி யெனச்சீறி எதிர்த்துப்பொர லுற்றார்
நரிபேய்கொடி சேனங்கழு குழலுங்கள ஞாங்கர். 2

அழகிய வண்டினங்கள் ஒலியாத தெய்வ மணங்கமழ் மாலையை அணிந்த தேவரும், துவளுகின்ற நுண்ணிய இடையினையுடைய திதி மைந்தராகிய அசுரரும் முன்னோர் காலத்தில் செறி நெருப்பெனச் சீறி மாறுபட்டு நரியும், பேயும், காக்கையும், பருந்தும், கழுகும் சுற்றுகின்ற களத்தில் போர் தொடங்கினர்.

முற்றிப்பல உகம்அங்கவர் தண்டாதமர் முயலக்
கற்றைச்சடை இறையோன்மலை மகளோடுயர் ககனத்
துற்றுச்சம ராடற்றிறம் நோக்கிஉறைந் தனனால்
வெற்றித்திறந் தோலாவகை மேன்மேல்அமர் மூண்ட. 3

பல யுகங்கள் முற்றுகையிட்டு அவர் நீங்காது போரைத் தொடங்கச் சிவபெருமானார் உமையம்மையொடும் உயர்ந்த விசும்பில் எழுந்தருளிக் கடும்போர் வன்மையைக் கண்டு கொண்டிருந்தனர். வெற்றி தோல்வியுறாத வகையிற் போர்கள் மேன்மேல் முறுகி வளர்ந்தன.

உண்ணாஅமு தனையாள்எனை உடையான்முகம் நோக்கி
எண்ணால்உணர் வரியாய்இரு திறத்தோர்இவர் தம்முள்
மண்ணாவிறல் ஒருகூற்றினர் வாகைபுனை கெனலும்
விண்ணாடரை வன்றானவர் வென்றார்திறல் கொண்டார். 4

உண்ணப்படாத அமிழ்து போல்பவராகிய அம்மையார் என்னை அடிமையாக உடைய பெருமான் திருமுகத்தை நோக்கி ' நினைப்பாலும் உணரவரியவரே! இரு கூற்றினராகிய இவர் தங்களுள் விலக்கப்படாத வன்மை அமைந்த ஒரு சார்பினர் வெற்றி மாலையைப் புனைவாராக அருள் செய்மின் ' என்றலும் விண்ணவரை வறிய அசுரர் வென்று வெற்றி கண்டனர்.

அதுகண்டுமை அந்தோபெரு மானேஅருள் புரியாய்
மதுஒன்றிய வெற்றித்தொடை வானோர்புனை கெனலும்
விதுஒன்றிய சடையோன்அருள் விண்ணோர்புடை வைப்ப
முதுவன்பகை அறவென்றனர் முடிவானவர் அம்மா. 5

அசுரருடைய வெற்றியை உமையம்மையார் நோக்கி அந்தோ! பெருமானே! தேன்பொருந்திய வாகை மாலையைத் தேவர் புனைய அருள் புரியாய் என்று வேண்டவும் இளம் பிறையைச் சூடிய சடைப்பெருமான் அருளைத் தேவர் பால் வைத்தமையால் அத்தேவர் முதிர்ந்த பெரும் பகைவராகிய அசுரரை முற்றக் கெடும்படி வென்றனர்.

அம்மா, வியப்பிடைச் சொல். முது பகை, வழி வழி வந்த பகை.

வெற்றிப்பறை சாற்றிப்பெரு விறல்விண்ணவர் மீண்டு
கொற்றத்துயர் கடவுள்ளவைக் களமேவரக் குறுகிச்
செற்றுச்செரு வென்றோங்கிய திறலோடுறை குற்றார்
மற்றப்பொழு துயர்வாசவன் மதமுற்றுரை செய்வான். 6

பெருவலிமையையுடைய தேவர் வென்றெறி முரசினை முழக்கி மீண்டுபோய் வென்றியான் உயர்ந்த தேவ சபையைக் குறுகிச் சினங்கொண்டு போரில் வென்றுயர்ந்த இறுமாப்புடன் வீற்றிருந்தனர். அப்பொழுது உயர்ந்த தேவேந்திரன் தருக்குற்றுக் கூறுவான்.

அச்சோஎன தாண்மைத்திறம் ஆர்கூறுவர் என்றான்
அச்சீர்அவன் றனைவெங்கனல் அவனைச்சமன் நிருதி
அச்சூரனை அவனைப்புன லரசன்வளி அவனை
அச்சிலனை அளகைக்கிறை ஈசானன்அங் கவனை. 7

'அச்சோ! எனது ஆளுந் திறத்தை யாவர் கூற வல்லவர்' என்றனன். அச்சிறப்புடைய இந்திரனை அக்கினியும், அவனை வருணனும், வருணனை வாயுவும், அவனை ஈசானனும், அவனை
அச்சீர், அச்சிலம் – அத்தன்மையாக என்னும் பொருளன.

ஈசானனை மலரோன்அவன் றனைநாரணன் இகலிப்
பேசாவிறல் பேசிப்பிணக் குறுபூசலை நோக்கித்
தூசார்வன முலைஅம்பிகை துணைவற்றொழு தின்னோர்
மாசார்செருக் கொழியும்படி வள்ளால்அருள் என்றாள். 8

நான்முகனும், அவனைத் திருமாலும் பகைத்துப் பேசத் தகாத வெற்றியைப் பேசி மாறுபாடு மிகுகின்ற ஆரவாரத்தொடு கூடிய போரினை நல்லாடையைப் புனைந்த அழகிய கொங்கையையுடைய உமையம்மையார் நோக்கித் தன் நாயகரைத் தொழுது 'இவர் தம்முடைய குற்றம் நிரம்பிய இறுமாப் பொழியும் வகை வள்ளலே! அருள் செய்க' என்று வேண்டினர்.

பெருமான் தேவர்கள் அகந்தையை ஒழித்தல்

எழுசீரடி யாசிரிய விருத்தம்

நிணம்புல்கு சூலம் வலமாக ஏந்தி நெடுமால் விரிஞ்சன் முதலோர், பிணம்புல்கு காட்டின் நடமாட் டுகந்து பிறைவேணி வைத்த பெருமான், கணம்புல்கு தேவர் முரணைத் தவிர்ப்ப அவர்முன்பு காமர் அளிவீழ், மணம்புல்கு தொங்கல் அணிதோள் இயக்க வடிவொன்று கொண்ட னுகினன். 9

திருமால் பிரமன் முதலானோருடைய பிணங்களை இடு பெருங் காட்டில் பகைவருடைய ஊன் பொருந்திய சூலத்தை வலம்பட உயர்த்தி நடமாடுதலை விரும்பிப் பிறையைச் சடையிற் சூடிய சிவபெருமான் கூடியுள்ள தேவர் தம் மாறுபாட்டைத் தவிர்க்க அவர்கள் முன்னர் அழகிய வண்டுகள் விரும்புகின்ற மணம் கமழும் மாலையை அணிந்த தோளுடைய யக்ஷவடிவம் கொண் டணுகினன்.

அணுகித் துரும்பை எதிர்நட்டு முன்னர் இறுமாந்து வைகும் அவனைப், பணிலத்தனதி இமையோர்கள் நோக்கி இவண்நீ பயிற்றும் இதுவென், துணிபுற்று வைகும் ஒருநீ எவன்கொல் புகலென்று சொல்லும் மொழிகேட், டுணர்விற் சிறந்த தவர்கண்டு கொள்ளும் உவன்இன்ன பேச லுறுவான். 10

தேவர்களை அணுகித்துரும்பை அவர்தம் முன் நாட்டிச் செம் மாந்து வீற்றிருக்கும் இயக்க வடிவினனைப் பாஞ்ச சன்னியத்தை ஏந்திய திருமாலாதி தேவர்கள் நோக்கி 'இவ்விடத்தில் நீசெய்கின்ற ஈதுஎன்னை? அச்சம் இன்றி இருக்கும் தனியனாகிய நீ யாவன் சொல்'லென்று வினவும் மொழியைக் கேட்டு மெய்யுணர்வின் மிக்க தவத்தினையுடையோர் கண்டு கொள்ளும் அப்பெருமானார் இவ்வாறு அருள் செய்வர்.

தருக்குடைய இவர்கள் காணற் குரியரல்லரென்பார் 'உணர்விற் சிறந்த தவர்கண்டு கொள்ளும் உவன்' என்றனர். துணிபு, ஈண்டு அச்சத்தின் நீங்குதல்,

எவனேனு மாக வரும்நான் நுமாது வலிஇன் றளக்க லுறு-வேன், துவளாது நம்முன் நடும்இத் துரும்பு துணிசெய்ய வல்லன் எவனோ, அவனே தயித்தி யரைவென்ற மீளி அறிகென் றுரைப்ப மகவான், இவரா எழுந்து குலிசத்தை வீசி வறிதே இளைத்த னனரோ. 11

'யான், யாவனாயினும் ஆக; நுமக்கு அதனால் வருவது எவன்? உங்கள் வலிமையை இப்பொழுது அளந்து காணப் புகுவேன். நமக்கு முன்னர் அசையாது நடப்படும் இத்துரும்பினைக் கூறு படுத்த வல்லன் யாவனோ அவனே அசுரரை வென்ற வீரன் என்றறியுங்கோள்' என வாய் மலர இந்திரன் குதித்தெழுந்து வச்சிராயுதத்தை வீசி வீணே மெலிந்தனன்.

மற்றைத் திசைக்கண் உறைவோரும் வன்மை முழுதுஞ் செலுத்தி வலியில், ஒற்றைத் துரும்பை அசைவிக்கும் ஆற்றல் இலராய் உடைந்து விடலும், செற்றத் தெழுந்த அயனார் தமாது படையைச் செலுத்த அரியும், அற்றப் படாத படைவீசி ஆர்ப்ப அவைகூர் மழுங்கி யனவே. 12

ஏனைய திசைகளில் உறைகின்ற அக்கினி, இயமன் முதலானோரும் தங்கள் ஆற்றலை முற்றவும் செலுத்தியும் வன்மையற்ற ஓர் துரும்பை அசையச் செய்யும் வலி இலராய்த் தோல்வியை அடைதலும், சினத்துடன் எழுந்த பிரமன் தனது படையாகிய பிரமாஸ்திரத்தை ஏவவும், திருமாலும் தனது வெற்றி வாய்ந்த சக்கரப்படையை வீசி ஆரவாரிப்பவும் அவர் தம் படைகளும், கூர் மழுங்கி அத்தன்மைய ஆயின.

இறைவி தோன்றி இமையவர்க்குப் புத்தி புகட்டல்

துரும்பொன்று தன்னில் வலிமுற் றிழந்த சுரர்அச்சம் எய்தி வியவா, இரும்பண்பு கூர எவன்நீ? இயம்பு கெனலும் இயக்க வடிவாய், வரும்பாண்ட ரங்கன் உருவம் கரப்ப மறுகித் திகைக்கும் அவர்முன், கரும்பொன்று தோளி மலையான் மடந்தை எதிர்காட்சி தந்த ருளினாள். 13

ஓர் துரும்பிடைத் தங்கள் ஆற்றலை முழுதும் தோற்ற தேவர் அச்சம் உற்று வியந்து நற்குணம் தலை எடுப்ப நீயாவன் என வினவலும் இயக்கர் வடிவில் தோன்றிய பாண்டரங்கக் கூத்தியற்றும் பரமன் திருவுருவை மறைத்தருள மனஞ்சுழன்று மயங்கும் அவர்தம் முன்னர் கரும்பின் வடிவம் எழுதப் பெற்ற திருத்தோளியாராகிய இமயமலையரையன் மகளார் தம்மை அவர்கள் காண எழுந்தருளினர்.

நற்குணம் தலையெடுப்ப என்பார் 'இரும் பண்பு கூர' என்றனர்.

எதிர்காண நின்ற கருணைப் பிராட்டி இருதாள் பழிச்சி இமையோர்
முதிர்காதல் கொண்டு வழிபட்டு வண்கை முடிமீது கூப்பி உலகம்
பதினாலும் ஈன்ற முதல்வீ இயக்கர் பதியாம் அணைந்த அவன்யார்
மதியேம் எமக்கு மொழிகென் றிரப்ப மலைவல்லி இன்னபுகலும். 14

தொழநின்ற திருவருட் செல்வியின் இருதிருவடி மலர்களை ஏத்தித் தேவர்கள் பேரன்பு மிக்கு வழிபாடு செய்து, சிரமீது கரங்களைக் குவித்துப் 'பதினான்கு உலகங்களையும் பெருது பெற்ற தலைவீ! இயக்கர் தலைவராய் அணைந்த அவர் யார் அறியேமாகிய எமக்குக் கூறியருள்க' என்று வேண்ட மலையரையன் தவப்புதல்வியார் இங்ஙனம் விருப்பொடும் உணர்த்துவர்.

எவன்வாணி கேள்வன் முதலோர் பதங்கள் நிலைபேறு
செய்யும் இறைவன், எவன்எப் பொருட்கும் ஆதாரமாகி எவருந்
தொழப்ப டுபவன், எவன் முற்றும் ஆக்கி நிலைசெய்து போக்கி
அறிஞர்க் கினிக்கும் அமுதன், அவனென்று காண்மின் இமையீர்
இயக்க வடிவாகி வந்த அழகன். 15

எவன் கலைமகள் நாயகனாகிய பிரமன் முதலானோர் பதங்களாகிய சத்திய லோக முதலானவற்றை நிலைபெற நிறுவும் இறைவன்; எவன் எல்லாப் பொருட்கும் பற்றுக் கோடாய் யாவரானும் வணங்கப் படுபவன்; எவன் முழுதும் (அகிலமும்) படைத்துக் காத்து அழித்து மெய்யறிவினர் உணர்வின்கண் இனிப்புறும் அமுதன்; இமையீர்! (இமையாத நாட்டம் உடையீர்) இயக்க வடிவிற்றோன்றி எழுந்தருளிய அழகன் அவன் என்றுணர்மின்.

எவனுக்கு முற்றும் வடிவங்க ளாகும் எவன்உண்மை யாரும்
அறியார், எவன்எங்கும் யாவும் அறிவுற்று நிற்பன் எவனால்
நடக்கும் உலகம், எவனைத் துதிக்கும் மறைஈறு முற்றும் எவன்அங்
கவைக்கும் அரியான், அவனென்று காண்மின் இமையீர் இயக்க
வடிவாகி வந்த அழகன். 16

எவனுக்கு யாவும் திருமேனியாகும்; எவன் உண்மையியல்பை யாரும் அறியார்களோ; எவன் எவ்விடத்துள்ள எப்பொருளையும் அறிந்தாங்கறிந்து நிற்பனோ; எவனால் உலகங்கள் புடைபெயருமோ; எவனை,

வேதாந்தங்கள் முழுதும் போற்றுமோ; எவன் அவ்வேத வேதாந்தங்களுக்கு அப்பாற் பட்டவனே; இமையவர்களே நீவிர் இயக்க வடிவாகி வந்த அழகன் அவனே என்றறிமின்.

எவன்நாமம் எண்ணின் எவன்தாள் பழிச்சின் எவனைக் கருத்தின் நிறுவின், எவன்அன்பர் சேவை புரியிற் பவங்கள் இரிவுற்று முத்தி மருவும், எவன்உண்மை இன்ப அறிவாகி நிற்பன் எவன்இந்து வேணி முடியான், அவனென்று காண்மின் இமை-யீர் இயக்க வடிவாகி வந்த அழகன், 17

எவனது திருப்பெயரை நினைத்தால்—எவனது திருவடிகளைத் துதித்தால்—எவனைக் கருத்தில் ஊன்றினுல் (தியானித்தால்) – எவனுடைய அடியவர்க்குப் பணிபுரிந்தால் பிறவி யொழிந்து முத்தி கைகூடும். எவன் சச்சிதானந்த இயல்பினனாய் விளங்குவன். எவன் சந்திரசேகரனே அவனென்றுகாணுங்கோள் இமையீர்! யக்ஷ வடிவில் வெளிப்பட்டருளிய அழகன்.

ஒற்றைத் துரும்பின் நமதாற்றல் முற்றும் ஒழிவித் தகன்ற அவனைப், பற்றுற்று நீவிர் அறிகின்றி வீர்கள் பழையோன் அவன்றன் வலமே, அற்றத்தின் நீக்கும் அவன்பால் உதித்த அகிலந் தனக்கு வலமாம், மற்றுத் தமக்கு முதலாய மண்ணின் வலியே கடாதி வலிபோல். 18

ஓர் சிறு துரும்பிடை வைத்து நுமது வலிமையை முற்றும் போக்கி மறைந்தருளிய அப்பேராற்றலனைத் தன்முனைப்பு மிக்கமையால் நீவிர் காணும்வலியிலிர்கள். அப்பழையோன் வலிமையே ஆணவ மலத்தினின்று நீங்கும் பொருட்டு அவனிடை உதித்த உலகிற்கு வலிமையாகும். மண் முதலிய முதற் காரணங்களின் வன்மையே குட முதலிய காரியங்களிடைக் கிடத்தல் போல.

படைப்போனையும் படைப்போன் ஆகலின் 'பழையோன்' என்க. கிழங்கினின்றும் தோன்றிய தாமரையை அதற்கு ஆதாரமாகிய சேற்றிலும், நீரிலும் வைத்துப் பங்கயம், அம்புயம் என்றாற்போல மாயையில் தோன்றிய உலகத்தை அதற்கு ஆதாரமாகிய சிவசத்தி சங்கற்பித்த வழித் தோன்றுதலின் அச்சிவ சத்தி மேல் வைத்துப் பேசுதலென்க. சிவசத்தியோடு சிவத்திற்கு வேற்றுமையின்மையின் 'அவன்பால் உதித்த' அகிலம் என்றனர். 'காரணப் பொருளின்தன்மை காரியத்துளதாம்'. ஆகலின, 'மண்ணின் வலியே கடாதி வலி' என்றனர். அறிவுள் பொருளும், அறிவில் பொருளுமாகிய எப்பொருளின் ஆற்றலும் இறைவன் ஆற்றல் (சத்தி) தொழிற் படுத்தாதவழித் தொழிற் படா ஆதலின் ஆற்றல் இருந்தும் இன்மை பற்றியும், மேலும், வேறாய் நின்று விளக்கியும் உடனாய் நின்று விளங்கியும் உபகரித்தலின் இங்ஙனம் கூறினர். இறைவன் உலகிற்கு நிமித்த காரணனாவன்; மண் குடத்திற்கு முதற்காரணம் ஆகும். ஆகலின் ஒரு புடை கொள்க.

இனிநீவிர் உய்தி பெறுமா றுரைப்பல் இமையாத முக்கண் இறையோன், பனிவீசு கம்பை நளிநீர் துளிக்கும் ஒருமா நிழற் படியில்என், றனையாண்டு கொண்டு மகிழ்காமர் கச்சி தனில்எய்தி வெள்ளை விடையோன், துனிதீர் சரண்கள் சரணென் றடைந்து தொழுமின்கள் உம்ப ருலகீர்.

இனி நீவிர் பிழை தவிர்த்துய்யும் வகையை உரைப்பேன்; மேலுலகீர்! இமைத்தல் இல்லாத முக்கண்களையுடைய முதல்வன் குளிர்ச்சி பரவுகின்ற கம்பையின் பெருமை பொருந்திய நீர் துவற்றும் ஒற்றை மாமர நிழலிடத்தில் அடியேனை ஆண்டு கொண்டு மகிழ்தற்கிடனாகிய அழகிய காஞ்சியை அணுகி வெள்ளிய விடையூர் விமலன் துன்பத்தை நீக்குகின்ற திருவடிகளை அடைக்கலமென்று தொழுமின்கள்.

தேவர்கள் சிவபூசை செய்தல்

கலி நிலைத்துறை

என்று கூறினள் மறைந்தனள் உலகம்ஈன் றெடுத்தாள்
அன்று மாலயன் தொடக்கமாம் அமரர்கள் எல்லாம்
நன்று நம்அறி விருந்தவா றென்றுளம் நாணிச்
சென்று சேர்ந்தனர் கச்சியந் திருநகர்த் தேத்து. 20

உலகுயிர்களை ஈன்று வளர்க்கும் அன்னையார் இங்ஙனம் கூறி மறைந்தனர். அன்று திருமால் பிரமன் முதலாம் தேவர்கள் யாவரும் 'நம்முடைய அறிவு இருந்தவாறு நன்று' என்று கூறி உள்ளம் நாணமுற்றுக் காஞ்சிமா நகர்க்கண் சென்று சேர்ந்தனர்.

திரித சேச்சரப் பெயரினாற் சிவக்குறி இருத்திக்
கரிய கண்டனை அருச்சனை கரிசற ஆற்றிப்
பெரிது மாமிடல் பெற்றனர் வரங்களும் பெற்றார்
அரிவை பாகனுக் கினியதாம் அத்திருக் கோயில். 21

திரிதசேச்சரர் என்னும் பெயரினாற் சிவலிங்கம் தாபித்துத் திருநீலகண்ட நாயகனைக் குற்றமறப் பூசனை புரிந்து பெரிதும் பெருவன்மையையும் பெற்றுப் பிறவரங்களையும் பெற்றனர். மங்கை பங்கனுக் கத் திருக்கோயில் இனிமை பயப்பதாம்.

அமரேசப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்–991

# திருமேற்றளிப் படலம்

கலி நிலைத்துறை

துளிம துத்தொடைக் கடவுளர் தொழும்அம ரேசம்
களிவ ரப்புகன் றனம்உருத் திரகண முதலோர்
அளியி னல்தொழு தேத்தும்ஈ ரைம்பதிற் றெண்பான்
தளிகள் ஈண்டெடுத் தியம்புதும் வழுத்தபு நெறியீர். 1

குற்றங்களைக் கெடுத்தருளிய செவ்விய நெறி நிற்பீர் ! தேனைத் துளிக்கின்ற மாலையை அணிந்த தேவர் தொழும் அமரேசம் மகிழ்ச்சி மீதூரக் கூறினோம். உருத்திர கண முதல்வர் அன்பால் தொழுது துதிக்கும் நூற்றுப் பதினெட்டுத் திருக்கோயில்கள் இவண் எடுத்துக் கூறுவோம்.

சேகு தீர்அம ரேசத்தின் சேயிடைத் தென்பால்
மாக வைப்பினை உரிஞ்சிய மணிமதிற் காயா
ரோக ணக்குட பாங்கர்நூற் றுப்பதி னெட்டு
நாகர் போற்றிட நலங்கெழு தலங்கள்நன் குளவால். 2

குற்றத்தைப் போக்குகின்ற அமரேசத் தலத்திற்குத் தென் திசைச் சேணிடை விண் தலத்தினைத் தீண்டுகின்ற அழகிய மதில் சூழ்ந்த காயாரோகணத்திற்கு மேற்கில் உருத்திரர் நூற்றுப் பதினெண்மர் போற்றிட நன்மை கெழுமிய தலங்கள் சிறக்க உள்ளன.

அண்டங் காத்தமர் உருத்திரர் நூற்றுவர் அருட்சீ
கண்டன் வீரன்கு ரோதனே முதல்கரு தெண்மர்
மண்ட லத்திறை யோர்இரு நால்வரும் வழுத்திப்
பண்டு பூசனை புரிந்திடப் பட்டஅத் தளிகள். 3

அண்டத்தைக் காவல் பூண்டு விளங்குகின்ற உருத்திரர் நூற்றுவரும், அருளொடு கூடிய சீ கண்ட ருத்திரர் வீரபத்திரர் ஆகியோரும், குரோதர் முதலிய எண்மரும், மண்டலத் தலைவராகும் எண்மரும் துதித்து முன்னம் பூசனை இயற்றப்பட்டன ஆகும் அக்கோயில்கள்.

திருமால் சிவசாருபம் பெற விரும்பல்

இருமை யுந்தரு மேன்மைஅத் தளிகளை என்றும்
பொருவில் மெய்த்தவர் பற்பலர் அருச்சனை புரிவார்
கருத ரும்புகழ் அவற்றிடைக் கண்டவர் கருநோய்
ஒருவி வீடுறும் மேற்றளி என்பதொன் றுளதால். 4

போகம், பரபோகம் என்னும் இரண்டனையும் தருகின்ற மேன்மை பொருந்திய அத்திருக் கோயில்களில் எந்நாளும் நிகரில்லாத உண்மைத் தவத்தினர் பற்பலரும் வழிபாடியற்றுவர். மதித்தற்கரிய புகழமைந்த அத்தலங்களிடைத் தரிசித்தவர் பிறவி நோயை நீக்கி விட்டினை உறுவிக்கும் திருமேற்றளி என்று சிறப்பித்துச் சொல்லப்பெறும் தலம் ஒன்றுள்ளது.

நவிலும் அத்தலத் தெய்திமுன் நாகணைப் புத்தேள்
கவிர்இ தழ்ச்சிறு நுணுகிடைக் கவுரிதன் களபக்
குவிமு லைத்தடச் சுவடுதோய் குரிசில்சா ரூபம்
புவிமி சைப்பெற விழைந்துமெய்த் தவம்புரிந் தனனால். 5

கூறப்பெறும் அத்தலத்தினை அடைந்து முன்னர் ஆதிசேடனைப் பாயலாகக் கொண்ட திருமால் முள் முருக்கமலரைப் போலும் செந்நிறமமைந்த அதரங்களையும் மிக நுண்ணிய இடையினையும் உடைய கவுரி என்னும் உமையம்மையின் களபச்சாந்தம் பூசிய குவிந்த கொங்கைத் தடத்தின் தழும்பு தோய்ந்த சிவபெருமானது திருவுருவத்தை நிலத்திடைப் பெற விரும்பி உண்மைத் தவத்தை இயற்றினர்.

ஐம்பு லன்களை அடக்கிநின் றறுபகை துறந்து
நம்பு நீற்றணி அக்கமா லிகையுட னயந்து
கம்பி யாதுருத் திரங்கணித் திதயநற் கமலத்
தெம்பி ரான்அருள் வடிவினை இடையறு திருத்தி. 6

ஐம்பொறிகளின் வழியே அறிவு புறத்திற் செல்லாதடக்கி நிறுத்தி பகை ஆறனையும் நீக்கி விரும்பப்படுந் திருநீற்றுக் கோலத்தை உருத்திராக்க மாலையோடும் விரும்பிப் பூண்டு மனஞ்சலியாது சீருத்திரத்தை ஒரு வழிப்பட்டெண்ணி இருதயமாகிய நற்றாமரை மலரில் எமது பெருமானது திருவருள் வடிவை இடைவிடாமல் நிலைபெறச் செய்து,

அறுபகை காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம் என்பன, 'அகனமர்ந்த அன்பினராய் அறுபகை செற் ஐம்புலனும் அடக்கி ஞானப், புகலுடையோர் தம் உள்ளப் புண்டரிகத் துள்ளிருக்கும் புராண கோயில்' (திருஞா. மேகராகக் குறிஞ்சி)

ஆற்ற ருந்தவம் இயற்றுழி அழல்விழித் தறுகண்
கூற்றை வென்றருள் பரம்பொருள் கருணைகூர்ந் தடல்ஆ
னேற்றின் மீதெழுந் தருளிஎம் அடியரிற் சிறந்தோய்
நோற்று நொந்தனை வேட்டன நுவறிஎன் றருள. 7

செய்தற்கு அரிய தவத்தைச் செய்வுழி நெருப்புப் போலும் விழியினையும், அஞ்சாமையையும் உடைய இயமனைக் குமைத்துப் பின் அருள் செய்த சிவபிரானார் கருணைமீப் பொங்கி வலிய இடபமாகிய ஊர்தியின் மேல் எழுந்தருளி 'எம்மடியவர் தம்மிற் சிறந்தோனே! தவஞ்செய்து மெலிந்தனை விரும்பிய வரங்களைச் சொல்லுதி' என்றருள் செய்ய,

உந்தி பூத்தவன் அளப்பரும் உவகையுள் திளைத்துச்
சந்த மாமலர் அடிமிசை வீழ்ந்துதாழ்ந் தெழுந்தான்
எந்தை நீதர முழுவதும் பெற்றுளேன் இந்நாள்
அந்தில் என்றனக் களித்தருள் ஐயநின் உருவம். 8

திருமால் அளவுபடாத மகிழ்ச்சியில் மூழ்கி அழகிய பெருமை பொருந்திய மலர் போலும் திருவடிகளில் விரும்பிப் பணிந்தெழுந்து 'எந்தையே நீ அருள் செய்ய முன்னரும் யாவும் பெற்றுடையேன். ஐயனே! இப்பொழுது நினது சாரூப வடிவினை அடியேனுக்கு அளித் தருளாய்!

உந்தி பூத்தவன்—அந்தில், அசை நிலை.

சம்பந்தர் பாடலால் திருமால் சாரூபம் பெறுதல்

என்ற வாய்மொழி திருச்செவி ஏறலும் எங்கோன்
ஒன்று கூறுத லுற்றனன் உவணம்மீ துயர்த்தோய்
நன்று தேர்வைவச் சுதமனு வந்தரம் நணுகும்
அன்று நாலிரண் டீற்றுடை இருபதாங் கலியில். 9

என்ற வாய்மொழி திருச்செவியிற் எய்துதலும் இறைவனார் ஒன்றனைக் கூறத் தொடங்கினர். கருடக் கொடியோனே! நன்று கேள். வைவச் சுதமனு வந்தரம் நடைபெறும் அக்காலத்தில் இருபத்தெட்டாங் கலியுகத்தில்,

சுவாயம்பு முதலான மனுக்கள் அறுவர் மறைந்து ஏழாமனு வாகிய வைவச்சுத மனுவின் நிகழ்ச்சியில் இருபத்தெட்டாம் கலியுகம் இப்பொழுது நடைபெற்று வருகிறது. விளக்கம் காலப்பிரமாணம் என்னும் தலைப்பிற் காண்க.

காழி மாநகர்க் கவுணியர் குலத்தொரு காளை
ஏழி சைத்தமிழ் ஞானசம் பந்தன்எம் அடியான்
யாழ நீபெற எம்முரு இங்குவந் தளிப்பான்
ஆழி யோய்அது காறும்இவ் வரைப்பினில் அமர்ந்து. 10

'சீகாழிப் பதியில் கவுணியர் கோத்திரத்துள் தோன்றுகின்ற ஏற்றமுடைய ஏழிசையுடன் பொருந்திய இசைத்தமிழைப் பரப்புகின்ற திருஞான சம்பந்தராகிய எம் அடியவர் எமது திருவுருவமாகிய சாரூபத்தை நீ பெறும்படி இத்தலத்திற் கெழுந்தருளி வழங்குவர். சக்கரப் படையுடையோய்! அவர் வருமளவும் இத்தலத்தில் அமர்ந்து',

ஈட்ட ருந்தவம் இயற்றுகென் றருளிநீங் குதலும்
கோட்டம் இன்றிமால் அம்முறை வதிந்துபூங் கொன்றைத்
தோட்ட லங்கலாற் றொழப்புகும் முத்தமிழ் விரகர்
பாட்ட லங்கலால் பரஞ்சுடர் திருஉருப் பெற்றான். 11

தேடற்கரிய தவத்தை இயற்றுக' என்றருளித் திருவுருக்கரத்தலும் மனம் மாறுபாடின்றித் திருமால் அவ்விதிவழித்தங்கியிருந்து முத்தமிழ் விரகர் கொன்றைமலர் மாலையைச் சூடியுள்ள சிவபெருமானைத் திருமேற்றளியில் வழிபடுங்கால் அவர்தம பாமாலையால் திருமால் சிவபரஞ்சுடரின் திருவுருவினைப் பெற்றனர்.

திருமேற்றளிப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்–1002

---

# அனேகதங்காவதப் படலம்

கலி விருத்தம்

அச்சத ருத்திர ராதியர் போற்றுபு
மெச்சிய பஃறளி மேன்மை விளம்பினும்
எச்சம்இல் மேற்றளி யின்வட சார்அமர்
கச்சி அநேகதங் காவதங் கூறுவாம். 1

நூறு உருத்திரர் முதலியோர் போற்றி செய்து பாராட்டிய பல திருக்கோயில்களின் உயர்வை விளம்பினேம். குறைவில்லாத நிறைவுடைய திருமேற்றளியின் வடதிசைக்கண் பொருந்திய திருக்கச்சி அநேகதங் காவதத்தைப் பற்றிக் கூறுவோம்.

கறையடிச் சிறுவிழிக் கடுநடைச் சொரிமதப்
பிறைஎயிற் றெறும்வலிப் பிளிறொலிக் கரிமுகத்
திறைபுகழ்க் கச்சியில் எய்திஎம் பிரான்றனை
நிறையுமெய்க் காதலான் அருச்சனை நிரப்புவான். 2

உரலைப்போன்ற அடியினையும், சிறிய விழியினையும், விரையா நின்ற செலவினையும், சொரிகின்ற மதத்தினையும், பிறைபோன்ற தந்தத்தினையும் பெருவன்மையினையும், முழக்கொலியையும், யானை முகத்தினையும் உடைய விநாயகப் பெருமானார் புகழ்ச்சியைப் பொருந்தியுள்ள காஞ்சியை அடைந்து எமதுபெருமானை நிறைந்த மெய்யன்பினால் பூசனையைப் புரிவார்.

சயமிகும் அனேகபேச் சுரனெனத் தன்குறிப்
பெயரினல் இலிங்கம்ஒன் றிருத்தினன் பெட்பொடு
மயர்வரும் பூசனை மரபுளிப் புரிதரும்
இயல்புகண் டெம்பிரான் எதிர்எழுந் தருளினன். 3

வெற்றி மிகுந்த அநேக பேச்சுரனென்று தன் பெயரானோர் இலிங்கம் தாபித்து விருப்பினுடன் மயக்கை நீக்குகின்ற சிவபூசனையை விதித்தபடி செய்யும் இயல்பினைக் கண்டு எமது பெருமானார் எதிரே காட்சி தந்தருளினர்.

அநேகபம்—யானை.

வேட்டதென் மைந்தனே விளம்பெனத் தாதைதன்
தாட்டுணை மலர்மிசைத் தாழ்ந்தெழுந் திபமுகன்
நாட்டினில் யான்செயும் பணிஎவன் நல்கெனப்
பாட்டளி துதைமலர்க் கொன்றையான் பகர்தரும். 4

'மைந்தனே நீ விரும்பியது யாது கூறு' என்று வினவிய தந்தையார் தம் திருவடி மலர்களில் பணிந்தெழுந்து யானை முகத்தையுடைய விநாயகப் பெருமான் 'உலகிடை யான் செய்யும் பணியாது அருளா' என்று கூற இசைப்பாட்டுடன் வண்டுகள் நெருங்கா நின்ற கொன்றை மலர் மாலையை யணிந்த இறைவனார் அருள் செய்வர்.

கலி நிலைத்துறை

சுருதி நூல்முறை நிறுவவும் தூயவர் தொடங்கும்
கருமம் ஊறுதீர்த் தளிப்பவும் தயித்தியர் கயமைத்
திருவி லார்க்கிடை யூற்றினைச் செய்யவும் இவண்நீ
வருதல் வேட்டெமை முன்னரே வழுத்தினர் வானோர். 5

வேத நூல் வழக்கை நிலைபெறுத்தவும் மனமொழி மெய் இவற்றால் தூய்மை யுடையவர் மேற்கொள்ளும் செய்கைகள் இடையூற்றின் நீங்கி முற்றுப் பெற அருளவும் அசுரராகிய கீழ்மைக் குணமுடைய மூதேவிகள் செயலுக்கு இடையூற்றினைச் செய்யவும் இவ்வுலகில் அவதரித்தற்பொருட்டு எம்மைமுன்னரே வேண்டித்துதித்தனர்விண்ணவர்.'

ஆத லாற்புறச் சமயநூல் அரட்டருக் கென்றும்
தீது சால்இடை யூற்றினை விளைமதி சிவ நூல்
வேத நன்னெறி ஒழுகுநர்க் கூறுகள் விரவா
தேதம் நீத்தருள் புரிதிஎம் ஆணையின் வலியால். 6

'ஆதலால், புறச்சமயம் பற்றி வேத சிவாகம நெறிகளைப் பழித்து ஒழுகும் கீழ் மக்கட்கு என்றும் தீமையமைந்த இடையூற்றினை விளைப்பாய். எமது அருள் வழி நிற்றலால் சிவநூலாகிய வைதிக நன்னெறிக்கண் செல்வோர்க்கு இடையூறுகிய துன்பங்கள் கலவாமல் நீக்கி அருள் செய்தி.

உலகெ லாமுனே வழுத்துக வழிபடா தொழியின்
கலிகொள் வேதியர் உம்பரா யினும்அவர் கருமம்
நிலமி சைப்பயன் எய்துரு தழிகநின் இணைத்தாள்
மலர்வ ழுத்தினேர் பெரும்பயன் எய்துக மாதோ. 7

'உலகோர் யாவரும் உன்னைத் துதி செய்வாராக; வழிபாடு செய்திலராயின் பெருமைகொள் வேதத்தை உணர்ந்தவராகிய வேதியரா யினும், தேவராயினும் அவர் செய்கைகள் நிலவுலகில் பயன் கொடா தொழிக; நின்னுடைய துணைத்தாள் மலர்களைத் துதித்தோர் பெரும் பயனை அடைக.'

மங்க லங்களும் அமங்கல மாம்உனே வழுத்தார்
தங்க ளுக்கிவை வரம்உனக் கருளினம் தக்கோய்
இங்கு நீஇன்னும் ஒன்றுகேள் இரணிய புரமாம்
அங்கண் வாழ்பவர் கேசியே முதற்பலர் அசுரர். 8

'உன்னைப் போற்றி வழிபடாதார்க்கு என்றும் மங்கலச் செயல்க ளும் அமங்கலமாய் முடியும். தக்கோனே! உனக்கு இவ்வரங்களை அருள் செய்தனம். நீ இப்பொழுது இதற்கு மேலும் ஒன்றனைக் கேட்டி. இர ணியபுரம் என்னும் அவ்விடத்தில் வாழ்பவராகிய அசுரர் கேசியே முதற் பலராவர்.'

அவனி யாவையும் அலைத்துவெங் கொலைபுரிந் தமர்வார்
அவர்கள் ஆருயிர் தாளினுற் செகுத்தவர் கருவுள்
அவர்கள் சத்தியாம் வல்லபை அணங்குவீற் றிருக்கும்
அவளை நாள்தொறுங் கெழீஇக்கலந் தன்புகொண் டமர்வாய்.

'உலகோர் அனைவரையும் வருத்திக் கொடிய கொலையை விரும் பிச் செய்து வாழ்வார்; அவர் பலரையும் காலாற் சிதைத்து அவர்கள் கருவினிடமாக அவர்தம் சத்தியாகிய வல்லபை என்னும் அணங்கு வீற் றிருக்கும் அவளை மணந்து நாடொறும் கலந்து அன்பு செய்து வீற் றிருப்பாய்.'

வல்ல பைத்திரு வோடுனே வழிபடப் பெற்றோர்க்
கொல்லை வேட்டன யாவையும் உறுகென அருளி
எல்லை யில்பெருங் கருணையால் உச்சிமோந் தெடுத்துப்
புல்லி எம்பிரான் விடுத்தனன் மீண்டனன் புதல்வன். 10

'வல்லபை என்னும் அச்செல்வ மகளோடு உன்னை வழிபாடு செய் வோர்க்கு விரும்பிய வரங்கள் யாவும் உறுக' என ஒல்லையில் அருளி அளவில்லாத பெருங்கருணையால் எடுத்துத் தழுவி உச்சிமோந்து எமது பெருமானும் விடை கொடுத்தனர். புதல்வரும் விடை பெற்றுப் பெயர்ந்தனர்.

மீண்ட நாயகன் இரணிய புரத்தினை மேவி
ஈண்டு தானவக் குழுக்களைத் தாளினால் எற்றிக்
காண்ட குந்திறல் முருங்கவென் றழித்தவர் கருவின்
மாண்ட சத்தியை வாங்கினன் மணந்துவீற் றிருந்தான். 11

புறம்போந்த பெருமானார் இரணிய புரத்தினைச் சேர்ந்து குழீஇயுள்ள அசுரர் கூட்டத்தினைத் தாளால் தாக்கி மதிக்கத் தக்க வலிமை கெட வென்றழித்தவர் தம் கருவின் கண் மாட்சிமைப்பட்ட சத்தியைப் பிரித்து மணந்து வீற்றிருந்தனர்.

விநாய கப்பிரான் அருச்சனை புரியவீற் றிருக்கும்
அனேக பேசனை அனேகதங் காவதத் திறைஞ்சின்
இனாத வெந்துயர்ப் பிறவிதீர்ந் தென்னையா ளுடையான்
றனாது வெள்ளியங் கயிலையிற் சார்ந்துவை குவரால். 12

விநாயகப் பெருமான் விரும்பி வழிபாடு செய்ய வீற்றிருக்கும் அனேகபேசப் பெருமானை அத்தலத்திற் பணிந்தால் கொடுந்துன்பத்தைத் தருகின்ற கொடிய பிறவி நோய் தவிர்ந்து என்னை அடிமையாக வுடைய பெருமான் தனது வெள்ளி மலையிற் சார்ந்து அவ்விடத்தே வாழ்ச்சி பெறுவர்.

அனேகதங்காவதப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-1014

## கயிலாயப் படலம்

கலித் துறை

அல்லிப்பூஞ் சேக்கைமிசை அன்னச் சேவல் பெடைக்குருகைப்
புல்லிக்கண் படுபொய்கை அனேக தங்கா வதம்புகன்றாம்
எல்லைச்செய் மணிக்கோயில் அதன்மேல்பாங்கர் இறைஞ்சினவர்க்
கொல்லைப்பே ரருள்கூருங் கயிலா யத்தை உரைசெய்வாம். 1

அகவிதழொடு கூடிய தாமரை மலர்மேல் ஆண் அன்னம் தன் பெட்டைப் பறவையைச் சிறகரால் தழீஇக் கண்வளர்தற் கிடனாகிய நீர்நிலை சூழ்ந்த அனேகதங்காவதத்தைப் பற்றிப் பேசினோம். ஒளியை வீசுகின்ற மணிகளா னியன்ற கோயிலின் மேற்கில் பணிந்தவர்க்கு விரைவில் பேரருளைச் செய்யும் கயிலாயத்தின் இயல்பினைப் புகழ்வாம்.

முப்புரத்தவர் ஒழுக்கம்

நிலமீதும் அந்தரத்தும் நெறிதாழ் கூந்தல் அரம்பையர்வாழ்
புலமீதும் வெவ்வேறு பொன்னின் வெள்ளி தனில்இரும்பில்
வலமேவு மாதவத்தான் மயனூர் வகுத்த முப்புரிசை
உலமேவு புயத்தவுணர்க் குளவா யினவால் முன்னாளில். 2

நிலமீதும், அந்தரத்தினும், நெறித்துத் தாழ்கின்ற குழலையுடைய அரம்பையர் வாழ்கின்ற துறக்கத்தினும் வெவ்வேறியல்பினை யுடைய பொன்னாலும், வெள்ளியாலும், இரும்பாலும் ஆற்றல் வாய்ந்த பெருந் தவத்தால் அசுரத் தச்சன் இயற்றிய திரிபுரங்கள் திரண்ட கல்லொக்கும் தோளிணையுடைய அவுணர்க்கு முற்காலத்தில் உள ஆயின.

அங்கவற்றின் உறும்அவுணர் சுருதி மிருதி ஆய்ந்துணர்ந்தோர்
துங்கநிலை ஆகமங்கள் முழுதுந் தேர்ந்து துகளில்லோர்
கங்கையணி சடைப்பெருமான் வழித்தொண் டாற்றுங் கடப்பாட்
தங்குதிரு வெண்ணீறு சண்ணித் தொளிகால் வடிவினர். [டோர்

அப்புரிசைகளில் வாழும் அசுரர் வேதங்கள் மனு நூல்களாகிய இவற்றை ஆராய்ந்துணர்ந்தோர்; உயர்ந்த இயல்பினையுடைய ஆகமங்கள் முற்றுந் தெளிந்து குற்றமற்றவர்; கங்கையை அணிந்த சடையினையுடைய பெருமான் வழி நிற்கும் தொண்டு செய்யும் கடமை யுணர்ச்சியோர்; திருவருள் வாய்ந்த வெண்ணீற்றினைப் பூசி ஒளிவீசுகின்ற திருமேனியர்,

சிவலிங்கத் தருச்சனையே செய்யும் நியதிக் கடன்பூண்டார்
சிவதருமந் தலைநின்றார் திகழப் பூணுஞ் சாதனத்தார்
சிவனடியார் தமைக்காணின் உவகை துளும்புஞ் சிந்தையினர்
சிவநெறியிற் பிறழாத செயலில் தமக்கு நிகரில்லார். 4

சிவலிங்க பூசனை புரிதலையே வழுவாது கடப்பாடாக மேற்கொண்டவர்; சிவ புண்ணியத்தில் முதிர்ச்சி பெற்றவர்; விளங்கச் சிவ சின்னம் தாங்கிவர்; சிவனடியார் வழிபாட்டில் மகிழ்ச்சி ததும்பும் மனத்தினோர்; சிவநெறியினின்றும் மாறுபடாத செய்கையில் தமக்கு நிகர் தாமே ஆவர்.

எவ்விடத்துஞ் சிவகதையே இயம்பு வோருங் கேட்போரும்
எவ்விடத்துஞ் சிவபணியே இயற்று வோரும் மெச்சுநரும்
எவ்விடத்துஞ் சிவனடியார் எதிர்கொள் விருந்து புறந்தருதல்
எவ்விடத்துஞ் சிவநாம முழக்க மன்றி இலைஅங்கண். 5

முப்புரத்தில் யாங்கணும் சிவபுராணங்களைப் படிப்போரும் கேட்போரும் ஆயினர்; எவ்விடத்தும் சிவபிரானுக்குத் திருத்தொண்டு புரிவோரும் புகழ்வோரும் ஆயினர்; எவ்விடத்தும் சிவபிரானடியவரைச் சென்றெதிர் கொள்வோரும், விருந்தூட்டுவோரும் ஆயினர்; எவ்விடத்தும் சிவபிரான் திருப்பெயரின் முழக்கமன்றி பொருளற்ற ஓசை அவ்விடத்தில்லை.

திருமால் சூழ்ச்சி

இத்தகைய தயித்தியரால் இரியல் போகி உடைந்த்ழியுஞ்
சித்தமுடைக் கடவுளர்போய்த் திருமால் சரணஞ் சரண்டைந்தார்
பைத்தபணிச் சேக்கைமிசை மலர்க்கண் படுக்கும் பசுந்துளபத்
தொத்துவிரியும் நறுந்தாரான் அவரோ டிதனைத் தொடங்கினான்.

இவ் வியல்பினையுடைய அசுரரால் அஞ்சிப் புறங்கொடுத்து உடைந்து வருந்தும் மனத்தையுடைய தேவர்கள் போய்த் திருமாலின் திருவடிகளைப் புகலடைந்தனர்; படம் விரித்த பாம்பின் பாயலில் அறிதுயில் கொள்ளும் பசிய துழாய்க் கொத்து விரிந்து கமழும் நறியமாலையை அணிந்த திருமால் அத்தேவரோடும் ஆபிசார யாகத்தைத்தொடங்கினர்.

வேதமனு எடுத்தோதிக் கொடிய வேள்வி புரிகாலைப்
பூதமிகத் தோன்றினவால் அவைதாம் மும்மைப் புரஞ்சிதையக்
காதுகெனுந் திருநெடுமால் ஏவ லாற்றிற் கடிதணைந்து
நீதிநிலைத் தயித்தியர்முன் நிற்க லாற்ற தழிந்தனவே. 7

வேத மந்திரங்களை எடுத்தோதி அக்கொடிய வேள்வியைச் செய்யுங் காலத்தில் பூதங்கள் பல அவ்வேள்விக் குண்டத்தினின்றும் எழுந்தன. அவை தம்மை முப்புரம் தகர்ந்து போக அழிக்க என்னும் திருமாலின் ஏவல்வழி விரைந்து சென்று இறைவழிபாட்டில் நியதிபூண்ட அசுரர் முன் நிற்கவும் வலியின்றி அழிந்தன.

அதுகாணூஉ நனிநடுங்கும் அமரர் தம்மை முகம்நோக்கி
மதுவாரும் நறுந்துளப மாயன் இதனை வகுத்துரைப்பான்
இதுகேண்மின் நமரங்காள் அச்சோ அவுணர் எல்லாரும்
பொதுமேவி நடம்நவிற்றும் புத்தேள் சரணஞ் சரணடைந்தார். 8

அதனைக் கண்டு பெரிதும் நடுங்கும் தேவரைத் தேனொழுகும் நறிய துளசி மாலையை அணிந்த திருமால் நோக்கி இதனை விரித்துரைப்பார்; 'நம்மவர்களே! இதனைக் கேளுங்கள். அச்சோ! அவுணர் யாவரும் பொதுத் தன்மையுற்றுத் திருக்கூத்தியற்றும் அம்பலவாணர் திருவடிகளைச் சரணடைந்தனர்.'

பொதுத்தன்மை, பரவுவார், பழித்திகழ்வாராகிய நல்லவர் பொல்லவர்க்கும் நடுவு நிற்றல்.

தீத்தொழிலில் தலைநின்ற கொடிய ரேனுஞ் சிவபத்தி
வாய்த்தவர்கள் சாவாத மதுகை யுடையர் யாம்அவரைப்
பூத்தநுதிக் கணைஒன்றாற் பொருக்கென் றழிக்கும் வலிஇல்லேம்
ஆர்த்தபுகழ்ச் சிவபெருமான் தானே அதற்கு வல்லவனும். 9

'கொடுஞ் செயலில் உறைத்து நின்ற கொடியராயினும் சிவபிரானிடத்துப் பேரன்பு வாய்த்தவர்; அழியாத பெருவன்மையைப் பெற்றவர்; பொலிவமைந்த நுனியுடைய அம்பொன்றினால் விரைய அழிக்கும் வன்மை யுடையேம் அல்லேம் யாம். பொருந்திய புகழையுடைய சிவபெருமானொருவரே அதற்கு வல்லவராவர்.'

கலி விருத்தம்

அனையவன் அடிபேணி அடைந்தவர் அவர்கண்டீர்
இனிஅவர் சிவபத்தி சிதைவுசெய் திடுகேம்யாம்
நினைதரும் இதுவல்லாற் பிறிதில்லை நெறிஎன்னாப்
புனைபுகழ் நெடுமாயன் புகன்றிது புரிகிற்பான். 10

'அப்பெருமானார் திருவடிகளைப் போற்றி அடைந்தவர் அத்திரிபுரர் காண்மின்! இப்பொழுது யாம் அவர்தம் சிவபத்தியை மாற்றுவேம். எண்ணும் இவ்வுபாய மல்லால் வெல்லும் வழி பிறிது இல்லை' என்றுகூறி அழகிய புகழையுடைய திருமால் விரும்பி இதனை இயற்றுவர்.

மறைநெறி பழுதென்றும் மறுமையொன் றிலையென்றும்
உறைதரு பொருளெல்லாங் கணத்தழி வுறுமென்றும்
அறைதரும் ஒரு நூலை ஆக்குபு வடிவத்திற்
பொறைபுரி தன்கூற்றோர் புருடனை வருவித்தான். 11

வேதத்துட் கூறப்படும் பொருள்கள் பிழையுடையன என்றும், மறுபடியும் அவற்றாலெய்தும் பயனும் சிறிதும் இல்லை என்றும், காணப்படுகிற பொருள்கள் யாவும் கணநேரத்தில் அழிவெய்தும் என்றும் பேசப்படும் பிடக நூலை இயற்றித் தாங்குகின்ற தன் வடிவினின்றும் தன் அமிசமாக ஓர் புருடனை வருவித்தார்.

அங்கவன் முகம்நோக்கி அடல்அரி புகல்கிற்பான்
இங்கிது புத்தாகேள் இனையதோர் நூல்கொண்டே
பொங்கிய சிவநேசம் பூண்டுயர் புரஅவுணர்
தங்களை மயல்பூட்டிச் சிவநெறி தபுவிப்பாய். 12

அப்புருடனின் முகத்தைப் பார்த்து வலிமை அமைந்த திருமால் கூறுவர்: 'புத்தனே! இதனைக்கேள். இந்நூலின் துணையால் மிகுந்த சிவநேசம் பூண்டமையால் உயர்ந்த திரிபுர அசுரர்களை மயக்குறுத்திச் சிவ நெறியினின்றும் வழுவுவிப்பாய்?'

நாரதன் துணையாக நடமதி இருவீர்க்குஞ்
சீரிய மறைவாய்மை சிந்தையின் நிலைபெறுகென்
றோர்பெற விடைநல்க யாழிசை முனிவோனும்
தேரனும் விரைந்தெய்தித் திரிபுரம் அணுகுறலும். 13

'நாரதனைத் துணையாக உடன் கொண்டு நடத்தி, நும் இருவீர் உள்ளத்தும் சிறந்த வேதப்பொருள்களின் உண்மை திரியாது நிலை பெறுக' என்றெழுச்சி யுண்டாகச் செல்ல விடுப்ப மகதியாழுடைய நாரதனும் முனிவனும், புத்தனும் விரைந்து போய்த்திரிபுரத்தை நணுகுதலும்,

மீயுயர் புரமூன்றின் மேவுநர் அவர்செய்யும்
மாயையின் மருளுற்று மற்றவர் மாணுக்க
ராயினர் அவர்கூறுஞ் சாத்திர மதுநம்பித்
தீயதோர் வழிஒழுகிச் சிவநெறி தனைவிண்டார். 14

மிக்குயர்ந்த திரிபுரத்தசுரர் அவர் செய்யும் வஞ்சனையான் மயங்கி அவர்க்கு மாணுக்கராயினர். அவர் கூறும் நூலினை நம்பிக் கொடிதாய புறவழி ஒழுகிச் சைவ ஒழுக்கத்தைக் கைவிட்டனர்.

தாழ்நெறி தலைநின்று சாதனம் திருநீறு
வாழ்வுறுஞ் சிவதருமம் மறைநெறி கைவிட்டார்
ஊழ்வலி எவர்வெல்வார் ஊங்குவர் மனைவியரும்
யாழ்முனி மொழிகேட்டுக் கற்பினை இழந்தார்கள். 15

புறச்சமய நெறியில் உறைத்து நின்று விபூதி, உருத்திராக்கம் முதலிய சாதனங்களையும வாழ்வு மிகுக்கும் சிவ புண்ணியங்களையும் வைதிக ஒழுக்கங்களையும் கைவிட்டனர். விதி வலிமையை யாவரே வெல்வர். அவர்தம் மனைவியரும் நாரதர் உபதேசத்தால் கற்பினை இழந்தார்கள்.

திருமால் திருக்கைலை அடைதல்

விழியுறக் கண்டதுவே மெய்யெனுந் துணிபினராய்
இழிதொழில் பலபுரியும் இவர்செயல் முழுதோர்ந்து
பழுதறு புகழ்மாயோன் பண்ணவர் புடைசூழக்
கழிபெரு மகிழ்வோடுங் கைலையை அணுகினனுல். 16

கண்ணுற் காண்பனவே உள் பொருள் என்னும் உறுதியினராய்ப் பாதகச் செயல் பல விரும்பிச் செய்யும் திரிபுரர்கள் தம்முடைய செயல்களை முழுதும் ஆராய்ந்து குற்றமற்ற புகழினையுடைய திருமால் தேவர் சூழ்ந்துவர மிகப் பெருமகிழ்ச்சியோடும் திருக்கயிலையை அணுகினர்.

கருதலளவையையும், நூலளவையையும் புறக்கணித்துக் கண்டதே காட்சி கொண்டதே கோலம் என ஒழுகினர்.

அங்கணைந் திறையோனை அடியிணை தொழுதேத்தி
பங்கயக் கரங்கூப்பிப் பரிவொடும் உரைசெய்வான்
சங்கணி குழையாய்முப் புரமுறு தானவர்தாம்
எங்களுக் கிடர்செய்ய நொந்தனம் இதுகாறும். 17

அணுகிப் பெருமான் திருவடிகளைப் பணிந்தெழுந்து துதித்து தாமரை மலர்போலும் கரங்களைக் குவித்து விழிப்பொடும் உரைப்பான். சங்கினால் இயற்றப் பெற்ற குழைக்காதணியினனே! முப்புரத்தில் உறை அசுரர் எங்களுக்குத் துன்பம் செய்ய அதனால் இப்பொழுதளவும் வருந்தினம்.

மாயையின் நெறிகாட்டும் புத்தனின் மருளுற்றுத்
தூயநன் னெறிவிட்டார் துகள்படும் அவர்தம்மை
மாய்வுசெய் தெமைஆள்வாய் யாமனை வனிதைமுத
லாயினர் தமைமுன்னாள் மருள்புரி அடிகேளோ. 18

'மயக்குறும் வழியை ஒளிநெறியென உணர்த்தும் புத்தனால் மருண்டு தூய்மையும் நன்மையும் அமைந்த வழியைக் கைவிட்டார். குற்றப்படும் அவரை அழித்து எம்மை ஆட்கொள்வாய். முனிவரர் துணைவியராகிய யாமனை முதலானோரை மயக்குறுத்தும் அடிகளே?

பெருமான் முப்புரம் எரித்தல்

வஞ்சி விருத்தம்

என்று மாயன் இயம்புசொல்
சென்று வார்செவி சேர்தலும்
மன்று ளாடிய வான்பொருள்
ஒன்று கூறுத லுற்றிடும். 19

என்று திருமால் வேண்டிய சொற்கள் நீண்ட திருச்செவிகளில் சென்று சேர்ந்த அளவிலே அம்பலத்தாடுகின்ற பரம்பொருள் ஒன்று கூறத் தொடங்கும்'.

கருவி மூதெயில் காதுபோர்க்
கருவி ஒன்றிலம் காண்வரக்
கருவி கூடிற் கணத்தவர்
கருவெ லாமிறல் காண்டியால். 20

'போர்க்கருவிகள் அமைந்த பெரிய கோட்டைகளை அழிக்கின்ற போருக்குரிய துணைக்காரணங்கள் ஒன்றனையும் காணும்படி உடையே மல்லேம்; அவை கிடைப்பின் ஓர் கணப்பொழுதில் மூலத்தொடும் அழிதலைக் காண்பாயாக.'

என்னும் வாய்மொழி எம்பிரான்
முன்னர் நந்தி முகத்தினாற்
சொன்ன காலைத் துழாயனும்
அன்ன தேவரோ டாய்ந்தனன். 21

என்னும் திருவார்த்தையை எமது பெருமான் திருமுன் நிற்கும் நந்தி தேவர் வாயிலாக அறிவித்த பொழுது மாயவனும் அத்தேவரோடும் கூடி ஆலோசித்தனன்.

வேறு

உருகெழு நிலம்ஒரு வையமும்
இருசுடர் இருபுடை ஆழியும்
சுருதிகள் துகளறு வாசியும்
மருமல ரணையவன் வலவனும். 22

வடிவுடைய பூமி ஒப்பற்ற தேர்த்தட்டாகவும், சந்திர சூரியர் இருமருங்கும் உள்ள சக்கரங்களாகவும், வேதங்கள் குற்றமற்ற குதிரைகளாகவும் மணமுடைய மலர்த்தவிசினனாகிய பிரமன் சாரதியாகவும்,

தடநெடு வடவரை சாபமும்
படவர விறைபகர் நாரியும்
மடல்விரி துளவினன் வாளியும்
கடவுளர் பிறர்பிற கருவியும். 23

பரப்பும் உயர்ச்சியும் உடைய மேருமலை வில்லாகவும், படமுடைய பாப்பரசாகிய வாசுகி நாணாகவும், இதழ் விரிகின்ற துளவ மாலையையுடைய மால் அம்பாகவும், தேவர் பிறர் பிறகருவிகளாகவும்,

ஆயினர் அதுபொழு தண்ணலும்
ஏய்வுறும் இரதமி தேறினன்
மாயிரு நெடியவில் வாங்கினன்
காய்கனல் உமிழ்கணை பூட்டினன். 24

அமைந்தனர்; அப்பொழுது பெருமானாரும் பொருந்தும் தேரில் ஏறினார்; மிகப்பெரிய நீண்ட வில்லை வளைத்தனர்; அழிக்கின்ற நெருப்புமிழும் அம்புகளைப் பூட்டினார்.

எறுழ்வலி முழுவதும் எண்ணினன்
கறுவுறு குறுநகை காட்டினன்
முறுவலின் உயர்புரம் மும்மையும்
நெறுநெறு நெறுவென நீறின. 25

தேவர்களுடைய பெருஞ்செருக்கை முற்றவும் திருவுள்ளத்தி லெண்ணினர்; சினத்தொடு கூடிய புன்னகையைத் தோற்றுவித்தனர்; புன்சிரிப்பினால் உயர்ந்த நகரங்கள் மூன்றும் 'நெறு நெறு நெறு' எனும் ஒலிக்குறிப்புடன் நீறாயின.

எறுழ்வலி—ஈண்டு இறுமாப்பு. அமரேசப் படலம் 6-ஆம் செய்யுளில் வரும் திறலும் இப்பொருளுடையதே; தம்மால் இயல்வதாகத் தேவர் தத்தமுட் கருதினர்.

பரவுறும் இமையவர் பார்த்தனர்
குரவையி னொடுமகிழ் கூர்த்தனர்
பொருபுள கமும்உடல் போர்த்தனர்
அரகர கரவென ஆர்த்தனர். 26

துதி செய்யும் தேவர்கள் நோக்கினர்; குரவைக் கூத்தொடும் மகிழ் மீக்கூர்ந்தனர்; மயிர்க்கூச் செறிவான் உடலை மறைத்தனர்; 'அர அர அர' என ஆரவாரித்தனர்.

முப்பத்து முக்கோடி தேவர் ஆதலின் விரிவு மிகுந்த எனும் பொருளில் 'பரவுறும்' என்றனர் எனினுமாம்.

அறுசீரடி யாசிரிய விருத்தம்

அனைய வானவர்க் கரும்பெறல் வரம்பல அருள்செய்து கயி-லாயத், தெனையு டைப்பிரான் இனிதெழுந் தருளினன் இமையவர் எல்லாரும், நனைம லர்த்துழாய் நாரணன் அயனொடு நலம்பெறக் குழீஇஅந்நாள், வினைஇ கந்துல குய்யுமா றிஃதொன்று விதிக்க-லுற் றனர்மன்னோ.

அத்தகைய தேவர்க்குப் பெறலரிய வரங்கள் பலவும் அருளி என்னை அடிமை கொண்ட பெருமான் கயிலாயத்திற்கு இனி தெழுந்தருளினர். தேவர் யாவரும் தேன்பொருந்திய துழாய் மலர் மாலையையுடைய திருமால் பிரமரொடும் நலமுறக்கூடித் தீவினை நீங்கி உலகோர் வாழ்வுறு மாறு ஓர் கட்டளையிட்டனர் அந்நாளில்.

இற்றை நாள்முதல் சைவலிங் கார்ச்சனை இல்லவர் வினைமாசு
செற்ற நீற்றணி கண்டிகை இரந்தவர் சிவன்பெயர் வழுத்தாதார்
கற்றும் அஞ்செழுத் துருத்திரங் கணித்திடார் எமக்கய லவராக
அற்ற வாறவர் கடையரே எனவகுத் தவரவர் இடம்புக்கார். 28

'இந்நாள் முதலாகச் சிவலிங்க பூசனை இல்லாதவரும் தீவினை யாகிய அழுக்கைச் சிதைக்கின்ற திருநீற்றினையும் அணிகின்ற உருத்திராக்க வடத்தையும் கைவிட்டவரும், சிவபிரானுடைய திருநாமத்தைக் கணிக்காதவரும், பன்னூல் பயின்றும் அஞ்செழுத்தாகிய சீருத்திரத்தை எண்ணாதவரும் எமக்கயலவராகுக. அவ்வாறன்றி மேலும் அவர் கடைப்பட்டோர் ஆவர்' என வகுத்துரைத்து அவரவர் உலகின் இருக்கையை எய்தினர்.

புத்தனும் நாரதனும் பூசனை புரிதல்

மன்னு நாரத முனிவனும் புத்தனும் மனங்கவன் றழிந்தேங்கி
என்ன காரியம் இயற்றினம் இமையவர் இயம்பிய மொழிகேட்டுப்
பன்ன ருஞ்சிவ பத்தரில் உயர்ந்தவர் பழமறை கரைகண்டோர்
அன்ன தானவர் தமைவறி தேமயல் பூட்டினம் அந்தோவே. 29

பெருமையுறும் நாரத முனிவனும் புத்தனும் மனக்கவலையுற்று அழிவெய்தி இரங்கித்தேவர் கூறியவற்றைக்கேட்டு 'என்ன காரியத்தைச் செய்தோம்! புகழ்தற்கரிய சிவபத்தர்களுள் உயர்ந்தவரும் பழைய வேத நூற்கடலை நிலைகண்டுணர்ந்தவரும் ஆகிய அசுரரை வீணே மயக்க அறிவை ஊட்டினோம். ஐயகோ!'

ப்ழியில் வாய்மையர் பலர்தமைத் தீவழிப் படுத்தஇப் பெரும்பாவக்
கழிவு வேதநூல் யாங்கணுங் கண்டிலேம் கற்பகோ டியின்மேலும்
ஒழிவு றாதெமக் கிருள்நர கினிச்செயல் யாதென உளம் நெக்கார்
சுழிபு னற்பணைக் காஞ்சியின் எய்தினர் தொடுபழி வினைமாற. 30

'புகழ்ச்சியை உடைய மெய்ம்மையர் பலரையும் புன்னெறியிற் செலுத்திய இப்பெரும் பாதகம் தீரும்வழி வேதநூலில் யாண்டும் காண்கிலேம்; 'இருள்' என்னும் நரகினின்றெழுதல் கற்பகோடி வருடத்தின் மேலும் ஒழிவதன்றே இப்பொழுது செய்வது யாதென மனம் உடைந்தனர். பற்றியுள்ள பழியும் பாவமும் நீங்க மிக்க நீர் சூழ்ந்த வயல்களையுடைய காஞ்சியை அடைந்தனர்.'

கருத்த விர்த்தருள் மழுவலான் புரந்தருள் காஞ்சியிற் புகலோடும்
இருப்புக் குன்றுறழ் திண்பெருந் தீவினை எம்பிரான் அருளாலே
பருத்திக் குன்றென நொய்மைய தாயது பார்த்தனர் இருவோரும்
அருத்திகூர்ந்தனர்அவ்விடம்பருத்திக்குன்றுமெனப் பெயரிட்டார்.

பிறவியைத் தவிர்த்து முத்தியை அருள் செய்கின்ற சிவபெருமான் காப்பிற்பட்ட திருக்காஞ்சியிற் புகும் அளவில் இரும்பு மலைபோலுந் திண்ணிய பெரிய தீவினை எமது பெருமான் திருவருளாலே பருத்திப் பொதி போலும் மெலிந்தது. இருவரும் அவ்வேறு பாட்டை அறிந்தனர்; அன்பு மீதூர்ந்தனர். அவ்விடத்திற்குப் 'பருத்திக் குன்றம்' எனப் பெயரிட்டார்கள்.

அவ்வ ரைப்பினில் இருந்துகொண் டிருவரும் அதன்வட கீழ்
பாங்கர், எவ்வம் இல்லதோர் விசித்திரக் கோயில்அங் கியற்றினர்
அதன்உள்ளால், சைவர் சூழ்கயி லாயநா தன்றனைத் தாபனஞ்
செய்தேத்திச், செவ்வன் மாதவம் பன்னெடு நாளுறச் செய்தனர்
அதுகாலை. 32

புத்தனும் நாரதரும் அச்சூழலில் தங்கியிருந்து அதற்கு வடகிழக்கில் குற்றமற்ற விசேடம் உடைய சித்திரக் கோயில் எடுத்தனர்; அக்கோயிலுள் சைவர் வலம் வரும் கயிலாய நாதப் பெருமானைத் தாபித்துத் துதிசெய்து மேவிய பெருந்தவம் மிகப் பலகாலம் செய்தனர்.

கயிலாய நாதர் காட்சி தந்தருளல்

பளிக்கு மால்வரை நிமிர்ந்தன விடைமிசைப் பல்கணம் புடை-சூழ, ஒளிக்கு ழாந்திரண் டெழுந்தென எழுந்தருள் ஒருவனைக் கண்ணுற்றார், தெளிக்கும் இன்னிசைத் திவவியாழ் முனிவனுந் தேரனும் விழிநீருட், குளிக்கு மேனியர் பலமுறை பணிந்தனர் கூறுத லுற்றாரால். 33

பல்வகைப் பூத கணங்கள் புடைசூழப் பளிங்கால் இயன்ற பெரு மலை கால் கொண்டு நிமிர்ந்தாற் போன்ற விடைமேல் ஒளிக்கூட்டங்கள் திரண்டெழுந்தாற் போல எழுந்தருளும் ஒப்பற்ற முதல்வனை இன்னிசையைப் பிலிற்றும் வார்க்கட் டமைந்த யாழுடைய நாரதனும், புத்தனும் கண்களாரக் கண்டு அன்பினால் வழியும் கண்ணீருள் மூழ்கும் மேனியராய் பலமுறை வணங்கிக் கூறுவாராயினர்.

ஐய னேஉனக் கடியரை அடியரேம் அரில்படு புறநூலான், மையல் பூட்டினேம் இப்பிழை பொறுத்தருள் வள்ளலே என-வேண்டத், தொய்யில் பூத்துவிம் மாந்தெழுந் தணிகெழு துணைத்த-பூண் முலைக்கொம்பர், செய்ய வாய்உமைக்கொருபுறம்அளித்தருள் சிவபிரான் இதுபேசும். 34

'ஐயனே! உனக்கடியராயினாரை அடியேம் குற்றமுடைய புறச்சமய நூல்கொண்டு வஞ்சித்து மயங்க வைத்தேம்; வள்ளலே! இப்பிழையைப் பொறுத்தருளுக' எனக் குறையிரப்பத் தொய்யில் பொலிந்து பூரித்து நிமிர்ந்து அழகு கெழுமி இணைந்த அணிகளையுடைய கொங்கையையும், இந்திரகோபம் அனைய சிவந்த அதரத்தையும் உடைய உமையம்மையார்க்கு ஓர் பாகம் அளித்தருள் சிவபெருமான் இதனைக் கூறும்.

துணை—இரண்டு. தொய்யில்—தனத்தில் எழுதப்படும் கோலம்.

வேறு

கொடியநீர் இழைத்த பாவம் கோடியாண் டவதி யாற்றுங்
கடன்நெறி எவற்றி னானுங் கழிவுறா கண்டீர் நந்தம்
அடியரைப் படிற்று நூலாற் பொருளினால் ஆசை காட்டிப்
படிமிசை மயக்கு வோர்கள் படுகுழி நரகில் வீழ்வார். 35

'நீவிர் இயற்றிய கொடிய பாவச் செயல்கள் கோடி வருட எல்லை செய்யும் கடப்பாட்டு நல்வழி எவற்றினாலும் கழுவாயாய் நீங்கா. நம் அடியவர்களைப் பொய்ந்நூல்களைக் காட்டியும், பொருளில் விருப்பூட்டியும் இவ்வுலகில் வஞ்சிப்போர்கள் நரகக் குழி வீழ்ந்து எழார்.'

பாதகம் எவற்றி னுக்குந் தீர்திறம் பகரும் நூல்கள்
மேதகும் அடியார் தம்மை மயக்கிய வினையி னோர்க்கு
நோதகு நரகே யன்றி நுவன்றிடா வேறு தண்டம்
ஓதுழி அதுவுங் காஞ்சி உற்றவர்க் கொழிவு கூடும். 36

'பாவச் செயல்கள் எவற்றினுக்கும் அவ்வவற்றில் தப்பினோர்க்குரிய பிராயச்சித்தம் (கழுவாய்) நூல்கள் பேசும்; மேன்மை பொருந்திய அடியவர் தம்மை மயக்கிய தீவினையை யுடையவர்க்கு வருந்தத் தக்க நரக தண்டனையன்றி வேறோர் சிறு தண்டனைகளை நூல்கள் பேசமாட்டா. சொல்லுமிடத்து அத்தகு தீராப் பாவமும் காஞ்சியைப் புகலடைந்தவர்க்கு நீங்கும்.'

கச்சியில் உறுத லானும் கடுவினை மெலிதாய் விட்ட
திச்சையின் இலிங்கம் இங்கண் இருத்துபு வழிபா டாற்றும்
அச்செயல் வலியாற் சாலக் கழிந்ததே யானுங் கேண்மின்
மூச்சகம் புகழும் நல்யாழ் முனிவனே புத்த ரேறே. 37

'மூவுலகும் புகழும் நல்ல யாழுடைய முனிவனே! புத்தர்க்குத் தலைவனே! கேளுங்கள் காஞ்சியை அடைந்த காரணத்தாலே தீவினையின் வலிமை மெல்கிற்று. விருப்பினால் சிவலிங்கம் இங்குத் தாபித்து வழிபாடு செய்யும் அத்திண்ணிய பயனால் பெரிதும் கழிந்தது; ஆயினும்,'

பிறர்க்குப கார மாதற் பெற்றியான் ஒருகாற் பாவத்
திறத்தினைப் புரிவ ரேனுஞ் சிவநெறிச் சிதைவு தன்னை
மறப்பினும் எண்ணல் ஓம்பல் எண்ணினோர் வழங்கல் செல்லா
நெறிப்படு நரகின் வீழ்ந்து நீந்தரும் இடும்பை கூர்வார். 38

'பிறர்க்கு உதவியாக அமைய ஓர் கால் பாவச்செயலை மேற்கொள்வரேனினும் சிவபுண்ணியச் செயலை மாற்றுதலை மறந்தும் எண்ணாமல் குறிக்கொண்டு காக்க. சிவபுண்ணியத்தைச் சிதைக்க எண்ணினோரும் பிற குற்றங்கள் செய்தோர் புகாத நரகக் குழியில் வீழ்ந்து கடத்தற்கரிய துன்பக் கடலில் அழுந்துவர்.'

இன்றுநீர் வழுத்தும் அன்புக் கிரங்கினேம் நுமது பாவம்
துன்றுபல் பிறவி தோறுஞ் சுழன்றலாற் கழியா தாகும்
நன்றது கழியு மாறு நவிலுதும் இனைய வைப்பின்
மன்றமற் றெமைப்பூ சித்து வலம்புரிந் துறைதிர் என்றும். 39

'இப்பொழுது நீவிர் துதி செய்தற்குக் காரணமான அன்பினுக்கு இரங்கி எளி வந்தனம். நும்முடைய தீவினைகள் செறிகின்ற பல் பிறப்புக்களில் உழன்று நுகர்ந்து அல்லாமற் கழியா ஆகும். விரைவிற் கழியுமாறு கூறுவேம். இத்தலத்தில் எம்மை உறுதிபெற என்றும் பூசனைபுரிந்து வலம் வந்து இருப்பீராக.'

வலஞ்செயப் புகும்அப் போதும் வெளிக்கொளும் போதும் வாயிற்
புலந்தனைச் சுருங்கை யாகப் புரிதும்அங் கவையே கன்மப்
பலங்களை நுகருந் தோற்றம் இறப்பெனும் பகுதி யாகி
இலங்கஈண் டினிது வாழ்மின் இறுதியில் தருதும் முத்தி. 40

'வலம் வரப் புகும் அப்பொழுதும் வெளிவருங் காலத்தும் வாயிலிடத்தை நுழைவழியாக அமைப்போம். வெளிப்படலும், புகுதலுமாகிய ஆகிய அவையே கருமப் பயனை நுகர வரும் பிறப்பும் இறப்பும் என்னும் பிரிவினவாய் விளங்க இவ்விடை வருந்துறுது வாழ்மின். முடிவில் முத்திப் பேற்றினை வழங்குவோம்!'

சுருங்கை–நுழைவழி; திட்டிவாயில் (திருநகரப்படலம் 81.)

சித்திகள் எவையும் நல்கும் விசித்திரச் சிற்பம் வாய்ந்து
சித்தர்கள் அருச்சித் தேத்தத் திகழ்கயி லாய மேன்மை
சித்தமா சகன்றோர்க் கன்றித் தெரிவுறு காண்மி னென்று
சித்தசன் எரிய நோக்குஞ் சேவகன் கரந்து போந்தான். 41

'கருதிய பேறுகள் எவற்றையும் வழங்குதற்கிடனும் அதிவிசித்திரச் சிற்பங்கள் அமைந்து சித்தர்கள் அருச்சனை செய்து போற்றத் திகழ்கின்ற கயிலாயத்தின் மேம்பாடுகள் ஆணவ மலவலி தொலைந்து மெய்யறிவு பெற்றவர்க்கு அன்றி ஏனையோர்க்கு விளங்கா காணுங்கோள்' என்று மன்மதனை நீறுபட நோக்கிய வீரராகிய பெருமானார் மறைந்தருளினர்.

இருவரும் அவ்வா றங்கண் இறைவனை வலஞ்செய் தேத்திக்
கருவற நெடுநாள் வைகித் திருவருட் கலவி பெற்றார்
திருவளர் காஞ்சி மூதூர்த் திண்பெருங் கயிலை போலும்
ஒருதலம் அதுவே யன்றி உலகம்மூன் றிடத்தும் இல்லை. 42

இறைவன் அருளிய வாறே அத்தலத்தில் இருவரும் சிவபிரானை வலஞ்செய்து வணங்கித் துதித்துப் பிறவி நீங்க நெடுங்காலம் தங்கியிருந்து திருவருளிற் றலைப்பட்டனர். திண்ணிய பெரிய கயிலையை ஒக்கும் ஓர் தலம் அக்கயிலாயநாதர் கோயிலே அன்றி மூன்றுலகங்களினும் வேறொன்றில்லை.

கயிலாயப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்–1056.



# வீர ராகவேசப் படலம்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

புத்தருக் கிறையும் நல்யாழ்ப் புலங்கெழு முனியும் போற்ற
அத்தனூர் இனிது வைகுங் கயிலையின் அடைவு சொற்றும்
இத்தகு வரைப்பின் கீழ்பால் இளநறுக் கொப்பு ளித்துத்
தொத்தலர் பொழில்சூழ் வீர ராகவஞ் சொல்ல லுற்றும். 1

புத்தர் தலைவரும், மகதியாழுக்குரிய அறிவு கெழுமிய நாரத முனிவரும் வழிபாடு செய்யச் சிவபெருமானூர் இனிது விளங்கும் கயிலாயத் தலத்தினது வரலாற்றைக் கூறினோம். இத்தலத்திற்குக் கிழக்கில் செவ்விய தேன் கிளைத்துக் கொத்துக்களில் வைத்து மலர்கள் விரிகின்ற சோலை சூழ்ந்த வீரராகவேசத்தின் வரலாற்றைக் கூறுவாம்.

கெழு—பொருந்துத லென்னும் பொருளையுடைய தொருசாரியை, ராகவன்–ரகுமரபில் வந்தவன்.

இராமன் முறையிடல்

ஒன்னலர் குருதி மாந்தி ஒளிறுவேல் இராமன் என்பான்
தன்மனைக் கிழத்தி தன்னைத் தண்டக வனத்து முன்னாள்
கொன்னுடைத் தறுகண் சீற்றக்கொடுந்தொழில் அரக்கன் வௌவ
துன்னரும் இலங்கை புக்கான் மேல்வரு துயரம் நோக்கான். [வித்

பகைவருடைய செந்நீரை நிரம்பப் பருகி ஒளிவிடும் வேலையுடைய இராமன் என்று சிறப்பித்துப் பேசப்படுவோன் தனது மனையறங்காக்கும் உரிமை யுடைய சீதாபிராட்டியைத் தண்டகாரணியத்தில் முன்னாளில் பிறர்க்கு அச்சந்தருதலையுடைய அஞ்சாமையையும், சினத்தையும் தீய செயலையும் உடைய அரக்கனாகிய இராவணன் கவர்ந்து பின் விளையுந்துன்பத்தை எண்ணாகிப்பிறர் நெருங்குதற்கரிய இலங்கைக்குச் சென்றனன்.

பெய்கழல் கறங்கு நோன்தாள் பெருவிறல் இராமன் அந்நாள்
எய்சிலைத் தம்பி யோடும் இடருழந் தழுங்கி ஏங்கிக்
கொய்தழை வனங்கள் எங்குங் கொட்புறீஇக் கமல வாவிச்
செய்புடை யுடுத்த காஞ்சித் திருவளர் நகரஞ் சேர்ந்தான். 3

வீக்கிய கழல் ஒலிக்கின்ற வலிய தாளும் பேராற்றலும் உடைய இராமன் அந்நாளில் அம்பை எய்கின்ற வில்லேந்திய தம்பி இலக்குவனோடும் துன்பப்பட்டு வருந்தி இரங்கிக் கொய்கின்ற தழையையுடைய காடுகளில் எவ்விடத்தும் சுழன்று தாமரைப் பொய்கையையுடைய வயல்சூழ்ந்த திருத்தங்கு காஞ்சி மாநகரைச் சேர்ந்தனன்.

இடும்பைநோய் அறுக்குந் தெண்ணீர் எழிற்சிவ கங்கை யாடி
நெடும்பணை ஒருமா மூல நின்மலக் கொழுந்தை ஏத்திக்
கொடும்படைச் சனகன் ஈன்ற கோதையைப் பெறுவான் கூற்றை
அடும்புகழ்ச் செய்ய தாளை இரந்துநின் றழுது வேண்டி. 4

துன்ப நோயைத் தவிர்க்கும் தெளிந்த நீரினையும் அழகினையும் உடைய சிவகங்கையில் மூழ்கி நீண்ட கிளைகளையுடைய ஒற்றைமாவடியில் வீற்றிருக்கும் விமலரைத் துதித்து தறுகண்மை அமைந்த சேனையையுடைய சனகன் ஈன்ற சானகியைப் பெற வேண்டி இயமனை உதைத்த புகழுடைய செவ்விய தாளை இரந்து நின்று அழுது வேண்டி,

தாழ்ந்தெழுந் தேகித் தென்பால் அகத்தியேச் சரத்தின் முன்னர்
வாழ்ந்திடுந் தகைமை சான்ற வண்டமிழ் முனியைக் கண்டான்
சூழ்ந்தவெந் துயரத் தோடும் ஓடினன் துணைத்தாள் மீது
வீழ்ந்தனன் புலம்ப லோடும் வெருவரேல் என்னத் தேற்றி. 5

பணிந்தெழுந்து தென் திசையில் போய் அகத்தியேச்சரத்தின் முன்னர்ப் பெருந்தகுதி நிரம்பிய வண்டமிழ் முனிவராகிய அகத்தியரைக் கண்டனன்; மூடிய கொடுந்துன்பத்தோடும் ஓடினன்; திருவடிகளில் வீழ்ந்து அழுதரற்றும்போது 'அஞ்சாதே!' என்னத் தேற்றி,

இத்துணை இடும்பைக் கேது எவன்என வினவுஞ் செல்வ
முத்தமிழ் முனிவன் கேட்பப் புகுந்தவா மொழிய லுற்றான்
மைத்தவார் கரிய கூந்தற் கௌசலை மணந்த திண்தோள்
சத்துவ குணத்தான் மிக்க தசரதன் ஈன்ற செம்மல். 6

இவ்வளவு துன்பத்திற்குக் காரணம் என்னை என வினவுஞ்செல்வ முத்தமிழ் முனிவர் செவி ஏற்றருளுமாறு மிகக் கரிய நீண்ட கூந்தலையுடைய கௌசலா தேவியை மணந்த திண்ணிய தோள்வலி அமைந்த சத்துவ குணத்தினால் மிக்க தசரதன் பயந்த குரிசில் நிகழ்ந்தது கூறத் தொடங்கினன்.

கலிநிலைத் துறை

எம்பி ரான்இது கேட்டருள் ஏழிரண் டாண்டு
வெம்பு காட்டகத் துறைதிநீ இவனிலந் தாங்கி
நம்பி யாகிய பரதனே வாழ்கென நுவன்று
கம்பி யாதெனை எந்தைஇக் கானிடை விடுத்தான். 7

'எமது பெருமானே இதனைக் கேட்டருள்க பதினான்குவருடங்கள் வெப்பம் சூழ்ந்த காட்டிடை வாழுதி நீ; பரந்த பூமி பாரத்தைத் தாங்கி உனது தம்பியாகிய பரதனே நாட்டிடை வாழ்க' எனக்கூறி மனம் நடுக்கங் கொள்ளாமல் எந்தையேஎன்னை இக்கொடியகாட்டிடை விடுத்தனன்'.

ஏய ஆணையைச் சிரமிசைக் கொண்டெழும் எனையே
தூய சீர்இலக் குமணனுஞ் சீதையுந் தொடர்ந்தார்
ஆய மூவருந் தண்டக வனத்தமர்ந் திடுநாள்
மாய மானெனத் தோன்றினன் அங்கண்மா ரீசன். 8

'ஏவிய கட்டளையைச் சிரமேற் கொண்டெழும் என்னையே பழிப்பில் புகழுடைய இலக்குமணனுஞ் சீதையும் பின் தொடர்ந்தனர். மூவரும் தண்டகாரணியத்தில் வாழுநாள் மாரீசன் மாயமானாகத் தோன்றி அங்கு வந்தனன்.'

தோன்றி மற்றெனைச் சேயிடைக் கொண்டுபோய்ச் சுலவி
மான்ற அம்பினிற் பொன்றுவான் சீதையை வலியான்
ஆன்ற எம்பியை விளித்துவீழ்ந் தனன்அது கேளா
என்ற சீதையை விடுத்தெனைத் தொடர்ந்தனன் இளவல். 9

எதிர்வந்து என்னை நெடுந்தொலைவிற்குக் கொண்டு போய்ச்சுழலு வித்துப் பெருமையுற்ற அம்பினில் இறக்கின்றவன் சீதையையும், வலி யால் நிரம்பிய எனது தம்பியையும் கூவி அழைத்து வீழ்ந்துயிர் துறந்த னன். அதனைக்கேட்டுத் தான் பாதுகாப்பென மேற்கொண்ட சீதாபிராட் டியைத் தனி விடுத்து இளவல் என்னைத் தொடர்ந்தனன்.'

அனைய காலையில் இராவணன் அவட்கவர்ந் தகன்றான்
புனைம லர்க்குழற் பூங்கொடி தணத்தலிற் புலம்பி
இனையும் என்னுயிர் பொன்றுமுன் இரங்குதி எந்தாய்
உனைஅ டைந்தனன் சரணம்என் றழுதழு துரைத்தான். 10

'அந்நிலையில் இராவணன் அவளைக் கவர்ந்து சென்றான்; மலரைச் சூடி அலங்கரிக்கப்பெற்ற கூந்தலையுடைய பூங்கொடி போல்வாளைப் பிரிந்தமையால் தனித்து வருந்தும் என்னுயிர் உடம்பினின்றும் நீங்கு முன் இரங்கி அருள் செய் எந்தையே! உன பால் அடைக்கலமாகப் புக் கேன்' என்று ஓவாது அழுதுரைத்தனன்.

அகத்தியர் இராமனைத் தேற்றுதல்

உரைத்த வாய்மொழி கேட்டெதிர் அகத்தியன் உரைப்பான்
விரைத்த தார்ப்புய வேந்தகேள் வீங்குநீர் உலகின்
நிரைத்த ஐம்பெரும் பூதத்தின் நிலைபெறும் உடலம்
தெரிக்கில் யாவையும் உடன்பிறந் தவையெனத் தெளிநீ. 11

கூறிய உண்மையைக் கேட்டு அகத்தியர் மாற்றம் அளிப்பார். 'வாசனை வீசுகின்ற வாகை மாலையை அணிந்த தோளுடைய வேந்தனே! கேட்டி. கடல் சூழ்ந்த உலகில் முறைப்படுத்தப் பட்ட ஐவகை மாபெரும் பூதக் கூட்டுறவால் நிலைபெறும் உடம்புகள் ஆராய்ந்து கூறில் யாவும் நம்முடன் பிறந்தவை என உணர்தி நீ!'

தோற்றம் ஓரிடத்தே நிகழ்தலின் 'உடன் பிறந்தவை' என்றனர்.

மற்று யிர்க்குவே றாண்அலி பெண்ணென வழக்கஞ்
சற்றும் இல்லைநீர்ச் சலதியுட் படுபல துரும்பின்
பெற்றி போலும்இப் பூதத்தின் கூட்டமும் பிரிவும்
கற்று ளோய்இவை இருமைக்கும் மாயைகா ரணமாம். 12

வேற்றுமை உடைய ஆண், பெண், அலி என்னும் வழக்கு உயிர்க்குச் சிறிதும் இல்லை. நீர்க்கடலுட் படுகின்ற பல துரும்புகளின் தன்மை போலும் இவ்வைம் பெரும் பூதங்களின் சேர்க்கையும் பிரிவும், உணர்ந்தோய்! இவை கூடுதற்கும், பிரிதற்கும் மாயை முதற் காரணமாம்.

செய்வி னைப்பயன் உள்ளது வருமெனத் தெளிதி
எவ்வம் உற்றுழந் திரங்கலை மகிழ்ந்திரு என்னும்
பௌவம் முற்றும்ஓர் உழுந்தள வாக்கிமுன் பருகுஞ்
சைவ மாமுனி மொழிக்கெதிர் அரசனுஞ் சாற்றும். 13

'தாம் செய்த நல்வினை தீவினையின பயனாகிய இன்பத்துன்பங்கள் உள்ளவை வருமெனத் தெளிதி. துன்பம் எய்தி வருந்திப் புலம்பாதே; மகிழ்ச்சி கொள்' என்று கூறிய அளவிலே, கடல் நீர் முழுவதையும் ஓர் உழுந் (உளுந்து) தளவாக்கி முன் பருகிய சைவத் தபோதனர் அறிவுரைக்கு எதிராக இராமபிரானும சாற்றுவன்.

அத்த நின்உரை முழுவதும் உண்மையே யானும்
இத்த லைக்கிது இணங்குமோ மனையவள் மாற்றான்
கைத்த லத்தகப் பட்டுழித் தத்துவங் காண்போன்
பித்தன் என்றுல குரைத்திடும் ஆதலிற் பெரியோய். 14

'ஞானத் தந்தையே! நின் திருவாக்கு முற்றும் உண்மையே ஆனாலும், இப்பொழுதிவ் வுபதேசம் பொருந்துமோ? என்வாழ்க்கைத்துணைவி பகைவனது கைவசப் பட்டுக் கலங்கும் எல்லையில் தத்துவம் பேசுவோனைப் பித்தன் என்றுலகம் பழிக்கும் ஆதலின், பெரியோனே!'

பித்தன் (பேரன்பினன்) என்று புகழ்தலும் உண்டு; அறிவிழந்தவன் என்றிகழும்.

பறந்த லைப்புகுந் தொன்னலர்ச் செகுத்துயிர் பருகிச்
சிறந்த சீதையை மீட்டபின் ஐயநீ தெரிக்கும்
உறந்த தத்துவ ஞானத்துக் குரியவன் ஆவேன்
அறைந்த வாறலை தென்உளம் அடங்கிடா தென்றான். 15

'போர்க்களத்திற் புக்குப் பகைவரைப் பற்றி அவர் தம் உயிரைப் பருகிக் கற்பிற் சிறந்த சீதையை மீட்ட பின்னர் ஐயனே! நீ உணர்த்தும் நுணுகிய தத்துவ (உண்மை) ஞானத்திற்குப் பாத்திரனாவேன்; கூறிய வாறன்றி என்மனம் அமைதி பெறா' தென்றனன்.

தத்துவ நூல் நுணுகி நிற்றல்; 'ஆய்இழை ஆய் ஆன்மா' எனவும், வரும் அதனுரையையும் காண்க. (சிவஞா. 7.–3.–1.)

மலைய மாதவன் கேட்டுநின் மனத்துறும் விழைவு
கலைம திக்கழுஞ் சிறுவனே டொக்கும்அக் கதிர்ப்பூண்
முலைம டந்தையை இராவணன் கவர்ந்துபோ முறைமை
இலைகொள் வேலினாய் எவர்உனக் கியம்பினர் என்றான். 16

பொதியமலைப் பெருந்தவக் குறுமுனிவரர் கேட்டு 'நின்மனத்தில் எழும் விருப்பம் கலை நிரம்பிய திங்களைப் பெற விரும்பி யழும் குழவியை ஒக்கும் ஒளி வீசும் பூண்களை அணிந்த கொங்கையையுடைய சீதையை இராவணன் வலிதிற்கொண்டு போம் இயல்பினை இலைபோலும் வடிவினை யுடைய வேலவனே! யாவர் உனக்குக் கூறினர்' என வினவினர்.

'விசும்புற்ற திங்கட் கழும்மழப் போன்று' (திருக்கோ.)

சடாயு என்றுயர் கழுகிறை சானகி பொருட்டு
விடாது போர்உழந் திறப்பவன் விளம்பிடத் தெளிந்தேன்
கடாது கொண்டவட் பெறுந்திறம் அருளெனக் கரையும்
வடாது வெற்புறழ் புயத்தனை மாமுனி நோக்கி. 17

'சடாயு' என்னும் பெயருடன் உயர்ந்த கழுகரசு சானகியை விடுதலை செய்தற் பொருட்டு முடியுமளவும் விடாது போர்செய்து வருந்தி இறக்கும் நிலையில் அவன் விளம்பிடத் தெளிய உணர்ந்தேன். கையிக வாமற் கொண்டு அவளைப் பெறும்வகை அருள்செய் யெனப் பேசும் வடக்கின் கண்ணுள்ள மேருமலையொடு மாறுபடுகின்ற தோள்களை யுடைய ஸ்ரீராமனைப் பெருந்தவர் பார்த்து,

அவட் பெறும்; இரண்டாம் வேற்றுமைத் தொகை; உயர் திணைக் கண் ஒழிந்து வந்தது புறனடையாற் கொள்க.

நின்க ருத்திது வேல்உயர் நெடுவரை குழைத்து
வன்கண் மாற்றலர் புரம்பொடி படுத்தவன் மலர்த்தாள்
புன்கண் நீங்குமா றடைக்கலம் புகுமதி அவனே
உன்க ருத்தினை முடித்திட வல்லன்என் றுணராய். 18

'உன் நினைவு இவ்வாறுயின், உயர்ந்த மேருவை வில்லாக வளைத் துத் தறுகண்மையை யுடைய பகைவர்தம் முப்புரங்களை நீறுபடுத்தி னோன் றன் மலரை ஒக்கும் திருவடிகளைத் துன்பம் நீங்குமாறு அடைக்க லம புகுமதி. அப்பெருமானே உன் நினைவை முற்றுப்பெறச் செய்ய வல்லவன்' என்றுணர்வாயாக.

அவனே வல்லன்: 'இராவணன் (ஐ) திருவடி விரலின், ஒன்ற னால் இறக்கண்டனன (20-ஆம் செய்யுள்) ஆதலின் என்க.

உலகம் யாவையும் ஒருநொடிப் பொழுதினில் அழிப்போன்
நிலையும் வில்லினன் கொடுங்கொலைப் பகழியன் நிகரா
அலகில் ஆற்றலன் உருத்திரன் ஒருவனே யன்றி
இலையெ னப்புகன் றோலிடும் இயம்பருஞ் சுருதி. 19

அகில உலகையும் ஓரிமைப் பொழுதில் ஒடுக்குவோன்; நிலை பெறும் மேருவை வில்லாக உடையவன்; கொடிய கொலையைச்செய்கின்ற அம்பினையுடையவன்; ஒருவரோடு உவமிக்க வொண்ணாத அளவிட இயலாத ஆற்றலையுடையவன்; சிவபிரான் ஒருவனே அல்லாமல் இல்லை என்னக் கூறி முறையிடும் சொல்லற்கரிய வேதம்.

தென்தி சைக்கிறை இராவணன் திருவடி விரலின்
ஒன்ற னல்இறக் கண்டனன் ஒருசிறு துரும்பால்
அன்று விண்ணவர் தருக்கொடு மிடலறச் செய்தான்
வென்றி பூண்டுயர் கூருகிர் நகைவிழிப் படையான். 20

தென்திசையாகிய இலங்கைக்கு இறைவனாகிய இராவணனைத்திரு வடி விரல் ஒன்றன் நுதியினால் அழியச் செய்தனர்; ஒரு சிறு துரும்பை அளவு கோலாகக் கொண்டு முன்னாள் தேவர் தம் இறுமாப்பையும் வலி மையையும் முற்றக் கெடுத்தார். வெற்றிகொண் டுயர்ந்த கூரிய நகத் தையும், புன்சிரிப்பினையும், கண்ணையும் படையாக உடைய பெருமானார்.

பிரமன் சிரத்தினை நகத்தால் கொய்தவர் வயிரவர்; ஒற்றுமை பற்றிக் கூறப்பட்டது. புன்சிரிப்பினால் முப்புரமும், நுதல் விழியினால் மன்மதனும் அழிந்தமையறிக. "திருவடி விரல் உகிர் விழிசி ரிப்பினால், மருவலர்க் கடந்தருள் மதுகை எம்பிரான்" (வாணேசப். 14).

அனைய னாகிய தனிமுதல் பாற்சரண் அடைந்தோர்
எனைய வேட்பினும் எண்மையின் எய்துவர் அதனாற்
கனைகொள் பூந்தடம் உடுத்தஇக் காஞ்சிமா நகரிற்
புனைம லர்க்குழல் பாகனை அருச்சனை புரிவாய். 21

அத்தன்மையனாகிய ஒப்பில்லாத முதல்வனைப் புகலடைந்தோர் எப்பொருளை விரும்பினாலும் அப்பொருளை எளிமையின் அடைவர். ஆகலின், ஒலிக்கின்ற பூக்களையுடைய பொய்கைகள் சூழ்ந்த இக்காஞ்சிமா நகரில் அலங்கரிக்கப் பெற்ற மலரை யணிந்த கூந்தலையுடைய அம்மை பாகனை அருச்சனை செய்வாய்.

வீரம் வேண்டினை ஆதலின் விதியுளி வழாது
வீர ராகவப் பெயரினால் விமலனை இருத்தி
வீர னேதொழு தேத்துதி எனமுனி விளம்ப
வீரர் வீரனும் அம்முறை பூசனை விளைப்பான். 22

'வீரனே! வீரத்தைப் பெற விரும்பினை ஆகலின், வீரராகவேசப் பெருமான் எனத் திருநாமமுடைய பெருமானைத் தாபித்துத் தொழுது துதிப்பாய்' என அகத்தியர் அறிவுறுத்த வீரருள் தலைவனாக வைத்து எண்ணப்படுகிற இராகவனும் அவ்வாறே பூசனையைத் தொடங்குவான்.

### இராமன் இறைவனை வழிபடல்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

வெண்ணீறுங் கண்டிகையும் உடல்விரவப் பாசுபத விரதம் பூண்டு
தண்ணீடு மலர்க்கடுக்கை வீரரா கவமுதலைத் தாபித் தன்பால்
எண்ணூறும் இருநூறும் ஆயதிருப் பெயர் இயம்பி அருச்சித்தேத்தி
உண்ணீடு பெருங்காதல் வளர்ந்தோங்கத் தொழுதுநயந் துருகுங்
[காலை. 23

விபூதியும், உருத்திராக்க வடமும் உடம்பிற் பொதியப் பாசுபத விரதம் பூண்டு குளிர்ச்சி பொருந்திய கொன்றைமலர் மாலையைத் தரித்த வீராகவ முதல்வனைத் தாபித்து ஆயிரம் திருநாமங்களை அன்பொடும் எடுத்தோதி அருச்சனை செய்து துதித்து உள்ளத்துள் தங்கிய பேரன்பு வளர்ந்தோங்கத் தொழுது விரும்பி உருகுங் காலத்தில்,

எவ்வமறப் புரிபூசைக் கெம்பெருமான் திருவுள்ளம் இரங்கிப்
போற்றும், அவ்விலிங்கத் திடைநின்றும் எழுந்தருளி விடைமேல்-
கொண் டமரர் சூழ, நவ்விவிழி உமையோடுங் காட்சிகொடுத்
தருளுதலும் நவியா வென்றித், தெவ்வடுதிண் புயத்தோன்றல்
பலமுறையுந் தொழுதேத்திச் செப்ப லுற்றான். 24

துன்பம் தவிரப் புரிகின்ற பூசனைக்கு எமது பெருமான் திருவுள்ளம் கருணை கூர்ந்து வழிபடும் அவ்விலிங்கத்தினின்றும் விடைமேல் மான்போலும் மருட்சியை யுடைய விழி உமையம்மையோடும் எழுந்தருளித் தேவர் சூழத் திருக்காட்சியை நல்குதலும் பிறரால் வருத்தப்படாத வென்றியையும் பகைவரை அழிக்கின்ற திண்ணிய புயத்தினையும் உடைய குரிசிலாகிய இராமபிரான் பலகாலும் தொழுது துதித்துக் கூறத் தொடங்கினன்.

அண்ணலே அடியேனுக் கெளிவந்த பெருங்கருணை அமுதே
அன்பர், புண்ணியமே இராவணனும் அரக்கர்கோன் பொலந்
தொடித்தோள் சீதை என்னும், பெண்ணரசைக் கவர்ந்தெடுத்-
துப் போயினன் முறைபிறழும் அவனை இன்னே, நண்ணலரும்
பறந்தலையிற் கிளையோடு முடிக்கவரம் நல்கு கென்றான். 25

'தலைவனே! அடியேனுக்கு அரிய பொருளாயும் எளிதில் வந்த பெருங்கருணையை யுடைய அமுதமே! அன்பர் செய் புண்ணியப் பயனே! இராவணன் என்னும் அரக்கர் தலைவன் பொன்னால் இயன்ற தொடியை அணிந்த தோளையுடைய சீதை என்னும் மங்கையர் திலகத்தை வஞ்சித்துக், கொண்டு போயினன். பிறனில் விழையாமை என்னும் அறநெறியினின்றும் வழுவிய அவனை இப்பொழுதே நெருங்குதற்கரிய போர்க்களத்தில் சுற்றத்தினரோடும் அழிக்க ஆற்றலை நல்குவாய்' என்றனன்.

எனப்புகலச் சிவபெருமான் திருவருள்கூர்ந் தெமக்குநீ இன்று தொட்டு, மனக்கினிய னுய்உலகில் வீரரா கவனெனும்பேர் மருவி வாழ்வாய், உனக்கிகலி எதிர்ந்தோர்கள் எனைத்துணைய ரேனும்-அவர் உடையக் காண்டி, பனித்தநறுந் தொடையோய் என்-றருள்செய்து பாசுபதப் படையும் நல்கி. 26

என்று கூறச் சிவபெருமான் திருவருள் மீக் கூர்ந்து "எமக்கு நீ இந்நாள் முதல் என் திருவுள்ளத்துக் கினியனாய் உலகத்தில் வீரராகவனென்னும் பெயர் பெற்று வாழ்வாய். உன்னோடு பகைத்துப் போர்க் களத்தில் எதிர்ந்தவர்கள் எத்துணை வலியராயினும் அவர் புறங்கொடுத் தோடக் காணுதி. குளிர்ச்சி பொருந்திய நறிய மாலையை யணிந்தவனே!" என்றருள் புரிந்து 'பாசு பதம்' என்னும் படைக்கலத்தையும் வழங்கி,

முள்ளரைக்காம் பணிமுளரிப் பொகுட்டணையோன் தனிப்-படையும் முரன்று மாக்கள், கொள்ளையிடு நறைத்துளவோன் படையும்அவர் தமைக்கொண்டு கொடுப்பித் தேனைக், கள்ளவிழ்-தார்க் கடவுளர்தம் படைபிறவும் நல்குவித்துக் கருணை கூர்ந்து, நள்ளலரைப் பொடிபடுக்கும் பெருவரமும் அளித்தருளி நவிலு கிற்பான். 27

முள்ளுடைய அடித்தண்டுடைய அழகிய தாமரையோன் தனது பிரமாஸ்திரத்தையும் வண்டுகள் ஒலித்து மிகுதி கொண்டுண்ணும் தேன் பொருந்திய துழாய் மாலையைத் தரித்த திருமாலின் படையாகிய நாராய ணாஸ்திரத்தையும் அவர் தம்மைக் கொண்டு கொடுப்பித்துத் தேன் பரவுகின்ற மாலையை அணிந்த தேவர் பிறர் படைகள் யாவும் அவரவர் தம்மைக் கொண்டு நல்குவித்து அருள்மீக்கூர்ந்து பகைவரை நீருக்கும் பெருவரங்களையும் அருளொடும் வழங்கிக் கூறுவார்.

கவற்றிநெடும் பகைதுரக்கும் இவைஉனக்குக் கருணையினல் அளித்தேங் கண்டாய், இவற்றினொடும் இளவலொடும் கிட்கிந்தை இடத்தமர்சுக் கிரீபன் சேனை, அவற்றொடும் போய்ப் பரவைகடந் திராவணனைக் கிளையோடும் அறுத்து வீரஞ், சுவற்றியபின் சீதை-யொடும் மீண்டரசு புரிந்துகலி துரந்து வாழ்வாய். 28

வருத்திப் பெரும் பகைகளைப் போக்கும் இப்படைகளைக் கருணையால் உனக்கு அளித்தோம் காண். இப்படைகளொடும், இலக்குமணனோடும்கிட்கிந்தையில் அமர்சுக்கிரீபனைச் சேனையொடும் கூட்டிக்கொண்டு சமுத்திரத்தைக் கடந்து போய் இராவணனை அவன் சுற்றத்தவரொடும் கொன்று வீரத்தை வற்றச் செய்த பின் சீதையொடும் மீண் டயோத்தி புக்கு அரசு புரிந்து பசியையும், பிணியையும், பகையையும் போக்கி வாழ்வாய்,

என்றருள எதிர்இறைஞ்சி இராகவன்மற் றிதுவொன்று
வினுதலுற்ருன், அன்றினர் புரமெரித்தோய் குறுமுனிவன் ஆரு-
யிர்கட் காண்மை பெண்மை, ஒன்றுமிலே யாக்கையெலாம் உடன்-
பிறந்த வாகுமென உரைத்தல் செய்தான், மன்றளனக் கவை-
முழுதுந் தேறவிரித் தருளென்று வணங்கி வேண்ட. 29

என்றருள் செய்ய எதிர் வீழ்ந்து வணங்கி இராகவன் மேலும் ஒன்றை விஞவத் தொடங்கினன். பகைவர் முப்புரங்களைச் சிரித்தெரித்த பெருமானே! அகத்திய முனிவர் 'எண்ணில்லா உயிர்களில் ஆண்மை, பெண்மை முதலிய கூறுபாடுகள் சிறிதும் இல்லை, உடம்புகள் யாவும் உடன் பிறந்தன ஆகும் எனக் கூறினர். உறுதிபெற அடியேனுக்கு அவை முழுதுந் தெளிய அருள்செய்' யென்று வணங்கிக் குறைஇரப்ப,

வேதாந்த நிலேஅனைத்தும் அவன்தெளிய விரித்துரைத்து
வரங்கள் நல்கிக், காதார்ந்த குழைஉமையாள் உடனுக இலிங்கத்-
துட் கரந்தான் எங்கோன், நாதாந்தப் பரஞ்சுடராம் இவ்விலிங்-
கந் தனைத்தொழுது நயந்தோ ரெல்லாம், கோதார்ந்த பகை-
வென்று பெருஞ்செல்வம் எய்திஅருள் கூடு வாரால். 30

வேதாந்தமாகிய ஆகமங்களின் இயல்புகளை இராகவன் தெளிவெய்த விரித்துக்கூறி வரங்களையும் அருளிக் காதிற்கு அமைந்த தோட்டினை அணிந்த உமையம்மையாரொடும் சிவலிங்கத்துள் மறைந்தருளினர் எமது பெருமானர். தத்துவங்கடந்த தனிப்பேரொளியாம் இவ்விலிங்கந் தன்னை விரும்பித் தொழுவோர் யாவரும் குற்றம் நிரம்பிய பகைவரை வென்று பெருஞ் செல்வம் பெற்றுத் திருவருளைத் தலைப்படுவர்.

கற்கீச வரலாறு

எண்சீரடி யாசிரிய விருத்தம்

தகைபெறும்இக் கடிவரைப்பின் தென்பால் மண்ணித் தடங்-
கரையில் கற்கீசத் தலமாம் அங்கண், உகமுடிவில் கயவர்தமை
அழிப்ப மாயோன் உயர்பிருகு சாபத்தால் கற்கியாகி, இகழருஞ்-
சீர்க் காஞ்சியில்வந் திலிங்கந் தாபித் தினிதேத்தி எண்ணிலரும்
வரங்கள் பெற்ருன், புகழுறும்அவ் விலிங்கத்தைத் தொழுது மண்-
ணிப் புனலாடும் அவர்பெறுவார் போகம் வீடு. 31

தகுதியமையும் இவ்வொளியுடைய சூழலின் தென் திசையில் மண்ணி என்னும் தீர்த்தக்கரையில் கற்கீசத்தலம் உள்ளது ஆகும். அவ்விடத்தில் யுகத்திறுதியில் கீழ் மக்கள்தம்மை அழிப்பதற்குத் திருமால் உயர்ந்த பிருகு முனிவர் சாபத்தால் கற்கியாகத் தோன்றி அரிய புகழ்படைத்த காஞ்சியை அடைந்து சிவலிங்கம் தாபித்தினிது துதித்து அளவிடலரிய வரங்களைப் பெற்றனர். மண்ணியில் மூழ்கிப் புகழ்மிகும் அவ்விலிங்கத்தைத் தொழுவோர் போகமோட்சங்களைப் பெறுவர்.

வீர ராகவேசப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்–1087

# பலபத்திர ராமேசப் படலம்

எண்சீரடி யாசிரிய விருத்தம்

பகலோனைப் பல்லுகுத்து மதியைத் தேய்த்துப் படைவேளைப் பொடிபடுத்த பழையோன் என்றுங், திகழ்வீர ராகவேச் சரத்தி-னோடு திருத்தகுகற் கீச்சரமும் புகன்றோம் இப்பால், புகழுறுகற் கீச்சரத்தின் மேல்பால் கண்டோர் பொருவலித்திண் பகட்டூர்தி உடையக் காணும், நிகழ்பலபத் திரராமேச் சரமென் றோது நீடு-திருத் தானவளம் பாட லுற்றோம். 1

சூரியனது பற்களைத் தகர்த்துச் சந்திரனைக் காலால் தேய்த்துச் சேனைகளையுடைய மன்மதனை நீறு படுத்திய புராணன் என்றும் விளங்கு இன்ற வீரராகவேச்சரத்திேைடு செல்வ மருவிய கற்கீச்சரத்தையும் எடுத்துரைத்தனம். இனி, புகழ் மிகும் கற்கீச்சரத்தின் மேற்கில் தரி சித்தோர், பொருகின்ற திண்ணிய வலியமைந்தகடாவாகனத்தையுடைய இயமனைப் புறங்காணுதற்கு இடனுகிய பலபத்திர ராமேச்சரம் என்று பேசப்பெறும் நிலைபெறும் திருவினையுடைய தலத்தின் வளத்தைப் பாடத் தொடங்கினோம்.

கலி விருத்தம்

மண்ணின் மிக்கு வயங்கு துவரைவாழ்
கண்ணன் முன்வரு காளை அலப்படை
அண்ண லாம்பல பத்திர ஆண்டகை
பண்ணு வெஞ்சமர்ப் பாரதம் மூண்டநாள். 2

மண்ணிடத்து மிக்கு விளங்குகின்ற துவாரகையில் அவதரித்த கண்ணபிரானுக்கு முன்னர்த் தோன்றிய காளைப்பருவமும் உழுபடையும் உடைய தலைமை அமைந்த கலப்பைப் படையினையுடைய ஆண்டகை தேரும், குதிரையும் பிறவும் பண்ணுகின்ற போர்க்கோலம் செய்த கொடிய பாரதப் போர் மூண்ட காலத்தில்,

கார்த்த டக்கைக் கடும்புசெய் கைதவப்
போர்த்தொ ழிற்குப் பொருத மனத்தனுய்த்
தீர்த்த யாத்திரை செய்யத் தொடங்கினன்
ஏர்த்த வாணி நதிக்கரை எய்தினன். 3

மேகம்போலும் கொடையினையுடைய பெரிய கையினையுடைய சுற்றத்தவர் செய்கின்ற வஞ்சகப் போருக்குப் பொருத உள்ளத்தவனாய்த் தீர்த்த யாத்திரை செய்யத் தொடங்கினன். அழகிய சரசுவதி நதிக் கரையை அடைந்தான்.

அங்கண் முப்புரம் அட்ட பிரான்தளி
எங்கும் உள்ளன நோக்கி இறைஞ்சிஅத்
துங்க வைப்பினில் தொக்க முனிவரர்
தங்கள் சேவடி தாழ்ந்து வினவுவான். 4

அக்கரையில் திரிபுரத்தை அழித்த பெருமான் வீற்றிருக்கும் திருக்கோயில்கள் எங்கும் உள்ளவற்றைக் கண்டு தொழுது அவ்வுயர்ந்த தலத்திற்குழீஇ யிருந்த முனிவரர்களைத் தொழுது வினவுவான்.

ஈசன் வைகும் இடங்கள் எவைஎவை
ஆசின் றோங்கும் அவற்றுளும் மேலதாந்
தேசின் மிக்க திருநகர் யாவது
பேசு கென்ன முனிவரர் பேசுவார். 5

சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் தலங்கள் எவ்வெவை குற்றமின்றி உயர்வுறும். அத்தலங்களின் மேலதாய் அருள் விளக்கம் மிக்க திருக்கோயில்யாது? அதனைக் கூறுகஎன்றுவேண்டமுனிவரர்கூறுவார்.

நகர்—திருக்கோயில்; "முக்கட் செல்வர் நகர்" (புற. 6:18.)

பருவ ரைத்தோட் பரதன் வகுட்மே
கரும பூமி எனப்படுங் காண்அது
மருவும் எவ்வுல கத்தினும் மாண்டதாம்
திரும லர்ப்பனந் தேந்தொடை மார்பனே. 6

அழகின் பொலிவும் தேனும் மருவிய பனம்பூ மாலையை யணிந்த மார்பினனே! பருத்த மலையை ஒக்கும் தோள்களையுடைய படை-பரதன் ஆட்சி செய்தமையால் பெயரிய பரத கண்டமே கரும பூமி எனப்பெறும் அறிதி. அக்கண்டம் எவ்வுலகத்தினும் மாட்சிமையுடையதாகும்.

பலம்–கலப்பையின் கொழு. பத்திரம்–படை.

கரும பூமி வரைப்பிற் கடவுளர்
மருவி டங்கள் சிறந்தன மாட்சியோய்
அருள்வி ளைக்கும் அவற்றினும் மேலவாம்
தரும சக்கர பாணி தலங்களே. 7

மாண்பின் மிக்கோனே! கரும பூமியாகிய பரதகண்டத்தில் தேவர் கோட்டங்கள் சிறந்தன. அருள் சுரக்கும அவற்றினும் மேன்மைய ஆகும் அற வடிவாகிய சக்கரத்தைத் திருக்கையில் ஏந்திய திருமால் தலங்களே.

அவற்றின் மிக்கன மானிடர் ஆக்கிய
சிவத்த லங்கள் கடவுளர் செய்தன
அவற்றின் மேலன வாகுஞ் சயம்புவாம்
சிவத்த லங்கள் அவற்றிற் சிறந்தன. 8

அவற்றினும், மக்கள் வகுத்த சிவபிரான் திருக்கோயில்கள் மிக்கன. தேவர்கள் வழிபாடியற்றிய சிவாலயங்கள் முன்னவற்றினும் சிறப்பின. தானே தோன்றிய சிவலிங்கப்பிரான் கோயில் கொண்ட நகர்கள் தேவர் நியமித்த இடங்களிலும் சிறப்புடையன.

சயம்பு வைகுந் தலங்களுள் மிக்கவாம்
வியந்தெ டுத்து விளம்பப் படும்அவை
நயந்த அங்கவற் றுள்ளும்நற் காசிமிக்
குயர்ந்த தன்னதிற் காஞ்சி உயர்ந்ததே. 9

தான் தோன்றீசப் பெருமான் தலங்களினும் மேம்படுவன ஆகும் வியந்து எடுத்தோதப் படுவனவாகிய ஏழு நகரங்கள். விரும்பிய அத் தலங்களுள்ளும் நற்காசி மிக்குயர்ந்த நகரமாகும். அத்தலத்தினும் காஞ்சியே உயர்ந்தது.

ஏழு நகர்: அயோத்தி, மதுரை, மாயை, காசி, காஞ்சி, அவந்தி, துவாரகை என்பன.

ஓது காஞ்சிக் குயர்ந்ததும் ஒப்பதும்
பூத லத்திடை இல்லை புகலும்அம்
மாத லத்தின் உகத்தின் வருத்தமும்
பாத கப்பய னும்பட ராவரோ. 10

போற்றப் பெறும் காஞ்சி மாநகர்க்கு உயர்ந்ததும், ஒப்பதும் ஆகிய தலம் புவியிடை இல்லை. பேசப்பெறும் அப்பெருந் தலத்தின்கண் வாழ்பவர்க்குக் கால வேறுபாடுகளினால் வரும் துன்பங்களும், பெரும்பாவப் பயன்களாகிய நரக முதலிய துன்பங்களும் வந்து வருத்தமாட்டா.

அரோ, தேற்றப் பொருளது.

பிறந்து ளோர்கள் வதியப் பெறுநர்அங்
கிறந்து ளோர்உளத் தெண்ணுநர் யாவரும்
அறந்த ழைக்கும்ஏ கம்பர் அருளினாற்
சிறந்த முத்தி உறுவது தேற்றமே. 11

'திருக்காஞ்சியில் பிறக்கும் பேற்றினையுடையவரும், அங்குறையும் வாழ்வுடையோரும், இறப்போரும், அத்தலத்தினை உள்ளத்தில் நினைப்பவரும், ஆகியோர் யாவரும் அறத்தைத் தழைக்கச் செய்யும் ஏகம்பர் திருவருளினால் தலையாய முத்தியை எய்துவது சத்தியமே?

டை வேறு

என்றறி வுறுத்திய இயல்பின் மாதவர்
மன்றலம் பூங்கழல் வணங்கி யாதவன்
அன்றவர் ஏவலிற் காஞ்சி அண்மிஅங்
கொன்றிய வளனெலாம் உவந்து நோக்கினன். 12

என்றறிய உணர்த்திய நற்பண்புடைய பெருந்தவர் தம் அழகிய மணந்தங்கிய பூவையொக்கும் திருவடிகளை வணங்கி யதுகுலத்துள் தோன்றிய பலராமன் அத்தவத்தவருடைய ஆணைவழிக் காஞ்சியை அடைந்துஅங்குப்பொருந்தியவளங்கள் அனைத்தையும் கண்டுவந்தனன்.

நோக்கி உவந்தான்—என மாறுக. இறைவனும் விழா எனும் அடைவில் எழுந்தருளிக்காணும் வளத்தது காஞ்சி (திருநக. 70.) காண்க.

தெறுமழுப் படைச்சிவ தீர்த்தம் யாவையும்
முறைமையின் ஆடினன் முரசு கண்படா
இறையவன் கோயில்கள் எவையும் போற்றிவண்
டறைபொழில் ஏகம்பம் அருச்சித் தேத்தினன். 13

தீவினையை அழிக்கின்ற மழுப்படையை யுடைய சிவபிரான் தீர்த்தங்கள் முற்றவும் விதி வழி நீராடி முரச வாத்தியங்கள் இரவு பகலாக முழங்கும் சிவபிரான் திருக்கோயில்கள் எங்கும் வழிபாடு செய்து வண்டுகள் ஒலிக்கின்ற சோலை சூழ்ந்த திருவேகம்பப் பெருமானை அருச்சனை செய்து துதித்தனன்.

அந்நகர் வயின்அமர்ந் தருளுஞ் சீர்உப
மன்னியன் இணையடி வணங்கித் தொண்டுபூண்
டுன்னருந் திருச்சிவ தீக்கை யுற்றனன்
தன்னுடைப் பெயரின்ஓர் இலிங்கம் தாபித்தான். 14

அத்தலத்தில் வீற்றிருந்தருளும் சிறப்பினை உடைய உபமன்னிய முனிவர் தம் திருவடிகளை வணங்கி ஏவல் வழிநின்று நினைத்தற் கரிய பெருமை அமைந்த திருச்சிவதீக்கையை அவரிடத்துப் பெற்று 'பலபத்திராமேசப்பெருமான்' எனத் தன்பெயரால் சிவலிங்கம்தாபித்தனன்.

உண்ணிறை காதலின் அருச்சித் தோகையால்
பண்ணிசை மொழிகளிற் பழிச்சும் எல்வையின்
கண்ணுதற் சிவபிரான் கருணை கூர்ந்தெதிர்
விண்ணவர் தொழவிடை மீது தோன்றியே. 15

உள்ளத்துள் நிறைந்த பேரன்பால் அருச்சனை செய்து உவகையோடும் பண்ணொடு கூடிய பாடல்களாற் பரவும் பொழுதில் நுதற் கண்ணுடைய பெருமான் கருணை மிகுந்து தேவர்கள் தொழுதுடன்வர விடைமேலெதிர் தோன்றி,

வேண்டுவ கூறுகென் றருள மெய்யெலாம்
பூண்டபே ருவகையின் புளகம் போர்த்தனன்
தாண்டவம் நவிற்றுநின் சரணில் ஏழையேற்
காண்டகை இடையறு அன்பு நல்குதி. 16

வேண்டும் வரங்களைக் கூறுக என்றருள மேற்கொண்ட பெரு மகிழ்ச்சியின் மெய்ம்முழுதும் மயிர்க்கூச்செறிந்த பலராமர் ஆண்டகையே! திருக்கூத் திடையறாது புரியும் நின் திருவடிகளில் ஏழையேனுக்கு ஒரு காலத்தும் நீங்காத பேரன்பினை நல்குவாய்.

இச்சிவ லிங்கத்தின் இமய மாதொடு
நிச்சலும் இனிதமர்ந் தருளி நின்னடி
நச்சினோர்க் கிருமையும் நல்கு வாய்என
அச்செயல் முழுவதும் அருளி நீங்கினன். 17

'யான் வழிபாடியற்றிய இச்சிவலிங்கத்தின்கண் உமையம்மையா ரொடும் நாடோறும் இனிது வீற்றிருந்தருளி நின்திருவடியை விரும்பி னோர்க்குப் போக மோட்சங்களை அருளுவாய்' என யாவும் அருள்செய்து மறைந்தனர்.

காருடைப் பளிக்குருக் கலப்பை வான்படைத்
தாருடைப் போந்தினன் தாபித் தேத்திய
சீருடை இலிங்கத்தைத் தெரிசித் தோரெலாம்
ஏருடைக் கைலையில் இனிது வாழ்வரால். 18

கரியினையேந்திய உழுபடையினையும், பளிங்கு நிறத்தினையும், பனம் பூமாலையினையும் உடைய பலராமன் தாபித்துத் துதித்த சிறப்புடைய சிவலிங்கத்தைத்தெரிசித்தோர்யாவரும்திருக்கைலையில்இனிதுவாழ்வர்.

இருளைப் போழுகின்ற பளிங்கெனினுமாம். போந்தின் தாருடைய வன் என விகுதி பிரித்துக் கூட்டுக.

பலபத்திர ராமேசப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—1105

---

# வன்மீக நாதப் படலம்

கலிநிலைத் துறை

தேன்தாழ் பொலம்பூங் கடுக்கைச் செழுந்தார் விரைக்கின்ற தோள்
வான்தாழ் மிடற்றண்ணல் வைகுற்ற பலபத்தி ரஞ்சொற்றனம்
மீன்தாழ் தடஞ்சூழ் அதன்பச்சி மத்திக்கின் விண்ணாட்டவர்
கோன்தாழ நிலைபெற்ற வன்மீக நாதத்தின் இயல்கூறுவாம். 1

வண்டுகள் தங்குகின்ற பொன்னிற மலர்களைக் கொண்ட கொன்றையின் செவ்விய மாலை மணங்கமழ்கின்ற தோளினையும் மேகம் தாழ்வுற உயரும் நீலகண்டத்தையுமுடைய பெருமான் வைகுற்ற பல பத்திரேசர் பெருமையைக் கூறினோம். மீன்களைக் கொண்ட தடாகங்கள் சூழ்ந்த அதன் மேற்றிசையில் இந்திரன் வணங்க நிலைபெற்ற வன்மீக நாதேசத்தின் இயல்பினைக் கூறுவோம்.

திருமால் தலையிழந்த வரலாறு

புத்தேளிர் முன்னாள் ஒருங்கே குழீஇக்கொண்டு புகழ்எய்துவான்
முத்தீ வளர்த்தோர் மகம்வேட்க லுற்றார்கள் மொழிகின்றனர்
இத்தால் வருங்கீர்த்தி எல்லாம் நமக்கும் பொதுத்தான்எனக்
கொத்தார்மலர்க்கூந்தல்பங்கன் துணைத்தாள் குறிக்கொண்டரோ.

தேவர் யாவரும் முன்னோர் காலத்தில் ஒருமனப்பட்டு ஓரிடத்திற் கூடிப் புகழ்பெறும் பொருட்டு முத்தீயை ஓம்பும் ஓர் யாகத்தை விரும்பித் தொடங்கலுற்றவர் தம்முட் கூறுகின்றனர். 'இவ்வேள்வியால் வரும் புகழ் முழுதும் நம்மவர் யாவர்க்கும் பொதுப்புகழ் ஆகும் என வரையறை செய்து கொத்துக்களமைந்த மலரணிந்த கூந்தலையுடைய உமையம்மையாரைப் பங்கினிலுடையோன் இரு திருவடிகளைக் கருத்திற் கொண்டு,

குருக்கேத் திரத்தே மகஞ்செய்யும் எல்லைக் கொழுங்
கொன்றைவெள், ளெருக்கோ டணைக்குஞ் சடைச்செம்ம லார்தம்-
மின் அருள்கூர்தலால், உருக்கூர் பளிக்குப் பறம்பிற் பெருங்-
கீர்த்தி உண்டாதலும், தருக்கான் முகுந்தன் கவர்ந்தான் நடந்-
தான் தடுப்பக் கொடான். 3

குருக்கேத்திரத்தே வேள்வி செய்கையில் செவ்விய கொன்றை மலரையும், வெள்ளெருக்க மலரையும் சடைமேற் கொள்ளும் அண்ணலாகிய சிவபெருமானார் தமது திருவருட் செயலால் வடிவு தோற்றுகின்ற பளிங்கு மலையினைப் போலப் பெரும்புகழ் வெளிப்படலும் திருமால் செருக்கினால் வௌவிக்கொண்டு பிறர் பிறர் தடுப்பவும் பொதுவுடைமை ஆக்காமல் ஓடினான்.

ஓடுந் திறங்கண்டு விண்ணோர் தொடர்ந்தெய்த லுற்றார்அவன்
பீடொன்று வில்லம்பு கைக்கொண்டு வெம்பூசல் பெரிதாற்றுபு
நீடும்பர் தம்மைப் புறங்கண்டு பின்னீ ளிடைச்சென்றுநின்
றீடின்றி எல்லீரும் ஒருவேற் குடைந்தீர்க ளெனநக்கனன். 4

ஓடும் நிலையை எண்ணித் தேவர் கைப்பற்றத் தொடர்ந்தோடினர். அம்மால் பெருமை பொருந்திய சார்ங்கம் என்னும் வில்லினையும் அம்பினையும் கையிற்கொண்டு கொடிய போரினைப் பெரிதும் ஆற்றித் தேவர் குழுவினைத் தோல்வியுறச் செய்து பின்னர் நெடுந்தொலைவிற் சென்று நின்று 'ஒப்பின்றி நீவிர் பல்லீருந்தனித்து நின்றேனாகிய எனக்குப் புறங் கொடுத்தீர்கள்' என இகழ்ந்து சிரித்தனன்.

நக்கான் முகத்தால் அவன்தேசு முற்றும் நறுஞ்சாமையாய்
அக்காலே நீங்குற்ற வாற்றால் அடல்விற் கழுத்தூன்றுபு
மைக்காளம் அன்னான் நெடும்போது வாளாது நின்றான்குண
திக்காளிஅன்னான்றன் நிலைகண்டுபுகழ் வௌவுதிறம்எண்ணினன்.

இகழ்ந்து சிரித்த திருமாலின் ஒளி முழுதும் முகத்தின் வழியாக நறிய சாமை வடிவின் அப்பொழுது நீங்கியமையால் வலி அமைந்த வில்லைத் தரையிடை யிட்டு ஓர் நுனியைக் கழுத்திற் பொருந்த ஊன்றியிட்டு கரிய மேகம் போலும் நிறமுடையோன் நெடும்பொழுது வறிதுநின்றனன். கீழ்த்திசைக்குத் தலைவனாகிய இந்திரன் அத்திருமாலின் தளர்ச்சியைக் கண்டு புகழைக் கவரும் வழியைச் சிந்தித்தனன்.

பொருளிழப்பினால் தலையைச் சாய்த்தல் நிகழும்.

கச்சிப் பதிக்கண் விரைந்தெய்தி அங்கண் கடுக்கைப்பிரான்
இச்சித்த கயிலாய நிருதித் திசைக்கண் இலிங்கம்நிறீஇ
நச்சித் தொழுங்காலை எங்கோன் அணைந்தென்னை நவில்கென்றலும்
பச்சைத் துழாய்அண்ணல் கவர்கீர்த்தி விண்ணோர் பெறப்பாலியாய்.

கச்சிமாநகரை விரைந்தடைந்து அவண் கொன்றைமலரணிந்த பிரான் விரும்பிய கயிலாயத்திற்குத் தென் மேற்கில் சிவலிங்கத்தைத் தாபித்து விரும்பித் தொழுகையில் எம்பெருமான் அணுகி 'விரும்பியது யாது சொல்லுக' என்ற அளவிலே 'பசிய துளவ மாலையை அணிந்த திருமால் கவர்ந்து கொண்ட புகழை யாங்கள் யாவரும் அடையுமாறு அருள் செய்வீராக.'

என்று நவின்றேத்து சசிகேள்வ னுக்கெம்பிரான்ஓதுவான்,
வன்மீக நாப்பண் சிறுச்செல் லுருக்கொண்டு வார்வில்லுடை,
அந்நா ணறத்தின்று பின்கீர்த்தி கொள்கென்ன அருள்செய்த-
லும், பொன்னாடர் கோமானும் விடைகொண்டு மீண்டான்
பொருக்கென்றரோ.

என்று கூறித் துதிக்கும் இந்திராணி நாயகனுக்கு எமது பெருமானார் அருள்வர். 'புற்றின் நடுவில் சிறிய செல்வடிவு கொண்டு நீண்டவில்லிற்பூட்டிய நாணியை அறும்படி அரித்துப் பின்னர்க் கீர்த்தியைக் கொள்க' என்றருள் செய்த அளவில் அமராவதியினர் தலைவனாகிய இந்திரனும் விடை கொண்டு விரைந்து மீண்டனன்.

சிறுசெல் எனற்பாலது வலித்தல் விகாரம் பெற்றது; "சிறுக்கட்பன்றி" (ஐங்கு. கேழற்பத்து 6.) என்புழிப்போல.

அவ்வாறு புற்றிற் கிளைத்தெய்தி அந்நா ணறத்தின்றுழிப்
பைவாய்ப் பணிப்பாயலான் சென்னி அறுபட்டு வீழ்ந்தவ்விடம்
இவ்வாய்மை யாற்சின்ன மாகேச வத்தானம் என்றாயதால்
செவ்வே குறைச்சென்னி யாறங்கண் ஓடுந் திருத்தக்கதே. 8

அங்ஙனமே புற்றிற்றேன்றி நாணியை அரித்திடும்பொழுது படமுடைய ஆதிசேடனைப் பாயலாகவுடையவன் சிரம் அறுபட்டு வீழ அந்த இடம் இந்நிகழ்ச்சியால் சின்னமாகேசவத்தானம் எனப்பெற்றது. செவ்விதாகக் குறைபடுதலையுடைய சிரோநதி யென்னும் ஆறு அவ் விடத்தோடும் சிறப்பினது.

திருமால் தலைபெற்ற வரலாறு

வேறு

ஆய காலையில் அவன்புடை நின்றும்அப் புகழைப்
பாய விண்ணவர் கவர்ந்துகொண் டோகையிற் படர்ந்தார்
மாயி ரும்புவி மிசைவளர் இருபிறப் பாளர்க்
கேயும் எச்சனும் மாயவன் இன்மையின் உயங்கி. 9

அப்பொழுது திருமாலிடத்திருந்தும் அப் புகழை முப்பத்து முக்கோடி தேவர் எனப் பரவிய தேவர் கைப்பற்றிக்கொண் டுவகையிற் சென்றனர். மிகப் பெரிய பூமியில் தங்குகின்ற இருபிறப்பாளராகிய அந்தணர்க்குப் பொருந்தும் யாக வடிவினனாகிய திருமால் இல்லாமையால் வாட்டமுற்று,

மீட்டும் எய்தினன் காஞ்சியை விதியுளி வழிபட்
டீட்டும் அன்பினுக் கெம்பிரான் எதிரெழுந் தருளப்
பாட்டி சைப்பழ மறைகளாற் பரசினன் நவில்வான்
தோட்ட லர்க்குழற் சசிமுலை திளைத்ததோள் குரிசில். 10

இந்திரன் மீளவும் காஞ்சியை அடைந்தனன். உரிய முறையில் வழிபாடு செய்து பெருக்கிய அன்பின் காரணமாக எமது பெருமான் காட்சி தந்தருளத் தரிசித்து இசையமைந்த பழைய வேதப்பாடல் களாற் றுதி செய்தனனாய் இதழ் கொண்ட மலர்களை முடித்த கூந்தலை யுடைய இந்திராணியின புணர்முலைப் போகங் கொள்ளும் தோள்களை யுடைய குரிசிலாகிய இந்திரன் கூறுவான்.

கலி விருத்தம்

அறுபதம் முரன்றிசை முழக்கும் ஆய்இதழ்
நறுமலர்க் கடுக்கைசூழ் சடில நாயக
எறுழ்வலிச் சிலையினால் எச்ச னாகிய
சிறுமலர்த் துளவினான் சென்னி அற்றதால். 11

'வண்டுகள் ஒலித்திசையை எழுப்பும் அழகிய இதழ்களை யுடைய நறிய கொன்றை மலர் மாலை சூழும் சடைமுடிப் பெருமானே! பெருவன்மையுடைய வில்லால் யாகவடிவினனாகிய சிறிய மலர்த்துழாய் மாலையோன் தலை அறுபட்டது.

உறப்புறும் எங்களுக் குதவும் உண்டியும்
அறத்தொழில் பயிலிய மானர்க் கான்றவான்
துறக்கமும் இல்லையாய் விட்ட துட்கென
இறத்தலின் எச்சன்இவ் வுலகின் எம்பிரான். 12

எம்பெருமானே! வலிமை மிகுதற்குக் காரணமாக எங்களுக்குதவும் உண்டியாகிய அவியும், அறச் செயலாகிய வேள்வியைச் செய்கின்ற இயமானர்க்கு அமைந்த தூயசுவர்க்கமும் இல்லையாயின. அச்சந்தோன்ற இவ்வுலகில் யாக வடிவினன் இறத்தலின்,

விட்ட, அன்சாரியை தொக்கது. துட்கு—அச்சக் குறிப்பு.

ஆதலின் எச்சனுக் களித்தி சென்னியென்
றோதினன் வேண்டலும் உரைத்தல் மேயினன்
மாதர்வெண் குழச்சிறு மதிக்கொ ழுந்தினைப்
போதொடு மிலேச்சிய சடிலப் புங்கவன். 13

ஆதலின், திருமாலுக்குத் தலையை அளித்தருளாய் என்று வேண்டினன்; வேண்டவும், அழகிய வெள்ளிய இளைய சிறிய மதிக்கொழுந்தினை மலரொடும் சூடிய சடையுடைப் பெருமானார் கூறத் தொடங்கினர்.

எம்புடை வரம்பெறும் இரும ருத்துவ
உம்பரின் அவன்தலை ஒன்றிக் கூடுக
நம்பும்இவ் விருவரும் நந்தம் ஆணையால்
பம்பிய வேள்வியில் பாகம் எய்துக. 14

'எம்மிடத்து வரம்பெறும் அசுவினி தேவர்களாகிய இருமருத்துவரால் அம்மாலின் தலை இணைந்து கூடுக. விரும்பத் தகும் இத்தேவ வயித்தியர் இருவரும் நம்முடைய ஆணையால் செறிந்த யாகங்களில் அவிப்பாகம் எய்துக.'

என்றருள் மழுவலான் சரணம் ஏத்திமற்
றொன்றிது வேண்டுவான் உடைய நாதனே
மன்றநின் அருளினல் புற்றின் வாய்எழூஉத்
தின்றுநா ணறச்செயுந் திறல்பெற் றேனரோ. 15

என்றருளும் மழுவலான் திருவடிகளைத் துதித்து மேலும் ஒன்றாகிய இதனை வேண்டுவான்: 'எங்களை அடிமையாக உடைய நாயகனே அறுதியாக நின்னுடைய அருளால் புற்றிடை எழுந்து நின்று நாணியை அறுக்கும் வலிமையைப் பெற்றேன்.'

ஆதலின் வெவ்வினைத் தொடக்க றுக்கும்இம்
மேதகு வரைப்புவன் மீக நாதம்என்
றோதவும் கண்டவர் பிறவி ஓவவும்
ஈதிநீ வரமென விடையின் ஏந்தலும். 16

'ஆதலின், கொடிய வினைத்தளையை அறுக்கும் இம்மேன்மை பொருந்திய தலம் வன்மீக நாதம் என்று போற்றப்பெறவும், கண்டவர் பிறப்பொழியவும் நீவரம் ஈவாயாக' என விடையூர் அண்ணலும்,

தந்தனம் வரமெனச் சாற்றி நீங்கினன்
இந்திரன் மீண்டனன் இரும ருத்துவத்
தந்திரத் தலைவரால் எச்சன் றன்சிரம்
முந்துபோற் பொருத்தலும் முளரிக் கண்ணினன். 17

'தந்தோம் வரம்' எனத் திருவாய் மலர்ந்து மறைந்தனர். இந்திரனும் திரும்பினன். இருமருத்துவராகிய ஆயுள் வேதத் தலைவரால் திருமால் தனது தலை முந்து போலப் பொருந்துதலும் பதுமாக்கனாகிய திருமால்,

தெய்வத்தின் வலியினாற் சென்னி பெற்றெழூஉக்
கொவ்வைச்செவ் வாய்உமை கூறன் தாள்தொழு
தவ்வத்தன் ஆணையால் அவியின் பாகம்அங்
குய்வித்தோர்க் கமைத்துத்தன் உலகம் புக்கனன். 18

இருதேவர் தம் வன்மையால் சிரம் பெற்றெழுந்து கொவ்வைக் கனிபோலும் சிவந்த இதழ்களையுடைய உமையம்மை கூறனாகிய பிரான் திருவடிகளைத் தொழுது அத்தந்தையின் ஆணை வழி அங்குப பிழைப்பித்த அவ்வைத்தியர்க்கு அவிப்பாகம் நியமித்துத் தனது வைகுந்த உலகிற்குச் சென்றனன்.

இகழரு முகுந்தனே இந்த வாறிழி
தகவுற இடும்பையில் தங்கு நீர்மையால்
உகலருஞ் செல்வத்தை உடம்பை அல்லது
புகழினை விரும்பலும் போதத் துன்பமே. 19

போற்றற்குரிய திருமாலே இங்ஙனம் தலையிழக்கும் இழிந்த நிலையை அடையத் துன்பத்தில் தங்கும் இயல்பினால் அழிதலில்லாத பெருஞ் செல்வத்தையோ, உடம்பையோ, அல்லது புகழினையோ விரும்புதலும் மிகவும் துன்பமாம்.

வன்மீக நாதப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—1124.



# வயிரவேசப் படலம்

---

கலி விருத்தம்

வயிர வாளினன் வணங்கி வெந்துயர்
வயிரம் மாற்றும்வன் மீகம் ஓதினும்
வயிர மாடமற் றதற்குத் தென்திசை
வயிர வேச்சர மரபி யம்புவாம். 1

வச்சிராயுத னாகிய இந்திரன் வணங்கிக் கொடுந் துன்பமாகிய வன்மையைப் போக்கும் வன்மீகநாத வரலாற்றைக் கூறினோம். அதற்குத் தெற்கில் வைரங்கள் பதிக்கப்பெற்ற மாளிகைகள் சூழ்ந்த வயிரவேச்சர வழக்காற்றினைக் கூறுவோம்.

பிரமன் செருக்கு

வடவ ரைத்தலை முஞ்ச மானெனுந்
தடநெ டுங்கிரி தன்னி டைச்சிலர்
படிம உண்டியர் பாங்கின் நோற்றுழி
அடல்அ னப்பிரான் அருளின் எய்தினன். 2

மேருமலையின் சிகரத்தில் முஞ்சமான் என்னும் பரந்த உயர்ந்த மலையிடை விரதத்தான் உண்டி சுருக்கியோர்சிலர் நல்லியல்பில் தவஞ் செய்கையில் வலிமை அமைந்த அன்ன ஊர்தியோனாகிய பிரமன் அருளினால் அவர் முன் எய்தினன்.

வதனம் ஐந்தொடும் வந்து தோன்றினன்
பதம லர்த்துணை பணிந்தி றைஞ்சினர்
துதிமு ழக்கினாற் சூழ்ந்து கைதொழூஉக்
கதம்அ றுத்தவர் இதுக டாயினர். 3

ஐந்து முகத்தொடும் அங்கு வந்து தோன்றின பிரமனின் திருவடி மலர் இரண்டனையும் பணிந்தனர்; தோத்திர ஒலியுடன் வலம் வந்து கையால் தொழுது கோபத்தை நீக்கினவர் இதனை வினவினர்.

கதம் கூறவே காமமும், மயக்கமும் நீக்கினவர் என்க.

"இலகும் இச்சகம் யார்மு தற்று? மன்
உலகெ வன்புடை உயிர்த்தொ டுங்கிடும்?
பலப சுக்களின் பாசம் நீத்தருள்
தலைவன் யார்? இது சாற்று" கென்றனர். 4

காணப்படும் இவ்வுலகம் யாரை முதலாக உடையது? நிலைபெற்ற உலகம் எவனிடத்துத் தோன்றி ஒடுங்கும்? பல் உயிர்களின் ஆணவ மலத்தை நீக்கி அருள் செய்கின்ற தலைவன் யாவர்? இதனைச் சாற்றுக என்றனர்.

ஐம்மு கத்தயன் அனைய காலையின்
மம்மர் நெஞ்சினன் மயங்கிக் கூறுவான்
இம்ம றைப்பொருள் யாரும் உய்வகை
நும்ம னக்கொள நுவலக் கேண்மினே. 5

ஐந்து முகங்களையுடைய பிரமன் மயக்கம் கொண்ட மனத்தினால் அறிவு மயங்கிக் கூறுவான்; 'வேத நுண் பொருளாகிய இதனை யாவரும் அறிந்து பிழைக்கும்படி உங்களுடைய மனங்கொள்ளச் சொல்லுவன்; நீவிர் கேண்மின்.'

"உலகி னுக்கியான் ஒருவ னேஇறை;
உலகம் என்கணே உதித்தொ டுங்கிடும்;
உலகெ லாம்எனை வழிபட் டும்பர்மேல்
உலகி னைத்தலைப் படுங்கள் உண்மையே. 6

'யான் ஒருவனே உலகினுக்கு முதல்வன். உலகம் என்னிடத்தே தோன்றி ஒடுங்கும். உலகம் யாவும் என்னையே வழிபாடு செய்து முத்தியை அடையும். இது சத்தியமே.'

உம்பர் மேல் உலகம்: 'வானோர்க் குயர்ந்த உலகம் புகும்' (திருக், 346.) தேவர்க்கும் எட்டாத முத்திப்பேறென்க. கள்—அசை.

வேதங்கள் உரைத்தல்

கலிநிலைத் துறை

என்றான் விரிஞ்சன் அதுகாலையில் வேத மெல்லாம்
முன்றோன்றி அங்கண் மொழிகுற்றன முண்ட கத்தின்
வென்றோய் புராணம் பலசாத்திரம் வேதம் மற்றும்
குன்றான்ற வில்லான் றனையே முதல்என்று கூறும். 7

என்று கூறினன் பிரமன். அப்பொழுது வேதங்கள் எதிர்வந்து அவண் மொழிய லுற்றன. தாமரை மலரில் இருப்பவனே! மேருமலையை அமைந்த வில்லாக உடைய சிவபிரானையே வேதங்களும், புராணங்களும், பலசாத்திரங்களும், பிறநூல்களும் முதல்வன் என்று பேசும்.

"அவனேமறு வற்ற பரம்பிர மம்பு ராணன்
அவனேமுழு துந்தரு காரணம் ஆங்கெ வர்க்கும்
அவனே இறைவன் தொழுவார்க்கருள் வீட ளிப்போன்
அவனே" என ஓதிவெவ் வேறும் உரைப்ப அங்கண். 8

'அவனே குற்றமற்ற பரப்பிரமம்; பழையோன் அவனே; எல்லாவற்றையும் காரியப்படுத்துகிற காரணனும் ஆவன்; யாவர்க்கும் அவனே இறைவன்; வழிபடுவார்க்கு அருள் வீட்டினை வழங்குவோனும் அவனே' என உணர்த்தி வேறு வேறாகவும் அங்கிலையில் கூறின.

புராணன் : முது முதல்வன்.

இருக்கு வேதங் கூறல்

"எச்சன் றனக்கும் இமையோர்க்குமெவ் வேதி யர்க்கும்
அச்சங் கரனே அரசன்விசு வாதி கன்சீர்
நச்சும்உனை ஈன் றருட் பார்வையின் நோக்கி நல்கும்
மெய்ச்சித்துரு என்றறி" என்ற திருக்கு வேதம். 9

'திருமாலுக்கும், தேவர்க்கும், எத்திறத்து வேதியர்க்கும் அச்சங்கரனே அரசனாவன்; உலகினைக் கடந்து நிற்றலின் விசுவாதிகன் ஆவன்; படைப்பை விரும்புகின்ற உன்னைப் படைத்துக் கருணை நோக்குதவி அதனைவழங்கும் உண்மை அறிவுரு என்றறிதி' என்றது இருக்கு வேதம். 'படைப்போற் படைக்கும் பழையோன்' (திருவாசகம்)

எசுர் வேதங் கூறல்

"தன்கூற்றில் வருங்கண நாதர் தடுக்க லாற்றாக்
கொன்கூர்சர பாதிய ரால்வயங் கூறும் விண்ணோர்
வன்காழ்வலி செற்றவன் யார்அவ னேம திக்கு
நன்காரணம்" என்று நவின்ற தடுத்த வேதம். 10

தன் வடிவினின்றும் தோன்றிய கணநாதர்கள் தடுக்கலாகாத அச்சம் மிகுதற்குக் காரணமாகிய சார்த்தூலர் ஆதியரால் வெற்றிச் செருக்குறும தேவர்களின மிகு வயிர வனமையை அழித்தவன் யார்? அவனே மதிக்கத்தகும உண்மைக் காரணனவன என்று கூறியது அடுத்தெண்ணப்படும் எசுர்வேதம.

சாம வேதங் கூறல்

தோலாஅவை நாப்பண் அடைந்து துரும்பு நட்டு
மாலாதி விண்ணோர் வலிமுற்றவும் மாற்ற வல்லோன்
ஆலாலம் உண்டோன் அவனேஅகி லங்களுக்கு
மேலாய ஏது" எனவிண்டது சாம வேதம். 11

'அசுரரை வெற்றி கொண்ட தேவர் சபை நடுவில் வந்து துரும்பினை நாட்டித் திருமாலாதி தேவர் வலி முழுதையும் போக்க வல்லோனும், விட முண்டு கண்டத் தடக்கினோனும ஆகிய அவனே அனைத்துலகங்களுக்கும் மேலாய காரணன்' என விளம்பிற்று சாம வேதம்.

அதர்வ வேதங் கூறல்

"வளிதாழ் விசும்பைப் பசுந்தோலிற் சுருட்ட வல்லோர்
உளரேல்புடை வீங்கி எழுந்து திரண்டு ருண்ட
இளவெம்முலை பங்கனை யன்றியும் இன்ப முத்தி
அளவிற்பெற லாம்" என விண்ட ததர்வ வேதம். 12

'காற்று மருவிய வானத்தைப் பசிய தோலினைப் போலச் சுருட்ட வல்லோர் உளராயின் புடைபரந்து பருத்துயர்ந்து திரண்டுருண்ட இளைய விருப்புடைய கொங்கையையுடைய உமையொரு கூறனையன்றியும் பேரின்பத்துக்குக் காரணமாகிய முத்தியைப் பெறும் அளவிலாகும்' என விளம்பிற்று அதர்வ வேதம்.

முனிவோர்எதிர் அந்தணன் வேதம் மொழிந்த கேட்டுத்
தனிநாயகன் மாயையின் மூழ்கி வெகுண்டு சாற்றும்
சினநீடு தமோகுண சீலன் உருத்தி ரன்றான்
மனமோடுரை செல்லரு நிட்களம் வான்பி ரமம் 13

முனிவர்கள் முன்னிலையில் வேதங்கள் கூடியும் தனித்தனியும் மொழிந்தவற்றைக் கேட்டுப் பிரமன், தனி நாயகனது மாயையில் மூழ்கிச் சினங் கொண்டு 'கோபமுடைய தமோகுண இயல்பினனாகிய உருத்திரனோ? மனமொழி மெய்களுக்கு எட்டாத எல்லையற்ற பொருளாகும் பரப்பிரமம் யானே என்றனன்.'

மாயை, தனி நாயகனாகிய சிவபிரான்வழிச் செயற்படுவது ஆதலின் அவனுடைமை என்க.

பிரணவம் உரைத்தல்

சால்பான்உயர் 'ஓம்'என் மொழிப்பொருள் சம்பு என்றல்
ஏலாதென அம்மனு வேவடி வெய்தி வந்து
மாலால்உரை செய்தனை நீகம லப்பொ குட்டின்
மேலாய்இது கேண்மதி என்றுமுன் நின்று சொல்லும். 14

'தகுதியான உயர்ந்த ஓம் என்னும் மொழியினது பொருள் அவன் என்று கூறுதல் தகாது' என்று அப்பிரமன் கூற, அம்மந்திரமே வடிவெய்தி எதிர் வந்து 'மயங்கி உரைத்தனை நீ. கமல மலர் மிசையுறையும் பிரமனே! இதனைக் கேட்டி' என்று முன்நின்று கூறும்.

வேதத்தலை யிற்புக லுற்றுயர் வேத ஈற்றும்
போதச்சுர மாய்நிறு வப்படு பொற்பி னேன்யான்
மாதர்ப்பகு திக்குள் அடங்கி வயங்கி னேற்கும்
ஆதிப்பரம் யார்அவ னாகும் மகேசன் அம்மா. 15

'வேதத்தைத் தொடங்கும் பொழுதும் முடிக்கும் பொழுதும் மிகச் சிறப்பாய்ச் சொல்லப்படும் 'ஓம்' என்னும் விளக்கமுடையேன் யான். சுத்தமாயையாகிய முதற்காரணத்துள் அடங்கி விளங்கினேற்கும் முதற்றலைவன் யாவன்? அவனே மகேசன் ஆவன்.'

எழுசீரடி யாசிரிய விருத்தம்

என்றிது விளம்பும் பிரணவந் தனையும் இகழ்ந்துதன் பெருமையே வியப்ப, மன்றலந் துளவோன் ஆயிடைத் தோன்றி மன்றயான் கருத்தன்என் றுரைத்தான், குன்றருங் கொடுநோய் ஆணவக் குறும்பாற் கோட்படும் இருவரும் இவ்வா, றொன்றிய செருக்கான் மீமிசை இகலி ஒவறப் பிணங்கும் அவ்வேல்வை. 16

என்றிதனைக் கூறும் பிரணவ மந்திரத்தையும் இகழ்ந்து விலக்கித் தனது பெருமையையே அறுதியாகப் பாராட்டுகையில், வாசனை வீசும் துழாய் மாலையோன் ஆங்குத் தோன்றி 'யானே கருத்தன்' என்றுரைத் தனன். குறைவுபடாத கொடிய நோயாகிய ஆணவ மலச்சேட்டையால் பற்றப்பட்ட இருவரும் இவ்வாற்றால் நிகழ்ந்த இறுமாப்பினால் மேன்மேற் பகைத்து ஒழிவறப் போர் செய்யும் அப்பொழுதில்,

வயிரவத் தோற்றம்

அலர்ந்தசெங் கமலம் நிகர்இணை விழியும் அதுமுகிழ்த் தனையதோர் விழியும், மலர்ந்தபொன் நிறத்த கேசமும் முகரோ மங்களும் வடிவமுங் காட்டி, நலந்திகழ் இரவி மண்டிலத் துறையும் நாயகன் அனையது கண்டான், சலந்தவிர்த் தருள்வான் உருகெழத் தோன்றித் தமனியக் கிரியென நின்றான். 17

செந்தாமரை மலரைப்போன்ற இருகண்களும், அத்தாமரையின் அரும்பு போன்ற நுதல் விழியும், ஒளிமலர்ந்த பொன் நிறங்கொண்ட மயிரும், மீசையும், உடைய வடிவந் தோன்றக் காட்டி நலம் விளங்கும் சூரிய மண்டிலத்தில் வீற்றிருக்கும் நாயகனார் அவர் நிகழ்ச்சியைக்கண்டு மாறுபாடு நீக்கி அருள் செய்வான் அச்சமுற எதிரெழுந்தருளிப் பொன் மலை என நின்றனர்.

காண்டலும் நெடியோன் நடுங்கிநீத் தகன்றான் கமலநாண் மலர்மிசைக் கடவுள், ஈண்டஎன் புதல்வா வருகென விளிப்ப வெகுண்டருள் எம்பிரான் உருவின், ஆண்டுவந் துதித்த வயிரவப் புத்தேள் அயன்மிசைச் செல்வுழி அயனும், மாண்டகு பிரமப் படைஎதிர் விடுத்தான் வந்ததத் தடுப்பரும் படையே. 18

பார்த்த அளவில் திருமால் நடுக்க மெய்திச் சேணிடைச் சென்றனர். செவ்விய தாமரை மலரில் இருப்போன் 'என்புதல்வனே! இங்கு வருக' எனத் தன்முகமாக அழைப்ப வெகுண்டருள் எமது பெருமான் திருவுருவினின்றும் அங்கு வந்துதித்த வயிரவக்கடவுள் பிரமன் மேற் போருக்குச் செல்கையில் அப்பிரமனும் மாட்சிமையுடைய பிரமாஸ்திரத் திரப்படையை வயிரவர்மேல் ஏவினன். விலக்கற்கரிய அப்படை வந்தது.

பிரமனுக்குச் சிருட்டித் தொழில் கற்பித்தற் பொருட்டு அவனது நெற்றியில் உருத்திரர்கள் தோன்றினமையை மனங்கொண்டு மயங்கி 'என் புதல்வா' என்றனன். இறைவன் வெகுட்சி உயிர்களுக்கு மருந்தாகலின் 'வெகுண்டருள்' என்றனர்.

வருபடை வேகக் காற்றினின் முரிய விரைந்துசெல் வயிரவப் புத்தேள், திருமலர்க் குரிசில் பழித்திடும் அஞ்சாஞ் சிரத்தினை யுகி-ரினாற் கொய்தான், பெருவிறல் உயிர்போய் விழுந்தபின் மீளப் பிஞ்ஞகன் அருளினால் உய்ந்து, மருள்வலி நீங்கி எழுந்தனன் மறையோன் வள்ளலை வணங்கிநின் றேத்தும். 19

வருகின்ற பிரமாஸ்திரம் தமது எதிர்செலவின் காற்றினால் முரியும்படி விரைந்து போன வயிரவக் கடவுள் பிரமனது சிவநிந்தனைசெய் ஐந்தாந் தலையை நகத்தினாற் கொய்தனர். பெருவலியினனாகிய பிரமன் உயிர் நீங்கிக் கீழ் வீழ்ந்த பின்னே இறையவன் திருவருளினால் உயிர் பெற்று மயக்கத்தின் வலிமை நீங்கி எழுந்தனன். பிரமன் வள்ளலை வணங்கி நின்று துதிப்பான்:

நான்முகன் முறையிட்டு வரம்பெறல்

விளைநறை உகுக்குங் கமலமென் பொகுட்டு மேவரும் எனைஎடுத் தாண்ட, களைகணே ஆவித் துணைவனே சருமக் கலிங்கனே பிரமனே இருகால், வளைதரு பினாக பாணியே உனக்கு நெய்அவி மடுத்துநல் ஓமம், உளைவறப் புரிகேம் உலப்பறும் வாழ்நாள் உதவிமற் றெந்தமைக் காக்க. 20

விளைகின்ற தேனைச் சிந்தும் தாமரை மலர்ப் பொகுட்டில் மேவும் எனை எடுத்தாண்ட பற்றுக்கோடே! உயிர்க்குத் துணைவனே! தோலை உடையாக உடையவனே! பிரமனே! இருகடையும் வளைகின்ற பினாக பாணியே! உனக்கு நெய்யும் அவியும் இட்டு நல்வேள்வியை மகிழ்ச்சியுடன் செய்வேம் கெடாத வாழ்நாள் உதவி எம்மைக் காக்க!

சருமம், புலி, சிங்கம், இவற்றின் தோல். பெரியோனே என்பான் பிரமனே என்றனன். இனி, பிரமபதமும் அவனுடைமை ஆகலின் பிரமனே என்றனன். பினாகம்—பினாகம் என்னும் வில். பாணி—கை.

கரைபொரு திரங்கி வெண்டிரை சுருட்டுங் கருங்கடல் புடை-உடுத் தகன்ற, தரையொடு விசும்பின் நள்ளிடைப் போந்த தழல்நிறச் சுடர்எறி காந்திக், குரைபுனல் மோலிக் குழகனே தறுகண் கொடுஞ்சினக் கடுந்தொழிற் பகட்டு, விரைசெலற் கூற்றின் அடுதிறற் பாச மிடலறத் துணிந்தெமைக் காக்க. 21

கரையை மோதி ஒலித்து வெள்ளிய அலை மறித்து வீசும் கரிய கடல் மருங்குடுத்தகன்ற பூமியுடன் விசும்பின் நடுவிட மெல்லாம் விரிந்து வந் தொலிக்கின்ற கங்கையை எரிநிறத்தின் ஒளிவிடுகின்ற காந்தியையுடைய சடையிடை அமைத்த அடிகளே! வன்கண்மையும், கொடிய சினமும், கொடுஞ்செயலும் கடா வாகனமும் உடைய இயம பயம் நீக்கி எம்மைக் காக்க.

ஆயிரமா முகத்தினோடு இடமெல்லாங் கொள்ளாத தகைமைய தாய் வந்த 'நில்லாத நீர் சடைமேல் நிற்பித்தான்.

உலகெலாம் விரியும் ஆதிகா லத்தின் ஒருவனே யாகிநின் றுள்ளாய், பலதிறப் புவன நாயகர் தம்மைப் பாற்படப் பயந்தளித் தருள்வாய், மலர்தலை உலகம் மீளவந் தொடுங்க மன்னிவீற் றிருந்தருள் முதலே, அலகிலா அருளான் மெய்அவி மிசைந்தீண் டாயுளை அளித்தெமைக் காக்க. 22

எல்லா வுலகங்களும் தோன்று முதற் காலத்தில் ஒருவனாய் நின்று உள்ளவனே! பல திறப்பட்ட புவனங்களுக்கு நாயகர்களை வெவ்வேறு படப் படைத் தளித்தருள் செய்வோனே! விரிந்த உலகம் மீண்டும் குவிந்து ஒடுங்குமாறு தான் ஒடுங்காது மன்னி வீற்றிருந்தருள் முதல்வனே! இவண் எல்லையில்லாத திருவருளால் அவிப்பாகத்தை ஏற்று ஆயுளைத் தந்தெம்மைக் காத்தருள்க.

சிறுவிதி மகவாய் முன்வரும் பிராட்டி அம்பிகை சீர்இலக் குமிகோ, மறுவறும் அகில காரணி மலையான் மகளெனப் பெயரிய தலைவி, நறுமலர்க் கடுக்கைத் தொடையல்எம் பெருமான் நலங்கெழு சத்தியே வினைமா, சறுமுறை இருதாள் வழிபடு கின்றேம் ஆயுளை அளித்தெமைக் காக்க. 23

தக்கனுக்கு மகளாய் முன் அவதரித்த பெருமாட்டியும், அம்பிகையும், சிறப்புடைய இலக்குமியும், பூமிதேவியும், குற்றத்தை அறுக்கும் உலகங்கட்குக் காரணியும், மலையரையன் மகளும் எனப் பெயர்களைத் தாங்கிய தலைவியாகிய நறுமணங்கமழும் கொன்றை மலர்மாலையைச் சூடிய எமது பெருமானுக்குரிய நலம் பொருந்திய சத்தியே! வினைக்குற்றம் அறும்படி இரு திருவடிகளை வணங்குகின்றேம். ஆயுளை அளித்து எம்மைக் காத்தருள்க.

அகிலம்ஈன் றெடுத்த இருமுது குரவீர் அடியிணை போற்றி-என் றேத்து, நகுமலர்ப் பதுமத் தவிசினோன் துதிக்கு நயந்துளங் கருணைகூர்ந் தருளி, முகிழ்முலை ஒருபால் மணந்துவீற் றிருந்து முரண்கெடக் கூற்றுயிர் குடித்த, பகைஅடு கணிச்சி ஆதியம் பகவன் பிரமனைப் பார்த்திது பகரும். 24

எல்லா வுலகங்களையும் பயந்து காத்து வளர்க்கும் தாய்தந்தையீர் திருவடிகளுக்கு வணக்கம் என்று துதிக்கும் விளங்குகின்ற தாமரை மலரிருக்கையோன் துதிக்கு விரும்பி உளமுவந்து கருணை பூத்தருளி அரும்பிய கொங்கையுடை அம்மையை ஒருபுடை இருத்திவீற்றிருந்து கூற்றுவனது வலிமை கெட அவனுயிரை வாங்கிய பகையைத் தெறுகின்ற மழுப்படையுடைய ஆதியம் பகவன் பிரமனை நோக்கி இதனைக் கூறும்.

அறுசீரடி யாசிரிய விருத்தம்

இன்று தொட்டுநீ நான்முக ளுகிஎம் ஆணையிற் பிறழாமே, நன்று வாழ்தியால் வேட்டது நவில்கென நாயினேன் உய்ந்தேன்-இங்,கொன்று நின்னடிக் கன்புதந் தடியனேன் உஞற்றிய பிழை-யெல்லாம், மன்ற நீபொறுத் தருளெனத் திசைமுகன் வேண்ட-லும் வரம்ஈந்து. 25

'இந்நாள் முதல் நீ நான்முகனுகி எம்முடைய ஏவலினின்றும் மாறுபடாது நலம்பெற வாழ்வாயாக! விரும்பியவற்றைக்கே' ளெனப் பிரமன், 'நாயனேயேன் பிழைத்தேன்; இவண் நின்னடிக்கண் பொருந்திய அன்பருளி அடியனேன செய்த பிழை முற்றும் நிச்சயமாகப் பொறுத் தரு' ளென வேண்டலும் வரத்தை ஈந்து,

வயிரவர் வெற்றிப் படர்ச்சி

கூர்த்த சூலமுங் கபாலமுங் கொண்டுகை தொழூதொரு புடைநிற்கும், சூர்த்த நோக்குடை வயிரவத் தோன்றலை நோக்கினன் இதுசொல்வான், கார்த்த மேனியோய் வயிரவ காலன்நீ கலவிகரணன் சீர்சால், வார்த்தை சூழ்பெல விகரணன் பெலப்பிர மதனனு மாகின்றுய். 26

கூரிய சூலமும், பிரம கபாலமும் கொண்டு கைகூப்பி வணங்கி ஒரு மருங் கொதுங்கி நிற்கும் அச்சந்தரும் பார்வையையுடைய வயிரவத் தோன்றலை நோக்கி இதனை அருள் செய்வார்: 'கரிய மேனியனே, வயிரவ காலனுகிய நீ, கலவி கரணன், சிறப்பமைந்த புகழ் சூழும் பெலவிகரணன், பெலப் பிரமதனன் என்னும் பெயர்களுக்கும் உரியனுயினை.

சறுவ பூதைக தமனனீ எம்முடைத் தனேயர்கள் தமின்மூத்த, சிறுவனேஎனத் திருவருள் செய்துநீ திறற்கணம் புடைசூழ, வெறிமலர்த்துழாய்ப் பண்ணவன் முதலிய விண்ணவர் உலகெல்-லாம், குறுகி வார்கறைப் பிச்சைஏற் றவர்மனக் கொடுஞ்செருக் கறமாற்றி. 27

சறுவ பூத தமனன் நீ எம்முடைய மக்களுள் மூத்த சிறுவன் நீயே எனத் திருவருள் புரிந்து நீ வலியமைந்த சிவகணத்தவர் புடை சூழ வாசனை வீசுகின்ற துளவ மலர் மாலையை யணிந்த திருமால் முதலாம் விண்ணோர் உலகங்கள் எவற்றினுக்கும் சென்று ஒழுகுகின்ற இரத்தப்பலி ஏற்று அவர்தம் மனத்தில் உள்ள கொடிய இறுமாப்பினை முழுதும் போக்கி,

விதியைப் பற்றும்இம் முனிவரர் செருக்கையும் வீட்டுகென் றருள்கூரும், பதியைத் தாழ்ந்தனன் விடைகொடு வயிரவப் பண்-ணவன் படர்குற்றுன், மதியக் கீற்றணி எம்பிரான் மறைந்தனன் வார்கழல் தொழூதேத்தி, அதிர்வின் தீர்ந்திடும் மலரவன் முதலி-யோர் அவரவர் இடம்புக்கார். 28

பிரமனைப் பின்பற்றும் இம்முனிவரர் அகந்தையையும் அழிக்க என்றருள் செய்யும் தலைவரைத்தாழ்ந்து விடைகொண்டு வயிரவக்கடவுள் செல்லலுற்றனர். இளம்பிறையை அணிந்த எமது பெருமானார் மறைந்தருளினர். நீண்ட அடியிணைகளைத் தொழுது துதித்து நடுக்கத்தின் நீங்கிடும் பிரமன் முதலானோர் தத்தம் இருக்கையை அடைந்தனர்.

உட்கத்தோன்றிய வயிரவன் முன்னுற நெடியவன் உலகுற்-
றான், தட்கச் சென்றெதிர் வாயிலோர்த் துரந்தனன் விடுவச்சே
னனைத்தாக்கிக், கொட்கச் சூலத்தின் நுதியினிற் கோத்தனன்
குறுகினன் வட்காரை, வட்கப் போர்புரி மாயவன் இருக்கையுள்
மதுகையின் நிகரில்லான். 29

நடுங்கத் தோன்றிய வயிரவர் முதற்கண் வைகுந்தத்தையடைந்து தடையாகச் சென்றெதிர்த்த வாயில் காவலரை ஓட்டினர். சேனாதிபதியாகிய விடுவச் சேனனைத் தாக்கிச் சுழலச் சூல நுதியிற் கோத்துக் கொண்டனர். வலிமையில் தமக்கு நிகர் தாமே ஆயவர் பகைவரை நாணும்படி போரைச் செய்யும் திருமாலின் இருக்கையைக் குறுகினர்.

பிச்சை தேரிய வருஞ்செயல் கேட்டனன் பெட்பொடும்
விரைந்தெய்திப், பச்சை மேனியோன் மனைவியர் இருவரும் பாங்-
குற எதிர்கொண்டு, செச்சை நாண்மலர்த் திருவடி வணங்கினன்
செம்புனற் பலியாரும், மெச்ச நெற்றியின் நரம்பினைப் பிடுங்குபு
விட்டனன் கபாலத்துள். 30

பிச்சை ஆராய்ந்து கொள்ளுதற்கு வருஞ்செயலைக் கேட்ட பச்சை மேனியன், சீதேவியும் பூதேவியும் இருமருங்கும் வர விருப்புடன் விரைந்தடைந்து பண்பாக எதிர்கொண்டு சிவந்த அன்றலர்ந்த மலர்போலும் திருவடிகளை வணங்கிச் செந்நீராகிய பிச்சையை யாவரும் பாராட்ட நெற்றி நரம்பினைப் பறித்து அதன் வழிக் கபாலத்துள் விடுத்தனன்.

தாரை யாகிநூ றாயிரம் ஆண்டள வொழுகியுந் தகுநெய்த்-
தோர், ஈர வெண்டலைக் கபாலத்தை நிறைத்தில திரத்தமுற்
றறலோடும், வீர மாதவன் நிலமிசை மூர்ச்சித்து விழ்ந்தனன் அது-
காலை, வார முற்றருள் வயிரவன் திருக்கையால் வருடினன்
மயல்தீர்த்தான். 31

ஓரிலக்கம் வருடம் அளவும் இரத்தம் தாரையாக ஒழுகியும் ஈரிய வெண்டலையாகிய கபாலத்தை நிறைத்திலது; இரத்தம் முழுதும் அற்ற பொழுது வீரமுடைய இலக்குமி நாயகன் நிலமேல் மூர்ச்சையுற்று விழுந்தனன்; அந்நிலையில் அருளுடைய வயிரவர் அன்பு வைத்துத் திருக்கையால் தடவி மயக்கத்தைத் தீர்த்தனர்.

அயர்வு யிர்த்தனன் எழுந்தனன் அஞ்சலி அளித்தனன் குனிசார்ங்கன், வயிர வப்பிரான் திருவடிப் பத்தியும் மற்றவன் தன்மாட்டுப், பயிலும் இன்னருட் கருணையும் வேண்டினன் பரிந்தவற் கவைநல்கிப், பெயர்பு மீண்டனன் பிச்சைதேர்ந் தருளிய பிறுண்டும்எய் தினன்மாதோ. 32

நாணேற்றற் குரிய சார்ங்கம் என்னும் வில்லுடைய திருமால் தளர்ச்சி நீங்கி எழுந்து அஞ்சலி முகிழ்த்து வயிரவப் பிரானர் திருவடியிற் பேரன்பும் அப்பயிரவர் தன்னிடத்துப் பொருந்தும் இனிய அறக் கருணையும் தந்தருள வேண்ட இரங்கி அத்திருமாலுக்கு அவற்றை வழங்கிப் பெயர்ந்து திரும்பினர். பிச்சை பெறற் பொருட்டுப் பிற இடங்களையும் அடைந்தனர்.

உலகம் எங்கணுந் திரிந்துநெய்த் தோர்ப்பலி ஏற்பவனெனஒன்னார், வலம்மி சைந்தவேற் கடவுளர் தருக்கற வாங்கினன் முனிச்செல்வர், குலம டப்பிடி அந்நலா ரையுங்குறு நகையினின் மயல்பூட்டி, நிலவ ரைப்பினிற் காஞ்சியை அணுகினன் நெடுந்தகை நெறியானே. 33

உலகெங்கும் சுழன்றிரத்தப் பிச்சையை ஏற்பவர் போலப்பகைவர் வலியை விழுங்கிய வேலையுடைய தேவர்தம் இறுமாப்பினைக் கவர்ந்தனர்; முனிவரருடைய குடிப்பிறந்த மெல்லிய பெண் யானையை ஒக்கும் அம்மகளிரையும் புன்சிரிப்பினுல் காம மயக்கம் ஊட்டி நில வுலகில் பெருந்தகை காஞ்சியை வழியே அணுகினர்.

கறைக்க பாலத்தை ஒருவயின் நிறுவினன் சேனைகா வலன்றன்னை, இறைத்த செம்புனற் சூலத்தின் நுதியினின் றிழிச்சுபு மால்வேண்ட, நிறைத்த பேரருட் கருணையால் உதவினன் நிகழ்ந்ததன் பெயரானே, மறைக்கு நாயகன் வயிரவேச் சரன்றனை நிறீஇயினன் வழிபட்டான். 34

இரத்தக் கபாலத்தை ஓரிடை வைத்து விடுவச்சேனனைப் பெருக் கெடுத்த செந்நீர் கொண்ட சூலத்தி னுனியினின்றும் இறக்கித் திருமால் குறையிரந்தமையால் பேரருளொடும் அவனை உதவி வேதநாயகனுகிய வயிரவேச் சரனைத் தாபித்து வழிபாடு செய்தனர்.

ஐய னேமறை முடிமிசை நடித்தருள் அமலனே எனைஆண்ட, மெய்ய னேஎனப் பழிச்சிநெக் குருகினன் விளங்கிஇவ் விலிங்கத்தே, தைய லோடினி தமர்ந்தருள் யானும்நின் சந்நிதி எதிர்வைகி, உய்யு மாறருள் அடியனேன் செயத்தகும் உறுபணி அருள்என்றுன். 35

தலைவனே! வேத முடிவில் விளங்குகின்ற விமலனே! என்னை ஆட்கொண்ட மெய்ப்பொருளே! எனப் போற்றி நெகிழ்ந்துருகினர். இச் சிவலிங்கத்தே ஏறறமாக உமையம்மையொடும் இனிது வீற்றிருந்து அடியனேனும் நின் சந்நிதியில் எதிரிருந்து உய்யும்படி செயத் தக்க தொண்டில் செலுத்தி அருளுக' என்றனர்.

வேண்டி நின்றிரந் துரைத்தலுங் கருணையான் மேவிஇங் குறைகின்றேம், ஈண்டு நீஎதிர் வைகிஇத் திருநகர் புரந்தினி தமர்-வாயால், காண்ட குங்கபா லத்தின்நெய்த் தோரையின் கணங்-களுக் கருளென்னப், பூண்ட பேரருள் வழங்கினன் எம்பிரான் வயிரவப் புத்தேளும். 36

குறையிரந்து கூறலும், 'அருளொடும் இத்திருவுருவில் விளங்கு கின்றோம். நீயும இங்கு வைகி இக்காஞ்சியைக் காவல் செய்து இனி திருப்பாய். மதிக்கத் தகும் கபாலத்தில் உள்ள இரத்தத்தை நின்கணங் களுக்கு அருளுக' என்று எமதுபெருமான் பேரருளைநல்கினர். வயிரவரும்,

குருதி ஈர்ம்புனல் கணங்களுக் களித்தனன் குடிப்புழிச் சிலவேனும், பருகுதற்குப்போ தாமைகண் டவனிமேற் பறந்தலைப் பெருவேந்தர், செருவில் ஏற்றுயிர் மடிந்தவர் விண்மிசைத் திகழு-அங் கவர்செந்நீர், இரண மண்டில வயிரவன் கணங்களுக் கினிதமைத் தருள்செய்தான். 37

இரத்தத்தைக் கணங்களுக்குக் கொடுத்துப் பருகுங்கால் சிலர்க் கும் பருகப் போதாமையை நோக்கி நிலமிசைப் பேரரசர் போர்க்களத்திற் செருவினை ஏற்று உயிரிழந்தவர் துறக்கம் புக அவர் இரத்தத்தைக் கணங்களுக்கு இரண மண்டில வயிரவராய் இனிதமைத்தருள்செய்தனர்.

கயிர வத்தெழில் கவர்ந்தவாய் ஆய்ச்சியர் பாடியிற் கவர்ந்-துண்ட, தயிர வற்கயர் வொழித்தருள் வயிரவத் தம்பிரான் தொழுதேத்தும், வயிர வப்பெயர் ஈசனை வணங்குநர் அவமிருத் துவின்நீங்கிச், செயிர் அவத்தைகள் முழுவதுங் கடந்துபோய்ச் சிவனடி நிழல்சேர்வார். 38

செவ்வாம்பலின் அழகைக் கவர்ந்த வாயினையுடைய ஆயர்பாடி யில் தயிரைக் கைப்பற்றி உண்ட திருமாலுக்குத் தளர்ச்சியை நீக்கி அருள் வயிரவக் கடவுள தொழுது போற்றும் வயிரவேசப் பெருமானாரை வணங்குவோர் அவமிருத்துவின நீங்கிக் குற்றம் பொருந்திய அவத்தை பலவும் கடந்து போய்ச் சிவபிரானாரடி நிழலைச்சேர்வர்.

வயிரவேசப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—1162



# விடுவச்சேனேசப் படலம்

கலிநிலைத் துறை

போதணி பொங்கர் உடுத்ததண் கச்சிப் புரத்திடை
மாதர்வண் கோயில் வயிரவே சத்தை வகுத்தனம்
ஆதியும் அந்தமும் இல்லான் அமர்ந்தருள் அங்கதன்
மேதகு தென்பால் விடுவச்சே னேச்சரம் விள்ளுவாம். 1

மலர்களைக் கொண்டுள்ள சோலைகள் சூழ்ந்த குளிர்ந்த காஞ்சிமா நகரில் அழகிய வளமமைந்த வயிரவேசத் திருக்கோயிலை வகுத்துரைத் தனம். தோற்றமும் அழிவுமில்லாத சிவபிரான் விரும்பி எழுந்தருளி அருள் செய்கின்ற அத்தலத்திற்குத் தெற்கில் மேன்மை பொருந்திய விடுவச் சேனேச்சரத்தை விளம்புவாம்.

திருமால் சக்கரம்இழந் தயர்தல்

வெந்தொழில் தக்கனார் வேள்வி விளிந்தநாள் மாயவன்
சந்திர சேகரன் தாளிணை ஏத்தி விடைகொண்டே
அந்தண் விரசை கடந்துவை குந்தம் அடைந்தபின்
சுந்தரப் பொன்தவி சேறி இருந்திது சூழ்ந்தனன். 2

கொடிய செயலையுடைய தக்கனது யாகம் முற்றுரு தழிந்த நாளில் திருமால் சந்திர மௌலியர் திருத்தாட் டுணைகளைத் துதித்து விடை பெற்று அழகிய தண்ணிய விரசை யாற்றினைக் கடந்து வைகுந்தத்தை அடைந்த பின்னர் அழகிய பொன்னாலியன்ற ஆசனத்தில் ஏறியிருந் திதனை ஆராய்ந்தனர்.

மலைவறு காட்சி விடுவச்சே னன்முதல் மந்திரித்
தலைவர் தமக்கு நிகழ்ந்தது சாற்றிக் கவன்றனன்
குலவும் அரக்கர் அவுணரைப் போரிற் கொலைசெய்திவ்
வுலக முழுவதும் ஓம்புதல் என்தொழி லாகுமால். 3

தன்னொடு மாறுபடாத அறிவினையுடைய விடுவச் சேனன் முத லான மந்திரித் தலைவர்தமக்கு நிகழ்ந்ததை விரித்துரைத்துக் கவலை யெய்தினர். 'தலைமை பூணும் அரக்கரையும், அசுரரையும் போர்க்களத் திற் கொன்று நல்லோரை இவ்வுலகங்கள் முற்றவும் காத்தல் எனக்குரிய தொழிலாகும்.'

ஆல், தேற்றமும், இரக்கமும் குறித்து நின்றது.

ஏயும் அலங்கரத் தின்றித் தொடங்கும் உழவன்போல்
ஆயுதங் கைஇன்றி எவ்வா றகிலம் புரப்பல்யான்
காய்கதிர் மண்டிலந் தோற்றுங் கடவுள்மா சக்கரம்
மாய்வரும் யாக்கைத் ததீசியி னல்வாய் மடிந்ததே. 4

'முதன்மை பெறும் உழுபடையின்றி உழவைத் தொடங்கும் உழவன் செய்கைபோலச் சக்கராயுதம் கரத்தினிடத்தில்லாமல் எங்ஙனம் அகில லோகங்களையும் யான் காப்பேன்! சூரிய மண்டிலத்தை ஒத்துத் தோற்றுவிக்கின்ற ஒளியினையும் தெய்வத்தன்மையையும் பெருமையையும் உடைய சக்கரம் அழிவில்லாத ததீசியின் உடம்பினால் கூர் மழுங்கியதே.

அறுசீரடி யாசிரிய விருத்தம்

மதனுடைத்திண் சலந்தரனை உயிர்செகுப்பச் சிவபெருமான்
வகுத்த சோதிச், சுதரிசனப் படைஅன்னோன் தரப்பெற்றேன்
அஃதின்று தக்கன் வேள்வி, சிதைவுசெயுந் திறல்வீர பத்திரன்-
மேல் விடுத்தலும்அச் செல்வன் பூண்ட, கதமுறுவெண் டலைஒன்று
கவ்வியதால் இனிச் செய்யக் கடவதென்னே. 5

'உடல் வன்மையும் உள்ளத்துத் திண்மையும் உடைய சலந்தராசுரனை அழித்தற் பொருட்டுச் சிவபிரானார் சிருட்டித்த ஒளியுடைய சுதரிசனம் என்னும் படையை அப்பெருமானால் அருளப் பெற்றேன். அச்சக்கரம் இன்று தக்கன் வேள்வியை அழித்த வலிமை பொருந்திய வீரபத்திரர்மேல் விடுத்தபொழுது அவ்வீரர் அணிந்துள்ள சினமிக்க வெண்டலை மாலையில் ஓர்தலை அதனை விழுங்கியது. ஆகலின் இனிச் செய்யத் தக்கது என்னே!

சக்கரத்தைச் சிருட்டி செய்ததும், திருமால் அதனைப் பெற்றதும் சலந்தரேசத் திருமாற் பேற்றுப் படலங்களுட் காண்க.

நஞ்சுபடு துளைஎயிறு தனைஇழந்த நாகத்தின் உயிர்ப்பும்
ஒன்னார், அஞ்சுதகத் தலைச்செல்லுங் கோடிழந்த கடாக்களிற்றின்
அடலும் ஏற்றார், நெஞ்சுருவப் பாயும்இரு மருப்பிழந்த விடை-
ஏற்றின் நெறிப்பும் கூர்வாய், வஞ்சநெடும் படைஇழந்த மதவீரன்
வீறும்எவன் செய்யும் மாதோ. 6

விடம் ஊறுகின்ற துளையுடைய பற்களை இழந்த பாம்பின் நெட்டுயிர்ப் பெறிதலுடன் கூடிய வெகுளியும், பகைவர் அஞ்சமேற்சேறுந் தந்தங்களை யிழந்த மதயானையின் அடும் ஆற்றலும், போரினை ஏற்று நின்றவர் மார்பிடை உருவும்படி பாயும் இருகொம்பினையும் இழந்த காளை ஏற்றின் நிமிர்ப்பும், கூரிய வாயினையுடைய வஞ்சகப் பெரும் படையை இழந்த வலிய வீரன் செருக்கும் என் செய்யும்.

ஆழிகரத் துளதாயின் சிவனருளால் வியனுலகம் அளிப்பேன்
அன்றிப், பாழிவரைத் தடம்புயத்தீர் என்செய்வேன் எனக்-
கவன்று பரியுங் காலை, வாழிநெடும் பொலஞ்சிறைய புள்ளூர்தி
தனக்கிரண்டாம் வடிவ மான, காழிகந்த பெருங்கீர்த்தி உலம்-
பொருதோட் கனகழற்கால் விடுவச் சேனன். 7

'சக்கரப்படை கரத்திலிருப்பிற் சிவபிரானார் திருவருள் துணையைக் கொண்டு உலகைக் காவல் செய்வேன். பெரிய மலைபோலும் பெரிய புயத்தீர்! என்செய்வேன்!' எனக் கவலை எய்திப் பரிவுறும்பொழுது நெடிய பொன்மயமான சிறகரையுடைய கருடனை வாகனமாகக் கொண்ட திருமாலுக் கிரண்டாம் வடிவமாக உள்ள குற்றம் நீங்கிய பெரும்புகழினையுடைய திரண்ட கல்லையொத்த புயத்தையும் ஒலிக்கின்ற கழலணிந்த அடியிணையும் உடைய விடுவச் சேனன்,

அபர விண்டு எனப்பெறுவர் விடுவச்சேனர்; நந்தி எம்பெருமானை அபர சம்பு என்றாற்போல.

வீரபத்திரர்பால் விடுவச்சேனன் செல்லல்

அன்றென்னை வயிரவனார் சூலத்தின் விடுவித்தே யருளும் நீலக், குன்றன்னான் றனக்காழி கொணர்ந்தளித்துக் கடன்தீர்த்-துக் கொள்வேன் இந்நாள், என்றெண்ணி எழுந்திறைஞ்சி வயவீர பத்திரன்பால் யான்போய் இன்னே, நன்றுள்ளம் மகிழ்வித்துக் கொடுவருவல் ஆழியென நவின்று போற்ற. 8

'அக்காலத்தில் வயிரவப் பெருமானார் சூலத்தில் கோப்புண்டு கிடந்த என்னை விடுவித் தருள் புரிந்த நீல மலைபோலும் நிறத்தையுடைய என் தலைவர் தமக்குச் சக்கரத்தைக் கொணர்ந்து கொடுத் திங்ஙனம் இந்நாள் கடமையை நிறைவேற்றுவேன் என்றுட்கொண்டு எழுந்து வணங்கி 'யான் வலியமைந்த வீரபத்திரர்பாற் போய் அவருள்ளத்தை மகிழ்வித்துச் சக்கரத்தை இப்பொழுதே கொண்டு வருவேன்' என்று கூறிப் போற்ற,

அங்கவனைக் கொண்டாடி விடைகொடுத்தான் திருமார்பன் அவனும் போந்து, புங்கவர்சூழ் வயவீரன் இருக்கைமுதற் கோபுர-முன் புக்க காலை, மங்கருஞ்சீர்ப் பானுகம்பன் முதலாய வாயில்காவலர்கள் நோக்கிப், பங்கமுற வெகுண்டெழுந்தார் அச்சுறுத்தார் அதுக்கினார் பழங்கண் நீட. 9

திருமகளை மார்பிற் கொண்டவர் அவனைப் பாராட்டி விடுத்தனர். அவன் சென்று கணங்கள்சூழ வீரபத்திரர் எழுந்தருளியிருக்கும் கோயில் வாயிலை அடைந்தபோது கேடில்லாத சிறப்பினையுடைய பானுகம்பன் முதலாய வாயிற் காவலர் நோக்கிப் புறங்கொடுப்பச் சினந்து எழுந்தனர்; துன்பம் மிகும்படி அச்சப்படுத்தினர்; உதட்டைக் கடித்தனர்.

பிறைசெய்த கரங்கொண்டு பிடர்பிடித்து நீளிடைக்கண் உந்தலோடும், கறைசெய்த வேல்தானைக் காவலன் ஆங்கிருந்தெண்ணிக் கவலை கூர்ந்தான், முறைசெய்த முனிவோர்கள் அந்நெறியிற் செலநோக்கி முன்போய் நின்று, மிறைசெய்த செயலனைத்தும் தன்வரவும் ஆங்கவர்க்கு விளங்கக் கூறி. 10

பிறைபோலக் கரத்தை அமைத்துப் புறக்கழுத்தில் வைத்து நீளிடைச் செல்லும்படி தள்ளி விடலும் செந்நீர் தோய்ந்த வேற்படைத் தலைவனாகிய விடுவச்சேனன் ஆங்கிருந்து துயரம் மிகுந்து அவ்வழியிற் செல்லும் முறை தெரிந்த முனிவரர்களின் முன் சென்று நின்று வாயிற் காவலர் செய்த துன்பச் செயல்களையும், தன் வருகையின் காரணத்தையும் அவர்க்கு விளக்கிக் கூறி,

விடுவச்சேனன் காஞ்சியை அடைந்து வழிபடல்

இனிச்செய்யுந் திறம்நீவிர் கூறுகெனத் தாபதரும் எண்ணி
நோக்கிப், பனித்துண்டம் மிலைந்தானைக் காஞ்சியினில் தாபித்துப்
பரவிப் போற்றின், மனத்தொன்றும் எண்ணமெலாம் பெறுவாய்-
என் றியம்புதலும் மகிழ்ச்சி கூர்ந்து, கனித்தொண்டை வாய்உமை-
யாள் ஒருபாகன் திருக்காஞ்சி நகரஞ் சேர்ந்தான். 11

'இனிச் செய்யும் வகையை நீவிர் கூறுக' என்ன முனிவரும் ஆழ்ந்து சிந்தித்துச் சந்திர சேகரனைக் காஞ்சியில் நிறுவிப் பழிச்சிப் போற்றினால் மனத்திற் பொருந்தும் யாவும் பெறுவாய்' என்று கூறுதலும் மகிழ்ச்சி கூர்ந்து கொவ்வைக் கனி போலும் திருவாயுமையம்மையாரை ஒரு பாகமுடையார்க்கினிய அக்காஞ்சி நகரத்தைச் சேர்ந்தனன்.

அங்கடைந்து தன்பெயராற் சிவலிங்கம் இருத்திமகிழ்ந்
தருச்சித் தேத்திப், பொங்குபெருங் காதலினால் இனியதவம்
பூண்டிருந்தா னாக அந்நாள், வெங்கடுநேர் வியாக்கிரனும் அசகர-
னும் பஞ்சமேட் டிரனு மென்னும், இங்கிவர்முத் தானவரும்
வரப்பேற்றால் எவ்வுலகும் வருந்தச் செய்வார். 12

அங்குச் சென்று விடுவச் சேனேசர் எனப் பெயரிய சிவலிங்கம் தன் பெயரால் இருத்திப் பேரன்பினால் அருச்சித்துத் துதித்து இனிய தவத்தை மேற்கொண்டிருந்தானாக அந்நாளில்கொடியவிடத்தையொத்த வியாக்கிரனும், அசகரனும், பஞ்சமேட்டிரனும் ஆகிய அசுரர் மூவரும் வரத்தின் வலிமையால் எவ்வுலகையும் வருத்துவாராயினார்.

அன்னோரைத் தெறுபாக்கு விண்ணோடர் விரிஞ்சனொடும்
அளவளாவிப், பொன்னாடை யுடையான்கைப் படைஇன்றி வறங்-
கூரும் புதுமை நோக்கி, என்னாத னிடத்தணுகி மகிழ்ந்திறைஞ்சி
இயம்புதலும் இமயம் ஈன்ற, மின்னாளும் இடத்தானும் வயவீர
பத்திரனை விடுத்தான் மன்னோ. 13

அக்கொடியோரை அழிக்கத் தேவர் பிரமனொடும் கலந்து பீதாம்பரதாரியாகிய திருமாலின் திருக்கையில் சக்கரம் இன்றி வறுமை மிகும் புதுமையை மனங்கொண்டு என் நாயகனாகிய சிவபெருமானைச் சார்ந்து மகிழ்ந்து வணங்கி முறையிடலும் மங்கை பங்கனும் வீரபத்திரரை விடுத்தனர்.

விடுவச்சேனன் வீரபத்திரரைக் காணல்

அவன்அணுகித் தயித்தியர்கள் மூவரையும் எதிர்ந்துபொரு தழித்து வீட்டித், தவம்நிறையுந் திருக்காஞ்சி வளநகர்க்கு நெறி-யானே சார்த லோடும், சிவமுதலைத் தொழுதுறையும் முகுந்தனர் தஞ்சேனைத் தலைவன் ஆங்கே, கவலையெலாம் விண்டகல வயவீரன் றனைஎளிதிற் காணப் பெற்றான். 14

வீரபத்திரர் சென்று அசுரர் மூவரையும் எதிரிட்டுப்போர்செய்து மன வலியைக் கெடுத்துக் கொன்று தவம் நிறைதற் கிடனாகிய திருக் காஞ்சிமாநகர்க்கு வழியே சாருங் காலைச்சிவபிரானாராகிய முதல்வனைத் தொழுது தவத்தில் உறையும் திருமாலின் சேனாதிபதி அப்பொழுதே துன்பமெலாம் விட்டு நீங்க அவ்வீரபத்திரரை எளிதிற் காணும் பேற்றினை எய்தினர்.

முயல்வுற்றும் அரிதாய திருக்காட்சி முயலாமே எய்தப் பெற்-றான், இயல்புற்ற பெருந்தவத்தீர் சிவபூசைப் பயன்எவரே அளக்கற்பாலார், பெயர்வுற்றுச் சென்றோடுந் தீர்த்தம்எதிர் வந்தாடப் பெற்றோ னன்னான், பயில்வுற்ற மகிழ்வோடும் வீழ்ந்திறைஞ்சி மறைமொழியாற் பரச லுற்றான். 15

'பெருந்தவத்தை இயல்பாக உடையீர், முயன்றும் பெறற்கரிய தரிசனத்தை முயலாது எளிதினில் அடையப் பெற்றனன் விடுவச்சேனன். ஆகலின், சிவபூசனையால் விளையும் நன்மையை யாவரே வரையறுத்துக் கூற வல்லவர் ஆவர். உறையுள் நீங்கிப் போய் ஆடற்குரிய கங்கைநீர் தன் இடத்தையடைய அதன்கண் மூழ்கினவனை ஒத்தவனாய் நிலைத்த மகிழ்வோடும் வீழ்ந்து வணங்கி வேதப் பாக்களால் துதிக்க லுற்றான்.'

நன்பாரீர் தீவளிவான் உலகெங்கும் விராய்நின்ற நலமே போற்றி, முன்பாலும் தென்பாலும் பின்பாலும் வடபாலும் மேலும் மூவா, நின்பாரச் சிலைபோற்றி அன்பாளர்க் கன்பான நித்த போற்றி, வன்பாளர் தமைச்சீறும் வெம்புலிப்போத் தன்னானே என்று வாழ்த்தா. 16

நன்னிலமும், நீரும், நெருப்பும், காற்றும், வானமும், ஆகிய இவற்றினும் உயிர்களினும் கலந்து நின்ற நன்மையே போற்றி, நாற்றிசையினும் விண்ணினும் கெடாத நினது பொறையுடைய வில்லுக்கு வணக்கம். அன்புடையவர்க் கருள் சுரக்கும் நித்தனே வணக்கம். கொடியோரைச் சீறித் தெறும் கொடிய புலி ஏற்றை ஒப்பவனே என்று துதித்து,

முன்பின், மேல் எனபன முறையே கிழக்கு, மேற்கு, விண்ணிடத்தவரைக் குறிக்கும். மூவாமை—தோலாமை.

திருவுள்ளங் களிசிறப்ப வேட்டதெவன் புகலென்னச் செம்மல் கேட்பக், கருவண்ணன் தமனுனேன் கைகூப்பி நின்றியம்புங் கவுரி பாகன், அருளுண்மை தெளியாத தக்கன்றன் வேள்வியைநீ அழித்தஞான்று, தெருளின்றி அமரேற்று நெடுமால்உன் மிசைவிடுத்த திகிரி தன்னை. 17

'நன்மனத்திற் களிப்பு மிக விரும்பியது யாது' என அண்ணல் வினவத் திருமாலிற்குரிய சேனதிபதி கைகூப்பி நின்று கூறுவன். உமையம்மையார் துணைவருடைய திருவருளுண்மையில் தெளிவு பிற வாது பித்தேறிய தக்கன் இயற்றிய யாகத்தை நீவிர் அழித்த காலை மருளுற்றுப் போரை மேற்கொண்டு திருநெடுமால் நும்மீது ஏவிய சக்கரத்தை,

அற்றவர்கட் கினியாய்உன் திருமேனி மிசைப்பூண்ட அயன்க பாலம், பற்றிவிழுங் கியதிந்நாள் அடியேனுக் களித்திளனப் பகரக் கேளாச், சொற்றதுநங் கரத்தில்லை கபாலத்தின் வாயுளதேல் துகளொன் றில்லாய், மற்றதுவே தரக்கோடி எத்திறத்தும் எனப்புகன்ருன் வாகை வேலான். 18

ஏனைய பற்றுக்களைக் கைவிட்டுத் தன்னையே பற்றியவர்க்கு இனியவனே! உன் திருக்கழுத்திற் பூண்டு மார்பிடை விளங்கும் பிரமகபாலம் பற்றி விழுங்கியது இப்பொழுது அடியேனுக்கு அதனை அருளுதி எனக் கூறக் கேட்டு, நீ கூறியது நம் கரத்தில் இல்லை. அதன் வாயில் உளதாயின், குற்றம் சிறிதும் இல்லாதவனே! அதுவேதர எவ்வகை யாகவாயினும் கொள்ளுதி என்றருளினர் வீரபத்திரர்.

விடுவச்சேனன் விகடக் கூத்தாடுதல்

உரைத்தமொழி உளங்கொள்ளா இனிச்செய்வ தென்னே-என் ருேர்ந்தான் யாருஞ், சிரிக்கலுறக் கால்இரண்டும் கரம்-இரண்டும் குஞ்சிமாச் செய்து கொண்டு, வரித்தகழல் வீரன்எதிர் வாய்நாசி விழிஇணையை மாறி மாறிச், சுரித்தசைத்து நடஞ்செய்-தான் எவ்வமொடு பயங்காட்டி எயிறு தோன்ற. 19

எத்திறத்தினும் என்பதை மனத்திற் கொண்டு இப்பொழுது செயத்தக்கது யாதென்ருராய்ந்து சிரிப்புக் கொள்ளாரும் சிரிக்க இரு கால்களையும் இருகைகளையும் முடக்கிக்கொண்டு வீக்கிய கழலுடைய வீரபத்திரர் திருமுன்பு வாயையும், மூக்கையும், இருகண்களையும் முறுக்கியும் வளைத்தும், சுருக்கியும் விரித்தும், குழித்தும் துன்பமும், பயமும் தோற்றுவித்துப் பற்கள் தோன்றும்படி விகடக் கூத் தியற்றினன்.

இவ்வண்ணம் உடல்கூனி வளைந்துநெளிந் தொருவிகடம் இயற்ற நோக்கிச், செவ்வண்ண வயவீரன் வறிதுநகை தோற்று-தலும் திரண்டோர் எல்லாம், மைவண்ணக் கடல்கிளர்ந்தா லெனநகைத்தார் அக்காலை மலர்மேல் வைகும், அவ்வண்ணல் நகுபைங்கண் வெண்டலையும் அதுநோக்கிச் சிரித்தலோடும். 20

இங்ஙனம் உடம்பு கூனி வளைந்து நெளிந்தொரு விகடக் கூத்தியற்ற நோக்கிச் செந்நிறமுடைய வீரபத்திரர் புன்சிரிப்புக் கொளலும் குழுமியிருந்த கணத்தவர் கடல் பொங்கினாற் போல ஆரவார மெழ நகைத்தனர். அப்பொழுது பிரம கபாலமும் அதனை நோக்கிச் சிரித்த அளவிலே, வறிது சிறிதாகும் (தொல்—உரி. 336).

போராழி அதன்வாயிற் கழிந்துபுவி மிசைவீழப் பொருக்கென்
றங்கை, ஓரானை முகக்கடவுள் அதுகவர்ந்தங் கறியான்போன்
றிருப்ப நோக்கிப், பேராண்மைப் படைத்தலைவன் இனிச்செயலே
தென்றழுங்கிப் பேதுற் றந்தச், சீராளன் திருமுன்புங் கைகண்ட
விகடநடஞ் செய்து வேண்ட. 21

போருக்குரிய சக்கரம் வெண்டலை வாயினின்றும் கழிந்து நிலத்தில் வீழ விநாயகப் பெருமான் விரையக் கைப்பற்றிக் கொண்டறிந்திலர் போல இருப்ப அதனை நோக்கிப் பேராற்றலைப் படைத்த விடுவச்சேனன் என் செய்கேன்! என வருந்தித் திகைத்து அவ்விநாயகப் பெருமான் திருமுன்பும் பயன் விளைவை நனகறிந்த விகடக் கூத்தினைச் செய்து குறையிரப்ப,

விடுவச்சேனன் விநாயகரிடத்தில் சக்கரம் பெறுதல்

ஏக்கறவா னவன்இயற்றும் விகடநடம் நெடும்போதெம்
பெருமான் நோக்கி, மாக்கருணை சுரந்தருளி ஆழிஅவன் றனக்-
களித்தான் வரத்தான் மிக்கீர், போக்கறும்இக் காரணத்தால்
அன்றுமுதல் காஞ்சியின்அப் புழைக்கைத் தேவை, ஊக்கமுறுந்
திறல்விகட சக்கரவி நாயகன்என் றுலகங் கூறும். 22

ஆசையால் தாழ்ந்து விடுவச்சேனர் இயற்றும் விகடக்கூத்தினை நெடுநேரம் எம்பெருமானாராகிய விநாயகர் நோக்கிப் பெருங்கருணை மீக்கூர்ந்தருளிச் சக்கரத்தை அவனுக்களித்தனர். தவப்பயனால் மிக்க முனிவர்களே! குற்றமற்ற இக்காரணத்தினால் அந்நாள் முதல் காஞ்சியில், எழுந்தருளியுள்ள துதிக்கையை யுடைய மூத்த பிள்ளையாரை எழுச்சி மிகும்வலிமை அமைந்த விகடசக்கரவிநாயகர் என்றுயர்ந்தோர் கூறுவர்.
"ஏக்கற்றும் கற்றார்" (திருக். 395) ஏக்கறல்–ஆசையால் தாழ்தல்.

விடுவச்சேனன் சக்கரத்தை விட்டுணுவிடம் சேர்த்தல்

கலிநிலைத்துறை

விகட சக்கர விநாயகன் அளித்தஅத் திகிரி
அகம லர்ச்சியாற் பெற்றனன் மீண்டனன் அகிலம்
புகழும் மால்புரத் தெய்தினன் பொலம்புனை ஆடைத்
தகவி னனடி இறைஞ்சிஅச் சக்கரம் ஈந்தான். 23

விகட சக்கர விநாயகர் வழங்கிய அச்சக்கரத்தை அகமலர்ச்சியோடும் பெற்று மீண்டும் உலகோர் புகழும் வைகுந்தத்தை அடைந்து பொன்னுடையை அணிந்த திருமாலைப்பணிந்து அச்சக்கரத்தைக் கொடுத்தனன்.

கண்ட னன்பணிப் பாயலான் கவலைகள் முழுதும்
விண்ட னன்தழீஇக் கொண்டனன் மீமிசை வியப்புக்
கொண்ட னன்தன தமைச்சியல் பூண்டஅக் குரிசிற்
கண்டர் போற்றுசே னாபதித் தலைமைஅன் றளித்தான். 24

ஆதிசேடனைப் படுக்கையாகக் கொண்டமாயன் கண்டனன்; வருத்த முழுதும் விடுத்தனன்; இறுகப் புல்லிக் கொண்டனன்; அதிசயம் மேன் மேற்கொண்டனன்; அமைச்சர் பாரத்தைப் பூண்டுள்ள விடுவச்சேனர்க் குத்தேவர் போற்றும் சேனாதிபதித் தலைமையையும் அன்றே அளித்தனன்.

விடுவச்சேனன் விண்டுவினிடத்தில் வரம்பெறல்

உருத்தி ரச்செயல் வீரபத் திரன்புடை உற்றுத்
திருத்த கும்படை பெற்றவா செப்புகென் றிசைக்குங்
கருத்த னுக்கவண் நிகழ்ந்தன யாவையுங் கரைந்தான்
அருத்தி கூர்படைக் கிறையவன் அச்சுதன் கேளா. 25

'அழித்தலையுடைய வீரபத்திரர்பாற் சென்று தெய்வத்தன்மை யுடைய சக்கரத்தைப் பெற்ற தெங்ஙனம்' கூறுக என்னுந் தலைவராகிய விட்டுணுவிற்கு அங்கு நிகழ்ந்த செய்திகள் முழுவதும் கூறினான் படைத்தலைவனாகிய விடுவச்சேனன். விருப்பம் மிகக்கேட்டு,

முறுவல் பூத்தனன் மொழியும்அவ் விகடநாடகத்தை
உறுவர் ஏறனாய் எம்மெதிர் காட்டுகென் றுரைப்பத்
தெறுபெ ரும்படைக் கிறைவனுந் திருந்தவைக் களத்து
நறும லர்த்துழா யவனெதிர் நடித்தனன் அதனை. 26

திருமுக மலர்ந்து 'பேசப்பெறும் அவ்விகடக் கூத்தைத் தேவர் தம்மில் மிக்கோனே! எம்மெதிர் நடாத்துக' என்று கூற, அழிக்கின்ற பெரும்படைச் சேனாதிபதியும் சிறிய சபையின்கண் திருமால் திருமுன்பு அக்கூத்தினை இயற்றினன்.

நோக்கி அற்புதம் எய்தினன் மாயவன் நுவல்வான்
ஊக்கும் ஆற்றலோய் உள்ளமும் விழிகளும் உவகை
மீக்கொ ளப்புரி வியத்தகும் இப்பெரு விகடம்
பார்க்கில் யாவரே கழிபெரு மகிழ்ச்சியிற் படாதார். 27

மாயவனார் கண்டு வியந்து கூறுவார்: எழுச்சி மிகும் ஆற்றலை யுடையோனே! மனமும், கண்களும் களிப்பு மிக அதிசயிக்கத்தகும் இவ் விகடக்கூத்தைக் காணில் தம வயமிழந்து மிகப்பெரு மகிழ்ச்சியில் மூழ்காதார் யாவரே!

எமக்கு நன்மகிழ் வளிக்கும்இக் கூத்தினை இதன்மேல்
நமக்கு முன்னுற நலங்கெழீஇ நடிக்கும்நம் அடியார்
தமக்கு வேட்டன வழங்குவேம் தழல்மணிக் கதிர்கள்
இமைக்குங் காஞ்சியின் வரதரா சப்பெயர் எம்முன். 28

'நெருப்பை ஒக்கும் மாணிக்கங்களின் கதிர்கள் வீசும் காஞ்சித் தலத்தில் வரதராசப் பெயர் பூண்ட நம் திருமுன்பு நமக்கு நன் மகிழ்ச்சியை விளைக்கும் இக்கூத்தினை அன்பு கலந்து நடிக்கும் அடியவர் தமக்கு விரும்பியவற்றை அளிப்போம்' என்றருளினர்.

எவர்கள் இத்தனிக் கூத்தினை இயற்றும்ஆர் வத்தார்
அவர்க ளேஎமக் கினியவர் சாலஎன் றருளிப்
புவனம் ஏத்தும்அத் திகிரியை விதியுளிப் பூசித்
துவகை மீக்கொளக் கரமிசைக் கொண்டனன் உரைப்பான்.

'ஒப்பற்ற இக்கூத்தினை இயற்ற விருப்புடையோர் யாவர் அவரே நமக்கு மிக இனியவர் ஆவர்' என்றருளி உலகோர் போற்றும் அச் சக்கரத்தை விதிவழிப் பூசனை செய்து மகிழ்ச்சி மிகத் திருக்கரத்தில் ஏந்திப் பின்பு கூறுவார்.

முன்னை நாள்உயர் கச்சியின் வயிரவ முதல்வன்
றன்னை வேண்டிநன் றிரந்துசூ லத்தலைக் கிடந்த
நின்னை யான்விடு வித்தனன் அதற்குநே ராக
இன்ன தாயகைம் மாறுநீ அளித்தனை இந்நாள். 30

'உயர்ந்த காஞ்சிமா நகரில் முற்காலத்து யான், வயிரவ முதல்வர் சூலத்தில் கோப்புண்டு கிடந்த நின்னை அவரை வேண்டிப் பெரிதும் இரந்து விடுவித்தேன். அதற்கு ஒப்பாக இத்தகைய பிரதி உபகாரம இன்று நீ புரிந்தனை.' நேராதல்—ஒத்தல்.

அறுசீரடி யாசிரிய விருத்தம்

செய்ந்நன்றி யறிவோரும் அதன்பயனைப் பெறுவோரும்
திரைநீர் வைப்பின், நின்னன்றி யாருளரோ காஞ்சியில்நீ தொழு-
தேத்தும் இலிங்கம் போற்றி, உன்னன்பின் செயல்இதனைக்
கேட்டோர்கள் எம்முலகம் உறுக என்னுத், தன்னன்பின் கிழு-
வோனைத் தழீஇக்கொண்டு மகிழ்ந்திருந்தான் சார்ங்க பாணி. 31

'கடல் சூழ்ந்த நிலவுலகில் ஒருவர் செய்த நன்றியை மறவாதிருத்தலும், செய்தார்க்கோர் தளர்ச்சி வந்துழி நீக்கி நிலை பெறுத்துதலும், நின்னை ஒப்பார் பிறர் உள்ளனர் கொல்லோ! காஞ்சியில் நீ தொழுது துதித்த இச் சிவலிங்கப் பெருமானைப் போற்றி அன்பினால் நீ செய்த இச்செய்கையைக் கேட்டவர்கள் வைகுந்த பதவியை அடைக என்றருளித் தனதன்பிற்குரிய விடுவச்சேனனைச் சார்ங்க வில்லினராகிய திருமால் தழீஇக் கொண்டு மகிழ்ந்திருந்தனர்.

விடுவச்சேனேசப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்–1193

# தக்கேசப் படலம்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

விரவினோர் தணக்க லாற்றா விடுவச்சே னேச்ச ரத்தின்
வரவினைத் தெரிந்த வாறு வகுத்தெடுத் துரைத்தேம் இப்பால்
இரவெரி ஆடும் எம்மான் இனிதமர் அதன்கீழ்ப் பாங்கர்க்
கரவிலார்க் கருளுந் தக்கேச் சரத்தியல் கட்டு ரைப்பாம். 1

மேவினோர் பிரிய ஒண்ணாத விடுவச்சேனேச்சரத்தின் வரலாற்றினைத் தெரிந்த அளவு கோவைப் படுத்திக் கூறினோம். இனி, நள்ளிருளில் எரியை ஏந்தி நட்டம் பயிலும் எமது பெருமான் இனிது வீற்றிருக்கும் அதன் கிழக்கில் கரவிலவர்பால் வந்தருள் செய்யும் தக்கேச்சரத்தின் இயல்பினை விரித்துரைப்போம்.

தக்கன் மைந்தரை நாரதர் தவத்திற் செலுத்தல்

பொறிவரிச் சுரும்பு மூசப் புரிமுறுக் குடைந்து விள்ளுஞ்
செறிஇதழ்ப் புழற்கால் கஞ்சத் திருமலர்ப் பொகுட்டு வாழ்க்கை
அறிவன தேவ லாற்றால் அடல்வலித் தக்கன் என்போன்
மறிவரு வரத்தாற் பல்லோர் மைந்தரைப் படைத்தான் மன்னோ.

புள்ளிகளையும், வரிகளையும் உடைய வண்டுகள் மொய்ப்பப் பிணிப் பவிழ்ந்து மலரும் நெருங்கிய இதழ்களையுடைய உட்டுளை பொருந்திய தண்டின் அமைந்த தெய்வத் தனமை மருவிய தாமரை மலர்ப்பொகுட் டுறை பிரமன் உபதேசப்படி பெருவன்மை படைத்த தக்கன் எனப்படு வோன் கேடிலாத தவத்தினால் மைந்தர்கள் பலரைச் சிருட்டிசெய்தனன்.

அங்கவர் தக்கன் ஏவ லாற்றினாற் படைப்பான் எண்ணித்
தங்களுள் முயலுங் காலைத் தந்திரிக் கருவிச் சால்பின்
நங்கையோர் பாகற் பேணும் நாரதன் அவர்பால் தோன்றி
இங்குநீர் உழக்குஞ் செய்கை என்னெனக் கடாவ அன்னோர். 3

தந்தையாகிய தக்கன் சொல்வழித் தனயர்கள் சிருட்டித் தொழில் பெறத் தாங்கள் யாவரும் தவம்செய்வுழி நரம்பினையுடைய மகதியாழாகிய கருவியினால் உமையொரு கூறனைப் பொருந்துமாறு துதிக்கும் நாரதர் அவர் முன் வெளிப்பட்டு இப்பொழுது நீவிர் முயலுந் தவத்தினுடைய குறிக்கோள் எவை' என வினவ அத்தன்மையோர்,

பெருவிதி ஏவலிற் சிறுவிதியும், அன்னோன்ஏவலின் அவன் மக்களும் சிருட்டித் தொழிலில் விருப்பம வைத்தனர்.

படைமின்என்றெம்மைத்தாதைபணித்தனன்படைக்கும்ஆற்றல்
அடைவெமக் கருளிச் செய்யாய் ஐயஎன் றிறுத்தார் கேளா
நடைநெறி பிறழா வாய்மை நாரதன் மகதி நல்யா
ழுடையவன் அனையார் தேறச் செவியறி வுறுக்க லுற்றான். 4

'ஐயனே! படைத்தற் றொழிலே வரத்தா பெறுமின்' என்றெம் தந்தையார் ஆணையிட்டனர். 'அவ்வல்லமையை அடையும் வழியை எமக்கருள் செய்வாயாக!' என விடை அளித்திரப்ப ஒழுக்கத்தினின்றும் மாறுபடாத உண்மையுடைய நாரத முனிவர் கேட்டு அத்தக்கன் மக்கள் உய்ய உபதேசம் செய்வார்.

ஐந்தொழில் நடாத்து முக்கண் ஐயனே உலகம் எல்லாம்
மைந்துறப் படைக்கின் றானல் மற்றுநீர் உழந்தீ ராயின்
பந்தமே பயக்கும் பந்தப் படைப்பினாற் பயப்ப தென்னே
வெந்தளைப் பட்டோர் வேறு நிகளமும் விழைவ ரேயோ. 5

ஐந்து தொழில்களையும் ஒருங்கு நடாத்துகின்ற முக்கண்களையுடைய முதல்வரே உலகங்கள் அனைத்தையும் செவ்வியவாகச் சிருட்டிக்கின்றனர். ஆதலின் நீவிர் தொழிலால் வருந்துவீராகலின் தீவினையாகிய விலங்கே வந்து சூழும். படைத்தலாகிய பாசச் செயலால் விளைவது மீளப்பிறத்தலே ஆம். வேறென்னே பயனும். விலங்கிடை அகப்பட்டோர் மேலும் வேறு விலங்கில் சிக்கிக்கொள்ள விரும்புவரோ?

இறைவனார் தன்வயமுடையராய்ச் சங்கற்பத்தால் ஐந்தொழிலும் இயற்றுவர். கரணத்தால் செய்யு முயிர்கள் விகாரமெய்திப் பந்தமுறுவர்.

பிணிப்புறு நிகளம் நீக்கும் பெற்றியே எவரும் பெட்பர்
கணிப்பருந் தவத்தான் மிக்கீர் தெளிமினோ கருணை வெள்ள
மணிக்களத் திறைவன் பாதம் வழிபடல் ஒன்றே யன்றிப்
பணித்திடும் எவையும் தீய பந்தமே பயக்குங் கண்டீர். 6

கட்டுற்ற விலங்கினின்று நீங்கும் நிலையையே யாவரும் விரும்புவர். மதித்தற்கரிய தவத்தினால் மிக்கீராகிய தக்கன் மக்களே! இதனைத் தெளிமின். கருணைப் பெருங்கடலாகிய காளகண்டப் பெருமான் திருவடிகளை வழிபடுதலாகிய ஓர் பணியே அல்லாமல் விதிக்கப் பெறும் பிற யாவும் கொடிய பிறவி வலையிலே அகப்படுத்தும்' என்றறிதிர்.

ஆருயிர்க் குறுதிப் பேறும் அரும்பயன் எவற்றி னுள்ளுஞ்
சீரிய முத்தி ஒன்றே சிறந்ததாம் ஏனைப் பேறு
பேரிடர்ப் பால வாகும் ஆதலாற் பேசக் கேண்மின்
நாரிஓர் பாகன் மேய கச்சிமா நகரம் நண்ணி. 7

அரிய உயிர்களாகிய மக்கட் பிறப்பினோர்க்கு எத்துணைச் சிறந்த ஊதியங்களினும் மிக்கது தலையாய முத்தியாகிய அடிசேர் முத்தியே ஆகும். பிற பேறுகள் பெருந்துன்பத்தின்பாற் படுத்துவன. ஆதலினால், பேசுவ கேட்டுக் கடைப்பிடிமின். மங்கை பங்கன் விரும்பி வீற்றிருக்கின்ற காஞ்சியை அடைந்து,

சிவலிங்கம் நிறுவிப் போற்றித் திகழ்சிவ ஞானப் பேற்றால்
கவலும்பொய்ப் பிறவி மாசு கழுவிவீ டுறுமின் என்று
நுவலுஞ்சீர் முனிவர் கோமான் நோன்கழல் இறைஞ்சி ஏத்தித்
தவலின்றத் தக்கன் ஈன்றார் அத்தொழில் தலைநின் றுய்ந்தார். 8

சிவலிங்கப் பதிட்டை செய்து வழிபாடியற்றி விளைகின்ற சிவ ஞானத்தினால் வருந்துதற்குக் காரணமாகிய பொய்யாகிய பிறவி அழுக்கைக் கழுவி வீட்டினைத் தலைப்படுமின்' என்று விளங்கக் கூறும் சிறப்பினையுடைய நாரத முனிவர் தம் திருவடிகளைப் பணிந்து துதித்துக் கேட்டினிற்றப்பித் தக்கன ஈன்ற மக்கள பூசனை முதிர்ச்சியால் பிறவியிற் றப்பினர். ஞானமாகிய நீர் என்னுமையின் ஏகதேச உருவகம்.

வினைவலித் தக்கன் கேளா வெய்துயிர்த் தழுங்கி வேறு
தனையரைப் படைத்தான் அன்னோர் தமக்கும்அம் முனிவன் எய்தி
இனையவா றியம்பி மீட்பக் காஞ்சியின் இலிங்கந் தாபித்
தனையவா றருச்சித் தேத்தி அவர்களும் முத்த ரானார். 9

தீவினை வலியுடைய தக்கன் கேட்டறிந்து நெட்டுயிர்ப்பெறிந்து வருந்தி வேறு மக்களைத் தோற்றுவித்தனன். நாரதர் மீண்டும் வந்து அம்மக்களையும் நல்வழிப் படுத்தினமையால் காஞ்சியில் சிவலிங்கம் நிறுவிப் போற்றி அவர்களும் பெத்த நிலை நீங்கி முத்தி எய்தினர்.

தனையர்–போலி. (வயிரவேசப்படலம் 27)

தக்கன் வேள்வி செய்யத் தொடங்கல்

தக்கன்ஆ ரிடருள் மூழ்கித் தழலெழ நோக்கி என்றன்
மக்களைச் சிவன்பால் அன்பு மருவுறுத் துலக வாழ்க்கை
ஒக்கநீ கெடுத்தாய் மக்கள் மனைஉனக் கின்மை யாக
முக்கணற் குரியாய் என்று முனிவனைச் சபித்துப் பின்னர். 10

தக்கன் பொறுத்தற்கரிய துன்பத்துள் மூழ்கிக் கண்களில் நெருப்பெழ வெகுண்டு நாரதரை நோக்கி 'என்னுடைய மக்களைச் சிவனுக்குரிய அன்பினராக்கி உலக வாழ்க்கையை ஒருங்கே கெடுத்தனை. ஆகலின், சிவபெருமானுக்கு அன்பினால் உரிமை பூண்டவனே! மனைவியும், மக்களும் உனக்கில்லையாகுக' என அம்முனிவரைச் சபித்துப் பின்பு,

கன்னியர் தமையே பெற்றான் முனிவனுங் கனன்று நோக்கி
நின்னுடைப் புதல்வ ரெல்லாம் நெறிச்செல விடுத்தேன் அற்றால்
என்னைமற் சபித்தாய் பேதைத் தக்கநீ இன்னே நெற்றித்
தன்னிடை விழித்த எம்மான் தண்டிக்கப் படுக என்றான். 11

பெண்மக்களையே படைத்தனன். நாரதரும் நெருப்பெழப் பார்த்து 'நின்னுடைய மக்களை நல்வழியிற் செல்லச் செலுத்தினேன். அது காரணமாக எனக்குச் சாபம் கொடுத்தனை. அறிவிலியாகிய தக்கனே! நீ விரைவில் நெற்றிக் கண்ணுடைய நிமலனால் தண்டனை பெறுவாயாக' எனச் சாபம் தந்தனர்.

இவன்நிலை இதுவாம் ஏனை இமையவர் தமைத்த தீசித்
தவமுனி சபித்தான் பார்ப்பான் தவறிலி தமியன் என்னை
அவமுறப் பொருதெல் லீரும் அகாரணத் தெதிர்த்தீர் நீயிர்
சிவபிரான் வெகுளித் தீக்கோட் படுகெனச் செயிர்த்து மேனாள். 12

தக்கன் நிலைமை இவ்வாருகும். இனி, தேவர்களாகிய ஏனையோரை நோக்கித் தவ முனிவராகிய ததீசி அந்தணனும், குற்றமற்றவனும், தனியனும் ஆகிய என்னைப் பழுதாக எதிர்த்துக் காரணமின்றிப் போர் செய்தீர் நீவிர் ஆகலின் சிவபெருமானார் தம் மறக்கருணையாகிய தண்டனையுட் படுவீராக என வெகுண்டு கூறி, மேனாளில்,

இருதிறத் தவர்க்கும் சாபம் பழுத்தவா றியம்பு கின்றாம்
கருவியாழ் முனிவன் சீறிக் கழறிய பின்னர்த் தக்கன்
தெருமரு மயலின் மூழ்கிச் செருக்கிறைற் புரமூன் றட்ட
ஒருவனை யன்றி வேள்வி உஞற்றுவான் தொடங்கி னானால். 13

தக்கனுக்கும், தேவர் தமக்கும் அச்சாப விளைவுகள் பயன் தந்த வகையை கூறுகின்றோம். நாரத முனிவர் வெகுண்டு சபித்த பின்னர் மனம் ஒரு வழிப்படாது சுழலுதற்குக் காரணமாகிய மயக்கத்தின் மூழ்கி இறுமாப் பெய்தி முப்புரங்களையும் சிரித்தழித்த சிவபிரானைப் பகைத்து யாகம் புரியத் தொடங்கினான். அன்றுதல்—மாறுபடுதல்.

ததீசி முனிவர் தக்கனுக்கு உரைத்தல்

மருத்துவர் முனிவர் சித்தர் வசுக்கள்ஆ தித்தர் மற்றை
உருத்திரர் அயன்மால் ஏனோர் யாவரும் உடங்கு சேரத்
திருத்தக விளித்து வேள்வி செய்வுழித் ததீசி மேலோன்
உருத்தனன் அவையை நோக்கித் தக்கனுக் குரைக்க லுற்றான்.

மருத்துவரும், முனிவரும், சித்தரும், வசுக்களும், சூரியரும், பிரமன்மால் உருத்திரரும், பிறரும் ஒருங்கு சேரத் தக்கமுறையில் வரவேற்று வேள்வியைச் செய்யுங் காலத்தில் ததீசி என்னும் மேலவர் கோபித்துத் தேவ சபையைப் பார்த்துத் தக்கனுக்குக் கூறத் தொடங்கினர்

தக்கன் ததீசி முனிவருக்கு உரைத்தல்

அளித்தருள் பயக்கும் வேள்விக் கரசனுஞ் சிவனை ஈண்டு
விளித்திலை எவன்கொல் என்று வினாதலும் தக்கன் சொல்லும்
இளிப்பரும் எச்சந் தன்னை எச்சத்தால் தொழுக என்னத்
தெளித்திடுஞ் சுருதி எச்சன் மாயவன் எனவுஞ் செப்பும். 15

'கருணையொடுந் திருவருளைப் புரியும் வேள்விக் கரசராகிய சிவபிரானாரை இங்கு வரவேற்று எழுந்தருளச் செய்கிலை என்னையோ' என்று வினவத் தக்கன் கூறுவான்: 'புகழப்படும் எச்சந் தன்னை எச்சத்தினால் வழிபடுக' என்று தெளிய உணர்த்தும் சுருதிதானே எச்சன் என்னும் சொற்பொருள் திருமால் எனவும் கூறும்',

ஆதலின் எச்ச மூர்த்தி அச்சுதன் அவனே யன்றிப்
போதருந் தமோகு ணத்தின் உருத்திரன் ஈண்டுப் போதற்
கேதுஒன் றில்லை காண்டி என்றலும் முனிவன் நக்கு
நோதகும் அவையின் உள்ளார் யாரையும் நோக்கிச் சொல்வான்.

ஆதலின் எச்சமூர்த்தி திருமால். அத்திருமாலே அன்றித் தமோ குணத்தினையுடைய உருத்திர மூர்த்தி இவண் வருதற்கு ஓர் இயை பில்லை என்றறிதி' என்னலும், ததீசி முனிவர் இரங்கத்தக்க அவையில் உள்ள யாவரையும் நோக்கிக் கூறுவார்.

பிறர் பேதைமை பொருளாக நகை பிறந்தது; நோதகல்: 'நோ நொந்து' (திருக். 157.) விசேடவுரையைக் காண்க.

ததீசி முனிவர் மறுமொழி கூறல்

எச்சத்தால் எச்சம் என்னும் மறைப்பொருள் இதுவோ கூறீர்
எச்சத்தின் வேரும் ஏனைக் கருமங்கட் கெச்சம் போல
எச்சத்திற் குயர்ந்தோன் வெள்ளை ஏற்றினன் எனுங்க ருத்தால்
எச்சச்சொல் லதனன் முக்கட் பகவனை இயம்பும் அங்கண். 17

'எச்சத்தால் எச்சம் என்னும் வேத வாக்கியப் பொருள் இதுவோ கூறுமின். வேள்வியின் வேருகும் பிற நற்செயல்களுக்கு வேள்வி சிறந்ததுபோல எச்சத்திற்குத் தலைவர் சிவபிரான் என்னும் தாற்பரியத்தினால் எச்சம் என்னும் சொல்லால் முக்கட்பகவனை அவ்வேதம் கூறும்.

ஆதலின் எச்சந் தன்னால் அணங்கொரு பாகன் றன்னை
மாதவன் முதலாம் விண்ணோர் வணங்கினர் வழிபட் டுய்யப்
போதுவர் என்ப தன்றே அம்மறைப் பொருளாம் அன்றி
ஏதமில் எச்சந் தன்னால் தனைத்தொழும் என்ப தாமோ. 18

'ஆகலின் வேள்வியால் உமையொரு கூறனைத் திருமால் முதலாந் தேவர் வணங்கி வழிபாடு செய்து தப்பிப் பிழைக்க முயல்வர் என்ப தன்றோ அவ்வேதத்தின் கருத்தாம் அல்லாமல் குற்றமற்ற வேள்வி தன்னையே தொழும் என்று பொருள் காணுதல் தகுமோ?'

வேள்வி வடிவினன் திருமால்; வேள்விக்கு நாயகன் சிவபெருமான். 'எச்சமேசுரும் புளர்துழாய் அலங்கலான் என்ப, எச்ச நாயகன் பொலந் துணர் இதழிமா லிகையான்' (சார்ந்தா. 25.)

சகந்தனில் எவருந் தம்மின் உயர்ந்தவர் தமைப்பூ சிப்பர்
உகந்தவர்க் கன்றித் தம்மோ டொத்தவர் இழிந்தோர் தம்மை
அகந்தெறப் பூசை செய்வார் ஆருளார் விதியும் அற்றே
மகந்தனக் கரசன் முக்கண் வள்ளலே என்னும் வேதம். 19

'உலகில் எவருமே தம்மின் மிக்கோரையே பூசனை புரிவர்; உயர்ந்தவரை அன்றித் தம்மோடொத்தவரையும் தம்மின் இழிந்தவரையும் பாவம் அழியப் பூசை செய்வோர் ஒருவரும் இலர். நூல் வழக்கும் அதுவேயாகும். முக்கண் வள்ளலே வேள்விக்கு நாயகன் என்று வேதங்கூறும்.

'உகப்பே உயர்தல்' (தொல். உரி. 9.) ஆதலின் உயர்ந்தவர் என்க.

மலர்தலை உலக மெல்லாம் வழிபடு கடவுள் என்றும்
அலைகடல் உயிர்த்த நஞ்சம் அமுதுசெய் தருளும் மேருச்
சிலையுடை முதலே என்றி யார்இது தெளியார் என்னப்
பலர்புகழ் ததீசி மேலோன் பகர்ந்தனன் பகரக் கேட்டு. 20

'விரிந்த உலகினில் உள்ள உலகோர் யாவரும் வழிபடற்குரிய கடவுள் எந்நாளும் திருப்பாற் கடலில் தோன்றிய விடத்தை அமுதாகக் கொண்டருளிய மேரு மலையை வில்லாக உடைய முதல்வனே என்று யாவர் இதனைத் தெளிவு பெற உணராதார்' என்று பலரும் புகழ் ததீசி முனிவர் கூறினர். அதனைக் கேட்டு,

ததீசி முனிவர் சபித்தல்

அவைக்களத் துறையும் பார்ப்பார் தருபொருட் காசை கூர்ந்து
கவர்த்தபுல் லறிவின் மான்று கடுந்தொழில் தக்கன் கூற்றே
நிவப்புறப் புகற லோடும் நெடுந்தகை மறுவில் காட்சித்
தவத்திறல் ததீசி சீறி விப்பிரர் தம்மை நோக்கி. 21

இச்சபையின்கண் உள்ள பார்ப்பனர்கள் தக்கன் தருகிற பொருளிற்கு ஆசையுற்று இரண்டு பட்ட புல்லிய அறிவினால் மயங்கிக்கொடுஞ் செயலையுடைய தக்கன் சொல்லையே மேன்மையவாகக் கூறிய அளவிலே பெருந்தகையாகிய குற்றமற்ற அறிவினையும் தவவலிமையையும் உடைய ததீசி சினந்து பிராமணர்களைப் பார்த்து,

படுபொருள் வெஃகு நீராற் பார்ப்பனக் கடையர் காள்நீர்
நடுவிகந் துரைத்த வாற்றான் நடலைகூர் ஒழுக்கம் பூண்டு
கெடுநெறி பற்றிச் சைவ நிந்தையிற் கிளர்ச்சி கொண்டு
கொடுமுகக் கலியில் தோன்றிக் கலாய்த்தனீர் இடும்பை கூர்ந்து 22

பார்ப்பனக் கீழ் மக்களே, கிடைக்கின்ற பொருள் விரும்பிய தன்மையால் நீவிர் நடுவு நிலைபிறழ்ந்து கூறிய முறையால் வஞ்சித்தல் மிகுகின்ற நடையை மேற்கொண்டு தீயவழியைப் பின்பற்றிச் சிவநிந்தையில் எழுச்சி கொண்டு கொடுமைக் கிடனாகிய கலியுகத்தில் தோன்றிப் பிணங்கித் துன்பம் மிகுந்து,'

வைதிகப் புறத்த ராகிச் சைவநூல் வழியைக் கைவிட்
டுய்தியில் புறநூல் பற்றி உலப்பரு மறையின் நிந்தை
ஐதெனப் புகன்று வேற்று மொழியினை யாத ரித்துப்
பொய்திகழ் நரகின் உய்க்கும் புண்டரம் பொலியக் கொண்டு. 23

வேத சிவாகம நெறியைக் கைவிட்டுப் பிழைக்கலாகாத புறச்சமய நூல்களைப் பிரமாணமாகக்கொண்டு பிரபலசுருதியாகிய வேதநிந்தனையை நனறென்று விரும்பி அந்நிய பாஷைகளைப் பாராட்டி வஞ்சிக்கும் நரகிடைச் செலுத்தும ஊர்த்துவ புண்டர முதலியவற்றை விளங்கப்பூண்டு,

'வேதம் பொது நூலாய் ஆகமம் சிறப்பு நூலாய்ப் பயிற்சியும், ஒழுகலாறும் உடையன ஒருவி என்றனர். வயிறு வளர்த்தலைக் குறிக் கோளாக் கொள்ளுதல் புறநூல் பற்றி வேற்றுமொழியை வளர்த்து, நரகிடைப் புகாது காத்து முத்தியை அளிக்கவல்லது திருநீறு அதனை இழப்பிக்கும் ஏனைய குறிகளை நரகின் உய்க்கும் என்றனர்.

எண்டிகழ் மறைசா றெல்லாம் இயம்பும்வெண் ணீற்று மும்மைப்
புண்டரம் அக்க மாலை சிவலிங்க பூசை தம்மின்
விண்டிடா வயிரங் கொண்டு திகிரியால் வெந்த புண்ணைத்
தண்டுசங் காழி கஞ்சக் குறிகளைத் தனுவில் தாங்கி. 24

'மிக்கோர் அறிவில் விளங்கும் வேதாந்தங்கள் போற்றும் திரு வெண்ணீற்றினு லமைந்த திரிபுண்டரமும், உருத்திராக்க வடமும், சிவலிங்க பூசனையும் ஆகிய இவற்றில் மனக்காழ்ப்பினை அடைந்து திருமா லின் சங்கு சக்கர வடிவில் வெந்த புண்ணினையும், தண்டு, சங்கு, சக்கரம், தாமரைமலர் இவற்றின் வடிவுபட எழுதுதலையும் உடம்பில் தாங்கி,'

அந்தணர் தமக்குத் தேவாம் அரனடி தழாது தோளின்
வந்தவர் தமக்குத் தேவாம் மாயனைத் தழுவிப் பேணி
நிந்தனைக்குரிய ராகி நிலமிசைத் திரிக வாளா
நொந்துநீர் தழுவும் மாலும் நுங்களுக் கருள்செய் யாதல். 25

'அந்தணர் தமக்குத் தெய்வமாகும் அரன் திருவடிகளை மனத்துட் கொள்ளாது தோளிற் பிறந்தவராகிய க்ஷத்திரியருக்குத் தெய்வமாம் திருமாலை மனங்கொண்டு போற்றிப் பழிப்பிற் குரியராகிப் பிறப் பிறப்பிற் பட்டுழல்வீர்களாக. வறிதே வருந்தி நீவிர் சூழும் திருமாலும் நுங்களுக் கருள் செய்யாது கைவிடுக?'

என்னவெங் கொடிய சாபம் இயம்பினன் சிதம்புத் தக்கன்
றன்னைமுன் செயிர்த்து நோக்கிச் சாற்றுவான் அச்ச மின்றிப்
பொன்னவிர் சடிலத் தேவை இகழ்ந்தனை பொறிஇ லாதாய்
நின்னுடைக் குலத்துக் கின்னே முடிபென நினைவிற் கோடி. 26

என்று மிகக் கொடிய சாபத்தைக் கூறினர். கீழ்மைக் குண முடைய தக்கனைச் சீறிப்பார்த்துக் கூறுவார்; அறிவிலி! அச்சமின்றிப் பொன்போல விளங்குகின்ற சடையுடைப் பெருமானை இகழ்ந்தனை ஆகலின், நின்னுடைய குலம் இப்பொழுதே முடிந்ததெனை நினைவிற் கொள்ளுதி.'

வழிபடற் குரியார் தம்மை வழிபடல் மறுத்து மற்றை
வழிபடற் குரிய ரல்லார் தமைவழி படுவோ ராகி
வழீஇனர் தமக்குத் தெய்வம் வகுத்திடுங் கொடிய தண்டம்
வழியினல் இன்னே எய்தும் என்பது வழக்காம் மன்னே. 27

வழிபாட்டிற்குரிய சிவபெருமானை வழிபாடு செய்யாது வழிபடற் குரிய ரல்லராகிய மற்றைத் தேவர்களை வழிபாடு செய்வோராகி நன் னெறிக்கண் நின்றும் தவறிய அந்தணர்களாகிய நுமக்குவகுக்கப்பெறும் கொடிய தண்டனை நெறியினால் இப்பொழுதே நேரும் என்பது மரபாம்.'

என்றனன் ததீசிச் செம்மல் எழுந்துதன் இருக்கை புக்கான்
அன்றது நோக்கிப் பூமேல் ஆண்டகை அச்சம் எய்தித்
துன்றிய குழுவின் நீங்கிச் சுடர்மழுப் படையான் பாங்கர்ச்
சென்றனன் சென்ற பின்னர்ச் சிறுவிதி எழுந்து நின்று. 28

என்று கூறித் ததீசி முனிவர் எழுந்து தனது ஆசிரமம் சேர்ந்த னர். அந்நாள் அந்நிகழ்ச்சியைக் கண்டு பிரமன் அச்சமுற்றுச் செறிந்த தேவர் குழாத்தின் நீங்கிப் பரசு பாணியராகிய சிவபிரானார் இருக்கையை எய்தினன். எய்திய பின் தக்கன் எழுந்து நின்று,

வீரபத்திரர் தோற்றம்

எச்சனும் துளவி னானை அடைக்கலம் என்று போற்றி
அச்சுதன் அருளால் வேள்வி தொடங்கலும் அனைய தெல்லாம்
முச்சகம் புகழும் நல்யாழ் முனிவரன் மொழியக் கேளாப்
பச்சிளங் கொடியி னன்னாள் பரம்பொருட் கிதனைக் கூறும். 29

யாக வடிவினராம் திருமாலைப் புகலடைந்து போற்றி அவரருளால் யாகத்தைத் தொடங்கலும், அங்குள்ள நிகழ்ச்சிகள் யாவும் மூவுலகும் புகழும் நல்ல யாழினையுடைய நாரதர் கூறப் பசிய இளங்கொடியை ஒத்த அம்மையார் கேட்டுத் தலைவருக்குக் கூறுவார்.

இறைவனே எனக்கு முன்னர்த் தாதைஎன் றிருந்த தக்கப்
பொறிஇலி நமக்குத் தீங்கே நாள்தொறும் புரியுந் தீயோன்
மறைநெறி வேள்விச் செந்தீ வளர்க்குமால் அதனை இன்னே
குறைபடச் சிதைத்தி நின்பாற் கொளத்தகும் வரம்ஈ தென்றாள்.

'இறைவனே! முன்னாள் எனக்குத் தந்தை என இருந்த அறிவிலி யாகிய தக்கன் நமக்கு நாடோறுந் தீங்கினையே புரியும் கொடியோனை வேதத்துட் கூறப்படும் வேள்வியிற் செந்தீயை வளர்க்கும். அவ் வேள்வியை இப்பொழுதே குற்றப்படச் சிதைவு செய்வீராக. நும்மி டத்துக் கொள்ளற் குரிய வரம் இதுவேயாகும்' என்றனர்.

இருள்குடி யிருந்த கூந்தல் இறைவிதன் மாற்றங் கேளாத்
தெருள்குடி யிருந்த சிந்தை தைவரச் சிவந்த நோன்தாள்
அருள்குடி யிருந்த பெம்மான் அழிதகைத் தக்கன் நெஞ்சின்
வெருள்குடி யிருத்து மொய்ம்பின் வீரபத் திரனைத் தந்தான். 31

இருள் குடிகொண்ட கூந்தலையுடைய உமையம்மையார் தம் திருவாக்கைத் திருச்செவியேற்று மெய்யறிவு நிலைபெற்ற உள்ளம் வருடச் சிவந்த வலியமைந்த திருவடியையும் அருள் நீங்காது நிலைபெறுதலையும் உடைய பெருமான் அழிதற்குரிய தகுதி வாய்ந்த தக்கனுடைய மனத்தில் அச்சத்தை நிலைபெறுத்தும் வன்மையை யுடைய வீரபத்திரரைத் தோற்றுவித்தனர்.

திருவடி சிவத்தல்: "தணிவொன்று மனமுடையார் புகழ் தீண்டச் சிவந்த பிரான்" (திருமாற்பேற்றுப்படலம் 15) "செருடக் கடிமலர்ச் செல்விதன் செங்கமலக் கரத்தால், வருடச் சிவப்பன மாற்பேருடையான் மலரடியே" (திருநா. திருமாற்பேறு.)

எண்ணரும் உலகம் ஈன்ற சிற்றகட் டெம்பி ராட்டி
வண்ணவார் புருவம் மீப்போய் நெரிப்பவாய் துடிப்பப் பொங்கிக்
கண்ணறு சினம்மீக் கொண்டு பத்திர காளி யென்னும்
பெண்ணணங் கரசை ஈன்றாள் பிறங்கெரி சிதறுங் கண்ணாள். 32

அளவிடலரிய உலகங்களை ஈன்ற சிறிய வயிற்றினையுடைய எமது பெருமாட்டி அழகிய நீண்ட புருவம் மேலேறி நெளியவும் அதரங்கள் புடை துடிப்பவும் மிக்குக் கண்ணோட்டத்தை அழிக்கின்ற கோபம் மிக்குப் பத்திரகாளி என்னும் பெண்கள் தலைவியை விளங்குகின்ற எரியைச் சிந்தும் கண்ணினராய் அம்மையார் ஈன்றனர்.

பத்திர காளி வீர பத்திரன் இருவர் தாமும்
அத்தனை உமையைப் போற்றிப் பணிஎமக் கருளிர் என்ன
முத்தலைச் சூலத் தண்ணல் மொய்ம்பனை அருளின் நோக்கி
இத்திரு மடந்தை யோடும் இறைப்பொழு தின்கட் போந்து. 33

பத்திரகாளி வீரபத்திரர் ஆகிய இருவரும் அம்மையப்பர் தம் அடியிணைகளைப் பணிந்து 'பணி எமக்கருள் செய்வீர்' என்று வேண்ட மூவிலைச் சூலத்தினையுடைய பெருமானார் வீரரை அருளொடும் நோக்கி இக்காளிதேவியொடும் விரைந்து போய்,

'விரைந்து என்னும் பொருளில் இறைப் (சிறிது) பொழுதில் என்றருளினர்.

பழித்தொழில் தக்கன் வேள்வி பாழ்படுத் துமையாள் சீற்றம்
ஒழித்திஎன் றருளிச் செய்தான் ஒள்ளிழை உமையும் அவ்வா
றழித்துநீர் வருதிர் என்று விடைகொடுத் தருளப் பெற்றுத்
தெழித்தனர் எழுந்தார் சென்றார் இருவருஞ் சீற்றம் பொங்க. 34

'இழி தொழிலையுடைய தக்கன் வேள்வியை அழித்து அம்மையின் சினத்தை ஒழிப்பாய்' என்றருளினர். விளங்குகின்ற அணிகளைப் பூண்ட உமாதேவியாரும் 'அவ்வாறே நீவிர் அழித்துப்பின் வருவீர்' என்று விடையளிப்பச் சினக்குறிப்புடன் பேரொலி எழுப்பி இருவரும் கோபம் மீக்கொள்ளப் புறப்பட்டுச் சென்றனர்.

எழுசீரடி யாசிரிய விருத்தம்

சண்ட வாயு மந்த மாக வடவை அங்கி தண்ணெனச்
சண்ட பானு மதியம் ஒப்ப மொய்த யங்கு தென்றிசைச்
சண்டன் வீறு சாந்தம் எய்த வெஞ்சி னந்த லைக்கொளீஇச்
சண்டி கைத்த லைவி யோடு தலைவன் அங்கண் எய்தினான். 35

பெருங் காற்றுப் பிற்பட முற்பட்டு வட வானலம் குளிர்ந்துகாட்ட வெப்பங்கொண்டு நிருக்கும் சண்ட சூரியன் சந்திரனை ஒப்புற வலிமை விளங்கு தென் திசை இயமன் செருக்கும் சாந்தமாகக் கொடிய கோபம் முதிர்ந்து போர் குறித்துச் சென்ற அணங்குகளின் தலைவியாகிய காளி யொடும் வீரபத்திரர் தக்கன வேள்விச் சாலையை எய்தினர்.

யுகாந்தக் காற்று முதலியன. சண்டம்-கொடுமை; விரைவு; பெருமை.

தன்னை நேர்உ ரோம சப்பெ யர்க்க ணந்த வப்படைத்
தன்ன வெங்க ணங்கள் தம்மை வேள்வி யாற்று சாலையின்
வெந்நெ ருப்பு வைப்ப ஏவி உட்பு குந்து மேவலாப்
புன்னெ றிச்செல் தக்கன் ஆவி பொன்றுமா துணித்தனன். 36

தன்னையே ஒத்த உரோமசப் பெயர் பூண்ட சிவகணத்தை மிகுதி யாகத் தோற்றுவித்து அக்கணத்தை வேள்வியைச் செய்கின்ற சாலை யின்கண் பெரு நெருப்பிட ஏவித் தாம் உள்ளே புகுந்து விரும்பத் தகாத புல்லிய வழியிற் செல்லா நின்ற தக்கன் உயிர் கெடுமாறு அவன் தலை யைத் துணித்தனர்.

உழைஉ ருக்கொ டோடும் வேள்வி உயிர்செ குத்த ருக்கர்தம்
விழிகள் மற்றை முப்ப திற்றி ரண்டு பல்லும் வீழ்த்தினான்
வழுவும் இந்து வைச்சி னந்து தேய்த்து வன்னி நாவினோ
டெழுக ரந்து ணித்து மற்றும் ஏற்ற தண்டம் ஆற்றுவான். 37

மான் வடிவு கொண்டோடிய யாக தெய்வத்தின் உயிரைப்போக்கி யும் பன்னிரு சூரியர்களின் கண்களைப் பறித்தும் பற்கள் முப்பத்திரண் டினையும் தகர்த்தும் தப்பிய சந்திரனை வெகுண்டு காலாற் றேய்த்தும் அக்கினியின் ஏழு நாவையும் கையையும் துணித்தும் மேலும் இயைந்த தண்டங்களையும் செய்தனர்.

திருவாசக உந்தியாருட் பல ஒறுப்புக்களும், தக்க யாகப் பரணியி லும் காண்க. கண்ணைப் பறித்தமை: "சிருக்கன் குருட்டிற் புகச் செற்ற கோன்" (திருக்கோ. 270.)

குலவு வாணி தன்னி டத்து வீங்கு கொங்கை மூக்கரிந்
துலகம் ஈன்ற அன்னை உம்பர் பெண்டி ருக்கும் உடுபுரிந்
திலகும் ஏனை விண்ண வர்க்கும் முனிவ ருக்கும் எண்டிசைத்
தலைவ ருக்கும் வீரன் அன்று தக்க தண்டம் ஆற்றினான். 38

உலகீன்ற அன்னையின் கூற்றில் வந்தகாளி, விளங்குகின்ற சரசுவதியின் கொங்கையையும், மூக்கையும் அரிந்து தேவமாதர் ஏனையோர்க்கும் அத்தண்டத்தைப் புரிய விளங்கும் தேவர்க்கும் முனிவரர்க்கும், எண்டிசைத்தலைவராகிய இந்திரன் முதலானோர்க்கும் வீரபத்திரர் அன்று தக்க தண்டங்களைப் புரிந்தனர்.

தடங்கொள் சாலை முற்றும் வெந்த மூற்க ளித்தி யூபமும்
பிடுங்கி வேள்வி யாற்றி னோர்பெ ருங்க ழுத்தை நாணினால்
மடங்க யாத்து வேள்வி யங்கம் மற்றவும் எடுத் தெடுத்
திடங்கொள் கங்கை யூட மூத்தி யிட்ட வன்க ணங்களே. 39

இடங்கொண்ட சாலை முற்றவும் நெருப்பிற்கு இரையூட்டி வேள்வித் தூணையும் பறித்து யாக புரோகிதர்களின் கழுத்தைத் தருப்பைக் கயிற்றினால் சிக்கப் பிணித்து வேள்விக்குரிய உபகரணங்கள் எவற்றையும் பரவிய கங்கையில் எறிந்தனர் கணநாதர்.

இன்ன வண்ணம் வேள்வி முற்றும் இற்ற வாறு காண்டலும்
பொன்னு டைத்து மாயி னன்பொ ருது ளம் புழுங்கினன்
முன்னர் வெள்கி மானம் உந்த மொய்ப றப்பை யேறெனப்
பன்னும் ஊர்தி மேல்இ வர்ந்து படைஎ டுத்தெ திர்ந்தனன். 40

இவ்வாறு வேள்வியை அழித்த வகையைக்கண்டு பீதாம்பரத்தையும் துழாய் மாலையையும் அணிந்த திருமால் உள்ளம் உடைந்து புழுக்கம் எய்திப் பின்பு நாணமுற்று மானம் செலுத்த வலியுடைய புள்ளரசு எனப் பேசப்பெறும் வாகனமேற்கொண் டூர்ந்து பொருது எதிரேற்றனன்.

ஆய காலை அண்ணல் ஆணை யாற்றின் நான்மு கப்பிரான்
மேய வையம் முன்னர் உய்ப்ப ஏறி வீர வள்ளலும்
மாய னோடெ திர்த்து வெம்ப டைக்க லம்வ ழங்கினன்
ஏய அங்கண் மூண்ட பூசல் யாவர் சொல்ல வல்லரே. 41

அப்பொழுது வீரபத்திரர் ஏவலால் நான்முகன் பொருந்திய தேரினை முன் செலுத்த வீரபத்திரரும் ஏறி யிருந்து திருமாலோ டெதிர் நின்று கொடிய படைகளைத் தூண்டினர். அவ்விடத்து முதிர்ந்த போரினை யாவர் சொல்ல வல்லராவர்.

வெற்றி தோல்வி இன்றி நின்று வெஞ்செ ருப்பு ரிவுழிச்
செற்றம் மிக்கு மாயன் வெய்ய திகிரி யைச்செ லுத்தினன்
மற்றும் வீர பத்தி ரன்றன் மார்பின் மூண்ட மாலையுள்
ஒற்றை வெண்க பாலம் அப்ப டைக்க லத்தை உண்டதால் 42

வெற்றி தோல்வி காணாத வகையில் நிலைத்துக் கொடிய போரைப் புரிகையில், திருமால் கோப மிகுந்து கொடிய சக்கராயுதத்தை ஏவினார். வீரபத்திரர் மார்பில் விளங்குகின்ற சிரமாலையுள் பிரம கபாலம் ஒன்றதனை விழுங்கியது.

அறுசீரடி யாசிரிய விருத்தம்

உணங்கரும் வலத்த ஆழி உணங்கிய தோர்ந்து மாற்றார்க்
கணங்குசூழ் கணங்கள் அண்டம் வெடிபட முழங்கி ஆர்த்துத்
துணங்கையாட் டயரும் ஓதை துஞ்சினோர் ஒழிய நின்ற
கணங்கெழு சுரர்கள் கேளாக் கலங்கிஓட் டெடுக்கும் எல்லை. 43

கெடலரிய வெற்றியையுடைய ஆழி கெட்டதறிந்து பகைவர்க்குத் துன்பத்தைச் செய்கின்ற கணங்கள் அண்டமுகடு பிளவு படப் பேரொலி செய்து ஆரவாரித்துக் கூத்தியற்றும் ஓசையை இறந்தோர் ஒழிய எஞ்சியிருந்த தேவர் குழாம் செவி ஏற்றுக் கலங்கிப் புறங்கொடுத்தோடும் பொழுது,

காண்டகு வீரச் செம்மல் கணங்களான் வளைத்துத் தாளின்
மாண்டகு நிகள யாப்பு வலித்தலும் புரவி மான்தேர்
தூண்டிய எகினப் பாகன் துணையடி தொழுதி ரந்து
வேண்டினன் அடிகேள் சீற்றம் விடுத்தருள் இனிஎன் றேத்தி. 44

மதிக்கத்தக்க வீரபத்திரர் கணங்களைக் கொண்டு அகப்படுத்துக் கால்களில் வலிமை அமைந்த விலங்குத் தளையை இறுக்குதலும் சாரதியாய் நின்ற அன்னத்தை வாகனமாகவுடைய பிரமன் திருவடிகளில் வணங்கித் துதித்து 'அடிகேள்! வெகுளியை விடுத்து அருள் செய்மின்' எனக்குறையிரந்தனன்.

பெருமான் எழுந்தருளுதல்

மாதர்வெண் கமலத் தோன்றல் விண்ணப்பஞ் செவிம டுத்து
மேதகைக் கணங்க ளோடும் வெகுளியை விடுத்து நம்மான்
பாததா மரைக்கீழ்ச் சிந்தை பதித்தனன் பதித்த லோடும்
பூதர மகளுந் தானும் ஆயிடைப் போந்தான் அண்ணல். 45

அழகிய வெண்டாமரை மலருறை பிரமன் வேண்டுகோளைத் திருச்செவி சாத்தி மேன்மை பொருந்திய கணங்களுடன் வெகுளியைத் தவிர்த்துச் சிவபிரான் திருவடி மலர்களில் சிந்தையை வைத்த அளவில் மலையரையன் மகளாருடன் பெருமானார் அங்கெழுந்தருளினர்.

பிரமன் வெண்டாமரை மலரிலிருத்தல்: 'சாம வெண்டாமரை மேலயனும' (திருஞா. திருவக்கரை.) "வெண்மலரான் பாற்கடலான்" (திருவா. திருத்தசாங்கம்)

குடமுழா பதலை தக்கை கொக்கரை பணவம் கோதை
படகம்ஆ குளித டாரி தகுணிச்சம் பம்பை மொந்தை
துடிபணை திமிலை கண்டை தொண்டகம் பேரி கல்ல
வடமுதல் இயங்கள் எல்லாம் வயின்தொறும் இயம்பி மல்க. 46

பதலை, கோதை, மொந்தை-ஒருகட் பறைகள். தக்கை, தடாரி— பம்பை விசேடங்கள். கொக்கரை-சங்கு. பணவம் - தம்பட்டம். படகம் - போர்ப்பறை. ஆகுளி-சிறுபறை. தகுணிச்சம் - ஒரு வகைத்தோற்கருவி. துடி - உடுக்கை. திமிலை-பம்பைமேளம். கண்டை-பெருமணி. தொண்டகம்-ஆகோட்பறை. கல்லவடம்-வாச்சிய விசேடம். இயம்-வாச்சியம், பணை-ஓர் வகை முரசு; துணைக்கருவியும் ஆம்.

வளைவயிர் பணிலம் சின்னம் வங்கியம் தாரை காளம்
கிளைபடு நரம்பு வீணை தீங்குழல் மிடற்றுக் கீதம்
உளஎனைப் பிறவுங் காலும் துவைப்பொலி உறந்து விம்மி
அளவலின் உலகம் எவ்லாம் இசைமய மாகித் தேங்க. 47

வளைந்த ஊது கொம்பும், சங்கும், திருச்சின்னமும், இசைக்குழலும், தாரையும், சிறு சின்னமும், கிணை என்னும் நரம்பு பொருந்திய வீணையும், இன்னிசைப் புல்லங்குழலும், வாய்ப்பாட்டும், உள்ளனவாகிய பிறவும் வெளிவிடுகின்ற ஒலிக்கின்ற ஒலி நெருங்கி மிகுத்துக் கலத்தலின் விண்ணிடமும், மண்ணிடமும் இசை மயமாகி நிறைவு பெறவும்,

வாலொளிக் கவிகை பிச்சம் சாமரை மணிப்பூண் தொங்கல்
ஆலவட் டங்கள் மற்றும் விடைக்கொடி அருகு செல்லக்
காலனைச் செகுத்த வாறும் முப்புரங் காய்ந்த வாறும்
போல்வன உலகந் தேறப் பூதர்கள் விருது பாட. 48

வெள்ளொளியை விரிக்கின்ற முத்துக்குடையும், பீலிக்குடையும், வெண் கவரியும், மணிகளிழைக்கப் பெற்ற பிடியுடைய மயில் தோகையும், சிற்றால வட்டமும் பேரால வட்டமும் (விசிறிகள்), விடை எழுதிய கொடியும் உடன் போதவும், இயமனை உதைத்த முறைமையையும், திரிபுரங்களைச் சிரித்தெரித்த முறைமையையும், இவை போல்வனவும் ஆகிய பிற சேவகங்களையும், உலகோர் அறிந்துய்யப் பூதகணங்கள் புகழ்ந்துபாடவும்,

ஏற்றுருக் கொண்டு தன்போல் இணையடி தாங்கப் பெற்று
மாற்றல னாகித் தன்நேர் தருக்கிய மாயோன் செய்ய
காற்றளைப் பிணிப்புக் காணுங் களிப்பினன் மேல்கொண் டுய்க்கும்
ஆற்றல்சால் அறவெள் ளேறு பரந்துசெண் டாடிச் செல்ல. 49

இடப வடிவு கொண்டு தன்னைப் போலச் சிவபெருமான் திருவடிகளைத் தாங்கும் பேறுவாய்த்தமையால் தொழிலாற் பகைவனாகித் தனக்கு ஒப்பெனச் செருக்கிய திருமாலினுடைய கால்களில் விலங்கைக் காண வேண்டும் என்னும் மகிழ்ச்சியினால் சிவபிரானார் மேற்கொள்ளக் கொண்டுரும் வலிமை அமைந்த வெள்ளிய தரும விடை பரவிச்செண்டாடிச் செல்லவும்,

யானை, குதிரை இவற்றின் மீதிருந்து செண்டாடுவர், அவ்விடம் செண்டு வெளி எனவும், அவ்வாடலைச் செண்டாடல் எனவும், ஆட்டத்திற்கேற்ப அவற்றின் அடியிடலைச் செண்டாடல் எனவும் கூறுவர். கந்துகம்–குதிரையையும், பந்தையும் குறித்தலும் காண்க.

வெள்ளநீர்க் கிடையோன் வைத்த விழிஅவன் எவ்வம் காண
வெள்கியாங் கடியிற் சாத்தும் விரைமலர்க் குவையுள் மூழ்க
வெள்ளெலும் பணிகள் தங்கள் இனத்தவர் மெலிவு நோக்கி
உள்ளுடைந் தழுவ தேய்ப்ப ஒன்றொடொன் றலம்பி ஆட. 50

திருப்பாற் கடலிற் பள்ளி கொள்பவராகிய மாயவனார் மலராக இட்ட கண், தன்னை உடையவர்க்கு நேர்ந்த துன்பத்தைக் காண நாணங் கொண்டாற் போலப் பெருமானார் திருவடிகளிற் சாத்தப் பெற்ற மண முடைய மலர்க்குவியலில் மறையவும், திருமால் பிரமர்தம் முழு வெள் ளெலும்புகள் தம் இனத்தவராகிய திருமால் பிரமர்தம் வருத்தத்தைப் பார்த்து மனமுடைந்து அழுதலைப் போல ஒன்றோடொன்று மோது தலை ஒலித்து அசையவும்,

அலம்புதல்—வருந்துதல், ஒலித்தல் இருபொருளும் கொள்க.

புன்னெறித் தலைநின் றெங்கோன் றனைஇகழ்ந் திடும்பை பூண்ட
இன்னரை எனக்கூ றாக அளித்திடும் இறைவன் என்று
மன்னுபே ருவகை பொங்கி மலர்ந்தென நளினச் செங்கை
தன்னிடை வயங்கு செங்கேழ் இணர்எரித் தழல்கூத் தாட. 51

புல்லிய புறச்சமய நெறியில் நின்று எமது பெருமானாரைப் பழித் துத் துன்பத்தையுற்ற இவர்களை எனக் குணவாக அருள் செய்யும் இறைவனார் என்றுட் கொண்டு நிலை பெறும் பெருமகிழ்ச்சி மிக்கு மலர்ந் தாற் போலத் தாமரை மலர் போலும் நிறமுடைய அகங்கையில் விளங்கு கின்ற செந்நிறம் பொருந்திய கொத்தாகி அழல் மலர்தலையுடைய மழுப் படை துள்ளவும்,

உய்திறன் உணரா மற்றை உம்பர்போல் பழிப்பு றாமே
செய்திறன் முன்னர்த் தேறிக் கொடிஞ்சித்தேர் செலுத்தி உய்ந்த
மைதபு தன்னோன் சீலம் அறிந்துள மகிழ்ச்சி பூத்தாங்
கைதென அயன்க பாலம் அற்புத முறுவல் காட்ட. 52

பிழைக்கும் உபாயத்தை அறியாத விண்ணவரைப்போலப் பழிப் பைப் பெறுமே செய்யத்தக்கதை முன்னமே ஆராய்ந்து தெளிந்து கொடிஞ்சி என்னும் உறுப்புடைய தேரைச் செலுத்தும் சாரதியாய்ப் பிழைத்த குற்றமற்ற தன்னை ஒத்த பிரமனின் திறத்தினை எண்ணி உள்ளம் மகிழ்ச்சி பூத்ததுபோல அழகிதெனப் பிரமகபாலம்வியக்கத் தக்க புன்முறுவலைக் காட்டவும்,

மாறடு மதுகைத் தன்னை வள்ளலுக் கியம்பிக் கொல்வித்
தாறுகாண் அமரர் இந்நாள் உலந்தவா நோக்கி ஓகை
ஏறுதன் முடிஅசைத்துத் தகும்தகும் என்ப தேபோல்
ஆறணி சடில மோலிக் கொக்கிற கசைவுற் றாட. 53

பகைவரைக் கொல்லும் வலியுடைய தனது கொடுமையைப் பெருமானார்க்குக் கூறிக் கொல்வித்து இடையூறறினைச் செய்த தேவர்கள் இந்நாளில் அழிந்த திறங் கண்டு உவகைமிக்குத் தனது முடியை அசைத்து அவர்க்குக் கேடு தகும் தகும் எனல் போலக் கங்கையை அணிந்த சடாமுடியில் கொக்கிறகசைந்தாடவும்,

மறைமுதல் ஏவ லாற்றின் வயமகன் இயற்றுந் தண்டக்
குறையினை நிரப்ப எண்ணிக் கொடுவிடம் இறைப்ப தேபோல்
கறைஅணல் துத்திப் பாந்தட் கலன்கள்வாய் பூட்டு விட்டு
முறைமுறைக் கவைநா நீட்டி மூசென உயிர்த்து நோக்க. 54

சிவபிரானாது திருக்குறிப்பினால் வீரபத்திரர் இயற்றிய தண்டத்தின் குறைபாட்டினை நிறைவு படுத்த நினைந்து கொடிய விடத்தினை முகந் தூற்றுவது போல விடமுடைய கீழ்வாயையும், படப் பொறியையும் உடைய பாபபணிகள் வாயைத்திறந் தடுத்தடுத்துப் பிளவுபட்ட நாவை நீட்டி மூசெனும ஒலியுடன் மூச்செறிந்து நோக்கவும்,

கணங்கெழு பாற்றுப் பந்தர்ப் பறந்தலைக் களத்து ஞாங்கர்
உணங்குறும் இமையோர் ஆவி உள்ளதோ இலதோ என்னப்
பிணங்களைத் தொட்டுப் பார்ப்பான் பிணைக்கரம் நீட்டி யாங்கு
வணங்குடல் மதியம் வெண்கேழ் வளங்கதிர் பரப்பா நிற்ப. 55

கூடிய பருந்துகள் சிறகை விரித்துக் கொட்புறு பந்தரையுடைய போர்க்களத்தின்கண் வாடுகின்ற இமையவர் தம் உயிர்கள் அவரவருடம்பிடை உளவோ இலவோ என் றையுற்றுப் பிணங்களைத் தொட்டுப் பார்க்கும் பொருட்டு இருகரங்களை நீட்டினாற் போல வளைந்த வடிவுடைய பிறைமதி வெண்ணிறச் செழுங் கதிரைப் பரப்பா நிற்கவும்,

இகழ்ந்தவர் தமக்கே பின்னும் இன்னருள் புரிய வேண்டிப்
புகுந்திறம் நோக்கி உள்ளம் பொறாதுவேர்த் தூடிப் பொங்கி
அகந்தளர்ந் தெழுந்து வீழ்ந்து புரண்டுகை யெறிந்தா லென்ன
நெகுஞ்சடைக் கங்கை மாது நிரந்தரந் ததும்பி ஆட. 56

மதியாதவர் தமக்கே மேலும் இனிய அருளைப் புரிய விரும்பி எழுந்தருளும் நிலைமையை நோக்கி மனம தாங்காது வியர்த்துப் பிணங்கிச் சினந்து மன மெலிந்து வீழ்ந்தெழுந்து புரண்டு கையெறிந்தாலென்ன நெகுகின்ற சடையினி லுறைகின்ற கங்கை மாது தொடர்ந்து துளும்பி ஆடவும்,

எழுதல் வீழ்தல் புரளுதல் (திரைக்)கை எறிதல் (வயிற்றிலெற்றுதல்) கங்கைக்கும் மகளிர்க்கும் இயைந்த செயல்.

தாதைஎன் றிருந்து தீங்கே தாங்கினாற் காக்கம் நல்கப்
போதரேன் யானென் றாடும் பூவையைத் தழீஇக்கொண் டேகும்
ஆதரங் கடுப்ப அன்ன அணங்கினை இடப்பாற் கையாற்
காதலித் திறுகப் புல்லி அணைத்திடுங் காட்சி தோன்ற. 57

'தாதை என்னும் நிலையை அடைந்தும் தீங்கையே மேற்கொண்டவனாகிய தக்கனுக்கு நலம் செய்யப் போதுகிலேன் யான்' என்று பிணங்கும் நாகணவாய்ப் பறவையை ஒத்த அம்மையாரைத் தழீஇக் கொண்டு செல்லும் தன்மையை ஒப்பத் தேவியாரை இடப்புறத்துத் திருக்கையால் விரும்பி வலிதாகத் தழீஇ அணைத்திடுங் காட்சி புலப்படவும்,

குருதிஎன் பிரத்தம் மூளை குடர்உடற் குறைகள் துன்றும்
பொருகளந் திருக்கண் சாத்தாப் பொருட்டவண் மறைப்பார் போலத்
தருமலர் மாரி தூவி உருத்திர கணங்கள் சாரக்
கருணைகூர்ந் தருளித் தோன்றுங் கடவுளை எவருங் கண்டார். 58

செந்நீரும், எலும்பும், தசையும், மூளையும், குடரும், கவந்தங்களும் செறியும் போர்க்களத்தைப் பெருமானார் திருக்கண்கள் காணாதவாறு அவ்விடத்துப் பொருள்களை மறைப்பார் போல ஐந்து தெய்வத் தருக்களின் மலர் மழையைச் சொரிந்து சிவகணங்கள் உடன் வரத் திருவருள் மிகுந்து எதிர் எழுந்தருளிய பெருமானை யாவருங் கண்டனர்.

கொடுங்கனாக் கண்டு வேர்த்துக் குழறிவாய் வெரூஉங்கால் அன்னை
அடுங்கனா ஒழித்து வல்லே அணைத்திடப் பெறுஞ்சி றூர்போல்
நடுங்குறும் இமையோ ரெல்லாம் நாதனைக் காண்ட லோடும்
நெடுங்களி துளும்பி ஓகை நீடினார் வணங்கி நின்றார். 59

அச்சந் தருகின்ற கொடிய கனவைக் கண்டு பயந்து வியர்த்து வாய்குழறி அழுங்கால் துயிலுணர்த்திக் கனவைப் போக்கித் தாயால் விரைய அணைத்துக் கொள்ளப் பெறும் சிறுவரைப்போல நடுக்க மெய்தும் தேவர் யாவரும் சிவபெருமானாரைக் கண்ட பொழுதே பெருங்களிப்புத் ததும்ப உவகை பெருகினார். வணங்கி நின்றனர்.

இன்னரை நோக்கி எங்கோன் முறுவலித் தெமக்கு வேள்வி
தன்னிடைப் பாகம் என்னே தந்திலீர் அஃது நிற்க
மன்னுபோர் அடுபே ராண்மை வலியினீர் பலரும் என்னே
பன்னும்ஓர் வீரற் காற்றா துடைந்தனிர் பகர்மின் என்றான். 60

இவர் தம்மை நோக்கி எம்து பெருமான் புன்னகை காட்டி அருளி 'வேள்வியில் எமக்கு அவிப்பாகம் என்னே தந்திலீர்; அதுவும் நிற்க, நிலைபெறும் போரில் அடுகின்ற பேராண்மையையுடைய வன்மையீர்! நீவிர் பலரும் தனியன் எனப்பெறும் ஓர் வீரனொடு பொருதற் இயலாது புறங் கொடுத்தனிர் என்னே கூறுமின்' என்று வினவியருளினர்.

விண்ணவர் வேண்டுகோள்

அடியிணை தொழுது மாயோன் முதலிய அமரர் சொல்வார்
அடிபடும் எங்கள் ஆண்மை துரும்பொன்றில் அன்றே கண்டாய்
அடியராம் எம்மைப் பல்கால் குரங்குபோல் ஆட்டு விப்ப
தடிகளுக் கழகோ எந்தாய் ஆற்றிலேம் உய்யக் கொள்ளாய். 61

திருவடிகளை வணங்கி நின்று திருமால் முதலியோராகிய தேவர் கூறுவார்: தாக்குண்டு வருந்தும் இயல்புடைய எங்கள் ஆண்மையை ஓர் துரும்பிடை வைத்து அளந்து காட்டினீர்! அடியேமாகிய எங்களைப் பல சந்தர்ப்பங்களிலும் குரங்குகளைப் போல ஆட்டுவிப்பது அடிகளுக்கு அழகிதேயோ! எந்தையே! பொறுக்கும் வலியிலேம்; பிழையினின் றும் பிழைக்குமாறு கொள்வாயாக.

அத்தனே பல்கால் இவ்வா றுணர்த்தியும் ஆடை மாசின்
மைத்துறு பேதை நீரால் பின்பினும் மயங்கு கின்றேம்
கைத்தளை யாடி ஓச்சிக் காதியும் ஆள்வர் அல்லால்
எத்தனை பிழைசெய் தாலும் இகப்பரோ அடிமை பெற்றோர். 62

தந்தையே! பன்முறையும் இவ்வகையாக உணரச் செய்தும் ஆடையில் அழுக்கேறுதல் போலக் கறுத்துப் பொருந்தும் அறியாமைத் தன்மையால் மேன்மேலும் மயக்க முறுகின்றேம். அடிமையை ஏவல் கொள்வோர் கையில் விலங்கு பூட்டியும், அடித்தும், வருத்தியும் தொழிலில் ஆளுவ தல்லாமல் எத்தனை பிழை செய்யினும் நீக்குவார்களோ?

கறுத்தநின் மிடறு நோக்கேம் கையணி கபாலம் நோக்கேம்
வெறுத்தவெள் ளென்பு நோக்கேம் விழியடி கிடத்தல் நோக்கேம்
குறுத்தமோட் டாமை ஓடும் பன்றியின் கோடும் நோக்கேம்
இறுத்திடும் விதியின் ஆறே மதிஎனல் எம்பாற் கண்டேம். 63

'கருமை தங்கிய நினது திருக்கழுத்தை நோக்கேம்! திருக்கையில் அணிசெய் பிரம கபாலத்தை நோக்கேம்! செறிந்த வெள்ளென்பு மாலையை நோக்கேம்! மலராகச் சாத்திய கண் திருவடியிற் கிடத்தலை நோக்கேம்! பறித்த பெரிய அவதாரப்பன்றியின் கொம்பினை நோக்கேம்' தங்கும் விதிவழி மதி செல்லும் எனக் கூறுதல் எம்மிடத்துக் கண்டேம்!'

நோக்கேம் எனத்தனித்தனி கூறுதல் பரிபவத்தை எடுத்துக் காட்டுவதாகும்.

பொங்கருட் பரமா னந்த பூரண முதலே இங்கு
நங்களை ஆளத் தோன்றி ஐந்தொழில் நடாத்தல் ஓரேம்
மங்கையை மணந்தாய் என்றும் மக்களை உயிர்த்தாய் என்றும்
எங்களில் ஒருவ னாக எண்ணியே இகழ்ந்து கெட்டேம். 64

மிகுகின்ற அருளுதலையுடைய மேம்பட நிறைந்த இன்ப முதல்வனே! இவண் எம்மை ஆட்கொள்ளத் திருவுருக்கொண்டைந்தொழில் புரிதலை உளங்கொள்ளேம். உமையம்மையை மணந்தனை என்றும் மக்களை ஈன்றனை என்றும் எம்மொடும் உடன் வைத்து ஒருவனாக மதித்தலால் இகழ்ந்து கேடுற்றேம்.

'சாவமுன் னாள்தக்கன்' (திருவா) காண்க.

கடவுள்யாம் செருக்கா வண்ணம் கண்டனம் உய்யு மாற்றால்
விடமுதல் அடையா ளங்கள் நின்திரு மேனி வைத்தாய்
அடலுறும் அவையுந் தேறாச் செருக்கறிந் திந்நாள் எங்கள்
உடலினும் அடையா ளங்கள் உறுத்தினை போலும் உய்ந்தேம். 65

'கடவுளே! யாங்கள் செருக்குற்றுக் கெடாத வகையில் கண்டுய்யும் முறையால் திருநீல கண்டம் முதலிய அடையாளங்களை நின்திரு மேனியிற் பூண்டனை. வன்மை மிகும் அவை சான்றாகவும் தெளியாத இறுமாப்பினை அறிந்து இந்நாளில் எங்கள் மேனியினும் பல அடையாளங்களை உறச் செய்தனை போலும்; ஆகலின், உய்ந்தேம்.'

'அடித்தடித்து வக்காரம் தீற்றிய அற்புதம் அறியேனே' 'ஒறுத்தால் ஒன்றும் போதுமே'

இன்றெமை ஒறுப்ப வீரன் போந்ததுன் ஏவ லாக
அன்றெமை ஒறுப்பப் போந்த விடமும்உன் அருளே என்று
மன்றயாம் தெளிந்தேம் இந்நாள் இடித்தெமை வரைநி றுத்தல்
என்றும்நின் கடனே யன்றோ ஈறிலாக் கருணை வாழ்வே. 66

இன்றெங்களைத் தண்டிக்க வீரபத்திரர் போந்தது தேவரீர் ஆணையாகலின், அன்றெங்களைத் தண்டிக்கப் போந்த விடமும் உன் அருளாலே தோன்றிய தென்று நிச்சயமாக யாம் தெளிந்தனம். இந்நாள் கழறி எம்மை ஆணை வழி நிறுத்துதல் என்றும் நினது கடப்பாடே அன்றோ? ஈறிலாத மாக்கருணை வெள்ளமாகிய வாழ்வே!

அன்றுனை மதியா தாழி கடைந்ததூஉம் அன்றி எம்மேல்
சென்றடர் வதனுக் கஞ்சிச் செல்வநீ அமுது செய்யக்
கொன்றிடும் நஞ்சங் காட்டிக் குற்றமேல் குற்றஞ் செய்தேம்
இன்றுனை இகழ்ந்த தொன்றோ டொழிதலின்உய்ந்தேம் எந்தாய்.

முன்னாள், அருள் வழி நில்லாது அடியேம் முயன்ற குற்றமே அன்றிப் பாற்கடலிற் கொல்ல எழுந்த விடத்தை நிவேதனமாக்கிக் குற்றத்தின் மேலோர் குற்றம் புரிந்தேம். எந்தையே! இந்நாள் இகழ்ந்த குற்றம் ஒன்றோடொழிதலின் உயிர் தப்பினோம்.

அளவறு காலந் தீவாய் அள்ளலிற் குளித்தும் தீரா
வளரும்இச் சிவத்து ரோகம் வயப்புகழ் வீரன் றன்னால்
எளிதினில் தவிர்த்தாய் அன்றே இப்பெருங் கருணைக் கெந்தாய்
தெளிவிலாச் சிறுமை யேங்கள் செய்குறி யெதிர்ப்பை என்னே. 68

'பல்லூழி காலம் கொடிய நரகிடை மூழ்கியும் உண்டு கழியாது எஞ்சி நிற்றற்குரிய சிவ நிந்தனையால் வருங்குற்றத்தை வீரபத்திரர் தம்மைக் கொண்டு தண்டம் இயற்றிச் சிறிது காலத்துள் எளிதாகத் தவிர்த்தாய். ஆகலின் இப்பேரருட் டிறத்தினுக்குத் தெளிவில்லாத சிற்றறிவினேம் செய்யத்தக்க கைம்மாறு எவன் உளது.'

என்று நீ அன்று நான் உன்னடிமை ஆகலின் அவனுக்கு உரிமையாக்கி ஈடு செய்ய வழக்கில்லை என்றபடி.

இனையன பலவும் பன்னி இரந்திரந் தலந்து கண்டங்
கனையவாய் குழறக் கண்ணீர் வார்ந்திடக் கரங்கள் உச்சி
புனையநின் றிமையோ ரெல்லாம் போற்றுழி முள்தாள் கஞ்ச
மனையவன் எம்பி ரானை வணங்கிவிண் ணப்பஞ் செய்வான். 69

இவை ஒப்பன பல அருட்டிறங்களைப் பலமுறை பாராட்டிப் பல்காற் குறை வேண்டி மனம் மறுகிக்கண்டம் விம்மவும், வாய் குழறவும், கண்ணீர் வாரவும் கரங்கள் சிரமேற் கூம்பவும் நின்று இமையோர் யாவரும் போற்றுகையில் முள்ளுடைய தாளுடைத் தாமரை மலரை இடமாக உடையபிரமன் எமதுபெருமானை வணங்கி வேண்டுகோளை முறையிடுவன்

அலமந்து, என்பது விகாரப்பட்டது. மனை-இடம். 'நறமனை வேங்கையின்' (திருக்கோவையார் 96).

வேள்வியிற் பாகம் நல்கா மருள்மன விண்ணோ ரெல்லாம்
தாழ்நெறித் தக்கனோடுங் குறைவறு தண்டம் பெற்றார்
வாழிய இனிநீ எச்சம் வரமுற அருளிச் செய்து
பாழ்படச் சிதைந்த விண்ணோர் பண்டுபோல் உய்யச் செய்யாய்.

'வேள்வியில் அவிப்பாகம் அன்பொடும் வழங்காத தெருளில்லாத தேவர்கள் யாவரும் புன்னெறியிற் புகுந்த தக்கனோடும் நிறைந்த தண்டம் பெற்றனர். இனி நீ யாகம் மேன்மை பெற அருளி அழிவுண்டாக உறுப்புக்கள் குறைந்த விண்ணோரை முன்பு போலப் பிழைக்க அருளுக.'

பிரமாதி தேவர் வரம்பெற்றுப் பூசித்தல்

கடுந்தளைப் பிணிப்புண் டார்க்குங் கட்டறுத் தருளாய் என்ன
அடுங்கரி உரித்த பெம்மான் அம்முறை கடைக்கண் சாத்த
இடும்பைதீர்ந் துய்ந்தார் அன்னோர் யாரையும் நோக்கிப் பின்னும்
கொடும்பிழை முழுதும் நீங்கும் வழியினைக் கூற லுற்றான். 71

'கொடிய விலங்கினுற் கட்டுண்டவர்க்கும் தளை நீக்கி அருள் செய்வாய்' என்ன வருத்துகின்ற கரியை உரித்த பெருமான் அவ்வியல்பிற் திருக்கடைக்கண் நோக்கினை அருளத் துன்பம் நீங்கி இன்புற்றார் யாவரையும் நோக்கி மேலும் பெரும்பாவம் முற்றும் தவிரும் உபாயத்தை அருள் செய்வர்.

எமக்குநீர் பெரிதுங் குற்றம் இழைத்தனிர் அவைதீர்ந் துய்ய
நமக்குமிக் கினிய காஞ்சி நகர்வயின் நண்ணீர் அங்கண்
இமைத்தொளிர் கயிலா யப்பால் நாரதன் இயம்புங் கூற்றின்
அமர்த்தவேல் தக்கன் ஈன்ற அரியச்சு வப்பேர் மைந்தர். 72

எமக்குப் பெருங்குற்றத்தைச் சூழ்ந்து செய்தீர்கள். அக்குற்றம் தீரக் காஞ்சிமா நகரை நண்ணுவீர். அங்குக் கயிலாய நாதர்க்கு ஒருபுடை நாரதர் உபதேசப்படி போர் செய்தலையுடைய வேலுடைத்தக்கன் பயந்த அரியச்சுவப் பெயருடைய மக்கள்,

பொதுவற நம்பி நம்மைப் போற்றும்ஆ யிடைக்கண் சென்று
கதுமென இலிங்கந் தாபித் தருச்சிமின் கரிசு நீங்க
விதியுளித் தக்கன் றானும் இம்முறை விழைக பூசை
இதுபுரி காறும் நுங்கட் கிடும்பையே புரிவர் மாற்றார். 73

விரும்பி நம்மைத்துதிக்கும் அவ்விடத்திற் சென்று விரைய இலிங்கம் நிறுவிக் குற்றம் நீங்க அருச்சனை புரிமின். தக்கனும் விதிப்படி இங்ஙனம் பூசனையை விரும்பிச் செய்வானாக. பூசனை புரியுமளவும் பகைவர் நுங்கட்குத் துன்பத்தையே செய்வர்.'

பொது அறப்போற்றல்-"பரிந்து நெஞ்சினும், அன்னியர் தமை ஒழித் தரனை ஏத்துதல்" (திருநெறிக். 50) சிவாத். 3. கச்ச. 9. மணி க. 59).

கலிநிலைத் துறை

அனையர் தாரகன் சூரபன் மாமுத லாகும்
இனைய தானவர் என்றறி யின்கள்என் றருளிக்
கனைபொ லங்கழல் வீரனுங் கணங்களுஞ் சூழத்
தனைநி கர்த்தவன் கயிலையைச் சார்ந்தனன் இப்பால். 74

'அப்பகைவர் சூரபன்மா, சிங்கமுகன் முதலானோர் ஆய அசுரர் ஆவர் என்றறிமின்' என்றருள் செய்து பொன்னால் இயன்ற ஒலிக்கின்ற கழலையணிந்த விரபத்திரரும், கணங்களும் புடைசூழத் தனக்குவமை இல்லாதவர் கயிலையைச் சார்ந்தனர். இனி,

"தன்னையே தனக் கொப்பவன்" (கந்த. மோன நீங்கு படலம் 29.)

புள்ளி னத்தர சுயர்த்தவ னாதிப்புத் தேளிர்
வள்ளல் ஆணையின் கிளவிபொச் சாத்தலின் மதுகை
நள்ளு சூரபன் மாமுதல் தயித்தியர் நலிய
விள்ள ருந்துயர்ப் பெருங்கடல் ஆழ்ந்தனர் மெலிந்து. 75

கருடக் கொடியுடைய திருமால் முதலானோர் வள்ளல் ஆணையாகிய திருவாக்கை மறத்தலின் வலிமை செறிந்த சூரபன்மா முதலாம் அசுரர் வருத்தச் சொல்லரிய துன்பப் பெருங்கடலில் மெலிந்து அழுந்தினர்.

மெலிந்த பின்மறைக் கிழவனை உசாவுபு விடையோன்
வலிந்த வாய்மொழி நினைந்துபோய்க் கச்சியை மருவி
இலிங்கம் ஆயிடை நிறீஇத்தொழு திடும்பைதீர்ந் துய்ந்தார்
பொலிந்த விண்ணவர் தம்மொடு தக்கனும் போகி. 76

வருந்துங் காலைப் பிரமனை விசாரித்து விடைப்பெருமான் அருளிய திருவாக்கை எண்ணிக் காஞ்சியை அடைந்து சிவலிங்கம் தாபித்துத் தொழுது விண்ணவர் துன்பம் தீர்ந்து நலம் பெற்றனர். அவர் தம்மொடும் தக்கனும் சென்று,

மக்கள் பூசனை விளைத்தஅச் சூழலை மருவி
நெக்க அன்பினுல் தான்ஒரு சிவலிங்கம் நிறுவித்
தக்க வாய்மையின் தொழுதனன் வெவ்வினை தணந்தான்
மிக்க சீர்க்கண நாதனும் வீறுபெற் றிருந்தான். 77

அரியச்சுவர் பூசனை புரிந்த அவ்விருக்கையை அடைந்து நெகிழ்ந்த அன்பொடும் தான் ஓர் சிவலிங்கம் நிறுவித் தக்கேசப் பெருமான் எனனும் திருப்பெயர் விளங்கத் தகுந்த உண்மையன்பினுல் வணங்கித் தீவினை நீங்கப் பெற்ருன்; பெருஞ்சிறப்பினை யுடைய கணநாதனுகும் பெருமை பெற்று விளங்கினுன்.

தக்கேசப்படலம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் -1270

# முப்புராரி கோட்டப் படலம்

கலிநிலைத் துறை

சிறுவ தீர்த்தநீ அஞ்சலென் றியமனைச் சீறி
மறுவ தீர்த்தவன் மேயதக் கேச்சரம் வகுத்தாம்
சறுவ தீர்த்தமேல் பாங்கரில் தாழ்ந்தவர்க் கவமாய்
உறுவ தீர்த்தருள் முப்புரா ரீச்சரம் உரைப்பாம். 1

மார்க்கண்டேயர் வழிபாடு செய்ய அவரை நோக்கிச் 'சிறுவனே! தூயோனே! நீ அஞ்சாதே' என்று இயமனைச் சினந்து அவ்வியமன் மேற்கொண்ட சொல்லும் செயலுமாகிய குற்றங்களைத் தீர்த்த பெருமான் விரும்பிய தக்கேச்சரத்தினைப் பற்றி வகுத்துரைத்தோம். சருவ தீர்த்தத்திற்கு மேற்றிசையில் வணங்கினவர்க்குத் தீயனவாய் வந்துறுவனவற்றை நீக்கி அருள் செய் முப்புரத்தவர் வழிபட்ட முப்புராரீச்சரத்தைக் கூறுவோம்.

எழுசீரடி யாசிரிய விருத்தம்

முப்பு ரங்களின் மூவர் புத்தன் மொழித்தி றத்து மயங்கிடா
தப்ப ணிந்தவர் தாள்ப ணிந்தரு ளாற்றின் நின்றனர் ஆதலால்
பொய்ப்பு ரந்தபு காலை நீற்றறை நாவின் மன்னவர் போல்எரி
தப்பி வாழ்ந்தனர் ஈசன் ஆணையில் நிற்ப வர்க்கிடர் சாருமோ. 2

மூன்று புரங்களினும் மூவர் திருமாலின் கூறுகிய புத்தாது சொல் வலையில் மயங்கி விழாது கங்கையை அணிந்தவர் திருவடிகளைப்பணிந்து அருள் நெறியில் நின்றனர். ஆதலால் பொய்ந் நெறியில் நின்றவர்க் கிருக்கையாகிய முப்புரங்களை அழித்த காலத்தில், திருநாவுக்கரசு நாயனுர்

நீற்றறையில் தீங்கின்றி உய்ந்தவாறு போலத் தப்பி வாழ்ந்தனர்: இறைவன் திருவருள் வழி நிற்பவர்க்குத் துன்பங்கள் வந்து சார்தருமோ? சார்தரா என்க.

'மூவர் உயிர் வாழ முப்புரமு நீருக, ஏவர் பொருதார் இமையோரில்' (திருவேகம்பர் உலா.) இரதியை விலக்கி மன்மதனை எரித்த சதுரப்பாடு: "வாவலங் கிள்ளை மான்தேர் மதன்புரி வினையா லண்ணன், வேவரப் புணர்த்து நோக்கி மிகைபடா தவன்சா ரான, தேவியை முடிக்கும் ஆற்றல் செய்திலன் இகல்பற்றின்றி, மூவரை விடுத்துத் தொல்நாள் முப்புரம் பொடித்த முன்னோன்." (கந்த. காமதகனப் படலம். 95)

"சார்புணர்ந்து சார்பு கெடஒழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்" (திருக். 359.)

சுதன்மன் என்று சுசீலன் என்று சுபுத்தி என்று சொலப்படும்
அதன்மம் நீத்தஅம் மூவ ருக்கும் அருள்சு ரந்துமை பாகனுர்
இதம்வி ளங்க வரங்கள் வேட்ட விளம்பு மின்னென அங்கவர்
பதம்வ ணங்குபு நின்தி ருப்பணி வாயில் காப்பருள் என்றனர். 3

சுதன்மன் சுசிலன், சுபுத்தி எனப் பெறுவோராகிய அறநெறி நின்ற அம் மூவரிடத்துக் கருணை கூர்ந்து உமையம்மை பங்களுர் 'நலமமைந்த வரங்கள விருமபியவற்றைக் கூறுமின்' என அவர் திருவடிகளை வணங்கித் 'திருத்தொண்டின்பாற் பட்ட வாயிலைக் காத்தலை அருள் செய்க' என்றனர்.

கச்சி மாநகர் எய்தி நங்குறி கண்டு பூசனை செய்மினே
இச்சை யாற்றின் நுமக்கு நந்தளி வாயில் காவலும் ஈதும்என்
றச்ச னருள் செய்து நீங்கலும் அங்க ணைந்து வரம்பல
நிச்ச லுந்தரு முப்பு ராரி இலிங்கம் ஒன்று நிறீஇயினர். 4

'காஞ்சியை எய்தி நம் வடிவினை நிறுவிப் பூசனை புரிமின் விரும்பிய வாறு நுங்கட்குப் பிற வரங்களே அன்றி நம் திருக்கோயில் வாயிற்காவலும் அருள்வோம்' என்றுயிர்த்தந்தையார் அருளித் திருவுருக்கரத்தலும் அக்காஞ்சியை அடைந்து வரம் பலவும் நாடொறும் வழங்கும் முப்புராரிசப் பெருமானைச் சிவலிங்க வடிவில் பிரதிட்டை செய்தனர்.

அச்சன்—அத்தன்; தந்தை. தந்தையை அச்சன் என்பது குட நாட்டு வழக்கு. (தொல். சொல். 400 நச்சி.)

பூசை யாற்றி உளத்தில் எண்ணிய பேறு பூண்டனர் முப்புரா
ரீச மேன்மை அளக்க வல்லுநர் ஏவர் அப்பெயர் வண்மையான்
மாசில் காஞ்சி வயங்கு கோட்டம் எனப்ப டும்என வாய்திறந்
தோசை யால்உயர் சூதன் ஓத முனிக்க ணத்தர் வினவுவார். 5

பூசனை இயற்றி நினைத்த பேற்றினை ஏற்றனர். அம் முப்புராரீச மேன்மையை வரையறுத்துக்கூற வல்லவர் யாவர்? குற்றமற்ற காஞ்சியின் கண் முப்புராரி என்னும் அப்பெயர் நலத்தொடும் கூடி விளங்கு கோட்டம் எனப்பெறும்' என வாய்மலர்ந்து புகழால் உயர்ந்த சூதமுனிவர் ஓதக் கேட்ட முனிவர் குழாத்தினர் வினவுவர்.

எனவே, முப்புராரி கோட்டம் எனப்பெற்றது- கோட்டம்-கோயில்,

முப்பு ரத்துறை வோருள் இங்கிவர் மூவ ருந்திரு நாயகன்
செப்பு மாய மயக்கி னுக்குள் அகப்ப டாது செழுந்தழற்
கைப்ப ரம்பொருள் பத்தி வாய்மை கடைப்பி டித்து நிலைத்தவா
றெப்ப டித்திது அற்பு தச்செயல் எங்க ளுக்குரை என்றலும். 6

முப்புரத் துறை யசுரர்களுள் இவர் மூவரும் இலக்குமி நாயகன கூறிய வஞ்ச வலைக்குள் அகப்படாமல் செழுமிய நெருப்புருவான மழுவைத் திருக்கையிற் கொண்ட பரம்பொருளின் மெய்யன்பினை உறுதியாகக் கொண்டு பிறழாது நிலைபெறல் எங்ஙனம் கூடுவது. அற்புதச் செயல் இதனை எங்களுக்கு விரித்துரைத்தருள் என்ற அளவிலே,

மயக்கினுள் மூவர் தப்பிய நிலை அதிசயிக்கத் தக்கதாம் என வினவுவர். தழல் ஏந்திய குறிப்பு நெருப்பில் ஏவலரைப் பிரிக்கும் வல்லமையை உணர்த்தும்.

தத்து வெண்டிரை வேலை நஞ்சம் மிடற்ற டக்கிய தம்பிரான்
பத்தி மார்க்கம் இரண்டு கூற்றது பற்ற றுத்துயர் அந்தணீர்
புத்தி நல்குவ தொன்றி ரண்டறு பூர ணப்பொரு ளோடுலாம்
முத்தி நல்குவ தொன்றி ரண்டனுள் முன் இயம்பிய பத்திதான். 7

யான் எனது என்னும் இருவகைப் பற்றும் அற்றமையால் உயர்ந்த அந்தணீர்! தவழ்கின்ற வெள்ளிய திரைகளையுடைய பாற்கடலிற் றோன்றிய விடத்தினைக் கண்டத்தில் அடக்கிய உயிர்களின் தலைவன் அன்பு நெறி இருபகுப்பினது. ஒன்று போகங்களை நல்குவது. மற்றொன்று எல்லாப் பொருளிலும் வேறற அவையேயாய் நிறைந்து நிற்கும் முதற் பொருளோடு கலக்கும் முத்தியை வழங்குவது. இவ்விரண்டனுள் முதற்கண் உணர்த்திய பத்தி,

சார்பு பற்றி உதிக்கும் மற்றைய தொன்று சத்தி பதிந்தமெய்ச்
சார்பின் எய்தும் இரண்டும் முத்தி தழைக்கு மாயினும் வெவ்வினைச்
சார்பி னோர்பெறு சார்பு பற்றிய பத்தி தான்இடை விள்ளும்அச்
சார்பி லாதெழும் உண்மை அன்பு தணப்பு றுதெவர் கட்குமே. 8

யாதானும் ஓர் பயனை வேண்டு அது குறித்து உள்ளத்து உதிப்பது. பிறிதொன்று திருவருட் சத்தி பதிந்த இயல்பின் எழுதலின் உண்மைச் சார்பின் உதிக்கும். இரண்டும் முத்தியைத் தழைக்கச் செய்யுமாயினும் கொடிய வினைத் தொடர்புடையோர் அடைகின்ற ஒன்றை விரும்பிச் செய்கின்ற பேரன்பு இடையில் நீங்கும். நிஷ்காமியமாகத் தோன்றும உண்மை அன்பு எவர்க்கும் என்றும் நீங்காது.

சார்பு பற்றிய பத்தி: "அவாவுண்டேல் உண்டாம் சிறிது" (திருக். 1075.) 'தம்மால் அவாவப்படும் பொருள் அதனானுண்டாமாயிற் சிறிதுண்டாம்' (பரி. உரை.) காண்க. 'பரிசயத்தால் அறிவு மாறறலுமுடையராய் முடிவு போக்கலின் தவமுடையார்க் காகுமென்றும், அஃதில்லாதார்க்கு அவையின்மையின முடிவு போகாமையின அவமாமென்றுங் கூறினர்' (திருக். பரி,) உரை. 262.) சார்பு பற்றிச் செய்யப் படுவன

வாகிய சரியை கிரியைகள் உபாயச் சரியை கிரியைகளாம். உபாயம் வழி வழிச் சாதனமாய் முத்திபயக்கும். உண்மை நேர் சாதனமாம் என்க. சார்பு பற்றுமற் செய்யப்படும் சரியை கிரியைகள் உண்மைச் சரியை கிரியைகளாம். இவற்றின் விரிவெல்லாம் ஆசிரியர் திராவிட மாபாடியத்துள் விரித்து விளக்கி யிருத்தல் காண்க.

செய்த செய்வன வாய தீவினை யாவும் இச்சிவ பத்தர்பால்
எய்தி டாகம லத்தி லைக்கம லத்தின் என்றறி மின்களோ
ஐது காமம் விழைந்த பத்தியும் நல்ல றத்துறை யார்பெறின்
நைத ராதிது பத்தி பேதம் உணர்ந்து ளோர்நவில் கிற்பதே. 9

செய்தனவும், செய்வனவுமாகிய சஞ்சிதமும் ஆகாமியமும் உண்மைப் பத்தியுடையவரைத் தாக்கா ஆகும். தாமரை யிலையில் உள்ள நீரைப் போலப் பற்றற்ற நிலை என்றறிமின். காமியப்பயன்களை விரும்பிய பத்திதானும் நல்ல சிவபுண்ணியக் கூறுபாடுகளை உணர்ந்தோர் பெறுவராயின் அழிகிதாய்க் கெடாது. இது பத்தியின் திறங்களை உணர்ந்தோர் அடிப்படக் கூறுவது.

திரிபு ரத்தவர் சார்பு பற்றிய பத்தி யோர்நனி தீமையே
புரிம னத்தின ராத லால்வரு புத்த நாரத ரான்மயல்
மருவி இற்றனர் இன்ன மூவரும் வள்ளல் சத்தி பதிந்தெழும்
பெரிய பத்திய ராத லால்அவர் பேசு மையல் கடந்தனர். 10

முப்புரத்தசுரர் சார்பு பற்றிய பத்தியோராகலானும் பெரிதும் தீமையையே விரும்புகின்ற மனத்தினராகலானும் புத்தரும் நாரதரும் ஆகும் இவ்விருவரால் மயக்கத்தை எய்தி முடிவுற்றனர். சுபுத்தி, சுதன்மா, சுசீலன் எனப்பெறும் இம்மூவரும் இறைவனின் திருவருட் சத்திபதிந்தெழும் பெரிய பத்தியினராகலின் அவ்விருவர் கூறிய மயக்க வுரையை வென்றனர்.

கலி விருத்தம்

பேறு மெய்தினர் என்று பேதுறு
வாறு மேதகு சூதன் மாதவர்
கூறு கூற்றினுக் கிறைகொ டுத்தனன்
வேறு மாக்கதை மேல்வி ளம்புவான்.

முத்தியையும் தலைப்பட்டனர் என்று மயங்காதபடி மேன்மை பொருந்திய சூதமுனிவர் மாதவர்கள் வினாவிற்கு விடை கொடுத்தனர். வேறோர் பெருங்கதையை இனிக் கூறுவார்.

முப்புராரி கோட்டப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-1281

---

# இரணியேசப் படலம்

கலி விருத்தம்

அரணி யின்கனல் ஐயர் கூற்றடு
சரணி முப்புரா ரீசஞ் சாற்றினும்
முரணி அங்கதன் குணக்கண் முன்தொழும்
இரணி யேச்சரத் தியல்பு ரைத்துமால். 1

தீக்கடை கோலின் தீயையுடைய வேள்வியை இயற்றும் அந்தணர்களே! கூற்றுவனை அழித்த திருவடியினையுடைய முப்புராரீசத்தைப் பற்றிக் கூறினேம். அதன் கிழக்கில் தேவர்களோடு பகைத்து இரணியன் முன்னே தொழுத இரணியேசத் தியல்பினை உரைப்போம்.

இரணி யப்பெயர் அசுரர் ஏறனன்
குரவ னுய்நலங் கொளுத்து வெள்ளியைச்
சரணம் ஏத்துவான் தனியி டத்தினில்
வரவ ழைத்தனன் வணங்கி விண்டனன். 2

இரணியன் என்னும் பெயரினையுடைய அசுரரின் மிக்கோன் ஆசாரியனுய் நன்மையைக் கொள்ளச் செய்கின்ற சுக்கிராசாரியரை அடிபணியும் பொருட்டு அந்தப்புரத்தில் வரவழைத்து வணங்கிக்கூறுவான்.

அரும்பெ றல்திரு அரசு நான்பெறத்
தரும்ப டித்தொரு விரதஞ் சாற்றென
விரும்பு மந்திரக் கிழவன் வீங்குதோள்
இரும்பின் அன்னவற் கிறைவ மூங்குவான். 3

'பிறர் எவரும் பெறலரிய செல்வங்களையுடைய அரசினையான் பெறும்படி தர வல்லதோர் விரதத்தினை விரித்துரை' என்று கூற அதனை விரும்பிய உபதேசஞ் செய்தற்குரிய சுக்கிரன் பருத்த தோள்கள் இரும்பினை ஒத்த இரணியனுக்கு விடையளிப்பான்.

தத்துவோபதேசத்திற்கும், ஆலோசனைக்கும் உரியர் என்பார் மந்திரக் கிழவன் என்றனர்,

வேட்ட வாறிது வாயின் மேவரக்
கேட்டி இவ்வுரை கேடில் ஆற்றலோய்
நாட்டம் மூன்றுடை நாதன் சேவடிக்
கீட்டும் அன்பினுல் தவம்இ ழைத்திநீ. 4

அழிவில்லாத ஆற்றலையுடையோனே! விரும்பிய வகை இதுவாலுல் புகழமைந்த இம்மொழியை விருப்புறக் கேட்பாயாக. முக்கண் முதல்வன் திருவடிகளில்வைக்கும் பேரன்பொடும் தவத்தை இயற்றுதிநீ,

ஈட்டும் அன்பு: 'பேரன்பே இன்னும் பெருக்கு, (அற்புதத் திருவந்தாதி).

பதும வாழ்க்கையான் படைக்கும் ஆற்றலும்
மதுவை மாட்டினன் அளிப்பும் வான்மிசை
அதுல னதியோர் ஆசை ஆட்சியும்
பொதுந டிப்பவன் பூசைப் பேறரோ. 5

மலருறை பிரமன் படைக்கும் வன்மையும், மது என்னும் அசுரனை அழித்த மதுசூதனன் உலகைக் காக்கும் வன்மையும் விண்ணிலும் ஒப்பில்லாதவனாகிய இந்திரன் முதலானோர் எண்டிசைக் காவலும் பொதுவில் நடம்புரியும் பெருமான் பூசனையின் பயனாவன.

அதுலன்—ஒப்பிலி. ஆசை-திசை, பொது-மன்றம்.

செல்வம் ஆண்மைஏர் சீர்த்தி வாழ்வருள்
கல்வி கட்டெழில் மகளிர் காழ்இலாச்
சொல்வ லித்திறஞ் சூழ்ச்சி ஏனவும்
அல்வெ ரூஉங்களன் அருச்ச னைப்பயன். 6

செல்வமும், ஆண்மையும், அழகும் மிகு புகழும், வாழ்வும், இரக்கமும், கல்வியும், பேரழகுடைய வாழ்க்கைத் துணைவியும், இனிய சொல் வன்மையும், பழுதற எண்ணலும், பிறவும் இருளும் அஞ்சுங் கரிய கண்டத்தையுடைய சிவபிரானைப் பூசனை புரிந்ததன் பயனாவன.

மெய்த்த விண்ணவர் இருக்கை வேண்டினும்
நத்து மாலயன் நகரம் வேண்டினும்
முத்தி வேண்டினும் மூவ ருஞ்சிவ
பத்தி ஒன்றனல் எய்தற் பாலவே. 7

அமராவதியையோ அன்றிச் சத்திய லோகத்தையோ அல்லது வைகுந்தத்தையோ விரும்பினும், வீட்டினை விரும்பினும் கெடுதலில்லாத சிவபத்தி ஒன்றனல் அடையற் பாலன.

போகமும், பரபோகமும் இறைவன் பூசனையால் பெறற்குரியன.

ஒன்ன லார்பிணி உரகம் மண்ணேகோள்
என்ன வும்அவர்க் கிடர்இ ழைத்திடா
அன்ன ஆகலான் அரன்அ டித்தொழில்
முன்னி னர்க்கெவன் அரிது மொய்ம்பினேய். 8

தோள்வலியை யுடையவனே! பகை நோய், பாம்பு, பேய், கிரகங்கள் இவற்றெத்திறத்தனவும் மெய்யன்பர்க்குத் துன்பஞ் செய்யா. இடையூறு நிகழா ஆகலான் சிவபிரான் திருவடித் தொண்டில் முயன்றவர்க்கு யாவும் எளியன ஆகும்.

அறுசீரடி யாசிரிய விருத்தம்

சிவன்றன் திருஉருவைக் காணுத கண்ணே குருடாம் சீர்சால்
சிவன்றன் திருஉருவை எண்ணுத சிந்தையே பித்தாம் என்றும்
சிவன்றன் திருப்புகழைக் கேளாச் செவியே செவிடாம் அன்பிற்
சிவன்றன் திருப்புகழை ஓதாத வாயே திணிந்த மூங்கை. 9

சிவபிரான் திருவடிவைக் காண்கிலாத கண்ணே குருடு ஆகும். சிறப்பமைந்த சிவபிரான் அருட்டிருமேனியை எண்ணாத எண்ணமே மயக்குடையதாகும். எப்பொழுதும் சிவபிரான் திருப்புகழை, ஏலாத செவியே செவிடாகும். சிவபெருமான் திருப்புகழை அன்பால் ஓதாத வாயே ஊமையாகும்.

இயல்பிற் குருடர், பித்தர் செவிடர், மூகர் இவர் தம்மை விலக்கி வாழ்த்தவாயும், நினைக்க மட நெஞ்சும் பிறவும் தந்த பெருமான் பாற் சார்த்தாத உறுப்புக்களே உண்மையிற் குறைபாடுடையன என்க.

நில்லா திளமையும் யாக்கையும் இன்னினியே நீங்கும் அன்,
றிப், பொல்லாத நோயும் அடர்ந்துபெரும் பையுள் புகுத்து நீரால்-
எல்லாம் நரைத்துடலம் ஏகாமுன் நன்னெறிக்கே செல்வோம்
என்று, வல்லான் உகைத்தானை அர்ச்சிப்பார் இவ்விடும்பை
வாழ்க்கை வெல்வார். 10

'இளமையும் நில்லாது; இப்பொழுதே உடம்பும் நீங்கும்; அல்லாமல், கொடிய நோயும் படை எடுத்துப் பெருந்துன்பத்தைப் புகச்செய்யும் இயல்பினால் உரோம முற்றும் நரை தோன்றி உடம்பு விடை பெற்றுக் கொள்ளுமுன்பே திருவருளிற் றலைப்படுவோம்' என்றுட்கொண்டு வலிய இடபத்தை ஊரும் பெருமானைப் பூசனை புரிவார் இத்துன்ப வாழ்வினை வெல்வார்.

இழிவறிந்து இருவகைப் பற்றும் விட்டு இறைவனைப்பற்றினோர் இன்புறுவர்.

பத்தன் மொழிப்பகுதி சேவையினைக் கூறும் பரிசால் ஈசன்
பத்தன் அவற்கினிய சேவகனே ஆதலின்இப் பான்மை பூண்ட
பத்தர் படிமம் ஒழுக்கங் குலன்ஒன் றும் பார்க்க வேண்டா
பத்தர் எனப்படுவார் கண்டிகையும் நீறும் பரித்த மெய்யோர். 11

'பத்தன் என்னும் சொல்மூலம் சேவை என்னும் பொருளைத்தரும் இயல்பினாலே ஈசனுக்குப் பத்தன் அவ்வீசனுக்கினிய ஆணை வழி நிற்போனே ஆகலின் இத்தன்மையை மேற்கொண்ட தொண்டருடைய வடிவம், நடை, மரபு இவற்றைச் சிறிதும் எண்ணலாகா. பத்தர் என்று சிறப்பித்துப் பேசப் பெறுவோர் உருத்திராக்கவடமும், திருநீறும் பூண்ட திருமேனியை யுடையவர்.'

அங்கவரைக் காணப் பெறுகிற்பிற் கங்கைநீ ராடற் பேறும்
அங்கவர்பாற் பேசப் பெறின்அகில தீர்த்தமுந் தோய்ந்தார்ஆவர்
அங்கவர்க்குச்செய்பூசைஅண்டருக்கும்மூவருக்கும் ஆகுங்கண்டாய்
அங்கவர்க்கே தானம் அளிப்பர் அவர்தம்பால் ஏற்பர் நல்லோர். 12

'பத்தரைக் காணப்பெற்றால் கங்கை நீராடலால் வரும் பயன் விளையும். அவரொடு பேசும் வாய்ப்புண்டாயின் எல்லாத் தீர்த்தங்களிலும் படிந்ததனால் வருபயனுடையர் ஆவர். அவர்க்குச் செயயும பூசனை தேவர்க்கும் மூவர்க்கும் ஏற்புடைத்தாம். பத்தர்க்கே தானம் கொடுப்பர் பத்தரிடத்தே தானம் பெறுவர் நல்லவர்.

மாயன் அயன் விண்ணுடர் வாழ்வுந் துரும்பா மதிக்கும் இந்தத்
தூய சிவனடியார் மேம்பாடி யானேயோ சொல்ல வல்லேன்
பாய பெருங்கீர்த்தித் தோன்றால் பலசொல்லி என்னை இந்நாள்
ஆயபிற வெல்லாங் கழித்துச் சிவனடியே அர்ச்சித் துய்வாய். 13

'பரவிய பெரும புகழினையுடைய தோன்றலே! திருமால் பிரமேந்திரர் பதத்தையும் துச்சமாக இகழ்ந் தொதுக்கும் மல நீங்கிய சிவனடியவர் தம் பெருமையை யானேயோ புகழும் வலியுடையேன். பலபடப் பேசிப் பயன் எவன்? விரிந்த பிறமுயற்சிகளை எல்லாம் ஒருவிச் சிவபிரான் திருவடிகளையே பூசனை புரிந்து கடைத்தேறுவாயாக!'

என்னுங் குரவன் இணைத்தாள் தொழுதோகை எய்தி எந்தாய்
பன்னும் பரம்பொருளை எத்தானத் தெவ்வாற்றூற் பண்பு கூரப்
பொன்னங் கழலிணைகள் பூசித் திடுவதெனும் பொன்னேன் கேட்ப
மன்னும் பிருகு தரவந்த மைந்தன் வகுப்பான் மன்னே. 14

என்றறிவுறுக்கும் ஆசாரியனுடைய இருதாள்களையும் தொழுதுவகையை அடைந்து எந்தையே! பேசப் பெற்ற முதல்வனை எத்தலத்தில் எம்முறையால் அன்பு மீதூரப் பொன்னொலியன்ற அழகிய கழலணிந்த திருவடிகளைப் பூசனை புரிவதென்று வினவும் இரணியனுடைய செவியிற் புகப்பெருமையுறும் பிருகுமுனிவர் ஈன்ற சுக்கிரன் வகுத்துக் கூறுவான்.

ஷை வேறு

எங்கணும் நிறைந்து நிற்கும் எம்பிராற் கினிய வாய
பங்கமில் வரைப்பு மண்மேற் பலஉள அவற்றுட் காசி
அங்கதிற் காஞ்சி மேலாங் காஞ்சியின் அதிகம் இல்லை
செங்கதிர் மதியஞ் செந்தீ மண்டிலம் அடியர் உள்ளம். 15

யாண்டும் நீக்கமற நிறைந்து எவற்றொடும் உடனாய் நிற்கும் எமது பெருமானுக்கு இனிய ஆகிய குற்றமற்ற தலங்கள் பல இவ்வுலகில் உள்ளன. அவற்றுள் மிக்கதோர் தலம் காசியாகும். அதனினும் மிக்கது காஞ்சி. அதனிற் சிறந்த தலம் இல்லை. சூரிய மண்டிலம், சந்திர மண்டிலம், செந்தீ மண்டிலம், அடியவர் உள்ளங்கள்,

மந்தரங் கயிலை தம்மின் மேம்பட வயங்கித் தோன்றும்
அந்தமா நகரின் எங்கோன் வல்விரைந் தருள்சு ரக்கும்
மந்திர எழுத்தஞ் சோதிப் பச்சிலை மலரே தேனும்
சிந்தைகூர் அன்பிற் சாத்தித் தொழுவதே சிவனுக் கின்பம். 16

மந்தரம், கயிலை இவற்றை ஒப்ப அக்காஞ்சிமாநகரின் எமது பெருமானர் மேம்பட விளங்கித் தோன்றுவர். மிக விரைந்தருள் வழங்கும் திருவைந்தெழுத்தாகிய மந்திரத்தை ஓதிப் பச்சிலையாயினும், மலராயினும் கொண்டு மனத்திடை அன்பு மிகச் சாத்தி வணங்குவதே சிவபிரானுக்கு மகிழ்ச்சியை விளைவிப்பதாகும்.

'பச்சிலை பழமபோ தேனும்' (233-ஆம் பக்கம் காண்க.)

கண்டிகை நீறு மெய்யிற் கவின்றிட இவ்வா றங்கண்
அண்டனைத் தொழுது மெய்ப்பே றடைகெனுங் குரவன் பாத
புண்டரீ கங்கள் போற்றி எழுந்தனன் பொறிவண் டூதுந்
தண்டலைக் காஞ்சி நோக்கி நடந்தனன் தறுக ணாளன். 17

உருத்திராக்க வடமும், திருநீறும் திருமேனியில் அழகு செய்ய இங்ஙனம் அவ்விடத்தே அண்டங்களெல்லாவற்றையும் உடைய பிரானைத் தொழுது உண்மைச் செல்வத்தை அடைக' என்று கூறிய ஆசாரியனாகிய சுக்கிரன் பாத மலர்களைப் பணிந்து எழுந்து அழகிய வண்டுகள் நுகரும் மலர்களை யுடைய சோலை சூழ் காஞ்சியை நோக்கி வன்கணனாகிய இரணியன் வழிக்கொண்டனன்.

தன்னுடன் பிறந்த கேண்மைத் தானவன் இரணி யாக்கன்
அன்னவன் தனையன் அந்த காசுரன் பிரக லாதன்
முன்னுறு புதல்வர் அன்னோர் வழிவரும் உரியர் தேசின்
மின்னுமா வலியே வாணன் விரோசனன் முதலி யோரும். 18

தன்னுடன் தோன்றிக் கெழுமிய அசுரனாகிய இரணியாக்கனும், அவன் மகன் அந்தகாசுரனும், தன்மகன் பிரகலாதனும், முன்னர்க்கூறிய புதல்வர் வழிவந்தோராகிய புகழொளி படைத்த மாவலியும் அவன்மகன் வாணனும், பிரகலாதன் மகனாகிய விரோசனனும் ஏனையோரும்,

பற்றுகா யாதி யாதி மனைவியர் பலரும் ஏனைச்
சுற்றமும் ஒருங்கு காஞ்சித் தென்னகர் எய்தித் தாந்தாம்
பெற்றிடும் பெயரான் முக்கட் பிரான்குறி நிறுவிப் போற்றக்
கொற்றமார் முப்பு ராரி கோட்டத்தின் குணபால் எய்தி. 19

விருப்புடைய காயாதி முதலிய மனைவியர் பலரும் ஏனையோராகிய சுற்றத்தினரும் உடன்வரக் காஞ்சியாகிய திருநகரை அடைந்து தத்தம் பெயரால் இலிங்கம் தாபித்துத் துதி செய்ய வெற்றி அமைந்த முப்புராரி கோட்டத்திற்குக் கிழக்கில் எய்தி,

தன்பெயர் இலிங்கம் ஒன்று தாபித்துக் குரவன் கூறும்
அன்புடை முறைமை யாறே அருச்சனை யாற்றி உண்டி
இன்பமும் வெறுத்துப் பன்னாள் மெய்த்தவம் இயற்றும் ஏல்வைப்
பொன்பொதி சடிலப் புத்தேள் எதிரெழுந் தருளப் போற்றி. 20

'இரணியேசப் பிரான்' எனத் தன் பெயரால் சிவலிங்கம் நிறுவிச் சுக்கிராசாரியர் அறிவுறுத்த வழியே அன்பினால் அருச்சனை செய்து உணவையும், இன்பத்தையும் வெறுத்துக் கைவிட்டுப் பலநாள் உண்மைத் தவத்தைச் செய்வுழிப் பொன்னைப் பொதிந்தாற் போன்ற சடையினையுடைய சிவபிரான் எதிரில் காட்சி தந்தருளப் போற்றி செய்து,

மக்களின் விலங்கின் மற்றை யோனியில் மண்ணில் விண்ணில்
உக்கதிப் படைகள் தம்மின் உணங்கலின் ஈர மென்னத்
தக்கதிற் புறம்பின் உள்ளிற் பகலினில் இரவிற் சாவாப்
பொக்கமில் வரமும் மும்மைப் புவனமும் புரக்கும் பேறும். 21

மக்களாலும், விலங்குகளாலும், ஏனைய உயிர் வருக்கங்களாலும், தீயையுமிழும் படைகளாலும் மண்ணிடத்தும், விண்ணிடத்தும், உலர்ந்த ஈரிய இடங்களிலும், புறத்தினும், அகத்தினும், பகலினும், இரவினும் இறவாத பொய்படாத வரத்தையும், முப்புவனங்களையும் காவல் செய்யும் செல்வத்தையும்,

எம்பிரான் அருளக் கொண்டான் இரணிய கசிபும் ஆசை
அம்பகன் முதலி யோரும் அவரவர்க் கினிய பெற்றார்
வம்பலர் மலரிட் டன்னோர் வழுத்திய தலங்க ளோடும்
உம்பர்சூழ் இரணி யேசம் உத்தமச் சிறப்பின் ஓங்கும். 22

எமது பெருமான் அருள் செய்ய இரணிய கசிபும் பெற்றனன். இரணியாக்கன் முதலியோரும் அவரவர்க்கு விருப்புடைய வரங்களைப் பெற்றனர். அப்பொழுதலர்ந்த மலர்களைத் தூவி அவர்கள் வழிபாடு செய்த தலங்களுடன் விண்ணவர் வலம் வரும் இரணியேசம் பெருஞ் சிறப்புடன் ஓங்கும்.

இரணிய கசிபு – பொன் வடிவினன், இரணியாக்கன்–பொற்கண்ணன். ஆசை–பொன, அம்பகம்–கண். ஆசை அம்பகன்–பொற்கண்ணன்.

இரணியேசப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - 1303.

---

# நாரசிங்கேசப் படலம்

கலி விருத்தம்

தரணி மேற்புகழ் தாங்கிய காஞ்சியின்
இரணி யேச்சர மேன்மை இயம்பினும்
அரணி லைத்த அதன்குட பாங்கரின்
முரணி னாரசிங் கேசம் மொழிகுவாம். 1

நிலவுலகிற் புகழ் பூண்ட காஞ்சியில் அமைந்த இரணியேசப் பெருமையை எடுத்துரைத்தோம். காவல் நிலைபெற்ற அதற்கு மேற்றிசையில் திரிபில்லாத நரசிங்கேசப் பெருமானார் இயல்பைக் கூறுவோம்.

தக்கன் வேள்வியஞ் சாலை அவியுணப்
புக்க தேவர் புரளச் சவட்டிய
முக்க ணன் அருள் பெற்றபின் மூவுல
கொக்க ஆடகன் தாட்படுத் தோங்கலால். 2

தக்கன் வேள்வியில் அவிபெறச் சென்ற தேவரை அவ்விடத்தே புரளுமாறு அழித்த சிவபிரான் அருளைப்பெற்று இரணியன் மூவுலகை யும் தன்னடிப் படுத்துயர்தலால்,

தேவரைச் சவட்டிய முக்கணன் அருளை ஆடகன் பெற்றபின் என்னும் குறிப்பு விண்ணவர் குழாம் செய்தபாவத்தால் அவுணர் ஆக்கம் பெறுகின்றனர் என்பதாம்.

வண்ண வண்டிமி ராமலர்க் கற்பகக்
கண்ணி விண்ணவர் யாருங் கவன்றுபோய்த்
தண்ண றுந்துள வோனடி தாழ்ந்தெழூஉக்
கண்ணி லாக்கன கன்செயல் கூறலும். 3

அழகிய வண்டுகள் மூசாத கற்பக மலர் மாலையைச் சூடிய தேவர் யாவருங் கவலையை எய்திப்போய்த் தண்ணிய நறிய துழாய் மாலையை அணிந்த திருமாலடி வணங்கி எழுந்து இரக்கமில்லாத இரணியனுடைய கொடுஞ் செய்கைகளைக் கூறியபோது,

கனகம், ஆடகம், இரணியம் என்பன பொன்னின் பரியாயப் பெயர்கள், ஆகலின், பொன்னோன் எனப் பல் பெயர் வந்தன.

ஐம்ப டைத்திறல் ஆண்டகை காஞ்சிபுக்
கெம்பி ரான்றன் இணையடி ஏத்துபு
வெம்பு தெவ்வினை வெல்லும் உபாயம்அவ்
வும்பர் கோன்அருள் செய்ய உணர்ந்தரோ. 4

பஞ்சாயுதங்களையுடைய புருடோத்தமன் காஞ்சியை அடைந்து எமது பெருமான் திருவடிகளைத் துதி செய்து கொடிய பகைவனாகிய இரணியனை வெல்லுதற்குரிய உபாயத்தைத் தேவதேவன் உணர்த்தி அருளத் தெளிய உணர்ந்து,

ஐம்படை – சங்கு, சக்கரம், வில், வேல், வாள், தண்டம், என்பன. அரோ, தேற்றப் பொருளது.

உந்து தன்னொரு கூற்றை உவன்பெறு
மைந்தன் மாடுற வைத்துத் தருக்குழி
எந்து நீஇனி உய்திறன் ஈங்கெனச்
சுந்த ரப்பொலந் தூணங் கிழித்தெழீஇ. 5

தூண்டுகின்ற தனது ஓர் அமிசத்தை அவ்இரணியன் ஈன்ற பிரகலாதன்பால் வைத்துத் தந்தையும் மைந்தனும் மாறுபட்டுச் செருக்குழி 'என்ன நீ இப்பொழுது பிழைக்கும வகை இவ்விடத்து' என்று கூறி அழகிய பொன்மயமான தூணைப்பிளந்தெழுந்து,

கொட்கும் மானிடக் கோளரி யாகிஅவ்
வட்கி லானைக் கவான்மிசை வைத்திருள்
நட்கும் அந்தியின் வாய்தலின் நள்ளிருந்
துட்கு கூர்உகிர் கொண்டுரங் கீறியே. 6

சுழன்று திரியும் நரசிங்க வடிவிற் றோன்றி அழிவில்லாத இரணியனைத் துடையின்மேல் வைத்து இருள் கலக்கும் அந்தி நேரத்தில் வீட்டின் வாயிற்படியின் நடுவில் இருந்து அஞ்சுதற்குரிய கூரியநகங்கொண்டு மார்பினைக் கிழித்து,

வன்க ணான்உயிர் வவ்வி இரத்தநீர்
என்கண் ஆகென வாய்மடுத் திம்மெனத்
தன்கண் எய்துந் தருக்கின் மயங்கினான்
புன்கண் மும்மைப் பொழிற்கும் விளைத்தனன். 7

'தறுகணாளனாகிய இரணியன் உயிரைக் கவர்ந்து செந்நீரை என்னிடத்தே ஆகுக' என்றுட்கொண்டு முற்றும் பருகி விரையத் தன்னிடத்துத் தோன்றிய செருக்கினால் மயங்கி மூவுலகிற்கும் துன்பத்தை உண்டாக்கினன்.

நால்வகைத் தோற்றமும் கடந்து தூணில் தோன்றியும், எழுவகைப் பிறப்புட்படாது இருதிறனமைந்த நரசிங்கமாகியும், மண் விண்ணொழித்துத் துடைமேல் வைத்தும் பகலிரவு தவிர்த்து அந்திப்பொழுதிலும், உள், வெளி விடுத்து வாயிற்படியிலும், படையின்றிக் கைவிரல் நகங்களினாலும், ஈரமும் வறட்சியுமில்லாத முற்றத்து நீர் தெளித்த இடத்திலும், அவன் இரத்தம் நிலத்தில் சிந்தின் அவனை ஒப்பவர் பலர் தோன்றுவராகலின் இரத்தத்தைப் பருகியும் திருமால் இரணியனைக் கொன்றனர். இரணியேசப் படலம் 21-ஆம் செய்யுளையும் ஒப்பு நோக்கிக்காண்க. இப்படலம் 4-ஆம் செய்யுளில் வரும் உபாயம் இச்சூழ்ச்சியே. உயிர்களின் அறிவைக் கடந்து நிற்கும் இறைவன் தந்தவரத்தைத் தவிர்க்கும் நிலைமையை அறிவன் என்பதனை அறியாமை உயிரியல்பு.

பிரக லாதன் பிறங்கெழிற் செய்யவள்
சுரரும் ஏத்தித் துதிசெயும் நன்னய
உரையுங் கேட்கலன் உன்மத்தம் மேலிடின்
கரையும் மென்மொழி காதினில் ஏறுமோ. 8

பிரகலாதனும், பேரழகினையுடைய திருமகளும், தேவரும் போற்றிப் புகழும் நல்லறிவுரையையும் செவி சாத்திலன். வெறி மிகின் பிறர் கூறும் இனிய மொழி செவித்துளையில் சாருமோ?

மென்மொழி — இதோபதேசம். தீயவரைச் செகுத்து நல்லவரைக் காக்கவந்த அவதாரச் செயல் வென்றியால் அருளை மறந்து உலகிற்குக் கேடு சூழ்தல் உயிர்களின் இயற்கை.

உய்தி இல்லவன் சோரிஒன் றித்துணை
வெய்ய வாய செருக்கு விளைக்குமேல்
பையுள் சூழ்அப் பதகன் கொடுமையை
ஐய யாவர் அளவிடற் பாலரே. 9

உய்யுந் திறம் இல்லவனாகிய இரணியன் இரத்தம் ஒன்றே உட்புகுந்து இவ்வளவு கொடிய இறுமாப்பின் செயலை விளைக்குமாயின் துன்பத்தை விளைக்க எண்ணிய அப்பாவி இரணியன் கொடுமையை ஐயகோ! யாவர் அளவிடற் பாலரே.

ஐய, இரக்கக்குறிப்பு. 'பூனைக்கு இத்துணை அஞ்சுவான் புலிக்கு எத்துணை அஞ்சான்' எனனும் கைமுதிக நியாயம் காண்க. 'துன்னியார்' (திருக். 188-ம் 1165-ம்) இந்நியாயத்தன.

சரபம் வருகை

அனைய காலை அயன்முதல் விண்ணவர்
இனையும் நெஞ்சினர் அஞ்சினர் எம்பிரான்
றனைய டைந்து சரணம்என் றேத்தினர்
வினைஇ கந்துயர் மந்தர வெற்பின்மேல். 10

அக்காலத்தில் பிரமன் முதலாந்தேவர்கள் வருந்தா நின்ற நெஞ்சினராய் அஞ்சினர். தீவினை தீர்ந்துயர்தற் கிடனாகிய மந்தர மலைமேல் எமது பெருமானை அடுத்து 'அடைக்கலம்' என்று கூறித்துதித்தனர்.

வாய்பு லர்ந்து நடுக்குற வந்தவர்
ஏய வார்த்தை திருச்செவி ஏற்றனன்
பாய பல்கணம் ஏத்தப் பனிவரை
யாயி னோடினி தாடல்செய் ஆண்டகை. 11

பரவிய சிவகணங்கள் போற்ற இமயமலையன் மகளாராய் நம் அன்னையாராம் அம்மையாரொடும் இன்பப்பொழுது போக்கினில் விளங்கும் பெருமானார், வாய் உலர்ந்து நடுக்கம் மிக வந்த விண்ணோர் விடுத்த அடைக்கலம் புகுமொழியைத் திருச்செவி சாத்தினர்.

அஞ்ச லீர்என் றளித்தனன் சிம்புளாய்
வஞ்ச மானிட வாளரி ஆயுளைத்
துஞ்சு வித்துரி கொண்டொளி தோற்றினன்
தஞ்ச முண்டவர் தஞ்சர ணாயினன். 12

'அஞ்சன்மின்! நீவிர், என் றபயம் தந்து சரபப்பறவையாய்க் கொடிய நரசிங்கத்தின் வாழ்நாளை முடித் ததன் தோலைப் போர்வையாகக் கொண்டொளியொடுந் தோற்றினர். எளியராய் வந்தடைக்கலம் புக்க தேவர் தம் புகலிடமானவர்.

கலிநிலைத் துறை

நரம டங்கலின் நாரண னுந்திருக் காஞ்சியை
விரவி நாரசிங் கேச்சர வேந்தை நிறீஇயினன்
பரவி ஏத்தினன் வெவ்வினை நீத்தருள் பற்றினன்
உரவு நீருடை அத்தலம் உத்தம மாகுமால். 13

நரசிங்க வடிவில் திருமாலும் திருக்காஞ்சியை அடைந்து நார சிங்கேசப் பெருமானைத் தாபித்தனர்; பரசித்துதித்தனர். உயிர்களை வருத்திய பாவந் தீர்ந் திறைவனருளைப் பெற்றனர். ஊர்தலையுடைய நீர் சூழ்ந்த அத்தலம் சிறேட்டமுடையதாகும்.

வராகேச்சர வரலாறு

வாரா கேச்சரம் அன்னதன் தெற்கது மன்னுபொற்
பேரான் றன்னொடு தோன்றிய பொன்விழிப் பேரினன்
பார்தான் வௌவினன் பாதலத் தேகலும் பைந்துழாய்த்
தாரான் சூகர மாய்அவன் றன்னைச் சவட்டியே. 14

வராகேச்சரம் நரசிங்கேசத்தின் தெற்கிலுள்ளது. நிலைபெறும் பெயருடைய இரணியன் தன்னுடன் பிறந்த இரணியாட்சன் பூமியைக் கைப்பற்றிக் கொண்டு பாதலம் புகுதலும் பசிய துளவ மாலையைத் தரித்த திருமால் வராக அவதாரங் கொண்டவனை அழித்து,

முன்போற் பாரைக் கொணர்ந்து நிறீஇமதம் மூண்டுழிக்
கொன்பாய் ஏற்றவன் வேடுருக் கொண்டுயிர் உண்டொரு
வன்பார் கோடு பிடுங்கி அணிந்தபின் மற்றவன்
அன்பால் ஈசனை அர்ச்சனை செய்தருள் பெற்றதே. 15

பண்டு போலப் புவியைக் கொண்டு வந்து நிறுவிச் செருக்குற்று உலகிற்குக் கேடு செய்தவழி அச்சந்தருகின்ற வடிவையும் பாய்ந்து செல்லுதலையும் உடைய விடைப்பெருமானார் வேட்டுவ வடிவங்கொண்டு சென்று பன்றியைச் செகுத்ததன் கொம்புகளைப் பறித்தணிந்தபின் அம்மால் வராக வடிவில் அன்பொடும் சிவபிரானை அருச்சனையாற்றி அருள் பெற்றது அத்தலம்.

நாரசிங்கேசப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—1318.



# அந்தகேசப் படலம்

கலிநிலைத் துறை

தாரார் கொன்றையன் நாரசிங் கேச்சரந் தன்னெடு
வாரா கேச்சர மேன்மை தெரிந்து வழங்கினும்
ஏரார் கின்ற இதன்குண பாங்கர் ஏறும்வலிப்
போரான் ஏற்றவர் அந்தக ஈச்சரம் போற்றுவாம். 1

ஆத்தி, கொன்றை இவற்றின் மாலையை அணிந்த நரசிங்கேசப் பெருமானுர் வரலாற்ருெடும் வராகேச்சரத்தின் பெருமையை ஆராய்ந்து உபகரித்தோம். அழகு பொருந்திய இத்தலங்களின் கிழக்கில் பெரு வன்மையையுடைய போர்வல்ல இடபவாகனத்தையுடையவர் தம் அந்தகேச்சரத்தைப் போற்றுவோம்.

இரணி யாக்கன் அளித்திடும் அந்தகன் என்பவன்
மரபின் எந்தையை ஆயிடை ஏத்தி வரம்பெறாஉ
முரனை அட்ட பிரான்முதல் விண்ணவர் யாரையும்
உரனில் வென்று புறக்கொடை கண்டுல காண்டனன். 2

இரணியாட்சன் ஈன்ற அந்தகாசுரன் விதிப்படி எமது பெருமானை அங்கு வழிபாடியற்றி வரம்பெற்று முரன் என்னும் அசுரனை அழித்த முராரி முதலான தேவர் யாவரையும் வன்மையால் வென்று புறங்கொடுப் பக் கண்டு உலகை ஆட்சி செய்தனன்.

தேவர்கள் பெண்வடிவங் கொண்டு வசித்தல்

அன்ன தானவ னுக்கழி வெய்திஅச் சத்தினல்
பொன்ன வாம்மரு மத்தவ னுதிப்புத் தேளிர்தாம்
மின்னி டைக்கு நடுக்கம் விளைத்திறு மாந்தணி
மன்னு பூண்முலை யார்வடி வத்தை எடுத்தரோ. 3

அந்தகாசுரனெடு பொருது வன்மையை இழந்து அச்சத்தினல் இலக்குமி விரும்புகின்ற மார்பினனுகிய திருமால் முதலானேர் மின்னை ஒக்கும் இடைக்கு வருத்தம் விளைத்து நிமிர்ந்து அழகு மிகுந்து ஆபர ணங்களை அணிந்த கொங்கையையுடைய மகளிர் வடிவத்தை மேற் கொண்டு,

கொள்ளி வட்டம் எனச்சகம் எங்கணுங் கொட்புறீஇ
வெள்ளி யங்கயி லைக்கிரி மேவினர் முத்தலை
அள்ளி லைப்படை அங்கண னருள் பெற்றவண்
வள்ளி மாமி கணங்களி னேடும் வதிந்தனர். 4

உலகிற் பலவிடங்களிலும் கொள்ளி வட்டம் போலச் சுழன்று திரிந்து புகலாக வெள்ளிமலை எனப்பெறும் கயிலை மலையை மேவி முத்தலைச்சூலமும், கண்ணுட்டமும் உடைய சிவபெருமான் கருணையைப் பெற்றவ்விடத்தில் வள்ளி நாயகியார் தம் மாமியாராம் உமையம்மையார் கணங்களொடுந் தங்கினர்.

இன்ன வாறுபல் காலம் அகல்வுழி எம்பிரான்
மன்னு தாரு வனத்துறை மாதவர் தங்களைத்
துன்னி மையல் கொளீஇஅவர் உண்மைசோ தித்திடும்
அன்ன செய்கை நினைந்தவண் எய்தினன் அவ்விடை. 5

இங்ஙனம் நெடுங்காலம் கழிந்தவழி எமது பெருமானுர் பெருமையுறும் தாருகவனத்தில் வாழ்கின்ற பெருந்தவர்களை நெருங்கி மயக்குறுத்தி அவர் இயல்பினை அவர் தாம் உணரச் செய்யும் திருவிளையாடலை எண்ணி ஆங்கெய்தினர்; அப்பொழுது,

ஆராய்ந்தறிதலும், ஆராய்ந்து மறிய இயலாமையும் உயிரியல்பு;

அந்த காசுரன் விண்ணவர் வெள்ளி அடுக்கலின்
வந்து பெண்மைய ராகி மறைந்துறை செய்திகேட்
டுந்து சீற்றம் மிகுத்தவண் எய்தி உடற்றுழி
முந்தும் அம்பிகை தன்அருள் பெற்று முகுந்தனுர். 6

தேவர் பெண் வடிவினராய் வெள்ளி மலையிற் சென்று மறைந்து வாழும் செய்கையை அந்தகாசுரன் கேட்டு வெளிப்படுகின்ற வெகுளி மிக்குக் கயிலையை அடைந்து போர் செய்கையில் அம்பிகையார் தம் முற்படும் அருளைப் பெற்றுத் திருமால்,

எண்ணில் பெண்டிர் தமைப்படைத் தேயினர் அத்தடங்
கண்ணி னூர்க்கிடை கண்டகன் ஓடின னுகமற்
றண்ண லார்உறு வோர்அமர் தாரு வனத்திடை
நண்ணி அங்கண் நடாத்திய செய்கை நவிற்றுவாம். 7

மகளிர் அளவிலரைச் சிருட்டித்துப் போர்மேற் செலுத்தினர். அகன்ற கண்களையுடைய மகளிர்க்குத் தோற்ற முட்போன்ற அசுரன் புறங்கொடுத்தோடினன் ஆக, இனிச் சிவபிரானுர் முனிவரர் இருக்கின்ற தாருவனத்தினை நண்ணி அங்குநிகழ்த்திய திருவிளையாடலைக்கூறுவோம்.

கண்டகம்—முள் ; முட்போன்ற கொடுமையன் என்பது பொருள்.

பிட்சாடனர் திருவிளையாடல்

கொச்சகக் கலிப்பா

கழல்கறங்கப் பலிக்கலனுங் கரத்தேந்திப் பலபரிதி
மழகதிரின் வரும்பெருமான் துடிமுழக்கஞ் செவிமடுத்துக்
குழல்இசைகேட் டருகணையும் அசுணமெனக் குளிர்தூங்கிப்
பழிதபுதா பதமடவார் பலிகொண்டு மருங்கணைந்தார். 8

திருவடிமேல் வீரக்கழல் ஒலிக்கப் பிட்சா பாத்திரத்தைத் திருக் கரத்தில் தாங்கிச் சூரியர் பலர் தம் இளங்கதிரொளி போல வருகின்ற பெருமான் துடி ஒலியைச் செவி தேக்கவுண்டு புல்லங்குழல் இசையைக் கேட்டு மகிழ்ந்து நெருங்கும் அசுணப் பறவை போலும் மகிழ்ச்சி மிக்கு கற்புடைய முனிவரர் மனைவியர் பிச்சை கொண்டு நெருங்கினர்.

பழிதபுதல்—புகழ் பெறல்;

நிலவலர்ந்த நகைமுகிழ்க்கும் மணிவாய்க்கும் நெடுஞ்சூலத்
தலைகிடந்த திண்தோட்கும் தடமார்பின் அழகினுக்கும்
மலைமடந்தை கரஞ்சேப்ப வருடும்இரு குறங்கினுக்கும்
கலைநுடங்க வருமடவார் கண்மலர்இட் டிறைஞ்சினர். 9

ஒளி மலர்ந்த புன்சிரிப்பு அரும்பும் அழகிய திருவாய்க்கும், நீண்ட முத்தலைச் சூலம் கிடந்த திண்ணிய தோளிற்கும், பரந்த அழகிய மார்பினுக்கும், உமையம்மையார் திருவிரல்கள் சிவப்பத் தைவரும் இருதுடைக்கும் மேகலை சரியவருகின்ற மகளிர் கண்ணாகியமலரைச்சாத்திவணங்கினர்

கள்ளுடைய மலர் என்பது நயம். வைத்த கண் வாங்காமல் நோக்கினர் என்பார் இட்டு என்றனர். 'தோள் கண்டார் தோளே கண்டார்' (கம்ப. பால. உலா. 19) என்னும் செய்யுளை நினைவு கூர்க.

கண்மலரை எம்மானார் திருமேனி கவரஅவர்
பண்மலரும் வாய்மலரும் பனிமலரும் முகமலரும்
தண்மலரும் விழிமலரும் தாள்மலரும் கைமலரும்
விண்மலரும் மின்னனைய விளங்கிழையார் எதிர்கவர்ந்தார் 10

மகளிர்தம் கண்மலர்களைப் பிட்சாடனர் தம் திருமேனி வசீகரித்துக் கொள்ள அப்பெருமானார் பண்ணுடைய பாடல் வெளிப்படுகின்ற வாய்மலரையும, குளிர்ச்சி பரவுகின்ற திருமுக மலரையும், அருள் மலர்கின்ற திருக்கண் மலரையும், திருவடி மலரையும், கைம்மலரையும் விண்ணிற் றோன்றும் மின்னலை ஒக்கும் விளங்குகின்ற அணிகளையுடைய மகளிர் எதிராகக் கவர்ந்தனர்.

எம்பிரான் திருமேனி உளமுழுதும் இடங்கொள்ள
நம்பியநாண் முதல்நான்குந் துச்சிலர்போற் புறம்நடப்பக்
கொம்பனையார் கள்ளுண்டு களித்தோரின் இருமருங்கும்
பம்பினர் ஆடினர் பாடினர் என்செய்வார். 11

எம்பிரானுடைய திருமேனி அறிவு முழுதையும் கைக்கொள்ளவும், வேறோர் நினைவிலராய் விரும்பிய நாண முதலிய நான்கும் ஒதுக்குக் குடியிருப்போர் போலப் புறத்துச் செல்லவும், பூங்கொம்பு போல்வார் கள்ளை யுண்டு மயங்கினோரின் இருபுறத்தும் செறிந்தனர்; ஆடினர்; பாடினர்; வேறு என்செய்வார்.

"உடம்பினுள், துச்சில் இருந்தஉயிர்க்கு." (திருக். 340)

தண்ணறுஞ்சந் தனந்தியத் தரளவடம் நீருகக்
கண்ணெகிழ்பூந் தொடைமூசுங் களிவண்டி னொடுங்கருக
எண்ணரிய காமத்தீ யிடைக்குளித்தார் புரம்பொடித்த
அண்ணல்இள நகைபோலும் அடிகள்இவர் நகைஎன்பார். 12

மட்டித்த குளிர்ந்த நறிய சந்தனச் சேறு புலரவும், முத்தமாலைகள் நீறுபடவும், தேனொழுகும் பூமாலை மொய்க்கும் களிப்புடைய வண்டுகளுடன் கரியவும், நினைக்கவும இயலாத காமாக்கினியில் மூழ்கின மகளிர் முப்புரத்தைச் சிரித்தெரித்த தலைவர் புன்சிரிப்பினை ஒத்து அடிகளார் நகையும் (புரம்) உடம்புகளைச் சுடுகிறது என்று கூறுவர்.

வழுவும்உடை கரத்திடுக்கிக் கொணர்ந்தபலி இடமாட்டார்
தொழுதகையார் பனந்தாளின் அணிந்தருளத் தொடைஏந்தி
எழுமவளின் மறுகுவார் எம்பிரான் கடைக்கணிப்ப
முழுதருள்பெற் றுய்ந்தேம்என் றகம்மலர முகம்மலர்வார். 13

சோர்கின்ற உடையை இருமுழங்கைகளாலும் இடுக்கிக்கொண்டு கையிற் கொணர்ந்த பிச்சையை இட (உயர்த்தக் கூடாமையால்) மாட்டாராய்த் திருப்பனந்தாள் என்னுந் தலத்தில் தொழு தகையார்க்குச் சாத்தப்பூமாலையை ஏந்தி ஊக்கும் அவ்வம்மையைப் போல வருந்துவார். எமது பெருமான் கடைக்கண்ணால் நோக்க 'முழுதருளும் பெற்றுப் பிழைத்தேம்' என்றுள்ளம் மலர முகமலர்ச்சி அடைவார்.

திருப்பனந்தாளில் தாடகை யென்னும் மாதொருத்தி சிவபிரான் பூசனையில் மாலை சாத்தப் புகுமளவில் உடை நெகிழ இருமுழங்கைகளாலும் அதனை இடுக்கிய போது பெருமானார் திருமுடியைச் சாய்த்து அம்மாலையை ஏற்றனர். அவ்வருளை வெளிப்படுத்திய வடிவில் வளைந்திருந்த சிவலிங்கத் திருமேனியைச் சோழ அரசனின் மனங்களிப்பக் குங்குலியக் கலயர் நிமிர்த்திய வரலாற்றைப் பெரிய புராணத்திற் காண்க.

தக்கபலி கொளவந்தீர் தனப்பிச்சை தருகின்றேம்
கைக்கொடுபோம் இதோவெனமுன் உரம்நெளிப்பார் கழிகாமம்
மிக்கயாங் களும்நீரும் வெற்றரையேம் ஆயினமால்
இக்கிடந்த துகில்நுமதோ எமதோசொற் றிடும்என்பார். 14

'சிறந்த பிச்சையைக் கொள்ளுதற்காக வந்தீர்; தனப்பிச்சையைக் கொடுக்கின்றேம். கையிற் கொண்டு போமின் இங்குள்ளன என மார்பை வளைத்துக் காட்டுவார். மிக்க காமம் மேலும் மிகுந்த யாங்களும் நீரும் நிருவாணரேம் ஆயினம் ஆகலின், இங்குக் கிடந்த ஆடை நும்முடையதோ எம்முடையதோ கூறுமின் என்று கூறுவர்.

பெருமானார் திகம்பரராய் எழுந்தருளினர். தனம், செல்வம்; கொங்கை.

எம்மல்குற் கும்மல்குல் இணையொக்கும் போதும்அது
செம்மலீர் உடன்சேர்த்தித் தெரிதும்என அருகணைவார்
வெம்முலைவா ரணம்எங்கள் இடைக்கீறு விளையாமே
நும்முகிர்த்தோட் டியின்அடக்கின் அறன்உண்டு நுமக்கென்பார்

'எம்முடைய அல்குலுக்கும் உம்மல்குலுக்கும் ஒப்பு நேரா தல் கூடும். தலையாய பண்பினீர்! அதனை இணைத்துத் தெரிந்துகொள் வேம்' என நெருங்குவார். கொடிய முலைகளாகிய யானைகள் எங்கள் நடுவிற்கு இடையூற்றை விளையாதபடி நும்முடைய நகங்களாகிய அங்கு சத்தினால் அடக்கினால் நுமக்குப் புண்ணியம் உண்டாகும்' என்றனர்.

அல்குல், பிருட்டபாகம், மத்தகமும், கோடும் பற்றிய உருவகம்.

மன்றநீர் இரந்தபலி யாமளித்தேம் மற்றியாங்கள்
ஒன்றிரந்த தளியாக்கால் இகழன்றே உமக்கென்பார்
இன்றெனினும் விடுவேமோ ஈர்ங்கணைவேள் பறந்தலைக்கண்
சென்றுபெரும் போர்விளைத்தும் வளைமின்எனத் தெழித்தெழுவார். 16

'நீவிர் விரும்பிய பிச்சையை நிச்சயமாக யாங்கள் அன்பொடும் கொடுத்தோம். யாங்கள் வேண்டிய ஒன்றனைப் பிரதி உபகாரமாகக் கொடாத வழி உமக்குப் பழிப்பன்றோ? என்று கூறுவர். 'நீ கொடே' னெனினும் உன்னைப் போக விடுவேமோ? தேனால் ஈரிய மலரம்புகளை யுடைய மன்மதனின் போர்க்களத்தில் (மண்டி) மேற் சென்று போரைச் செய்வேம் வளைத்துக் கொள்ளுமின்' என்று உரத்துப்பேசி விரைவார்.

'சுற்றுமின்; சூழ்மின்; தொடர்மின்; விடேன்மின்; பற்றுமின்' என்பன நினைக. மகளிர் மன்மதன் சேனையாகலின் போர் முறை கூறினர்.

யாங்கொணர்ந்த பலியோடும் எம்முடைய வளைஆழி
பூங்கடிஞை யுறக்கொண்டீர் புனிதரே அவைஅளித்தால்
ஆங்கிரந்த மாலார்க்கு வளைஆழி மீட்டளித்த
வீங்குநீர்க் கலிக்கச்சி விநாயகர்ஒப் பீர்என்பார். 17

யாம் கொணர்ந்து பெய்த பலியுடனே எம்முடைய வளையலையும் மோதிரத்தையும் பொலிவுடைய பிச்சைப் பாத்திரத்தில் விழக்கைப்பற்றி னீர். விமலரே! அவற்றைத் திருப்பித் தந்தால் முன்னாள் யாசித்த திருமாலுக்குப் பாஞ்ச சந்நியமும், சக்கரமும் மீளத்தந்தருளிய பெருவெள் ளம் சூழ்ந்த கலிக்கச்சியில் வீற்றிருக்கும் வலம்புரி விநாயகரை ஒப்பீர் ஆவீர்' என்று கூறுவார்.

சங்கு சக்கரங்களைத் திருமால் விநாயகரிடத்துப் பெற்ற வரலாறு க்கை வலம்புரி விநாயகப் படலத்திலும், விடுவச்சேனேசப் படலத்திலும் அறிக. கலி—பெருமை, ஒலி, விளக்கம், தழைத்தல்.

பாம்பலதிங் கிஃதல்குல் பகடல்ல இவைகொங்கை
கோம்பியல தியுநாசி கோளரியன் றிதுமருங்குல்
ஏம்பலிக்கும் இவைதம்மைக் கோள்இழைப்ப எனவெருவிப்
போம்பரிசு நினையாதீர் புல்லுமின்என் றடிதொழுவார். 18

'இது பாம்பன்று அல்குல்; யானையல்ல இவை கொங்கைகள்; பச்சை ஓணான் அன்றிது மூக்கு; சிங்கம் அன்றிது நடு; களிப்பிக்கும் இவற்றைக் கொலை புரிவன என அஞ்சிப் புறம்போதலை எண்ணாதீர் எம்மைத் தழுவுமின்' என்று கூறி அடியிணையைத் தொழுவார் ஆவர்.

இவ்வாறு தம்பிரான் திருமேனி எழில்நோக்கிச்
செவ்வாய்மைக் கற்பிழந்தார் திறங்கண்டு வெகுண்டெழுந்த
அவ்வாழ்க்கை முனிவர்இடு சாபங்கள் அடிகள்பால்
துவ்வாமை உறநோக்கிக் கொடுவேள்வி தொடங்குதலும். 19

இங்ஙனம் உயிர்களின் தலைவர்தம் திருமேனி அழகினை நோக்கித் திரிபில்லாமை வாய்த்த கற்பினை இழந்தார் நிலைமையைக்கண்டு பொருது சினங்கொண்டெழுந்த முனிவர் விடுத்த சாபங்கள் பெருமானிடத்து அநுபவப் பொருளாகாமையை எண்ணிக் கொடிய ஆபிசார யாகத்தைத் தொடங்கி இயற்றுதலும்,

எழுந்தமுய லகன்புலிபாம் புழைபூதம் எரிமழுவும்
தொழுந்தகையார் கைக்கொண்டு தொடங்குதிரு நடங்காணூஉ
விழுந்தயர்ந்து சோர்ந்துள்ளம் வெரீஇயினார் தமக்குமதிக்
கொழுந்தணிவார் அறிவளிப்பக் குறைதீரத் தொழுதெழுந்தார்.

வேள்வியினின்றும் எழுந்த முயலகன், புலி, பாம்பு, மான், பூதம், நெருப்பு, மழு இவற்றைப் பெருமானை அழிக்கத் தூண்டப் பிரானார் அவற்றைக் கைக்கொண்டு அவ்விடத்துத் திருக்கூத்தியற்றக்கண்ட முனிவர் முனைப்பிழந்து உடல் தளர்ந்து, உள்ளமும் தளர்ந்து அஞ்சினார். பிறையை வாழ்வித்த பெருமானார் அம்முனிவரர்க்கு அறிவை நல்கப் புரிந்த குற்றங்கள் நீங்க வீழ்ந்து வணங்கி எழுந்து நின்றனர்.

சென்னிமிசைக் கரங்கூப்பித் தெய்வசிகா மணிபோற்றி
இன்னருளால் எமைப்புரக்க எழுந்தருளுஞ் செயல்போற்றி
பொன்னிதழித் தொடையாய்எம் பிழைஅனைத்தும் பொறுத்தருளிப்
பன்னரிய முத்திநிலைப் பரபோகம் அருள்என்றார். 21

சிரமிசைக் கரங்களைக் குவித்துத் 'தெய்வசிகாமணியே எம்மைக் காத்தருள்க! அறக்கருணையால் எம்மைக் காக்க எதிரெழுந்தருளிய நிகழ்ச்சிக்கு வணக்கம். பொன்போலும் கொன்றை மலர் மாலையை அணிந்தோய்! யாம் செய்குற்றங்கள் அனைத்தையும் பொறுத்தருளிப் பேசற்கரிய அனுபவப் பொருளாகிய அடிசேர் முத்தியாகிய பர போகத்தினை அருளுக' என்றனர்.

எல்லாத் தெய்வங்களும் முடிமணியாக வைத்துப் போற்றற்குரியராதலின் தெய்வசிகாமணி போற்றி எனவும், தொழுது பிழைதீரற்கிடனுவார் என்பார் தொழுந்தகையார் எனவும் கூறினர்.

அவ்வண்ணந் தொழுதிரந்த அருள்முனிவர்க் கருள்கூர்ந்து
செவ்வண்ணத் திருமேனிச் சிவபிரான் இதுகூறும்
இவ்வண்ணம் வேண்டுதிரேல் எழிற்காஞ்சி நகர்வயின்போய்
மெய்வண்ண நாற்குலத்தும் தோன்றிஅவண் மேவுதிரால். 22

அவ்வாறு தொழுது வேண்டிய அன்புடைய முனிவரர்க் கருள் சுரந்து சிவபெருமான் இதனை அருளுவர். 'முத்தியை வேண்டுவீராயின் அழகிய காஞ்சிமா நகர்க்கண் நால்வகை வருணத்தும் நற்குடிகளில் தோன்றி அவ்விடத்தே வாழுதிர்.'

'சிவனெனு நாமந் தனக்கேயுடைய செம்மேனி எம்மான்' ஆகலின் 'செவ்வண்ணத் திருமேனிச் சிவபிரான்' என்றனர்.

அறுசீரடி யாசிரிய விருத்தம்

பற்றறத் துறந்தோர் பற்றுட் பட்டவ ரேனும் ஞானம்
பெற்றவர் மடவ ரேனும் பெரும்பன்றி கழுதை ஞாளி
புற்றராப் புல்லுப் பூடு புழுமர மேனுங் காஞ்சி
நற்றலத் திறுதி கூடின் நம்அடி கலப்ப துண்மை. 23

' இருவகைப் பற்றும் அற்றவ ரெனினும், உற்றவரெனினும் ஆக, அறிவுடைய ரெனினும், அறிவிலரெனினும், பன்றி, கழுதை, நாய், இவைகளே ஆக, புற்றில் வாழ் பாம்பு, புழு இவைகளும் ஆக, புல், சிறு செடி, மரங்களே ஆகக் காஞ்சியாகிய நல்ல தலத்திடை உயிர் நீங்கப் பெறின் இறப்பராயின் நம்முடைய திருவடியைத் தலைப்படுதல் சத்தியமாகும்!

தேவதாருவன முனிவர் காஞ்சியிற் பிறத்தல்

ஆதலின் அங்கண் இல்லாற் றொழுகிவீ டடைமின் என்னக்
காதலின் வணங்கிப் போற்றிக் கடும்பொடும் பிருகு வாதி
ஏதமில் நாற்பத் தெண்ணா யிரவருங் காஞ்சி நண்ணிக்
கோதறு மரபின் ஆன்ற நால்வகைக் குலத்துந் தோன்றி. 24

' ஆதலின், அக்காஞ்சியில் இல்லற நெறியில் நின்று முத்தியை அடைமின்' என்றருள விருப்பொடும் வணங்கிப் பரவுதல் செய்து சுற்றஞ் சூழப் பிருகு முனிவரர் முதலாம் குற்றமற்ற நாற்பத்தெண்ணாயிரவரும் காஞ்சியை நண்ணிக் குற்றமற்ற வழி வழி அமைந்த நால்வகைக் குலங்களினும் வந்து பிறந்து,

தாய் மரபு தந்தை மரபாகிய "இருவர்ச் சுட்டிய பல்வேறு தொல் குடி" வழிவழி அடிமை செய்யும் என்பன காண்க.

மெல்லிதழ் நறுமென் போதால் விதியுளி வெவ்வே றன்பின்
அல்லுறழ் மிடற்றுப் புத்தேள் அருட்குறி அருச்சித் தேத்தி
நல்லன வரங்கள் பெற்று நாயகன் அருளால் அங்கண்
இல்லற நெறியின் மன்னி வாழ்ந்தனர் இனைய நீரால். 25

வேறு வேருக அன்பொடும் இருளொடு மாறுபடும் திருநீலகண்டமுடைய சிவலிங்கப் பெருமானைத் தாபித்து நறிய மெல்லிதழ் கொண்ட மென்மலர்களால் முறைப்படி அருச்சித்துத் துதித்து நல்லனவாகிய வரங்களை இறைவன் திருவருளாற் பெற்றவ்விடத்தே இல்லற நெறியில் நிலைநின்று வாழ்ந்தனர். இவ்வியல்பினால்,

எல்லைதீர் காஞ்சி யுள்ளார் யாவரும் முனிவர் அங்கண்
கல்லெலாம் இலிங்கம் சீதப் புனலெலாங் கங்கை சொல்லுஞ்
சொல்லெலாம் மனுக்கள் கைகால் தொழிலெலாம் விடையோன் ஏவல்
செல்லலாந் தகைத்தன் றம்ம தென்திசைக் கிழவற் கவ்வூர். 26

வரையறை தவிர்ந்த சிறப்பினையுடைய காஞ்சியில் உள்ளவர் யாவரும் முனிவரர் ஆவர். அவ்விடத்துள்ள கல்லெல்லாமும் சிவலிங்கம் ஆகும். குளிர்ந்த நீர் நிலைகள் யாவும் கங்கையாகும். காஞ்சியில் பேசப் பெறும் சொற்கள் யாவும் மந்திரங்கள்; தொழிலெலாம் அருட்பணிக்குரியவை. இங்ஙனம் ஆதலின், நரகம் புகுவாரின்மையின் இயமன் அங்கு வாழ்வாரை நோக்கிச் செல்லுதற்குரிய வாய்ப்பிலது.

அம்ம, வியப்பிற்று.

அந்தகாசுரன் முத்தியடைதல்

அருந்தவக் கிழவர் தங்கள் செயல்அது வாக இப்பால்
பெருந்தகை கயிலை நண்ணிப் பிராட்டியோ டமர்ந்தான் அங்கண்
திருந்திழை மகளிர் கோலங் கொண்டுறை திருமா லாதி
இருந்திறற் சுரரும் போற்றி மருங்குற இருக்கும் எல்வை. 27

செய்தற்கரிய தவ முனிவரர் செய்கை அவ்வாறாக, இனிப் பெருமானார் திருக்கயிலையைச் சேர்ந்து பிராட்டியாரோடும் வீற்றிருந்தனர். அங்குத் திருந்திய அணிகளைப் பூண்ட மகளிர் வடிவங்கொண் டுறைகின்ற திருமாலாதி பெருவலியுடைய விண்ணோரும் போற்றி செய்து சூழ இருக்கும் பொழுதில்,

தனைப்புறங் கண்ட மின்னார் தமைப்பற்றி வருதும் என்னும்
மனத்தருக் குய்ப்ப மீட்டும் அந்தகன் வருதல் காணாஉப்
புனத்துழாய்ப் புத்தேள் முன்னர்ப் போற்றிவிண் ணப்பஞ் செய்ய
வினைத்தொடக் கறுக்கும் எங்கோன் வயிரவன் றனைவி டுத்தான்.

முன்னர்த் தன்னைப் புறங்காட்டி ஓடச்செய்த மின்னைக்கும் தேவமகளிரைக் கைப்பற்றிக் கொண்டு போவான் உள்ளத்துத் தோன்றிய செருக்குச் செலுத்த அந்தகாசுரன் மீளவும் வருதலைக் கண்டு திருமால், சந்நிதியில் போற்றி முறையிட வினைத்தளையை அறுக்கும் எமது பெருமான் வயிரவத் தோன்றலை எதிர் விடுத்தனர்.

புனத்துழாய்—முல்லை நிலத்துக்குரிய துளசி. முத்தலைச் சூலத் தனுபவம் பெற்றபின் ஞானத்திற்குரியன் அந்தகன் ஆகலின் 'வினைத் தொடக்கறுக்கும் எங்கோன்' என்றனர்.

வயிரவன் படையோன் முன்னும் வானவர்க் கிடுக்கண் செய்வான்
வயிரவன் துடியன் சேனை வலத்தவ னாகிப் போந்த
வயிரவன் மனத்தான் றன்னைப் பொருதுவண் சூலத் தேந்தி
வயிரவன் களிப்பு மிக்கு வாகையின் நடனஞ் செய்தான். 29

வலிமை அமைந்த வச்சிராயுதத்தை யுடைய இந்திரன் முதலாம் தேவர்க்குத் துன்பம் செய்யும் பொருட்டு ஊது கொம்பினையும், வலிய உடுக்கையினையும் உடையனாய்ப் படை வலியுடன் வந்த கறுவு கொண்டிருந்த வலிய மனத்தினனாய அந்தகாசுரனை வயிரவமூர்த்தி பகைத்துப் பெரிய சூலத்தில் குத்தி ஏந்திக் களிப்பு மிகுந்து வென்றிக் கூத்தாடினர்.

அந்தகற் கருளால் உண்மை அறிவுவந் துதிப்ப அன்னோன்
கொந்துமுத் தலைச்சூ லத்திற் கோப்புண்டு கிடந்த வாறே
கந்தமென் மலர்த்தாள் போற்றித் துதித்தலுங் காரிப் புத்தேள்
மைந்தயாம் மகிழ்ந்தாம் வேட்ட வரம்இனிப் புகறி என்ன. 30

அந்தகாசுரனுக்குத் திருவருளால் மெய்யறிவு தோன்றக் குத்திக் கோத்த முந்நுதியுடைய சூலப்படையிற் கிடந்தபடியே நறுமணங்கமழும் மலர்போலும் திருவடிகளைப் போற்றி செய்து துதித்தபோது, வயிரவர், 'மைந்தனே! யாம் மகிழ்ந்தோம், விரும்பிய வரத்தை இப்பொழுது கூறுதி என்று கூற,

தானவன் முத்தி ஒன்றே தந்தருள் என்றான் அற்றேல்
கோனருள் பெற்றுக் காஞ்சி குறுகுவாம் என்று நண்ணி
ஆனுடை ஊர்தி அண்ணல் அருளினால் தனது காப்பாம்
மாநகர் எய்திச் சூல வைத்தலைக் கிடந்தான் றன்னை. 31

அசுரன் 'முத்தியே தந்தருள்க' என்றனன். 'அதுவேண்டின் இறைவன் கட்டளையைப் பெற்றுக் காஞ்சியை அணுகுவோம்' என்று விடையூர் பரமன் அருள் பெற்றுக் கயிலையை விடுத்துத் தனது காப்பிற் பொருந்தும் காஞ்சிமாநகரையடைந்து சூல நுனியிற்கிடந்த அத்தானவனை,

தெறும்புரம் எரித்தார் கம்பம் திகழ்சிவ கங்கைத் தீர்த்த
நறும்புனல் மூழ்கு வித்துத் திருவருள் நல்கிப் பாசக்
குறும்பறுத் தளித்தான் தண்டக் குரிசில்அந் தகனும் தன்பேர்
உறும்பழ இலிங்கத் துள்ளாற் கரந்தனன் ஒருமை பெற்றான். 32

வருத்துகின்ற முப்புரங்களைச் சிரித்தெரித்த பெருமானாரது திருவேகம்பத் தலத்தில் விளங்குகின்ற சிவகங்கையில் மூழ்குவித்துத் திருவருளை வழங்கிப் பாசக்கொடுமையை அறுத்தருளினர் வயிரவர். அந்தகாசுரனும் தன் பெயரான் விளங்கும் பழைய சிவலிங்கத்தினில் மறைந் தொன்றாயினன்.

அந்தகேசப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்- 1350

# வாணேசப் படலம்

கலி விருத்தம்

அறம்பயில் காஞ்சியின் அந்தகேச்சரத்
திறஞ்சிறி தறிந்தவா செப்பி னும்இனிப்
பிறங்குசீர் அத்தளிக் குணதி பேதுறாப்
பறம்புவில் உழவர்வா ணேசம் பன்னுவாம். 1

அறம் திகழ்கின்ற காஞ்சி நகரில் அந்தகேசத்தின் இயல்பினை அறிந்தபடி சிறிது கூறினோம். இனி, விளங்குகின்ற சிறப்பினையுடைய அந்தகேசத் திருக்கோயிலுக்குக் கிழக்கில் மாறுபடாத மேருமலையைக் கோட்டிய வில் வீரர்தம் வாணேசத் தலத்தினைக் கூறுவாம்.

'தருமம் பிறழாத சத்ததானம்' என முன்னும் வந்தது. அம்மையார் முப்பத்திரண்டறங்கள் வளர்த்தற்கிடனென்க

வாணன் வரம்பெறல்

எறுழுடை வாணன்என் றியம்பு தானவன்
தெறுவினைக் காஞ்சியின் அருட்சி வக்குறி
நிறுவினன் அருச்சனை நிரப்பி மாதவம்
உறுவரின் உஞற்றினன் உலப்பில் காலமே. 2

வலிமையையுடைய வாணன் என்னும் அசுரன் தீவினையைக் கெடுக்கின்ற காஞ்சிமாநகரில் சிவலிங்கந் தாபித்துப் பூசனையை முற்றுப் பெறச் செய்து முனிவர்போலப் பெருந்தவத்தை அளவிறந்த காலஞ் செய்தனன்.

அன்பினுக் கெளிவரும் அழகன் ஆங்கவன்
முன்புறத் திருநடம் முயலக் கண்டனன்
என்புநெக் குருகினின் றேத்தி னன்நந்தி
தன்பெருங் கணத்தொடு முழவு தாக்கினன். 3

அரியனும் அன்பருக்கெளியனும் அழகன் அவன் முன்னர்த் திருநடம்புரியக் கண்ட வாணன் என்பும் குழைய மனம் ஒன்றி உருகித் துதித்தனன். திரு நந்தி கணங்களொடும் குடமுழவமும் முழக்கினன்.

'அருமையில் எளிய அழகே போற்றி' (திருவா.)

குடமுழ விருகரங் குலுங்கத் தாக்குதோ
றடர்பெருங் கருணைகூர்ந் தடிகள் ஆயிரந்
தடநெடுங் கரம்பெற நல்கித் தானவ
விடலைநீ வேட்டது விளம்பு கென்றலும். 4

குடமுழவை இருகரங்களாலும் அதிரத் தாக்குதோறும் செறி பெருங்கருணை வெளிப்பட்டிறைவனார் ஆயிரம் நீண்ட பெரிய கரங்களை அவனுக்கு நல்கி 'தானவவிடலையே! நீ விரும்பிய பொருளைக் கூறுக' என்றருளலும்,

விடலை: 16-பிராயத்திற்கு மேல் 30-ஆம் பிராயம் வரையிற் கூறப் படும் ஆண்பாற் பருவப் பெயர்; (பன்னிருபாட்டியல் - 232.)

ஆயிர முளரிநீண் டலர்ந்த நீனிற
மாயிருங் குன்றுறழ் வாணன் தாழ்ந்தெழூஉத்
தீயழற் புரிசையும் திறலும் ஆக்கமும்
பாயமூ வுலகமும் பரிக்குங் கொற்றமும். 5

ஆயிரம் தாமரை மலர்கள் கொண்ட நீல நிறமுடைய மலையை ஒத்த வாணாசுரன் பெருமானைப் பணிந்தெழுந்து பகைவரைச் சுடுகின்ற நெருப்புமயமான மதிலும், வலிமையும், செல்வமும், பரந்த மூவுலகங்களை யும் தாங்குகின்ற வெற்றியும்,

ஓவரு நிலைமையும் உன்ன டித்துணை
மேவரு பத்தியும் வேண்டி னேன்ஒரு
மாவடி முளைத்தெழு வள்ள லேஎனக்
காவணி உடுத்தொளிர் கம்ப வாணனும். 6

'என்றும் நீங்காத இயல்பும், உன் திருவடிகளிற் பொருந்திய பேரன்பும், வேண்டினேன். ஒற்றைமாமரத்தின் மூலத்தில் தோன்றிய வள்ளலே!' என்று வேண்ட சோலைசூழ்ந் தழகு செய்யும் திருவேகம்பப் பெருமானாரும்,

அனையவை முழுவதும் அளித்து நீங்கினன்
புனைபுகழ் அசுரர்கோன் புவனம் யாவையும்
தனதடிப் படுத்தினன் தருக்கி வாழுநாள்
முனைவனைத் தொழூதெழக் கயிலை முன்னினன். 7

வேண்டிய வரங்கள் முழுவதும் வழங்கி நீங்கினார். புகழ்பூண்ட அசுரர் தலைவனும் புவனங்கள் எல்லாவற்றையும் தன் ஏவலுட் படுத்துச் செருக்கிச் செல்வக் களிப்பில் வாழுங்காலத்தில், எல்லாப் பொருட்கும் முன்னோனைத் தொழுதலான் உயரக் கயிலையை அடைந்தான்.

நம்மைஆ ளுடையவன் நடன வேலையிற்
செம்மல்ஆ யிரமணிக் கடகச் செங்கையால்
தொம்மெனக் குடமுழா எழுப்பச் சூர்த்தகண்
கொம்மைவெள் விடையினன் கருணை கூர்ந்தரோ. 8

நம்மை அடிமையாக உடைய பெருமான் திருக்கூத்தியற்றுகையில் அவுணர் தலைவன் கடகமணிந்த ஆயிரங் கைகளால் 'தொம்மென'

முழங்கக்குடமுழா வாசிக்க அச்சந்தருங் கண்களும், இளமையும், வெண்மையும் உடைய விடையுடைப் பெருமான் கருணை மீக் கூர்ந்து,
'சூர்த்தகண்' (சிவபுண்ணியப் படலம் 12.) காண்க.

எவ்வரம் விழைந்தனை யெனினும் நல்குதும்
அவ்வரம் புகல்என அசுரன் கூறுவான்
செவ்வன்நின் திருவடிச் சேவை நித்தலுஞ்
செய்வது விழைந்துளேன் கருணை செய்துநீ. 9

'எவ்வரமெனினும் வழங்குவேம்' கேளென அருள அசுரன் கூறுவான், 'திருவடி தரிசனம் நாடோறும் முட்டின்றிப் பெற விரும்பியுள்ளேன்' ஆகலின் கருணை வைத்து நீ,

பீட்டுயர் முருகவேள் வரைப்பி ராட்டியோர்
கோட்டிளங் களிற்றொடு கோட்க ணங்களின்
ஈட்டமொ டெய்திஎன் இருக்கை வாய்தலின்
மாட்டிருந் தெனக்கருள் எனவ ணங்கினன். 10

'பெருமையொடும் உயர்ந்த முருகவேளும், இமய வல்லியும், ஒற்றைக்கொம்புடைய் விநாயகப் பெருமானும், சிவகணங்களும் உடன் சூழ எனதுமனை வாய்தலின் முன் எழுந்தருளியிருந்தருள் செய்க' என வணங்கினன்.

எண்ணிய எண்ணியாங் களிக்கும் எந்தைஅவ்
வண்ணமே ஆயிடை மருவி வைகினன்
கண்ணுறும் அசுரனுங் காலந் தோறும்அங்
கண்ணலை அடிதொழு தன்பின் வைகுநாள். 11

எண்ணியவற்றை எண்ணியவாறே அருளும் எமது தந்தையார் அங்ஙனமே அவன் இருக்கையில் நிலை பெறத் தங்கினர். கருத்துமிகும் அசுரனும் காலங்கள்தோறும் அண்ணலைத் தொழுது அன்பொடும் வைகுநாளில்,

தம்மையும் தருதல்: "அறம் பூண்டு, பாரியும் பரிசில ரிரப்பின், வாரேனென்னு னவர்வரை யன்னே" எனவும், "யாமும் பாரியும் உளமே, குன்றும் உண்டுநீர் பாடினிர் செலினே" எனவும் (புறநா. 108; 110.)

வாசவன் நெடியவன் மற்றை யாரையும்
பூசலிற் புறங்கொடுத் திரியப் போக்கினன்
காசணி மிடறுடைக் கடவுள் முன்னுறீஇ
ஏசறு செருக்கினல் இதுவி ளம்புவான். 12

இந்திரனையும், திருமாலையும், மற்றையோரையும் போரிற் புறங்காட்டி ஓடும்படி போக்குவித்தான். நீலமணிபோலும் அழகிய கண்டமுடைய சிவபெருமான் முன்சென்று துன்பத்திற்கேது வாகிய செருக்கினல் இதனைக் கூறுவான்.

என்னொடு போரெதிர்ந் திரியல் போயினர்
என்னரும் இனிமற்றென் புயக்கண் டூதியை
என்னுடைப் பிரானிடைத் தீர்ப்ப எய்தினேன்
என்னைநின் திருவுளம் இயம்பு வாயென. 13

'என்னுடன் மாறுபட்டு எல்லோரும் கெட்டோடினர். இப்பொழுதென்புயத்தெழுந்த தினவினை நும்மிடத்துத் தீர்க்க வந்தேன். நின் திருவுள்ளக் கருத்தினைக் கூறுவாய்' என்ன,

என்னரும்–எத்திறத்தரும் எனினுமாம். 'என்னரேயாயினும்' (கந்த. கயமுக.)

வெருவலன் எதிர்நின்று விளம்பக் கேட்டலும்
திருவடி விரல்உகிர் விழுசி ரிப்பினன்
மருவலர்க் கடந்தருள் மதுகை எம்பிரான்
குருநிலா நகைமுகிழ்த் திதனைக் கூறுமால். 14

நினைக்கவும் கூடாத ஒன்றை அஞ்சானாய் எதிர்நின்றுணர்த்தக் கருவியின்றிக் கரும முடிப்பவர் அவன் பேதைமையை நோக்கி வெள்ளொளி தவழப் புன்முறுவல் பூத்து வாய்மலர்வார்.

இயமனை, இராவணனை, மலரவனை, மன்மதனை, முப்புரத்தைக் கருவியின்றி அழித்தமையும், "வில்மதனை வென்ற தலர்விழியே ஒன்னார் தம், பொன்எயில் தீமடுத்த தின்னகையே பூமிசையோன், தார்முடி கொய்தது கூருகிரே ஆருயிருண், கூற்றுயிருண்ட தடித்தலமே ஏற்றான், பரசும் பிறைகமும் சூலமும் என்னே, கரமலர் சேப்பக் கொளல். (சிதம்பரச் செய்யுட்கோவை-21.) என்னும் செய்யுளையும் எண்ணுக. இங்கே திருமால் நிலைமையையும் (விடுவச். 6.) எண்ணுக.

முதுதவப் பிருகுவின் சாப மொய்ம்பினால்
எதுகுலத் துதித்தெனக் கினிய னாகிய
புதுமலர்த் துளவன்நின் புயக்கண் டூதியைக்
கதுமெனப் போக்குவான் வருவன் காணெனா. 15

'பிருகு முனிவர் சாப வலிமையைக் கடக்கலாற்றாது யது மரபிற் றோன்றி எனக்கினியனாகிய கண்ணன் தினவை விரைவிற் போக்கும் பொருட்டு வருவான் காணென்று,

யது மரபில் வந்து யாதவனாய் ஆயர்பால் வளர்ந்தமை பற்றி ஆயர் யாதவராயினர் என்க. புதுமை–வாடாமை முதலியன. ஏவல் வழி நின்ற போரென்பார் இனியன என்றனர்.

தற்றெழு வான்றனைத் தான்செ குப்பது
நற்றிற மன்றென நாடி இவ்வணம்
சொற்றனன் திருவுளஞ் சுளித்தி யாவையும்
அற்றமில் அவன்அவள் அதுகொண் டாட்டுவான். 16

எல்லா உயிர்களையும் துன்பம் இல்லையாக முக்கூற்றுட் படுத்துக் கூத்தாட்டுக் காண்போர். தம்மையே தொழுவானைத் தாமே அழிப்பது அறம் அன்றென்று திருவுள்ளத்துட் சினக்குறிப்புடன் அருளினர்.

இருள்குடி யிருந்தபுன் மனத்தின் ஈங்கிவன்
முரணினை யடக்கவே போலும் முந்தைநாள்
செருவகத் தெம்மினுந் திறல்கொள் வாயென
வரம்அரிக் கெம்பிரான் வழங்குஞ் சூழ்ச்சியே. 17

முற்காலத்தில் எமது பெருமான் போர்க்களத்தில் எம்மிடத்தும் வெற்றிபெறுகெனத் திருமாலுக்கு வரம் நல்கிய உபாயம், அறியாமை குடிகொண்ட புல்லிய மனத்தினன் வலிமையை அடக்கவே ஆதல் கூடும் இந்நிகழ்ச்சியைப் பாரதம் சாந்தி பருவத்துட் காண்க.

நம்பன்ஈ துரைத்தலும் நக்குக் கையெறிந்
தெம்பிரான் முப்பதாம் முறையின் என்னொடேற்
றும்பரார் கணத்தொடும் ஓடி உய்ந்துளான்
அம்பக முளரியான் அமருக் காற்றலான். 18

நமக்குச் சிறந்தோர் இதனைக் கூறலும் கைகொட்டி நகைத்து, எம்பிரானே! தேவரொடும் கூடிவந்தென்னொடும் போரெதிர்ந்து முப்பது முறை தோற்றுப் புறங்காட்டி உயிர் பிழைத்த பதுமாட்சன் போர் செயற்கு வலியிலன்,

அவனைஓர் ஆண்டகை மீளி யாகவைத்
தெவன்இது கிளந்தனை எந்தை நீயெனக்
கவர்மனக் கொடுந்தொழில் தறுகண் காய்சினத்
தவலுடை ஊழினன் இகழ்ந்து சாற்றலும். 19

'அவனை ஓர் ஆண் தன்மையுடைய வீரனாக வைத்து என்னே இதனைக் கூறினை எந்தையே! நீ' என்று கொடிய செயலையும் அஞ்சாமை யையும், தெறுகின்ற சினத்தையும் விரும்புகின்ற மனத்தினையும் கெடுதலையுடைய விதியையும் உடையோன் இகழ்ந்து பேசலும், தவல்–இன்னாதல்; "தவலும் கெடலும் நணித்து" (திருக். 856.) என்புழிக் காண்க. "கவர்வு விருப்பாகும்" (தொல். சொல். உரி. 66.)

அவன்அமர்க் கிடைந்தவன் றனைக்கொண் டேஅவன்
கவர்மதம் அடக்கிய நினைந்த கண்ணுதற்
சிவபிரான் குறுநகை முகிழ்த்துச் செப்புவான்
தவலரும் ஆற்றலோய் சாற்றக் கேள்மதி. 20

தோற்ற திருமாலைக்கொண்டே வாணனைக் கைப்படுத்த அகந்தையை அடக்க நினைந்த பிரானுர் இளநகை காட்டிக் கூறுவார்: 'கெடாதவலியினனே! சாற்ற அதனை மதித்துக் கேட்டி.'

நின்னமர்க் குடைந்தபின் நினைஅ டக்குவான்
துன்னுசீர் உபமனி யனுக்குத் தொண்டுபூண்
டென்னருட் குரியனாய் எறும்ப டைத்தனன்
அன்னவன் முன்னவ னாக எண்ணலே. 21

'தோற்ற பின்னர் நின்செருக்கினை அடக்குதற் பொருட்டுச் செறிந்த சிறப்புடைய உபமன்னிய முனிவர்பால் திருவடித் தீக்கையுற்று வழிபாட்டினால் எமதருளுக்குப் பாத்திரனாய் வன்மை எய்தினன். முன்னை நிலையில் வைத்தவனை எண்ணாதே.'

என்னநாள் அவன்வரும் என்றி யேல்ஒரு
நின்மகட் கோர்பழி நிகழ நின்நகர்
நன்னெடுங் கொடியுள்ஒன் றொடியும் நாள்வரும்
என்னலும் அசுரர்கோன் இருக்கை எய்தினான். 22

'அவன் வருநாள் என்றெனை வினவுதியேல், ஒப்பற்ற நின் மகட்கோர் பழிவந்து சூழ நின்நகரத்துக் கொடி ஒன்றொடிந்து வீழுநாள் வருவன்' என்ற அளவிலே அவுணர் கோமான் தன் மனைக்கண் புகுந்தனன்.

உஷையின் களவொழுக்கம்

அங்கொரு நாள்அவன் பயந்த ஆயிழை
கங்குலிற் கனவினிற் கண்ணன் சேய்பெறும்
பொங்கெழில் அனிருத்தன் புல்லப் புல்லினள்
வெங்களிப் பெய்தினள் விழிப்பக் கண்டிலாள். 23

ஓர்நாள் அவன் ஈன்ற அழகிய இழைகளையுடைய மகள் உஷை இரவிடைக் கனவில் கண்ணனுக்கு மகனாகிய பிரத்தியும்னன் பயந்த அழகுமிகு அநிருத்தன் தன்னைத் தழுவத் தானும் எதிர் தழுவினள்; விரும்புகின்ற களிப்புற்றனள்; விழித்தவழிக் காணாளாய்,

கையெறிந் தழுதுகண் கலுழ்ந்து சோர்ந்தனள்
மெய்யணி சிதைந்துமெய் வெறுவி தாதல்கண்
டைதெனத் தன்மலர் அனங்கன் சூட்டினான்
தையல்தன் மருகியாச் சார்வ தோர்ந்தென. 24

கையால் எற்றி அழுது கண் கலங்கித் தளர்ந்தனள். அணிகள் நெகிழ்ந்து வீழ்ந்து உடம்பு வறிதாதல் கண்டு 'அழகிது' எனக் கூறி மன்மதன் அம்புகளாகிய மலர்களைத் தொடுத்தான் அவ்வழகி தன் மருமகளாதலை உணர்ந்தாற்போல,

களங்கனிக் கூந்தலிற் கவற்றித் தற்றெறத்
துளங்குறு பழம்பகைத் தொடர்பின் வேள்கரி
விளங்கிழை முந்துதன் வீறு காட்டலால்
இளங்கொடி முதல்அரிந் தென்னச் சாம்பினாள். 25

களாப்பழம்போலும் கரிய கூந்தலினால் வருத்தித் தன்னை அழிக்க மனந்தளர்ந்த பழைய பகை காரணமாக மன்மதனுடைய யானையாகிய இருள், விளங்குகின்ற அணிகளைப்பூண்ட உஷை முன்பு தன் ஆற்றலைப் புலப்படுத்தலால் இளங்கொடியை அடியில் அறுத்தாற்போல வாடினாள்.

"வள்ளி முதலறிந் தற்று" (திருக். 1304.) விரகமுற்ற மகளிரை இரவு வருத்தும். இருள், மன்மதனுக்கு யானை என்ப.

பழிவரும் என்றசொற் பழுது றுவகை
உழைவிழிக் கிறந்துபா டொழிப்ப வல்விரைந்
தெழுபவன் போல்இருள் கிழித்து வெய்யவன்
சுழிபுனற் கருங்கடல் முகட்டுத் தோன்றினான். 26

'பழிவரும்' என்ற திருவாக்குப் பிழைபடாதபடியும் மான்போலும் விழியினையுடையாளுக்கு வரும் சாக்காட்டைத் தவிர்ப்பவும், மிக விரைந்து எழுவோன்போல இருளைப் பிளந்துகொண்டு சூரியன் கடல் முகட்டி லெழுந்தான்.

அறுசீரடி யாசிரிய விருத்தம்

அத்திறங் கேட்ட தோழி ஆய்ந்துருப் படத்தில் தீட்டி
இத்தனிக் குமர னேயோ என்றுள மகிழ்ச்சி நோக்கித்
தத்துநீர்த் துவரை நண்ணித் தவிசொடுந் துயில்கின் றானைச்
சித்திர மெனக்கொண் டெய்தித் திருந்திழை முன்னர் உய்த்தாள்.

கனவிடைத் தோன்றியோன் உறுப்பு நலங்கள் கேட்டறிந்த தோழி வடிவினைப் படத்தில் ஆராய்ந்து எழுதிக் கனவிடை வந்தோன் வடிவு கண்டு மகிழ்ந்தவழி 'இவ்வொப்பற்ற அரசிளங்குமரனோ'? எனத் தவழ்கின்ற நீர்சூழ் துவாரகையை நண்ணித் துயில்வோனைக் கட்டிலொடும் சித்திரமொப்பக் கொணர்ந்து உஷையிடம் சேர்த்தனள்.

அரசிளங்குமரர் பலரைத் தீட்டிக் காட்டினமை ஆய்ந்து எனவும் 'இத்தனிக்குமரனேயோ' எனவும் வருதலான் அறிக.

கண்டனள் அசுரன் ஈன்ற கனங்குழை அமிழ்தம் அள்ளி
உண்டனள் என்ன ஓகை ததும்பினள் உவனைப் புல்லிக்
கொண்டனள் காளை மேனி வனப்பெலாங் குறித்து நோக்கி
விண்டனள் கவலை அன்னான் விழித்தனன் விளைந்த காமம். 28

கனங்குழையாள் காளையைக் கண்டனள்; அமிழ்தத்தைத் தவத்தால் பெற்று உண்டவள் ஒப்ப உவகை பொங்கித் ததும்பினள்; அவனை இறுகத் தழீஇக் கொண்டனள்; உறுப்பழகையும் திரண்ட அழகையும் கண்களால் முகந்துண்டு துன்பமுற்றும் நீங்கினள்; அந்நிலையில் கண் விழித்தனன் அவன். இருவர்க்கும் காமப்பைங் கூழ் விளைந்தன.

இளமுலை வருடி மோந்து முத்தம்உண் டிதழ்த்தேன் மாந்தி
விளரிவண் டிமிருந் தாரான் மேகலை நெகிழ்த்து நீவித்
தளைவிடுத் தகல யாணர் அல்குலந் தடத்துள் மூழ்கி
விளைபெருங் கலவிப் போக வெள்ளத்தின் அழுந்தி னானால். 29

கொங்கையைத் தைவந்து, உயிர்த்து முத்தம் சுவைத்து அதர பானத்தைத் தேக்கவுண்டு விளரிப்பண் வண்டிற்கு விருந்தூட்டும் போக மாலையன் மேகலையைத் தளர்த்திக்கொய்சகக் கட்டினை அவிழ்த்துப் புதுப் போகங்கொள அல்குலாகிய தடத்துள் படிந்து விளைகின்ற பெரிய கலவிப் போகக் கரை காணாத வெள்ளத்துள அழுந்தினான்.

துணைவிழி சேப்பச் செவ்வாய் துடிப்பவேர் வரும்பப் பூக
மணிமிட றொலிப்பஆர்ப்ப வால்வளை தடந்தோள் வெற்பிற்
பணைமுலைக் களிநல் யானை பாய்ந்துபாய்ந் துழக்க மெல்கும்
அணைமிசைக் கலவிப் பூசல் மடந்தையும் ஆடி னாளே. 30

உஷையும் இருவிழிகள் முழுதும் சிவப்பவும், பவளவாய் துடிப் பவும், வியர்வை அரும்பவும், கமுகை யொத்த அழகிய கண்டம் ஒலிப் பவும், வெள்ளிய வளைகள் ஆரவாரிக்கவும, அவனுடைய பருத்த தோளாகிய மலையில் பருத்த கொங்கையாகிய களிப்புடைய நல்யானை தாக்கித் தாக்கிக் கலக்கக் குழையும் பள்ளியில் கலவிப் போராடினாளே.

புணர்ச்சியின் மருங்கு நிற்றல் புரையென விலகும் மேலோர்
குணத்தையுற் றுடையும் நாணும் புறஞ்செலத் தூர்த்தர் மான
வணர்க்குழல் கட்டு விட்டு மருங்கெலாங் கொட்ப நோக்கி
இணைச்சிலம் பார்ப்பத் தண்டா தின்னலம் நுகர்ந்து வாழ்நாள். 31

கூட்டத்துள் உடனிருத்தல் குற்றமென அகலும் மேன்மக்கள் குணங்கொண்டு துகிலும் நாணமும் புறத்தே போகவும், காமுகரைப் போலச் சுருண்ட கூந்தல் கட்டவிழ்ந்து இடமெலாம் பரந்து சுழல் கிடப்பப் பார்த்து இரு சிலம்புகள் ஆரவாரிப்ப முட்டின்றி இனிய இன் பத்தை அனுபவித்துக் கழிக்கும் நாளில்,

தளிரியல் நிறம்வே றாகித் தையலாள் கருப்பம் எய்த
வளமனை காப்போர் நோக்கி வாணனுக் குணர்த்த அன்னான்
இளவலை அரிதிற் பற்றி இருஞ்சிறைப் படுத்தான் காணாஉ
அளமரு மயிலின் தேம்பிப் பெண்கொடி அரற்றி வீழ்ந்தாள். 32

மாந்தளிர் போலும் நிறம் வேறுபட்டு உஷை கருவுற்றமையைக் காவல் செய்வோர் உணர்ந்து வாணனுக் கறிவிக்க அவன் அநிருத்தனை அரிதிற் பற்றிச்சிறையிடக் கண்டு மனஞ்சுழல்கின்ற மயிலின் மெலிந்து பெண்கொடி கொழுகொம்பிலாது புலம்பி வீழ்ந்தனள்.

கண்ணன் போருக் கெழுதல்

வீழ்ந்தயர் பொலங்கொ டிக்குத் துணையென விசும்பு நக்க
வீழ்ந்துயர் கொடியும் அந்நாள் வெய்யகால் உதைப்ப இற்று
வீழ்ந்தது வாணன் கொண்ட விழுத்தவப் பேறும் ஒக்க
வீழ்ந்தது நிகழ்ந்த செய்கை வீணைமா முனிவன் ஓர்ந்தான். 33

கீழ்வீழ்ந்து சோர்கின்ற பொற்கொடிக்குத் துணைபோல விண்ணில் உராய்ந்து திரண்டுயர்ந்த கொடியும் சூறவளி மோதமுரிந்து வீழ்ந்தது; வாணன் கொண்ட சிறந்த தவப்பயனும் உடன்வீழ்ந்தது; நாரத முனிவர் நிகழ்ந்ததை உணர்ந்தனர்.

சிலைத்தொழில் மாண்ட தன்சேய் சிறுவனைக் காணு தெங்கும்
இலைப்புரை கிளைத்து வாடுந் துவாரகைக் கிறைபால் எய்திப்
புலப்படப் புகலக் கேட்டுப் பொருபடை எழுக என்னு
உலப்புயத் துளவத் தாரான் ஒலிமுர சறைவித் தானல். 34

வில் வித்தையில் மாட்சிமைப்பட்ட மகன் மகனைக் காணுது யாண்டுந் தேடி வருந்தும் கண்ணனை அடுத்துத் தெளிய உணர்த்தக் கேட்டுத் திரண்ட கல்லொக்கும் தோளிற் றுளவ மாலையன் 'பொரற்குரிய படை எழுக' என்று போர்ப்பறை அறைவித்தனன்.

இலைப்புரை கிளைத்தல்: சிறிதும் இடம்விடாது தேடுதல்; 'இலைப் புரை தடவியே' (கலிங். 461.) 'இலைப்புரைக் கிளைத்திட்டோமே' (சீவக. 1741.) 'இலைப்புரை கிளைத்து' (தணிகை. நார. 10.)

வியவரின் உணர்ந்தார் சாற்றும் விசிமுர சோதை கேட்டுச்
செயிர்அறத் தொகுவ அங்கண் சேனையே அல்ல மாருச்
சயமுடை இமையோர் தங்கள் சிதறுநல் வினைகள் தாமும்
உயர்முர சோதை கேட்டவ் வும்பர்பால் தொகுவ மாதோ. 35

ஏவலரால் உணர்ந்து முரசறைவோர் பறையறைந்துணர்த்தக் கேட்டுக் குற்றமறத் தொகுவன இங்குப் படை; நீங்காத வெற்றியுடைய தேவர் தம்முடைய பரவிக் கிடந்த நல்வினைகளும் அவர்பால் திரள்வன.

அசுரன் வீழ்வு சுரர் வாழ்வாகலின் இங்ஙனம் கூறினர்.

கடுந்தொழில் அசுரர் தம்மால் தெறப்படுங் கால தூதர்
கெடுந்தொழில் அனையார்ப் பற்றக் கிளர்ந்துவேற் றுருவு கொண்டு
கொடுந்தொழில் முற்றக் கற்று லனையகூர்ங் கோட்டு நால்வாய்
அடுந்தொழில் தறுகண் வேழம் அளப்பில பண்ணி ஞர்கள். 36

கொலைத் தொழிலையுடைய அவுணரால் அழிக்கப்படும் யமதூதர் கெடற்குரியவரைக் கைப்பற்ற எழுச்சியுற்று வேற்றுவடிவங் கொண்டு அக்கொலைத் தொழிலை முற்றவும் கற்றுலனைய கூரிய கொம்புகளையும், தொங்குகின்ற வாயினையும், கொலையையும், வன்கண்மையையும் உடைய களிறுகள் எண்ணிலவற்றைப் போர்க் கோலம் செய்தனர்.

குவைமணி மோலி விண்ணோர் மனமெலாங் குழுமி நம்மைக்
கவலுற வருத்தி ஞரை வெலற்கிது காலம் என்னு
அவயவங் கொண்டு வெவ்வே றணைந்தென விரைசெல் காட்சி
இவறுசீர்க் கலினப் பாய்மா எண்ணில பண்ணி ஞரால். 37

மணிக்குவியலைப் பதித்த முடியுடை விண்ணோர் மனங்கள் எல்லாம் கூடித் தம்மை வருத்தினவரை வெல்லுதற்குரிய காலம் ஈதென்று மதித்து வடிவுகொண்டு வேறு வேருக வந்தால் ஒப்ப விரைந்து செல்லும் தோற்றமுடைய விரும்புஞ் சிறப்புடைய கடிவாளம் பூட்டிய குதிரைகள் எண்ணில அமைத்தனர்.

'உள்ளம்போல உற்றுழியுதவும் புள்ளியற்கலிமா' (தொல். கற்பு.) ஆகலின் தேவர்மனம் கூறப்பெற்றது.

வரைமகள் கிரீசன் ஓங்கற் குறிஞ்சிமன் மதக்கை வெற்பென்
றுரைபெறு கிழமை யோரை ஒருங்குதன் வாய்தல் வைத்த
புரையினுன் றன்மேற் சீறி வரையெலாம் புறப்பட் டாங்கு
விரைசெலற் கொடிஞ்சித் திண்தேர் பண்ணினர் கோடி மேலும்:

மலைமகள், கைலை மலைப்பிரான், குறிஞ்சி மலைத்தலைவனுகிய முருகப் பெருமான், மதமலை கைம்மலை எனப்பெறும் விநாயகப்பிரான் என்று மலையொடு தொடர்பு படுத்திப் பேசப்பெறும் உரிமையோரை ஒருசேரத் தன் வாய்தலில் நிறுவிய கிழோன்மேற் சினங்கொண்டு மலைகள் யாவும் புறப்படுவனபோல விரைந்த செலவினையுடைய தேர்களை ஆயத்தம் செய்தனர்.

தடமதில் எரியாற் கோலப் பெற்றவன் தன்னை ஏவ
விடவரம் பெறவும் வல்லும் எனத்துணிந் தனையான் ஆவி
கொடுசெலக் குறித்துப் பல்வே றுருவுகொண் டணைந்த காட்சி
வடவைநேர் சீற்றத் துப்பின் மள்ளரும் மொய்த்தார் பல்லோர். 39

நெருப்பால் மதிலமைத்த வாணன் தன்னையும் ஏவல் கொள்ள வரம் பெறவும் வல்லமை கூடும் என எண்ணி அது கூடுமுன்பே அவன் உயிரைக் கொண்டுபோகக் கருதி வடவானலம் பல்கோடி வடிவு கொண்டாற்போன்ற இயல்பினையுடைய அவ்வடவைத் தீயை ஒக்கும் சீற்றமுடைய வலி அமைந்த வீரரும் பலர் திரண்டனர்.

பண்ணுநாற் படையின் வீக்கம் பார்த்துமண் நடுங்கா வண்ணம்
வண்ணவெண் கவிகை பிச்சங் கொடிகள்மேல் மறைப்பத் தீம்பால்
வெண்ணிறப் புணரி நள்ளு மேயதன் தோற்றங் காட்டிக்
கண்ணனுந் தானை நாப்பண் கடகளி றுகைத்துச் சென்றான். 40

போர்க்கோலம் பூண்ட நால்வகைப் படைப்பெருக்கும் நோக்கி மண்ணவர் நடுங்காதபடி வெண்கொற்றக்குடை, பீலிக்குடை, கொடிகள் இவை சூழ்ந்து மறைக்க, இனிப் பாற்கடல் நடுவண் அறிதுயில் மேவிய காட்சியைப் புலப்படுத்திக் கண்ணபிரானுஞ் சேனை நடுவில் மதத்தையுடைய களிற்றினை ஊர்ந்து சென்றனர்.

கொழுநன்ஆ டமர்க்குச் செல்லக் குலமனை யகத்து வாளாக்
கெழுவுறு தகைய ஞாலக் கிழத்தியுந் திருவை குந்தப்
பழமலை இயற்கை வல்லை பார்த்தனள் மீள விண்மேல்
எழுவது கடுக்கும் சேனைச் செலவிடை எழுந்த தூளி. 41

கணவன் வெற்றிகொள் போர்க்குச் செல்லக் கற்புடைய மனைவி வீட்டின்கண் வறிதே அமைகின்ற தகைமையை ஒப்பப் பூதேவியும் திருவைகுந்தம் என்னும் பழைய மனையின் இயல்பைப் பார்த்துப் பின் மீளுதற்பொருட்டு விண்மிசை எழுவதனை ஒக்கும் படைச் செலவில் எழுந்தன துகள்.

கண்ணன் படையும் வாணன் படையும் கைகலத்தல்

இன்னணம் அளக்கர் ஏழும் எழுந்தெனப் பரந்த சேனை
துன்னலர் அணுகல் செல்லாச் சோணித புரத்தை முற்ற
அன்னது தெரிந்த வாணன் அழலெழ விழித்து நக்குத்
தன்னிகர் அடுபோர்ச் சேனைத் தலைவரை ஏவி னான். 42

இவ்வாறு எழுகடலும் கரைகடந்ததெனப் பரவிய சேனை பகைவர் நெருங்குதற்கரிய சோணிதபுரத்தை வளைந்து சூழ அதனை உணர்ந்த வாணன கண்கள் தீயெழ நோக்கி அழிக்கின்ற போரைச் செய்கின்ற சேனாதிபதிகளை ஏவினான்.

எழுந்தன படைகள் நான்கும் இயம்பின இயங்கள் எங்கும்
வழிந்தன விலாழி மண்ணும் வானமுஞ் செறியத் துன்னி
ஒழுங்கின தூளி சேய்த்திற் கண்டவர் உகுமண் மாரி
பொழிந்திடும் போலும் வாணன் புரத்தென மருட்கை கொள்ள. 43

வாணனுடைய நால்வகைப் படைகளும் எழுந்தன. எவ்விடத்தும் இயங்கள் கலித்தன. குதிரை யானைகளின் வாய்நீர் வழிந்தன. மண்ணிடமும் விண்ணிடமும் செறியத் துகள் தொடர்ந்து, தூரத்திற்கண்டோர் சிந்துகின்ற மண்மழை பொழிந்திடும்போலும் என்று திகைப்புற நிரல்பட்டன.

ஒழுங்குபடல் துகள் மழைத்தாரைபோல் கால்கொள்ளல். பயனிலைகள் முன்னின்றுணர்ச்சியூட்டுகின்றன.

தன்னுயிர்க் கணவன் மேற்செல் தானையுள் எழுங்கக் கண்கள்
பொன்னுருப் புவனி மாது புழுதியாற் புதைப்பச் சீறி
அன்னவள் மருமம் நோவ அடிபெயர்த் ததிர்த்துச் சென்று
மின்னிலைப் படைய சேனை வியனகர் வெளிக்கொண் டன்றே. 44

தன்னுயிர்க் கணவராகிய கண்ணபிரான் மேற் செல்லுகின்ற வாணன் சேனையின் கண்கள் உள்ளழுந்த அழகிய வடிவுடைப் பூமிதேவி புழுதியாற் பொதிய, அது கண்டு சினங்கொண்டு அப்பூமிதேவியின் மார்பு வருந்தும்படி அடியிட்டுப் பெயர்த்து ஆரவாரித்துச் சென்று ஒளியும் இலைவடிவும் உடைய படைகளைக்கொண்ட சேனை அகன்ற சோணித புரத்தினின்றும் வெளிக்கொண்டது.

வியல் நகர்: "வியலென் கிளவி அகலப் பொருட்டே" (தொல். சொல். உரி. 68.) வியன்நகர் எனினும் ஆம்.

விதிர்படை மின்னுக் காட்ட விலாழிநீர் தாரை காட்ட
அதிர்ஒலி உருமுக் காட்ட அந்தநாள் படலை மேகம்
எதிர்எதிர் உடன்று லென்ன இருபெருங் கருவிச் சேனை
கதிர்முலைச் சயமான் மெச்சக் கைகலந் தமரின் மூண்ட. 45

புடைபெயர் படைக்கலங்கள் மின்னொளி வீசவும், யானை குதிரைகளின் வாய்நீர் மழைத்தாரையை உணர்த்தவும், முழங்கொலி திரண்டு இடியொலியை உணர்த்தவும் பிரளயகாலத்தில் தொக்கும் பரவியும் வரு மேகங்கள் எதிர் எதிராகப் போர் செய்தாற்போல இருதிறத்துப் பெருங் கூட்டமாகிய சேனைகளும் கதிர்த்த கொங்கையினையுடைய விசயலட்சுமி பாராட்டக் கைகலந்து போரில் முயன்றன.

மூளுதல் தீப்போல முடுகுதல்.

கலிநிலைத் துறை

செங்க ளத்துடல் கிடப்பவரு திண்டி றலரை
அங்கு நின்றெதிர் கொளப்புகுநர் ஒப்ப அழல்சால்
வெங்க ளத்துறு செருத்திறமை நோக்க வியல்வான்
எங்கும் மொய்த்தனர்கள் ஈர்ந்தொடையல் மோலி இமையோர். 46

இரத்தத்தால் சிவந்த போர்க்களத்தில் உடம்பு கிடக்கத் தேவ உடம்புடன் வீரசுவர்க்கம் புகுகின்ற மிக்க வன்மையரை அவண் நின்று எதிர்கொள்ள முயல்வோரைப் போல நெருப்பொக்கும் கொடிய களத்திடை வெளிப்படுகின்ற போர் நுட்பங்களைக் காண அகன்ற வானில் எவ்விடத்தும் தேனுல் ஈரிய மாலையை அணிந்த முடியுடைய இமையாத நாட்டத்தவர் செறிந்தனர்.

கல்லி யற்பொரு களத்திருவர் அங்க மதனில்
மெல்லி யற்சய மடக்கொடி நடிப்ப மிடையும்
பல்லி யத்தொகை முழக்கென எழுப்பு படகம்
சல்லி தக்கைமுதல் எண்ணில தழங்கு வனவால். 47

திரண்ட கல்லின் தன்மைகொண்ட தோளுடைய கண்ணபிரானும், வாணன் என்னும் இருவர்தம் சேனைக்குழாத்தில் மெல்லியலாகிய விசய லட்சுமி கூத்தாட அதற்கு முழக்குதல்போலப் படகம் சல்லி, தக்கை முதலான வாச்சியங்கள் அளவில முழங்குவன.

கண்ணபிரானும் வாணன் இருவர் உலம்போலும் தோள்களில் விந்தை மகள் தாண்டவமாட எனினும் ஒக்கும்.

பொருதொ ழில்திறனில் வல்லபக வன்பு ரம்அடும்
ஒருவ னேஎனல் உணர்ந்தனர் எனச்சி வன்முடிச்
செருகு தும்பையை மிலைச்சினர் தெழித்து மிடலான்
இருதி றத்தரும் உடற்றுசமர் யாவர் மொழிவார். 48

போர்த் தொழில் வகையில் வல்ல பகவன் முப்புரங்களை நீறுக்கும் ஒருவனேயாதலை உணர்ந்தார் போலச் சிவபிரான் திருமுடியில் மிலேச்சு கின்ற தும்பை மாலையைச் சூடினராய் இருசார்பினரும் வன்மையொடும் வருந்துகின்ற போர்புரிதலை யாவரே உள்ளவாறு கூற வல்லவர்.

கரிகள் ஊருந ரொடுங்கரிகள் ஊரு நர்களும்
புரவி ஊருந ரொடும்புரவி ஊரு நர்களும்
இரதம் ஊருநர்க ளோடிரதம் ஊருநர்களும்
மரபின் மன்னரொடு மன்னரும் எதிர்ந்து பொருவார். 49

யானைப்படைஞரொடு யானைப் படைஞரும், குதிரை வீரரொடு குதிரை வீரரும் தேர் மறவரொடு தேர்மறவரும், விதிவழி அரசரோ டரசரும் எதிரிட்டுப் போர் செய்வர்.

மரபின் என்பதனை மற்றையோர் மூவர்க்கும் கூட்டுக.

தண்ட மென்பெயர் வழிக்குதவு தான வயவே
தண்டம் ஓச்சியெறி தண்டமவை ஒன்ன லர்கள்கைத்
தண்ட மோடுபுய தண்டமும் நிலத்தின் உருளத்
தண்டம் ஆற்றுவ சமர்க்கண்இனம் என்ப துளதோ. 50

தண்டம் என்னும் பெயரை வழிக்கு உதவுகின்ற மதநீரும், வலிமையும் உடைய (யானை) மலைகள் வீசியெறிந்த தண்டாயுதங்கள் பகைவர்களுடைய கையிலுள்ள தண்டாயுதங்களுடன் யானைத்துதிக்கையும் நிலத்திற் புரளும்படி தண்டனை இயற்றுவன. போர்க்களத்தில் தம் இனம் என்ற உணர்ச்சியுண்டோ?

களிற்றினைக் களிறு அழித்தமையின் 'படுகளத் தொப்பாரியோ?' என்னும் பழமொழியைக் கொள்க. தண்டம்—யானை செல்லும் வழி.

ஏறு தேர்வயவர் ஏற்றெதிர் விடுத்த திகிரி
மாறு தேரிடை நுழைந்திடுவ வானெ ழுவரைக்
கூறு கொண்டமுழை நின்றெழு குலப்ப றவைகள்
வேறு குன்றமுழை யிற்குடிபு கல்வி ழையவே. 51

தேரேறிய வீரர் எதிரேற்று விடுத்த சக்கரங்கள் பகைவர் தேரிடை நுழைந்திடுங்காட்சி வானை நோக்கி எழுகின்ற மலையின் சார்பு கொண்ட குகையினின்றெழு கூட்டமாகிய பறவைகள் பிற குன்றுகளின் குகைகளிற் குடிபுகுதலை ஒப்பன.

கலி விருத்தம்

ஆடுபரி சாரிகை தொடங்குதொ றடங்கார்
சேடுடை முடித்தலைகள் வீழ்ந்துதமர் தேரின்
ஓடுருள் தடுப்பஒரு நீயிரும் எமைப்போல்
ஈடழிய ஏகலிர் எனத்தடைசெய் தென்ன. 52

தாளகதிக்கேற்க நடையிடுகின்ற குதிரைகள் வட்டமாயோடத் தொடங்குதொறும் பகைவர் பெருமை பொருந்திய முடியுடைத்தலைகள் தம் சார்பினோர் தேரின் மருங்கில் வீழ்ந்து ஓடுகின்ற சக்கரங்களை ஒப் பற்ற நீவிரும் எம்மைப்போலழிய ஏகன்மின் எனத் தடைசெய்தாற் போலத் தடுத்தன.

வண்டுமுரல் வாவியுறை கஞ்சமனை யாளைக்
கொண்டுதன் இருக்கைசெல் சுடர்க்கொழுநன் ஒப்பத்
திண்டிறல் அடங்கலர் சிரந்திருகி ஏந்தி
அண்டவெளி யிற்சுழல்வ சுற்றிவிடும் ஆழி. 53

வண்டுகள் ஒலிக்கின்ற நீர் நிலையில் உள்ள தாமரையாகிய மனைக் கிழத்தியைத் தன் மனைக்குக்கொண்டு செல்கின்ற சூரியனாகிய கண வனைப்போல மிக்க வலியுடைய பகைவருடைய தலைகளைத் திருகிச் சுமந்து வான வெளியில் சுழல்வன சுற்றி வீசிய சக்கரங்கள்.

மீச்செல்வய வெங்கரிகள் ஒன்றன்மிசை ஒன்றங்
கோச்சுகதை மாற்றுகதை ஒள்ளிழை மடச்செவ்
வாய்ச்சியர்கோ லாட்டநிகர் வண்மையினை நோக்கி
ஏச்சறு விசும்பின் இமை யாதவர் வியப்பார். 54

ஒன்றனை ஒன்று முந்துகின்ற கொடிய களிறுகள் ஒன்றன்மே லொன்றெறிகின்ற கதாயுதங்கள் அவற்றைத் தடுக்க எறிகின்ற கதைகள் ஒள்ளிய அணிகளையும் மென்மையினையும் உடைய சிவந்த வாயையுடைய மகளிர் கோலாட்டம் ஒக்கும் வளத்தை நோக்கிப் பழிப் பற்ற விண்ணோர் அதிசயமுறுவர்.

விழித்தவெகு ளிக்கண்இடன் ஆடுதொறும் மேவார்
அழித்திமை யெனக்கருதி ஆர்ப்பர்என வெள்கி
ஒழித்துவலன் நோக்கின்அழல் சீற்றம்நனி காட்டித்
தெழித்துவிறல் சாற்றிஅமர் ஏற்பர்திதி பெற்றார். 55

பகைவரை வெகுண்டு நோக்கிய கண்களுள் இடக்கண் இமைக் குந்தோறும் பகைவர் வெகுளி நோக்கை அழித்து அச்சத்தால் இமைத் தனர் என எண்ணி ஆரவாரித்து மகிழ்வர் என்று அவுணர் சேனை நாணி வலக்கண்ணில் சினத்தீயை மிகுதியும் தோற்றுவித்து உறுமி வல்லமை பேசித் திதியின் மைந்தராகிய அசுரர் போர்மேற்கொள்வர்.

இமைப்பின் அவர்மேல் வாளிதொடார்: "இமைத்திட்ட தழல் விழிக்கு" வேலி முருகப்பிரான்" (முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழ்) 'விழித்த கண்' (திருக். 775.) இடக்கண் இமைத்தல் தீ நிமித்தத்தான் ஆயது.

வேறு

வெங்கட்கரி கடிந்திட விண்ணத்தெழும் அவுணர்
அங்கைப்பிடி எஃகத்துடன் அணைகின்றமை காணு
நங்கட்கிடர் புரிவான் இவன் நணுகுற்றனர் என்று
உங்கட்செறி விண்ணோர் இரி வுற்றார் உளம் அஞ்சி. 56

தறுகண்மையுடைய யானைகளால் எறியப்பட்டு விண்ணிலெழும் அசுரர் உள்ளங்கையிற் பற்றிய வேலுடன் அணைதலைக் கண்டு வானில் நெருங்கியுள்ள தேவர் தங்களுக்குத் துன்பம் தரும் பொருட்டு இங்கு நெருங்கினர் என்றுட்கொண்டு மனம நடுங்கி வெருண்டோடினர்.

தெவ்வட்டழல் படைவெய்யவர் விண்ணிற்செல உந்தும்
கௌவைக்கரி பிளிறிக்கடம் ஒழுகப்புவி வீழ்வ
எவ்வப்பட வலனைத்தெறும் இறைஏவலின் எழிலி
வெவ்விற்படை மாயற்கொரு துணையாய்வரல் வீழும். 57

பகைவரை அழித்துச் சீறுகின்ற படையையுடைய அசுரரால் வானிற் செல்லும்படி தூக்கி எறியப்பட்ட துன்பம் உடைய யானை பிளிறலுடன் மதநீரொழுகப் பூமியில் வீழ்தல், துன்பப்பட வலன் என்னும் அசுரனை அழித்த இந்திரன் கட்டளையால் மேகம் சார்ங்கம் என்னும் வில்லையுடைய திருமாலுக்குத் துணையாய் வருதலை ஒக்கும்.

ஒருவன்திறல் அவுணன்கத முடன்ஊக்கிய பரிமா
பெருவிண்மிசை எய்திச்சுழல் காற்பட்டுழல் பெற்றி
வருவெங்கதிர் மான்தேர்விசை யிற்றப்பிய வாசி
தெருமந்தினங் காணுதவண் உழிதந்தெனத் திகழும். 58

வலியுடைய அசுரனொருவன் கோபத்துடன் தூக்கி எறிந்த குதிரை வானில் எய்திச் சுழலுகின்ற காற்றில் அகப்பட்டுச் சுழலுந் தோற்றம், சூரியன் செல்லும் விசையினால் வழி விலகிய ஓர் குதிரை மனம் நொந்து தன்னினத்தைக் காணாது சுற்றித் தேடுதலை ஒக்கும்.

வேறு

துன்னுகுரு தித்தசை வழுக்கிவிழு சூரர்
வெந்நிடை மதக்களிறு குத்துவெண்ம ருப்பு
முன்னுற உரீஇநிமிர்வ மைந்தர்முலை பெற்ற
தென்னென அரம்பையர் மருட்கையின் இசைப்பார். 59

தரையிடைத்துன்னிய இரத்தம், தசை இவற்றால் வழுக்கி விழுகின்ற வீரர் முதுகில் மதக்களிறு குத்திய வெண்கோடு உருவி வெளிப்பட்டு மார்பில் நிமிர்ந்து தோன்றக் கண்ட தேவமகளிர் ஆடவர் கொங்கை பெற்றதென்னே என வியப்பொடும் பேசுவர்.

அட்டழல் கழல்மறவர் ஆகமிசை எஃகம்
பட்டபுழை நின்றிழிவ பாய்குருதி வெள்ளம்
ஒட்டலரை யான்உயிர் குடிப்பல்என ஒல்லை
உட்டிகழ் மறக்கனல் வெளிப்படுவ தொக்கும். 60

நெருப்பில் காய்ச்சி இயன்ற கழலிணை வீக்கிய வீரர் மார்பிடை வேல் துளைத்த துளைவழியினின்றும் செந்நீர்ப் பெருக்கு இழிதல், யான் பகைவர் உயிரைப் பருகுவல் என விரைவில் உள்ளே திகழ்கின்ற வீர மாகிய தீ வெளிப்படுவதனை ஒக்கும்.

கடுங்களிறு கைக்கதை சுழற்றிஎறி கால்தேர்க்
கொடிஞ்சியின் நிரைத்தகுரு மாமணிகள் உக்க
அடும்படை வலத்தினர் தெழித்தெழும் அதிர்ப்பின்
நெடுங்ககன மீன்நிரை நிலத்துகுவ மானும் 61

போர்க்களிறு கதாயுதத்தைச் சுழற்றி எறிந்தபோது தேர்க் கொடிஞ்சியிற் பதிப்படப் பதித்த நன்னிறமுடைய பெருமை பொருந்திய மணிகள் உதிர்தல் வீரர் உரப்பிவரும் அதிர்ச்சியினால் நீண்ட வானின் நட்சத்திரத் தொகைகள் நிலத்தில் வீழ்வனவற்றை ஒக்கும்.

நீள்கொடி மிசைத்துகில் அனைத்தினும் நெடுங்கோல்
வாளிகள் பொதிந்தவை சிதர்ந்துவியல் வானின்
மீளிகள் அதிர்ப்பின்உயர் விண்மிசைய தாருத்
தாளதிர உக்கதழை போன்றன பறப்ப. 62

நீண்ட கொடிகளிற் றுணிகள் எவற்றினும் நீண்டு திரண்ட அம்புகள் செறிதலால் கிழிந்தவையுதிர்ந்து அகன்ற வானிலுள்ள மேக முழக்கினைப் போல வீரர்கள் அதட்டொலியால் உயர் விண்ணிலுள்ள ஐந்தருக்களின் அடி அதிர்தலால் உதிர்ந்த தழைபோலப் பறப்பன.

கைப்படை இழந்தவர் எதிர்ந்தவர் கடாவும்
மெய்ப்படு பெரும்படை பறித்தெதிர் விடுப்பார்
எப்பொருளும் அற்றுழியும் ஏதிலர்கள் நல்கும்
அப்பொருள் கொளேங்களெனும் மானமுடை யார்போல்.

கையிலுள்ள படைகளைப் பகைவர்மேல் வீசி உடம்பில் கோப்புண்டு கிடந்த படையைப் பறித்துப் பகைவர்மேல், கைப்பொருள் முற்றும் இழந்து வறியராகியபோதும் மானமுடையார் அயலவர் அன்பொடு கொடுக்கும் பொருளையும் திருப்பி விடுதல் போல விடுப்பார்.

நூழிலாட்டு: 'கைவேல் களிற்றொடு போக்கி வருபவன், மெய் வேல் பறியா நகும்.'

வீடினர் வயப்பொருநர் வீடின இபங்கள்
மூடின நிலங்குருதி மூடின பிணங்கள்
கூடின கருங்கொடிகள் கூடின பருந்தும்
ஆடின மகிழ்ந்தலகை ஆடின கவந்தம். 64

இறந்தனர் வலியுடைய வீரர்; இறந்தன யானைகள்; செந்நீர் நிலத்தை மறைத்தன; பிணங்களும் மறைத்தன; காக்கைகளும், பருந்துகளும் கூடின; பேய்கள் உவகைக் கூத்தாடின. உடற்குறைகள் ஆடின.

எங்கணும் நிணங்குடர் இறைச்சிகொழு மூளை
எங்கணும் முரிந்தசிலை வாள்பலகை எஃகம்
எங்கணும் இறுத்தகிடு கச்சுருள் கொடிஞ்சி
எங்கணும் முடித்தலை நிமிர்ந்தன இடங்கள். 65

யாண்டும் நிணமும், குடரும், இறைச்சியும், கொழுவும், மூளையும், முரிந்தனவாகிய வில்லும், வாளும், கேடகமும், வேலும், ஒடிந்த தேர் மரச்சுற்றும், கொடிஞ்சியும், அற்ற முடியுடைத் தலைகளும் ஆக நிவந்தன.

பிணங்களொ டயர்ந்துவிழு பெற்றியரும் வீழ்தோட்
கணங்களொடு தண்டமும் விசித்தகடி வள்வார்க்
குணங்களொடு புல்லிய கொழுங்குடரும் அங்கேழ்
நிணங்களொடு பன்மணியும் நீத்தறிய லாகா. 66

பிணங்களையும், மூர்ச்சையுற்று வீழ்ந்தவர்களையும், வீழ்ந்த தோட் குழாங்களையும், தண்டாயுதங்களையும், வீக்கிய அச்சத்தைச் செய்யும் கிழித்த வார்நாணிகளையும், பொதிந்த குடர்களையும், நிறமுடைய நிணங்களையும் பல மணிகளையும் பிரித்தறியக் கூடா ஆயின.

மண்ணிடம் மெலிந்தது பிணக்குவையின் வாளோன்
நண்ணிடம் மெலிந்ததுடல் விட்டுறுநர் போழ்ந்து
விண்ணிடம் மெலிந்ததவர் துன்னிமிடை வோரை
எண்ணிட மெலிந்தனர் விசும்பின்இமை யாதார். 67

பிணக்குவியலாற் பொருது மண்ணிட மெலிவுற்றது; போரில் உயிர்விட்டு வீரசுவர்க்கம் புகுவோர் சூரியனை ஊடுருவிச் செல்லுதலின் அதன் நடுவிடம் மெலிந்தது. அக்குழுவினர் நெருங்கி விண்ணிடம் மெலிந்தது. அங்ஙனம் நெருங்குவோரை எண்ணுதலாற் றேவர் குழைந்தனர்.

போரில் இறந்தோர் சூரியன் வழியாகச் சுவர்க்கம் புகல்: ''கதிருடல் வழிபோய்க் கல்லுழை நின்றோர்'' (கல்லாடம்)

நள்ளிடம்–நடுவிடம்; நண்ணிடம் என மரீஇயிற்று. 'நள்ளனல்' நண்ணனல் (சிவஞா. சூ. அதி. 2-4) எனவும், 'நீளுல கெலாம்' நீணுலகெலாம் (திருநா. கோயிற்குறுந்தொகை) எனவும் வந்தமை காண்க.

மிடைந்துசமர் இன்னணம் விளைத்துழி இசைத்தேன்
குடைந்ததொடை வல்லவுண வீரர்வலி குன்றி
உடைந்தனர் நடுங்கினர் ஒடுங்கினர் சிதர்ந்தார்
இடைந்தனர் பெயர்ந்தனர் இரிந்தனர்கள் எங்கும். 68

இவ்வாறு நெருங்கிப் போர் புரிகையில் பண் பாடுகின்ற வண்டுகள் உழக்குகின்ற மாலையைச் சூடிய வலிய அசுர வீரர் வலி குறைந்து மனம் தளர்ந்தனர்; அஞ்சினர்; ஊக்கம் குறைந்தனர்; சிதறுண்டனர்; பின் வாங்கினர்; இடம் விட்டகன்றனர்; நாற்றிசையிலும் ஓடினர்.

கொச்சகக் கலிப்பா

கள்ளவிழும் மலர்வாவித் துவரைக்கோன் கடற்சேனை
மள்ளர்படைக் கல்லெறியான் வல்லாண்மைக் குடம்உடைய
உள்ளிருந்த ஞெண்டுகளின் தனித்தனியே இரிந்தோடி
நள்ளலான் பெருஞ்சேனை நகர்நோக்கி நடந்தனவால். 69

தேனொடும் விரிகின்ற மலர்களையுடைய நீர் நிலைகளைக் கொண்ட துவாரகா புரிக்குத் தலைவராகிய கண்ணபிரானுடைய கடல் போலும் சேனை வீரர் தம் படைக்கலங்களாகிய கல்லாலெறிதலால் தாக்குண்டு வலிய ஆண்மையாகிய குடம் உடைந்து உள்ளிருந்த நண்டுகளைப் போலப் பல திசைகளிலும் பகைவனாகிய அசுரனுடைய பெருஞ்சேனை உடைந்தோடி நகரத்தை நோக்கி நடந்தன.

கண்ணன் கணபதி முதலியோரை வழிபடல்

போர்தாங்கும் மறவீரர் பின்முடுக்கிப் போதரலும்
தார்தாங்கி முதல்வாய்தற் கடைமன்னு தவளமதிக்
கூர்தாங்கும் ஒருகோட்டுக் குஞ்சரப்புத் தேள்காணூஉச்
சூர்தாங்கி வருபடையைத் தொலைத்துழக்கிச் சவட்டினன். 70

போரை மேற்கொள்ளும் அஞ்சாமையையுடைய வீரர் பின்னே துரத்திப் போதலும் மாலையைச் சூடி முதல் வாயிலில் எழுந்தருளியிருக்கும் வெள்ளிய மதியை ஒக்கும் கூரிய ஒற்றைக் கொம்பினையுடைய யானை முகப் பிரான் கண்டு அவுணன் சேனையை அச்சுறுத்தி வரும் படைஞரைக் குழப்பிக் கெடுத் தழித்தனர்.

கண்ணனும்மற் றினிஎன்னே செயல்என்று கடுகச்சென்
றுண்ணமைந்த பாலடிசில் கனிவருக்கம் உறுசுவைய
பண்ணியங்கள் எனைப்பலவும் அமுதுசெயப் படைத்திறைஞ்ச
அண்ணல்வயப் பகட்டேந்தல் அத்தொழிலின் மகிழ்ந்திருந்தான்.

கண்ணபிரானும் இனிச் செய்யத் தக்கது என்னே! என்றிரங்கி விரையப்போய் நிவேதனத்திற்குரிய பாலுணவும், பழ வகைகளும், மிகு சுவையுடைய மோதகங்களும், ஏனைய பலவும் அமுது கொள்ள நிவேதித்து வணங்கத் தலைமையும் வலிமையும் உடைய யானைமுகப் பிரான் அச்செயலில் ஈடுபாடுடையராயினர்.

இதுகண்டு மற்றிரண்டாங் கடைவைகும் இளந்தோன்றல்
எதுமைந்தன் வருகென்று சிலைவாங்கி ஏற்றெழலும்
மதுவொன்று மலர்த்துளவோன் பூசனையான் மகிழ்விப்ப
அதுகண்டு மகிழ்ந்திருந்தான் ஆறுமுகப் பண்ணவனும். 72

இதனையறிந்து இரண்டாம் வாயிலில் வீற்றிருக்கும் இளங்குமரப் பெருமான் 'யதுமரபினனே! வருக' என்று கூறி வில்லை வளைத்துப் போரேற்றெழலும் தேன் பொருந்திய துழாய் மாலையோன் பூசனைபுரிந்து போற்ற அதனை ஏற்று ஆறுமுகப் பிரானும் மகிழ்ந்திருந்தனர்.

இருவர்களும் விடையளிப்ப எழில்மூன்ருங் கடைநண்ணி
மருமலர்த்தார்க் கருங்கூந்தல் மலைமகளைக் கண்டிறைஞ்சித்
திருவருள்பெற் றினிதேகத் திகழ்நாலாங் கடைமேவும்
உருகெழுவெஞ் சினவெள்ளே றுயர்த்தபிரான் கண்டனுல். 73

விநாயக சுப்பிரமணியப் பெருமானுர் விடை கொடுப்ப அழகிய மூன்ரும் வாயிலை நண்ணி மணங்கமழும் மலர் மாலையைச் சூடிய கரிய கூந்தலுடைய உமையம்மையாரைக் கண்டு தாழ்ந்து திருவருளைப்பெற்று மேற்செல்ல நாலாம் வாயிலில் மேவும் அச்சஞ் செய்யும் கொடுஞ்சின முடைய வெள்விடையைக் கொடியில் உயர்த்திய சிவபிரானுர் நோக்கினர்.

முந்தைநாள் மைநாக முதுநாகத் தருந்தவஞ்செய்
இந்தநா ரணைற்கெம்மான் யானேவந் துடன்ருலும்
மைந்துமிகு ஞாட்பின்கண் வாகைநீ பெறுகென்னத்
தந்தவரம் பொய்யாமை பாதுகாத் தற்பொருட்டு. 74

முற்காலத்தில் மைநாகமென்னும் பெரிய மலையில் அரிய தவத்தைச் செய்த இத்திருமாலுக்கு எமது பெருமான் 'யானே எதிர்த்துப் பொருதாலும் வலிமை மிகுந்த போரில் வெற்றிமாலையை நீ எய்துக!' என்று அருளிய வரம் மெய்யாய்ப் பயன் விளைதற் பொருட்டு,

பிணுகநெடுஞ் சிலையேந்தி எதிர்நிற்பப் பெருந்திருமால்
அணுதியாய் அனந்தமாய் ஆனந்த மாய்ஒளியாய்
மணுதிகளுக் கெட்டாத வான்கருணைப் பரம்பொருளைத்
தணுதுவிழி களிகூரக் கண்டெய்தித் தாழ்ந்தெழுந்தான். 75

பிணுகம் என்னும் நெடிய வில்லை ஏந்தி முன்னர் நிற்றலும் பெருமை யுடைய திருமாலாகிய கண்ணபிரானுர் தோற்றமின்மையின் அநாதியாய், அழிவின்மையின் அனந்தமாய், நிறைந்த இன்பனுய், ஒளியாய் அமைந்த மன முதலிய கரணங்களைக் கடந்த பெருங்கருணைப் பரம்பொருளைத் தன்னுடைய கண்கள் களிகூரக்கண்டு கண்டு நெருங்கித் தாழ்ந்தெழுந்தனர்.

நாத்தழும்பப் புகழ்பாடி நளினமலர்க் கைகூப்பிச்
சோத்தெந்தாய் எனச்சொல்லி இமையவர்க்கே அருள்சுரந்து
காத்தருளுங் கடன்உடையாய் கண்ணேடா அவுணர்குலத்
தீத்தொழிலான் றனைவெல்லத் திருவருள்செய் எனக்கென்ருன். 76

நாவானது தழும்பேறும்படி பொருள்சேர் புகழைப் பாடித் தாமரை மலர் போலும் கைகளைக் குவித்துச் 'சோத்தம் எந்தையே!'

எனக்கூறி 'இமையவரையே அருள் கூர்ந்து காத்தருளுங் கடப்பாட்டினை உடையோனே! இரக்கம் இல்லாத அவுணர் குலக் கொடுந்தொழிலோன் தன்னை வெல்ல எனக்குத் திருவருளைச் செய்' என்றனர்.

சோத்தம்—இழிந்தோர் செய்யும் அஞ்சலி; (சத்ததானப்படலம் முதற் செய்யுளிலும் காண்க.)

என்றிரந்து நனிவேண்டும் நெடியோனை எதிர்நோக்கிக்
குன்றநெடுஞ் சிலைவல்லான் குறுமூரல் காட்டிஎமை
வென்றன்றே வாணனைநீ விறல்கொள்வ தெம்மோடு
மன்றபோர்க் கெழுகென்ன மணிவண்ணன் உளம்நடுங்கி. 77

குறை கூறிப் பெரிதும் வேண்டும் கிருட்டின மூர்த்தியை நோக்கி மேரு மலையை வில்லாகக் கொண்டவர் புன்முறுவல் பூத்'தெம்மை வென்றன்றோ வாணனை நீ வெல்வது? ஆகலின், எம்முடன் ஐயமின்றிப் போர்க்கு எழுக' என்றருளலும், நீலமணியை ஒக்கும் நிறத்தினன் உள்ளம் நடுங்கி,

என்னருளிச் செய்தவா றெவ்வுயிர்க்கும் எளியேற்கும்
மன்னவன்நீ நாயனொடு மாறிழைப்ப தெனக்கழகோ
உன்னடிக்கீழ் மெய்த்தொண்டு பூண்டுரிமைப் பணிசெய்வேன்
றன்னிடத்தில் இவ்வாறோ சாமீநின் திருவருளே. 78

'அருளிச் செய்தவாறு என்னே! எல்லாவுயிர்களுக்கும், ஒன்றுக்கும் பற்றாத ஏழையேனுக்கும் தலைவன் நீ. தலைவனோடு பகைத்துப் போர் புரிவது அடிமையாகிய எனக்கழகிதோ. உன் திருவடிக்குரிய மெய்ப்பணி பூண்டு அதற்குரிய ஏவலைச் செய்வேன்பால் தலைவனே! நின் திருவருள் இவ்வாறோ வாய்ப்பது.

எந்தையடி யருச்சனையால் எதிர்ந்தாரைப் புறங்காண
மைந்துபெறும் யான்நின்னோ டமரேற்க வல்லுவலோ
பந்தமுறும் உலகனைத்தும் தொழிற்படுத்தும் நின்எதிர்நின்
றுய்ந்தவரும் உளரேயோ உபநிடதத் தனிமுதலே. 79

'எந்தையே நின் திருவடி வழிபாட்டினால் போரில் எதிர்த்தவரை முதுகு காட்டி ஓடச் செய்யும் வலிமை பெறும் யான் நின்னுடன் போர் செய்ய வல்லவனல்லேன். உபநிடதத் தனி முதல்வனே! பாசப்பிணிப்புறும் உலகங்கள் அனைத்தையும் இயக்கும் நின்னுடன் பகைத்து நின்று பிழைத்தவரும் உளரோ?'

'என்னிடத்தும் பிறரிடத்தும் உள்ள ஆற்றல்கள் முற்றவும் உன்னுடைமை. வழிபாட்டு வன்மையால் பிறரை வெல்லும் ஆற்றலைச்சிறிது கூடுதலாகப் பெற்றுளேன் எல்லாம் வல்ல நின்பால் ஏகதேசத்திற் பெற்றது கொண்டு போர்செய்ய வல்லேனோ? மலப்பிணிப்பிற் கட்டுண்டமை இயல்பாகவே பாசங்களின் நீங்கிய நின் அருள் வேறு நின்றியக்கியும் உடன் நின்றியங்கியும் உபகரிக்கும் ஈதொழிய எமக்குப் புடை

பெயர்ச்சியும் சுதந்திரமாக இல்லையே? எனும் கருத்தமையக் கிருட்டின மூர்த்தி கூறினர். வேத முதல்வன் சிவபிரான் என உபநிடதங்களான் அறிந்து அதனைச் சிறப்புடைய சைவ உபநிடதங்களால் தனி முதல்வன் என அறிதல் அமையும்.

எண்ணிகந்த அண்டமுழு தொருநொடியில் எரிக்குதவும்
கண்ணமைந்த நுதலாய்க்குத் கடையேன்ஓர் இலக்கன்றே
வண்ணமெலாம் யாங்காண நீநகைத்த மாத்திரையே
அண்ணல்ஆர் புரமூன்றும் கூட்டோடே அழிந்தனவால். 80

அளவில்லாத அண்டங்களை முற்றவும் ஓரிமைப் பொழுதில் எரிக்கு விருந்தூட்டும் நுதற் கண்ணுடைய நினக்குக் கீழ்மையேன் திருவுள்ளத்துள் எண்ணத்தக்க பொருளன்றே. நிகழ்ச்சிகள் யாவும் யாங்கள் கண்கூடாகக் காண நீ முறுவலித்த அளவே பெருமை மிக்க முப்புரங்களும் உள்ளிருந்த குழாத்தொடும் அழிந்தன.

கூட்டம் கூட்டு என அம்முக்கெட்டு நின்றது; "(பெற்றம்) பெற்றேன் றுயர்த்த பெருமான்" (திருஞா. திருப்பாசுரம்.)

துரும்பொன்றிற் புத்தேளிர் தருக்கெல்லாந் தொலைவித்தாய்
கரும்பொன்று சிலையானை நுதல்விழியாற் கனற்றினாய்
சுரும்பொன்று மலர்ப்பாதப் பெருவிரலாற் சுடர்இலங்கை
இரும்பொன்று மனத்தானை இடர்உழப்பக் கண்டனையால். 81

'நாட்டிய துரும்பொன்றில் வைத்துக் கடவுளர் இறுமாப்பை எல்லாம் கெடுத்தனை. கரும்பு வில்லுடைய காமனை நுதற்கண்ணால் நீறுக்கினை. வண்டுகள் மொய்க்கின்ற மலரடி விரலொன்றால் விளங்கும் இலங்கைக்கிறையாகிய இரும்பை யொக்கும் மனத்தையுடைய இராவணனைத் துன்புறச் செய்தனை.'

நோனாத கூற்றுவனை நோள்தாளால் உயிர்உண்டாய்
தேனாடு மலரானை நகநுதியாற் சிரங்கொய்தாய்
மீனாமை பன்றிநர வெறிமடங்கல் உலகளந்தான்
றானும்என் பிறவிகளுந் தண்டிக்கப் பட்டனவே. 82

'பொறாத இயமனை வலிய திருவடியால் உயிரைக் கொண்டாய். வண்டுகள் விரும்புகின்ற மலருறைவோனை நகத்தின் நுனியினால் சிரத்தைக் கொய்தனை. வெறி ஏறிய மச்ச கூர்ம வராக நரசிம்ம திரிவிக்கிரமாவதாரங்களாகிய யான் கொண்ட இவ்வடிவங்கள் தண்டிக்கப்பட்டன.'

தக்கன்றன் வேள்வியைநீ தரவந்த தனிவீரன்
புக்கன்றி யழித்தநாள் என்னோடும் புத்தேளிர்
நொக்கன்று பட்டபா டெடுத்தியம்பிற் சொல்லளவின்
மிக்கன்றால் உனக்கிவையும் விளையாடற் செய்கையே. 83

தக்கன் இயற்றிய யாகத்தை நும்மால் தோற்றுவிக்கப்பட்ட ஒப்பற்ற வீரபத்திரர் புகுந்து அழித்த நாளில் யானும் ஏனைய தேவர் களும் தண்டிக்கப்பட்டு பட்டபாட்டினை எடுத்தியம்பப் புகின் அடங்காது மிகும். உமக்கு இந்நிகழ்ச்சிகள் திருவிளையாடற் செய்கைகளேயாகும்.

அற்றமுற வெகுண்டுவரும் அடற்கங்கை வீறடக்கும்
கற்றைநெடுஞ் சடையாய்மற் றெனைமுனியக் கருதினையேல்
சற்றுநீ முகம்நிமிர்த்து நோக்கின்அது சாலாதோ
வெற்றிமலர்த் திருக்கரத்துப் படைக்கலமும் வேண்டுமோ. 84

'உலகிற்குக் கேடுண்டாகச் சினந்து வரும் வலிய கங்கையின் இறுமாப்பினை அடக்கிய தொகுதியை யுடைய நீண்ட சடையுடையோய்! என்னை வெகுண்டழிக்கத் திருவுளம்பற்றினால் சிறிது நீ திருமுகத்தை நிமிர்த்து நோக்கினால் அதுவே போதுமே. வெற்றி வாய்ந்த மலர் போலும் திருக்கரத்துப் படைக்கலமும் தாங்குதல் வேண்டுமோ?

கங்கையின் செருக்கடக்கிப் பிறையை வாழ்வித்தபெருமான் என்க.

வடிவாளி விடையேறு மனைவியென நினக்குறுப்பாம்
அடியேனை எதிர்ப்பதுநின் அருட்பெருமைக் கொல்லுவதோ
குடியோடும் எனையடிமை கொண்டாய்இன் றெனக்கிரங்காய்
கடியாழி விடம்அயின்ற கண்டாநின் அடிபோற்றி. 85

கூரிய அம்பாகவும், விடையாகவும், மனைவியாகவும் தேவரீருக்கு அங்கமாம் அடியேனை எதிர்த்துப் பொருவது நும் அருட்பெருக்கிற்கு இயைவதோ? வழி வழி யெல்லாம் என்னை அடிமை கொண்டவனே! இப்பொழுதெனக் கிரங்கி அருள் செய்யாய். பாற்கடலிற் றோற்றிய கடிய வேண்டிய விடத்தை உண்டு உயிர்களைக் காத்த திருநீலகண்டனே! நும் அருள் எம்மைக் காக்க.

அங்கத்தை அங்கி அழிப்பதோ என்றனர். "இடபமதாய்த் தாங்கினான் திருமால்காண் சாழலோ" எனவும், "அரியலால் தேவி யில்லை" எனவும் வருவன காண்க.

கண்ணனும் கடவுளும் கைகலத்தல்

என்றென்று பலமுறையும் இரந்திரந்து தொழுதிறைஞ்சும்
குன்றெடுத்த குடையானுக் கெங்கோமான் இதுகூறும்
மன்றநீ வெருவலைநின் மனக்கவலை ஒழிகண்டாய்
அன்றுனக்கு மைநாகத் தளித்தவரம் மறந்தனையோ. 86

பலப்பல எடுத்தோதிப் பற்பல்கால் குறையிரந்து தொழுது தாழும் கோவர்த்தன மலையைக் குடையாகக் கொண்ட கண்ணபிரானுக்கு எமது பெருமான் இதனைக் கூறுவர். நிச்சயமாக நீ அஞ்சாதே நின்மனக் கவலையை விடு. அந்நாள் உனக்கு மைநாகமலையில் வழங்கிய வரத்தை மறந்தனையோ.'

நின்வரவு வாணனுக்கு முன்னரே நிகழ்த்தினம்யாம்
அன்னவனை இனிநீவென் றடல்வாகை புனைகிற்பாய்
மின்னிமைக்கும் மணிமார்ப விசையனொடு புரிவெம்போர்
முன்னெமக்கு முருகவேள் விளையாட்டிற் சிறந்ததால். 87

'நின் முற்றுகையை வாணனுக்கு முன்னரே யாம் கூறினோம். அவனை இப்பொழுது நீ வென்று வெற்றி மாலையைப் புனைவாய். ஒளி விடும் கௌத்துவ மணியை அணிந்த மார்பினனே! அருச்சுனனொடு முன் புரிந்த கொடிய போர் எமக்கு முருகனோடும் விளையாடும் விளையாட்டினும் மிக்க விருப்பினது.' மின்—இலக்குமி எனினும் ஆம்.

அம்முறையே கணப்பொழுது நின்னோடும் அமர்புரிகேம்
இம்முறைகண் டுலகும்பர் மகிழ்வுறுக இதுவன்றித்
தெம்மரபிற் செய்கில்லேம் அஞ்சாதி எனத்தேற்றிக்
கைம்முகத்திற் பிடித்திருந்த கார்முகத்தை வணக்கினன். 88

'அருச்சுனனொடு போர்புரிந் தாங்கு நொடிப்பொழுது நின்னுடன் போர் புரிவேம். இவ்விளையாட்டுப் போரினைக் கண்டு மண்ணோரும் விண்ணோரும் மகிழ்வுறுக. பகைத்தெழும் போராகக் கொள்ளேம். அஞ்சாதி' எனத் தெளிவித்துத் திருக்கரத்தில் தாங்கியிருந்த வில்லை வளைத்தனர்.

உய்ந்தேன்எம் பெருமானே அருளாய்என் றுரைத்துரைத்து
மந்தார மணங்கமழும் மலரடிகள் தொழுதிசைந்து
பைந்தாம நறுந்துளவப் பண்ணவனும் பகைமுருக்குஞ்
சிந்தாத விறற்சார்ங்கச் சிலைவாங்கி நாணெறிந்தான். 89

பசிய துளவ மாலையோனும் 'எமது பெருமானே! வாழ்ந்தேன் அருள் செய்யாய்' என்று பலமுறை கூறி மந்தார மலர் மணங்கமழும் திருவடிகளைத் தொழுதிசைந்து பகைவரை அழிக்கின்ற கெடாத வெற்றியைத் தரும் சார்ங்கம்' என்னும் வில்லை வளைத்து நாணெறிந்தான்.

கலிநிலைத் துறை

பவள வெற்பொடு நீலவெற் பெதிர்ந்தெனப் பருஉக்கைக்
கவள மாக்களி றட்டவர் இருவருங் கடுகித்
துவள வார்சிலை வாங்கினர் நாணெறி சும்மை
திவள வுற்றமூ வுலகமுஞ் செவிடுறப் பொதிந்த. 90

பவள மலையொடு நீலமலை பொருதல் போலப் பரிய துதிக்கையை யுடைய கவளங் கொள் மலைபோலும் களிற்றினை அழித்தவர் இருவரும், விரைந்து நீண்ட வில் குழைய வளைத்து நாணெறிதலால் எழுந்த முழக்கம் மெலிவுற்ற மூவுலகையும் செவிடுபடப் போர்த்தன.

கயாசுரனைச் சிவபெருமானும், குவலயா பீடத்தைக் கிருட்டின மூர்த்தியும் அழித்தவராகலின் இருவருங் களிறட்டவர் என்றனர். மலையை ஒப்பவர் மலை போலும் யானையை அழித்தவர் எனப் போருக்கொரு புடை ஒப்புமை கூறினர்.

மண்டும் ஓதையின் மற்றவர் சினக்கனல் புறநீர்
கொண்ட விப்பவான் வழிதிறந் தாலெனக் குலையா
அண்டம் விண்டது புடவியும் விண்டதப் பெருநீர்
உண்டல் வேட்கையின் உணங்கிவாய் பிளந்தமை ஒப்ப. 91

செறியும் பேரொலியால் அவர்தம் வெகுளித் தீயைப் பெரும்புறக் கடல்நீரைக் கொண்டழிக்க வான் வழியைத் திறந்தாற் போல நிலை குலைந்து அண்டம் பிளந்தது; அப்பெரு நீரைப் பருகும் விருப்பினால் வாய்புலர்ந்து வெடித்தமை ஒப்பப் புவியும் பிளந்தது.

சிலையின் நாணொலிக் கிளர்ச்சியால் திண்புவி அதிர்வுற்
றலையும் ஊதையின் ஆழிமா னுடம்மரம் பறவை
பலவும் தத்தமுள் மோதுபு தெளிதரப் பயிற்றும்
தலைவர் எப்படி அப்படி உலகெனுந் தகுதி. 92

விற்களின் நாணொலி எழுச்சியால் திண்ணிய பூமி ஆட்டங்கொண்டு அலையும் காற்றினால் கடலும், மக்களும், மரங்களும், பறவைகளும், வேறுள்ள பலவும் தம்முள் தம்முள் தாக்குண்டு தலைவர் எப்படி அப்படி உலகெனுந் தன்மையை ஐயமில்லையாகத் தெளிதரக் காட்டும்.

'அரசன் எவ்வழி அவ்வழிக் குடிகள்' விசுவனும் விசுவ நாதனும் போர்புரிதலின் உலகமும் மோதுவதாக உரைத்தனர்.

மூள்சி னத்துடன் அடுத்துழி முதல்வன்என் றறிந்து
மீள் நோக்கியாங் கெம்பிரான் சரணமுன் வீழ
நீள்பெ ருந்தடங் குனிவரிச் சிலையிடை நெடியோன்
வாளி ஒன்றுதொட் டேயினன் அருச்சனை மாண்பின். 93

கண்ணபிரான் முதிர்கின்ற சினத்தீயுடன் அடுத்த வழியும் மறித் துணர்வு தோன்றி முதல்வனென மதித்து அவ்விடத்து நீண்ட மிகப் பெரிய வில்லை வளைத்து நாணேற்றி ஓரம்பினை அப்பிரான் திருவடிகளின் முன்னர் வீழும்படி அருச்சனை செய் முறையின் ஏவினன்.

அருச்சுனன் துரோணரை அருச்சித்தமை பாரதத்துக் காண்க.

சத்தி சத்திமான் ஆகிய இருதிறத் தவருந்
தொத்த முற்கணை தூண்டினர் மூண்டது பெரும்போர்
பைத்த மாநிலம் அயிர்த்தது பனிவிசும் பிறுத்தார்
சித்தர் சாரணர் இமையவர் இயக்கர்கந் திருவர். 94

சத்தியும் சத்திமானும் ஆகிய இருவரும் கொத்தாகிய தீயை உமிழும் அம்புகளைச் செலுத்தினர் பெரிய போர் முதிர்ந்தது. பசிய மாநிலத் தவரும் ஐயமுற்றனர்; குளிர்ந்த விண்ணிலுள்ளவராகிய சித்தர், சாரண இமையவர், இயக்கர், கந்திருவர் ஆகியோரும் ஐய முற்றனர்.

திருமால் சிவபிரானுக்குச் சத்தியாதல், மனைவியென நினக்குறுப் பாம்' என 85-ஆம் செய்யுளிற் காண்க.

புட்டில் வீக்கிய கரத்திடைப் பொருசிலை குழையத்
தொட்ட வாளிகள் இறுதிநாள் முகிலெனச் சொரிவார்
அட்ட திக்கையும் அடைப்பர்கள் கணத்தவை மாற்றி
முட்ட வெங்கணை மீளவும் முடுக்குவர் தொலைப்பார். 95

உறை இட்ட கரத்தில் வில் வளையத் தொடுத்த அம்பு மழையைப் பிரளய காலமேகம்போலப் பொழிவார். எண்டிசை வெளியையும் அடைப்பர்கள். நொடிப்பொழுதில் அவற்றை அழித்து மீளவும் தடைப்படக் கொடுங்கணையை முடுக்குவர்; பின்பு தொலைப்பர்.

கடவுள் வான்படை எண்ணில வழங்குவர் கடுநோய்
படரும் வெப்பொடு குளிர்ப்பிணி படைத்தெதிர் விடுப்பார்
உடலும் மற்றவை ஒன்றின்ஒன் றழிவுறக் காண்பார்
அடைவின் இன்னணம் விளைத்தனர் அற்புதப் பூசல். 96

தெய்வப் பெரும் படைகள் அளவில்லன எறிவர்; கொடிய நோய்கள் தொடரும் வெப்பம், குளிர் எனப்பெறும் பிணிகளைச் சிருட்டித்து எதிர் விடுப்பார். மாறுபடுகின்ற அவைகளை ஒன்றால் ஒன்றை அழிவுறக்காண்பர்; முறையாக இவ்வாறு அதிசயமான போரை விளைத்தனர்.

மூவ ருந்தொழும் முதல்வனே முனைந்தனன் இனிஎன்
ஆவ தோஎன முனிவரர் அஞ்சினர் அகில
தேவர் அஞ்சினர் பூதங்கள் அஞ்சின தேவர்
கோவும் அஞ்சினன் திருவுளக் குறிப்பினை உணரார். 97

'மும்மூர்த்திகளுந் தொழும் முதல்வனே போரைத் தொடங்கினமையின் இனி என் விளைவதோ' என முனிவர்கள் வெருவினர்; தேவர் யாவரும் அஞ்சினர்; பூதக்குழாங்கள் அஞ்சின; இந்திரனும் பயந்தனன். இறைவனார் திருவுள்ளக் கருத்தை அறியாராகலின் யாவரும் பயந்தனர்.

முதல்வனே வாணன் சார்பில் நிற்றலின் அசுரன் விளைக்கும் துன்பங்கள் தமக்கு நீங்கா எனத் திருவுளக் குறிப்புணராராய் அஞ்சினர்.

இளிவில் வெஞ்சமர் இன்னணம் நெடும்பொழு தாற்றும்
அளவின் மற்றினி ஆற்றிலேன் அடியனேன் என்று
முளரி நோக்கினன் வணங்கலும் முறுவல்செய் தடியார்க்
கெளியன் என்பது விளக்கினன் என்னைஆ ளுடையான். 98

இகழ்ச்சியில்லாத கடும்போரை இவ்வாறு நெடுங்காலம் புரியும் எல்லையில் 'அடியேன் இனிச்செய்யும வலியில்லேன்' என்று பதுமாக்கன் வணங்கலும் புன் முறுவல் பூத்து அடியவர்க்கெளியன் என்பது புலப்பட (சாய்ந்து) என்னை அடிமையாகவுடைய பெருமான் விளக்கினர்.

அடிகள் நோவச்சென் றூஎன விறகுமண் சுமந்தும்
அடிபொ றுத்தும்ஓர் அரிவைதூ தாற்றியும் வெள்கா
தடியர் எண்ணமே முடிப்பது விரதமாக் கொண்ட
அடிகள் வாகைஇக் கண்ணனுக் களித்ததோர் வியப்போ. 99

திருவடிகள் வருந்தச் சென்று விறகு சுமந்தும் பாணபத்திரனுக் கடிமை எனக்கூறியும், வந்தியின் பொருட்டு மண் சுமந்தும், பாண்டியன் கைப்பிரம்படி ஏற்றும், பரவையார்பால் தூது சென்றும், நாளுது அடியர் மனக்கருத்தை முடிப்பதையே கொள்கையாகக் கொண்ட அடிகள் வெற்றி மாலையைக் கண்ணபிரானுக்குச் சூட்டியதும் ஓர் அதிசயமாமோ?

தம்பி ரான்பெருங் கருணையின் சால்பினை நோக்கி
உம்பர் ஆர்த்தனர் உவணஏற் றிறைவனும் ஆவா
எம்பி ரான்அருள் என்னிடை இருந்தவா றென்னென்
றம்பி காபதி அடிதொழு தானந்தம் உற்றான். 100

எல்லா உயிர்களுக்கும் தலைவனாகிய சிவபிரான் பேரருட்டிறத்தினை நோக்கித் தேவர் மகிழ்ச்சியால் ஆரவாரித்தனர். கருடவாகன மூர்த்தியும் 'ஆவா! எமது பெருமான் அருள் என்னிடையும் இருந்த வகை என்னே!' என்று அம்பிகைக்கு நாயகன் திருவடி தொழுது பெருமகிழ்ச்சியுற்றனர்.

கண்ணனும் வாணனும் கைகலத்தல்

துண்ட வெண்பிறைக் கண்ணியோன் போர்வினை துறப்பக்
கண்டு வெஞ்சினந் தலைக்கொளீஇக் கனைகழல் அவுணன்
அண்டம் விண்டென ஆர்த்தனன் மாயனை அடுத்தான்
மண்டு தீச்சிலை வளைத்தனர் விளைத்தனர் பூசல். 101

வெண் பிறையாகிய துண்டத்தினை முடிமாலை போலக் கொண்ட பெருமான் போரைக் கைவிட ஒலிக்கின்ற வீரக்கழலணிந்த அசுரன் அதனைக்கண்டு கொடுங்கோபந் தலைக்கொண்டு அண்டம் பிளந்ததென ஆரவாரித்தனன். கண்ணனை அடுத்தனன். இருவரும் கொடுமை மிக்க வில்லை வளைத்தனர்; போரைத் தொடங்கினர்.

நூழில் வன்படை இருவரும் நெடுமொழி நுவல்வார்
பாழி வன்புயம் புடைத்தெழூஉ வஞ்சினம் பகர்வார்
ஊழி ஈற்றனல் விழிஉகச் சீறுவர் உலகைப்
பூழி யாக்குவர் சாரிகை சுற்றுவர் பொருவார். 102

கொன்று குவித்தலையுடைய இருவரும் தத்தம் மேம்பாட்டுரையைக் கூறுவார். வலிமை மிகுந்த தோள்களைத்தட்டிக் கடுஞ்சபதம் கூறுவார். பிரளய காலாக்கினியைக் கண்களுமிழச் சினங் கொள்வர்; உலகைப் புழுதி படுத்துவர்; வட்டணையாகச் சுற்றுவர்; போர் செய்வர்.

இனைய மண்டமர் ஞாட்பிடை எம்பிரான் அருள்சேர்
வனைமலர்த்துழாய் வானவன் மதுகைமீக் கொண்டு
முனைவ ரிச்சிலை வாளிதேர் முடிகளை இறுத்துத்
தனிய னாக்கினன் சலம்புரி அவுணருக் கிறையை. 103

இத்தன்மை வாய்ந்த செறிந்த போர் நிகழ்கின்ற களத்தில் எமது பெருமான் அருளைப் பெற்றுள்ள கண்ணன் வலிமை மிக்கு நாணி பூட்டிய வில்லையும், அம்பையும் தேரையும், சிகரத்தையு முறித்து வஞ்சனை புரிகின்ற அசுரர் தலைவனைத் தனியனாகச் செய்தனன்.

கருப்புத் துண்டென நூற்றுப்பத் தடுக்கிய கனகப்
பொருப்புத் தோள்களை அரிவுழி மதன்உடல் பொடித்த
நெருப்புக் கண்ணினன் எதிரெழுந் தருளிநீள் கருணை
மருப்புக் குஞ்சரங் காத்தவன் மேற்செல வழங்கி. 104

மேரு மலையை ஒத்த ஆயிரந் தோள்களைக் கருமபினைத் துண்டாடல் போல வெட்டுழி மன்மதனை நீறாக்கிய கனல் விழிப்பெருமான் எதிரெழுந்தருளி ஆதிமூலமே என்றழைத்த யானையைக் காத்த பிரானுக்குப் பேரருள் புரிந்து,

கண்ண னேஇது கேட்டிஇக் கனைகழல் அவுணன்
அண்ணல் வாய்மைஉன் போல்எமக் கன்புமிக் குடையான்
எண்ணம் வாய்ப்பநம் பூசையின் அமைந்ததோள் இரண்டும்
வண்ண வாள்மலர் வதனமும் அரிதல்ஒம் பென்றான். 105

'கண்ணனே! இதனைக்கேள். ஒலிக்கின்ற கழலை இவ்வாணன் சிறந்த உண்மை அன்புடைய உன்னைப்போலவே எமமிடத்து அன்பு மிகவும் உடையவன். கருத்தமைய நமது பூசனைக்குரிய தோள்களிரண்டினையும் நிறமும், ஒளியும் உடைய மலர் போலும் முகத்தையும் அரிதலை ஒழிக' என்றனர்.

அறுசீரடி யாசிரிய விருத்தம்

என்ற வாய்மொழி கேட்டலும் தொழுதெழுந் தியாதவர் குலத்தோன்றல், மன்ற மாமறை முழுவதும் முழுவதும் உருத்திரன் எனுமாற்றால், ஒன்றும் அன்பொடும் உன்னடி அருச்சனை உஞற்றினேன் எமையெல்லாம், நன்று பூசனை இயற்றியோன் ஆதலின் நாற்கரம் விடுத்தேனல். 106

என்ற திருவாக்கினைக் கேட்ட பொழுதே தொழுதெழுந்து யது மரபில் வந்த கண்ணபிரான் பெருமை பொருந்திய வேதங்கள் முற்றும் எல்லாப்பொருள்களும் உருத்திரனே எனத் தெளியக் கூறும் முறையால் கவர்த்த அன்பின்றி ஒன்றுபட்ட அன்பினால் உன் திருவடிக்குப் பூசனை புரிந்தோன் எம்மை யெல்லாம் பெரிதும் பூசனை புரிந்தோன் ஆகலின், நான்கு கரங்களை விடுத்தேன்.

'எமையெலாம்' என்றது மற்றைத் தேவரையும் கொண்டு கூறியது. நமகசமகங்களால் சிருத்திரம் எல்லாப்பொருள்களு மாதலைத் தனித்தனி எடுத்தோதும் தாமெல்லோரும் வணங்குந்தலைவனை வணங்குவோர் தம்மையும் மகிழ்வித்தவராவர் என்பது கருத்து.

அடியனேன்பிழை யாவையும் பொறுத்தருள் ஐயனே எனத்தாழ்ந்து, கொடியின் மேல்விடை உயர்த்தவன் ஆணையிற் குடவளைக் குடங்கையான், மடிவில் வாணனைக் கேண்மைகொண் டாங்கவன் மகளைத்தன் மகன்ஈன்ற, விடலை சேர்வுற மணம்-புணர்த் துடன்கொண்டு மீண்டனன் தன்மூதூர். 107

குடம்போன்ற பாஞ்ச சன்னியத்தை உள்ளங்கையிற் கொண்ட கண்ணபிரான் கொடிமேல் விடை எழுதி உயர்த்த பெருமானை அடியனேன் புரிந்த பிழைகள் முற்றவும் பொறுத்தருள் ஐயனே! என வணங்கி அப்பெருமான் ஏவலால் ஊக்கமுடைய வாணனை உறவு கொண்டவன் மகளாகிய உஷையைத் தன் பேரனாகிய அநிருத்தன் புணரத் திருமணம் புணர்த்து மணமக்களை உடன்கொண்டு துவாரகைக்கு மீண்டனன்.

வாணன் முத்தி பெறுதல்

ஐயி ரண்டினில் உறழ்தரு மும்முறை அமரகத் துடைந்-தெள்ளல், எய்தி னுனெனப் பட்டவன் றனைக்கொண்டே இவன்-செருக் கறக்கண்டான், செய்யச் செய்திடா தொழியவே றொன்ற-னைச் செய்யவும் வல்லோனும், பைய ராஅணி பண்ணவன் பெரு-மையை யாவரே பகர்கிற்பார். 108

முப்பதுமுறை போரிற் புறங்காட்டிய இகழ்ச்சியை எய்திய கண்ண பிரானைக் கொண்டே வாணனின் செருக்கினை ஒழித்த படமுடைய பாம் பணிந்த பெருமானார் ஓர் செயலைச் செய்தலும், செய்யா தொழிதலும், வேறொன்று செய்தலும் வல்ல இறைமைக் குணங்களை உடையராவர். ஆதலின், அவரது பெருமையை யாவரே பகர வல்லார்.

கருவி மாமுகில் மேனியோன் அகன்றபின் கனங்குழை உமைபாகம், மருவு நாயகன் வாணனை நோக்கிநின் மணிப்புயக் கண்டூதி, ஒருவி னுய்கொலாம் எனக்குறு நகைமுகிழ்த் துரைத்த-லும் முடிசாய்த்துப், பெரும மற்றினி வீடுபே றளித்திஎன் றிரந்த-னன் பெருநேசன். 109

கண்ணபிரானார் துவாரகைக்குப் புறப்பட்ட பின்னர் கனவிய குழையினை யணிந்த உமையம்மையாரை யிடங்கொண்ட பெருமானார் வாணனை நோக்கி 'நின்னுடைய அழகிய தோள்களின் தினவு தீர்ந்தனை போலும்' எனப்புன்சிரிப் பரும்ப விளம்பலும நாணத்தால் தலையைச் சாய்த்துப் பெருமானே! இனிமேல் வீடு பேற்றினை அளித்தி' என்று குறையிரந்தனன் பேரன்பினனாகிய வாணன்.

முத்தி வேண்டுமேற் காஞ்சியின் எய்திநீ முன்னமை நிறீ-இப் போற்றும், அத்த லத்திடைப் பெறுதிஎன் றருள்புரிந் தகன்-றனன் எங்கோமான், பத்தி மேதகு வாணனுங் காஞ்சியிற் படர்ந்துதான் தொழுதேத்தும், நித்த னருளாற்கணத் தலைமை-பெற் றானந்தம் நிலைபெற்றான். 110

'முத்தியை விரும்புவையாயின் காஞ்சியை எய்தி முன்னர் எம்மைத் தாபித்துப் போற்றி வரம்பெற்ற அத்தலத்தில் பெறுக' என்றருள் புரிந்து மறைந்தனர். எம்பெருமானார்க்குப்பேரன்பினனாகிய வாணனும் காஞ்சியை அடைந்து தான் தொழுது துதிக்கும் நித்தனார் திருவருளாற்கணத்தலைமையைப் பெற்று நிலைபேறுடைய இன்பிற்றிளைத்தனன்.

வரிச்சி றைச்சுரும் புளர்தரக் குவிமுகை முறுக்குடைந் தலர்வாசம்
விரித்த நெட்டிதழ்ப் பங்கயப் பொய்கைசூழ் வியத்தரு வாணேசம்
அருச்ச னைக்குரி மரபினிற் போற்றிசெய் அடியவர் கருத்தீமை
நரிச்சு நீங்கமெய்ப் பெருநலக் கிழமைவீ டெய்துவர் நமரங்காள்.

அழகிய சிறையினையுடைய சுரும்புகள் குடையக் குவிந்த அரும்புகள் பிணிப்பவிழ்ந்து அலர் வாசம் பரவுகின்ற நீண்ட இதழ்களைக் கொண்ட தாமரை மலர்ப்பொய்கை சூழ்ந்த அற்புதத்தலமாகிய வாணேசம் வழிபாடு செய்தற்குரிய விதிப்படி போற்றி செய் அடியவர் பிறவி நோய் நைந்து நீங்க உண்மையாகிய பேரின்பத்துக்குரிய வீட்டினைத் தலைப்படுவர் நம்மனோராகிய முனிவர்களே!

வாணேசப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-1461.

## திருஓணகாந்தன் தளிப் படலம்

கலி விருத்தம்

பேண வல்லார் பிறவி தீர்த்தருள்
வாண நாத மரபு சொற்றனம்
யாணர் வண்மை பெறும்இ தன்குணக்
கோண காந்தன் தளிஉ ரைத்துமால். 1

போற்ற வல்லவர் பிறவியைத் தவிர்த்தருள் வாணேசப் பெருமான் வழக்காற்றினைக் கூறினோம். இனி, அழகிய வளம் பெறும் அதன் கீழ்த்திசையில் உள்ள ஓண காந்தன் றளியை உரைப்போம்.

மருவ லார்தாழ் வாணன் றன்னுடைப்
பொருவில் சேனைத் தலைமை பூண்டவர்
தரும வாற்றின் ஒழுகு தானவர்
இருவர் ஓணன் காந்தன் என்றுளார். 2

பகைவர் வணங்கும் வாணனுடைய ஒப்பில்லாத சேனைத் தலைவராய் அறநெறியின் வழுவாதொழுகிய அசுரர் இருவர் ஓணன் காந்தன் என விளங்கினர்.

வன்பு பூண்ட மனவ கப்படா
என்பு பூண்ட இறைவர் தம்மடிக்
கன்பு பூண்ட அறிவின் மேலவர்
துன்பு பூண்ட தொடர்பு நீக்குவார். 3

அன்பில்லாத வன்னெஞ்சினைக் கடந்து நின்ற எலும்பை மாலையாக அணிந்த இறைவர் தம்மடிக் கன்புபூண்ட அறிவினால் மேலோராய்த் துன்புடைய பாசத்தொடர்பினை விலக்குவாராய்,

இறைவனுடைய அழிவின்மையையும் பிரம விட்டுணுக்களின் பிறப்பிறப்பையும உணர்ததி உய்யக்கொள்ளும் அடையாளமாவன என்பு மாலைகள்.

ஓங்கு காஞ்சி ஊரை நண்ணினர்
தேங்கு தெண்ணீர்த் தீர்த்தந் தொட்டனர்
பாங்கி லிங்கம் பதிட்டை செய்தனர்
ஆங்கண் அன்பிற் பூசை ஆற்றினர். 4

உயர்ந்த காஞ்சி நகரை அடைந்தனர். நீர் நிறைந்த தடாகம் வகுத்தனர். அதன் மருங்கில் தனித்தனியாகச் சிவலிங்கந் தாபித்தனர்; அன்பொடும் பூசனை புரிந்தனர்.

ஆற்றும் இருவர் அன்பு நோக்கிய
நீற்று மேனி நிமலன் அம்மையோ
டேற்றின் மேலாற் காட்சி ஈதலும்
போற்றி இன்பப் புணரி மூழ்கினர். 5

புரியும் ஓண காந்தர் தம் அன்பினை நோக்கிய நீறணி மேனியராய விமலர் உமையம்மையாரொடும் விடைமேற் றிருக் காட்சி வழங்கலும் போற்றி செய்தின்பக் கடலுள் திளைத்தனர் அவர்.

கரைஇல் காதல் கைமி கத்தொழும்
புரைஇ லார்க்குப் பொங்கு வெள்ளிமால்
வரையி னார்இன் னருள்வ ழங்கிநீர்
உரைமின் வேட்ட வரம்என் றோதினார். 6

எல்லையில்லாத அன்பு பெருகத் தொழும் குற்றமற்றவர்க்கு மிகுகின்ற இனிய அருளைக் கயிலை மலையார் நல்கி நீவிர் விரும்பிய வரங்களைக் கேண்மின்' என்றோதினர்.

கைகள் கூப்பிக் கண்கள் நீர்உகச்
செய்ய பாதந் தொழுது செப்புவார்
ஐய னேமெய் யறிவு தந்தெமை
உய்யக் கோடி உனக்க டைக்கலம். 7

கரமலர் மொட்டித்துக் கண்கள் நீர் பாய நின்று சிவந்த திருவடி மலர்களைத் தொழுது கூறுவார்: 'ஐயனே! மெய்யறிவைத் தந்தருளிப் பிழைக்குமாறு என்றுகொள். அஞ்சினேம் ஆகலின் அடைக்கலம்புக்கேம்.'

இனைய தீர்த்தம் ஆடி எம்பெயர்
புனை இ லிங்கம் போற்றப் பெற்றவர்
நினைவு முற்றும் நிரப்பி ஈண்டுநீ
எனைய நாளும் இனிது வைகுவாய். 8

'இத்தீர்த்தத்தில் மூழ்கி எம்முடைய பெயரொடும் விளங்கும் ஓணேசப் பிரான் காந்தேசப் பெருமான் எனப் பெறும் இவ்விலிங்கத்தில் கின்னைத் துதி செய்தோர் நினைவில் எழும் போகங்கள் முற்றவும் நிரப்பி இத்தலங்களில் நீ எந்நாளும் இனிது வீற்றிருப்பாய்,'

என்று போற்றும் இருவர்க் கன்னவை
மன்றல் ஒற்றை மாவின் நீழலான்
நன்றும் அங்கண் நல்கி வைகினன்
அன்று தொட்டஃ தற்பு தத்தலம், 9

என்று போற்றி வேண்டும் இருவர்க்கும் அவற்றை வழங்கி மணங் கமழ் ஒற்றை மாமரத்தின் நீழலாராகிய திருவேகம்பநாதர் அவர்கள் விரும்பிய இவ்விடங்களிற் பெரிதும் விளங்கி வைகினர். அந்நாள் முதலாக அத்தலம் வியப்பினதாகும்.

திருஓணகாந்தன் தளிப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-1470.

---

# சலந்தரேசப் படலம்

கலி விருத்தம்

ஓணனுர்க் கரியவர் ஓணகாந் தன்தளி
நீணகர் மேன்மையைத் தெரிந்தவா நிகழ்த்தினும்
மாணமர் காட்சிசால் மற்றதன் வடதிசைப்
பேணிய சலந்தரே சத்தியல் பேசுவாம். 1

திருவோண நாளுக்குரிய திருமாலுக் கரியவர் திருவோண காந்தராகிய அசுரர்க்கன்பினுல் எளியராய் வெளிப்பட்ட திருக்கோயில்களின் பெருமையைத் தெரிந்தவாறு நிகழ்த்தினேம். இனி, மாட்சியமர் காட்சி நிரம்பிய வடக்கில் உள்ள அத்தலத்தை விரும்பி வழிபாடுசெய்த சலந்தரேசத்தின் வரவைப் பேசுவோம்.

சலந்தரன் வெற்றி

சலத்திடைத் தோன்றியோன் சலந்தரப் பெயரிய
குலப்புகழ்த் தானவன் கோநகர்க் காஞ்சியில்
நலச்சிவ லிங்கம்ஒன் றமைத்துநா ளுந்தொழு
துலப்பரு மெய்த்தவம் உஞற்றினுன் அவ்வுழி. 2

சலத்தில் தோன்றினமையால் சலந்தரன் எனப் பெயர் பெற்ற மேன்மையுடைய புகழமைந்த அசுரன் தலைநகராகிய காஞ்சியில் நலமுடைய சிவலிங்கம் நிறுவி நாளும் வணங்கிக் கெடுதலில்லாத மெய்த்தவத்தைப் புரிந்தனன். புரியுங்காலை,

காட்சிதந் தருளிய கண்ணகன் மாநிழல்
ஆட்சியார்த் தொழுதெழுந் தாண்மையும் மதுகையும்
மாட்சிசால் இறைமையும் மாற்றலர்த் தெறுதலும்
மீட்சிஇன் றருளென வேண்டினுன் பின்னரும். 3

திருக்காட்சி தந்தருளிய மாநீழலில் அரசுபுரி திருவேகம்பரைத் தொழுதெழுந்து 'வீரமும், வலிமையும், மாண்பு மிகு அரசுரிமையும், பகைவரை அழித்தலும் நீக்கமின்றி நிலைபெற அருள்செய்வாய்' என இரந்தனன். பின்னரும்,

நின்னலால் என்னுயிர் நீப்பவர் இன்மையும்
துன்னரு முத்திஇச் சூழலிற் பெறுவதும்
பின்னல்வார் சடையினுய் அருளெனப் பெற்றுமீண்
டன்னவா றுலகுதன் அடிப்படுத் தாளும்நாள். 4

'நின்னையன்றிப் பிறர் எவரும் என்னுயிரை நீக்குநர் இன்மையும், பெறற்கரிய முத்தியை இத்தலத்தே பெறுகையும் பின்னிக்கிடக்கின்ற நீண்ட சடையுடையாய்! இவ்வரங்களை அருளா'யென்று பெற்றுப்போய் அவ்வாறே உலகைத் தனடிக் கீழ்ப்படுத்தி ஆளு நாளையில்,

இந்திரன் முதலிய எண்டிசைக் கிறைவரைக்
கந்தமேன் மலர்மிசைக் கடவுளை வென்றுபின்
பைந்துழாய்க் குரிசிலைப் பன்னகப் பகையொடும்
வெந்திறல் நாகபா சத்தினுல் வீக்கினுன். 5

இந்திரன் முதலிய எண்டிசைத் தலைவரையும், பிரமனையும், வென்று பின்னர்த் திருமாலைப் பாம்பிற்குப் பகையாகிய கருடனெடும் வெவ்வலியுடைய நாகபாசத்தினுல் பிணித்தான்.

சிறையிடை மாட்டினன் சிற்சில நாட்செல
அறைகழல் வானவர் வணங்கிநின் றவுணனைக்
குறைஇரந் தனையனைக் கொண்டுமீண் டேகினர்
பிறைஎயிற் றவுண னும் பெருமிதத் துறையும்நாள். 6

சிறையிடைப் படுத்தினன்; சிலச்சில நாட்கள் கழிந்த பின்னர் வணங்கி நின்று சலந்தரனை இரந்து வேண்டித் திருமாலைச் சிறை விடச் செய்தனர். பிறை போலும் பற்களையுடைய அசுரனும் வெற்றிச் செருக்குடன் வாழுநாளில்,

திருமால் செயல்

இறுதிநாள் அடுத்தலின் எறும்விடைப் பாகனைத்
தெறுவல்என் றெழுந்துயர் கயிலையைச் சேறலும்
உறுதுயர்ச் சிறையிடை உறையும்நாள் அன்னவன்
பெறுமனைக் கிழத்தியைக் காமுறும் பின்னைகோன். 7

ஆயுள் முடியு நாள் அடுத்தமையால் 'வலிய விடையுடைப் பரமனை அழிப்பேன்' என்றெழுச்சி கொண்டுயர்ந்த கயிலையைச் சேர்ந்த சமயத்தில் மிக்க துயரைச் செய்யும் சிறையிற் கிடந்த நாளில் அவனுக்கு வாய்த்த மனையறம் பூண்ட உரியவளை விரும்பும் இலக்குமி நாயகன்,

அற்றமா தென்றறிந் தம்மனைப் புறமுறத்
துற்றபூம் பொழிலிடைத் தூத்தவ வடிவுகொண்
டுற்றிடக் கண்டனள் ஒசிஇடைப் பணைமுலை
முற்றிழை தாழ்ந்துமுன் நின்றிது வினவுவாள். 8

உரிய காலம் இதுவாகும் என்று துணிந் தம் மாளிகையை அடுத்துச் செறிந்த பூஞ்சோலையில் தூய தவவேடம் தாங்கி இருந்திடத் துவளுகின்ற இடையினையும், பருத்த கொங்கையையும் உடைய தொழில் முற்றுப்பெற்ற அணிகளை அணிந்தவள் கண்டு நெருங்கினள். வணங்கி முன்நின்றிதனை வினவுவாள்:

நற்றவத் தடிகளீர் நதிமுடிக் கடவுளைச்
செற்றுமீள் வேனெனச் சென்றஎங் கொழுநர்பால்
வெற்றியோ தோல்வியோ விளைவதொன் றறிகிலேன்
எற்றிது மொழிமின்நீர் என்னமால் கூறுவான். 9

'மெய்த்தவ முடைய அடிகளீர்! கங்கையை அணிந்த சடைமுடிக்கடவுளை அழித்துத் திரும்புவேன் எனக் கூறிச்சென்ற எம் கணவர்பால் வெற்றியோ? தோல்வியோ விளைவ தொன்றியாதோ அதனை அறிகிலேன எத்தன்மையது இது நீவிர் கூறுமின்' என்னத் திருமாலாகிய முனிவரர் கூறுவார்.

அஞ்சுபூ தங்களும் அவற்றிடைப் பொருள்களும்
பஞ்சுதீப் பட்டது படவிழி திறந்தருள்
செஞ்சடைப் பகவன்முன் சென்றெவர் உய்ந்துளார்
புஞ்சவெள் வளையினுய் அறிந்திலை போலும்நீ. 10

'திரட்சியும் வெண்மையும் உடைய வளையினாய்! ஐம்பெரும் பூதங்களும் அவற்றாலாய பொருள்களும் தீயிடைப்பட்ட பஞ்சைப்போல அழிய விழி திறந்தருள் சிவந்த சடையினையுடைய பகவனாரொடும் பகைத்து நின்றவர் யாவர் பிழைத்தவர் உளர்? உய்ந்தவர் ஒருவரும் இலர் நீ இதனை அறிந்திலை போலும்.

அன்னபே ராளனோ டமரினுக் கேகலாற்
பன்னகப் படமெனப் பரந்தகல் அல்குலாய்
உன்னுடைக் கேள்வனும் பொன்றுவான் உண்மைகாண்
என்னவாய் விண்டனன் வளைகரந் தெய்தினான். 11

'பாம்பினது படத்தை ஒத்து மிகப் பரந்த அல்குலையுடையவளே! அப்பேராற்றலனோடு போருக் கெழுதலால் உன்னுடைய நாயகனும் இறப்பான். இது சத்தியம்' எனக் கூறினர் சங்கு சக்கர முதலிய கரந்து வந்த திருமால்.

கலிநிலைத் துறை

அந்த எல்லையோர் தானவன் பங்கிசோர்ந் தலையச்
சந்த மென்புயத் துகிலுடை சழங்கவேர் ஒழுக
உந்து நெட்டுயிர்ப் பெறியமெய் நடுக்குற ஓடி
வந்து தோன்றிவாய் புலரநின் றின்னது வகுப்பான். 12

அப்பொழுதோர் அசுரன் மயிர் சோர்ந் தவிழவும், சந்தனம் பூசிய தோளிடையிட்ட மெல்லிய துகிலும், அரையில் உடுத்திய உடையும் நெகிழவும், வியர்வை ஒழுகவும், உந்துகின்ற பெருமூச்செறியவும், மேனி நடுக்குறவும், ஓடிவந்தெதிர் நின்று வாய் உலர நின்றின்னது வகுப்பான்.

இறைவி நின்தனிக் கொழுநன்நீள் கயிலையின் இளவண்
டறைக டுக்கையான் றனைஅறை கூவும்அவ் வளவில்
நறைம லர்க்கரக் கணிச்சியன் நோக்கினான் நமது
நிறைக டற்பெரும் படையெலாம் நீற்றினன் அதன்பின்.

'தலைவி! நின்னுடைய ஒப்பற்ற நாயகன் உயர்ந்த கயிலையில் எழுந்தருளியுள்ள வண்டுகள் ஒலிக்கின்ற கொன்றை மலர் மாலையை அணிந்த பெருமானை வலிதிற் போருக்கழைத்த மாத்திரையில் தேன் பொருந்திய தாமரை மலர்போலுங் கரத்தினில் மழுப்படை தரித்தபெருமான் நோக்கி அவனுடைய நிறைந்த கடலை ஒக்கும் பெரும்படைகள் அனைத்தையும் நீறு படுத்தினன். அதன் பின்பு,

பரிதி மண்டிலம் ஆயிர மெனக்கதிர் பரப்பும்
உருவ ஆழிஒன் றாக்கினன் ஒளிரும்அப் படையால்
பொருவ லித்திறற் சலந்தரன் பொன்றினான் அதனை
வெருவி நீளிடைக் கண்டுமீண் டித்தலைப் போந்தேன். 14

ஆயிரஞ் சூரிய மண்டில மெனக் கிரணங்களை விரிக்கும் வடிவுடைய சக்கரம் ஒன்றைச் சிருட்டித்தனர். ஒளிவிடும் அப்படையால் பொருகின்ற பெருவன்மை யுடைய சலந்தராசுரனாகிய உன் நாயகன் இறந்தனன். அதனைத் தூரத்தே நின்று கண்டஞ்சி மீண்டிவ்விடம் போந்தேன்.

என்ற வாய்மொழி கேட்டலுங் கொம்பரை இழந்த
மன்ற லங்கொடி போற்கிடந் தலமரு மயிலை
வென்றி வேள்படை துளைத்திட மெலிவுறு நெடியோன்
சென்று பற்றினன் திருந்திழை குறித்திது செப்பும். 15

என்று கூறிய மொழியைக் கேட்ட அளவிலே கொழுகொம்பை இழந்த மணமலர்க் கொடி போலக் கிடந்து மனமறுகும் மயில்போல்வாளை வெற்றி வாய்ந்த மன்மதன் படை புண்படுத்திட மெலிவுறும் திருமால் சென்று கையைப் பற்றினர். திருந்திய இழையினை யுடையாள் உள்ளத் தொன்றைக் கருதிப் புறத்து வேறாகிய இதனைச் சாற்றுவாள்.

மன்னு கேள்வனை இழந்துளேன் வைகல்மூன் றகன்ற
பின்னை நின்மனைக் கிழத்தியே ஆகுவல் பெரும
என்ன வஞ்சித்து நீங்கினள் மனையகத் தெய்தி
வன்னி புக்குயிர் விடுத்தனள் கற்பினில் வழாதாள். 16

'பெருமானே! உயிர் நாயகனை இழந்தவளா யுள்ளேன். மூன்று நாள் கழிந்த பின்னர் நின்மனையாட்டி ஆவேன்' என்ன நயமாகக் கூறி ஏமாற்றி மனைக்கண் புகுந்து கற்பினின்றும் பிறழாதவள் தீயினில் உயிரை மாய்த்தனள்.

உழுவலன்புடையளாகலின் 'மன்னுகேள்வன்' என்றனர். எழுமையுந் தொடர்ந்த அன்பு: இம்மைப்பிறப்பிற் பிரியலம்' (திருக்.)

அறுசீரடி யாசிரிய விருத்தம்

ஏம்பலோ டுறையும் மாயன் இத்திறம் உணர்ந்தான் அந்தச்
சாம்பரிற் புரண்டு பேய்க்கோட் பட்டவர் தம்மின் மாழ்கித்
தேம்பினன் அனையாள் செல்வத் திருஉரு உளத்தில் தீட்டி
ஓம்பினன் என்செய் வான்அங் குழிதந்தான் நெடுநாள் இப்பால்.

வருத்தத்தோடும் அகலா தங்கிருந்த மயங்கியமால் இவ்வகையை அறிந்தனன். அவளுடைய ஈமச் சாம்பலில் ஆழ்ந்து புரண்டு பேயாற் பற்றப் பட்டவர் தம்மைப் போல மனம் நொந்து மெலிந்தான். அவளது அழகிய வடிவை மனக்கிழியில் எழுதித் தியானித்தான். வேறு எவன் செய்ய வல்லன். அவ்விடங்களிலே நெடுங்காலம் திரிந்தனன். இனி,

சிவபெருமான் திருவருள் செய்தல்

இமையவர் பலரும் மாலை எங்கணுந் தேடிக் காணார்
சிமையநீள் கயிலை நண்ணித் திருவடி வணங்கிக் கூற
அமையெனத் திரண்டு நீண்டு பசந்தணி இலங்கு பொற்றோள்
உமையொரு பாகத் தெங்கோன் அவன்திறம் உணர்ந்து சொல்லும்.

தேவர்கள் யாவரும் திருமாலை எவ்விடத்தும் தேடிக் காணாராய்ச் சிகரங்கள் நீண்ட கயிலையை நெருங்கிச் சிவபிரானார் திருவடியை வணங்கி முறையிட மூங்கிலை ஒப்பத்திரண்டு நீண்டு பசுமையுற்று அணிகலன்கள் விளக்கமுறற்குக் காரணமாகிய அழகிய தோள்களையுடைய உமையம்மை யாரை ஓர் பாகங்கொண்ட எம்பெருமான் அம்மாலின் நிலைமையை உணர்ந்து கூறுவார்.

ஆபரணம் அழகு பெறுதல்; "பூணுக் கழகளிக்கும் பொற்றொடி" (நளவெண்பா.)

சொற்பயில் கமலை கேள்வன் சலந்தரன் துணைவி யாய
கற்பினிற் சிறந்த காமர் விருந்தையைக் காமுற் றன்னாள்
பொற்புரு இழந்த ஈமப் பொடியிடைக் கிடக்கின் றானல்
விற்பொலி விசும்பின் வாழ்க்கை விண்ணவர் கேண்மின் என்று.

'புகழ் மிக்க இலக்குமி நாயகன் சலந்தராசுரன் மனைவியாய கற்பினின் மிக்க அழகிய விருந்தையை விரும்பி அவளுடைய பொலிவு மிக்க வடிவிழந்த சுடு பொடியில் செயலற்றுக் கிடக்கின்றான். ஆகலின், ஒளி விளங்குகின்ற வானிடத்து வாழ்க்கை விண்ணவரே கேண்மின்! என்று,

பாயபல் லுலகும் ஈன்ற பனிவரைப் பிராட்டி மேனிச்
சேயொளிக் கலவைச் சாந்தின் அழுக்கினைத் திரட்டி நல்கி
நீயிர்இங் கிதனை அந்த நீற்றிடை வித்து வீரேல்
மாயவன் மயக்கந் தீர்க்கும் மரங்கள்மூன் றுளவாம் என்றான். 20

பரந்த பல் உலகங்களையும் பயந்த இமயமலைப் பெருமாட்டியார் தம் திருமேனியிற் சிவந்த ஒளியுடைய கலவைச் சந்தனச் சேற்றினைத் திரட்டி வழங்கி நீவிர் இதனை அப்பொடியில் விதைப்பீராயின் மாயவனின் மயக்கத்தைப் போக்கும் மூன்று மரங்கள் அவ்விடத்துத் தோன்றும்' என்றருளினர்.

கலவை—பல நறுமணப் பொருள்களின் கலப்பு,அழுக்கு, சேறு என்னும் பொருளது.

விண்ணவர் அதனை ஏற்று விடைகொடு வணங்கிப் போந்து
தண்ணகை விருந்தை வீந்த சாம்பரின் வித்த லோடும்
அண்ணலந் துளவம் அங்கேழ் நெல்லிநீள் அகத்தி மூன்றும்
கண்ணெதிர் தோன்றக் கண்டான் கரியவன் மகிழ்ச்சி கொண்டான். 21

விண்ணோர் அதனைப் பெற்று வணங்கி விடை கொண்டு போய் தண்ணிய முறுவலையுடைய விருந்தை இறந்த சாம்பரின் விதைத்த அப்பொழுதே பெருமையுடைய துளசியும், அழகிய நிறமுடைய நெல்லியும், நீண்ட அகத்தியும் ஆகிய இம்மூன்றும் கண்முன்னரே தோன்றத் திருமால் கண்டனர். மகிழ்ச்சி கொண்டனர்.

செடியும், மரங்களும் தோன்றக் கண்டனர்.

மென்றுணர்த் துளவந் தன்னை விருந்தையாத் துணிந்து புல்லிக்
குன்றருங் கழுமல் நீங்கிக் சூலவுதன் இருக்கை சார்ந்தான்
துன்றுபூந் துழாய்முன் மூன்றுந் துவாதசி வழுத்தப் பெற்றோர்க்
கன்றினர்க் கடந்த மாயோன் ஆரருள் சுரக்கும் மன்னே. 22

மெல்லிய பூங்கொத்துக்களையுடைய துளசிச்செடியை விருந்தையாகவே மதித்து இறுகத்தழீஇக் குறைவரிய மயக்கம் நீங்கி விளங்குகின்ற தனது வைகுந்தத்தைச் சேர்ந்தனர். செறிந்த பூந்துளவ முதல் மூன்றனையும் துவாதசி திதியில் போற்றிப் பயன் கொள்வோர்க்குப் பகைவரை அழித்து வெற்றி கொண்ட திருமால் பேரருளை வழங்குவர்.

சலந்தரன் முத்திபெறுதல்

தடவரை இகந்த திண்தோள் சலந்தரன் கயிலை வெற்பில்
விடமிடற் றிறையால் வீந்து வியனகர்க் காஞ்சி வைப்பில்
படரொளிப் பிழம்பாய்த் தோன்றிப் பரசுதன் இலிங்க மூர்த்தத்
துடனுறக் கலந்தான் அன்னோன் பெருமையார் உரைக்க வல்லார்.

பெருமலையைத் தம் பெருமையால் வென்ற திண்ணிய தோள்களையுடைய சலந்தராசுரன் கயிலை மலையில் திருநீலகண்டப் பெருமானால் இறந்து அகன்ற காஞ்சி நகரச்சூழலில் பேரொளி வடிவாய்த்தோன்றிப் பூசனை முன் புரிந்த சலந்தரேசச் சிவலிங்கத் துடனுறக் கலந்தான். அச்சலந்தரேசப் பெருமான்பெருமையை யாவர் உரைக்கவல்லவர்.

சலந்தரேசப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் – 1463.

# திருமாற் பேற்றுப் படலம்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

வணங்குநர்க் கிருமைப் பேறும் மேன்மையின் வழங்கி எங்கோன்
இணங்கிய சலந்த ரேச வரவினை எடுத்துச் சொற்றாம்
அணங்கனார் ஆடல் பாடல் முழக்கறா அணிநீள் வீதிக்
கணங்கெழு திருமாற் பேற்றுக் கடிநகர்ப் பெருமை சொல்வாம். 1

வழிபடுவோர்க்கு இம்மை மறுமைப்பயன்களை நிரம்ப அருள் செய்து எங்கோன் விற்றிருக்கின்ற சலந்தரேச வரலாற்றினை எடுத்துக் கூறினோம். மகளிர்தம் ஆடல் பாடல்களின் முழக்கம் இடையறாது நிகழ்கின்ற அழகிய நீண்ட வீதிகள் மருவிய திருமாற்பேறென்னும் காவலமைந்த நகரின் பெருமையைக் கூறுவோம்.

திருமால் சக்கரம்பெற வழிபடுதல்

குவலயங் காவல் பூண்ட குபன்எனும் அரசற் காகச்
சிவநெறித் ததீசி யோடுஞ் செருச்செய்நாள் விடுத்த ஆழி
தவமுனி வயிர யாக்கை தாக்கிவாய் மடித லோடும்
கவலுறு மனத்த னாகிக் கடுஞ்சமர் துறந்த மாயோன். 2

நில மண்டிலத்தைக் காவல் மேற்கொண்ட குபன் என்னும் அரசன் பொருட்டுச் சைவராகிய ததீசி முனிவரோடும் திருமால் போர்செய்த காலைத் தூண்டிய சக்கரம் தவமுனிவரது வயிர யாக்கையில் தாக்கிக் கூர் மழுங்கினமையால் வருத்தம் மிகுந்து கொடிய போரைத் தவிர்ந்த அம்மால்,

இனிப்படை பெறுவ தெவ்வா றென்றுவா ளவுணர்க் காற்றுப்
பனிப்புடை இமையோர் தம்மை உசாவினன் படைகட் கெல்லாம்
தனிப்பெருங் குருவாய் ஈசன் சலந்தரன் மடியக் கண்ட
சினப்பொறி சிதறுந் தீவாய்த் திகிரிஒன் றுளதென் றோர்ந்தான்.

அசுரர்தம் இடையூற்றைப் பொருது நடுக்கங் கொள்ளும் விண்ணவரொடும் ஆராய்ந்து படைகளுக் கெல்லாம் ஒப்பருந் தலைமையதாய் சலந்தராசுரனை அழிக்கச் சிவபிரானார் படைத்த கோபத்தீப் பொறியைச் சிந்தும் கூர்மையையுடைய சக்கரம் ஒன்றுண்டென்று அறிந்தனன்.

உவகைமீ தூர விண்ணோர்க் கோதினன் இதனை வேண்டிச்
சிவனடி பரசின் இன்னே திருவருள் சுரக்கும் என்னா
அவரொடும் போந்து காஞ்சி அணிநகர் வடமேல் பாங்கர்த்
துவர்இதழ் உமையாள் போற்றுஞ் சுடரொளி இலிங்கங்கண்டான்

மகிழ்ச்சி மீக்கூர இதனைத் தேவர்க்குக் கூறினன். விரும்பிச் சிவபிரான் திருவடியைப் பராவுதல் செய்யின இப்பொழுதே திருவருள் பாலிக்கும் என்றத் தேவரொடும் காஞ்சியை அடைந்து அழகிய நகரின் வடமேற்குப் பாங்கரில் சிவந்த அதரங்களையுடைய உமையம்மையார் வழிபடும் சுடரொளி இலிங்க மூர்த்தியைக் கண்ணுற்றான்.

சேயிழைக் கவுரி செங்கை தைவரச் சிவந்து தோன்றிப்
பாயொளிப் பவளக் குன்றர் எனப்பெயர் படைத்து நான்காம்
ஆயிரம் உகங்கள் அங்கண் அருந்தவர் வழுத்த வைகு
நாயனார் தமைக்காண் தோறும் நாரணன் இறும்பூ துற்றான். 5

சிவந்த அணிகளையுடைய உமையம்மையார் செந்தாமரை மலர்க்கை வருடச் சிவந்து விளங்குதலால் பரவிய ஒளியுடைய பவளமலையார் எனத் திருநாமம் பூண்டு ஆயிரம் சதுர் யுகங்கள் அங்குச் செயற்கரிய தவஞ்செய்வோர் துதி செய்ய விற்றிருக்கும் நாயனார் தம்மைக் காணுந்தோறும் நாரணனார் வியந்தனர்.

நிறைபெருங் காதல் கூர ஆயிடை நியமம் பூண்டு
மிறைவழி இகந்து பாசு பதத்தனி விரதம் ஆற்றி
முறைபெறு வெண்ணீ றங்கம் முழுவதும் பொதிந்து பாசப்
பொறைதவிர்த் தருளும் மும்மைப் புண்டரம் நுதலில் தீட்டி. 6

நிறைந்த பேரன்பு மேலும் பெருக அங்கண் நியமம் மேற்கொண்டு குற்றமுடைய ஐம்பொறிகளை அடக்கிப் பசுபதியை அடைதற்குரிய பாசுபத விரதத்தைக் கைக்கொண்டு முறையாற்பெற்ற திருவெண்ணீற்றைத் திருமேனி முழுவதும் பூசிப் பாசச் சுமையைத் தவிர்த்தருளும் முப்புண்டரம் நெற்றியிற் றீட்டி,

விபூதி சேகரித்தல் சிவதருமோத்தரம், சைவசமய நெறி முதலியவற்றுட் காண்க. பாசப் பொறை–உடம்பு; பிறவி நோய்.

கண்டிகை மாலை பூண்டு கதிர்ஒளி பரப்பும் ஆழித்
திண்படை பெறுதல் வேண்டிச் சங்கறபஞ் செய்து கொண்டு
விண்டலத் திமையோர் அங்கண் வேண்டுவ எடுத்து நல்க
மண்டுபே ரன்பாற் பூசை விதியுளி வழாது செய்வான். 7

உருத்திராக்க வடம் பூண்டு ஒளிக் கதிரை விரிக்கும் சக்கரமாகிய திண்ணிய படையைப் பெற விரும்பிச் சங்கற்பஞ் செய்துகொண்டு தேவர்கள் வேண்டும் உபகரணங்களை எடுத்தன்பொடும் கொடுக்கச் செறிந்த பேரன்பினொடும் பூசனையை முறைப்படி வழுவாமற் செய்து வருவார்.

சங்கறபம்–இது வேண்டி இது செய்வல் எனக்கருத்து வாய்த்தல்.

மாயிருங் கமலப் போது கைக்கொண்டு மாட்சி சான்ற
ஆயிரந் திருநா மத்தான் நித்தலும் அருச்சித் தேத்தி
மேயினன் திருமால் அன்னோன் பத்தியின் விளைவு காண்பான்
பாயிர மறைகள் தேறாப் பரம்பொருள் ஒருநாள் அங்கண். 8

தாமரையின் மிகப்பெரு மலர்களைக் கொண்டு சிறப்பு நிரம்பிய ஆயிரந் திருநாமங்களால் நாடொறும் அருச்சனை புரிந்து புகழ்ந்து விரும்பி யுறைந்தனர் திருமால். அவர்தம் பேரன்பின் நிகழ்ச்சியைக் காட்டும் பொருட்டுப் பாயிரத்தோடு கூடிய மறைகளால் தெளியப்படாத பரம்பொருள் ஓர் நாள் அங்கிகழ்ச்சியில்,

ஷை வேறு

நறைவாரும் இதழ்துறுத்த செழும்பொகுட்டு நளினம்ஆயிரத்தில் ஒன்று, மறைவாகத் திருஉள்ளம் வைத்தருளக் கருவி–முகில் வாட்டு மேனி, இறையோனும் பண்டுபோல் பவன்முதலாம் ஆயிரம்பேர் எடுத்துக் கூறிக், குறையாத பேரன்பிற் பதுமமலர் கொடுபூசை புரியும் எல்லை. 9

தேனொழுகும் இதழ்கள் செறிந்த செழுமிய பொகுட்டினையுடைய தாமரை மலர் ஆயிரத்துள் ஒன்று மறையத் திருவுள்ளத் தெண்ண நீர் கொண்ட மேகத்தை வருத்தும கரிய நிறமேனியையுடைய திருமாலும் பண்டுபோலப் பவன முதலாம ஆயிரம் திருநாமம் எடுத்தோதிக் குன்றுதலில்லாத பேரன்பினொடும் தாமரை மலரைக் கொண்டு அருச்சனை செய்யும்பொழுது,

பன்னும்ஒரு திருப்பெயர்க்கு நறுங்கமலங் காணுமைப் பதைத்து நோக்கி, என்னினிமேற் செயலென்று தெரிந்துணர்ந்து தனதுவிழி இடந்து பெம்மான், கொன்மலர்த்தாள் மிசைச்சாத்திக் களிகூர்ந்தான் உறுப்பினையும் கொடுப்ப தல்லால், மென்மையுறத் தாங்கொண்ட விரதத்தை விடுவர்களோ கொள்கை மேலோர். 10

முடிவில் எடுத்தோதும் ஓர் திருநாமத்திற்கு நறிய தாமரை மலர் காணப் பெறுமையால் மனம பதைத்து நோக்கி இதற்குமேற் செயல் யாதென் றுராய்ந்துணர்ந்து தமது விழியைப் பெயர்த்துப் பெருமானுருடைய பெருமை பொருந்திய மலர்போலும் திருவடியில் சாத்திக் களிமிகுந்தார். உடலுறுப்புக்களைக் கொடுத்தும் தாங்கொண்ட கொள்கையை நிறுத்துவர் அன்றித் தளர விடுவர்களோ கொள்கையினுல் உயர்ந்தோர்.

'ஊக்கித் தாம்' (நாலடி–57.) செய்யுளை எண்ணுக.

இறைவன் திருமாலுக்குச் சக்கரம் அருளல்

பாறிலகு மழுப்படையோன் மாயவன்றன் அன்பின்ஒருப் பாடு நோக்கி, மாறிலாப் பெருங்கருணை ஊற்றெடுப்பச் செழுஞ்சோதி மலரப் பாங்கர், நூறியோ சனைஅளவும் எரிகொளுந்த நோக்கரும்பே ருருவு தாங்கி, ஈறிலாக் கதிர்இரவி மண்டிலநின் றிழிந்தெதிரே காட்சி ஈந்தான். 11

பருந்துகள் சூழ மழுப் படையை யுடைய பிரானூர் திருமால் அன்பின் ஒருமையை நோககி என்றும திரிபில்லாத பெருங்கருணை பெருக்கெடுபபவும் பேரொளி பக்கங்களில் விரியவும், நூறு யோசனை அளவும எரி சுடவும் கண்ணொளி மழுஙகவும ஆகிய பெருவடிவு தாங்கி அழிவில்லாத கிரணங்களையுடைய சூரிய மண்டிலத்தினின்றும் இழிந்தெதிரே காட்சி ஈந்தனர்.

"மாறிலாதமாக் கருணை வெள்ளமே" (திருவாசகம்) என்புழிக் காண்க. சூரிய மண்டிலத்தில் இறைவன் எழுந்தருளி யிருத்தல்: "அப் பரிதிமண் டலமவளர். அரும்பெருஞ் சுடரை ஏய்ப்ப" (மீனாட்சி. பிள்:93.) "ஊன்பிலி ற்று மழுவாளி" (பாயிரம்.)

இறைவரவு கண்டஞ்சிப் புடைமருவும் இமையவர்ஓட் டெடுப்ப நோக்கி, நிறைஉவகை தலைசிறப்பத் திருநெடுமால் இருநிலத்தின் வீழ்ந்து தாழ்ந்து, முறைமையினுல் அட்டாங்க பஞ்சாங்க முறவணங்கி முடிகை ஏற, மறைமொழியின் துதித்தாடி ஆனந்த விழிமாரி வெள்ளத் தாழ்ந்தான். 12

சிவபிரான் வருகையைக் கண்டு பயந்து நெருங்கி யிருந்த தேவர் ஓட்டம் எடுப்பப் பெருமானை நோக்கி நிறைந்த மகிழ்ச்சி மிகத் திருநெடு மால் பூமியில் வீழ்ந்து வணங்கி விதிப்படி எட்டுறுப்பும் ஐந்துறுப்பும் நிலத்திற் பொருந்த வணங்கிக் கரங்களைச் சிரமிசைக் கூப்பி மறை மொழி யினால் துதி செய்து கூத்தாடி அன்பினால் ஒழுகுகின்ற கண்ணீர் வெள் ளத்துள் திளைத்தனர்.

நணியராயும் தவப்பயனின்மையின் ஓட்டெடுத்தனர்.

ஆங்கவனை எதிர்நோக்கி நின்பூசைக் ககமகிழ்ந்தேம் உனக்-
கின் றொன்று, தேங்கமல விழியளித்தேம் பதுமாக்கன் எனும்-
பெயரின் திகழ்வாய் இவ்வூர், பாங்குபெறு திருமாற்பே றெனப்-
பொலிக என்றருளிப் பானுகோடி, தாங்குகதிர்ச் சுதரிசனப்
பெயராழித் தனிப்படையும் உதவி எங்கோன். 13

திருமாலை எதிர்நோக்கி 'நீ செய் பூசனைக்குத் திருவுள்ளம் மகிழ்ந் தோம்; இந்நாள் உனக்குத் தேன் மருவிய தாமரை மலர்க் கண்ணை வழங்கினோம். ஆதலின, தாமரைக் கண்ணன என்னும் பொருள் கொண்ட 'பதுமாக்கன்' என்னும் பெயரொடு விளங்குவாயாக. இத்தலம் தகைமை பெறு திருமாற் பேறெனப் பொலிவதாக! எனறருள் செய்து கோடி சூரியர்தம் கிரணங்களைத் தாங்கிய 'சுதரிசனம்' என்னும் சக்கரமா கிய ஒப்பற்ற படையையும் எங்கோன் உதவி,

வெல்லரிய செறுநரையும் இப்படையால் வெல்வாயால்
ஈண்டு நின்னாற், சொல்லியபேர் ஆயிரங்கொண் டெமைப்பூசை
புரிவார்க்குத் துகள்தீர்த் தென்றும், எல்லையிலா வீடளிப்பேம்
இங்கிவையன் றியுந்தீண்டச் சிவந்தா ராதிப், பல்குபெயர் கொண்
டெம்மைத் தொழுவோரும் முத்தியினிற் படர்வார் உண்மை. 14

'வெல்லுதற் கியலாத பகைவரையும் இச்சக்கரப் படையால் வெல்க. இவண் நின்னால் அருச்சனையாகச் சொல்லப்பெற்ற திருப்பெயர் ஆயிரமும் கொண்டெம்மைப் பூசனை செய்வார்க்குக் குற்றங்களைத் தவிர்த்து என்றும் வரம்பிகந்த முத்திப்பேற்றினை அளிப்போம். இவையே அன்றியும் தீண்டச் சிவந்தார் முதலிய பல திருநாமங்களைக் கொண்டெம்மை அருச்சிப்போரும் முத்தியிற் கலப்பார். ஈதுண்மை யாகும்!

தணிவொன்று மனமுடையார் புகழ்தீண்டச் சிவந்தபிரான்
சாதரூபர், மணிகண்டர் தயாநிதியார் பவளமலை யார்வாட்டந்
தவிர்த்தார் பாசப், பிணிவிண்ட சாகிசனர் திருமாற்குப் பேறளித்-
தார் எனும்பேர் எட்டும், அணிகொண்ட ஆயிரம்பேர்க் கொப்-
பனவாம் அரிமதிஎன் றருளிச் செய்தான். 15

'துணிவொன்று மனம் உடையார்' முதலிய திருப்பெயர்கள் எட்டும் ஆயிரம் திருப்பெயர்க்கொப்பனவாம் உளங்கொள்வாய்' என்றருளினர்.

பரபரப்பு நீங்கி அமைதியுடையோர் புகழ் நீண்டச் சிவந்தபிரான், சாதரூபம் என்னும் பொன்வடிவினர், நீல் மணியை ஒக்கும் கண்டமுடையவர், வற்ருத பெருங்கருணையர், பவள மலையை ஒக்கும் செம்மேனியர், வருத்தம் தவிர்த்தார், பாசநோயை விடுக்கும் வேத சாகைகளுக்குத் தலைவர், திருமாலுக்குச் சக்கரப் பேறறினை யருளியவர்.

நம்பிரான் வாய்மலர்ந்த மொழிகேட்டுப் புண்டரிக நயனத் தோன்றல், செம்பதுமத் தாள்இறைஞ்சிச் சென்னிமிசைக் கரங்கூப்பிச் செந்நின் றேத்தி, எம்பிரான் இந்நகருட் கணப்பொழுது வதிந்தவர்க்கும் இறவா வாழ்க்கை, உம்பர்வீ டளித்தருளாய் இன்னும்ஒரு வரம்அடியேற் குதவாய் என்று. 16

நம் தலைவர் அருளிய திருவாக்கைக் கேட்டுப் பதுமாக்கனர் செந்தாமரை மலர் போலுந் திருவடிகளை வணங்கிச் சிரமிசைக் கரங்குவித்து நேர்நின்று துதித்து 'எமபெருமானே! இந்நகர்க்கண் கணப்பொழுது தங்கினவர்க்கும் அழிவில்லாத வாழ்க்கையாகிய வீட்டுலகத்தை அளித்தருளாய். மேலும், ஓர் வரத்தை அடியேற்குதவாய்' என்று,

வள்ளலே என்பூசை கொண்டருளும் இவ்விலிங்கம் வணங்கப் பெற்ரோர், பள்ளநீர் வரைப்பின்உள சிவலிங்கம் எவ்வெவையும் பணிந்த பேறு, கொள்ளஅருள் எனவேண்ட வேண்டுவார் வேண்டியதே கொடுக்கும் எங்கோன், எள்ளருஞ்சீர் நெடியோனுக் கவையனைத்தும் அருள்செய்தவ் விலிங்கத் துற்ருன். 17

'வள்ளலே என்னுடைய பூசனையைக் கொண்டருளும் இச் சிவலிங்கத்தை வணங்கிஞேர் கடல்சூழுலகில் உள்ள சிவலிங்கங்கள் அனைத்தையும் வணங்கிய வாழ்வின் பயனைக் கொளள அருளுக' என வேண்ட. வேண்டுவார் வேண்டியதே கொடுக்கும் எம்மானர் புகழற்குரிய திருமாலுக் கவற்றை முற்றவும் அருள்செய் தவ்விலிங்கத்துட் புக்கார்.

கொழிக்குமணித் தடந்திரைநீர் இலஞ்சிதொறும் இனவாளை குதித்துப் பாயச், செழிக்கும்வளம் பொழிற்காஞ்சிப் பலதளியுள் மேதகைய திருமாற் பேற்றின், வழிச்செலவின் ஒருபோது வதிந்தவரும் மாருத பிறவிப் பாசம், ஒழிப்பரெனில் எஞ்ஞான்றும் அங்குறைவோர் தமக்கினியென் உரைக்கு மாறே

மணிகளைக் கொழிக்கும் பேரலைகளையுடைய நீர்நிலை தொறும் வாளை மீன்கள் துள்ளித் தாவ வளம் தழைக்கும் சோலை சூழ்ந்த காஞ்சியிலுள்ள பல திருக்கோயில்களுள் மேன்மை பொருந்திய திருமாற்பேற்றில்

வழிச் செலவால் ஒரு பொழுது தங்கினோரும் அழியாத பிறவிக்கு ஏதுவாகிய பாசம் ஒழிப்பாராயின எந்நாளும் அங்கு வாழ்வோர் தங்கள் பயனை உரைக்குமவகை எவன்?

திருமாற் பேற்றுப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்–1511.

---

## பரசிராமேச்சரப் படலம்.

---

அறுசீரடி யாசிரிய விருத்தம்

சுழிபாடு படும்உந்தி மலைமகளும் யோகியரும் துழாயி னானும்,
வழிபாடு செயவைகும் மணிகண்டர் மாற்பேறு வகுத்தாம்
பண்கள், கொழிபாடற் சுரும்பினஞ்சூழ் மருப்பொதும்பர் மாற்-
பேற்றின் குணபால் வேந்தர், பழிபாடிக் கொலைசெய்தோன்
பரசிரா மேச்சரத்தின் பான்மை சொல்வாம். 1

நீர்ச்சுழி தனது பெருமையை இழத்தற்கு ஏதுவாகிய கொப்பூழை யுடைய உமாதேவியாரும், யோகியரும், திருமாலும வழிபட எழுந்தருளி யிருக்கும் திருநீலகண்டரது திருமாற்பேற்றினை வகுத்துரைத்தோம். பண் தெள்ளுமபாட்டிசைக்கும் வண்டினங்கள் சூழ்கின்ற மணமுடைய சோலையையுடைய திருமாற்பேற்றிற்குக் கிழக்கில் வேந்தருடைய பழிச் செயல்களை யாவரும் அறிய எடுத்தோதிக் கொலை புரிந்தோன் தாபித்த பரசிராமேச்சரத்தின் நிலைமையைக் கூறுவோம்.

இரேணுகை கொலையுண் டெழுதல்

சிவம்பழுத்த பிருகுமுனி இடுஞ்சாபத் தொடர்ச்சியினால்
திருமால் முன்னாள், தவம்பழுத்தா லனையசம தக்கினியோ
டிரேணுகைக்குத் தநய னாகி, அவம்பழுத்த குறும்பெறியும்
இராமன்என வைகுறுநாள் அன்னை பால்ஓர், நவம்பழுத்த
தீங்குணர்ந்து தன்தாதை தனைஏவ நாடித் தேறி. 2

சிவஞானங்கனிந்த பிருகு முனிவர் கொடுத்த சாபத் தொடர்பால் திருமால் முனனோர் காலத்தில் தவம முதிர்ந்தாற் போன்ற சமதக்கினி முனிவரோடு இரேணுகைக்கு மகனாகிப் பாவம் பயக்கும் குறும்பர் ஆகிய

காட்டினை வெட்டி வீழ்த்தும் பரசிராமன் எனத் தங்குநாளில் தாயி னிடத்து ஓர் குற்ற முதிர்ந்த தீங்கினை அறிந்து தந்தையார் தன்னை ஏவ, நாடித் தெளிந்து, நவம்—புதுமை.

தாதைமொழி கடவாமை தருமமெனத் தனைஈன்று வளர்த்த தாயை, ஏதமுறக் கொலைசெய்து முனிஅருளால் மீண்டுய்ய எழுப்பி நின்றான், மேதகைய முனிமகிழ்ந்து வெகுளிதனை அறவிடுத்துச் சமாதி மேவும், போதவனை வெகுண்டெய்திக் காத்தவீ ரியன்கோறல் புரிந்தான் மன்னோ. 3

தாதையார் மொழி வழி நிற்றல் தருமமெனத் தனனைப் பயந்து வளர்த்த தாயாரைக் குற்றப்படக் கொலை செய்து அத்தந்தையின் அரு ளாற்றலால் மீண்டுயிர் பெற எழுப்பி அவராணையில் நினறனன. சம தக்கினி முனிவர் மகிழ்ந்து கோபத்தை முற்றவும் கைவிட்டு நிட்டையிற் பொருந்துங் காலைக்கார்த்தவீரியன்சினங்கொண்டு அவரைக்கொனறனன்.

பரசிராமன் தவம்புரிதல்

மிடல்படைத்த திறல்திண்டோள் இராமன்அது நோக்கிநெடு வெகுளி மீக்கொண், டடல்படைத்த வயவேந்தர் குலமுழுதும் இறுப்பேன்என் றார்த்துப் பொங்கிக், கடல்படைத்த விடமயின்றோன் அருள்வேண்டி விரைந்தெய்திக் கலந்தார் தங்கள், உடல்படைத்த பேறெய்துங் காஞ்சியின்ஓர் இலிங்கம்அமைத் தருச்சித் தேத்தி. 4

உள வலிமையும், வலிமையும் திண்மையும் அமைந்த தோளும் உடைய இராமன் அதனை நோக்கிப் பெருஞ்சினம் மேலிட்டு வனபடை கொண்ட வலிய வேந்தருடைய மரபு முழுவதையும் அழிப்பேன' என ஞரவாரித்துக் கிளர்ந்து கடல் தோற்றுவித்த விடத்தை உண்டோன் அருளைப் பெற விரும்பி விரைந்தடைந்து சேர்ந்தார் உடம்பு படைத்த பயனை அடைதற்கு இடனாகிய காஞ்சியின்கண் ஓரிலிங்கம அமைத் தருச்சித்தேத்தி,

ஆற்றரிய தவம்ஆற்றி ஐம்புலனும் அகத்தடக்கி அமர்ந்தா னாகக், கீற்றிளவெண் பிறைக்குழவி தவழுநெடுஞ் சடிலமுடிக் கிழவோன் அந்நாள், மாற்றரும்பே ரருட்கருணை கூர்ந்தருளி அவன்அன்பின் வாய்மை காண்பான், தோற்றமுறு மறைதேறாத் திருவடிகள் நிலந்தோய வருகின் றானால். 5

ஐமபுலன்களையும் புறஞ்செல்லாது அகத்தில் அடக்கிச்செய்தற்கு எளிதாகாத தவத்தைச் செய்து கொண்டிருந்தனனாக, இளம்பிறை தவ ழும் சடை முடிப் பெருமானார் அப்போது திரிபில்லாத பேரருட் கருணை கொணடு அவன உண்மை அனபினைக் காணபான விளககமிகும வேதங்கள் காணாத திருவடிகள் நிலத்தில் தோய எழுந்தருளுகினறனர்.

பெருமான் புலியனாய் வருதல்

கலி விருத்தம

மால்வரை ஈன்ற வயங்கிழை மாதும்
நூல்வரை மார்புடை நோன்றகை மாவும்
வேல்வலன் ஏந்திய வித்தக னுந்தன்
போல்வடி வந்தழு விப்புடை நண்ண. 6

விளங்கிழை அணிந்த உமை அம்மையாரும், முப்புரி நூல் பொருந்திய மலை போலும் மார்பினையுடைய வலிய தும்பிக்கையுடைய யானையாகிய விநாயகப் பிரானும், வேலை வலக்கரத்தேந்திய முருகப் பெருமானும, தன்னையொப்பப்பொய்ப் புலி வடிவங்கொண்டுடன் வரவும்

நான்மறை வள்ளுகிர் நாய்புறஞ் சூழக்
கான்மலர் சேர்த்த செருப்பெழில் காட்ட
ஊன்மலி காழக மீதில் உறுத்த
தோன்மலி கச்சணி தோன்றி விளங்க. 7

நான்கு வேதங்களாகிய கூரிய நகங்களையுடைய நாய்கள் புறஞ் சூழவும், அடி மலரிற் சேர்த்த செருப்பின அழகு விளங்கவும், சிதைந்த கரிய உடை மீதில் யாத்த தோலாலாகிய உதர பந்தனம் புலப்பட்டுத் தோன்றவும்,

வாசனையுடைய மலரென்னும் பொருள் தரக் கான் மலர் என வந்தது நயம்.

ஏரியல் கொண்ட சுவல்மிசை இட்ட
வாரினன் உட்குந டையினன் மாணச்
சீரியல் கோக்கொலை செய்புலி யன்போல்
ஆரிருள் மைத்தன மேனிய னாகி. 8

அழகுடைய தோளில் இட்ட வார்களையுடையவன்; கண்டோர் அஞ்சும் நடையை யுடையவன்; சிறப்புப் பொருந்திய பசுக்களை இழிவுறக் கொலை செய்யும் புலையனைப்போலச் செறிந்த இருள் மேலும் கறுத்திடுத லொத்த மேனியனாகி,

வெங்கதிர் உச்சியின் மேவிய காலை
அங்கவழ் பூம்புனல் ஆற்றிடை எய்திப்
பங்கமில் செய்வினை பான்மை தொடங்கும்
புங்கவ மாதவன் றன்னெதிர் போந்தான். 9

சூரியன் உச்சியில் மேவிய நடுப்பகலில் அழகு பெருகுகின்ற பூக்கள் நிரம்பிய பாலியாற்றிடை இறங்கிக் குற்றமில்லாத செயல்களாகிய நீர்க்கடனைத் தொடங்கும் பெருந்தவனாகிய உயர்ந்தவன்முன் போந்தனன்.

கொட்கு மனத்தை ஒருக்கிய கொள்கை
வட்குற ஐம்பொறி வாட்டும் இராமன்
கட்கமழ் கின்ற களிப்பின னாகித்
துட்கென நேர்வரு சோதியை நோக்கா. 10

சுழல்கின்ற மனத்தை ஒரு வழிப்படுத்திய கொள்கையால் செயல் அடங்க ஐம்பொறிகளையும் வருத்தும இராமன் கள்ளின நாற்றம் புறத்தே வீசுகின்ற களிப்புடையனாய் அச்சந்தோனற வருமபரஞ்சுடரை நோக்கி,

வாய்திற வாது மலர்க்கை அசைப்பின்
சேயிடை ஏகெனச் செப்பலும் முக்கண்
நாயகன் அண்மையின் நண்ணினன் போபோ
நீயென விள்ளவும் நீங்கல னாகி. 11

வாயைத் திறவாது மலரை ஒக்கும் கையை அசைத்தலினால் தொலைவிற் போ எனக் குறிப்பினாற் கூறலும் சிவபிரானார் பெரிதும் நெருங்கினர். தூரத்தே 'போ போ' நீ, என்று வாய் விட்டுக் கூறவும் நீங்கலனாகி,

ஷை வேறு

மாயனொடு நான்முகன் மனக்குநனி சேயோ
னயஇறை சாலஅணி மைக்கண்உற லோடும்
தூயமுனி சீற்றமொடு சொல்லும்அற வாய்மை
போயபசு ஊன்நுகர் இழிந்தபுலை யாநீ. 12

திருமால் பிரமர்தம் தவத்திற்கும் நெடுந்தொலைவினனாகிய பெருமான் மிக்க அணிமையில் வருகாலை புனித முனிவனாகிய பரசிராமன் கோபத்தோடு கூறுவான்; 'மெய்யறத்தைக் கைவிட்டுப் பசுவினது இறைச்சியை நுகரும் இழிந்த புலையனே! நீ,'

தருக்குறுவ தென்னைஇது தண்டமது செய்வார்
ஒருத்தர்இவண் இல்லைஎன உன்னினைகொல் என்றான்
மருத்துணர் நெடுஞ்சடை மறைத்துவரு பெம்மான்
அருத்தமறை நாய்கள்தமை ஏயினன் அவன்பால். 13

இறுமாப்புறுவதிஃது எவன. 'தண்டம் செய்வோர் ஒருவரும் இங்கில்லை' என்றுட் கொண்டனை போலும்' என்றனன். மணமுடைய பூங்கொத்துக்கள் மருவிய நீண்ட சடையினை மறைத்து வரு பெருமானார் பொருளமைந்த வேதங்களாகிய நாய்களை இராமன் மேல் ஏவினர்.

கொற்றவடி வேற்கடவுள் கோள்இப முகத்தோன்
உற்றெழு வெகுட்சியரின் ஓடிஇரு கையும்
பற்றினர்கள் நாய்புடை வளைப்பஇரு பாலர்
வெற்றியுறு கைப்படு விழுத்தவனை நோக்கி. 14

வெற்றியையுடைய வடித்த வேலேந்திய முருகக் கடவுளும், வலிய யானைமுக முடைய பிரானும் சினங்கொண்டவரைப் போல ஓடி இரு கைகளையும் பற்றியவராய் நாய் கவ்வும்படி இருபுறத்தும் வளைத்துக் கொள்ள அச்சிவ குமாரர் தம் வெற்றி மிகுந்த திருக்கைகளில் அகப் பட்ட சிறந்த தவத்தையுடைய பரசிராமனை நோக்கி,

அந்தோ பாவம் ஐயம் இரக்கும் பார்ப்பான்நீ
நொந்தாய் போலும் என்று நுவன்றங் கிமவெற்புத்
தந்தாள் வெவ்வாய் நாயை விலக்கத் தவநோன்பின்
நந்தா வாய்மை இராமனும் நம்மான் முகம்நோக்கி. 15

'' அந்தோ! பாவம்! பிச்சை வேண்டும் பார்ப்பானே! நீ நொந் தனை போலும்'' என்று கூறி இமயவல்லியார், கொடிய வாயினையுடைய நாய்களை விலக்கிய போதில் தவ விரதத்திற் கெடாத இயல்பினையுடைய பரசிராமனும் நம பெருமான் திருமுகத்தைப் பார்த்து,

வேறு

எனைப்புடை உற்றாய் தீண்டுவ தென்னை தறன் அன்றால்
உனக்கிது பாவங் காண்என எங்கோன் உறுபாவம்
நினக்குள தோசொல் எனக்குள தோநீ தான்யாரே
எனக்கொரு கேள்போல் தோன்றிடு கின்றாய் எனஅன்னோன்.

'என் மருங்கில் நெருங்கினை ; மேலும தீண்டுதல் என்னை ; இது தருமம் அன்று. உனககிச் செயல் பாவம ஆகும்'' என, எம்பிரான் அடையும் பாவம நினக்குளதோ? எனக்குள்ளதோ? சொல். 'நீ யாரோ? 'எனக்கோர் உறவினன போலக் காணப்படுகின்றாய்' என்றருள, அபபரசிராமன,

புண்ணிய பாவங்கள் உயிர்களுக கன்றித் தனக்கில்லை என்றனர். இறைவன் உறவினன : 'அப்பன் நீ' தாண்டகம் காண்க

என்னிது சொற்றனை யான்சம தக்கினி என்பான்றன்
நன்மகன் ஆகுவன் நீபுலை யோன்எனை நாணுமே
உன்னுற வாக உரைத்தது நன்றென ஒப்பில்லான்
மன்னிய சீர்ச்சம தக்கினி தன்மகன் நீயேயோ. 17

'என்னே இங்ஙனம கூறினை. யான் சமதக்கினி முனிவர்க்குச் சற்புத்திரன் ஆவன. நீ புலையோன ஆவை. எனனை நாணமின்றி உனனுடைய உறவினனாகக கூறுதல் நனறு' என்ன, உவமையில்லா தான நிலைபெற்ற சிறபபினையுடைய 'சமதககினி முனிவர் மகன நீதானே!'

கழிய எனக்குற வாயினை ஐய மிலைக்கண்டாய்
இழிவற நின்னை அளித்த இரேணுகை என்பாள்என்
பழுதறு சீர்மனை யாட்கினி யாளாம் பரிசாலே
விழுமிய நீயும் எனக்கினி யாய்காண் எனவிண்டான். 18

'எனக்கு நெருங்கிய உறவினன் ஆனாய். சிறிதும் சந்தேகம் இல்லை. உயர்வுற நினை ஈனற இரேணுகை என்று சிறப்பிக்கப்படு வோள் குற்றமற்ற சிறப்புடைய என மனையாளுக்கு இனியளாம் இயல்பி னாலே சிறந்த நீயும எனக்கினியை; இதனை அறிதி' என விளம்பினர்.

இராமன் நெருப்பெழ நோக்கி வெகுண்டனன் எல்லாரும்
பராவுறு வேதியன் என்எதிர் பார்த்திது சொற்றாய்க்கு
விராவிய தண்டம்உன் நாக்கரி விக்கும் அதேயன்றித்
தராதல மேற்பிறி தில்லென லோடுந் தலைவன்றான். 19

பரசிராமன கண்கள் தீயுமிழப் பார்த்து வெகுண்டு 'யாவரும் போற்றும் வேதியன் ஆம் எனமுன் நின்று இது கூறிய உனக்குப் பொருந்திய தண்டம் உன நாவை அரிவிக்கும் அஃதே அன்றி உலகில் வேறில்லை எனனலும்' தலைவன்,

யாவரும் அச்சுறு தாய்கொலை ஏன்றுசெய் மாபாவி
ஓவில் அருட்குணம் ஒன்றிலை என்புடை வல்லாயேல்
நாவரி வாய்சிர மும்அரி வாய்இனி நாணாய்கேள்
ஓவறு கேளிர் தமைத்தழு வாதவர் ஆர்உள்ளார். 20

எத்துணைக்கொடியரும் அஞ்சும் தாய் கொலையை மனம் இயைந்து செய்த பெரும் பாவி! நீங்கரிய அருட்குணம் சிறிதும் இல்லை. வல்லமை உடையையாயின் எனபால் நாவையும் அரிவாய்; சிரத்தையும் தடிவாய்; நாணிலி! இனிக்கேள். நெருங்கிய உறவினரைத் தழுவாதவர் யாவர் உலகினில் உள்ளனர்.

பாம்புட னேனும் பழமை விலக்கார் தமராேனோர்
வேம்பினை ஒப்பக் கைப்பினும் விள்ளார் உலகத்தோர்
தோம்பல பேசிச் சுற்றம் வெறுக்குங் கொடியோனைத்
தேம்பிடும் வண்ணஞ் செற்றிடல் வேண்டும் எனவெம்பி 21

உலகவர் பாம்புட னெனினும் பழகிய நட்பைக் கைவிடார். உறவி னர் வேம்பு போலக் கைக்கும் செயலைப் புரிந்தாலும் கைவிடார். அவ்வாறாகக் குற்றம் பல கூறிச் சுற்றத்தை வெறுக்கும் கொடியோனாகிய உன்னை மெலியும்படி தாக்குதல் வேண்டும்' எனக்கூறி வெதும்பி,

"பேயோடு பழகுறினும் பிறிவதரி தரிதென்று, தூயோர்கள் மொழிவர்" (குசேலோபாக்கியானம்) "கைச்சாலும் சிறுகதலி இலை வேம்பும் கைக்கொள்வர்" (திருவாசகம்).

சுணங்கனை யெல்லாம் மேற்செல ஏவித் தூரிசோதிக்
கணங்கெழு கல்லும் ஓடும் எடுத்துக் கடிதோச்சி
அணங்கொரு பாலான் எறிவுழி அம்மா முனிவெந்தீ
இணங்க வெகுண்டான் தண்டம் எடுத்தான் புடைவீசி. 22

நாய்களை மேற்செல்ல முடுக்கிக் குற்றப்பட இகழ்ந்து கூறித் திரண்ட கல்லும் ஓடும் எடுத்து அணங்கினை ஒருபாலுடைய பிரான் வலிவுற வீசித் தாக்குழி அப்பெரு முனிவரன் வெவ்விய தீயை ஒப்ப வெகுண்டனனாய்த் தண்டாயுதத்தை எடுத்துச் சுழற்றி,

ஞாளிகள் தம்மை அதுக்கினன் நள்ளலர் ஊர்செற்ற
மீளியின் மேற்செல விட்டனன் வேழ முகக்கோன்அக்
கோளுறு தண்டம் முரித்திரு கூறு படுத்திட்டான்
காளியொ டாடிய கண்ணுதல் வெய்ய கதங்காட்டி. 23

உதட்டைக் கடித்து நாய்களைப் பயமுறுத்தினன். பகைவர் முப்புரங்களை எரித்த சேவகன்மேற் செல்ல அத்தண்டத்தை விட்டனன். யானை முகப்பிரானார் அவ்வலியமைந்த தண்டத்தை ஒடித் திரு துண்டாக்கினர். காளியுடன் வாது செய்து நடம்புரிந்த பிரானார் வெவ்விய சினம் தோன்ற நடித்து,

வன்மொழி கூறிப் புலையர் தொழுத்தை மகனும்நீ
என்மகன் நோவத் தண்டம் எறிந்தாய் தெய்வத்தால்
அன்னது பக்கது தாய்கொலை அஞ்சாய் அருளில்லாய்
நின்னை இனிக்கொல் வேனென நேர்ந்தான் கரம்ஓச்சி. 24

கடுஞ்சொற் கூறிப் 'புலையருள் அடிமைப்பெண் மகன் ஆவாய் நீ என்மகன் மேல் வருந்துமாறு தண்டம் எறிந்தனை. தெய்வானுக்கிரகத்தால் அத்தண்டம் முரிந்தது. தாய் கொலை அஞ்சாதவனே! அருளில்லோனே! இப்பொழுது உன்னைக் கொல்வே'னெனக் கரத்தை ஓச்சி நெருங்கி வந்தனர்.

நேர்ந்திடு காலையில் நீள்மறை ஞாளிகள் முன்னாகச்
சார்ந்து துரந்து முடுக்கலும் அத்தகை யான்அச்சங்
கூர்ந்து பதைப்புடன் ஓடினன் வெண்சிறு கூன்திங்கள்
வார்ந்த சடைப்பெரு மானும் விரைந்து தொடர்ந்துற்றான். 25

நெருங்குகையில் நீண்ட வேதநாய்கள் முற்படச் சார்ந்து துரத்தி ஓட்டுதலும், அத்தவமுனி அச்சம் மிகுந்து உள்ளம் பதைபதைத்து ஓட்டெடுத்தனன. இளம் பிறையை அணிந்த நீண்ட சடையுடைப் பெருமானாரும் விரைந்து தொடர்ந்தனர்.

அறுசீரடி யாசிரிய விருத்தம்

ஒற்றையங் கரத்தாற் பற்றிக் கோடலும் உடையான் தீண்டப்
பெற்றுமெய்ப் புளகம் போர்ப்பப் பெரிதுளம்மகிழ்ந்தான் இச்சீர்ப்
பற்றியும் இழிஞன் தீண்டப் படுபெருஞ் சங்கை கொண்டு
முற்றவெந் துயரின் மூழ்கி வெகுண்டனன் மொழித லுற்றான். 26

ஓர் கரத்தால் பற்றிக் கொள்ளுதலும் உடையவன் தீண்டப் பெற்றமையால் மயிர்க்கூச் செறிதலால் பெரிதும் உள்ளம் மகிழ்ந்தனன். இச்சிறப் புண்டாகியும் இழிசனனால் தீண்டப்படும் பெருங்கவலையைமனங் கொண்டு முற்றவும் கொடுந் துனபத்தில் மூழ்கிச் சினங்கொண்டனனாய் மொழிதலுற்றான்.

மறிகடல் வரைப்பின் யாங்க ணுயினும் மறையோன் றன்னைப்
பொறிஇலி இழிந்த வாழ்க்கைப் புலைமகன் வெருவ ராமே
செறிஅழுக் கடைந்த கையால் தீண்டுமே அவ்வச் சாதி
பிறிவினிற் பிறழா வண்ணம் பிஞ்ஞகன் நடாத்துங் காலை. 27

'அவரவர் வருணப் பிறிவொழுக்கத்தில் திரிபின்றிச் செல்லச் சிவ பிரானார் ஆணை செலுத்துங்காலை, மறித்து வீசுகின்ற அலைகடல் சூழ்ந்த அவனியில் எங்காயினும அறிவிலியாகிய இழிந்த வாழ்க்கையை யுடைய புலையோன் பயப்படாமே செறிந்த அழுக்குடைய கையால் வேதியனைத் தீண்டுவனோ?'

இன்னினி உனது சென்னி இறுவது தேற்றங் காண்டி
புன்னெறிக் குலத்தோய் என்னப் புகன்றுதன் உளத்தேவெம்பிப்
பன்னரும் புலையன் றன்பால் பட்டுளேன் அந்தோ சீசீ
என்னுடைத் தவமும் யானும் அழிந்தவா றெனப்பு ழுங்க. 28

'இழிந்த ஒழுக்க முடைய குலத்தவனே! இப்பொழுதே உன் தலை குறைபடுவதனை நிச்சயமாகக் கண்டு கொள்? என்று கூறிக் கோபித் துப் 'பேசவும் தகாத புலையன் வயப்பட்டேன். அந்தோ! சீ சீ! யானும், என் தவமும அழிந்த வகை என்னே!' என்றுள்ளங் கொண்டு வெதும்ப,

விழிபயில் நுதலும் முந்நீர் விடம்பொதி மிடறுங் கூர்வாய்
மழுமறிக் கரமுஞ் செங்கேழ் வடிவமும் கரந்து சாலக்
கழிபுலை வேடந் தாங்கி யெழுந்தருள் கருணைத் தோன்றல்
இழிவறும் இராமன் கூற்றுச் செவிமடுத் தினைய சொல்வான். 29

நுதற் கண்ணும், கடல் விடத்தைப் பொதிந்த கண்டமும், திருக் கரத்து மழுவும், மானும், சிவந்த திருமேனியும் ஆகிய இவற்றை மறைத்து மிக இழிந்த புலை வடிவங் கொண்டெழுந்தருள் கருணைப் பெருமான் இழிவு நீங்கும் இராமனது மொழியைத் திருச்செவி ஏற்றிதனை அருளுவார்.

வடுவறு மறைவ லாளர் மரபினை யெனில்யான் தீண்டப்
படுகுவை யல்லை நீதான் பார்ப்பனக் கடைய னுவை
அடுதொழிற் புலையன் யான்அவ் வொழுக்கினிற் சிறந்த வாற்றால்
இடுகிடைத் தாயைக் கொன்றோய் என்னினுங் கடையன்நீகாண். 30

'மறைவழி நின்றொழுகுவோர் மரபினில் வந்த குற்றமற்ற தூயை நீ எனில் என்னால் தீண்டப்படமாட்டாய். பார்ப்பனருட் டோன்றிய கரும

சண்டாளனுவாய். கொல்லும செயலையுடைய புலையன் யான் அவ்வொழுக் கத்தின் மிக்கமையால், சிற்றிடைத் தாயைக் கொனரேனே! நீ என்னி னும் கடையன் என்றறிதி!

இழிஞருக் கிழிஞன் ஆனாய் எனக்குநீ அடிமை எய்திக்
கழிபெரு மகிழ்ச்சி கூர்வாய் உனக்கியான் களைக ணவேன்
மொழிவது சரதம் என்றான் அவ்வுரை முனிவன் கேளாப்
பழியுறு கதையில் தாக்கப் படும்அர வென்னப் பொங்கி. 31

'பிறப்பான் இழிந்தவருள்ளும் வைத்துச் சிறப்பால் இழிந்தவ னுயினை. ஆதலின், எனக்கு நீ அடிமையாகி மிகப் பெருமகிழ்ச்சியிற் றிளைப்பாய். யானுனக்கு ஆதரவு தருவேன. இது மெய்யுரையே எனறருளினர். அதனை முனிவரர் கேட்டுத் தண்டத்தால் தாக்கப்படும் பொல்லாங்கு மிகும் பாம்பு போலச் சினந்து,

அண்ணலை மலர்க்கை ஓச்சி அடித்தனன் அமரர் தேறாப்
புண்ணிய முதல்வன் றானும் பொருக்கென முனிவன் றன்னைத்
திண்ணிய இரண்டு கையும் சிக்கென ஒருகை பற்றிக்
கண்ணறக் கொடிறு வீங்கப் புடைத்தனன் கமலக் கையால். 32

பெருமானை மலர்போலும் கையை வீசி அடித்தனர். தேவருந் தெளியாத புண்ணிய முதல்வரும் விரைய முனிவர் தம்முடைய இரு கைகளையும் இறுக ஒரு கையாற்பற்றி இரக்கமின்றிக் கன்னம் வீங்க மலர்க் கையால் புடைத்தனர்.

முறைமுறை அதிரத் தாக்கி இருவரும் முனைந்து வெம்போர்
மிறையுறப் புரித லோடும் மெல்லியற் பிராட்டி நோக்கி
இறைவன்நின் னடிக்கீழ் அன்பின் இனியவன் வருந்தா வண்ணம்
பொறைகொளப் புடைத்தி என்றாள் புனிதனும் மெலிதின் தாக்க.

மாறி மாறி நடுக்கமுறத் தாக்கி இருவரும் முற்பட்டுக் கொடிய போரை வருத்தம் மிகப் புரியுங் காலை, அருள் வடிவாம் அம்மை கண்டு 'இறைவனே! நின்னடிக்கீழ் அன்பினுல் இனியனுகிய அவன் வருந்தாத-படி பொறுக்கும் அளவில் புடைத்தி' என்றருளினர். புனிதனும் மெலி தாகத் தாக்க,

கடன்அறி முனிவன் வாகை தனதெனக் கருதி வாங்கும்
வடவரைச் சிலையோன் மார்பிற் கரங்கொடு வலிதின் தாக்கி
மிடலுறத் தெழித்தா னுக விண்ணவர்க் கரிய கோமான்
கெடலருஞ் சினமீக் கொண்டான் போல்மறைக் கிழவன் றன்னை.

கடப்பாட்டை உணர்ந்த பரசிராமர் வெற்றி தனதென மதித்து மேரு மலையை வில்லாக வளைக்கும் பிரானுரைது மார்பிற் கரத்தால் வலிமையொடும் தாக்கித் திண்ணிதாக உரப்பினராகத் தேவர்க்கரிய பிரானும் தணியாத கோபம் பொங்கினவரைப் போல வேதியரை,

கன்றிடக் கரங்கள் காலிற் பிணிப்புறக் கட்டி நோன்தாள்
ஒன்றினல் உருட்டிச் சேணின் உந்திஞன் அவனை வேத
வன்றிறல் ஞாளி சுற்றி வளைந்தன மருங்கு நின்ற
வென்றிகொள் மைந்தர் நோக்கி விலாவிறச் சிரித்திட் டாரால். 35

கைகளினும், கால்களினும வடுவுண்டாக இறுக்கிக்கட்டி வலிய தாளொன்றால் உருட்டிப்பின் நெடுந்தொலைவுறச் செல்லத் தூக்கி யெறிந் தனர். அப்பரசிராமரை மிக்க வலியுடைய வேதங்களாகிய நாய்கள் சுற்றிச் சூழ்ந்தன. பக்கத்திருந்த வெற்றி வாய்ந்த சிவகுமாரர்கள் கண்டு பெருகச் சிரித்தனர்.

விலா இறச் சிரித்தல்: "விலாஇறச் சிரித்திட்டேனே" (திருமுறை)

திருவிளை யாட்டான் அண்ணல் சேவடிக் கமலத் துந்தப்
பருவரும் உளத்த ஞகிப் பசும்புதல் செறிய நீண்ட
தருவடித் தலத்தின் ஆவி சாம்பிஞன் ஒத்து வீழ்ந்தான்
மருமலர்க் கருமென் கூந்தல் இரேணுகை மைந்தன் அம்மா. 36

திருவிளையாட்டாகப் பெருமான் திருவடி மலரால் தூக்கி எறியத் துன்புறும் மனததராகிப் பசிய புதர் செறிந்த நீண்ட மரத்தடியில் உயி ரொடுங்கினவரைப் போல மணமலரை யணிந்த கரிய மெல்லிய கூந்தலை யுடைய இரேணுகை மைந்தஞர் விழ்ந்தனர்.

அடங்கருந் துயரத் தாழும் அவ்வுழி வேரிக் கஞ்சத்
தடம்புனல் குடைந்து வாசந் தாங்கிமென் மலர்ப்பூஞ் சோலை
இடந்தொறும் வதிந்து வீழ்ந்தார் இன்னுயிர் தளிர்ப்பச் செல்லும்
மடந்தைய ரென்ன மெல்லப் படர்ந்தது மலையத் தென்றல். 37

பொதிய மலையின் இளங்காற்று, கரை கடந்த பெருந்துன்பத்துள் மூழ்கும் அந்நிலையில் தேனுடைய தாமரை ஓடையிற் படிந்து மணத்தைக் கொண்டு மெல்லிய மலர்களையுடைய பொலிவுள்ள சோலை தொறும் புகுந்து, விரும்பிய கணவர் தம் இனிய உயிர் தழைப்ப நெருங்கும் மக ளிரை ஒப்ப ஏற்றுப் பையப்பையத் தவழ்ந்தது.

தேம்பொதி இளங்கால் மேனி தைவரத் தெளிவு தோன்றி
மேம்படும் அயர்ச்சி நீங்க விழித்துணை விடுத்து நோக்கித்
தேம்பிஞன் இடும்பைக் கெல்லை யாயிஞன் திரியாச் சிந்தை
ஏம்பலின் மறையோன் நெஞ்சத் திவைஇவை எண்ண லுற்ருன்.

இனிமை நிறைந்த இளங்காற்று உடம்பை வருடத்தெளிவுபிறந்து மிக்க தளர்ச்சி ஒழியக் கண்களைத் திறந்து பார்த்துத் துன்பத்திற்குக் கொள்கலமாய் மெலிந்தான். பிறழாத சிந்தையால் வருந்துதல் இல்லாத மறை முனிவன தொடர்ச்சியாகப் பின வருமாறு எண்ண லுற்றனன்.

பரசிராமன் துன்புறுதல்

மறையொ ழுக்கம் வழாநெறி வாய்மையோர்க்
கிறைவ னும்முனி வன்குலத் தெய்தினேன்
நிறைய வேதமும் அங்கம் நியாயமும்
முறையின் ஓதினன் மூவறு கல்வியும். 39

'வேத வொழுக்கத்தி னின்றும் வழுவாத உண்மையாளர்க்குத் தலைவராகும் முனிவா மரபிற் பிறந்தேன். வேதங்களும், அங்கங்களும், நியாய நூலும பதினெண் புராணமும் முறைப்படி முற்றவும் ஓதினேன்.'

பன்னெ டும்படை யாவும் பயின்றுளேன்
இன்ன னைய எனக்கிது காலையின்
முன்னை வல்வினை மூட்சி விளைந்தவா
றென்ன பாவம் எவர்இது தாங்குவார். 40

'போர்க்குரிய படைக்கலப் பயிற்சி யுடையேன். கற்றுத் துறை போய எனக் கிதுபோதில் முற்பிறப்புக்களிறசெய்த தீவினைமுதிர்ச்சியின் பயனுய் வெளிப்பட்ட வகை எனனே போலும்! எவரே என்போல இத்துணை இடும்பைக்கிலக்காவர்.'

என்னை ஈன்றவள் வெம்பழி எய்துறீ இக்
கொன்னும் என்னுற் சிரங்குறை பட்டனள்
பின்னர் எந்தையும் பேதை அரசனுல்
சென்னி இற்றுச் சிதைந்தனன் அம்மவோ. 41

'என்னைப் பயந்த தாய் கொடிய பழி சுமந்து வருந்தும் என்னுற் றலை அறுபட்டனள். பின்னர் என்றந்தையும் அறிவிலியாகிய காத்த வீரியனுல் சிரமிழந்து உயிர் விட்டனன். அந்தோவே!

ஈண்டு மற்றும் இழிஞன் புலைக்கரந்
தீண்டி என்னை அவமதி செய்திட
மூண்ட வெம்பழி மூழ்கியும் ஐயவோ
மாண்டி லேன்உயிர் வல்வினை யேனரோ. 42

'மேலும், இத்தவ நிலையினும் புலையன் றன்னுடைய இழிந்த கரங்களால் தீண்டி என்னைப் பழித்திட, முதிர்ந்த கொடிய பழிகளில் மூழ்கியும் ஐயகோ! உயிர் விடுகிலேன் தீவினையேன்!'

கவள மாகக் கடல்விடம் உண்டருள்
சிவனை ஏத்துநர் செல்லல் உறுர்களால்
பவன்அ டித்துணை பற்றியும் என்இடர்க்
கவதி கண்டிலன் அற்புதம் அற்புதம். 43

கடலில் உதித்த விடத்தைக் கவளம்போல உண்டருள் செய் சிவ பிரானைப் போற்றுநர் துனபம அடையார்கள். பிரான் அடித்துணையைப் பற்றியும் என் துன்பத்திற்கு முடிவு காண்கிலேன. வியப்பிது வியப்பிதே!

பவன்—அழிவில்லாதவன்; உலகத் தோற்றத்திற்கு நிலைக்களனாக வுள்ள காரணமானவன்.

இன்பஞ் செய்தலின் சங்கரன் எம்பிரான்
இன்பம் ஆக்கலின் சம்பு இடும்பைநோய்
என்ப தோட்டும் இயல்பின் உருத்திரன்
என்ப ரால்அவை என்னிடைப் பொய்த்தவோ. 44

எமது பெருமான் உயிர்களுக் கின்பத்தைச் செய்தலின் சங்கரன்; இன்பத்தை உண்டாக்குதலின சம்பு; துன்பத்திற்குக் காரணமான நோயை ஓட்டும் இயல்பினால் உருத்திரன் என்று கூறுவர் அவை முற்றும் என் கண் பொய்பட்டனவோ?

"நண்ணினர்க்கு நல்லன், சலமிலன் பேர் சங்கரன்" (திருவருட் பயன்.)

பேதை நீரிற் பெரும்பிழை செய்துளேன்
ஆத லால்இவ் வருந்துயர் எய்தினேன்
பூத நாதனைப் போதப் பழிச்சினன்
ஏதந் தீர்வல் எனத்துணிந் தேத்துவான். 45

அறிவின்மையாற் பெருந்தவறு புரிந்துளேன்; ஆதலின், அதன் பயனாகிய பொறுத்தற்கரிய துன்பத்தை அடைந்தேன். இனி, ஆன்ம நாயகனைப் பெரிதும் துதிசெய்து என்னுடைய துன்பத்தைப் போக்கிக் கொள்வேன்' என உறுதி கொண்டு துதிப்பான்.

வேறு

மூவா தபடைப் புமுதற் றொழில்ஐந்
தோவா மைஇயற் றிஉயிர்த் தொகைகள்
தாவா மலமூன் றும்அறத் தருவாய்
ஆவா அடியேன் உன்அடைக் கலமே. 46

'கெடாத சிருட்டி முதலான தொழில்கள் ஐந்தனையும் ஒழியாது செய்து கெடாத மல மூன்றும் நீங்க அருள் செய்யாய். ஆவா! அடியேன் உன் அடைக்கலப் பொருள்.

ஓவாமை இயற்றல்; "போக்கு வரவு புரிய" (சிவஞா. சூ. 2.) என்னும் மூலமும், 'இறத்தல் பிறத்தல்களைப்புரியும் வண்ணம்' என்னும் ஆசிரியர் உரையும், புரிதல்—எப்பொழுதும் மேற்கோடல் என்னும் விசேட வுரையும் நினைவு கூர்க. மலம் கெடாமையும், மலவலி கெடுதலும் கொள்க. ஆவா, இரக்கச்சொல்.

படியா தியபற் பலதத் துவமாய்க்
குடிலாந் தம்அகன் றகுரூஉச் சுடரே
முடியா முடிவே முதலா முதலே
அடிகேள் அடியேன் உன்அடைக் கலமே. 47

'மண்முதலாம் பலப்பல தத்துவமாகியும், நாதாந்தத்தையும் கடந்த நிறமுடைய ஒளியே' மாசங்காரத்தைச் செய்வோனே! அவாந்தர முதல்வர்களுக்கு முதன்மை தருவோனே! சுவாமிகளே! அடியேன் உன் அடைக்கலப் பொருள் உலகை முடித்தலின் 'முடிவே' என்றனர்.

அந்தத்தைச் செய்யும் முதல்வனை 'அந்தம்' என்ருற்போல.

உமையாள் ஒருபால் உடையாய் முறையோ
இமையா சலவில் இறைவா முறையோ
அமையா விடமுண் டமைவாய் முறையோ
தமைநா டினர்தந் தலைவா முறையோ. 48

'உமையம்மையை ஒரு பங்கிலுடையோய் முறையோ! மேரு மலையை வில்லாக உடைய இறைவனே முறையோ! பிறருண்ணற்காகாத விடத்தை உண்டும அமைந்தவனே முறையோ! தம்மை விரும்பினரை அடிமை கொண்டருளுந் தலைவனே முறையோ!'

மேருவின் நிகழ்ச்சியை இமையத்திற்கு ஏற்றிக் கூறுதல் வழக்கு. "இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்" (கலி. 38:1.)

கச்சிப் பதிஎய் துபுநின் கழல்கள்
நச்சிப் பணிசீர் நரர்வா னவருள்
இச்சித் தபெறு தவரே எனினும்
பொச்சத் தொடுபோ யினர்தாம் உளரோ. 49

'காஞ்சியை எய்தி நின்னுடைய திருவடிகளை விரும்பிப் பணிந்த மக்களுள்ளும் தேவருள்ளும் விருமபிய வரங்களைப் பெருது போந்தார் உளர் என்னினும், குற்றத்தொடும மீணடவர் உளரோ? இல்லை.'

நலம்பெருமையொடும இழிசனனுல் இழிதகவடைந்தேன் என்பது குறிப்பு. எனினும என்பது பெருது போயினுர் இலர் என்னும் பொருள் தந்தது.

உளையுஞ் சிறியேன் இடர்உன் னலையோ
களைகண் பிறகண் டிலன்எம் பெருமான்
இளையா தினியே னும்இரங் கிடுவாய்
முளைவான் மதிவேய்ந் தமுடிச் சடையோய். 50

'வானில் முளைத்த பிறையைச் சூடிய சடை முடியோய்! வருந்துஞ் சிறியேன் துயரத்தைத் திருவுள்ளத்துக் கொண்டிலையோ! வேருேர் பற்றுக்கோடுடைய னல்லேன பெருமானே! இங்கிலையிலேனும் மேலும், மெலியாதபடி இரங்கி அருள் பாலிபபாய்!'

பெருமான் காட்சி கொடுத்தருளல்
கலி நிலைத்துறை

என்றின்ன பழிச்சி இரந்தயர் கின்ற மேருக்
குன்றன்ன தவத்தவன் அன்பின் அளாய கொள்கை
துன்றுந்துதி வார்த்தை செவித்துணை ஏற்று நின்று
நன்றும்பெரி துள்ளம் மகிழ்ந்தருள் நங்கை பாகன். 51

என்றின்ன துதி செய்து குறையிரந்து தளர்கின்ற மேரு மலையை யொக்கும் தவத்தினனாகிய பரசிராமனுடைய அனபுகலந்தவேண்டுகோள் அமைந்த துதி மொழியை அம்மை அப்பர் மிகப்பெரிதும் திருவுள்ளம் மகிழ் கூர்ந்து ஏற்று,

அன்னான்எதிர் அவ்வுரு தன்உரு வாகத் தோற்றித்
தன்னேர்வடி வங்கொள் திருந்திழைத் தைய லோடு
மின்னார்வடி வேற்படை விண்ணவன் வேழப் புத்தேள்
என்னாவரு மைந்த ரொடுந்திருக் காட்சி ஈந்தான். 52

அப்பரசிராமன் எதிர் அப்புலை வடிவு மாறிப் பழைய திருவுருக் காட்டித் தம்மையொப்ப வடிவம மாற்றிய, தொழிலாற்றிருந்திய அணிக ளைப் பூண்டதையலாரொடும் மினனொளி மேவும் வடிவேற்படையினை யுடைய முருகப்பெருமானார், விநாயகப் பெருமானார் என்று வரும் திருக் குமாரரொடும் திருக்காட்சி தந்தனர்.

கண்டான் முனிவன் கழிகாதல் நடுக்கம் அச்சங்
கொண்டான் எழுந்தான் துனிகூரும் இடுக்கண் முற்றும்
விண்டான் உவகைக் கடல்மூழ்கி மருட்கை மேவித்
தண்டாத அன்பிற் பெருமான்இரு தாள்ப ணிந்தான். 53

முனிவன் கண்டனன்; பேரன்பும் பேரச்சமும் கொண்டனன்; எழுந்தனன்; துன்பம் மிகுந்த இடர் முற்றும் நீங்கினன்; மகிழ்ச்சிக் கடலில் மூழ்கி வியப்புற்று அமையாத அன்பொடும் பெருமானார் திருவடி களைப் பணிந்தனன்.

பணிந்தான்றனை ஒல்லை எடுத்தணைத் துப்ப னிக்கோ
டணிந்தான்அருள் கூர்ந்துநம் பக்கம் இருத்தும் அன்பின்
துணிந்தாய்உளம் வேட்டது சொல்லுதி என்ன உள்ளந்
தணிந்தார்வம் உறக்கரம் அஞ்சலி சார்த்தி நின்று. 54

வீழ்ந்து வணங்கிய பரசிராமனைப் பிறைச்சந்திரனை அணிந்த பிரா னார் விரைந்து எடுத்துத் தழீஇ அருள் மிகுந்து 'நம்மிடத்து வைத்த பேரன்பினால் துணிவுடையோய்! மனம் விரும்பியவற்றை வேண்டுதி' என்றருள, உள்ளம் அமைதியுற்று விருப்பம் மிகக் கைகுவித்து நின்று,

'பனித்துண்டம்'' – பிறைச்சந்திரன் (திருக்கோ–132.)

பின்றாழ் சடிலத் திறையோய்பிழை ஒன்றும் இல்லா
என்றாதை யாகுஞ் சமதக்கினி என்னும் அஞ்சும்
வென்றான்றனை யேகய வேந்தன் அருச்சு னன்றான்
கொன்றான் அவனைக் குலத்தோடறக் கொன்ற ழித்து. 55

'பின்றாழ் சடைமுடிப் பெருமானே! சிறு பிழையும் செய்யாத எனக்குத் தாதையாகும் சமதக்கினி முனிவரைக் கீழ்மைக்குணமுடைய காத்த வீரியார்ச்சுனன் என்னும் அரசன் கொன்றனன். அவனை அவன் குலத்தோடும் கொன்றழித்து,

'பின்றாழ் சடைமேல்' (திருநறையூர்ச் சித்தீச்சரம்)

எந்தைக்கவர் தங்குரு திப்புனல் அங்கை ஏந்தி
நிந்திப்பறு தர்ப்பணம் ஆற்றிய சிந்தை நேர்ந்தேன்
அந்தத்திறல் உன்அடி யேற்கருள் என்ன ஐயன்
வந்திக்கும் மழுப்படை மீது கடைக்கண் வைத்தான். 56

'அவர் தம்முடைய செந்நீரைக் கொண்டு என் தந்தைக்குப் பழிப் பில்லாத தருப்பணஞ் செய்ய விரும்பினேன். அதற்கு வேண்டும் ஆற் றலை அடியேனுக் கருளென்று வேண்டப் பெருமானார் யாவரானும் போற்றப் பெறும மழுப்படை மீது திருக்கடைக்கண் சாத்தினர்.

திருஉள்ளம் உணர்ந்து கணிச்சி திருந்து தன்கூற்
றொருதிண்படை ஆக்க உவற்கது நல்கி எங்கோன்
பெருவெண்களி றாளி தடுப்பினும் பேண லாரைச்
செருவின்கண் விடாது செகுத்தனை வெற்றி கொள்வாய். 57

பெருமானின் திருக்குறிப்பினை அறிந்து அமமழுப்படை, தன் கூற்றினின்றும் ஓர் மழுவினைத் தோற்றுவிக்க இராமனுக்கு எமது பெரு மான் அதனை வழங்கி 'இந்திரனே பகைத்தெதிர் நிற்பினும் பகைவரைப் போர்க்களத்தில் அழித்து வெற்றி கொள்வாயாக,'

பரசுப்படை பெற்றனை அப்பெயர் பற்றி வாழ்கென்
றரவச்சடை அங்கணன் இன்னருள் செய்ய அன்னோன்
மரபிற்றொழு திவ்விலிங் கத்து மகிழ்ந்து வாழ்வாய்
புரம்அட்டருள் புண்ணிய இப்புனல் யாறு மூழ்கி. 58

மேலும், பரசாயுதம் பெற்றமையின் பரசுராமன் என்னும் பெயர் பெற்று வாழ்க" என அரவம் பூண்ட சடை முடியினையுடைய அங்கணர் இனிய அருளைப் புரிய, அபபரசிராமர் விதிப்படி வணஙகி "முப்புரத்தை அழித்து நல்லோர்க்கருளும் புண்ணியரே! இவ்விலிங்கத்துள் வீற் றிருந் திப்பாலியாற்று நீரில் மூழ்கி"

கற்றைக்கதிர் வெள்ளொளி கான்றிருட் கட்ட றுக்குங்
கொற்றச்சசி நாள்முதல் நாள்களிற் கொள்ளும் என்பேர்
பற்றிப்பயில் இவ்விலிங் கம்பணிந் தன்பர்க் கேன்ற
தற்றைப்பகல் நல்குநர் எய்துக ஆக்கம் வீடு. 59

"தொகுதி கொண்ட வெள்ளிய கதிரொளி வீசி இருட் குழாத்தினை அறுக்கும் வெற்றியையுடைய திங்கட்கிழமை முதலாம் நாள்களில் 'பரசிராமேசர்' எனப் பெயர் பூண்டு விளங்கும் இச்சிவலிங்கத்தினைப் பணிந்து மெய்யனபர்க்குத் தம்மால் இயன்ற அளவிற் பொருளைத் தானம் அந்நாளிற் கொடுப்பவர் போக மோட்சங்களைப் பெறுக."

எனவேண்டி வணங்கி வணங்கி எழுந்த காலை
முனிவன்றனக் கவ்வரம் முற்றும் வழங்கி மூரிப்
பனிமால்வரை நல்கிய பைந்தொடி மைந்த ரோடும்
அனல்அங்கைகொள் அண்ணல் கரந்தபின் அங்கண் நீங்கி.

எனக் குறையிரந்து பல முறையும் வணங்கி எழுந்தபொழுதில் பெருமை பொருந்திய இமயவல்லியாரொடும் திருமைந்தரோடும் சிவபெருமானார் அப்பரசிராமர்க்கு வரங்களை அருள் செய்து மறைந்த பின்னர் முனிவரர் அங்கு நின்றும் போய்,

முனிவன்முனி வன்மழு வான்மணி மோலி வாய்ந்த
சினவெம்படை வேந்தர் தமைச்செரு விற்படுத்துக்
கனலன்ன செழுங்குரு திக்கய நீர்இறைத்திட்
டினமன்னு பிதிர்க்கடன் ஆற்றிமெய் இன்ப முற்றான். 61

முனிவர் முனிந்து கொல்கின்ற வலிய பரசாயுதத்தால் மணிமுடிகளை அணிந்த கொடுஞ்சினமும் படையுமுடைய அரசர்களைப் போர்க்களத்தில் கொன்று நெருப்பினை ஒக்கும் நிறமுடைய இரத்தத்தைக் குளமாகத் தேக்கித் தெனபுலத்தார்க்கு நீர்க்கடனை அச்செந்நீரால் ஆற்றி உண்மையே இன்பம எய்தினர்.

அப்பொற்பின் அருட்சிவ லிங்கம்மெய் யன்பின் அங்கண்
எப்பெற்றிய ரேனும் இறைஞ்சின் இறைஞ்சு முன்னர்க்
கைப்பட்டதோர் ஆமல கக்கனி போல வீடும்
செப்பற்கரி தாகிய செல்வமும் எய்தி வாழ்வார். 62

பொலிவுடன் அருள் செய்கின்ற அப்பரசிராமேசப் பெருமானை உண்மையன்புடன் எத்திறத்தாராயினும் அவ்விடத்து வழிபாடு செய்வரேல் வழிபடு முன்னரே கையிடத்ததோர் நெல்லிக்கனியென ஐயமின்றிச் சொல்லுதற்கரிய பெருஞ்செல்வ வளத்துடன் வீடு பேற்றினையும் பெற்று வாழ்வார்.

பரசிராமேச்சரப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—1573.

# இரேணுகேச்சரப் படலம்

*கலி விருத்தம்*

கொங்கவிழ் நறுமலர்க் கொன்றை வேணியன்
தங்கிய பரசிரா மேசஞ் சாற்றினும்
அங்கதன் தென்புடை அலைந திக்கரை
பொங்கர்சூழ் இரேணுகேச் சரத்தைப் போற்றுவாம். 1

தேனுடன் மணம் உயிர்க்கும நறிய கொன்றை மலர் மாலையை அணிந்த சடையினையுடைய பெருமானார் எழுந்தருளியுள்ள பரசிராமேச வரலாற்றினைக் கூறினோம். இனி அத்தலத்திற்குத் தெற்கே பாலியாற்றின் கரையில் சோலை சூழ்ந்த இரேணுகேச்சரத்தைப் போற்றிக் கூறுவோம்.

இரேணுகை மனங்கலங்கல்

கரேணுக திப்பரை கணவன் அன்பர்பா
தரேணுக வசம்உடல் தாங்கி நேர்ந்தமன்
னரேணுக வெல்பர சிராமன் நம்புதாய்
இரேணுகை என்பவள் அழகின் எல்லையாள். 2

பெண்யானையின் நடையினை ஒக்கும் நடையினையுடைய உமையம்மையார்க்குக் கணவர்தம் மெய் யன்பருடைய திருவடித் துகளைக் கவசமாக மெய்யிற்றாங்கி எதிர்ந்த மன்னவர் வலி அழிய வென்ற பரசிராமன் விரும்புகின்ற அவனுக்குத் தாயாகிய இரேணுகை எனப்படுவாள் அழகின் வரையறையில் நின்றவள்.

விச்சைதேர் பெற்றிய வரும வேந்தனூர்
மெச்சிய வரத்தினில் தோன்றும் மெல்லியல்
அச்சம தக்கினி மனைவி யாயினள்
பொச்சமில் கற்பினிற் பொலியும் மேன்மையாள். 3

கல்வியை ஆராய்ந்துணரும் இயல்பினையுடைய வருமவேந்தனூர் போற்றிய வரத்தின் பயனாக வந்த மெல்லிய இயல்பினையுடையாள் சமதக்கினி முனிவர்க்கு வாழ்க்கைத் துணைவியாய் மெய்க்கற்பினின் விளங்கும் மேன்மையள் ஆயினள்.

மனைஅறக் கிழமையின் ஒழுகு மாணிழை
நனைமலர்க் குழலிஓர் ஞான்று பொய்கையில்
கனைதிரைத் தடம்புனல் கவரப் போந்துழி
வினைவழிக் கண்டனன் காத்த வீரியன். 4

இல்லற தருமத்தின் வழுவாதொழுகும் மாட்சிமையையும் அணி கலனையும் பூண்ட தேன் பொருந்திய மலரணிந்த கூந்தலாள், ஒலிக்கின்ற திரைகளையுடைய பெரிய நீர்நிலையினிடமும் நீர் கொண்டுவர ஓர்கால் செல்லுகையில் தீவினை வயத்தனைக் காத்த வீரியன் அவளைக் கண் ணுற்றனன்.

காண்டலும் காமவேள் கணைக்கி லக்கமாய்
ஆண்டகை அவள்எதிர் அணுகி நின்றனன்
மாண்டதன் புறவடி நோக்கு மாதராள்
ஈண்டுபே ரழகுடை இறையை நோக்கலள். 5

ஆண்டகை கண்ட அளவிலே மன்மதன் மலரம்புகளுக் கிலக்காகி அவளுக்கு எதிரில் நெருங்கிச் சென்று நின்றனன். மாட்சிமைப்பட்ட தன் பாதங்களையே நோக்கி நடக்கும் இரேணுகை ஆகலின், செறிந்த பேரழகுடைய அவ்வரசனைக் கண்டிலள்.

குனிந்த தலையை நிமிர்ந்து நோக்காதவள் என்பது குறிப்பு. பிறன்மனை நோக்காத பேராண்மையில்லாதவன் ஆதலின், ஆண்டகை' என்பதிகழ்ச்சி.

இனிச்செயல் எவன்என எண்ணி வேந்தர்கோன்
புனற்குமேல் விசும்பிடைப் பொலிந்து தோன்றினன்
பனித்தநீர்ப் பரப்பின்அப் பதகன் நீழலை
முனிக்குரி மரபினள் முந்தி நோக்கினள். 6

இனிச் செய்யத் தக்கது யாதென நினைந்து அரசர்க்கரசன் நீர் நிலைக்குமேல் வானின்கண் பொலிவுற்றுக் காண நின்றான். குளிர்ந்தநீர் மேல் அத்தூர்த்தனின் சாயலைச் சமதக்கினி முனிவர்க்குத் தன்நலத்தை உரிமைப்படுத்திய நல்ல வழக்கினள் கூர்ந்து நோக்கினள்.

முந்தி-முனைத்து ; கருத்தொருமித்து.

காமனுஞ் சிறிதுதன் மதுகை காட்டினன்
பூமலர்க் கூந்தலாள் உளத்தைப் பொள்ளென
வாய்மையின் தன்வழிப் படுத்து மாண்குடத்
தாமுகந் தெடுத்துமீண் டகத்தை நண்ணினள். 7

மன்மதனும் அந்நிலையே சிறிது தன் வலிமையைப் புலப்படுத்தி னன். அழகிய மலரணிந்த கூந்தலாள் தன் உள்ளத்தை வாய்மையி னல் விரையத் தன வழிப்படுததி (மீட்டு) மாட்சிமையுடைய குடத்தில் நீரை முகந்து கொண்டு மீண்டு தவச்சாலையை நெருங்கினள்.

"சென்ற இடத்தாற் செலவிடா தீதொரீஇ
நன்றின்பா லுய்ப்ப தறிவு" (திருக்.)

பரசிராமன் தாயைக் கொன்றெழுப்புதல்

எதிருறப் போந்துழி முனிவர் ஏறனன்
மதிமுக மனைவிபா ணித்த வாற்றினைக்
கதுமென அறிவினிற் கருதித் தேர்ந்தனன்
முதுநெறி கோடிய மூர்க்கன் செய்கையே. 8

தவச்சாலையின் எதிராக வருகையில் முனிவர்தலைவர் மதியை ஒக்கும் முகத்தையுடைய தம்மனைவி காலந் தாழ்த்துவரற்குரிய காரணத்தையும், அறிவுசெறிவினின்றும பிறழ்ந்த கொடியோன செய்கையையும் அறிவினால் விரைய எண்ணித் துணிந்தனர்.

முதுநெறி—பேரறிவு நெறி. மூர்க்கன், கொண்ட பிழையை விடாமையின் என்க. (சார்ந்தாசயப்படலம் 10 ஆம செய்யுள்.)

வடவையின் வெகுண்டுதன் மகனை நோக்கினன்
படர்புகழ் இராமநிற் பயந்த பூங்குழல்
கடல்புரை எழில்நலங் காமுற் றண்மினன்
விடமெனத் தோன்றிய காத்த வீரியன். 9

வடவைத் தீயை ஒப்பச் சினங்கொண்டு தன் மகனாகிய பரசிராமனை நோக்கித் திசையெல்லாம் பரவு புகழுடைய இராம! நின்னை ஈன்ற பூவையணிந்த கூந்தலாளது கடல் போலும் அழகினால் ஆகும் இன்பத்தை விரும்பிக் கொடிய நஞ்சினைப் போலத் தோன்றிய காத்த வீரியன் அவளை நெருங்கினன்.

ஆங்கவன் இளமையும் அரசும் ஆற்றலும்
நீங்கரு மடமையும் நிறைந்த நீர்மையால்
ஈங்கிவட் பற்றுவன் எம்மை எண்ணலான்
ஓங்குயர் குணத்தினோய் உரைப்பக் கேட்டியால். 10

அவன் இளமையும், அரசும், வலிமையும், நீங்குதற்கரிய அறியாமையும் ஆகிய இந்நான்கும் நிரம்பிய நிலைமையால் தன்னையே மதித்து எம்முடைய நிலைமையைச் சிறிதும் மதியானாய் இப்பொழுதே இவளை வலிதிற் கொள்வன். ஆதலின், மிக்குயர்ந்த நற்குணத்தினையுடையோய்!

அறிவு கொளுத்தக் கொள்ளான் என்பார் நீங்கரு மடமையுடன் நிறைந்த நீர்மை எனவும், ஒவ்வொன்றே கேட்டிற்கெல்லாம் உறுதுணையாகி நிற்கும், இவ்வகை நான்கும கூடி ஒருவன்பால் இருந்த எனவும் கூறினர்.

என்னுடை ஆணையின் நிற்றி யேல்இவள்
சென்னியைத் தடிமதி விரைந்து செல்கெனத்
தன்னுடைக் குருமொழி சிரத்தில் தாங்கினன்
அன்னையைக் கொடுபுறத் தணுகி னனரோ. 11

"என்னுடைய ஏவல் வழி நிற்பாயாயின், இவளுடைய தலையை வெட்டி எறிதி. விரைந்து செய்க" என்று கூறத் தன்னுடைய குருவின் திருவாக்கைச் சிரமேற்கொண்டு தாயை உடனகொண்டு தவச்சாலைக்குப் புறம்பே வந்தனன்.

அல்லலே பெண்ணெனப் பிறத்தல் ஆங்கதின்
அல்லலே இளமையிற் சிறத்தல் ஆங்கதின்
அல்லலே கட்டழ குடைமை ஆங்கதின்
அல்லலே இரவலர் சார்பின் ஆகுதல். 12

பெண் பிறப்புப் பெருந்துன்பத்திற்குக் காரணம் ஆம்; அதனின் மிக்கது நல்லிளமை; அதனின் மிக்கது பேரழகுடைமை; அதனின் மிக்கது வறியவர்க்கு உரிய பொருளாதல்.

துன்பங்களுக் கேதுவாவனவற்றைத் துன்பங்களென்றுபசரித்தார்.

அரங்குறை படுத்தவாள் அங்கை ஏந்திநல்
உரங்குறை படுத்திடா உறுவன் அன்னைதன்
சிரங்குறை படுத்துமீண் டெய்தித் தேசிகன்
வரங்குறை படுத்திடா அடிவ ணங்கலும். 13

நல்லறிவு நிரம்பிய முனிவனாகிய பரசிராமன் அரத்தினாற் கூரி தாக்கிய வாளை அகங்கையிற் கொண்டு தாயின் தலையைக் கொய்து மீண்டு வந்து தேசிகனுடைய மேன்மை பொருந்திய திருவடிகளை வணங்கிய அளவிலே, வேண்டிய வரம் எனினும் ஆம்.

துன்பமுற் றருந்தவன் இரங்கிச் சொல்லுவான்
வன்பெரு மன்னவன் மகட்கு மைந்தன்நீ
என்பதும் என்னிடத் தன்பும் இன்றியான்
நின்புடைக் கண்டனன் அறிவின் நீடியோய். 14

சமதக்கினி முனிவர் வருத்தம் மிக்கு அறிவின் மிக்கோனே! நீ பெருவலியுடைய வரும வேந்தன் மகளாகிய இரேணுகை மகன் என்பதனையும் என்னிடத் தன்புடைமையையும் யான் நின்னிடத்து ஒருங்கு கண்டேன்.

கொலைக்கு அஞ்சாமையால் அரச தருமமும், தந்தை சொற் கடவாமையால் அன்பும் கண்டனன் என்றனர்.

என்னுரை நிறுவினை யேனுந் தாய்கொலை
நன்மையன் றுலகமும் பழிக விற்றும்என்
றன்னுரைப் படிஅவண் ஏகித் தாழ்குழல்
சென்னியைப் பொருந்துறச் சேர்த்தெ ழுப்பியே. 15

என்னுடைய கட்டளையை நிறைவு செய்தனை. ஆயினும், தாயைக் கொலை செய்தல் அறமன்று. உலகோரும் என்றும் பழிப்பர். இப்பொழுதும் என்னுடைய மொழிவழியே ஆங்குச் சென்று தாழ்ந்த கூந்தலாள் தலையைப் பொருந்தும்படி சேர்த்தெழுப்பியே.

பழி வருவன சில; பாவம் வருவன சில; இரண்டும் வருவன சில எனச் செயல்கள் மூவகைய ஆம். "புகழொடு, நன்றி பயவா வினை" (திருக். 652) என புழிக்காண்க.

பொன்னடி வணங்கிஅஞ் சலித்துப் போற்றிஎன்
அன்னைநின் கருத்தினுக் கடுத்த வாறுசெல்
கென்னஅங் ககற்றிஈண் டெய்து வாயெனத்
தன்னுடைத் திருமகற் கியம்பித் தாபதன். 16

"பொனனை ஒக்கும் அடிகளில் வீழ்ந்து வணங்கிக் கரங்கூப்பித் துதி செய்து 'என் அனனையே! நின்மனம செல்வழிச் செல்க' என்று அங்கிருந்து அகல்வித்து இங்கெய்துவாயாக" எனத் தன்னுடைய நன்மகனுக்கு எடுத்தியையக் கூறித் தவமுனிவர்,

உன் கருத்தாகப் போற்றுதலும், என் கருத்தாக அகற்றுதலும் செய்' என்றனர் முனிவர்.'

வெகுளியே உயிர்க்கெலாம் விளைக்குந் தீவினை
வெகுளியே குணந்தவம் விரதம் மாய்க்குமால்
வெகுளியே அறிவினைச் சிதைக்கும் வெம்மைசால்
வெகுளியிற் கொடும்பகை வேறென் றில்லையால். 17

கோபமே உயிர்களுக் கெல்லாம் பாபமாகிய பைங்கூழை விளைவிக்கும் வித்தாம். மேலும, கோபமே நற்குணம், தவம், நோன்பு முதலிய புண்ணியச் செயல்களை அழிக்கும் கருவியாம்; கோபமே அறிவினை அழிக்கும் மயக்கப் பொருளாம். கொடுமை மிக்க கோபத்தினும் கொடிய பகை ஒருவற்குப் பிறிதொன்றும் இல்லை (அதுவே என்க.)

கோபத்தின் கொடுமையை விளக்குவான் வேண்டி அதனைப் பன்முறை கூறினர்.

சமதக்கினியைக் காத்தவீரியன் கொலைசெய்தல்

என்றிவை தன்மனத் தெண்ணி வெஞ்சினம்
ஒன்றறத் துறந்தினி துறையுங் காலைஅப்
புன்றொழில் வேந்தன்அஃ துணர்ந்து பொள்ளென
வென்றிமா தவன்சிரந் துணித்து மீண்டனன். 18

என்றிவ்வாறு சமதக்கினி முனிவர் தம்முள்ளத்தில் எண்ணிக் கொடிய கோபத்தை வேரொடும அகழ்ந்துபோக்கி முன்போல் இயல்பின் வீற்றிருக்கும் காலை, இழி செயலையுடைய காத்தவீரியன் ஆங்கு நிகழ்ந்த தறிந்து வெற்றி வாய்த்த பெருந்தவ முனிவரது தலையை விரைய வெட்டி வீழ்த்தி அகனறனன்.

இரேணுகை தெய்வமாதல்

மதலையின் ஆவிபெற் றகன்ற மாணிழை
இதமுறு கணவனை இழந்த துன்பினால்
நுதலரு மகன்வரப் பேறு நோக்கிஅப்
புதல்வன திசைவுபெற் றூங்குப் போயினள். 19

மகனால் இழந்த உயிரை மீளப்பெற்ற மாட்சிமை யுடைய இரேணுகை நலமிக்க கணவனை இழந்த துன்பத்துடன் தன் மகன் எண்ணுதற்கரிய சிறப்பினை வரமாகப் பெற்றதனை மனங்கொண்டு அவன் கருத்தின் வழியே குறித்த இடத்தை அடைந்தனள்.

இளங்களி வண்டினம் இமிரும் பூம்பொழில்
வளங்கமழ் காஞ்சியை மருவி மைந்தனார்
உளங்கொள வழிபடு நகரின் ஊங்குற
விளங்கொளிச் சிவக்குறி விதியின் தாபித்தாள். 20

வண்டுகள் குழாமாக ஒலித்துச்சூழ்கின்ற வளமுடைய சோலைகள் பரவியுள்ள காஞ்சிபுரத்தினை அடுத்துத் தன்மகனார் மனம்பொருந்தி வழிபாடு செய்த பரசிராமேசத்தின் அயலே விளங்குகின்ற ஒளியினையுடைய சிவலிங்க மூர்த்தியை நூன்முறைப்படி நிறுவினாள்.

மகவிடத் திருத்துபே ரன்பின் மாட்சிமை
தகவுறப் பூசனை தவாது பல்பகல்
அகமுறப் புரிவுழி அருளி ஆங்கெதிர்
நகமடப் பிடியொடும் நம்பன் தோன்றினான். 21

தாய் தன மகவினிடத்து வைக்கும் பேரன்பினது மாண்புடைமையை ஒப்பப் பேரனபு வைத்துப் பூசனையை ஒழியாது பன்னாள் மனம் பொருந்தப் புரிந்து வருநாள் கருணை கூர்ந்து நமபி அடையத்தக்க பெருமானார் மலையரையன மகளாராகிய இளைய பெண் யானையை ஒப்பாருடன் ஆங்கெதிரே திருக்காட்சி தந்தார்.

நுண்ணிடை இரேணுகை மடந்தை நோக்கினாள்
உண்ணிகழ் காதலின் உருகிக் கைதொழூஉ
வண்ணமென் குயிலினஞ் சமழ்ப்ப வாய்திறந்
தண்ணலைப் பழிச்சிநின் றறைதல் மேயினாள். 22

நுண்ணிய இடையினையுடைய இரேணுகை நோக்கி எழுகின்ற விருப்பினால் உள்ளம் உருகிக் கையாற் றொழுது அழகிய மெல்லிய குரலினையுடைய குயிலினங்கள் நாணும்படி வாயைத்திறந்து இனிய இசைப்பாக்களால் பெருமானாரைத் துதி செய்து நின்று கூறத் தொடங்கினாள்.

ஏதமில் உயிர்த்தொகை எவற்றி னுக்கும்நீ
தாதைதாய் இமவரைத் தைய லாகுமால்
கோதறும் இருமுது குரவர் மாட்டெவர்
மேதகு மானம்விட் டியம்பி டாதவர். 23

"ஏனையோரிடத்து கூறத்தகாதனவும் குற்றமறுக்கும் இருமுது குரவாகிய தாய்தந்தையரிடத்தே மேனமை பொருந்திய நாணத்தைக்

கைவிட்டு உண்மையைக் கூறுதவர் உளரோ? குற்றமற்ற உயிர்கள் அனைத்தினுக்கும் நீ தாதையும் இமயத்தையலார் தாயும் ஆகலின் தாய்க் கொளித்த சூலுண்டோ? கூறுகேன்.

கலி நிலைத்துறை

அடிய னேன்பல திறத்தினும் பரிபவம் அடைந்தேன்
பொடிகொள் மேனியாய் இங்குனைப் பூசனை புரியும்
படியி லாப்பெரு வாழ்வுபெற் றெய்தினேன் படியோர்
கடித ராதருள் வைத்தெனைக் காப்பதுன் கடனால். 24

" திருவெண்ணீறு சண்ணித்த திருமேனியனே! அடியேன் பல் வகையாலும் இழி நிலையையும அவமதிப்பையும் எய்தி வருந்தினேன். இத்தலத்தில் உன்னைப் பூசனை புரியும் ஒப்பில்லாத பெருவாழ்வினைப் பெற்றேன். உலகோர் இகழ்ந்து விலக்காதவாறு திருவருள் செய்து தாழ்ந்த அடியேனைக் காத்தல் உனக்குக் கடப்பாடாம்."

புகழும் ஆக்கமும் முத்தியும் உயிர்க்கருள் புராணன்
இகழும் இன்னலுந் தவிர்ப்பவன் இருள்மலக் கிழங்கை
அகழும் நாயகன் யாங்கணும் நிறைந்தவன் அடியார்
திகழும் அன்பினுக் கெளியவன் சிவபிரான் என்றும். 25

'புகழையும், செல்வத்தையும், முத்தியையும் உயிர்க்கருளும் பழையோனும், இகழ்ச்சியையும், துன்பத்தையும், நீக்குவோனும், ஆணவ மலத்தை வேரொடும் அகழும் தலைவனும், யாண்டும நீக்கமற நிறைந்தவனும், அடியவர்தம் பேரன்பினுக்கெளிவரும் பிரானும் சிவபிரானே என்றும்,

கொழுநன் யாரினும் இனியவன் என்றுகூ றுவர்அக்
கொழுநன் இவ்வுடற் குரியவன் குறிக்கில்ஆ ருயிர்க்குக்
கொழுநன் தந்தைதாய் செல்வமும் ஏனவுங் கொன்றைக்
கொழுநனைத்தொடைக் குளிர்சடைச் சிவபிரான் என்றும்.

'ஒருத்திக்குக் கணவன் உறவினர் யாவரினும் இனியனுவன் என்று கூறுவர் அறிந்தோர்; எடுத்தியம்பில் அவன் இவ்வுடம்பிற்கே நாயகன் ஆவன். அரிய உயிர்க்குக் கணவனும், தந்தையும், தாயும், செல்வமும், பிறவும் செழித்த தேனையுடைய கொன்றை மலர் மாலையைச் சூடிய கங்கையால் ஈரிய சடையுடைய சிவபெருமானே ஆவன் என்றும்,

இனைய வாயின பெருமைகள் எடுத்தெடுத் தெனக்கு
வினையின் நீக்கும்என் கணவன்நாள்தொறும்விரித்துரைக்கும்
அனைய நிற்றெரு துய்ந்துளார் அளவிலார் அடியேன்
தனைய னுக்குமாண் டரும்பெறற் பேறுதந் தளித்தாய். 27

"இத்தன்மைய ஆகிய சிறப்புக்களைப் பொதுத் தன்மையைப் போக்கி எனக்கு இருவினையினின்றும் நீக்கி யாட்கொள்ளும் என் நாயகனார் நாளும் நாளும விரித்தறிவுறுப்பர். அத்தன்மை வாய்ந்த நின்னை வணங்கி வாழ்வு பெற்றவர் அளவிலர் ஆவர், என்மகன பரசிராமனுக்கும் இச்சூழலில் பெறற்கு எளிதல்லாப் பேறுகளைத் தந்தருளினை.

ஐய னேஅடி யேனையுங் காத்தருள் அசலத்
தைய லேசகம் முழுவதும் அளித்திடுந் தாயே
உய்யு மாறெனைக் காத்தருள் உமைச்சரண் அடைந்தேன்
பொய்யர் சிந்தையின் அகப்படர் போற்றிஎன் றிரந்தாள். 28

"தலைவனே! ஒன்றுக்கும் போதாத நாயேனையும் காத்தருளும் இமயப் புதல்வியே! உலகங்கள் யாவற்றையும் கருணையொடும் காக்கும் தாயே! பிழைக்கும் வகையுற என்னைக் காத்தருள்க! உம்மைப் புகலடைந்தேன். புலன்வழி ஒழுகும் உணர்ச்சியைக் கடந்தவர்களே! போற்றி" என்று வேண்டினள்.

அம்மை அப்பராய் அகிலமும் புரந்தருள் கருணைச்
செம்ம லார்நகை முகிழ்த்தெழத் திருவுளம் மகிழ்ந்தே
எம்மை வேட்டவை விளம்புதி இமயமீன் றளித்த
கொம்மை மென்முலை உனக்கவை தருமெனக் கூற. 29

அனைத்துயிர்க்கும் அன்னையும் அத்தனும் ஆகிப் பாதுகாத்தருளும் அருளுடைய அண்ணலார் புன்னகை பூத்துத் தவழத் திருவுள்ளம் மகிழ்ந்து 'எம்மிடத்து விரும்பிய வரங்களைக் கூறுவாய் இமயவல்லி உனக்கு அவற்றை வழங்கும்' என வாய் மலர,

அன்பின் ஏத்திநின் றிரேணுகை அணியிழை வேண்டும்
என்ப ணிக்கினி யாய்நனி விழுத்தக வெய்தித்
துன்பம் எண்ணில பட்டயான் தூயநின் அருளான்
மன்ப தைக்கெலாம் வழிபடு தெய்வமாய் வயங்கி. 30

அன்புடன் துதித்து நின்றிரேணுகை என்னும் அணியிழையாள் வேண்டுவள்: 'எனரெண்டினையும இனியவாக ஏற்றோனே! பெரிதும் மேம்பாடுற்றுப் பின்னர்த்துனபமும எண்ணிலாதன எய்திய யான் நின் அறக்கருணையால் மக்கட்கெல்லாம் வழிபடற்குரிய தெய்வமாய் விளங்கி,

போகம் அவ்வவர் வேண்டிய புணர்ப்பெலாங் கண்கூ
டாக நல்குபே றெனக்கருள் இவ்விலிங் கத்தின்
ஏக நாயக இனிதமர்ந் திருமையும் எவர்க்கும்
நீக னிந்தருள் புரிமதி எனநிகழ்த் துதலும். 31

'அவரவர் விரும்பிய போக நுகர்ச்சிகள் யாவும் கைமேற் பலனாக வழங்கும் ஆற்றலை எனககருள் செய்தி, தனி முதல்வ! இச்சிவலிங்கத்தில் இனிதிருந்து போகமோட்சங்களை யாவர்க்கும் நீ கருணை கூர்ந்தருள் செய்' எனக் கூறலும்,

அண்ண லார்உமை கூற்றினல் அவட்கவை உதவி
மண்ணின் மேற்கலி யுகத்துறு மானிடர் கருதும்
எண்ணம் எண்ணியாங் கியாவையும் இழிகுலத் துள்ளார்
நண்ணி வேட்டன சாலமிக் களிப்பவும் நல்கி. 32

தலைவர் உமையம்மையார் பங்கினல் இரேணுகைக்கு அவற்றை உதவி மண்ணிடத்திற் கலியுகத்தில் மக்கள் எண்ணும் எண்ணத்துள் எண்ணியவாறே எவற்றையும் இழிகுலத்துள்ளவர் அடுத்து வேண்டிய நிரம்பவும வழங்க அருள் செய்து,

கொம்ப னுள்பெறத் தெய்வதத் திருஉருக் கொடுத்துக்
கம்ப னூர்மலை மகளொடுங் கரந்தருள் செய்தார்
வம்பு வார்குழல் இரேணுகை மடந்தைஅப் பொழுதே
அம்பு விக்கொரு தெய்வதம் ஆயினள் அம்மா. 33

பூங்கொம்பனையவள் பெறத் தெய்வவடிவங் கொடுத்துத் திருவேகம்பனூர் அம்மையுடன் திருவுருக்கரந்தனர். மணக்கும் நீண்ட கூந்தலையுடைய இரேணுகை அங்கிலேயே உலகினர்க்கொரு தெய்வம் ஆயினள்.

கலி விருத்தம்

காதரா அணியினள் பலகைவாட் கையினள்
போதரா சன்முதல் பலகணம் புடையுற
வேதரா சிகள்பயில் விரிபொழிற் காஞ்சியின்
மாதராள் ஆயிடைத் தெய்வமாய் வைகினள். 34

கொல்லுகின்ற பாம்பினை அணியாகவுடைய இரேணுகை கேடகம் வாளிவற்றைக் கையில் உடையளாய்ப் போதராசன் முதற் பல வீரர் கணம் புடைசூழ வேதங்கள் பயிலப்பெறும் விரிந்த சோலையையுடைய காஞ்சியில் அவ்விடத்துத் தெய்வமாக வைகினள்.

எண்ணியாங் குதவிசெய் இரேணுகை ஈச்சரத்
தண்ணலார் பெருமையார் அளவிடற் பாலரே
கண்ணும்இக் காதையைக் கற்றுரைப் போரைஅவ்
வொண்ணுதல் தெய்வதம் ஊறுசெய் யாதரோ. 35

எண்ணிய உதவும் இரேணுகேசத்தில் எழுந்தருளியுள்ள அண்ணலார் பெருமையை யாவர் வரையறுத்துக் கூற வல்லவர். மதிக்கத்தகும் இக்கதையைக் கற்றுப் பிறர்க்குணர்த்துவோரை அப் பெண்பாலாகிய தெய்வம் வருத்தாது.

இரேணு கேச்சரப் படலம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம்-1608

# யோகாசாரியர் தளிப் படலம்

கலி விருத்தம்

உரவுநீர்ச் சடைமுடிப் பகவனூர் உமையொடும்
விரவிவாழ் இரேணுகை ஈச்சரம் விளம்பினும்
பரசிரா மேச்சரத் தெனுதுபா லியோகமாக்
குரவர்சூழ் பஃறளித் திறன் இனிக் கூறுவாம். 1

பரவிய நீரைச் சுருக்கிய சடைமுடிப் பெருமானூர் உமையம்மையாரொடும் ஒன்றிவாழ் இரேணுகேச்சரம் விளம்பினேம். பரசிராமேசத்துக்குத் தெற்கில் யோகம பூண்ட பெருங்குரவர் வலம் கொண்டு வணங்கும் பல திருக்கோயில்களின் இயல்பை இனிக் கூறுவோம்.

சுவேதனே சுவேதகே துக்கருத் தொடர்பிலாச்
சுவேதசீ கன்சுவே தாச்சுவன் தூயசீர்ச்
சுவேதலோ கிதனெடுஞ் சுதாரனே சாதனம்
சுவேதநீற் றணியொளிர் துந்துமி முதலியோர். 2

சுவேதன், சுவேதகேது, பிறவி நோய் தவிர்ந்த சுவேதசீகன், சுவேதாச்சுவன், அழுக்கில்லாத சிறப்பினையுடைய சுவேத லோகிதன், சுதாரன், உருத்திராக்கவடம் வெண்ணீற்றணி இவற்றால் விளங்குகின்ற துந்துமி முதலியோர்,

ஏயும்மெய்த் தவம்அரு இலகுளீ சன்முடி
வாயினோர் மற்றும்எண் ணில்லவர் அகிலமும்
பாயசீர் யோகமாக் குரவர்கள் பசுமழுத்
தூயவன் கூற்றினில் தோன்றியோர் இவர்கள்தாம். 3

பொருந்தும் உண்மைத் தவமுடைய இலகுளீசன் முடிவானோர் மேலும் அளவிலோர் அகிலமுற்றும பரவிய சிறப்பினையுடைய யோகாசாரியர்கள் பரசு பாணியாகிய பிரானூர் அம்சத்தில் தோன்றியோராகிய இவர்கள்.

யோகமாக் குரவர்தம் உயர்பதத் தெய்தவும்
மோகவல் வினையுறா முத்தியின் வைகவும்
போகுவெண் கயிலையின் மெய்த்தவம் புரிவுழி
ஏகநா யகன்அவர்க் கெதிரெழுந் தருளியே. 4

யோகாசாரியர் பதத்தைப் பெறவும், மயக்குகின்ற கொடுவினை பற்றாத வீட்டினைத்தலைப்படவும் நீண்ட வெள்ளிமலையில் மெய்த்தவத்தைச் செய்கையில் ஒருவனென்னும் ஒருவன அவர் முன் எழுந்தருளி,

அறுசீரடி யாசிரிய விருத்தம்

அம்மநீர் கச்சி மூதூர் அணுகிமா நீழல் வைகும்
எம்மடி வழுத்தி வெவ்வே றிலிங்கம்அங் கிருத்திப் போற்றி
மம்மர்தீர் தவங்கள் ஆற்றி வைகுமின் ஆண்டு நுங்கள்
தம்மனக் கருத்து முற்றத் தருதும்என் றருளிச் செய்தான். 5

'கேண்மின் ! நீவிர் காஞ்சியாகிய பழம் பதியை எய்தி மாவடியில் வீற்றிருக்கும் எம்முடைய திருவடிகளைத் துதிசெய்து வேறு வேறு சிவ லிங்கம் நிறீஇப் போற்றி மயக்கம் தவிர் தவம் புரிந்து தங்குமின நுங்கள் மன நினைவு நிறைவெய்தத் தருவோம்' என்றருளினர்.

மற்றவர் தொழுது போற்றி வள்ளலை விடைகொண் டேகி
முற்றிழை மகளிர் நல்லார் ஊடலின் உகுத்த முத்தங்
கற்றைவெண் ணிலவு கான்று கனைஇருள் பருகு நீண்ட
பொற்றட நெடுந்தேர் வீதி பொலிதிருக் காஞ்சி நண்ணி. 6

அவர் வணங்கித் துதிசெய்து வள்ளல்பாற் புறவிடைகொண்டு சென்று தொழில் முற்றுப் பெற்ற அணிகள பூண்ட மகளிராகிய நல்லார் கணவரொடூடிய புலவியில் அறுத்தெறிந்தமையால் உதிர்ந்த முத்துக்கள் தொகுதியாக வெள்ளொளியை உமிழ்ந்து செறிந்த இருளை விழுங்கு கின்ற நீண்டகன்ற அழகிய நெடியதேர் செலற் குரிய வீதிகள் பொலி கின்ற திருக் காஞ்சியை நண்ணி,

முழங்கிசை ஞிமிறு பாய முகைமுறுக் குடைந்து தீந்தேன்
வழங்குபூங் கமலத் தெண்ணீர் மணிச்சிவ கங்கை தோய்ந்து
பழங்கண்நோய் அறுக்கும் மாவிற் பகவனை வழிபா டாற்றித்
தழங்கொலி மறையின் ஆற்றால் தனித்தனி இலிங்கஞ் செய்தார் 7

இசையுடைய வண்டு பாய்தலால் அரும்புகள் கட்டவிழ்ந்து இனியதேனூறுகின்ற தாமரை மலரையுடைய அழகிய சிவகங்கை நீரில் மூழ்கித் துன்பத்திற்கேதுவாய பிறவியைப் போககும் மாவடியிற் பெரு மானை வழிபாடு செய்து ஒலிகெழு வேத விதிப்படி வெவ்வேறிலிங்கம் தாபித்தனர்.

முன்பொரு காலத் தங்கண் முதல்வனைத் தொழுது மூந்நூற்
றைம்பதிற் றைவர் யோகா சாரிய ராகி முத்தி
தம்பத மாகக் கொண்டார் அவரெனத் தாமும் அன்பின்
நம்பனைத் தத்தம் பேரால் நலத்தக நிறுவிப் போற்றி. 8

முன்னோர் காலத்தில் அவ்விடத்தில் முதல்வனைத் தொழுது மூந்நூற்றைம்பத்தைவர் யோகாசாரியராகித் தம பதவிகளாக வீடு பேற்றைக் கொண்டனர். அவரை ஒப்பவே இவர்களும் அனபினால் நம்பனைத் தத்தம பெயரமையச் சிவலிஙகம தாபித்து நலம்படப் போற்றி,

க்றையணி மிடற்றுப் புத்தேள் கருணையால் உகங்கள் தோறும்
நிறைபுகழ் படைத்த யோகா சாரிய நிலைமை எய்திக்
குறைவிலா முத்தி பெற்றார் ஆங்கவர் குலவிப் போற்றும்
இறையவன் தளிகள் யார்க்கும் வீடுபே றெளிதின் நல்கும். 9

திருநீலகண்டப் பெருமான திருவருளால் யுகங்கள்தோறும் நிறைந்த புகழ் வாய்ந்த யோகாசாரிய நிலைமையையடைந்து என்றும் அழிவில்லாத முத்தியின் பதத்தைப் பெற்றார்கள். அப்பதியி லவர்கள் இருந்து வழிபட்ட சிவபெருமான திருக்கோயில்கள் எவ்வகையோர்க்கும் முத்திப்பயனை எளிதாகத் தந்தருளும்.

யோகாசாரியார் பதம் பெறறோர் மனுவந்தரம் எழுபத்தெட்டு யுகங்களில் இருபத்தெட்டாங் கலியுகங்காறும் அப்பதத்திலிருந்து நில வுலகிலவதரித்துப் பல திருவிளையாடல்கள் புரிந்து முத்தி பெறுவது வழக்காதலால் யோகாசாரிய நிலைமை எய்திக் குறைவிலா முத்தி பெற்றார் என்றனர். மகான்களாவார் திருஞானசம்பந்தர் முதலானோர்.

வென்றிகொள் இனைய வெல்லாம் பரசிரா மேச்ச ரத்தின்
தென்றிசை தொடங்கிச் சார்வ தீர்த்தத்தின் வடபால் காறும்
ஒன்றருஞ் சுவேத லிங்க முதல்இல குளீசம் ஈறுத்
துன்றிடும் இவற்றுள் மேலாச் சொலப்படும் இலகு ளீசம். 10

வெற்றி வாய்ந்த இத்தளிகள் யாவும் பரசிராமேசத்தின் தென் திசையில் தொடங்கிச் சருவதீர்த்தின் வடகரை வரையிலும் அடைதற் கரிய சுவேதலிங்கம் முதலாக இலகுளீசம் இறுதியாக நெருங்கி விளங்கும். இவற்றுள் இலகுளீசம் என்னுந் திருத்தலம் மேலாகப் போற்றப்பெறும்.

யோகாசாரியர் தளிப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-1618.

## சருவ தீர்த்தப் படலம்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

இருட்கொடும் பிறவி மாற்றும் இலகுளீச் சரம்ஈ றாகத்
தருக்கறு காட்சி யோகா சாரியர் தளிகள் சொற்றாம்
மருத்துழை மலர்மேற் பூத்த வளம்புனல் குடைவோர் தங்கள்
கருத்தவிர் சருவ தீர்த்தக் கரைபொலி தலங்கள் சொல்வாம். 1

ஆணவமலச் சார்பினால் ஆகும்கொடிய பிறவியைப் போக்கும் இலகுளீச்சரம் இறுதியாகச் செருக்கினை நீக்குதற்கு ஏதுவாகிய மெய் யறிவினை நல்கும் யோகாசாரியர் திருக்கோயில்களைபபற்றிக் கூறினோம். இனி, மணம் செறிந்த நீர்ப்பூக்கள் மேலெழுந்து பூத்த தீர்த்தத்திற் படிவோர் தம் பிறவியை நீக்கும் சருவ தீர்த்தக் கரையில் விளங்குகின்ற தலங்களைக் கூறுவோம்.

காமேச்சரம்

குடவளை அலறி ஈன்ற குரூஉமணித் தரளக் குப்பைப்
படலைவெண் ணிலவு கான்று படர்இருள் இரிப்ப ஞாங்கர்
உடைதிரை ஒதுக்குந் தெண்ணீர் ஒலிபுனற்சருவ தீர்த்தத்
தடநெடுங் கரையிற் காமேச் சரமெனுந் தலம்ஒன் றுண்டால். 2

குடத்தை ஒக்கும் வளைகள் அரற்றி ஈன்ற வெண்ணிற முத்துக் குவியல்கள் தொகுதியாக வெள்ளிய நிலவை வீசிப பரவுகின்ற இருளை ஓட்டும்படி மூரிகின்ற திரைகள் கரைமருங்கில் ஒதுக்கும் தெளிந்த நீரை யுடைய சருவ தீர்த்தக் கரையில் காமேச்சரம எனப் பெயரிய தலம் ஒன்றுளது.

கருப்புவில் குழைய வாங்கிக் கடிமலர்ப் பகழி தூண்டும்
அருப்பிளங் கொங்கைச் சேனை அடல்வலிக் காமன் முன்னாள்
மருப்பொதி இதழிக் கோமான் மனத்திடைப் பிறந்தான் ஐயன்
திருப்பதம் இறைஞ்சிப் போற்றி செய்துமற் றிதனை வேண்டும். 3

கரும்பாகிய வில்லை வளைய வளைத்து மணக்கும் மலரம்புகளைத் தொடுக்கும் தாமரை அரும்பினை ஒககுந் தனத்தினையுடைய மகளிரைச் சேனையாகவுடைய மன்மதன முனனோர்கால் மணந்தங்கிய கொன்றை மலர் மாலையை அணிந்த பிரானாரது சித்தத்துள தோனறிச் சித்தசன் எனப்பெற்ற அவன பிரானாரது திருவடிகளை வணங்கித் துதிசெய்து இதனை வேண்டுவன.

மகப்பயில் பிறவிக் கேது வாகுவண் புணர்ப்பு நல்கி
இகப்பில்சீர் இரதிக் கென்றும் இனியனுய்க் கொடுப்போர் கொள்
அகத்திருந் தினைய செய்கை ஆற்றிஎன் ஆணை மூன்று [வோர்
சகத்தினுஞ் செலுத்தும் பேறு தந்தருள் என்னக் கேட்டு. 4

கருவுறுதற்குக் காரணமாக இந்நிலவுலகில் வளமுடைய இணை விழைச்சினை வழங்கி நீக்கற்கரிய சிறப்பினையுடைய இரதிதேவிக் கெனறும் இனியனாய் ஒனறனைக் கொடுப்போரும் அதனைக் கொள் வோரும் ஆகிய இருதிறத்தின ருளளத் திருந்து அச்செய்கையை நிகழ்த்தி எனனரசாட்சி மூவுலகினும நடாத்தும் செல்வத்தைத்தந்தருள்க' என்று வேண்டிடத் திருச்செவி சாத்தியருளி,

மற்றெமக் கினிய மூதூர் வளம்பயில் காஞ்சி அங்கண்
உற்றெமை வழிபட் டேத்தி ஊங்குவை பெறுகென் றெங்கோன்
சொற்றலும் விரைந்து காஞ்சித் தொன்னகர் எய்திக் காமன்
அற்றமில் சருவ தீர்த்தத் தடந்திரை அலைக்குங் கோட்டின். 5

'எமக்கு விருப்புடைய பழைய நகரம் வளம் நிலவு காஞ்சி ஆகலின் அங்கண் எய்தி வழிபாடியற்றி அவற்றைப் பெறுக' என எம்பிரானார் அருளலும் மன்மதன் காஞ்சியை அடைந்து குற்றமில்லாத சருவ தீர்த்தத் திரைமோதுகின்ற கரையில்,

தவாதபே ரன்பிற் காமேச் சரன்றனை இருத்திப் போற்றி
உவாமதி முகத்து மென்றோள் ஒள்ளிழை உமையாள் தன்னைக்
கவான்மிசைக் கொண்ட பெம்மான் கண்ணருள் கிடைத்து [நெஞ்சத்
தவாவிய பேறு முற்றும் அந்நிலை எய்தி னானால். 6

இடையறாத பேரன்பினால் காமேச்சரப் பெருமானை நிறுவிப் போற்றிப் பௌர்ணிமை நாளின் முழுமதியை ஒக்கும் திருமுகமும், மெல்லிய தோளும், விளக்கமடைந்த அணிகளும உடைய உமையம்மையைத் துடைமேற்கொண்ட பெருமானார் கடைக்கண் நோக்கினைப் பெற்று நெஞ்சில் விரும்பிய பேறுகள்யாவும அந்நிலையே பெற்றான.

ஏதமில் உயிர்கள் எல்லாந் தோற்றுதற் கேது வாகிக்
கோதறத் தானம் ஈவோன் கொள்பவன் தானுந் தானாய்
மேதகும் இறைமை பெற்று விளங்கினான் மறையோர் ஏற்கும்
போதுளத் தவனை எண்ணிற் புரைதவிர்ந் துய்வார் அன்றே. 7

குற்றமில்லாத உயிர்கள்யாவும பிறப்பதற்குக் காரணனான காமனாகியும், குற்றமறத் தானம் கொடுப்போனுமஆகி, கொள்வோனும் தானேயாய் மேன்மை பொருந்திய தலைமையனாகியும் விளங்கினான். ஆகலின, வேதியர் தானம் ஏற்கும்போது காமனை எண்ணினால் ஆசையாகிய குற்றம் தவிர்ந்து கடைத்தேறுவார் ஆவர்.

தீர்த்தேச்சரம்

பரவினோர் விழைந்த காமப் பயன்அளித் தருளுங் காமேச்
சரநகர் வந்த வாறு சாற்றினம் இதன்பா லாகப்
பரிதிமான் தடந்தேர் ஈர்க்கும் பரிக்குளம் பிடறிப் போய
திருமணிச் சிகரக் கோயில் வழங்குதீர்த் தேசம் உண்டால். 8

வழிபட்டோர் விரும்பிய காமியப் பயனை அளிக்கும் காமேசர் திருக்கோயில் தோற்றிய முறையைக் கூறினோம்; இனி, சூரியன் தனக்குரிய பெரிய தேரை இழுத்துச் செல்லும குதிரைகளின் குளம்பிடறிய, உயர்ந்த மணிகள் குயிற்றிய சிகரமுடைய கோயில் விளங்குகின்ற தீர்த்தேசம் என்பது உள்ளது.

குழைஉதை நெடுங்கண் செவ்வாய்க் கோமளச் சயிலப் பாவை
விழைதகத் தழுவு மாற்றால் விரிசினைத் தனிமா நீழல்
மழைதவழ் மிடற்றுப் புத்தேள் வருகென விளித்த ஞான்று
தழைபுனல் தலைவ னோடுந் தடநதி வடிவந் தாங்கி. 9

காதணியை மோதுகின்ற நீண்ட கண்களையும், சிவந்த வாயினையும், இளமையையும் உடைய இமாசலன் மகளார் தம்மை விரும்பித் தழுவு முறையால் கரிய மேகத்தை யொக்கும் திருக்கண்டமுடைய பிரானார் வரும்படி அழைத்தபொழுது நீர்க்கு நாயகனாகிய வருணனோடும் பெரியநதி வடிவினைமேற்கொண்டு,

விழுமிய அண்டத் துள்ளும் புறத்தினும் விரவுந் தீர்த்தம்
முழுவதுந் திரண்டு காஞ்சி மூதுநகர்க் குடபால் எய்திக்
கொழுமலர்த் தனிமா நீழற் குழகனை உமையாள் வல்லைத்
தழுவலும் எழுந்த வேகம் தணிந்துமீட் டல்கி அங்கண். 10

சிறந்த அண்டத்தின் உள்ளும் புறம்பும் உள்ள தீர்த்தங்கள் யாவும் கலந்து திரண்டு காஞ்சியின மேற்றிசையில் எய்திக் கொழுவிய மலர்க்கொத்துக்களையுடைய ஒற்றை மாவடி நிழலில் விளங்குகின்ற இறைவனை உமையம்மையார் விரைந்து தழுவிய அளவில் எழுந்த வேகம் தணிந்து மறித்தவ்விடத்தே தங்கி,

கலைமதிக் குழவி மோலிக் கடவுளைத் தீர்த்த ராசத்
தலைவன்என் றிருத்தி வீங்குந் தடம்புனல் அருவிக் குன்றச்
சிலைநுதற் பிடியி னோடும் அருச்சனை திருந்தச் செய்ய
மலையினைக் குழைத்த திண்தோள் வள்ளலும் எதிரே நின்று. 11

சந்திரசேகரரைத் தீர்த்தராச நாயகன் என்றபெயரான் நிறுவிப் பெருகுஞ் சுனை அருவியையுடைய இமயமலையின வில்லொக்கும் நுதலையுடைய பிடியினோடும் அருச்சனையைச் செம்மை பெறச்செய்ய மேரு மலையை வில்லாக வளைத்த திண்ணிய தோளையுடைய வள்ளலும் எதிரெழுந்தருளி,

இற்றைஞான் றாதி யாக நும்மிடத் தெய்தி மூழ்கிச்
செற்றமில் முனிவர் விண்ணோர் தென்புல வாணர் தங்கட்
குற்றநீர்க் கடன்கள் நல்கி உறுபொருள் உறுநர்க் கீந்து
மற்றெமை ஈண்டுக் காண்போர் முத்தியின் மருவச் செய்கேம். 12

'இந்நாள் முதலாக இங்கெய்தித் தீர்த்தமாகிய நும்முள மூழ்கிக் கோப முதலிய தவிர்ந்த முனிவரர் தேவர், தென்புலத்தார் ஆகிய இவர்கட்கு உரிய நீர்க்கடன் முதலானவற்றை வழங்கிப் பெரும் பொருளை இரப்போர்க்கீந்து எம்மை ஈண்டுத் தரிசிப்போரை முத்தியிற் செலுத்துவோம'

இன்னமும் புகலக் கேண்மின் எனப்பெருங் கருணை கூர்ந்து
தன்னிகர் பிராட்டி ஆரத் தழீஇக்கொளச் செய்த வாற்றால்
அன்னதற் கியையக் கைம்மா றளிப்பவன் என்ன அங்கேழ்ப்
பொன்னவிர் சடையோன் தீர்த்தப் புனல்களுக் கிதனை நாட்டும். 13

மேலும் கூறக்கேண்மின' என்று பேரருள் மீக்கூர்ந்து தன்னையே நிகர் பிராட்டியை இறுகத்தழீஇக் கொள்ளச் செய்த அம்முறைக்குத் தக்க பிரதியுபகாரம அருளுதலொப்ப அழகிய பொன்போல மிளிரும் சடையுடையர் தீர்த்த நீர்களுக்கு இதனை வலியுறுத்துவர்.

புனல்கள்—தீர்த்த அதிதேவதைகள்.

கொலைகளிற் கொடுமை சான்ற பார்ப்பனக் கொலைவல் வீரக்
கொலைகருக் கொலைதாய் தந்தைக் கொலைகவைக்கோட்டு நல்லான்
கொலைமுதல் பிறவும் நீங்குங் கொடுவினைப் பாசத் தெவ்வைக் [கே
கொலைபுரி மரபின் நும்பாற் குடைந்தெமைத் தொழப்பெற்றோர்க்

கொலைகளிற் கொடுமை மிக்க பிரமகத்தி, வலிய வீரகத்தி, சிசு கத்தி, மாதா பிதா கத்தி. இருகொம்பினையுடைய கோகத்தி முதலிய பிற பெரிய பாவங்களும் கொடிய இருவினையாகிய பாசப்பகையைப் போக்குகின்ற வழக்கின நுங்கண் மூழ்கி எம்மைத் தொழப்பெறற வாய்ப்புடையோர்க்கு நீஙகும.

முரிதிரை சுருட்டு தெண்ணீர் நும்மிடத் தொருகால் மூழ்கி
விரிபுகழ்த் திருவே கம்பம் விழைதகக் காணப் பெற்றோர்
உரிமையின் ஆன்ற நாற்கூற் றுறுதியும் பெறுவர் மீள
அரிவையர் அகட்டுள் எய்தா தெம்மருள் அகட்டின் வாழ்வார். 15

'உடைகின்ற அலைகள மறித்து வீசுகின்ற தெளிந்த நீராகிய நும்முள் ஓர்கால் மூழ்கி விரிந்த புகழுடைய திருவேகம்ப நாயகனை விரும்பித் தரிசனஞ்செய்தோர் தகுதியால் அமைந்த அறம்பொருள் இன்பம் வீடு எனனுமஉறுதிப பொருள் நான்கனையும் பெறுவர்; பின னர்ப் பிறப்பினை எய்தார்; திருவருளிலடங்கி வாழ்வர்.

அகடு இரண்டனுள் முன்னது வயிறு (கருப்பை); பின்னது நடுவிடம்.

என்றிது நிறுவித் தீர்த்த நாயகன் இலிங்கத் துற்றான்
அன்றுதொட் டங்கண் மேவும் அலங்கொளிச் சருவ தீர்த்தத்
தின்றடம் புனலின் மூழ்கி எழில்வளர் திருவே கம்பஞ்
சென்றுகண் டிறைஞ்சப் பெற்றோர் செய்கொலைத் தீமை தீர்வார்.

என்றிதனை நாட்டித் தீர்த்த நாயகன் இலிங்கத்துள் விரவினர். அந்நாள் முதலாக அவ்விடத்துள்ள விளங்குகின்ற தெய்வத்தன்மை யுடைய சருவதீர்த்த நீருள் மூழ்கி அழகுவளர் திருவேகம்பப் பெரு மானைச் சென்று கண்டு வணங்கப் பெற்றவர் செய்த கொலைப்பாவங்களி னின்றும் நீங்குவர்.

சருவதீர்த்தப் பெருமை

தந்தையைச் செகுத்த பாவம் தணந்தனன் பிரக லாதன்
முந்தையோர்ச் செகுத்த பாவம் வீடணன் முழுதுந் தீர்ந்தான்
மைந்துடைப் பரசி ராமன் வீரரை வதைத்த பாவஞ்
சிந்தினன் சருவ தீர்த்தச் செழும்புனல் குடைந்த பேற்றால். 17

பிரகலாதன தந்தையாகிய இரணியனைக் கொன்ற பாவத்தையும், விபீடணன் தமையன்மாராகிய இராவண கும்ப கருணர்களைக் கொன்றமையால் நேர்ந்த பாவத்தையும், வலியமைந்த பரசிராமன அரசரைக் கொன்ற பாவத்தையும் சருவதீர்த்தத்தில் மூழ்கிய புண்ணியப பயனால் யாவரும் நீக்கிக்கொண்டனர்.

அருச்சுனன் துரோண மேலோ னாதியர்ச் செகுத்த பாவம்
பிரித்தனன் அசுவத் தாமன் பெருங்கருச் சிதைத்த பாவம்
இரித்தனன் உலகில் இன்னும் எண்ணிலர் சருவ தீர்த்தத்
திருப்புனல் குடைந்து தீராக் கொலைவினைத் தீமை தீர்ந்தார். 18

அருச்சுனன் துரோணர் முதலாம் ஆசிரியர்களைக் கொன்ற பாவத்தையும, அசுவத்தாமன் சந்திரகுலத்தரசர் மனைவியரின கருவெலாம் சிதைத்த பாவத்தையும் இத்தீர்த்தத்தால் போக்கிக் கொண்டனன். மேலும், உலகில் எண்ணிலார் சருவ தீர்த்தத் தெய்வநீரில் மூழ்கிக் கழுவாயில்லாத பாவங்களும் கழுவப் பெற்றனர்.

சிலைநுதல் மகளிர் மைந்தர் இன்றும்அத் தெண்ணீர் மூழ்கின்
கொலைவினைப் பாவந் தீர்வார் குரைகடற் பரப்பென் றெண்ணித்
தலைவரு முகிலின் கூட்டந் தனித்தனி வாய்மடுக்கும்
அலைபுனல் சருவ தீர்த்தப் பெருமையார் அளக்கற் பாலார். 19

மகளிரும், ஆடவரும் இன்றும் அந்நீரில் மூழ்கினால் கொலை செய்த பாவமும் நீங்குவர். ஒலிக்கின்ற கடலென எண்ணி மேகக் கூட்டங்கள் தனித்தனி பருகும் அலைகளையுடைய சருவதீர்த்தப் பெருமையை யாவர் அளக்க வல்லவர்?

கங்காவரேச்சரம்

மற்றதன் கரையின் கீழ்பால் வருணன்எம் பெருமான் றன்னை
முற்றிழைக் கங்கை யாளோ டிருத்திமுன் தொழுது நீருள்
உற்றுறை உயிர்க்கும் நீர்க்கும் ஒருதனித் தலைவ னாகப்
பெற்றனன் அதன்பேர் கங்கா வரமெனப் பிறங்கு மாலோ. 20

அத்தீர்த்தத்தின் கிழக்குக் கரையில் வருணன் எமது பெருமானைக் கங்கையாளோடும் தாபித்துத் தொழுது நீரில் வாழுயிர்களுக்கும், நீர்க்கும் ஒப்பற்ற தனித் தலைமையை எயதினன. அத்தலைப் பெருமானார் கங்காவரேசுரர் எனப்பெயர் பெறுவர். பிறங்கல்—விளங்குதல்.

விசுவநாதேச்சரம்

பாற்றினஞ் மிடைந்த கூர்வாய்ப் படைமழுக் குடங்கைப் புத்தேள்
மாற்றருங் கருணை முந்நீர் வாரியின் நிறைந்து தேங்கும்
நாற்றிசை அணவுஞ் சீர்த்தி நளிபுனல் சருவ தீர்த்த
மேற்றிசைக் கரைக்கண் மேவும் விச்சுவ நாதத் தானம். 21

பருந்துகள் செறிகின்ற கூரிய பரசு என்னும் படையினை அகங் கையிற்கொண்ட பிரானுரின் கெடலரிய கிருபா சமுத்திரத்தை ஒத்துத் தேங்கும் நாற்றிசையினும் பரவிய மிகுபுகழுடைய பெருமை அமைந்த சருவ தீர்த்தத்தின் மேற்றிசைக் கரையில் விசுவநாதேசம் விளங்கும்.
"தடவுங் கயவும் நளியும் பெருமை" (தொல். உரி.

மலர்தலை உலகின் முக்கண் வானவன் இனிது வைகுந்
தலமெலாம் மருவுங் காஞ்சி விச்சுவ நாதன் றன்பால்
கலிபுகழ் விசுவ நாத முதல்வனுங் காசி தன்னில்
இலகொளி மாடக் காஞ்சி நகர்எமக் கினிதென் றெண்ணி. 22

இடமகன்ற உலகில் கண்ணுதற் பரமனுர் இனி தெழுந்தருளி யிருக்கும் தலமெலாம் விளங்கும் காஞ்சி விசுவநாதரும் இத்தலத்துக் கலி என்னும் யுகம் போற்றும் விசுவநாத முதல்வனும் காசியினும் மிக் கொளிர்கின்ற மாடங்களைக்கொண்ட காஞ்சிநகர் எமக்கு இனிதாகும் என்று திருவுளங்கொண்டு,

வெள்ளிவெண் கயிலை யாதி இடங்களின் மேன்மை சான்ற
அள்ளலம் பழனக் காஞ்சி யணிநகர்ச் சருவ தீர்த்தப்
பள்ளநீர்க் கரைக்கண் எய்தி வைகினன் பரிவால் அங்கண்
வள்ளலைத் தொழுது முத்தி மண்டபங் காண்போர் முத்தர். 23

பெரிதும் வெள்ளிய கயிலைமலை முதலிய இருக்கைகளின் மேன்மை யமைந்த சேறு நிறைந்த வயல்கள் சூழ்ந்த அழகிய காஞ்சிமா நகர்க்கண் உள்ள சருவ தீர்த்தம் எனப்பெயரிய ஆழமுடைய நீர் நிலையின் கரையில் வீற்றிருந்தனன். அத்தலத்தில் வள்ளலை அன்புடன் தொழுது முத்தி மண்டபத்தினையும் தரிசிப்போர் பாசநீக்கம் பெற்றவராவர்.

முத்தி மண்டபம்

மண்டப வருநாள் செல்லாக் காஞ்சிமா நகரின் மூன்று
மண்டபந் திகழும் முத்திச் சரத்தெதிர் வயங்கும் முத்தி
மண்டபம் ஒன்று சார்வ தீர்த்தத்தின் மருங்கு முத்தி.
மண்டபம் ஒன்று கண்டோர் தமக்கெலாம் வழங்கு முத்தி. 24

உலகழியுங்காலும் அழியாத காஞ்சிமா நகரில் மூன்று மண்டபங்கள் விளங்கும்: முத்திச்சரத் தெதிரில் விளங்கும் முத்தி மண்டபம் ஒன்று; சருவ தீர்த்தத்தின் மேற்குக் கரையில் மண்டபம் ஒன்று; கண்டோர் யாவர்க்கும் முத்தியை நல்கும்,

இராமேச்சரம் - பரமாநந்த மண்டபம்

உருவமென் கமலம் பூத்த உயர்சிவ கங்கைத் தென்பால்
திருவிரா மேச்ச ரத்துச் சிவபிரான் திருமுன் னாக
இருவினைப் பிறவிக் கஞ்சி எய்தினோர்க் குறுபே ரின்பம்
மருவுறும் பரமா நந்த மண்டபம் ஒன்று மாதோ. 25

வடிவுடைய மெல்லிய தாமரை மலர்கள் செழுமிய உயர்ந்த சிவ கங்கையின தென் திசையில் உள்ள திருவிராமேச்சரத்தில் சிவபிரான் திருமுன்னாக இருவகையாய வினையால்வரும் பிறவியை அஞ்சி அடைந்த வர்க்கு உறுகின்ற பேரின்பம பொருந்தும் பரமானந்த மண்டபம் ஒன்று;

மண்டபம் இனைய மூன்றும் வைகறை எழுந்து நேசங்
கொண்டுளம் நினையப் பெற்றோர் உணர்வெலாங் கொள்ளை கொ
பண்டைவல் வினையின் வீறும் பற்றிய மலங்கள் மூன்றும் [ண்ட
விண்டுபே ரின்ப வெள்ள வேலையில் திளைத்து வாழ்வார். 26

இம் மூன்று மண்டபங்களையும வைகறையில் எழுந்து விருப்பம் வைத்து உள்ளத்தில் எண்ணப் பெற்றோர்தம் அறிவு முழுதினையும் அகப் படுத்த பழைய வலிய வினையினுடைய செருக்கையும், பற்றிய மலங்கள் மூன்றனையும் நீங்கிப் பேரின்பக் கடலில் துளைந்து வாழ்வார்.

சருவ தீர்த்தப் படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - 1644

# நவக்கிரகேசப் படலம்

கலிநிலைத் துறை

தழங்குபெரும் புனற்பரவைச் சருவ தீர்த்தத் தடங்கோட்டின்
முழங்குமறித் திருக்கரத்து முதல்வன் இடங்கள் எடுத்துரைத்தாம்
வழங்குவளிக் கடவுளும்ஒன் பதிற்றுக் கோளும் வழிபட்ட [ல்வாம்.
குழங்கல்நறுந் தொடைக்கொன்றைக் குழகன் தளிகள் இனிப்புக

ஒலிக்கின்ற பெரிய நீர்ப் பரப்பினையுடைய சருவ தீர்த்தத்தடங் கரையில் ஒலிக்கின்ற மானை ஏந்திய திருக்கரத்தினையுடைய முதல்வன் இருக்கைகளை எடுத்துரைத்தோம். உலவுகின்ற வாயுதேவனும், நவக் கிரகங்களும் வழிபாடு செய்த கொன்றை மலர் மாலையை அணிந்த குழகனுடைய திருக்கோயில்களை இப்பொழுது கூறுவோம்.

குழங்கல்-மாலை விசேடம், வழங்குதல், இயற்கை அடை.

சூல தீர்த்தம்

பைத்தலைப்பூண் வயிரவனார் பணைத்த தடந்தோள் அந்தகனை
முத்தலைச்சூ லத்தலைகின் றிழித்த ஞான்று முழங்கழல்வாய்
அத்தகைத்திண் சூலத்தால் அகழ்ந்த சூலத் தடந்தீர்த்தம்
இத்தரைக்கண் சிறப்பெய்தும் உவாவில் அந்நீர் இனிதாடி. 2

பாம்பினை அணிகலனாகப் பூண்ட வயிரவனார் மிகப் பெருத்த தோளுடைய அந்தகாசுரனை மூவிலைச் சூலத்தினின்றும் இறக்கியகாலத்துத் தீயை உமிழ்கின்ற திண்ணிய அச்சூலத்தால் தொட்ட சூல தீர்த்தம் இவ்வுலகில் சிறப்பு மிகும். அமாவாசை பௌர்ணிமைகளில் அந்நீரில் மூழ்கி,

செவ்வந்தீச்சரம்

தென்புலத்தோர் கடன்செலுத்தில் அணையர் துறக்கஞ் சென்றெய்தி, இன்புறுவார் அதன்கரைக்கண் இலிங்கம் அமைத்து மருத்திறைவன், மென்பனிநீர் செவ்வந்தி வேரிச் செழும்பூப் பலகொண்டு, வன்பகல வழிபட்டுக் கந்த வாகன் எனப்பெற்றான். 3

பிதிரர்க்கு நீர்க்கடனாற்றில் முன்னோர் சுவர்க்கம் புக்கு இன்பமடைவர். அத்தீர்த்தக் கரையில் சிவலிங்கம் நிறுவி வாயுதேவன் மெல்லிய பனி நீரையும் தேன் பொருந்திய செவ்வந்தியின் செவ்விய மலர்கள் பலவும் கொண்டு தீமை நீங்க வழிபாடு செய்து நறுமணத்தைச் சுமந்து வருவோன் எனப் பெற்றனன.

பரிதிக் குளம்

மருத்தேத்துஞ் செவ்வந்தீச் சரமால் வரைப்பின் வடகுடக்காந்
திருத்தேத்துக் கதிர்ப்பரிதிச் செல்வன் பரிதிக் குளந்தொட்டுக்
கருத்தேய்த்து வீடளிக்கும் அந்நீ ராட்டிக் கருதார்ஊர்
உருத்தேத்துஞ் சுரர்க்கருளும் ஒளியைத்தொழுதுவரம்பெற்றான்.

வாயு வழிபாடு செய்த செவ்வந்தீச்சரமாம் பெருமை பொருந்திய சூழலின வடமேற்காகும அழகிய இடத்தில் கதிர்களையுடைய சூரியன் தன் பெயரால் சூரிய தீர்த்தம வகுத்துப் பிறவி நோயைப் போக்கி வீடுபேற்றினை வழங்கும் அந்நீரால் திருமுழுக்காட்டிப் பகைவருடைய முப்புரங்களை வெகுண்டழித்துப் போற்றுந் தேவர்க்கருள் செய்யும் பரஞ்சுடரைத் தொழுது வேண்டும் வரங்களைப் பெற்றனன்.

சந்திர தீர்த்தம்

வீங்கிருள்சீத் தொளிபரப்பிப் பைங்கூழ் புரக்கும் வெண்கதிரோ
தேங்கமல முகைஅவிழ்கருஞ் சருவ தீர்த்தத் தென்றிசையின் [ன்
ஆங்கண்நறுஞ்சுவைத்தெள்ளாரமுதத்தடந்தொட்டதன்கோட்டி
பாங்குபெறப்பிஞ்ஞகன்தாள்அருச்சித் தேத்திப்பயன்பெற்றான்.

பேரிருளை நீக்கி ஒளியைப் பரப்பிப் பயிரை வளர்க்கும் சந்திரன் தேன் மருவிய தாமரை அரும்பை மலர்த்துஞ் சருவ தீர்த்தத்திற்குத் தெற்கில் நறிய சுவையையுடைய தெள்ளிய அரிய அமுத மயமான நீர் நிலையை அகழ்ந்ததன் கரையில் நற்பண்பமையச் சிவபிரான் திருவடிகளை அருச்சனை செய்து பயனைப் பெற்றனன.

சந்திரனுக்குச் சசியாதிபதி என்னும பெயர் காண்க.

நலம்ஒன்று செவ்வந்தீச் சரக்கீழ் ஞாங்கர் ஏழ்இலிங்கம்
நிலமைந்தன் மதிமைந்தன் வியாழம் வெள்ளி நீடுசனி
அலமந்த இருபாந்தள் அருச்சித் தருங்கோள் நிலைபெற்றார்
வலம்வந்தங் கவைதொழுவோர் தம்மைக்கோள்கள் வருத்தாவால்.

நன்மை பொருந்திய செவ்வந்தீச்சரத்திற்குக் கிழ்த்திசையில் செவ்வாய், புதன், குரு, வெள்ளி, சனி, மனச்சுழற்சியுடைய இராகு கேதுக்கள் ஆகிய எழுவர் ஏழிலிங்கம் நிறுவி அருச்சனை புரிந்து கிரக நிலையை அடைந்தனர். அத்தலங்களுள் சூழவந்து வணங்குவோரைத் கிரகங்கள் வருத்தாவாய் நற்பயனை விளைக்கும.

நீடு சனி ஓரோர் இராசியினும் இரண்டரையாண்டுகள் தங்கு தலின் நீடு சனி என்றனர்; மந்தன என்னும் பொருளையும் காண்க.

நவக்கிரகேசப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - 1650

## பிறவாத் தானப் படலம்

கலி விருத்தம்

பவன னொடொன் பதிற்றுக் கோள்களும்
இவறிப் போற்றும் இடங்கள் கூறினும்
சிவனைச் செவ்வாய் முதலி யோர்தொழும்
புவியிற் பிறவாத் தானம் போற்றுவாம். 1

வாயுவும் ஒனபது கோள்களும் விரும்பிப் போற்றும் தலங்களைப் போற்றினோம்; இனி, முதல்வனைச் செவ்வாய் முதலானோர் வணங்கும் இருக்கைகளை அடுத்துளள பிறவாத் தானத்தைப் போற்றுவாம்.

வாமதேவன் எண்ணும் மாமுனி
காமர் அன்னை கருவின் வைகுநாள்
பேமு றுத்தும் பிறவி அஞ்சினன்
ஏமு றாமை இதுநி னைக்குமால். 2

வாமதேவன் என்னும பெருமுனிவர் விரும்புகின்ற தாயது கருப்பையிற்றங்குநாளில் அச்சப் படுத்தும பிறவியை அஞ்சினர்; வருந்தி இவ்வா றெண்ணுவர்.

"தாய்கருவில் வாழ்குழவி தாமெல்லாம் வேண்டுவது தாயபிற வாமை ஒன்றே-சோமேசா" (சோமேசர்- )

பொதியும் மாயப் புவியில் தோன்றிநான்
மதிம யங்கி மற்றும் இன்னணங்
கொதிபி றப்பிற் கொட்பு றாதெனக்
கதிப னேஇங் கருளிச் செய்என. 3

நிலையாமை நிறைகின்ற பூமியில் பிறந்து நான் அறிவு மயங்கி மேலும் இவ்வாறு வருத்துகின்ற பிறப்பிற் சுழலாது எனக்குத் தலைவனே! இந்நிலையே அருள்செய்' என்று வேண்ட,

தோற்றம் ஈறில் லாத சோதிவெள்
ளேற்றி னானை இதயத் தன்பினால்
போற்று காலை புனிதன் ஆண்டுறீஇச்
சாற்ற லுற்றான் தவமு னிககரோ. 4

பிறப் பிறப்பில்லாத பேரொளியாகிய வெளவிடையினானை உள்ளத்தில் அன்பொடு நினைக்கும அந்நிலையில் தூயோன் ஆங்கு வெளிப்பட்டுத் தவமுனிவர்க்குக் கூறத்தொடங்கினர்.

யாண்டும் உடனிருந்துதவுவோான ஆண்டு வெளிப்பட்டனன் என்க. கருப்பையில் அருளுதல்: எங்கேனும......தனனடியார்க்கு, அங்கே வந்தருளல்.

மண்ணின் மீது தோன்றி மற்றெமை
நண்ணிக் காஞ்சி நகரிற் பூசனை
பண்ணு மோவெம் பவத்தொ டக்குனை
அண்ணு றாதென் றருளிச் செய்தனன். 5

'புவியிடைத் தோன்றிக் காஞ்சி மாநகரை நண்ணி அங்குப் பூசனை செய். கொடிய பிறவிப்பாசபந்தம் உன்னை அணுகா' தென்றருளினர்.

வள்ளல் புகலும் மாற்றங் கேட்டனன்
உள்ளம் மேன்மேல் உவகை பூத்தனன்
பள்ள முந்நீர்ப் படிமி சைப்பிறந்
தெள்ள ருஞ்சீர்க் காஞ்சி எய்தினன். 6

வரையாது வழங்கும் வள்ளலார் அருளும திருவாக்கைக் கேட்டு மேன்மேலெழும் மகிழ்ச்சியின் மலர்ந்தனர். ஆழமுடைய கடல் சூழ்ந்த புவியிற் பிறந்து, புகழப் பெறுஞ் சிறப்பினையுடைய காஞ்சியை அடைந்தனர்

இலிங்கம் அங்கண் இனிதி ருத்திநூற்
புலங்கொள் முறையிற் பூசை ஆற்றுபு
கலங்கு பிறவிக் கரிசின் நீங்கினன்
மலங்க ருஞ்சீர் வாம தேவனே. 7

அருட்குறி நிறுவி விதிப்படி பூசனை புரிந்து கொட்புறு பிறவிக் குற்றத்தினின்றும் வருந்துதலைத் தவிர்ந்தனர் வாமதேவர்.

கலிநிலைத் துறை.

அன்ன வாற்றாற் பிறவாத் தான மாயதால்
இன்ன தானம் வழிபட் டேத்தப் பெற்றவர்
பின்னர் மாதர் கருவின் எய்திப் பேதுறார்
கன்னி பாகன் கருணை வெள்ளங் காண்பரே. 8

அதனால் அவ்விடம பிறவாத் தானம என்றாயிற்று. இங்கு வழிபடுவோர் பின்பு மகளிர் கருவிற்றங்கி உள்ளம கலங்கார். உமையம்மையார் கணவர் அருட்பெருக்கில் மூழ்குவர். கன்னி—அழிவில்லவள்.

அங்கட் போற்றி வாம தேவன் அருளினால்
துங்கக் கயிலை எய்தி நோன்தாள் தொழுதெழூஉக்
கங்கைச் சடையான் உதவி லிங்கங் கைக்கொடு
பங்கப் பழனக் காஞ்சிப் பதியின் மீண்டரோ. 9

வாமதேவர் ஆங்கு வழிபட்டுப் பெருமான் அருளால் உயர்ச்சியுடைய கயிலையை எய்தி வலிய திருவடிகளைத்தொழுதெழுந்து பெருமானார் அருளிய சிவலிங்கத்தைக் கைக்கொண்டு சேறுடைய வயல் சூழ்ந்த காஞ்சியை மீண்டும அடைந்து,

முத்தீச்சரம்

மேன்மை சான்ற பிறவாத் தான மேற்றிசை
ஞான வாவி ஞாங்கர் முத்தீச் சரனென
மான முத்தித் தளியின் நிறுவி வாழ்த்தினன்
ஏன வெண்கோட் டணியார்க் கினிதாம் அன்னதே. 10

மேன்மை அமைந்த பிறவாத் தானம் எனும் தலத்திற்கு மேற்குத் திசையில் ஞானதீர்த்தத்திற்கு அயலில் முத்தீச்சரப்பிரானெனப் பெருமையுடைய முத்தீச்சரர் திருக்கோயிலில் நிறுவிப் போற்றினார். அத்தலம் பனறிக் கோட்டினை அணிந்த பிரானார்க்கு இனியதாகும்.

பிறவாத்தானப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—1660.

# இறவாத் தானப் படலம்

*கலிநிலைத் துறை*

புள்ளி வண்டு பெடையொ டாடிப் பொங்கரிற்
பள்ளி கொள்ளும் பிறவாத் தானம் பன்னினும்
துள்ளி வாளை பாயும் நீர்சூழ் இதன் அயல்
வெள்ளி வரையார் இறவாத் தானம் விள்ளுவாம். 1

புள்ளியுடைய ஆண் வண்டு பெண் வண்டுடன் கூடிச் சோலையிற் றுயில் கொள்ளும பிறவாத்தானத்தை ஆராய்ந்து கூறினோம். இனி, வாளை மீன்கள் துள்ளிப் பாய்தற் கிடனாகிய நீர் சூழ்ந்த இதன் மருங்கே கயிலைமலையார் எழுந்தருளியிருக்கும் இறவாத்தானத்தை விளம்புவேம்.

இறவிக் கஞ்சிச் சிலரு பதர்கள் மாதவம்
முறையிற் செய்தார் முன்னாள் அந்நாள் முன்னுற
நறவில் திகழும் முளரி மேலோன் நண்ணிநின்
றறவர்க் கென்னே வேட்ட தென்றான் ஆங்கவர். 2

முன்னாளில் முனிவர் சிலர் இறப்பை அஞ்சிப் பெருந்தவத்தை விதிப்படி இயற்றினர். அப்பொழுது தேனொடு திகழும் தாமரைத் தவிசினோன் எதிருறத் தோன்றி 'அறவோரே! நீவிர் விரும்புவரம் என்' என வினவினான். அங்கவரும்,

உலக முழுதும் உதவும் எந்தாய் உன்னடித்
தலமே யன்றிச் சரணம் இல்லேம் சாவதற்
கலகில் அச்சம் உற்றேம் அதனை வெல்லுமா
றிலக எங்கட் குரையாய் என்றங் கேத்தினார். 3

'உலக முழுதையும் சிருட்டிக்கும் மண் பொதுத் தந்தையே! உன்னடித் துணை அல்லாது வேறு புகலிடம் இல்லேம். இறப்பினுக்கு அளவு படாத அச்சமுடையோம. அதனை வெல்லும் உபாயத்தை விளங்க எங்களுக்கு உணாத்தவேண்டும்' எனப் போற்றினர்.

செங்கால் அன்னப் பாகன் கேளாத் தேத்துணர்க்
கொங்கார் பொங்கர்க் காஞ்சி நண்ணிக் கோமளை
பங்கார் ஆதி பகவன் பாதம் வழிபடின்
அங்கே இதனைப் பெறலாம் என்றான் அவர்களும். 4

சிவந்த கால்களையுடைய அனனத்தை ஊர்தியாகவுடைய பிரமன் கேட்டுத் தேன பொருந்திய பூங்கொத்துக்களின் மணமருவிய சோலை சூழ் காஞ்சியை நண்ணி உமையம்மையாரைப் பங்கிலுடைய ஆதிபகவனுருடைய திருவடிகளை வழிபாடு செய்தால் நீங்கள் விரும்பிய அதனை அவ்விடத்தே பெறலாகும்' என்றனன. அம்முனிவரும்,

அன்னத் தோன்றல் அடிகள் போற்றி விடைகொடு
நன்னர்க் காஞ்சி நகரம் நண்ணி நாயகன்
றன்னைத் தாபித் தேத்திச் சாவா மாட்சியின்
மன்னப் பெம்மான் உதவப் பெற்று வாழ்ந்தனர். 5

பிரமனை வணங்கி விடைகொண்டு நலமுடைய காஞ்சியை நண்ணிப் பிரானை இருத்திப் புகழ்ந்து இறவாத இயல்பினில் நிலை பெறும்படி பெருமான் அருள் செய்யப் பெறறு வாழ்ந்தனர்.

சுவேதன் என்பான் வாழ்நாட் கழிவு துன்னுநாள்
சுவேதந் தீற்று மாடச் சூழல் அதனிடைச்
சுவேத நல்லான் ஊர்தி நோன்தாள் தொழுதனன்
சுவேத நீற்றான் நீத்தான் இறவித் துன்பமே. 6

வெண்ணிற விபூதியினனாகிய சுவேதன் இறக்குந் தருவாயில், வெண்சுதை தீட்டிய மாடங்களைக் கொண்ட இறவாத்தானத்தில் வெண்ணிற நல்விடைப் பிரானுருடைய இயமனை உதைத்த வலிய தாளைத் தொழுது இறப்பினால் வருந் துன்பத்தைத் தவிர்த்தனன்.

மார்க்கண் டேயன் அங்கண் போற்றி மறலியைத்
தாக்கி நிலைமை பெற்றான் சாலங் காயினன்
ஆக்க மைந்தன் மகனும் அங்கண் ஏத்துபு
சாக்கா டற்றான் கணநா தச்சீர் தழுவினான். 7

மார்க்கண்டேய முனிவர் அங்கு வழிபாடு செய்து இயமனைத் தாக்கி இறவாத நிலைமையைப் பெற்றனர். சாலங்காயினர்க்கு மகன் மகனாகிய பெயரனும அவ்விடத்தில் ஏத்தி இறப்பொழிந்து கணநாதர் பதத்தினைப் பெற்றனன. ஆக்கம்– மேனமேலுயர்தல்.

ஆயுள் மாய்வின் இன்னும் அங்கண் எண்ணிலர்
தூய அன்பின் தொழுது நிலைமை பெற்றனர்
ஏய வாற்றால் ஆயுள் வேட்டோர் யாவரும்
பாய சீர்த்தி இறவாத் தானம் பணிகவே. 8

மேலும் அவ்விடத்தளப்பிலார் ஆயுள் முடிவு நாளில் உள்ளன் பொடும தொழுது என்றும வாழும் நிலைமையை எய்தினர். பொருந்தும் இமமுறையால் வாழ்நாளைப் பெருக்கிக் கொள்ள விரும்புவோர் யாவரும் பரவிய மிகு புகழுடைய இறவாத்தானத்தில் வழிபடுக.

இறவாத்தானப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-1668.

---

# மகாலிங்கப் படலம்

*கலிநிலைத் துறை*

வெள்ளைத் திங்கட் பிள்ளைக் கீற்று மிளிர்சடை
வள்ளற் கோமான் இறவாத் தானம் வாழ்த்தினும்
கிள்ளைச் சொல்லார் பயிலும் அதனின் கீழ்த்திசை
விள்ளற் கருமா லிங்கத் தானம் விள்ளுவாம். 1

இளம் பிறையை அணிந்த சடைமுடியையுடைய வள்ளற் பெருமானது இறவாமைக்கு ஏதுவாகிய தானத்தை வாழ்த்தினோம். இனி, கிளியை ஒகரும மெல்லிய மொழியினராகிய மகளிர் பயிலும் அதன் கிழக்குத் திசையில் விளம்புதற்கரிய சிறப்பினையுடைய மகா லிங்கத்தானத்தை இயனற அளவு விளம்புவாம்.

*பிரமனும் மாலும் பெரும்போர் புரிதல்*
*அறுசீரடி யாசிரிய விருத்தம்*

வையம் முழுதும் மடிய வரும்ஓர் ஊழி முடிவின்
வெய்ய இருள்வந் தடர விரிநீர்ச் சலதி வேகஞ்
செய்து நிமிர்ந்து பொங்கித் தேங்கிக் கிடந்த காலைப்
பைய உறக்கம் நீத்து மீளப் படைக்க உன்னி. 2

உலக முழுதும் அழியவரும் ஓர் கற்ப முடிவில் கொடிய இருள் வந்து மூட விரிந்த நீரையுடைய கடல் விரைந்து மேனோக்கி நிவந்து சலப்பிரளயமாய் உலகை விழுங்கித் தேங்கிக் கிடக்கும நிலையில் உறக்கத்தை மெல்ல விடுத்து மீளவும் உலகைப் படைக்க எண்ணி,

துங்கத் தனது நகரிற் சுடரும் மறையின் கிழவன்
எங்கும் அலைகள் புரள ஏகப் புணரி வெள்ளம்
தங்கு செயலை நோக்கித் தடவுக் கருவி முகில்போய்
அங்கண் அரவில் துயிலும் ஐயன் றனையுங் கண்டான். 3

உயர்வுடைய மனோவதி என்னும் தனது நகரில் விளங்குகின்ற பிரமன யாண்டும் அலைகள மறித்து வீச ஒன்றுபட்ட கடல் நீரப்பெருக்கு நிலைபெற்றுள்ள நிகழ்ச்சியைக் கண்டு பெருமை பொருந்திய தொகுதியையுடைய கரிய மேகம்போல அவ்விடத்து ஆதிசேடனாகியபாயலில் அறிதுயில் கொள்ளும தனது தந்தையையும கணடனன.

கருவி—இடி, மின, முழக்கம முதலிய தொகுதியையுடைய மேகம்.

கண்டு புடையி னணுகிக் கடுக எழுப்பி மையல்
கொண்டு நீயார் என்று வினவக் கொண்ட லனையான்
அண்டம் முழுதுங் காக்கும் அகில முதல்வன் யானே
மீண்டு நீயார் என்பால் வேட்ட தென்கொல் என்றான். 4

கண்டு மருங்கில் நெருங்கி மயக்கங்கொண்டு விரையத் துயி லெழுப்பி 'நீ யார்' என்று வினவ, நீர்கொண்ட மேகத்தை ஒத்த திரு மால் 'யானே அண்டங்கள அனைத்தையும் காக்கும் முழுமுதல்வன்; செருக்குடைய நீ யார்? எனனிடத்து நீ விரும்புகின்ற பொருள் யாது? என்றனர்.

நறவம் ஒழுகு மலரோன் கேட்டு நகைஉட் கொண்டு
பிறரும் அல்லர் நீயும் அல்லை பேணி உலகம்
நிறுவு முதல்வன் யானே என்னும் இனைய நெறியின்
மறலிக் கூறித் தம்முள் ஊடல் வளர்த்து நின்றார். 5

தேனொழுகும் மலரிலிருக்கும் பிரமன கேட்டுக் தன்னுள்ளே சிரித்து விரும்பி உலகத்தை நிறுவு முதல்வன், பிறரும் அல்லர்; நீயும் அல்லை; யானே' என்னும் இம்முறையில் மாறுபட்டுக் கூறித் தமக்குள் பகைமை யவளர்த்து நினறார்.

சிந்தை நாணுக் கழலச் சிலையின் நாணுப் பூட்டி
முந்து கணைகள் தூர்த்தார் மூரிக் கனலி வருணன்
இந்து இரவிப் படையும் ஏவி அவைகள் மடியப்
பந்த வினையின் மருள்வார் தத்தம் படைவிட் டார்த்தார். 6

உள்ளத்துள் நாணம் நெகிழ வில்லின் நாணியைப் பூட்டி முற் படும் அமபுகளைச் சொரிந்து வெளியை மறைத்தனர்; வலிய அக்கினி, வருணன், சோமன், சூரியன இவர்தம தெய்வப் படைகளை எதிரெதிர் தூண்டி அவைகள் அழிந்துபோகத் தீவினையின் வயப்பட்டு மயங்கு வோர் தங்கள படைகளாகிய பிரமாஸ்திரத்தையும், நாராயணாஸ்திரத்தை யும் விட் டாரவாரித்தனர்.

மும்மைப் புவனம் ஈன்றோன் படையும் முகுந்தன் படையும்
தம்முட் பொருது மாய்ந்த பின்னர்க் கமலத் தவிசோன்
வெம்மைப பாசு பதமாப் படையை விடுப்ப மாயோன்
செம்மல் உருத்தி ரத்திண் படையைச் செலுத்தி நின்றான். 7

பிரமாஸதிரமும, நாராயணாஸ்திரமும் தம்முள் போர்செய்தழிந்த பின்னர்ப் பிரமன வெய்ய பாசுபதப பெரும்படையை விடுபபத்திருமால் தலைமைவாய்ந்த உருததிராஸ்திரத்தை எதிர்தூண்டி நின்றனர்.

பெருமான் சோதிலிங்க வடிவாயது

அம்ம இரண்டு படையும் அயுத வருடம் நேர்ந்து
தம்முள் உடலுங் காலைத் தழங்கும் எரியின் பொறிகள்
தும்ம எழுந்து தோன்றிச் சோதி இலிங்க வடிவாய்
நம்மை யுடைய பெருமான் அவற்றின் நடுவு நின்றான். 8

வியப்புடைய இருபடையும பதினுயிரம் வருடம் எதிர்ந்து தம்முட் போர் செய்கையில் நம்மை அடிமையாகவுடைய சிவபிரானுர் சுடரும் நெருப்புப் பொறிகள நாற்றிசையும சிந்தச் சிவலிங்கச் சுடர்வடிவமாய் உயர்ந்துதோன்றி அவற்றின நடுவில் நின்றனர்.

நின்ற சோதி உருவின் நேர்ந்த இரண்டு படையும்
சென்று கரப்ப நோக்கித் தெருமந் தரியும் அயனும்
இன்று தோன்றும் இதுஎன் னென்று தம்முள் எண்ணிக்
கன்றும் இதன்றன் அடியும் முடியுங் காண்டும் என்று. 9

எதிர்த்த இருபடைகளும் நடுநின்ற சோதித் திருவுருவிற்சென்று மறையத் திருமால் பிரமர் அதனைப் பார்த்து மனஞ்சுழனறு 'இப் பொழுது வெளிப்படும இது'யாது' என்று தம்முள் பெரிதும் எண்ணி வெகுண்டெழுந்த இதன அடியையும் முடியையும் காண்பேம்' என்று வஞ்சினம் கூறி,

கேழல் எகின மாகிக் கீழும் மேலுந் துருவி
ஊழின் இரண்டைஞ் ஞூறு வருடம் உழிதந் துற்றூர்
வாழி முடியைக் காணுன் வண்டு முரலும் மலரோன்
பாழிச் சிறகர் முறியாப் பையுள் எய்தி வீழ. 10

பன்றியாகி நிலமகழ்ந்து கீழும் அன்னமாகிப் பறந்து விசும்பின் மேலும் முறைறே ஆயிரம வருடம தேடித்திரிந்தனர். தாமரையோன் திருமுடியைக் காணுய் வலியுடைய சிறகுகள் முறிந்து துன்ப மடைந்து வீழ,

நாறுந் துளவத் தவனும் நாடிச் சரணங் காணுன்
வீறும் வலியுங் குன்றி எய்ப்பும் இளைப்பும் விரவ
ஏறும் பரவைப் பெருநீர் இடையுள் எழுந்தங் குற்று
மாறும் இருவர் களுமால் எய்தி மருட்கை கொண்டார். 11

துழாய் மாலையையணிந்த திருமாலும் தேடித் திருவடியைக் காணுராய்ச் செருக்கும, வலியும குறைந்து சோர்வும், மெலிவும் சேர நிவக்கும பரப்புடைய கடல் நீரில் எழுந்து தோன்றி மாறுபடும் இருவர் களும் அறியாமை எய்தி மயங்கினுர்.

வேதம், முதல்வன் உண்மை கூறல்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

ஏமுறு பொழுதவண் ஒலிவடிவின் நாதம தெழுபுமுன் இரு-
திறனுய், ஓம்என உமைஎன மருவி இருக் கோடுயர் நெறிஅருள் புரி-
எசுவும், சாமமும் எனநிலை பெறவிரிவுற் றங்கவை தம்வலி மிகும்-
அவர்முன். காமுறு தகையகல் வடிவொடு நின் றிணையன
கருணையின் உரைசெயுமால். 12

மயங்குகையில் நாத தத்துவம் ஒளிவடிவாய் எழுந்து முன்னர் 'ஓம்' எனவும் 'உமை' எனவும இருபகுப்பாய்ப் பின்னர் இரண்டன் சேர்க்கையால் இருக்கும், சிவ நெறியைப் பயக்கிறை எசுரும், சாமமும் என மூன்று வேதங்களாய் நிலைபெற விரிந்து அவ்வேதங்கள் தத்தம் வலிமையையே மதித்து நிற்கும் அத்தேவர் முனனே விருமபத் தக்க அழகிய திருவுருவொடு நின்றிவ்வகை இரக்கத்தால் கூறும,

எவனடி மறையவர் மகவினையால் இருவினை வலிகெட வழி படுவார், எவன்அரி அயன்எனும் நுமைஒருதன் இடவல வடிவினில் வரஅருள்வோன், எவன்நுமை நும்பதம் உறநிறுவும் இறையவன் நுமதிருள் கழியவரும், அவனது குறிஇது அறிமின்என அருள்வழி வருமறை யவைபுகல. 13

வேதியர் இருவினையின் வலிமை அழிய வேள்வியால் எவனடியை வழிபடுவார்? அரியும அயனும் ஆகிய உங்களை ஒப்பற்ற தன்னுடைய வடிவினில் முறையே இடத்தினும வலத்தினும் வர அருள் செய்வோன் எவன்? உங்களை உம பதத்தில நிறுவும இறைவன் எவன்? உமமுடைய அறியாமை கெடவரும அவன்றன் அருட்குறி இது என்'றறிமின் என இறைவன் ஆணையிற் றோன்றிய வேதங்கள் கூற,

அயனும் அரியும் துதித்தல்

நறைகமழ் துளவணி தொடையவனும் நகைமல ரணைமிசை மறையவனும், மறைமொழி செவியுற மயல்கழிவுற் றலைகடல் வரும்-விடம் அமுதுசெயும், இறைவனை முறைமுறை பரசினரால் எனையுடை முதல்வனும் அவரெதிர்நின், றுறைபெரு மயலினை இனிவிடுமோ உதவுதும் விழைவன உரைமினென. 14

துழாய் அணிந்தமாலும், பிரமனும் மறைமொழியைக் கேட்டு மயக்கம் நீங்கிப் பாற்கடலிற்றோன்றியவிடத்தை அமுது செய்யும் இறைவனை முறை முறையே துதிசெய்தனர். என்னை அடிமையாகவுடைய முதல்வனும் அவர்கள் முன நின்று 'தங்கிய பெருமயக்கை இப்பொழுது விடுமின் விருமபியவற்றைக் கூறுமின உதவுவோம்' என றருள,

பங்கயன் இருகரம் உச்சிமிசைப் பயில்வுற அடிதொழு துளம்உருகி, எங்குறை இன்று பொறுத்தருளி எளிவரு நாயக உனைஉணரா, துங்குறு மயல்இனி எனைஅணுகா துன்புடை நிலைபெறும் அன்புதவி, மங்கலில் ஊழிதோ றென்வடிவில் வந்தரு ளெனமொழி விண்டனனே. 15

பிரமன தனனுடைய இருகரங்களும சிரமேற்குவியத்திருவடிகளைத் தொழுதுள்ளம உருகி எம்முடைய குற்றங்களை இந்நாள பொறுத்தருளி எளிவந்த நாயகனே! உனனை உணராது முன்னுற்ற மயக்கம் இனி எனனை அணுகாது உன்கண் எனறும் மாறுத அன்பினை உதவிக் கிளர்ச்சியுடைய படைப்புக் காலந்தோறும் எனனுதலிற்றோன்றி சிருட்டிக்கும் முறையை அருளுக என வேண்டினன்.

திருமகள் விழைதரு திகழ்மருமச் செம்மலும் அடியிணை தொழுதினிஇம், மருள்எனை ஒருபொழு தினும்அடரல் உன்னடி வழிபடு செயல்பிறழல், கருமுகில் உறழ்மிட றுடையவநின் கருணை-என் னிடைநிலை பெறநிறுவில், ஒருகுறை உளதுகொல் அடியடி-யேற் கென்றுள மகிழ்வுடன் ஓதினனல். 16

திருமகள் விரும்புகின்ற விளக்கமமைந்த மார்பினையுடைய திருமாலும் திருவடிகளைத் தொழுதினி இம்மயக்கம் என்னை ஓர் காலத்தும் அணுகற்க. உன்னடித் தொண்டில் பிறழற்க. நீர்கொண்ட மேகம் போலும் திருக்கழுத்தினனே! நின்கருணையை என்னிடை நிலைபெற நிறுவினால் அடியின் கீழுறையும் அடியேனுக்கு ஓர் குறைபாடு உண்டு கொல்லோ, என்று உவகையுடன் கூறினர்.

அயனும் அரியும் அருள்பெற் றுய்தல்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

இவ்வண்ணம் இருவர்களும் இரந்தேத்தி விண்ணப்பஞ் செய்யக் கேளா, அவ்வண்ண மாகவெனப் பெருங்கருணை கூர்ந்-தருளி அகிலம் ஈன்ற, மைவண்ணக் கருங்கூந்தல் முலைச்சுவடும் வளைத்தழும்பும் மாறா மேனிச்,செவ்வண்ணப் பரமேட்டி பின்னரும்அங் கவர்க்கிதனைத் தெரித்துக் கூறும். 17

இங்ஙனம் இருவரும் இரந்து புகழ்ந்து வேண்ட அனைத்துலகங்களையும் பயந்த மிகக் கரிய கூந்தலையுடைய அம்மையாரின் தனத் தழும்பும், வளைத்தழுமபும் அகலாத திருமேனியையுடைய சிவபரஞ்சுடர் பின்னரும் இதனை எடுத்துக் கூறும்.

இற்றைநாள் நீர்காணும் இவ்விலிங்கப் பெருவடிவம் இறுதிக் காலம், முற்றுநாள் அணுகாது கொற்றங்கொள் திருக்காஞ்சி மூதூர் மாடே, பற்றுபெருங் காதலினல் தாபித்து வழிபட்டுப் பரசி ஆறைப், பெற்றியுறு வியனுலகம் படைத்தளிக்கும் பெருமதுகை பெற்று வாழ்மின். 18

இந்நாள் நீவிர்காணும் சிவலிங்க இப்பெருவடிவினை ஊழிக்காலத்திலும் அழியாத வெற்றியையுடைய திருக்காஞ்சி மாநகரிடத்துப் பெருவிருப்பொடும் நிறுவி வழிபட்டுத் துதிசெய்து அமையாத இயல்பினையுடைய பேருலகைப் படைத்துக் காக்கும் பேராற்றலைப் பெற்று வாழ்மின்.

வெண்டிரைநீர் அகல்வரைப்பின் நும்முதலோர் விண்ணவர்-கள் அவுணர் சித்தர், பண்டைவினைக் குறும்பெறியும் முனிவரர்மானிடர்யாரும் பாசக் கூட்டம், விண்டகலும் படிஇன்று தொட்-டெம்மை இலிங்கத்தின் மீளா நேசங், கொண்டுபூ சனைபுரிக புரிவோர்க்கு மயல்என்றுங் குறுக லோம்பல். 19

வெள்ளிய திரையுடைய நீர்சூழ்ந்த அகன்ற நிலவுலகில் நும்மோருடனும் ஏனோராம் விண்ணவரும், அவுணரும், சித்தரும், பழைய வினைத் தீமையை அழிக்கும் முனிவரும், மானிடரும் யாவரும் பாசக் கூட்டம் நீங்கும்படி இந்நாள் முதல் எம்மைச் சிவலிங்கத் திருவுருவில் பெயராத பெருவிருப்பங்கொண்டு பூசனையைப் புரிக. புரிபவர்க்கு மயக்கம் குறுகுதலொழிக.

முற்செய்யுளில், அடரல். பிறழல் என்பவற்றுள் அல்விகுதி வியங்கோள் எதிர்மறையினும், இச்செய்யுளில் ஓம்பல் அல்விகுதி உடன்பாட்டினும் வந்தன. "மகனெனல், மக்கட் பதடி எனல்" (திருக். 196.) இருபொருளினும் வந்தமைகாண்க.

கடப்பாடு வறுமைபயம் மனக்கவலை பசிபாவங் கடுநோய்
மற்றும்,உடற்றுமை ஆங்கவர்க்கு மீளவினைப் பிறவியுறல் உறினும்
இன்பங், கிடைத்தானுப் பெருமகிழ்ச்சி தலைசிறப்ப நனிவாழி
கிளருஞ் சீற்ற, நடைக்காலன் மற்றவர்பால் நணுகற்க நம்ஆணை
வலியான் மன்னோ. 20

அங்ஙனம் முறையாகப் பூசனை புரிவோர்க்கு வறுமையும், அச்சமும், மனத்துன்பமும், பசியும், பாவமும், கொடிய நோய்களும், பிறவும் வருத்தாத வண்ணம் வினையால் வரும் பிறவி பொருந்தாதொழிக. உற்றுலும் இன்பம் வாய்த்து நீங்காத பெருமகிழ்ச்சி மீக்கொள்ளப் பெரிதும் வாழ்வார்களாக. பொங்குங்கோபம் இயல்பாகவுடைய இயமன் நம்முடைய கட்டளையால் அவரை அணுகா தகல்க.

வேதியர்மன் னவர்வணிகர் வேளாளர் சங்கரத்தின்
மேயோ ராக,மூதிமையோர் உரகர்தயித் தியர்அரக்கர் கந்தருவர்
முனிவ ராகப், பூதிதரும் இலிங்கபூ சனைஇல்லார் பூதிசா தனங்கள்
பேணுர்,ஏதிலராம் இழிஞரினும் இழிஞரே அவரொடுபேச் சியம்பி
னோரும். 21

அந்தணர், அரசர், வைசியர், வேளாளர், சங்கர சாதியினர் எனினும் ஆக, பெருமையுடைய தேவர், நாகர், அசுரர், அரக்கர், கந்தருவர், முனிவர் இவர்தம்முள ஒருவரேனும் ஆகச் செல்வத்தைத்தரும் சிவலிங்க பூசனையை மேற்கொள்ளாதவரும், விபூதி, உருத்திராக்க முதலிய சாதனங்களைப் போற்றுதவரும் அயலவராவர். அவரொடு பேசுவோரும் கீழ் மக்களுள்ளும் கீழோராவர்.

நியதிமகம் தவம்தானம் விரதநிலை பிறவற்றின் நிகழ்த்தும்
பூசைப், பயன்எவையும் இலிங்கபூ சனைக்கோடி கூற்றின்ஒரு.
பயனுக் கொவ்வா, வியனுலகம் உய்யுமுறை இவ்வாறு நமதாணை
விதித்தேம் போற்றி, உயலுறுவீர் என்றருளிச் சிவபெருமான்
அடியர்உளக் கோயில் புக்கான். 22

'வேள்வி, தவம், தானம், விரதநிலை என்னும் இவற்றுணுகப் பிறவற்றுணுக நியதியாகச் செய்யும் பூசனைப் பயன்கள்யாவும் சிவலிங்க பூசனையினுல் விளையும் பயனுக்குக் கோடியிலோர் கூறும் ஒப்பாகா. பரந்த உலகிற் பல்லுயிரும் பிழைக்கும்வகை இங்ஙனம் நமது ஆணையைச் செலவுய்த்தேம். இதனை மனங்கொண்டு பிழைப்பீராக' என்றருள் செய்து பெருமானுர் அடியவர் திருவுள்ளமாகிய கோயிலில் புகுந்தனர்.

பாப்பணையில் துயில்வோனும் பனிமலரிற் பயில்வோனும் பணிந்து நீங்கி, யாப்பமைநீர்த் தடம்பொய்கைத் திருக்காஞ்சி வளநகரம் எய்தி ஆங்கண், மீப்பொலியும் மகாலிங்கம் நிறீஇத்-தொழுது பயன்பெற்ருர் விரிநீர் வைப்பின், நீப்பரிய சிவலிங்க வழிபாட்டின் பேறெவரே நிகழ்த்த வல்லார். 23

திருமாலும், பிரமனும் வணங்கி விடைகொண்டு கரையமைந்த தடாகங்கள் கொண்ட திருக்காஞ்சி வளநகரை எய்தி அங்கு மேன்மை பெற விளங்கும் மகாலிங்கம் நிறுவிப் பூசனையைப் புரிந்து பயனடைந்தனர். கடல் சூழ்ந்த நிலவுலகில் கைவிடுதற்கரிய சிவலிங்க வழிபாட்டின் பேற்றினை யாவரே கூறவல்லவர்.

மகாலிங்கப்படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - 1691

## வீராட்டகாசப் படலம்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

தண்காமர் புனல்குடையுந் தையலார் திமிர்ந்தநறுந் தகர ஞாழல், எண்காதங் கமழ்இலஞ்சி மகாலிங்கத் தளிபுகன்ரும் இதன்வடாது, விண்காவ லுடையார்முன் இளநகைபூத் திவ்வா-லம் விடுக்கா அன்றி, உண்காளன் றருள்செய்தான் வீராட்ட காசநகர் உரைத்து மாலோ. 1

தண்ணிய விருப்பம் வரு நீரிற்றுளையும் அழகிய மகளிர் பூசிய நறிய தகரமும் குங்குமமும் ஆகிய வாசனைப் பண்டங்கள் நெடுந்தொலைவு மணக்கும் பொய்கைக் கரையில் அமைந்த மகாலிங்கேசர் வரலாற்றினைக் கூறினேம். இதன் வடக்குத் திசையில் தேவர்களைப் புன்சிரிப்போடும் நோக்கி இவ் விடத்தை எறிகோ அன்றி உண்கோ கூறுமின் என வினவிய பெருமான்தன் வீராட்டகாசத்தின் வரலாற்றை உரைப்போம்.

முற்றழிப்புக் காலத் திருக்கூத்து

வள்ளவாய் நறைக்கமல வெண்பீடத் தரசிருக்கும் மாதர் அன்னப், புள்ளவாம் நடைநல்லாள் முலேமுகட்டில் கோட்டியபூங் களபந் தோய்ந்த, கள்ளவாந் தொடைத்திண்தோள் மறைக்-கிழவன் ஒருவனுக்குக் கடையேன் உள்ளத், துள்ளவாம் இறை-வகுத்த பராத்தங்கள் ஓரிரண்டும் ஒழிந்த காலே. 2

கிண்ணம்போலும் வாயினேயுடைய தேன்மருவிய வெண்டாமரை மலர்த் தவிசில் வீற்றிருக்கும் அழகிய அன்னப் பறவை விரும்பும் நடையினேயுடைய சரசுவதி கொங்கையில் திமிர்ந்த பொலிவுடைய கலவைச் சந்தனம் படிந்த தேனுடைய ஆகும் மாலேயை அணிந்த திண்ணிய தோள்களேயுடைய பிரமன் ஒருவனுக்குக் கடையனேனது மனத்துள் விரும்பி வீற்றிருக்கும் சிவபிரானர் வகுத்தருளிய பராத்தங்கள் ஓரிரண்டும் ஒழிந்த காலேயில்,

பிரமன் வாழ்நாளேக் காலப் பிரமாணத்துட்காண்க.

ஐவண்ண நிறம்படைத்த திருமுகம்ஐந் துடையபிரான் அருளால் அந்திச், செவ்வண்ணக் காலத்தீ உருத்திரப்புத் தேள்நுதற்கண் செந்தீப் பொங்கி, மொய்வண்ண அண்டமெலாம் முழுங்கிநிமிர்ந் தெழுந்துருக்கி உண்டு தேக்கி, மெய்வண்ண மனத்தன்பர் வினேப்பறம்பின் நீறுக்கி விட்ட தாக. 3

ஐந்து நிறங்களமைந்த திருமுகங்கள் ஐந்துடைய பெருமான் திருவருளால் மாலேக் காலத்துச் செவ்வானம் போலும் செந்நிறமுடைய காலாக்கினி உருத்திருடைய நுதற்கண்ணினின்றும் எழுந்த தீ பேரொலி செய்து மேலோங்கி வலிய அண்டங்கள் அனேத்தையும் நெகிழச்செய்து விழுங்கித் தெவிட்டி மெய்த்தன்மையுடைய மனத்தனபர்தம் வினேயாகிய மலே நீறுவதுபோல நீறுக்கிவிட்டதாக,

ஆயநாள் இரவில்லே பகல்இல்லே அயன்இல்லே அரியும் இல்லே, மேயவான் முதல்பூதம் இலேஏனேப் பவுதிகத்தை விளம்பு மாறென், பாயபே ரண்டமெல்லாம் இவ்வாறு படநீற்றிப் புரமூன் றட்ட,காய்கணேயோன் ஆனந்தமேலீட்டின் தன்னியல்பு கருத்துட் கொள்ளா. 4

அப்பொழுது இரவும் பகலும் இல்லே ; மாலும் அயனும் இல்லே ; இடங்கொடுக்கும வானம் முதலாகிய பூதங்கள் இல்லே ; பூதக்கூட்டுறவால் ஆகிய பொருள்களேப்பற்றிப் பேச என்னுளளது. பரவிய பேரண்டங்களே எல்லாம இவ்வாறழிய நீறுக்கி முப்புரங்களே அழித்த எரி அமபினனுகிய பெருமான ஆனந்தக் களிதுளும்பலின் தன் இயல்பைக் கருத்துட்கொண்டு,

கடைநாளும் அழியாது தன்ஒருபாற் பெருமாட்டி காப்ப வைகும், நடைமாறுத் திருக்காஞ்சி நகர்மன்னி உலகீன்ற நங்கை காண, இடையாம இரவெல்லாம் திருக்கூத்து நவின்றருளி எறுழ்கால் வெள்ளை, விடையாளுந் தனிப்பாகன் ஆர்த்தார்த்து வீரநகை விளைத்தான் மேன்மேல். 5

அம்மையார் காத்தலால் ஊழியினும் அழியாது நிற்கும் ஒழுக்கம் கெடாத திருக்காஞ்சியில் நிலைபெற் றுலகங்களைப் பயந்த அவ்வம்மை யார் காணும்படி இடைப்பட்ட இராப்பொழுது முற்றும் உயிர்கள் பிறத் தற்கு ஆம் தகுதி பெறும் திருக்கூத்தினை நடாத்தி வலியமைந்த வெள் விடைத் தனிச்சேவகனார் ஆரவாரித்து வீரப் பெருஞ்சிரிப்பு மேலும் சிரித்தனர்

அவ்விரவு புலர்காலைத் திருநடனம் நீத்திலிங்க வடிவ மாகி, அவ்வரைப்பின் விளங்கினான் ஆதலினால் வீராட்ட காசத் தேவாம், அவ்விலிங்கம் வழிபட்டுச் சிலர்சித்தர் அற்புதமாம் சித்தி பெற்றார், அவ்வியல்பு தனைக்கேட்டுக் கொங்கணமா முனிச் செல்வன் அங்கண் எய்தி. 6

உலகெலாம் படைத்த அந்நிலையில் திருநடம் ஒழித்துச் சிவலிங்க வடிவமாகி அச்சூழலில் விளங்கினார். ஆகலான் வீராட்டகாசப் பெரு மானாராம் அச்சிவலிங்கத்தை வழிபாடு செய்து சித்தர் சில்லோர் அற் புதமாகிய சித்திகளைப் பெற்றனர். அத்தன்மையை அறிந்து கொங்கண முனிவரும் அங்கெய்தி,

மந்தஹாசம்-புன்சிரிப்பு-அட்டஹாசம்-பெருஞ்சிரிப்பு.

கொங்கண முனிவர் வழிபாடு

அவ்விலிங்க மேன்மையினை அளந்தறிவான் ஆங்கதன்றன் சென்னிமீது, செவ்வனே தன்குளிகை ஈந்திட்டான் மற்றவற்றின் சிரமேல் வைப்பின், எவ்வமுற நீறுக்கும் அனையதை அக் கணமேஅவ் விலிங்கம் உள்ளால், வௌவியது தனைக்கண்டான் வியப்பெய்தி அவ்விலிங்க முன்னர் வைகி. 7

அச்சிவலிங்க மேன்மையை ஆராய்ந்தறியும் பொருட்டு அப் பிரான் திருமுடிமேல் தன் குளிகையைப் பதியவைத்தனன். பிற படி வங்களின் சிரமிசை வைப்பின அதனை நீறு படுத்தும் அக்குளிகையை அப்பொழுதே அவ்விலிங்கம் தன்னுள் இழுத்துக்கொண்டது. அத னைக் கண்ட கொங்கண முனிவர் அதிசயமெய்தி அம்மூர்த்தியின் திரு முன்னரிருந்து,

மெய்த்தவங்கள் இனிதாற்றிப் பேறுற்றான் இன்னும்அவண் மேவிச் சீர்சால், சித்திகளை உழவாது பெறுகின்றோர் எல்லை இலர் செந்நீர் தேக்கும்,முத்தலைவேல் வீராட்ட காசேசன் மேன்மைஎவர் மொழிவார் மாயன், அத்தலத்தே வழிபட்டுப் பவளநிறம் பெற்றான்அவ் வகையுஞ் சொல்வாம். 8

மெய்த்தவங்கள் இனிதியற்றிப் பேற்றினைப் பெற்றனர். மேலும், அங்கிருந்து சிறப்பமைந்த சித்திகளை எளிதிற் பெறுகின்றோர் அளப்பிலர். இரத்தத்தை நிரப்பும் முப் பகுப்புடைய சூலமுடைய வீராட்ட காச ஈசன் மேன்மையை யாவர் கூற வல்லவர். மாயன் அப்பிரானை வழிபாடு செய்து பவளம் போலும் செந்நிறத்தைப் பெற்றனர். அத்திறத் தினையும் கூறுவாம்.

திருமால் பவளநிறம்பெற்ற வரலாறு

எழுசீரடி யாசிரிய விருத்தம்

விரிதிரை சுருட்டிக் கரைமிசை எறியும் வெள்ளிவெண் பாற்கடல் வரைப்பின், எரிமணி மாடப் போகமா புரத்தின் எய்தருந் தனியிடத் திருந்து, புரிமுறுக் குடைந்து நறவுகொப் புளிக்கும் பூந்தவி சணங்கினோ டிணங்கி, வரிவளைக் குடங்கை வானவன் விளையாட் டியற்கையுள் மகிழ்வுறும் ஒருநாள். 9

விரிந்த திரை மறித்துக் கரைமேல் வீசும் மிக வெள்ளிய திருப்பாற் கடலினிடத்து மாணிக்கங்கள் பதித்த போகமாபுரத்தில் பிறரணுகலாகாத அந்தப்புரத்தில் பாஞ்ச சன்னியத்தை உள்ளங்கைக் கொண்ட திருமால் கட்டவிழ்ந்து தேனூறும் மலர்த் தவிசில் விளங்கும் இலக்குமியோடிருந்து பொழுது போக்காக விளையாடி மகிழ்வுறும் ஓர் நாளில்,

மாயிரு ஞால முழுதும்ஈன் றளித்து மனைவியும் மணாளனு மாயோர், ஆயிடைப்பொழுது கழிப்பிய தம்முட் கதைசில அறைகுவான் அமைந்தார், பாயபாப் பணையில் அறிதுயில் அமர்வோன் பனிமலர்க் கிழத்தியை நோக்கித், தேயும் நுண் நுசுப்பின் அகன்றபே ரல்குல் ஒருகதை கேளெனச் செப்பும். 10

மிகப்பெரிய உலகம் முழுவதும் படைத்துக் காத்து மனைவியும் கணவனும் ஆகியோர் அவ்விளையாட்டிற் பொழுதினைப் போக்குதற் பொருட்டுத் தம்மிற் கதை சில கூறலுற்றனர். ஆதிசேடனாகிய விரிந்த பாயலில் யோக நித்திரை செய்யும் மால் மனைவியை நோக்கி மெலியும் நுண்ணிய இடையினையும் அகன்ற பேரல்குலையும் உடையோய்! ஓர் கதையைக் கேள் எனக் கூறுவர்.

நன்னிறம் படைத்த நாமநீர்ப் பரவை நளிதிரைப் பாற்கடல் மாமை, புன்னிறந் தோற்ற வெள்ளொளி விரிக்கும் புகரறு கயிலை-

எம் பெருமான், மின்னிடை மருங்குல் உமையுடன் ஒருநாட் கறங்கு-வெள் ளருவியஞ் சாரல், தன்னிறம் மாண்ட மந்தரப் பறம்பின் தனியிடத் தினிதுறும் ஏல்வை. 11

நல்ல நிறம் வாய்த்த அச்சத்தைத் தருகின்ற இயல்பினையுடைய பரப்பும், பெருமையும், அலைகளையும் உடைய பாற்கடலின் நிறம் புன்மையான நிறமாகப் புலப்பட வெள்ளொளியை விரிக்கும் குற்றமற்ற கயிலாய பதியாம் எமது பெருமானார் மின்னலை ஒக்கும் இடையினையுடைய உமையம்மையாருடன் ஒருநாள் ஒலிக்கின்ற அருவி யிழிகின்ற சாரலையுடைய நிறத்தால் மாட்சிமை எய்திய மந்தர மலையில் தனியிடத்து விரும்பியுறையும் காலை,

எழால்மிடற் றளிகள் கொள்ளைகூட் டுண்ண ஈர்ந்தொடை நறுவிரி ஐம்பால், கழாமணி மேனிப் பிராட்டியை நோக்கிக் காளி-என் றெம்பிரான் அழைப்ப, வழாநிலைக் கற்பின் உள்ளகம் வெதும்பி வரிவிழி நித்திலம் உகுத்துக், குழாமுடை இமையோர் ஏத்தெடுத் திறைஞ்சுங் கோமளை இன்னது கூறும். 12

யாழ் நரம்பின் ஒலியை ஒத்த ஒலியைச் செய்யும் கண்டத்தினையுடைய வண்டுகள் மிகுதியாகப் பெற்றுப் பருகும்படி சூடிய ஈரியமாலை தேனைச் சிந்துகின்ற கூந்தலையுடைய சாணை பிடியாத நீலமணியை ஒக்கும் திருமேனியையுடைய உமையம்மையாரை எமது பெருமானார்நோக்கிக் 'காளீ' என்று கூப்பிட வழிநிற்றலிற் பிழையாத கற்பினையுடைய பெருமாட்டியார் திருவுள்ளம் வருந்தி அரிபரந்த கண்களில் நீர்த்துளிகளாகிய முத்துக்களைச் சிந்தி,

விடுந்தகைக் காள நிறம்படைத் துளன்யான் வெண்ணிறம் படைத்துளை நீயே, நெடுந்தகாய் நமக்குப் புணர்ச்சி எவ்வாறு நிகழும்மற் றிங்கிது காறும், கடுந்தகை என்மாட் டருளினால் இன்-பக் கலவியில் திளைத்தனை இனிநான், அடுந்தகைப் படையோய் கவுரியாம் வண்ணம் பெறுமுறை அருடிஎன் றிரந்தாள். 13

'விடத்தக்க கரிய நிறமுடையேன் அடியேன்' வெண்ணிற மேனியீர் ஆவீர் நீவிர். நம்முள் மனப்பொருத்தம் எங்கனம் கூடும். வெறுத்தற் குரிய இயல்பினையுடைய என்னிடத்துத் திருவுளம் இரங்கி இன்பம் ஏற்றருளினர். இனி, சூலபாணியீர்! அடியேன் பொன்னிறத்தால் கவுரியாம்படி அருள்செய்வீர்' என றிரந்தனர்.

பொலங்குவட் டிமயப் பனிவரைப் பிராட்டி புகன்றன திருச்செவி சாத்தி, இலங்குவெண் ணீற்றுச் சுந்தரக் கடவுள் இயம்புவான் வரிவிழி கேட்டி, கலங்கனர் எய்தேல் கடவுளர் கருமப் பொருட்டுனை இம்முறை அழைத்தேம், நலங்கொள உலகம் நாள்தொறும் புரத்தல் நங்கட லுதலின் கண்டாய். 14

பொன்மயமான குளிர்ந்த சிகரங்களையுடைய இமாசலனுக்கு மகளார் கூறியவற்றைத் திருச்செவியிற் சாத்தி விளங்குகின்ற வெள்ளிய திருநீற்றினை அணிந்த சுந்தரப்பிரானார் வாய்மலர்வார்: 'செவ்வரி பரவிய விழியுடையோய்! கேட்பாயாக. உள்ளங் கலங்கி வருந்தாதே. தேவர் காரியமாக உன்னைக்காளி என்றழைத்தோம். நன்மையுண்டாக உலகை என்றும் காத்தல் நங்கடமை ஆதலின் என்றறிதி'.

மற்றது பின்னர்த் தெளிதிநீ கவுர நிறம்பெறு மாறுனக் குரைப்பல், வெற்றிடம் இன்றி எங்கணும் நிறைந்து பரவெளிப் பரப்பிடை மேவும், பெற்றியன் யானே யாயினுந் தகைசால் பீடுயர் தலங்களின் மாட்டும், அற்றமில் மறையோர் அகத்தினும் உலவா அருள்சுரந் தினிதுவீற் றிருப்பேன். 15

'அத்தேவர் கருமத்தைப் பின்னர் உணர்திநீ. பொன் நிறத்தைப் பெறு முறையை உனக்குக் கூறுவேம். வெற்றிடம் இன்றி யாண்டும் நிறைந்து பரமாகாசத்தில் விரும்பி நிற்கும் நிலையையுடையேம் யாம். ஆயினும், நவம் அமைந்த பெருமையால் உயர்ந்த தலங்களிலும், குற்றமற்ற வேதியரின் மனத்திலும் வற்றாத அருள் பாலித்து இனிதாக வீற்றிருப்போம். அண்டத்தும், பிண்டத்தும் அமர்ந்துள்ளோம்.

மேம்படும் அவற்றின் உத்தமத் தளிகள் விதியுளி மறைநெறி ஒழுக்கம், ஓம்பிமிக் குயர்ந்தோர் உள்ளமும் எனக்குச் சிறந்தன அவற்றினும் மேலாய்த், தேம்பொழில் வேலிக் காசிமா நகரும் யோகிகள் சிந்தையுஞ் சிறந்த, வாம்பகர் அவற்றிற் காஞ்சியும் உண்மை அடியவர் உள்ளமுஞ் சிறந்த. 16

'மேன்மை பெறும் அவ்விருவகையினும் தலைமை அமைந்த தலங்களுள், நான்முறை தெரிந்து சீலத்தொழுகும் ஒழுக்கம் மிக்கமையால் உயர்ந்தவர் உள்ளமும் எமக்குச் சிறந்தன. அவற்றினும் மிக்கதாய்த் தேன மருவிய சோலை வேலியாக அமைந்த காசிமாநகரும், யோகிகள சிந்தையும் சிறந்தன ஆகும். பேசப்பெறும் அவற்றினும் காஞ்சியும் மெய்யடியார் உள்ளமும் சிறந்தன ஆகும்.'

தகைபெறும் அவற்றின் வேறெனக் கினிய தானம்மற் றெங்கணும் இல்லை, நகைமலர்க் கொடியே அந்நகர் எய்தி நயந்தெனை அருச்சனை யாற்றி, மிகையறு தவத்தான் வேட்டவா பெறுதி என்றலும் விளங்கிழை உமையாள், பகைவினை துரக்குங் காஞ்சியின் எய்திப் பஞ்சதீர்த் தக்கரை ஞாங்கர். 17

'சிறப்புறும் அவற்றினும் வேறாக எமக்கினிய தலம் வேறெவ் விடத்தும் இல்லை. ஒளியுடைய மலர்க்கொடியே! அக்காஞ்சியை அடைந்து எம்மை விரும்பிப் பூசனை புரிந்து குற்றமற்ற தவத்தினால் விரும்பிய கவுர நிறத்தைப் பெறுதி என்றருளலும், விளங்குகின்ற அணி

லைப் பூண்ட உமையம்மையார் பகையாகிய வினையை ஓட்டும் காஞ்சியினை அடைந்து பஞ்ச தீர்த்தக்கரை மருங்கில்,

மாதவம் இயற்றிப் பொன்னுருப் பெற்றுக் கவுரியாய்
வயங்கினள் இனைய, மேதகும் இறும்பூ தென்னெனப் புகல்வேன்
வெறிமலர்ப் பங்கயத் தவிசின், மாதர்வாள் நகையாய் என்றெடுத்
துரைத்தான் மந்தரம் அலமரச் சுழற்றி, ஓதநீர் அளக்கர் அமு-
தெடுத் திமையோர்க் கூட்டிய பெருந்திறற் குரிசில். 18

பெருந்தவம் புரிந்து பொன்னிற வடிவம் பெற்றுக் கவுரியாய் விளங்கினர். மணக்கும் தாமரை மலரை இருக்கையாக வுடைய அழகிய ஒளி மலர்கின்ற புன்னகையினளே! மேன்மையுறும் வியப்பினைப் பயக்கும் இந்நிகழ்ச்சியை என்னெனக் கூறுவேன்! என்றுரைத்தனர். மந்தர மலையைச் சுழலச் சுழற்றிக் கடலினின்றும் அமுதெடுத்துத் தேவரை நுகர்வித்த பேராற்றலுடைய திருமால்.

திருமகள் வேண்டுகோள்

செய்யவள் கேட்டு வியப்புமீக் கூர்ந்து செப்புவாள் என்னை
ஆளுடையாய், ஐயஇச் செயலைக் கேட்டொறும் உலவா அற்புதம்
பயக்குமால் மன்ற, மெய்யுணர் வின்பச் சத்தியும் சிவனும் விளைக்-
கும்இவ் விளைவுக ளெல்லாம் மையறத் தெளிந்தோர் திருவிளை
யாட்டின் வண்மைஎன் றியம்புவர் மன்னே. 19

திருமகள் கேட் டிறும்பூதுற்றுத் தன்நாயகனுக்குக் கூறுவாள்: "எனக்கு நாயகனே! வியத்தற்குரிய இந் நிகழ்ச்சியைக் கேட்குந்தோறும் வற்றாத அதிசயத்தை உண்டாக்கும நிச்சயமாக. சச்சிதானந்த வடிவுடைய சத்தியும் சிவனும் ஆக்கும் நிகழ்ச்சிகள் எவற்றையும் மயக்கமறத் தெளிந்தோர் திருவிளையாடலின் பயன் என்றறிவிப்பர்."

இற்றலாற் காமற் காய்ந்துமுற் றுணர்ந்து வரம்பில்இன்
புடையஈ சனுக்கு, மற்றெவன் உளதோ அவ்விளை யாட்டும்
உலகெலாம் உய்யுமா றன்றே, அற்றென உணராக் கயவர்கள்
காமத் திறமெனக் கருதுவர் அனையர், பெற்றியை யாரே தெளி-
தரற் பாலார் பிறங்கொளி மணிநிறக் குரிசில். 20

"நீலமணியை ஒக்கும் நிறமுடைய குரிசிலே! இங்ஙனமல்லாமல் காமனையழித்தமையால் பெண்ணாசையை ஒழித்து முற்றும் உணர்ந்து பேரின்பினனாகிய பெருமானுக்கு வேறு காரணமும் உண்டோ? அத்திருவிளையாடலும் போகம் நுகர்ந்து ஆன்மாக்கள் பிழைக்குமாறு கொண்ட கருணைத்திறமே ஆகும். இவ்வாறுணராத கீழ்மக்கள் காமச்செயல் என்று கூறுவர். அவர்தம் பேதைமையைப் போக்கி மெய்யுணரத் தெருட்டுவோர் யாவர்? ஒருவரும் இலர்.

நிலைஇயற் பொருளும் இயங்கியற் பொருளும் நிலைபெறத் தொழிற்படுத் துடைய, தலைவன் அங் கவனே பனிவரைப் பிராட்டி தன்னையும் நின்னையும் இடப்பால், மலரணைப் புத்தேள் தன்னையும் எனையும் வலப்புடைக் கர்லருத் திரனைக், கலைமகள் தனையும் உளத்திடைத் தந்தான் காத்துயிர்த் தழிப்பது கருதி. 21

"சராசரங்களை நிலையாக இயக்கும் தலைவராகிய அப்பெருமானுரே உமையம்மையையும், உம்மையும் இடப்புறத்தினும், பிரமனையும், அடியேனையும் வலப்புறத்தினும், உருத்திரமூர்த்தியையும், நாமகளையும் திருவுள்ளத்தினுமாகப் படைத்தனர். அம் மூவரும் முறையே காத்தலையும், படைத்தலையும், அழித்தலையும் மேற்கொளளுமாறு திருவுள்ளங் கொண்டு தந்தனர்.

அகிலமுந் தானே அருள்தொழில் நடாத்தும் ஆங்கவற் கெவற்றினும் சால, மிகுபெருங் காதல் உமையவ ளிடத்தும் விரவு-நின் னிடத்தினும் அன்றே, முகில்உறழ் கூந்தல் அவளென நீயும் முதல்வனே உன்னடி யேற்கு, மகிழ்வுமீக் கிளைப்ப அவ்வுருப் பெறுதி என்றனள் மலரணைக் கிழத்தி. 22

எல்லாவுலகங்களையும் தம் அருட்டிறனுல் நடாத்தும் அப்பிரானுர்க்கு எப்பொருள்களினும் பெரிதும் மிகப் பெரிய விருப்பம் உமையம்மையாரிடத்தும் வியாபிக்கும் நுமமிடத்தும் அன்றே? ஆகலின், மேகத்தையொக்கும் கூந்தலையுடைய உமையம்மையார் பொன்னிற வடிவம் பெற்றுற்போல முதல்வரே நீவிரும் அடியேனுக்கு மகிழ்ச்சி மேலும் தழைப்ப அப் பவள நிறத்தைப் பெறுவீராக" என வேண்டினள் திருமகள்.

விளங்கிழை மாற்றம் அச்சுதன் கேளா வெகுண்டுநின் மனக்கருத் திதுவேல், களங்கனி அனையேன் றன்னுடன் இந்நாள் காறும்நீ பொலஞ்சுடர் நிறத்தாய், வளங்கெழும் இன்பம் என்ன-ணம் நுகர்ந்தாய் மற்றினிச் செக்கர்வான் உருவம், உளங்கொளப் பெறுகேன் என்றவட் கியம்பிக் கதுமெனக் கரந்தனன் ஊங்கு. 23

திருமகளின் பேச்சைக் கேட்ட திருமால் சினங்கொண்டு 'நின் எண்ணம் இதுவாயின் களாப்பழம போலும் நிறமுடைய என்னுடனே இன்று வரையினும், பொன்னிறமுடைய வடிவீ! நீ நலமிகும் இன்பம் எவ்வாறு நுகர்ந்தனை. இனி, செவ்வானம் போலும் நிறத்தினை நின் மனம் விருமபுமாறு எய்துவேன்' என்றத் திருமகட்குக் கூறி அங்கு நின்றும் அப்பொழுதே மறைந்தனர்.

கச்சிமா நகரம் எய்திவீ ராட்ட காசநல் வரைப்பினுக் கெதிரா, அச்சிவன் வீர நகைதிரண் டனைய சக்கர தீர்த்தம்உண் டாக்கி, முச்சகம் ஏத்துங் கங்கையிற் சிறந்த அத்தடம் மூழ்கினோன் பியற்றிப், பச்சைமால் வதிந்தான் வதிந்திடம் பச்சை வண்ணன்ஆ லயமெனப் படுமால். 24

திருக்காஞ்சியை எய்தி வீராட்டகாசம் என்னும் திருத்தலத்திற்கு எதிரில் அச்சிவபெருமானுடைய வீரச் சிரிப்புத்திரண்டுருக் கொண்டாற் போனற சக்கரதீர்த்தம் தொட்டு மூவுலகும் போற்றும் கங்கையினும் உயர்ந்த அத்தீர்த்தத்தில் மூழ்கி விரதம் பூண்டு பசிய நிறம் பூண்ட திருமால் வதிந்தனர். அவர் வதிந்த இடம் பச்சைவண்ணர் ஆலயமெனப் போற்றப்பெறும்.

ஆங்கனம் வைகி நாள்தொறும் ஈரே ழாயிரம் அளிகெழு பொகுட்டுத், தேங்கமழ் கமலங் கொண்டுவீ ராட்ட காசமா தேவனை அருச்சித், தோங்குபே ரன்பின் தொழுதெழுந் திரப்ப உலப்பருங் கருணைமீக் கூர்ந்து, மாங்குயில் பாகன் எதிரெழுந் தருளி வழங்கினன் பவளம்நேர் வடிவம், 25

அவ்விடத்தில் அவ்வாறிருந்து நாடோறும் பதினான்காயிரம் வண்டுகள் மருவும் வித்துக்களைக் கொண்ட தேன் மணக்கும் தாமரை மலர்களைக்கொண்டு வீராட்டகாசப் பெருமானை வழிபாடு செய்து மிக்குயர்ந்த அன்பால் வணங்கி எழுந்து குறையிரப்பக் குயிலை ஒக்கும் சொல்லி பங்கனூர் வற்றாத பெருங்கருணை மேலெழுந் தெதிரே தோன்றிப் பச்சைவண்ணராகிய திருமாலுக்குப் பவளத்தை ஒக்கும் நிறத்தினை வழங்கியருளினர்.

பொரிஅரைக் காயாம் போதுறழ் வண்ணங் கழீஇத்துகிர் புரைநிறம் எய்திப், பெரிதுளம் மகிழ்ந்தான் ஆயிடைச் சிலநாள் வைகிமீண் டரவணைப் பெருமான், விரிதிரைத் தீம்பாற் கடலகத் தணுகி விரைமலர்க் கிழத்தியோ டிணங்கித், தெரியிழைத் திருவே காண்டிநீ பவளச் சேயொளி தழைக்கும்இவ் வடிவம். 26

பொரிந்த அடியினையுடைய காயாவின் பூப்போலும் நிறத்தினை நீத்துப் பவளத்தை ஒக்கும் நிறத்தை எய்திப் பெரிதும் உள்ளம் மகிழ்ந்து அவ்விடத்தே சிலநாள் தங்கி அருச்சனை ஆதிய நிரப்பித் திருப்பாற்கடலை அடைந்த திருமால் 'ஆராய்ந்த அணிகளையுடைய திருமகளே! பவளத்தை ஒத்துச் செவ்வொளி திளைக்கும் இவ்வடிவினைக் காணுதி'

கச்சறப் பணைத்துப் புடைபரந் தெழுந்த கதிர்மணி முலையினுய் இதுஎன், இச்சையாற் பெற்றேன் விழைந்தவா றென்மாட் டின்னலம் நுகரெனக் கேட்டுப், பச்சிளந் தோகை இந்நிறம் அடிகள் இச்சையாற் படைத்ததேல் மாய, விச்சையே போலும் நிலைமையன் றெனக்கீ தென்பயன் விளைத்திடும் என்றாள். 27

'வார்கிழியப் பெருத்துப் பக்கங்களிற் பரவி எழுந்த நீலமணியை ஒக்கும் கண்ணுடைய முலையினளே! இவ் வடிவினை என் ஆற்றலாற் படைத்துக்கொண்டேன். நீ விரும்பியபடி இனிய இன்பத்தை என்னி

டத்து நுகர்க' என்று கூறக் கேட்டு மிக்கிளைய மயில்போலும் திருமகள் 'அடிகேள்! இந்நிறம் நும் விருப்பத்தினற் படைத்த தாயின் வஞ்சகச் சூழ்ச்சியான் ஆயதே ஆகும். நிலைபெற நிற்றல் இயலாதது ஒன்று. யாதோர் பயனையும் எனக்கு விளைக்காது இவ்வடிவம்' என்று கூறினள்.

திருமகள் காஞ்சியை அடைதல்

பாய்சிறைக் கலுழப் புள்ளர சுகைக்கும் பஃறலைச் சேக்கை-
யன் வெகுளா, நீயினி இருந்தை வண்ணமா கென்னச் சபித்தலும்
நேரிழை மேனிச், சேயொளி கருகக் கண்டுளம் பதைத்தாள்
சிறியனேன் செய்பிழை பொறுத்திங், கேயும்இச் சாபம் தவிர்த்-
தருள் பொறையாள் கொண்கனே என்றடி பணிந்தாள். 28

பறக்கும் சிறகரையுடைய கருட அரசனை ஊர்தியாகச் செலுத்தும் பல தலைகளையுடைய பாம்பணையையுடைய திருமால் கோபங்கொண்டு 'இனி' நீ கரியின் நிறம் பெறுதி' எனச் சாபங் கொடுத்த அளவிலே நேரிழையாள் திருமேனியின் நிறம் கரிதாகப் பார்த்து உள்ளம் வெருவி 'அறிவினல் சிறியேன் செய்த பிழையைப் பொறுத்து மருவும் இச் சாபத்தினைப் போக்கி அருளசெய். பூமிதேவிக்குக் கணவனே!' என வேண்டி அடியிணையிற் பணிந்தனள்.

தெம்முனை கடந்த திகிரியோன் இரங்கிச் சீற்றத்தால்
விரைந்துனைச் சபித்தேன், அம்முறை யாற்றற் கரிநிறம் பெற்ருய்
ஆயினும் முன்னையின் விழைய, வெம்முலைப் போகம் எனக்குள-
தாக வெருவலை எனத்தழீஇக் கொள்ளச், செம்மலர்த் திருவும்
அடியிணை இறைஞ்சித் திருந்துதன் இருக்கையுட் புக்காள். 29

பகைவரை வென்றடக்கிய சக்கரத்தையுடைய திருமால் கருணை காட்டி 'வெகுளியால் விரைந்துனக்குச் சாபம் கொடுத்தேன். அந்நியதியால் கரிய நிறம் பெற்றனை. ஆனாலும் முன்போலவே விருப்புடைய புணர்ச்சி எனக்கு நினனிடத்துண்டாவதாகுக அஞ்சாதே' என்று கூறித் தழுவிக் கொள்ள, அவ்வளவே செந்தாமரை மலரில் உறையும் திருமாதும் துணை அடிகளை இறைஞ்சித் திருந்திய தன் இருக்கையாகிய அந்தப்புரத்துட் புக்கனள.

புக்கபின் அங்கண் பாங்கியர் தம்மொடுசாவினள் புதுநறுக்
கான்று, நக்கபூஞ் சோலைக் காஞ்சிமா நகரை நண்ணிஆங்
கிணைவிழி களிப்பத், திக்கெலாம் பரசத் திகழ்உல காணித்
தீர்த்தநீர்த் தடங்கரை மாடே, மைக்குழல் உமையாள் இனிதமர்ந்
தருளித் தவஞ்செயும் வரைப்பினைக் கண்டாள். 30

அங்குப் புகுந்து சேடியரோடு அளவளாவித் துணிந்து புதிய தேனைச் சிந்தி அவிழ்ந்த மலர்களைக் கொண்ட சோலை சூழ்ந்த காஞ்சிமா நகரை அடுத்து அவ்விடத்தில் இரு விழிகளும் கண்டு களிப்பவும், திசைகளிலெல்லாம போற்றவும் விளங்குகின்ற உலகாணித் தீர்த்தப்

பெருங்கரையின் பக்கத்தே கரிய குழலினையுடைய காமாட்சியம்மையார் இனிது வீற்றிருந்து தவஞ் செய்யும இருக்கையைக் கண்டனள்.

அனையநல் வரைப்பு நுண்பில மாகி அருட்பர வெளிய-
தாய்த் திகழும், கனைகடல் உடுக்கை நிலமகட் குந்தித் தானமாம்
கமழ்நறுங் கடுக்கை, தனிமுதற் பிரமந் தனக்கொரு வடிவாம்
தாழ்குழல் உமையவட் கடியார், வினைதபு மூலத் திருவுரு அதுவே
விளங்கொளிக் காஞ்சியம் பதியுள். 31

அந்நல்லிடம் நுண்ணிய பிலாகாசமாகியும் பேரருட் சிதாகாசமாகியும் விளங்கும், ஒலிக்கின்ற கடலை ஆடையாக உடைய பூமிதேவிக்குக் கொப்பூழிடமுமாகும். மணங் கமழும கொன்றை மலர் மாலையை அணிந்த முழுமுதற் பிரமத்திற்கு ஓர் திருவுருவுமாகும. மேலும், விளங்கும் ஒளியுடைய காஞ்சிமாநகரில் தாழ்ந்த கூந்தலையுடைய உமையம்மையார்க்கு, அடியாராயினார் வினையைக் கெடுக்கின்ற மூலத்திருவுருவமும் அதுவேயாகும்.

குறைவிலா நிறைவாய் உண்மையாய் அறிவாய்க் கொட்-
புறு மனமடங் கிடமாய், மறைமுடிப் பொருளாய் இன்பமாய்ச்
சிவமாய் மாசற வயங்குபே ரொளியை, நிறைதவ யோகத் தலைவர்-
இவ் வாறு நெஞ்சகத் தேவழி படுவார், அறைகடற் பரப்பிற்
காஞ்சிமா நகரின் ஆயிடை வழிபடு வாரால். 32

குறைவில்லாத முழு நிறைவாயும், சத்தாயும், சித்தாயும், நின்றுழி நில்லாது சுழலும் மன விருத்தியைக் கடந்ததாகியும், வேதாந்தப் பொருளாகியும், ஆனந்தமாகியும, சிவமாகியும் இவ்வியல்பிற் குற்றமற விளங்கு பேரொளியை நிறைந்த யோகமாகிய தவத்தையுடைய முதல்வர் இத்தனமையாக் அகத்தேயும் நெஞ்சிடை வழிபடுவர். ஒலிக்கின்ற கடல் சூழ்ந்த வைப்பிடைக் காஞ்சிமா நகர்க்கண் அப் பிலாகாயத்தும் வழிபாடு செய்வர்.

காமகோடிப் பெயர்க் காரணம்.

ஒருமுறை அங்கட் காமமாம் தருமம் உஞற்றுநர் தமக்கும்-
அத் தருமம், தருபயன் கோடி யாதலிற் கரடத் தடத்திழி கடாம்-
படு கலுழிப், பெருவரை வதனப் பிள்ளையைக் குகனைப் பெற்றவள்
அமர்பிலம் அதுதான், கருதரு காமக் கோடிஎன் றுலகிற்
காரணப் பெயரினல் வயங்கும். 33

அங்கு ஒருமுறை, நிஷ்காமியமாய்ப் புரியாது காமியமாய்த் தருமம் புரிவோர்க்கும் அத்தருமப் பயன் கோடி முறையாகப் பெருகுதலின சுவட்டின் வழி இழிகினற மத நீராற்றினையுடைய பெரிய மலையாகிய யானை முகமுடைய மூத்த பிள்ளையாரையும், குகப்பெருமானரையும் பயந்த அம்மையார் எழுந்தருளியுள்ள பிலம் அதுவே. எண்ணரிய காமக்கோடி என் றுலகிடைக் காரணப் பெயரினல் விளங்கும்.

விரும்பிய பொருள் கோடியாகப் பயத்தலின் காமகோடியாயிற்று.

அன்றியும் காமக் கிறையவர் தனதர் அனையவர் கோடியர்த்
தரலால், என்றும்ஓர் இயல்பின் எங்கணும் விரவி எவற்றினுங்
கடந்தபே ரொளியைக், குன்றுறழ் கொம்மைக் குவிமுலைத் தடத்-
தாற் குழைத்தருள் கருணைஎம் பிராட்டி, நன்றுவீற் றிருக்கும்
பேரொளிப் பிலத்திற் கப்பெயர் நாட்டலும் ஆமால். 34

மேலும், செல்வத்திற்குத் தலைவராகிய குபேரர் ஒப்பவர் கோடியரைப் படைத்தலாலும் எஞ்ஞான்றும் ஒரு தன்மையாய்த் திரிபின்றி எவ்விடத்தும் கலந்து எவற்றினையும் கடந்து நின்ற பேரொளியை மலையை நிகர்க்கும் வட்டமாகிய குவிந்த கொங்கைத் தடத்தாற் குழைத்துச் சுவடுபட அருளும் கருணையை யுடைய எமது பெருமாட்டி நன்கு வீற்றிருக்கும் பேரொளிப் பிலத்திற்கு அப்பெயரை நிறுத்துதலும் தக்கதாம்.

இன்னும்இப் புவனப் பரப்பினிற் காமம் என்பன
மனைவியர் மக்கள், பொன்னணி இருக்கைப் பூண்முதல் பலவாம்
பூந்தளிர் அணிநலங் கவற்றுந், தன்னடி வணங்கி இரந்தவர்
தமக்குத் தடங்கிரி பயந்தபே ராட்டி, அன்னவை கோடி அளித்-
திட லானும்அப்பெயர் எய்தும்அங் கதுவே. 35

இனியும் இவ்வுலக வைப்பிடைக் காமம் எனப் பேசப் பெறுவன மனைவியர், மக்கள், பொன்னணி மனைகள் பூண்கள் முதலிய பலவாகும். பொலிவுள்ள மாந்தளிரின் அழகிய நன்மையைத் தம் தன்மையால் வருத்தும் திருவடிகளை வணங்கி வேண்டியவர் தமக்கு இமாசலன் ஈன்ற பெருமாட்டியார் அவற்றைக் கோடியுற வழங்குதலாலும் அப்பெயரை அப்பிலம் ஏற்கும்.

அல்லதூஉங் கவைத்தாட் கரும்பகட் டூர்தி அடுதொழிற்
கூற்றினைக் குமைத்த, கொல்லைஏற் றண்ணல் நுதல்விழிச் செந்-
தீக் கோட்படும் ஒருதனிக் கருப்பு, வில்லியை விளையாட் டியற்-
கையிற் கோடி காமரா விழித்துணைக் கடையால், அல்லியங்
கோதை ஆங்களித் திடலால் அப்பெயர் பூண்டதும் ஆமால். 36

அதற்கு மேலும், பிளவுபட்ட குளம்பினையுடைய எருமைக் கடாவை வாகனமாகவுடைய கொலைத் தொழிலைக் கொண்ட இயமனை வருத்திய கொல்லேற்றினை மேற்கொள்ளும் பெருமானாரின் நெற்றிக் கண்ணில் வெளிப்பட்ட செந்தீயால் கொலைப்படும் பெரிதும் ஒப்பற்ற கருமபை வில்லாகவுடைய மன்மதனை முயலாது வைத் தெளிதினில் கோடி மன்மதராக இருவிழிகளின் கோடிகளால் அகவிதழ்கள் அமைந்த கோதையை அணிந்தவர் படைத்தலாலும் காமகோடி எனும் அப்பெயர் பொருந்துவதாம்.

மற்றும்ஆ ருயிர்சேர் நாற்பொருட் பயனில் வருத்தமூன் றாவது காமம், பற்றுகா மத்திற் கோடியா முடிவிற் பயில்வது வீடுபே றாகும், உற்றவர் தமக்கு வீடுபே றளிக்கும் உண்மையி னாலும்அப் பெயராற், சொற்றிடப் படுமால் உலகெலாம் ஈன்றாள் அமர்ந்தருள் சுடரொளி விமானம். 37

இன்னும், உயிர்கள் பெறற்குரிய உறுதிப்பயன் நான்கனுள் மூன்றாவதாவது காமம், பற்றுகின்ற காமத்திற்குக் கோடியாக முடிவில் நிற்பது வீடு பேறாகும், அடியடைந்தவர் தமக்கு வீடு பேற்றினை நல்கும் அவ்வுண்மையினாலும் உலகெலாம் ஈன்ற பெருமாட்டியார் வீற்றிருக்கும் சுடரொளி விமானம் அப்பெயர் மேவும்.

பின்னரும் ஒன்று ககரமே அகரம் மகரமாப் பிரிதரும் மூன்றும், அன்னஏ றுகைக்கும் அயன்அரி ஈசன் ஆயமுத் தேவரைப் பகரும், இன்னவர் தம்மை யுகந்தொறுங் கோடி முறைஎழில் விழிகளிற் படைத்தாள், மின்னிடைப் பிராட்டி என்பத னாலும் அப்பெயர் விளங்கும்என் பதுவே. 38

வேறும், ஒன்று பேசப்பெறும்; 'க'வும், 'அ'வும் 'ம'வும் ஆய்ப் பிரிதருகின்ற மூவெழுத்துக்களும் அரசவன்னத்தை ஊரும பிரமனையும், கருடனை ஊரும் திருமாலையும், விடையுகைக்கும் ஈசனையும் குறிப்பன வாகும். இவர் தம்மை யுகம் தோறும் கோடிமுறை அழகிய விழிகளாற் படைத்தனர் மின்னலை ஒக்கும் இடையினையுடைய பிராட்டியார் என்னும் ஏதுவானும் அப்பெயர் விளங்கும்.

க+அ+ம=காம. க—பிரமன். அ—மால். ம—உருத்திரன. திருவேகம்பப்படலம் 23-ஆம் செய்யுள் அட்சி-கண். காம+அட்சி=காமாட்சி.

வேறும் ஒன்றுங்கட் காவெனப் படுவாள் வெண்மல ராட்டி மா என்பாள், ஊறுதேங் கமலப் பொகுட்டணை அணங்காம் ஊங்குவர் இருவரும் முகிலை, மாறுகொள் ஐம்பால் உமைவிழிக் கோடி தன்னிடை வருமுறை யானும், ஏறும்அத் திருப்பேர் எம்பெரு மாட்டிக் கென்றெடுத் தியம்புவர் உணர்ந்தோர். 39

பிறிதும் ஒன்றுண்டு: 'கா' என்னப்படுவாள் வெண்டாமரை மலரினுறை கலைமகளும், 'மா' என்று சொல்லப்படுவாள் தேனூறு செந்தாமரை மலரின்கண் விளங்கும் திருமகளும் ஆவர். இவர் இருவரும் கரிய மேகத்தொடும் பகை பட்டு நிற்கின்ற கரிய கூந்தலையுடைய உமையம்மையாரின விழிக்கோடியில் தோற்றுதலானும் ஏற்றமுறும அத்திருப் பெயரை எமது முதல்விக்கு மிகுத்துக்கூறுவர் மெய்யுணர்ந்தோர்.

விந்துவின் வயங்கி அம்பைவீற் றிருக்கும் வியன்திருச் சக்கர வடிவாம், அந்தவான் பிலந்தான் இயம்பிய காமம் அனைத்-திற்கும் ஆதர மாகிப், பந்தமில் காமக் கோட்டம்என் றொருபேர் பரித்திடும் மற்றெவற் றினுக்கும், முந்திய பீடம் ஆதலின் ஆதி பீடமும் மொழிந்திடப் படுமால். 40

விந்துவை ஒப்ப விளங்கி அம்மையார் வீற்றிருக்கும் அகன்ற அழகிய சக்கர வடிவமாகும் அந்த உயரிய பிலாகாயமே மேற்கூறிய காமம் அனைத்தினுக்கும் ஆதாரமாகிப் பந்தத்தை இல்லையாகச் செய்கின்ற காமக்கோட்டம் எனப்படும ஒப்பற்ற பெயரைத் தாங்கிடும். சத்தி பீடங்கள் அறுபத்து மூன்றற்கும் முன்னே வைத்தெண்ணப்படும் பீடம் ஆதலின் ஆதிபீடம் என்றும் சொல்லப்படும். எவற்றினுக்கும் என்பது அறுபத்து மூன்று சத்தி பீடங்களை என்க.

திருமகள் வழிபாடு

எண்சீரடி யாசிரிய விருத்தம்

இனைய தாகிய திருப்பிலம் அதனை எழால்மி டற்றிளஞ் சுரும்-
பினம் முரலும், நனைக வுழ்ந்தலர் மலர்த்தவி சிருக்கை நகைம
லர்க்கொடி கண்டுகை தொழுதே, அனைய சூழலின் இடப்புறம்
வைகி அடங்க லார்புரம் அழலெழச் சிரித்த, முனைவ ருர்க்கொரு
சத்தியாய் இன்பாய் முழுது மாகிய அகிலகா ரணியை. 41

இத்தன்மையதாகிய பிலத்தை யாழ்போலும் கண்டத்தையுடைய இளைய வண்டுகள் ஒலிக்கும் தேனைச் சொரிந்து மலரும் தாமரையை இடனுகவுடைய பூத்த மலர்க்கொடியை ஒக்கும் திருமகள் கண்டு கையாற்றொழுது அந்த இடத்தின இடப்புறத்திற் றங்கிப் பகைவருடைய முப்புரம் நீறுபடப் புன்முறுவல் பூத்த முதல்வர்க்கு ஒப்பற்ற சத்தியாகியும் இன்ப வடிவாகியும், எல்லாமாகியும் உள்ள உலகத்திற்குக் காரணமாய் நிற்கும் அம்மையை,

பாதம் ஒன்றொடு நிவிர்த்தியால் தரைக்கண் பதம்இ
ரண்டொடு பதிட்டையால் புனற்கண், பாதம் நான்கொடு வித்தை-
யால் கனற்கண் பதங்கள் எட்டொடு சாந்தியால் வளிக்கண், பாதம்
ஒன்பத னெடுவெளிப் பரப்பிற் பகருஞ் சாந்தியின் அதீதமாங்
கலையாற், பாதம் ஆயிரத் தொடுபர வெளிக்கண் பயிலும் அக்கரத்
தனிமுதற் பரையை. 42

பூமியில் நிவிர்த்தி கலையால் பாதம் ஒன்றுடனும், நீரிடை பிரதிட்டா கலையால் பாதங்கள் இரண்டுடனும், நெருப்பிடை வித்தியா கலையால் பாதங்கள் நான்குடனும், காற்றில் சாந்தி கலையால் பாதங்கள் எட்டுடனும், வானில் சாந்தி அதீத கலையால் பாதங்கள் ஒன்பதுடனும் பர வெளியில் பாதங்கள் ஆயிரங்களோடும் விளங்கா நிற்கும் எழுத்துக்களுக்கு ஒப்பற்ற முதல்வியாம் பராசத்தியை,

கருமை செம்மைவெண் ணிறமுடை யாளைக் காமக் கோடி-
வான் பிலவடி வாளை, அருவி தாழ்குவட் டணிமலை மகளை மாயை
யோடுல கனைத்தும்ஈன் றாளை, உருகி நெக்குநெக் குளப்பெருங்
கோயி லுள்ளு றுத்தின்ன் உடம்பினைப் பொதிந்து, மருவும் இக்கரு
நிறஞ்செதிள் எடுப்பான் கருணை செய்கென வழிபட லுற்றாள். 43

கருமையும், செம்மையும், வெண்ணிறமும் பொருந்திய நிறத்தினை யுடைய அம்மையை, காமக்கோடி என்னும் தூய பிலாகாய் வடிவியை, அருவிகள் இழிகின்ற சிகரங்களையுடைய அழகிய இமாசலன் புதல்வியை, மாயா காரியங்களையும் உலகுயிர்களையும பயந்த அன்னையை உருகி நெகிழ்ந்து நெகிழ்ந்து உள்ளமாகிய பெரிய கோயிலுள் வெளிப்பட்டு விளங்கி அடியேனின் உடம்பினை மூடியிருக்கும் இக்கரிய நிறமுடைய தோலைப்போக்கிச் செந்நிறமுடைய மேனியை நல்கக் கருணை செய்க' என்று வழிபடலாயினள்.

வருண ஞர்உனை வாருணி என்னப் பிருகு மாதவற் கருளிய வாற்றால், பிருகு வாரநாள் உனைவழி படுவார் பெருவ ளத்தொடு வாழ்வர்என் றுரைப்ப, அருவி னைப்புலக் குறும்பெறிந் துயர்ந்த பிருகு மாமுனி மகள்அடி யேற்கும், கருணை செய்வது கடன்உனக் கன்றே கருப்பு வில்லியைக் காய்ந்தவர்க் கினியாய். 44

'வருணன் தவத்தால் அடைந்தமையால் வாருணி என்னும் திருப்பெயர் ஏற்ற நின்னைப் பெரிய மாதவராகிய பிருகு முனிவர்க்குற்ற தவமகளாகத் தந்தமையால் வெள்ளிக்கிழமையில் உன்னை வழிபடுவார் பெருஞ் செல்வத்துடன் வாழ்வர் என்று கூறுவர். விலக்குதற்குக் கூடாத வினைக்காட்டினை வெட்டி யெறிந்துயர்ந்த பிருகு மாமுனிவரர் தவமகளே! மன்மதனை அழித்த சிவபெருமானுர்க்கு இனிய அம்மே! அடியாளுக்கும் கருணை வழங்குதல் உனக்குக் கடப்பாடாகும்.

காள னப்பெய ரியகலை மகளை முந்தை ஞான்றுநின் கண்-ணெனப் புரந்தாய், மாள னப்பெய ருடையமற் றெனையும் மலர்ந்த நின்விழி போற்புரந் தருளி, ஏள னப்பிறழ் தடங்கணுய் காமக் கண்ணி யாம்பெயர் எய்துவை என்னுப், பூள னப்பயில் அணை-மிசைக் கிழத்தி போற்றி சைத்தலும் எதிரெழுந் தருளி. 45

'கா' எனப்பெயர் படைத்த சரசுவதியை முற்காலத்து நின் கண்ணுகக் கொண்டு காத்தனை. 'மா' எனப் பெயர் பூண்ட அடியாளையும் மலர்ந்த நின்னுடைய கண்ணைப் போன்று பாதுகாத்தருளி அம்பு போலக் கிடந்த மேலும் கயல்போலப் பிறழ்கின்ற விசாலாட்சி! காமக் கண்ணி என்னும் பெயர் எய்துவாய்' என்று கூறி மலர்ந்த தவிசிலுறை திருமகள் ஏத்திசைத்த அளவிலே எதிர்வந்தருளி,

திருமகள் வரம்பெறல்

எம்பி ராட்டிவான் கருணைகூர்ந் தருளி ஏட விழ்ந்தபூந் தவிசுறை அணங்கே, கம்பி யாதிமற் றுன்உடற் கருமை கரிய சாந்தமாக் கழிகமுன் னையினும், நம்பு நல்லுருப் பெறுதிஇப் பொழுதே நார ணற்குமிக் குரியவ ளாவாய், வம்ப றுத்தெழுந் தோங்கிஅண் ணுந்து மதர்த்து வீங்கிய வனமுலைத் தோகாய். 46

எமது பெருமாட்டியார் பெருங்கருணை மீக்கூர்ந்து 'தோடுகள் விரிந்த மலர்த் தவிசில் வீற்றிருக்கும் திருவே! நடுக்கங்கொள்ளாதே. உனது உடலிடத்துக் கருமை கரிய சாந்தாகக் கழிவதாக. முன்னையினும் விரும்புகின்ற நல்வடிவினைப் பெறுதி. இன்னே திருமாலுக்கு மிகுதியும் உரியவளாக ஆவாய். அடங்காது கச்சினைக் கிழித்தெழுந்து ஓங்கி நிமிர்ந்து மதர்த்துத் திரண்ட அழகிய முலையினையுடைய மயிலே!

இலக்கிய அழகு: (27 ஆம் செய்யுளிலும் காண்க)

அழகுவாய்ந்தநின் வடிவினிற் கழியும் அனைய சாந்தணி நுதலினர் தமக்கு, விழவும் இன்பமுஞ் செல்வமும் புகழும் மேகல் இன்மையும் இகழுமற் றொழிக, பழைய வேதமுற் றுணர்ந்துயர் சிறப்பிற் பனுவ லாட்டியும் இவண் அமர் செயலாற், கழிவில் அன்பின்நீ வேட்டவா றெனக்குக் காமக் கண்ணியாம் பெயர்-உறு கென்ன. 47

'அழகிய நின் வடிவினின்று கழியும் அச்சாந்தினை அணியும் மகளிர்க்கு மங்கலமும், இன்பமும், செல்வமும், புகழும் ஆகிய இவை மேவுக, வறுமையும், பழியும் ஏனையவும் நீங்குக. பழைய வேதங்களை முற்றவும் உணர்ந்துயர்ந்த சிறப்பினையுடைய சரசுவதியும் இங்கு வீற்றிருத்தலால் நீங்காத அன்பின் நீ விரும்பியவாறு எனக்குக் காமக் கண்ணி என்னும் பெயர் உறுக' என்றருளி,

இறைவி திருமாலுக்குக் கட்டளையிடுதல்

இனைய வாறிவண் நிகழ்வுழிச் சுரும்பர் இமிருந் தாமரை உந்தியங் கடவுள், மனைய கத்துமா மடந்தையைக் காணான் மனம முங்கினன் பிரிவுநோய் வருத்தக், கனைக டற்பரப் பெங்கணுந் தேடிக் காஞ்சி மாநகர் ஆவயின் கண்டான், அனைய தாரமும் இறைவியும் தம்முள் அறைவ கேட்டவண் ஒளித்து நின்றனனால். 48

இங்கு இங்ஙனம் செயல்கள் நிகழ்கையில் பதுமநாபன் என்னும் திருமால் அந்தப்புரத்தில் திருமகளைக் காணாராய் மனம் வருந்திப் பிரிவுத் துன்பம் மேலும் வருத்துதலால் ஒலிக்கின்ற கடலுலகில் எவ்விடத்தும் தேடிக்காணாது காஞ்சிமா நகர்ககண் கண்டனர். வாழ்க்கைத் துணைவியும் இறைவியாரும் தமக்குள்ளே நிகழும் வேண்டுகோளும், வரப்பிரசாதமும் ஆகிய திருவாக்குக்களை மறைந்து நின்று கேட்டனர்.

ஒள்வ ளைக்கரத் திருவரும் அவனை உணர்ந்து நோக்கினர் என்னை ஆளுடையாள், கள்வன் ஒத்திவண் நிற்பவன் யாரே எனக்க டாயினள் கடிமலர் அணங்கும், வெள்க ஊற்றுமுன் இறைஞ்சினள் மாயோன் விரைவின் அம்பிகை திருவடி வணங்கி, உள்ள கம்பெரு மகிழ்ச்சியின் திளைப்ப ஒருமருங்குற ஒடுங்கிநின் றனனே. 49

ஒளி பொருந்திய வளையலை யணிந்த இருவரும் திருமாலின் செய்கையை உணர்ந்து கொண்டனர். என்னையும் அடிமையாக உடைய அம்மையார் திருடனை ஒத்து இவ்விடத்து மறைந்து நிற்பவன் யாவனோ? என வினவினர். திருமகளும நாணி முதற்கண் அம்மையாரை வணங்கினள். அடுத்துத் திருமாலும் விரைந்து அம்பிகையின் அடியிணைகளிற் பணிந்து மனமகிழ்ச்சியில் மூழ்கி ஒருபக்கமாக ஒடுங்கி நின்றனர்.

நங்கை நாகணைக் குரிசிலை நோக்கி நன்று வந்தனை யோஎன
வினவி, அங்கண் முச்சகம் நீபுரந் தளிக்கும் ஆரு யிர்த்தொகை
இனிதுவாழ்ந் தனவே, பங்க யக்கணாய் என்றலும் கலுழப் பாகன்
நின்னருட் கருணைபெற் றுடையேம், எங்கள் வாழ்வினுக் கெவன்-
குறை யானும் இவளும் உய்ந்தனம் எனத்தொழு துரைத்தான். 50

காமக்கண்ணியார் நாகவணையிற் பயிலும் மாலை நோக்கி நலமோ? என வினவி, மூவுலகினும் நீ பாதுகாக்கும் அரிய உயிர்த் தொகைகள் நலமே வாழ்கின்றனவே? பதுமாக்கனே! என்று வினவுதலும் கருடப் பாகனார் நின திருவருளைப் பெற்றுடையேமாகிய எங்கள் வாழ்வினுக்குக் குறையாதுளது? யானும், இவளும் பிழைத்தோம்' என்று தொழுது கூறினர்.

இறைவி பின்னரும் ஒன்றவற் கியம்பும் ஈண்டு முப்பதிற்
றிரண்டறம் வளர்க்கும், முறையின் என்அறச் சாலைஈ திங்கோர்
மூரிப் பாரிடம் இதற்கிடை யூறுய்க், குறைவில் ஆற்றலின் உழி-
தரும் அதனைக் குறும்ப டக்குதி நீஎன ஏவ, நறைமல ர்த்துழாய்
மோலியும் இறைஞ்சி நயந்து பஞ்சதீர்த் தத்தடங் கரைப்பால். 51

இறைவியார் மேலும் ஒன்றனை அத்திருமாலுக்கு அருள் செய்வர்; இங்கு முப்பத்திரண்டறமும் வளர்க்கும் முறையினையுடைய என் அறச் சாலைக்கு வலியமைந்த பூதமொன்று இடையூறு புரிய நிறைந்த ஆற்றலுடையதாய்த் திரிதரும். அதன கொடுமையை அடக்குதி நீ என்று பணிக்கத் தேன்பொருந்திய துழாய் முடிப்பெருமானாரும் விரும்பிவணங்கி பஞ்ச தீர்த்தம் என்னும உலகாணித் தீர்த்தக்கரையில்,

திருமால் பூதத்தை அடக்கல்

அன்று பாரிடம் பாரிடை வீழ்த்தி ஆற்றலான்மிதித் ததன்-
மிசை நின்றான், நின்ற வன்றனை உந்திமேல் எழும்ப நெரித்தி
ருந்தனன் இருந்தவன் றன்னை, வென்றி சால்விறற் பூதம்மேல்
உந்த நீண்டு மற்றதன் மிசைப்படக் கிடந்தான், கன்று பூதமும்
வலிமுழு திழந்து கமலக் கண்ணனை வணங்கிஒன் றிரக்கும். 52

அன்றே பூதத்தைப் புவியிடை வீழ்த்தி வன்மையுடன் மிதித்து மேல் நின்றனர். நின்றவரைத் தள்ளி அது மேலெழ இறுக்கி அதன்மேல் இருந்தனர். அந்நிலையினும் அவரை வெற்றி நிரம்பிய வலியுடைய பூதம பிடித்துத்தள்ள அப்பூதத்தின் மேற்படுத்தனர். வயிரங்கொண்ட அப்பூதம் முழுவலியையும் இழந்து பதுமாக்கனைவணங்கி வரம்வேண்டும்

வள்ள லேமலர்த் திருவிளை யாடுமார்ப னேபெரும் பசிஎனை வருத்த, உள்ளு டைந்துளேன் ஆண்டுதோ றடியேற் கொரும கன்றனை உயிரொடும் உதவின், கொள்ளும் அப்பலி ஏற்றுளம் மகிழ்வேன் கொடுத்தி இவ்வரம் எனக்கென அரவப், பள்ளி யோனும்அற் றாகென விளம்பிப் பத்தர் போற்றஅத் தலத்தினி திருந்தான். 53

'வள்ளலே! மலரிலுறை திருமகள் திளைக்கு மார்பனே! பெரிய பசிநோய் என்னை வருத்துதலான உள்ளம் உடைந்துளேன். அடியேனுக்கு ஆண்டு தோறும் ஒருவனை உயிரோடும் கொடுத்தால் அப்பலியை ஏற்றுக்கொண்டு மனமகிழ்வேன். இதனையே வேண்டுகின்றேன்' என்னலும், பாம்பணையோனும் 'அவ்வாறு பெறுக' என அருளி அன்பர் தன்னைப் போற்ற அத்தலத்தில் இனிது வீற்றிருந்தனன்.

கள்வன் நின்றவன் இருந்தவன் கிடந்தோன் என்னும் நால்வகைக் கரிசறு வடிவால், வெள்வ ளைக்கரக் கடவுள்அங் கமர்ந்தான் விமல நாயகி ஆணையின் ஆற்றான், முள்ளெ யிற்றராப் பணம்புரை அல்குல் முளரி மாதும்அப் பிலத்தயல் இருந்தாள், புள்ளு யர்த்தவற் கினியவாம் அங்கட் போற்றப் பெற்றவர் வைகுந்தம் புகுவார். 54

'கள்வன்' எனவும், 'நின்றவன்' எனவும், 'இருந்தவன்' எனவும், 'கிடந்தவன்' எனவும், நான்கு திருப்பெயர்களுடன் நால்வகைக்குற்றமற்ற வடிவங்களுடன் வெள்ளிய பாஞ்ச சன்னியத்தைத் திருக்கரங்கொண்ட பிரானார் அங்கே அமர்ந்தனர். விமலநாயகியாகிய காமக்கண்ணியின் ஆணைப்படி பாம்பினது படம்போலும் அல்குலையுடைய திருமகளும் அப்பிலத்தயலே இருந்தனள். கருடக்கொடியினர்க்கு இனிய ஆகும் அவ்விடங்களிற் போற்றுதலைப் புரிந்தோர் வைகுந்தத்தையெய்துவர்.

கறைமி டற்றிறை வைகும்வீ ராட்ட காச மேன்மையின் தொடர்ச்சியால் இங்கே,அறைக ழல்திரு நாயகன் வரலா றனைத்துங் கூறினும் அத்திரு நகரை, நிறைவி ருப்பினுல் வழிபடப் பெறுவோர் நிலமி சைப்பெரு வாழ்வின ராகிப், பிறைமுடிப்பிரான் திருவடிக் கலப்பிற் பெறல ரும்பர போகமுற் றிருப்பார். 55

திருநீலகண்டர் வீற்றிருக்கும் வீராட்ட காசர் வரலாற்றின் தொடர்பினுல் இவ்வரலாற்றில் வீரக்கழலணிந்த திருமகள் நாயகனார் வரலாறு முற்றவும் கூறினோம். அவ்வீராட்டகாசப் பிரானாரை நிறைந்த விருப்புடன் வழிபாடு செய்வோர் நிலத்தின்மேற் பெருவாழ்வுடையராகிப் பிறையை அணிந்த பெருமானார் திருவருட் கலப்பினாற் பெறற்கரிய பேரின்பம் எய்தி இன்புறுவர்.

வீராட்டகாசப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-1746.

# பாண்டவேசப் படலம்

கொச்சகக் கலிப்பா

பேரின்பச் சாக்கியனூர் கல்லெறிக்கும் பேறுதவு
வார்தங்கும் வீராட்ட காச வரவிதுவால்
சீர்தங்கு தென்பால் திருப்பாண்ட வேச்சரமாம்
கார்தங்கும் இஞ்சிக் கடிநகரங் கட்டுரைப்பாம். 1

மறவாது அன்பு செய்து கல்லால் எறிந்த சாக்கிய நாயனூர்க்கு அக்கல்லெறிக்கும் பேரின்பமாகிய பேற்றினை வழங்கிய பெருமானூர் வீற்றிருக்கும் வீராட்டகாச வரலா றிதுவாகும். இனி, இதற்குத் தெற்கில் சிறப்புத்தங்கிய திருப்பாண்டவேச்சரம எனப் பெயரிய மேகந் தவழும் மதில் சூழ்ந்த காவலும் விளக்கமும் அமைந்த தலத்தை உறுதி பெறக் கூறுவோம்.

தருமம் பயந்த தநயன் முதலோர்
உருகெழுவெங் காட்டின் உரோமசனே யாதித்
திருமுனிவர் தம்மோடுந் தீர்த்தமெலாம் ஆடக்
கருதி நடந்தார் கழியாத காதலார். 2

தருமக் கடவுள் ஈன்ற தருமர் முதலானோர் அச்சத்தைச் செய்யும் கொடிய காட்டிடை யுள்ள உரோமசர் முதலான தெய்வ முனிவருடன் தீர்த்தங்களிற் சென்று படிய எண்ணி நீங்காத பெருவிருப்பினராய் நடந்தனர்.

அங்கங் கிலிங்கம் நிறுவி அருச்சித்துப்
பங்கந் துமிக்கும் பரம்பொருளைப் போற்றிசைத்துச்
சிங்கம் படுக்குந் திறலார் வருநெறியார்
தெங்கம் பொழில்சூழ் திருக்காஞ்சி நண்ணினூர். 3

சிங்கத்தை யழிக்கும் வலியுடையோர் சென்ற பலவிடங்களில் சிவலிங்கங்களைத் தாபித்துக் குற்றமறுக்கும் பரம்பொருளை ஆங்காங்குப் பூசனை புரிந்து துதி செய்து வருநெறியில் தென்னம் சோலை சூழ்ந்த திருக்காஞ்சியை அணுகினூர்.

அங்கட் பலதளியும் நோக்கி அகமகிழ்ச்சி
பொங்கித் திருக்கம்ப மாதியாப் புண்ணியநீர்க்
கங்கைச் சடிலக் கடவு ளிடமெல்லாம்
துங்கப்பே ரன்பின் தொழுதுதொழு தேகினூர். 4

ஆங்குப் பல திருக்கோயில்களையும் கண்டு உள்ளம் மகிழ்ச்சி மீக்கூர்ந்து திருவேகம்ப முதலான புண்ணிய நீராகிய கங்கையைச் சடையில் அடக்கிய சிவனூர் எழுந்தருளிய இடங்கள்தோறும் உயர்வுடைய பேரன்பொடும் தொழுது தொழுது மேற் சென்றனர்.

வீராட்ட காசங் கடைக்கால் வியன்மலர்கொண்
டாராப்பே ரன்பின் அருச்சித் ததன்தென்பால்
ஏராரத் தத்தம் பெயர்சாத்தி எல்லாரும்
தாரார்த்த கொன்றைச் சிவலிங்கந் தாபித்தார். 5

இறுதியாக வீராட்டகாசப் பெருமானை வேற்றுமைப்பட்ட மிகுதியாகப் பன்மலர்களைக் கொண்டு அடங்காத பேரன்பொடும் அருச்சனை செய்து அத்தலத்திற்குத் தெற்கில் யாவரும் தத்தம் பெயரால் அழகுற மாலையாகத் தொடுத்த கொன்றை மலரை அணிந்த சிவலிங்கங்களை நிறுவினர்.

வியல்—வேற்றுமைப்பட்ட மிகுதியுமாம். 'வியன்கலம்' (சிலப். இந்தி. 7) உரை காண்க.

அறமைந்தன் வீமன் விசயன் அலர்பூந்தார்
நறவிண்ட திண்தோள் நகுலசகா தேவர்
மறனின்றி இன்னோர் மனைக்கிழமை பூண்ட
முறையொன்று கற்பின் துரோபதைமுன் னானோர். 6

தேன் விரிகின்ற மலர் மாலையை அணிந்த திண்ணிய தோள்களையுடைய அறத்தின் மகனாகிய தருமனும், வீமனும், அருச்சுனனும், நகுல சகாதேவரும், குற்றமின்றி இவர்தம் மனையறத்தின் உரிமையை மேற்கொண்ட முறையால் ஒன்று பட்ட கற்பினையுடைய துரோபதை முதலானோர்,

துரோபதைக்குக் கொடுக்கப் பெற்ற அடைகளின் பொருளை எண்ணியும், வல்லார் வாய்க் கேட்டும் உணர்க. நகுல சகாதேவர் சேர்த்தெண்ணப்படுதல் நூலானறிக.

சீரார் திருட்டத் துமனன் சிகண்டிமற்றும்
ஏரார் கழற்கால் யதுமரபின் மன்னருடன்
ஊரானுற் கன்பின் உரோமசர் முற்கலனார்
பாரார் வியாதர் முதலாய பன்முனிவர். 7

சிறப்பமைந்த திருட்டத்துமனன், சிகண்டி இவருடனும் மேலும் அழகிய கழலணிந்த யது என்னும் மன்னன் வழி வந்த அரசருடனும் ஆன் ஊர்வாராகிய பெருமானுக்கு அன்பினை அமைத்த உரோமசர், முற்கலர், உலகிற் பரவிய புகழுடைய வியாசர் முதலானோர் ஆகிய முனிவர் பலருடனும்,

என்றினைய ரெல்லாம் இலிங்கந் தனித்தனியே
நன்றிருத்தி ஏத்தி நயப்பாடு பெற்றுரால்
அன்றவர்கள் போற்றும் இலிங்க மவைகண்டோர்
மன்றின் நடமாடும் வள்ளல் அருள்பெறுவார். 8

இவர் யாவரும் சிவலிங்கங்களைத் தனித்தனியாகச் செவ்வனம் நிறுவி விரும்பிய பொருள்களைப் பெற்றனர். அந்நாளவர்கள் போற்றிய பெருமானுர் தம்மைக் கண்டு போற்றினேர் அப்பெருமானுர் திருவருளைப் பெறுவர்.

கயிலாயம்

அன்னவற்றின் தென்பால் கயிலாயம் அவ்வரைப்பின்
நன்னர்க் கயிலாய நாதன் றனைநிறுவி
மன்னுந் திசைக்கிறைமை பெற்ருன் மருவலார்க்
கின்னல்புரி முத்தலைவேல் ஈசானன் என்பவே. 9

பகைவர்க்குத் தீங்கு செய்யும் முத்தலைச் சூலம் ஏந்திய ஈசான மூர்த்தி அத்தலங்களுக்குத் தென் திசையில் கயிலாய மென்னும் அவ்விடத்துக் கயிலாய நாதப் பிரானை நன்கு நிறுவிப் போற்றி மேன்மையுறும் வடகிழக்குத் திசைக்குத் தலைவராயினர்.

பாண்டவேசப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—1755.

# மச்சேசப் படலம்

கலி விருத்தம்

பார்த்த ராதியோர் வழிப டும்புகழ்
ஆர்த்த சூழல்கள் விளம்பி னும்அருள்
கூர்த்த அப்புலக் குடக்கண் இப்பிநீர்த்
தீர்த்த ஞாங்கர்மச் சேசங் கூறுவாம். 1

அருச்சுனர் முதலானேர் வழிபடும் புகழைப் புறம் போகாது பிணித்த தலங்களை விரித்தோம்; அருள்மிகுத்த அவ்விருக்கைக்கு மேற்கில் இப்பிநீர்த் தீர்த்தக்கரையில் விளங்கும் மச்சேசத்தைக் கூறுவோம்.

ஒப்பில் அற்புதம் உணர்த்த எம்பிரான்
இப்பி முத்தம்அங் கெடுத்த ளித்தலால்
செப்ப ரும்புகழ் இப்பி தீர்த்தம்என்
றப்பெ ரும்பெயர் அதனுக் காயதே. 2

ஒப்பற்ற வியப்புடைய நிகழ்ச்சியை வெளிப்படுத்த எமது பெருமான் இப்பிமுத்தினை இத்தீர்த்தத்தில் தோற்றுவித் தருள் செய்தலால் சொல்லற்கரிய புகழுடைய சிப்பி தீர்த்தம் என்ற அந்தப்பெயர் அத்தீர்த்திற் கமைந்தது.

மற்ற தன்கரை மச்ச லிங்கம்என்
றற்றம் இல்அரி அருச்சித் துள்ளது
துற்ற பாதகச் சோம காசுரன்
கற்கும் மாமறை கவர்ந்தொ ளித்தநாள். 3

அடுக்கிய பெரும்பாவச் செயல்களைப் புரிகின்ற சோமகாசுரன் கற்கவும் அவற்றின் வழி நிற்கவும் வேண்டிய பெருமறைகளை வௌவிக் கொண் டொளித்த நாளில் குற்றமின்றித் தாங்கும் திருமால் அத்தீர்த்தக் கரையில் அருச்சித்த மச்சலிங்கம் விளங்கும் இயல்பினது.

ஒத்தொ ழிந்தன உலகம் யாவையும்
நீத்த வேள்விய நிலைமை குன்றலான்
தீத்தெ றும்பசித் தேவர் மாயனைச்
சோத்து நீசரண் எனத்து தித்தனர். 4

உலகோர் வேதம் ஓதுதல் தவிர்ந்தனர். வேதம் ஓதுவோர். இயல்பு கெட்டமையால் வேள்விகள் நிகழ்ந்தில. தீயைப்போலச் சுடும் பசியால் வாடிய தேவர் திருமாலைச் 'சோத்து நீ அடைக்கலம்' எனத் துதி செய்தனர்.

சோத்து-இழிந்தோர் செய்யும் அஞ்சலி (சத்ததானப்படலம் 1, வாணேசப்படலம் 76லும் காண்க) அவிபெறுமையால் தேவர் வருந்தினர்.

அஞ்ச வீரென அருளி அச்சுதன்
நெஞ்ச கத்துற நினைவின் நாடினான்
எஞ்சு றுமறை யாவுங் கைக்கொடு
வஞ்சன் ஆழியுள் மறைந்த வண்ணமே. 5

'அஞ்சன்மின்' என அருள் செய்து திருமால் நெஞ்சில் தோன்றும் படி குறையாத மறைகளை முற்றவுங் கைப்படுத்து வஞ்சநெஞ்சினன் கடலுள் மறைந்த அந்நிலையை அறிவால் ஆராய்ந்து கண்டனர்.

பிருகு மாமுனி சபித்த பெற்றியால்
ஒருவ ருங்கயல் உருவு தாங்குபு
மருமலர்ப்பொழிற் காஞ்சி வைப்பிடைப்
பொருவில் இப்பிநீர்ப் புடையில் நண்ணினான். 6

பிருகு மாமுனிவர் சாபம் தந்தமையால் விலக்கரிய மச்ச வடிவினைத் தாங்கி மண மலர்களைக்கொண்ட சோலை சூழ் காஞ்சிமாநகர்க்கண் ஒப்பில்லாத இப்பி தீர்த்த மருங்கில் நெருங்கினார்.

வேறு

சலங்கொள் மீன்உருத் தன்பெயர் நாட்டிஅங்
கிலிங்கம் அன்பின் இருத்தி அருச்சனை
துலங்கச் செய்தருள் பெற்றுத் தொகுநிதிக்
கலங்கள் மல்கு கடலகத் தெய்தினான். 7

நீரை இடங்கொள்ளும் மச்ச வடிவு கொண்ட தன் பெயர்பூண்ட மச்சேச லிங்கம் தாபித்து அன்பொடும அருச்சனை விளங்கச் செய்து அருளைப்பெற்றுத் திரண்ட செல்வங்களை வழங்கு மரக்கலங்கள் மிகுகின்ற கடலில் மூழ்கினர்.

சோம கன்றனை அட்டுச் சுருதிகள்
மாம றைக்குலத் தார்க்கு வழங்கினன்
நாம நீர்க்கடல் நாகணைப் பள்ளிமேல்
தாம ரைக்கண் வளருந் தகைமையான். 8

அச்சந்தரும் பாற்கடலில் ஆதிசேடனாகிய படுக்கையில் தாமரை மலரை யொக்கும் கண்கள் அறிதுயில் கொள்ளும் பண்புடைய மச்சாவ தாரமூர்த்தி சோமகாசுரனைக் கொனறு வேதங்களைப் பெருமை பொருந்திய வேதியர்க்கு அளித்தனர்.

சங்கம் நேர்உருப் பஞ்ச சனப்பெயர்
வெங்க ணனையும் ஆயிடை வீட்டியே
துங்க ஓசை வலம்புரித் தோற்றமாம்
அங்க வன்றன் எலும்பை அணிந்தனன். 9

சங்கொக்கும் வடிவுடைய பஞ்சசன் எனப் பெயருடைய கொடியோனையும் அவ்விடத்தே அழித்து உயர்ந்த ஒலியுடைய வலம்புரிச் சங்கினை ஒக்கும் அவனது எலும்பைக் கைக்கொண்டனர்.

கச்சி மாநகர் வைப்பிற் கருந்துழாய்
மச்சம் அர்ச்சித்த மச்சலிங் கத்தினை
நச்சி ஏத்துநர் தாம்பெறு நன்னலம்
இச்ச கத்தெவர் இற்றென் றளப்பரே. 10

காஞ்சி மாநகரை அடைந்து பெருமை பொருந்திய துளசிமாலையை அணிந்த மச்சாவதார மூர்த்தி அருச்சித்த மச்சலிங்கப் பெருமானை விரும்பிப் புகழ்ந்து போற்றுநர் தாம் பெறுகின்ற பெருநலங்களை இவ்வுலகில் யாவர் இவ்வளவிற்றென்று வரையறுத்துக் கூற வல்லவர்?

மச்சேசப் படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-1765

# அபிராமேச்சரப் படலம்

கலி விருத்தம்

காவு சூழக் கனலிச் சுருப்பினம்
மேவு மச்சலிங் கேசம் விளம்பினம்
வாவி மல்கும் அதன்வட மேற்றிசைத்
தாவில் சீர்அபி ராமேச் சரஞ்சொல்வாம். 1

சோலையில் வண்டினங்கள் மேன்மேல் நெருங்கி மொய்க்கும் மச்சலிங்கேச வரலாற்றைக் கூறினோம். இனி, பொய்கைகள் நிரம்பிய அதன் வடமேற்குத் திசையில் குற்றமற்ற சிறப்பினையுடைய அபிராமேச்சரத்தின் பெருமையைக் கூறுவோம்.

வேறு

மாவலி எனப்பெயர் மரீஇய தானவர்
காவலன் உலகெலாங் காத்த ளிக்கும்நாள்
தேவர்கட் கிறைவ்வன் அரசு தேய்தலின்
யாவது செயல்எனக் கினியென் றெண்ணுழி. 2

மாவலி என்னும் அசுரர்க்கு அரசன் உலகமெல்லாவற்றையும் காவல் செய்யும் நாளில் தேவர்களுக்கரசனாகிய இந்திரன் அரசாட்சி மெலிதலின், இனியான என் செய்வேன் என்று அத்தேவர்கோன் தளருங்காலை,

செந்தளிர் மலரடித் திருவின் நாயகன்
இந்திரற் கிளையவன் என்னக் காசிபன்
மைந்தனாய்க் குறள்உருத் தாங்கி மன்னினான்
முந்தையோர்க் கரசியல் உதவ முன்னியே. 3

செவ்விய தளிரை ஒக்கும் மலர்போலும் அடியிணையுடைய திருமகளுக்கு நாயகராகிய திருமால் இந்திரனுக்குப் பின் பிறந்த உபேந்திரனாகக் காசிப முனிவர்க்கு மைந்தராய்க் குறுகிய வடிவு கொண்டு தோன்றினர். அதிதியினபால் தமக்கு முன்னர்த் தோன்றிய தேவர்களுக்கு அரசச் செல்வத்தை உதவ எண்ணியே,

அலங்கொளிக் காஞ்சியின் அபிரா மேச்சர
இலிங்கம்அங் கியல்புளி வழிபட் டேத்தினான்
வலம்பெறச் சிலபகல் வைகிக் கங்கைநீர்
சிலம்புவே ணியன்அருள் செய்யப் போந்தனன். 4

விட்டிமைக்கும் ஒளியிணையுடைய காஞ்சியின் கண் அபிராமேச்சரச் சிவலிங்கத்தைத் தாபித்து விதிப்படி வழிபாடு செய்து துதித்தனர் மாவலியை வெல்லும் வலிமையைப் பெறச் சிலநாள் அங்குத் தங்கி வழிபட்டுக் கங்கை நீர் ததும்புகின்ற சடைமுடிப் பெருமானார் அருளுதலைச் செய்யப்பெற்று மீண்டனர்.

வெப்பவாள் அவுணர்கோன் வேள்விச் சாலையின்
எய்திமூ வடிநிலம் இரந்து வேண்டினான்
கைதவம் உணர்ந்தெதிர் தடுத்த காம்படு
மையறு வெள்ளியை விழியை மாற்றினான். 5

கொடிய வாளையுடைய அசுரர் தலைவனாகிய மாவலி வேள்வி செய்யும் இடத்தை எய்தி மூன்றடியில் அடங்கும் நிலத்தை யாசித்துக் குறையிரந்தனர். . வாமனரின் வஞ்சகச் சூழ்ச்சியை அறிந்து தானம் கொடாதவாறு தடுத்த குற்றம் பொருந்திய குற்றமற்ற வெள்ளியின் கண்ணைப் போக்கினர்.

உள்ளத்திற் குற்றமும், உடலிற் றூய்மையும் காட்டினர். மேலும், வெள்ளிக்கு அடையர்க்கலுமாகும். 'வெள்ளியை விழியை' என வருதல் தெள்ளிது (தொல்-சொல். 88) என்பதனாற் கொள்க. தான நீர் விடும கரகத்தின் மூக்கில் வண்டுருவாகியும் நீரைத் தடை செய்தவழி வாமன மூர்த்தி தருப்பையால் குத்தித் தடுத்த சுக்கிரர் கண்ணைப் போக்கினர்

தன்னடி மும்மையின் அளவை சால்இடம்
அந்நிலை அவுணர்கோன் அளிப்ப ஏற்றனன்
கொன்னுற வளர்ந்தனன் அண்ட கூடமேல்
சென்னிபோய் உரிஞுறத் திகழ்ந்து தோன்றினன். 6

வாமனர் தம் அடியால் மூன்று என்னும் அளவையுள் அமைந்த நிலத்தை அப்பொழுதே மாவலி அளிப்ப ஏற்றனர். கண்டு வியந்தவர் அஞ்சும்படி வளர்ந்து அண்ட முகட்டிற்கு அப்பால் முடிபோய்த் தடவுமாறு உயர்ந்து தோன்றினர்.

ஈரடிப் படுத்தனன் உலகம் யாவும்மற்
றோரடிக் கிடம்பெறான் உதவி னான்றனை
ஆரிடைப் பாதலச் சிறையின் ஆக்கினான்
ஏருடைப் புரந்தரற் கிறைமை நல்கினான். 7

ஓரடியால் மண்ணையும், மற்றோரடியால் விண்ணையுமாக ஈரடியால் உலகங்கள் அனைத்தையும் அகப்படுத்தனர். மேலும் ஓரடிக்கிடமின்றி உதவிய மாவலியின் முடிமீது காலை வைத்து மீள இயலாதபடி பாதலத்திற் சிறையிடை இருத்தினர். இங்ஙனம், எழுச்சியை உடைய இந்திரனுக்குத் தலைமைப் பாட்டினை நல்கினர்.

மறுவறுங் காஞ்சிமா வரைப்பின் நண்ணுபு
நறுமலர்ச் சடைஅபி ராம நாயகன்
பிறைமுடிக் காட்டுவான் வாம னப்பெயர்
நிறைபுனற் குண்டம்ஒன் றகழ்ந்து நீடியே. 8

குற்றத்தை நீக்கும் காஞ்சிமா நகரத்தின்கண் மீண்டும் நண்ணி நறிய மலர்களைச்சூடிய சடையினையுடைய அபிராம நாயகனாராகிய முன்னம் அருச்சனை புரியப்பெறற பெருமானார் திருமுடிக்கு நீராட்டுவான் வேண்டி வாமன குண்டம என்னும் நிறைந்த நீருடைய குளத்தைத் தோட்டு அங்குத் தங்கியிருந்து,

புண்ணியப் பூம்புனல் ஆட்டிப் போர்விடை
அண்ணலைத் தொழுதுல களந்த பேருருக்
கண்ணுதல் மகிழ்வுறக் காட்டிப் பூந்துழாய்ப்
பண்ணவன் ஆயிடைப் பணியின் மேயினான். 9

புண்ணியத் தீர்த்த நீரைக் கொண்டு திருமுழுக் காட்டிப் பொரு தலையுடைய விடையூரும் அண்ணலை வணங்கி உலகங்களை அளந்த பெருவடிவினை நுதற்கண்ணுடைய பிரானார்க்கு மகிழ்ச்சிகூரக் காட்டித் திரிவிக்கிரம மூர்த்தியாய் அவ்விடத்தே திருத்தொண்டில் ஈடுபாடுடை-யர் ஆயினார்.

அபிராமேச்சரப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—1774.

---

## கண்ணேசப் படலம்

கலி விருத்தம்

வாம னப்பெயர் மாணி தொழும்அபி
ராம நாத வரைப்பு விளம்பினம்
நாம நீர்த்தடங் காஞ்சி நகர்வயின்
ஏமம் மாண்டகண் ணேசம் இயம்புவாம். 1

வாமனன் என்னும் பிரமசாரி வணங்கிய அபிராம நாதேசம் கூறினோம். இனி, அச்சந்தரும் நீர்ப்பொய்கை கொண்ட காஞ்சிமா நகரில் இன்பம் மிக்க கண்ணேசத்தைக் கூறுவோம்.

கடல்உ யிர்த்த கடுவிடந் தாக்கிமுன்
உடலெ லாங்கரி வுற்று வெதும்பலால்
படஅ ராவணைப் பண்ணவன் மாழ்கிஅவ்
விடம்அ யின்ற விமலனைப் போற்றுவான். 2

திருப்பாற்கடல் உமிழ்ந்த கொடிய விடம் தாக்கித் திருமால் முன்னர் மேனி முழுதும் கரிந்து வெப்ப முறுதலான் வருந்தி அவ் விடத்தை உண்டு உலகைக் காத்த அமலனைப் போற்றுவார்.

கச்சி எய்தினன் கண்ணலிங் கத்தினை
நச்சி அன்பின் நிறீஇநயந் தேத்தினன்
பச்சை மென்கொடி பாகன் கருணைகூர்ந்
திச்சை யாது விளம்புதி என்றலும். 3

காஞ்சியை எய்தி அன்பொடும் விரும்பிக் கண்ணலிங்கேசப் பிரானை இருத்திப் புகழ்ந்து போற்றினர். பசிய மெல்லிய கொடியாகிய உமையம்மை கூறனார் கருணை மிக்கு விருப்பம் யாததனைக் கூறுதி என்ற போது,

குமுத வாய்ப்பசுங் கோமளை கூறநீ
இமிழ்தி ரைக்கடல் வெவ்விடம் என்பொருட்
டமுது செய்தனை அங்கதன் முன்னம்அத்
திமிர நஞ்சஞ் சிறிதெனைத் தாக்கலால். 4

செவ்வல்லி மலரை யொக்கும் திருவாயையுடைய கொழுந்தாகிய கோமளையின் பங்கனே! நீ அலை ஒலிக்கின்ற கடலிற் றோன்றிய கொடிய விடத்தை என்பொருட் டமுதாக உட்கொள்ளு முன்பே இருள் நிற முடைய விடம் சிறிது தெனைத் தாக்குதலால்,

மேனி முற்றுங் கருகி வெதும்பினேன்
யானி னிப்படும் வெப்பிது ஆற்றலேன்
கானி லாய கடுக்கைத் தொடையொடு
தூநி லாப்பிறை சுற்றிய மோலியாய். 5

மேனி முழுதும் கரிந்து வெப்ப மடைந்தேன். யான் இனி இத் துன்பம் பொறேன. மணங்கமழும் கொன்றை மாலையையும், தூய பிறை யையும் முடித்த முடியுடையோனே!

பங்கம் நீக்கி நலந்தரு பான்மையாற்
சங்க ரன்சிவன் சம்பு உருத்திரப்
புங்க வன்என நாமங்கள் பூண்டனை
அங்க ணாஅடி யேன்உன் அடைக்கலம். 6

'பரிபவத்தை நீக்கி நலஞ் செய்யும் தன்மையால் சங்கரன், சிவன் சம்பு, உருத்திரன் எனனுந் திருப்பெயர்கள் அழகுறத் தாங்கினை. அழ கிய கண்ணோட்ட முடையவனே! முதல்வனே! அடியனேன் உன்பால் அடைக்கலம் புக்கேன்.

என்று மாயன் இரந்திது வேண்டலும்
கொன்றை மாலைக் குழகன் இரங்கினன்
மன்ற லந்துணர் வாசத் துளவினோய்
ஒன்று கேட்டி உனக்கிது வேண்டுமேல். 7

என்று திருமால் குறையிரத்தலும் என்று மூவாத இளையராகிய பெருமானார் இரங்கி மணங்கமழ் கொத்துக்களையுடைய துளவ மாலையனே! உனக்கிக் குறை தீரவேண்டுமாயின, அதற்குரிய ஒன்றனைக் கேள்.

என்றும் யாம்மகிழ் ஏகம்ப லிங்கமுன்
சென்று நம்முடித் திங்கள் நிலாத்தயல்
நின்று கச்சி நிலாத்துண்ட மாலென
ஒன்று நாமம் பெறுதிஎன் றும்பர்கோன். 8

எக்காலமும் யாம் மகிழ்ந்து விளங்கும் திருவேகம்பச் சிவலிங்கத்தின் திருமுன்னர் எய்தி நம் திருமுடியில் உள்ள சந்திரனது நிலவிற்கு அருகில் நின்று கச்சி 'நிலாத்துண்டப் பெருமாள்' எனப் பொருந்திய திருப்பெயர் பெறுதி' என்று மகாதேவர்,

நாம வெந்துயர் தீர்திறம் நல்குபு
வாம மேகலை யோடும் மறைந்தனன்
தூமலர்த்துள வோனும் தொழுதெழூஉத்
தீமை தீரத் திருமுன்னர் வைகினன். 9

அச்சத்தைத் தருகின்ற வெப்புநோய் நீங்கும் வகை அருள்செய்து அழகிய மேகலையாராகிய அம்மையொடும் மறைந்தனர். திருமாலும் தொழுதெழுந்து துன்பமொழிய ஏகம்பர் திருமுன் வைகினர்.

கவுசிகீச்சரம்

கரிய வன்பணி கண்ணலிங் கேசனை
உரிய அன்பின் வழிபடு வோர்உம்பர்
மருவி வாழ்குவர் மற்றுங் கவுசிகீச்
சரம்ஒன் றுள்ளது சங்கரன் தானமே. 10

கரிய திருமால் வழிபாடு செய்த கண்ணலிங்கேச இறைவனை வழிபடற்குரிய அன்பினால் வழிபடுவோர் மேலுலகைத் தலைப்படுவர். மேலும், கவுசி கீச்சரம் என்னும் சிவபிரான் இருக்கை ஒன்றுள்ளது.

வரைஅ ணங்கு வடிவிற் கழிந்தகா
ருரிவை கோசத் துதித்த கவுசிகி
இருமை அன்பின் இருத்தி அருச்சனை
புரியும் பொற்பது மற்றும் புகலுவாம். 11

மலைமகள் வடிவினின்றும் கழிந்த கருஞ்சட்டையி லுதித்த கவுசிகி பேரன்பினால் சிவலிங்கம் இருத்தி அருச்சனை புரியும் சிறப்பினது. மேலும், கூறுவோம்.

மாகாளேச்சரம்

எண்சீரடி யாசிரிய விருத்தம்

உலகாணித் தடமருங்கு மாகா ளேசம் ஒன்றுளது மாகாளன் எனும்பே ரன்பின், விலகாத பாப்பரசு வீடு பேறு விழைந்தேதென் திசைக்கயிலை வேணித் திங்கட், கலையானைத் தொழுதுறைநாள் ஆணை யாற்றாற் காஞ்சியிற்போந் தவ்விலிங்கம் நிறுவிப் போற்றி, நிலம்நீடு தென்கயிலை மீள நண்ணி நீப்பரிய பெருவாழ்வு நிலாய தன்றே. 12

உலகாணித் தீர்த்தத்தின் மருங்கில் மாகாளேச்சரம் ஒன்றுள்ளது. மாகாளன் என்னும் பாம்பரசு பேரன்பினின்றும் பிறழாத வீடுபேற்றினை விரும்பித் தென் திசைக் கயிலையாகிய காளத்தியில் சடையில் இளம் பிறையணிந்த பிரானைத் தொழுதுறையுநாள் அப்பிரானின திருவாணையால் காஞ்சியிற் போந்தவ் விலிங்கம் தாபித்துப் போற்றி நிலத்தில் சிறப்புத் தங்கிய தென் கயிலையை மீள நண்ணி நீப்பரிய பெரிய வாழ்வு நிலாவியது.

கண்ணேசப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-1786

---

# குமரகோட்டப் படலம்

எண்சீரடி யாசிரிய விருத்தம்

கடப்பரும்பிறவி வேலை சுவற்றுங் கண்ண லிங்கமொடு கவுசிக லிங்கம், மடப்பி டிக்கிடம் அளித்த பிரான்மா காள லிங்க-மெனும் மூன்றும் மொழிந்தாம், அடற்ப டைச்செறுநர் சேனை அனைத்தும் அழித்து மூக்கிநிணம் உண்டு திளைத்துக், குடர்க்கொ மூந்தொடை மிலைச்சிய செவ்வேற் குரிசில் வாழ்குமர கோட்டம் உரைப்பாம். 1

நீந்துதற் கரிய பிறவிக்கடல் வற்ற வணங்கினோர்க்கு அருள் புரியும் கண்ணேச கவுசிகேசம், இளைய பெண் யானையை யொக்கும் உமையம்மையார்க் கிடப்புறம் வழங்கிய பிரானுரது மாகாளேசம் எனப் பெறும் மூன்று தலங்களின் வரலாற்றினைக் கூறினோம். இனி, சிவந்த வேலை ஏந்திய முருகப்பெருமானுர் எழுந்தருளி யுள்ள குமரகோட்ட வரலாற்றினைக் கூறுவோம்.

வலிமை யமைந்த படைக் கலங்களைக் கொண்ட பகைவராகிய அசுரர் சேனையை முற்றவும் அழித்துக் கலக்கி ஊனைப் பொருந்திப்-பயின்று குடர் மாலையைச்சூடிய செவ்வேல் என்க, பெருமானுக்கு ஒப்பன்மையின் வேலுக்கு ஏற்றப்பட்டது.

குமாரக் கடவுள் திருவிளையாடல்

தருக்கு மிக்குடைய தாருகன் என்னுந் தானவர்க்கிறையை வெய்ய களத்தின், முருக்கி ஆருயிர் செகுத்து விசும்பின் முதல்வனுக்கிறைமை நல்கிய பின்னர்ச், செருக்க டந்தவடி வேல்வலன் ஏந்துஞ் செம்மல் வெண்கயிலை யால்வரை எய்தி, மருக்க டுக்கைமுடி வள்ளலை ஓர்பால் மலைம டந்தையை வணங்கி மகிழ்ந்து. 2

செருக்கு மிக்க தாருகன் என்னும் அசுரர் தலைவனைக் கொடிய போர்க் களத்தில் வலியைக்கெடுத்து அரிய அவனை அழித்து வானவர் தலைவனுக்கு இந்திர பதவியை வழங்கிய பின்பு போரை வென்ற வேலை வலத்தில் உயர்த்திய தலைவராகிய முருகப் பெருமானார் வெள்ளிய கயிலைப் பெருமலையை அடைந்து மணங்கமழும் கொன்றை மலர் மாலையைச் சூடிய திருமுடியினையுடைய வள்ளலையும் இடப்பால் விளங்கும் அன்னையையும் வணங்கி மகிழ்ந்து,

அலகில் அண்டமும் அளித்து வளர்க்கும் அம்மை அப்பர்-தம் மடித்தலம் ஏறி, நிலவ ரும்புகனி வாய்எழில் காட்டி நெடிது போதுவிளை யாடி அடுக்கற், குலம டப்பிடி கலன்பல பூட்டி விடுப்ப மீண்டுகொடி நீள்கடை வாயில், வலமி குத்தகய மாமுகன் ஆவி மாட்டு முன் இளவல் வைகுழி உற்றான். 3

எண்ணில்லாத பெரும்புவனங்களைத் தலைஅளிசெய்து வளர்க்கும் அம்மை அப்பர் தம் மடிமிசை யிருந்து புன்முறுவல் பூத்துக் கொவ்வைக் கனியை ஒக்கும் மழலைச் சொல் லழகைத் தோற்றுவித்துப் பெரும்பொழுது விளையாடல் புரிந்து, இமயமலையன்து மகளாராகிய இளைய பிடியினை ஒத்தவராகிய அம்மையார் முருகனுக்குப் பல அணிகளையும் பூட்டி விடுத்திடப் பெயர்ந்து போய்க் கொடிகள் உயர்ந்த தலைவாயிலில் பேராற்றலனாகிய கஜமுகாசுரனை அழித்த மூத்த பிள்ளையார் இருக்கையை எய்தினர்.

ஊங்கு வன்மடி மிசைக்கொடு பல்கால் உச்சி மோந்துகவுள் முத்தமும் உண்டு, வீங்கும் அன்பொடு தழீஇக்களி கூர்ந்து விடைஅளிப்பமுகம் ஆறுடை எங்கோன், யாங்கும் வைகுகண நாதர் இடந்தோ றெய்தி ஆடலுறு வான்அது காலை, ஆங்கண் நான்முகவன் உம்பர் குழாத்தோ டம்மை அப்பரை வணங்க அணைந்தான். 4

விநாயகப் பிரானார் ஆறுமுகங்களை யுடைய எமது பெருமானை மடிமிசை இருத்திப் பன்முறையும உச்சிமோந்து கன்னங்களில் முத்தங் கொண்டு பெருகும் அனபினால் மெய்யைத் தழுவிக் களிப்புமிக்கு விடுப்ப ஆங்காங் குறையும் கணநாதர் இடந்தொறும சென்று சென்று விளையாடி இன்புறுத்தும் அப்பொழுது நான்முகன் அம்மை அப்பரை வணங்கத் தேவர் குழுவொடும் அவ்விடத்தை அணைந்தனன்.

ஆங்கவன், ஈங்கிவன் என்பன போன்ற ஊங்கு உவன் என்னும் சுட்டுப் பெயர் ஒருசொல் நீர்மைத்தாய் மூத்த பிள்ளையாரை உணர்த்திற்று.

அங்கண் நின்றுவிளை யாட்டயர் செவ்வேல் அண்ண லைச்சிறிதும் நோக்கலன் நண்ணி, மங்கை பாகனை வணங்கி வழுத்தி வாழ்வு பெற்றுவிடைகொண்டு தனது, பொங்கு சீர்உலகம் எய்திய மீண்டான் மீளும் அப்பொழுதும் ஆவயின் ஆடுந், துங்க வேல்இறையை நோக்கலன் ஏகத்தோகை மஞ்ஞையுடையான் அது கண்டான். 5

அவ்விடத்திருந்து திருவிளையாடலைப் புரியும் செவ்வேற் பெருமானரைச் சிறிதும் மதியானாய் அம்மை அப்பரை நண்ணி வணங்கித் துதித்தலான் வாழ்க்கை எய்திச் செலவு பெற்றுக்கொண்டு தனது மிக்க சிறப்பினையுடைய பிரமலோகத்தை அடைய மீளும் பொழுதும அங்கு ஆடல் செய்யும் உயர்ச்சியையுடைய வேற் பெருமானரை மனங் கொள்ளானாய்ச் செல்ல மயிலுடையார் அதனை எண்ணினர்.

பிரமன் சிறைப்படல்

செழுமலர்க்கமலம் வைகிய செம்மல் இகழ்ந்து செல்லும் அறி வின்மை குறித்து, விழிசி வந்துகுறு மூரல் அரும்பி வருக ஈண்டென விளித்தலும் அன்னோன், கழிசெ ருக்கினன் வணங்கி அடங்கிக் கைகள் கூப்பிநணு கிப்புடை யுற்றான், கொழிம றைப்பனுவ லான்முகம் நோக்கிக் குன்றெறிந்தசுடர்வேல்இறை விள்ளும். 6

பிரமன் மதியாது போகக் காரணமாகிய அறியாமையைத்திருவுள்ளங் கொண்டு கட்கடை சிவந்து புனமுறுவல் பூத்து 'இங்கு வருக' எனக் கூவி அருளலும், அவன் மிகு தருக்கினனாய் வணங்கி அடங்கிக் கைகளைக் குவித்து மிக நெருங்கினன். வேதியன முகத்தை நோக்கிக் கிரவுஞ்ச கிரியைப் பிளந்த சுடர் வேலனார் திருவாய் மலர்வர்,

யாவன் நீஉறைவ தெவ்விடம் மன்னும் யாது செய்தொழிலும் எக்கலை வல்லாய், நீவி ளம்புகென யான்பிர மன்சீர் நிறைஅருட்கருணை நுந்தை எனக்கன், றோவ றுங்கலைகள் முற்றும் விளங்க ஓது வித்துலகம் நன்கு படைப்பான், ஏவ வைகுறுவல் சத்திய லோகத் தென்று பன்முறை வணங்கி உரைத்து. 7

'யாவன் நீ? உறையுமிடம் யாது? நிலைபெறும் தொழில் யாது? எக்கலை வல்லை? கூறுக வென்றருளலும், 'யான் பிரமன்; மிகு சிறப்பினையும் நிறைந்த பேருளையும் உடைய நும தந்தையார் எனக் கன்று ஒழிவறுங் கலைகள் முழுதும் விளங்க ஓது வித்து நன்கு உலகைச் சிருட்டி செய்யப் பணிப்பச் சத்திய லோகத்தில் வைகுவேன' என்று பன்முறை வணங்கிக் கூறி,

இமவ ரைத்தலைவி யோடு பிரானை ஏத்த வேண்டிஇவண்
எய்தினன் அன்னோர், தமத ருட்கருணை பெற்றனன் மீண்டேன்
தாழ்வி லாதுசெய் தவத்திற னால்உன், கமல நோக்கருளும் இன்று
கிடைத்தேன் காதல் உன்னடி யேன்இனி என்னூர்க், கமல நாயக-
செல் கின்றனன் என்றான் அறுமு கக்கடவுள் அன்னது கேளா. 8

'உமையம்மையாரோடும் பிரானாரை வழிபட வேண்டி இங்கெய்தி னேன். அவர்தம் திருவருளைப் பெற்று மீண்டேன். சிறப்புறு தவப் பயனாக நும் மலர்க்கண் அருளும் இன்று வாய்க்கப் பெற்றேன், விருப் புடைய நும்முடைய அடியனேன்; தூயோனே! இனி, என இருப்பிடத் திற்குச் செல்கின்றேன்' என்றனன். ஆறுமுகக் கடவுள் அதனைக்கேட்டு

நன்று சொற்றனை உணர்ச்சியின் மிக்காய் ஞாலம் முற்று-
தவும் நான்முகன் நீகொல், குன்ற வில்லிஅரு ளாற்கலை எல்லாங்
கோதறத்தெளித லுற்றனை அன்றே, ஒன்றும் அக்கலைகள்
முன்னுற என்னே ஓதும் அக்கரம் அதன்பொருள் யாதோ,
இன்றெ னக்கிது விளம்புதி என்றான் ஏட விழ்க்கும்மல ராளி
இறைஞ்சி. 9

'உணர்வின் மிக்கோனே! நன்று கூறினை; உலக முழுதும் உத வும் நான்முகன் நீயேயோ? சிவபிரான் அருளாற் கலைகள் யாவும் குற்ற மறத் தெளிந்து கொண்டனை அல்லவா? பொருந்தும் அம்மறைகளை ஓதும் முன்பு ஓதும் அக்கரம் யாது? அதன் பொருள் யாது? இப் பொழுது எனக்கதனைக் கூறுதி' என்றனர். தோடுகள் விரியும் மல ரோன் வணங்கி,

ஐய நுந்தைஅருள் இன்றி எமக்கோர் அறிவும் உள்ளது-
கொல் ஆதியில் ஓது, மெய்யெ ழுத்தைஅறி கின்றிலன் அங்கண்
விளம்பும் முப்பொருளு மியான்அறி கில்லேன், உய்யு மாகருணை
வைத்தெனை ஆள்என் றுரைத்தி ரந்துகடி தேக முயன்றான்,
பொய்க டந்தவனும் ஆதிஎழுத்தின் பொருள்உ ரைத்தலது
போகலை என்று. 10

'ஐயனே! நும் தந்தையார் அருள் இன்றிச் சுதந்திரமாக எமக் குச் சிறிதேனும அறிவு உள்ளது கொல்லோ? முதற்கண் ஓதும் உண்மை எழுத்தை அறியும் வலியிலேன். மூவகையாகக் கூறும் அதன் பொருளை யும் அறியும் வலியிலேன். பிழைக்குமாறு கருணை பாலித்து என்னை ஆட்கொள்' என்று கூறி இரந்து விரைந்து போக முயன்றனன். பொய் யன்பிற் ககப்படாத பெருமானாரும் முதலெழுத்தின் பொருளை உரைத் தனறிப் போகேல்' என்றருளி,

சென்னி ஐந்துடைய எந்தை பிரான்றன் திருவடிக்கண்விரை யாக்கலி வைப்பேன், பன்னு கிற்றிகடிதென்றலும்அன்னோன் பகவன் ஈன்றதனி மாமகன் நீயே, என்ன பல்கலையும் உன்னிடை வைகும் எம்பி ரான்அடியில் ஆணைதரேல்யான், உன்ன ரும்பொருளின் உண்மை எனக்குத் தெரிந்த வண்ணம்உரை செய்குவல் என்று. 11

ஐந்து திருமுகமுடைய எம் தந்தையார் திருவடி மேல் ஆணை வைப்பேன். விரைந்து கூறுதி என்ற அளவிலே, பிரமன் பகவன் ஈன்ற தனிப்பெருமகன் நீயே. எத்தகைய பலகலையும் நின்னிடை ஒடுங்கும். எம்முடைய பெருமான் திருவடிமேல் ஆணையிடேல். யான் உணர்தற் கரிய பொருளின் மெய்ப்பொருளை எனக்குத் தெரிந்தபடி உரை செய்வேன்' என்று கூறி,

அறுசீரடி யாசிரிய விருத்தம்

பல்கலைக்கும் முதலாகப் புகன்றிடுவ தோம்என்னும் பதமாம் அந்தச், சொல்விளக்கும் பொருள்அயன்மால் ஈசனெனும் மூவரெனச் சொல்வர் மேலோர், மல்குமறை உட்பொருளாய்ச் சுடரொளியாய் யோகுடையார் மனத்தே தோன்றும், அல்கியசீர்ப் பிரணவத்தை உணர்ந்தவரே வீட்டின்பம் அடைய வல்லார்.

'பன்மறைகளையும் ஓதத் தொடங்கும்போது முதற்கண் கூறப்படுவது 'ஓம்' என்னும் மொழியாகும். அம்மொழிக்குரிய பொருள்கள் மும்மூர்த்திகளென மொழிவர் மேலோர். மிக்க வேதத்தின் உள்ளுறைப் பொருளாயும், பேரொளியாயும் யோகியர்க்கு உள்ளத்திற் புலனும் சிறப்புத் தங்கிய பிரணவத்தை அங்ஙனம் அறிய வல்லவரே பிறவி நோய் தவிர்ந்து வீட்டின்பத்தைப் பெறும் தக்கோர் ஆவர்.'

முன்னெழுத்தும் அதன்பொருளும் இவ்வளவே யான்—அறிந்தேன் முதல்வா போற்றி, என்னை இனி விடுத்தருளாய் எனலோடுங் கணங்கள்முகம் நோக்கி இன்னோன், புன்னிலையன் சிறிதேனும் உணர்ந்திலான் தருக்குமிகப் பூண்டான் கண்டீர், துன்னரிய சிறையின்கண் மற்றிவனைப் புகுத்தும்என வெகுண்டு சொல்லி. 13

'முதற்கண் கூறப்படும் பிரணவத்தின் பொருளை இந்த அளவே யான் அறிந்தேன். முதல்வனே! போற்றி எனக்கு இனிச் செலவு கொடுத்தருளும்', என்ற அளவிலே, அறுமுகப் பிரானர் பணியாளரை முகம் நோக்கி 'இப்பிரமன் அற்பன். சிறிதாயினும் உணர்ந்திலன. செருக்குமிகக் கொண்டுள்ளான் என்றுணர்திர். அனுபவித்தற்கரிய துன்பச் சிறையின்கண் இவனைப் புகச் செய்ம்மின்' என்று சினந்து, கூறி

தன்வரைப்பில் அலரோனைச் சிறைப்படுப்பித் துலகமெலாந் தானே தோற்றும், இந்நிலைமைத் தலைநின்றான் அறுமுகவே ளுடன்எய்து முனிவர் தேவர், அன்னவனைக் கொடுபோதப் பின்-சென்றார் அவ்வரைப்பி னளவும் அப்பால், கன்னவில்தோள் கணநாதர் பிடித்துந்த மீண்டழுங்கிக் கயிலை புக்கார். 14

கந்தலோகத்தில் பிரமனைச் சிறையில் நிறுத்துவித்துப் பெருமானாரே உலகங்களைத் தோற்றுவிக்கும் செயலில் முற்பட்டு நினறனர். பிரமனை விடுவிக்கப் பின தொடர்ந்தனர் தேவர்களும், முனிவரரும். அச்சூழலளவும தொடர்ந்தபின் மலையையொக்கும் தோள்களை யுடைய கண நாதர்கள் பிடரியைப் பிடித்துத் தள்ள வருந்தி மீண்டு கயிலையிற் சரண் புகுந்தனர்.

பெருமான் பிரமன்சிறைறையை விடுவித்தல்

புக்கிறைவன் றனைவணங்கி நிகழ்ந்தவெலாம் விண்ணப்பஞ் செய்யப் பூந்தேன், நக்கநறுந் தொடைஇதழிக் கடவுள்அவர் தமைநோக்கி நவில்வான் என்னே, அக்கமலன் விளம்பியவா நம்மையும்நம் புதல்வனையும் அன்றே மான, மிக்கபுகழ்ச் சுருதி-யெலாம் பிரணவத்தின் பொருளாக விளம்பு மாறே. 15

புகுந்து பெருமானை வணங்கிப் பிரமனுக்கு நிகழ்ந்த யாவும் முறையிடக் கொனறை மலர் மாலையர் அவர்தம் முகங்களை நோக்கி அப்பிரமன் கூறியபொருள பிழையாகலின விளம்பிய வகைஎனனே! நம்மையும், நம் புதல்வனையும் அல்லவோ பெருமை மிகுந்த புகழ்ச்சியையுடையவேதங்களெல்லாம் பிரணவத்தின் பொருளாக விளம்பு முறையாகும்.

இதனால் நாமும் முருகப் பெருமானும் அபேத மென்பதனைப் புலப்படுத்தி உண்மையும உபசாரமும் ஆகிய இவற்றைக் கருத்திற் கொள்ளாது நம்மொடும் சமமென எண்ணும் பிரமனின் அறி வினமையையும உணர்த்தி அருளினர்.

"எக்கலைக்கும் பூதங்கள் எவற்றினுக்கும் பிரமனுக்கும் ஈசன்என்னத், தக்கமுதல் பரப்பிரமம் சதாசிவன்ஓம்" என-வேதம் சாற்றும் அல்லால், முக்கனல்சூழ் வேள்வியிற்சுப் பிரமணியன் ஓமெனவும் முக்காற் கூறும், இக்கருத்தைஅறியானை எவ்வாறு விடுவிப்ப தியம்பு மின்னே. 16

எல்லா மறைகளுக்கும், எல்லாப் பூதங்களுக்கும், பிரமனுக்கும் ஈசன் என்னத்தக்க முதல்வனும் பரப்பிரமமும் ஆகிய சதாசிவன் ஓம் என்று வேதம எடுத்து முழங்கும் அன்றியும், முத்தீ வேள்வி பயிலும் முறைகள் 'சுப்ரஹ்மண்யோம்' சுப்ரஹ்மண்யோம்!! சுப்ரஹ்மண்யோம்!!! என்றிங்ஙனம் மும்முறை கூறும் இதன் தாற்பரியத்தை உணராத குற்றவாளியாகிய பிரமனை எவ்வாறு சிறையினின்றும் விடுவிப்பது கூறுங்கோள,'

அருள்வலியால் ஆங்கவனை விடுவித்தும் அஞ்சேன்மின்
என்று கூறித், திருநந்தி நாயகனை எதிர்நோக்கி அறுமுகன்பால்
சென்று முற்றுந், தருகின்றான் றனைவிடுமோ வெகுளேல்என்
றெம்முரையாற் சாற்றித் தேன்பாய், மருவொன்று மலரோனை
விடுவித்து நம்மாட்டுக் கொணர்தி என்றார். 17

பெருங் கருணை வலிமையால் அப் பிரமனைச் சிறைவீடு செய்வோம். அஞ்சலிர், என்றருளித் திருநந்தி நாயகனை நேர்நோக்கி 'ஆறுமுகனபால் சென்று முற்றும் படைப்போனை விட்டிடு வெகுளாதே, என்று எம்முடைய வாக்காகக்கூறி விடுவித்துப் பிரமனை இங்குக் கொண்டு வருதி' என்றேவினர்.

வேத்திரத்தின் படையாளி விடைகொண்டு வேற்படை-
யோன் உலகம் நண்ணி, மாத்தடிந்த பெருமானைத் தொழு-
திறைஞ்சி எங்கோவே மழுவாள் எம்மான், பூத்தவிசிற் புத்தேளை
நீவிடுமா றருள்செய்தான் என்று போற்றி, ஏத்தும்வழி அறுமுக-
வேள் இதழ்அதுக்கி வெகுளுதலும் வெருவி மீண்டான். 18

பிரம்புடைய நந்திதேவர் விடை பெற்றுச் சென்று கந்த லோகத்தை அடைந்து சூரபன்மனாகிய மாமரத்தைப் பிளந்த பிரானைத் தொழுது வணங்கி 'எம்மரசே! மழுப்படை எம்மான் பிரமனை நீவிர் விடுமாறென்னை விடுத்தனர், என்றுகூறிப் போற்றித் துதிசெய்யும்வழி ஆறுமுகப் பிரானார் உதட்டை மென்று கோபங் கொள்ளுதலும் அஞ்சி மீண்டனர்.

பிஞ்ஞகனின் திருவாணை விண்ணப்பஞ் செயச்சிறிதும்
பேணானாகி, மஞ்ஞையான் சினவுதலின் வெரீஇப்பெயர்ந்தேன்
எனநந்தி வள்ளல் கூற, மொய்ஞ்ஞிமிறு முரல்பூந்தார்க்
கடவுளரும் முனிவரருங் கேட்டுத் தம்முள், கைஞ்ஞெரித்தார்
வெருக்கொண்டார் இறையவனே காவாய்என் றடியில் வீழ்ந்தார்.

'தலைக்கோலம் உடையோய்! நின்னுடைய திருவாணையை முறையிடச் சிறிதும் போற்றாராய் மயிலேறும பெருமானார் வெகுளுதலின், அஞ்சி மீண்டேன்' என்று திருநந்திதேவர் விடைகூற மொய்க்கின்ற வண்டுகள் ஒலிக்கின்ற மாலையை யணிந்த தேவரும், முனிவரும் கேட்டுத் தமக்குள்ளே கையைப் பிசைந்து கொண்டனர்; அஞ்சினர். இறைவனே! காப்பாய்' என்று திருவடியில் வீழ்ந்தனர்.

சயிலாதி வாய்மொழியும் சுரர்முனிவர் மனத்துயரும்
தனைசால் வெள்ளிக், கயிலாயத் தெம்பிரான் திருவுளத்திற்
கொண்டருளிக் கருணை கூர்ந்து, மயிலாலும் மலைமகளோ டெழுந்
தங்கண்மகவிருப்பால் எய்த நோக்கி, அயிலாளுந் திருக்கரத்தான்
விரைந் தெதிர்சென் றடிவணங்கிப் போற்றி நின்றான். 20

திருநந்திதேவர் வாக்கையும், தேவர் முனிவரர் தம் மனத் துன்பத்தையும் திருவுள்ளத்திற் கொண்டு கயிலாயபதி கருணைமீக் கூர்ந்து மயில்கள்ஆடும் மலையரையன் மகளாருடன் புத்திர வாஞ்சையால் கந்தலோகத்தை எய்த வேற்படைப் பிரானார் எதிரில் விரைந்து போய் அடியிணைகளிற் பணிந்து நின்றனர்

அனையானை இருவர்களும் மடித்தலமீ திருத்திமகிழ்ந் தன்பு கூரக், கனிவாயின் முத்தங்கொண் டுச்சிமோந் தகங்கனியத் தழீஇய பின்னர், எனையாளுஞ் சிவபெருமான் குறுமூரல் எழில்-காட்டி மேனி தைவந், துனைஓரா வேதியனைச் சிறைவிடுத்தி மைந்-தாஎன் றுரைத்துப் பின்னும். 21

அத் தன்மையரை இருமுது குரவரும் மடிமிசை இருத்தி மகிழ்ந்து பேரன்பு வெளிப்படக் கொவ்வைக் கனியை ஒக்கும் வாய் முத்தம்உண்டு உச்சியைமோந்து உள்ளம் நெகிழ அணைத்தபின்னர் என்னை அடிமைகொள்ளும் சிவபிரானார் புன்முறுவல் பூத்துத் திரு மேனியைத் தடவிக்கொடுத்து 'மைந்தனே! உனது' தன்மையை அறிந்து கொள்ளும் வலியில்லாத பிரமனைச் சிறையினின்றும் விடுதலைசெய்', எனத் திருவாய் மலர்ந்து மேலும்,

முருகக் கடவுள் காஞ்சியை அடைதல்

நம்மாணை கடந்தனையால் அன்னதற்குக் கழுவாய்நீ நயத்-தல் வேண்டும், வெம்மாயம் அணுகரிய திருக்காஞ்சி நகர்வரைப்-பின் மேவி அன்பின், அம்மாடே சேனுப தீச்சரம்என் றோர்-இலிங்கம் அருச்சித் தேத்திக், கைம்மாணத் தவம்புரிநி என்றருளக் கேட்டெழுந்தான் கடப்பந் தாரான். 22

'நம்முடைய கட்டளையை நிறைவேற்றாமையால் உண்டாகிய குற்றத்திற்குத் தீர்வு விரும்பி மேற்கொள்ள வேண்டும். கொடிய வஞ்சனைகள் நெருங்காமைக்கு இடனாகிய திருக் காஞ்சியைச் சேர்ந்து அவ்விடத்தே அன்பினால் சேனாபதீச்சரப் பிரானாரை நிறுவிப் பூசனையைப் புரிந்து ஒழுக்கம் மாட்சிமைப்படத் தவத்தைச் செய்', என்றருளக் கடப்ப மலர்மாலையை அணிந்த முருகப்பிரானார் இசைவு பெற்றெழுந்தனர்.

திசைமுகனைக் கணங்களாற் சிவபெருமான் திருமுன்னர்ச் செலுத்தி உள்ளப், பசையின் இருமுதுகுரவர் அடிவணங்கி விடை-கொண்டு பழனக் காஞ்சி, வசைகடந்த நகர்எய்தி உலகாணித் தடமேல்சார் மாகா ளப்பால், இசைவிளங்கு தேவசே னுபதீச் சரஇலிங்கம் இருத்திப் போற்றி. 23

பிரமனைச் சிறைவீடு செய்து சிவபிரானார் திருமுன்பு போக்கி விருப்புடன் தாய்தந்தையர் திருவடிகளிற் பணிந்து விடைகொண்டு புகழ்

படைத்த காஞ்சியை எய்தி உலகாணித் தீர்த்தத்திற்கு மேற்றிசையில் மாகாளேசத்திற்கு அயலே புகழின் விளங்கு தேவசேனாபதீச்சர இலிங்கத்தைத் தாபித்துப் போற்றுதலைப் புரிந்து,

புள்ளிமான் தோல்உடுக்கை முஞ்சிநாண் அரைப்பொலிய
அக்கமாலை, தெள்ளுநீர்க் குண்டிகையுங் கரத்தொளிரத் திருக்-
குமர கோட்டம் என்னும், உள்ளியோர் பிறப்பறுக்கும் ஆச்சிரமத்
தினிதிருந்தான் உறுவர் போற்ற, வள்ளியார் இணைக்களப
மணிக்கலச முலைதிளைக்கும் வாகைத் தோளான். 24

வள்ளியம்மையார் தோளைத் தோயும் போக மூர்த்தியாம் வெற்றி மாலைசூடிய முருகப்பிரானார் புள்ளிகளையுடைய மானதோல் உடையாகவும் தருப்பையான் ஆகிய கயிறு அரைநாணாகவும் அமைந்து இடையிற் பொலியவும், உருத்திராக்க வடமும், தெள்ளிய நீரையுடைய கமண்டலமும் திருக்கைகளில் விளங்கவும் 'குமரகோட்டம்' என்னப்பெறும நினைத்தவர் பிறப்பறுதற்கு ஏதுவாகிய தவசசாலையுள் முனிவரர் சூழ்ந்து போற்ற இனி திருந்தனர்.

பிரமனைச் சிறையிட்டுப் படைத்தற் றொழிலைச் செய்த இப்பிரமசரிய கோலத்துடனே குமரகோட்டத்தில் எழுந்தருளி யுள்ளனர்.

குருமணிகள் வெயில்எறிப்பக் குயிற்றுநீள் மதிற்குமர
கோட்டம் ஓர்கால், திருவிழியிற் காண்டல்பெறின் கடையோரும்
எழுபிறப்பின் மறையோ ராவர், திருமறையோர் முதலானோர்
தொழுதிறைஞ்சப் பெறுகிற்பின் தேவர் தேறாப், பொருள்-
நிலைமை தெளிந்தின்பப் பெருவீட்டிற் பரபோகம் திளைத்து
வாழ்வார். 25

நிறமுடைய மணிகள் ஒளிவிடுமாறு பதிக்கப்பெற்று நீண்ட மதிலையுடைய திருக் குமரகோட்டம் என்னும் தலத்தை ஓர்முறை இருவிழிகளாலும் காணப் பெற்றாலும் கடைக் குலத்தோரும் ஏழு பிறப்பினில் அந்தணராய்ப் பிறப்பர். வேதியர்முதலாம் வருணத்தோர் தொழுது துதிப்பாராயின் தேவர்க்கும் தெளியலாகாத உண்மைப் பொருளின் நிலைமையைத் தெளிந்து வீடுபேற்றினை எய்திப் பரபோகமாகிய பேரின்பத்தில் மூழ்கி வாழ்வர்.

கறங்கருவிப் பொலங்குடுமி வரைகிழித்த நெட்டிலைவேற்
கடவுள் போற்றப், பிறங்கியஇத் தேவசே னாபதீச் சரமுதலைப்
பொற்பின் ஏத்தி, மறங்குலவுஞ் சுடராழி வலன்ஏந்து மால்உருகும்
உள்ளத் தானொன், றறங்கரைவார் எடுத்துரைக்கும் ஒருதிருப்-
பேர் பெற்றுன்அம் முறையுஞ் சொல்வாம். 26

கிரௌஞ்ச மலையைப் பிளந்த வேலவர் தாபித்துப் போற்ற விளங்கிய இத் தேவசேனாபதீச்சரப் பெருமானை விருப்பொடும் துதி செய்து வீரம திகழும் சுடரையுடைய சக்கரத்தை வலத்தில் ஏந்திய திருமால் 'உருகும் உள்ளத்தவர்' என்று அறமுதற் பொருள்களை உலகிற்கு உணர்த்தும அந்தணர்கூறும் ஒப்பற்ற திருப்பெயர் பெற்றனர். அவ்வரலாற்றையும் கூறுவோம.

மாப்பேருழி

கலிநிலைத் துறை

முள்ள ரைச்செழுந் தாள்மலர் முளரிவீற் றிருக்கும்
வள்ளல் கற்பம்ஒன் றிறுதலும் யாவையும் மலங்கப்
பொள்ளெ னப்பரந் துலகெலாம் விழுங்கிய புணரி
வெள்ள நீர்மிசை மிதந்தனன் மார்க்கண்டி மேலோன். 27

முட்களையுடைய தாமரை மலரில்இருக்கும் பிரமகற்பம் ஒன்று தோன்றுதலும் யாவும் அழியுமாறு விரைந்து பரவி உலகைமுற்றவும் மூடிக்கொண்ட கடல்நீர்ப் பெருக்கினமேல் மார்க்கண்டேயர் மிதந்தனர்.

தனிய னாகிவெஞ் சலதியின் உழிதரும் தகைசால்
புனித மாதவன் ஆயிடைப் பொறிஅராத் தவிசின்
இனிது கண்வளர் மாயனைக் கண்டுசென் றிறைஞ்சி
நனிம கிழ்ச்சிமீக் கிளர்ந்தெழு மனத்தொடு நவில்வான். 28

துணையின்றித் தனியனாய்க் கொடியநீர்ப் பரப்பில் உழலும் தகுதி நிரம்பிய தூய பெருந் தவத்தவன் அவ்விடத்தில் புள்ளிகளையுடைய ஆதிசேடனாகிய பாயலில் இனிதே அறிதுயில் செய்யும திருமாலைக் கண்டு நெருங்கி வணங்கிப் பெருமகிழ்ச்சி மேற்பொங்கியெழும் உள்ளம் உடையவராய்க் கூறுவர்.

நகைம லர்த்துழாய் நாயக ஞாலம்மற் றெவையும்
இகல்செய் வெங்கதிர்ச் சண்டமாப் பரிதிநின் றெரிப்பத்
துகள்ப டுஞ்செயல் கண்டயான் அத்துணைப் பொழுதின்
இகழ ருந்திறல் அறிவுபோய் எய்தினன் மயக்கம். 29

அவிழ்ந்த துழாய் மலர்மாலையை அணிந்தநாயகனே! உலகினும், பிற இடங்களினும் ஒளியைச் செய்கின்ற சூரியன் கொடுங் கிரணங்களைப் பரப்பி மிண்டும் வேகமும், கொடுமையும் உடைய யுகாந்தகாலச் சூரியனாய்நின்று எரித்தலான் நீறுபட்ட செயலைக் கண்ட யான் அப்பொழுதில் புகழ்தற்குரிய வலியுடைய அறிவும் திரிந்து மயக்கம் அடைந்தேன்.

சண்டமாப் பரிதி தக்கேசப்படலம் 35 ஆம்செய்யுளிற் காண்க.

ஏய்ந்த மையல்தீர்ந் திதுபொழு துணர்ச்சிவந் தெழுந்தேன்
காந்து வெம்புனற் கடுந்திரைப் பரப்பிடை மிதந்து
நீந்தி நீந்திஎன் நெடியகால் கரங்களும் மெலிந்தே
ஏய்ந்த நல்வினை இருந்தவா றுனைஇவண் கண்டேன். 30

'மேவிய மயக்கம் நீங்கி இப்பொழுது தெளிந்தேன். சுடுகின்ற வெம்மையையுடைய நீரிற் சண்டவாயுவால் எழுப்பப்படும் பெருந்திரை வெள்ளத்தில் மிதந்து நீந்தி நீந்திக் கால்களும் கைகளும் மெலிந்தன. முன்னர்ச் செய்த நல்வினை பயன் கைகொடுத்தமையால் இங்கு உன்னைக் கண்டேன்'.

நிலம டக்கொடி வனமுலை திளைக்கும்நீள் மார்ப
உலகம் எங்கணும் கருகிருள் மூடிய துரவோய்
இலகு பேரொளி இருசுடர் யாங்ஙனம் போய
குலவும் ஏனைய கோளொடு நாள்கள்எங் கிறந்த. 31

'பூமி தேவிக்கு நாயகனே! உலகமுழுதையும் பேரிருள் விழுங்கியது. அறிவுடையோனே! விளங்குகின்ற பேரொளியை விரிக்கின்ற சந்திர சூரியர் என்பட்டனர். நவகோள்களும் நட்சத்திரங்களும் பிறவும் எங்குக் குடிபோயின.

சகமி சைப்பயில் பொருளெலாம் எவ்வுழிச் சார்ந்த
திகழ நீஎனக் கிவையெலாந் தெரித்திஎன் றிரப்ப
நிகழும் மாதவன் மாதவன் றன்னைநேர் நோக்கி
அகலி டத்துள பொருளெலாம் என்அகட் டுளவால். 32

'உலகிற் கிடந்த பொருள்கள் யாவும் எங்கு இடம் பெற்றன. இவை முற்றவும் விளங்க எனக்கு உணர்த்துதி' என்று குறையிரப்ப விளங்கும் திருமகள் நாயகனுர் மார்க்கண்டேயரை எதிர்நோக்கிப் பரவிய உலகப் பொருள்கள் எல்லாமும் என் வயிற்றிடை உள்ளன.

மார்க்கண்டேயர் மாயனை மொழிதல்

புகுந்து நோக்குதி என்றலும் முனிவரன் புகல்வான்
முகுந்த முன்ஒரு கற்பத்தும் மொழியினு லன்றே
மிகுந்த வஞ்சனைப் படுத்தனை விளைமதுப் பிலிற்றி
நகுந்த டம்பொகுட் டம்புய வாழ்க்கைநான் முகனை. 33

'உட்புகுந்து காணுதி' என்னலும், மார்க்கண்டேயர் கூறுவார். 'முகுந்தனே! முன்னம் ஓர் பிரளய காலத்தில் இவ்வஞ்சக மொழியினு லல்லவோ செவ்வித்தேனைச் சிந்தும் தாமரை மலரவனை மிக்கதோர் வஞ்சக வலையில் அகப்படுத்தனை.' ஓர் கற்பத்திற் பிரமன் திருமாலின் வாய் வழிப்புகுந்து வழிபெறுது வருந்தி உந்தி வழி வெளிவந்தனன்.

முனைக டந்தவேல் மணிமுடி அம்பரீ டன்றன்
மனையில் நார தப் பருப்பத முனிவரை வஞ்சித்
தனைய மன்னவன் புதல்வியைக் கவர்ந்துகொண் டகன்றாய்
இனைய மாவலி தனக்குமுன் வஞ்சனை இழைத்தாய். 34

'பகைவரை வென்றடக்கிய வேலும் மணிமுடியும் தாங்கிய அம்பரீடனிடத்து நாரதர் பருப்பத முனிவர் இருவரையும் வஞ்சித்து அம்மன்னவன் புதல்வியைக் கைக்கொண்டு போனாய். மாவலி வருந்த வஞ்சகம் புரிந்தனை.' அம்பரீடன் மகளைத் தாம் தாம் மணக்க விரும்பிய நாரதர் பருப்பதருக்குக் குரங்கு முகமும், பருப்பதர் நாரதருக்குக் கிழ முகமும் உண்டாகத் திருமாலிடம் வரம் பெற்று அரசன் மகள் முன்னர் அவ்வாறு மாறுகையில் கதுமெனத் திருமால் தோன்றி மணமாலை தமக்குச் சூட்டப் பெற்றனர்.

இன்ன வாறுனை நம்புநர் அடியவ ரிடத்தும்
துன்னு மாயமே செய்வதுன் தொழிலெனக் கண்டேன்
நின்னை அஞ்சுகேன் நெறிக்கொடு செல்வன்என் றியம்பி
அன்ன நீரினைக் கரங்கொடு நீந்திஅங் ககன்றான். 35

'உன்னை நம்புவோரிடத்தும், அடியவரிடத்தும் இவ்வாறு செறிந்த வஞ்சனையே செய்வ துன் தொழிலென அறிந்தேன். நின்னை வெருவுகின்றேன். ஆகலின், வழிக்கொடு போவேன்' என்று கூறி நீரினைக் கையால் நீந்தி அங்கு நின்றும் அகன்றனர்.

மார்க்கண்டேயர் காஞ்சியையடைதல்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

செல்லும் எல்லை நீர்மிசைத் தோன்றும் வேத மாஞ்சினைப்
பல்ல வங்கள் கண்டவை பற்றி உள்இ ழிந்தனன்
ஒல்லை அங்கண் நோக்கினன் ஒளிப்பி ழம்பின் நீடிய
மல்லல் அம்பொன் இஞ்சிசூழ் மாடக் காஞ்சி மாநகர். 36

மேற்செல்கையில் நீர்மேற் புலப்படும் வேதமாமரத்தின் கிளையிடைத்தளிர்களைக் கண் டவற்றைப் பற்றி உள்ளே மார்க்கண்டேயர் இறங்கினர். ஒளித்திரட்சியினால் நீண்ட வளமுடைய அழகிய பொன்னாலியன்ற மதில் சூழ்ந்த மாடங்களைக்கொண்ட காஞ்சி மாநகரை விரைவில் அங்குக் கண்டனர்.

எற்று தெண்டி ரைப்புனல் இஞ்சி யின்வ ளைப்பவெண்
புற்பு தத்தின் உள்வெளிப் பொற்பெ னத்தி கழ்ந்துநீள்
ஒற்றை மாவி னூர்அரு ளொளிது லும்ப மன்னும்ஊர்
அற்பு தத்தை நோக்குதோ றற்பு தத்த னாயினன். 37

திரைக்கரங்களால் எற்றுகின்ற தெள்ளிய புனலை மதில் உட் புகாது சூழ்ந்து காத்தலின்நீர்க்குமிழியின் உள்ளிடு வெளிபோலப் பொலிவொடு திகழ்ந்து நீண்ட ஒற்றை மாமரத்தடியில் எழுந்தருளியுள்ள திருவேகம்பர் திருவருள் விளக்கம் ததும்ப அழிவின்றி நிலைபெறும் ஊர் விம்மிதத்தை எண்ணுந்தொறும் விம்மிதம் உடையராயினர்.

அற்புதம், சலப்பிரளயத்தில் அழியாமை.

அங்கண் எய்ப்பு நீத்தபின் அண்ணல் நம்ப வாணரை
உங்கண் எய்தி அர்ச்சனை உளுற்றி அவ்வி ராவெலாந்
துங்க மாவின் நீழல்வாழ் சோதி முன்னர் வைகினன்
சங்கம் ஆழி ஏந்தியோன் ருனுந் தொடர நண்ணினன். 38

மேலும், அம்முனிவர்அங்கு இளைப்பாறிய பின்னர்த் தலைவராகிய திருவேகம்ப நாதரை ஆங்கெய்தி அருச்சனை புரிந்து அப்பிரளய இரவு முழுவதும் தூய வேதமாமரத்தின் அருள் நிழலில் எழுந்தருளியுள்ள பேரொளிப் பெருமான் திருமுன்னர் இருந்தனர். சங்கு சக்கரங்களைத் தாங்கிய திருமாலும் தொடர்ந்து நண்ணினர்.

திருமால் வரம்பெறுதல்

நண்ணும் நெறியிற் காஞ்சிமா நகரம் எய்தி அந்நகர்
வண்ணம் முற்றும் அற்புதம் மருவ நோக்கி மாநிழல்
அண்ண லாரை ஏத்திஅம் முனிவன் சொன்ன யாவையும்
எண்ணி எண்ணி நெஞ்சுளைந் தென்நி னைந்த வாறெனு. 39

போம்வழியிற் காஞ்சியை எய்தி அந்நகரில் உள்ள அழகிய விம்மிதங்கள் அனைத்தினையும் ஊன்றி நோக்கி மாவடியில் எழுந்தருளியுள்ள திருவேகம்பநாதரைப் போற்றி மார்க்கண்டேயர் இகழ்ந்துரைத்தன பலவற்றையும் பல முறையும் எண்ணி மனம் அழிந்து 'என் நினைந்தேன்! என் செய்தேன்!!' என்று வருந்தி,

சேர்ந்த வர்க்கு வஞ்சமே நாள்தொ றுஞ்செய் கின்றனேன்
வார்ந்த கூந்தல் அம்பிகை மாயை யின்ம யங்கினேன்
நேர்ந்த மாயம் நீக்குமா நீள்வ ரைப்பி ராட்டிதாள்
சார்ந்து போற்று வேனெனத் தனிப்பி லத்தை நண்ணினன்.

'அடுத்தவர்க்கு வஞ்சகச் செயலையே நாடொறும் செய்கின்றேன் அம்மையாரால் தொழிற்படும் மாயையிற்பட்டு மயங்கினேன். தொடக்குண்ட மாயையை வெல்லும் பொருட்டு மலைமகளாருடைய திருவடிகளைப் போற்றுவேன்' என் றுறுதிபூண்டு ஒப்பற்ற காமக் கோட்டத்தில் உள்ள பிலத்தை நெருங்கினர்.

ஆயி டைப்பி ராட்டியை அருச்சித் தேத்தி அருளினுன்
மாயம் நீங்கி மெய்யுணர் வெய்திப் பஞ்ச வாவிநீர்
ஏயமூழ்கித் தேவசே ஞப நீசத் தேகிஅந்
நாய ஞரை விதியுளி நயந்து பூசை ஆற்றினன். 41

அங்குக் காமாட்சி தேவியை அருச்சனை செய்து அருள் பெற்று மாயை நீங்கி மெய்யுணர்வைப் பெற்று உலகாணித் தீர்த்தத்தில் பொருந்த மூழ்கித் தேவசேனுபதீச்சரப் பெருமானைச் சார்ந்து விதிப்படி விரும்பிப் பூசனை புரிந்தனர்.

கருணை கூர்ந்து நம்பனர் காட்சிதந் தளித்தலும்
பரசி ஏத்தி நின்னடிப் பத்தி மாறி லாவ்ரம்
அருள வேண்டும் மெய்த்தவர் அடியர் மாட்டு வஞ்சனை
ஒருக ணத்தும் எண்ணிடா உளம்எ னக்கு வேண்டுமால். 42

நம்பனர் காட்சி தரலும் பரவிப் போற்றி ' நின்னடிக்கண் என்றுந் திரிபில்லாத பேரன்பு வேண்டும். உண்மைத் தவமுடையார், அடியவர் ஆகிய இன்னோர் மாட்டு வஞ்சகச் செயல் ஒருகண நேரமும் எண்ணுத உளமும் எனக்கு வேண்டும்.'

ஈண்டு நின்பு தல்வனோ டெந்தை திருமுன் வைகவும்
வேண்டும் என்றி ரந்துவிண் ணப்பஞ் செய்ய வெண்பிறை
நீண்ட செஞ்ச டைப்பொதி நிரும லப்ப ரம்பொருள்
ஆண்ட கைப்பி ரான்மகிழ்ந் தன்ன வாக என்றுபின். 43

இங்கு நின் புதல்வராகிய முருகப்பிரானுருடன் சந்நிதியில் இருக்கவும் அருள் செய்தல் வேண்டும்' என்றிரந்து வேண்டப் புனிதனர் அவர்க்கு அவற்றை வழங்கி, பின்பு,

என்றும் அன்பின் ஏகிநீ உருகும் உள்ளக் கோயிலான்
என்று நாமம் எய்துகென் றருளி இறைவன் நீங்கினன்
குன்றெ டுத்து மூந்துகோ நிரைகள் காத்த குரிசிலும்
மன்றல் வெட்சி மாலையான் அருளின் அங்கண் வைகினன். 44

என்றும் பேரன்புடையனுய் 'உருகும் உள்ளத்தான்' என்று திருப்பெயர் எய்துக' என அருள் செய்து பெருமானர் திருவுருக் கரந்தனர். முன்னுள் கோவர்த்தன மலையைக் குடையாகக் கொண்டு பசுக்களைக் காத்த திருமாலும் மணமுடைய வெட்சி மாலையை அணிந்த முருகப் பெருமான் அருளும் பெற் றவ்விடத்தே தங்கினர்.

கூறும் இனைய மேன்மைசால் குமர கோட்ட வைப்பினிற்
பாறு நச்சு வேலினன் பாதம் அங்கி அநிலநாள்
வேறு நாற்றி னங்களில் விரும்பிச் சென்றி றைஞ்சினோர்
பேறு முற்றும் யாவரே பேச வல்ல நீர்மையார். 45

சொல்லப்பெறும் இத்தகைய மேன்மை நிரம்பிய குமரகோட்டம் என்னும் தலத்தில் பருந்துகள் விரும்புகின்ற வேலேந்திய முருகப் பெருமானுர் திருவடிகளைக் கார்த்திகை, விசாக நாள்களிலும் மேலும் நான்கு தினங்களிலும் போய் விரும்பி வணங்குவோர் பெறும் பயனை யாவரே முற்றவும் கூற வல்லவர் (ஒருவருமிலர்).

குமரகோட்டப்படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - 1831.

---

# மாசாத்தன் தளிப் படலம்

---

அறுசீரடி யாசிரிய விருத்தம்

நறைகொப் புளிக்கும் நறும்பொகுட்டு நளின வாழ்க்கைப் புத்தேளைச், சிறையிற் புகுத்தும் பெருமானுர் குமர கோட்டச் சிறப்புரைத்தாம், நிறையப் பூத்த மலர்ப்பொதும்பர் நீடும் அதற்-குத் தென்திசைக்கண், முறையின் திகழும் மாசாத்த முதல்வன் தானம் எடுத்துரைப்பாம். 1

தேனையுமிழும் தாமரை மலரில் வாழும் பிரமனைச் சிறையிற் செலுத்தும் சிறப்பினையுடைய முருகப்பெருமானுர் எழுந்தருளியுள்ள குமரகோட்டத்தின் வரலாற்றினை உரைத்தோம். சோலைமிகும் அதற்குத் தென்திசையில் விதிப்பட விளங்கும் மாசாத்த முதல்வரது இருக்கையை எடுத்தோதுவோம்.

சுராசுரர் கலகம்

வைவாள் எயிற்றுத் தானவரும் வானுட் டவரும் மந்தரத்திற்
பைவாய்த் தாம்பு பிணித்தீர்த்துக் கடைந்த ஞான்று பரவைஎழும்
வெவ்வாய் நஞ்சம் மிடற்றடக்கி வெருவா தளித்த பெருங்கருணை
ஐவாய்ப் பணிப்பூண் பெருமானுர் அருளான் மீளக் கடைந்தவழி.

கூரிய வாளைப்போலும் பற்களையுடைய அசுரரும், விண்ணேரும் மந்தர மலையையும், படமுடைய வாசுகியையும் கொண்டு கடைந்த பொழுது பாற்கடலில் எழுந்த கொடுமை வாய்த்த விடத்தினைக் கண்டத்தில் அடக்கி அஞ்சாதபடி அருள் செய்த பேரருளையும் ஐந்தலைப் பாம்பணியும் உடைய பிரானுர் அருளைப் பெற்றுக் கடைந்தபோது,

சேட்டை அணங்கு திருமணிஆன் தெய்வ மகளிர் மருத்-துவர்நாற், கோட்டு மதமா முதல்பலவும் குரைநீர்க் கடலுள் தோன்றியபின், வாட்டும் இறவிப் பெரும்பிணிக்கு மருந்தா அமிழ்தந் தோன்றுதலும், வேட்ட விண்ணேர் அவுணர்களும் தம்முட் கலாங்கள் விளைத்தனரால். 3

மூதேவி, திருமகள், சிந்தாமணி, காமதேனு, அரம்பையர்கள், தேவ வைத்தியர், நான்கு தந்தங்களையுடைய மதம் பொருந்திய ஐராவதம் முதலாம் பலவும் ஒலிக்கின்ற கடலினுதித்த பின்பு வருந்துகின்ற இறப்பு என்னும் பெரிய நோய்க்கு மருந்தாகிய அமிழ்தம் தோன்றிய அளவே விரும்பிய தேவர்களும் அசுரர்களும் தம்முள் மாறுபட்டுக் கலகத்தை விளைத்தனர்.

திருமால் மோகினி வடிவாதல்

ஆற்றல் மிகையாற் சுதைக்குடத்தை அடல்வாள் அவுணர் கைப்பற்றத், தோற்று மறுகிப் புத்தேளிர் அலமந் தேங்குந் துயர்நோக்கிக், காற்றும் பிரச நறுந்துளவக் கமஞ்சூற் கொண்டல் இணைவிழிக்குக், கூற்றம் பதைக்கும் மோகினியாம் வடிவம் ஆங்குக் கொண்டனனால். 4

வலியமைந்த வாளுடைய அவுணர் தம்முடைய வலிமை மிகுதியால் அமுதுடைக் குடத்தைக் கைக்கொள்ளத் தேவர் தோல்வியுற்று வருந்தி மனஞ்சுழன்று இரங்குந் துன்பத்தைக் கண்டு தேனை ஒழுக்கும் நறிய துளவம் அணிந்த நிறைந்த கருக்கொண்ட மேகத்தை ஒக்கும் திருமால் இருவிழிகளைக் கண்டு கொலைத் தொழில் வல்ல கூற்றுவனும் நடுங்கும் மோகினி என்னும் பெண் வடிவினை அந்நிலையே தாங்கினர்.

கலி விருத்தம்

இரண்டறப் பெண்மையும் எழிலும் வஞ்சமும்
திரண்டுருக் கொண்டெனத் திகழ்ந்து தோன்றிமால்
முரண்தகும் அவுணர்கைக் கொண்ட மூரிநீர்
வரண்டுமா மணிக்கடல் அமிர்தம் வாங்கினான். 5

பெண்ணியல்பும், அழகும், வஞ்சனையும் ஒன்று படத் திரண்டு ஓர் வடிவு கொண்டாற்போல விளங்கித் தோன்றித் திருமால், வலியமைந்த அசுரர் கைப்பற்றிய வலியுடைய நீரில் கொழிக்கின்ற பெருமையுடைய மணிகளையுடைய கடலிற் பெற்ற அமிழ்தை வாங்கினர்.

வாங்கினின் றசுரருஞ் சுரரும் வல்லையே
ஆங்கநீர் நிரைநிரை யாக வைகுமின்
ஈங்குநல் லமிழ்தம்எல் லீர்க்கும் வேட்டவா
பாங்குறத் தனித்தனி பகுந்து நல்குகேன். 6

பெற்று 'அசுரரே! சுரரே! நீவிர் எல்லீரும் விரைந்து வேறு வேறுக வரிசை பெற இருந்திடுமின். இப்பொழுது நல்லமிழ்தத்தை இருசார்பினீராகிய எல்லீர்க்கும் விரும்பியவாறு தனித்தனியே பகிர்ந்து ஒழுங்குபட வழங்குவேன்.'

வேல்விழி மாதர்யான் வீழ்ந்து ளார்பெறச்
சாலநல் குவல்எனச் சலதிச் சேக்கைவாழ்
வால்வளைக் குடங்கையான் மகிழக் கூறலும்
கோல்வளைத் திதிமைந்தர் குறித்து நோக்கினர். 7

'வேலை ஒக்கும் விழியினை யுடைய மாதராகிய யான் விரும்பி யோர் பெறுமாறு அமையக் கொடுப்பேன்' என்று கடலை இருக்கை கொண்டு வாழும் வெள்ளிய பாஞ்ச சன்னியத்தை அகங்கையிற் கொண்ட திருமால், திரண்ட வளையினை அணிந்த திதி மைந்தராகிய அசுரர் மனமகிழும்படி உரைத்தலும் அவர்கள் மோகினியின் உறுப் பழகை ஊன்றி நோக்கினர்.

மோகினியின் முற்றுருவப் புனைவு

எழுசீரடி ஆசிரிய விருத்தம்

கலிதிரை முகந்த சூல்முகில் விளர்ப்பக் கடைகுழன் றிருண்டுநெய்த் தொழுகிப், பொலிவுற மகரம் வலம்புரி திருத்தி எல்கிடை தொட்டபூங் குழலைக், குலிகநீர் அளவி மழவிளம் பரிதிக் குரூஉச்சுடர் உரிஞ்சிய காட்சி, இலகொளித் தேய்வை அரும்-பெறல் திலகம் இட்டகீற் றிளம்பிறை நுதலை. 8

கடல் நீரைப் பருகிய கருக்கொண்ட மேகம் வெளிறுபட இருண்டு கடை வளைந்து நெய்யால் ஈரிதாய் நீண்டு விளக்கம் பெறச் சுறாமீன் வலம்புரி ஆகிய இவற்றின் வடிவுடைய அணிகளை உரிய இடங்களில் இருத்தப் பெற்று மகிழ்ந்து இடையைத் தொட்டு நீண்ட மலரையுடைய கூந்தலையும், குலிக நீரைக் கலந்து மிக்கிளைய சூரியனின் செந்நிற முடைய சுடர் தங்கிய தோற்றமுடைத்தாய் ஒளியுடைய தேய்த்துக் கொண்ட சந்தனத்தால் ஆகிய பிறிதொன்றற்கில்லாத சிறப்புடைய திலகம் தீட்டிய இளம்பிறைக் கீற்றினை ஒத்த நெற்றியையும்,

மாற்றரு மதுகை ஐங்கணைக் கிழவன் வாங்கிய நறுஞ்-சுவைத் தேறல், காற்றுவெஞ் சிலைக்குச் சிலைத்தொழில் பயிற்றுங் கட்டெழிற் புருவமென் கொடியைச், சீற்றவல் விடமும் அமிழ்தமும் விரவிச் சிதர்அரி பரந்துமை தோய்ந்து, கூற்றர சிருக்கும் இணைவிழி களவு கொள்ள நோக் கிடுஞ்சிறு நோக்கை. 9

வெல்லற்கு அரிய வலியமைந்த ஐந்து மலரம்புகளுக் குரிய மன் மதன் வளைத்த நறிய சுவையையுடைய சாற்றினை உமிழும் கரும்பாகிய கொடிய வில்லிற்கு விற்றொழிலைக் கற்பிக்கும் பேரெழிலுடைய புருவ மாகிய மெல்லிய ஒழுங்கையும், பொங்கி யெழுகின்ற கொடிய விடமும் அமிழ்தமும் கலந்து சிதர்ந்த வரிகள் பரவி மையுண்டு கொலைத் தொழிலையுடைய யமன் அரசு புரியும் இருவிழிகளும் நோக்கப் பெற் றோர் தம் அறிவு முதலியவற்றைக் களவு கொள்ளக் காணும் சுருங்கிய நோக்கையும்,

செயிரறுந் தரள வெண்மணி நாலத் திருந்தெழில் படைத்-தெதிர் கண்டோர், உயிரினைப் பருகிக்-குமிழெனத் திகழ்ந்த ஒள்ளொளி நாசியின் வனப்பை, வெயில்விடு மணிப்பூண் காளையர் மனங்கள் ஆடுபொன் ஊசலின் விளங்கி, மயிரெறி கருவி முதலெனக் கவின்று மணிக்குழை வயங்கிரு செவியை. 10

குற்றம் நீங்கிய முத்தாகிய வெண்மணி தொங்கத் திருந்திய அழகமைந்து கண்டவர் உயிரைக் கவர்ந்து குமிழம் பூப்போலத் திகழ்ந்த மிக்கொளியுடைய மூக்கினது அழகையும், ஒளிவிடுகின்ற மணிகள் பதித்த அணிகளைப் பூண்ட காளைப்பருவமுடையவர் மனங்கள் ஆடுகின்ற பொன்னூஞ்சலினைப் போல விளங்கிக் கத்தரிக்கோலின் அடியைப் போல அழகுற்று மணிகளிழைத்த குழைகள் விளங் கிரு காதுகளையும்,

குயிலினஞ் சமழ்ப்பக் குழல்இசை பழகும் சின்மொழிக் குறுநகை மொக்குள், கயிரவம் மலர்ந்த செய்யவாய் அமிழ்தம் ஊற்றெழுங் கனிஇதழ் ஒளியைப், பயில்இருள் ஒதுக்கிப் பால்-நிலாக் கான்று படரொளி பரப்புவெண் மதியம், முயலறுத் தெழுந்தா லனையபே ரழகின் முண்டக வாள்முக மலரை. 11

குயிலினம் நாணும்படி குழல் இசை கற்குமாறு மெல்லிய மொழியினையும் புன்முறுவலையும் உடைய செவ்வல்லி அரும்பு மலர்ந்த செய்யவாய் அமிழ்தமாகிய நீரூறும் கொவ்வைக் கனியை ஒக்கும் அதரங்களின் ஒளியையும், தங்கிருளை ஒதுக்கி வெள்ளிய நிலவு வீசி விரிந்த ஒளியைப் பரப்பு வெண்டிங்கள் களங்கம் நீக்கி எழுந்தா லனைய பேரழகினையுடைய ஒளிமுகமாகிய தாமரை மலரையும்,

மடல்அவிழ் பாளைப் பசியபூங் கமுகோ வயிறுநொந் தலறி-முத் துயிர்க்கும், குடவளைப் பொலிவோ எனமரு ளுறுப்பக் கவின்-குடி இருந்தகந் தரத்தைக், கடிகமழ் கொழுஞ்சா றெழுகமென் கரும்பைக் கண்ணறத் தகர்த்திளம் பணையைத், தடவரைப் புகுத்தித் தொடையலை வாட்டித் தகைஅமை அணிகெழு புயத்தை. 12

மடல் விரிகின்ற பாளைகளையுடைய பசிய அழகிய பாக்கு மரமோ எனவும் வயிறு வருந்தி அரற்றி முத்துக்களை ஈனும் குடம் போலும் சங்கினது பொலிவோ எனவும் வியப்பெய்த அழகு குடியிருந்த கழுத்தையும், மணங்கமழும் கொழுவிய சாறெழுக மெல்லிய கரும்பைக் கணுக்கள் கெடச் சிதைத்தும், இளமூங்கிலை மலைமீது புகச்செய்தும், மலர் மாலையை வாடச் செய்தும் இவ்வாறு பகைத்து வெல்லும் தகுதி அமைந்த அழகு கெழுமிய புயத்தையும்,

கண்ணேட்ட மற என்னும்பொருளும் பெற நின்றது,

மடிதிரைப் பரவை அமுதுறழ் இசைய மகரயாழ் புறங்கொடுத் திரியத், தொடிகளும் வயிரக் கடகமும் செறித்துத் தூநலம் படைத்தகூர்ப் பரத்தை, நொடிபயில் கிள்ளைப் பவளவாய் கடுக்கும் நுதியுடைக் கூருகிர் வனப்பின், படியறு விரல்வாய்ந் தொள்ளொளி துளும்பும் பனிமலர்க் காந்தளங் கரத்தை. 13

மறிதிரைக் கடலின் அமுதத்தை ஒத்த இசையினையுடைய மகர யாழ் தோற்றோடலால் தொடிகளையும் வயிரம்பதித்த கடகங்களையும் செறியத் தொட்டுத் தூய அழகுடைய முழங்கையையும், சொற்களைப் பயிலும் கிளிகளின் பவளமொக்கும் வாயை நிகர்க்கும் நுனியுடைய கூரிய நகங்களின் வனப்பினையுடைய ஒப்பில்லாத விரல்கள் வாய்ந்து மிக் கொளி ததும்பும் குளிர்ச்சி யமைந்த காந்தள் மலரைஒக்கும் கைகளையும்,

சுணங்குடை வனப்பும் ஆரமும் எழுதுந் தொய்யிலுஞ் சந்தனக் களியும், இணங்கிஅண் ணூந்து பாதிகாண் டகமேற் படாம்பொதி இளமுலைப் பொருப்பை, அணங்குறுத் திளையோர் மதியினைப் படுக்கும் படுகுழி யனையவுந் தியின்மேல், நுணங்குவண் டொழுக்கிற் கருமயிர் ஒழுகி நோக்கமை சிறுவயிற் றழகை. 14

அழகிய தேமலும், முத்துமாலையும், எழுதப் பெற்ற கோலமும், சந்தனச்சேறும் இயைந்து நிமிர்ந்து தோன்றியும் தோன்றாதும் பாதி காணுமாறு மேலே துகிலால் மறைக்கப்பட்ட இளைய கொங்கைகளாகிய மலைகளையும், துன்புறுத்திக் காளையர்தம் அறிவினை வீழ்விக்கும் படு குழியை ஒத்த கொப்பூழையும், அதற்கு மேல் நுண்ணிய வண்டின் ஒழுங்குபோல அமைந்த கரியமயிர் ஒழுங்குபட்டுக் கிடந்து அழகமைந்த சிறிய வயிற்றின் அழகையும்,

கொடியென நுடங்கி வேளெனக் கரந்து குவிமுலைக் கிடைந்துசெந் தளிர்க்கைப், பிடியினுள் அடங்கித் துடியெனச் சுருங்கி மின்னெனப் பிறங்குநுண் நுசுப்பைப், படிமையர் சீலக் குறும்பெலாம் அடக்கி நடுவுயர்ந் தகன்றெழில் படைத்து வடிமலர்ப் பகழி வேந்தர சிருப்ப வயங்கிய அல்குலின் பரப்பை. 15

கொடியை ஒப்பத்துவண்டும், மன்மதனை யொப்ப வடிவு கரந் தும், குவிந்த கொங்கைகளைப் பொறுது பின்னிட்டும், செவ்விய தளிரை ஒக்கும் கைப்பிடியினுள் அடங்கியும், உடுக்கையொப்ப நடுவிடம் சுருங் கியும் மின்னலை ஒத்து விளங்குகின்ற நுண்ணிய இடையினையும், தவத் தினர்தம் ஒழுக்கமாகிய பகையை முற்றவும் அடக்கி அழகுற்று மன் மதன் அரசு வாழ விளங்கிய அல்குற் பரப்பையும்,

*நெட்டிலைக் கதலித் தண்டெனச் சேர்ந்து செறிந்துநீள் விலைவரம் பிகந்த, வட்டொளி அரத்தம் நுழைஇழைக் கலிங்க மணிகெழு வளம்பயில் குறங்கைக், கட்டெழில் மதவேள் ஊதுகா களமும் கணைபொதி ஆவநா ழிகையும், பெட்டவர் மருள வீற்றிருந் தனைய பிதிரொளிப் பொற்கணைக் காலே.* 16

நீண்ட இலையையுடைய வாழைத் தண்டினைப் போலச் சேர்ந்து நெருங்கிப் பெருவிலையின் எல்லையையும் கடந்த உருக்கி ஒளியை யுடைய அரக்கினது நிறங்கொண்ட நுண்ணிய நூலாற் செய்த புடைவை அழகு பொருந்துதற்குக் காரணமாகிய வளமுறும் துடையை யும், பேரெழிலையுடைய மன்மதனுடைய ஊதுகொம்பும், அம்புகளைப் பெய்த அம்புக்கூடும் என விரும்பியவர் மருளுமாறு வீற்றிருந்தாலனைய சிதறிய ஒளியையுடைய அழகிய கணைக்காலையும்,

"அட்டொளி அரத்தம்" எனவும், 'உருக்கி ஒளியையுடைய' எனவும் வரும் அதனுரையையும் நோக்குக (சீவக. 98. நச்சி.) "நுழை நூற்கலிங்கம்" (மலைபடுகடாம்-561)

*கறுத்தவாள் முகனை வெரீஇப்பதம் பணியுங் கலைமதி வெள்ளுகிர் மதநூல், பொறித்தபுத் தகமாம் புறவடி அன்ன மென்னடைப் பூந்தளிர் அடியைக், குறித்துரை உவமைக் கிடம்பெறு தள்ளிக் கொளத்தகும் பேரழ கமைந்த, மறுத்தபூ மேனி இளநலங் கனிந்து மணிநிறம் வயங்குகோ மளத்தை.* 17

கோபித்த ஒளியுள்ள முகத்தை அஞ்சித் தன் அடிகளை வணங்கும் சந்திரனை ஒக்கும் வெள்ளிய நகத்தையும், காம நூலெழுதிய புத்தகத்தை ஒத்த புறவடியினையும், அன்னம் போன்ற மெல்லிய நடையினையும், அழகிய தளிரொக்கும் அடியினையும் உவமை கூறுதற்கு எண்ணி உரை அளவையில் அடங்காது அள்ளிக் கொள்ளத் தகுந்த பேரழகு வாய்ந்த மணமுடைய மலரை ஒக்கும் மேனியின் இளநலம் மிக்கு மணிநிறம் விளங்குங் கோமள வடிவினையும்,

### திருமால் தேவர்களுக்கு அமுதமளித்தல்

#### கலி விருத்தம்

*காண்டலும் மாரவேள் கணைக்கி லக்கமாய்*
*மாண்டனர் எனஅறி வழிந்து மையல்நோய்*
*பூண்டனர் தானவர் மடந்தை போல்வரும்*
*ஆண்டகை மாயையால் அவரை வஞ்சித்து.* 18

அசுரர் கண்ட போதே மன்மதனுடைய அம்புபட்டு நொந்து இறந்தவர் என எண்ணுமாறு அறிவழிந்து காம நோய்வாய்ப்பட்டனர். பெண்ணைப் போல வந்த புருடோத்தமன் மாயையால் அவர் தம்மை மயக்கி,

கடவுளர்க் கமுதெலாங் கடுக ஈந்தவர்
வடிவெடுத் துடனுற வதிஇ ராகுவைத்
தடநெடு மூழையால் அரிந்து தானும்அக்
கடலமிழ் தருந்துபு களிப்பின் நீடினன். 19

தேவர்க்கு அமுத முழுவதும் விரையக்கொடுத்து அத்தேவர் வடிவு கொண்டுடனிருந்த இராகுவை நீண்ட அகப்பையால் தலையை வெட்டிப் பின் திருமாலும் அமிழ்தத்தை உண்டு களிப்பு மிக்கனர்.

வேறுகொள் அவுணரை ஞாட்பின் வென்றுபோய்
மாறடும் ஆழியான் இருக்கை மன்னினன்
ஏறணி நெடுங்கொடி எரியின் நீள்சடை
ஆறணி அடிகள்இவ் வனைத்துங் கேட்டரோ. 20

வேறிருந்த அசுரரைப் போரில் வெற்றி கொண்டு பகையை அழிக்கும் சக்கரமுடையவர் தம் இருப்பிடத்தை அடைந்தனர். விடைக் கொடியையும், எரியை ஒக்கும் சடையிற் கங்கையையும் ஏற்ற பெருமானார் நிகழ்ச்சிகளை முற்றவும் திருச்செவி ஏற்றருளி,

ஐயனார் அவதாரம்

தன்னடி வழிபடச் சார்ந்த மாயனை
அன்னவை என்னெனக் கடாவி அவ்வுரு
என்னெதிர் காட்டுகென் றியம்பச் சார்ங்கனும்
மன்னிய மலைமகள் வதனம் நோக்கியே. 21

தம்மை வணங்கி அருள் பெறவந்த திருமாலை அந்நிகழ்ச்சியை வினவி அப்பெண்ணுருவைத் தம்மெதிரே கொள்ளெனப் பிரானார் கூறச் சார்ங்கம் என்னும் வில்லுடைய மாலும் உமையம்மையார் திருமுகத்தை நோக்கி,

மையல்செய் மோகினி வடிவங் காட்டுபு
வெய்தென நடந்தனன் வேளை வென்றகோன்
ஒய்யென எழுந்துசென் றுற்றுப் புல்லவுங்
கையகன் றோடினன் கரிய மேனியான். 22

மயக்குறுத்துகின்ற மோகினி வடிவைக் காட்டி விரைய வெளியேறினர். காமனை அழித்த கண்ணுதலார் விரைய எழுந்து சென்று தழுவவும் சாமளமேனியன் கை பிழைத்தோடினன்.

உலகம் உய்யத் திருவிளையாடல் என்பார் 'வேளை வென்றகோன் என்றனர்.

மறுவலும் எம்பிரான் வலிந்து பற்றிஆங்
கிறுகுறத் தழீஇயினன் இனைய காலையின்
உறுபுகழ்ச் சாத்தன்ஊங் குவர்க்குத் தோன்றினன்
நிறுமுறை உலகெலாம் நிறுத்துங் கோலினன். 23

மீட்டும் எமது பெருமானுர் இறுகப்பற்றி அங்கே அழுந்தத் தழுவிக் கொண்டனர். அப்பொழுது நிற்றற் குரிய நெறியில் உலகுகளை நிறுத்தும் ஆணையையும் மிக்க புகழையும் உடைய ஐயனுர் அவர்களுக்கு தோன்றினர்.

ஐயனுர் இறைவன் அருள்பெறல்

ஆயபின் கேசவன் வெள்கி அண்டர்கோன்
சேயதாள் தொழுதுதன் உலகஞ் சேர்ந்தனன்
பாய்புகழ்ச் சாத்தனும் பகவன் தாளிணை
வாயினல் துதிசெய்து வணங்கி வேண்டுவான். 24

பின்னர் மாயவனுர் நாணிப் பெருமானைத் தொழுது தன் இருக்கையைச் சேர்ந்தனர். ஐயனுரும் பிரானை வணங்கிக் குறையிரப்பர்.

அரில்அறச் செய்பணி அருளி நின்னருட்
குரியபே ரிறைமையும் உதவ வேண்டுமால்
கருவிடம் பருகிய களகண் எந்தைநின்
திருவடிச் சார்புடைச் சிறிய னேற்கென. 25

'விடத்தைப் பருகிய பற்றுக்கோடாகிய எந்தையே! திருவருளையே துணையாகப் பற்றியுள்ள சிறியேனுக்குக் குற்றமற்ற தொண்டினையும், அருளுக்குரிய பெருந்தலைமையையும் வழங்க வேண்டும்.' என்று யாசிப்ப,

மறைமிடற் றெம்பிரான் இயம்பும் மைந்தகேள்
இறைமைநம் அருளினல் எய்தற் பாலதாம்
அறைதரும் அருளும்மெய் யன்பின் ஆவதப்
பொறைகெழு பத்தியும் பூசைப் பேறரோ. 26

திருநீலகண்டப் பெருமானுர் அருளுவர்: 'மைந்தனே! கேட்டி. பூசையின் பயனுக மெய்யன்பு தோன்றும். அம்மெய்யன்பினுல் திருவருட் பேறு வாய்க்கும். அத்திருவருளாற்றலைமை தாங்கும் பேறு உண்டாம்.

பூசையா வதுசிவ லிங்க பூசைஅத்
தேசமை அருச்சனைக் கிடனுஞ் சீர்த்திசால்
ஆசறு தலங்களாம் அங்க வற்றினும்
காசிமற் றதனினுங் காஞ்சி மாநகர். 27

பூசனை என்னிற் சிவலிங்க பூசையே ஆகும். ஒளியமைந்த அப் பூசனையும் புகழ்ச்சியமைந்த குற்றமற்ற தலங்களிற் செயற்குரிய ஆகும். அத்தலங்களின் மிக்கது காசி. அக்காசியினும் காஞ்சி மிக்கது.

கண்ணகன் புரிசைசூழ் காஞ்சி வைப்பிடைப்
புண்ணியச் சிவக்குறி நிறுவிப் பூசித்து
விண்ணவர் தவமுனி வேந்தர் யாவரும்
எண்ணரும் பேறுபெற் றின்பம நீடினர். 28

இடங்கொண்ட மதில் சூழ்ந்த காஞ்சி நகர்க்கண் புண்ணியத்தைத் தருகின்ற சிவலிங்கம் நிறுவிப் பூசித்து விண்ணோரும், முனிவரரும், அரசரும், பிறரும் எண்ணரிய வரங்களைப் பெற்று இன்பத்தில் நிலைத்தனர்.

ஆயிடை நீஎமை அருச்சித் தேத்துதி
மாயிருந் தலைமைநாம் வழங்கு கேமெனச்
சேயிழை பங்கினன் அருளிச் செய்தனன்
காயிலைப் படையவன் காஞ்சி நண்ணினன். 29

'அங்கு நீ எம்மை அருச்சனைசெய். மிகப் பெருந்தலைமை நாம் வழங்குவோம்' என்று சேயிழையாளைப் பாகங்கொண்டவர் அருளினர். வெல்லுகின்ற இலையை ஒக்கும் படையினராகிய சாத்தனும் காஞ்சியை நண்ணினர்.

உருகெழு பனிவரைப் பிராட்டி ஒண்மலர்த்
திருவடிச் சுவடுதோய் செல்வக் காஞ்சியின்
மருவிவேற் கடவுளை வழுத்தி ஆங்கவன்
அருளினற் சிவக்குறி நிறுவி அர்ச்சித்தான். 30

வடிவுடைய அம்மையார் திருவடிகளின் சுவடுகள் பதிந்த செல்வத்தைப் பெற்ற காஞ்சியில் குமரகோட்டப் பிரானைப் போற்றி அவரருளைப் பெற்றுப் பின்பு சிவலிங்கம் இருத்தி அருச்சனை புரிந்தனர்.

மறைமுதல் விடைமிசைத் தோன்றி மற்றவற்
கறைகழல் இமையவர் அருகுசூழ்தர
முறைகெழு பூதங்கள் முழுதுங் காப்புறும்
இறைமையின் மணிமுடி இனிது சூட்டினன். 31

வேதமுதல்வர் விடைமேற் றோன்றித் தேவர் சூழப் பூத கணங்களைக் காவல் செய்யும் தலைமைக் குரிய மணிமுடியை இனிதுபடச் சூட்டினர்.

பல்கரி வீரர்தேர் பரிகள் தம்முடன்
நல்கிய தலைமைபெற் றனைய சாத்தனும்
ஒல்கிடை மலைமகள் உவகை மீக்கொள
மல்குசீர்ப் பிலத்தயல் மகிழ்ந்து வைகினன். 32

நால்வகைப் படைகளுடனும் அருளிய தலைமையைப் பெற்றுச் சாத்தனார் துவளும் இடையையுடைய காமாட்சி அம்மையார்க்கு மகிழ்ச்சி பொங்கும்படி சிறப்பு மிகுகின்ற பிலத்தின் பக்கத்தே மகிழ்ந்து தங்கினர்.

கடாம்நிரை ஏழுயர் கரிகள் மேல்கொடு
நடாய்உளங் களித்திறு மாந்து நாள்தொறும்
வடாதுபாற் செண்டணை வெளியின் மாறடும்
அடாவலி படைத்தவன் ஆடல் பேணுமால். 33

மதம் நிறைந்து ஏழுறுப்புக்கள் உயர்ந்த களிற்றினை ஊர்ந்து உள்ளம் களித்துச் செருக்கி நாடோறும் வடக்கி லமைந்த செண்டணை வெளியின்கண் பகைவரை அழிக்கும் பிறரால் அழித்தற்கரிய வலியினையுடைய ஐயனார் உலாவருவர்.

ஏழுறுப்பு உயர்வு: கை, கால், வால், கோசம்.

வலம்படர் சிறப்பின்மா சாத்தன் ஏத்திய
நலம்படர் கருணைமா சாத்த நாதனைப்
புலம்படர் சிந்தையாற் போற்றப் பெற்றவர்
இலம்படார் இருமையும் இன்பம் எய்துவார். 34

வெற்றி மிகுந்த சிறப்பினையுடைய மாசாத்தனார் போற்றிய நன்மை மிகுந்த அருளைச் செய்யும் மாசாத்த நாயகரை மெய்யறிவாற் போற்றப் பெற்றவர், வறுமையையும் எய்தார்; மேலும், இம்மை மறுமைகளில் இன்பமும் பெறுவர்.

மங்களேச்சரம்

எழுசீரடி யாசிரிய விருத்தம்

மற்றதன் வடபால் மலைமகள் இகுளை மங்கலை மண்டபம் இழைத்து, வெற்றிமண் டபத்தின் பிறங்குற மங்க ளேசனை விதியுளி நிறுவி, அற்றமில் சிறப்பின் மங்கள தீர்த்தம் அகழ்ந்துநீ ராட்டுபு தொழுதாள், பற்றுமங் களநாள் அத்தடம் படிந்து பணிபவர் இருமையும் பெறுவார். 35

மகாசாத்தேசத்திற்கு வடக்கில் உமா தேவியாரது தோழி மங்கலை என்பவர் மண்டபம் ஒன்று சிருட்டித்து அதன்கண் விளங்குற மங்கள நாயகனை விதிப்படி நிறுவிப் போற்றிக் குற்றமற்ற சிறப்பினை

யுடைய மங்கள தீர்த்தம் வகுத்து நீராட்டித் தொழுதனர். விருப்புடைய செவ்வாய்க்கிழமை அந்நீரில் மூழ்கி வணங்குவோர் இம்மை மறுமை நன்மைகளைப் பெறுவார்.

இராமநாதேச்சரம்

உரைத்ததன் குடபால் தசரதன் மதலை அரக்கனை
அடுபழி ஒழிப்பான், அருட்குறி யிருத்திச் சேதுவில் தொழுதங்
கண்ணலார் ஏவலிற் காஞ்சி, வரைப்பின்உற் றிராம நாதனை
நிறுவி வழிபடூஉக் கொடுவினை மாற்றித், திரைப்புனல்
அயோத்திப் புகுந்தர சளித்தான் சேதுவில் சிறந்ததத் தலமே. 36

இதற்கு மேற்கில் இராமபிரான் இராவணனைக் கொன்ற பழி நீங்கும் பொருட்டுச் சிவலிங்கம் நிறுவி இராமேச்சுரத்தில் தொழுது அப்பெருமானார் ஆணைப்படி காஞ்சி நகரைக் கூடி இராமநாதரைத் தாபித்து அருச்சித்துத் துதித்துப்பாவத்தைப் போக்கி அயோத்தியை எய்தி அரசுபூண்டனர். இத்தலம் சேதுவினும் சிறப்புடையதாகும்.

மாதலீச்சரம்

இனையதன் வடபால் மாதலி என்பான் இராகவன்
இலங்கையர் கோமான், றனைஅடு ஞான்று வாசவன் விடுப்பத்
தயங்குதேர் செலுத்துவா னாகி, நனைமலர் வாகை முடித்தபின்
இராமன் றன்னொடு காஞ்சியை நண்ணிப், புனைபுகழ் மாத
லீச்சரந் தொழுது புரந்தரற் கினியவ னானான். 37

இதற்கு வடக்கில் இந்திரனால் ஏவப்பெற்ற அவன் சாரதி மாதலி என்போன் இராகவன் இராவணனைக் கொன்ற போரில் அவ்விராகவனுக்குத் தேரோட்டி வெற்றி கண்ட பின்னர் இராமனோடும் காஞ்சியை எய்தி மாதலீச்சரம் நிறுவிப் போற்றி இந்திரனுக்கு முன்னினும் இனியனாயினன்.

மாசாத்தன் தளிப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-1868.

## அனந்த பற்பநாபேசப் படலம்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

வருவினை தெறுமா சாத்தன் தளிஒளி மங்க ளேசம்
திருவிரா மேசம் மாத லீச்சரந் தெளியச் சொற்றும்
திருவலர் நிரந்த முன்றின் மாதலீச் சரத்தின் மேல்பால்
ஒருவில்சீர் அனந்த பற்ப நாபத்தின் உண்மை சொல்வாம். 1

வருகின்ற இருவினைகளை அழிக்கின்ற மாசாத்தர் வழிபட்ட திருக்கோயில், விளக்கமமைந்த மங்களேசம், இராமேசம். மாதலீச்சரம் ஆகிய இத்தலங்களை விளங்கக் கூறினேம். பஞ்சதருக்களின் மலர்கள் நிரம்பிய திருவாயிலையுடைய மாதலீச்சரத்தின் மேற்றிசையில் நீங்குதல் இல்லாதான் இயல்பினைக் கூறுவோம்.

இறைவன் இறைவியர் திருவிளையாடல்

எண்ணரும் உயிர்கள் ஈன்ற இருமுது குரவ ரானோர்
அண்ணலங் கயிலை வெற்பின் அமர்வுழி ஒருநாள் அங்கண்
உண்ணிறை களிப்பின்நீடி ஒள்ளொளி மணிச்சூ தாடக்
கண்ணினர் அகிலம் உய்யக் கண்ணினர் அனைய காலை. 2

அகிலமும் உய்யும் கருந்துடையோராகிய எண்ணரிய பல்லுயிரையும் ஈன்ற அம்மையப்பராயினோர் தலைமைசான்ற கயிலைமலையில் வீற்றிருக்கையில் ஓர் நாள் அவ்விடத்து திருவுள்ளத்தில் நிறைந்த பெருங்களிப்பில் சுடரொளியுடைய மணிகளான் இயன்ற பாய்ச்சிகையையும், காயையும் கொண்டு சூதாடக் கருதினர்.

மாலையந் துளவோன் எய்தி வணங்கிச்சாந் தாற்றி கோடல்
மாலைய னாகி நின்று மெய்வெயர் மாற்ற நோக்கி
மாலைவெண் பிறைதாழ் வேணி வள்ளலும் உமையும் ஆங்கண்
மாலைஅவ் வினைக்குச் சான்று வைத்தனர் ஆடி னார்கள். 3

திருமால் அணுகி வணங்கி விசிறி கொள்ளுந் தன்மையனாகி நின்று திருமேனி வெயர்வையை மாற்றக் கண்டு மாலையிற்றோன்றுகின்ற வெள்ளிய பிறை தங்கிய சடையுடைய வள்ளலும் உமையம்மையாரும் அங்கு மாயனாரை அச்சூதினைக் கண்காணிப்பவராக வைத்து ஆடினார்கள்.

பிடித்தெறி கவருட் டத்திற் பிஞ்ஞகன் தோற்பச் செங்கேழ்
அடித்தளிர்ப் பிராட்டி நோக்கி அடிகளை வென்றேன் என்றாள்
விடைக்கொடிப் பெருமான் யாமே வென்றனம் என்றான் பாசம்
உடைந்தவர் தங்கட் கிவ்வா றுற்றன கலாங்கள் மேன்மேல் 4

சூதாடு கருவியை உருட்டுகின்ற ஆட்டத்தில் பெருமான் தோல்வியடையச் செந்நிறம் பொருந்திய மாந்தளிரை ஒக்கும் திருவடியுடைய பெருமாட்டியார் கண்டு 'அடிகளை வென்றேன் யான்' என்றனர். விடைக்கொடியை உடைய பெருமானார் 'யாமே வென்றோம்' என்றனர், இயல்பாகப் பாசங்களினீங்கிய இவர் தமக்கு மாறுபாடு இங்ஙனம் மேன்மேல் முதிர்ந்தன.

திருமால் சாபமுறுதல்

யாமினிக் கலாய்த்தல் வேண்டல் ஒழிகென இருவர் தாமும்
மாதணி மார்பன் றன்னை வினுதலும் மாயோன் ஐயன்
தாமரை வதனம் நோக்கித் தலைவனும் வென்றான் என்றான்
கோமளங் கவின்ற மேனிக் கோற்றொடி சீற்றங் கொண்டாள்.

'இப்பொழுது யாம் பகைத்தலை ஒழிவோம்' என்றிருவரும் தவிர்ந்து திரு மகளையும், கௌத்துவத்தையும் அணிந்த மார்பினராகிய திருமாலை, 'யாவர் வென்றவர்' என வினுவலும் அத்திருமால் பெருமான் திருமுகத்திற் கஞ்சித் 'தலைவனே வென்றனன்' என்றுகூற அழகு ஓர் அழகு கொண்டனைய திருமேனியையும் திரண்ட வளையலையும் உடைய அம்மையார் சினங்கொண்டனர்.

கண்டது கண்ட வண்ணங் கழறிலை வாரம் பற்றித்
தண்டுணர்த் துளவத் தாரோய் கைதவச் சான்று சொற்றாய்
அண்டரும் பிறரும் ஏசக் கட்செவி யாதி என்னு
ஒண்டொடி சபிப்ப மாயோன் உளம்பதைத் திரந்து போற்றி.

குளிர்ந்த துழாய் மாலையோய்! கண்ணுற் கண்ட நிகழ்ச்சியை நிகழ்ந்தவாறே கூருது பட்சபாதம்கொண்டு பொய்ச்சான்று கூறினை ஆகலின், தேவரும் பிறரும் மன்றேரம் கூறினுயென இகழப் பாம்பாகுக' என அம்மையார் சாபமிடத் திருமால் மனம்நடுங்கி குறையிரந்து போற்றி செய்து,

திருமால் வழிபாடு

அடியனேன் மடமை நீரால் அறைந்தது பொறுத்துச் சாப
முடிவளித் தருளாய் என்றென் றேக்கற முதல்வி நோக்கி
நெடிதருள் சுரந்து மாயோய் அஞ்சலை நிலைநீர்க் காஞ்சிக்
கடிநகர் வரைப்பின் ஏகிக் கடிதெமைப் புரிதி பூசை. 7

அடியனேன் அறியாமையால் நடுநிலை பிறழ்ந்து கூறியதனை அருளாற் பொறுத்துச் சாபத்திற்குத் தீர்வு அருளாய் என்று பல்காற் குறையிரந்து விருப்புடன் தாழ அம்மையார் திருக்கண் நோக்கருளிப் பேரருள் சுரந்து, மாயோனே! அஞ்சாதி. நீர் நிலைகளையுடைய காஞ்சியை அடைந்து எம்மை விரையப் பூசனை புரிவாயாக.

இகழறும் இலிங்க வேதி என்னுரு இலிங்க மூர்த்தி
திகழ்மதிச் சடில மோலிச் சிவபிரான் வடிவு கண்டாய்
புகழ்தரும் இலிங்க வேதிப் பொற்பினல் என்னை நின்பேர்
நிகழ்வுற நிறுவிப் போற்றி நீக்குதி சாபத் தீமை. 8

புகழ்ச்சியமைந்த சிவலிங்கத் திருமேனி இறைவன் வடிவமும், பீடம் என்வடிவமும் ஆகும். ஆகலின், அச்சிவலிங்க பீடத்தில் நின் பெயர் விளங்கத் தாபித்து வழிபாடியற்றிச் சாபப்பயனை நீக்கிக் கொள்வாய்.

நலம்புரி அனந்த பற்ப நாபன்என் ருேங்கு வாயால்
வலம்புரிக் கரத்தோய் என்று வழங்கினள் குவவுத் திண்தோள்
உலம்புரி அனந்த பற்ப நாபனும் உமையாள் தன்னைப்
பொலம்புரி சடிலத் தேவைத் தொழுது போய்க் காஞ்சி புக்கான். 9

பாஞ்ச சன்னியத்தை யுடையோய்! நலஞ்செய் அனந்த பற்பநாபன் என்னும் பெயருடன் சிறப்பாயாக' 'என்றருளினர் அம்மையார். திரண்ட கல் அவாவும் திரண்ட திண்ணிய தோள்களை யுடைய திருமாலும் உமையம்மையாரையும் பொன் விரும்புகின்ற சடையினை யுடைய பெருமானையும் தொழுது சென்று காஞ்சியை அடைந்தனர்.

வணங்கினன் திருவே கம்பம் மற்றதன் அயலே வேதி
இணங்குறும் அனந்த பற்ப நாபமா இலிங்கம் பூசித்
தணங்கருள் பெற்றுப் பாந்தள் மூதுரி அகற்றி யாங்குப்
பிணங்கிய சாபம் நீத்துப் பேரருட் குரிய ஞனன். 10

திருவேகம்பத்தைக் கண்டுதொழுது அத்தலத்தின் மருங்கே பீடத்துடன் கூடி விளங்குறும் அனந்த பற்பநாபேசச் சிவலிங்கம் நிறுவிப் பூசித்து அம்மையாரது திருவருளைப் பெற்றுப் பாம்புருவை விடுத்துப் பழைய வடிவுடன் விளங்கினர் திருமால்.

அனந்த பற்பநாபேசப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - 1878-

## கச்சி மயானப் படலம்

கொச்சகக் கலிப்பா

சிற்பமிகழ் மணிமாட நெடும்புரிசைத் திருவனந்த
பற்பநா பேசத்தின் பரிசறிந்த வாறுரைத்தாம்
நிற்பனவும் சரிப்பவுமாய் நிறைந்தபிரான் இனிதுறையும்
அற்புதமாந் திருக்கச்சி மயானத்தின் அடைவுரைப்பாம். 1

சிற்ப நுண் தொழிலமைந்த நீண்ட மதில்களையும் அழகிய மாடங்களையும் கொண்டுள்ள அழகிய அனந்தபற்ப நாபேசத்தின் இயல்பினை அறிந்தபடி கூறினேம். இனி, தாபர சங்கமங்கள் என்னும் இருவகை உடம்புடைய உயிர்களினும் வியாபித்துநின்ற பெருமானர் இனிது வீற்றிருக்கும் வியப்புறுத்தும் திருக்கச்சி மயானத்தின் வரவினைக் கூறுவோம்.

பண்டாசுரன் வரம்பெறல்

முன்னொருநான் முகன்புருடப் பெயர்க்கற்பம் முடிவெய்திப்
பின்னுறுசீர் அகோரமாங் கற்பத்துப் பிறங்குலகின்
மன்னுயிர்கள் வளர்ந்தோங்கி வைகுநாள் விறற்பண்டன்
என்னுமொரு வல்லவுணன் இப்புவனத் துளனானன். 2

முன்னோர் தற்புருட பிரமகற்ப முற்றுப்பெற்றுப்பின் தோன்றிய சிறப்புடைய அகோர கற்பத்தில் விளங்குகின்ற உலகில் மிக்குள்ள உயிர்கள்யாவும் தழைத்து வாழுநாள் வெற்றிவாய்ந்த பண்டாசுரன் என்னும் கொடியோன் இவ்வுலகின்கண் தோன்றினன்.

அங்கவன்செய் மாதவத்தால் அகமகிழ்ந்து காட்சிதரும்
பங்கயனை அடிவணங்கிப் பன்னுசுரா சுரர்முதலோர்
தங்களுடம் பிடைவிரவித் தகைபெறுவீ ரியம்அனைத்தும்
நுங்கவரம் அருள்என்றான் மூண்டகனும் நுனித்தெண்ணி. 3

அப் பண்டாசுரன் செய்த பெருந்தவத்தினுக் கெதிர் தோன்றிய பிரமனை அடிபணிந்து "சொல்லப்பெறும் தேவர் முனிவர் முதலானோர் உடம்பிடைக் கலந்து நின்று சிறப்புறும் இந்திரியம் முற்றவும் பருக வேண்டும் ஆற்றலை அருள்க" எனவேண்டினன். மலரவனும் நுட்பமாக ஆராய்ந்து,

அற்றாகென் றகலுதலும் அவுணர்கோன் உடம்புதொறும்
உற்றாவி யுடன்விரவி வீரியங்கள் உண்டிருப்பப்
பற்றாய வீரியம்போய் ஆருயிர்கள் பருவந்து
வற்றாத ஒளிமாழ்கி வளர்வின்றி அலைகினவால். 4

'அவ்வாறாகுக' என்று வரங்கொடுத்து நீங்கிய அளவே அசுரன் உடம்புதொறும் புகுந்து உயிர்போலக் கலந்து இந்திரியங்களை நுகர்ந் தினி திருப்ப ஆதரவாய வீரியங்களை இழத்தலான் உயிர்கள் வருந்தி வற்றாத ஒளி வற்றி வளர்ச்சியின்றிச் சுருங்கின..

சிவபெருமானார் உலகொடும் உயிர்களொடும் கலந்துநிற்பவர் அசுரன் உடம்பொடு கலந்துநின்றனன் என வேற்றுமை அறிக.

தேவர் முதலியோர் முறையீடு

எழுசீரடி யாசிரிய விருத்தம்

மருத்துவர் இயக்கர் வானவர் அவுணர் மானிடர் சித்தர்கந்
தருவர், உருத்திரர் வசுக்கள் இராக்கதர் அருக்கர் உரகர்சாத்
தியர்மருத் துக்கள், அருத்திகூர் விரிஞ்சன் அச்சுதன் பிறரும்
அவ்விடர் ஆற்றலர் குழுமித், திருத்தகு கயிலைப் பருப்பதம் புக்குச்
சிவபிரான் அடிதொழு துரைப்பார். 5

பேரன்புமிக்க பிரமன் திருமால் முதலானோர் யாவரும் அத் துன்பத்தைப் பொறுக்கும் வலியிலராய்க் கூடித் திருக்கயிலைமலையை அடைந்து இறைவன் திருவடிகளை வணங்கி முறையிடுவார் ஆயினர்.

வீரியம் இன்றி வலிகுறைந் தடியேம் வெற்றுடம் பெனத்திரி
கின்றேம், காரணங் காணேம் அன்னது தவிர்க்கும் உபாயமுங்
கண்டிலேம் என்று, நாரணன் முதலோர் உலந்துநின் றிரப்ப
நாயகன் நகைமுகிழ்த் துரைக்கும், சீரிய நுமது வீரியம் முழுதும்
திருந்துபண் டாசுரன் கவர்ந்தான். 6

"அடியேங்கள் வீரியம் குறைந்து வலிமை சுருங்கி எலும்பு தோல் போர்த்த உடம்பினராய் இயங்குகிறேம். இதற்குக் காரணத்தையும் போக்கும் சூழ்ச்சியையும் அறிகிலோம்" என்று கூறி வற்றி நின்று வேண்ட, முதல்வன் குறுமுறுவலுடன் "நும்முடைய இன்றியமையாத வீரியங்களை முற்றவும் வரத்தினுல் உயர்ந்த பண்டாசுரன் கரவாகக் கொண்டனன்.

ஆங்கவன் எல்லா உடம்பினும் விரவி ஆவியோ டுறைதலின் எவ்வா, றீங்கினி வெல்லப் படுவன்என் றருள இமையவர் யாவரும் வெருவி, மாங்குயிற் கிளவி மலைமகள் கொழுநா மறிதிரை வளைகடல் உயிர்த்த, பூங்கடு மிடற்றுப் புனிதனே எம்மைப் புரப்-பதுன் கடன்எனத் துதிப்பார். 7

அசுரன் எல்லா உடம்புகளினும் கலந்து உயிர்களுடன் தங்குதலின் எங்ஙனம் அழிக்கப் படுவான்" என அருளக்கேட்ட விண்ணோர் யாவரும் பெரிதும் அஞ்சி" மாமரத்தில் வாழும் குயில்போலும் இனிய மொழியினையுடைய மலைமகளார் கணவனே! மறித்து வீசும் அலைகளையுடைய திருப்பாற்கடலிற் றோன்றிய விடத்தைத் திருக்கழுத்தில் நிறுவிய தூயோனே! அடியேங்களைப் பாதுகாப்பது முதல்வனுகிய நினக்குக் கடப்பாடெனப் போற்றினர்.

போகம் ஈன்ற தான் சத்தியும் சிவனுமாய் உலகத்துக் கெல்லாம் போகத்தை உண்டாக்கின புண்ணியன் என்றூர் திரிபுரத்தை அழித்தும் நஞ்சுண்டும் பல்லுயிர்களையும் காத்தலின் (சீவக 362. நச்சி) எனவருதலின் வேண்டுவ் கொள்க.

ஷை வேறு

முடிவில் ஆற்றலை தன்வயத்தினை முற்று ணர்ச்சியை பேரருள்
மடிவில் ஆட்சியை தூய மேனியை மற்றி யற்கை யுணர்ச்சியை
படியி லா இயல் பாக நீங்கிய பாச நோயை வரம்பில்இன்
புடையை உன்னடி யேங்கள் என்றும் உனக்க டைக்கலம் ஐயனே.

தலைவனே! நீ முடிவில் ஆற்றலுடைமை, தன்வயத்தனுதல், முற்று முணர்தல், அழிவில் பேரருளுடைமை, தூய உடம்பினனுதல், இயற்கை உணர்வினனுதல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், வரம்பிலின்பமுடைமை, ஆகிய இவ்வருட் குணங்களை யுடையை; மேலும் அடியேங்கள் பெத்தநிலையினும் முத்திநிலையினும் உனக்கே அடைக்கலப் பொருள்கள் ஆவேம்.

இவ்விருவகை யானும் காத்தல் வேண்டுமென்பது குறிப்பு.

அண்டம் ஓர்அணு வாம்வ ளர்ச்சியை அணுவின் நுண்-ணியை அண்டமார், பிண்டம் எங்கணும் நின்ற சைக்கும் நிமித்த னுய்நிறை பெற்றியை, கண்ட யோகியர் சிந்தை மேயினை கரணம் முற்றும் அகன்றனை, ஒண்டொ டிக்கொரு பங்க யாங்கள் உனக்க டைக்கலம் ஐயனே. 9

அண்டம் ஓர் அணுவாக அத்துணை வளர்ச்சியை யுடையை. அங்ஙனே அணுவோர் அண்டம் ஆக அத்துணை நுண்ணிலையையும் உடையை. அண்டபிண்டங்கள் அனைத்தினும் நிறைந்து உடனாய் நின்று அவற்றை இயக்கும் நிமித்த காரணனும் இயல்பினையுடையை. யோகக் காட்சியர் அறிவில் வீற்றிருக்கும் இயல்பினை. கருவிகள் வேண்டாதே சங்கற்பத்தால் முடிக்கும் ஆற்றலுடையை ஆகிய உனக்கு ஐயனே! யாங்கள் அடைக்கலப் பொருளாவேம்.

பிரமம் என்மரும் ஈசன் என்மரும் சீவன் என்மரும் பேதுறுங்
கருமம் என்மரும் வேறும் அவ்வவ கடவுள் என்மரு மாகியே
முரணி அவ்வவர் பேச நின்றருள் முதல்வ னேமுதல் ஈறிலா
ஒருவ னேஅடி யேங்கள் என்றும் உனக்க டைக்கலம் ஐயனே. 10

பிரமம் எனவும், ஈசன் எனவும், சீவன் எனவும், கன்மம் எனவும், திருமால் எனவும், பிரமன் எனவும், பிறவாறும் அவ்வச் சமயவாதிகள் ஒருவரோடொருவர் மாறுபட்டுப்பேச அவ்வத் தெய்வமே ஆகி நின்றவரவர்க் கருள்செய்யும் முதல்வனே! தோற்றமும் அழிவும் இல்லாத ஒருவனே! ஐயனே! அடியேங்கள் எந்நிலையிலும் உனக்கு அடைக்கலம்.

இறைவன், வேள்வியில் உலகை ஒடுக்கல்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

இனைய வாறுளங் களிவரப் பழிச்சுறும் இமையவர் தமை-நோக்கிக், கனக முற்பிரான் வீரியம் பெறுவதே கருத்துமக் கெனில்ஏற்கும், வினைமு டித்தவற் கொல்லுதும் அல்லது விரவிஎங் கணும்நிற்கும், அனைய கள்வனைச் செகுத்திடல் அரிதுமக் கிசைவுகொல் அதுஎன்றான். 11

இங்ஙனம் உள்ளம் மகிழ்ச்சி எழப் போற்றும் தேவர் தங்களை நோக்கி வெல்கழலணிந்த பிரானுர் "இந்திரியம் பெறுவதே உமக்கு நோக்கம் ஆனால் அதற்குப் பொருந்தும் செய்கைசெய்து அப்பண்டாசுரனைக் கொல்வோம் அன்றி எவ்வுடம்பினும் கலந்து நிற்கும் அவ் வஞ்சகனை வேறொருபாயத்தால் அழித்தல் இயலாத தாகும். அச்செயல் உங்கட்கு இசைவுடையதோ? "எனவினவியருளினர்.

ஐயன் வாய்மொழி கேட்டலும் கடவுளர் அவ்வினை தாழாமே, செய்ய வேண்டும்மற் றுலகெலாம் புரப்பதெம் இசைவுபெற் றேசெந்திக், கைய னேஎனத் தலைவனும் அன்னதேற் காஞ்சியின் நுமதாக்கை, வெய்ய செந்தழற் குறியிடை அவியென விரவுகென் றருள்செய்தான். 12

இறைவனது திருவாக்கைக் கேட்ட அப்போதே தேவர்கள் "செந்தீயை ஏந்திய செல்வனே! தங்கள் திருவுள்ளக் குறிப்பினை விரைய நிறைவேற்றவேண்டும். உலகங்களை எல்லாம் அருள்சுரந்து காத்தல்,

எம்முடையஇசைவினைப் பெற்றல்லவே? எனக்கூற நாயகரும் அற்றேல் காஞ்சிபுரத்தில் வேள்விக் குண்டத்துச் செந்தழலிடும் அவிப்பொருள் களாக நும்முடம்பெல்லாம் ஆகுக'' என்றருளினர்.

யாங்கள் இங்கிருந் தென்பயன் நின்சுடர்க் குறியிடைக் கரந்தேமேல், ஓங்கும் இன்பமே தலைப்படப் பெறுதும்என் றுரைத்தடி தொழுதேத்தும், ஆங்க வர்க்கெலாம் விடைஅளித் தருவரை அணங்கொடுந் திருக்காஞ்சி, ஞாங்கர் எம்பிரான் செழுந்-தழற் பிழம்பொளி நலந்திகழ் உருக்கொண்டான். 13

"யாங்கள் இவ்வுடம்புகளால் என்னபயன் பெறக்கடவேம். நும் முடைய சுடர் வடிவில் உடம்புகள் மறையப் பெறுமேல் பேரின்பம் தலைக்கூடப் பெறுவோம்'' என்று கூறித்தொழுது துதிக்கும் தேவர் யாவர்க்கும் செல்ல விடைகொடுத் துமை யம்மையா ரொடுந் திருக் காஞ்சியை அணைந்தருளிப் பெருமானுர் செவ்விய நெருப்புருவாம் ஒளி நலம் சுடரும் திருமேனிதாங்கினர்.

அளப்ப ருஞ்சிகைப் படலைமீக் கவைத்தெழுந் தெங்கணும் அழல்வீசக், கிளைத்து நின்றுதன் வலப்புடை உகிரினுற் குண்ட-முங் கெழுவித்து, வளைத்த குண்டத்து வாமதே வத்திரு வடிவின்-நெய் பூரித்து, விளக்கு தத்துவத் தருப்பைமுக் குணப்பெரும் பரிதிமே வரக்கொண்டு. 14

அளவில உச்சிகளைக்கொண்ட தொகுதிகள் மேற் கிளைத்தெழுந் தெவ்விடத்தும் சுடர்விட்டு அழகிய வடிவில் தழைத்து நிற்பத் தனக்கு வலப்புறத்தே நக நுதியினுற் குண்டமும் இயற்றி அக்குழியிடத்துச் சுடர்வடிவுடைய நெய்யை நிரப்பி அறிவை விளக்குகின்ற தத்துவங்க ளாகிய தருப்பைகளை முக் குணங்களாகிய பெரிய மேடைகளில் பரப்பி,

வேறு

வேள்வியுந் தானே வேள்விப் பொருள்களுந் தானே வெய்ய
வேள்விவேட் பவனுந் தானே வேள்விகொள் இறையுந் தானே
வேள்வியின் பயனுந் தானே என்பது விளக்கி எம்மான்
வேள்விசெய் தீக்கை யுற்றான் விளங்கருட் சத்தி யோடும். 15

வேள்வியும், வேள்விக்குரிய உபகரணங்களும், விரும்பத் தக்க யாக புரோகிதனும், வேள்விப்பூசனையை ஏற்றுக்கொள்பவனும், வினை பயனும், தானே என விளக்கிக் காட்ட எமதுபெருமான் வேள்வி செய்தற் குரிய தீக்கையைத் திருவருட் சத்தியாகிய யாக பத்தினி யொடும் மேற்கொண்டனர்.

வண்டுற்ற மலரோ னுதி வலிகெழு தருக்கள் ஈறு
அண்டத்தின் அகத்த பூதம் அனைத்தையும் பெருங்கால் வேகச்
சண்டத்தின் வாங்கி வாங்கி ஆச்சியந் தயங்கும் அங்கேழ்க்
குண்டத்தில் தூய்மை செய்து கொழுந்தழல் மடுத்திட் டானல். 16

சிவபெருமான், பிரமன் முதலாக வலிமை அமைந்த மரங்கள் ஈருகிய அண்டத்தை இடனுகக் கொண்டுள்ள எழுவகைப் பல்லுயிர் களையும் பிரசண்ட மாருதம்போல வேகமாக எடுத்தெடுத்து நெய்யாற் பொலிவுறும் அழகிய குண்டத்தில் புனிதப்படுத்திச் செழுவிய நெருப் பிடை யிட்டனர்.

வேறு

மடுப்ப மடுப்ப மீதெழுந்து வயங்கிச் சுடருந் தழற்பிழம்பில்
அடுப்ப நனைக்கும் புறத்தெண்ணீர் அண்ட முகடு வேவாமைத்
தடுத்த தாகும் அன்றாயின் மன்ற நிறையுஞ் சராசரங்கள்
உடுத்த மேலைச் சுவர்த்தலமும் உருகிக் கவிழும் உலகன்றே. 17

இடுந்தொறும் மேன்மேலெழுந்து விளங்கும் நெருப்பினுல் அண்டத்தின் உச்சி வெந்தொழியாதவாறு அண்டத்தின் மேல் நீர் தடுத்தது ஆகும். இல்லையேல், அண்டமுகடு நிச்சயமாக உருகி மேலுலகம் குப்புறக் கவிழ்ந்திருக்கும்.

வேறு

இவ்வகை வடிவு முற்றும் இணர்எரிப் பிழம்பு ளாக்கிக்
கௌவையில் காலச் செந்தீப் பிரான்முதல் கணங்கள் தாமும்
எவ்வம்இன் ஞெளிருந் தன்னோ டேகமாய்ச் சேர்த்துப் பின்னர்
அவ்விடை விரவும் பண்டா சுரனையும் அழலிற் பெய்தான். 18

இவ்வாறு சராசர வடிவங்கள் அனைத்தினையும் பல சிகைகளையு டைய தீப்பிழம்பிற் சேர்த்துத் துன்பமில்லாத காலாக்கினி உருத்திரர் முதலாக உள்ள கணங்களையும் துன்பம் இல்லையாகச் சுடர்விடும் தன்னுடன் ஒன்றுபட ஆக்கிப் பின்பு அவற்றிடை விரவி யிருந்து தனி நின்ற பண்டாசுரனையும் வேள்வித்தீயில் இட்டனர்.

எண்ணரும் உயிர்க ளெல்லாம் எரியகத் தொடுங்கி நாளும்
கண்வளர் காலத் தெய்தும் இன்பத்திற் களித்து வாழ்ந்த
அண்ணுதற் கரிய அத்தீ அன்றுதொட் டிலிங்க மாகிப்
புண்ணிய மயான லிங்கம் எனப்பெயர் பொலிவுற் றன்றே. 19

அளவுட் படாத உயிர்க் குழாம் முழுதும் வேள்வித்தீயில் அடங்கி நாடொறும் துயிலும் காலத் தெய்தும் இன்பமே பெற்றுக் களித்திருந் தன. அணுகுதற்கு இயலாத அந்தத் தீ அந் நாள் முதலாகச் சிவலிங்க வடிவமாகப் புண்ணிய மயானலிங்கம் என்னும் பெயரொடு விளங்கும்.

அத்தகை இலிங்கந் தன்னில் அளப்பருங் கருணை பூத்துப்
பைத்தபாப் பல்குற் செவ்வாய்ப் பனிவரை அணங்கி னோடுந்
தத்துநீர் வேணிப் பெம்மான் றன்னடி யிணைக்கீழ்ச் சிந்தை
வைத்தவர்க் கிருமைப் பேறும் வழங்கிவீற் றிருக்கும் மன்னோ. 20

அத்தகைய திருக் கச்சி மயானச் சிவலிங்க வடிவில் அளவிடலாகாத பேரருட் பொலிவு தழைத்துப் பாம்பின் படமனைய அல்குலையும், சிவந்த வாயினையும் உடைய மலையரையன் மகளொடும் சடையிடைக் கங்கையைத் தரித்த பெருமானார் தம் திருவடிகளில் அன்பினை வைத்த அன்பர்களுக்குப் போகமும், பரபோகமும் வழங்கி விளங்கி வீற்றிருப்பர்.

சிவகங்கை வரலாறு

நிகழ்பெரு வேள்வி முற்றி நிறைந்தநெய்க் குண்டந் தன்னைத்
திகழ்சிவ கங்கைப் பேரால் தீர்த்தநா யகமாச் செய்து
புகழ்அப விரத நன்னீர் ஆடினான் புரமூன் றட்ட
இகழறு சீற்றத் துப்பின் ஈர்ந்துழாய்ப் பகழி வல்லான். 21

புகழுறும் சினத்துடன் முப்புரங்களையும் அழித்த வலிமையையும் தேனல் ஈரிய துழாய் மாலையை அணிந்த திருமாலாகிய அம்பையும் உடைய பெருமானார் நிகழ்கின்ற வேள்வியினை முற்றுவித்து நெய் நிறைந்த குண்டத்தினை விளங்குகின்ற சிவகங்கை என்னும் பெயரால் தீர்த்தங்களுக் கெல்லாம் தலைமையாம் பதந் தந்து புகழ்ச்சியை யுடைய அபவிரத நீராட்டை முடித்தனர்.

மறக்களிற் றடியின் ஏனை அடியெலாம் அடங்கு மாறும்
உறக்கும்ஆல் வித்தின் உள்ளால் ஒடுங்கிய வாறும் போலத்
திறப்படச் சிவபி ரான்செய் சிவகங்கைத் தடத்தின் அண்டப்
புறத்தன அகத்த தீர்த்த மியாவையும் பொலிய வைகும். 22

தறுகண்மையுடைய யானையின் அடியில் பிறவிலங்குகளின் அடிகள் அடங்குமாறு போலவும், செறிவுறும் ஆலமரம் விதையினுள் நுண்ணிதாய் ஒடுங்கிக் கிடக்குமாறு போலவும் பெருமானார் செம்மை பெற வகுத்த அச்சிவகங்கை தீர்த்தத்தில் அண்டத்தின் அகத்தும் புறத்தும் உள்ள தீர்த்தங்கள் யாவும் கூடிப் பொலிவுறும்,

அத்தடம் படிந்து மேனாள் அருந்தவ முனிவர் சில்லோர்
வித்தக மயானத் தெம்மான் அருளினால் வினையின் நீங்கி
முத்தியிற் கலந்தார் அன்ன முளரிநீர் இலஞ்சி மேன்மை
சித்தமா சகன்றீர் யாரே இற்றெனத் தெரிய வல்லார். 23

ஆணவ மலவலி அகலப்பெற்ற மாதவத்தீர்! முன்னாளில் அரிய தவ முனிவரர் சிலர் அச்சிவ கங்கையில் மூழ்கிச் சமர்த்தனாகிய பண்டனை அழித்த சதுரப்பாடுடைய திருக்கச்சி மயானத் தெம் பெருமானை வழிபாடுசெய்து திருவருளால் வினைகளினின்றும் நீங்கி வீடுபேற்றினை யடைந்தனர். அத் தகு தாமரைமலர்ப் பொய்கையின் பெருமையைஇவ் வளவினது என்று யாவரே வரையறுத்துக் கூற வல்லவராவர்?

கச்சி மயானப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-1901.

# திருவேகம்பப் படலம்

கலிநிலைத் துறை

கல்வித்தமி ழோர்புகழ் கச்சி மயானம் ஈதால்
தொல்லைத்தவத் தீர்இனித் தோமறு சீர்த்தி சான்ற
மல்லல்தலங் கட்கர சாமணித் தெய்வக் கோயில்
செல்வத்திரு வேகம்பஞ் சிந்தையுட் கொண்டு சொல்வாம். 1

தமிழ்க் கல்வியை உடையோர் புகழும் திருக்கச்சி மயானத்தின் வரலாறு இது வாகும். பல் பிறப்புக்களில் நிரம்பிய தவத்தையுடைய முனிவர்களே! வளமடைந்த பிற தலங்களுக் கெல்லாம் அரசுவீற்றிருக்கும் குற்ற மற்ற மிகுபுகழ் அமைந்த அழகிய தெய்வக் கோயிலாகிய செல்வத் திருவேகம்பத்தை மனத்துட் கொண்டு அதன் பெருமையைப் புகழ்வோம்.

படிமுறையானன்றி இவ்வொரு பிறவியிற் செய்த தவந்தானே அமையாதென்ப துணர்த்துதற்கு முற்செய் தவமென விசேடித்தார்' (சிவஞா. சூ. 8. அதி. 1. உரை.) என்னும் உரையைத் 'தொல்லைத் தவத்தீர்' என்புழி எண்ணுக. தியானித்தற் குரிய பொருளாகலின் 'சிந்தையுட் கொண்' டென்றனர்.

உலகத்தோற்றம்

மயானச்சுட ரின்வடி வான்மணி வண்ணன் தேறாத்
தியானப்பொருள் ஆக்கைக ளோடும் விராய சிந்தைத்
தயாஅற்ற பண்டன் றனைஅட்டபின் ஆவி யெல்லாம்
உயாஅற்றுட லோடிசை யத்திரு உள்ளஞ் செய்து. 2

நீலமணியை ஒக்கும் நிறமுடைய திருமாலானும் தெளியப் பெறாத தியானித்தற்குரிய பொருளாகிய திருவேகம்பப் பெருமானார் எல்லா உடம்புகளோடும் கலந்திருந்தவனும் உள்ளத்துள் இரக்கம் இல்லாதவனும் ஆகிய பண்டாசுரனை மயானத்துட் சுடரும் சுடர் வடிவினாலே அழித்த பின்னர் உயிர்கள் அனைத்தையும் வருத்தம் நீக்கிப் பண்டு போல உடம்புகளோடும் கூடத் திருவுள்ளத்துட் கொண்டு,

பகுப்பின்றி மன்னும் பழமாமறை தன்னை நோக்கி
வகுக்கும்படைப் பின்பொருட் டுத்தனி மாவ தாகிச்
செருக்குந்திறல் வல்ல மயானத்தின் மேற்றி சைக்கண்
தொகுக்குந்தளிர் பூகனி துன்ற வயங்கு கின்றான். 3

வன்னம், எழுத்தென் றுருக் கொள்ளாது விரியாது அழிவின்றி நிற்கும் பழைய பெருமையுடைய வேதத்தை நோக்கி, கூடிநிற்கும் நிலையினின்றும் வகுத்தலாகிய சிருட்டியின் பொருட்டு ஒற்றைமாமர-

மாகித் தளிர், பூ, கனி முதலியவாகக் கூடிநிற்கும் இவை செறிய, அழித்தற்குக் காரணமாய வலிமை மிக்க திருக்கச்சி மயானத்தின் மேற்குத் திசையில் விளங்குக என் றாணையிட்டனர்.

அனைத்தினுக்கும் முன்னுள்ள பரநாதம் பழமை யாயிற்று.

ஷை வேறு

*தாவ ரும்பழ மாமறை தம்பிரான் அருளான்*
*மேவ ருந்தனிச் சூதமாய் மயானத்தின் மேல்பாற்*
*பூவ ரும்பிமென் தளிர்கனி புதுமலர் துறுமி*
*ஓவ ருங்குளிர் நிழல்குலாய் ஓங்கிய தன்றே.* 4

கெடுதல் இல்லாத பழம் பெருமறை, உயிர்களின் தலைவராகிய பெருமானார் திருவருளாகிய ஆணையால் ஒப்பரிய ஒற்றை மாமரமாய் மெல்லியதளிர், அரும்பு, புதிய மலர், பழங்களாகிய இவை செறிந்து ஒழிவின்றிப் பரந்து குளிர்ந்த நிழல்திகழ்ந்து ஓங்கியது.

*கொன்றை மாலிகைச் சடைமுடிக் குழகன்அங் கதன்கீழ்த்*
*துன்றும் ஆனந்தப் பேரொளி இலிங்கமாத் தோன்றி*
*வென்ற நல்லெழில் விரிந்ததன் மெய்இடப் புறத்து*
*மன்றல் வார்குழல் இலளிதை மாதினை உயிர்த்தான்.* 5

கொன்றை மலர் மாலையையும் சடைமுடியையும் உடைய மூவாத இளையோன், அம்மாமரத்தின் அடியில் செறியும் பேரின்பப் பெருஞ் சுடர் கொண்ட சிவலிங்கத் திருமேனி கொண்டு நின்று காலத்தை வென்ற நல்ல அழகு பரந்த தன்வடிவின் இடப்புறத்தில் மணங்கமழும் நீண்ட கூந்தலையுடைய இலளிதை என்னும் பெருமாட்டியைத் தோற்றுவித்தனன்.

*வணங்கு நுண்ணிடைக் கிடர்செய மதர்த்துமே லெழுந்த*
*இணங்கு பூண்முலை இலளிதைப் பிராட்டியும் எழுந்தங்*
*கணங்கு வெம்பவக் கடலின்கின் றருட்கரை விடுக்கும்*
*கிணங்கொள் சூற்படை நெடுந்தகை திருவடி இறைஞ்சி.* 6

வளைகின்ற நுண்ணிய இடைக்குத் துன்பம் உண்டாக இறுமாந்து மேல் நிவந்து ஒன்றோடொன் றிணங்கிய அணி பூண்ட கொங்கையையுடைய இலளிதைப் பெருமாட்டியும் அப்பொழுது எழுந்து சூலப்படை ஏந்திய பெருந்தகையினுடைய, உயிர்களைக் கொடிய பிறவிக் கடலினின்றும் அருளாகிய கரையிற் சேர்க்கும் திருவடிகளை வணங்கி.

*விளங்கும் ஏகம்பம் மேவிய விமலவிண் ணவர்கள்*
*துளங்க ஆர்கலி முகட்டுவந் தெழுஞ்சுடு விடத்தைக்*
*களங்கு லாவஉண் டமைந்தருள் கனைகனே எனக்கு*
*வளங்கு லாவிய அருட்பணி வகுத்தருள் எனலும்.* 7

'விளக்கமுறும் திருவேகம்பத்தில் விரும்பி வீற்றிருக்கும் அமலனே! தேவர்கள் நடுங்கும் படி பாற்கடலிற் றோன்றிய சுட்டழிக்கும் விடத்தினை உண்டு திருக்கழுத்தினில் திகழ அமைத் தருளும் உயிர்த் துணையே! அடியேனுக்கு நலம் விளங்குகின்ற திருத் தொண்டினை வகுத்துரைத் தேவல் கொள்க என வேண்டலும்,

*நிரந்த நீள்உல குக்குபா தானம்நீ நிமித்தம்*
*அரந்தை தீர்த்தருள் செய்யும்யாம் ஆதலின் அணங்கே*
*கரந்த வையகம் பண்டுபோற் காண்டகு மாறுன்*
*சுரந்த பேரெழில் வடிவினில் தோற்றெனப் பணித்தான்.* 8

பெருமான், தெய்வப் பெண்ணே! நிரல்படி நீளும் உலகிற்கு முதற்காரணம் நீ. உயிர்களுக்குத் துன்பத்தை நீக்கி இன்பத்தை அருளும்யாம் நிமித்தகாரணம் ஆவோம். ஆதலின், ஒடுங்கிய உலகத்தை முன்போலப் புலப்படுமாறு உன்னுடைய ஊற்றெடுக்கும் பெருங்கருணையும், பேரழகும், சுரந்த வடிவினில் தோன்றச் செய்' எனப்பணித்தனர்.

உலகிற்கு முதற் காரணமாகிய மாயைக்கு ஆதாரமாதல் பற்றிச் சத்தியை முதற்காரண மென்றனர். முதற் காரணமாகிய கிழங்கினின்றும் தோன்றிய தாமரையை அக்கிழங்கிற்கு ஆதாரமாதல் பற்றிச் சேற்றில் தோற்றிய வென்னும் பொருள் படப் பங்கசம் என்றாற் போலக்கொள்க.

*அரவும் அம்புலிக் குழவியும் அலையெறி நதியும்*
*விரவு செஞ்சடைப் பெருந்தகை பணிந்தமெய் யருள்தன்*
*சிரமி சைக்கொடு செறிந்தபல் லுயிர்களும் முறையால்*
*பரவை நித்தில முறுவலாள் படைப்பவ ளானாள்.* 9

பாம்பும், பிறையும், கங்கையும் விரவியிருத்தற் கிடனாகிய சிவந்த சடையினையுடைய பெருமானார் ஆணையிட்ட மெய்யருளைச் சிரமேற்றாங்கிக் கடலிற் படு முத்தை ஒக்கும் வெள்ளிய பற்களையுடைய அம்மையார் முறையே பல்லுயிர்களையும் சிருட்டிப்பவராயினார்.

*எண்க ணாளனை எழில்வலக் கண்ணினும் பதும*
*வண்க ணாளனை மற்றிடக் கண்ணினும் நுதல்மேல்*
*ஒண்க ணாளனை நள்ளுடைக் கண்ணினும் உலவாப்*
*பெண்கள் நாயகி ஈன்றனள் முத்தொழில் பிறங்க.* 10

பிறப்பிறப் பில்லாத அம்மையார் எட்டுக் கண்களையுடைய நான்முகனை அழகிய வலக்கண்ணினும், காக்கும் வள்ளன்மை பூண்ட பதுமாக்கன் எனப் பெறும் திருமாலைஇடக்கண்ணினும், நெற்றிவிழியினையுடையஉருத்திர மூர்த்தியை நடுவிலே விளங்கும் நெற்றிக் கண்ணினும் ஆக, படைத்தல், காத்தல், அழித்தலாகிய முத்தொழில்களும் நிகழப் படைத்தனர்.

தழங்கும் அங்கியங் கடவுள்கா யத்திரிச் சந்தம்
முழங்கு சீர்இர தந்திர சாமம்முத் தோமம்
பழங்க ணின்மறை யோருட னயத்தினைப் பரிவின்
வழங்கு பேரருட் கருணைகூர் மதிமுகத் தளித்தாள். 11

இரங்கி அருளும் பேரருட்கருணை மீக்கூரும் மதியை ஒக்கும் திரு முகத்தில் ஒலியெழும் அக்கினிதேவனையும், காயத்திரிச்சந்தத்தையும், ஒலிக்கின்ற சிறப்பினையுடைய இரதந்திரமாகிய சாமத்தையும்,முத்தோமங்களையும், துன்பமில்லாதவேதியருடன் முகத்திற் படைத்தனர்.

காமர் இந்திரன் திரையிட்டுப் பெனக்கரை சந்தம்
தோமில் ஐந்துமூன் றுறழ்ந்ததோ மம்பெருஞ் சாமம்
தாம நீள்முடி மன்னவர் அவியினைத் தகைசால்
மாம ணிக்கலன் வயங்குமென் புயத்திடைத் தந்தாள். 12

மேன்மையும், பெருமையும் பொருந்திய மணிகள் கொண்டாக்கிய ஆபரணங்கள் விளங்கும் மெல்லிய தோள்களில் அழகிய இந்திரனையும், திரையிட்டுப்பெனச் சொல்லப் படுகிற சந்தத்தையும் குற்ற மில்லாத பதினைந்து தோமத்தையும், பிருகத் சாமத்தையும், மாலையையும், நீண்ட முடியினையும் பூண்ட சத்திரியர்களையும், அவியினையும் படைத்தனர்.

தக்க விச்சுவ தேவர்கள் சாகதச் சந்தம்
பொக்க மில்வயி ரூபமாம் புகலருஞ் சாமம்
தொக்க மேன்மையிற் பதினெழு தோமம்ஆன் வணிகர்
இக்கி ளந்தவை முழுவதுங் கவானிடத் தீன்றாள். 13

தகுதி வாய்ந்த விச்சுவதேவர்களையும், சாகதச் சந்தத்தையும், பொய்யில்லாத் வயிரூபம் எனப்பெறும் சொல்லுதற்கரிய சாமத்தையும், மேன்மை பொருந்திய பதினேழு தோமத்தையும், பசுக்களையும், வணிகரையும் ஆக இங்குக் கூறிய அனைத்தினையும் துடையில் தோற்றுவித்தனர்.

சந்த மாம்அனுட் டுப்புவை ராசமென் சாமம்
வந்த மூவெழு தோமம்வாம் புரவிபின் னவரைச்
செந்த ளிர்ப்பதத் தீன்றனள் இவர்க்கொரு தெய்வம்
தந்தி லாமையின் முன்னவர் இவர்தொழுந் தலைவர். 14

அனுட்டுப்புச் சந்தத்தையும், வைராச சாமத்தையும், இருபத்தொரு தோமத்தையும், தாவுகின்ற குதிரைகளையும், சூத்திரர்களையும் செவ்விய தளிரை ஒக்கும் திருவடியிற்றந்தனர். இவர்தமக்கொரு வழிபடு கடவுள் வரையறுக்கப்படாமையினுல் முதல் மூன்று வருணத்தவர்களே இவர்க்குத்தலைவராவர்.

ஏனைப் புல்மரம் முதலிய பூதகா ரியமும்
மேனிப் பால்உரோ மங்களின் உயிர்த்துமெய் யன்பின்
நானப் பூங்குழல் நாயகி மாந்தரு நீழல்
வானக் கங்கைதோய் முடிச்சடை வள்ளலைத் தொழுதாள். 15

ஏனையபுல்லும், மரமும் முதலிய பூதகாரியப் பொருள்களாகிய உடம்பின் வகைகளையும் திருமேனியில் உள்ள உரோமங்களிடமாகத் தோற்றுவித்துக் கத்தூரி தோய்ந்த பொலிவுள்ள கூந்தலையுடைய அம்மையார் மாமரத்தின் நீழலில் எழுந்தருளியுள்ள தூயகங்கை தங்கிய சடைமுடிவள்ளலை மெய்யன்பொடுந் தொழுதனர்.

தொழுத நங்கையைத் தூமடித் தலமிசைக் கொண்டு
முழுது மாகிய முன்னவன் மாந்தரு நிழற்கீழ்
விழுமணித்தவி சும்பரின் விளங்கிவீற் றிருந்தான்
கழுமல் நீங்கிஎவ் வுயிர்களுங் களிப்பொடு வளர்ந்த. 16

வணங்கிய அம்மையைத் தூய மடித்தலத்தில் இருத்திக் கொண்டு எல்லாப்பொருள்களுமாகிய உலகத்திற்கு முன்னுள்ளோர் மாமரத்தின் நீழலில் சிறந்த மணி ஆசனத்தின்மேல் விளங்கி வீற்றிருந்தனர். இவர் இங்ஙனமாகலின், எல்லாவுயிர்களும் துன்பம் நீங்கி மகிழ்ச்சியொடும் வளர்ந்தன.

மூவர் வரம்பெறல்

அந்த ணாளன்முன் மூவரும் இலளிதை யவள்பால்
வந்த மாத்திரை யேதுயின் றெழுந்தவர் மான
முந்தை வாலறி வெய்தினர் முதல்விதன் பதமும்
எந்தை பாதமுந் தொழுதெழுந் திறைஞ்சிஎத் தெடுப்பார். 17

பிரமன் முதலாகிய கடவுளர் மூவரும் இலளிதாதேவியினிடத்துத் தோற்றிய அந்நிலையே உறங்கி விழித்தவரை ஒப்ப வேள்வியில் அவியாக இடு முன்னர் விளங்கிய தூய அறிவினைஉடையராய் அம்மை அப்பர் திருவடிகளை வணங்கித் துதிசெய்தனர்.

அறுசீரடி யாசிரிய விருத்தம்

தரங்கவெண் புணரி கான்ற தழல்விடம் பருகி எம்மை
இரங்கிஅன் றளித்தாய் மற்றும் இன்றொரு பண்டன் றன்னால்
உரங்கெழும் அடியேம் ஆவி முழுவதும் உய்யக் கொண்டு
வரங்கிளர் கருணை கூர்ந்த வள்ளலே போற்றி போற்றி. 18

அலைகளையுடைய திருப்பாற்கடல் உமிழ்ந்த வடவானலத்தை ஒக்கும் விடத்தைப்பருகி அந்நாள் எங்களை அருள்செய்து காத்தனை. மேலும், இந்நாள் ஓர் பண்டாசுரனால் நேர்ந்ததுன்பம் நீக்கி வலியுடைய அடிமையேம் உயிர்கள் அனைத்தினையும் பிழைக்குமா றுட்கொண்டு மேன்மைமிகுந்த அருள் மீக்கூர்ந்த வள்ளலே வணக்கம்.

சைவச்செந் தழலின் யாங்கள் ஆகுதிச் சமிதை யாகச்
செய்வித்து வேள்வி யாற்றுஞ் சிவபிரான் அருளி னாலே
உய்வித்து மீள எம்மை உதவிய கருணை நாட்டத்
தெய்வப்பூங் கொம்ப ரன்ன செல்விநின் சரணம் போற்றி. 19

யாங்கள், செவ்விய சிவாக்கினியில் இடும் அவிப்பொருள்களாம் ஓம விறகாம்படி செய்வித்து வேள்வியைப் புரிந்த சிவபெருமான் திருவருளால் உய்யக்கொண்டு மீளவும் முன்போல எம்மைப் படைத்துதவிய அருள் நோக்குடைய தெய்வத்தன்மை அமைந்த பூங்கொம்பினை ஒத்த செல்வீ! நின்திருவடிகளுக்கு வணக்கம்.

அம்மையாய் அப்ப னாகிக் குருவுமாய்த் தெய்வ மாகிச்
சும்மைநீர்க் காஞ்சி வைப்பின் இருவகை உருவு தோற்றி
எம்மையும் ஆண்டு கொண்ட இருமுது குரவீர் அன்பர்
வெம்மனச் சுரும்பு வீழும் விரைமலர்ப் பாதம் போற்றி. 20

"அம்மையும், அப்பனும், குருவும், தெய்வமும் ஆகி ஒலியுடைய நீர்ப் பொய்கைகள் நிரம்பிய காஞ்சித்தலத்திடை நாயகன் நாயகி வடிவு புலப்படக் காட்டி ஒன்றுக்கும் போதாத எம்மையும் ஆட்கொண்ட தாய்தந்தையீர்! அன்பர்தம் விருப்புடைய மனங்களாகிய வண்டுகள் விரும்பும் மணம்கமழும் மலரை ஒக்கும் திருவடிகளுக்கு வணக்கம்."

மைந்தர்கள் குழறிப் பேசு மழலைமென் கிளவி வேட்கும்
தந்தையுந் தாயு மென்னத் தமியரேம் புகழ்ச்சி கொண்டு
புந்திமிக் குவகை பூப்பத் திருவருள் புரியீர் என்று
நைந்திரு விழிநீர் சோர நயந்திருந் துதிகள் செய்தார். 21

"மைந்தர்கள் குழறிப்பேசும் மெல்லிய குதலைச் சொற்களை விரும்பும் தந்தைதாயரைப்போல வெளிற்றறிவுடையோம் போற்றிய புகழ்ச்சியையும் பொருளாகக் கொண்டு உள்ளத்தில் பெருமகிழ்ச்சி பொலியத்திருவருளைப் புரிவீராக" என்று உள்ளம் நெகிழ்ந்து விழிகள் அன்புநீர் வார விரும்பித் துதிகள் பல பாடினர்.

இறைவனையும் இறைவியையும் முன்னும், பின்னும் ஒருங்கேயும் இடையில் தனித்தனியாகவும் போற்றி செய்தனர்.

மடங்கருங் காதல் மேன்மேல் வளர்ந்தெழக் குடந்தம் பட்ட
முடங்குகால் ஞிமிறு பாயும் முண்டகத் திறையை மாலை
அடங்கமு வுலகும் நீற்றும் அண்ணலை அருளின் நோக்கி
விடங்கனி மிடற்றுப் புத்தேள் வேட்டதென் உரைமின் என்றான்.

அடங்காத பேரன்பு மேலும் மேலும் முறுகி எழ வணங்கிய, வளைந்த காலையுடைய வண்டினங்கள் பாய்ந்துழக்கும் தாமரைமலரை இருக்கையாகவுடைய பிரமனையும் திருமாலையும் மூவுலகையும் ஒருங்கே நீறாக்கும் உருத்திரமூர்த்தியையும் அருளொடும் பார்த்து விடம் பழுத்த திருக்கழுத்தினையுடையபெருமானார் "நீவிர் விரும்பிய யாவை கூறுமின்" என்றருளினர்.

அவ்வண்ணம் அருளிச் செய்யக் கேட்டவர் அறைதலுற்றார்
கவ்வெனுங் கமலத் தோனும் அவ்வெனுங் கரிய மாலும்
மவ்வெனும் அரனு மாய மற்றெமை விழியின் ஈன்ற
இவ்வன்னை காமக் கண்ணி எனப்பெயர் பெறுக மன்னோ. 23

அவ்வாறு அருளுதலைச் செவியேற்றுத் தேவர் மூவரும், 'க' என்னும் சொற்பொருளாகிய அரனும், 'அ' என்னும் சொற்பொருளாகிய திருமாலும், 'ம' என்னும் பெயர்ப் பொருளாம் உருத்திரனுமாகிய எம்மைத் திருவிழிகளிற் றோற்றுவித்த இவ்வன்னையார் காமக் கண்ணி எனும் பெயராற் பொலிவுறுக."

வீராட்டகாசப்படலம் 38 ஆம் செய்யுளைக் காண்க.

சேந்தமென் தளிர்கள் கோதித் தீங்குயில் இனிது கூவும்
ஏந்திணர்ச் சாகை தோறும் இளநறா ஒழுக்கி வாசப்
பூந்துகள் உகுத்துச் சீதப் புதுநிழல் விரிக்குந் தெய்வ
மாந்தரு வடியின் நீவிர் வைகலும் வதிக என்றார். 24

"சிவந்த மெல்லிய தளிர்களைக் கொழுதி இனிய குயில் கேட்போர்க்கு இன்பம் உண்டாகக் கூவுதற்கிடனாகிய ஏந்திய பூங்கொத்துக்களையுடைய கிளைகள் தோறும் பசுந்தேனைத்துளித்து மணமுடைய மகரந்தப் பொடியைச் சிந்திக் குளிர்ச்சி பொருந்திய புதிய நிழலைப் பரப்பும் தெய்வத்தன்மையுடைய மாமரத்தின் அடியில் நீவிர் எந்நாளும் வீற்றிருக்க" எனவேண்டினர்.

தவளவெண் ணீற்று மேனித் தலைவன்அவ் வரங்கள் நல்கி
இவறிமற் றவர்கள் மீட்டும் இணைக்கரங் குவித்து வேண்டப்
புவனம்ஓர் மூன்றும் உய்யப் புதுநிழல் மாவின் மூலத்
தவிர்ஒளி மயமாய்த் தோன்றும் அருட்குறி மேன்மை விள்ளும். 25

மிக்க வெள்ளிய திருநீற்றினை மேனியிற் றாங்கிய தலைவராகிய திருவேகம்பர் அவ்வரங்களை வழங்கியபின், மேலும் அம் மூவரும் விரும்பிக் கைகளை அஞ்சலி செய்து வேண்டுதலின், ஒப்பற்ற மூவுலகங்களும் போற்றிப் பிழைக்குமாறு புதிய நிழலையுடைய மாவின் அடியில் விளங்குகின்ற ஒளிவடிவாய்த் தோன்றும் சோதிலிங்கத்தின் சிறப்பினைத் திருவாய் மலர்வர்.

திருவேகம்பப் பெயர்மாட்சி

எண்சீரடி யாசிரிய விருத்தம்

இன்னி சைச்சுரும் புளர்மலர்த் தொடையல் இணங்கு தோட்டுணை மைந்தர்காள் கேண்மின், மன்னு ருத்திரன் ஒருவனே பிரமம் ஒன்று மற்றிலை என்பது துணிபால், பன்னு மெய்ப்பொருட் பிரமமாம் வேதம் ஒற்றை மாவெனப் பணைத்தது கண்டீர், அன்ன தற்கிறை யாகிய யாமே இலிங்க மாய்அதன் அடித்தலத் துறைகேம். 26

"இன்னிசையை எழுப்பும் வண்டுகள் உழுகின்ற மலர் மாலை பொருந்திய தோள்களையுடைய மக்களே! போற்றிக் கேளுங்கள்: "திரிபின்றி நிலைபெறும் உருத்திரன் ஒருவனே பிரமம். வேறொரு பொருளும் பிரமமாதல் இல்லை என்பது தெளிவாம். பேசப் பெறும் மெய்ப் பொருளையுடைய பிரமமென்னும் பெயரையுடைய வேதம் ஒற்றை மாமர மாகக் கிளைத்தது காணுங்கோள்! அவ்வேதத்திற்குத் தலைவ ராகிய யாமே சிவலிங்கவடிவுகொண்டு அதன் அடியில் எழுந்தருளி யுள்ளோம்."

ஏதம் நீக்குசொல் வடிவினுந் தனிமா எனப்ப டுந்தரு வடிவி-னும் அதற்கு, நாதர் யாமெனத் தெளிமின்இங் கெமது நாமம் ஏகம்ப நாதன்என் றுரைப்ப, ஆதி மந்திரம் அஞ்செழுத் திதுவே ஐம்பெ ருங்கொடும் பாதகம் அறுக்கும், ஓதும் ஐவகைப் பிரமமந் திரத்தும் அஞ்செ ழுத்தினும் உயர்ந்ததிம் மனுவால். 27

"துன்பத்தைப் போக்கும் சொல்வடிவினும் ஒற்றைமா எனப் பெறும் மரவடிவினும் அவ்வேதத்திற்கு யாமே நாதர் என்று கூறுவர். காலமும், தலைமையும் ஆகிய ஆதிமந்திரம் இதுவே. ஈ தஞ்செழுத்தே. ஐந்து பெரிய கொடிய மலங்களாகிய மரங்களை அறுக்கும் வாளாகும். ஓதப் பெறும் பஞ்சப்பிரம மந்திரம் சிறந்தது.

ஏகாம்ரநாத: என்பது ஏகம்பநாதன் எனத்தமிழில் ஐந்தெழுத் தாய் வழங்கும். ஏக+ஆம்ரம்=ஏகாம்ரம்=ஏகாம்பரம்—ஒற்றை மாமரம்.

விதிவ ழாதபல் லுறுப்புடை மறையின் மிக்க தாகுங்கா யத்-திரி அதனின், அதிகம் அஞ்சமா மந்திரம் அதனின் ஆறி ரண்-டெழுத் ததனின்எட் டெழுத்தாம், பதியும் மேன்மைஎட் டெழுத்-தின்அஞ் செழுத்துக் கோடி கோடிமேம் பட்டதஞ் செழுத்தின், நுதலும் ஏகம்ப நாதமா மனுத்தான் நூறு கோடியின் மிக்க-தென் றுணர்வீர். 28

முறைபிழாத பல அங்கங்களையுடைய வேதத்தில் காயத்திரி மந்திரம் மிக்க சிறப்பினதாகும். அதனினும் மிக்கது 'அசபா' என்னும் பெருமந்திரம் ஆகும், அதனின் மிக்கது பன்னிரண்டெழுத்தாலமைந்த 'ஓம் நமோ பகவதே வாசு தேவாய' என்னும் மந்திரம். எட்டெழுத் தாலாய 'ஓம் நமோ நாராயணாய' என்னும் மந்திரம் முன்னையதிற் சிறந்தது ஆம்.

மேன்மை பொருந்தும் எட்டெழுத்தினைக் காட்டிலும் 'திருவைந் தெழுத்து' என்னும் மந்திரம் பல கோடி உயர்வுடையதாம். எண்ணப் பெறும் ஏகம்பநாத மகாமந்திரம் அஞ்செழுத்தைக் காட்டிலும் நூறு கோடியினும் மிக்கது என்றறிமின்."

*அன்ன தன்மையின் மனுஎவற் றினுக்கும் அதிக மாகிய ஏகம்ப நாதன், என்னும் மந்திரம் இயம்புநா வுடையாற் கிப்பி றப்புறும் பெரும்பயன் எய்தும், பன்ன ரும்பெருங் கீர்த்தியும் ஊக்கப் பாடும் ஆக்கமும் ஆயுளும் வளரும், மன்னு கல்வியுங் கேள்வியும் ஒழுக்கும் வழுக்கி லான்அவ னேஎனத் துணிவீர்.* 29

அத்தன்மையினால் மந்திரங்கள் எவற்றினுக்கும் மேலாகிய ஏகம்பநாதன் என்னும் மந்திரத்தைக் கணிக்கும் நாவினர்க்கிப்பிறப்பில் மிகு பெரும் பயன்கள் வந்து கூடும். சொல்லற் கரிய பெரும்புகழும், மன எழுச்சியும், செல்வமும், ஆயுளும் வளர்ச்சியுறும். நிலைத்த கல்வியும், கேள்வியும், நல்லொழுக்கமும் ஆகிய இவற்றைத் தப்பாது பெறுவோனும் அவனேயாவன் என உறுதியாய் உணர்வீர்.

*கன்னி தந்தைதாய் வேதியர்ச் செகுத்தோர் கள்ளு மாந்துநர் கள்ளுநர் குரவன், பன்னி மாணலம் விழைந்தவர் மற்றைத் தீர்வு காணரும் பழிவினை விளைத்தோர், என்னர் ஆயினும் ஏகம்ப நாதன் என்னும் மந்திரம் ஒருமுறை கணிப்பின், துன்னும் வெங்கொடும் பாதகம் அனைத்தும் துனைவின் அங்கவர் தம்மைவிட் டோடும்.* 30

கன்னி, தாய், தந்தை, வேதியர் ஆகிய இவரைக் கொலை செய்தோர் ஆக, கள்ளைப் பருகினோராக, களவு செய்தோராக, தேசிகன் மனைவியை விரும்பினோராக, ஏனைய கழுவாய் காணலாகாத பழி பாவங்களைப் புரிந்தோராக எவ்வியல்பினராயினும் 'ஏகம்பநாதன்' என்னும் மந்திரத்தை ஒருமுறை எண்ணினராயின் பற்றும் மிகக்கொடிய பாவங்கள் யாவும் அவர்களை விரைவின்விட்டு ஓட்டெடுக்கும்.

*அறப்ப யன்பொருள் இன்பம்வீ டென்று அனைத்தும் ஓதுநர்க் களிக்கும்இம் மனுவை, இறப்ப வந்துமுற் றிரும்பசிப் பிணியின் ஈண்டி ஆருயிர் கவற்றும்வல் விடரின், மறப்பி னுயினுங் கிளக்கவல் லுநரே மற்றெ மக்குமிக் கினியவர் கண்டீர், சிறப்ப இம்முறை மனுஇதன் பெருமை தெரிந்து கூறினர்க் கின்பவீ டளிப்பேம்.* 31

'அறப்பயனையும், பொருளையும், இன்பத்தையும், வீட்டினையும் தன்னை ஓதுநர்க்கு வழங்கும் இம்மந்திரத்தை யாவும் கெட வந்து முற்றுகையிடும் பெரும் பசிநோயினும், அரிய உயிரைப் பெருகி வருத்தும் கொடுந்துன்பினும் மறந்தாயினும் கூறவல்லவர் யாவர்? அவரே எமக்குப்பெரிதும் இனியவர் ஆவர். இவ்வியல்பினையுடைய மந்திரத்தின் பெருமையை நன்கு தெரிந்து கணிப்பவர்க்குப் பேரின்ப வீட்டினை வழங்குவோம்.

*என்று மாவடி மூலத்தெழுந் தருளும் இலிங்க மேன்மையை எடுத்துரைத் தருள, ஒன்றும் ஆனந்த உததியின் மூழ்கி*

ஒன்ன லார்குடர் குழம்பியுள் வெதும்ப, வென்ற கூர்ம்படைத் தாணுமா லயனு விளம்பு மூவரும் விரைத்தபூந் தொடையல், கொன்றை வார்சடை முதல்வனுர் கமலக் கொழும லர்ப்பதந் தொழுதுபோற் றிசைத்து. 32

என்று மாவடியில் முளைத்தருளும் சிவலிங்க மேன்மையை உயர்த்துக் கூறியருளப் பொருந்தும் பேரின்பப் பெருங் கடலில் திளைத்துப் பகைவர் நடுங்க வென்ற கூரிய மழுப்படையையுடைய உருத்திரரும், திருமாலும், பிரமனும் ஆகிய மும்மூர்த்திகளும் மண முடைய கொன்றை மலர்மாலையைச் சூடிய முதல்வர் தம் திருவடிகளைத் தொழுது துதித்து,

காட்டின் நாடகங் குயின்றருள் இறைவ கம்ப மேவிய கருணையங் கடலே, மோட்டு நீர்ப்புவி வியத்தகும் இனைய முதுந கர்ப்பெருந் தன்மையுந் தனிமா, ஈட்டு மேன்மையும் எமக்குரைத் தருளாய் என்று வேண்டலும் ஈர்ந்துணர் இதழித், தோட்டு மாலி-கைச் சடைமுடிக் குழகன் தொன்ன கர்த்திறங் கேண்மின்என் றியம்பும். 33

'பெருமயானத்தில் நடித்தருளும் பெருமானே! கருணை வெள்ளமே கடல்சூழும் உலகில் அற்புதத் தலமாகிய காஞ்சியின் பெருமையையும். மாந்தருவின் மாட்சிமையையும் உரைத்தருளுக என வேண்டலும் கொன்றைமலர் மாலையர் காஞ்சியின் சிறப்பினை அருள் செய்வர்.

காஞ்சித் திருநகர் மாட்சி

கறங்கு வண்டிமிர் கமலமுந் துழாயுங் கடுக்கை மாலையுந் துயல்வரு புயத்தீர், பிறங்கு கவ்வெனும் மொழிப்பொருள் பிரமம் பிரமமானயாம் அஞ்சிக்கப் படலால், உறங்கி டாப்புகழ்க் காஞ்சி-என் றுரைக்கும் ஒருதி ருப்பெயர் எய்தும்இந் நகரம், அறங்க ரைந்தநால் எமைப்பரம் பிரமம் அகில காரணம் என்பது தெளிவீர். 34

'வண்டுகள் இமிரும் தாமரையும், துளவமும், கொன்றையும் ஆகிய இவற்றின் மாலைகள் தவழ்கின்ற தோள்களையுடைய மூவீர்! 'க' என்னும் மொழிப் பொருள் பிரமம் என்பதாம். பிரமமாகியயாம் வழிபடப் பெறுதலினுல் இவ்விடம் காஞ்சி எனப் பெயர் பெறும். அறங்களை உணர்த்தும் மறைகள் எம்மைப் பரப்பிரமம் எனவும், அகிலத்திற்குக் காரணன் எனவும் உணர்த்துதலைத் தெளிமின்., காரணன் நிமித்தகாரணன் என்க. க—அஞ்சி பிரமம் அஞ்சிக்கப்பட்ட இடம்.

இலகு வாணகை அரிமதர் மழைக்கண் இருண்ட வார்குழல் வேய்மருள் பணைத்தோள், கலப மாமயில் இயல்எழில் மடவார் உந்-தித் தானத்தைக் காஞ்சிஎன் றுரைப்ப, சுலவு வெண்டிரைப் பனிக்கடல் உடுக்கைத் தொல்லை நானில மடக்கொடி தனக்குக், குலவு காஞ்சிநற் றானமாய்ப் பொலிந்த கொள்கை யானும்அத் திருப்பெயர் வழங்கும். 35

மூங்கிலை ஒக்கும் பருத்த தோளும், தோகையையுடைய மயிலின் சாயலும் அழகும் உடைய மகளிருடைய கொப்பூழிடத்தைக் 'காஞ்சி' எனக் கூறுவர். திரைகள் மறித் துலவும் கடலை ஆடையாகவுடைய பூமி தேவிக்குக் காஞ்சி நகரம் நாபியாய்ப் பொலிதலானும் அப் பெயர் சிறக்கும்.

மற்றுங் கவ்வெனல் சென்னியோ டின்ப மலர வன்றனை உணர்த்தும்அஞ் சித்தல், சொற்ற பூசனை அடைவுமாம் யாருஞ் சென்னி மேற்கொடு தொழத்தகுஞ் சிறப்பால், பற்றி வைகுநர் பேரின்பம் உறலாற் பங்க யத்தவன் வழிபட லானும், பெற்ற தாகும்இத் திருப்பெயர் இதனாற் பிரம லோகம்என் றுரைக்கவும் படுமால். 36

'க' எனின், சிரம், இன்பம், பிரமன் என்னும் பொருள்களைப் பயக்கும். அஞ்சித்தல்' பூசித்தலின் பொருளைப் பயக்கும். யாவரும் சிரமேற் கொண்டு போற்றத்தகுஞ் சிறப்பின தாய்க் கடைப் பிடிப்போர் பேரின்பத்தைப் பெறுதலானும், பிரமன் வழிபடலானும் 'காஞ்சி' எனப் பெறும். இதனாற் பிரமபுரம் எனவும் பேசப் பெறும்.

வீடு பேற்றினர் தேவர்என் றுரைப்ப விழையும் இந்நகர் வரைப்பிடை வீடு, கூடும் வாழ்க்கையர் நிறைதலின் தேவ புரமெ னப்படுங் கொடுவினைத் திறத்தால், பாடு சான்றபோர் புரிவருந் தகவின்அயோத்தி என்னவும் பகரும்இந் நகரம், நீடு மன்னவர் உறைதரும் அயோத்தி நிகழும் முத்தருக் குறைஇடம் அன்றால். 37

வீடு பெற்றுத் தெய்வத்தன்மை உடையோர், தேவர் எனப் புலவரால் போற்றப் பெறுவர். இந்நகர்க்கண் வீடுபேற்றிற்குரிய அதிகாரிகள் நிறைந்துறைதலின் 'தேவபுரம்' எனக்கூறப்படும். கொடிய தீவினை வலி தாக்குதலாகாமைக்கு இடனாகலின் இந்நகரம் அயோத்தி எனப்பெறும். மன்னர் உறையும் இடமாய்ப் பகைவர் போர் செயற்குக் கூடாத அயோத்தியினும் வினை போர் புரியலாகாத சீவன் முத்தருறை யும் இடமாம் அயோத்தியாகிய இந்நகர் ஏற்றமுடைத் தென்க.

யோத்தி-போர் செய்யப்படுவது; அ, எதிர்மறை.

சுவர்க்கம் எய்தினர் தேவர்என் றோதுஞ் சுருதி யால்அது நாகநாடன்று, நவிற்று ருத்திர லோகமே சுவர்க்க மாகும் ஆதலின் நலங்கெழுஞ் சோதி, நிவக்கும் என்றிடும் அயோத்திநீள் பிரம லோகம் நீடொளித் தேவமா புரமும், புவிக்குள் மேதகு காஞ்சியே யன்றிப் புவனம் மூன்றினும் வேறிலை கண்டீர். 38

'சுவர்க்கத்தை எய்தினவர் தேவர் என்று வேதம் கூறும். விண்ணவர் நாட்டைக் குறிப்பதன்று அது; சிவலோகமே உண்மையிற் சுவர்க்கமாகும். ஆதலால், நன்மை கெழுமிய சோதி மேம்படும் எனப்

பெறும் அயோத்தியும், பிரம லோகமும், பேரொளியையுடைய தேவ புரமும் புவியிடை மேம்பட்ட காஞ்சியே அல்லாமல் மூவுலகினும் வேறில்லை என்றறிதிர்.'

மற்றிடங்கள் உபசாரத்தானும், இக்காஞ்சி உண்மையானும் பொருந்தும் என்க.

இத்தி ருப்பெருங் காஞ்சியின் எம்மை மறலிக் கஞ்சுநர் இகபரம் விழைந்தோர், நித்தம் அன்பொடு வழிபடூஉப் பழிச்ச நிறைந்த பேரருட் கருணைபூத் துறைகேம், மெய்த்த மாமறை முழுது மிவ் வாறு விளம்பும் ஆதலின் மற்றெமக் கினிய, உத்த மப்பதி இதுஎனத் தெளிமின் ஓங்கு மாந்தருப் பெருமையும் உரைப்பாம்.

'இயம பயத்திற்கு அஞ்சுவோரும், இம்மை மறுமை இன்பங்களை விரும்புவோரும் நாடோறும் வழிபட்டுத் துதி செய்ய நிரம்பிய பெருங் கருணை மிகத் தழைத்து அருள் செய்ய இந்நகரில் விளங்கி வீற்றிருக் கின்றேம். மெய்ந் நூல்கள் முழுவதும் இவ்வாறே கூறும். எமக்கினிதா கிய உத்தமத் தலம் இதுவே எனத் தெளிமின். உயர்ந்த மாந்தருவினது பெருமையையும் இனி உணர்த்துவோம்.

மாந்தருவின் மாட்சி

மீது மன்னிய மூலமுங் கிழக்கு நோக்கு சாகையு மாய்விரை கமழும், பாத வந்தனை உணர்ந்தவன் வீடு பற்றும் ஆங்கது பலகனி படைத்துச், சீத வார்புனல் ஒழுக்கறுக் கம்பைத் திருக திக்கரை மருங்கொலி வேதச், சூதமாமர மெனத்திகழ்ந் தொளிருந்தொல்லை வையகம் பெரும்பயன் படைப்ப. 40

'மேலே பொருந்திய:வேரும் கீழே நோக்கிய கிளைகளுமாம் மணங் கமழும் மரத்தினை உணர்ந்தவன் வீட்டினைத் தலைப்படுவன். அம்மரம் பல பழங்களைத் தோற்றுவித்துக் குளிர்ந்த நீர் இடையறாது பெருகும் கம்பா நதிக் கரையில் வேத மாமரமாகிப் பழைய பேருலகம் உறுதிப் பயன்களை அடையுமாறு விளங்கும்.

ஏழி ரட்டிய கல்வியும் அதன்மேல் மல்லி கைக்கொடி எனப்- படர்ந் தமரும், பாழி விச்சைகட் கிறைவியாங் காமக் கண்ணி அத்தரு பசுங்கொடிக் கினியாள், ஊழி ஈற்றினும் உலப்பருந் தகைசான் றோங்கு மாவினுக் குரிமையம் யாமே, ஆழி ஏந்திய நாரணன் விரிஞ்சன் அரன்எனப்படும் அன்புடைப் புதல்வீர். 41

வேதம் நான்கும் ஒழிந்த பதினன்கு வித்தைகளும் மல்லிகைக் கொடியாய் அம்மரத்திற் படர்ந்து தழைத்து நிலைபெறும். பெருமை யும் வலிமையும் உடைய பதினன்கு வித்தைகளாகிய பசிய கொடிக்குக் காமாட்சியம்மையே தலைவி ஆவர். ஊழியினும் அழிவின்றி ஓங்கும் அம்மாமரத்தினுக்கு யாமே தலைவர் ஆவோம்' பிரமன், மால், உருத் திரன் எனம் பெறும் அன்புடைய புதல்வீர்காள்!

*மாறி லாமறை எமதுவா சகமாம் வாசகத்தொடு வாச்சியந் தனக்கு, வேறு பாடில்லை ஆதலின் எமக்கும் இனைய மாவிற்கும் வேறுபா டில்லை, ஈறி லாஇதன் மூலத்தின் என்றும் இலிங்க மூர்த்தியாய் உறைகுதும் நெருநல், காறும் யாவரும் கண்டிலர் இந்நாட் கவுரியோடுநீர் காணவீற் றிருந்தேம்.* 42

முன்னொடு பின் முரணில்லாத வேதம் எம்மைப் பொருளாக உடைய நூல். சொல்லுக்கும் பொருளுக்கும் ஒற்றுமையுண்மையின் எமக்கும் இம்மாவினுக்கும் வேற்றுமையில்லை. அழிவில்லாத இதன் அடியில் சிவலிங்கவடிவில் என்றும் வைகுவோம். நேற்று வரையிலும் ஒருவர்க்கும் காணப் படாத யாம் இன்று நீர் கண்டு வழிபட உமை யம்மையோடும் வீற்றிருக்கின்றேம்.

*அகில நாமமும் எமக்குரிப் பெயராம் அவற்றி னும்பவன் முதற்பெயர் சிறப்பாத், தகும்அ வற்றினுஞ் சம்புவே மயோபு சங்க ரன்மயக் கரன்சிவன் மற்றை, இகழ ருஞ்சிவ தரனெனும் பெயர்கள் இனிய வாகும்அங் கெவற்றினும் மேலாய்ப், புகழ்ப டைத்தஏ காம்பர நாதன் எனப்பு கல்பெயர் எமக்குமிக் கினிதாம்.*

எல்லாப் பெயரும் எமக்குரியனவே ஆயினும் பவன் முதலாம் திருப்பெயர்கள் சிறப்புடையன. அவற்றினும் சம்பு, மயோபு, சங்கரன், மயக்கரன், சிவன், போற்றப் பெறும் சிவதரன் என்னும் திருநாமங்கள் ஏற்ற முடையன. எவற்றினும் மிக்கதாய்ப் புகழ் படைத்த ஏகாம்பர நாதன் எனப் பெறும் பெயர் எமக்கு மிகவும் இன்பந்தருவதாகும்.

*இன்ன தன்மையிற் கான்முளை முதலோர்க் கித்தி ருப்பெய ரிட்டழைப் பவர்க்குத், துன்னும் வல்வினை முழுவதும் அகலத் தொலைத்து முத்தியும் செல்வமும் அளிப்போம், பன்ன ருந்தனி மந்தணம் உமக்குப் பகர்ந்து ளேமெனப் புண்ணவன் இறுப்ப, அன்ன மூவரும் உவகைமீக் கிளைப்ப அம்மை அப்பரை வணங்கிவே றுரைப்பார்.* 44

இவ்வியல்பினால் மக்கள் முதலோருக்கு இத்திருப் பெயரைச் சூட்டி வழங்குவோர்க்குச் செறியும் கொடிய வினைகளை முற்றவும் கெடுத்துப் பேரின்பத்தையும் வழங்குவோம். சொல்லலாகாத இரகசியத்தைத் திருவாய்மலர்ந்தோம் எனச் சிவபிரான் அருள அம்மூவரும் மகிழ்ச்சி மீக்கூர்ந்து அம்மை அப்பரை வணங்கி வேண்டுவார்.

கம்பாநதி மாட்சி

எழுசீரடி யாசிரிய விருத்தம்

*கன்னி மாநதி கம்பை ஒன்றிவண் உள்ள தென்றருள் செய்தனை; இன்ன காரணம் என்று தேறிலம் இறைவ னேஎன எம்பிரான், முன்னெ ழுந்து மதர்த்து வீங்கி முகிழ்த்த மென்முலை அம்பிகை, தன்னை நோக்கி மகிழ்ந்து மைந்தர்கள் கேண்மின் என்றது சாற்றுவான்.* 45

'அழிவில்லாத கம்பாநதி ஒன்றுள்ளது இங்கு என்றருள் செய்தீர். அது புலப்படாமைக்குக் காரணம் அறிகிலோம். (அதனை அறிவித்தல் வேண்டும்) பெருமானே!' என வேண்டப் பெருமான் அம்மையார் திரு முகத்தை நோக்கி உவகை மீக்கூர்ந்து (மும்மூர்த்திகளை) 'மக்களே! கேளுங்கள்' என விரித்தருள்வார்.

வடிவம் எட்டு நமக்க மைந்தன மறைஉ ரைக்கும் அவற்றுள்ஓர்
வடிவ மாம்புனல் உலகெ லாம்இது தூய்மை செய்யும் வனப்பது
வடிவம் உற்றவர் உயிர்த ளிர்ப்ப வழங்குமற்றிது மாநதி
வடிவுகொண்டிவண் ஒழுகு கின்றது மன்னு யிர்த்தொகைஉய்யவே

அட்ட மூர்த்தங்கள் நமக்கு அமைந்தன ஆகும். வேதங்கள் புகழும் அவற்றுள் நீர் ஓர் வடிமாகும். உல குயிர்களின் அழுக்கைப் போக்கித் தூய்மை செய்யும் சிறப்பினது. பிறந்தோர் உயிர்தழைக்கு மாறு அருளும் இது நதி வடிவாய் உயிர்கள் நற்கதியை அடையுமாறு ஓடும்.

இந்ந திப்புனல் எம்மை நேர்வர யார்வி ழிக்கும் அகப்படா
துன்ன ருஞ்சிவ யோக சிந்தையுள் யாம்உ றைந்திடு மாறுபோல்
வன்னி லத்தின் அகத்து வார்ந்து வழங்கு கின்றது காண்மினோ
கன்னி யாறிது கம்பை என்றொரு கார ணப்பெயர் பெற்றதே. 47

'இந்நதி நீர் எம்மைப் போல யாவர்கண்ணிற்கும் புலப்படாது. யாம் சிவயோகியர் சிந்தையுள் உறையுமாறுபோல நிலத்தினுள் அந்தர் வாகினி யாய்ச் செல வுடையது. அதனைக் காணுங்கோள். கம்பை நதி என்னும் காரணப் பெயரைப் பெற்றது இது.

அறுசீரடி யாசிரிய விருத்தம்

பன்னுபா என்றல் தூய்மை பருகுதல் காப்புங் கூறும்
கன்னிவான் கங்கை யாதி கம்மெனும் புனல்கள் தம்பால்
துன்னிமூழ் குநர்வெம் பாவத் தொகுதிமெய் அழுக்குந் தீரத்
தன்னிடை முழுகித் தூய்மை தாங்கலாற் கம்பை என்ப. 48

பேசப்பெறும் பா என்னும் சொற்குப் பொருள் தூய்மை. பருகுதல், காத்தல் என்பன ஆகும். 'கம்' என்னும் சொற் பொருளாகிய நீர்கள் (கங்கைமுதலியன) தம்மிடத்து மூழ்கியோர் பாவச் சுமைகளையும் அழுக்கையும் போக்கிக் கொள்ளத் தன்கண் மூழ்கிப் புனிதம் அடை தலால் கம்பை என்று கூறுவோர் உணர்ந்தோர்.

கம்மெனுஞ் சிரமேல் தீண்டின் தூய்மைசேர் கவினல் உண்டோர்
கம்மெனும் ஆவி தம்மைக் காத்தலான் மூழ்கி னோரைக்
கம்மெனும் பெருவீட் டின்பம் நுகர்விக்குங் காட்சி யானும்
கன்மநோய் அறுக்கும் இந்தத் தடநதி கம்பை யாமால். 49

சிரத்தின் மீது தெளித்தும், பருகியும், மூழ்கியும் தீர்த்தப்பயனைப் பெறுவோர்க்குத் தூய்மை செய்யும் சிறப்பினாலும், உயிரைக் காத்தலாலும், முத்தியை வழங்கலாலும் வினைநோயைப் போக்கும் திறத்தினாலும் இந்நதி கம்பை எனப்படும்.

கம் என்னும் சொல் சிரம், உயிர், முத்தி, நீர் என்னும் பொருள் தரும். சீதா, தயா, கருணா, கிருபா என்பன ஆகார ஈறுகள் ஐகாரம் ஆதல் போலக் கம்பா கம்பை எனத் தமிழில் இடம்பெறும்.

எழுசீரடி யாசிரிய விருத்தம்

கங்கை மாநதி யமுனை வாணி முதல்க வின்பெறு நதியெலாம்
பொங்கு வெண்டிரை எற்று கம்பை நறும்பு னற்கிணை எய்துறா
மங்க லந்தரு கம்பை மென்புனல் தோய்ந்த காற்று வழங்கிடத்
தங்கண் மேவிய புன்ம ரங்களும் இன்ப முத்தியை அண்ணுமால்.

கங்கை, யமுனை, சரசுவதி முதலிய தெய்வ நதிகள் கம்பை நதிக்கு ஒப்பாகா. மங்கலத்தைச் செய்யும் கம்பை நதியிற் படிந்துவந்த காற்றுத் தீண்டிய புல்லும், மரங்களும்கூட முத்தியைப் பெற்றுப் பேரின்பத்தில் திளைக்கும்.

யோக நன்னிலை யிற்ற வத்தின் வழீஇயி னர்உயர் கம்பையின்
மோக மில்கய லாதி யாகி உயிர்த்து முத்தியின் நண்ணுவார்
போகும் அக்கரை யிற்கி ளைத்த புதல்ம ரங்கள் உருத்திர
லோக நின்று வழூஉம் உருத்திர ராகும் உண்மை உணர்ந்திடீர். 51

யோகமும், தவமுமாகிய இந்நன்னிலைகளினின்றும் பிறழ்ந்தவர் உயர்ந்த கம்பாநதியில் நீர்வா ழுயிர்களாய் அவா முதலிய இன்றி உயிர்வாழ்ந்து முத்தியைத் தலைப்படுவர். உருத்திரலோகத்தினின்றும் பிழையால் வழுக்கிய உருத்திரர் நீண்ட அதன்கரையில் செடி, கொடி, மரங்களாகக் காட்சியளிக்கின்றனரென உணர்மின்.

யாண்டி றப்பவர் கட்கும் இப்புனல் இறுதி வேலையின் உச்சியில்
தீண்டு மேல்அவர் முத்தி எய்துவர் தீஞ்சு வைஅமிழ் துண்பவர்
ஏண்ட குந்திறல் அமர ராகுவர் இனைய பூம்புனல் உண்பவர்
ஆண்ட நம்முட னுவர் ஆதலின் அமிழ்தின் மிக்கது கம்பைநீர். 52

எங்கே இறப்பவர் ஆயினும் சிரமிசை இத்தீர்த்தம் படின் அவர் முத்தியை அடைவர். அமிழ்தம் உண்பவர் தேவரே யாவர். இந்நீரைப்பருகினோர் இறைவன் திருவடியைத் தலைப்படுவர். ஆகலின், அமிழ்தத்தின் மிக்கது இந் நீர்.

காட்சி எய்தரு மேன்மை சான்றுயர் கம்பை வார்புனல் ஆற்றினால்
ஆட்சி எய்திய பதிஎ வற்றினும் அதிக மாயது காஞ்சியூர்
மீட்சி யில்புகழ் இவ்வி ரண்டினும் வேறெ மக்குள வேணவா
மாட்சி பெற்றுறுகங்கை காசியின் வைத்தி லேம்இது மெய்ம்மையே.

புறக் கண்ணிற்குப் புலனாகாத இக்கம்பாநதியினால் இறைவன் அரசு வீற்றிருக்கும் ஏனைய தலங்களினும் காஞ்சியே ஏற்றமுடையதாகும். நிலைபெற்ற புகழையுடைய காசி, காஞ்சி. ஆகிய இரு தலங்களில் கங்கையையுடைய காசியினும் இத்துணை விருப்பம் எமக்கிலது, இது சத்தியமாகும்.

பன்னிரு பெயர் மாட்சி

அறுசீரடி யாசிரிய விருத்தம்

புவன சாரம் மும்மூர்த்தி வாசம் விண்டு புரம்காஞ்சி
தவமார் கலிசித் திலயசித்து சகல சித்தி தபோமயஊர்
கவினார் பிரம புரம்ஆதி பீடங் கன்னி காப்புவினைப் [தால்.
பவநோய் அறுக்குஞ் சிவபுரமாப் பகர்பன் னிரண்டு திருப்பெயர்த்

இத்தலம், புவனசாரம், மும்மூர்த்தி வாசம், விண்டுபுரம், காஞ்சி, தவத்திற் கிடனாகிய கலிசித்து, இலயசித்து, சகலசித்திபுரம், தபோமய நகர், அழகிய பிரமபுரம், ஆதிபீடம், கன்னிகாப்பு, பிறவிநோயை அறுக்கும் சிவபுரம் என்னும் பன்னிரு காரணப் பெயர்களை உடையது,

புவனம் மூன்றன் பயனாகிப் பொலிவு பெறலால் புகழ்தகைய
புவன சார மெனத்திகழும் புனல்கால் உயிர்தீ இருசுடர்வான்
புவன வடிவாம் நந்தமைநீர் மும்மூர்த் திகளும் பூசித்துப்
புவனம் ஏத்த வைகலின்மும் மூர்த்தி வாச புரமாமால். 55

மூவுலகின் பயனாகத் திகழ்தலினாலே 'புவனசாரம்' எனவும் ஐம்பெரும் பூதங்கள் சந்திர சூரியர் ஆன்மா இவற்றைத்திருவுருவாக் கொண்ட எம்மை நீவிர் மூவிரும் போற்றி செய்து உலகம் போற்ற இங்குறைதலின் மும்மூர்த்தி வாசபுரம் எனவும் போற்றப் பெறும்.

பரவு மேக வாகனமாங் கற்பத் தெம்மைப் பங்கயக்கண்
வரத ராசன் வழிபடலால் விண்டு புரமாம் வளர்காஞ்சி [கத்தும்
புரமா யதுமுன் வகுத்துரைத்தாம் பொல்லாக் கலிதோய் கலியு
விரவா வண்ணம் நல்குதலால் விளங்கும் கலிசித் தெனப்படுமால்.

போற்றப் பெறும் மேகவாகன கற்பத்தில் பதுமாக்கன் எனப்பெறும் விட்டுணு எம்மைப் பூசித்தமையால் 'விண்டுபுர'மாகும். காஞ்சிபுரம் எனப் பெறும் காரணத்தை முன்னர் விரித்துரைத்தாம். கொடிய கலித்துன்பம் கலியுகத்தினும் தீண்டாத் திறலுடைமை வழங்குதலால்'கலிசித்து' எனப்படும்.

கடைநாள் எமக்கீ தாடரங்காம் கவினால் இலய சித்தாகும்
தடைதீர் சகல சித்திகளும் தரலாற் சகல சித்திபுரம் [அன்ன
படையா வாய்மைத் தவம்இயற்றிப் பனிமால் வரையின் வரும்
நடையாள் வழுத்தும் பரப்பிரம மயமாம் நகரந் தபோமயமாம். 57

யுகமுடிவில் திருக்கூத்தியற்றும் இடமாகும் அழகினால் 'இலயசித்து' எனவும், இடையூறகற்றிச் சகலசித்திகளையும் வழங்குதலால் 'சகலசித்தி புரம்' எனவும், இயல்பாகிய மெய்த்தவம் புரிந்து உமையம்மையார் போற்றும் பரம்பிரமமயமாகும் திருநகர் 'தபோமயம்' எனவும் கூறப்படும்.

வேதன் எமக்குத் தகுஞ்சோம வேள்வி செயலாற் பிரமபுரம்
ஆதி பீடம் முதற்பீட மாய சிறப்பால் கன்னிஎனுங்
காதல் அணங்கு புரந்திடலாற் கன்னி காப்பிங் கெமைக்கண்டோர்
பேத மின்றிச் சிவன்உண்மை பெறலா லாகுஞ் சிவபுரமே. 58

பிரமன் சோமயாகம் செய்தமையால் 'பிரமபுரம்' எனவும் சத்திபீடங்களில் முதலிடம் பெறுதலின் 'ஆதிபீடம்' எனவும், கன்னி யாகிய உமையம்மையார் முப்பத்திரண்டறம் புரிந்து காத்தலால் 'கன்னி காப்பு' எனவும், எம்மைத் தரிசித்தோர் சிவப்பே றெய்தலால் 'சிவபுரம்' எனவும் பேசப்பெறும்.

வேறு

எடுத்தி யம்பும்இப் பன்னிரு நாமமும் வைகறை எழுந்தோதில், அடுத்த தீக்கனுக் காட்டிய இடும்பைநோய் வறுமைதீர்ந் தருள்வாரி, மடுத்து வான்கதி எய்துமா றுமக்கிவை வகுத்தனம் அருளால்என், றுடுத்த திக்குடை நாயகன் விளம்பலும் உவகையங் கடலாழ்ந்து. 59

திகம்பரராகிய பெருமானார், உயர்த்திப் பேசப்படும் இப்பன்னிரு திருப்பெயர்களையும் வைகறையிற் கணிப்போர்க்குத் தீக்கனவால் வருந் துன்பமும், வறுமையும் பிறவும் நீங்கி அருட்கடலில் திளைக்குமாறு உங்களுக்கு வகுத்துக் கூறினேம் என அருளிய அளவில் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கி.

இறைவன் மும்மூர்த்திகட்குப் பணித்தல்

உலம்ப டைத்ததோள் பண்டனும் அவுணனால் ஒளிஇழிந் துலந்தேமை, நலம்ப டைத்தவான் சோதியுள் ஒடுக்கிமீட் டிறைவிதன் நடுவாமம், வலம்ப டைத்தமூ விழியினும் வருவித்த வள்ளலே அடியேங்கள், புலம்ப டைத்தினிச் செய்பணி அருளெனப் போற்றினர் முதல்மூவர். 60

முதற்றேவர் மூவரும் கல்லொக்கும் தோள்களையுடைய பண்டாசுரனால் ஒளியை இழந்து வற்றினேமை மங்கலச்சுடருள் ஒடுக்கி மீட்டும் உமையம்மையாரின் நுதல், இடம், வலம் கொண்ட முக்கண்ணினும் வருவித்த வள்ளலே! அடியரேம் அறிவு பெற்றினிச் செய்தொழில் அருள்க எனப் போற்றினர்.

ஓதும் அவ்வுரை திருச்செவி சாத்திஎம் உளங்களி வரச்செய்யுங், காதல் மைந்தர்நீர் ஆதலின் நுமக்கருள் காட்டுதும்

எனஓர்பால், போத ளாங்குழல் முகிழ்முலைப் பொலந்தொடிப் பூங்கணை மதர்வேற்கண், மாதர் வாணுதற் பசுங்கொடி மணந்தவன் வாய்மலர்ந் தருள்செய்யும். 61

கூறிய அதனைத் திருவுளங் கொண்டு எம்முடைய உள்ளம் மகிழ்ச்சி எழச் செய்யும் காதல் மைந்தர்களே! நுமக்கருளுவோம் என உமையம்மை மணாளனார் அருள்வர்.

பிள்ளை வண்டினம் முரன்றுபண் பயிற்றிவார்ந் திழிநறூப் பெருவெள்ளங், கொள்ளை கூட்டுணும் மலர்த்தடம் பொதும்பரிற் கொழிதமிழ் மறைப்பாடற், கிள்ளை பாடுசேர்க் காஞ்சியின் என்றும்இக் கிளரொளி இலிங்கத்தே, வெள்ளை வாணகைத் துவர் இதழ் உமையொடும் இனிதுவீற் றிருக்கின்றேம். 62

இள வண்டின் கூட்டம் பண்பாடி ஒழுக்கெடுக்கும் தேனை மிகுதியாகப் பருகும் மலர்ச்சோலையில் தெள்ளி வடித்த தமிழ் வேதப்பாக்களைக் கிளிகள் பாடும் சிறப்பினையுடைய காஞ்சிமா நகர்க்கண் பொங்கொளியுடைய இச்சிவலிங்கத்தே, வெள்ளொளி தவழும் புன்முறுவலும் பவளம் போலும் இதழ்களும் உடைய உமையம்மையொடும் விளங்கி வீற்றிருக்கின்றோம்.

எம்மையாவருங் காணலர் ஒருபொழு தியோகியர்க் கெதிர்காண்பேம், அம்ம நீர்இவண் எம்மடிப் பூசனை அருமறை விதியாற்றான், மும்மை யாகிய உலகமும் படைத்தளித் தழிக்குமா முயல்கிற்பீர், நம்மிடத்துறு பத்தியும் அருச்சனை நலத்தினூற் பெறுவீரால். 63

எம்மை ஒருவரும் அறிகிலர். யோகியர் காணும்படி ஓர்பொழுது தோற்றுவோம். மூவுலகங்களையும் படைக்கவும், காக்கவும், அழிக்கவும் பெறற் பொருட்டு நீவிர் ஈண்டே எம் திருவடிப் பூசனையை நூன் முறைப்படி முயல்வீராமின். நம்மிடத்து உண்டாகும் மெய்யன்பினையும் அருச்சனைப் பயனால் பெறுவீர்களாமின்.

படைத்தி பங்கயன் அளித்திமால் உருத்திரன் பற்றற உலகெல்லாந், துடைத்தி என்றருள் வழங்கிஇச் சுரிகுழல் தேவியும் எமைஈண்டே, கிடைத்த பேரன்பின் நாள்தொறும் பூசனை யாற்றுக எனக்கேட்டோர், அடைத்த நல்விதி புகல்மறை யாதது வந்தவா றெவன்என்றார். 64

பிரமனே நீ உலகெலாம் படைப்பாய். திருமாலே நீ முற்றவும் காத்தி, இனி, உருத்திரனே நீ அவற்றை முற்றவும் அழித்தி என்றருள் செய்து இத்தேவியும் இவ்விடத்தே வாய்த்த பேரன்பொடும் நாடோறும் பூசனையைப் புரிக' என்றருளக், கேட்ட மும்மூர்த்திகள் 'செறித்த நல்விதிகளை உணர்த்துகின்ற வேதம் யாது? அது தோற்றியவாறு எங்ஙனம்?' எனவினையினர்.

என்ற மூவருக் கிளகிலா நகைமுகிழ்த் தெம்பிரான் உரை-செய்யும், நன்று கேண்மின்எம் இரவிடைத் திருநடம் நவின்றிருள் புலர்காலே, மன்ற எம்மிடை ஒடுங்கிய உலகுயிர் முழுவதும் வழு-வாமே, தொன்று போற்படைத் திடுவது கருதினேம் முத்தொழில் புரிவீர்காள். 65

வினவிய மூவர்க்கும் புன்முறுவலுடன் வாய்மலர்வர். முத்தொழிலைப்புரியும் மூவர்களே! ஒருக்கிய மனத்தொடு கேண்மின்கள்: எமக்கு இரவாகிய சங்கார காலத்தே திருநடம் புரிந்து அறுதியாக எம்மிடத்தே ஒடுங்கிய உலகுயிர்கள் உடம் பெடுத்தற்குரிய காலமாகிய இருளகலும் காலத்தே பிழையாதவாறு பண்டையநிலையிற் படைக்கத் திருவுளங் கொண்டோம்.

படர்ஒ ளிப்பிழம் பாகும்இவ் விலிங்கமே பற்றிநின் றுல-கெல்லாம், உடைய நம்மிடை நிலைபெறு மறைகளை முன்னுற உயிர்ப்பித்தேம், தொடைஇ ணங்கும்அப் பழமறை முழுவதும் நம்மடி தொழு தேத்திக், கடைஇ லாதபே ரன்பினுற் பழிச்சின சிரமிசைக் கரங்கூப்பி. 66

பரவுகின்ற ஒளியுருவாகும் இவ்விலிங்கத்தினை இடனுகக் கொண்டு உலகமுற்றவும் அடிமையாகவும், உடைமையாகவும் உடைய நம்மிடத்து ஒடுங்கிநிற்கும் மறைகளை முதற்கண் தோற்றுவித்தோம். பாவடி வாம் பழைய வேதங்கள் நம்மைத் தொழுது தலையாய பேரன்பினுல் சிரமிசைக் கரங் குவித்துத் துதி செய்தன.

பாரின் மேயினை பாரொரு வடிவினை பாரினுக் கறியொண்-ணுய், பாரும் மற்றைஅப் பாரிடைப் பொருளும்நின் ஆணையிற் பயில்வித்தாய், நீரின் மேயினை நீரொரு வடிவினை நீரினுக் கறி-யொண்ணுய், நீரும் மற்றைஅந் நீரிடைப் பொருளும்நின் ஆணையின் நிலைப்பித்தாய். 67

"நிலன் நீர் இவற்றெடு உடனுதலும், ஒன்ருதலும், வேருதலும் உடையை. அன்றியும், அவற்றையும், அவற்றிடைப் பொருள்களையும் சங்கற்பத்தால் நிற்பித்தனை."

நெருப்பின் மேயினை நெருப்பொரு வடிவினை நெருப்பினுக் கறியொண்ணுய், நெருப்பும் மற்றைஅந் நெருப்பிடைப் பொருளும்-நின் ஆணையின் நிறுவித்தாய், மருத்தின் மேயினை மருத்தொரு வடிவினை மருத்தினுக் கறியொண்ணுய், மருத்தும் மற்றைஅம் மருத்திடைப் பொருளும்நின் ஆணையின் வதிவித்தாய். 68

நெருப்பொடு காற்றிடை உடனுயும் ஒன்ருயும் வேருயினை. மேலும், அவற்றையும் அவற்றிடைப் பொருள்களையும் நின்திருவருளால் நிலைபெறுத்தினை."

விண்ணின் மேயினை விண்ணெரு வடிவினை விண்ணினுக் கறியொண்ணுய், விண்ணும் மற்றைஅவ் விண்ணிடைப் பொருளும்நின் ஆணையி னிறுவித்தாய், கண்ணும் ஆருயிர் இருசுடர் எவற்றினும் இம்முறை கலந்தோங்கி, எண்ணி னல்அறி வரும்பெரு முதல்வநின் இணையடி மலர்போற்றி. 69

"வானிடை ஒன்ருய் வேருய் உடனுகி அதனையும், அதனிடைப் பொருள்களையும் நின் ஆற்றலால் நிறுத்தினை. கருதப்படும் ஆன்மாக்கள், சந்திர சூரியர் முதலாம் எவற்றினும் இவ்வாறே கலந்துயர்ந்து எண்ணத்தால் அறிவரிய முழுமுதலே நின் துணைத்தாள்மலர் காப்பதாக.'

கலி விருத்தம்

இன்ன வண்ணம் பழிச்சி எமைத்தொழும்
மன்னும் அன்பின் மறைகளை நோக்கிநீர்
நன்னர் வேட்டன நல்குதும் வேதங்காள்
சொன்மின் என்றலுஞ் சொல்லுத லுற்றன. 70

இவ்வாறெம்மைத் தொழுது துதிக்கும் மெய் யன்பினையுடைய வேதங்களை நோக்கி வேதங்களே!' நீவிர் விரும்பிய நன்மைகளை வழங்குதும் சொல்லுக" என்ற அளவிலே கூறத்தொடங்கின.

எந்தை நின்முகத் தெங்களை ஈன்றனை
அந்த மெய்ப்பெரும் பேறுடை எங்களைச்
சிந்தை செய்து திருவருள் வைத்துநின்
சந்த மேனி அணியெனத் தாங்குவாய். 71

எமக்குத் தந்தையே! நின் திரு முகத்தினின்றும் எம்மைத் தோற்றுவித்தனை. அப்பெரும் பாக்கிய முடைய எங்களைத் திருவுளம் பற்றி அழகிய திருமேனியில் அணியாகப் பூண்டு கொள்வாய்.

நயக்கு மாறினி நாங்கள் உலகிடைச்
செயத்த கும்பணி செப்புதி மற்றெமை
வியப்ப வேதங்கள் என்று விளித்தனை
உயர்த்த அப்பெயர்க் காரணம் ஓர்கிலேம். 72

"விரும்புமாறு உலகில் யாங்கள் செயத்தக்க தொண்டினைப் பணித்தி. அதிசயிக்குமாறு எம்மை வேதங்களே! என்றழைத்தனை. சிறப்பித்த அப்பெயர்ப் பொருளை அறிகிலோம்."

என்ற மாமறை தம்மை இயல்பினல்
அன்று கோவணம் நூபுர மாதியா
மன்ற மெய்யணி யாக்கி மகிழ்ந்துபின்
ஒன்று கூறினம் ஊங்கிவை கேட்பவே. 73

வேண்டிய மறைகளைக் கருணையினுல் அந்நாள் கோவணம், சிலம்பு முதலாம் திருமேனி அணிகளாக அறுதியாக ஆக்கி மகிழ்ந்து பின்பு அவை உணருமா றென்றைக் கூறினேம்.

அறம்பாவம் என்றிரண்டின் எம்முண்மைத் தன்மையினும்
அகில லோகந், திறம்பாமற் பிரமாண மாவீர்வித் தெனும்பகுதி
ஞானஞ் செப்பும், புறம்பாயா மனப்பெரியோர் நும்மொழியான்
எமைஉணரும் பொலிவான் வெள்ளிப், பறம்பாரும் எமக்கினிய
பான்மையீர் வேதமெனப் பெயர்பெற் றீரால். 74

புண்ணிய பாவங்களுக்கும் எமது குறிக்கோளுக்கும் உலகம் பிறழாத அளவுகோலாக விளங்குவீர். 'வித்' என்னும் பகுதிக்குப் பொருள் ஞானம் ஆகும். மனத்தை அடக்கிய பெரியோர் நும் ஆணைவழி ஒழுகி எம்மை அறியும் பொலிவினாலே கைலை மலையை அடைதற்குரிய ஏதுவால் எமக்கினிய இயல்பினீர்! நீவிர் வேதம் எனும் பெயரைப் பெற்றீர்.

வேதியர்கள் முதல்மூவர் உமைஓதி வீடுபே றடைக முற்றும்
ஓதுமறை இரண்டானும் ஒன்றானும் ஓதாது புறநூல் கற்கும்
ஏதில் இரு பிறப்பாளர் இருட்குழிவீழ்ந் திடர்ப்படுவா ராகநீயிர்
பேதியா மெய்யன்பின் எமைஈண்டு வழிபாடு பேணி வாழ்மின். 75

முதல் மூன்று வருணத்தோர் நும்மை ஓதி முத்தி எய்துக. ஓதுதற்குரிய வேதத்தை ஒன்றோ பலவோ ஓதாமல் புறச்சமய நூல்களைக் கற்கும் இருபிறப்பினோர் நரகக் குழியில் விழுந் தழுந்துக. நீயிர் ஒன்றுபட்ட உண்மை அன்பினால் இவ்விடத்தில் எம்மைப் பூசனை புரிமின்.

உலகுய்தற் பொருட்டுநாம் எவ்விடத்தின் எவ்வுருவம்
எடுப்போம் அங்கண், நலம்எய்தும் அதற்கியைந்த வடிவம்நீர்
கொள்கென்று நயப்ப முன்னாள், அலர்தலைமா நிலம்பரசும்
இந்நகரின்வரம் அளித்தேம் அடையார் உட்கும், வலமன்னுந்
திரள்திண்டோள் மைந்தர்காள் ஆதலின்அம் மறைகளெல்லாம்.

உலகம் வாழ்வுபெற எங்கு எவ்வடிவத்தை யாம் கொண்டாலும் அதற்குப் பொருந்திய வடிவை நீவிர் கொண்மின் என்றுலகெலாம் போற்றும் இந்நகர்க்கண் வரம் அளித்தோம். பகைவர் அஞ்சுதற்குக் காரணமாய வெற்றி நிலைபெறும், திரண்ட திண்ணிய தோள்களையுடைய மைந்தர்களே! அதனால், அவ்வேதங்கள் யாவும்,

ஈங்குநாம் பரஞ்சோதி இலிங்கவடி வாய்அமர்ந்தே மாக
ஈண்டைத், தேங்கவிழ்க்குங் கவிழ்இணர்ப்பூங் கனிதுவன்றும்
ஒருமாவாய் திகழ்ந்து நின்ற, வீங்குதிறற் புரம்மூன்றும் இறுத்த-
நாள் போர்க்கோலம் மேயி னேம்யாம், ஆங்கவையுங் கொய்யுளை
வெங் கலினவாம் பரிவடிவாய் அமைந்த காண்மின். 77

யாம் இங்குப் பேரொளிச் சிவலிங்க வடிவில் வீற்றிருக்க அவ்வேதங்கள் இங்கே தேனைப்பொழியும் மலர்க் கொத்துக்களும் பழங்களும் பொதுளும் ஒற்றை மாமரமாய் நின்றன. பெருவலியுடைய முப்புரங்

களைக் கெடுத்த நாளில் யாம் போருக்குரிய கோலம் கொண்ட வழி அவை பிடரி மயிரினையும் கடிவாளத்தையும் உடைய தாவும் குதிரைகளாயின அவற்றை எண்ணுமின்.

மற்றைவே டுருவாதி வடிவம்நாங் கொண்டுழிமா மறையும் ஆங்கண், பற்றமைகூ ருகிர்ஞாளி முதலியவாய்ப் போந்தனஇப் பதியுள் ஓர்பால், வெற்றிநடம் புரிகாலை நூபுரமாய்ப் பொலிந்தன-அவ் விரிநீர்ச் சூழல், அற்றைநாள் முதல்வேத நூபுரப்பேர் பெற்றுவினை அறுக்கு மாலோ. 78

வேட்டுவ வடிவம் முதலிய கொண்ட காலை வேதங்கள் வேட்டைக்கண் பற்றுதற்குரிய கூரிய நகங்களையுடைய நாய் முதலியவாகப் பின் தொடர்ந்தன. இந்நகர்க்கண் வெற்றி வாய்ந்த திருக் கூத்தியற்றத் திருவடிகளில் சிலம்புகளாயின. அவ்விடமும் வேதநூபுரம் எனப் பெயரேற்றுத் தொழுவாரது தீவினையை அறுக்க ஏதுவாயிற்று.

மாண்டபெரு வளம்படைத்த தாருகா வனத்திடைநாம் பயிக்க வேடம், பூண்டவழிக் கோவணமாய்ப் பொலிந்தனவால் இவ்வாறு புரைதீர் நம்பால், வேண்டும்வரம் பெற்றோங்கும் வேத-நூல் உணராதார் எம்மைத் தேறார், ஆண்டகைமை வேதியர்க்கு மேம்பாடு வேதமே யாகும் அன்றே. 79

மிகப்பெருஞ் செல்வமமைந்த தாருகாவனத்து முனிவர் மனைவியர் உள்ளவழிப் பிட்சாடன கோலத்தோடும் செல்லக் கோவணம் ஆயின. நம்மிடத்துக் குறை தீர வேண்டும் வரம் பெற்று உயரும் வேத நூல்களைத் தெளியாதார் எம்மைத் தெளியார். ஆளுந் தகுதியுடைய வேதியர்க்குச் சிறப்பளிப்பது வேதமே யாகும்,

இத்தகைய மாமறைநூல் முந்நாள் இத் திருக்காஞ்சி வரைப்பில் தென்சார், தத்துநீர் அலைபுரட்டுஞ் சேயாற்றின் தடங்கரைக்கண் இமையோர் கட்கும், மெய்த்தவர்க்கும் ஓதுவித்தோம் ஆதலினன் மேவுதிரு ஓத்தூர் என்னும், அத்தலத்தின் எமைத்தொழுவோர் அருமறைநூல் முழுதுணர்ந்து வீடு சேர்வார். 80

இக்காஞ்சிக்குத் தென்திசைக்கண் அமைந்த சேயாற்றங் கரையில் முனிவரர்க்கும் தேவர்க்கும் வேதத்தை ஓதுவித்தோம். ஓத்துரைத்தமையால் அவ்விருக்கை திருவோத்தூர் எனப்பெறும். ஆங்கெம்மை வழிபடுவோர் வேதப்பொருளை முற்றவும் உணர்ந்து வீட்டினைத் தலைப்படுவர்.

இன்னமறை விதியால்இவ் வேகம்பத் தெமைப்பூசை இயற்றீர் என்னப், பன்னகப்பூண் அணிமார்பிற் பரமேட்டி பணித்தமொழி பேணி அன்னோர், சென்னிமிசைக் கரங்கூப்பி ஆனந்தப் பெருங்கடலில் திளைத்து வாழ்ந்து, பொன்னிமயப் பிடிமணந்த மணவாள நம்பிகழல் பூசிப் பாரால். 81

'இவ்வேத விதிவழி எம்மைப் பூசனை புரிமின்' என அருளிய பாம்பை அணிந்த பரமேட்டியின் ஆணைப்படி அம் மும்மூர்த்திகளும் இன்பக் கடலில் மூழ்கிக் காமக் கண்ணி அம்மையை மணந்த பெருமான் திருவடிகளைப் பூசனை செய்வர்.

இலளிதை முதலியோர் இறைவனை வழிபடல்

கலி விருத்தம்

சயமுறு காரணத் தலைவர் மூவரைக்
கயல்விழித் தோற்றிய காமக் கண்ணியாம்
பெயரிய இலளிதைப் பிராட்டி வானளாய்
உயரிய மாமுதல் ஒளியைப் பூசித்தாள். 82

வெற்றிமிகும் தலைவர் மூவரையும் முக்கண்களில் வருவித்த காமாட்சி அம்மையாம் பெயர் பூண்ட இலளிதா தேவியார் வானில் தோயுமாறு ஓங்கிய மாவினது மூலத்தில் பெருஞ்சுடர் மூர்த்தியைப் பூசித்தனர்.

மற்றதற் கணியதென் மருங்கின் அப்பெயர்
பற்றிய சிவக்குறி நிறுவிப் பாயிதழ்
பொற்றசெந் தாமரைப் புனிதன் பூசனை
தெற்றெனச் செய்தனன் தெளிந்த சிந்தையான். 83

அதற்கு அடுத்துத் தென்திசையில் கம்பர் எனப் பெயரிய சிவலிங்கம் தாபித்து அழகிய செந்தாமரை மலரில் இருக்கும் பிரமன் தெளிந்த சிந்தையனாய் விரைந்து பூசனை புரிந்தனன்.

பன்னரு மாமுதல் வாம பாகத்தின்
அன்னண மணியணி அகன்ற மார்பினன்
மன்னிய உலகெலாம் மயக்கும் ஆசையின்
பொன்னவிர் மலர்கொடு பூசை ஆற்றினன். 84

பேசற்கரிய மாவடி முதல்வனை நிலைபெறும் பல்லுயிர்களையும் மயக்கும் ஆற்றலைப் பெறுவான். அழகிய மார்பினில் கௌத்துவ மணியை அணிந்த திருமால் பொன்னைப்போல ஒளிரும் மலரால் பூசனைப் புரிந்தனர்.

பேதமில் பாவனை பிறங்கத் தாணுவும்
காதலிற் பூசைமுன் இயற்றிக் கண்ணுதல்
மேதகை அடிகளோ டொருமை மேயினன்
ஆதலின் இருவர்க்கும் இல்லை வேற்றுமை. 85

வேற்றுமையற்ற பாவனை தோன்ற உருத்திர மூர்த்தியும் மெய்யன்பொடும் பூசனை செய்து கண்ணுதற் பெருமானொடு ஒன்றுந் தன்மை எய்தினர். ஆதலின், உருத்திரர் இருவர்க்கும் வேற்றுமை இன்று ஒற்றுமை உற்றது.

வெள்ளக் கம்பர்

வாலிய சிந்தையான் மலர்ப்பொ குட்டணை
மேலவன் வழிபடும் வெள்ளக் கம்பனை
ஆலிய அன்பினுல் அருச்சித் தேத்துவார்
தோலுடற் பொறைகழீஇத் தூய ராகுவார். 86

தூய சிந்தையொடும் பிரமன் வழிபடும் வெள்ளக் கம்பரைத் தழைத்த அன்பொடும் அருச்சித்துப் போற்றுவோர் உடற்பாரம் தவிர்ந்து (பிறவி நீங்கி) தூயராவர்.

கள்ளமில்லாத வெள்ளை உள்ளத்தொடும் பூசிக்கப் பெற்றமையின் வெள்ளக் கம்பர் ஆயினர்.

கள்ளக் கம்பர்

மருள்புரி கருத்தினுன் மாயன் ஏத்தலின்
கருதும்அப் பெயரிய கள்ளக் கம்பனைத்
திருவடி வழிபடப் பெற்ற சீரியோர்
உருகெழு கொடுவினை மைய லுட்படார். 87

திருமால் மயக்குறுத்தும் கருத்தொடும் வழிபடலால் விளங்கும் கள்ளக் கம்பரை வணங்கும் சிறப்பினர் அச்சத்திற்குக் காரணமாகிய கொடியவினை மயக்கத்துள் தொடக்குறுர்.

நல்ல கம்பர்

உருத்திரன் நலத்தகும் ஒருமை பூண்டுயர்
கருத்தொடும் வழிபடு நல்ல கம்பனை
அருத்தியின் வழிபடும் அடியர் எம்பிரான்
மருத்தபூந் திருவடிக் கலப்பின் மன்னுவார். 88

உருத்திரர் ஒன்றுபடும் நல்ல நினைவுடன் வழிபடும் நல்ல கம்பரைப் பேரன்பினுல் வழிபடும் அடியவர் எம்முடைய பெருமானுர் தம் மணம் கமழும் மலரடிக் கலப்பினுலே எஞ்ஞான்றும் ஒரு தன்மையராய் வாழ்வார்.

கருதரு நல்லனே கள்ளன் வெள்ளனேர்
தருதிரு வேகம்பன் என்று தன்னெடு
மருமலர்க் கவிழ்இணர் மாவின்! நீழல்வாழ்
ஒருவனே நால்வகை உருவம் மேயினுன். 89

மணந்தங்கிய மலர்களைக் கொண்ட மாவடியில் எழுந்தருளியுள்ள ஒருவரே சிந்தித்தற்கரிய நல்ல கம்பர், கள்ளக் கம்பர், வெள்ளக் கம்பர், வெளிப்படுகின்ற திருவேகம்பர் என நால்வகைத் திருவுருத் தாங்கினர்.

தென்னுயர் கச்சியின் அகில சித்தியும்
மன்னுயிர்க் குதவிய மகிழ்ந்து நம்பிரான்
அன்னணம் பூசைகொண் டருளி மூவர்க்கு
முன்னிய வரங்களும் முறையின் நல்கினுன். 90

அழகுமிகும் காஞ்சியில் எல்லா வேண்டுகோளையும் பல்லுயிர்க்கும் உதவுதற் பொருட்டு நமது பெருமானார் பூசனையை ஏற்றுக்கொண்டு மூவர்க்கும் முறையே வரங்களை வழங்கினர்.

இறைவி வேண்டுகோள்

இறைவி இம் மாநிழல் இனிது வைகிய
மறைமுதல் அடியிணை வழிபட் டேத்துபு
நிறைபெரு மகிழ்ச்சியின் நீடு காதலாற்
குறைவறு வரம்பல குறித்து வேண்டுவாள். 91

பெருமாட்டியார் மா நீழலில் வீற்றிருக்கும் வேத முதல்வரை வணங்கி ஏத்தி நிறைந்த பெருமகிழ்ச்சியிற் றங்கிய மெய்யன்பினால் நிறைவுறு வரம் பலவும் திருவுள்ளம் கொண்டு வேண்டுவார்.

ஷை வேறு

வேதக் கோவண வேதப் புரவிய
வேதப் பூணவ வேத முதல்வனே
வேதத் தானும் உணர்வரு மேதகாய்
வேதச் செல்வஎன் விண்ணப்பங் கேள்மதி. 92

வேதத்தைக் கோவணமாகவும், குதிரைகளாகவும், அணிகளாகவும் கொண்ட வேதநாயகனே! வேதத்தாலும் அறிவரிய பெருந்தகையே! வேதப் பொருளே! என் வேண்டுகோளை ஏற்றருள்க.

மன்ற லார்மறை மாவின் அடித்தலத்
தென்றும் மேவுதி யேனுமி யோகியர்க்
கன்றித் தோன்றிலை யாயினை ஈண்டினி
மன்ற யாவர்க்குங் காட்சி வழங்குவாய். 93

மணமும், மங்கலமும் உடைய வேதமா மரத்தின் மூலத்தில் என்றும் வீற்றிருப்பை ஆயினும் யோகியர்க்குக் காட்சி தருகின்றனை. பிறர்க்கு அரியை ஆகின்றாய். இங் கினித் தெளிவாக யாவர்க்கும் திருக் காட்சி வழங்குவாய்.

தெள்ளு தீம்புனல் இத்திருக் கம்பையும்
வள்ளல் ஓரிடைக் காண்டக மன்னுகென்
றுள்ளி ஐைக்கிரி உத்தமி வேண்டலும்
பிள்ளை வெண்பிறைக் கண்ணியன் பேசுமால். 94

தெள்ளிய இனிய தீர்த்தமாகிய கம்பாநதியும் வள்ளலே! ஒப்பற்ற இத்தலத்திற் புலப்பட மன்னுக என்றிமயவல்லி வேண்டிய அளவிலே இளம்பிறை சூடிய பெருமானார் மறுமாற்றம் அளிப்பர்.

இறைவன் கூறல்

ஷை வேறு

மன்னுயிர் முழுவதும் பயந்த மாணிழாய்
அன்னவை உய்யுமா கருதி அன்பினால்

இன்னவை புகன்றனை மகிழ்ச்சி எய்தினேம
பன்னுதும் மனக்கொளப் பரிந்து கேள்மதி. 95

பல்லுயிர்களையும் ஈன்ற மாட்சிமை பொருந்திய அணிகளை யுடையோய்! அவ்வுயிர்கள் பிழைக்குமாறு எண்ணி அன்பொடும் இவை கூறினையாகலின் மகிழ்ந்தோம். மனங்கொள்ள விரிப்போம். விரும்பிக்கேட்டி.

மேதகு சிற்பர வியோம ரூபம்நீ
ஓதிய சிற்பர வியோம ரூபியாம்
மாதர்வா ணுதலிஅப் பரம வானமும்
பேதுற ஒழிக்கும்இப் பிலத்து வாரமே. 96

மேன்மை பொருந்திய ஞானப் பரவெளி வடிவுநீ. அதன் வடிவை உடையேம் யாம். அழகிய ஒளியுடைய நுதலி! அச் சிதாகாயமும் மயக்குறவைத் தவிர்க்கும் இக்காமகோடி பிலம்.

மற்றிரு வேங்கட்கும் வடிவ மாகும்அப்
பொற்றனிப் பிலத்தினைப் புண்ணி யஞ்செய்து
பற்றறத் துறந்தவர் காண்பர் பற்றமை
சிற்றறி வுடையவர் தமக்குச் சேயதே. 97

வடிவமும் வடிவியுமாகிய இருவேமுக்கும் வடிவாகும் ஒப்பற்ற பிலத்துவாரத்தைச் சிவ புண்ணியத்தினுல் இருவகைப் பற்றும் அற்றவர் தரிசனம்செய்வர். பற்றகலாத சிற்றறிவினோர்க்குப் புலனாகாததே அது.

ஆயிடை மகிழ்ந்தினி துறைதும் ஆய்தொடி
மேயஅப் பிலத்தினும் மிக்க காதலின்
ஏயும்இச் சுடரொளி இலிங்கத் துன்னொடு
மாயிரும் புவிதொழ மன்னி வைகுகேம். 98

அழகிய தொடியினை அணிந்தோய்! அங்கண் மகிழ்ந்தினிது வீற்றிருப்போம். விரும்பிய அம்பலத்தினும் மிக்க விருப்புடன் இச் சுடரொளி இலிங்கத்தே உன்னொடும் பெரும் புவியோர் தொழும்படி விளங்கி வீற்றிருப்போம்.

இதற்குமுன் ஈண்டெமை எவருங் காண்கிலர்
இதற்குமேல் நீபெறும் எழில்வ ரத்தினாற்
கதித்திட யாவருங் கண்டு போற்றுக
கதிர்த்தவான் பிலத்திடை உனையுங் காண்கவே. 99

இதற்கு முன்பு இங்கெம்மை எவரும் காண்கிலர். நீ பெற்ற சிறந்த வரத்தினுல் இந்நாள் முதல் கதியடைய யாவரும் கண்டு வழிபடுக. ஒளி பொருந்திய தூய பிலத்திடை உன்னையும் கண்டு போற்றுக.

எற்றுநீர்க் காஞ்சியே எமக்கு மேனியாம்
தெற்றெனத் தெளிமதி இனைய சீர்மையான்

முற்றொளி வானவர் முனிவர் தாமெலாம்
மற்றிவண் விளங்கியும் மறைந்து வைகுவார். 100

மோதுகின்ற நீரையுடைய காஞ்சி எமக்குத் திருமேனியாகும். இதனை நன்கு தெளிந்துகொள். இச்சிறப்பினால் முதிர்ந்த ஒளியுடைய தேவரும், முனிவர் யாவரும் இங்கே தோன்றியும் மறைந்தும் உறைவர்.

உலகஇக் கோயிலின் உறுப்பு முற்றுமாய்க்
குலவிஈங் கெமைத்தொழு துறையுங் கோற்றொடிப்
புலவுவேல் இணைவிழிப் புளகப் பூண்முலை
இலவிதழ் மதிநுதல் இமய மாதராய். 101

அழகிய வளையலையும் ஊன் தங்கிய வேலனைய இரு விழிகளையும் புளகம் போர்த்த கொங்கைகளையும் இலவ மலர்போலும் அதரத்தினையும் மதியை ஒத்த நுதலினையும் உடைய மலையரையன் பாவாய்! உலகங்கள் கோயிலின் அங்கங்கள் யாவுமாய் விளங்கி இங்கே தொழுது வைகும்.

அறுசீரடி யாசிரிய விருத்தம்

விரவுசீர் நல்ல கம்பம் விளங்கொளி வெள்ளக் கம்பம்
வரமருள் கள்ளக் கம்பம் வண்டிரு மயானம் வாலீச்
சரமெனும் இலிங்கம் ஐந்தில் தகுபஞ்ச பிரம மாகி
இரவுசெய் குழலாய் நின்னோ டினிதுவீற் றிருப்பங் கண்டாய். 102

நல்ல கம்பம் முதலாக முறையே ஈசானமும் சத்தியோ சாதமும், வாம தேவமும், அகோரமும், தற்புருடமும் ஆகப் பஞ்சப் பிரமமாகி இருளை ஒத்த கூந்தலாய்! நின்னொடும் அச்சிவ மூர்த்தங்களுள் வீற்றிருப்போம் என்றறிதி. இவற்றை முறைப்படுத்திக் கொள்க.

வாலீச்சரம்

என்னலும் இறைஞ்சி நல்வா லீச்சரம யாங்கண் எந்தாய்
அன்னது கண்டோர் யாவர் அதன்திறம் யாதோ என்னப்
பொன்னவிர் கணங்கு பூத்த பொம்மல்வெம் முலையாள் கேட்பக்
கன்னல்வேள் எரிய நோக்குங் கண்ணுதல் அருளிச் செய்யும். 103

உடனே வணங்கி, 'எந்தையே! வாலீச்சரம் எங்குள்ளது? நிறுவினோர் யாவர்? வாலீச்சர வரலாறு யாது? எனவினவிய இலளிதாதேவி உணருமாறு கரும்பு வில்லேந்திய காமனை எரித்த கண்ணுதற் பிரானார் அருள் செய்வர்.

வாலிமா இலிங்க மேன்மை கேண்மதி மயானக் கீழ்சார்
சீலமார் சித்தர் பல்லோர் சித்திகள் வேண்டிப் போற்ற
மூலமாய் ஒளியாய் இன்பாய் முகிழ்த்தது வாயு லிங்கம்
ஏலவார் குழலாய் என்றும் மகிழ்ந்தினி திருப்பேம் அங்கண். 104

வாலீசர் சிறப்பினைக் கேட்டி. திருக்கச்சி மயானத்தின் கிழக்கில் ஒழுக்கமுடைய சித்தர் பலர் சித்திகளை விரும்பிப் போற்றிச் செய்ய

அந்நிலையே எவற்றிற்கும் காரணமாயும், ஒளியாயும், இன்பமாயும் விளங்க முளைத்தது வாயுலிங்கம். ஏலவார்குழலி! என்றும் அதன்கண் இனிதுறைவோம்.

வாலிமுன் தொழுது நேர்ந்தார் வலத்தினிற் பாதி யாண்டுந்
தோல்விஇல் வாகை யோடும் பெற்றனன் தோகாய் என்றான்
கோல்வளை வாலி என்பான் யார்எவன் குமரன் மற்றுன்
பால்வரம் பெற்ற தெவ்வா றென்றதும் பகர லுற்றான். 105

இமய மயிலே! வாலி முன்னர் வணங்கித் தன்னொடு போரில் எதிர்த்தவர் யாவராயினும் அவர் வலிமையில் செம்பாதியும், தோல்வியில்லாத (பிறக்கிடாத) வெற்றியும் வேண்டுமென வேண்டிப் பெற்றனன். அழகிய வளையுடைய அம்மை 'வாலி என்பான் யாவன்? அவன் தந்தை யார்? உம்மிடம் வரம் பெற்றது எங்ஙனம்? எனவினவலும் வகுத்துரைப்பார்,

பண்ணவர் முனிவர் ஆன்றோர் பாங்குற மிடைந்து வைக
விண்ணவர்க் கிறைவன் புத்தேள் வேத்தவைத் தவிசின் மேனாள்
நுண்ணிடை அணங்கு நல்லார் மின்கொடி நுடக்கம் மானக்
கண்ணெதிர் ஆடும் ஆடல் கண்டுவீற் றிருந்தா னாக. 106

தேவரும், முனிவரும், அமைந்தோரும் சூழ்ந்து வீற்றிருப்பத் தேவேந்திரன் அரசவைக்கண் அரியணையிலிருந்து கண்ணெதிரே அரம்பையர் மின்னற்கொடியின் துவட்சியைப்போல நுடங்கி ஆடும் ஆடலைக் கண்டு கொண்டிருந்தகாலை.

அங்கவர் ஆடல் காணும் ஆசையால் இருள்கால் சீக்குஞ்
செங்கதிர்க் கடவுள் மான்தேர் செலுத்துறும் அருணன் ஆங்கண்
வெங்கதிர் விடைபெற் றேகி அரம்பையர் விண்ணோ ரெல்லாம்
எங்கணும் நிறைந்த வாற்றால் இடம்பெறா திதனைச் செய்வான். 107

இருளைத் துரக்கும் சூரியனது தேரைச் செலுத்தும் அருணன் அரம்பையர் ஆடலைக் காணும் ஆசையால் தலைவனிடம் விடைகொண்டு போய்த் தேவ மகளிரும் தேவரும் எங்கும் நிறைந்தமையால் இடம் கிடைக்கப்பெறா திதனை மேற்கொள்வான்.

அற்புத வனப்பின் வாய்ந்த அரம்பையர் எவர்க்கும் முன்னர்
நிற்பது நோக்கித் தானும் நேரிழை வடிவு கொண்டு
பொற்புறும் ஆடல் பார்த்து நிற்றலும் புல்லார் உட்கும்
மற்பொலி குலிசப் புத்தேள் அத்தகை வடிவைக் கண்டான். 108

வியக்கத் தக்க அழகினையுடைய அரம்பையர் யாவர்க்கும் முன்னாக நிற்பதனை நோக்கி அருணனும் மகளிர் வடிவைக்கொண்டு பொலிவு மிகும் ஆடலைப் பார்த்து நிற்றலும் பகைவர் வெருவும் வலி விளங்கும் வச்சிராயுதத்தையுடைய இந்திரன் அந்த அழகிய வடிவைக் கண்டனன்.

காண்டலுங் குழைத்த வில்வேள் கடுங்கணைக் கிலக்க மாகி
மூண்டவெங் காமம் மூழ்கி முரணினல் வலிந்து பற்றி
ஆண்டொரு பாங்கர் எய்தி அணிமுலை பொதியப் புல்லிப்
பூண்டபே ரின்ப வெள்ளப் புதுநலம் பருக லோடும். 109

கண்டபொழுதே மன்மதனது வளைத்த வில்லின் கொடிய மலர் அம்பிற்கு இலக்காகி முதிர்ந்த கொடிய காம வெள்ளத்தில் மூழ்கித் தன் வன்மையால் வலிந்துபற்றி அங்கோர் ஒதுக்கிடம் பெற்று இறுகத் தழீஇப் பேரின்பப் பெருக்காகிய புதிய நலம் பருகும் அளவிலே.

வாலி பிறப்பு

அரக்கர்கோன் நகைப்ப நந்தி வெகுண்டுனை அழிப்ப வல்லா
னரக்குலந் தாமே யென்னச் சபித்தவா நயந்து விண்ணோர்
குரக்கினம் ஆனர் அவ்வாறே இனையவன் குரக்கு வேந்தாய்ச்
சுரர்க்கிறை கூற்றால் அப்போ தாயிடைத் தோன்றினுல். 110

இராவணன் குரங்கென்று இகழ்ந்து சிரிக்க நந்தி பெருமான் வெகுண்டு குரங்கினது கூட்டத்தால் நீ அழிக என்று சாபமிட்டனர். அசுரனது அழிவை விரும்பிய தேவர் குரங்குகளாயினர். வாலி குரங்குகளின் அரசென இந்திரன் அமிசமாக அப்பொழுது அருணனுக்குப் பிறந்தான்.

ஆயபின் கூத்து நோக்கி ஆவயின் நின்று போந்து
சேயொளிப் பரிதித் தேர்மேல் திகழ்ந்தனன் வலவ னுகக்
காய்கதிர்க் கடவுள் அங்கண் நிகழ்ந்தமை கடாவி முற்றும்
வாய்மையிற் புகலக் கேட்டவ் வடிவிவண் காட்டு கென்னு. 111

பின்பு ஆடலை நோக்கி அகன்று சூரியனின் தேர்மிசைப் பாகனுயினன். ஆங்கு நிகழ்ந்தவற்றை முற்றவும் மெய்யே ஆக வினவி அறிந்த சூரியன் அப்பெண் ணுருவைத் தனக்குக் காட்டென்று கூற,

உவகைமீ தூர மேன்மேல் வேண்டலும் ஊறு வில்லான்
பவளவாய் கரிய கூந்தல் பால்மொழி திதலை பூத்த
குவிமுலை பரந்த அல்குல் கோல்வளைத் தளிர்க்கை தோற்றிக்
கவின்உருக் கொண்டா லென்னக் காட்டினன் தனது பெண்மை.

காணும் ஆசைப் பெருக்கு மேன்மேலெழ வேண்டுதலும் துடையில்லாத அருணன் பவளத்தை ஒத்த வாயையும், கரிய கூந்தலையும், பாலை ஒக்கும் இனிய சொல்லையும், தேமல் பொலிந்த கொங்கையினையும் பரந்த அல்குலையும், திரண்ட வளையணிந்த தளிரனைய கையையும் தோன்றக் காட்டி அழகே ஓர் வடிவுகொண்டாற் போலத் தனது பெண்ணியல்பை விளக்கினன்.

சுக்கிரீவன் பிறப்பு

காண்டலுங் கதிரோன் ஞானுங் காமுற்றுக் கலவி செய்ய
ஆண்டகைச் சுக்கி ரீபன் ஆயிடைப் பிறந்தான் இப்பால்

மாண்டகு மகவான் ஈன்ற வாலியைக் கமலக் கையால்
தீண்டினன் உச்சி மோந்து செவியறி வுறுத்தல் செய்வான். 113

சூரியனும் கண்டபோதே விரும்பிப் புணர ஆண்மையையுடைய சுக்கிரீபன் அப்பொழுது பிறந்தனன். மாட்சிமையுடைய இந்திரன் தான் பயந்த வாலியைத் தழுவி உச்சி மோந்து உபதேசம் செய்வான்.

பண்ணவர் முனிவர் யாரும் பரவினர் பேறு பெற்ற
புண்ணிய நகரங் காஞ்சி ஆயிடைப் போந்து முக்கண்
அண்ணலைத் தொழுது மைந்தா கவிகளுக் கரசாம் பேறு
நண்ணுகென் றுரைப்ப வாலி நளிர்புனற் காஞ்சி புக்கான். 114

மைந்தனே யாவரும் வழிபட்டுப் பேறு பெற்ற புண்ணியத் தலமாகிய காஞ்சியை எய்திச் சிவபிரானை வணங்கிக் குரங்குகளுக் கரசாகும் பேற்றினைப் பெறுக என்று.இந்திரன் விடுப்ப வாலி குளிர்ந்த நீர் நிலைகள் சூழ்ந்த காஞ்சியை அடைந்தனன்.

நடலைவெம் பிறவி மாற்றுஞ் சிவகங்கை நன்னீ ராடிச்
சுடரொளித் திருவே கம்பந் தொழுதுபோய் மயானக் கீழ்பால்
மடனறச் சித்தர் பல்லோர் வழிபடும் பெருமை சான்ற
கடனுடை வாயு லிங்கங் கண்களி பயப்பக் கண்டான். 115

கொடிய துன்பப் பிறவியைப் போக்கும் சிவகங்கையில் மூழ்கித் திருவேகம்பத்தை வணங்கிப் பின்பு மயானத் தலத்திற்குக் கிழக்கில் அறியாமை நீங்கச் சித்தர் பலரும் வழிபடும் பெருமை நிரம்பிய கடப்பா டமைந்த வாயுலிங்கத்தைக் கண்களிப்புறக் கண்டனன்.

மடல்பெறு வேட்கை யாளன் வாயுவின் மிடலென் றெண்ணிக்
கடல்புரை அன்பின் அங்கட் கைதொழூஉத் தவங்க ளாற்றி
மடலவிழ் கடுக்கை நம்பால் வரம்பல கொண்டு நேர்ந்தார்
அடல்வலி பாதி யோடு குரக்கினத் தரசும் பெற்றான். 116

மகளிர் மடலேறுதற்குரிய விருப்பம் வருவதற்கேதுவான அழகையுடைய வாலி, இம்மூர்த்தி வாயு வலி பெறுதற்குக் காரணமானவர் என்று மதித்து கடலையொக்கும் பேரன்பினால் அங்குக் கைதொழுது தவம் புரிந்து இதழ் விரிகின்ற கொன்றைமாலையைச்சூடிய நம்மிடத்தே வரம் பலவும் பெற்று மேலும் போரில் எதிர்ந்தவர் மிக்க வலியில் பாதியோடும் குரங்குகளுக்கு அரசனும் பதவியையும் பெற்றனன்.

பெற்றபின் இலிங்கந் தன்னைப் பிறங்குதன் இருக்கை உய்ப்பான்
பற்றினன் வலியாற் காஞ்சிப் பதிநமக் கினிய வாற்றான்
மற்றவன் பெயர்க்க லாற்றான் மிடலெலாம் வைத்து வாலிற்
சுற்றினர்த் தணிவால் இற்றுத் தூரத்தே அலறி வீழ்ந்தான். 117

பேற்றினுக்குப் பிறகு வாயுலிங்கத்தைத் தன்னிருப்பிடத்திற்குக் கொண்டுபோக வலித்தனன். கச்சிப் பதியில் விருப்புடையேமாகலின்

அவன் பெயர்க்கப் பெருனுய் முழுவலிமையையும் வாலில் வைத்துச் சுற்றி இழுத்து வால் அறுந்து தொலைவில் அரற்றி வீழ்ந்தான்.

வீழ்ந்தவன் எழுந்து வந்து மென்மல ரடிகள் போற்றித்,
தாழ்ந்தெழுந் தடியேன் இல்லந் தனில்எழுந் தருளிச் சூடும்,
போழ்ந்தவெண் மதியாய் செய்யும் பூசைகொண் டருளாய் என்று,
சூழ்ந்துநின் றிரந்து வேண்டத் தோன்றிமுன் இதனைச்
சொன்னேம். 118

பின்பு வணங்கித் தன் இருக்கைக்கு எழுந்தருள வேண்ட எதிரெழுந்தருளி இதனைக் கூறினேம்.

கச்சிமூ தூரின் நீங்காக் காதலம் எம்மை ஈண்டே
அர்ச்சனை புரிதி நின்வால் அழுந்திய தழும்பு பூண்டு
சச்சைவெண் ணீற்று வாலீச் சரனென விளங்கித் தோன்றி
முச்சகம் பரச வாழ்தும் எனமொழிந் திலிங்கத் துற்றேம். 119

கச்சியின் அகலாத காதலையுடையேம். ஆகலின், எம்மை இவ்விடத்தே அருச்சனை செய். நின் வாலின் சுவடு பூண்டு செச்சையாகிய வெண் ணீற்றினை அணிந்த வாலீச்சரனென விளங்கி வீற்றிருந்து மூவுலகும் போற்றி அருள்பெற இருப்போம் என அருளிச் சிவலிங்கத்தில் ஆனேம்.

அன்றுதொட் டணைய சூழல்அற்புதத் திருவா லீசம்
என்றொரு பெயரின்ஓங்கும் ஏரிழாய் பஞ்ச தீர்த்த
மன்றநீர் வாவி மூழ்கி வகுத்தஇப் பஞ்ச லிங்கம்
நன்றுகண் டேத்தப் பெற்றோர் நலிவினைப் பிறவி தீர்வார். 120

அழகிய அணிகளையுடையோய்! அந்நாள் முதலாக அத்தலம் ஞானத் திருவை நல்கும் வாலீசம் என்றொப்பற்ற பெயரினுல் சிறக்கும், பஞ்ச தீர்த்தத்தில் மூழ்கி வகுத்துரைத்த இப்பஞ்ச லிங்கத்தினை பெரிதும் கண்டு துதிக்கப் பெற்றோர் நிச்சயமாக வருத்துகின்ற வினையாலமைந்த பிறவி நோய் நீங்குவர்.

இன்னணம் அருளிச் செய்து பொலங்குவட் டிமயம் பூத்த
மின்னொடும் மூவ ரோடும் விளங்கொளித் திருவே கம்பத்
தன்னிடைக் கரந்து நின்ருன் சதாசிவப் புத்தேள் அந்த
நன்னகர்ப் பெருமை முற்றும் யாவரே நவில வல்லார். 121

இவ்வாறருளி இமய மின்னுகிய அம்மையோடும், மும்மூர்த்திகளோடும் விளங்கும் அருளொளித் திருவேகம்பப் பெருமான் திருவுருவில் மறைந்தருளினர் சதாசிவமூர்த்தி. பெருமான் அருளிய திருவேகம்பத் தலத்தின் பெருமையை எவரே முற்றவும் பேசவல்லவர் ஆவார்; ஒருவரும் இலர்.

திருவேகம்பப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - 2022-

# தழுவக் குழைந்த படலம்

எண்சீரடி யாசிரிய விருத்தம்

கம்ப மால்கரி உரித்தவர் சிரமேற் கம்ப தித்தவர் பசும்பொழில் தலத்துக், கம்ப லம்விரித் தெனமலர் பரப்புங் கம்பம் மேவிய தொருசிறி துரைத்தாம், கம்ப லைத்ததிர்த் தெழுந்துமீக் கடுகுங் கம்பை மாநதிப் பெருக்கினைக் காணூஉக், கம்பம் உற்றுமை தழுவமெய் குழைந்த கருணை மேன்மையுங் கட்டுரைத் திடுவாம். 1

அசைதலையுடைய மத மயக்கம் கூடிய களிற்றினை உரித்ததன் தோலைப் போர்த்தவரும், சென்னிமேல் நீரை வைத்தவரும் ஆகிய திருவேகம்பருடைய பசிய சோலை சூழ்ந்த தலத்தில் கம்பலத்தை விரித்தாற்போல மலர்களைப் பரப்புதற்கிடனாகிய திருவேகம்பத்தின் வரலாற்றினை ஒரு சிறிதே உரைத்தோம். இனி, ஆரவாரித்து அதிர்ச்சியை ஊட்டி மேன்மேலெழுந்து விரைந்து வரும் கம்பா நதிப் பெருக்கினைக் கண்டு நடுக்கம் எய்தி உமையம்மையார் தழீஇக் கொள்ளத் திருமேனி குழைந்து சுவடு பூண்ட திருவருட் சிறப்பினையும் மிக்கெடுத்தோதுவோம்.

பிரமன் செயல்

பொற்ற தாமரைப் பொகுட்டணைக் கிழவன் புகுத லுற்றதற் புருடகற் பத்தில், பற்றும் வைகறைத் துயிலொழிந் திமயப் பாவை பாகனார் அடிதொழு தெழுந்தான், முற்றும் வெள்ளநீர்ப் பரப்பிடை அவனி முழுதும் ஆழ்ந்தது கண்டுளங் கவன்று, மற்றினிச்சக அகிலமும் படைக்கும் வண்ணம் யாதென மயங்குறும் பொழுது. 2

பிரமன் தற்புருட கற்பத்தின் வைகறையில் துயிலொழிந்து மங்கைபங்கனார் திருவடிகளை வணங்கிக் கொண்டெழுந்தனன். நீர்ப் பரப்பில் உலகெலாம் அழுந்தியதனைக் கண்டு மனக்கவலையுற்று இனி அகில உலகங்களையும் படைக்கும் வழி யாதென மயங்கும் காலை,

பிரமன் துயிலெழுந்தமையால் இது நித்திய கற்பம் ஆம்.

பூதி மேனியார் திருவருள் கூடிப் புரிந்த முன்னிகழ் உணர்ச்சிவந் தெய்த, ஆதி கற்பத்தில் எதிர்எழுந் தருளி அண்ண லார்கற்பந் தொறுந்தொறும் நின்பால், சோதி சேர்எழிற் குமாரநல் வடிவால் தோன்றி நாம்உனக் கருளுதும் என்னும், பேதி யாவகை தனக்குமுன் அளித்த பெருவ ரத்தினைத் தெளிந்தனன் பிரமன். 3

மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்த பெருமானார் முதற் கற்பத்தில் பிரமனை நோக்கி கற்பந்தோறும் ஒளியும் அழகு மமைந்த குமார வடிவில் நின்னிடத்துத் தோன்றிச் சிருட்டித் தொழிலை அறிவுறுத்துவோம் என்றருளிய வரத்தினை அவரருளால் உணர்ந்தனன் பிரமன்.

அன்ன தன்மையின் இன்றும்அங் கவரே அருள்செய் வாரெ-னத் துணிபுடை மனத்தால், தன்னு தற்றலத் தடியிணை கருதித் தவங்கள் பல்பக லாற்றுழித் திகழுஞ், சென்னி ஆற்றினர் உருத்-திர காயத் திரியி னேடெழிற் குமாரநல் வடிவாய், முன்னர் எய்திட நோக்கிஅம் மனுவான் முதல்வ ஞர்தமை உணர்ந்துகை தொழுது.

அந்நிலையில் இன்றும் அவரே அருளுவார் என்னுந் தெளிவுணர்ச்சி யொடும் பெருமான் திருவடிகளைப் புருவ நடுவில் வைத்துத் தியானித்துப் பல காலம் தவத்தைச் செய்கையில் சடையிற் கங்கையொடும் குமார வடிவங் கொண் டெதிர்வரக் காயத்திரிதேவி மந்திரவலியால் முதல் வரை உணர்ந்து கையால் தொழுது,

ஏற்ற தற்புரு டற்குற நினைதும் எமக்கு ருத்திரன் அருளுக என்னும், ஆற்றல் சான்றகா யத்திரி மனுவை அனைத்தும் ஆக்கு-வான் முறையுளி கணித்துப், போற்ற வார்ந்திழி அருவியங் குவட்-டுப் பொருப்பு வில்லவர் கருணைகூர்ந் துலகந், தோற்று மாறருள் கொடுத்தெழுந் தருளத் தோட்டு வெண்மலர்க் கலைமகள் துணைவன்.

பொருந்திய தற்புருடற்கியையத்தியானிப்பேம். எமக்கு உருத் திரர் அருள் செய்க என்னும் சத்தி நிறைந்த காயத்திரி மந்திரத்தைச் சிருட்டி கருத்தா விதிப்படி எண்ணிப் போற்ற மேருமலையை வில்லாக உடையவர் கருணை மீக்கூர்ந்து உலகைப் படைக்குமாறு அருள் செய்து மறைந்தருளக் கலைமகளுக்கு நாயகனுகிய பிரமன்.

ஒருமை அன்பின்அப் புருடனை நினைந்தாங் குலகம் ஆக்குழி ஆண்மையே தோன்ற, முருகு லாங்குழற் பெண்மையும் படைப்-பான் முயன்றும் எய்திலன் புந்தியின் தேர்ந்து, புருட னுக்கெனத் தற்பொருட் டெய்தும் பொருண்மை நீத்தனன் சகத்திர நயனப், புருடன் றன்னுடைப் பேரருள் நினைகேம் உருத்தி ரப்பிரான் எமக்கருள் புரிக. 6

ஒன்று பட்ட அன்பினுல் அப்புருடனை எண்ணி அந்நிலையில் உலகைப் படைக்குங்கால் ஆண்தன்மையே உடைத்தாய் வடிவுகள் படைக்கப்படவே பெண்ணியல்பும் கலந்து தோன்றுமாறு படைக்க முயன்றும் பெருது அறிவினுல் நாடிப் புருடனுக்காக்கும் அப்பொருண் மறையை விடுத்து ஆயிரங்கண்ணுடைப் புருடனுடைய பேரருளை எண்ணுவேம் உருத்திரப் பிரான் எமக்கு அருளுக.

என்னும் வேறுகா யத்திரி மனுவை எழிற்பு ணர்ச்சியின் உலகம்உண் டாக்க, மன்னு சீர்க்கிழ மைப்பொருள் வாய்ப்பக் கணித்து மாதவம் புரிவுழி வகிர்நாப், பன்ன கம்புனை சடைமுடிப் பிரானுர் பாதி பெண்ணுருத் திகழ்தரு வடிவான், முன்னர் எய்தி-இம் மனுவினைக் கணித்தாய் முளரி வாழ்க்கைநீ வேட்டது தெளிந்தேம். 7

என்று பொருள்படும் வேறு காயத்திரி மந்திரத்தை உடன் புணர்த்துக்கூறி உலகைச் சிருட்டிக்க மன்னிய திருவருளையுடைய உரிமைப் பொருள் கிடைக்கச் செபித்துப் பெருந்தவம் செய்கையில் இருநாவுடைய பாம்பினைப் பூண்ட பெருமானார் செம்பாதி பெண் வடிவுடைய குவளைக் கண்ணி கூறராய்க் காட்சிதந்து தாமரையை இடமாக வுடைய நீ இம்மந்திரத்தை கணித்தனை. அதனால் நினது விருப்பினை அறிந்தேம்.

நினக்கு நாயகி இவள்எம திடப்பால் நின்று நீங்குபு தன்னொரு கூற்றால், உனக்குப் பெண்உருப் படைத்திடும் ஆற்றல் உதவும் என்றுரைத் தருளஅக் கணமே, தனக்கு நேர்வரும் பிராட்டியும் ஆங்குத் தணந்து தோன்றுபு தன்ஒரு கூற்றின், வனப்பு மிக்கவே றணங்கினைப் படைத்து மலர்ப்பொ குட்டணை யவற்கிது வகுப்பாள். 8

நினக்கு முதல்வியாகிய இவள் எனது இடப்புறத்தினின்றும் நீங்கித் தனது ஒரு பங்கினாலே உனக்குப் பெண்வடிவைப் படைத்திடும் ஆற்றலை வழங்கும் என்றருள, அப்பொழுதே தன்னொரு கூறாக விளங்கிய பெருமாட்டியும் பிரிந்து தோன்றித் தனது அமிசமாக அழகு மிகுந்த வேறோர் அணங்கினைத் தோற்றுவித்துப் பிரமனுக் கிதனை வகுத்துரைப்பார்.

இவளை நாள்தொறும் நீவழி பட்டுப் பெண்கள் யாரையும் படைத்திஎன் றியம்பி, அவளை நோக்கிநின் கூற்றினிற் பெண்கள் அனைத்தும் நீபகுத் திடுகென அருளித், தவள முண்டகக் கிழத்தி-தன் கொழுநன் றனக்கு நல்கித்தன் தலைவரை மணந்தாள், கவள வெங்கரி உரித்தவர் தாமுங் கருணை செய்துபோய்க் கயிலையைப் புக்கார். 9

இவ்வணங்கினை நாடோறும் நீ வழிபாடு செய்து பெண்கள் யாவரையும் படைப்பாயாக என்று கூறி அவ்வம்மையையே நோக்கி நின்கூற்றினில் பெண்கள் அனைவரையும் நீ வகுத்திடுக என்றருள் செய்து வெண்டாமரையுள் விளங்கும் சரசுவதி நாயகனுக்கு அருள் வழங்கித் தன் தலைவராகிய பெருமானுடன் ஒன்றுபட்டனர். கவளங் கொள்ளும் யானையை உரித்தவரும் கருணை வழங்கிக் கயிலையை அடைந்தனர்.

புக்க பின்தனைத் தொழுதுபோற் றிசைக்கும் போதி ஞனை-அவ் வளைக்கையாள் நோக்கி, நெக்க சிந்தையோய் நினக்கியான் புரியும் நிகழ்ச்சி யாதென மலரவன் வணங்கித், தொக்க பேரருள் எர்தையா ரிடத்துத் தோன்றும் அன்னைநீ பெண்ணுரு முழுதுந், தக்க வாபடைத் தருள்கதில் லன்றேற் படைக்கும் ஆற்றலென் றனக்கருள் புரியாய். 10

எழுந்தருளிய பின் வளையணிந்த கையையுடைய அன்னை தன்னைத் தொழுது நிற்கும் பிரமனைப் பார்த்து உருகிய உள்ளமுடையோனே! நினக்கு யான் செய்யக் கடவது யாதென வினவப் பிரமன் வணங்கித் திரண்ட பெருங்கருணையை யுடைய எமது தந்தையாரிடத்துத் தோன்றிய அன்னையே! நீ பெண் வடிவுகளை முற்றவும் படைத்தருளுக. அல்லையாயின் படைக்கும் வல்லமையை எனக்கு அருள் செய்க.

*உம்பர் போற்றுநின் திருவடிப் பொடியை உச்சிமேல்-*
*கொண்டு நான்படைக் கின்றேன், அம்பை இன்னமிஓர்*
*விண்ணப்பம் உளதால் அடிய னேன்பெறு தக்கன்றன் மகளாய்,*
*இம்பர் நீஅவ தரித்திடல் வேண்டும் என்று வேண்டலும் உலகம்-*
*ஈன் றளித்த, கொம்பர் நுண்ணிடை எம்பெரு மாட்டி கூர்த்த*
*பேரருட் கருணையின் உணர்த்தும்.* 11

தேவர் போற்றுகின்ற தேவரீருடைய திருவடியில் தோய்கின்ற பொடியைச் சென்னிமேற் றுங்கி அடியேன் சிருட்டித் தொழிலைச் செய்கின்றேன். அம்பிகையே! மேலும், அடியேன் பயந்த மகனாகிய தக்கனுக்கு நீவிர் மகள்ாக அவதரிக்க வேண்டுமென வேண்டுங்காலை உலகெலாம் ஈன்ற அன்னையார் மீக்கூர்ந்த பேரருளினால் அருள்வர்.

*முழுது மாய்உயிர்க் குயிரெனத் திகழும் முதல்உ ருத்திரன்*
*என்றிடுஞ் சுருதி, தழுவி ஆங்கவன் இடப்புறம் மேவுஞ் சத்தி யான்-*
*அவன் சத்தியன் அதனால், தொழுத குந்திறல் அவன்திரு வடிவாம்*
*தொல்சக ங்களின் இடப்புறம் எனதாம், பழுதி லாளநின் வடி-*
*வினைப் பகுத்துப் பாதி பெண்மைஆண் பாதியில் திகழ்தி.* 12

யாவுமாய் உயிர்க் குயிராய் விளங்கும் முதல்வர் உருத்திரமூர்த்தி என் றுணர்த்தும் வேதங்கள், மருவி அவர் இடப்பால் மேவும் சத்தி யான். அவர் சத்தியை உடையவர். ஆகலின், தொழற்குரிய வல்லமை யுடைய அவர் திருமேனியாகும் பழம் பே ருலகங்களில் இடப்புறம் எனக் குரித்தாகும். குற்றமற்றவனே! நின் வடிவினைப் பகுத்து இடப் பாதி பெண் தன்மையினும் வலப்பாதி ஆண் தன்மையினும் விளங்குதி.

*அண்ண லார்அருட் சத்தியுஞ் சிவனும் ஆய தன்மையின்*
*அன்றுதொட் டுலகம், பெண்மை ஆண்மைஎன் றிருவகைப்*
*புணர்ப்பாற் பெண்ணும் ஆணுமாய்ப் பிறங்கும்என் றியம்பிப்,*
*பண்ணை மாமறைக் கடவுளுக் கருளிப் பாவை அம்பிகை ஆயிடைக்*
*கரந்து, மண்ணெ லாம்உய்யச் சதிஎனும் பேரால் வயங்கு தக்கனுக்*
*கொருமக ளானாள்.* 13

பெருமானார் சத்தியும் சிவமுமாய் விளங்கும் இயல்பினால், அந்நாள் முதல் உலகம் பெண்மையும் ஆண்மையும் என இருவகைச் சேர்க்கையால் பெண்ணும் ஆணுமாக விளங்கும் என்றுரைத்தருளிப்

பிரமன் முன் நின்றும் அம்மை மறைந்தருளி உலகம் உய்யும் வகை 'சதி' என்னும் பேருடன் தக்கனுக்கு மகளாயினர்.

ஆய நங்கையை விதியுளி அரனூர்க் களித்து நான்முகன் அன்னணந் திகழ, மாயி ருஞ்சகம் ஆணொடு பெண்ணாய் வயக்க முற்றன அகிலநா யகியும், பாயும் வெள்விடைப் பாகரை மணந்து பழித்த தக்கனை வெறுத்தவன் மகண்மை, மேய மேனியை நீத்திம கிரிக்கு மேனை பால்மக ளாய்அவ தரித்து. 14

மகளாகிய அம்மையாரை விதிப்படி பெருமானூர்க்கு மணம் செய்வித்துப் பிரமன் அவ்வாறு விளங்கப் பேருலகம் ஆணும் பெண்ணுமாய் விளக்கம் பெற்றன. உமையம்மையாரும் சிவபிரானுரை மணந்து இழித்துரைத்த தக்கனை வெறுத்து அவனுக்கு மகளாந் தன்மையை யுடைய திருமேனியைத் தவிர்த்து இமய மன்னன் மனைவி மேனுதேவிக்கு மகளாக வந் தவதரித்து.

அங்கண் மேவிய பிஞ்ஞகன் ஏவற் பணியின் மேவின ளாகமற் றந்நாள், பங்க யத்தவன் நல்கிய வரத்தால் தாரு காசுரன் எனப்பயில் கொடியோன், பொங்கும் ஆண்மையின் உலகெலாம் வருத்தப் பொன்ந கர்க்கிறை குரவனை முதலோர், தங்கு மூதத். தொடும் உசாவிநான் முகத்தோன் றன்னை எய்திஅக் கொடுந்தொழில் இயம்பி. 15

அங் கெழுந்தருளிய பெருமானது திருக்குறிப்பின் நின்றனராக அந்நாளில் பிரமன் வழங்கிய வரத்தைப் பெற்ற தாருகாசுரன் என்னும் கொடிய தானவன் உலகங்களை முற்றவும் வருத்துதலால் இந்திரன் முதலாம் வானவர் பிருகற்பதியை வணங்கி உபாயம் அறிந்து பிரமனை அடுத்துக் கொடுமையைக் கூறி,

எந்தை நீஇது தீர்திறம் புகல்என் றிறைஞ்சி வேண்டலுந் திசைமுகப் புத்தேள், அந்த வெந்திறல் தாருகன் செருக்கை அடக்கும் ஆண்மையன் முருகவேள் அன்றிக், கந்த மென்றொடைக் கடவுளர் ஏனோர் வல்ல ரல்லர்அக் கந்தனைத் தருவான், இந்து சேகரன் உமையினை மணக்கும் உபாயம் நீபுரி கெனவிடை கொடுத்தான். 16

எந்தையே! இக் கொடுமை தீரும் வழியைக் கூறுக' என்று வேண்டிய காலையில், பிரமன், அத்தாருகன் அகந்தையை முருகப் பெருமான் அன்றிப் பிறர் அடக்கும் வலியிலர். அம் முருகனைத் தர உமையம்மையைச் சிவபிரான் திருமணம் கொள்ளும் சூழ்ச்சியைப் புரிதி எனப் போக்கினன்.

மீண்டு வாசவன் மாரனை நினைப்ப வேனில் வேள்சிலை பகழிகைக் கொண்டு, காண்ட குங்கவின் இரதியும் மதுவும் மருங்கு மேவரக் கடுகிவந் திறைஞ்சி, ஈண்டு நின்னருள் ஆணையின் வலி-

யால் யாதும் ஆற்றுவல் செய்பணி அருளாய், மாண்ட முப்புரம்
பொடித்தவர் தமையும் வெல்ல வல்லுநன் மற்றுரை யெவனே. 17

பின்பு இந்திரன் மன்மதனை எண்ணினன். அப்போதே இரதியும் வசந்தனும் உடன் வர எதிர்தோன்றி வணங்கி நின் ஆணையின் வன்மையால் எதனையும் செய்ய வல்லேன். செயத் தக்க பணியில் என்னை ஏவுதி. முப்புரம் எரித்த சிவபிரானையும் அழிக்க வல்லேன் எனின் வேறென்னை பேச்சுளது? என்றனன்.

ஈதி யம்புழி இந்திரன் உவகை எய்தி விண்ணவர் இடும்பை-
யும் அவுணன், நீதி யில்லன புரிவதும் மலரோன் நிகழ்த்தும்
மாற்றமும் வகுத்துரை செய்து, பேதி யாவகை பெருந்தகை
இன்னே பிஞ்ஞு கன்றனை உமையொடுஞ் சேர்த்திப், போதி என்-
றலும் ஐங்கணைக் கிழவன் பொன்ந கர்க்கிறை விடைகொடு
மீண்டான். 18

இந்திரன் தேவர் துன்பத்தையும், தாருகன் கொடுமையையும், பிரமன் கருத்தையும் உணர்த்திப் "பெருந்தகையே! உறுதி பூண்டெய்திப் பெருமானை உமையம்மைபால் மணத்தாற் சேர்த்திப் போதுதி" என்ன மன்மதன் இந்திரனிடத்து விடை பெற்றுப்போனான்.

இறைவன் இறைவியை மணத்தல்

மீண்டு செம்மலார் இருந்துழி அணுகி மெல்ல வெஞ்சிலை
வாங்கலும் அவனை, மாண்ட குந்திரு நுதல்விழி நெருப்பின்
மடுத்து வார்குழல் இரதிநின் றிரப்பக், காண்ட காவகை உருவிலி
யாக்கிக் கடுந்த வம்புரி மலைமகள் மணந்து, தூண்டு வேற்படைக்
குரிசிலை உதவித் தாரு கன்றனைத் தொலைத்தருள் செய்தார். 19

அம்மையைப் போக்கிய இறைவனார் யோகிருக்கையில் மன்மதன் கருப்பு வில்லை வளைக்கையில் நுதல் விழியால் அவனை எரித்து இரதியின் வேண்டுகோளுக்கிரங்கி அவள் கணவனை உயிர்ப்பித்து அவளுக்கு மட்டும் தோன்றும் வடிவில் நிறுத்தி மலைமகளை மணந்து பெருமானார் முருக வேளைத் தந்து அப்பெருமானைக் கொண்டு தாருகனைத் தொலைத்தனர்.

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

ஆங்கதன் பின்னர்ச் செங்கேழ் அலங்கொளி வடிவின் நஞ்சந்
தாங்கிய மிடற்றி னுருஞ் சுரிகுழல் இமய மாதும்
ஓங்குயர் பலவுஞ் சந்தும் வேரொடும் ஒடியத் தள்ளி
வீங்கொலி அருவி தாழும் மந்தர வெற்பின் மேலால். 20

பிறகு விட் டிலங்கும் நஞ்சினையுடைய பெருமானாரும் இமய வல்லியும் சந்தன மரம் பலா மரம் முதலிய முறியுமாறு அருவி வீழும் மந்தர மலையின் மேல்,

உலகெலாம் உய்யு மாற்றால் உவளகத் தைந்து மூன்றாச்
சிலதியர் அடுக்கி யிட்ட செழுந்தவி சணையின் மன்னி
விலகரு மகிழ்ச்சி மீதூர் திருவிளை யாடற் செய்கைக்
கலவியின் நயந்து தம்முட் களித்தினி திருக்கும் ஏல்வை. 21

உலகம் முற்றவும் பிழைக்குமாறு அந்தப் புரத்தில் ஐந்தாகவும் மூன்றாகவும் பாங்கியர் அடுக்கிய வளமுடைய அணையில் இருந்து பெரு மகிழ்ச்சி தலை சிறப்பத் திருவிளையாட்டால் கலத்தலில் திருவுளம் வைத்து உவந்திருக்கும் பொழுதில்,

கலிநிலைத் துறை

மும்மைப்புவ னங்களுஞ் செய்தவப் பேறு முற்றச்
சும்மைத்திரை நீருடை மேதினி தோற்றம் எய்தச்
செம்மைத்திசை எட்டினுந் தென்றிசை மிக்கு வெல்ல
மம்மர்த்தொகை நூறிய வண்டமிழ் நாடு வாழ. 22

மூவுலகோரும் செய்த தவப் பயன் வாய்ப்பவும், கடலை ஆடையாக வுடைய நிலமகள் புகழ் மிகவும், திசை எட்டினும் தென் திசையே மேம்படவும், மயக்கக் குழாத்தைக் கெடுத்த வண்டமிழ் நாடு வாழவும்,

நலம்மன்னிய தண்டக நாடு செழித்து மல்கப்
பலரும்புகழ் காஞ்சி வளம்பதி மேன்மை சாலக்
குலவுஞ்சம யங்களொ ராறும் மகிழ்ச்சி கூர
உலகெங்கணும் வைதிக சைவம் உயர்ந்து மன்ன. 23

தண்டகன் ஆண்ட தொண்டை நாடும், பல சமயத்தவரானும் புகழப்படும் காஞ்சிமா நகரும் பெருஞ் சிறப்புறவும், அகச்சமயங்கள் ஆறும் மகிழ்ச்சி மிகவும், உலகில் எங்கும் சிவாகம வேதவிதிச் சிவநெறி சிறக்கவும்,

எவ்வெத்தவத் துஞ்சிவ பூசனை ஏற்றம் என்னப்
பௌவப்புனல் சூழ்படி மேலவர் தேறி உய்யத்
தெவ்வுத்தொழில் பூணும் அறக்கடை தேய நல்கூர்
எவ்வத்திறம் நீங்கி உயிர்ப்பயிர் எங்கும் ஓங்க. 24

எவ்வகைத்தாய தவத்தினும் சிவ பூசனை ஏற்றம் உடைத்தென்று கடல் சூழ்ந்துள்ள உலகவர் தெளிந்து உய்யவும், பகைமையாகிய பாவம் தேயவும், வறுமையாகிய துன்பப் பகுதியினின்றும் நீங்கி உயிராகிய பயிர்கள் யாண்டும் தழைக்கவும்,

முப்பான்முத விட்ட இரண்டற முந்த ழைப்ப
எப்பால்உல கத்தொளி யாவையும் எம்பி ரானார்
தப்பாவிழி யின்னொளிச் சால்பென யாருங் காண
அப்பார்சடை யார்அடித் தொண்டர் அகங்க ளிப்ப. 25

முப்பத்திரண்டறங்கள் வாழவும், எவ்வுலகத்தும் தங்கிய ஒளி யெல்லாம் எமது பெருமானார் தம் வழுவா விழிகளின் ஒளி நிறைவே என யாவரும் உணரவும், கங்கைச் சடையவர் அடியவர் உள்ளம் களி தூங்கவும்.

இறைவன் திருக்கண்களை இறைவி புதைத்தல்

கைம்மிக்கெழு காதல் விருப்புமீ தூர்கு றிப்பின்
விம்மிப்பணைத் துப்புடை வீங்கி எழுந்த கொங்கைப்
பொம்மற்பெரு மாட்டி வெரிந்புறத் தெய்தி வல்லே
செம்மற்பிறை வேணிய னார்திருக் கண்பு தைத்தாள். 26

கை கடந்து எழுகின்ற காதலாகிய விருப்பம் அவ்வளவின் நில்லாது வெளிப்படும் கருத்தினால் பொருமிப் பருத்துப் புடை திரண்டு நிமிர்ந்த தனங்களையுடைய பொலிவுடைய உமாதேவியார் பின்னாகிய முதுகின் பக்கத்திற் போய்ப் பிறையை அணிந்த பெருமானார் தம் திருக் கண்களை விரைய மூடினர்.

அறுசீரடி யாசிரிய விருத்தம்

இருண்டபூங் குழலாள் செங்கை இறுகுறப் புதைத்த லோடும்
இருண்டகந் தரத்தார் நோக்கின் இருசுடர் மறைந்த வாற்றால்
இருண்டது புவனம் முற்றும் இருண்டஎண் டிசையும் என்றும்
இருண்டறி யாத விண்ணோர் இருக்கையும் இருண்ட தந்நாள். 27

இருண்ட கூந்தலையுடைய அம்மையார் தம் செவ்விய கைகளால் கண்களை இறுகப் பொத்திய அளவிலே இருண்ட கண்டத்தர் தம் திருக் கண்களின் இரண்டு சுடரும் மறைந்தமையால் எல்லா வுலகங்களும் இருண்டன. எண் திசைகளும் இருளுற்றன. இருள் படர்ந் தறியாத தேவருலகும் அந் நாளில் இருள் சூழ்ந்தது.

அழுங்கவே தன்னை நாளும் காய்ந்துலாம் அருக்கர் தம்மோ
டொழுங்குறத் திரட்டி நீட்டிச் செருகிவைத் திட்டா லொக்குஞ்
செழுங்கதிர் மதியஞ் செந்தீ உடுமணித் திரளை யெல்லாம்
விழுங்கித்தன் வீறு காட்டிப் படர்ந்தது திமிர வீக்கம். 28

வருந்தும்படி எந்நாளும் வெகுண்டுலாவும் சூரியரையும், அவர் தம் கதிர்களையும், சந்திரரையும் செந்தீக் குழாத்தையும், விண்மீன்களை யும் உள்ளடக்கித் தன் மிகு வலியைப் புலப்படுத்தி இருட் பெருக்கம் பரவியது.

சிறைபடு கூகை யாதி கருங்கொடித் திரள்க ளொத்த
மறமலி புலிக ளாதி வானரக் குலங்க ளொத்த
நறைகமழ் குமுதப் போதும் நளினமுந் தம்மு ளொத்த
உறுதுயர் நேமிப் புள்ளுஞ் சகோரமும் ஒருங்கே யொத்த. 29

இரவில் செயற்படும் கோட்டான் முதலிய பறவைகளும், கொடுமைமிக்க புலி முதலிய விலங்குகளும் தேன்மணங் கமழும் செவ்வல்லி மலரும், நிலவைப் பருகும் சகோரப் பறவையும் முறையே இரவில் புடை பெயரமாட்டாத காக்கைகளையும், குரங்கினங்களையும், தாமரை மலர்களையும் சக்கரவாகப் பறவைகளையும் ஒத்தன.

அலர்தலை உலகங் காணார் அதற்படு பொருள்கள் காணார்
நிலைபெறு தத்தம் யாக்கை நீர்மையுங் காணார் முந்நீர்க்
கலிதிரை வரைப்பி னோருங் கண்டறி யாத வானத்
தலைவருந் திமிரம் ஒன்றே தணப்பறக் காண்டல் பெற்றார். 30

உலகையும், அதனிடைப் பொருள்களையும், தத்தம் உடம்பின் இயல்புகளையும் உலகோர் காணாராய் இருளொன்றையே கண்டனர். இரவு பகலில்லாத ஒளியுடைய விண்ணுலகோரும் கண்டறியாத இருளையே நீக்கமின்றிக் கண்டனர்.

இறந்தது படைப்பின் ஆக்கம் இகந்தன வேள்விச் செய்கை
பறந்தன தவந்தா னங்கள் பறைந்தன கடவுட் பூசை
துறந்தன கலவி இன்பந் தொலைந்தன அறிவின் தேர்ச்சி
மறந்தன மறைநூற் கேள்வி மயங்கின உலக மெல்லாம். 31

ஒழிந்தது சிருட்டி. அழிந்தன வேள்விகள். ஓட்டெடுத்தன தவமும் தானமும். ஓடி ஒழிந்தன திருக்கோயில் வழிபாடுகள். கைவிடப்பட்டன சிற்றின்ப நிகழ்ச்சிகள். தொலைந்தன ஆராய்ச்சிகள். நினைவினின்றும் நீங்கின கேள்விச் செல்வம். மருண்டன உலகங்கள் யாவும்.

இறைவி கைநீப்ப இறைவன் கண்திறத்தல்

கடவுளர் முனிவர் மக்கள் யாவருங் கவன்றாங் காங்குப்
படலைவல் லிருளின் மூழ்கிப் பதைபதைத் தாவா வென்னக்
கடலொலிக் கிளர்ச்சி நாண முறையிடுங் காலை வெற்பின்
மடவரல் கரங்கள் நீப்ப மலர்விழி திறந்தார் ஐயர். 32

தேவரும், முனிவரும், மக்களும் பரவிய பேரிருளில் மூழ்கி அந்தோ என் றரற்றி நடுங்கிக் கடலொலி வெள்கும்படி முறையிட் டரற்றும்பொழுது உமையம்மையார் கண்களைப் புதைத்த கைகளை எடுக்கக், கண் திறந்தருளினர் முதல்வர்.

அல்கின ஒளிகள் எங்கும் அஃகிய திருளின் வீக்கம்
மல்கின படைப்புங் காப்பும் வயங்கின அறத்தின் ஈட்டம்
பல்கின வேள்வி எங்கும் பரந்தன இறைவர் சீர்த்தி
புல்கின வேத வாய்மை பொலிந்தன உயிர்க ளெல்லாம். 33

ஒளிகள் எவ்விடத்தும் குடிகொண்டன. இருட் பெருக்கம் சுருங்கியது. படைத்தலும் காத்தலும் ஆகிய தொழில்கள் நன்கு

பெருகின. அறங்கள் விளங்கின. வேள்வி பலவும் நிகழ்ந்தன. பரவின இறைவன் பொருள்சேர் புகழ்கள். வேதாகம உண்மைகள் தழுவப் பெற்றன. உயிர்களெல்லாம் களிப்பாற் பொலிந்தன.

வெறிமலர்த் தளவ மூரல் விழியிணை மறைத்து நீக்குஞ்
சிறுபொழு துலகுக் கெல்லாம் எண்ணில்பல் ஊழி சென்று
மறைநெறி படைப்புச் செய்கை யாதிய மறுத்த வாற்றால்
இறைவிதன் வதனம் நோக்கி ஏந்தலார் அருளிச் செய்வார். 34

முல்லை யரும்பினை ஒக்கும் பற்களையுடைய பெருமாட்டியார் பிரானாரின் கண்களைப் புதைத்து நீக்கிய அச்சிறிய பொழுது உலகுயிர் களுக்கு அளவில்லாத ஊழிக் காலங்கள் கழிந்து வேதவிதிப்படி நிகழும் சிருட்டி முதலியன தடைப்பட்டமையால் பெருமானார் அம்மையார் திருமுகம் நோக்கி அருள் செய்வர்.

*இறைவன் இறைவிக்குப் பணித்தல்*

இருசுடர் தமக்கா தார மாகிய எமது கஞ்சத்
திருவிழி புதைத்த வாற்றால் படைப்பாதிச் செய்கை மாறி
உருகெழு தீமை நின்னை உற்றதால் அதற்குத் தீர்வு
மருமலர்க் குழலி னாய்நீ மரபுளி இயற்றல் வேண்டும். 35

சூரிய சந்திரர் தமக்குப் பற்றுக் கோடாகிய எம்மலரனைய திருவிழிகளைப் புதைத்தமையால் சிருட்டி முதலியன நிகழாது வெருவத்தக்க பாவம் நின்னைப் பற்றியதாகலின் அப்பாவம் தீர ஏலவார்குழலீ ! நீ விதிப்படி பிராயச்சித்தம் செய்தல் வேண்டும்.

இகப்பருங் கருணை பூண்ட எமக்கும்நின் றனக்கும் நந்தம்
அகத்தடி யவர்க்கும் பாவம் அணுகுவ தில்லை யேனும்
வகுத்தவா புரிதி எல்லாக் கருமமும் மரபி னல்யாம்
நிகழ்த்திய வாறே பற்றி நிகழ்த்திடும் உலகங் கண்டாய். 36

உனக்கும், நம் அடியவர்க்கும், நீங்காத பெருங்கருணை பூண்ட எமக்கும் பாவம் பற்றுதல் இல்லையானாலும் வேத விதிப்படி செய். எல்லாச் செயல்களும் யாம் செய்யவே உலகோர் பின்பற்றிச் செய்வ ரென அறி. 'அகத்தடிமை செய்யும் அந்தணன்' (சுந்தரர்)

என்றருள் செய்யக் கேட்டு நடுக்கமுற் றிறைஞ்சி நின்று
மன்றலங் குழலாள் கூறும் வள்ளலே கழுவாய்ச் செய்கை
என்றதி யாது செய்யுங் காலமே திடமே தெல்லாம்
நன்றெனக் கருளாய் என்ன நம்பனார் வகுத்துச் சொல்வார். 37

என்று அருள் செய்யக் கேட்டு நடுங்கி வணங்கி எழுந்து வள்ளலே! பிராயச்சித்தம் யாது? அதனைச் செய்தற்குரிய காலமும், இடமும், பிறவும் விரித்துரைப்பீரென ஏலவார்குழலியம்மை விண்ணப்பிக்க நம்பனார் வகுத்துரைப்பார்.

கலிநிலைத் துறை

வில்லிழை பூண்டிறு மாந்தெழு கொங்கை விரைக்கோதாய்
அல்லன செய்துபின் அஞ்சுப வர்க்குறு கழுவாய்தாம்
நல்லற நூல்களின் மாதவர் நாட்டினர் அவையெல்லாஞ்
சொல்லிய தீர்வு மிகச்சிறு மைத்திது துணிவாயால். 38

ஒளிவிடும் அணிகளையும், சாயாத கொங்கைகளையும், மணங் கமழும் மலரணிந்த கூந்தலையும் உடையோய்! பாவங்களைச் செய்து பின் அஞ்சுபவர்க்குப் பொருந்திய தீர்வுகளை நல்லற நூல்களில் பெருந்தவர் வலியுறுத்தி உள்ளனர். அவையாவும் மிகவும் சிறுமையை யுடையன. அவற்றை மனங்கொள்.

எத்துணை வன்மை அறக்கடை முற்றும் இறச்செய்யும்
அத்தகு சீர்க்கழு வாய்எமை அன்பின் அருச்சித்தல்
சித்தம் ஒருக்கி நினைத்தல் பழிச்சுதல் பேர்செப்பல்
பத்தியின் எம்அடி யார்வழி பாடெனும் இவையாமால். 39

எத்துணை வலிமையுடைய பாவத்தையும் முழுதும் போக்கும் சிறப்பினையுடைய பிராயச்சித்தம் யாவை எனிற் கூறுவோம். எம்மை அன்போடும் அருச்சனை செய்தலும், மனம் ஒன்றித் தியானித்தலும், துதி செய்தலும், திருநாமத்தைக் கணித்தலும், மெய்யன்பொடும் மாகேசுவர பூசனை புரிதலும் ஆகும்.

முற்றிய சீர்இரு முப்பருவங்களும் முறையானே
அற்றமில் கால மெனப்படும் யாம்பெரி தானந்தம்
உற்றுறை கின்ற இடங்கள் இடங்கள்எம் உறும்அன்பர்
பற்றிய தானமும் அத்தகை மைத்தென அறிபாவாய். 40

பாவையே! சிறப்புமிக்க விடியல் முதலிய ஆறு காலங்களும் குற்றமற்ற காலங்கள் எனப்படும், யாம் விரும்பியுறையும் இடங்களும், எம்மைக் கூடிய மெய்யன்பர்கள் உறையும் இருக்கைகளும் அத்தகு சிறப்புடையன என அறிவாயாக.

ஆதலின் நாம்உறை வைப்பிடை யாயினும் எம்அன்பர்
மேதக வைகும் வரைப்பிடை யாயினும் மீப்பொங்குங்
காதலி னால்எமை அர்ச்சனை யாற்றுதி இதுகாணூஉப்
பாதலம் மண்ணகம் விண்ணகம் உய்வது பண்பென்றார். 41

ஆகலின், யாம் உறையும் இடங்களி லாயினும் அன்றி மெய்யடியார் மேவும் தலங்களி லாயினும் பேரன்பொடும் எம்மை அருச்சனை செய். அதனைக் கண்டு விண்ணவரும் மண்ணவரும் கடைப்பிடித்து உய்வர் என அருளினர்.

என்றலும் அங்கணர் பங்கய பாதம் இறைஞ்சித்தாழ்ந்
தொன்றிய சிந்தையின் ஆளுடை நாயகி உரைசெய்வாள்

*அன்றிய நெஞ்சுரை செல்லரு நீஅவ ரவர்தத்தம்*
*பொன்றும் உணர்ச்சியின் அர்ச்சனை பூணவும் எளிவந்தாய்.* 42

அவ்வளவில் ஆளுடைய நாயகியார் இறைவரை வணங்கி ஒருப்பட்ட சிந்தையொடும் உரைப்பர், மாறுபட்ட மனம் வாக்குக்களைக் கடந்த நீர் அவரவர் சிற்றுணர்ச்சியொடும் புரியும் பூசனையை ஏன்று கொள்ள எளியரும் ஆயினீர்.

*நானும் மகிழ்ந்துனை அர்ச்சனை செய்யும் நலம்பெற்றேன்*
*தேனமர் கொன்றை மிலைச்சிய செஞ்சடை வள்ளால்நின்*
*ஊனமில் பூசனை செய்திறம் எத்திறம் உரைஎன்ன*
*ஆனுடை ஊர்தி அருட்கட லன்னவர் புகல்கிற்பார்.* 43

'அடியேனும் பூசனையை மகிழ்ந்து செய்யும் பேறு பெற்றேன்' வள்ளலே! குற்றமற்ற பூசனையைச் செய்யும் முறையை உரைமின். என்று வேண்ட, விடையேறுகைக்கும் விமலர் அருள்வார்.

*கரிசறு நித்தநை மித்திக காமிய மெனமூன்றும்*
*உரிமையின் எம்அடி அர்ச்சனை ஏனைய உலகத்துப்*
*புரிதரு பூசனை நித்திய பூசனை யாம்அன்றித்*
*தெரிதரில் இன்னவை காமியம் நைமித் திகம்ஆகா.* 44

உரிமையொடும் எம்மைப் பூசனை செய்தல் நித்தம், நைமித்திகம், காமியம் என மூவகையாகும். மண்ணுல கொழித்த உலகங்களில் நித்திய பூசனை ஒன்றே செய்தல் அமையும். பிற இரண்டும் அவ்வுலகங் களில் செய்தல் கூடா.

*பொருவறு மூன்று முறும்கரு மம்புரி நிலமீதே*
*கரும நிலந்திகழ் பாரத மாம்வரு டங்கண்டாய்*
*திரைகெழு கீழ்க்கடல் மேற்கடல் சேதுவொ டிமயத்துள்*
*மருவிய மேதினி பாரத மால்வரு டம்மாமால்.* 45

ஒப் பிகந்த முத்திறப் பூசனையும் புரிதற்குரிய கரும பூமி இந் நிலமே. கரும பூமியே பாரத பூமி எனப்படும், அது கிழக்கிலும் மேற்கிலும் கடலை எல்லை யாகவும் வடக்கிலும் தெற்கிலும் முறையே இமயமலையையும் சேதுவையும் எல்லையாகவும் உடையது.

*இத்தகு பாரத மாம்வரு டத்தின் எமக்கான*
*உத்தம வைப்பின் விதிப்படி எம்மை இலிங்கத்தின்*
*முத்துறழ் வெண்ணகை முற்றிழை மூதுல கெல்லாம்மெய்ச்*
*சித்தி பெறும்படி வல்லை அருச்சனை செய்கிற்பாய்.* 46

இந்நிலையுடைய பாரத பூமியில் எமக்குரிய உத்தமத் தலத்திடை விதிப்படி சிவலிங்கத்தில் முற்றுப் பெற்ற அணியினளே! ஆன்மாக்கள் நலம் பெற விரைந்து எம்மைப் பூசனை செய்வாயாக.

காஞ்சியே தவம்செயற்கு இடமெனல்

என்றலும் ஆவயின் எண்ணில் தலங்களுள் எம்மான்நீ
நன்று மகிழ்ந்துறை மிக்குயர் நற்றலம் யாதென்னக்
குன்று குழைத்து வடிக்கணை பூட்டினர் கோல்கோடி
அன்றினர் இஞ்சி அழித்தருள் அங்கணர் தாம்சொல்வார். 47

'அங்குள்ள பல தலங்களுள் எம்மானே! நீ விரும்பி வீற்றிருக்கும் நல்லிருக்கை யாது' என வினவலும், மேருவை வில்லாகக் கொண்டு, கொடுங்கோன்மை புரிந்து மாறுபட்ட முப்புரர் கோட்டையை அழித்தருளும் பெருமான் அருள்வார்.

ஆயிடைநாம் மகிழ்ந்துறையும் திருப்பதிகள் பலகோடி
அவற்றுள் மேலாம், ஆயிரத்தெட் டவற்றதிகம் ஒருநூற்றெட்
டவற்றதிகம் அறுபத் தெட்டாம், ஆயினவற் றுயர்காசி காஞ்சி-
யெனும் இரண்டதிகம் அறிவான் மிக்கோர், ஆயின்அவை இரண்-
டுள்ளும் சாலநமக் கினியநகர் அணிநீர்க் காஞ்சி. 48

அங்குள்ள பலகோடி இருக்கைகளுள் ஆயிரத்தெட்டுத் தலங்கள் மிக்கன. அவற்றுள் நூற்றெட்டுத் தலங்கள் சிறந்தன. எனினும், அறுபத்தெட்டாலயங்கள் மிக்கினியன. ஆயினும் காசி காஞ்சி என்னும் தலங்கள் மேன்மையுடையன. அறிவினல் மிக்கோர் ஆராய்வுழி எமக்குப் பெரிதும் மிக்கது காஞ்சியே ஆகும்.

இவ்வண்ணம் தானங்கள் பலவகுத்த தெற்றுக்கேல்
இயம்பக் கேளாய், மைவண்ண இருள்மலத்தின் இருவினையாற்
பிணிப்புண்டு மருளின் மூழ்கி, உய்வண்ணம் அறியாத பசுக்கள்-
தமை அம்மலத்தின் உறுத நாமே, மெய்வண்ணப் பெருங்கருணைத்
தன்மையினல் விடுவிக்க வேண்டு மாற்றான். 49

இங்ஙனம் திருத்தலங்கள் பலவாக வகுத்தது எதற்கெனின், கூறக் கேட்டி. ஆணவமலம் காரணமாக இருவினைகளாற் கட்டுண்டு மயக்கத்தின் மூழ்கிப் பிழைக்கும் வழி தெரியாத ஆன்மாக்களாகிய பசுக்களை இயல்பாகப் பாசங்களின் நீங்கிய யாமே பெருங்கருணை உண்மையினல் விடுவிக்க வேண்டுதலின்,

மருவாரும் பூங்குழலாய் ஐவகைய சத்திகளை வகுத்துப்
பின்னர், அருநான்கும் உருநான்கும் அருவுருவந் தான்ஒன்றும்
ஆக ஒன்பான், திருமேனி தோற்றுவித்துத் தோற்றமுதல்
ஐந்தொழிலும் செய்வான் உன்னி, இருவேறு மாயைகளின்
உடல்கருவி இடம்அனைத்தும் உயிர்கட் கீந்து. 50

'ஏலவார் குழலீ! பராசத்தி, திரோதானசத்தி, இச்சாசத்தி, கிரியாசத்தி, ஞானசத்தி எனப்படும் ஐவகைச் சத்திகளைப் படைத்து, மேலும் சிவம், சத்தி, நாதம், விந்து என்னும் அருவடிவங்களையும்,

சதாசிவன் என்னும் அருவுருவடிவையும், மகேசுரன், உருத்திரன் திருமால், பிரமன் எனப்பெறும் உருவத் திருமேனிகளையும் தோற்றுவித்துப்படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழிலையும் நடாத்துவான் திருவுளங்கொண்டு சுத்தாசுத்த மாயைகளினின்றும் தனுகரண புவன போகங்களை உயிர்களுக்கு வழங்கி,'

உள்ளமுதல் விகாரத்தின் எய்தும்இரு வினைக்குரிய பிறவி காட்டிப், பள்ளநீர் நடுக்கீழ்மேல் ஊசலெனக் கொட்புறுத்துப் பருவம்நோக்கி, மெள்ளவினைப் பயன்ஊட்டி நஞ்சோடு சுவையமிழ்தும் விரவித் தீற்றித், தெள்ளுதவம் அறிந்தறியா துபாயத்தும் உண்மையினும் சேரச் செய்வேம். 51

'அந்தக் கரணங்களின் வேறுபாடாகிய விருப்பு வெறுப்புக்களான் வரும் புண்ணிய பாவப் பயனுக்குத் தக்க பிறவியைக் கொடுத்துத் தரை, நரகம், சுவர்க்கம் ஆகிய இடங்களில் அங்கு மிங்குமாகச் சுழல்வித்துப் பதப்பட்ட பயன்களை நுகர்விக்கும் வகையால் விடமும் அமிழ்தும் போலும் துன்ப வின்பக் கூறுகளைக் கலந்தூட்டிச் சிவ புண்ணியங்களை அபுத்தி பூர்வமாயும், புத்தி பூர்வமாயும் உபாயம் உண்மை என்னும் சிவ நல்வினையைச் சேர்விப்போம்.'

தீக்கையின் வகை

சரியையெனக் கிரியையென யோகமென ஞானமெனச் சாற்று நான்காம், இரியமலத் துகளறுத்து நமைக்காட்டும் அருந்தவங்கள் இவற்றிற் சேறற், குரிமைதரும் உயர்தீக்கை சமயமுதல் மூன்றவைதாம் உதவும் முத்தி, அரிலகன்ற எம்முலகத் துறலாதி நான்கென்ன அறையும் நூல்கள். 52

'மலக் குற்றத்தைக் கெடுத்து நம்மைத் தரிசித்தற் கேதுவாகிய சரியை, கிரியை, யோகம், ஞானம் எனப்பெறும் நிலைகளில் நிற்றற் குரிமை ஆக்கும் சமயம் முதலாம் மூன்று தீக்கைகளும் உதவும் முத்தியைக் குற்றமற்ற சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் என்னக் கூறும் திருமறைகள்.'

தேக்கூறு தேமொழியாய் மலம்சீக்கும் தீக்கைபல விதமாம் அங்கண், நோக்கூறு மொழிஎண்ணம் நூல்யோகம் அவுத்திரியா நுவலும் ஏழுள், மீக்கூறும் அவுத்திரிதான் வியன்கிரியை ஞானமென இருபா லாய்முப், பாற்கூறு படுஞ்சமய விசேடநிரு வாணம்எனும் பகுப்பி னாலே. 53

'இனிமை மிகுகின்ற தேன் போலும் மொழியினளே! மலத்தைப் போக்குகின்ற தீக்கைகள் பலவகைப்படும். அவை; சட்சு தீட்சை, பரிச தீட்சை, வாசக தீட்சை, மானத தீட்சை, சாத்திர தீட்சை,

யோக தீட்சை, ஔத்திரி தீட்சை எனப்பெறும். எழுவகையுள் அவுத்திரி, ஞானவதி கிரியாவதி என இரண்டாய் ஒரோ வொன்று சமயம், விசேடம், நிருவாணம் என முத்திறப்படும்.

மருவ்புறம் அகமென்னும் மதத்துமூன்று வருணநிலை வழாது நின்று, மிருதிமறை நெறிவேள்வி பலபுரிந்து வேதாந்தப் பொருண்மை தேறி, வருமுறையான் இவையனைத்தும் முற்றியபின் மேல்நோக்கும் மதியான் மிக்கோர், தெருளுதவு சைவநெறிப் படுஞ்சமய தீக்கைதனக் குரிய ராவர். 54

புறச்சமய நெறிநின்று அகச் சமயம் புகுந்து தத்தம் வருணத் திற்குப் பொருந்த ஒழுகி ஸ்மிருதி வழி ஒழுகி வேத விதிப்படி யாகங்க ளியற்றி வேதங்களாகிய உபநிடதப் பொருள்களை உள்ளவாறு துணிந்து வருஞ் சிறப்பினுல் யாவும் முதிர்ந்த அந்நிலையில் மேம்படு நிலையை நாடும் அறிவான் மிக்கவர் மெய்யறிவை வழங்கும் சிவ நெறியில் புகப்பெறும் சமய தீக்கை பெறற் குரிமை உடையவராவர்.

சரியாபாதமும் அதன்பயனும்

அவ்வாற்றா ன்யாமருவும் திருக்கோயில் அலகிடுதல் மெழுகல் அன்பின், செவ்வாற்றான் மலர்கொய்து தார்மாலை தொடுத்-தணிதல் தீபம் ஏற்றல், மெய்வாய்ப்பச் சிவனடியார் பணித்தபணி தலைநின்று மேவ லாதி; இவ்வாற்றில் தாதநெறிச் சரியையினைப் புரிவோர்எம் உலகின் வாழ்வார். 55

இங்ஙனம் சமயதீக்கை பெற்று யாம் வீற்றிருக்கும் திருக்கோயில் களில் விளக்குமாறு கொண்டு தூய்மை செய்தலும், மெழுகுதலும், அன்பொடும் விதிவழி மலர் கொய்தலும், மாலைகள் புனைதலும், அணி வித்தலும், தீபமிடலும், மெய்யறிவு பெறச் சிவனடியார் ஏவல் வழி நிற்றலும் ஆகிய இம் முறையால் அடிமை நெறியாம் சரியையினைப் புரிந்தோர் சாலோகம் எய்துவர்.

கிரியாபாதமும் அதன்பயனும்

ஈதியற்றி முற்றியபின் மகநெறிக்காம் விசேடத்தை எய்திப் பூசைக், கோதியகொண் டாதார சத்திமுதல் சத்திஈ றோங்கு கஞ்சத், தாதனமே மூர்த்திமுதல் பாவித்தா வாகித்தா வரண பூசை, ஆதியசெய் தழலோம்பும் இக்கிரியை வழாதார்எம் அருகு வாழ்வார். 56

சரியையை முற்ற முடித்துச் சற்புத்திர மார்க்கத்தை அனுட்டித் தற்கு வேண்டும் விசேட தீட்சையைப் பெற்று அகப் பூசை புறப் பூசைக்கு வேண்டும் பொருள்களைக் கொண்டு மூலாதார சத்தியாகிய நில முதல் சத்தி தத்துவம் ஈறுக அமைந்த தாமரை மலர் மேல் ஆசனம், மூர்த்தி, மூர்த்திமான் தம்மைக் கருதி எழுந்தருளுவித்துப் பிராகார பூசை முதலியனவும் புரிந்து எரி யோம்புதலையும் புரிந்த கிரியையில் பிறழாதார் சாமீப பதமுத்தியை எய்துவர்.

யோகபாதமும் அதன்பயனும்

இக்கிரியை முற்றியபின் இயமாதி எட்டுறுப்பின் இயல்பு வாய்ந்து, பக்கவளி தனை அடக்கி நடுநாடி உறப்பயிற்சி ஆறு தாரந், தொக்கபொருளுணர்ந்தேகி மதிவரைப்பின் அமுதுண்டு சோதி உள்ளால், புக்கழுந்துஞ் சகமார்க்க யோகுழப்போர் எம்-உருவம் பொருந்தி வாழ்வார். 57

கிரியை முற்றுப் பெற்ற நிலையில் இயமம் நியமம் ஆகிய வாய்க்கப் பெற்று இடைகலை பிங்கலையில் ஓடும் காற்றைச் சுழுமுனையில் நிறுத்தி ஆறுதாரங்களில் விளங்குகின்ற விநாயகர் முதலாம் தெய்வத் திருவருள் கிடைத்துப் போய்ச் சந்திர மண்டலத்தில் அமுதத்தை உண்டு சுடர் விடும் சோதியுள் மூழ்கித் திளைப்பவர் தோழ நெறியில் யோக முயல் பவர் சாருபம் பெற்றுவாழ்வார்.

ஞானபாதமும் அதன்பயனும்

முறையானே இம்மூன்றும் முற்றி அருள் பதிந்துவினை ஒப்பு வாய்ந்து, நிறைவாய பருவத்தின் உயிர்க்குயிராய் நின்றருளும் யாமே தோன்றி, மறைவாய்மை நிருவாண விதியாற்றல் வழி-ஆறும் தூய்மை செய்து, குறையாத பேரருளின் அறிவுறுக்கும் அஞ்செழுத்தின் கொள்கை தேற்றி. 58

முறையாக இம்மூன்றனையும் முடித்துத் திருவருள் வீழ்ச்சி (சத்திநிபாதம்)யால் இருவினை ஒப்புத் தோன்றி மல பரிபாகத்தால் உயிர்க்குயிராய் நின் றருள் செய்யும் யாமே (பிறரல்லர்) குருவடிவில் வெளிப்பட்டு வேத விதிப்படி நிருவாண தீக்கை வழி ஆறத்துவாக்களை யும் சோதித்துத் தூய்மை செய்து பரிபூரணமாம் பேரருளினால் செவி அறிவுறுக்கும் அஞ்செழுத்தின் வழி நிற்கு முறை ஓது முறை இரண்டனை யும் ஒன்று படுத்தித் தெளிவித்து,

அருவுருவங் குறிகுணங்கள் முதல்ஈறு கட்டுவீ டனைத்தும் இன்றிப், பெருமையதாய் நுண்ணியதாய்ப் பேருணர்வாய் ஆனந்தப் பிழம்பாய் எங்கும், ஒருமுதலாய் அழிவின்றி ஓங்கொளி-யாய் நிறைந்துளதாய் உயிர்கள் தோறும், விரவியுடன் தொழிற் படுத்துப் புலங்கொளுத்தி வீடுய்க்கும் பதியாம் எம்மை. 59

மூவகை வடிவமும், குறியும், குணங்களும், ஆதியும், அந்தமும், பந்தமும், வீடும் ஆகிய யாவும் இல்லையாய்ப் பெருமையும், நுண்மையும் பேருணர்வும், ஆனந்தப் பெருக்கும், ஆய் எங்கும் ஒப்பற்ற முதற் பொருளாய் அழிவுறாது ஓங்கும் ஒளியாய், எவற்றினும் வியாபித்துள்ள தாய் ஆன்மாக்கள் தோறும் ஒன்றாய் வேறாய் உடனாகித் தொழிலிற் செலுத்தி மெய்யறிவு கொளச் செய்து முத்தியிற் செலுத்தும் பசுபதி யாம் எம்மை'

எண்ணிலவாய் வகைமூன்ருய் வெண்சிலேபோல் பற்றியவை தாமாய் என்றும், உண்மையவாய்ச் சத்தசத்தும் பகுத்துணர்சத் தாய்இருளும் ஒளியும் அல்லாக், கண்ணியல்பாய் வசிப்பவரு நிறை- வாய்எம் அருளாற்கட் டறுத்து வீடு, நண்ணுபவாய் உணர்த்த- வுணர் சிற்றறிவிற் பலவாம்நற் பசுக்கள் தம்மை. 60

'அளப்பிலவாய், ஒருமலம், இருமலம், மும்மலம் உடைமையின் மூவகையாய், படிகம் போல அடுத்ததன் தன்மையவாய் எக்காலத்தும் உள்பொருளாய் சத்தையும் அசத்தையும் அனுபவிக்கும் சதசத்தாய் இருளிலும் ஒளியிலும் அழுந்தும் கண் போல்வதாய் ஏகதேசியாய் வியாபியாய் (வசித்திட வரும் வியாபியாய்) எம்முடைய அருளினுற் றளை நீங்கி மோட்சத்தைத் தலைப்படுவனவாய் அறிவிக்க அறிகின்ற சிற்றறி வினையுடைய பலவாகும் நல்ல (பசு) ஆன்மாக்களை'

ஒன்ருகி அழிவின்றிப் பலஆற்றல் உடைத்தாய்ச்செம் புறுமா சென்னத், தொன்ருகி அருள்விளேவின் நீங்கும்இருள் மலத்துடன்அத் தொடக்கு நீப்ப, மின்ருவும் உடலாதி நல்கும்இரு மாயைஇரு வினைகட் கேது, என்ரேது கருமம்இவை நிகழ்த்து- திரோ தமும்எனும்ஐ வகைப்பா சத்தை. 61

'ஒன்ருய், நித்தியமாய், பலவகை ஆற்றல்களை உடையதாய் செம்பிற் களிம்பு போல அநாதியாய், திருவருள் விளைவினுல் வலிகெடும் ஆணவ மலத்தோடும் அத் தளை அறும்படி தீபம் போலும் தனுகரண புவன போகங்களை நல்கும் இருவகையாம் சுத்தமாயையும். அசுத்த மாயையும், இருவினைகட்குக் காரணமாம் மூலகன்மமும், இவற்றைத் தொழிற்படுத்தும் திரோதமலமும் ஆகிய பஞ்ச மலங்களை',

திரிபுணர்வு பொதுமாற்றிச் சிறப்பியல்பான் உணர்ந்- தெண்ணித் தெளிந்து தேறும், அரியபெறற் சன்மார்க்க ஞான- நிலை இதுகிடைத்த அறிவான் மிக்கோர், பெரியமலப் பிணி- யவிழ்த்துச் சிவானந்தப் பெரும்பேறு மருவிப் பாசம், இரிவதூஉம் புகுவதூஉம் இன்றிஒரு நிலையாம்அவ் வியல்பு தன்னில். 62

'மாறுபட உணர்தலையும், பொதுவாக உணர்தலையும் கைவிட்டு உண்மை யியல்பைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து உள்ளவா றுணரும் பெற லரிய நன்னெறியாகிய ஞான நிலை வாய்க்கப் பெற்ற அறிவான் மேலோர் ஆணவ மலக்கட்டை அறுத்துக்கொண்டு சிவானந்தமாகிய பெரிய பேற்றினைப் பொருந்தி அகல்வதும் புணர்வதும் இல்லாத அந் நிலையில்,'

உணர்பொருளும் உணர்வானும் உணர்வுமெனும் பகுப்- பொழியா தொழிந்து பானுப், புணர்விழியும் நீர்நிழலும் தீயிரும்பும் புனல்உவரும் பரிதி மீனுந், துணையஇரண் டறுகலப்பின் எம்- முடனுய்ப் பேரின்பம் துய்த்து வாழ்வார், இணர்விரைத்த மலர்க்- கோதாய் அவர்வடிவே எமக்கினிய கோயி லாமால். 63

'காட்சிப் பொருள், காண்பான், காட்சி எனப்பெறும் ஞேயம், ஞாதுரு, ஞானம் என்னும் இப் பிரிவு ஒழியாதொழிந்து சூரிய கிரணம் கலந்த கண்ணும், நீரும் அதனிடை நிழலும், தீயும் அதனுற் பற்றப் பட்ட இரும்பும், நீரும் கலந்த உப்பும், சூரியனும் ஒளி மடங்கிய விண்மீன்களும் ஒப்ப இரண்டற்ற கலப்பினுல் எம்முடனுகிப் பேரின்பத்தை நுகர்ந்து உடன் வாழ்வார், மணமுடைய மலர்க் கொத்துக்களை முடித்த கூந்தலையுடையோய்! அவர் வடிவமே எமக்கு இனிய திருக்கோயிலாகும்.' இம் முத்தியை ஒன்றி ஒன்று நிலை என்ப.

முத்திமுடி பிதுகண்டாய் முன்இயம்பு மூன்றும்முத்திப் பதங்க ளாகும், இத்தகைய முத்திகளை இம்முறையான் முயன்றவரே எய்தற் பாலார், அத்தகைய வலியில்லோர் எளிதாக வீடுபே றடைவான் எண்ணி, வைத்தபெருங் கருணையினுன் மேதினிமேற் பலதானம் வயங்கச் செய்தேம். 64

முடிபாகச் சொல்லப்படும் முத்தியாகும் இது, முன்னம் மொழிந்த மூன்றும் பத முத்திகளாகும். இவ்வியல்புடைய முத்திகளை இங்குக் கூறப் பெறும் சாதனங்களான் முயன்றவரே அடைதற் குரிமை உடையார். இவ்வுபாயத்தான் முடிக்கும் வன்மை யில்லாதவர் எளிதாக வீடு பேற்றினை அடைவான் உளங்கொண்டு பெருங்கருணை வைத்து உலகிற் பல தலங்கள் விளங்கும்படி வைத்தோம்.

அங்கவற்றில் வதிவோர்கள் முயலாதெம் உலகாதி பதங்கள் சேர்வர், கொங்குயிர்த்த மலர்க்குழலாய் அவற்றுள்ளும் குருமாடக் காசி வைப்பில், தங்குபவர் எம்உருவந் தனைப்பெறுவர் திருக்காஞ்சித் தலத்தில் வாழ்வார், மங்கரிய மலந்துமித்து நம்முடனும் பேரின்ப வாழ்வு சேர்வார். 65

'அத்தலங்களில் உறைவோர் முயற்சி சிறிதும் இன்றிச் சாலோக சாமீப பதங்களைப் பெறுவர். மணம் கமழும் மலரணிந்த கூந்தலை யுடையோய்! அத்தலங்களினும் நிறமுடைய மணிபதித்த மாடங்கள் சூழ்ந்த காசியில் வைகுவோர் எம்முடைய சாரூபத்தைப் பெறுவர். திருக் காஞ்சியில் வாழ்பவர் கெடாத ஆணவ வலியைக்கெடுத்துச் சாயுச்சியம் பெறுவர்.'

எம்முலகத் துறைவதனில் எம்அணிமைக் கண்ணமர்தல் ஏற்ற மாகும், எம்முருவந் தனைப்பெறுதல் அதற்கதிகம் அதற்கதிகம் இறவா இன்பத், தெம்முடனுய் ஒற்றித்தல் இம்முறையால் வதிவோர்கள் எவர்க்கும் மாரு, தெம்முடனும் பேறளிக்குங் காஞ்சிஎவற் றினுமதிகம் என்னத் தேருய். 66

'கயிலையில் உறைதல், இறைவனை அடுத்திருத்தல், இறைவன் வடிவம் பெறல், இரண்டறக் கலத்தல் இவை ஒன்றற்கொன்று ஏற்ற முடைத்தாம்; இத்திறனுல் உறைபவர் யாவர்க்கும் அடிசேர் முத்தியை வழங்கும் காஞ்சி எத்தலங்களினும் சிறப்புடைத்து என்று தெளிவாயாக.'

மறைமுடிவும் இவ்வாறே வீடுதவும் வளநகரம் காஞ்சி என்ன, அறைதருமால் அன்னதூஉம் வகுத்துரைப்பக் கேட்டி-யென அருளிச் செய்வார், மிறைபுரியுந் தக்கனர் வேள்வியகத் திமையவர்தம் மேனி முற்றும், குறைபடுத்துத் துகைத்துழக்கிச் சவட்டியபின் இரங்கியருள் கொடுக்க வல்லார். 67

'வேதமுடிபும் இங்ஙனமே முத்தி வழங்கும் வளமுடைய நகரம் காஞ்சி என்றே கூறும். ஆதலின், அதனையும் வகைப்படுத்திச் சொல்லக் கேட்டி' என்று குற்றத்தைச் செய்யுந் தக்கன் செய்த யாகத்தில் உடன் பட்ட குற்றத்தையுடைய தேவர்கள் தம் உறுப்புக்களைச் சிதைத்தும், தடிந்தும், வருத்திய பின்னர் இரங்கித் திருவருளைப் புரிந்த செல்வர் வாய்மலர்வர்.

கேசாந்த முத்தி

தன்னிகரில் கேசாந்தம் உறும்ஆவி தன்சிரத்துக் கபாலம் கீறி, வன்னியினில் பூவெனப்போய் வாயுவினில் புவவெனப்போய் இரவிமாட்டுப், பின்னம்அறு சுவவெனப்போய் விண்அரசின் மகவெனப்போய்ப் பிரமத் தொன்றாய், மன்னிடும்இக் கேசாந்த முத்தியினை எவ்வுயிர்க்கும் வழங்கும் காஞ்சி. 68

தனக்கு ஒப்பில்லாத கேசாந்த முத்தியைப் பெறற் குரிய பருவம் வந்த உயிரானது அக்கினி மண்டலத்தில் பூஃ எனவும், வாயு மண்டலத் தில் புவஃ எனவும், சூரிய மண்டலத்தில் ஸ்வஃ எனவும், இந்திரலோகத் தில் மஹஃ எனவும் போய்ப் பிரமத்தினிடத்தில் ஒன்றாய் நிலைபெறும் இக்கேசாந்த முத்தியினைக் காஞ்சி தன்கண் வாழ் பல்லுயிர்க்கும் எளிதில் வழங்கும்.

கவ்வெனச்சொல் விதிக்கீசன் ஆயஎமைக் கேசன்எனக் கழறும் வேதம், எவ்விடத்தில் ஆருயிர்கள் எம்போல அந்தத்தை எய்தா நிற்கும், அவ்விடத்தில் அதுமுத்தி கேசாந்த முத்தியெனப் படுமால் அந்தச், செவ்விடமும் நமக்கென்றும் அரசிருக்கை எனத்-திகழும் காஞ்சி மூதூர். 69

''க' என்னும் சொற்பொருளாகிய பிரமனுக்கு ஈசன் ஆகிய எம்மைக் கேசன் என்று வேதம் கூறும். எத்தலத்தில் வாழ்ந்தமை காரணமாக உயிர்கள் யாவும் எம்மிடத்தில் அந்தத்தையடையும். அவ்விடத்தில் அம்முத்தி கேசாந்த முத்தியெனப்படும். காஞ்சியாகிய அந்தச் செவ்விய இடமும் நமக்கு எந்நாளும் அரசு வீற்றிருக்கும் இடமாகத் திகழும். க+ஈசன்=கேசன்; பிரமனுக் கீசன் இறைவன்.

இன்னும்ஒரு வாறியம்பக் கேண்மதிநீ கம்மென்றல் சிரமாம் அந்தச், சென்னிமிசைச் சயனம்உறு வதுகேசம் அதுதனைஅஞ் சித்தல் காஞ்சி, அன்னதனல் காஞ்சியொடு கேசம்ஒரு பொருட் கிளவியாகும் தேம்பு, மின்னிடையாய் கேசாந்தம் ஆவதுமே தருகாஞ்சி அந்த மாமால். 70

மற்றோர், முறையாகவும் சொல்லக் கேட்பாயாக. கம் என்னும் சிரசில் சயனமுறுவது கேசம். கம் என்னும் சிரசில் அஞ்சித்தல் காஞ்சி. ஆகலின், கேசம் காஞ்சி என்பன ஒருபொருளைக் குறிப்பன. ஆகவே, கேசாந்தம் எனினும் காஞ்சியந்தம் எனினும் ஒன்றே.

*என்றும்நமக் கினியதனால் முதன்மையால் தானங்கட் கெல்லாம் சென்னி, என்றியம்பப் படுங்காஞ்சி இத்திறத்துக் கேசாந்தப் பெயர்சால் வைப்பின், ஒன்றுணரா மடவோர்கள் விலங்குமரம் முதல்அனைத்தும் உயிர்போங் காலை, மன்றமிசைத் தலையோடு கீறி- உடல் விடுத்தேகும் மலர்ப்பூங் கோதாய்.* 71

என்றும் நமக்கினிமையும், முதன்மையும் உடைமையால் தலங்களுக் கெல்லாம் சென்னி என்று சொல்லப்பெறும் காஞ்சி. மேற் கூறிய கேசாந்தப் பெயர் அமையும் தலத்தில் சிறிதும் அறிவில்லோரும், விலங்குகளும், மர முதலாம் பிறவும் உயிர் நீங்குங் காலத்து நிச்சயமாகக் கேசாந்த முத்தியை எய்தும் ஏலவார்குழலி!

*ஆதலின்அங் கிறந்தவர்கட் குடல்வேங்கால் சிரம்அனலில் வெடியா தின்றும், வேதமெலாம் எடுத்தியம்பும் அந்நகரின் பெருமைஎவர் விளம்பற் பாலார், ஏதமற அங்கெய்திக் கழுவாய்நீ இயற்றுதிமுன் இடப ஏறும், கோதகலக் கழுவாய்அங் காற்றியது கோதாய் என் றருளிச் செய்தார்.* 72

ஆகலின், அக்காஞ்சியில் இறப்பவர் உடல் நெருப்பில் வேகுங் காலை இன்றும் தலை வெடித்தல் இல்லை. வேதங்கள் எடுத்துப் போற்றும் அந் நகரத்தின் பெருமையை எடுத்தியம்ப வல்லவர் ஒருவரும் இலர். அங்குச் சென்று பிழை தீரக் கழுவாயாகப் பூசனை புரிதி. முன்னம் இடபமும் குற்றம் நீங்கப் பிராயச்சித்தம் அவண் புரிந்தது' என்றருளினர்.

இடபேச்சர வரலாறு

கலிவிருத்தம் துறை

*அருளுந்திரு வாய்மொழி கேட்டலும் அங்கை கூப்பிப்*
*பெருவெள்விடை யாதது செய்பிழை என்னை தீரப்*
*புரியுங்கழு வாய்எவ னேபுகல் கிற்றி என்றூட்*
*கிருள்கண்டன வல்விடம் ஏந்திய கண்டர் சொல்வார்.* 73

அவ்வளவிலே, அஞ்சலி செய்து 'இடபம் யாது? அது புரிந்த பிழை என்னை? புரிந்த பிராயச்சித்தம் யாதோ? அவற்றை விளக்க வேண்டும்' என வினவிய அம்மையார்க்குக் கொடிய விடத்தைத் திருக் கழுத்தில் நிறுத்திய பிரானூர் கூறுவார்,

*முன்னோர்கடை நாள்முள ரிக்கண் முகிழ்த்த புத்தேள்*
*முன்னுஞ்சகம் முற்றும்நம் மான்முடி வுற்ற தாகப்*
*பொன்னேர் சுணங்கின் பொலம்பூண்முலைப் பூவை யன்னாய்*
*அந்நாள்அறத் தெய்வதம் அத்திறம் உற்று நோக்கி.* 74

முன்னோர் ஊழியில் பிரமன் முன் படைத்த உலகம் முழுதும் நம்மால் ஒடுக்கப் பெற்றது. பொன்னைக்கும் தேமலேயும், பொன்னணிகளேயும் தாங்கிய கொங்கைகளேயும் நாகணவாய்ப் பறவையின் சொல்லொக்கும் இனிய மொழியினேயுமுடையாய்! அக் காலத்தில் தருமதேவதை யாவும் அழிந்தமையை ஊன்றி நோக்கி,

நில்லாஉல கத்துளவாய சரிப்ப நிற்ப
எல்லாம்அழி வுற்றன யானும் இறப்ப லோஎன்
றல்லாந்தினிச் செய்வகை யாதென் றிறைஞ்சி நம்பாற்
கொல்லேறுரு வங்கொடு வந்தது போற்றி யென்ன. 75

நில்லாமையை இயல்பாகவுடைய இயங்கியற் பொருள்களும் நிலேயியற் பொருள்களும் ஆகிய யாவும் அழிந்தன. தருமதேவதை யானும் அழிவேனே! என்று மனம் கொட்புற்று இப்பொழுது செயத் தக்கது யாது? என்று வணங்கி நம்மிடத்து விடை வடிவத்துடன் எதிரே வந்து போற்றி நிற்ப,

கண்டாம் அதனேக் கவலாதிஎன் றூர்தி யாக்கிக்
கொண்டாம் கொளப்பெற் றுலவாக்களி கூர்ந்ததாக
வண்டார் அளகக் கொடிஅவ்விருள் மாண்ட காலேத்
தண்டா அருளால் அதற்கின்னது சாற்ற லுற்றேம். 76

'அதனேக் கண்டு வருந்தாதே என அருள் செய்து விடையாகக் கொண்டனம். கொண்டமையால் கெடாத மகிழ்ச்சி மீக்கூர்ந்ததாக, மீள உலகச் சிருட்டி நிகழும் காலே, தாரணிந்த கூந்தலேயுடைய கொடியே! நீங்காத திருவருளால் அவ்விடைக்கு இதனேக் கூறலுற்றோம்.'

தரிப்பித்தலின் நீதரு மம்தரிப் பித்தி டாமை
தெரிப்பிக்கும் அதன்ம மெனப்பெயர் செப்பு மால்எம்
பொருட்டுப்புரி பாவமும் புண்ணிய மாக்கி எம்பால்
விருப்பற்றவர் செய்அற மும்மற மாக்கு விப்பாய். 77

'நீ தரிப்பித்தலினல் (தாங்குவித்தலால்) தருமம் ஆவாய். தரிப்பிக்காமையை உணர்த்தும் அதன்மம் எனும் பெயர். எம்மை நோக்கிச் செய்யப்படும் பாவத்தையும் புண்ணியம் ஆக்குவித்து எம்மை நினேயாதார் செய்யும் அறங்களேயும் பாவமாக்குவிப்பாய்.'

இவ்வேற்றிட பப்படி வத்துடன் எங்கும் எம்முன்
செவ்வேவதி கென்றருள் செய்திடும் நல்வ ரம்பெற்
றவ்வாறு நமக்கெதிர் நித்தலும் வைகும் அங்கேழ்ச்
செவ்வாய்க்கரு மென்குழல் வெண்ணகைச் செம்பொற்பூணய்.

இந்த இடப வடிவத்துடன் எம் சந்நிதியில் எவ்விடத்தும் செம்மைபெற இருப்பாய் என்றருள் செய்ய அந் நல் வரத்தைக்

கொண்டு, அழகிய நிறமமைந்த செவ்வாயும், கரிய குழலும், வெள்ளிய முறுவலும், செம்பொன்னால் அமைந்த அணிகளும் உடையாய்! அங்ஙனமே நமக்கு முன்னர் என்றும் விளங்கும்.

*வீறார் தருமக் கடவுட்சின வெள்வி டைக்கோர்*
*கூறா தலின் மாயனும் முப்புரங் கொன்ற அஞ்ஞான்*
*றேறாய்எமைத் தேரொடு தாங்கினன் ஏறு வந்த*
*வாறும்இது மேல்அது செய்பிழை மற்றுஞ் சொல்வாம்.* 79

சிறப்பமைந்த தருமக் கடவுளாகிய வெள் விடைக்குத் திருமாலும் ஓர் அமிசமாகலின் (உலகைத் தாங்குதலின்) முப்புரத்தை அழித்த நாளில் அத்திருமால் விடையாகித் தேரோடும் தாங்கினர். ஏற்றுருவம் வந்த முறை இதுவே ஆகும். இனி அத் தரும விடை செய்த பிழையையும் அதன் தீர்வையும் கூறுவோம்!

கருடன் செருக்கடைதல்

*கலி விருத்தம்*

*பின்னொரு காலத்துப் பிறங்கும் ஆற்றல்சால்*
*பன்னகப் பகைமைகொள் பறவை நாயகம்*
*பொன்அமர் மார்பனைப் பொறுத்து வல்லையே.*
*அந்நிலை உலகெலாம் அணுகி மீண்டதால்.* 80

பின்னோர் காலத்தில் விளங்கும் ஆற்றலமைந்த பாம்புகளோடும் பகை பூண்ட பறவை அரசாகிய கருடன் திருமகள் உறைகின்ற மார்பினராகிய திருமாலைச் சுமந்து உலகமுற்றும் விரைந்து சென்று அந்நிலையே மீண்டது.

*மீண்டபின் தருக்குமீக் கொண்டு வீறுடன்*
*ஆண்டகை மாயனை நோக்கி அண்ணலே*
*காண்டகும் ஆற்றலிற் கதழ்வின் என்நிகர்*
*மாண்டவர் உளர்கொலோ வையம் மூன்றிலும்.* 81

மீண்டமையால் செருக்கு மீக்கூர்ந்து இறுமாப்புடனே புருடோத்தமனாகிய திருமாலை நோக்கி "அண்ணலே! புலப்படும் வலிமையினும் விரைதலினும் எனக்கு நிகரான மாட்சிமையுடையவர் மூவுலகிற் றேடினும் ஒருவரேனும் உளர் ஆவரோ?"

*நிற்பன சரிப்பன யாவு மாய்நிறை*
*நிற்பொறுத் தரைக்கணப் பொழுதின் நீடியோய்*
*பொற்பமு வுலகினும் போந்து மீளும்இவ்*
*அற்புதம் எனக்கலா தார்க்குண் டாகுமோ.* 82

"நெடியோனே! (திரிவிக்கிரமனே) நிலையிற் பொருள்களும், இயங்கியற் பொருள்களுமாகிய யாவுமாய் நிறைந்த நின்னைச்

சுமத்தலும், அரைக் கணத்தில் பொலிவுடைய மூவுலகங்களுக்கும் சென்று மீளுதலும் ஆகிய இவ்வற்புதச் செய்கை எனக்கு அல்லாமல் வேறு யார்க்கு உள்ளன வாகும்.''

என்றிது புள்ளர சியம்பக் கேட்டலும்
நன்றெனக் குறுநிலா நகைமு கிழ்த்தரோ
இன்றிதன் செருக்கெலாம் இடப நாயகம்
ஒன்றறக் களையுமென் றுளத்தி லெண்ணினன். 83

என்றிதனைப் பெரிய திருவடி கூறக்கேட்டபொழுது அதன் பேதைமை பொருளாக நகைத்து இன்றே இதன் இறுமாப்பினை முற்றவும் இடபதேவர் சிறிதும் விடாது களையும் என்றுட்கொண்டனர்.

மெய்யுரை விளம்பினை உலக மீமிசை
ஐயநிற் கிணைஎவர் ஆரும் இல்லெனக்
குய்யம்வைத் தணிமுடி துளக்கிக் கூறினன்
செய்யவள் வனமுலை திளைக்கும் மார்பனே. 84

இலக்குமியின் அழகிய கொங்கைதோய் மார்பினராகிய திருமால், "ஐயனே! மெய்யுரையே விரித்தனை. உலகில் நினக்கொப்பவர் ஒருவரும் இலர்' என உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று கூறி அழகிய திருமுடியை அசைத்துக் கூறினர்.

வார்சடைப் பிரான்அடி வணங்கு வாம்எனப்
போர்வலிப் புள்ளொடும் கயிலை புக்கனன்
ஏர்கெழு போகமா புரத்தின் எல்லைஅவ்
வூர்தியின் இழிந்துசென் றுங்கண் எய்தினன். 85

நீண்ட சடைமுடிப்பிரானுரை வணங்குவோம் என்று போர் வலிமையையுடைய கருடனொடும் கயிலையை அடைந்து அழகிய போக புரத்தின் எல்லையில் அவ்வூர்தியினின்றும் இறங்கிச் சென்றவ்விடத்தை எய்தினர்.

ஐந்ததாம் ஆவர ணத்தின் எம்மெதிர்
ஐந்துகோ மாதர்சூழ்ந் தணுகி வைகவாழ்
மைந்துடை விடைஅவண் மாய னேடுறும்
வெந்திறற் புட்குல வேந்தைக் கண்டதால். 86

ஐந்தா மதிலிடமாகிய இங்கு நம் முன்னர் ஐந்து பசுக்கள் சூழ்ந் துடனிருக்க வாழும் வலிமையுடைய இடப ஏறு அங்குத் திருமாலைச் சுமந்து வந்த பேராற்றலையுடைய புள்ளரசாகிய கருடனைக் கண்டது. கோமாதர்: நந்தை, சுபத்திரை, சுரபி, சுசீலை, சுமனை என்பன

கருடன் துன்பம்

தன்னெதிர் இகழ்ச்சியால் தருக்கும் ஆங்கதன்
புன்னிலை நோக்குபு பொருக்கெ னச்சிரம்

தன்னிடக் குறங்கினிற் சார்த்தித் துஞ்சுவ
தென்னநெட் டுயிர்ப்பினிற் சிமிழ்த்த தேந்திழாய். 87

ஏந்திய அணிகளையுடைய உமையே! தனக்கெதிரே இகழ்ந்து இறுமாக்கும் அக்கருடனின் இழிநிலையை மனங்கொண்டு விரையத் தனது தலையை இடது துடையினிற் சார்த்தித் துயிலுதல் போன்று பெருமூச்சினிற் பிணித்தது.

மாயவன் எம்மடி வணங்கி அன்பினன்
ஆயிடை நெடும்பொழு தமர்ந்து வைகினன்
பாய்விடை ஊர்திநெட் டுயிர்ப்பிற் பட்டுழல்
காய்சினக் கலுழனும் கழிய நொந்ததே. 88

"திருமால் எமது திருவடிகளை வணங்கி அன்பொடும் அந்நிலையில் நெடும்பொழுது இங்குத் தங்கினன். பாய்ந்து செல்லும் ஊர்தியாகிய விடையின் பெரு மூச்சிற்பட்டு உயிர்ப்பினை வெளிவிடும் பொழுது நீளச் சென்றும் இழுக்கும்பொழுது நெருங்கியும் சுழலுகின்ற மிக்க சினமுடைய கருடனும் பெரிதும் வருந்தியது."

விட்டுவிட் டடக்குதோ றுயிர்ப்பின் வேகத்தால்
அட்டநூ றியோசனை அவதி போந்துபின்
கட்டெழில் காசியின் நுனிக்கண் சார்தரக்
கொட்புறுத் தலைத்தது பறவைக் கோவினை. 89

இங்ஙனம் பல்கால் உயிர்ப்பினை விட்டு விட்டு அடக்குந்தோறும் அதன் வேகத்திற்பட்டு எண் ணூறியோசனை எல்லை அளவாகச் செல்லவும் மிக்க அழகிய மூக்கினது நுனிவரை நெருங்கவும் கருடனைச் சுழல்வித்து வருத்தியது.

ஒய்யென நெட்டுயிர்ப் புதைந்து மீள்தொறும்
மெய்வயிற் சுஃஃறென விரிந்து கூம்பிடுஞ்
செய்யபொற் சிறைகளிற் சிதைந்து புன்மயிர்
துய்யென வெளியிடைச் சுழன்ற யாங்கணும். 90

விரையப் பெருமூச்செறிந்து உள்ளிழுக்குந்தொறும் அம்மூச்சுக் காற்றுக் கருடனின் உடலில் தாக்கிச் சுஃறெனும் ஒலியுடன் விரிந்து குவியும் செவ்விய பொன்னிறச் சிறகுகளினின்றும் புல்லிய மயிர்கள் சிதைந்து பஞ்சுத் துய்யைப் போல வானின்கண் எவ்விடத்தும் சுழன்றன.

அதிர்ந்தன விண்ணெலாம் அயர்ந்த திக்கயம்
உதிர்ந்தன தருத்தழை உக்க மீன்கணம்
பிதிர்ந்தன வரைக்குலம் பெயர்ந்த கோள்களும்
உதிர்ந்தெழும் சினவிடை உயிர்ப்பின் மொய்ம்பினன் 91

சிலைத்தெழும் சினமுடைய இடபத்தினது பெருமூச்சின் வலிமையினால் விண்ணிடமுற்றும் முழங்கின. எண்திசை யானைகளும் தளர்ந்தன. தேவ தருக்களின் தழைகள் உதிர்ந்தன. நட்சத்திரக் கூட்டங்கள் சிந்தின. அட்ட குல பருவதங்கள் சிதைந்தன.

வினைமுற்றுக்கள் முன்னின்று சுவை பயக்கின்றன.

எதிருற விலங்கிய வரையும் ஏனவும்
மதலையிற் பற்றுவான் மனத்தின் எண்ணுமுன்
கதழ்வின்நா றியோசனை கடத்தி மீட்குமால்
மதனுடைக் கலுழனை உயிர்ப்பின் வாயுவே. 92

உயிர்ப்பி லெழுந்த பெருங்காற்று, எதிராகக் குறுக்கிட்ட மலையையும் பிறவற்றையும் தூண்போல ஆதரவாகப் பற்றுதற்கு மனத்தில் நினைக்கு முன்னமே வன்மையுடைய கருடனை விரைவின் நூறு யோசனை வரை செலுத்தி மீட்கும்.

சரிந்தது தருக்குடல் சழங்கல் உற்றதால்
இரிந்தது மிடல்இறு மாப்பும் இற்றது
முரிந்தன பொலஞ்சிறை முதிர்ந்த தின்னல்நோய்
கரிந்தது மாமையும் கருடற் கென்பவே. 93

கருடனுக்குச் செருக்கு நீங்கியது; உடல் தளர்ந்து போயிற்று; வலிமை ஓட்டெடுத்தது; அகங்காரமும் ஒழிந்தது. பொன்னிறச் சிறகுகள் முரிந்தன; பெருந்துன்பம் விளைந்து முதிர்ந்தது. நன்னிறம் கருகியது.

இறுமாப்பே விளைவிற்கு மூலமென்பார் உம்மை கொடுத்துக் கூறினர்.

பருவரும் புடையினிற் கழியப் பார்க்கும்மீ
தொருவருந் தகைத்தெனும் ஊக்கம் இன்மையின்
தெருமரும் உணங்குறும் நிகைக்கும் தேம்பிடும்
வெருவரும் மாயனை விளிக்கும் என்செயும். 94

வருந்தும்; பக்கங்களில் ஒதுங்க எண்ணும்; இத்துன்பம் நீங்குதற்கரிய தன்மையை யுடைய தென்றெண்ணும்; எழுச்சி இல்லாமையால் மனம் அலமரும்; வாடும்; மயங்கும்; மெலியும்; அஞ்சும்; திருமாலைச் சரணென் றோலமிடும்; வேறென்செயும் பாவம்.

அறுசீரடி யாசிரிய விருத்தம்

ஐயவோ உலகங் காக்கும் அடிகளோ காயாம் பூவின்
மெய்யவோ என்னை ஆண்ட விமலவோ திகிரி ஏந்துங்
கையவோ எய்ப்பின் வைப்பாம் களைகணே கலந்தார்க் கென்றும்
மெய்யவோ கலவா தார்க்கு வெய்யவோ வேந்த னேயோ. 95

"தலைவவோ! உலகங்களைக் காவல் செய்யும் அடிகேளோ! காயாம் பூப்போலும் திருமேனியவோ! அடியேனை ஆட்கொண்ட தூயவோ! சக்கரத்தைத் தாங்கும் திருக்கரத்தவோ! இளைத்த வழி உதவும் நிதியாகும் ஆதரவவோ! அன்பினால் அணுகினோர்க்கு எந்நாளும் மெய்ப்பொருளவோ! பகைவர்க்கு வெய்யவோ! அரசேயோ!

*விடைஅர சுயிர்ப்பிற் பட்டு மெலிகின்றேன் ஓலம் இந்தத்*
*தடைவிடுத் தடிய னேனைத் தாங்குவாய் ஓலம் அன்றேல்*
*கடையனேன் ஆவி இன்றே கழிந்திடும் ஓலம் என்னை*
*உடையவா ஓலம் என்றென் றோலம்இட் டழைத்த தாலோ.* 96

"இடப நாயகத்தின் நெட்டுயிர்ப்பில் அகப்பட்டு மெலியா நின்றேன் ஓலம்! இப்பிணிப்பினின்றும் விலக்கி அடியேனைக் காப்பாய் ஓலம்! காவாயேல், கீழ்மையேன் உயிர் இப்பொழுதே நீங்கிவிடும் ஓலம்! என்னை அடிமையாக உடையோனே ஓலம்! என்றென்று பல்காலும் முறையிட் டரற்றி அழைத்தது..

இறைவன் பணித்தல்

*சீறுவெம் பணிவாய்ப் பட்ட தேரையின் மறுகி ஓசை*
*வேறுபா டெய்தி மாலை விளிப்பதெம் செவியில் கேட்டே*
*மாறடு திகிரி யோய்ஈ தென்என வட்கார் தம்மை*
*நூறிய சீற்றத் துப்பின் நோன்றகை நெடியோன் சொல்வான்.* 97

சினத்தால் சீறுகின்ற கொடிய பாம்பின்வாய் அகப்பட்ட தேரையைப் போல மனங் கலங்கிக் குரல் ஓசையில் மாறுபாடு தோன்றத் திருமாலைக் கூவி யழைப்பது எம் (சிவபெருமானார்) முடைய திருச் செவியில் கேட்டு, பகைவரை அழிக்கின்ற சக்கரப்படையோனே! இவ்வோலம் என்னை? என்று வினவ, பகைவரை அழித்த சின வலிமை யும் அடல் வலிமையும் உடைய திரிவிக்கிரமமூர்த்தி சொல்வார்.

*இன்றுநின் அடிகள் போற்றும் இச்சையின் என்னோ டிங்கு*
*வன்றிறல் கலுழன் போந்தான் வாய்தலில் துயிலும் வெள்ளிக்*
*குன்றுறழ் இமிலேற் றண்ணல் உயிர்ப்பினிற் கோட்பட் டாவி*
*பொன்றுவான் என்ன நொந்து விளிக்கின்றான் புனிதஎன்றான்* 98

"விமலனே இந்நாள் நின்னுடைய திருவடிகளைப் போற்றும் விருப்பினுடன் போந்த என்னுடன் மிகு வலியுடைய கருடனும் இங்குப் போந்தனன். கடைவாயிலில் தங்கும் வெள்ளி மலையை ஒக்கும் முதுகிற் கொண்டையுடைய விடையரசின் நெட்டுயிர்ப்பினிற் பிணிப்புண்டு உயிர்கெடுவானை ஒத்து வருந்தி அரற்றி அழைக்கின்றனன்" என்றனர்.

*மாதவன் விளம்பக் கேளா மற்றிது நிகழ்தற் கேது*
*ஏதுநீ அறிந்த துண்டேல் இயம்புதி விடுத்தும் என்ன*
*நாதனே கலுழன் சாலத் தருக்கினான் அதனைப் போக்கும்*
*காதலால் ஈங்கு வந்தேன் காரணம் இதுவால் என்றான்.* 99

இலக்குமி நாயகன் கூறக்கேட்டு 'இத்துன்ப நிகழ்ச்சிக்குக் காரணம் யாது? நீ அதனை அறிவாயாயின் கூறுதி; யாம் அதனைப் போக்குவோம் என்றருளக் கேட்ட மால் 'நாதனே! கருடன் பெரிதும் செருக்குக் கொண்டனன். அதனை ஒழிக்கும் கருத்து விருப்பொடும் இங்கு வந்தேன் இதுவே காரணமாகும்' என்றனர்.

உள்ளது புகன்றாய் என்ன நந்தியை ஊங்கு நோக்கிக்
கள்ளவிழ் தொடையாய் நம்மை வழிபடுங் கருத்தான் எய்தும்
புள்ளர சினையா வண்ணம் பொருக்கெனப் போந்து சீற்ற
வெள்விடை உயிர்ப்பி னின்றும் விடுவித்துக் கொணர்தி என்றாம்.

உண்மைக் காரணத்தைக் கூறினாய் என்றருளித் திருநந்தி தேவரை அப்பொழுதே பார்த்துத், தேன் சொரிகின்ற மாலையோய்! விரைந்து போய் நம்மை வழிபாடு செய்யும் கருத்தொடு போதும் கருடன் வருந்தாதபடி சினமுடைய வெள்ளிய விடையின் நெட்டுயிர்ப் பினின்றும் விடுவித்துக்கொண்டு வருதி' என்று கூறினோம்.

இத்தகும் ஆணை தாங்கி ஆவயின் எய்தி நந்தி
பொய்த்துயில் கொள்ளும் ஏற்றைப் புடைத்தனன் எழுப்ப லோடும்
மெய்த்துயில் உணர்ந்தாள் மான வல்விரைந் தெழுந்து கண்கள்
அத்துறு கலக்கம் காட்டி ஆங்ஙனம் நின்ற காலை. 101

இத்தன்மையுறும் கட்டளையைச் சிரமேற் கொண்டு நந்தி யங்கணுகிப் பொய்யாகத் துயிலுற்றாற் போல நடிக்கும் விடையை அடித் தெழுப்பிய அந்நிலையே மெய்யே உறக்கம் நீங்கினாற் போல மிக விரைந் தெழுந்து கண்கள் அதற்குத்தகவுறக் கலங்கியன போலத் தோற்றுவித்து எதிர்நின்ற பொழுதில்,

அத்துறு-சிவப்புப் பொருந்திய எனினுமாம்.

போற்றுசீர் நந்திப் புத்தேள் புண்ணூறும் உடம்பிற் புள்ளின்
ஏற்றொடு விடையின் ஏற்றை எம்மெதிர் உய்த்தா னாகச்
சீற்றமும் செருக்கும் ஆண்மைத் திட்பமும் வீறும் குன்றி
மாற்றரு மதுகைப் புள்ளே றெம்மடி வணங்கிப் போற்றி. 102

போற்றப் பெறும் சிறப்பினையுடைய நந்தி தேவர் புண்கள் பொருந்திய உடம்பினையுடைய பறவை அரசினையும் விடை அரசினையும் எம்முடைய திருமுன் கொண்டு வந்தாராகக் கோபமும், உள்ளத்துட் செருக்கும், திண்ணிய ஆளுந்தன்மையும், பிறிதொன்றற்கு இல்லாத இறுமாப்பும் சுருங்கிப் போக்கரிய வலிமையையுடைய அக் கருடன் எம்முடைய அடிகளை வணங்கித் துதி செய்து,

ஒடுங்கிஉள் ளுடைந்து தண்டா துயிர்ப்பெறிந் திரங்கி மேனி
நடுங்கிடக் கண்ணீர் வார முரிசிறை மருங்கு நால
நெடுங்கைதன் சிரமேற் கூப்பி மால்புடை நிற்ப நோக்கிக்
கொடுங்கோலைப் பகழிக் கண்ணாய் விடைக்கிது கூறலுற்றாம். 103

உடலொடுங்கி மனமுடைந்து தொடர்ந்து அயர்ந்த நெட்டுயிர்ப் பெறிந்து வருந்தி உடல் கம்பிக்கவும், கண்ணீர் நீள ஒழுகவும், முரிந்த சிறகுகள் இரு பக்கத்தும் தொங்கவும், நீண்ட கைகளைச் சிரமேற் குவித்துத் திருமாலின் அயலே போய் நிற்ப, யாம் நோக்கி, கொடிய கொலைசூழும் அம்பினை ஒக்கும் கண்களையுடைய உமையே! விடைக்கு இதனைக் கூறினோம்.

*எம்முடை ஆணை இன்றி எம்மெதிர் நீயே இந்நாள்*
*மம்மரின் இதனைச் செய்தாய் மானிட வடிவம் தாங்கிச்*
*சும்மைநீர் வரைப்பிற் காஞ்சித் தொன்னகர் எய்தி அங்கண்*
*நம்மைநீ புரிதி பூசை நவைஇது கழியு மாறே.* 104

உன் விருப்பப்படி திருமுன்பே இந்நாள் மயங்கிய அறிவால் நீயே இக் குற்றத்தைப் புரிந்தனை. ஆகலின், ஒலிக்கின்ற கடல் சூழ்ந்த நிலவுலகில் மானிட வடிவொடு காஞ்சி என்னும் பழம்பதியை அடைந்து அவ்விடத்தே நம்மை நீ பூசனை புரிதி. இக் குற்றம் தவிருமாறு இதுவே யாகும்.

விடை காஞ்சியில் விமலனை வழிபடல்

*எனவிடை யளிப்பப் போற்றிப் புடைபரந் தெழுந்து வஞ்சி*
*யனவிடை துவள வீங்கும் அலர்முலைக் கொம்ப ரன்னாய்*
*சினவிடை யரசு வல்லே நரவுருத் திகழக் கொண்டு*
*மனவிடை இழைத்த செம்பொன் மாளிகைக் காஞ்சி நண்ணி.*105

வஞ்சிக் கொடியை ஒக்கும் சிறிய இடை துவளும்படி பக்கங்களிற் பரவி எழுந்து திரண்டு பருத்த கொங்கையையுடைய பூங்கொம்பு போல்வாய்! விடைக் கிவ்வாறு கூறி விடை கொடுப்பப் போற்றி செய்து சினமுடைய ஏறு நரவடிவு விளங்க விரையத்தாங்கி மாணிக்கங் கள் கொண்டு குயிற்றப்பட்ட செம்பொன்னாலாகிய மாடங்களையுடைய காஞ்சியை நண்ணி,

*கவிழிணர்த் தனிமா மூலத் தெம்மெதிர் கமலப் பூந்தோ*
*டவிழ்சிவ கங்கைக் கோட்டின் ஆங்கது வைகும் வைப்பிற்*
*குவிவரும் பெருமை சான்ற குடதிசை முகமாத் தன்பேர்ப்*
*புவிபுகழ் இலிங்கம் தாபித் தருச்சனை புரிந்து போற்றி.* 106

கவிழ்ந்த பூங்கொத்துக்களையுடைய ஒற்றை மாமரத்தின் கீழெழுந்தருளியுள்ள எம்முடைய திருமுன்பில் ஏடவிழ் தாமரை மலர்களையுடைய சிவ்கங்கையின் கரையிடத்தே இடபம் இருத்தற்குரிய இடத்தே இருந்த பெருமை அமைந்த மேற்கு முகமாக இடபேச்சரம் என்று தன் பெயரால் உலகம் புகழும் சிவலிங்கம் நிறுவி அருச்சனை புரிந்து துதி செய்து,

*காட்சிஈத் தருளும் நம்பால் வரம்பல கருதிப் பெற்று*
*மாட்சியின் உலகம் எல்லாம் மனுமுறை வழாது பன்னாள்*

ஆட்சிசால் அரசு செய்து கடைமுறை ஆனேற் றண்ணல்
மீட்சியின் அருள்பெற் றிங்கு மேவிவீற் றிருந்த தன்றே. 107

தரிசனம் தந்தருளும் நம்மிடத்தே வரங்கள் பலவற்றையும் விரும்பிப் பெற்று மாண்புடைய உலகமுழுதினையும் விதிவழி நெடுங் காலம் ஆட்சி அமைந்த அரசு புரிந் திறுதியில் இடபநாயகம் மீளும் அருளைப்பெற்று இங்கு வந்திருந்தது.

அம்மையார் காஞ்சிக் கெழுந்தருளல்

ஆதலின் நீயும் அங்கண் அகிலமும் உய்வான் எம்மை
மேதகு கழுவாய் நீரின் விதியுளிப் பூசை செய்யப்
போதராய் என்று நல்கப் புரிகுழ லணங்கு தாழ்ந்து
நாதனுர் இசைவு பெற்று நயந்தெழுந் தருள லுற்றாள். 108

ஆகலின், நீயும் அனைத்துயிர்களும் அறிந் துய்யும் பொருட்டு அவ்விடத்து மேன்மை பொருந்திய பிராயச்சித்தத் தன்மையின் எம்மை விதிவழிப் பூசனை புரியச் செய்வாய்' என்று விடையருளச் சுரிகுழலை யுடைய அம்மையார் தாழ்ந் தெழுந்து தலைவர் தம் இசைவினைப் பெற்று விரும்பி எழுந்தருள்வாராயினர்.

நம்பனுர் தம்மை இன்ப நகையிடைத் தணக்கும் நோயும்
கம்பரைப் பூசை செய்யுங் காதலும் இருபால் ஈர்ப்ப
எம்பிரான் அருளாய் என்று தாழ்ந்துதாழ்ந் தெழுந்து நின்று
கொம்பரின் ஒல்கிப் பல்காற் புறவிடை கொண்டு போற்றி. 109

நாயகனுரை இன்பத்திற்குக் காரணமாகிய பொழுது போக்கிடைப் பிரிதலான் ஆகும் வருத்தமும், திருவேகம்ப நாதரைப் பூசனைபுரிய எழும் பெருவிருப்பும் ஆகிய இரண்டு நிகழ்ச்சியும் அகத்தும் புறத்து மாக வலிப்ப "எமது பிரானே! அருளாய்" என்று பல்காற் தாழ்ந்து தாழ்ந்து எழுந் தெழுந்து பூங்கொம்பு போலத்துவளுற்று நின்று புறஞ்செல்லப் பன்முறை விடைபெற்றுக்கொண்டு துதிசெய்து,

பிரிவாற்றுமையால் பன்முறை விடை கொண்டனர்

மின்கொண்டல் மிடற்றார் காட்சி விழிக்கெதிர் மறையுங் காறும்
பின்கொண்டு நடந்து சென்று பெருமுதல் வாய்தல் நீங்கி
முன்கொண்டு நடவா நின்றாள் முக்குறும் படக்கி ஐவர்
வன்கொண்டி கடந்த மேலோர் காண்டக வயங்கும் அம்மை. 110

முக்குற்றங்களை நீக்கி வலியுடைய ஐம்புலன்களாகிய ஆறலைப் போரை .வென்ற மேன்மக்கள் காணுமாறு புலப்படும் அம்மையார் மின்னுடைய மேகம் போலும் திருக்கழுத்தினையுடைய பெருமானுரது திருக்காட்சி காணும் அளவு கண்களுக்கு மறையுமளவும் இறைவனையே கண்டு கொண்டு முகம் காட்டிப் பின்னுக நடந்து பெரிய தலைவாயிலைக் கடந்தபின் முன்னோக்கி நடந்தனர். கொண்டி—அறிவைக் கொள்ளை யிடல். ஐவர் என்றது குறிப்பின் இகழ்தல், அவற்றின் கொடுமையை விளக்கியது.

ஆயிடை அரிதின் நீங்கி அங்கண ரருளால் அங்கண்
பாயபல் கணங்கள் உய்த்த படரொளி எறிக்கும் அங்கேழ்
மாயிரு விமானத் தும்பர் மன்னுயிர்த் தோழி மார்தம்
ஆயமும் தானும் ஏறி வழிக்கொண்டாள் அனைய காலை. 111

அவ்விடத்துப் பரவிய பல்கணநாதர் பெருமான் ஆணைவழிக் கொணர்ந்து நிறுத்திய பரவிய ஒளியை வீசும் அழகிய நிறமுடைய மிகப் பெரிய விமானத்தின் மிசை மன்னும் உயிர்ப்பாங்கியரும், உடன் சூழும் தோழியர் குழாமும் தாமும் ஏறி அங்கண் நின்றும் பிரியலாகாது பிரிந்து வழிச்செலவு கொண்டனர். அப்பொழுது,

எழுசீரடி யாசிரிய விருத்தம்

உலகெலாம் ஈன்ற எம்பெரு மாட்டி ஓங்குயர் விழுப்புகழ்க் கம்பத், தலைவரை விதியான் அருச்சனை செய்யச் சார்கின்றாள் என்றுபே ரோகை, மலியெடுத் தியம்பு மங்களங் கேளா உருத்திர மடந்தையர் முதலோர், அலகிலா மகிழ்ச்சி மீக்கொளும் களிப்பின் ஆர்த்தெழுந் தொருங்குவந் திறுத்தார். 112

அனைத்துலகையும் பயந்த எம்மன்னையார் மிக்குயர்ந்த பெரும் புகழினையுடைய திருவேகம்ப நாயகரை விதியொடும் பூசனை புரியச் சார்கின்றனர் என்ற பேருவகை நிறைந்த செய்தியைப் பெரிதும் எடுத்தியம்பும் மங்கலத்தை உருத்திர மகளிர் முதலானோர் செவிமடுத்து அளவில்லாத பெருங்களிப்பு மீக்கொள்ளும் மகிழ்ச்சியினால் ஆரவாரித்து வந் தொருங்கு கூடினர்.

தாமரை மடவார் புடைபரந் தணுகத் தாமரை மடவரல் வந்தாள், நாமிசைக் கிழத்தி பற்பல வெள்ள நாரியர் புடைவர வந்தாள், கோமள வனப்பின் ஆம்பல்மெல் லியலார் குழாத்துடன் உயர்சசி வந்தாள், காமரு மாதர் எழுவரும் சங்கக் கன்னியர் சூழ்தர வந்தார். 113

பதுமம் என்னும் அளவுடைய சிலதியர் தன்னைச் சூழ்ந்துவர இலக்குமி வந்தனள். மிகப்பல வெள்ளமென்னும் மகளிர் புடைசூழச் சரசுவதியும் வந்தனள்; இளமையும், அழகுமுடைய ஆம்பல் என்னும் அளவுடைய தோழியர் குழுவுடன் உயர்ந்த இந்திராணியும் வந்தனள்; மேலும், அழகிய சப்தமாதர்களும் சங்கம் என்னும் அளவிற் சேடியர் சூழ்தர வந்தனர்.

தாமரை, வெள்ளம், ஆம்பல், சங்கம் என்னும் அளவு குறித்து வந்தன அல்ல; மிகப்பலரைக் குறிக்க வந்தன. சப்தமாதர், அபிராமி, மகேசுவரி, கௌமாரி, நாராயணி, வராகி, இந்திராணி, காளி என்பவர்,

வான்மட மகளிர் வேறுபல் வகுப்பின் மங்கையர் பற்பலா யிரவர், ஊன்மலி சூலத் திடாகினி காளி யோகினித் திறத்தவர்

அனேகர், நீன்முகிற் கூந்தல் முனிவர்பன் னியரும் நிரந்தரம் மிடைந்தனர் உவகைப், பான்மையின் இறைஞ்சி அவரவர்க் கடுத்த பணிதலை நின்றுடன் போத. 114

தேவ மகளிர், வேறு பல்திறத்து மங்கையர் மிகப் பல்லாயிரவரும் ஊன்தோயும் சூலத்தை ஏந்திய இடாகினி, காளி யோகினி என்னும் இத்திறத்தினர் பலரும், நீல நிறமுடைய மேகம் போலும் கூந்தலை யுடைய முனிவரர் துணைவியரும், எங்கும் செறிந்து மகிழ்ச்சியினால் வணங்கி அவரவர்க் கமைந்த தொண்டில் தலைநின் றுடன் வரவும்,

உரகர் கந்தருவர் இராக்கதர் இயக்கர் உருத்திரர் மருத்துவர் வசுக்கள், கருடர்கிம் புருடர் சாரணர் சித்தர் கடவுளர் அயன் அரி முனிவர், மருவுபல் சமய தேவர்கள் முதலோர் வந்தனர் அடிதொழு திறைஞ்சிப், பொருவருங் களிப்பால் சயசய போற்றி போற்றிஎன் றேத்திமுன் செல்ல. 115

உரகரும், கந்தருவரும், இராக்கதரும், இயக்கரும், உருத்திரரும், மருத்துவரும், வசுக்களும், கருடரும்,கிம்புருடரும், சாரணரும், சித்தரும், தேவரும், அயனும், அரியும், முனிவரும், பலசமயத் தேவர்களும், பிறரும் வந்து திருவடிகளிற் பணிந் தெழுந்து ஒப்பில்லாத களிப்பினால் சய! சய! போற்றி! போற்றி! என்று போற்றி செய்து முன் செல்லவும்,

நால்வகை இசைக் கருவிகளின் பெருமுழக்கும் ஒருங்கு திரண்டு எழுகடலின் முழக்கினை அடக்கவும்,

தண்ணுமை முருடு குடமுழா மொந்தை தகுணிச்சம் பேரிகை தக்கை, அண்ணலம் பதலை அதிர்குரல் முரச மாதிய எழுப்புவ பிறவும், பண்ணமை சின்னம் காகளம் கோடு பணிலமே தீங்குழல் முதலா, எண்ணருந் திறத்தின் ஊதுவ பலவும் எழுகடல் முழக்கினை அடக்க. 116

தோற்கருவி, துளைக்கருவிகளின் இன்னிசைகள் எழுகடலின் முழக்கத்தை அடக்கி மேலெழவும், தக்கேசப் படலம் 46, 47-ஆம் செய்யுட்களிற் காண்க.

பயின்மணிக் கவரி கவிகைசாந் தாற்றி படரொளி ஆலவட் டங்கள், வயின்வயின் வயங்கக் கற்பகத் தாரு மலர்மழை எங்-கணும் இறைப்பக், குயின்மொழி மடவார் குழாங்குழா மாகிக் குலவுபல் லாண்டெடுத் திசைப்பக், கயின்மணிக் குழையார் ஆணுடைதாங்கிக் கதிர்த்தவாள் ஏந்தினர் ஏக. 117

மணிகளைப் பதித்த கைப்பிடிகளையுடைய கவரியும், குடையும், விசிறியும், ஒளிவிரிக்கும் ஆலவட்டமும் எவ்விடங்களினும் விளங்கவும், கற்பக மலர் மழையை எவ்விடத்தும் சொரியவும், குயில்போலும் இனிய

மொழியினையுடைய மகளிர் குழாம் குழாமாய் நின்று பல்லாண்டு பாடவும், மூட்டுவாயமைந்த மணிக்குழை மகளிர் பல்லோரும் வீரருடையினராய் ஒளி விடுகின்ற வாட் படையினராய்ச் செல்லவும்,

வேதகம் பயக்குஞ் சிலைமுதலான விம்மிதத் திறத்தன பலவும், பூதிமிக் களிக்கும் கடவுளர் தருக்கள் புண்ணிய தீர்த்-தங்கள் நதிகள், ஏதமில் சிறப்பின் இனையன பிறவும் உடன்-செலச் சிந்தொடு குறள்கள், காதலின் முன்னே கையிணை வீசிக் கதுமெனக் குறுகுறு நடப்ப. 118

இரும்பு முதலிய வற்றைப் பொன்னுக்குகின்ற இங்ஙனம் வேதிக்கின்ற குளிகைக்கல் முதலாம் விம்மிதம் ஊட்டுவன பல் வகையவும், செல்வங்களை அடுத்தவர்க்குப் பெரிதும் வழங்கும் தெய்வத் தருக்களும், புண்ணிய தீர்த்தங்களும், நதிகளும், குற்றமற்ற சிறப்பினையுடைய இவைபோல்வன பிறவும் உடன் போதக் குறுகிய வடிவுடைய சிந்துகளும், மிகக் குறுகிய குறள்களுமாகிய பூதகணங்களும் விருப்புடன் கைகளை வீசி விரைவாகக் குறு குறு நடந்து முன் செல்லவும்,

கலகல முழக்கும் களகள முழக்கும் கலின்கலின் முழக்கமும் கருவிச், சலசல முழக்கும் சளசள முழக்கும் சடசட முழக்கமும் ஏனைச், சிலசில முழக்கும் அரகர முழக்கும் சயசய முழக்கும்எண் டிசைவாய்ப், பலபல முழக்கும் அடைத்துமேல் ஓங்கிப் படியொடு வானமும் நிறைப்ப. 119

நால்வகை இன்னியங்களின் முழக்கமும், வீரக்கழல்கள் கிண்கிணி கள், மங்கலப்பாடல்கள் முதலாக எழும் பல் வகை வேற்றொலிகளும் அரகர என்னும் முழக்கமும் சயசய என்னும் முழக்கமும் ஒருங்கு திரண்டு மண்ணொடு விண்ணிடத்தும் இடைப்பட்ட எண்டிசையிலும் வான வெளியிலுமாகச் செறிந்தன.

மறைமுதல் ஒருபால் மணந்தவள் வந்தாள் வானவர்க் கரியவள் வந்தாள், நிறைபெருங் கருணை நாயகி வந்தாள் நிருமலப் பேரொளி வந்தாள், அறைபுனல் காஞ்சிக் கம்பரை வணங்க அகிலமும் ஆதிநாள் பயந்த, இறைவியே வந்தாள் என்றுபல் சின்னத் தெழும்ஒலி யாங்கணும் விம்ம. 120

மறை முதல்வனை ஒரு புடை மணந்தவள் வந்தாள் எனவும் வானவர்க்கும் காண்டற்கரியவள் வந்தாள் எனவும், நிறைந்த பெருங் கருணை நாயகி வந்தாள் எனவும், விமலப் பேரொளி வந்தாள் எனவும், ஒலிக்கின்ற நீர் மருவிய காஞ்சியில் வீற்றிருக்கின்ற திருவேகம்பரைப் பூசனை செய்தற் பொருட்டுப் பல்லுலகங்களையும் சிருட்டிக் காலத்தில் படைத்த முதல்வியே வந்தாள் எனவும் பல் ஊது கொம்புகளில் எழும் விருதொலி யாண்டும் பெருகவும்,

அளவிலாக் கருணைப் பெருங்கட லென்ன அடர்ந்தவல் லிருளுடைந் தோடுங், கிளைவழி துருவித் துரந்துகொண் டெய்தும் கேழ்கிளர் ஒளிக்குழா மென்ன, வளமலி தென்பால் செய்தவந் திரண்டு வருவதே என்னவும் உலவாக், களிவரு சிறப்பின் வான்-நெறிப் படர்ந்தாள் கணவனார் அருள்வழி நின்றாள். 121

வற்றாத களிப்பெழும் உயர்வொடும் கணவனார் திருவுள்ளக் கருத்தின்வழி யொழுகும் அம்மையார், செறிந்த ஆணவமாகிய கொடிய இருள் புறங்கொடுத்தோடும் சிறு நெறிகளைத் தேடி முடுகிக் கொண்டு பின் செல்லும் நிறம் விளங்கும் ஓவியத் தொகுதியை ஒப்பவும், வளமிகுந்த தென் திசை செய்த தவம் திரண்டு வருவதே போலவும் வான்வழிச் செலவு கொண்டனள்.

வேறு

எண்ணி லார் மிடைந்து விண்ப ரப்ப டைத்தி யங்கலால்
அண்ணல் ஞாயி றாதி வர்ள் மறைந்தி ருள்அ டர்ந்திடக்
கண்ணு றுத்த யிர்க்கு முன்க டுப்பின் எய்து வோரொளி
வண்ணம் அவ்வி ருள்கி ழிப்ப நோக்கி ஞால மாந்தர்தாம். 122

அளவிலார் நெருங்கி விண்ணிட மெல்லாம் செறிந்து சேர்தலாலே தலைமை அமைந்த சூரியன் முதலியவற்றின் ஒளி மறைந் திருள் தொடர்ந்திடலான் கண்ணைப் பொத்தி, இது யாதென ஐயுறு முன்னமே விரைவாக வருவோருடைய ஒளிநிறம் அவ்விருளைப் போழ உலகோர் நோக்கி,

மாலு றுக்கு நீர்மை யோடு தோன்றி இங்கு மாய்ந்தது
நீல மின்னல் போலும் என்பர் என்னு முன்னர் நீளிடைச்
சால மிக்க ஓதை கேட்டு மின்ப யந்த தண்முகில்
காலும் ஓதை யாங்கொல் என்று காதின் ஓர்த்து நிற்பரே. 123

மயக்கஞ்செய்யும் இயல்போடு புலப்பட்டு இங்கு மறைந்தது மேகத்தின் நீலமின்னொளிபோலும் என்று கூறுவர்; அங்ஙனம் கூறுதற்கு முன்பே நெடுந்தொலைவில் மிகப் பேரோசையைக் கேட்டு இம்மின்னலைத் தோற்றுவித்த நீர் கொண்ட மேகம் இடித் துமிழ்கின்ற பேரொலி கொல்லோ என்று செவி சாய்த்து ஆராய்ந்து நிற்பர்.

ஒளி முன்னும், ஒலி பின்னும் வருதலின் இம்முறையிற் கூறினார்.

செல்லு வோர்நெ ருக்கி டைத்தெ றித்தி டும்பொ லஞ்சுடர்ப்
பல்ல ணிக்க லன்கள் உக்க பன்ம ணித்தி ரள்களை
ஒல்லை நோக்கி ஆர்த்த மேகம் ஒன்ப திற்று மாமணிக்
கல்லின் மாரி பெய்வ தென்று காண்தொ றும்வி யப்பரே. 124

செல்லுவோர் மிடைதலினால் எறிக்கும் பொன்னொளியினை யுடைய பல்வகை அணிகளினின்றும் உதிர்ந்த பல மணிக் குவியல்களை விரைவின் நோக்கி இடித்த மேகம் ஒன்பது வகை ஒளி மணிகளைக் கல் மழை பெய்யா நின்றதென்று காணுந்தோறும் இறும்பூது கொள்வர்.

முறையி னல்அ டுக்க நண்ணும் மொய்கு ழாத்தை நோக்குவார்
இறைவி யென்று சின்னம் எங்கும் ஏங்கும் ஓசை கேட்குவார்
நிறைம கிழ்ச்சி யிற்கி ளர்ந்து நீடும் இன்ப வெள்ளநீர்த்
துறைப டிந்து கண்கள் நீர்து ளிப்ப நின்று போற்றுவார். 125

ஒளியும், ஒலியும், மணியுதிர்வும் ஆகிய வரிசையொடும் அடுத்து நெருங்கும் செறிந்த குழுவினைக் காண்பார். இறைவி என்றும் தனை ஒத்த பிற பெருமைகளையும் சின்னங்கள் எவ்விடத்தும் ஒலிக்கும் முழக்கத்தைக் கேட்பார். குறைவின்றி நிறைந்த களிப்பின் மிக்குப் பெருகும் இன்பக்கடலிற் படிந்து கண்கள் நீர்வார நின்று போற்றுவார்.

எம்பி ரான்ற னிப்ப அம்மை இங்கு வந்த தென்னெனக்
கம்ப வாணர் பூசை செய்க ருத்தின் வந்த தாமென
நம்பி னேங்கள் வீடு பேறு நண்ணு காலம் ஈதென
இம்பர் ஞாலம் எத்த வம்ப டைத்த தென்ன விள்ளுவார். 126

எம்பிரான் தனித்திருக்குமாறு அம்மையார் இங்கெழுந் தருளிய தென்னை எனவும், திருவேகம்ப நாதரைப் பூசனை புரியும் திருவுள்ளத் துடன் போந்தருளிய தெனவும், விரும்பினேமாகிய அடியோங்கள் முத்தியை எய்தும் பருவம் இது வாகும் எனவும், இந்நிலவுலகம் எத்தவத்தை முன்னம் இயற்றியதோ எனவும் இவ்வாறு வினவவும் விடையிறுப்பவும் பலப்பல கூறுவார்.

மண்ண கத்து வைகும் மாந்தர் இன்ன ராக மாணிழைப்
பெண்ணின் நல்ல வள்வி மான நின்றும் இப்பெ ரும்புவிப்
புண்ணி யத்த லங்கள் தோறி ழிந்தி ழிந்து போர்விடை
அண்ண லார்இ லிங்க பூசை செய்து காசி அண்மினள். 127

மண்ணிடை வாழும் மக்கள் இத்தன்மையராக மாட்சிமை பொருந்திய அணிகளைப்பூண்ட பெண்ணின் நல்லாளாகிய பெருமாட்டி யார் இப்பெரிய பூமியில் தெய்வத்தலங்கள்தோறும் விமானத்தினின்றும் இழிந்திழிந்து பொருவிடை ஒன்றுடைப் புண்ணிய மூர்த்தியைச் சிவலிங்க பூசனை புரிந்து காசியை அணுகினர்.

மூச்ச கம்பு கழ்ந்து போற்று மொய்கொள் காசி மாநகர்
விச்சு வேசர் பூசை யாற்றி வேறி லிங்கம் ஒன்றமைத்
தர்ச்ச னைத்தி றத்தின் ஏத்தி வைகி அங்க கன்றுசீர்க்
கச்சி யம்ப திக்கண் வைத்த காதல் உய்ப்ப ஏகினள். 128

மூவுலகினும் புகழ்ந்து துதி செய்யும் வலியுடைய காசியில் விசுவநாதரைப் பூசனை புரிந்து, மேலும், வேருகத் தாமோர் சிவலிங்கம் நிறுவிப் பூசனை வகையிற் றுதிசெய்து சிறப்பினையுடைய கச்சியம் பதியில் வைத்த பெருவிருப்பம் உந்த அங்க ணின்றும் புறப்பட்டனர்.

அங்கண் அங்கண் எந்தை யார்அ மர்ந்து வாழ்இ டந்தொறும்
பொங்கு கின்ற காத லோடு பூசை செய்து செய்துபோய்
மங்க லத்த மிழ்ப்பு விக்கு வாண்மு கமெ னத்தகும்
துங்க மிக்க கீர்த்தி பெற்ற தொண்டை நாட்டை நண்ணினள். 129

ஆங்காங்கு எமது பெருமானார் விரும்பியுறையும் தலங்கள் தோறும் அடங்காது எழுகின்ற பெருவிருப்போடும் வழிபாடு செய்து, நலமுறும் தமிழ் நாடென்னும் மங்கைக்கு ஒளிபொருந்திய முகமென்று கூறத்தகும் உயர்ச்சி மிகுந்த புகழ்பெற்ற தொண்டை நாட்டினைச் சென்றணுகினர்.

அம்மையார் காஞ்சியை அடைந்த நாள்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

அண்ணலந் துலைசேர் என்றூழ் ஐப்பசித் திங்கட் பூரம்
வெண்மதி யாட்சி மூன்றும் பின்பக்கம் நந்தை மேய
புண்ணியத் திருநாள் எல்லாப் புவனமும் பெருவாழ் வெய்த
விண்ணவர் பிராட்டி காஞ்சி வியனகர் எல்லை சேர்ந்தாள். 130

பெருமை பொருந்திய துலாராசியைச் சூரியன் சேர்ந்த ஐப்பசி மாதத்துச் சந்திரன் மருவிய பூர நன்னாளும், தேய்பிறையும் மூன்றும் முறையாக வந்த நந்தை என்னும் பெயர் பெறும் ஏகாதசியும் கூடிய புண்ணிய நன்னாளில் எல்லாவுலகங்களும் பெரிய வாழ்வினையடையுமாறு விண்ணவர் பெருமாட்டியார் காஞ்சி என்னும் பெரிய நகரின் எல்லையைச் சேர்ந்தனர்.

பார்த்தனள் கடைநாள் செல்லாப் பழம்பதி மகிழ்ச்சி மேன்மேற்
கூர்த்தனள் சிரமேற் செங்கை குவித்தனள் புளகம் மேனி
போர்த்தனள் விழிநீர் மாரி பொழிந்தனள் அங்கோர் வாவித்
தீர்த்தநீர் குடைந்து மூழ்கிச் சங்கற்பஞ் செய்து முற்றி. 131

ஊழி நாளின் செய்கையாகிய அழிவு புகாத பழம் பதியைப் பார்த்தனர்; முன்னையினும் மகிழ்ச்சி மீக்கூர்ந்தனர்; சென்னிமேற் செங்கைகளைக் கூப்பினர். திருமேனி (மயிர்க்கூச்செறிந்தனர்;) புளகம் போர்த்தனர்; கண் மழை பொழிந்தனர்; அங்கொரு தீர்த்தத்தில் படிந்து மூழ்கிச் சங்கற்பம் செய்து முற்றி,

கங்கண தீர்த்தம் கங்கணேச்சரம்

அலங்கொளிக் கரத்துச் செம்பொற் காப்புநாண் அணிந்து மூவா
இலிங்கம்ஆண் டிருவிப் பூசை இயற்றினள் அனைய தீர்த்தம்
நலங்கெழு காப்புத் தீர்த்த மெனப்பெயர் நவில்வர் சேர்ந்தார்
குலங்களோ டுய்யச் செய்யும் இலிங்கமுங் கொள்ளும் அப்பேர். 132

பேரொளி விளங்கும் திருக்கை யிறையில் செம்பொற் காப்புக் கயிற்றை அணிந்து மாறுபடாத சிவலிங்கத்தை அங்குத் தாபித்துப் பூசனையைப் புரிந்தனர். அத்தீர்த்தத்தினை நன்மை கெழுமிய காப்புத்

தீர்த்தமெனக் கூறுவர். சார்ந்து தரிசித்தோர் மரபோடு முய்யச் செய்யும் அங்கு வழிபாடு செய்த சிவலிங்கமும் கங்கணேச்சரம் எனப் பெயர் பெறும்.

கடகேச்சரம்

நவமணிக் கடகம் பூணும் ஞாங்கருங் கடகே சானச்
சிவபரஞ் சுடரைப் பூசை செய்துதன் கரத்திற் பூண்டாள்
அவிர்மணி நகையாள் போற்றும் அக்குறி இரண்டுங் கண்டோர்
தவலரு மலநோய் மாற்றி முத்தியில் தவிர்ந்து வாழ்வார். 133

நவமணிகள் பதித்த கடகத்தை அணிந்த அப்பொழுதும் கடகேசப் பிரானுரைத் தாபித்துப் பூசை செய்து அதனைக் கரத்திற் றரித்தனர். விளங்கும் முத்தனைய முறுவலார் போற்றிய கங்கணேசர் கடகேசராகிய சிவலிங்கப் பிரானுரைக் கண்டு வணங்கினோர் கெடலரிய ஆணவமல நோயைக் கெடுத்து முத்தியில் நிலைபெற்று வாழ்வார்.

அன்னணம் அருச்சித் தேத்தி ஆளுடை எம்பி ராட்டி
உன்னுவோர் பிறவி மாய்க்கும் உள்நகர் வரைப்பின் முற்ற
மன்னிய வளங்க ளெல்லாம் மனங்களி பயப்ப நோக்கிப்
பன்னரும் பெருமை சான்ற பரவெளிப் பிலத்தை யுற்றாள். 134

அவ்வகை அருச்சித்துப் போற்றி எம்மை அடிமையாக உடைய பிராட்டியார் நினைப்பவர்தம் பிறவியைப் போக்கும் நகரில் நிலை பெற்ற செல்வங்கள் யாவற்றையும் மனமகிழும்படி முற்றவும் கண்டு விவரித்துரைத்தற்கும் அடங்காத பெருமை அமைந்த பரவெளியாகிய பிலத்தை அண்மினர்.

உலகாணித் தீர்த்தம்

ஐம்பெரும் பூதம் முன்னாள் ஆயிடை மலர்ப்பூம் பொய்கை
தம்பெயர் நிறுவித் தொட்டுத் தடந்திரை கொழிக்குந் தூநீர்ப்
பைம்புனல் படிந்து பன்னாள் மெய்த்தவம் பரிக்குங் காலைக்
கம்பனார் கருணை கூர்ந்து காட்சிதந் தருளப் போற்றி. 135

பிருதிவி முதலிய பஞ்சபூதங்கள் அங்கண் மலர்களை யுடைய பொய்கையை வகுத்துப் பஞ்சதீர்த்தம் என்று தம்பெயரை அத்தீர்த்தத்திற்கு நிறுவிப் பேரலை மறித்து வீசும் அத்தூய நீரில் மூழ்கிப் பலநாளும் உண்மைத் தவத்தை மேற்கொள்ளுங் காலத்துத் திருவேகம்பனார் அருள் சுரந்து திருக்காட்சி தரத் தரிசித்துத் துதி செய்து,

மூவருந் தம்முட் கூடல் முதலிய வேறு பாட்டான்
மேவருங் கரணம் யாக்கை விடயம்ஆ தாரம் எல்லாம்
ஆவகை வரங்கள் பெற்ற அத்திறத் துலக முற்றும்
பாவுதன் வடிவாய் ஓங்கும் உலகாணிக் கரையின் பாங்கர். 136

கெடுதலில்லாத பஞ்சபூதங்களும் குறைந்தும், ஒத்தும், மிகுந்தும், ஒன்றும்பலவும் கூடாதும் இங்ஙனம் ஆகிய பல்வேறு திறத்தினால்

விருப்பப்படும் காரணம், தனு, போகம், புவனமாய் ஆகும்படி வரங்களைப் பெற்றன. அம்முறையால் உலக முழுதும் பரவிய தன்வடிவமாய் ஓங்கும் உலகாணித் தீர்த்தக் கரையின் மருங்கில் வந்து,

ஆணி--எல்லை, முதன்மை, ஆதாரம் என்னும் பொருள ஆகும். "ஆராய்ந்தடித்தொண்ட ராணிப்பொன்" (திருநாவுக்கரசர் திரு விருத்தம்) "தொண்டர்க் காணி" (பெரிய புராணம். நமிநந்தி: 32)

ஆங்கினி தமர்ந்து வைகித் தவம்புரி கருத்த ளாகி
ஊங்குடன் அணைந்த விண்ணோர்க் கருள்விடை உதவி அங்குத்
தேங்குநீர் உலகம் உய்யத் திருஅறச் சாலை ஆக்கி
மாங்குயிற் கிளவி நங்கை அறமெலாம் வளர்க்க லுற்றாள். 137

அவ்விடத் தினிது விரும்பித் தங்கித் தவஞ்செய் கருத்தினராய் அங்கு உடன் வந்த தேவர்க்கு அருள் செய்து அவர் தம்மைச் செல்ல விடுத்துக் கடல் சூழ்ந்த உலகெலாம் பிழைக்கும்படி அங்கே திருஅறச் சாலையை உண்டாக்கி அறங்கள் யாவும் தழைக்கச் செய்வாராயினர்.

அம்மையார் அறம்வளர்த்தல்

தெய்வம்தென் புலத்தார் பூதம் மானிடம் பிரமம் என்றோர்
ஐவகை எச்சம் பூர்த்தம் துறந்தவர் மடங்கள் அன்பு
செய்யும்இல் வாழ்வார்க் கில்லம் மனைக்குப கரணம் தேம்பூப்
பெய்தமை தண்ணீர்ப் பந்தர் எங்கணும் பிறங்கு சோலை. 138

தேவயாகம், பிதிர்யாகம், பூதயாகம், மாநுடயாகம், பிரமயாகம் எனப்பெறும் ஐவகை வேள்வியும், வறியார்க்கு ஈகை, துறந்தவர்க்கு மடம், இல்வாழ்வார்க்கு வீடு, இல்லறம் நடத்தவேண்டும் பொருள்கள் நறுமண மூட்டிய தண்ணீர்ப் பந்தர், சோலை எனப்படும் அறங்களும்,

இரப்பவர் குருடர் எவ்வ முற்றவர்ப் புரத்தல் வெந்நோய்
துரக்கும்நன் மருந்து தூவாய் மகவினை ஓம்பல் சுண்ணம்
பரித்தபா கடையே எண்ணெய் பைம்புனல் குளிப்ப வேண்டும்
மருக்கிளர் துவர்க ளாதி மலரணை நிலன்ஆன் கன்னி. 139

யாசிப்பவர், குருடர், முதலான உறுப்புக் குறைவால் துன்புறுவோ ராகிய இவர் தம்மைக் காத்தலும், கொடிய நோய்களைப் போக்கும் மருந்து கொடுத்தலும், நல்வாய்க் குழவியை வளர்த்தலும், சுண்ணாம்பு கொடுத்தலும், பாக்கு வெற்றிலை கொடுத்தலும், தலைக்கெண்ணெய் கொடுத்தலும், முழுகுவதற்கு அரைப்புப் பொடிகள் அளித்தலும், படுக்கை வழங்கலும், பூதானம், கோதானம், கன்னிகாதானம் எனப் படும் இவையும்,

கடிமணம் விளக்கு மாறாக் கடன்ஒழித் திடுதல் ஈசன்
அடியவர் விழைவ ஈகை அக்கமா மணிவெண் ணீறு
படியிலாக் கடவுட் பூசை உபகர ணங்கள் பாசந்
தடிதரு வேத வாய்மைச் சைவநூல் புராணம் நல்கல். 140

மணம் புரிவித்தலும், விளக்களித்தலும், தீராக் கடனைத் தீர்த்துபகரித்தலும், சிவனடியவர்க்கு வேண்டுவ கொடுத்தலும், உருத்திராக்கம் ஈதலும், திருநீறு கொடுத்தலும், ஒப்பில்லாத சிவபெருமான் பூசனைக்குரிய கொடுத்தலும், பாசத்தைப் போக்கும் வேத உண்மையை விளக்கும் சிவாகமங்கள், சிவபுராணங்கள் இவற்றை ஓதுவித்தலும்,

சிவபிரான் அடிக்கீழ்ப் பத்தி செவியறி வுறுத்த லோடும்
உவகையின் அபயம் யார்க்கும் வழங்குதல் உள்ளிட் டோதும்
நவையிரி அறம்எண் ணான்கும் நாள்தொறும் நிகழ்ச்சி மாணப்
பவநெறி துரக்கும் ஞானப் பைந்தொடி நிறுவிப் பின்னர். 141

சிவபிரான் திருவடிக்கண் மெய்யன்பு தோற்றச் சிவோபதேசஞ் செய்தலும், விருப்பொடும் அபயமளித்தலும் எனப்பெறும் இவையும் ஆகக் குற்றத்தைக் கெடுக்கும் முப்பத்திரண்டறங்களும் நாடொறும் நடாத்திப் பிறவியை அறுக்கும் பிராட்டியார் மாட்சிமைப்பட நிறுவிப் பின்னர்,

அம்மையார் திருவேகம்பத்திற் கெழுந்தருளல்

வீங்குநீர்க் கம்பை யாற்றின் கரைமிசை விரிமா நீழல்
ஓங்கொளிப் பொருளைக் காணும் உறுபெறுங் காதல் ஈர்ப்ப
வாங்குநுண் மருங்குல் நோவ வளரிளங் குவவுக் கொங்கைப்
பாங்கியர் முதலோர் சூழப் படரொளி மறுகிற் போந்தாள் 142

நீர்ப் பெருக்கினையுடைய கம்பாநதிக் கரைமிசை வேத மாமரத்தின் நீழலில் பேரொளிப் பொருளைக் காணுதற்குரிய மிகப்பெரிய பேரன்பு தம்மைப்பற்றி இழுத்தலால், துவளுகின்ற நுண்ணிய இடை வருந்துமாறு வளர்கின்ற இளையவும் திரட்சி உடையவும் ஆகிய தனங்களையுடைய தாதியர் முதலானோர் உடன்வர ஒளி பரவும் திருவீதியிற் போந்தனர்.

எழுசீரடி யாசிரிய விருத்தம்

மலையான் மடமகள் மறுகூ டணைதலும் வளமா நகரவர்
தொழுதாடி, உலவா நசையொடு பணிவார் மனமகி ழுறுவார்
வயின்வயின் அணிசெய்வார், குலைநீள் கதலிகள் கமுகந் துகில்விரி
கொடிவே றினையன நடுவார்கள், மலர்மா லிகைநவ மணிமா
லிகைஎழில் மலிதோ ரணநிரை நிறைவிப்பார். 143

கௌரி அம்மையார் திருவீதியில் எழுந்தருளுதலும் வளம் பொருந்திய காஞ்சியம்பதியில் வாழ்வோர் தொழுது ஆடுவோர்; கெடாத விருப்பொடும் வணங்குவார்; மனமகிழ்ச்சி மிகுவார்; எவ்விடத்தும் கோடிப்பார்; நீண்ட குலைகளைக் கொண்ட வாழை மரங்களையும், பாக்கு மரங்களையும், வெண்கொடிகளையும் இவை போல்வனவாகிய மங்கலப் பொருள்களையும் நிறுவுவர்; மலர் மாலைகளையும், நவரத்தின மாலைகளையும், அழகுமிக்க தோரணப் பத்திகளையும் ஆங்காங்கு நிறையத் தூக்குவர்.

மறுகெங் கணும்விரை கமழும் படிகுளிர் பனிநீர் விடுவர்கள் மறைஓதி, நிறுவுந் தவநிலை முனிவோர் கரமிசை நிரைபொற் குடமுடன் எதிர்கொள்வார், சிறுநுண் ணிடைமறை மடவார் வாழ்த்திசை திகழ்மங் கலமொழி உரைசெய்வார், நறவம் பயில்-குழல் அரமங் கையரொடு நரமங் கையர்நட மிடுவாரால். 144

வீதிகளின் எவ்விடத்தும் மணம் வீசும்படி குளிர்ந்த பனிநீரைத் தெளிப்பார்; வேதங்களை ஓதி அந்நெறியில் நிறுத்தும் தவ இயல்பினை உடைய முனிவரர் கைகளில் பூரண பொற்குடங்கள் ஏந்தி வரவேற்பார், மிகச் சிறிய இடையினையுடைய வேதியர் மகளிர் வாழ்த்துதலும், மங்கல கீதம் பாடலும் ஆக எதிர் வருவார். தேனூறும் கூந்தலையுடைய தேவ மகளிருடன் மண்ணுலக மகளிரும் கூடி நிருத்தம் செய்வார்.

பொங்கும் பெருகெழில் புனையுந் திருநகர் புரிவின் வலம்வரு முறையானே, தங்குங் கலைமகள் மலர்மா திமையவர் மடவார் காளிகள் சாத்தன்சீர், எங்கும் பரவிய திறல்யோ கினிகளை எழுமா தர்களை இடந்தோறும், அங்கங் கிருவினள் என்நெஞ் சிருவிய அம்பொற் றிருவடி பிறர்காணாள். 145

முன்னையின் மிக்கு வளரும் அழகை மேலும் புதுக்கும் திருநகரை இடையறாத விருப்பொடும் வலம்வரு முறையுடனே, நிலைபெறும் கலைமகளும் நிலைபெறும் செல்வ மகளும் ஆகிய இவரையும், தேவ மகளிரையும், காளிகளையும், சாத்தனாரையும் எங்கும் பரவிய வலியுடைய யோகினிகளையும், சப்த மாதர்களையும் அவரவர்க்குத் தக்க இடங்களில் இருத்தினர் என்னுள்ளத்தில் இருத்திய அழகிய பொன்னொக்கும் திருவடிகள் பிறரால் காணப்படாதவர்.

குணபால் முதல்நதி முடியார் இனிதமர் கோயில் முழுவதும் முறையிற்சென், றிணரார் மலர்கொடு வழிபட் டருளொடும் எனை-ஆ ளுடையவள் எய்துற்றாள், உணரா தரிஅயன் முதலோர் அலமரும் ஒருபே ரொளிமரு மலர்தூவும், மணமா நிழலிடை வெளியே எளிவர மாகம் புவிதொழும் ஏகம்பம். 146

கங்காதரர் இனிது வீற்றிருக்கின்ற திருக்கோயில் திருக்கச்சிநெறிக் காரைக்காடு முதலாக எல்லாத் தலங்களையும் எய்திப் பூங்கொத்துக்களில் அலர்ந்த மலர்களைக் கொண்டு முறைப்படி அருச்சனை செய்து அருளுடன் என்னையும் ஆளாகக் கொண்ட அம்மையார், திருமால் பிரமன் முதலானோர் உணராது வருந்துதற் கேதுவாகிய ஒப்பற்ற பெரிய ஒளி, மணமுடைய மலர்களைச் சொரியும் மங்கல மாமர நிழலில் வெளிப்பட எளிதில் தோன்ற வானவரும் மண்ணவரும் அவ்வொளியைத் தொழும் இடனாகிய ஏகம்பத்தை எய்தினர்.

ஏணிற் பொலிமலை அரசன் தருமயில் உள்ளங் களிவர எம்மானார், ஆணைப் படிமன நினைவிற் கடவுளர் யவனன் புரியும்

அருட் கோயில், மாணப் பலமணி குயிலுந் தமனிய வடிவிற்
புரிசையின் ஓக்கத்தைக், காணப் பெறுகளி காதற் கடலிடை
மூழ்கித் துளைபவள் கரைகாணுள். 147

எமது பெருமாணர் கட்டளைப்படி தேவதச்சன் மன நினைவினுல் எடுத்த திருவருட்கோயிலினது மாட்சிமையுடைய நவமணி பதிக்கப் பெற்று பொன்னுலமைந்த வடிவுடைய மதிலின் உயர்ச்சியைப் பெருமையிற் பொலிகின்ற இமயமலை அரசனுர் வளர்த்த மயில்போலும் அம்மையார் உள்ளத்துட் களிப்பெழக் காணப்பெறுங் களிப்புடைய காதற் கடலில் மூழ்கிக் கரையைக் காணுராய் அதனுட் டிளைத்தனர்.

விழிநீர் பொழிதர உள்ளங் குழைவுற மெய்யிற் புளக
முகிழ்ப் பெய்தப், பொழிகார் மழைநிகர் கற்றைப் புரிகுழல்
மிசையே கையிணை குவியப் போய்க், குழுவா னவர்மிடை விண்வத்
துயரிய கொடிநீள் கோபுர நெடுவாய்தல், தொழுநீர் மையினில்
இறைஞ்சிப் பன்முறை துதிசெய் துவகையின் உள்புக்காள். 148

இணைவிழிகள் தாமே நீரை மழைபோலப் பொழியவும், திருவுள்ளம் நெகிழ்ந்துருகவும், திருமேனி தானே புளகம் அரும்பவும், நீருண்டகரிய மேகத்தை ஒக்கும் கற்றையாகிய சுரிகுழலின்மேல் இரு கரங்களும் தாமே குவியச் சென்று தேவர் குழாம் நெருங்கும் விண்ணிடை உயர்ந்த கொடியும் நீண்ட கோபுரமும் உடைய நீண்ட திருவாயிலைத்தொழு முறைமையில் தொழுது பலமுறையும் துதி செய்து உவகையோடும் உள்ளே புகுந்தனர்.

அங்கட் சகமுழு தடையப் பொலிவுறும் ஐந்தாம் ஆவர
ணந்தன்னில், தங்கித் திகழ்சிவ மறையோர் முதலிய சைவர்க்
கருள்செய்து வலம்வந்து, செங்கட் கதிரவர் காலத் தீயிறை யவர்மா
லயனெடு செறிநான்கின், எங்கட் கிறையவள் எய்தித்தென்புடை
விண்டுத் தளிஎதிர் கண்டுற்ருள். 149

அவ்விடத்தில் உலக முற்றவும் வந்து சேரவும் இடமிகும் ஐந்தாம் ஆவரணத்தில் சென்றிருந்து பொலிகின்ற ஆதிசைவர் முதலிய சைவர்க்கருளுதலைப் புரிந்து வலமாகச் சுற்றி வந்து சூரியர் வயிரவர் திருமால் பிரமரொடு செறிந்துள்ள நான்காம் ஆவரணத்தில் எங்கள் பெருமாட்டி-யார் எழுந்தருளிஅழகிய தலத்தில் விண்டுவீச்சரத்தை எதிர்கண்டனர்.

விண்டுவீச்சர வரலாறு

கலிநிலைத் துறை

என்று கூறிய சூதனை இருந்தவத் தலைவர்
நன்று போற்றினர் நலிதரும் ஐம்புலக் குறும்பு
வென்ற மேதகாய் விண்டுவீச் சரம்என்ற தென்னை
இன்று நீவிரித் துரைஎனக் கடாவலும் இறுப்பான். 150

என்று வரலாறு கூறிய சூதமா முனிவரைத் தவ சிரேட்டர்கள் பெரிதும் போற்றி செய்து வருந்தும் ஐம்பொறிகளின் கொடுமையை அடக்கிய பெருந்தகையே! விண்டு வீச்சரம் வந்தவா றியாது? நீவிர் அதனை விரித்துரைத்தல் வேண்டுமென வினவலும் அதற்கு விடை பகர்வார்.

*அள்ளி லைப்படைக் கடவுளர்க் காரமு தளிக்கும்*
*வெள்ளி வெண்டிரை வரிகடல் வரைப்பினில் மாயோன்*
*முள்ளெ யிற்றரா வணைமிசை நாடகம் முயலும்*
*வள்ள லாரடி மனத்திடைத் தழீஇயினன் துயில்வான்.* 151

கூரிய இலைபோலும் படைக்கலங்களையுடைய தேவர் தமக்குப் பெறற்கரிய அமுதத்தை வழங்கும் திருமால் திருப்பாற்கடலில் முள்ளைப் போலும் கூரிய பற்களையுடைய பாம்பணைமேல் ஐந்தொழில் புரிதலாகிய திருக்கூத்தினைச் செய்யும் கைம்மாறு கருதாத வள்ளலார் திருவடிகளைத் தன்னுள்ளத்துட்கொண்டு அறிதுயிலுற்றனர்.

*அனைய தன்மையின் அறிதுயில் அமர்பவன் ஒருநாள்*
*கனைவி ளங்கொளி இதயமென் கவிழ்நனைக் கமலந்*
*தனைம லர்ந்துமேல் நோக்குறச் செய்தனன் தணவா*
*வினைஇ கந்துயர் யோகினால் வளிமிசை எழுப்பி.* 152

கூத்தப் பெருமான் திருவடிகளை மனங்கொண்டு யோகநித்திரையி லிருக்கும் திருமால் ஒரு நாள் நெருங்கி விளங்குகின்ற ஒளியுடைய இருதயமென்னும் கீழ்நோக்கிய தேனுடைய தாமரையை ஒருகாலும் விட்டு நீங்காத வினை ஒழிந்து உயர்தற்கு ஏதுவாகிய சிவயோகத்தினால் பிராணவாயுவை மேலே எழுப்பி அதனால் அத்தாமரையை மலர்ந்து மேலே நோக்கியிருக்கச் செய்தனர்.

*பகரும் உந்தியின் மேலிடத் தலரும்அப் பதுமத்*
*திகழ ருந்திறத் திலங்குநுண் குகையத னிடத்து*
*நுகரும் ஊண்பகுத் தமருநோன் தழல்அதன் தலையில்*
*திகழ மேவரும் நுணங்குபூஞ் சிகையதன் நடுவண்.* 153

பேசப்பெறும் கொப்பூழின் மேலிடத்தில் மலரும் அத்தாமரைக் கண் புகழ்தற்குரிய திறத்தினால் பொலிவுறும் தகராகாசம் என்னும் சிற்றம்பலத்தில் நுகரும் நுகர்ச்சிகளைப் பிரித்து ஊட்டி வீற்றிருக்கும் நற்சுடரின் உச்சியில் விளங்கும் நுண்ணிய பூஞ்சிகையின் நடுவிடத்தே,

*சாற்று மெய்ப்பரப் பிரமமாம் சதாசிவப் புத்தேள்*
*வீற்றி ருப்பது யோகத்திற் கண்டனன் விரைத்தேன்*
*ஊற்று பூந்துழாய்ப் பண்ணவன் உவகையின் வல்லே*
*போற்றி போற்றிஎன் றிறைஞ்சினன் அன்புமீப் பொங்க.* 154

விரித்து விளக்கப்பெறும் உண்மைப் பரப்பிரமமாகிய சதாசிவ மூர்த்தி எழுந்தருளி இருத்தலைச் சிவயோகத்தினால் பார்த்தனர். நறு மணங்கமழும் தேனைச் சிந்துகின்ற துளவ மாலையையணிந்த திருமால் தரிசித்த மகிழ்ச்சியால் விரைவாக அன்புமேலெழப் போற்றி போற்றி என்று துதித்து வணங்கினர்.

*அன்பி னுக்கெளி யார்பெருங் கருணைகூர்ந் தருளி*
*இன்ப ஆனந்தத் திருநடம் ஆயிடை இயற்ற*
*வன்ப ழும்பகை மலஇருள் கடிந்தது காணூஉ*
*என்பு நெக்குநெக் குருகினன் முரனைஅன் றிறுத்தோன்.* 155

முராரியாகிய திருமால் அன்பினுக்கெளிவந்தருளும் பெருமானர் மிக்க அருளுடையவராய்ப் பேரின்பத்தைத் தோற்றுவிக்கும் ஆனந்தத் திருநடனத்தை இருதய தாமரையின் கண்ணே நடித்தருள அனுதியாய் வலியபகையாயுள்ள ஆணவமல இருள் சிறிதும் இல்லையாய் ஒழிந்ததைப் பார்த்து என்பும் நெகிழ்ந்து நெகிழ்ந்து உள்ளம் உருகினர்.

*புளகம் எங்கணும் போர்த்துமெய் பனித்துவாய் குழறி*
*இளகி இன்பநீர் விழியுகக் கம்பனம் எய்தித்*
*தளர்வில் ஆர்வத்தால் தனைமறந் தறிதுயில் மேவும்*
*அளவில் ஆங்கயல் இருந்தவர் அன்னது கண்டார்.* 156

மயிர் சிலிர்த்தும், திருமேனி கம்பித்தும், வாய் குழறியும், நெகிழ்ந்து ஆனந்தக் கண்ணீர் சொரிந்தும், உளம் பதைபதைத்தும் மெலிவில்லாத விருப்பினால் இந்நிலைகளின் மேலும் தம்மை மறந்து யோக நித்திரையில் பொருந்தும் மாத்திரையில் பாற்கடலில் உடனிருந் தவர் அத்தன்மையைக் கண்டனர்.

*கண்டு நெஞ்சகம் பதைத்தனர் திகைத்தனர் கவலை*
*கொண்ட ழுங்கினர் அஞ்சினர் இரங்கினர் குறிப்பின்*
*வண்ட லர்த்திரு முதலியோர் மற்றிது நிகழ*
*அண்டர் நாயகற் கடுத்தவா றென்னெனத் தெரிவார்.* 157

வண்டுகள் சூழும் தாமரை மலரில் வைகும் திருமகள் முதலானோர் கண்டு உள்ளம் நடுங்கினர்; மயங்கினர்; வருத்தம் எய்தினர்; வெருவினர்; பரிந்தனர்; குறிப்பொடும் இதுதோன்ற தேவர் தலைவராகிய இவர்க்கு நேர்ந்தது யாதோ என ஆராய்வார்.

*மென்ற ளிர்ச்செழுங் கோமளத் திருவடி வினையேன்*
*வன்ற னிக்கரம் வருடலான் வருந்தின கொல்லோ*
*அன்றி என்மடித் தலமிசை அசைந்துநொந் தனவோ*
*என்று தன்உளம் அயிர்த்தனள் இலங்கெழில் மலராள்.* 158

அழகிய மலர்கள், மெல்லிய தளிர்போலும் மிகவும் மெல்லிய திருவடிகள் பாவியேனுடைய மிகவும் வலிய கைகள் தைவருதலால்

வருந்தினவோ! அல்லது என்மடிமேல் அசைதலால் நொந்தனவோ! என்று தன்மனத்தில் ஐயங்கொண்டனள்.

மெல்ல னிச்சமும் குழைக்கும்எம் பிரான்திரு மேனி
கல்லெ னக்கடுந் திட்பமும் தட்பமும் கதுவும்
புல்லி யேனுடல் வைகலான் உளைந்தது போலும்
அல்ல தொன்றறி யேன்என வெரீஇயினன் அனந்தன். 159

மெல்லிய அனிச்சமலரையும் குழையச் செய்யும் எம்பெருமானது திருமேனி ஆனது, கல்லையொப்பக் கடுமையும், திண்மையும், சில்லிடுதலும் (குளிர்ச்சி) மேவும் கீழ்மையேன் உடலில் வீற்றிருத்தலால் வருந்தியதுபோலும். வேறோர் காரணத்தையும் அறிகிலேன்! எனப் பயமெய்தினன் ஆதிசேடன்.

எருத்த மீதுகொண் டுலகெலாம் கொட்புறும் என்னுன்
மருத்து ழாய்முடி மாமறு மார்பினுன் மேனி
வருத்த முற்றதே யாங்கொல்என் றெண்ணினன் வலியால்
உருத்த மாற்றலர் முனைகெடப் பொருதிறல் உவணன். 160

வெகுண்டெழுந்த பகைவருடைய வலிகெடத் தன் வன்மையால் பொருகின்ற மிடலுடைய கருடன், பிடரிமீது கொண்டு உலகெலாம் சுழன்று வரும் தன்னால் மணம் கமழும் துளவத்தாமம் அணிந்த திருமுடியினையுடைய சீவற்சம் என்னும் மறுவினை மார்பில் உடைய மாயனார் திருமேனி வருத்தமெய்தியது ஆகும் கொல்லோ!' என மதித்தனன்.

இன்ன வாறிவர் யாவரும் வேறுவே றெண்ணிப்
பன்ன ரும்பெருங் கவலைகூர் வுழிவரை பயந்த
கன்னி பாகனார் திருநடக் கருணையில் திளைத்த
பின்னை நாயகன் யோகமாத் துயில்பிரிந் தெழுந்தான். 161

இங்ஙனமாக இவர் யாவரும் வேறு வேறு காரணங்களை எண்ணிச் சொல்லற்கரிய பெருவருத்தம் அடையும்போது இமய மன்னன் ஈன்ற கன்னியைப் பாகங்கொண்டவர் திருக்கூத்தின் அருள்வெள்ளத்தில் திளைத்த இலக்குமி நாயகனார் யோகநித்திரையினின்றும் நீங்கித் துயிலுணர்ந்தனர்.

கண்ட பேரின்ப அனுபவக் கருத்தினோ டெழுந்து
மண்டு வெள்ளநீர் அருவிகண் பொழியமன் றுடையார்
தொண்ட னேற்கெளி வந்தவா றெனக்களி துளும்பிக்
கொண்ட காதலால் அஞ்சலி சென்னிமேற் குவித்து. 162

பெற்ற பேரின்ப அனுபவ நினைவோடும் துயிலுணர்ந்து செறிந்த வெள்ளப் பெருக்கைக் கண்கள் அருவியாகப் பொழிய அம்பலவாணர் அடியனேனுக்கு எளியராய்க் காட்சியளித்தவாறு ஆவா எனக் களிப்புத் ததும்பித் தோன்றிய பேரன்பால் சிரமேற் கரங்குவித்து,

ஐய னேஅருள் புரிகஆ ரழற்சிகை ஏந்தும்
கைய னேஅருள் புரிகபல் கதிரொளி பரப்பும்
மெய்ய னேஅருள் புரிகமெய்க் கூத்தினைக் காட்டும்
செய்ய னேஅருள் புரிகெனச் செப்பினன் பலகால். 163

'தலைவனே அருள்புரிக! ஏந்துதற்கரிய நெருப்புக் கொழுந்தினை ஏந்தும் திருக்கையனே அருள்புரிக! பல சூரியர் ஒளியை விரிக்கும் திருமேனியனே அருள்புரிக! உண்மைத் திருக்கூத்தினை அடியேனுக்குக் காட்டும் செவ்வியனே அருள்புரிக' எனப் பலமுறை விண்ணப்பம் செய்தனர்.

அன்ன பெற்றிகண் டியாவரும் அதிசயம் எய்தி
என்னை என்னைமற் றிதுவெனக் குதுகுதுப் போடும்
பொன்ன டித்தலம் போற்றினர் வினுதலும் நெடியோன்
மன் னு றும்பெரு மகிழ்ச்சியான் அவர்க்கிது வழங்கும். 164

அந்நிலைமையை யாவரும் நோக்கி வியப்பெய்தி 'ஈதென்னே! என் னே!' என் றதிசயத்தொடும் பொன்போலும் திருவடிகளைப் போற்றினராய் வினவுதலும் திருமால் நிலைபெறும் பெரு மகிழ்ச்சியினால் அவர்தமக் கிதனைக் கூறுவர்.

செறியும் நான்மறைச் சிரமிசைப் பரம்பொருள் இந்நாள்
அறிஞர் காண்கிலா அற்புதத் திருநடம் எனக்குப்
பிறிவ ரும்பெருங் கருணையாற் காட்டிடப் பெற்றேன்
மறியும் இவ்வுடல் வருபயன் கிடைத்ததென் றனக்கே. 165

பொருள் செறிந்த நான்கு வேதங்களின் உச்சியில் வீற்றிருக்கும் முதற்பொருள் அறிஞர்களும் காணக்கூடாததாய் இருக்கின்ற ஞானத் திருநடனத்தை இன்று நீங்காத பெருங்கருணையால் எனக்குக் காட்டிடத் தரிசிக்கும்பேறு பெற்றேன். அழிந்து வீழும் இவ்வுடம்பு பெற்றதன் ஊதியம் எனக்கே வாய்த்தது.

அவ்வ ருட்டிருக் கூத்தினைக் கண்டஆர் வத்தால்
இவ்வு றுப்பெலாம் விதிர்விதிர்ப் பெய்தின கண்டீர்
செவ்வன் ஓர்மின்என் றியம்புசொற் செவித்துளை நிறைப்பக்
கொவ்வை வாய்த்திரு முதலியோர் ஆதரங் கொண்டார். 166

'உயிர்களுக்கு அருள்புரிதலையுடைய திருக்கூத்தினைத் தரிசித்த பெருமகிழ்ச்சியினால் அங்கங்கள் யாவும் துடிதுடித்தன காணீர். நன்கு உணர்வீர் ஆமின்' என்று கூறிய சொற்களைக் காதாரக் கேட்டுக் கொவ்வைக் கனியை ஒக்கும் அதரங்களையுடைய இலக்குமி முதலானோர் விதுப்புற்றனர்.

கேட்ட அப்பொழு தேஎதிர் கண்டெனக் கிளர்ந்து
காட்டும் வேணவா மீமிசை எழக்கழல் வணங்கி

நாட்டும் அத்திருக் கூத்தினை நாங்களுங் காண
வேட்ட னங்கள்மற் றதுபெறு நெறிவிரைந் தருளாய். 167

கேட்ட அப்பொழுதே எதிரில் தரிசனம் பெற்றுற்போல மிக்கெழும் பெருவிருப்பம் மீக்கூர்ந்தெழுதலால் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, 'விருப்புறுத்தும் அந்நடனத்தை அடியேங்களும் காண விரும்பினேம். அங்ஙனம் பெறற்குரிய வழியை எங்களுக்கு விரைந்தறிவுறுப்பீராக.'

என்று பன்முறை வேண்டலும் ஈர்ந்தொடைத் துளவோன்
நன்று நுங்கருத் தெனமிக நகைமுக மலர்ந்து
குன்ற வில்லியார் சேவடி சிந்தையிற் கொண்டாற்
கன்று நம்பர்தம் அருளினல் அறிவுவந் துதிப்ப. 168

என்று பலமுறையும் விண்ணப்பிக்க அப்பொழுதே தேனுல் ஈரிய துழாய்மாலையைச் சூடிய திருமால் நும்முடைய விருப்பம் அழகிதுஎனப் பெரிதும் முகமலர்ந்து மேருமலையை வில்லாக உடையவர் திருவடியை மனத்துட்கொண்ட திருமாலுக்குச் சிவபெருமான் திருவருளினுலே அறிவுண்டாக,

மல்லல் தெண்டிரை மறிகடல் மணிகள்கொண் டொதுக்கும்
தில்லைக் கானுடைச் சிதம்பர வரைப்பில்எஞ் ஞான்றும்
செல்வத் தாண்டவம் நவிற்றும்எம் பிரானெனத் தெளிந்தான்
அல்லிப் பூமகள் முதலியோர்க் கன்னது செப்பி. 169

வளமுடைய மறித்தெழும் திரையையுடைய கடல் மணிகளைக் கரையிடைச் செலவுய்க்கும் தில்லை என்னும் மரங்களால் தில்லை எனப் பெயரிய சிதம்பர தலத்தில் எக்காலத்தும் திருவருட் செல்வமாகிய திருக்கூத்தியற்றும் எமது பிரானெனத் தெளிவுற்றனன். அதனுல், அகவிதழையுடைய தாமரை மலரில் வாழ்திருமகள் முதலானோர்க்கதனை உணர்த்தி,

அங்கண் எய்திநாம் ஆளுடை நாயகன் திருமுன்
பொங்கு காதலான் அடைக்கலம் புகுந்துபோற் றிசைத்துத்
தங்கி மெய்த்தவம் இயற்றிடின் தண்ணருள் சுரந்து
நங்க ளுக்கெதிர் காட்டுவன் ஆனந்த நடனம். 170

தில்லையை அடைந்து தலைவனுர் திருமுன்னர் மிக்கெழும் விருப்பினுல் நாம் சரணம் புகுந்து போற்றுதலாகிய மெய்த்தவத்தைச் செய்தால் திருக்கருணை மீக்கூர்ந்து பேரின்பக் கூத்தை அங்கே நாம் காணக் காட்டுவர்.

யோகி யோர்களும் எய்தருந் திருநடம் உரிமை
யாகும் அன்புடை அடியவர்க் கெளியது கண்டீர்
ஏகு வாம்இனி வம்மின்என் றவருடன் எழுந்து
மாக வாற்றினல் வயங்கொளித் தில்லைவந் தடைந்தான். 171

'யோகியரும் பெறற்கரிய திருக்கூத்து மெய்யன்பர்க் கெளிதாய்க் காண்டற்குரியதாகும்; அதனைக் காண்மின். செல்வோம் இனி எம்முடன் வம்மின்' எனப்பேசி வான வழியால் விளங்குகின்ற ஒளியுடைய தில்லையை வந்தடைந்தனர்.

ஷை வேறு

சேர்ந்துதிரு மூலட்டந் தொழுது போற்றிச் சிந்தைகளி
கூர்ந்துதிருப் பாப்பரசு கலுழன் முதலோர் உடன்குழும
நேர்ந்ததவ யோகத்தின் நெடுநாள் முயன்றான் அக்காலை
வார்ந்தசடைப் பிரானாரும் மகிழ்ந்து காட்சி கொடுத்தருளி. 172

எய்தித் திருமூலத்தானரைத் தொழுது துதி செய்து சிந்தையில் களிப்புமிக்கு இலக்குமி, ஆதிசேடன், கருடன் முதலானோர் சூழ வாய்த்த தவயோகத்திற் பன்னெடுங்காலம் முயன்றனர். அப்பொழுது நீண்ட சடைமுடியையுடைய பெருமானாரும் உவந்து திருக்காட்சி அருள்புரிந்து,

ஒன்னுதார் உயிர்பருகி ஒளிருந் திகிரித் தனிப்படையோய்
என்னீமற் றிவரோடும் எம்பால் விழைந்த தியம்புகெனப்
பொன்னுடை யுடைத்தோன் றல் புவியின் வீழ்ந்து பணிந்தெழுந்து
நன்னமம் எடுத்தோதிப் புகழ்ந்து போற்றி நவில்கின்றான். 173

பகைவர் உயிரைப் பருகிச் சுடர்விடும் சக்கரமாகிய ஒப்பற்ற படையையுடையோனே! நீயும் இவரும் எம்மிடத்து விரும்பிய வரங்களைக் கூறுக! என்றருளப் பீதாம்பரத்தை தரித்த மால் நிலத்தில் வீழ்ந்து பணிந்தெழுந்து திருப்பெயர்களை எடுத்தோதிப் புகழ்ந்து துதி செய்து கூறுநிற்பர்,

அண்ணலே ஆனந்தத் தெள்ளா ரமுதேங் அடியேகள்
புண்ணியநின் திருக்கூத்தின் அமுதம் பருகிப் பொலிவெய்த
உண்ணிறைந்த பெருங்காதல் உடையேம் கருணை செய்தருளாய்
எண்ணியார் எண்ணமெல்லாம் முடிக்க வல்ல எம்மானே. 174

'தலைவனே! தெள்ளிய பேரின்ப அமுதமே! அடியரேம் புண்ணியப் பயனாகிய நின் திருக்கூத்தின் விளையும் அமுதத்தை நுகர்ந்து சிறப்புற உள்ளத்துள் நிரம்பிய பெரு விருப்பினை உடையோம் அதனால் கருணை கூர்ந்து அருள்பாலிப்பாய். எண்ணியவர் விருப்பினை நிறைவு செய்ய வல்ல எம்பெருமானே!'

குறளுருவாய் உலகளந்தான் இயம்புங் கூற்றுக் கேட்டருளி
அறவனார் எதிர்மொழிவார் ஆழிப் படையோய் எவ்வெவரும்
பெறலரிய நடங்காணப் பெட்டா யாகில் எம்இலிங்கம்
மறன்அணுகாத் திருக்காஞ்சி வரைப்பின் எய்தித் தாபித்து. 175

வாமனராய்ப் பின்பு திரிவிக்கிரமமூர்த்தியாய் மூவுலகையும் கொண்ட திருமால் விண்ணப்பத்தைத் திருச்செவிசாத்தி அறவடிவினர்

விடையளிப்பார்: சக்கரப்படையோனே! எத்திறத்தினரும் பெறலாகாத திருக் கூத்துக் காண விரும்பினை எனின், பாவம் நெருங்காத சிறப்பினையுடைய திருக்காஞ்சியில் எமக்கு வடிவாம் சிவலிங்கம் நிறுவி,

விண்டு காஞ்சியில் விமலனை வழிபடல்

நறுமலர்கொண் டருச்சித்து வல்லை ஈண்டு நண்ணுதிநின்
உறுகருத்தை முடிக்கின்றேம் என்றருங் கருளும் உரைகேளா
மறுவிகந்த மனத்தன்பின் மாயோன் அங்கண் யாவரையும்
நிறுவிவள வயற்காஞ்சி நெடுநீர் நகரங் கடிதடைந்தான். 176

'நறிய மலர்களைக் கொண்டு அருச்சனை செய்து விரைந்திங்கே எய்துதி. நின் மிக்க நினைவை முற்றுவிப்போம்' என்று தில்லையில் அருளிய திருமொழியைக் கேட்டுக் குற்றம் நீங்கிய அன்பினையுடைய திருமால் அவ்விடத்தே யாவரையும் நிற்பித்து வளமுடைய வயல்சூழ் பெருநீரினையுடைய காஞ்சிமா நகரைக் கடிதடைந்தனர்.

ஏகம்பத் தொளிமணியை இன்பத் தொழும்பர் செய்தவங்கள்
ஏகம்பத் தெனக்கொள்ளும் இறையைக் குறளாய் மாவலிமுன்
ஏகம்பத் தாற்புரிசை ஒருமூன் றிறுத்த தனிமுதலை
ஏகம்பத் தொடும்புளகம் எய்த வணங்கித் தொழுதெழுந்து. 177

திருவேகம்பத்தில் எழுந்தருளிய ஒளிவிடும் மணியை, இன்பத் பத்திற்கு ஏதுவாகிய தொண்டர் செய்தவத்தினை ஒன்று பத்தாகப் பெருக்கி வழங்கும் இறைவனை, வாமனராய் மாவலி முன் சென்ற திருமாலாகிய அம்பினால் மும்மதிலையும் அழித்த ஒப்பற்ற முதல்வனையே மெய் பனித்தலுடன் உரோமம் சிலிர்ப்ப வணங்கித் தொழு தெழுந்து,

அக்கம்பம் உடையார்க்குத் தென்பால் அங்கண் சிவலிங்கம்
மிக்கன்பு தழைத்தோங்க விண்டு வீசன் என இருவிப்
பொக்கங்கள் முழுதகலப் போற்றி வேண்டி அருள்பெற்றுத்
திக்கெங்கும் புகழ்பரப்புந் தில்லை வனத்தை மீண்டணைந்தான். 178

திருவேகம்பத்திற்குத் தெற்கில் அன்பு மீக்கூர்ந்து செழித்து ஓங்க விண்டு ஈசன் எனப் பெயரிய சிவலிங்கம் தாபித்துப் பொய்மை அகல மெய்ம்மையே பொருந்தப் போற்றி விண்ணப்பித்து அருளைப் பெற்ற பின்னர் திசையெல்லாம் தனது புகழைப் பரப்புந் தில்லை மரம் நிறைந்த காடாகிய தலத்தை மீண்டும் அணைந்தனர்.

விண்டு முதலியோர் திருக்கூத்துக் காணல்

ஆண்டணைந்த திருமாலுக் கருளா ரமிழ்த மனையாரும்
தாண்டரும்பே ரொளிப்பிழம்பாய்ச் சுடருந் திருச்சிற் றம்பலத்துள்
காண்டகைய ஆனந்த நிருத்தங் காட்டக் கழியன்பு
பூண்டதிருப் பாப்பரசு புள்ளேற் றண்ண லொடுங்கண்டான். 179

சிதம்பர நகரைச் சேர்ந்த திருமாலுக்கு அருள் செய்கின்ற அரிய அமிழ்தத்தை ஒத்த சிவபெருமானாரும் தூண்ட வேண்டாத பேரொளி வடிவாய்ச் சுடர் விடும் திருச்சிற்றம்பலத்தின் கண்ணே காணத்தக்க பேரின்பக் கூத்தினை அருள மிக்க அன்பு பூண்ட இலக்குமி, ஆதிசேடன், கருடன் இவர்களோடும் திருமால் தரிசனம் செய்தனர்,

கண்டளவில் பெருங்காதல் இன்ப வெள்ளங் கரைஇகப்பக்
கொண்டநிறை மகிழ்ச்சியினால் ஆடிப் பாடிக் கும்பிட்டுப்
பண்டைநிலை மறந்துமதுப் பருகுஞ் சுரும்பிற் பரவசனாய்
மண்டியபே ரார்வத்தால் வணங்கித் தொழுது களிசிறந்தான். 180

கண்டபொழுதே பேரன்பும், பேரின்பப் பெருக்கும் கைகடந்து பொங்க நிறைவு கொண்ட உவகையினால் ஆடியும், பாடியும், கும்பிட்டும் பண்டைய நிலையை மறந்து தேனைப் பருகிய வண்டினைப் போலத் தன்வய மிழந்து செறிந்த பெருவிருப்பினால் வணங்கித் தொழுது களிப்பான் மிக்கனர்.

இறைவனார் திருக்கூத்துக் கிசையக் கணங்கள் இயம் முழக்கும், முறைஉணர்ந்து பெருங்களிப்பால் தானும் படகம் முழக்குதலும், மறைமுதல்வர் அதுநோக்கி மகிழ்ந்து படகப் பணி தனக்கே, நிறைவிருப்பின் அருள்செய்யப் பெற்று வாழ்ந்தான் நெடியோனே. 181

பெருமானார்தம் திருநடத்திற்குத் தக்கபடி சிவகணங்கள் இன்னிசை எழுப்பும் வழக்கறிந்து பெருங்களிப்பினால் திருமாலும் முரசினைக் கொட்டுதலும் வேத முதல்வர் அதனைப் பார்த்து மகிழ்ந்து பேரிகை முழக்கும் திருத் தொண்டினைப் பெருவிருப்பொடும் தனக்கே அருளுதலைச் செய்யப் பெற்றமையால் அவர் வாழ்வு பெற்றனர்.

விதுவொன்றுஞ் சடைமுடியார் விண்டு வீசம் வந்தவா
றிதுகண்டீர் முனிவீர்காள் ஈண்டுத் தொழுது வழிபட்டுத்
துதிசெய்து கணநாதர் திருமா ளிகைசூழ் தருமுன்றின்
மதுவிள்ளும் மலர்க்கூந்தல் மலையான் மடந்தை எய்தினள். 182

முனிவீர்காள்! சந்திரனைத் தரித்த பெருமானார் வீற்றிருக்கும் விண்டு (விட்டுணு) வீச வரலாறு ஈதாகும். இத்தலத்தில் வணங்கி வழிபாடு செய்து பரவித் திருமாளிகையில் கணநாதர் வலம்வரு கோயிலின்முன் தேனைச் சொரியும் மலரணிந்த கூந்தலையுடைய மலையரையன் மகளார் எய்தினர்.

அகத்தியேச்சர வரலாறு

பண்ணிசைந்த வரிச்சுரும்பர் பாடல் பயிலும் மலர் இலைஞ்சித், தண்ணிசைந்த சிவகங்கைத் தழங்குந் திரைநீர் குடைந்தாடிப், பெண்ணிசைந்த பெருவனப்பின் பிராட்டி

ஆங்குப் பிறங்கொளியால், கண்ணிசைந்த களிசிறப்ப அகத்தியேசங் கண்டணைந்தாள். 183

பண்ணமைந்த பாடல் வண்டு பாடுதற் கிடனாகிய பூக்களைக் கொண்ட பொய்கையாகிய குளிர்ந்த சிவகங்கை எனும் ஒலிக்கும் அலைகளையுடைய தீர்த்தத்தில் மூழ்கித் திளைத்து பெண்ணியல்பமைந்த பேரழகினையுடைய பெருமாட்டியார் அங்கே விளங்கொளியால் கருத்திற்கியைந்த களி துளும்ப அகத்தியர் அருச்சித்த அகத்தியே சத்தினைக் கண்டு நெருங்கினர்.

வேறு

என்ற சூதனை மாதவர் யாவரும் ஏத்தியே
பன்றி காணருஞ் சேவடிப் பற்றிய சிந்தையோய்
துன்று சீர்மை அகத்தியே சத்தியல் சொல்கென
நன்றும் உள்ளம் மகிழ்ந்து விளங்க நவிற்றுவான். 184

கூறிய சூத புராணிகரை முனிவரர் யாவரும் துதி செய்தே திருமாலும் பன்றியாய்ச் சென்றுணராத் திருவடியைப் பற்றிய சிந்தையோரே! அடுக்கிய சிறப்பினையுடைய அகத்தியேசத்தின் பெருமையைச் சொல்லுக என்று வேண்டப் பெரிதும் மனம் மகிழ்ந்து விளக்கமாக உணர்த்துவார்.

நாரதர் செயல்

கடவுள் மாமுனி நாரதன் முன்னொரு காலையின்
இடனு டைத்திருக் காஞ்சியின் ஏகம்ப நாதரைச்
சுடரும் மாடக யாழிசை யால்தொழு தேத்துவான்
தடவு வெள்ளிப் பருப்பத நின்றுந் தணந்தனன். 185

தெய்வ முனிவரராகிய நாரதர் முன்னோர் காலத்தில் பரவிய இடமுடைய கச்சித் திருவேகம்ப நாதரை விளங்கும் முறுக்காணியொடு கூடிய மகதியாழ் கொண்டு தொழுது துதி செய்யும் பொருட்டுப் பெருமை பொருந்திய கயிலை மலையினின்றும் நீங்கினர்.

அண்ண லார்தம் அடியிணை தைவரு சிந்தையான்
நண்ணு கின்ற நரப்புக் கருவித் தலைவனை
விண்ணின் நோக்குபு வெய்தென விந்த நெடுங்கிரி
எண்ணம் வாய்ப்ப இயங்கும் உருக்கொடு முன்னுறூ. 186

பெருமானார் தம் துணையடிகளை மெத்தென வருடுகின்ற மனத்தை யுடையவராய் அணுகுகின்ற யாழுக்குரிய நாரதரை வானிடத்தே கண்டு விந்தமலையானது கருத்து நிறைவெய்த உலவும் வடிவங் கொண்டு விரைந்து முன் சென்று,

அருக்கி யம்முத லாயின கொண்டு வழிபடூஉப்
பெருத்த காதலிற் பேணித் தொழுது வணங்கலும்
கருக்க டிந்துயர் காமுறு மாதவன் ஓகையான்
மருத்த பூஞ்சுனை விந்த வரைக்கிது பேசுவான். 187

அருக்கிய பாத்திய ஆசமனம் கொண்டு பூசனை புரிந்து பெருவிருப்பினுற் போற்றி வணங்கியகாலைப் பிறப்பினை நீக்கினமையால் உயர்ந்த குற்ற மற்ற பெருந்தவர் மகிழ்ச்சியொடும் மணமுடைய பூக்களைக் கொண்ட சுனைகள் அமைந்த விந்த மலை வேந்தனுக்கிதனைக் கூறுவார்.

மன்னும் மெய்த்தவர் பாற்புரி யும்வழி பாட்டினில்
நின்னை யொப்பவர் கண்டிலன் இத்தகு நின்னையும்
பொன்னி னுட்டவர் போத இகழ்ந்தனர் அன்னதை
உன்னி உன்னி வருந்திடு கின்றதென் உள்ளமே. 188

நிலைபெறும் உண்மைத் தவமுடையார்மாட்டுச் செய்யும் பூசனையில் நினக்கு நிகராவார் ஒருவரையும் காண்கிலேன். இங்ஙனம் உயர்ந்த உன்னையும் தேவர் பெரிதும் பழித்தனர். அதனைப் பல்காலும் எண்ணி என்னுள்ளம் வருந்தாநின்றது.

என்ற தாபத வேந்தனை மீள இறைஞ்சிமுன்
நின்று தேவருள் யாவர் இகழ்ச்சி நிகழ்த்தினர்
என்ற னக்கிகழ் யாதுகொல் கூறினை யேல்அது.
மன்ற மாற்றுவன் யானென விந்தம் வகுத்ததால். 189

என்றுரைத்த தவராசர் ஆகிய நாரதரை மீண்டும் வணங்கி எதிர்நின்று 'தேவருள் வைத்து யாவர் இகழ்ந்தனர்; அத்தகு குற்றம் யாது? விளக்கினுல், அக் குற்றத்தை ஒரு தலையாகப் போக்கிக் கொள்வேன் யான்' என்று விந்தம் விரித்தது.

முனிவன் அவ்வுரை கேட்டு மொழிதரு மேன்மையிற்
புனித நின்னொடு பொன்வரை நேரெனும் நூலெலாம்
பனிம திச்சடைப் பண்ணவர் தேவர் குழாத்தொடு
நனிம கிழ்ந்தவண் வைகுவர் நாள்தொறும் ஆதலால். 190

முனிவரர் அவ்வுரையைக் கேட்டுப் பெருமையுடன் விடையளிப்பர்: தூயோனே! நூல்களியாவும் நின்னொடு மேருமலை ஒப்பாகும் என்று கூறும். சந்திரசேகரர் தேவர் குழாத் தொடும் அம்மேரு மலையில் விரும்பி வீற்றிருப்பர் எப்பொழுதும். ஆகலான்,

இயங்கு கோள்கள் உடுக்கள் இராசி எவற்றொடும்
வயங்கு சந்திர சூரியர் தாம்வட மேருவை
நயந்து சுற்றுவர் நாள்தொறும் அத்திறம் நோக்கியே
உயங்கு கின்றனன் யானெனப் பின்னரும் ஓதுவான். 191

செலவு கொள்ளும் செவ்வாய் முதலிய கிரகங்கள் அசுவினி முதலிய நட்சத்திரங்கள், மேட முதலிய இராசிகள் இவற்ருேடும் வழங்குகின்ற சந்திர சூரியர் தாமும் வடக்கில் அமைந்த மேரு மலையை விரும்பி வலம் வருவர் எந்நாளும். அச் சிறப்பை எண்ணி யான் வருந்து கின்றனன் என்றுரைத்து மேலும் கூறுவர்.

தனக்கு நேர்வரி யாய்பல சாற்றுவ தென்கொலோ
எனக்கு நீநனி நண்பினை ஆதலின் இத்திறம்
உனக்கி யம்பினன் இன்னினி ஏகுவல் ஒய்யென
மனக்கு வேண்டிய செய்கென மாதவன் நீங்கினன். 192

ஒப்பில்லாதோனே! பலவாக விரித்துரைத்துப் பயன் என்னை? எனக்கு நீ நெருங்கிய நண்புடையை ஆகலின் இச் செய்தியை உனக்குக் கூறினேன், இப்பொழுதே விரையச் செல்வேன், உன் மனப் போக்கின் படி செய்வாயாகென முனிவரர் அகன்றனர்.

விந்தம் ஓங்கி எழுதல்

எழுசீரடி யாசிரிய விருத்தம்

பத்தர் மெய்க்கிளை மகதி யாழ்பயில் படிம உண்டியன் நீங்கலும், மெய்த்த வெஞ்சினம் மீக்கொள் மால்வரை வீயும் எல்லை விளக்கினைச், செத்தி றப்ப வளர்ந்தெ ழுந்து விசும்பு சென்று நிவந்ததால், மைத்த வல்லிருள் கீறி வாள்கள் வயங்கும் ஆறு தடுத்தரோ. 193

பத்தர் என்னும் உறுப்பினையும், சிறந்த கிளை என்னும் நரம்பிசையினையும் உடைய மகதியாழ் பயிலும் விரதங்களான் உண்டி சுருங்கியவர் அகன்ற அளவே மெய்யே கொடிய சினம் மேலெழுந்த பெரிய விந்தம், அவியும்கால் மிக்கெரியும் விளக்கினை ஒத்து மிக்கு வளர்ந் துயர்ந்து வானில் ஓங்கி உயர்ந்தமையால் கரிய பேரிருளைக் கிழித்து ஒளியுடைய சந்திர சூரியர் முதலானோர் வழங்கும் வழியினைத் தடை செய்தது,

துருவ மண்டல எல்லை கீழ்ப்பட மேக்கெ ழுஞ்சுடர் வெற்பினைத்
தருநி லத்தவர் நோக்கி முந்து தழற்ப டைக்குலி சக்கொடுங்
கருவி யிற்சிற கரிவ லாரி யுடன்செ ருச்செய் கருத்தினல்
வருவ தாங்கொல் எனத்தி கைத்து மருண்டு தம்முள் வெரீஇயினர்.

துருவ நட்சத்திரம் கீழாக மேலெழுந்த விந்த மலையை ஐந்தருக் களையுடைய தேவர் கண்டு நெருப்பொக்கும் வச்சிராயுத மாகிய கொடிய படையினல் மலைகளின் சிறகுகளை அரிந்த இந்திரனெடு போர் செய்யும் நினைவுடன் வருவதோ என முன்னர் ஐயுற்றுத் திகைப்புற்று மயங்கித் தமக்குள்ளே அஞ்சினர்.

*தங்கள் ஒப்புமை கொண்டு நண்ணு தருக்கு ணர்ந்து வெகுட்சியால், பொங்கு விம்மி மதர்த்தெ ழுந்தெதிர் போர்செ யப்புகு தன்மையின், கொங்கை வம்பு சழுங்க மார்பம் அலைத்து வீறு கொளக்கதழ்ந், தங்கண் மங்கையர் வெற்பின் ஒக்கமுன் நோக்க விண்மிசை அண்மினர்.* 195

கொங்கைக ளாகிய தங்களோடு ஒப்புடைமை மதித்து நெருங்கு செருக்கினை அறிந்து கோபத்தால் மிக்குப் பூரித்து இறுமாப்புற் றெழுந்து எதிராகப் போர் செயப் புகுகின்ற இயல்பில் கொங்கைகளானவை கச்சினின்றும் சரிந்து வெளிப்பட மார்பினை வருத்தித் தலையெடுப்புக் கொள்ளும்படி விரைந்து வானுலக மகளிர் விந்தமலையின் உயர்ச்சியை முன்னே நோக்க விண்ணில் நெருங்கினர்.

*சிட்டி நாள்முதல் ஓய்வி லாது தினம் பொ லங்கிரி சூழ்வர வட்ட மிட்ட கறங்கின் ஓலை எனச்சு ழன்றல மந்துநைந், திட்ட கோள்கள் இராசி நாள்களும் அன்று தன்னம் இளைப்பொழிந், துட்ட தும்பு களிப்பின் வைகின ஓங்கு மால்வரை யாலரோ.* 196

படைப்புக் காலமுதல் ஒழிவின்றி நாடோறும் மேரு மலையை வலம் வரலான் வட்ட மிட்ட காற்றாடியின் ஓலை போலச் சுழன்று வருந்தி மெலிந்த கிரகங்களும், இராசிகளும், நட்சத்திரங்களும், அன்று விந்த மலையின் வளர்ச்சியால் சிறிது இளைப்பாறி மனத்துள் களி துளும்பின.

சிட்டி-சிருட்டி; சிட்டித் தொழில் (கந்தர் கலி வெண்பா 92)

வேறு

*மாயி ருங்கனக மாமலைத்தலையின் மன்னி வன்குயவன் நேமியின், ஞாயி றாதிகளை இடைய றாதுதுகடு கச்சு ழற்றிநனி தளர்வுகூர், பாய சீர்த்திமிகு துருவ னுஞ்சிறிது பணியொ ழிந்துறை நலம்பெற, மீயு கந்தமணி அருவி தாழ்நெடிய விந்த வெற்புதவி செய்ததால்.* 197

மிகப்பெரிய மேருமலையின் சிகரத்தில் நிலைத்து நின்று வல்ல குயவன் தனது சக்கரத்தைச் சுழற்றுவதுபோலச் சூரிய சந்திரர் முதலானோரை ஒழிவின்றி விரையச் சுழல்வித்து மிகத் தளர்ச்சி உற்ற பரவிய மிகு புகழினையுடைய துருவனும் சிறிது தொழிலில் ஓய்வு பெற்றிருக்கின்ற நன்மையை அடைய மேலுயர்ந்த, மணிகளைக்கொண் டிழிகின்ற அருவிகளையுடைய நீண்ட விந்தமலை, உதவி செய்தது.

'உகப்பே உயர்வு' (தொல் உரி.). நாளும் கோளும் துருவன் சூத்திரத்துப்படல் (இரண்டா. நக. 267) காண்க.

*அருவி தாழ்சயிலம் ஒளிவ ழங்குநெறி தனைஅ டைத்துமிசை அணவலால், ஒருபு டைத்திமிரம் மொய்ப்ப மற்றையொரு புடையு*

றக்கதிர்கள் மொய்த்திடும், இருதி றத்தினெடு மருவு பெற்றிமை இசைந்த மன் னுலகம் அற்றைநாள்,மரும லர்க்குழலி பாக மாகவ-ளர் மறைமு தற்பொருள் நிகர்த்ததால். 198

விந்தமலை சூரியன் முதற் சுடர் செல்லும் வானவழியை அடைத்து மேலிடத்தைத் தழுவுதலால் ஓர்பால் இருள் செறியவும் மற்றைப் பாதியில் ஒளிக்குழாம் மொய்க்கவும் இங்ஙனம் இருவகையாகப் பொருந்தும் நிலையை அமைந்த மன்னும் உலகம் அந்நாள் ஏலவார்குழலி பாகத்தில் தங்கிவளர் வேதமுதல்வனை ஒத்துவிளங்கியது.

இகழ்ந்த நீர்இனி நடப்ப தெங்கணென எள்ளி வாள்களை நகைப்பதூஉம், திகழ்ந்த மேருவொடு செருவி ளைப்பஅறை கூவி வீரநகை செய்வதூஉம், உகந்தெ ழுந்தனது கீர்த்தி பல்குவதும் ஒப்ப எங்கணும் அடித்தலம், அகழ்ந்து கல்லென இசைத்து வெள்ளென விளர்த்து வீங்குபுனல் அருவியே. 199

சுடர்களை நோக்கி என்னை வலம்வராது இகழ்ந்த நீவிர் இனி எவ்விடத்திற்குச் செல்வீர் என, அவற்றை இகழ்ந்து சிரிப்பதும், பழித்த மேருமலையொடு போர்செய்யும் பொருட்டு வலிதிற் போருக் கழைத்து வீரச்சிரிப்பினை விளைப்பதும், உயர்ந்தெழுந் தனது மிகுபுகழ் பலவாதலும் ஒத்து விளங்குவன அடித்தளத்தின் எவ்விடத்தையும் பெயர்த்துக் கல்லென் றொலி செய்து வெள்ளென வெளிறுற்று வீழும் மிகுபுனல் அருவிகளே.

இறவு ளர்க்குமிசை உலக வாழ்க்கையர் விருந்த ளித்து-வகை எய்தினர், குறம டந்தையரும் அரம டந்தையரும் அளவ ளாய்உறவு கொண்டனர், முறைநி றுத்துசுர முனிவர் வெற்-புறையும் முனிவர் நல்வர வெதிர்ந்தனர், மறைமு ழைப்பணிகள் வானு லாம்பணி புலம்பு தீர்ந்திட மணந்தன. 200

மலைக் குறவர்க்கு விண்ணோர் விருந்தூட்டி மகிழ்ந்தனர். குற மகளிரும் கலந்து சூழ்ந்தனர். நல்வழக்கை மேற்கொள்கின்ற தெய்வ முனிவரர் மலையில் வதியும் முனிவரரை எதிர்கொண்டனர். குகையில் மறையும் பாம்புகள் ராகு கேதுக்களுடன் தனிமை அகலக் கூடின.

அறுசீரடி யாசிரிய விருத்தம்

மிளைபடு சாரற் குன்றம் மேக்குற நிவத்த லோடும்
ஒளிவழங் காமைக் கால வேறுபா டொழிந்த வாற்றன்
வளமலி தவந்தா னங்கள் முதலிய மறுத்துப் பைங்கூழ்
விளைவுகள் அஃகி ஞாலம் வெறுவிய தாயிற் றன்றே. 201

காவற் காடுகள் அமைந்த சாரலையுடைய விந்தம் மேலே பொருந்த உயர்தலோடும் சுடர்கள் வழங்காமையால் இரவு பகல் இருதுக்கள் ஒழிந்தன. வளமிக்க தவமும் தானமும் பிறவும் ஒழிந்து பசிய பயிர்கள் தரும் பயன்கள் சுருங்கி உலகம் வறிதாயிற்று.

தேவர்கள் துன்புறுதல்

அங்கது நோக்கி வல்லை புரந்தர னாதி விண்ணோர்
தங்குலக் குரவ னோடுஞ் சதுமுகன் இருக்கை சார்ந்தார்
பங்கயக் கிழவன் நோன்தாள் பணிந்தனர் பரசிப் போற்றி
எங்களை வெருவா வண்ணம் புரத்திஎன் றிதனைச் சொற்றார். 202

அதனைக் கண்டு இந்திரன் முதலான விண்ணுலகோர் தம் குல குருவாகிய பிருகற்பதியோடும் நான்முகன் இருக்கையை விரைந்து சேர்ந்தனர். அப்பிரமனார் தவத்தாள்களைப் பணிந்து துதிசெய்து தங்களை அபயம் தந்து காத்தல்வேண்டும் என்று இதனைக் கூறினர்.

இருசுடர் வழங்கும் ஆற்றை இறும்புசூழ் சோலை விந்தப்
பருவரை தடுத்த வாற்றால் பகல் இராத் தொடக்கம் இன்றித்
திருநெறி வேள்வி மாறித் தெருமந்த துலகம் மன்னோ
மருமலர்க் கமல வாழ்க்கை வயங்கெழு கடவு ளேறே. 203

சந்திர சூரியர் செல்லும் வழியை குறுங்காடும் பெருங்காடும் சூழ்ந்த விந்தமலை தடுத்தமையால் பகல் இரவு முதலிய காலவேறுபாடு களின்றிச் சிவாகம வேள்விகள் இல்லையாகி உலகோர் வருந்துகின்றனர் பெரிதும். மணங்கமழும் மலரி லுறையும் வன்மையமைந்த கடவுளர் தலைவவோ!

இனிஎமக் குறுதி என்னே என்றலும் இளவண் டூதும்
பனிமலர்க் கதுப்பின் ஐம்பாற் பாரதி கொழுநன் கேளாத்
தனிமிடல் படைத்த விந்தத் தருக்கினைப் பௌவம் உண்ட
முனிவரன் அடக்க வல்லும் என்றுள முன்னிச் சொல்வான். 204

இப்பொழுது எமக்கு வரக்கடவது யாதோ? என முறையிடலும், மழலை வண்டுகள் ஒலிக்கும் குளிர்ந்த மலரையணிந்த ஐம்பகுதியாக முடிக்கப்பெறும் கூந்தலையுடைய சரசுவதி நாயகன் செவியேற்று மிக்க வலிபடைத்த விந்தமலையின் செருக்கினைக் கடல் நீரைப் பருகிய அகத்தியரே அடக்கவல்லவர் என்றுள்ளத்தில் எண்ணிக் கூறுவர்.

நடலைஇன் றுயர்ந்தோய் கேட்டி காசிமா நகரம் வைகுங்
குடமுனி தன்னை விண்ணோர் குழாத்தொடும் நணுகி விந்தத்
தடவரைத் தருக்கு நீப்பான் வேண்டுக தவத்தான் மிக்கோன்
கடலெலாங் குடங்கை ஏற்றுப் பருகினன் முன்னங் கண்டாய். 205

'துன்பம் இன்றி உயர்ந்த பிருகற்பதியே! கேள். காசியில் எழுந்தருளும் அகத்திய முனிவரைத் தேவர் குழுவுடன் சென்று கூடி விந்தமலையின் இறுமாப்பினைப் போக்குமாறு அவரை வேண்டுக. தவத் திறல் உயர்ந்த அவர் கடல் நீரை முற்றவும் உள்ளங்கையில் முன்னர் அடக்கிப் பருகினர். அதனை எண்ணுதி.

என்றிது வியாழப் புத்தேட் கியம்பினன் இயம்பிப் பின்னும்
தன்றிரு வுளத்தின் எண்ணிச் சயிலவீ றடக்க யானே
மன்றலம் பொழில்சூழ் காசி வரைப்பினைக் குறுகி அந்த
மின்றிகழ் சடையாற் கோதி விடுப்பல்என் றெழுந்து சென்றான்.

என்றிதனை அக்குருவிற்குக் கூறி, மேலும் தான் சிந்தித்து மலையின் செருக்கினை அடக்கவேண்டி 'யானே மணங்கமழும் சோலை சூழும் காசியை நெருங்கி அந்த மின்னொக்கும் சடை முனிவர்க்குக் கூறிச் செல்ல விடுவேன்' என்று எழுந்து சென்றனன் பிரமன்.

பொன்னவ னாதி தேவர் புடையுறப் போந்து செங்கால்
அன்னமுங் கருமென் கூந்தல் அன்னமும் மறலி ஆடும்
கன்னிவெண் டரங்கத் தெண்ணீர்க் கங்கையா றுடுத்த காசி
நன்னெடு நகரம் புக்கான் நகைமலர்க் கமலத் தோன்றல். 207

கமல மலரினன் குரு முதலானோர் உடன் வரச்சென்று சிவந்த கால்களையுடைய அன்னப் பறவைகளும் கரிய மெல்லிய கூந்தலையுடைய அன்னம் போல்வாரும் மாறுபட்டுத் துளைதற்கிடனாகி வெள்ளிய அலைகளை யுடைய தெளிந்த நீரினையுடைய கங்கைக் குமரிபுடை சூழ்ந்த காசியாகிய நல்ல நெடிய நகரிற் புக்கனன்.

பிரமன் அகத்தியர்க் குரைத்தல்

அவ்வயின் அகில நாதர் அடியிணை தொழுது போற்றித்
தெவ்வலி அடுபோ ராண்மைத் தேவர்தங் குழாத்தி னோடும்
எவ்வமில் கேள்வி சான்ற குறுமுனி இருக்கை நண்ணிப்
பௌவநீர் பருகி னானைக் கண்டிது பகர லுற்றான். 208

அவ்விடத்தே விசுவநாதர் திருவடிகளை வணங்கி ஏத்திப் பின்பு துன்பம் இல்லையாதற்குக் காரணமாகிய மறைநூல்கள் நிரம்பிய அகத்தியர் தவச் சூழலைப் பகைவரை அழிக்கின்ற போராற்றலையுடைய தேவரொடும் அணுகிக் கடல்நீரைக் குடித்த அகத்தியரைக் கண்டு தம் வருகைக்குக் காரணத்தைக் கூறத் தொடங்கினர்.

முக்குறும் பெறிந்த காட்சி முனிவர்ஏ றனையாய் சால
மிக்குயர் விந்த நாகந் தருக்குமீக் கொண்டு நாளும்
பொக்கமில் இரவி திங்கள் புகுநெறி தடைசெய் தன்றால்
அக்கிரி இறுமாப் பெல்லாம் அகற்றுவான் நீயே வல்லை 209

காமம், வெகுளி, மயக்கம் என்னும் மூன்றன் கொடுமையை அழித்தற்கு ஏதுவாகிய மெய்யறிவினையுடைய முனிவரசே! மேலிட்டு நாடொறும் பொய்படாது வெளிப்படும் சூரிய சந்திரர் செல்லும் வழியைத் தடை செய்தது விந்தம். அம்மலையினது இறுமாப்பினை முற்றவும் நீவிரே அகற்ற வல்லீர்.

இன்னினி விரைக வல்லே தாழ்க்கலை என்று வேண்டும்
அன்னஏ றுயர்த்த புத்தேட் கருந்தவக் கிழவன் கூறும்
என்னிது புகன்றாய் ஐயா எம்பிராற் கினிய கச்சி
தன்னைவிட் டகலேன் வீடு தருவதித் தலங்காண் என்ன. 210

இப்பொழுதே இன்னே மிகவே விரைந்து செல்க; காலம் நீட விடற்க என்று குறையிரக்கும் அன்னக்கொடியை உயர்த்திய நான்முகர்க்கு அகத்தியர் கூறுவார்; 'ஐயனே! என்ன இங்ஙனம் கூறினாய். எம்பெருமானார்க் கினிய இருக்கையாகிய காசிநகரை விட்டு நீங்கேன். தன்கண் வாழ்வார்க்கு வீடுதருவது இத்தலமே என அறிதி' எனக் கூற,

வண்டொடு ஞிமிறுந் தேனும் வரிச்சிறைச் சுரும்பும் ஆர்ப்பத்
தண்டுளி நறவம் ஊற்றுந் தடமலர்ப் பொகுட்டுத் தெய்வப்
புண்டரீ கத்தின் மேய புண்ணியன் கேட்டு முந்நீர்
உண்டுயர் முனிவர் கோமான் உளங்கொள உணர்த்து கின்றான்.

வண்டும், ஞிமிறும், தேனும், பாட்டுடைய சுரும்பும் ஆரவாரிக்குமாறு தண்ணியதேன் திவலைகளைச் சிந்தும் விரிந்த தெய்வத் தாமரை மலரின் பொகுட்டில் மேவிய புண்ணியனாகிய பிரமன் கேட்டுக் கடல் நீரை உண்டுயர்ந்த முனிவரர் ஏறுபோல்வார் திருவுள்ளம் ஏற்குமாறு உணர்த்துகின்றான்.

நால்வகை வண்டு: "சுரும்புகாள், வண்டுகாள், மகிழ் தேனினங்காள்......மிஞிற்றீட்டங்காள்" (சீவக. குண. 42.) காண்க. புண்ணியன் போற்றும் புண்ணியர் அகத்தியர் என உணர்த்தினர்.

வெறுப்பொடு விருப்பொன் றில்லாய் விண்ணவர் இடுக்கண் தீர்க்கும், திறத்தினை எவ்வாற் றானும் முடிப்பதே சீரி தன்றி, மறுப்பது தகாதால் மற்று வயங்கொளி உலக மூன்றும், பெறத்தகு கருமம் என்றால் என்னினிப் பேசு மாறே. 212

வெறுப்பொடு விருப்புத் தன்பால் மேவுதல் இலானைச் சார்ந்து அவை இல்லாதோய்! தேவர் துயரைத் தீர்க்கும் வகையினை எத்திறத்தானும் முற்றுவிப்பதே தக்கது ஆகும். அல்லாமல் மறுப்பது தகாததாகும். மேலும், விளங்கொளியை மூவுலகும் பெறத் தக்க செய்கை எனின், இதற்கு மேலும் சொலத்தக்கது உண்டோ?

சீருடைத் ததீசி முன்னோர் தேவர்தம் பொருட்டுத் தங்கள்
ஆருயிர்க் கிறுதி நோக்கா துடம்பையும் அளித்தா ரன்றே
காரியம் இதுமற் றம்ம சிறிதெனக் கருதல் வேண்டா
ஓரின்வே றுன்னை ஒப்பார் உலகம்மூன் றிடத்தும் இல்லை. 213

சிறப்புடைய ததீசி முனிவரர் முதலோர் தேவர் தம் நலனுக்காகத் தம்முடைய அரிய உயிரழிவை நோக்காது முதுகென்பு முதலியவற்றையும் வழங்கினர் அன்றோ? இச்செய்கையும் அவ்வுபகாரத்தை ஒப்பதே

சிறிய செயல் என்று எண்ணுதல் கூடாது. ஆராய்ந்தால் உன்னை ஒப்பவர் மற்றொருவர் மூவுலகினும் இல்லை.

வேசற வொழிதி வெள்ளை விடையவர்க் குவகை நல்கிக்
காசியின் மேன்மை சான்ற கடிநகர் அங்கண் உண்டால்
மூசிள ஞிமிறு பாய முகைஉடைந் தொழுகுந் தேறல்
வாசமென் மலர்ப்பூம் பொய்கை வளவயற் காஞ்சி மூதூர். 214

வருத்தம் தவிர்தி. வெள்ளிய விடைப் பெருமானார்க்கு உவப்புறுத்திக் காசியினும் மேம்பாடு நிரம்பிய விளக்கம் அமைந்த நகரம் அங்குள்ளது. மொய்க்கின்ற இளவண்டுகள் பாய அரும்புகள் உடைந்து ஊற்றுந் தேன் மணம் வீசும் மெல்லிய மலர்களையுடைய பொலிவுள்ள நீர்நிலைகளும் வளமுடைய வயல்களும் சூழ்ந்த காஞ்சி என்னும் தொன்னகரம் அதுவாகும்.

மதுமலர்ப் பொழில்சூழ் காசி இறந்திடின் வழங்கும் முத்தி
அதுவும்நம் பெருமா னார்தம் அருளுருப் பெறுவ தாகும்
முதுநகர்க் காஞ்சி தன்னை நினைப்பவே முத்தி நல்கும்
கதுவருஞ் சிவபி ரானார் திருவடி கலப்ப தாமால். 215

காசியில் இறந்தால் சிவபிரானார் திருவுருப்பெறுதலாகிய சாரூப முத்திவாய்க்கும். யாண்டிருந்தும் காஞ்சியை நினைத்த அளவே திருவடி கலத்தலாகிய சாயுச்சிய முத்தி கிட்டும்.

அத்தலப் பெருமை முற்றும் அழலவிர் சடைமேற் கங்கை
வைத்தவர் அறிவ தல்லால் மற்றெவர் அறியற் பாலார்
சித்திகள் அனைத்தும் நல்கும் ஆயிடைச் சென்றா யாகில்
உத்தம குணத்தாய் மற்றும் பெருநலம் உனக்குண் டாமால். 216

அக்காஞ்சியின் பெருமை முற்றும் நெருப்புப்போலும் சுடர்விடும் சடையிற் கங்கையைத் தரித்தவரே அறிவர் அன்றிப் பிறர் எவர் அறிய வல்லார்; ஒருவருமிலர். உத்தம குணமுடையாய்! சித்திகள் யாவும் வழங்கும் அங்குச் செல்லுவையானால் மேலும் பெருநன்மைகள் பல உனக்குள்ளன ஆகும்.

சிமிழ்விடப் பாம்பு சுற்றித் திரைகடல் கலக்கிப் பெற்ற
அமிழ்தினை இமையோர்க் கூட்டும் அரியெனக் கம்பம் மேய
குமிழ்மறி விழியாள் பாகர் அருளினாற் கொழிக்கும் இன்பத்
தமிழ்மொழிப் பாடை ஒன்று தரைமிசை விளங்கச் செய்வாய். 217

பிணிக்கின்ற விடமுடைய வாசுகியைக் கயிறுகச் சுற்றிப் பாற்கடலைக் கடைந்து பெற்ற அமுதத்தைத் தேவர்க்கு நுகர்விக்கும் திருமாலைப் போலத் திருவேகம்பத்தில் விரும்பி வீற்றிருக்கின்ற மூக்காகிய குமிழம் பூவினையும், மான்மறிபோலும் விழியினையும் உடைய

அம்மையாரைப்பாகம் கொண்டவர் திருவருளாற் றழைக்கும் இன்பத் தமிழ் மொழியாகிய ஒப்பற்றதனைத் தரைக்கண் விளங்குமாறு பரப்புவாய்.

பாணித்தல் அமையும் இன்னே படர்கெனும் பவளச் செவ்வாய்
வாணிக்கு மணாளன் றன்னை விடைகொண்டு மகிழ்ச்சி கூர
ஆணிப்பொன் மாடக் கோயில் அகிலநா யகரை அன்பாற்
பேணித்தாழ்ந் தெழுந்து காசிப் பெரும்பதி தணந்து போந்தான்.

'காலம் தாழ்த்தது போதும் இப்பொழுதே செல்க' என்று கூறும் பவளம் போலும் சிவந்த வாயினையுடைய சரசுவதிக்கு நாயகனிடத்து விடைபெற்றுக் கொண்டு உவகை மீக்கூர உயர்ந்த பொன்னா னியன்ற கோயிலில் விசுவநாதரை அன்பொடும் போற்றி வணங்கி எழுந்து காசிமா நகரினின்றும் நீங்கிச் சென்றனர்.

அகத்தியர் விந்தமலையை அடக்குதல்

கச்சிமா நகரங் காணும் ஆதரங் கைமிக் கீர்ப்ப
நச்சணி மிடற்றார் பாத நகைமலர் மனத்துட் கொண்டு
பொச்சமில் மனையா ளோடும் வான்நெறிப் போது கின்ற
விச்சைதேர் முனிவன் றன்னைக் கண்டது விந்த நாகம். 219

காஞ்சி மாநகரைக் காணும் பெருவிருப்புக் கைகடந்து முன்னே இழுப்ப விடத்தை அணிந்த கண்டர் திருவடி ஒளி மலர்களைத் திருவுள்ளத்துட் கொண்டு படிற்றொழுக்கம் அகன்ற உலோபா முத்திரை என்னும் மனைவியொடும் வான்வழிப் போதுகின்ற நூற் றுறை போய அகத்திய முனிவரை விந்தமலை கண்ணுற்றது.

ஊற்றெழும் பரவைத் தெண்ணீர் உழுந்தள வாக்கி உண்ணும்
ஆற்றலின் நெடிய னாகி அள்வினிற் குறிய னாய
நீற்றணி முனிவர் கோனைக் காண்டலும் நெஞ்சம் மாழ்கிப்
பாற்றரும் பயம்மீக் கொண்டு பதைபதைத் தொடுங்கிச் சோர்ந்து.

கடல் நீரை உழுந்தின் அளவாக்கிப் பருகும் ஆற்றலாற் பெரியராகி வடிவிற் குறியராய திருநீற்றுக் கோலம் பூண்ட முனிவரரசைக் காணுதலும் நெஞ்சம் வருந்தி போக்குதற்கரிய பயத்தை மேற்கொண்டு நடுநடுங்கி ஒடுங்கித் தளர்ந்து,

குறுகிமுன் குறுகித் தாழ்ந்து கோதறு விதியி னாற்றால்
இறுவிய அருக்கி யாதி அருச்சனை நிரப்பல் நோக்கி
உறுவனும் மகிழ்ந்து பத்தி விளைவினை உயர்த்துக் கூற
மறுவலுந் தொழுது போற்றி மணிவரை இதனை வேண்டும். 221

குறுகியாகிய முனிவரரைக் குறுகி வணங்கிக் குற்றமற்ற விதி முறையால் அருக்கியம் முதலிய வழிபாட்டினைப் புரிதல் நோக்கி முனிவரரும் மகிழ்ந்து மெய்யன்பின் முதிர்ச்சியை எடுத்துப் பாராட்ட

மீட்டும் தொழுது துதி செய்து அழகிய விந்தம் இங்ஙனம் குறையிரக்கும்.

ஐயனே அடியேன் மாட்டும் அருட்பெருங் கருணை வைத்த
செய்யனே அணங்கு லோபா முத்திரை திளைக்குந் தூய
மெய்யனே அலைகள் வீசும் விரிகடல் முழுதும் ஏற்ற
கையனே இனியான் செய்யக் கடவதென் அருளாய் என்ன. 222

'தலைவனே! அடிமையேனிடத்தும் பேரருட் கருணை வைத்தெழுந்தருளிய செவ்வியனே! தெய்வத் தன்மை யுடைய உலோபா முத்திரை அம்மை மணக்கும் தூய திருமேனியனே! கடல் நீரை அடக்கிய கையை யுடையோனே! அடியேன் இப்பொழுது செய்ய வேண்டுவது யாது? அதனை அருளாய் என்று வேண்ட,

பொன்னிலம் இருக்கை கொண்டோர் பொருட்டிவண் தென்பால் ஆசை, தன்னையான் குறித்துப் போந்தேன் சயிலமே மீளுங் காறும், இந்நிலை இருத்தி என்னக் கரத்தினால் இருவிக் காஞ்சி, நன்னெடு நகரம் நோக்கி நடந்தனன் நிகரொன் றில்லான். 223

தேவர் பொருட்டுத் தெற்குத் திசையை நோக்கி இவ்வழியாகக் குறிக்கோளுடன் போந்தேன். மலையே! யான் மீளும் அளவும் இந் நிலையே இருத்தி என்னக் கையால் அழுத்திக் காஞ்சி மாநகரை நோக்கி நிகர் ஒருவர் இல்லாதவர் சென்றனர்.

வேறு

செந்நெறி நோக்கி "அமைந்தாங் கொழுகான் அளவறி கில்லான்
தன்னை வியந்தான் விரைந்து கெடும்" எனல் சத்தியங் கண்டாம்
மன்னிய மேரு வரையோ டிகலி வளர்ந்தெழு விந்தம்
முன்னுள தோற்றமும் வீறும் முழுதும் இழந்தது மன்னோ. 224

நன்னெறியை ஆராய்ந்து அதனில் மனமடங்கப் பெற்று நடவானாய், தன்னளவை அறியானாய்த் தன்னையே மதித்துப் பிறரொடு பகை கொண்டவன் விரையக் கெடுவன் என்னும் திருவாக்கு மெய்ம் மொழி யாதலைக் கண்டோம். நிலைபெற்ற பெருமையுடைய மேருமலை யொடு பகைத்து வளர்ந்தெழுந்த விந்தமலை முன்னிருந்த தோற்றத் தையும், பெருமையையும் முழுதும் இழந்தது அந்தோ!

சங்கர னார்எதிர் தோன்ற மறையுந் தடாதகை தன்னோர்
கொங்கை நிகர்த்தது செல்லுங் குறுமுனி நேருறு குன்றம்
அங்கது கண்ட இமையோர் அனைவரும் அத்திறங் கேட்ட
நங்கையை ஈன்றபொன் மாலை உவகையின் நாற்றி யடைந்தார்.

தடாதகைப் பிராட்டியாரது திருமுன்னர்ச் சிவபிரானெழுந் தருளக் கண்ட அளவே அம்மையாருடைய நடுக்கொங்கை மறைந்தா லொப்ப அகத்திய முனிவரர் முன்னின்ற விந்த மலை கரந்தது. அதனைக்

கண்ட தேவர் யாவரும், கொங்கை மறைந்தமை கேட்டு அம்மையைப் பயந்த காஞ்சனமாலை மகிழ்ந்தமையினும் நான்கு மடங்கு மகிழ்ந்தனர்,

பொன்-காஞ்சனம். திருவிளையாடலுள் தடாதகைப் பிராட்டியார் திரு அவதாரப் படலத்துள் காண்க. முயலாமே அடங்கியமை: 'பெரியார்முன் தன்னைப் புகழ்ந்துரைத்த பேதை, தரியா துயர்வகன்று தாழும்-தெரியாய்கொல், பொன்னுயர்வு தீர்த்த புணர்முலையாய் விந்தமலை, தன்னுயர்வு தீர்ந்தன்று தாழ்ந்து' என்புழிக் காண்க.

அகத்தியர் காஞ்சியை அடைதல்

குன்றிடை முட்டி மறுகுங் குரீஇயின் தடையுண் டழுங்கி
நின்ற அருக்கன் முதலோர் நெறிகொளச் செல்ல விடுத்துத்
தன்துணைப் பாவையி னோடுஞ் சார்தரு தாபத வேந்து
மன்றலம் பூம்பொழிற் காஞ்சி வளநகர் தன்னைமுன் கண்டான். 226

மலையிடை முட்டிக் கொண்டு மனஞ் சுழலும் குருவியைப் போலத் தடைப் பட்டு வருந்தி நின்ற சூரியன் முதலோரைச் செல்வழிச் செல்ல விடுத்துத் தவவேந்தராகிய முனிவர் தம் வாழ்க்கைத் துணைவியோடும் மணங்கமழும் சோலை சூழ்ந்த காஞ்சி என்னும் வளநகரத்தை எதிர் கண்டனர்.

கண்டு தொழுது வணங்கிக் கையிணை உச்சியிற் கூம்ப
மண்டிய காதலிற் புக்கு மரபுளிச் செய்கடன் ஆற்றி
அண்டர் பிரானுர் தளிகள் அனைத்தும் முறையான் இறைஞ்சிப்
பண்டை மறைகள் முழங்கும் படரொளி ஏகம்பஞ் சேர்ந்தான். 227

கண்டு கைகூப்பி வீழ்ந்து வணங்கி எழுந்து இருகைகளும் முடிமேற் குவியச் செறிந்த பேரன்பொடும் புகுந்து விதிப்படி செயத்தகு கடன்களை முடித்துக் கொண்டு தேவ தேவர் திருக்கோயில்கள் யாவற்றையும் முறையாலே வணங்கிப் பழ மறைகள் எடுத்தேத்தும் பரவுகின்ற ஒளியுடைய திருவேகம்பத்தைச் சார்ந்தனர்.

செல்வ மணித்திரு வாய்தல் சென்று பணிந்து புகுந்தாங்
கல்வளர் கின்ற மிடற்றூர் ஆரு ளென்ன நிறைந்த
சொல்வளர் சீர்ச்சிவ கங்கைத் தூநறு மென்புன லாடி
எல்வளர் கண்டிகை வெண்ணீ றெங்கும் வயங்க அணிந்தான். 228

வளமிக்க அழகிய திருவாயிலினை அணுகிப் புகுந்து அவ்விடத்தே திருநீலகண்டர் திருவருளை ஒப்ப நிரம்பிய புகழ் வளர்ந்த சிறப்பினையுடைய சிவகங்கை என்னும் தூய நறிய தெளிந்த நீரில் மூழ்கி விளக்கம் அமைந்த அக்க வடமும், திருவெண்ணீறும் திருமேனியில் அணியும் இடங்களில் விளங்க அணிந்தனர்.

வாங்கு நுணங்கிடை பாகர் மாளிகை சூழ்மணி முன்றிற்
பாங்கு வலங்கொடு சென்று படரொளி ஆனந்த வெள்ளம்

தேங்குந் தனிமறைச் சூதத் தெய்வத் தருநிழல் மேய
வீங்குங் கருணைப் பிழம்பை விழிஎதி ரேகண்டு கொண்டான். 229

துவளுகின்ற நுண்ணிய இடையினையுடைய பெருமாட்டியைப் பாகம் கொண்டவரது திருமாளிகைப் பத்தியைச் சூழ்கின்ற திருமுன்பு பக்கங்களில் வலங்கொண்டு உள்புக்குத் தழைக்கின்ற ஒளியுடைய பேரின்ப வெள்ளம் தேங்கி நிற்கும் ஒப்பற்ற வேத மாமர மாகிய தெய்வத் தருவினது அருள் வடிவாகிய நிழலிலே வீற்றிருக்கின்ற தழைக்கும் கருணை வடிவைக் கண்களாரக் கண்டனர்.

இணங்கு முறைமையின் அங்கம் எட்டினும் ஐந்தினுஞ் சால
வணங்கி மகிழ்ந்து திளைத்து வார்புனல் கண்கள் சொரியக்
குணங்குறி இன்றி எழுந்த கோலத் திருஉருப் போற்றி
அணங்கரு மெய்யருள் பெற்று மீண்டனன் ஆர்கலி உண்டான்.

பொருந்தும் முறைமையினால் எட்டுறுப்பும், ஐந்துறுப்பும் மண்ணில் தோயுமாறு பன்முறை வணங்கி மகிழ்ச்சியில் மூழ்கிக் கண்கள் நீர்வார நிர்க்குணனாய் வடிவின்றி எழுந்த அழகிய அருவுருவாகிய சிவலிங்கத்தினைக் கண்டு போற்றித் துன்பில்லாத மெய்யருளைப்பெற்றுக் கடல் நீரைப் பருகியவர் மீண்டனர்.

வன்பழ வல்வினை மாற்றுங் கம்பம் மகிழ்ந்தவர் தென்சார்த்
தன்பெய ராற்சிவ லிங்கம் தாபித் தருச்சனை யாற்றி
முன்பு வரம்பல பெற்று மீமிசை மூண்டெழும் அன்பான்
மின்புரி செஞ்சடை யாரை மீளப் பழிச்சுத லுற்றான். 231

பிரவாக அநாதியாய் வரும் கொடிய வினையைக் கெடுக்கும் திருவேகம்பத்தை விரும்பி இடமாகக் கொண்டவர்க்குத் தென்திசையில் அகத்தியேசர் எனப் பெயரிய சிவலிங்கம் நிறுவி வழிபாடு செய்து முதலில் வரங்கள் பலவும் பெற்று மேன்மே லுந்தி எழும் பேரன்பினால் மின்னிடும் சிவந்த சடைப் பெருமானாரை மீளவும் போற்ற லுற்றனர்.

அகத்தியர் துதித்தல்

கொச்சகக் கலிப்பா

இந்நாள் எனக்குப் பயப்பட்ட திப்பிறவி
இந்நாள் எனக்குப் பயப்பட்ட தியான்செய்தவம்
இந்நாள் எனக்குப் பயப்பட்ட தென்னறிவும்
இந்நாள் உனைக்காணப் பெற்றமையின் எங்கோவே. 232

ஏனைய பிறவி யெல்லாம் துணையாக இப்பிறவியே இந்நாளே எனக்குப் பயன் பட்டது. இந்நாளே எனக்குப் பயன் பட்டது என் அறிவும். எங்ஙனமெனின், இந்நாள் உனைக் காணப் பெற்றமையால் எம்மரசே!

எண்ணமெலாம் எய்தினேன் எண்ணமெலாம் எய்தினேன்
எண்ணமெலாம் எய்தினேல் எங்கள் பெருமானே
கண்ணனொடு நான்முகனுங் காணாத் துணையடிகள்
கண்ணெதிரே இற்றைநாள் யான்காணக் காட்டினையால். 233

எண்ணமெல்லாம் எய்தினேன் எண்ணமெல்லாம் எய்தினேன் எண்ணமெலாம் எய்தினேன் எங்கள் பெருமானே! திருமாலும் பிரமனும் காணும் அளவைக் கடந்த இணையடிகளை இற்றை நாள் அடியேன் காணுமாறு கண்ணெதிரே காட்டினை.

சங்கரா சம்புவே சங்கரா சம்புவே
சங்கரா சம்புவே சாம்ப சிவனேஎன்
அங்கணா என்றென்றும் ஓலிட் டழைத்தரற்றும்
இங்கெனக்கு வாழ்நாள்கள் இவ்வாறே போகியவே. 234

சங்கரா சம்புவே என்றும் உமையோடு கூடிய சிவனே என்றும் என் அங்கணனே (அழகிய கண்ணோட்டம் உடையவனே) என்றும் என்றும் ஓலமிட்டுக் கூவி அரற்றும் எனக்கு இங்கே வாழ்நாள்கள் இம் முறையிலேயே கழிவதாக.

குன்றாத அன்புனக்கே குன்றாத அன்புனக்கே
குன்றாத அன்புனக்கே மிக்கோங்கு கொள்கையது
என்றும்எனக் குண்டாக என்றும்எனக் குண்டாக
என்றும்என்க் குண்டாக என்றும்ஓர் பெற்றியனே. 235

குறைவுபடாத அன்புனக்கே! குன்றாத அன்புனக்கே! குன்றாத அன்புனக்கே மிக்கோங்கு கொள்கை ஆக எந்நாளும் எப்பிறப்பினும் எனக்குண்டாகுக ; என்றும் எனக்குண்டாகுக என்றும் எனக்குண்டாகுக என்றும் ஓரியல்பினனே !

வையமிசைத் தோற்றம்முதல் சாங்காறும் மன்றஉனைத்
தெய்வமெனப் பேணாத் திருவிலிகள் என்குலத்தில்
எய்திஒரு ஞான்றும் பிறவற்க எய்துறினும்
வெய்தெனமற் றாங்கே விளிந்தொழிக எம்மானே. 236

உலகில் பிறந்தநாள் முதலாக இறக்கும் அளவும் அறுதியாக உன்னையே தலைவன் என்று ஏற்றுப் போற்றாத மூதேவிகள் என் குடியில் ஒருகாலத்தும் வந்து பிறவா தொழிக! ஒரோவழிப் பிறக்க நேர்ந்தாலும் விரைய அந்நிலையே செத்துத் தொலைக எம்பெருமானே !

ஆனேறுயர்த்தருளி அன்றினர் ஊரெரித்த
கோனே எனக்குக் குலதெய்வ மாம்பேற்றால்
யானே பெருஞ்செல்வன் யானே பெருஞ்செல்வன்
யானே பெருஞ்செல்வன் எல்லா உலகிலுமே. 237

விடைக் கொடியை எடுத்தருளி மாறுபட்டவருடைய முப்புரங்களைச் சிரித்தெரித்த அரசே எனக்கு வழிவழித் தெய்வம் ஆகலின், யானே பெருஞ் செல்வன்; யானே பெருஞ் செல்வன்; யானே பெருஞ் செல்வன் எவ்வுலகினும் என்னை ஒப்பவர் ஒருவரும் இலர்.

சிறந்துன்னைத் தெய்வமெனக் கொள்ளாத சீத்தை
பிறந்த குலம்பிறவா நின்றகுலம் பீளின்
உறந்த குலத்தும் உமைஒருபால் மேயாய்
மறந்தும் பிறவாத வாழ்வெனக்கு வேண்டுமால். 238

எத்தேவரினும் சிறந்த உன்னைத் தெய்வமெனக் கொண்டு போற்றாத கீழ்மகன் பிறந்த குலத்தினும், பிறவாநின்ற குலத்தினும், கருப்பத்தில் தங்கிய குலத்தினும் உமையொருபாகனே! மறந்தும் பிறவாத பெருவாழ்வு எனக்கு வேண்டுவதாகுக.

ஏழைக் குறும்பின் இமையோர் தமக்கிரங்கிப்
பீழைக் கொடுவிடத்தை உண்டளித்த பேராளா
ஆழிப் பெருங்கருணை ஆரமுதே வெற்பீன்ற
மாழைப்பூங் கண்ணி மணாளா அடிபோற்றி. 239

அறியாமையாற் கொடுமையைச் செய்யும் தேவர் தமக்குக் கருணை காட்டிப் பெருந் துன்பத்தைச் செய்யும் கொடிய விடத்தை உண்டு காத்த பெருங்கருணையுடைய தலைவனே! கடல்போலும் பெருங் கருணையே! அரிய அமுதமே! மாவடுவை ஒக்கும் பூப்போலும் கண்களையுடைய காமாட்சிக்கு நாயகனே! திருவடிகள் காக்க.

அகத்தியர் வேண்டுகோள்

ஷை வேறு

என்றென்று பன்முறையுந் துதித்திறைஞ்சித் தாழ்ந்தெழுந்து
நின்றுகரஞ் சிரமுகிழ்ப்ப நிறைந்தபெரு மகிழ்ச்சியுடன்
குன்றனைய பெருந்தவத்தோன் இதுவொன்று கூற்றுதைத்த
மின்றிகழுஞ் சேவடிக்கீழ் விண்ணப்பஞ் செய்கின்றான். 240

என்றென்று வாயாரப் பலமுறையும் துதித்துக் கைகுவித்து வீழ்ந்து வணங்கி நின்று கரங்கள் சென்னிமேற் குவிய நிறைந்த பேருவகையொடும் மல்லல் மலையனைய மாதவத்தோராகிய அகத்தியர் மார்க்கண்டேயர்க்காக இயமனை உதைத்துப் பயங்கெடுத்த திருவடிக்கீழ் வேண்டுகோள் ஒன்றை விடுப்பார்.

அடியனேன் வடகாசி நீத்தகன்று நினக்கினிய
கடிமதில்சூழ் கொடிமாடக் காஞ்சியினைத் தலைப்பட்டுப்
பொடியணிந்த திருமேனிப் புண்ணியமே இமயவரைப்
பிடிமணந்த மதகளிறே பெரும்பேறு பெற்றுய்ந்தேன். 241

'அடியனேன் வடக்கே உள்ள காசியை விட்டுப் பிரிந்து நினக்கு இனியதானமாகிய காப்புடைய மதில் சூழ்ந்த கொடிகள் அசையும் மாடங்களைக் கொண்ட காஞ்சியினைத் தலைக்கூடித், திருநீற்றினைச் சண்ணித்த திருமேனியையுடைய புண்ணியமே! இமயமலையிற் பிறந்த பெண்யானையை மணந்த செருக்குடைய களிறெப்போனே! பெரிய பாக்கியத்தினைப் பெற்றுப் பிழைத்தேன்.

இத்தகுபே றுடையேற்கு மற்றின்னும் ஒருகருத்து
மெய்த்தபெரு வேட்கையினால் ஒழியாது மேன்மேலுஞ்
சித்தமிசை மூண்டெழுமால் அதுநிரம்பச் சிறியேன்பால்
வைத்தபெருங் கருணையினால் வழங்குவாய் எனப்போற்றி. 242

இத்தகு பெருஞ்செல்வம் பெற்ற அடியேனுக்கு மேன்மேலும் ஓர் விருப்பம் நிலைத்த பெருவிருப்பினால் அடங்காது மேலும் மேலும் உள்ளத்தில் பொங்கி எழும் ஆகலின் அக்கருத்து நிறைவு பெறச் சிறியேனிடத்து வைத்த பேரருளினால் நல்குவாய்' எனத் துதிசெய்து,

எவ்வினையும் ஓப்புதலால் திராவிடம்என் றியல்பாடை
எவ்வமறப் புதிதாக யான்வகுப்ப நல்கிஅது
எவ்வருணத் துள்ளார்க்கும் எளிதாகப் புத்தேளிர்
எவ்வெவர்க்கும் சுவைஅமிழ்தின் இனிதாகச் செய்தருளாய். 243

எத்தகு கொடு வினையையும் ஓட்டுந் திறத்தினால் திராவிடம் என்று பேசப்பெறும் இயல்பினையுடைய மொழிக்கு இலக்கணம் யான் துன்பமற எளிதாகப் புதிய முறையின் வகுத்துரைக்க ஆற்றலை வழங்கி அருளாய் தேவர் யாவர்க்கும் வழங்கிய சுவையுடைய அமிழ்தத்தினும் இனிதாகுமாறு அருளுக.

மூன்றுறழ்ந்த பதிற்றெழுத்தான் முழுவதுமாய் உனக்கினிதாய்த்
தோன்றிடும்அத் தமிழ்ப்பாடைத் துதிகொண்டு மகிழ்ந்தருளி
ஆன்றவரம் எல்லார்க்கும் இவ்வரைப்பின் அளித்தருளாய்
என்றெடுத்த மொழிகல்வி எவற்றினுக்கும் இறையோனே. 244

எழுத்துக்களான் முப்பதேயாய் விரிதலான் முழுவதுமாய் உனக்கினிமை பயப்பதாய் விளங்கிடும் இத் தமிழ் மொழியால் செய்யப்படும் துதியைக் கொண் டுவந்தருளி நிரம்பிய வரங்களை யாவர்க்கும் இவ்விடத்தே வழங்கி யருள் வாயாக.

அகத்தியர் தமிழாசிரிய ராதல்

மன்னியஇத் தமிழ்க்கிளவி மந்திரங்கள் கணித்தடியேன்
செந்நெறியின் வழுவாஇத் திருக்காஞ்சி நகர்வரைப்பின்
உன்னனுக்க ளாகிஇனி துறைந்திடவும் பெறவேண்டும்
இன்னவரம் எனக்கருளாய் எம்பெருமான் என்றிரந்தான். 245

எமது பெருமானே! சிறந்த இத்தமிழ்ச் சொல்லால் ஆகிய மந்திரங்களை அடியேன் குறித்தோதிச் செவ்விய நெறியினின்றும் பிறழ விடாத இத்திருக் காஞ்சி நகர எல்லையில் உனக் கருகிருக்கும் தொண்டனாய் இனிதிருக்கவும் அருள வேண்டும். இவ் வரங்களை எனக்கு வழங்குவாய்' என்றிரந்தனர்.

கூம்பியகைத் தலமுடைய குறுமுனிக்குப் பிஞ்ஞகனார்
தாம்பரிந்து தமிழ் விளக்கும் ஆசிரியத் தலைமையொடு
மேம்படுதென் றிசைக்கிறைமை நல்கிவேட் டனபிறவும்
ஆம்பரிசின் அளித்தருளி அவ்விலிங்கத் திடைக்கரந்தார். 246

குவித்த கரத்தினராய அகத்தியர்க்குப் பெருமானார் அருளுற்றுத் தமிழ் இலக்கணத்தை விரிக்கும் ஆசிரியத் தன்மையின் முதன்மையையும், உயர்ச்சி மிகு தென் திசைக்குத் தலைமையையும் வழங்கி விரும்பிய பிறவும் பொருந்திய வகையினால் நல்கி அகத்திய லிங்கத்தே மறைந்தருளினர்.

இவ்வண்ணம் அருள்பெற்ற இருந்தவனும் அகலிடத்தின்
மெய்வண்ண ஒத்துமுறைத் தீந்தமிழை விளக்குவித்துச்
செவ்வண்ணத் திருமேனிப் பெருமானார் திருவடிகள்
அவ்வண்ணந் தொழுதேத்தி நெடுங்காலம் அங்கிருந்தான். 247

இவ்வாறு பேறு பெற்ற பெருந்தவரும் தமிழ் நாட்டில் இனிய தமிழ் இலக்கணத்தை எழுத்து வடிவில் இயல் முறையால் தெளிவுறுத்திச் செம்மேனி எம்மானார் திருவடிகளை முற்கூறிய முறையில் தொழுது பரசி நீண்ட காலம் அங்கிருந்தனர்.

வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி அதற்கிணையாத்
தொடர்புடைய தென்மொழியை உலகமெலாந் தொழுதேத்துங்
குடமுனிக்கு வலியுறுத்தார் கொல்லேற்றுப் பாகரெனிற்
கடல்வரைப்பின் இதன்பெருமை யாவரே கணித்தறிவார். 248

வடமொழியைப் பாணினி முனிவர்க்கு வகைப்படுத்தி அருளி அதற்கு ஒப்பவே செய்யுளுக் கமைந்த தென் மொழியாகிய தமிழை உலகோர் யாவருந் தொழுது துதிக்கும் அகத்தியர்க்குத் தெளியவுணர்த்தினர் விடையூரும் விமல ரென்றால் கடல் சூழ் நிலவுலகில் தமிழினது பெருமையை யாவரே அளவு படுத்தி அறிய வல்லார்.

இருமொழிக்குங் கண்ணுதலார் முதற்குரவர் இயல்வாய்ப்ப
இருமொழியும் வழிப்படுத்தார் முனிவேந்தர் இசைபரப்பும்
இருமொழியும் ஆன்றவரே தழீஇயினார் என்றால்இவ்
இருமொழியும் நிகரென்னும் இதற்கையம் உளதேயோ! 249

வடமொழி தென்மொழி ஆகிய இரு மொழிக்கும் சிவபெருமானாரே முதல் ஆசிரியரெனின், நல்லியல்பு தோன்ற இருமொழியையும் வழக்கு வழிப்படுத்தார் முனிவரசரே எனின், புகழை விரிக்கும்

இரு மொழியையும் அறிவான் நிரம்பியோரே கைக்கொண்டொழுகினர் எனின் இங்ஙனம் ஒப்பச் சிறந்த இருமொழியும் ஒப்பென்னும் இதனுக்கு ஐயம் உண்டு கொல்லோ!

அகத்தியர் பொதிகை யடைந்த வரலாறு

கலி விருத்தம்

இத்தகு தமிழ்ஓதி ஆங்கினி துறைநாளில்
அத்தலை அரனார்தாம் ஆயிழை உமையாளைப்
புத்தணி திகழ்மன்றல் புரிநலம் உளதாக
எத்தலை உறைவோரும் ஈண்டினர் இமயத்தில். 250

இவ் வியல்பினையுடைய தமிழை ஓதியும் ஓதுவித்தும் அங்கிருக்கும் காலத்தில் இமயமலையில் சிவபெருமானார் ஆராய்ந்த அணிகளையுடைய உமையம்மையைப் புத்தழகு விளங்கும் திருமணம் செய்து கொள்ளும் நன்மை உண்டாக யாண்டுள்ளோரும் அவ்விமயத்தே வந்து குழுமினர்.

முனிவொடு வரைதாழ்த்த முனிவனும் அதுநோக்கிப்
பனிவரை தனையுற்றான் பலபல உலகத்தின்
இனிதுறை உயிரெல்லாம் தொகுதலின் இருஞாலத்
தனிமகள் ஒருபக்கம் சாய்ந்தனள் பொறை ஆற்றாள். 251

வெகுண்டு விந்தமலையைத் தாழச் செய்த அகத்திய முனிவரும் அதனை மனங்கொண்டு இமயத்தை எய்தினர். பலப்பல உலகங்களின் விரும்பியுறையும் பலரும் ஒருங்கு கூடினமையால் நிலமகள் சுமை பொறுக்க லாற்றாளாய் ஒரு புடை சாய்ந்தனள்.

தென்புவி மிசைஓங்கித் திகழ்வட புவிதாழப்
பொன்பயில் உலகத்துப் புங்கவர் அதுகாணூஉத்
துன்பொடு பயமெய்தித் துணையடி தொழுதேத்தி
என்பணி வரைமார்பற் கின்னது புகல்கிற்பார். 252

தென்பூமி மிக்குயர்ந்து, விளங்குகின்ற வடதிசை மிக்குத் தாழ்தலின் பொன்னுலகிற் பயிலும் தேவர் அதனைக் கண்டு துன்பமும் பயமும் எய்தி எலும்பை மாலையாக அணிந்துள்ள மலையை ஒக்கும் மார்பினையுடைய பெருமானார் இணையடிகளைத் தொழுது துதித்து விண்ணப்பஞ் செய்வார்.

தாழுறு புவிதன்னைச் சமன்நிலை பெறவைத்துக்
காழுறு தமியேமைக் காப்பது கடனெந்தாய்
ஆழ்கடல் விடமுண்டோய் இல்லெனில் அடியேங்கள்
வாழுலம் இதுபோதே அவல்விழு வதுதிண்ணம். 253

தாழ்தலும் உயர்தலுமாகிய புவியைச் சமனாக நிலைபெறுவித்து மருளும் மனமுடைய துணையிலிகளைக் காத்தல் உனக்குக் கடப்பாடு

ஆகும் எமக்குத் தந்தையே! ஆழமுடைய கடலிற்றோன்றிய விடத்தைப் பருகிக் காத்தோனே! காத்தல் இல்லையெனில் அடியேங்கள் வாழ்கிலே மாய் அழிவேம், இப்பொழுதே பள்ளம் வீழ்வது நிச்சயம் ஆகும்.

வெருவரு செயலோராய் விண்ணவர் இதுகூறத்
திருமுடி அசைவோடுஞ் சினவிடை யவர்சொல்வார்
தருமலர்த் தொடையீர்காள் சனமிக நிறைவுற்று
மருவிய பாரத்தால் தாழ்ந்தது வளர்ஞாலம். 254

அஞ்சுகின்ற செயலினராய்த்தேவர் இவ்வாறு கூறத் திருமுடியை அசைத்துக் கொண்டே விடையூர் விமலர் அருளுவார்: 'கற்பக முதலிய மரங்களின் மலர் மாலையை உடையீர்! சனப் பெருக்கம் நிறைதல் மேலிட்டுக் கூடிய பாரத்தினால் தங்கும் உலகம் தாழ்ந்தது.

ஆதலி னியாமாதல் எம்மொடு நிகராம்ஓர்
மாதவ முனியாதல் தென்றிசை வயின் இன்னே
போதரின் உலையாமே புவிநிலை பெறும்என்னக்
காதர முறுவிண்ணோர் கேட்டனர் கவலுற்றார். 255

'ஆகலின், யாமாயினும் பெருந்தவ வலியால் எம்மையே நிகர்க்கும் ஓர் முனிவராயினும் தென்றிசைக்கு இப்பொழுதே சென்றால் பூமி அழியாமல் சமமாக நிலைபெறும்' என்றருளத், துன்பமிகும் தேவர் கேட்டு மேலும் வருந்தினர். காரணம் அடுத்த பாடலான் விளங்கும்.

மணவினை நிகழ்காலை மதிமுடி யுடையார்அங்
கணைவது தகுமோவே றவரொடு நிகர்வார்யார்
இணையிலி முழுதிற்கும் இறையவன் எவராலும்
உணர்வரு முதல்என்றே ஒலிடும் மறையெல்லாம். 256

திருமணம் நிகழ இருக்கையில் பிறையை முடித்த பெருமானார் தென் திசையை அடைய வேண்டுவது தக்கதோ? அப்பிரானொடும் ஒப்பவர் வேறு யாவருளர்? தனக்குவமையில்லாதான் என்றும், சரம் அசரங்களாகிய முழுதிற்கும் இறையவன் என்றும், யாவராலும் உணர அரிய முதல்வன் என்றும் மறைகள் யாவும் மிக முழங்கும்.

என்றிவை பலஎண்ணி இணையடி தொழுதேத்தி
அன்றினர் புரமூன்றும் நீற்றிய அடிகேள்இம்
மன்றலின் நீசேறல் எவ்வணம் உனைநேரா
கின்றவர் உளரென்று கேட்டிலம் எங்கெங்கும். 257

என்ற இவைபோல்வன பலவும் எண்ணித் திருவடிகளிற் பணிந்து போற்றி, "பகைவருடைய முப்புரங்களையும் நீறு படுத்திய அடிகேளே! இத் திருமணத்தில் நீவிர் அங்குச் செல்லுதல் எங்ஙனம் அமையும். உம்மை ஒப்பவர் ஒருவர் உளர் என்று மறைகளில் யாண்டும் கூறக் கேட்டிலேம்.

என்னலும் அனல்அங்கை ஏற்றவர் இமையீர்நீர்
சொன்னது மெய்யேஇத் தொல்லுல கினில்எம்மை
அன்னவர் இலேகண்டீர் குறுமுனி அலதென்னுப்
பன்னிய மொழிகேளாப் பண்ணவர் களிகூர்ந்து. 258

என்று கூறிய அளவிலே அகங்கையில் நெருப்பை ஏற்ற பிரானுர், "இமையா நாட்டம் உடையீர்! நீவிர் கூறியது உண்மையே. இம் மூதுலகில் எம்மை ஒத்தவர் அகத்திய முனிவரன்றிப் பிறர் ஒருவரும் இலர் என்றறிதிர் என்றருளிய பெருமையைக் கேட்டுத் தேவர் மகிழ்ச் மிகுந்து,

மங்கல வினைசான்ற வதுவைசெய் அமையத்தின்
எங்களை உடையாய்நீ ஏகுவ தமையாதே
அங்கினி அணைகிற்பான் தமிழ்தெரி அறவோற்குச்
சங்கர விடைநல்கத் தகுமென உரைசெய்தார். 259

"எங்களை அடிமையாக உடையோனே! மங்கலச் சடங்குகள் அமைந்த திருமணங் கொள்ளுங் காலத்தில் நீ செல்லுதல் சாலாதே, சங்கரனே! இப்பொழுது அங்குப் போம்படி தமிழை ஆராய்ந்த அறவோராகிய அகத்தியர்க்கு விடை கொடுத்தல் பொருந்து" மெனக் கூறினர்.

கடல்விடம் அமுதாக்குங் கறைமிட றுடையாருங்
குடமுனி தனைஅங்கண் கூயினர் எதிர்நோக்கிப்
படரொளி இளமூரல் பனிமுக மலர்காட்டித்
தொடர்புடை விழிகாட்டுங் கருணையின் இதுசொல்வார். 260

விடத்தை அமுது செய்த திருநீலகண்டரும் கும்ப முனிவரரை அங்குக் கூவி அழைத்து எதிருற நோக்கிப் படர்கின்ற ஒளியுடைய புன்முறுவலையும், குளிர்ந்த முக மலர்ச்சியையும் அருளி, அவற்ருெடு தொடர்புடைய திருவிழிகளின் ஒழுகும் கருணையொடும் கீழ்வருமாறு கூறுவார்.

புத்தெழில் பெறுவிந்தம் புரிதரும் இடர்மாற்றி
முத்தமிழ் முனிவாமுன் மூச்சக முழுதுய்ய
வைத்தனை இதுபோதுஞ் சந்தன வரைநண்ணி
இத்தரை சமமாகப் புரிமதி கடிதென்ருர். 261

"முத்தமிழையும் முற்ற உணர்ந்த முனிவனே! முற் காலத்தில் மூவுலகமும் முற்றவும் பிழைக்குமாறு அருள்செய்து விந்த மலையின் செருக்கை அடக்கிக் காத்தனை. இப்பொழுதும் பொதிகை மலையை நண்ணி இருந்து இவ்வுலகைச் சமநிலையாம்படி விரைந்து செய்" என்று அருளினர். நண்ணிய இப்பொழுதும் உதவ முன்னதை நினைவுறுத்தினர், இருந்த துணையானே சமமாம் என அருளினர்.

இருள்பொதி மணிகண்டர் அடிதொழு திருமுந்நீர்
பருகிய முனிவேந்தன் பையுளின் உரைசெய்வான்
அருள்பெறும் அடியார்கட் கவரினும் இனியானே
கருணையின் நிறைவேயான் கழிவது முறையேயோ. 262

பெரிய கடல் நீரைப் பருகிய முனிவ ரரசு வருத்தத்தொடும் இருள் பொதிந்த திருநீலகண்டர் திருவடிகளைத் தொழுது கூறுவர்; அருளைப் பெறும் அடியவர்கட் கவர் தம்மினும் இனியானே! கருணையின் சால்பே! யான் அகலுதல் தகவேயோ.

"என்னினும் இனியான் ஒருவன்" (திருநாவுக்கரசர்.)

மருவினர் பிரியொண்ணுய் மற்றிவ ரெல்லாம்நின்
திருமண நிறைகோலங் காண்டகு திறல்பெற்றூர்
பெருமண நடுவேநீ பிரிகென எனைநீப்ப
இருளுறு கொடியேன்இங் கெப்பிழை செய்தேனே. 263

மருவினர் பிரியொண்ணுய்! இவர் யாவரும் நினது நிறைந்த திருமணக் கோலத்தைக் காணத்தகும் பேற்றினைப் பெற்றனர். பெரிய மண நிகழ்ச்சியில் நீ பிரிக என என்னை நீக்குமாறு அறியாமை மிகு தீவினையேன் இவ்விடத் தெப்பிழையைப் புரிந்தேனே!

பிரியாமையை வேண்டுவார் 'மருவினர் பிரியொண்ணுய்' என்றனர்.

துணைவிய ரொடுவானத் தொல்லுலை குடையாரும்
பணமணி மணிநாகர் பாரிடர் முனிவோரும்
மணவணி தொழுதுய்வான் இன்னமும் வருகின்றூர்
அணவுறு தமியேனைத் தள்ளுவ தழகேயோ. 264

விண்ணவரும், படத்திற்பொருந்திய மாணிக்கம் உடைய நாகரும், பூதகணங்களும், முனிவரரும் தத்தம் வாழ்க்கைத் துணைவியரொடும் மணக்கோலத்தைத் தரிசித் துய்யும் பொருட்டு மேலும் வருகின்றனர். நெருங்கிய வேறூர் பற்றிலேனைத் தள்ளுதல் நன்றேயோ!

விரைசெலல் முனிவோர்கள் விரைகெழு சுனைதோய்வார்
அரசிலை குசைமற்றும் அன்புடன் எதிர்உய்ப்பார்
கரகமும் இழைசூழ்வார் அவரொடு களியாமே
தெருமர அடியேனைத் தள்ளுதல் சீரேயோ. 265

விரைந்து செல்லுதலையுடைய ஐம்புலன்களை வென்ற முனிவோர்கள் மணங் கமழும் சுனைகளில் மூழ்குவார். அரசிலையையும், தருப்பையையும் பிறவற்றையும் அன்பொடும் கொண்டு வருவார், கலசங்களுக்கு நூல் சுற்றுவார், அவரொடும் கூடி மகிழ்ந்து தொண்டு செய்யாமே மனம் வருந்த அடியேனைத் தள்ளுதல் சிறப்பேயோ!

பாடுவர் சிலர்அன்பர் பரவுவர் சிலர்அன்பர்
ஆடுவர் சிலர்அன்பர் அழுகுவர் சிலர் அன்பர்
ஓடுவர் சிலர்அன்பர் உவரொடு மகிழாமே
வாடுற அடியேனைத் தள்ளுதல் மரபேயோ. 266

பாடுவார் சிலரும், துதி செய்வார் சிலரும், ஆடுவார் சிலரும், அழுவார் சிலரும், ஓடுவார் சிலரும் ஆம் மெய்யன்பரொடும் கூடி மகிழாமே வாட்டமுறும்படி அடியேனைத் தள்ளுதல் வழக்கேயோ!

ஒளிமணி மழைதூர்ப்பார் ஒண்மலர் மழைதூர்ப்பார்
புளகமும் உடல்போர்ப்பார் புகழ்பல திசைபோர்ப்பார்
அளவறு மகிழ்கூர்ப்பார் அவரொடு கலவாமே
தளர்வுற அடியேனைத் தள்ளுவ தருளேயோ. 267

ஒளியுடைய நவமணிகளையும் மழையை ஒப்பச் சொரிவார்; விளக்கமுடைய மலர்களை மழைபோல வீசுவார்; மெய்யெலாம் மயிர் சிலிர்ப்பார்; புகழ்ச்சியை எண்டிசையினும் விரிப்பார்; எல்லையில்லாத மகிழ்ச்சிமீக்கூர்வார்; இங்ஙனம் மெய்யன்பராம் அவரொடும் கூடிச் செயற்படாமே வாட அடியேனை விலக்குதல் அருளின் வண்ணமோ!

கண்டனம் மண இன்பங் காமுறு வினையெல்லாம்
விண்டனம் உலவாத மேதகு சிவபோகம்
கொண்டனம் என ஆர்ப்பார் அவரொடு குலவாமே
தொண்டற அடியேனைத் தள்ளுதல் சூழ்வேயோ. 268

'கண்டனுபவித்தோம் மணவினை இன்பத்தை; திண்மைமிக்க தீவினை முற்றவும் விடுத்தனம்; கெடாத மேன்மையுடைய சிவபோகத்தைக் கைக் கொண்டோம்; என் றுரவாரிப்பார் அவர்தம்முடன் கூடி இன்புறுமே பணிகெடும்படி அடியேனைப் போக்குதல் திருவுள்ளக் குறிப்பேயோ!

குழல்அவிழ் வதும்ஓரார் குழைவிழு வதும் ஓரார்
இழைசரி வதும்ஓரார் எதிர்எதிர் மடமாதர்
மொழியும்மங் கலவோதை இருசெவி முகவாமே
கழிவுற அடியேனைத் தள்ளுதல் கடனேயோ. 269

கூந்தல் நிலைகுலைதலையும் மனங்கொள்ளார்; காதணி கழன்று வீழ்தலையும் காணார்; அணிகள் பிறழ்வனவற்றையும்சிந்தியார்; எதிர் எதிராக மடமகளிர் கூறும் மங்கலப் பாட்டிசைகளை இருகாதுகளானும் முகந்து பருகாமல் கழிந்து போக அடியேனைத் தள்ளுதல் கடப்பாடோ!

முனிவரர் கணநாதர் அயன்அரி முதலானோர்
பனிஅறு கணிகாலைப் பேரிசை படமுன்பின்
எனஎழு நிறைபூசல் கண்டினி துவவாதே
மனமடி வுறஎன்னைத் தள்ளுதல் மாண்பேயோ. 270

முனிவரரும், கணநாதரும், பிரமன்திருமால் முதலாஞேரும் குளிர்ச்சியுடைய அறுகினை மணமக்கட்கு அணியும் பொழுது பேரொலி எழுமாறு 'யாம்முன்னே நீவிர்பின்னே' என எழும் நிறைந்த மாறுபடும் உரையைக்கேட்டினிது மகிழாமே மனந் தளருமாறு அடியேனை அகற்று தல் பண்பேயோ!

மணமக்கட்கு அறுகணிதல்; 'அறுகெடுப்பார் அயனும் அரியும் அன்றி மற்றிந்திரனோடமரர் நறுமுறு தேவர்கணங்களெல்லாம் நம்மிற் பின்பல்ல தெடுக்க வொட்டோம், செறிவுடை மும்மதி லெய்தவில்லி திருவேகம்பன் செம்பொற் கோயில்பாடி, முறுவற் செவ்வாயினீர் முக்கணப்பற் காடப்பொற் சுண்ணம் இடித்தும்நாமே, (திருவாசகம்), (நறுமுறு—மொறுமொறுக்கின்ற—முணுமுணுக்கின்ற) எனவும்,

'ஒருபதி ஞயிரம் திருநெடு நாமமும், உரிமையிற் பாடித் திருமணப் பந்தருள், அமரர் முன்புகுந் தறுகு சாத்திநின், தமர்பெயர் எழுதிய வரிநெடும் புத்தகத், தென்னையும் எழுத வேண்டுவல்' (கோயில் நான்மணிமாலை)எனவும் வருவனகாண்க.

மண்டில மணிவேதி குண்டமும் மலிவித்திங்
கெண்டிசை புகைவிம்ம எரியிடை இழுதூற்றித்
தண்டிரள் பொரிஅட்டுந் தகவது காணுமே
விண்டிட அடியேனைத் தள்ளுதல் விழைவேயோ. 271

குண்ட மண்டில வேதிகைகளை வகுத்து எட்டுத்திசைகளிலும் புகை பொங்கிப் பரவ வேள்வித் தீயில் நெய்யைப் பொழிந்து நெற் பொரியைச் சொரியும் இனிய காட்சியைக் காணுமே நீங்குமாறு அடி யேனை விலக்குதல் விருப்புடையதோ!

ஒழுகொளி மணிவேய்ந்த கரகம துறுபால்மை
விழிமனை யவள்வார்ப்ப வெற்பிறை நினதாள்கள்
கழுவினன் மலர்தூவி வழிபடல் காணுமே
அழிவுற அடியேனைத் தள்ளுதல் அறனேயோ. 272

படர்கின்ற ஒளியுடைய மணிகள் பதித்த பொற்கரத்தில் உள்ள பாலை மையுண்டகண்ணினையுடைய மேனுதேவி ஒழுகவிட மலையரையன் தேவரீருடைய திருவடிகளைக் கழுவினனுய் மலர்களைத் தூவி அருச்சனை புரிதலைக் காணுமல் மெலிவுறும்படி அடியேனைப் புறம்போக்கல் அறச் செயல் ஆமோ!

காரொடு நிகர்கூந்தற் கன்னியை மலைவேந்தன்
நீரொடு நின்கையில் உதவிடு நிறைகோலம்
ஆரொடு மதிவேய்ந்த அங்கண காணுமே
பேரிடர் உறஎன்னைத் தள்ளுதல் பெட்பேயோ. 273

ஆத்திமாலையையும், பிறையையும் அணிந்த அங்கணனே! மேகம் போலும் கரிய கூந்தலையுடைய இமயமன்னன் நீரைச்சொரிந்து உமையம்மையைக் கையிற் கொடுக்கும் நிறைந்த காட்சியைக் காணாமல் பெருந்துன்பம் எய்த அடியேனை விலக்குதல் விரும்பத் தக்கதோ!

*ஒருவர்முன அணிசாந்தம் ஒருவர்தம் முதுகப்பப்*
*பருவிலை மணிஆரம் பட்டிடல் வடுவாக*
*நிரல்பட மிடைகுற்றார் தொழுநிலை காணாமே*
*பருவர அடியேனைத் தள்ளுதல் பண்பேயோ.* 274

நெருக்கத்தால் ஒருவர் மார்பிலணிந்த சந்தனம் முன்னிற்கும் ஒருவர் முதுகில் பூசப்பெறவும், மிக்க விலையுடைய மணிமாலை இறுக்கத்தால் இருவர் மேனியிலும் வடுப் படுத்தவும் வரிசையாகச்செறிவுற்றவர் தொழும் அந்நிலையைக் காணாமல் துன்புற அடியேனைச் செலுத்துதல் பாங்குடையதோ!

*குடையொடு குடைதாக்கக் கொடியொடு கொடிதாக்கப்*
*படையொடு படை தாக்கப் பண்ணவர் குழுவோடும்*
*விடைமிசை வருகோலம் விழிஎதிர் காணாமே*
*கடைபட அடியேனைத் தள்ளுதல் கவினேயோ.* 275

குடையோடு குடையும், கொடியோடு கொடியும் படையொடு படையும் மோதும்படி கடவுளர் குழாத் தொடும் விடைமேல் எழுந்தருளும் திருவுலாக் காட்சியைக் கண்ணெதிர் காணாமல் கடையேனாக அடியேனைக் கழித்தல் அழகிதேயோ!

*வாரண நிரைசூழ வாம்பரி நிரைசூழத்*
*தேரணி நிரைசூழத் தேவர்கள் புடைசூழ*
*ஏரணி நகர்சூழும் நினதெழில் காணாமே*
*ஆரஞர் உறஎன்னைத் தள்ளுதல் அமைவேயோ.* 276

அணிவகுத்து யானைகள் செல்லவும், தாவும் குதிரைகள் வரிசையாகச் சூழ்ந்துசெல்லவும், தேர்வரிசைகள் சூழவும், தேவர்கள் மருங்கு சூழவும் மிக்க அழகிய நகரை வலம் வரும் நினதழகைக் காணாமல் பொறுத்தற்கரிய துன்பப்பட அடியேனைத் தள்ளுதல் பொருந்துவதேயோ!

*தொடிபல நிலம்வீழத் துணைமுலை நனிவிம்மக்*
*கடிபடு குழல்சோரக் கன்னியர் மயல்கூரும்*
*படிமறு கிடைநண்ணும் புத்தெழில் பாராமே*
*மிடியுற அடியேனைத் தள்ளுதல் விதியேயோ.* 277

வளைகள் பலவும் நெகிழ்ந்து நிலத்தில் விழவும், ஒத்த இரு கொங்கைகளும் பெரிதும் வீங்கவும், மணம்கமழும் கூந்தல் நெகிழவும்

கன்னிப் பெண்கள் காதல் மயக்கம் மிகும்படி திருவீதியில் எழுந்தருளும் மணக்கோலத்தால் ஆம் புத்தழகை நோக்காமே வெறுவியேனுக அடியேனைத் தள்ளுதல் ஊழேயோ!

மரகத வடிவாளும் மழவிடை அனையாயும்
ஒருமணி யணையும்பர் இனிதுறை உயர்கோலம்
இருவிழி களிகூரப் பருகுவ தில்லாமே
பரிவுற அடியேனைத் தள்ளுதல் பாங்கேயோ. 278

மரகத நிறமுடைய அம்மையும் இள ஏறுபோலும் நீயும் ஒப்பற்ற மணியிஞ லமைந்த தவிசின்மேல்இனிதிருக்கும் ஆன்மாக்கள் உயர்தற்கு ஏதுவாகிய திருமணக்கோலத்தை நோக்கி இருவிழிகளும் களிப்புமிகப் பருகாதவாறு வருந்துமாறு அடியேனைத் தள்ளுதல் பண்பேயோ!

வந்தனர் மணஞாட்பின் மலரடி தொழுவார்க்குத்
தந்திடும் அருள்நோக்கம் தமியனும் உடன்நின்று
சிந்தையின் மகிழ்வெய்தப் பெறுவது செய்யாமே
நைந்திட அடியேனைத் தள்ளுதல் நலமேயோ. 279

திருமணக் குழாத்துள் வந்து மலரொக்கும் திருவடிகளை வணங்குவார்க்கு வழங்கும் திருவருட் பார்வையைத் தனியனும் அவருடன் கூடியிருந்து சிந்தை களிப் பெய்தப் பெருமே வருந்திட அடியேனைத் தள்ளுதல் நலமேயோ!

அன்றியும் உயர்காஞ்சிப் பதியினில் அடியேற்கு
மன்றநின் அணிமைக்கண் வைகிட வரமீந்தாய்
இன்றது தனைமாற்றி எழில்வளர் பொதியத்திற்
சென்றினி துறைநீஎன் றருளிய செயல்என்னே. 280

மேலும், உயர்ந்த காஞ்சிமாநகரில் நின்னருகில் அறுதியாகத் தங்கிட அடியேனுக்கு வரமளித்தனை. இப்பொழுது அதனை மாற்றி அழகுடைய பொதிகை மலையில் சென்று இனிது தங்குக நீ என்றருளிய ஆணை என்னேயோ!

என்னையும் உடையாய்நின் திருவருள் இதுவோஎன்
றின்னன பலபன்னி இருவிழி புனல்வார
அங்கிலை நனிஏங்கி அழுதழு தயர்வெய்தும்
தன்னிகர் தமிழ்வாய்மைத் தலைவனை எதிர்நோக்கி. 281

என்னையும் அடிமையாக உடையவனே! நின் திருவருள் வெளிப்பாடு என்னளவில் இவ்வளவேயோ!' என்றிவைபோல்வன பலவும் பன்முறை பெரிதும் இரங்கி அழுதழுது தளர்ச்சியடையும் தன்னையே தனக்கு ஒப்பாகிய தமிழ்க்கு உண்மைத்தலைவராகிய அகத்தியரை எதிர் நோக்கி,

அறுசீரடி யாசிரிய விருத்தம்

சுவலிற்றாழ் குதம்பைக் காதிற் சுந்தரர் அருளிச் செய்வார்
அவலித்தல் வேண்டா கேட்டி அருந்தவக் கிழவ ஞாலம்
செவிலித்தாய் என்ன ஓம்பும் தீம்புனற் கன்னி நாட்டில்
தவலிற்றீர் வேறு காஞ்சி சமைத்தும்உன் பொருட்டு மாதோ. 282

தோள்மேல் தோயுமாறுள்ள கடிப்பிணையை அணிந்த காது களையுடைய அழகர் அருள்செய்வார் 'அரிய தவத்திற்கு உரியோனே! துன்புறுதல் வேண்டா. கேட்பாயாக. உலகுயிர்களைச் செவிலித்தாய் (வளர்க்கும்தாய்) போல ஊட்டி வளர்க்கும் இனிய நீர் பெருகும் பாண்டிய நாட்டில் அழிவில்லாத வேறோர் காஞ்சியை உன்பொருட்டுப் படைப்போம்,'

அத்தலைக் காஞ்சி யூரும் எமக்குமிக் கினிதாம் அங்கண்
இத்தகு சிறப்பு வாய்ப்ப யாம்புனை வதுவைக் கோலம்
உத்தமக் கிழத்தியோடும் உனக்கெதிர் காட்டுகின்றும்
மெய்த்தபேரு வகை பூப்ப விழியுறக் காண்டி மற்றும். 283

'அவ்விடத்துள்ள காஞ்சி மாநகரும் எமக்குப் பெரிதாகும். இத்துணை உயர்வும் விளங்க யாம் இங்கு மேற்கொள்ளும் திருமணக் கோலத்தை உத்தம வாழ்க்கைத் துணைவியாகிய உலோபா முத்திரைக்கும் உனக்கும் எதிர்காட்டுவோம். பெருமகிழ்ச்சி உண்மையே மலரக் கண்க ளாரக் காணுதி, மேலும்.'

கருதிநீ வரங்கள் பெற்ற வடநகர்க் காஞ்சி மாட்டும்
வருமுறை யாண்டு தோறும் பங்குனித் திருநாள் மல்கத்
திருவிழா முடிவின் மன்றற் செய்கையும் எமக்குண் டாக
அருள்புரிந் திடுதுங் கண்டாய் அறிவநீ மகிழு மாற்றால். 284

'நீ எண்ணிய வரங்கள் பெறற்கு இடனாகிய தொண்டை நாட்டுக் காஞ்சி நகரினும் வருகின்ற முறைமையை யுடைய வருடந்தோறும் பங்குனித் திருநாள் சிறக்கத் திருவிழா நிகழ்ந் ததன் முடிவில் உத்திர நாளில் திருமண நிகழ்ச்சியும் எமக்குண்டாவ தாக! அறிஞனே! நீ மகிழும் வகையால் அருளுதும் காண்பாயாக.'

என்றிவை உலக மெல்லாம் உய்யுமா றியம்பி வேளை
வென்றவர் தழுவித் தேற்றி விடைகொடுத் தருளப் பெற்று
வன்றிறல் முனிவர் கோமான் மகிழ்ந்தடி வணங்கிப் போந்து
தன்றுணைக் கிழத்தி யோடுஞ் சையமால் வரையைச் சார்ந்தான்.

என் றிவற்றை ஆன்மாக்கள் கடைத்தேறுமாறு காமனைக் காய்ந்தவர் கூறித் தழுவித் தெளிவித்துச் செல்ல விடுப்ப அகத்தியர் உலோபா முத்திரையுடன் அருள் பெற்று வணங்கிக் காவிரி உற்பத்தி யாகும் சையமலையைச் சார்ந்தனர்.

ஷை வேறு

சலம்ப டைத்தவா தாவிவில் வலன்றனைச் சவட்டிய பெரு நோன்பின், வலம்ப டைத்தவன் அவ்வரை அணுகலும் மறிதிரைக் கடலாடை, நிலம்ப டைத்தது தொன்னிலை யாவரும் நிறைபெருங் களிகூர்ந்தார், நலம்ப டைத்தசீர் உறுவனும் ஆயிடை வதிந்து- தென் மலைநண்ணி. 286

வஞ்சமுடைய வில்வலன் வாதாவி (அசமுகி மக்கள்)யை அழித்த பெரிய விரதங்களான் வலிமை பெற்ற அகத்தியர் அச் சைய மலையைச் சேர்ந்த அளவே உலகம் பழைய சம நிலையை எய்தியது. யாவரும் பெருங்களி கூர்ந்தனர். நலமுடைய சிறப்பமைந்த முனிவரும் அங்கு வதிந்து பின்பு பொதிகை மலையை நண்ணி.

தெனது காஞ்சியும் உத்தர காஞ்சியும் நித்தலும் சென்- றேத்திப், பினக பாணியார் திருமணங் கண்ணுறப் பெற்றுளங் களிப்பெய்தித், தனது பத்தியால் அணிபெறத் தொடுத்திடுஞ் செந்தமிழ்ப் பாமாலை, மனதி யாலுணர் வரியவர் இணையடி மலர்- மிசைப் பலசாத்தி. 287

பாண்டிய நாட்டுக் காஞ்சியையும், தொண்டை நாட்டுக் காஞ்சியையும் நாடொறும் சென்று தொழுது துதித்துப் பினகம் என்னும் வில்லைத் திருக்கைய ராகிய சிவபெருமானார் திருமணத்தைக் கண்டு உள்ளம் களிப்பு மிக்குத் தனது மெய்யன்பால் அழகு பெறத் தொடுக்கப்படும் செந்தமிழ்ப் பாமாலைகளை மன முதலியவற்றைக் கடந்தவர் துணையடி மலர்கள்மேல் பலவாகச் சாத்தி,

தென்றற் பிள்ளையை வயிறுளைந் தீன்றுதீம் பொருநைநீர் குளிப்பாட்டி, மன்றற் சந்தனப் பொதும்பரின் தமிழொடு வளர்த்துமென் மெலஞால, முன்றிற் பால்விளை யாடவிட் டமர்முது மலயவெற் பினுஞ்சையக், குன்றத் தும்அகத் தீசத்தும் முறைமுறை குலவிவீற் றிருக்கின்றான். 288

தென்றலாகிய குழவியை வயிறு நொந்து பயந்து தாமிர வன்னியின் இனிய நீரில் முழுக்காட்டி மணம் கமழும் சந்தனச் சோலை யில் இனிமையோடும் வளர்த்துப் பையப் பைய உலகமாகிய முற்றத்தில் விளையாட விடுத்து விரும்பு பொதிகை மலையினும் சைய மலையினும், அகத்தீசத்தினும் முறையாகச் சென்று சென்று விளங்கி வீற்றிருக் கின்றனர்.

இன்ன தாம்அகத் தீச்சரம் வந்தவா றிவ்விடைப் பணிந்- தேத்தி, அன்னம் அன்னவள் மண்டபம் மாளிகை அங்கணம் ஆங்காங்குத், துன்று வந்திகர் கனுதிபர் வாயில்காப் புடையவர் தொழப்போந்து, மன்னு மாமுதல் இடவயின் மத்தள மாதவேச் சரங்கண்டாள். 289

அகத்தீசம் வந்த வரலா றிதுவாகும். இங்குப் பணிந்து போற்றி அன்னத்தை ஒத்தவர் மண்டபம் திருமாளிகை, திருமுற்றம் ஆகிய இவ்விடங்களில் துதி செய்வோர், கணத்தலைவர், வாயிற் காவலர் முதலோர் வணங்குமா றெழுந்தருளி நிலைபெறும் மாவடி முதல்வர்க்கு இப்பக்கத்தே மத்தள மாத வேச்சரத்தைக் கண்ணுற்றனர்.

என் றி யம்பிய சூதனைப் பழிச்சினர் இறும்புசூழ் வடமேருக்
குன் ற வார்சிலை வாங்கிய மதனுடைக் குழகனு ரடிப்போதில்
ஒன் று சிந்தையோய் மத்தள மாதவேச் சரத்தியல் உரையென்ன
வென் ற மாதவர் வினவுதலும் ஆங்கவன் மேவர விரிக்கின்றான். 290

என் றியம்பிய சூத புராணிகரை முனிவரர் துதி செய்து குறுங்காடு சூழ்ந்த மேரு மலையை வில்லாக வளைத்த வலியுடைய மூவாதவர் அடிமலரில் கலந்த சிந்தையீர்! மத்தளமாதவேசர் வரலாற்றை விரிப்பீர்! என்று ஐம்புலக்குறும்பை வென்ற பெருந்தவர் வேண்டலும் அப்புராணிகர் பொருந்த விரிக்கின்றனர்.

மத்தள மாதவேச்சர வரலாறு

விரைப்ப சுந்துழாய் மணிமுடிப் புங்கவன் வீங்குநீர்க் கலிக்-
கச்சி, வரைப்பின் விண்டுவீச் சரக்குறி நிறீஇத்தொழும் பேற்றி-
னுன் மறைநான் கும், இரைப்ப வார்பொழிற் புலிநகர்ப் பொதியி-
லில் எடுத்ததாண் டவங்காணூஉ, உரைப்ப ரும்பெறற் படகம்அங்
கெழுப்பிடப் பெற்றபின் உவப்பாலே. 291

மணம் வீசும் பசிய துளவமாலையை மணிமுடியில் தரித்த திருமால் பெரு நீரின் ஒலியையுடைய கச்சித் திருவேகம்பத்தில் விண்டு விச்சரச் சிவலிங்கம் நிறுவித் தொழும் பாக்கியத்தால் நான்கு மறைகளும் துதி செய்யப் புலியூராகிய சிதம்பரத்திற் பொன்னம்பலத்தின்கண்ணே மேற்கொண்ட திருநடனத்தைக் கண்டு படகம் முழக்கிடப் பெற்ற பின்னர் மகிழ்ச்சியால்,

அடிய ளந்தவன் கறைமிடற்றடிகளை ஆனந்தக்
கூத்தாடல், முடிவில் ஏத்தெடுத் தடியனேன் மத்தளம் முழக்கவும்
பெறவேண்டும், படியி லாப்பெருங் கருணையஞ் சலதியே
பணித்தருள் எனப்போற்ற, வடிநெடும்படைக் கழுக்கடை ஏந்திய
வள்ளலார் அருள்செய்வார். 292

அடியால் மூவுலகையும் அளந்தவர் திருநீலகண்டப் பிரானுரைப் பேரின்பக் கூத்தின் முடிவில் துதி செய்து அடியேன் மத்தளம் முழக்குதலும் செய்யவேண்டும் ஒப்பில்லாத பெருங்கருணை மாகடலே! அருள்புரிக' எனத் துதி செய்யச் சூலபாணி வள்ளலார் அருள்வார்.

இவ்வரைப்பிடை நித்தலும் படகம்நீ எழுப்பிட வரம்பெற்-றாய், செவ்வி மத்தளம் முழக்கவும் விழைதியேல் செப்புறும் இதுகேட்டி. அவ்வியத்தொகை அறஎறிந் துயரிய ஆன்றவர் குழுப்போற்றும், கௌவையய்புனற் காஞ்சியை முன்புபோற் கதுமெனச் சென்றெய்தி. 293

'இங்கு நாடொறும் படகம் முழக்குதற்கு வரம் பெற்றனை, இனிய மத்தளமும் முழக்க விரும்புவை ஆயின், கூறும் இதனைக்கேள்; காமக் குரோதக் குழாத்தை வேரொடும் களைந்து சிறந்த சான்றோர் குழாம் பாராட்டும் ஒலியுடைய நீர் தழுவிய காஞ்சியை முன்பு போல விரைந்தடைந்து,

அங்கண் மத்தள மாதவேச் சரனென அருட்குறி நிறீஇப்-போற்றிப், பொங்கும் அன்பினால் விதியுளி அருச்சனை புரிகுதி மற்றாங்கே, துங்கம் நீடிய பரவெளிப் பிலத்தயற் சூழலின் எஞ்-ஞான்றும், தங்கு காப்புடை நடமெனப் பெயரிய தாண்டவம் புரிகின்றேம். 294

அங்கு மத்தள மாதவேசர் எனப் பெயரிய சிவலிங்கம் பிரதிட்டை செய்து அருச்சனை அன்பொடும் விதிப்படி போற்றுவாய். அவ்விடத்தே உயர்வு மிக்க அருள் வெளியாகிய பிலாகாசத்தினை அடுத்த வைப்பிலே எக்காலத்தும் காப்புப் பொருந்திய தாண்டவத்தைப் புரிகின்றோம்.

செல்வம் மல்கும்இத் தில்லைநீள் வனத்திடைத் திருச்சிற்றம் பலம்ஒன்றே, சொல்லி றந்தொளிர் பரவெளி எனப்படும் சுரிவளைக் குலம்ஆர்க்கும், மல்லல் நீர்த்தடம் புறம்பணை வேலிசூழ் வளம்பொழில் திருக்காஞ்சி, எல்லை யுட்படு வரைப்பகம் முழு-வதும் பரவெளி எனத்தேறாய். 295

செல்வம் பல்கும் இத்தில்லை மரங்களையுடைய காட்டகத்தே திருச்சிற்றம்பலம் (நுண்வெளி) ஒன்றுதானே வாக்கினைக் கடந்து மிளிரும் அருள்வெளி எனப்படும். சுரிந்த சங்குகள் முழங்கும் வளமுடைய நீர் நிலைகளும், வயல்களும், சோலைகளும் புடை யுடுத்த திருக் காஞ்சி வரைப்பிடம் முழுவதும் பரவெளி எனத் தெளிதி.

ஆதி அந்தமும் இல்லதோர் மெய்யறி வானந்த நிறைவாகுஞ், சோதி நந்தமைத் தம்மனக் குகையினுந் தொழுபவர் கருத்தீமை, காது காஞ்சியாம் பரவெளித் தலத்தினுங் காண்டகப் பெறுவோரே, ஓதி முற்றுணர் உறுவரும் பெறலரும் வீட்டினை உறுவாரால். 296

ஆதியும் அந்தமும் இல்லாத தாகிய சச்சிதானந்தம் நிறைவுறும் சோதியாகிய நம்மை அகத்துத் தம்மனமாகிய குகையினும் கண்டு வணங்கிப் புறத்தில் தொழுபவர்தம் பிறவியாகிய தீங்கினை அழிக்கின்ற காஞ்சியாகும் பரவெளியிடத்தும் காணத்தக்க பேற்றினரே மறைகளை ஓதி முற்றவும் உணர்ந்த முனிவரரும் தேவரும் பெறற்கரிய வீட்டினைத் தலைப்படுவார்.

*வன்னி யிற்படு பொருள்கள் அக் கணந்தனில் வன்னியாம் அதுபோல, என்ன ராயினும் பரவெளிக் காஞ்சியின் எய்திஎம் இயல்பாவார், அன்ன தன்மையால் அத்தலத் திறந்தவர்க் கழற்-சடன் கழிப்போரைத், தன்னு சூதகந் தொடக்குறு கிழிஞரைத் தீண்டினுந் தொடக்கில்லை.* 297

நெருப்பிற் பட்ட பொருள்கள் அப்பொழுதே நெருப்பாம்; அது போல யாவரே யாயினும் பர வெளியாகிய காஞ்சியினை எய்தின் எம் நிலையை அடைவார். ஆகலின் அக்காஞ்சியில் ஈமக்கடன் (தகனக் கிரியை) முடிப்போரைப் பற்றுகின்ற சூதகக் குற்றம் பற்றுறாது; கீழ்மக் களைத் தீண்டினும் அக்குற்றம் இல்லையாகும்.

*பாப்புப் பாயலோய் இத்தகைச் சிறப்புடைப் பதிவயின் எமைப்போற்றின், காப்புத் தாண்டவம் ஆயிடைக் காட்டுதும் அந்நடந் தனக்கேற்பக், கோப்புச் சீரமை மத்தளம் முழக்குவா யாகெனக் கொடும்பாச, நீப்புச் செய்தெமை ஆளுடை அண்ண லார் நிகழ்த்திய மொழிகேட்டு.* 298

ஆதிசேடனாகிய படுக்கையை உடையோய்! இங்ஙனம் சிறந்த நகரில் எம்மை அருச்சித்தால் உலகுயிர்களுக்குப் பாதுகாவலாகும் திருநடத்தை அங்குக் காணச் செய்வோம் அந்நடத்திற்குத் தக்க கட்டுக் கோப்பாகிய சீர் முதலிய தாள அறுதியினை யுடைய மத்தளம் முழக்குவாயாக' என்று விடலரிய கொடிய தளையை நீக்கி எம்மை ஆளாகக் கொண்ட அண்ணலார் அருளிய மொழியைக்கேட்டு,

*வண்டி னம்புகுந் துழக்கிய பூந்துழாய் வானவன் பெரி-தோகை, கொண்டு வல்விரைந் தணுகினன் காஞ்சியிற் கோழு-ரைத் தனிமாக்கீழ், அண்டர் போற்றவாழ் அங்கணார்க் கணிமை-யின் ஆகம விதியாற்றால், கண்டு மத்தள மாதவேச் சரன்றனைப் பூசனைக் கடன்பூண்டான்.* 299

வண்டு மிதித் தலர்த்திய துளவமாலையர் பெரிதும் உவகை கொண்டு மிக விரைந்து காஞ்சியை அணுகிச் செழித்த அடியினையுடைய ஒற்றை மாமரத்தின் கீழே தேவர் துதிக்க வாழும் திருவேகம்பநாதர்க்கு அணித்தாக ஆகம விதி முறையால் மத்தளமாதவேசரைத் தாபித்துப் பூசனையை மேற்கொண்டனர்.

இறைவன் காப்புநடனங் காட்டுதல்

கலிநிலைத் துறை

போக்க ருந்தவம் பற்பகல் புரிந்துபே ரன்பு
தேக்கு சிந்தையான் மீச்செலத் திருவருள் வழங்கி
வாக்கும் உள்ளமும் தொடர்வரு வள்ளலார் முழுதும்
காக்கு நாயகர் காட்டினர் காப்புநன் னடனம். 300

குற்றமற்ற தவத்தைப் பன்னெடு நாள் செய்து பேரன்பினைப் பெருக்கிய சிந்தையராகிய திருமாலிடத்துத் திருவருள் தங்க வழங்கிப் பாச பசு ஞானங்களால் பற்றலாகாத வள்ளலார் பல்லுயிர்களையும் காக்கும் சர்வ ரட்சா நடனத்தை அவர்க்குக் காட்டினர்.

வீங்கி ருட்பிழம் பள்ளிவாய் மடுத்துவெங் கதிர்கான்
றோங்கு செங்கதிர் ஆயிரம் ஒருவழிக் குழூமி
யாங்கு வில்லுமிழ் அற்புதப் பொலஞ்சுடர்ப் பொதுவின்
பாங்கர் எங்கணும் படரொளி விரிகதிர் பரப்பி. 301

செறிந்த இருட் குழாத்தை முகந்துண்டு வெவ்விய கிரணத்தை உமிழ்ந் துயர்கின்ற சூரியர் ஆயிரவர் ஓரிடைக்கூடினாற் போல ஒளி வீசும் ஞானமாகிய அழகிய அம்பலத்தில் பக்கம் எங்கும் செல்கின்ற ஒளிவிரிக்கும் கதிர்களைப் பரப்பி,

அனைய மன்றினுக் கரும்பெறல் அணியெனக் கவின்று
புனையும் நீற்றொளி வயங்கிய திருவுருப் பொலிய
வினைஇ கந்தவர் விள்ளருஞ் சரணமிசை வீக்குங்
கனைம ணிக்கழல் கலின்கலின் கலினெனக் கறங்க. 302

அவ்வம்பலத்திற்குப் பெறலரிய அணிபோல அழகு செய்து புனையப் பெறும் திருநீற்றொளி விளங்கிய திருவுரு விளங்கவும், மெய் யறிவினர் விடுதற்கரிய திருவடிகளில் செறிக்கப் பெற்ற ஒலிக்கும் வீரக் கழல் கலின் கலின் கலின் என்னும் ஒலி யெழவும்,

வார்ந்த செஞ்சடை மாதிரம் எட்டினுஞ் சுலவ
ஆர்ந்த தெய்வதக் கங்கையா றலம்பிநீர் துளிப்பக்
கூர்ந்த இன்னருட் குறுநகை இளநிலா முகிழ்த்துச்
சார்ந்து போற்றெடுத் திசைப்பவர் தம்உயிர் பருக. 303

நீண்ட செஞ்சடை திசைகள் எட்டினும் சுழலவும், பொருந்திய கங்காநதி நீர் ஒலித்துத் திவலைகள் சிந்தவும், இனிய அருள் மிகுந்த புன்னகையின் இள நிலவு அரும்பிச் சார்ந்து துதி செய்வோர் தம் உயிரைக் கொள்ளை கொள்ளவும்,

கஞ்ச வாண்முகம் மலர்தரக் கட்கடை கருணைப்
பஞ்சி னேரடிப் பனிவரைப் பிராட்டிபால் நடப்ப
அஞ்சு பூதமும் படைத்தளித் தழிக்கவும் வல்ல
துஞ்ச ரும்புகழ்க் குறட்கணந் துணங்கையாட் டயர. 304

தாமரை மலரை ஒக்கும் ஒளியுடைய திருமுகம் மலரவும், கடைக் கண் அருள் சிவகாமி அம்மையாரிடத்துப் படரவும், ஐம்பெரும் பூதங் களையும் ஆக்கவும் நிறுத்தவும் அழிக்கவும் வல்ல கெடலரிய புகழை யுடைய குறளர் குழாம் கைகொட்டித் தோள்புடைத் தாடவும்,

ஊன மில்பசுங் கொடியென ஒல்கிநின் றொருபால்
கான ளாங்குழல் மலைமகள் கண்டுகண் களிப்ப
வான நாட்டவர் கறபக மலர்மழை பொழியத்
தானம் எங்கணும் அரகர சயஒலி தழைப்ப. 305

குறைபாடில்லாத பசிய கொடியைப்போல ஒதுங்கி நின் றொரு பக்கம் வாசனை வீசுகின்ற கூந்தலையுடைய சிவகாமியம்மை நோக்கிக் கண்கள் களிப்புறவும், தேவர் கற்பக மலர்களை மழையொப்பப்பொழிய வும், எவ்விடத்தும் அர அர சய சய (வெல்க) என்னும் பொருளுடைய ஒலி தழைக்கவும்,

கட்டு வார்முர சாதிய பெருங்கணப் பூதர்
எட்டு நாகமும் மாகமும் செவிடுற எழுப்ப
மட்டு வார்ந்தெனச் செவியெலாம் அண்ணிக்கும் மதுரம்
பட்ட தீங்கிளை நரப்பியாழ் கின்னரர் பயில. 306

வீக்கிய வார் முரசம் முதலிய வாச்சியங்களைப் பூத கணங்கள் எண்திசை யானைகளும் விண்ணவரும் செவிடு படும்படி முழக்கவும், தேன் பாய்வ தொப்பச் செவிநிரம்பத் தித்திக்கும் சுவையுடைய இனிய கிளை என்னும் நரம்புடைய யாழைக் கின்னரர் மீட்டவும்,

வேதம் ஆயிரம் ஒருவயின் வெண்குடப் பணில
நாதம் ஆயிரம் ஒருவயின் நலங்கிளர் முழவப்
பேதம் ஆயிரம் ஒருவயிற் பெரும்புனற் பரவை
ஓதம் ஆயிரம் ஆர்த்தெனத் தழங்கொலி ஓங்க. 307

வேதம் பலவும் ஒரு புறமும், குடம்போலும் வெண்சங்குகள் பல வும் ஒருபுறமும், மங்கல மிகும் பல்வகை மத்தளங்கள் ஒரு புறமும் ஆகப் பெரு நீரையுடைய கடல் பலவற்றின் ஒலியை ஒப்ப ஒலிக்கும் ஒலி பெருகவும்,

நடிக்கும் அற்புத நாடகங் காண்டலும் புளகம்
பொடிக்கும் மேனியன் புனல்பொழி விழியினன் துதிகள்
படிக்கும் நாவினன் அஞ்சலி பற்றிய கரத்தன்
கடிக்கு ழாந்துழாய்க் கண்ணியான் படிமிசை வீழ்ந்தான். 308

ஞானத் திருக்கூத்தைக் காணுதலும் புளகம் அரும்பிய திரு மேனியராய் நீர் வாரும் விழியினராய்த், தோத்திரம் நவிலும் நாவின ராய், அஞ்சலி குவித்த கரத்தினராய் மணத்தையுடைய சிறியதுழாய் மாலையை முடியிற் சூடிய திருமால் பூமியிற் படிய வீழ்ந்தனர்.

வீழ்ந்தெ ழுந்துளம் மகிழ்ந்துபே ரின்பவெள் ளத்தின்
ஆழ்ந்து பன்முறை பணிந்துபோற் றிசைப்புழி அவற்கு
வாழ்ந்த பேரருட் கருணையான் மத்தளம் முழக்கப்
போழ்ந்த வெண்மதிக் கண்ணியார் திருவருள் புரிந்தார். 309

பணிந்தெழுந்து மனம் மகிழ்ந்து பெரிய இன்ப வெள்ளத்தில் மூழ்கிப் பலமுறையும் பணிந்து போற்றுகையில் அத் திருமால் பொருட்டுத் தோன்றிய பேரருட் கருணையினால். கீற்று வெண்மதியைக் கண்ணியாகவுடைய சிவபிரானார் மத்தளத்தைமுழக்கத்திருவருளைச்செய்தனர்.

நீண்ட மேனியான் நிறைபெரு மகிழ்ச்சியில் திளைத்துத்
தாண்ட வந்தனக் கிசையமத் தளஇயம் முழக்கி
மாண்ட குந்திறல் மத்தள மாதவ னானான்
வேண்டு மெய்வரம் அவன்பெற அளித்தனர் விமலர். 310

நெடியவ ராகிய திருமால் பேருவகையிற் றிளைந்து கூத்திற் கேற்ப வாச்சியம் ஆகிய மத்தளத்தை முழக்கி மாட்சியையுடைய ஆற்றலினால் மத்தள மாதவர் என்னும் பெயருடையர் ஆயினார். விரும்பிய நல் வரத்தை அவர் எய்துமாறு விமலர் வழங்கினர்.

அச்சு தன்பெறு வரத்தினால் அன்றுதொட் டென்றும்
கச்சி வைப்பினின் மத்தளங் கறங்குபே ரோதை
முச்ச கத்தையும் நிறுத்திட முழுவதுப் புரக்கும்
பச்சி ளங்கொடி பாகனார் திருநடம் பயில்வார். 311

திருமால் பெற்ற வரத்தினால் அன்று முதலாக என்றும் காஞ்சிமா நகரில் மத்தள முழக்கு பேரொலியொடும் மூவுலகையும் காத்திடப் பல கோடி அண்டங்களையும் காக்கும் பசிய இளங்கொடியாரைப் பங்கிலுடையவர் திருக்கூத்தினைப் புரிவார்.

காப்பு நன்னடங் கண்ணுறப் பெற்றவர் கரும
யாப்பு வீழ்த்துயர் வீடுபே றெய்துவர் பிறவி
ஓப்பு மத்தள மாதவேச் சரம்இது உரைத்தாம்
வாய்ப்பு றுந்தவக் கொள்கையீர் மேல்இனி வகுப்பாம். 312

காத்தலைச் செய்கின்ற நல்ல நடனத்தைக் கண்டு தரிசனஞ் செய்தோர் வினை விலங்கினை முறித்து உயர்ந்த வீடுபேற்றினை அடைவர். பிறவியை ஓட்டுகின்ற மத்தள மாதவேச்சரத்தினைப் பற்றிப் பேசினோம். வாய்ப்பு மிகுந்த தவ வொழுக்கம் உடையீர்! இனி முன்னதனை வகுத்துரைப்போம்.

அம்மையார் மண்டபத் தெழுந்தருளல்

எம்பி ராட்டிஅங் கிறைவரைத் தொழுது போற் றிசைத்து
நம்பு காதலின் தோழியர் குழாத்தொடு நடந்து
கம்ப நாயகர் திருவருட் பெருமையே கருதிச்
செம்பொன வேய்ந்தொளிர் பிறங்குமா மண்டபஞ் சேர்ந்தாள்

எமது பெருமாட்டியார் மத்தள மாதவேசரை வணங்கிப் பரசி விரும்புகின்ற காதலினுல் பாங்கியரோடும் திருவேகம்பர் பெருமையையே கருத்துட் கொண்டுபோய்ப் பொன்னினுல் இயன்ற ஒளி விளங்கு மகா மண்டபத்தைச் சேர்ந்தனர்.

எண்ணில் பன்மணி யாங்கணும் இளவெயில் எறிப்ப
வண்ணம் மாண்டபொன் தூண்பல நிரைநிரை வயங்கக்
கண்ணி றைந்தபே ரழகினுக் கணியெனக் கவின்று
விண்ண ளாங்கொடி மிடையும்அம் மண்டப வரைப்பின். 314

அளவில்லாத பல மணிகளும் இளவெயில் காயவும், நிறத்தினுல் மாட்சிமைப்பட்ட பொற்றூண்கள் பலவும் அணி அணியாகத் திகழவும், கண்ணிரம்பிய பேரழகுக்கு அழகென்னும்படி அழகுடைத்தாய் விண்ணில் தவழும் கொடிகள் செறியும் அம்மண்டபத்தில்,

சுற்று நீடிய தோழியர் கவரிசாந் தாற்றி
பற்றி நின்றிரு பாங்கரும் பணிநனி புரியச்
சற்றி ருந்திளைப் பாறினுள் எழுந்துமீத் தருக்கு
முற்றி லாமுலை அங்கலார்க் கின்னது மொழிவாள். 315

பல் புறமும் நின்ற தோழிமார் கவரி, சிவிறி இவை பற்றி நின்று இருபுடையும் திருத்தொண்டு நன்கு புரியச் சிறிது இருந்து அயர்வுயிர்த்தனர். பின்பு மேலெழுந் திருமாக்கின்ற இளங் கொங்கையை யுடைய பாங்கியர்க் கிதனைக் கூறுவார்.

மன்னு யிர்த்தொகை முழுவதும் மாயையின் மறைப்புண்
டின்னல் செய்திரு வினைவலைப் படுங்கள்இவ் வினைதாம்
உன்னை எம்மைஎம் அடியரைப் பிணிப்பதொன் றில்லை
அன்ன தாயினும் அகிலமுந் தெளிந்துய்தற் பொருட்டு. 316

'நித்தியமாகிய ஆன்மாக்கள் முழுதும் மாயையினுல் மறைப்புற்றுத் துன்பம் செய்கின்ற புண்ணிய பாவங்களாகிய விலங்கில் கட்டுண்ணும், இவ்வினை உன்னையும், எம்மையும், நம் அடியவரையும் சிறிதும் பற்றுவதில்லை. ஆனுலும் பல்லுயிர்களும் தெரிந்து கடைத்தேறும் பொருட்டு'

ஆட லான்விழி புதைத்தலின் ஆரிருட் படலம்
மூட யாவையும் இடர்க்கடல் மூழ்கிய அதனுல்
கூடும் வல்வினை கழுவுறக் காஞ்சியைக் குறுகி
நீட நீஎமை அருச்சனை இயற்றுதி நெறியால். 317

திருவிளையாட்டாற் கண்களை மூடினமையால் தாங்கரிய இருட்பிழம்பு உலகெலாம் மூடிக்கொள்ள பல்லுயிர்களும் துன்பக்கடலில் மூழ்கியமையால் சேர்ந்த தீவினை தீரக் காஞ்சியை அண்மி நிலைபெற நீ விதிவழி அருச்சனை செய்.

என்று மந்தரப் பறம்புறை எம்பிரான் விடுப்ப
மன்ற இந்நகர்க் கெய்தினன் வளரிள முலையீர்
இன்று நான்புரி பூசனைக் கிசையஎன் பணியில்
நின்று வேண்டுவ தம்மின்என் றுணர்த்தினள் நிமலை. 318

என்றருளி மந்தர மலையில் எழுந்தருளும் எமது பெருமானார் விடுத்தலால் தெளிவுற இந்நகரை அடைந்தேன். சேடிகாள்! மாறுபடாது நின்று வேண்டும் உபகரணங்களை வருவித்துத் தாருங்கள்' என்று இயல்பாகப் பாசங்களின் நீங்கிய விமலை கூறினர்.

உரைத்த வாய்மொழி கேட்டலும் உளங்களி துளும்பி
விரைத்த கூந்தலார் மென்மல ரடிதொழு தெழுந்து
திரைத்த பாற்கடல் அமிழ்தனாய் செய்பணி வெவ்வே
றரத்த வாய்திறந் தெங்களுக் கருளென அருள்வாள். 319

கூறிய திருவாக்கைக் கேட்டு மனம் களிப்புமிக்கு ஏலவார் குழலியார்தம் மெல்லிய மலரடிகளைத் தொழுதெழுந்து அலைகளையுடைய பாற்கடலிற் பிறந்த அமிழ்தம் போல்வாய்! அவரவர் செயத்தகும் பணியைச் சிவந்த இதழினையுடைய திருவாய்மலர்ந்து அருளுக' என, அருள் செய்வார்,

அம்மையார் தோழியர்களுக்குப் பணித்தல்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

சீலந் தாங்குவிண் ணவரும் விழைதகு தீம்புனற் கூவல்
காலந் தோறும்யான் ஆடிக் கருமம இயற்றுதற் கொன்றும்
ஆலந் தாங்கிய கண்டத் தடிகளுக் காட்டுதற் கொன்றும
ஏலந் தோய்ந்திருள் கூரும் ஈர்ங்குழ லவர்சிலர் அகழ்மின்.320

ஆறு காலங்களிலும் யான் நீராடிக் கடன்களை முடித்தற்கு நல்லொழுக்கமுடைய தேவரும் விரும்பத்தக்க இனிய நீர்க்கிணறு ஒன்றும், விடத்தை அணிந்த பெருமானார்க்குத் திருமுழுக் காட்டுதற்குக் கிணறொன்றும்மயிர்ச்சாந்து பூசிக் கருமைமிகும் நெய்ப்புடைய கூந்தலீர் சிலர்தொடுமின்.

அலைகள் வெண்மணி வீசி அதிர்புனல் நதிக்கரை அருரு
மலர்கள் பச்சிலை கனிகள் மல்கிய மயிலைவில் லந்தண்
பலவும் ஆதிய பலவும் பயில்வுறு நந்த வனங்கள்
இலைமு கப்பொலம பூணின் எழுமுலை யவர்சிலர் புரிமின். 321

திரைக்கரங்கள் முத்துக்களை முகந் தெறியும் நதிக்கரையின் அயலே மலர்கள், பச்சிலைகள், பழங்களின் பொருட்டுப் பல்கிய இருவாட்சி, வில்வம், பலாமரம் முதலான பலவும் கெழுமிய நந்தவனங்களை வெற்றிலைபோலும் முகமுடையபொற்பூணினையுடையீர் சிலர்ஆக்குமின்.

நறிய சந்தன விழுது நாறிய மான்மதச் சாந்தம்
வெறிகு லாங்கருப் பூரம் விரைகெழு குங்குமம் பிறவும்
செறிவு கொண்டபூங் கதிரின் தெய்வத மணிஅணி விலையிட்
டறிவ ரும்பரி வட்ட மாதிய சிற்சிலர் கொணர்மின். 322

நறுமணமுடைய சந்தனக்குழம்பும், மணம்கமழும் கத்தூரிச் சாந்தும், மணம் கெழுமிய கருப்பூரமும், மணம் விம்மும் குங்குமப் பூவும், பிறவும், விலை மதித்தற்கரிய மொய்யொளியுடைய தெய்வமணி கொடு குயிற்றிய அணிகளும், திரு ஆடையும் முதலிய சிலர் சிலர் கொண்டு வாருங்கள்.

ஆனின் ஐந்துடன் ஐவே றமுதமும் சிலர்சிலர் தம்மின்
தேன ளாந்திரு வமுது முதலிய சிலர்சிலர் தம்மின்
வான ளாவிய கோயில் மாளிகை எங்கணு மணிகள்
கான ளாமலர் பட்டிற் கவின்நலஞ் சிலர்சிலர் புனைமின். 323

பஞ்ச கௌவியமும், பஞ்சாமிர்தமும் சிலர் சிலர் தாருங்கள், தேன்கலந்த திருவமுது முதலிய சிலர் பதம் செய்ம்மின். வானைத்தோய நின்ற கோயில், திருமாளிகை முதற் பிறவிடங்களிலும், மணிகளாலும், வாசனை பொருந்திய மலர்களாலும், பட்டாலும் அழகுற விதான முதலிய அமைமின்.

தோழிமார் தொண்டு

இன்ன வாறிம யத்தின் இளம்பிடி ஏருத லோடும்
அன்ன தோழியர் பலரும் ஐயென அடியிணை தொழுது
முன்னர் யாம்செய்தும் என்றங் கொருவரின் ஒருவர்முன் முடுகித்
துன்னு காதலின் மூண்டு தொழில்தலை நின்றனர் மன்னோ 324

இங்ஙனம் இமயத்தின் இளைய பெண் யானையை ஒப்பவர் ஏவிய உடனே தோழியர் யாவரும் விரைவு தோன்றத் திருவடிகளைத்தொழுது முன்னர் யாம் முடிப்பேம் முடிப்பேம் என்றங்கே ஒருவரினும் ஒருவர் முன் முன் என முடுகிச் செறிந்த காதலால் முற்பட்டுத் தொழிலில் தலை நின்றனர்.

தெவ்வடு வேற்கண் உமாபத் திரையொடு கீர்த்தி மதியென்
றிவ்விரு மாதர் வடக்குந் தெற்கும் அகழ்ந்திரு கூவல்
கௌவை நெடுந்திரைக் கங்கை காளிந்தி அங்கண் மடுத்தார்
அவ்விரு தீர்த்தங் குடைந்தோர் அல்லல் பவப்பிணி தீப்பார். 325

பகைவரை அழிக்கின்ற வேல்போலும் கண்களையுடைய உமா பத்திரை, கீர்த்தி மதி என்னும் இருமாதர் முறையே வடக்கிலும், தெற்கிலும் தத்தம் பெயரால் கிணறகழ்ந்து அம்மையார் மூழ்குதற்கும், இறைவர்க்கு ஆட்டுதற்கும் முறையே கங்கை யமுனை நீரை அவற்றில் நிரப்பினர். அவ் விரு தீர்த்தங்களின் மூழ்கினோர் துன்பத்தைத் தரும் பிறவி நோயைக் கெடுப்பார்.

வார்ந்த நெடுஞ்சடை மோலி ஏகம்ப வாணர் தமக்கு
நேர்ந்த திருவமு தாக்க நீடும் அனற்கிறை திக்கின்
ஈர்ந்தண் மணிப்புனற் கூவல் இடம்பெறத் தொட்டு வனப்பின்
ஆர்ந்த திருமடைப் பள்ளி அமைத்தன ரால்ஒரு சாரார். 326

மிக நீண்ட சடை முடியையுடைய திருவேகம்பர்க்குப் பொருந்திய திருவமுது அமைக்க அக்கினி திசையில் நீலமணியை ஒக்கும் நீருடைய கிணற்றை அகழ்ந்து பேரழகமைந்த திருமடைப் பள்ளியைச் சிலர் வகுத்தனர்.

நிலவும் எருக்கும் அணிந்த நீள்முடி சாத்திய மேல்பாற்
குலவு நதிக்கரை ஞாங்கர்க் கோதறு தூய வரைப்பிற்
பலருந் தொழத்தகு மேன்மை பயில் அம்பி காவனம் என்னும்
மலர்நிறை நந்த வனங்கள் ஆக்கினர் ஆங்கொரு சாரார். 327

பிறையையும், எருக்கம்பூவையும் அணிந்த திருமுடியில் சாத்துதற்கு மேற்றிசையில் விளங்கும் வேகவதி நதிக் கரை மருங்கில் குற்றமற்ற நல்லிடத்தே பலரும் தொழுகின்ற மேம்பாடமைந்த அம்பிகாவனம் எனப்படும் மலர்கள் நிரம்பிய நந்தவனங்களைத் தோற்றுவித்தனர் சிலர்.

நெட்டிலை வாழைக் குலங்கள் நெருப்புறழ் செம்பழப் பூக
மட்டு மதுக்கழை தூணத் தியாத்தவிர் காழ்வடம் நாற்றி
மட்டவிழ் பூந்தொடை தூக்கி வன்ன விதானம் விதானித்
திட்டு மணித்திருக் கோயிற் கெழில்புரிந் ;தார்ஒரு சாரார். 328

நீண்ட இலைகளையுடைய வாழைமரம் பலவும், நெருப்பனைய பழுக்காய்களைக் கொண்ட பாக்கு மரம் பலவும், சாற்றினை ஊற்றும் கரும்பு பலவும் தூண்களில் கட்டி ஒளி விடுகின்ற முத்து மாலைகளைத் தொங்கவிட்டுத் தேன் மணம் கமழும் மலர்மாலைகளை நாலவிட்டு நிறமுடைய மேற்கட்டி விரித்து யாத்து மணிகள் பதித்த திருக்கோயில்களை அழகு செய்தனர் சிலர்.

வாசக் கொழும்புழு கப்பி வண்ண மலர்த்துகள் அட்டி
வீசிச் செழும்பனி நன்னீர் விரைகமழ் தீம்புகை யேற்றிக்
காசைத் தகர்த்துக் கரைத்துக் கவின்திரு மாளிகைச் சுற்றும்
ஆசைச் சுவர்த்தலம் முற்றுஞ் சித்திரித் தார்ஒரு சாரார். 329

வளமும், வாசமும் உடைய புனுகைப் பூசி நிறமுடைய மலர்த்தாதுகளை ஒற்றி நறிய பன்னீரைத் துளித்து அகில் முதலாம் நறும் புகையைச் சேர்த்தி நவமணியையும் பொன்னையும் இடித்துக்குழைத்து அழகிய திருமாளிகைச் சுற்றில் உள்ள நாற்றிசைச் சுவர்களிலும் சித்திரம் தீட்டினர் சிலர்.

வீறும் விரைப்பாளி தங்கள் வெறுவிய வல்சிஅக் காரச்
சோறு புளிந்தயிர்ச் சொன்றி துப்புடை ஏனைப் புழுக்கல்
நாறு நறுங்குய்க் கருனை முதலிய நால்வகை உண்டி
ஆறு சுவைத்திறம் விம்ம அட்டன ரால்ஒரு சாரார். 330

சிறக்கும் கருப்பூரம் முதலிய மணம் கமழும் பாற்சோறு, வெண் சோறு (சுத்த அன்னம்), சருக்கரைப் பொங்கல், புளிப்புடைய தயிர்ச் சோறு, நுகரப்படும் ஏனைய சோறுகள், வாசனை வீசும் தாளிதம் கூட்டிய பொரிக்கறி முதலிய நக்கல், பருகல், தின்னல், விழுங்கலாகிய நால் வகை உணவு அறுவகைச் சுவை வேறு பாடுகளும் மேம்படச் சமைத்த னர் பலர்.

ஓட்டொழி யாநறுந் தேறல் ஒண்மலர் குற்றனர் கொண்டு
சூட்டொடு கண்ணிகள் இண்டை தொங்கல் முதற்பல ஆக்கி
ஈட்டு நறும்புகை ஏற்றி ஈர்ம்பனி நீர்தெளித் தம்பொற்
சேட்டொளி மூழி அமைத்துச் சேர்த்தன ரால்ஒரு சாரார் 331

நறிய தேன் பெருக்கு அறாத செவ்வி மலர் பறித்துக் கொண்டு சூட்டு, கண்ணி, இண்டை, தொங்கல் முதலிய மாலை வகைகள் பலவும் தொடுத்துத் தொகுக்கப்பட்ட நறும்புகை பலவற்றையும் ஊட்டி ஈரிய பனிநீரைத் தெளித்துத் தூரத்தும் ஒளிபரவும் மாற்றுயர் பொன் ஞற் செய்த பூவிடு பெட்டிகளில் வைத்துக் கொண்டுசேர்த்தனர் பலர்.

செம்பொன் இழைத்த தசும்பில் தெய்வத மந்திரம் ஓதி
அம்பொன் இழைத்துகில் வாய்ப்பெய் தலைஎறி தீர்த்தம் வடித்துக்
கொம்பின் ஒசிந்தனர் கொண்டு குளிர்மணிக் கோயிலி னுள்ளால்
பம்பு நிறைகள் நிறையப் பாய்த்தின ரால்ஒரு சாரார். 332

செம்பொன்னு லாகிய குடங்களில் தெய்வத்தன்மை நிரம்பிய மந்திரங்களை ஓதி அழகிய பொன்னூல் கலந்த நுண்ணிய ஆடையால் வாயை மூடி அலை வீசும் தீர்த்த நீரை வடிகட்டிப் பூங்கொம்பு போல ஒல்கிச் சுமந்து குளிர்ந்த ஒளி வீசும் மணிகள் பதித்த கோயிலுள் செறிக் கப்படுகின்ற நிறைகள் எனப்படும் சால்களில் நிரப்பினர் ஓர் குழுவினர்.

சுடர்விடும் ஆடகச் செம்பொன் தூமணி வட்டகை யோடு
படலிகை யாதிகள் சுத்தி பண்ணி அமைத்து நறும்பூ
அடைதளிர் யாவையும் ஆய்ந்தங் கார்த்தி மணத்தவ லாதிக்
கடிதிரு மஞ்சனம் அட்டிக் களிமிகுந் தார்ஒரு சாரார். 333

ஆடகப் பொன்னுலியன்ற மணிபதித்த சிறுகுவளைகள், பூந்தட்டம் முதலிய தூய்மை செய்து இருத்தி நறிய மலர்கள், இலைகள், தளிர் கள் ஆதிய இவற்றைத் தூய்மைப் படுத்தி அவற்றுள்இட்டு மணமுடைய ஏலம், வெட்டிவேர், குங்குமப்பூ, பச்சைக் கருப்பூரம் முதலியவற்றை விளக்கமும், காப்பும் அமைந்த திருமுழுக்கு நீரிற் பெய்து நன்கு முடித் தமையால் களிப்புற்றனர் சிலர்.

தூங்கு பலாக்கனி தாற்றுத் தூத்திரள் வாழைப்ப ழங்கள்
மாங்கனிக் குப்பை நரந்தம் மாதுளை நாரெலு மிச்சை
தேங்கமழ் தெங்கின் குடக்காய் தீப்படு பூகப் பழுக்காய்
ஆங்கண் நிரப்பினர் கைக்கொண் டணுகின ரால்ஒரு சாரார். 334

பலாவிற் றொங்குகின்ற பழங்களும், தாறுகளிற் றூய்தாய்த் திரள்கின்ற வாழைப்பழங்களும், மாவின் கனித்தொகைகளும் ஆகிய முக்கனிகளும் நாரத்தை, மாதுளை, மணங்கமழ் எலுமிச்சை இவற்றின் பழங்களும் இனிமை மிகுந் தெங்கின் குடம்போலும் இளநீர்களும், சுவை மிகும் பாக்குப் பழங்களும் சேமித்துக் கைக்கொண்டங் கணுகினர் ஒரு சிலர்.

ஆனுடைப் பாற்குடங் கோடி அருஞ்சுவை நெய்க்குடங் கோடி
தேனுடைப் பொற்குடங் கோடி செழுங்கரும் பட்டதண் சாறு
தானிறை பொற்குடங் கோடி தயிருடைப் பொற்குடங் கோடி
வானமிழ் தக்குடங் கோடி வல்லைஉய்த் தார்ஒரு சாரார். 335

பசுப்பாலும், அரிய சுவையுடைய நெய்யும், தேனும், கரும்பாட் டிக் கொண்ட சாறும், தயிரும், தேவாமிர்தமும் ஒவ்வொன்றும் பொற் குடங்களில் கோடி யென்னும் அளவுபட விரைவில் தொகுத்தனர் ஓர் குழாத்தினர்.

திருமலி ஓவியப் பட்டும் தீபத் தியன்றவெண் பட்டும்
குருமலி பாசிலைப் பட்டும் கோபம் நிகர்த்தசெம் பட்டும்
உருவுடை மாழையம் பட்டும் ஒளிர்தரு நீனிறப் பட்டும்
தருஉத வும்பல பட்டும் தந்தன ரால்ஒரு சாரார். 336

விலை மிக்க சித்திரங்கள் தைக்கப்பெற்ற பட்டுடையும், பல தீவு களில் முடித்த வெண்பட்டாடையும், நிறமிகுந்த பசிய இலை நிறப் பட் டாடையும், இந்திர கோபப் பூச்சியை நிகர்த்த செம்பட்டுத் துணியும், அழகிய பொன்னிறத்த பட்டுடையும், நீல நிறப் பட்டுடையும், கற்ப கத் தரு உதவிய பட்டாடையும் ஓர் குழுவினர் கொண்டு தந்தனர்.

விற்படு மோலி குதம்பை மின்உமிழ் பொன்அணி பட்டம்
அற்பகை விள்ள விளங்கும் அங்கதம் ஆழி கடகம்
பற்பல கண்டத் தணிகள் பாயொளி ஆரம் முதலாம்
கற்பகம் உய்த்தன கொண்டு கடுகின ரால்ஒரு சாரார். 337

ஒளி விடுகின்ற மணி முடியும், கடிப்பென்னும் தோளிற் றூழ் காதணிகளும், ஒளி விடு பொன்னுனியன்ற அழகிய நெற்றிப் பட்டமும், இருளாகிய பகை கெட ஒளிரும் தோளணிகளும், விரலணிகளும், கட கங்களும், கழுத்தணிகளும், பரவுகின்ற ஒளியுடைய முத்த மாலைகளும் பிறவும் தேவதரு வழங்கிய அவற்றைக் கொண்டு விரைந்து வந்தனர் ஒரு சிலர்.

முழுதுல குங்கமழ் கிற்கும் முருகுடைச் சந்தனத் தேய்விற்
புழுகினை வாக்கி நுணங்கப் பொடித்திடு கப்புரம் அட்டிச்
செழுவிய குங்குமம் பெய்து செறிவுற மட்டித் தெடுத்த
விழுதமை பொற்குடம் ஏந்தி விரைந்தன ரால்ஒரு சாரார். 338

உலக முழுவதும் பரந்து மணம் கமழும் சந்தனக் குழம்பில் புழுகினைப் பெய்து நுண்ணிதாகப் பொடி படுத்திய கருப்பூரத்தைச்சேர்த்து வளவிய குங்குமப்பூவைக் கூட்டிக் கலவையாகுமாறு தேய்த்துச் சேமித்த குழம்பை அமைத்த பொற்குடங்களைச் சுமந்து விரைந்து வந்தனர் ஒரு சாரார்.

கண்ணடி சாமரை வெண்கேழ்க் கவிகை வளிஎறி வட்டம்
புண்ணிய நீறு பளிதம் புகைமலி குங்குலி யங்கள்
வண்ண மணிக்குடம் தட்டோ டாரா தனைக்கு வகுத்த
எண்ணில் உறுப்பிற் பிறவும் ஈட்டின ரால்ஒரு சாரார். 339

கண்ணாடியும், சாமரையும், வெண்குடையும், காற்றை வழங்குகின்ற ஆலவட்டமும், புண்ணிய வடிவாகிய திருநீறும், கருப்பூரமும், புகை மிக்க குங்குலியமும், குடமும், தட்டமும் தீபாராதனைக்கு வேண்டும் பிற உபகரணங்களும் தொகுத்தனர் ஒரு சாரார்.

நெய்விர வம்புய நாள நீளிழைத் தீபம் அனந்தம்
பைவிரி பாந்தள் உயிர்த்த பருஉமணித் தீபம் அனந்தம்
தெய்வதத் தீபம் அனந்தம் தீம்புகை வர்க்கம் அனந்தம்
கைவகுத் தெங்கணும் மல்கக் கண்டன ரால்ஒரு சாரார். 340

தாமரைத் தண்டின் நூலும் நெய்யும் கூடிய விளக்குகள் எண்ணிலவும், படம் விரிக்கும் பாம்புகள் அளித்த மாணிக்க விளக்குகள் எண்ணிலவும், தேவர் தொகையில் அமைந்த தீபங்கள் எண்ணிலவும், இனிய நறும்புகைத் தொகைகள் எண்ணிலவும் கைசெய்து (பண்ணி) எங்கும் விளங்கச் செய்தனர் ஒரு சாரார்.

மாடக வச்சிரப் பத்தர் வார்நரப் பின்னிசை யாழும்
பாடுறு பாடலும் ஒன்றப் பண்ணின் அமைமின்கள் என்றும்
ஈடறு பற்பல் இயங்கள் எழுப்புமின் என்றும் இணங்க
ஆடுமின் என்றும்வின் னோரைப் பணித்தனர் ஆங்கொருசாரார்.

மாடகம், பத்தர் முதலிய உறுப்புக்கள் கூடிய யாழைச் சுருதி கூட்டிப் பாடற்குரிய பாடலை ஒன்றப் பண்ணுமின் எனவும், ஒப்பற்ற பலப்பல இயங்களில் இசைகளை எழுப்புமின் எனவும், அவற்றிற்குத் தக நடமிடுமின் எனவும் தெய்வமகளிரை ஏவுவோருமாவர் ஒருசாரார்.

அம்மையார் வழிபாடு செய்ய எழுந்தருளல்

கலி விருத்தம்

இன்னணம் பணியெலாம் இகுளை மார்செய
மின்னவிர் மணிவடம் சுமந்த வெம்முலைக்
கன்னிமா மண்டப நின்றுங் காதலால்
கொன்உமா பத்திரக் கூவல் நண்ணினுள். 342

இங்ஙனம் எல்லாத் தொண்டுகளையும் சேடிமார் செய்ய ஒளி விளங்கு மணி மாலையைச் சுமக்கும் கன்னி வடிவில் திகழும் அம்மையார் மகா மண்டபத்தினின்றும் காதலுடன் பெருமையுடைய உமாபத்திரக் கிணற்றை நீராட நண்ணினர்.

நிறைபரஞ் சுடரடி நினைந்து கூவல்நீர்
மறைநெறி விதியுளி வழாமை ஆடியே
இறுநுசுப் பங்கலார் எடுத்து நீட்டிய
அறுவையின் ஒற்றிமெய் ஈரம் மாற்றினுள். 343

சிவபெருமானுர் திருவடிகளை நினைந்து நீராட்டு விதிப்படி நீராடி இடை முரியும் கொல்லோ என்னும் சிற்றிடைப் பாங்கிமார் கொடுத்த ஒற்ருடையினுல் திருமேனி ஈரத்தைப் போக்கிக் கொண்டனர்.

தேசிகப் பட்டிரண் டுடுத்துத் தீவினை
ஆசிரித் தருளும்நீ ரூக மெங்கணும்
பூசிமுப் புண்டரம் பொறித்துக் கண்டிகை
நேசமுற் றணிந்துசெய் நியமம் முற்றியே. 344

அம்மையார் ஒளியுடைய பட்டாடை இரண்டினை உடுத்துத் தீய வினையாகிய குற்றத்தைப் போக்கி அருள் செய்யும் திருநீற்றினை மேனி முற்றும் பூசி நீரிற் குழைத்துத் திரிபுண்டரமாக அணிந்து உருத்திராக் கத்தை விருப்பொடும் தரித்து அனுட்டானம் செய்து கொண்டு,

காவலர் பூசனை புரியுங் காதலான்
மேவர வேண்டுவ கொண்டு மெல்லியல்
பாவையர் புடைவரப் படர்ந்தி ரண்டெனும்
ஆவர ணந்தனை அணுகி னுளரோ. 345

சிவபூசனையைப் புரியும் விருப்பினுல் வேண்டும் உபகரணங்களைக் கொண்டு மெல்லியலார் தோழிமார் உடன் வர இரண்டாம் ஆவரணத் தினை அணுகினர்.

சங்கினம் வயிரொடு தாரை காகளம்
பொங்கொலிச் சின்னங்கள் வீணை பூங்குழல்
வங்கியம் பேரிவார் முரசம் திண்டிமம்
எங்கணும் கடலுடைந் தென்ன ஆர்ப்பவே. 346

சங்குகளும், ஊது கொம்பு, தாரை, காகளம், சின்னம், குழல், வங்கியம் என்னும் துளைக்கருவிகளும், வீணையாகிய நரம்புக் கருவியும், பேரிகை, முரசு, தம்பட்டம் என்னும் தோற்கருவிகளும் கடல் மடை திறந்தா லொப்ப முழங்கவும்,

கின்னரர் கருடர்கிம் புருடர் பாண்செயக்
கன்னியர் எதிர்எதிர் கலவி ஆடிடத்
துன்னிய முனிவரர் துன்றும் வேதியர்
என்னரும் மறைமுழக் கெடுத்துச் சூழவே. 347

தேவசாதியினர் இவர் பாடவும், மகளிர் எதிர் எதிர் கலந்து ஆடவும், நெருங்கிய முனிவரரும் தெளிந்த அந்தணர் எவரும் வேதங்களை எடுத்தோதிச் சூழவும்,

ஐவகைப் பிரமமும் அங்கம் ஆறும்ஓர்
கைவளர் முகனுடைக் கடவுள் வேழமும்
கொய்விரைக் கடம்பணி கோவும் ஓகையான்
வைகும்அச் சூழலை வலங்கொண் டெய்துவாள். 348

பஞ்சப் பிரம மந்திரங்களும், சடங்க மந்திரங்களும் அடங்கிய பிரணவத்தை ஓர் துதிக்கை வளர் முகமாகவுடைய யானைமுகக் கடவுளும், கடப்ப மலர் மாலையை அணிந்த முருகப் பெருமானும் எழுந்தருளியிருக்கும் இருக்கையை வலம் வந்து அடைந்தனர்.

ஐங்கரப் பிள்ளையை நிருதி ஆசையில்
செங்கைவேல் இளவலை உலவைத் திக்கினும்
உங்குறு பூசையின் உவப்பச் செய்துபோய்
மங்கல நந்திவாழ் வாய்தல் நண்ணியே. 349

மூத்த பிள்ளையாரைத் தென்மேற்காகிய நிருதி திக்கினும், இளைய பிள்ளையாரை வடமேற்காகிய வாயு திக்கினும் மிகு பூசனையால் மகிழ்வுறுத்திப் போய் மங்கல குணங்களையுடைய நந்திபிரானுருறையும் திருவாயிலை நணுகி,

வாயிலோர் பூசனை மரபின் ஆற்றினள்
மாயிரு மறைத்தனி மாவின் நீழல்வாழ்
நாயனார் தமைவிழி நயப்பக் காண்டலும்
மீயுயர் காதலான் வீழ்ந்தெ ழுந்தனள். 350

துவார பாலகர் பூசனையை முடித்துச் சென்று வேத மாமரத்தின் நீழலில் வாழ்கின்ற திருவேகம்ப நாதரைக் கண்களிப்பக் கண்டபொழுதே மிக்குயர்ந்த பெரு விருப்பினுல் வணங்கி எழுந்தனர்.

ஒருங்கிய மனத்தின்அஞ் செழுத்தும் ஓதியே
கருங்குழற் கற்றைமேற் குவித்த கையொடும்

பெருங்களி துளும்பிஉள் புகுந்து பிஞ்ஞகர்
மருங்குற முறைமுறை வணங்கி ஏத்தினுள். 351

ஐம்பொறி வழிச் செல்லாது ஒன்றுபட்ட உள்ளத்தினுல் அஞ்செழுத்தையும் ஓதிக் கரிய கூந்தற் ெறுகுதிமேற் கூம்பிய கரத்தொடும் துள்ளிய பெருங்களிப்பொடும் உள்ளே புகுந்து அருகணைய விதித்தபடி வணங்கி வணங்கித் துதித்தனர்.

முருகலர் மாவடி முளைத்த தீஞ்சுவை
அருள்விளை அமுதினை ஆரக் கண்களால்
பருகினள் பன்முறை பழிச்சி அண்ணலார்
கருணையே நோக்கிவெங் களிப்பின் நீடினுள். 352

வாசனை விரியும் மலர்களைக் கொண்ட மாவின் அடியில் வெளிப்பட்ட இனிய சுவையுடைய திருவருளைச் செய்யும் அமுதாகிய பெருமானுரைக் கண்களால் நிரம்பப் பருகினர். பலமுறை போற்றி அண்ணலார் திருவருளையே உளங்கொண்டு களிப்பி லழுந்தினர்.

விழிகள்ஆ னந்தநீர்த் தாரை மெய்யெலாம்
பொழியநெக் குருகினள் புளகம் போர்த்தனள்
மொழிதடு மாறினள் அறிவின் முற்றிய
தொழில்அமை பூசனை தொடங்கல் மேயினுள். 353

கண்கள் ஆனந்த வெள்ளத்தை மெய்ம்முழுதும் பொழியுமாறு திருவுள்ளம் நெகிழ்ந்து உருகினர்; புளகம் மூடினர்; நாக்குழறினர்; அறிவின் முதிர்ந்த பணியாகிய பூசனையைத் தொடங்கலுற்றனர்.

அம்மையார் வழிபாடு செய்தல்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

வழுவறு தோற்ற மாதி வழுக்கிய பாவத் தீமை
கழுவநின் பூசை இந்நாள் கடைப்பிடித் தருளால் செய்கேன்
முழுதருள் வழங்கி ஊறு நீக்கிமுன் னின்று கோடி
செழுமதி முடியாய் என்று சங்கற்பம் செய்து கொண்டாள். 354

பிறையை முடித்த பெருந்தகையே! குற்றமற்ற படைப்பு முதலிய தொழில்கள் தடைப்படத் திருக்கண்களைப் புதைத்தமையால் ஆகிய கொடிய தீவினையைப் போக்க நின் பூசனையை இப்பொழுது மேற்கொண்டு திருவருளை முன்னிட்டுச் செய்வேன். இடையூறகற்றி முழுதும் அருளை வழங்கி முன்னின்று பூசனையை ஏற்றுக் கொள்ளுதி,

பூமுதல் பூத சுத்தி புரிந்தகப் பூசை ஆற்றிக்
காமரு மலரும் வாச வருக்கமும் கலந்த தெண்ணீர்த்
தோமில்பாத் தியமே ஆச மனம்அருக் கியந்தூய் தாக்கி
மாமுரல் இதழித் தாரார் முடிமிசை மலரை மாற்றி. 355

பிருதிவி முதலாகப் பூத சுத்தியைச் செய்து அந்தரியாகமாகிய அகப் பூசையைப் புரிந்து அழகிய மலர்களையும், கருப்பூரம், குங்குமம் முதலிய சேர்த்த வடித்த நீரை வாக்கிய குற்றமில்லாத பாத்தியம் ஆசமனம், அருக்கியம் எனப்படும் திருவடி கழுவுநீர், பருகுநீர், வாய்பூசுநீர் ஆகிய இவற்றைத் தூய்மை செய்து வண்டு பாடும் கொன்றை மலர் மாலையரது திருமுடிமேலுள்ள மலரை அகற்றி,

மாதர்வண் சத்தி யாதி சத்திபீ டிலக வாய்ந்த
ஆதன மதன்மேல் வைகும் சதாசிவ வடிவின் ஆன்ற
சோதியைத் திருவே கம்பச் சுடரினை நடுக்கீழ் பக்கம்
மீதற நிறைந்து விம்மும் ஆனந்த நிமல வாழ்வை. 356

பிருதிவிமுதல் நாதமீறாகிய தத்துவம் முப்பத்தாறினையும் ஆதனமாகக் கொண்டு அதற்கு மேல் விளங்கும் மூர்த்தி மூர்த்திமான் எனப்படும் சத்தியி னிடமாகத் தோன்றும் சிவபரஞ் சுடரை, திருவே கம்பத்தில் வீற்றிருக்கும் சுடரொளியை, இடை, கீழ், மேல், மருங்கு எனப்படும் எவ்விடத்தும் நிறைந்து பொங்கும் பேரின்ப வடிவினராகிய இயல்பாகவே தூய பெரிய வாழ்வை.

சீத்திருள் அறுக்கும் நோக்கால் தெளிவுறக் கண்டு போற்றிப்
பாத்தியம் முதலாம் மூன்றும் பதம்முகம் முடியின் ஈத்து
நாத்திகழ் மனுவின் மாண்ட நறுமது பருக்கம் நல்கி
ஆத்தன் நூல் விதியி னுற்றுன் மறித்தும்ஆ சமனம் ஈந்தாள். 357

மலவிருளைத்துரக்கும் மெய்யறிவால் நன்குதரிசித்துத் துதிசெய்து பாதநீர் முதலாகும் மூன்றனையும் திருவடியிலும், திருவாயிலும், திருமுடியிலும் அவற்றிற் குரிய திருமந்திரத்துடன் வழங்கி மேலும், தயிர் நெய்பாலோடு கூடிய உணவை மந்திரத்திரத்தொடும் வழங்கி அருக்கியபாத்திய ஆசமனம் பின்னும் அளித்தனர்.

இணங்கிய நெய்பால் பெய்த இன்னமு திசைய நல்கி
மணங்கமழ் எண்ணெய்க் காப்பும் மாநெல்லி மஞ்சட் காப்பும்
அணங்கருங் கபிலை ஐந்தைந் தமுதுபல் குடத்துத் தீம்பால்
குணங்கெழு தயிர்நெய் செந்தேன் குளிர்இள நீரும் ஆட்டி- 358

பசுவினது நெய்யும் பாலும் வாக்கிய இனிய போனகத்தை அதற்குரிய மந்திரத்தொடும் வழங்கி, நறுமணமுடைய எள் நெய்க்காப்பும், மாக்காப்பும், நெல்லிக்காப்பும், மஞ்சட் காப்பும் வருந்துதல் இல்லாத தெய்வப்பசு வழங்கிய பஞ்ச கௌவியமும், பஞ்சாமிர்தமும், இனிய பாலும், நன்கு அமைத்த தயிரும், நெய்யும், செவ்விய தேனும், இளநீரும், ஆகிய இவற்றை இவ்வரிசையில் திருமுழுக்காட்டி,

'அரசன் நுகருவனவற்றைக் காப்பென்றல் மரபு' எனவருதலை 'மற்றடிகள்' என்னும் சீவக சிந்தாமணிச் செய்யுளுரையில் காண்க.

கருப்புமிழ் தேறல் ஆட்டிப் பல்கனி வருக்கம் ஆட்டி
அருத்திகூர் அன்பின் ஆன்ற சந்தனக் குழம்பும் ஆட்டி
மருக்கமழ்ந் தெடுத்த கீர்த்தி மதித்தடங் கூவல் தெண்ணீர்
உருத்திர மனுக்கள் ஓதி விதியுளி நிறைய ஆட்டி. 359

கருப்பஞ் சாற்றினையும், பல்பழத் தொகைகளையும், வளர்ந்து கொண்டே வரும் அன்பினால் தேய்த்துச் சேர்த்த சந்தனச் சேற்றினையும் திருமுழுக்காட்டிக் கீர்த்தி மதி உண்டாக்கிய கிணற்றுத் தெண்ணீரில் மணம் ஊட்டிச் சீருத்திர மந்திரங்களை ஓதி அதனை விதிப்படி நிரம்ப ஆட்டி,

நுழையும்நூற் கலிங்கம் ஏந்தி நொய்தென மேனி ஒற்றி
விழைதகு நறும்பட் டாடை விளங்கெழில் முந்நூல் சாத்தித்
தழையும்மான் மதங்கர்ப் பூரம் சந்தனக் கலவை சாத்தி
இழைஅணி வருக்கம் ஏனை ஈர்ந்தொடை அலங்கல் சாத்தி. 360

நுண்ணிய நூலானாய துகிலை ஏந்தி மெத்தெனத் திருமேனி ஈரத்தை ஒற்றிப் புலர்த்தி, விரும்பத் தக்க நல்ல பட்டாடையும், அழகு விளங்கு முப்புரி நூலும் அணிந்து, கத்தூரியும் கருப்பூரமும் விரவிய சந்தனக் குழம்பையும் மட்டித்து, இழைத்த அணித் தொகைகளையும் பிற தேனுடைய மலர் மாலைகளையும் சாத்தி,

நறுவிரைத் தூபம் தீபம் காட்டிநால் வகைவே றுண்டி
அறுசுவைத் திறத்தின் மாண அமுதுசெய் வித்துச் சீதம்
உறுபுனல் உதவிக் கைவாய் பூசிஒண் பழுக்காய் வாசம்
பெறும்இலை முகவா சங்கள் மந்திரம் பேசி நல்கி. 361

நறுமணத் தூபம் தீபம் இவற்றைக் காட்டி, நால்வகையும் அறுசுவையும் உடைய உண்டிகளை நிவேதித்துக், குளிர்ந்த நீரால் அருக்கிய பாத்திய ஆசமனம் அளித்துப் பாகடை (தாம்பூலம்) கொடுத்துத் தக்கோலம், சாதிக்காய் முதலிய மந்திரத் தொடும் வழங்கி,

அகிற்புகை தீபம் எல்லாம் இனிதளித் தரக்கு நன்னீர்
மகிழ்ச்சியிற் சுழற்றிப் பல்கால் வலஞ்செய்து வணங்கிப்போற்றி
இகப்பில்அஞ் செழுத்தும் எண்ணி இன்னன பிறவும் ஆற்றி
முகிழ்த்தபே ரன்பின் ஆன்ற பூசனை முற்றச் செய்தாள். 362

தூப தீபம் காட்டி ஆலத்தி நீர் சுழற்றிப் பலமுறை வலம் வந்து வணங்கித் துதித்து நீக்கமில் அஞ்செழுத்தையும் கணித்து இவை ஒப்பன பிறவும் செய்து அரும்பிய பேரன்பினொடும் விரிந்த பூசனையை முற்றுவித்தனர்.

முற்றுவித் தெழுந்து மீண்டும் மொய்யொளிப் பிலத்தின் பாங்கர்
அற்றமில் அறம்எண் ணான்கும் அருள்வழி வளர்ப்பா ளாகிப்
பற்றலார் புரம்செற் றாரை இம்முறை எண்ணில் பன்னாள்
சிற்றிடை எம்பி ராட்டி பூசனை செய்து வாழ்நாள். 363

முற்றுவித்து எழுந்தருளிப் பேரொளிப் பிலத்தின் அயலே குற்ற மில்லாத அறம் முப்பத்திரண்டனையும் அருள் காரணமாக வளர்ப்பவ ராய் முப்புராரியை இவ்வாறே எண்ணில் அடங்காத பல நாட்கள் எமது பெருமாட்டியார் பூசனையைப் புரிந்து வாழ்வுறும் நாளில்'

அன்னணம் அளவில் காதல் அருச்சனைத் திறத்தின் ஓங்க
மன்னிய மறைநூல் வாய்மை ஆகம வழியிற் பேணும்
தன்னிகர் இமயம் ஈன்ற மதரரித் தடங்கண் செவ்வாய்
மின்னிடைக் கொருநாள் அங்கண் நிகழ்ந்தது விளம்ப லுற்றேன்.

அவ்வாறு அளவில்லாத விருப்பம் பூசனைச் சார்பின்கண் மிகு நிலைத்த வேதாகம விதி வழியிற் போற்றும் இமாசலன் மகளார்க்குப் பூசனையில் நிகழ்ந்த நிகழ்ச்சியை விளம்பத் தொடங்கினேன்.

பண்டுபோற் கம்பை யாற்று மணிப்புனல் படிந்து மெய்யிற்
கண்டிகை நீறு தாங்கிக் கடப்படு நியமம் ஆற்றித்
தொண்டினில் வழாது பூசைத் தொழில்தலை நின்று காதல்
மண்டவே கம்ப னுரை மஞ்சனம் ஆட்டுங் காலை. 365

முன்பு போலக் கம்பா நதியில் நீராடித் திருமேனியில் உருத்தி ராக்கமும் வெண்ணீறும் அணிந்து அனுட்டானம் முடித்துக் கொண்டு தொண்டினில் மாறுபடாமல் பூசனையில் முனைத்து நின்று பேரன்பு பொங்கத் திருவேகம்பரைத் திருமுழுக்காட்டும் பொழுது,

மருமலர்த் தனிமா நீழல் வள்ளலார் மேன்மேல் அன்பு
பெருகிய கருத்தி னுட்குப் பேரருட் கருணை கூர்ந்த
ஒருதிரு விளையாட் டாலே பத்தியின் உறுதி நோக்கித்
திருவருள் புரிவான் எண்ணி இதுதிரு வுள்ளஞ் செய்தார். 366

ஒற்றை மாமரத்தின் நீழலில் எழுந்தருளி யுள்ள வள்ளலார் அன்பு பெருகிய எண்ணமுடைய அம்மையார்க்குப் பேரருட் கருணை மிகுந்த ஒப்பற்ற திருவிளையாட்டினால் பத்தியின் உறுதியைக் கண்டு திரு வருளை வழங்க மதித்து இவ்வாறு திருவுள்ளங்கொண்டனர்.

இறைவன் கம்பாநதி பெருக்கெடுத்து வரச் செய்தல்

விழுமிய அண்டத் துள்ளும் புறத்தினும் விரவுந் தீர்த்தம்
முழுவதும் ஒருங்கு நண்ண முன்னினர் முன்ன லோடும்
ஒழுகுநீர்க் கம்பை யாற்றி னுடன்விராய்க் கடைக்கால் வெள்ளம்
எழுவது கடுப்ப எல்லாப் புனலும்வந் திறுத்த வன்றே. 367

சிறந்த இந்த அண்டத்துள்ளும் புறவுலகினும் உறையுந் தீர்த்தங் கள் யாவும் ஒருங்கு திரண்டு வர நினைத்தார். நினைத்தபோதே ஊழிக் காலத்து வெள்ளம் எழுவது போல ஊறுகின்ற நீரினையுடைய கம்பா நதியுடன் கலந்து எவ்விடத்துள்ள புனலும் வந்து தங்கின

கலி விருத்தம்

மிடைவானவர் திசைகாவலர் புவிமேலவர் காணூஉக்
கடைநாள்அணு கிற்றூலென வெருவிக்கலுழ் கண்ணீர்
இடையாறென விரவக்கொடு வேகத்தொடும் எவ்வெப்
புடைநீர்களும் உடனாகிய கம்பைப்புனல் வருமால். 368

செறிந்த விண்ணோரும், எண்டிசைக் காவலரும், மண்ணவரும் கண்டு உலகம் அழியு நாள் வந்தது என அஞ்சி அழுதலான் ஆய கண்ணீர் உபநதியென வந்து கலக்க மிகு வேகத்தோடும் எவ்விடத்து நீரும் கூடிய கம்பா நதி நீர் விரைந்து வரும்.

படலைக்கரு முகிலும்இடை இடையேபட ரொளிசேர்
தொடலைக்கதிர் உடுவுந்துவ ளுறுபாசடை விரவும்
இடையில்திகழ் மலரும்என இலகக்கக னமும்உட்
படமிக்கெழு பரவைப்புனல் பயமுற்றிட வருமால். 369

பரப்புடைய கரிய மேகங்களும் அவற்றின் இடை இடையே பரவுகின்ற ஒளியுடைய நட்சத்திரங்களும், குழைகின்ற பசிய இலைகளும் இடை இடையே சுலவி விளங்கும் மலர்களும் போலக் காட்சி தர வானமும் உள்ளடங்க மிக்கெழு பரப்புடைய நீர் பயன் விளைய (பயப்பட) வரும்.

அடிநேடிய திருமாலென இருமாநிலம் அகழும்
முடிநேடிய மலரோனென விண்மேற்செல முடுகும்
கடவாமுரண் இருவோரெதிர் கனலாயெழும் உருவம்
உடையானென விரைசெல்புனல் கீழ்மேலுற நிலையும். 370

சிவபிரான் திருவடியைத் தேடிய திருமாலைப் போல மிகப்பெரிய பூமியை அகழும்; திருமுடியைத் தேடிய பிரமனைப் போல விண்ணினிடத்து விரையும்; கைவிடாத மாறுபாட்டை யுடைய அவ்விருவர் முனை நெருப்பு வடிவாய் எழுந்த வடிவுடைய சிவபிரான் என விரைந்து செல்கின்ற நீர் கீழும் மேலும் பொருந்த நிலை பெறும்.

வாழைக்கனி பலவின்கனி மாவின்கனி நெடிய
தாழைக்கனி அகில்குங்குமம் நிறைசந்தனம் மலர்தேன்
வேழத்துணி முதல்இன்னன கொடுமேவலின் உமையாள்
ஊழிற்புரி பூசைக்குரி யவைஉய்ப்பவர் உறழும். 371

வாழைப்பழமும், பலாப்பழமும், மாம்பழமும் நீண்ட தென்னையின் இளநீர்களும், அகிலும் குங்குமமும், சந்தனமும், மலரும், தேனடைகளும், கருப்பந் துண்டங்களும் இவை போல்வன பிறவும் கொண்டு வருதலின் உமையம்மையார் முறைப்படி செய்யும் பூசனைக்குரிய பொருள்களைக் கொண்டு வருபவரை ஒக்கும்.

இருபாலினும் மணிதங்கிய இருகோடு படைத்து
வெருவார்களும் வெருவித்துயர் மேவத்தவ உராறி
மருவார்குழல் உமைஅச்சுற வரலான்உயர் கம்பை
பெருமான்எதிர் பண்டெய்திய பெருவேழமும் நிகரும். 372

இருபுறனும் முத்துடைய இருதந்தங்கள் உடைத்தாய் அச்சுறுத வர்களும் அஞ்சித் துன்புறப் பெரிதும் ஒலித்து, மணந்தங்கிய கூந்தலை யுடைய உமையம்மையார் அஞ்சும்படி வருதலால் உயர்ந்த கம்பாநதி சிவபெருமான் எதிர், முன்னர் முடுகி வந்த ஆபிசாரயாகத்துத் தோன் றிய பெரிய யானையையும் ஒக்கும். இருமருங்கும் மணிகளை ஒதுக்கிய கரைகளை யுடைத்தாய்ப் பெரிதும் ஒலி செய்து வருதலை யானைக்கும் நதிக்கும் சிலேடையாக்கினார்.

அம்மையார் இறைவனைத் தழுவிக்கொள்ளுதல்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

மலைபடு வளங்கள் வாரி மணிபல வரன்றிப் பொங்கி
அலைஎறிந் திரைத்து விம்மி விசும்பெலாம் அடைத்துப் பம்பித்
தலைவரு வெள்ளந் தன்னைத் தடவரை பயந்த திங்கட்
கலைநிறை வதனத் தேவி காண்டலும் வெரூஉக்கொண் டாளால்.

மலைபடு திரவியங்களை முகந்து கொண்டு பல்வகை மணிகளையும் அரித்துக்கொண்டு அதிகரித்து அலை வீசி ஒலித்துப் பூரித்து விசும்பு முற்றவும் இடங்கொண்டு செறிந்து தலைப் பொடு வருகின்ற வெள் ளத்தை இமய மன்னன் மகளாராகிய முழுமதியனைய முகமுடையார் கண்டு அஞ்சினர்.

புடையுறும் இகுளை மாரும் பொள்ளென அச்சம் பூப்பத்
தடைபடா தணுகு நீத்தந் தனைஎதிர் நோக்கி நோக்கிக்
கடல்கிளர்ந் தனைய வெள்ளங் காரண மின்றி என்னே
விடையவன் பூசை நாப்பண் மேவிய வாறென் றெண்ணி. 374

சூழும் பாங்கிமாரும் விரைய வெருவுற முட்டுறாது விரையும் வெள்ளத்தைப் பல்கால் பார்த்துக் கடல் பொங்கினாற் போல வெள்ளம் ஓர் காரணமின்றிச் சிவபெருமானார் பூசையின் இடையே மேவிய வகை என்னே! என்றெண்ணி,

என்னுடைத் தீங்கு தன்னாற் பூசனைக் கிடையூ றாகத்
துன்னிய திதுவாம் என்று சொல்லருங் கவலை கூர்ந்து
சென்னியின் மதியம் வைத்தார் திருவடி இதயத் தெண்ணும்
முன்னர்அப் பெருநீர் வெள்ளம் முடுகிவந் தடுத்த தாக. 375

'யான் செய்த பிழையால் பூசனைக்கிடையூறாக வந்த திதுவாகும் என்று சொல்லுதற் கரிய கவலை மிக்குப் பெருமானார் திருவடிகளை மனத்துட் கொள்ளு முன்னர் அப்பெரிய நீர்ப்பெருக்கு விரைந்து வந் தணுகிற் றாக,

துன்புற நோக்கி நெஞ்சந் துண்ணெனத் துளங்கி ஆவா
உம்பர்வான் தடவிச் செல்லும் ஒப்பரும் பெருநீர் வெள்ளம்
எம்பிரான் மிசையே நண்ணும் இனிச்செய்வ தென்னே என்று
தம்பிரா னார்பால் அன்பு தழைந்தெழும் உள்ளத் தோடும். 376

வருத்தம் மிக நோக்கி மனந் திடுக்கிட்டுக் கலங்கி அந்தோ! வான் விசும்பைத் தடவிப்போகும் உவமம் இல்லாத பெருநீர் எமது பெருமான் மேல் நணுகும். இனிச் செய்யத் தக்கது என்னே! என்று உயிர்களின் தலைவர் மாட்டுப் பொங்கி எழும் அன்புடைய உள்ளத்தோடும்,

அட்டொளிப் பசும்பொன் மேனி வடிவெலாம் அதிர்ப்புக் காட்டப்
பொட்டணி நுதலின் பாங்கர்க் குறுவெயர்த் திவலை பூப்ப
மொட்டிள முலையில் தூங்கும் முத்தொளி வடங்கள் ஆட
இட்டிடை வருந்திச் சால இறுமெனத் துவண்டு வாட, 377

சுடப்பட்ட ஒளியுடைப் பசிய பொன்னொக்கும் திருமேனி வடிவ முற்றும் நடுக்குறவும், திலக மணிந்த நுதலில் குறுவெயர் வரும்பவும், அரும்பனைய இளைய கொங்கைகளில் தொங்கும் முத்தமாலைகள் அசைய வும், சிறிய இடை பெரிதும் வருந்தி முரியுமெனத் தளர்ந்து வாடவும்

கூந்தலின் நறவந் தோய்ந்த குருமலர்ச் சுரும்பர் ஆர்ப்ப
ஏந்தகல் அல்குல் சூழ்ந்த எரிமணிப் பருமம் ஆர்ப்பச்
சேந்தொளி பிலிற்றுஞ் செம்பொற் கிண்கிணி சிலம்போ டார்ப்பக்
காந்துபொற் கடகக் கையிற் கதிர்வளைக் குலங்கள் ஆர்ப்ப 378

கூந்தலில் தேன் மருவிய நிறமுடைய மலரில் வண்டுகள் ஆர வாரிக்கவும், ஏந்தி அகன்ற அல்குலின் மேலிட்ட ஒளிவிடு மணிமேகலை ஆரவாரிக்கவும், சிவந்து சுடர் விடும் செம்பொன்னாலாய கிண்கிணியும் சிலம்பும் ஆரவாரிக்கவும், ஒளி வீசுகின்ற பொன்னாலாய கடகமணிந்த கையில் வளைகள் ஆரவாரிக்கவும்,

ஒருகொடி எழுந்து செம்பொன் உயர்வரைக் குவடு தன்னை
இருகொழுந் திருபாற் போக்கித் தழீஇயென எழுந்து வல்லே
முருகலர் வேதி உம்பர்த் தன்வல முழந்தாள் ஊன்றிக்
கருமணிப் பாவை யன்னாள் கணவரைத் தழுவிக் கொண்டாள்.

ஓர் பொற்கொடி வளர்ந்து மேரு மலைச் சிகரத்தை இருதளிரை இருபுறமும் செலுத்தித் தழீஇக் கொண்டாற்போல விரைய எழுந்து மணம் விரியும் சிவலிங்க பீடத்தின்மேல் தம்முடைய வலது முழந்தாளை ஊன்றி நீலமணியாற் செய்யப் பெற்ற படிமத்தை ஒப்பவர் கணவரை இறுகத் தழீஇக் கொண்டனர்.

இறைவன் தழுவக் குழைதல்

மணிமுலைக் குவட்டி னோடு வளைக்கையால் நெருக்கிப் புல்லித்
தணிவருங் காதல் விம்மக் காதலி தழுவ லோடும்
திணிஇருள் அறுக்குஞ் சோதித் திருவுருக் குழைந்து காட்டி
அணிவளைத் தழும்பி னோடு முலைச்சுவ டணிந்தார் ஐயர். 380

அழகிய கொங்கைச் சிகரத்தோடும் வளையை யணிந்த கைகளால் இறுகத் தழுவி, வற்றாத காதல் பொங்கக் காதலியார் தழுவவும் செறிந்த இருளைத் துரக்கும் சுடர் விடுஞ் சோதித் திருவுருவம் குழைந்து காட்டி அழகிய வளையற்சுவடும் முலைச்சுவடும் ஐயர் பூண்டுகொண்டனர்.

கலி விருத்தம்

வற்றிநின் றருந்தவம் முயன்று பன்மறை
கற்றவர் உணர்வையுங் கடந்த பேரொளி
சிற்றிடைத் திருந்திழைத் தேவி வால்வளைப்
பொற்றழும் பொடுமுலைச் சுவடு பூண்டதே. 381

பட்டினி விட்டு உடம்பு வாடிநின் றரிய தவத்தை முயன்று பல கலைகளையும் கற்று அதனால் ஆய அறிவையும் கடந்த பேரொளிப் பொருள் சிறிய இடையையும் திருந்திய அணிகளையும் உடைய தேவியாருடைய வெள்வளையின் அழகிய வடுவொடும் முலைச் சுவடும் அணியாகப் பூண்டு கொண்டதே!

உருஅரு அணுமலை உண்மை இன்மைமற்
றிருள்ஒளி யன்றிநின் றிலகு பேரொளி
மருமலர்க் கருங்குழல் மங்கை வால்வளைப்
பொருதழும் பொடுமுலைச் சுவடு பூண்டதே. 382

உருவமும் அருவமும், அணுவும் மலையும், உண்மையும் இன்மையும் இருளும் ஒளியும் ஆகிய இவையிற்றின் வேறுபட்டுநின்றுவிளங்கும் பேரொளி, மணமுடைய மலரணிந்த கரிய கூந்தலையுடைய காமாட்சி அம்மையின் வெள்ளிய வளைகளின் அழுந்து தழும்பொடு முலைச்சுவட்டினையும் அணியாகப் பூண்டதே.

பெருவிரல் அளவையின் உளத்திற் பேணிநின்
றுருஉயிர் முழுவதும் ஆட்டும் ஒள்ளொளி
அருள்பொழி குறுநகை அணங்கு வால்வளைப்
புரிதழும் பொடுமுலைச் சுவடு பூண்டதே. 383

ஆன்ம அறிவின்கண் விரும்பிப் பெருவிர லளவாக நின்று நின்று உடம்புகளையும் உயிர்களையும் முற்றவும் தொழிற்படுத்தும் ஒளிக்குள் ஒளி அருளைப் பொழிகின்ற புன் முறுவலையுடைய அம்மையாரின் வெள் வளையாற் செய்த தழும்பொடு முலைச்சுவட்டினையும்பூண்டுகொண்டதே.

உயிர்ப்பினை ஒடுக்கியே விழித்து றங்குவோர்
அயர்ச்சியில் அகக்கணால் நோக்கும் ஆரொளி
குயிற்பெடைச் சின்மொழி இறைவி கோல்வளைப்
புயத்தழும் பொடுமுலைச் சுவடு பூண்டதே. 384

உச்சுவாசம் நிச்சுவாசங்களை ஒடுக்கியே சாக்கிரத்தே அதீதத்தைப் புரிவோர் தளர்தல் இல்லாத உள்ளுணர்வால் நோக்கப்படும் அரிய ஒளி, பெண்குயிலை ஒக்கும் இனிமை அமைந்த சிலவாகிய மொழியைப் பேசும் இறைவியார் கைவளைத் தழும்போடு முலைச் சுவடும் பூண்டதே!

என்றும்ஓர் இயல்பினிற் பகல்இ ராஅற
நின்றவர் அன்பினுக் கணிய நீள்ஒளி
மென்றளிர்ச் சீறடி விமலை கைவளைக்
கொன்தழும் பொடுமுலைச் சுவடு கொண்டதே. 385

சகல கேவலம் நீங்க என்றும் ஒரு தன்மையாய சுத்த நிலையில். நின்றவர் தம் மெய்யன்பினுக்கு அவரினும் அணித்தாய பேரொளி மெல்லிய தளிரை ஒக்கும் சிறிய அடிகளையுடைய மலமில்லாதவராகிய அம்மையாரின் கைவளைகளின் பெருமை பொருந்திய தழும்பொடு முலைச்சுவடும் ஏற்றதே!

மனத்திடைத் தனதடி நினைந்த மாத்திரை
வினைப்பெரும் பிறவிவேர் அகழும் மெய்யொளி
அனைத்துல கீன்றருள் அமலை பல்வளை
இனத்தழும் பொடுமுலைச் சுவடும் ஏற்றதே. 386

மனத்தின்கண் தன்னுடைய திருவடிகளை எண்ணிய அளவானே வினையான்வரும் பெரியபிறவியை வேரொடும் அகழும் உண்மையொளி, அனைத்துயிரையும் பயந்து அருள் செய்யும் விமலையாரின் பலவாகிய வளைத்தழும்போடு முலைச்சுவடும் பூண்டதே!

வடவரை குழைத்ததோர் பவள மால்வரை
முடிவொடு முதலிலா மாவின் மூலத்து
மடநடை இளங்கொடி வளைக்க ரத்தொடு
குடமுலைக் கம்மவோ குழைந்து மெல்கிற்றே. 387

மேருமலையை வில்லாக வளைத்த ஒப்பற்ற பவளப் பெருமலை ஆதியும் அந்தமும் இல்லாத மாவினது அடியில் மெல்லிய நடையினையுடைய இளங்கொடியாள் வளைக்கரத்தினுக்கும் குடத்தை ஒக்கும் முலைக்கும் குழைந்து இளகிற்று அம்மவோ!

வானவர் யாவரும் வந்து போற்றுதல்

கலிநிலைத் துறை

அம்பொன் வால்வளைத் தழும்பொடு முலைச்சுவ டணிந்து
கம்ப வைப்புடை வாழ்க்கையார் கருணைகூர்ந் தருளி
நம்பும் ஓகையிற் பெருங்களி சிறத்தலும் நலமார்ந்
தும்பர் இம்பரின் உயிரெலாம் உவகையிற் களித்த. 388

மிக் கழகிய வெள்ளிய வளைகளின் வடுவொடு முழுச்சுவட்டினையும் அணிந்து திருவேகம்பத்தில் வீற்றிருப்பவர் கருணை மேலிட்டருளி விரும்பும் உவகையால் விசேடப் பெருங்களிப் பெய்தலும் நலம் நிரம்பி விண்ணிலும் மண்ணிலும் உள்ள பல்லுயிர்களும் மகிழ்ச்சியாற் களித்தன.

திக்கும் வானமு மாசறத் திகழ்ந்தொளி படைத்த
தக்க பல்லியம் எண்ணில தழங்கின இளங்கால்
புக்கு மெல்லெனப் புதுமணங் கொண்டெழுந் தசைந்த
இக்க டற்பெரும் புவியெலாம் அடங்கின துகள்கள். 389

எண்டிசைகளும் ஆகாயமும் குற்றமற விளங்கி, ஒளி பெற்றன. தக்க வாச்சியங்கள் அளவில தாமே முழங்கின. தென்றற் காற்று மெத் தெனப் புகுந்து புதிய மணத்தைக் கொண் டெழுந் தசைந்தது. கடல் சூழ்ந்த இப்பெரும் பூமி முழுவதும் புழுதி அடங்கின.

மந்தி ரத்தழல் வலஞ்சுழித் தெழுந்தொளி திகழ்ந்த
சுந்த ரப்பொலம் பூமழை நிரந்தரஞ் சொரிந்த
சந்த மாமறை தனித்தனி மகிழ்ந்தெழுந் தார்த்த
எந்த வையமும் மயலிடை இன்றிஓங் கினவால். 390

மந்திரத்தால் வளர்க்கும் வேள்வித்தீ மங்கலமாக வலஞ் சுழித்து ஓங்கி ஒளி விளங்கின. கற்பக மலர் மழை இடைவிடாமல் சொரிந்தன. வண்ணமுடைய பெரு மறைகள் தனித்தனியே மகிழ்ந்து மிக் கொலித் தன. எவ்வுலகமும் மயக்கம் நீங்கித் தெளிவால் உயர்ந்தன.

எங்கும் இன்னணம் நிகழ்வுழி இருமதக் கலுழித்
துங்க வெண்கரிக் கோமுதல் சுராசுரர் எல்லாம்
தங்க ளின்துணைக் கிழத்தியர் தம்மொடும் வல்லை
அங்க ணைந்தனர் அகம்நிறை உவகைமீக் கிளைப்ப. 391

எவ்விடத்தும் இவ்வாறு நிகழுங்கால் பெரிய மத வெள்ளத்தையும் புனிதத்தையும் உடைய வெள்ளானைக் கதிபதி யாகிய இந்திரன் முதலான தேவரும் அசுரரும் யாவரும் தங்களுடைய வாழ்க்கைத் துணையருடன் உள்ளம் நிறைந்த மகிழ்ச்சி பொங்கி யெழ விரைவில் திருவேகம்பத்தை வந் தணுகினர்.

புண்ட ரீகமென் பொகுட்டணைக் கடவுளும் புதுப்பூந்
தண்டு ழாய்முடித் தனிப்பெருந் தலைவனும் இருகேழ்
முண்ட கத்துறை முதல்வியர் தமைஉடன் கொண்டு
மண்டு பேரின்பங் கிடைத்ததின் றெமெக்கென வந்தார். 392

தாமரைத் தவிசுடைய பிரமனும், திருமாலும் இருவகை நிற முடைய வெண்டாமரை செந்தாமரை மலரி லுறையும் கலைமகளும் திரு மகளுமாகிய தலைவியரையும் உடன் கொண்டு மிக்க பேரின்பம் இன் றெமக்கு வாய்த்ததென மதித்து வந்தனர்.

சோதி நாரதன் முதல்சுரர் முனிவரும் வசிட்ட
ஞதி யாயபல் பிரமஙன் முனிவரும் அளவில்
காதல் முந்துறு களிப்பொடுங் குழாங்கொடு கரத்தின்
மீது தண்டமும் வேணியும் விளங்கவந் தடைந்தார். 393

சுடரும்நாரதர் முதலானதெய்வமுனிவரரும், வசிட்டர் முதலான நற் பிரம முனிவரரும் அளவில்லாத காதல் முற்படு களிப்பொடு குழாங் குழாமாகக் கைத் தண்டொடும் சடைமுடியொடும் வந்தடைந்தனர்.

சத்தி மார்திதி அதிதிமற் றுறுதக்கன் மக்கள்
ஒத்த யோகினிப் பகுதியர் அருந்ததி உலோபா
முத்தி ரைத்திருந் திழைஅன சூயையே முதலாம்
இத்தி றத்தவர் யாவரும் மகிழ்ந்துவந் திறுத்தார். 394

திதி அதிதி என்னும் காசிப முனிவரர் துணைவியராகிய பத்தினி மாரும் மேலும் தக்கனுடைய செல்வியராகிய அசுவினி முதலானோரும் யோகினிக் குழாத்தோரும் அருந்ததி உலோபா முத்திரையாகிய திருந் திழையாரும், அனசூயை முதலாம் மங்கையரும் இவர் தம்மை யொப் பவரும் யாவரும் மகிழ்ந்து வந்து தங்கினர்.

சனக ஞதியர் தமிழ்முனி தவத்துரு வாசன்
முனிவர் சூழ்உப மன்னியன் முதுதிறற் பூதர்
நனிஉ ருத்திரர் கணதிபர் நந்திஎம் பெருமான்
இனையர் யாவரும் ஆயிடை ஒருங்குவந் திறுத்தார் 395

சனகாதியர் நால்வரும், அகத்தியரும், தவமுடைய துருவாசரும், முனிவர் சூழ் தலைமையுடைய உபமன்னியரும், பெருவலியுடைய பூத ரும், பல் லுருத்திரரும், கணதிபரும், நந்தி எம்பெருமானும் இத்திறத் தினர் யாவரும் வந்தனர்.

நண் ணி யாவரும் நாயகி தழுவிடக் குழைந்த
அண் ண லார்திருக் கோலம்நேர் கண்டுகண் டார்த்தார்
விண் ணி றைந்தபே ரானந்த வெள்ளத்தில் நிறைந்தார்
கண் ணி னுற்பெறு பெரும்பயன் கைவரப் பெற்றார். 396

யாவரும் நண்ணி அம்மையார் தழுவக் குழைந்த தலைவர்தம் திருக்கோலத்தைக் கண்ணெதிரே பல முறையும் கண்டு மகிழ்ச்சியால் ஆரவாரித்தனர், எங்கும் நிறைந்த பேரானந்தப் பெருங் கடலில் வியாப்பிய முற்றனர். கண்ணினால் பெறத்தக்க பேற்றினைக் கைக் கொண்டனர்.

அலர்ந்த வாள்விழி இன்பநீர் சொரியநின் றழுதார்
மலர்ந்த காதலின் வடிவெலாம் புளகங்கள் மலிந்தார்
கலந்த சிந்தையார் அருட்பெருங் கருணையே நோக்கிப்
புலந்த ழைத்திடச் சென்னிமேல் அஞ்சலி புனைந்தார். 397

மலர்ந்த ஒளியுடைய விழிகள் ஆனந்த வெள்ளத்தைப் பொழிய நின்றழுதனர். விரிந்த காதலால் மேனி முழுவதும் புளகங்கள் மிக்கனர். புணர்ந்த உள்ளத்தராகிய அம்மை அப்பர் திருவருட் பெருங் கிருபையையே எண்ணி மெய்யறிவு மலர்ந்திடச் சிரமேல் கரங்குவித்தனர்.

ஆயி ரங்கதிர் ஆழியங் கடவுளும் அயனும்
ஆயி ரம்விழி பெற்றிலேம் என்றழுங் கினர்கள்
ஆயி ரம்விழி யுடன்முழு தாளியும் அமையா
ஆயி ரங்கண்இவ் வற்புதம் காண்பதற் கென்றான். 398

ஆயிரஞ் சூரியரை ஒக்கும் ஒளிவிடும் சக்கரத்தையுடைய திருமாலும் பிரமனும் காண ஆயிரங் கண்கள் பெற்றிலேமே என்று வருந்தினர். ஆயிரம் விழிகளை உடம்பிலே கொண்ட இந்திரனும் இந்த ஆயிரங்கண்கள் நிரம்பா இவ்வற்புதம் காண்பதற் கென் றரற்றினான்.

இன்ன தன்மையின் யாவரும் தொழுதெழுந் தாடி
மன்னும் ஏழ்கடல் முழக்கெனப் பழிச்சினர் வாழ்ந்தார்
அன்ன வர்க்கவண் நிகழ்ந்தபே ரானந்தம் இதழிச்
சென்னி யாரன்றி மற்றெவர் தெளிதரற் பாலார். 399

இவ்வியல்பில் யாவரும் தொழு தெழுந்தாடி ஏழ் கடலின் ஒலியென மருளப்பாடினர்; பரவினர்; வாழ்வு பெற்றனர். அத்தன்மையர்க்கு உண்டாய பேரின்பத்தைக் கொன்றை மலர் மாலையை முடித்த பிரானாரன்றி மற்றி யாவரே உணர வல்லார்.

திருவேகம்பர் காட்சி கொடுத்தல்

அந்த வேலையின் இறைவிதன் அணிவளைத் தழும்பு
சந்த மென்முலைச் சுவடுதோய் தனியுருப் பொலியச்
சுந்த ரந்திகழ் சுடரொளி இலிங்கத்தி னின்று
முந்து தோன்றினார் மூவருக் கறிவரு முதல்வர். 400

மூவர்க்கும் அறிவரிய தலைவர் அப்பொழுது அம்மையாருடைய அழகிய வளைத்தழும்பும் அழகிய மெல்லிய முலைச் சுவடும் தோய்ந்த ஒப்பற்ற வடிவம் விளங்க, அழகு பொலியும் சுடரொளிச் சிவ லிங்கத்தினின்றும் முற்பட்டுக் காட்சி தந்தனர்.

தோன்றி வாள்நிலாக் குறுநகை தோற்றிமீக் கடுக
ஏன்ற வெள்ளநீர் சருவதீர்த் தப்பெயர் இசையான்
மான்று மேதக நிறுவினர் மாதினைத் தழீஇக் கொண்
டான்ற காதலால் செய்யவாய் முத்தம்உண் டளித்தார். 401

வெளிப்பட்டுப் புன் முறுவல் நிலவரும்பக் காட்டிப்பெரிதும்விரைய மேவிய நீர்ப் பெருக்கினைச் சருவ தீர்த்தம் என்று புகழமைந்த பெயருடனே மூழ்கினோர் மேம்பாடெய்த நிலைபெறுவித்தவராகிய பெருமானார் உமையம்மையாரை இறுகத் தழுவிக்கொண்டு நிரம்பியகாதலால் செவ்விய முத்தம் உண்டு அருள் செய்தார்.

தோகை மஞ்ஞையஞ் சாயலாய் துளங்கிஉள் வெருவேல்
ஓகை யுற்றனம் காண்டிநீ என்றுரைத் தருள
வாகை ஏற்றினர் தம்மண வாளநற் கோலம்
ஏக நாயகி நோக்கினள் இணைவிழி களிப்ப. 402

'தோகையை யுடைய மயில்போலுஞ் சாயலினை யுடையாய்! உள்ளம் கலங்கி அஞ்சாதேகொள். நின் பூசனைக்கு மகிழ்ச்சி எய்தினோம்' காணென் றுரைத்தருள வென்றி விடையார் தம் திருமண வாளராய் விளங்கும் நல்ல கோலத்தை ஒப்பில்லாத தனி நாயகியார் இரு விழிகளும் களிப்புற நோக்கினர்.

தழீஇய கைகளை விடுத்தெழுந் தவனியில் தாழ்ந்து
குழீஇய அன்பினால் அஞ்சலி சென்னிமேற் குவித்தாள்
கழீஇய செம்மணி வடிவினைக் காண்தொறும் உலவாக்
கெழீஇய காதலாற் கிளர்ந்தெழும் உவகையில் திளைத்தாள்.

தழுவிய கைகளை விடுவித்து எதிரெழுந்து பூமியில் வீழ்ந்து வணங்கி நின்று திரண்ட அன்பினால் சென்னிமேல் கரங்களைக் குவித்தனராய்ச் சாணை பிடித்த மாணிக்கத்தை ஒக்கும் திருமேனியை நோக்குந் தோறும் வற்றாது வளர்ந்த பொருந்திய காதலாலே பொங்கி எழும் மகிழ்ச்சியிற் படிந்தனர்.

அம்மையார் துதித்தல்
அறுசீரடி யாசிரிய விருத்தம்

நெடியவன் பிரமன் காணா நின்மலக் கொழுந்தே போற்றி
அடியனேற் கபயம் நல்கும் அருட்பெருங் கடலே போற்றி
படிமுதல் ஆரு ருகி வேறுமாம் பரனே போற்றி
கடிமலர்த் தனிமா நீழற் கடவுளே போற்றி போற்றி. 404

'திருமாலும் பிரமனும் அறியாத மலமின்றிமுளைத்த கொழுந்தே போற்றி. வெள்ளங் கொண்டு வெருவினேற்கு பயங்கெடுத்தருளும் பேரருட் கடலே போற்றி, மண் முதலிய முப்பத்தாறு தத்துவங்களுமாய் அவற்றின் வேறுமாய் உடனுமாய் நிற்கும் மேலோனே போற்றி. மணமுடைய மலர்களைக்கொண்ட ஒப்பற்ற மாவினது நிழலில் வீற்றிருக்கும் கடவுளே போற்றி போற்றி.

பெறலரும் பெரும்பே றின்று பெற்றனன் அடியேன் போற்றி
முறைமுறை உலக மெல்லாம் முகிழ்த்தளித் தழிப்பாய் போற்றி
அறைகழல் கறங்க மன்றில் ஐந்தொழில் நடித்தாய் போற்றி
நிறைமலர்த் தனிமா நீழல் நித்தனே போற்றி போற்றி. 405

'பெறற்கரிய பெரிய செல்வத்தை இன்று அடியேன் பெற்றேன் போற்றி. தொடர்ந்து உலகங்கள் அனைத்தையும் படைத்துக் காத்து அழிப்பவனே போற்றி. ஒலிக்கின்ற வீரக்கழல் ஒலிக்க த் திருவம்பலத்தில் ஐந்தொழில் புரியும் திருக்கூத்துடையாய் போற்றி. நிறைந்த மலர்களை யுடைய தனிமா நீழலில் எழுந்தருளியுள்ள சத்தியனே போற்றிபோற்றி.

தரைபுனல் இரவி இந்து தழல்உயிர் வளிவான் என்று
உரைபெறு வடிவோர் எட்டுர் உடையனே போற்றி போற்றி
வரையெழும் பரிதி செந்தீ மதி அமை விழியாய் போற்றி
விரைமலர்த் தனிமா நீழல் வித்தகா போற்றி போற்றி. 406

'நிலம், நீர், நெருப்பு, காற்று, வானம், சூரியன், சந்திரன், ஆன்மா எனப் பேசப் பெறும் எட்டினையும் ஒப்பற்ற திருமேனியாக உடையவனே போற்றி போற்றி. உதயகிரியில் எழும் சூரியன், செந்தீ, சந்திரன் இம்மூன்றனையும் அமைந்த விழியாக வுடையோனே போற்றி போற்றி. மணமுடைய மலர்களைக் கொண்ட தனிமா நிழலில் வீற்றிருக்கும் சதுரனே போற்றி போற்றி!'

கறைமணி மிடற்றாய் போற்றி கண்ணினுள் மணியே போற்றி
மறவியின் வழிபட் டோர்க்கும் வழங்குபே ரருளாய் போற்றி
நிறைபரஞ் சுடரே போற்றி நெஞ்சக விளக்கே போற்றி
மறைமுதல் தனிமா நீழல் வள்ளலே போற்றி போற்றி. 407

'நீல மணியை ஒக்கும் கழுத்தினனே போற்றி. கண்ணினுள் மணிபோல்வாய் போற்றி. அபுத்தி பூர்வமாக வழிபாடு செய்தோர்க்கும் வழங்கு பேரருளுடையோனே போற்றி. நிறைந்த சிறந்த சுடரே போற்றி. நெஞ்சிடங்கொள் விளக்கே போற்றி. வேத மூலமாகிய தனிமா நிழலில் வீற்றிருக்கும் வள்ளலே போற்றி.போற்றி.'

முன்னுறு பொருள்கட் கெல்லாம் முற்படு பழையாய் போற்றி
பின்னுறு பொருள்கட் கெல்லாம் பிற்படு புதியாய் போற்றி
புன்மதி யாளர் தேறாப் பூரண முதலே போற்றி
சின்மயத் திருவே கம்ப சிவசிவ போற்றி போற்றி. 408

'காலத்தால் முற்பட்ட பொருள்கள் எவற்றினுக்கும் முற்பட்ட பழையோனே போற்றி. புத்தம் புதிய பொருள்கள் அனைத்தினுக்கும் பிற்பட்ட புதியோனே போற்றி. அற்ப அறிவினர் தெளியாத எங்கும் நிறைவுடைய முதலே போற்றி. மெய்யறிவு மயமான திருவேகம்ப போற்றி. சிவசிவ போற்றி போற்றி.'

அம்மையாருக்கு இறைவன் திருவருள் செய்தல்

கலி விருத்தம்

என்றுளம் நெக்குருகி எல்லையில் அன்பினளாம்
மன்றல் மலர்த்தொடையல் வார்குழல் போற்றிசெயக்
கொன்றை முடிச்சடையார் பேரருள் கூர்ந்தருளித்
துன்றிய கேண்மையினுன் மற்றிது சொல்லினரால். 409

என்று மனம் நெகிழ்ந்து உருகி அளவிட லரிய அன்புடையராய் மணமுடைய மலர் மாலை சூடிய ஏலவார் குழலி யம்மையார் போற்றி செய்யக், கொன்றை மலர் மாலையைச் சடையி லுடையவர் பேரருள் மீக் கூர்ந்து செறிந்த உரிமையினுல் இதனை அருளுவர்.

பொங்கி மணங்கமழப் பூசு நறுங்களப
மங்கல மென்முலையாய் காளி மகிழ்ந்திதுகேள்
அங்கனை நின்னெடுநாம் வேறலம் ஆரமுதத்
திங்களும் வெண்ணிலவும் போலு மெனத்திகழ்வோம். 410

'மணம் மிக்குக் கமழும்படி நறிய கலவையைப் பூசு நலமுடைய மென் முலையாய்! காளீ! (கறுப்பி) அங்கனையே! இதனை மகிழ்ந்துகேள். நின்னெடு வைத்து நாம் வேறலம்; ஒருவே மாவேம். அரிய அமுதத் தைப் பொழியும் சந்திரனும் அதன் வெள்ளிய நிலவும் போலக் குண குணியாய் விளங்குவோம்.

இலளிதை யாம்பெயரான் முன் இவண் எம்உருவிற்
பலர்தொழ வந்துலகம் பங்கய னுதியெலாம்
மலர்தர நல்கினைபின் மற்றெரு கற்பமதிற்
சலமறு மெய்ஞ்ஞான சத்தியின் நீங்கியரோ. 411

'இலளிதா தேவி என்னும் பெயரொடு முன்னர் எம் வடிவினின் றும் பலரும் தொழத் தோன்றி உலகையும், பிரமன் முதலான யாவரை யும் ஒடுங்கிய நிலையினின்றும் விரிதரப் படைத்தனை. பின்பு வேருெரு கற்பத்தில் கோட்ட மறுக்கும் மெய்ஞ்ஞான சத்தியாகத் தோன்றி,

அந்தண னுக்கருளி ஆக்கிய துப்புதவிக்
கந்த மலர்க்கடவுள் கான்முளை தன்மகளாய்
நிந்தனை செய்தவனை நீத்து வரைக்கிறைபால்
தந்து மறித்தும்எமை அன்பின் மணந்தனையால். 412

'பிரமனுக்கு அருள் செய்து படைக்கும் ஆற்றலை வழங்கி அப் பிரமனுக்கு மகனுகிய தக்கனுக்கு மகளாய்த் தோன்றிப் பழித்த அத் தக்கனை வெறுத்துநீங்கி இமய மன்னனுக்கு மகளாகி வந்துமீண்டும் எம்மை அன்பொடும் மணந்து கொண்டனை.'

இத்தகு நீஉலகம் யாவையும் உய்யுமுறை
அத்தனி மந்தரமேல் யாம்அரு ளாற்றின்நிலைஇப்
பொய்த்திற னில்கழுவாய் இன்று புரிந்தனையாற்
கொத்தலர் மென்குழலாய் வேட்டது கூறுகென. 413

'இவ்வியல்புடைய நீ! உலகுயிர்கள் கடைத்தேறும்படி சிறந்த மந்தர மலைக்கண் யாம் ஏவிய வழியில் நின்று மெய்யே வன்மையுடைய கழுவாயாகும் பூசனையை இந்நாள் புரிந்தனை ஆகலின், கொத்துக்கள் மலர்தற் கிடனாகிய மெல்லிய கூந்தலாய்! நீ விரும்பிய வரங்களைக் கூறுக' என,

வன்றனி மால்விடையாய் மந்தரம் வண்கயிலை
வென்ற வினைச்சிவலோ கத்தினும் மேதகவுற்
றென்றும் நமக்கினிதாம் இந்நகர் ஆதலின்இங்
கொன்றுநர் யாவர்களும் முத்தி யுறப்பணியாய். 414

'மிகவும் ஒப்பற்ற பெரிய விடையை யுடையீர்! மந்தர மலை, வளமுடைய திருக்கயிலை, வினையை இகந்த சிவலோகம் என்னும் இம் மூன்றினும் சிறப்பெய்தி நமக்கு எந்நாளும் மகிழ்ச்சியை விளைவிக்கும் இடம் இக்காஞ்சி ஆகலின் இவ்விடத்தே பொருந்தி வாழ்வோர் யாவரும் முத்தியை அடையுமாறு அருள் செய்வீராக.'

மறந்தும் அறம்பிறழாக் காஞ்சி வளம்பதியின்
அறிந்துசெய் தீவினையும் அன்றி எழுந்தனவும்
பிரிந்து தவப்பயன்ஒன் றெண்ணில வாய்ப்பெருகி
அறம்பொருள் இன்பமெலாம் ஆகவும்நீ அருளாய். 415

'வாழ்வோர் மறந்தும் அறத்தின் வழியை விட்டகலாத காஞ்சி யம்பதியின்கண் ஒரோவழிப் புத்தி பூர்வமாகச் செய்த தீவினையேயாக அபுத்தி பூர்வமாகச் செய்த தீவினையே ஆக அவை பந்தியாது நீங்கி, அறிந்தோ அறியாமலோ செய்த நல்வினைப்பயன் ஒன்று அளவிலவாய்த் தழைத்து அறம், பொருள் இன்பம் யாவும்வாய்க்கவும் நீவிர்அருளுதிர்.'

இங்கிவை வேண்டும்எனக் கெம்பெரு மானெனமீப்
பொங்கு பெருங்கருணைப் பூரணி வேண்டுதலும்
சங்கணி வெண்குழையார் தந்திரு வுள்ளமகிழ்ந்
தங்கலுழ் மேனியினாய் கேள்இது வென்றருள்வார். 416

'எமது பெருமானே! இவ்வரங்கள் எனக்கு இவ்விடத்தே வேண்டு' மென்று மேன்மேலெழும் பெருங்கருணையை யுடைய பூரணி (எங்கும் நிறைந்தவள்) வேண்டுங் காலைச், சங்கை வெண் குழையாக அணிந்தவர் தமது திருவுள்ள மகிழ்ந்து 'அழகொழுகும் வடிவுடை யோய்! இதனைக் கேள்' என்று வாய் மலர்வார்.

எண்சீரடி யாசிரிய விருத்தம்

எய்சிலை நீள்புருவத் தேந்திள மென்முலையாய் எம்மிடை எம்அடியார் தம்மிடை எய்தலுறச், செய்பிழை யன்றிவருந் தீவினை ஏனையெலாம் சீர்வளர் காஞ்சியினில் தேய்ந்து தவம்பெருகி, மெய்திகழ் நாற்பயனும் மேவ நிறீஇயினமால் வேறும் உனக்-கினிஎன் வேண்டுவ தென்றிடலும், மொய்யொளி மேனியினாள் முன்தொழுதேத்திஇள மூரல் முகத்தலரப் பேசுத லுற்றனளால்.

'அம்பு எய்ய நின்ற வில்லை ஒக்கும் நீண்ட புருவத்தினையும் நிமிர்ந்த கொங்கையையும் உடையாய்! எமக்கும் எம் அடியவர்க்கும் சேருமாறு செய்யப்படும் குற்றங்களின் விளைவாகிய தீவினை தவிரப் பிற பாவங்கள் காஞ்சியில் வசித்தலால் தேய்ந்து தவம் வளர்ந்து உறுதி விளங்கும் அறம், பொருள், இன்பம், வீடாகிய நாற்பயனும் பொருந்துமாறு அமைத்தோம். மேலும், இனி உனக்கு வேண்டுவது யாது?' என வினவலும், செறிந்த ஒளியுடைத் திருமேனியையுடைய அம்மையார் முன் தொழுது வணங்கிப் புன் முறுவல் பூப்பப் பேசுவர்,

அறுசீரடி யாசிரிய விருத்தம்

முதுகுடுமிப் பொலங்குவட்டு மந்திரத்தின் முன்னர்எனைக் காளீ என்று, புதுமையுற விளித்தனையால் அதுகேட்ட துண்டிலை-போல் இருந்தேன் அந்நாள்,இதுபொழுதும் இவ்வாறே விளித்தரு-ளிச் செய்தாய்மற் றிதனை மாற்றி, விதுவணியுஞ் சடையானே கவுரநிறம் பெறவேண்டும் அருளாய் என்றாள். 418

'உயர்ந்த உச்சியையுடைய பொன்மயமான மந்தரமலையில் முன்னோர்கால் அடியேனைக் 'காளீ' என்று வியப்புறுமாறு அழைத்தனை. அதனைக் கேளாமை போல இருந்து விட்டேன் அக்காலத்தில். இப்பொழுதும் இவ்வாறே கறுப்பி என்ற பொருளில் அழைத்தருளினை. இந்நிறத்தை நீக்கிப் பிறையைஅணிந்த பெருமானே பொன்னிறத்தைப் பெறவேண்டும் அருள் செய்வாய்' என்று வேண்டினர்.

ஆண்டகையார் அதுகேளாக் குறுமூரல் முகத்தரும்ப அருளிச் செய்வார்,மாண்டவலித் தயித்தியரால் அலைப்புண்ட இவ்-வுலகம் வாழ்வான் எண்ணி, ஈண்டும்உனை அவ்வாறு விளித்தேம்-இக் கருங்கோசம் இன்னே மாற்றி, வேண்டியவா கவுரநிறம் பெறுதிநீ விண்டிடும்அக் கோசந் தன்னில். 419

ஆளும் இயல்பினர் அதனைக் கேட்டுக் குறுநகையுடன் அருள்வர். 'மிக்க வலியுடைய அசுரரால் அலைக்கப்படுகின்றதாகிய இவ்வுலகம் வாழும்பொருட்டு இப்பொழுதும் உன்னை அங்ஙனம் அழைத்தேம், இக்கரிய உடற்சட்டையை இப்பொழுதே நீக்கி விரும்பியவாறு பொன் னிறத்தைப் பெறுதி நீ. கழன்றிடும் அக்கரிய சட்டையில்,

கூற்றம்உறழ் சும்பனேயும் நிசும்பனேயுங் கொலேசெய்யக் குறுகார் உட்கத், தோற்றுதிறற் கவுசிகியாந் துர்க்கைஇனித் தோன்றும்இதோ காண்டி என்ருர், கோற்ரெடியும் அக்கணமே வரியரவின் மூதுரிபோற் காளமேனி, மாற்றினுள் மணிக்கவுர உருப்பெற்ருள் காதலரை வணங்கிச் சொல்வாள். 420

'யமனெடு மாறுபடுகின்ற சும்பனேயும் நிசும்பனேயும் கொலே செய்யப் பகைவர் அஞ்சத் தோற்றுகின்ற வலியுடைய கவுசிகி என்னும் துர்க்கை இப்பொழுது தோன்றுவள். இங்கே காண்' என்றனர். கோற்ரெடியாரும் அக்கணமே வரிகளேயுடைய பாம்பினது பழைய தோல் கழலுமாறு போலக் கரிய திருமேனியை மாற்றினர். அழகிய கவுர நிற வடிவு பெற்றனராய் நாயகரை வணங்கிக் கூறுவார்.

நாதனே நின்னருளால் இப்பொழுதே நவைக்காள வடிவம் மாற்றிக், காதல்புரி கவுரியென வயங்குற்றேன் ஆதலின்இக் காஞ்சி மாடே, மாதரொடு வானவர்தங் குழாம்நெருங்கப் பனி-வரையின் நிகழ்ந்த வண்ணம், மேதகைய கடிமன்றல் எமக்கிந்-நாள் உண்டாக விழைகின் றேனல். 421

'நாயகரே! நும் அருளினல் இப்பொழுதே குற்றமுடைய கரிய வடிவத்தை மாற்றிக் காதலேச் செய்விக்கும் கவுரியாக விளங்கு கின்றேன். ஆகலான், இக்காஞ்சியின்கண் மகளிரும் தேவரும் கூடி நெருங்க இமய மலேயில் நிகழ்ந்தாங்குச் சிறப்புடைய திருமண மங்கலம் அடியேற்கு இந்நாள் நிகழ விரும்புகின்றேன்.'

உருத்திரர்கள் கணநாதர் பலவேறு கடவுளர்கள் உவண ஊர்தி, மருத்தமல ரணேப்புத்தேள் ஐந்தவித்த மாதவர்மற் றுள்-ளோர் யாரும், கருத்துவகை யுறத்தத்தம் பன்னிகளோ டிங்கெம்-மைக் கண்ணிற் காணும், அருத்தியினல் ஒருங்கணேந்தார் அண்ணலே அருளென்று பின்னும் வேண்டும். 422

உருத்திரர்களும், கணநாதர்களும், பல்வகையராகிய தேவர்க ளும், கருடவாகனராகிய மாலும், பிரமனும், ஐம்பொறிகளே அடக்கிய முனிவரரும், பிறரும் மகிழ்ச்சி மிகத் தம் வாழ்க்கைத் துணேவியரோடு இங்கு எம்மைக் கண்ணுற் காணும் பெரு விருப்பினல் ஒன்றுபடக் குழுமி வந்தனர். ஆகலின், அண்ணலே! அருள் செய்' என்று பின்ன ரும் வேண்டுவர்,

இவ்வதுவை கவுரிதிருக் கலியாணம் என்றுலகின் வழங்க வேண்டும், செவ்வியுற ஐயாட்டைக் கன்னியென யான்ஈங்குச் சிறந்த வாற்ருற், பௌவநீர் அகல்வரைப்பிற் பைப்பாந்தள் மணி-அல்குற் பணேத்தோள் மாதர், எவ்வெவரும் ஐயாண்டிற் கன்னியர்-கள் கவுரியரென் ருதல் வேண்டும். 423

'இத்திருமணம் கவுரி திருமணம் என் றுலகிற் பேசப்பட வேண்டும். செம்மை விளங்க ஐந்தாண்டுடைய கன்னியாக யான் இங்கே சிறந்த காரணத்தால் கடலுலகில் பாம்பின் படம் போலும் அழகிய அல்குலேயும் மூங்கிலே யொக்கும் தோளினையும் உடைய மகளிர் எவரும் ஐயாட்டைக் கன்னியர் கவுரியர் எனப் பெயர் பெறுதல் வேண்டும்.'

*ஏராளும் ஐயாண்டிற் கன்னியரைச் சைவநெறி மறை-யோர்க் கீயுஞ், சீராளர் குலமுதலோர் சிவலோகந் தனிற்சிவணப் பெறவும் வேண்டும், காராளும் மணிமிடற்றாய் எனத்தொழுது வணங்குதலும் காமற் காய்ந்த, பேராளர் திருவுள்ளஞ் செய்தரு-ளிப் பெருங்கருணை கூர்ந்து சொல்வார்.* 424

அழகுறும் ஐந்து வயதுடைய கன்னிப் பெண்களைச் சிவ நெறியி லொழுகும் பிரமசாரிகளுக்கு மணஞ் செய்யும் சிறப்பினருடைய குடியினரும் சிவலோகந் தன்னைச் சேரப் பெறுதலும் வேண்டும். திருநீல கண்டம் உடையோய்!' என்று கூறித் தொழுது நிற்றலும் காமனைக் கனற்றிய பெருமையார் திருவுள்ளம் இசைந்து பெருங்கருணை மிக்குக் கூறுவார்.

*திருத்தகுவண் காஞ்சிதனில் ஆண்டுதொறும் பங்குனிஉத் திரநாள் யார்க்கும், அருத்திபுரி திருவிழா நிகழ்ந்தீற்றின் வதுவை-நமக் கமைவ தாகப், பொருத்தமுறக் காண்டியெனத் தமிழ்முனிக்-கன் றருள்புரிந்தேம் அதனல் பாவக், கருத்துடைக்கும் பிலத்த-யலே யாண்டுதொறுங் கடிநமக்கு நிகழ்வ தாக.* 425

'செவ்விய வளமுடைய காஞ்சியில் ஆண்டுதோறும் பங்குனித் திங்களில் வரும் உத்திர நாளில் யாவர்க்கும் விருப்பத்தைச் செய்கின்ற திருவிழா நடைபெற்று விழா முற்றுப்பெறும் அந்நாளில் திருமணம் நமக்குக் கூடுவதாகக் காண்' என்று அகத்தியர்க் கன்றருள் புரிந்தோம், ஆகலான் வினையால் வரும் பிறவியைப் போக்கும் பிலத்தின் மருங்கே வருடந்தோறும் திருமணம் நமக்கு நிகழ்வதாகும்.

*கல்யாண மண்டபத்தின் உனக்குரிமைத் தொழில்மறை-யோர் கன்னி செய்ய, எல்லாரும் இதுகண்டு களிப்புறுக இன்-னும்உனக் காண்டு தோறும், நல்வாய்மை அறம்வளர்க்கும் வித்தா-நெல் இருநாழி தருகேம் அந்த, நெல்லாலே இகபரத்தும் உயிர்ப்-பைங்கூழ் தழைகஎன நிறுவல் செய்தார்.* 426

'கல்யாண மண்டபத்தில் உனக்குரிய சடங்குகளைப் பார்ப்பனக் கன்னியர் செய்ய யாவரும் இதனைக் கண்டு களிப்பு மிகுக. இன்னும், வருடந்தோறும் நல்லுண்மையொடு கூடிய அறத்தை வளர்க்கும் இரு நாழி அளவையுடைய நெல்லை விதையாக உனக்குக் கொடுப்போம். அந்நெல்லால் இம்மை மறுமைகளினும் உயிராகிய பசிய பயிர்கள் தழைப்பதாக' எனக் கட்டளையை நிறுத்தினர்.

அவ்வண்ணம் பெறலரிய பெருவரங்கள் அளித்தருளி அகிலம் ஈன்ற, மைவண்ணக் கருங்கூந்தல் மனக்கருத்து முற்றநெடு மலய வாழ்க்கை, மெய்வண்ணக் குறுமுனிவன் தவப்பேறு நிரம் பவிய னுலகம் வாழச், செவ்வண்ணப் பெருமானுர் மணவினையில் திருவுள்ளம் பற்றி னரால். 427

அங்ஙனம் பெறற்கு அரிய பெரிய வரங்களை வழங்கியருளிப் பல் லுலகையும் ஈன்ற மைநிறமுடைய கரிய கூந்தலாராகிய அம்மையார் கருத்து நிரம்பவும், அகத்தியர் தவப்பயன் நிரம்பவும் பல்லுயிர்களும் வாழவும் செவ்வண்ணமுடைய பிரானுர் திருமண நிகழ்ச்சியில் திரு வுள்ளம் செலுத்தினுர்.

தழுவக்குழைந்த படலம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் 2449

# திருமணப் படலம்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

விண்டாழ் மாவின் மூலத்தெழுந்த விமலனுர்தந் திருமேனி,
தண்டா அன்பின் உமையம்மை தழுவக் குழைந்த வாறுரைத்தாம்,
மண்டா ணவத்தின் தருக்கிரித்து மாறு இன்பப் பெருவாழ்வு,
கண்டார் கதுவ அருள்கொழிக்குங் கவுரி மணத்தின் திறம்-
புகல்வாம். 1

தேவரும் வணங்கும் மாவடியில் வீற்றிருந்தருளும் இயல்பாகப் பாசங்களின் நீங்கியவர் தமது திருமேனியை, நிலைபெற்ற அன்பொடும் ஏலவார்குழலியம்மையார் தழுவிய வாற்ருன் குழைந்த வரலாற்றைக் கூறினேம். செறிந்துள்ள ஆணவத்தின் வலிமையைக் கெடுத்து நிலை பெற்ற பேரின்ப வாழ்வினைத் தரிசித்தோர் அடையுமாறு திருவருளைச் செய்யும் காமாட்சி யம்மையாரது திருமணத்தின் சிறப்பினை விரும்பிக் கூறுவோம்.

இறைவன் கட்டளைப்படி திருமால் பணிசெயல்

திருவே கம்பத் தமர்ந்தருளுந் தேவர் பிரானுர் புடைநின்ற
மருவார் துளபத் தொடைமவுலி மாயோன் றன்னை எதிர்நோக்கிக்
கருவார் கூந்தல் தடங்காமக் கண்ணி தனக்கும் மற்றெமக்கும்
பெருவாய் மையினுற் கடிவிழாத் திருநாள் பிறங்கப் புரிகென்ருர். 2

திரு வேகம்பத்தில் வீற்றிருக்கும் தேவதேவர், ஒருபுறத் தொதுங்கி நின்ற மணங்கமழும் துளபமாலையைத் திருமுடியிற் சூடிய திருமாலை அருள்கூர்ந்து நோக்கிக் 'கருமையும் நீட்சியும் அமைந்த கூந்தலும் பெரியகண்களும் உடைய காமாட்சிக்கும் எமக்கும் விதிப்படியாகத் திருமணவிழா சிறக்கச் செய்க' என்றருளினர்.

*பல்லார் நிற்பத் தனைநோக்கிப் பணித்த கருணைத் திறம்-போற்றிப், புல்லார் வெருவுந் தனித்திகிரிப் புத்தேள் ஓகை தலைசிறப்பச், சொல்லாற் றொழுகி மணஎழுச்சித் தொழிலின் மூண்டு வேண்டுவன, எல்லாப் பொருளுங் கடிதீங்குக் கொணர்கென் றிமையோர் தமைவிடுத்தான்.* 3

பல்லோரும் ஏவலை எதிர்நோக்கி இருப்பத் தம்மை ஏவிய அப் பேரருளுக்குப் போற்றுதல் புரிந்து பகைவர் அஞ்சுதற்கு ஏதுவாகிய ஒப்பற்ற சக்கரத்தை ஏந்திய திருமால் உவகை மீதூர ஆணையில் நின்று திருமண வினையில் கருத்து முற்றி அதற்கு வேண்டும் பொருள்கள் யாவும் விரைவாக இங்குக் கொண்டு வருவீராமின்' எனத் தேவரைத் தூண்டினர்.

*தொடியார் தழும்பிற் பெருந்தகைக்குந் தோகை தனக்குங் கலியாணம், கடிமா நகரம் முழுதறியக் கறங்கு முரசம் அறை-வித்துக், கொடிநீள் மாட மாளிகைசூழ் கடிமண் டபமுன் கோடிப்ப, நெடுமால் விசும்பின் யவனரைக்கூய்ப் பணித்தான் அவரும் நிருமித்தார்.* 4

வளைத் தழும்பைப் பூண்ட பெருந்தகையார்க்கும் மயில் போல்வார்க்கும் நிகழாநிற்கும் திருமணத்தைக் காவலும், மங்கலமும் அமைந்த கச்சி மாநகரிலுள்ளார் யாவரும் அறியு மாறு பறை அறைவித்து நீண்டகொடிகளையுடைய மாடமாளிகைகள் சூழ்ந்த திருமண மண்டபத்தை அலங்கரிக்குமாறு தேவதச்சரைக் கூவி ஏவினர். அந்நிலையே அவரும் சிருட்டித்தனர்.

திருமண மண்டபப் புனைவு

கலி விருத்தம்

*அகனிலம் பசும்பொனின் அமைத்தொ ராயிரப்*
*பகலொளி மழுங்குசெம் பவளத் தூண்நிறீஇ*
*உகும்ஒளி மரகதப் போதி உம்பர்வைத்*
*திகலற வயிரஉத் திரமும் ஏய்வித்தார்.* 5

அகன்ற தரையைப் பசிய பொன்னினால் நியமித்துப் பின்னர் ஓராயிரஞ் சூரியர் தம் ஒளி மழுங்கு மளவு ஒளியுடைய செவ்விய பவளத் தூணங்களை நிறுவி ஒளியை உமிழ்கின்ற போதி (கை) வைத்து அவற்றின் மேலே குற்ற மற்ற வயிரத்தாலாய உத்திரங்களை ஏற்றினர்.

உருக்கிய செழும்பொனின் மணிகள் ஒன்பதும்
நெருக்குறப் பரப்பிலே வியம்நி கழ்த்திய
திருக்கிளர் பலகைமேல் இணக்கித் தெள்ளொளி
பெருக்கும்வெண் பளிங்கினுற் பித்தி யாக்கினர். 6

உருக்கிய நற் பொன்னிடத்தே நவமணிகளும் செறியக் குயிற்றி ஓவியப் பாவைகளாக்கிய அழகுவிளங்குகின்ற பலகைகளை உத்திரங்களிற் பொருத்தித் தெளிந்த ஒளியை விரிக்கும் வெள்ளிய படிகக் கற்களாற் சுவர்களை எடுத்தனர்.

மேனிலை மாளிகை வேதி சூளிகை
ஏனவும் பலபல இயற்றி மேவரு
வர்னெழும் இருசுடர் மணிக ளாதியால்
ஊனமில் சிகரமும் உம்பர்ச் சூட்டினர். 7

மேற்றளங்களும், மாளிகைகளும், மேடைகளும், உச்சிமாடங்களும் பிறவும் மிகப்பலவாக வகுத்து விருப்பெழச் சூரியகாந்தக்கல், சந்திர காந்தக்கல் ஆகிய இவற்றினுல் குற்றமில்லாத சிகரங்களும் மேலிடத்தே அமைத்தனர்.

காவியங் கண்ணியர் விழையுங் காமுகர்
ஆவியுஞ் சிந்தையும் அழிய ஏக்கற
ஓவியத் தொகையெலாம் உம்பர் மாதர்போற்
பாவியல் பாடலிற் பயிலச் செய்தனர் 8

நீலோற்பல மலரை ஒக்கும் கண்களையுடைய மகளிரை விரும்பும் காமுகருடைய உயிரும் மனமும் அழியவும், ஆசையால் தாழவும் தேவ மகளிர் பாடலிற் பயிலும் நிலையில் ஓவியங்களை அமைத்தனர்.

வரையினின் றிழிதரு மாலை வெள்ளநீர்.
அருவியென் றயிர்ப்புற அலங்கு நித்திலக்
குருமணி வடம்ஒளி கொழிக்குஞ் சுற்றெலாம்
நிரைநிரை யாத்துமண் நீவ நாற்றினர். 9

மலையினின்றும் இழியும் இயல்பினையுடைய வெள்ளப் பெருக் காகிய அருவியே என்று ஐயத்துள் ஒருதலையே துணிய அசைகின்ற நிற முடைய முத்த மாலைகளைச் சுற்றுப்புறங்களிலெல்லாம் வரிசை வரிசை யாகத் தூக்கித் தரையில் புரளத் தொங்க விட்டனர்.

மணிவடக் கிடையிடை மறுவில் கண்ணடி
தணிவற ஒளிவிடுந் தவளச் சாமரை
பிணிமலர்த் தொத்துவண் பிரசப் பல்கனி
அணிபெறு முறைமையின் அலங்கத் தூக்கினர். 10

முத்து மாலைகளின் நடுவே நடுவே குற்றமில்லாத கண்ணாடிகளும், குறைவற ஒளி வீசும் வெண்சாமரைகளும், மலர்ப் பிணையல்களும், தேனூறுகின்ற பல் பழங்களும் அழகு பெருகுகின்ற நிலைமையில் அசையத்தூக்கிக் கட்டினர்.

நெட்டிலைக் கதலியும் நீலப் பூகமும்
மட்டுமிழ் கன்னலும் வானில் தாருவும்
விட்டொளி எரித்திருள் விழுங்கு தூண்தொறும்
கட்டினர் மலர்கனி காய்கள் ஈனவே. 11

விட்டு விட்டு ஒளி வீசி இருளைப் பருகும் தூண்கள் தோறும் நீண்ட இலைகளையுடைய வாழை மரங்களும், பசிய பாக்கு மரங்களும், சாறு பெருகுகின்ற கரும்புகளும், கற்பக முதலிய தருக்களும் ஆகிய இவை மலர்களையும், பழங்களையும், காய்களையும் ஈனுமாறு கட்டினர்.

கொடிகளுந் தாருவுங் கோணைப் பொய்கையும்
வடிவுடைக் கிளிபுறா மஞ்ஞை மற்றவும்
சுடர்பல நிறங்களுந் தொகுத்தி லேகித்த
விடுகதிர்ப் பட்டினால் விதானஞ் செய்தனர். 12

பூங்கொடிகளும், பூமரங்களும், கோணங்களமைந்த நீர் நிலைகளும், அழகிய கிளிகளும், புறாக்களும், மயிலும், பிறவும் ஒளியுடைப் பல நிறங்களையும் கூட்டிச் சித்திரித்த ஒளி வீசுகின்ற மேற்கட்டி தூக்கினர்.

முத்தொளி மாலையும் மூரிப் பன்மணிச்
சித்திர மாலையும் செம்பொ னாற்செயும்
தத்தொளி மாலையும் ததைந்து வண்டுலாம்
தொத்தலர் மாலையும் துவன்றத் தூக்கினர். 13

ஒளியுடை முத்து மாலைகளும், பெருமையமைந்த நவரத்தின மாலைகளும் ஒளி தவழும் செம்பொன்னாலாகிய மாலைகளும், வண்டுகள் செறிந்துலாவும் கொத்துக்களில் அலர்கின்ற பூமாலைகளும் ஆகிய இவற்றை நெடுகத் தூக்கி யாத்தனர்.

நாப்பணின் எம்பிரான் நங்கை யோடுறை
பூப்பொலி மணியணை பொருத்திப் பாங்கெலாம்
மூப்புடை விண்ணவர் முனிவர் வைகிட
ஏற்புடை அணைகளும் இட்டு வைத்தனர் 14

அம்மண்டபத்தின் நடுவில் எமது பெருமான் உமையம்மையாரொடும் உடனுறைதற்கு மலர்களாற் பொலியும் அழகிய தவிசமைத்துப் பக்கங்களிலெல்லாம் உயர்வுடைய தேவரும் முனிவரும் பிறரும் இருந்திட அவரவர்க்குத் தக்க இருக்கைகளையும் கொணர்ந்திட்டனர்.

மூப்பு—உயர்வு; 'விண்ணோர்க்கெல்லாம் மூப்பாய்'

குண்டமும் வேதியும் கோல மார்தரு
மண்டில வகைமையும் மற்றும் ஏர்பெற
விண்டவர் புரம்அடும் விமலர் நான்முறை
அண்டரும் முனிவரும் அயிர்ப்பச் செய்தனர். 15

தேவரும், முனிவரும் வியக்கும்படி சிவாகம விதிவழி வேள்விக் குழிகளும், மேடைகளும், அழகு அமைந்த மண்டல விதங்களும் வகுத்தனர்.

கொங்குயிர் சந்தனக் குறடு காழகில்
குங்குமம் கருப்புரம் குரவம் மான்மதம்
வெங்கடி கமழ்தரப் புகைத்து மேதக
எங்கணும் ஐயவி சிதறி ஏர்செய்தார். 16

வாசனையை வீசுகின்ற சந்தனக் கட்டையும், வயிரமுடைய அகிற்கட்டையும், குங்குமப் பூவும், பச்சைக் கருப்புரமும், கோட்டமும், கத்தூரியும் ஆகிய இவற்றை விருப்பம் உண்டாம்படி வாசனை வீசப் புகையை உண்டாக்கி மேன்மை பெற எவ்விடத்தும் வெண்சிறு கடுகைத் தூவி அழகுபடுத்தினர்.

தெய்வங்களுக்கு இனிதாதல் பற்றி வெண்சிறு கடுகு தூவுதல் சங்க இலக்கியங்களுட் காண்க.

பாங்கெலாம் பனிமலர்ப் பந்தர் கட்பொறி
வாங்கிய எழில்பெற வகுத்து மாமணம்
வீங்கிய நானநீர் துவற்றி நித்திலம்
ஆங்கவா லுகமென அகம்ப ரப்பினர். 17

பக்கங்களிலெல்லாம் குளிர்ச்சியுடைய பூம்பந்தரைக் கண்ணிந்திரியம் பிறிதொன்றைக் காணாதவாறு தன் கண்ணே கிடக்க அழகுற அமைத்துப் பெருமணம் தேங்கிய பனி நீரைத் தெளித்து மணல்போல முத்துக்களைப் பரப்பினர்.

பந்தரின் புடையெலாம் பங்க யப்புனல்
அந்தரர் ஆட்டயர் அலங்கற் பொய்கையும்
சந்தனங் கற்பகந் தருக்கள் மல்கிய
சுந்தரப் பொழில்களுந் துவன்றச் செய்தனர். 18

பந்தரின் மருங்கெல்லாம் தாமரை மலர்களைக்கொண்ட விண்ணோர் விளையாட்டயர அலைகளால் அலைகின்ற நீர் நிலைகளையும், சந்தனம், கற்பக முதலிய தேவ மரங்கள் பல்கிய அழகிய பொழில்களையும் செறிய நியமித்தனர்.

வேறு

யவனர் தங்தொழில் இத்திற மாகமற்
கவுரி மன்ற லெனக்கறங் கும்பணைச்
சிவம்ம லிந்த செழுங்குரல் கேட்டலும்
உவகை பூத்தனர் ஒள்நகர் மாக்களே. 19

தேவதச்சர் தமது செய்கை இவ்வாறுகக் கவுரியம்மையாரின் திருமணம் என்னும் மங்கலம் மிகுந்த செழுவிய திருவார்த்தையைப் பறை அறைவித்துக் கூறக் கேட்ட அளவே ஒள்ளிய நகர மக்கள் மகிழ்ச்சி பூத்தனர்.

நகரணி நலம்

இயங்கு மாந்தர் நெருக்கினில் இற்றுவீழ்
தயங்கு காழ்களும் தாரும் புலவியின்
முயங்கு மாதர் உகுத்தவும் மொய்த்தொளி
வயங்கு வீதியிற் குப்பைகள் மாற்றுவார். 20

நடக்கின்ற மக்களின் நெருக்கத்தில் அற்றுவீழ்ந்த அசைகின்ற மணிவடங்களும், பூமாலைகளும், ஊடற் காலத்தில் உணங்குகின்ற மகளிர் சிதறியவும் செறிந்தொளி விளங்குகின்ற வீதிகளிற் குப்பைகளாகப் போக்கித் தூய்மை செய்வார்.

சந்தம் மல்கு தமனியச் சுண்ணமுஞ்
சுந்த ரக்கருப் பூரத் துகள்களும்
கந்த நீரிற் கரைத்து மறுகெலாம்
பந்தின் ஊட்டிப் பனிப்பர்க ளென்பவே. 21

அழகு மிகுகின்ற பொற் பொடிகளையும், அழகிய கருப்புரப் பொடிகளையும் வாசனை வீசுகின்ற பனிநீரிற் கரைத்து வீதிகளிலெல்லாம் மட்டத்துருத்தியால் குளிரச் செய்வர்.

வண்டு லாமலர் வார்மணிப் பந்தரும்
விண்டு ழாவு பதாகையும் வில்மணி
கொண்ட தோரணக் கூட்டமும் யாணரிற்
பண்டை யுள்ளன பாற்றி இயற்றுவார். 22

வண்டுகள் உலாவுகின்ற நீண்ட அழகிய மலர்ப்பந்தர்களும், வானில் அசைகின்ற கொடிகளும், ஒளியுடைய மணிகள் பதித்த மகர தோரணங்களும் ஆகிய இவற்றை முன்னைய என நீக்கிப் புதுமையாகக் கோடிப்பர்.

தாமம் நாற்றித் தமனிய வேதியிற்
பூமென் நீர்நிறை பூரண கும்பமும்
காமர் பாலிகை யுங்கதிர்த் தீபமும்
தூம முந்தொகுப் பார்இடந் தோறுமே. 23

மாலைகளை அளவாக அறுத்துத் தொங்கவிட்டுப் பொற்றிண்ணைகளிற் பூக்கள் நிரம்பிய நீர் நிறைந்த நிறைகுடங்களும், அழகிய முளைப் பாலிகைகளும், சுடரையுடைய விளக்குகளும், புகைகளும் இடங்கள் தோறும் நிரப்புவர்.

நித்தி லத்தினை நீற்றுபு வேதியிற்
சித்தி ரித்துச் செழும்பொனின் மாளிகைப்
பித்தி ஓவியம் பெட்பப் புதுக்குவார்
பத்தி மாடம் பழுதொழித் தாக்குவார். 24

முத்துப்பொடியால் மேடைகளிற் கோலமிட்டு மாளிகைகளிற் செழும் பொன்னுலாகிய சுவர்களிற் கண்டோர் விரும்பும்படி புதிதாக்குவர். வரிசையாக அமைந்த மனைகளிற் பழையனபோக்கிப் புதிதாக எடுப்பர்.

இருக வுள்துளை ஈர்ங்கலு ழிக்கடக்
கரிகள் பண்ணுவர் கால்விசைத் தோடுவாம்
பரிகள் பண்ணுவர் பார்குழி ஆழியின்
இரதம் பண்ணுவர் எங்கணும் எண்ணிலார். 25

இரண்டு கன்னத் துளைகளினின்றும் ஒழுகுகின்ற மத நீர்ப்பெருக்கினையுடைய யானைகளை அலங்காரம் செய்வர். கால் வாங்கி விரைந் தோடுகின்றதாகவும் குதிரைகளை அலங்கரிப்பர். பூமியைக்கிழித்தோடுகின்ற சக்கரங்களையுடைய தேர்களை ஒப்பனை செய்வர். இங்ஙனம் யாண்டும் ஒப்பனை செய்வோர் அளப்பிலராவர்.

நீண்ட பொன்னிலைத் தேர்கள் நிறுத்துவார்
மாண்ட தூண்தொறும் வாருறை சேர்த்துவார்
ஈண்டு வார்கட் கிடம்பல ஆக்குவார்
வேண்டி யார்க்கு விருந்து திருத்துவார். 26

பொன்னின் வேலைப்பாடமைந்த தேர்களைக்கொண்டு வந்து நிறுத்துவார். மாட்சிமையுடைய தூண்களுக்கெல்லாம் நீண்ட உறைகளைப் போர்ப்பர். வரும் விருந்தினர்கட்கிடமுண்டாகப் பொருள்களைத் தொகுப்பர். விரும்பி வந்தோர்க்கும் விருந்தமைப்பர்.

அறுசீரடி யாசிரிய விருத்தம்

கச்சி மாநகர் முழுவதும் இன்னணங் கவின்பயில் சிறப்போங்க, முச்ச கத்தவர் குழாங்கொடு வயின்தொறும் நிறைந்திட முடிவானோர், இச்சை யாற்றினின் மணவினைக் குரியவை எங்கணுங் கொணர்ந்தீண்டப், பொச்ச மில்பெரு மங்கலத் துழனியிற் பொலிவுறும் அதுகாலை. 27

காஞ்சி மாநகரம் முழுவதும் இவ்வாறு அழகு வதியும் சிறப்பு மேலும் உயரவும், மூவுலகிலுள்ளோரும் பெருங் கூட்டமாய்த் திரண்டு யாண்டும் நிறைந்திடவும், முடிகளை அணிந்துள்ள தேவர் தத்தம் விருப்பின்படி திருமணத்திற்கு வேண்டும் உபகரணங்களை எவ்விடத்தும் தொகுப்பவும், மெய்ம்மையுடைய பெரிய மங்கல ஓசையினாற் பொலி வெய்தும் அது பொழுதில்.

திருமால் திருவிழா வியற்றல்

கம்ப நாயகன் திருவருள் பெற்றுவெண் கதிர்வளைக் கரத்தோன்றல், அம்புயத்தவன் முனிவரர் தம்மொடு அணிபேறு நன்னாளால், செம்பொன் மாமணிப் பாலிகை முளைவித்திச் சினவிடைக் கொடியேற்றி, எம்பி ரான்மலை மாதுடன் உலாத்தருந் திருவிழா எழுவித்தான். 28

வெள்ளொளி தவழும் வலம்புரியைத் தாங்கியுள்ள திருமால் திருவேகம்பர்தம் திருவருளைப் பெற்றுப் பிரமனும், முனிவரரும் சூழும் சிறப்பு மிகும் நல்ல நாளில் பொன்னும் மணியும் கொண் டியற்றிய பாத்திரங்களில் பாலிகை முளைகளை விதைத்து இடபக்கொடி ஏற்றி எமது பிரானார் மலைமகளாருடன் எழுந்தருளுந் திருவிழாக் கொள்ளத் தொடங்கினார்.

ஒன்ப திற்றுநாள் விழாவணி நிகழ்ந்தபின் உற்றஈ ரைந்தாம்நாள், இன்பம் மீக்கொளப் பங்குனி உத்திரத் திமையவர் குழாத்தோடு, மன்ப தைத்திரள் மகிழ்ந்தெழுந் தார்ப்புற மணவினைக் கவின் கொள்வான், என்ப ணிப்பிரான் மஞ்சனச் சாலையின் இனிதெழுந் தருளுற்றான். 29

ஒன்பது நாட்கள் திருவிழா நிகழ்ந்த பின்னர்ப்பத்தாம் நாளாகிய பங்குனி உத்திரத்தன்று தேவரும், மக்களும், முனிவரரும் பிறவும் இன்பம் மேம்படவும், மகிழ்ச்சி தோன்றி ஆரவாரிக்கவும் திருமணக் கோலம் கொள்ளும் பொருட்டு எலும்பை அணியாகவுடைய பெருமானார் திருமஞ்சனச்சாலையின்கண் இனிதாக எழுந்தருளினர்.

இறைவன் மணக்கோலங் கொள்ளல்

ஷை வேறு

திருத்துயில் அகலப் புத்தேள் செய்தவப் பேறு வாய்த்து
மருத்தபூங் கடுக்கை வேணிப் பரஞ்சுடர் வடிவந் தீண்டிப்
பெருத்தபொற் குடத்துத் தெண்ணீர் மஞ்சனம் பிறவும் ஆட்டி
அருத்திகூர் அன்பின் நுண்ணூல் அறுவைஒற் றுடை சாத்தி. 30

திருமகள் தங்குதற்கிடனாகிய மார்பினையுடைய திருமால் தாம் செய்த தவப்பயன் வாய்த்தமையால், மணங்கமழும் கொன்றை மாலையைத் தரித்த சடைமுடிப்பெருமானார் திருவுருவினைத் தீண்டப் பொன்னாலாகிய குடத்தினால் தெள்ளிய நீரைத் திருமுழுக்காட்டி ஏனைய வற்றினானும் முழுக்குவித்துப் பேரன்பு மிகுகின்ற அன்பினால் நுண்ணிய நூலால் அமைந்த ஒற்றுடை கொண்டு ஈரம் புலர்த்தி,

கற்பகம் அளிப்ப வாய்ந்த கைபுனைந் தியற்றல் செல்லா
எற்படு நுழைநூற் பட்டின் இலங்கஉள் ளாடை சாத்தி
அற்பக இமைக்குஞ் செம்பொன் ஆடைமற் றதன்மேற் காமா
விற்படு புருவ மாதர் விழியிணை கவரச் சாத்தி. 31

ஒருவர் கையாற் சிறப்பித்துப் பிறப்பியாத தோற்றத்தால் கற்பகமரம் தோற்றுவிக்கப் பெற்ற ஒளிவீசும் மெல்லிய இழையானும் பட்டினானும் ஆகிய உள்ளுடையைப் புனைந்து அதற்கு மேலே இருளைப் போக்கிச் சுடர்விடும் பீதாம்பரத்தை அழகிய வில்லையொக்கும் புருவம் கூடிய மகளிர் விழித்துணைகளைக் கவர்ந்து கொள்ளும்படி சாத்தி,

தனிவிரைப் பனிநீர் வாக்கித் தேய்த்தசந் தனப்பூஞ் சேறு
நனிமணம் பயில்கற் பூரங் குங்குமம் நறுங்கத் தூரி
இனியமான் மதமே மற்றும் மட்டித்த கலவை எண்டோள்
கனிமொழி பாகன் மேனி கமழ்தர மெழுகிக் கீறி. 32

நறுமணங்கொண்ட பன்னீர் விட்டு உரைத்த சந்தனக் குழம்பும், பச்சைக் கருப்பூரமும், குங்குமப்பூவும், கத்தூரியும், சவ்வாதும் சேர்த்துக் குழைத்திருக்கும் கலவைச் சந்தனத்தையும் எட்டுத்தோள் களையும் கனியை ஒக்கும் மொழியினையுடைய அம்மையைப்பாகத்தும் கொண்ட பெருமானார் திருமேனியில் மணம் கமழப் பூசிக் கீறுதல் செய்து,

சுடர்த்திரு மேரு வெற்பிற் சூன்றனர் நுண்ணி தாகப்
பொடித்தபொற் சுண்ணந் தெய்வப் பூந்தரு மலரின் வாங்குங்
கடித்திரட் சுண்ணத் தாதிற் கலந்துமேல் அட்டி வாசம்
மடுத்தெழுந் தூமம் ஈரம் வறலுமா றன்பின் ஏற்றி. 33

ஒளிமயமாய் விளங்கும் மேருமலையில் பெயர்த்து எடுத்து நுண் பொடியாக்கிய பொற்சுண்ணத்தைத் தேவதருக்களிற் பெற்ற மலர்களின் மகரந்தப்பொடியொடு கலந்து திருமேனிமேல் அப்பி வாசனைப் பொருள்களை உண்டு உமிழும் நறும்புகையை ஈரம் வற்றுமாறு அன்பொடும் படிவித்து,

*அரிக்குரற் சிலம்பு போற்றும் அடியவர் மலங்கள் மூன்றும்*
*இரிக்குஞ்செங் கமலப் பாதத் திணைக்கிவல் லிருளை யெல்லாம்*
*பொரிக்கும்விற் பிழம்பு காலும் பொலங்கழல் நரல வீக்கிப்*
*பரிக்கும்பட் டுடைமேல் ஒண்கல் பதித்தபொன் அரைநாண்சாத்தி.*

துதிக்கும் அடியவருடைய மும்மலங்களையும் கெடுக்கும் செந்தாமரை மலரைப் போலும் திருவடிகளில் உள்ளிடு பரல் ஒலிக்கும் சிலம்பினைப் பொருத்தி வலிய இருளை முற்றவும் கெடுக்கும் ஒளித்திரளை வீசும் பொன்னாலாகிய வீரக்கழலை ஒலிக்கும்படி பூட்டி, வீக்கும் பட்டாடைமேலே சுடர்விடு மணிபதித்த பொன்னரை நாணை இடையில் பூட்டி,

*கதிர்உமிழ் பதும ராக உதரபந் தனங்கால் யாத்துப்*
*புதியநித் திலப்பூங் கோவை பொன்னரி மாலை தண்தார்*
*எதிரறு சன்ன வீரம் இலைமுகப் பைம்பூண் முந்நூல்*
*முதலிய மார்பின் வார்ந்து முதிரொளி எறிப்பச் சாத்தி.* 35

ஒளி உமிழும் பதுமராகம் பதித்த வயிற்றுக்கட்டினை வீக்கி, முத்துமாலைகள், பொன்னரிமாலைகள் பூமாலைகள், சன்ன வீரம், வெற்றிலை முகம்போலும் அச்சவடிவாகச் செய்யப்பட்ட ஆபரணங்கள், செம்பொற் பூணூல் முதலிய அணிமணிமாலையைச் சாத்தி, ஒளி பெற்ற விளங்கும் நாகரத்தினம் வைத்திழைக்கப் பட்ட மோதிரங்களை விரல்களுக்கெல்லாம் கோத்தணிந்து, திண்ணிய வயிரத்தால் செய்யப் பெற்ற கடகத்தை முழங்கையிற் செறித்து, கதிர் எறிக்கின்ற வாகுவலயங்களைத் தோள்களிற்சாத்தி,

*மணிவடங் கழுத்திற் சாத்தி வாள்கிடந் திமையா நிற்கும்*
*பணிஉமிழ் மணியிற் செய்த ஆழிபல் விரலுங் கோத்துத்*
*திணிவயி ரத்திற் செய்த கடகங்கூர்ப் பரத்துச் சேர்த்துத்*
*துணிகதிர் முத்திற் செய்த அங்கதந் தோளிற் பூட்டி.* 36

திருக்கழுத்திலே நவமணி மாலையைச் சாத்தி, ஒளி பெற்று விளங்கும் நாகரத்தினம் வைத்திழைக்கப்பட்ட மோதிரங்களை விரல்களுக்கெல்லாம் கோத்தணிந்து, திண்ணிய வயிரத்தாற் செய்யப்பெற்ற கடகத்தை முழங்கையிற் செறித்து, கதிர் எறிக்கின்ற வாகுவலயங்களைத் தோள்களிற் சாத்தி,

மாதர்வண் குழையுந் தோடும் வார்ந்திரு புயத்தும் நீவக்
காதிடை அணிந்து செம்பொற் கதிர்மணிப் பட்டம் நெற்றி
மீதுற விசித்துத் தெய்வ விற்குலா மணியின் மோலி
போதமல் வேணிச் சென்னி பொலிதரக் கவித்தான் மன்னோ. 37

அழகிய வளவிய குழையையும், தோட்டினையும் நீண்ட இரு தோள்களிலும் தடவுமாறு காதுகளில் அணிந்து, நெற்றியில் செம்பொன்னாற் செய்யப் பெற்ற மணிப்பட்டத்தைச் சூட்டித் தெய்வ ஒளி நிலவும் மணிகளிழைத்த முடியை மலர்கள் செறிந்த சடைமுடிமேற் பொலிவுண்டாகச் சூட்டினர்.

திருவணி அணிந்து போற்றிச் சிவபிரான் எழுந்து கும்பம்
இருகயல் கவரி தோட்டி இலங்குகண் ணடிப தாகை
முரசொளி விளக்கி னோடு முன்னிவிண் மகளிர் போற்றப்
புரிமணி மண்ட பத்திற் புகுந்துபூந் தவிசின் ஏறி. 38

அணிகலங்களை அணிந்து பரவச், சிவபெருமானார் எழுந்து பூரண கும்பம், இருகயல், வெண்சாமரை, அங்குசம், கண்ணாடி, வெற்றிக் கொடி, முரசு, திருவிளக்காகிய அட்டமங்கலங்களுடன் தேவமகளிர், எதிர் வந்து துதிசெய்ய மணிமண்டபத்திற்புக்குப் பூவணைமேல் எழுந்தருளி,

உருத்திரர் முதலோர் தத்தம் ஒண்டவி சிருக்கு மாறு
திருத்தகு கடைக்கண் நோக்கஞ் செய்துவீற் றிருந்த பின்னர்
விருத்துவண் டமிழ்தப் பாடல் விளரியாழ் முரன்று சேக்கும்
மருத்துழாய்ப் படலைத் தண்தார் வயங்கிய மருமப்புத்தேள். 39

உருத்திரர் முதலானோர் தத்தமக்குரிய சிறந்த ஆசனத்தில் இருக்கும்படி தெய்வத்தன்மை விளங்குகின்ற கடைக்கண் நோக்கம் அருளி வீற்றிருந்தகாலை, புதிதாக வண்டுகள் அமிழ்தமனைய பாடலை விளரிப் பண் யாழ்போன்று ஒலித்துத் தங்கும் மணமுடைய துளபமாலை ஆகிய தண்ணியதார் புரளுகின்ற மார்பினையுடைய திருமால்,

அம்மையார் மணக்கோலங்கொள்ளல்

மனைக்குரி மரபின் வாச மலர்மகள் வதனம் நோக்கிக்
கனைக்கும்வண் டுழக்கும் மென்பூங் கருங்குழற் கவுரி மாதா
தனைக்கலன் திருந்தப் பூட்டித் தம்மென உரைத்த லோடுஞ்
சுனைக்கரு நீலக்கண்ணாள் பெருங்களி துளும்பச் சென்றாள். 40

மனைக்குரிய முறைமையினையுடைய தாமரை மலரிலுறையும் திருமகள் முகத்தை நோக்கி, ஒலிக்கும் வண்டுகள் மிதித்துழக்கும் மெல்லிய மலர்களைச் சூடிய கரிய கூந்தலையுடைய கவுரியாகிய அன்னையை அணிகலன் அழகுறப் பூட்டி அழைத்து வருக எனக் கூறிய அளவிலே சுனையில் தோற்றிய நீல மலரை ஒக்கும் கண்ணினள் பெருமகிழ்ச்சி ததும்பச் சென்றாள்.

உவளக வரைப்பின் எல்லா உபகர ணமுங்கொண் டுற்றுப்
பவளநீள் பலகை மீது பகிரண்டம் முழுதும் ஈன்றுந்
துவளிடைக் கன்னி யாகித் தூநலங் கனிந்த காம
ரவளைநன் கிருவிக் கூந்தல் அவிழ்த்துநெய் அள்ளிச் சாத்தி. 41

அந்தப் புரத்தில் வேண்டும் எல்லாப் பொருள்களையும் கொண்டு சென்று பவழத்தாலியன்ற நீண்ட பலகைமிசை அனைத்துலகையும் பயந்தும் துவளுகின்ற இடையையுடைய கன்னியாகத் தூய அழகு முதிர்ந்த விருப்புடைய அம்மையை நன்கிருத்திக் கூந்தலை அவிழ்த்து நெய்யை முகந்து பூசி,

நெல்லிநுண் விழுது மஞ்சள் விழுதுமெய் நிரம்பப் பூசி
மல்குபே ரன்பு கூர வாசமுந் துவரும் மற்றும்
நல்லவை நயப்பச் சேர்த்தி நறுவிரைத் தூநீ ராட்டி
எல்லுமிழ் குழையாள் மேனி ஈர்ம்புனல் வறல ஒற்றி. 42

நுண்ணிதின் தேய்த்த நெல்லிக் குழம்பும், மஞ்சட் குழம்பும் மெய்யில் நிறையப் பூசி மிக்க பேரன்பு மேன்மேல் மிக வாசனைப் பண்டங்களும் துவருடைப் பொருள்களும், பிறவுமாம் நல்லனவற்றை விரும்பப் பூசி நறிய மணங்கமழும் தூய நீரைத் திருமுழுக்காட்டி ஒளியை எறிக்கின்ற காதணியுடைய அம்மையாரின் திருமேனி ஈரத்தை வற்றுமாறு ஒற்றி,

நனைமுறுக் கவிழ்பூங் கற்பம் நல்குபட் டாடை சாத்திப்
புனைமணித் தவிசின் ஏற்றிப் பொருந்தலர் வெருவச் சீறு
முனைமதக் களிநல் யானை மூரிவெண் கோட்டிற் செய்த
தனைநிகர் சீப்புக் கொண்டு தாழ்குழல் ஒழுங்க நீவி. 43

அரும்புகள் மலர்கின்ற கற்பக விருட்சம் நல்கிய பட்டாடையை உடுத்தி, அழகிய மணியாசனத்தில் இருத்திப் பகைவர் அஞ்சுமாறு சீறும் வெறுக்கின்ற மதத்தால் களிப்புடைய சிறந்த களிற்றினது பெரிய வெள்ளிய தந்தச் சீப்பினால் நீண்ட கூந்தலை ஒழுங்குபடச்சீவி,

வம்பவிழ் நானம் பூசி மான்மதம் அகில்சந் தாதி
பம்புறப் புகைத்த தூமம் பரிமளங் கமழ ஊட்டி
அம்பொன்வாய் மகரந் தாழ மண்ணுறுத் தளிந்த பெண்ணைப்
பைம்பழ மென்ன முச்சி பசும்பொன்வார் நாணிற் சேர்த்தி. 44

மணம் கமழும் மயிர்ச் சாந்து பூசிக் கத்தூரி, அகில், சந்தனம் முதலியவற்றைச் செறியப் புகையாக்கிய புகையை மணம் கமழக் கூந்தற்கு ஊட்டி அழகிய பொன்னா லியன்ற மகரமீனினது வாய் வடிவாகச் செய்யப்பட்ட அணிகலத்தைத் தங்கப் பண்ணிப் பனையினது கனிந்த கரிய பழத்தை ஒப்ப உச்சிக் கொண்டையை முடித்து அதனைப் பசியபொன்னாற் செய்த நீண்ட கயிற்றால் கட்டி,

நகுசுடர் முத்த மாலைக் கொத்துநான் றெருத்தின் நீவித்
திகழொளி விரிப்ப அங்கேழ் முச்சியிற் செருகி வாச
முகையவிழ் அலங்கல் சூழ்ந்து மொய்கதிர் ஈகை மாலை
தொகுமணி மாலை கூந்தற் பரப்பினிற் சுடரப் போக்கி. 45

சுடர்விடு முத்துமாலைக் கொத்துத் தொங்கிப் பிடரில் வருடி ஒளியைப் பரப்புமாறு நிறமுடைய கொண்டையிற் செருகி மணம் விரியும் அரும்புகள் அலர்கின்ற மாலையைச் சூழவைத்துப் பொன்னரி மாலையையும் கூந்தலில் சுடர் விடுமாறு ஒழுங்குறுத்தி,

ஒழுகொளி பரப்புந் தெய்வ உத்தியும் மயிலும் மிக்க
அழகுற வனைந்து நாப்பண் ஐதுறு கீற்றின் வெய்யோன்
மழகதிர் கிடந்த தென்ன வயங்குகுங் குமத்தாள் அட்டிப்
பொழிகதிர் மாசைப் பட்டம் பொலியவா ணுதலில் வீக்கி. 46

பாய்கின்ற ஒளியைப் பரப்பும் சீதேவி என்னும் தலைக்கோலத்தை யும், மயில் வடிவையும் பேரழகு தோன்ற முடித்து நடுவே அழகாக அமைந்த கீற்றுகச் சூரியனின் இளங்கதிர் கிடத்தலைப்போலத் திகழும் குங்குமத்தினைச் சேர்த்து ஒளியைச் சொரியும் பொன்னுலியன்ற பட்டம் பொலியுமாறு ஒளியுடைய நுதலிற்கட்டி,

சிந்துரஞ் சேறு செய்த திருந்தெழில் திலகம் இட்டுக்
கந்தமென் குவளை நோக்கின் அஞ்சனங் கவினத் தீட்டிக்
கொந்தொளி முகத்தின் நாசித் திருவணி கொளுவிக் காதின்
அந்தழல் மணியின் தோடும் அவிர்கதிர்க் குழையுஞ் சாத்தி. 47

செம்பொடியைக் குழம்பாக்கிய மிக்க அழகுதரும் பொட்டிட்டு மணமுடைய மெல்லிய நீலமலரை ஒக்கும் கண்களின் மை அழகுபடத் தீட்டிய மொய்யொளியுடைய திருவணியாகிய மூக்குத்தியை மூக்கிற் சேர்த்திக் காதில் நெருப்பனைய அழகிய மாணிக்கத் தோட்டினையும் குழையையும் சாத்தி,

விலகிவில் லுமிழுங் கட்டு வடத்தினை மிடற்றிற் சூழ்ந்து
நிலவுமிழ் மணியிற் செய்த அங்கதம் நெடுந்தோள் சாத்தி
இலகொளி வாய்ந்த முன்கைக் கடகமுந் தொடியும் ஏற்றி
அலர்கதிர் மோதி ரங்கள் வார்விரல் அமையக் கோத்து. 48

குறுக்கிட்டு ஒளியை உமிழும் மணிகள் கோத்தமைத்த வடத்தினைக் கழுத்திற் சுற்றி மணிபதித்த தோளணியை நெடியதோளிற் சாத்தி, முன்கையில் கடகத்தையும் தொடியையும் செறித்து விரிந்த கதிரையுடைய மோதிரங்களை நீண்ட விரலில் பொருந்தக் கோத்து,

மிகக்கடி கமழ்ந்த சாந்தால் வெரிந்புறம் மெழுகிக் கையின்
நகத்தினல் எழுதிச் சால நறுவிரைக் களபச் சேறு
முகைத்தனம் புதையக் கொட்டி முருகுயிர் பூந்தா தப்பிப்
புகைத்துஞ்சாந் தாற்றி கொண்டு வீசியும் புலர்த்திப் பின்னர். 49

மிக்க மணம் கமழும் சந்தனத்தை முதுகில் மட்டித்து நகத்தினல் அதன்கண் கீற்றுக்களை உண்டாக்கி மிக்க மணமுடைய கலவைக் குழம்பை அரும்பை ஒக்கும் முலை மறைய அப்பி மணம் விரிக்கும் மகரந்தப் பொடியை அதன்மேல் அப்பித் தூபமும், சிவிறியும் கொண்டு ஈரத்தை வற்றச் செய்து பின்னர்,

நித்தில மாலை துப்பு நிரைத்தபூந் தொடைமா ணிக்கக்
கொத்துறு தாமம் பச்சைக் கோப்பமை தெரியல் வேரித்
தொத்தலர்ப் பிணையல் செம்பொற் சுடர்விரி தொடலை ஏனைத்
தத்தொளி நீலக் கோதை தண்கதிர் எரிப்பச் சாத்தி. 50

முத்தமாலையும், பவழத்தைக் கோவைப்படுத்த பொலிவுடைய மாலையும், மாணிக்கமாலையும், மரகதக்கோவையால்அமைந்த மாலையும், தேன்பொருந்திய கொத்துக்கள் அலர்ந்த மாலையும், பொன்னரிமாலையும் ஒளிதவழ் நீலமாலையும் ஆகிய இவற்றைக் தண்ணியகதிர் வீசச்சாத்தி,

எரிச்சிகை எழுவ தென்ன இளங்கதிர் விரிக்கும் பைவாய்
அரிச்சிகை மணிக ளாதி அழகுறக் கோத்த காழின்
விரிச்சிகை கலாபங் காஞ்சி மேகலை பருமம் ஐந்துங்
கரிச்சிகை மத்த கத்துக் கடிதடம் புலம்பச் சாத்தி. 51

தீயின்கொழுந்து எழுவதொப்ப மழகதிர் ஒளிரும் படமுடைய நாகரத்தினம் முதலியவற்ருல் அழகுபடக் கோத்த முப்பத்திரண்டு, பதினறு, எட்டு, ஏழு, பதினெட்டுக் கோவைமணிகளால் ஆயமுறையே விரிசிகை, கலாபம், காஞ்சி, மேகலை, பருமம் எனப் பெயரிய ஐந்தனையும் யானையினது தலையிடத்து மத்தகம் போன்ற நிதம்பத்தில் ஒலியெழச் சாத்தி,

அலம்புகிண் கிணிமின் காலும் அவிர்பரி யாகஞ் செம்பொற்
சிலம்புபா டகம்என் றின்ன புறவடி திகழச் சாத்தி
நலம்புனை செய்ய பஞ்சின் நறுங்குழம் பலர்ந்த கஞ்சம்
இலம்படச் சிவந்த தாளின் ஊட்டினள் இறைஞ்சி நின்ருள். 52

ஒலிக்கின்ற கிண்கிணி, மின் னுமிழும் விளங்கு பரியகம், பொற் சிலம்பு, பாடகம் என்பன அடிக்கண் விளங்க அணிந்து, தாமரையினது அலர்ந்த மலர் புறக்கென்னச் சிவந்த திருவடிகளில் செம்பஞ்சுக்குழம்பினை ஊட்டிப் பணி முற்றுப்பெற்றமையின் வணங்கி நின்றனள்.

அம்மையார் இறைவன்பால் அமர்தல்

கலி விருத்தம்

தூக்குழல் உமைதிரு வடிவில் துன்னலான்
மாக்கவின் மிகும்அணி வனப்பு நோக்குதோ
றீக்கணம் முரல்மலர் ஏழை ஈதியான்
ஆக்கிய அணிகொல்என் றயிர்ப்பு மேயினள். 53

தூய கூந்தலையுடைய உமையம்மையார்தம் அழகிய திருமேனியில் சார்தலினால் பேரழகுமிகும் அணிந்தத் அழகினை தான் நோக்குந்தோறும் வண்டின் குழாம் முரலும் மலரில் உறையும் திருமகள் இக்கோலம் யான் புனைந்த கோலமோ? என் றையங் கொண்டனள்.

விண்ணர மடந்தையர் பலரும் வேல்தடங்
கண்ணிணை கவர்பெரு வனப்புக் காண்தொறும்
எண்ணருங் களிப்பினர் எம்பி ராட்டியைப்
புண்ணியச் சோபனம் புகன்று வாழ்த்தினர். 54

விண்ணுலக மகளிர் பலரும் வேலையொக்கும் கண்களைக் கவர்கின்ற பேரழகைக் காணுந்தோறும் பெருங் களிப்பினராய்ப் புண்ணிய மங்கலப் பல்லாண்டுகளை விரும்பிக் கூறி வாழ்த்தினர்.

நங்கையும் நறைகமழ் நளினப் பாவைதன்
பங்கய மலர்க்கரம் பற்றி யாங்கெழுந்
தெங்கணும் மலர்மழை இறைப்ப வானவர்
மங்கல வாழ்த்தொலி மல்கப் போந்தனள். 55

வானவர் எங்கும் மலரை மழையாகப் பொழியவும், மங்கல வாழ்த்தொலிகள் பல்கவும் அம்மையார் தேன் மணக்கும் செந்தாமரையவள் தன் மலரை ஒக்கும் கரத்தைப் பற்றி எழுந்து போந்தனர்.

நிழல்உமிழ் மணிக்குடை நீண்ட கேதனந்
தழையொளிக் கவரிசாந் தாற்றி யாதிய
மழைமதர்க் கண்அர மகளிர் ஏந்தியே
விழைதகு தொழில்முறை விளைத்து டன்செல. 56

ஒளி உமிழும் மணிகள் பதித்த குடையையும், கொடிகளையும், மொய்யொளிக் கவரிகளையும், சிவிறி முதலியவற்றையும் குளிர்ச்சியும் செருக்கும் உடைய கண்ணுடைய தேவமகளிர் ஏந்தி விரும்பத் தக்க முறையில் பணிபுரிந்து உடன் போதவும்,

பாவிய ஆடைமேல் நடந்து பைப்பய
மாவணி மணவினை மண்ட பத்திடைப்
பூவணை மிசைப்பொலி புனிதன் பாங்கரின்
ஓவியக் கொழுந்தென உற்று வைகினள். 57

பரப்பிய நடைப்பாவாடைமேல் மெத்தென மெத்தென நடந்து பேரலங்காரம் செய்யப் பெற்ற திருமணம் நிகழும் கல்யாணமண்டபத்தின்கண் மலராலமைந்த தவிசின்மேல் வீற்றிருக்கின்ற புனிதஞர் மருங்கில் சித்திரக் கொழுந்தென விளங்கி இருந்தனர்.

திருமணம்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

திருத்தகும் அணைமேல் அண்ணல் அணங்குடன் திகழ நோக்கி
உருத்திரர் முதலோர் யாருந் தொழுதெழுந் துவகை பூத்தார்
மருத்துழாய் அலங்கல் மார்பன் மலரடி விளக்கப் புக்கான்
பெருத்தபல் அண்டம் ஒன்ருய்ப் பிளந்தென இயங்கள் ஆர்த்த 58

தெய்வத்தவிசில் அண்ணலார் அம்மையொடும் வீற்றிருப்ப அக்கோலத்தைக் கண்டு உருத்திரர் முதலோர் யாவரும் வணங்கி உயர்ந்துவகையிற் பொலிந்தனர். மணங்கமழும் துழாய் மாலையர் பாத பூசனை செய்ய முற்பட்டனர். அப்பொழுது பேரண்டங்கள் பலவும் ஒரே காலத்தில் வெடித்தாற் போலப் பல்லியங்களும் முழங்கின.

பொலம்புனை கரகத் தீம்பால் பூமகள் வணங்கி வார்ப்ப
வலம்புரிக் கரத்தோன் ஐயன் மலரடி விளக்கிப் போற்றி
இலங்கொளிப் பட்டால் ஈரம் மெல்லெனப் புலர்த்தி ஏந்தும்
அலங்கொளிப் பாத தீர்த்தம் பருகினன் ஆர்வங் கூர. 59

திருமகள் இறைஞ்சிப் பொற்பாத்திரத்தினின்றும் இனியபாலை வாக்கத் திருமால் தலைவர்தம் திருவடிகளைத் தூய்மை செய்து துதி செய்து விளங்குகின்ற ஒளியுடைய பட்டாடையால் மெத்தென ஒற்றி ஈரத்தைப் போக்கிச் சேமித்த மிக்கொளியுடைய பாததீர்த்தத்தை ஆர்வம் மிகப்பருகினர்.

கன்னல்நெய் கனிபால் இன்ன கமழ்மதுப் பருக்கம் நல்கி
என்னை ஆளுடைய கோமான் ஏடவிழ் கமலச் செங்கை
தன்மிசை உலகம் ஈன்ற தனிமுதற் பிராட்டி யான
கன்னிகை வைத்து நீர்பெய் தளித்தனன் கமலக் கண்ணன். 60

கருப்பஞ்சாறு, நெய், பழச்சாறு, பால் என்னும் இவை மணக்கும் மது பருக்கம் நல்கி என்னையும் அடிமையாக உடைய தலைவராகிய சிவ பிராஞர்தம் இதழ்விரிந்த தாமரைமலரை ஒக்கும் செவ்விய திருக்கை மேல் உலகம் அனைத்தையும் ஈன்ற தனிமுதன்மையை யுடைய பெருமாட்டியாரான கன்னியார் தம் திருக்கையை வைத்து நீர்பெய்து கொடுத்தனர் பதுமாக்கன் எனப்படும் திருமால்.

'பாணிக் கிரகணம்', 'தாராதத்தம்', என்பன காண்க.

கலி விருத்தம்

ஆர்த்தன பணிலங்கள் ஆர்த்த துந்துமி
ஆர்த்தன பல்லியம் ஆர்த்த மங்கலம்
ஆர்த்தன நான்மறை ஆர்த்த ஆகமம்
ஆர்த்தன பல்கலை ஆர்த்த வாழ்த்தொலி. 61

ஆர்த்தன சங்கங்கள்; ஆர்த்தன துந்துமிகள்; ஆர்த்தன பலவகை இயங்கள்; ஆர்த்தன மங்கலப் பாடல்கள்; ஆர்த்தன நான்கு மறைகளும். ஆர்த்தன ஆகமங்கள்; ஆர்த்தன பல் புராணங்களும் பிறவும். ஆர்த்தன பல்லாண்டுகளும் வாழ்த்துரைகளும்.

பொழிந்தனர் வானவர் கற்பப் பூமழை
வழிந்தன பாடலின் மதுரத் தேமழை
இழிந்தன அடியவர் இணைக்க ணீர்மழை
அழிந்தன வினையெலாம் அனைய காலையின். 62

தேவர் கற்பகப் பூமழையைச் சொரிந்தனர். இசைப் பாடல்களின் சுவை மிக்க இனிய கீதம் வடிந்து வழிந்தன. அடியவர்தம் இரு கண்களும் நீர் அருவியாக இழிந்தன. வினைத் துன்பங்கள் யாவும் அக்காலை அழிந்தன.

பங்கயக் கிழவனைப் பகர்ந்த நூல்முறை
செங்கனல் வளர்ப்பஅங் கருளிச் சேவுடை
அங்கணன் மலைமகள் மிடற்றில் ஆரருள்
மங்கல நாணினை வயங்கச் சாத்தினான். 63

நூல்களின் விதித்த முறையால் பிரமனை வேள்வி செய்யத் திருவாணையிட்டு அது செய்கையில் எரிமுன்னர் விடையை ஊர்தியாகவுடைய அங்கணர் உமையம்மையார் திருக்கழுத்தில் அருள் வடிவாகிய திருமங்கலக் கயிற்றினை வயங்கச் சாத்தினர்.

முண்டகக் கடவுளும் முதல்வன் ஆணைஉட்
கொண்டுவே தாகமக் குறிவ ழாவகை
மண்டிய கொழுங்கனல் வளர்த்து வாசநெய்
மொண்டுதூய்க் கடிவினை முற்றச் செய்தனன். 64

தாமரையோனும் முதல்வர்தம் கட்டளையை மனத்திற் கொண்டு நூல்களில் விதித்தபடி செறிந்த வளவிய தீயை ஓம்பி மணமுடைய நெய்யை முகந்து பெய்து திருமணச் செயலை முற்றுவித்தனர்.

மாண்டசெந் தமிழ்முனி மனக்க ருத்தொடு
காண்டகு கவுரிதன் கருத்து முற்றின
வேண்டிய வேண்டியாங் களிக்கும் மெய்யருள்
ஆண்டகை விளக்கினன் போலும் அற்றைநாள். 65

மாட்சிமையுடைய செந்தமிழ் முனிவராகிய அகத்தியர் திருவுள்ள நினைவும் அழகு தக்கிருக்கும் கவுரியாகிய அம்மையார் திருவுள்ளக் கருத்தும் முற்றுப் பெற்றன. வேண்டியவற்றை வேண்டியவாறே வழங்கும் மெய்யருளை அந்நாள் ஆண்டகையார் விளக்கினார் போலும்.

கலிநிலைத் துறை

திரும ணத்திறங் கண்டவர் யாவருஞ் செழுந்தேன்
பருகு வண்டென ஆனந்த வெள்ளத்திற் படிந்தார்
உருகி ஏத்தினர் கையிணை உச்சியிற் குவித்தார்
இருக ணீர்மழைத் தாரையின் மூழ்கிஇன் புற்றார். 66

திருமணக் காட்சிகளைக் கண்டவர் யாவரும் வளமுடைய தேனைப் பருகிய வண்டெனப் பேரின்பப் பெருக்கில் மூழ்கினர்; உள்ளம் கரைந்து போற்றினர்; இருகைகளையும் தலைமிசைக் கூப்பினர்; இருகண்கள் பொழிந்த நீர்ப்பெருக்கில் திளைத்து இன்பம் மிக்கனர்.

மலைக்கொ டிக்குறு கவுரமெய் வடிவும்வள் ளலுக்கும்
முலைச்சு வட்டொடு வளைத்தழும் பணியும்முன் நோக்கிச்
சிலைத்த டம்பனி வரைமிசைத் திகழ்மணக் கோல
நிலைக்கு மற்றிது ஏற்றம்இங் கெனநெடி துவந்தார். 67

இமயவல்லியார்க்கு உண்டாகிய பொன்னிறத் திருமேனியையும், முலைச்சுவடும் வளைத்தழும்பும் அணியாக வள்ளலார்க்கு வாய்த்தமையின் இவற்றையும் முனைத்து நோக்கி இமயமலையில் நிகழ்ந்த திருமணக் காட்சியினும், அம்மையார் பொன்னிறமும், திருவேகம்பர் சுவடுகளும் முன்னில்லனவாய் இப்பொழு துண்மையின் ஏற்றமுடைத் திது என்றொப்பு நோக்கிப் பெரி துவந்தனர்.

அலகில் ஓகையில் திளைப்பஇப் பேறெமக் களித்த
மலைய மாமுனி வாழிய வாழிஎன் றுரைத்தார்
குலவு மங்கலம் பாடினர் ஆடினர் குழைந்தார்
தலைவி பாகனும் அவரவர் தமக்கருள் வழங்கி. 68

அளவில்லாத பெருமகிழ்ச்சியில் படியுமாறு இப் பேற்றினை எமக் கருளிய அகத்தியர் என்றென்றும் வாழ்க! வாழ்க! என்று வாழ்த்தினர். விளங்கு மங்கலம் பாடினர்; கூத்தாடினர்; அன்பினால் குழைந்தனர். அம்மையைப் பாகங் கொண்டவரும் யாவர்க்கும் திருவருளை வழங்கி,

இறைவன் திருவுலாப் போதல்

எட்டு மாதிரக் கரிகளும் உடல்பனிப் பெய்த
நெட்டு யிர்ப்பெறி மதுகைவெள் விடைமிசை நீல
மட்டு லாங்குழல் மடவர லொடுமகிழ்ந் தேறிச்
சிட்டர் போற்றிட மறுகிடைத் திருவுலாப் போந்தான். 69

எண்திசை யானைகளும் உடம்புகள் நடுக்கம் அடையப் பெருமூச்சு விடுகின்ற வலிய வெள்ளிய ஏற்றின்மேல் தேனூறுங் கரிய கூந்தலையுடைய காமாட்சி யம்மையுடன் மகிழ்ந்திருந்து சிரேட்டர் (பெரியோர்) போற்றி செய்யத் திருவீதிகளில் பவனி எழுந்தருளினர்.

பிளிறு வெம்மத யானையின் வெரிந்தலை பிணித்த
குளிறு வார்மணி முரசொடு கொக்கரை முழவம்
ஒளிறு மாமுடி வானவர் இயங்களும் ஒருங்கே
களிறு தாங்கும்எண் டிசைகளுஞ் செவிடுறக் கறங்க. 70

முழங்குகின்ற கொடிய மதயானையின் முதுகில் வாரினால் இறுக்கிய ஒலிக்கின்ற அழகிய முரச வாத்தியம் கொக்கரை தண்ணுமை ஆகிய இவற்றுடன் ஒளிவிடுகின்ற மணிமுடியினை யுடைய தேவர் வாச்சியங்களும் உடன் கலந்து யானைகளால் தாங்கப்படும் எட்டுத் திக்குகளிலும் செவிடு படும்படி பரவி ஒலிக்கவும்,

வாணி கோன்பணி பானுகம் பப்பெயர் வயவன்
வாணி லாவளை ஆயிரம் வாயில்வைத் தூத
வாணன் ஆயிரங் கரங்கொடு மணிமுழா முழக்க
மாண மத்தள மாதவன் மத்தளம் எழுப்ப. 71

சரசுவதி நாயகன் சங்கம் முழக்கவும். பானுகம்பன் என்னும் பெயருடைய வீரன் ஒளிநிலவு ஆயிரஞ் சங்குகளை வாயில் வைத்தூதவும், வாணன் ஆயிரங் கரங்களால் அழகிய முழவை முழக்கவும், மாட்சிமையுடைய மத்தள மாதவராகிய திருமால் மத்தளத்தை முழக்கவும்,

காம நோக்கியை மணம்புணர் காதலன் வந்தான்
பூமு லைச்சுவ டணிந்தருள் புண்ணியன் வந்தான்
யாமெ லாம்உய்ய வந்தவன் வந்தனன் என்னாத்
தாம நித்திலச் சின்னமுங் காளமுந் தழங்க. 72

காமாட்சியை மணம்புணர்ந்த காதலன் வந்தான், பொற்புடைய முலைச்சுவட்டை அணிந்தருளும் புண்ணியன் வந்தான், யாமெலாம் கண்டுய்ய எழுந்தருளினவன் வந்தான் என்று மாலையணிந்த முத்துச் சின்னமும், ஊது கொம்பும் விருது கூறவும்,

கீத வேய்ங்குழல் யாழிசை எங்கணுங் கிளர
வேத ஓசையும் ஆகம முழக்கமும் விம்ம
மாதர் நாடக நூல்முறை மடந்தையர் நடிப்பப்
போத விண்ணவர் பூமழை வியனிலம் போர்ப்ப. 73

மூங்கிலினால் அமைந்த குழலும், யாழும் இசையை எவ்விடத்தும் பரவ எழுப்பவும், வேதாகம ஒலியும் பொங்கவும், அழகிய நாடக நூல் வழி மகளிர் நிருத்தம் செய்யவும், மிக்க விண்ணோர் பூமழையால் அகன்ற உலகை மறைப்பவும்,

வீதி வாய்த்திரு விழாவணி தொழுதிடப் போந்த
பேதில் பேரிளம் பெண்முடி வாயபல் பருவ
மாதர் யாவரும் நாணொடு வளைகலை தோற்றுக்
காதல் வேள்சிலைப் பூங்கணை மாரியிற் குளிப்ப. 74

திருமணக்கோலத்தைத் தொழுதிட வீதியிற் போந்த பேதை முதலாக மாறுபாடில்லாத பேரிளம் பெண் ஈறுக எண்ணப்படும் எழுவகைப்பருவ மகளிர் யாவரும் உடன் பிறந்த நாணத்தையும், வளையையும், மேகலை முதலானவற்றையும் இழந்து காதலையூட்டும் மன்மதன் கரும்பு வில்லின் வைத்து எய்யும் மலரம்பு மழையில் மூழ்கவும்,

புதிய சாமரை வெண்குடை பூங்கொடி மிடைய
எதிரில் கொள்கையின் நகர்வலங் கொண்டெழுந் தருளி
மதுர மென்மொழி மங்கல வாழ்த்தொலி மலியக்
கதியி லார்க்கெலாம் இன்னருட் காட்சிதந் தளித்து. 75

சாமரை, வெண்குடை, கொடிகள் செறியவும் ஒப்பீல்லாத செய்கையின் நகரை வலமாகச் சூழ்ந்து கொண்டு எழுந்தருளி இனிய மென்மொழியால் மங்கல வாழ்த்தொலி மல்கக் கடைப்பட்டவர் அன்றி நடையில்லார் யாவர்க்கும் காட்சியளித்து,

இறைவன் தேவர்கட்கு வரமருளல்

மீண்டு கோயிலி னுள்ளெழுந் தருளிமெல் லணைமேல்
மாண்ட மெல்லியற் பனிவரை அணங்கொடும் வைகி
ஆண்டு நின்றமா லயன்முதல் யாரையும் நோக்கி
ஈண்டு நீர்வரம் வேண்டுவ கொண்மின்என் றிசைத்தான். 76

மீண்டு கோயிலினுள் எழுந்தருளி மெத்தென்ற தவிசில் மாட்சிமைப்பட்ட மெல்லிய இயல்பினையுடைய இமாசல மன்னன் புதல்வியாரொடும் வீற்றிருந்து சந்நிதியில் நின்ற திருமால் அயன் முதலானோர் யாவரையும் பார்த்து ‘இப்பொழுது நீவிர் விரும்பியவற்றைப் பெற்றுக் கொண்மின்’ என்றருளினர்.

அறுசீரடி யாசிரிய விருத்தம்

இருமுது குரவர் பாதம் இமையவர் வணங்கி இந்தத்
திருமணங் காண்டல் பெற்றேம் உய்ந்தனந் திரைநீர் வைப்பின்
மருவினர் வதுவை செய்யும் இடந்தொறும் மன்னி ஆங்காங்
கிருநலம் உதவல் வேண்டும் இவ்விரு வீரும் என்றார். 77

அம்மையப்பர் திருவடிகளைத்தேவர் வணங்கி ‘இந்தத் திருமணத்தைக் காணும் பேற்றினை உடையேம் ஆயினேம். ஆகலின், கடைத்தேறினேம். கடல் சூழுலகில் வைகித் திருமணஞ் செய்யப் பெறும் இடந்தொறும் எழுந்தருளி அங்கங்கே பெருநலங்களை வழங்கல் வேண்டும் இம்மணக் கோலம் பூண்ட இருவீரும்’ என வேண்டினர்.

இவ்வரம் அளித்தேங் காஞ்சி இருநகர் காவல் பூண்டு
செவ்வன் இங் குறைமின் என்று சிவபிரான் பணித்த லோடும்
அவ்வருள் சென்னி மேற்கொண் டகமகிழ்ந் திமையோ ரெல்லாங்
கௌவைநீர்க் காஞ்சி மூதூர் காவல்கொண் டிருந்தார் அங்கண். 78

நீவிர் விரும்பிய இவ்வரத்தை நல்கினும். காஞ்சியாகிய பெரிய நகரத்தைக் காத்தலை மேற்கொண்டு நன்றே இங்குத் தங்கியிருமின்' என்று சிவனார் கட்டளை யிட அதனைச் சிரமேற் றாங்கி மனமகிழ்ந்து தேவர் யாவரும் ஒலிக்கின்ற நீர் சூழ்ந்த காஞ்சி நகரைக்காவல் கொண் டிருந்தனர்.

அரந்தைதீர் கவுரி கூற்றில் தோன்றிய அணங்கும் என்னை
வரைந்துகொண் டருண்மோ என்று வணங்கிநின் றிரப்ப அந்நாள்
கரந்தைவார் சடையோன் மன்றல் முடித்துநீ கச்சி மூதூர்
புரந்திவண் உறைதி துர்க்காய் என்றருள் புரியப் பெற்று. 79

துன்பத்தைத் தீர்க்க உமையம்மையார் அமிசமாகத் தோன்றிய துர்க்கையும் 'என்னை மணந்து கொண்டருளாய்' என வேண்ட அந் நாளில் கரந்தையைச் சூடிய நீண்ட சடைப் பெருமானார் அவ்வம்மை யைத் திருமணங் கொண்டு துர்க்கையே! நீ கச்சியாகிய பழம்பதியைக் காத்திங்கே உறைவாய்' என்றருள் செய்யப் பெற்று,

கவுசி கீச்சரம்

கன்னிகாப் பெனும்பே ரெய்தக் கவுசிகி மடந்தை காஞ்சிப்
பொன்னகர் காவல் பூண்டு பொங்கொளிக் கவுசி கீசன்
தன்னைஅங் கிருவிப் பூசை தழைத்தபே ரன்பி னாற்றி
இன்னல்தீர்ந் துலகம் உய்ய இருந்தனள் இருக்கும் நாளில். 80

கன்னி காப்பு என்னும் பெயரைப் பெறுமாறு 'கவுசிகி' காஞ்சி என்னும் பொன்னகரைக்காவலை மேற்கொண்டு தழைக்கும் ஒளியுடைய கவுசி கீசப்பெருமானை அவ்விடத்தில் தாபித்துப்பூசனையை மிக்க பேரன் பினால் ஆற்றித் துன்பம் நீங்கி உலகம் செழிக்க இருந்தனள். இருக்கும் காலை,

சும்பனே நிசும்பன் என்போர் உலகெலாந் துளக்க நோக்கி
அம்புயக் கடவுள் போந்தங் கண்ணலுக் கியம்பி வேண்ட
எம்பிரான் அருளாற் கன்னி விந்தவெற் பெய்தி வைகி
வெம்புவா ளவுணர் தம்மைச் செகுத்துமீண் டினிது வாழ்ந்தாள். 81

சும்பன், நிசும்பன் என்னும் அவுணரிருவர் உலகை வருத்தக் கண்டு பிரமன் வந்து திருவேகம்பரை வணங்கிக் குறையிரப்பப் பெரு மான் கட்டளைப்படி 'கவுசிகி' விந்த மலையை அணுகித் தங்கிக் கொடிய வாளையுடைய அவுணரைக் கொன்று மீண்டு வந்தினிது வாழ்ந்தனர்.

பகர்பெரு வளஞ்சால் இந்த மன்றலைப் பண்பு கூர
அகனமர்ந் தேத்தி னோர்கள் கண்டவர் அறையக் கேட்டோர்
தகவுற நினைந்தோர் எல்லாம் தையலார் மன்றல் வாய்ந்து
புகலரும் பரமா னந்த மன்றலும் பொருந்தி வாழ்வார். 82

பெருவளம் நிரம்பிய இத்திருமணத்தைப் பண்புமிக அகமகிழ்ந்து போற்றினோர், கண்டவர், சொல்லக் கேட்டவர், பொருந்துமாறு எண்ணினோர் யாவரும் அழகிய மகளிரை மணத்தால் எய்தி வாழ்ந்து சொல்லற்கரிய பேரின்ப மங்கலமும் பொருந்தி வாழ்வார்.

*திருமணப் படலம் முற்றிற்று.*

*ஆகத் திருவிருத்தம் 2531*

—:0:—

# விம்மிதப் படலம்

*கலிநிலைத் துறை*

சாம கண்டர்தம் ஆணையால் அகிலமுந் தழைப்பக்
காம நோக்கிஎண் ணான்கறங் கரிசற வளர்க்கும்
நாம நீர்வயற் கச்சிமா நகர்வயின் அளவில்
சேம விம்மிதம் உள்ளன சிலஎடுத் திசைப்பாம். 1

திருநீலகண்டப் பெருமானார் தம் ஆணையினால் பல்லுலகமும் வாழக் காமாட்சி முப்பத் திரண்டறங்களையும் குற்றமற வளர்க்கும் இடமாகிய அச்சந்தரும் அளவு நீர் சூழ்ந்த காஞ்சியாகிய பெரிய நகர்க்கண் அளவில்லாத காப்புடைய அற்புதங்கள் உள்ளன. அவற்றுட் சிலவற்றைக் கொண்டு கூறுவோம்.

சாமவேதம் ஓதும் திருமிடறர் எனினும் ஆம்.

தெள்ளொ ளிக்கதிர்ப் பன்மணித் திரளெலாஞ் செறியப்
பள்ள நீர்க்கடல் ஆகர மாகிய பரிசின்
வெள்ள வேணியர் அருளினல் அற்புத விளைவென்
றுள்ள வைக்கெலாம் உறைவிட மாயது காஞ்சி. 2

சிறந்த ஒளிக் கதிர்களையுடைய பல்வகை மணிக் குவாலுக்கெல்லாம், செறிந்து கிடப்ப ஆழமுடைய நீர்க்கடல் இருப்பிடமாகிய தன்மைபோலக் கங்காதரர் திருவருளால் நிகழும் அற்புத நிகழ்ச்சி என உள்ளவற்றிற் கெல்லாம் இருப்பிடமாவது காஞ்சி.

அற்புத இலிங்கங்கள்

நீண்டில் யாவையுஞ் செய்யபொன் னுக்குவ திறலின்
மாண்ட சித்தர்கள் எண்ணிலர் வழிபடப் படுவ
வேண்டில் என்னவும் அளிப்பன மெய்த்தவ முடையோர்
காண்ட கும்பல இலிங்கம்அக் கடிநகர் உளவால். 3

யாதோர் பொருளையும் பரிசித்தால் அதன் இயல்பினை மாற்றிப் பொன் ஆம்படி செய்வனவும், வல்லமையால் மாட்சிமைப்பட்ட சித்தர்கள் அளவிலார் வழிபடப்படுவனவும், விரும்பிய பொருள் எத்திறத்தன ஆயினும் வழங்குவனவும் உண்மைத் தவமுடையோர் காட்சிக்கே புலனுவனவுமாகிய இலிங்கங்கள் பல அக்காவ லமைந்த நகர்க்கண் உள்ளன.

ஒருத னிப்பொருள் இருதிற னுகிஉவ் விரண்டும்
ஒருமை யுற்றிடும் வியப்பும்அங் குள்ளது விரிக்கில்
ஒருப ரம்பொருள் சிவனொடு சத்திஎன் றிரண்டாம்
ஒருமை யுற்றிடும் உமையவள் கம்பரைத் தழுவி. 4

ஒப்பற்ற ஒரு பொருள் இருபகுப்பாகி அவ்விரண்டும் பின்பு ஒன்றுபடும் அதிசயமும் அங்குள்ளது. அதனை விரித்துரைக்கில் ஒப்பற்ற பரம் பொருள் சிவமும் சத்தியுமென இரண்டாய் அச்சத்தியாகிய உமையம்மையார் பின்பு திருவேகம்பரைத்தழுவி ஒன்று படும்படி விளங்கும்.

இருமை ஓர்பொருள் எண்ணில வாதலும் எண்ணில்
பொருள்கள் ஒன்றெனத் திகழ்தலும் உடைத்தது புகலின்
ஒருசி வச்சுடர் பற்பல வடிவுகொண் டுறையும்
மருவு பன்மறை ஒருதனி மாவென வயங்கும். 5

இருதன்மை (சத்திசிவம்) யுடைய ஓர் பொருள் எண்ணில்லாதன ஆதலும் அளவில்லாத பொருள்கள் ஒரு பொருளாய்த்தோன்றுதலும் அங்குடைத்து. விளக்கிச் சொன்னுல், ஒன்ருகிய சிவபரஞ்சுடர் பற்பல வடிவங்கள் கொண்டு வீற்றிருக்கும். பலவாய் மருவும் மறைகள் ஒப்பற்ற தனி மாமரமாய் விளங்கும்.

பதினோ ரற்புதம்

மற்று மூன்றிடம் வேதிகை வயல்கள்நாற் றவிசு
பொற்ற ஐந்தருத் தடம்அறு புட்கள்ஏழ் பொதியில்
பற்றும் எண்பொய்கை ஒன்பது சிலைபொழில் பத்தாங்
கொற்ற மன்றுபத் தோடொரு கூவலுங் குலவும். 6

மேலும், மூன்றிடங்கள், மூன்று திண்ணைகள், மூன்று வயல்கள், நான்கு தவிசுகள், ஐந்து தருக்கள், ஐந்து தடாகங்கள், ஆறுபறவைகள்,

ஏழ் பொது இடங்கள், எட்டுப் பொய்கைகள், ஒன்பது கற்கள், ஒன்பது சோலைகள், பத்துச் சபைகள், பதினொரு கிணறுகள் ஆங்குள்ளன.

மூன்று இடங்கள்

ஒன்று பல்பவத் தாதையர்க் காட்டிடும் ஒளிசேர்
ஒன்று பல்பவத் தாயரை வேண்டுறிற் காட்டும்
ஒன்று பல்பவக் கிளைஞரோ டுரைபயில் விக்கும்
என்று மூவகைத் தானம்அவ் விருநகர் உடைத்தால். 7

ஓரிடம் காண விரும்பின் பல் பிறவிகளில் வாய்த்த தந்தையரைக் காட்டும்; மற்றோர் ஒளிசேர் இடம் பல் பிறவித் தாயரை விரும்பிற் காட்டும்; பிறிதோரிடம் பல்பிறவிச் சுற்றத்தவரோடு சேர்த்துப் பேசுவிக்கும். என்றிங்ஙனம் மூவகை யிடமும் அப்பெரிய நகரம் உடையது.

மூன்று தெற்றிகள்

ஊங்க ணைந்தவர்க் கமுதுநீர் உதவிடும் ஒன்று
பாங்கின் வேட்டன யாவையும் பயந்திடும் ஒன்று
மூங்கை பேசவும் பேசினோன் மூங்கைமை யுறவும்
ஆங்க ளிப்பதொன் றாகமுத் தெற்றியும் உளவால். 8

தன்னை அடுத்தவர்க்குச் சோறும் நீரும் வழங்கும் ஓர் தெற்றி. நன் முறையில் விரும்பிய பொருள்கள் எவற்றையும் நல்கிடும் ஓர் திண்ணை. ஓர்மேடை ஊமையைப் பேசுவிக்கும்; பேசுவோனை ஊமை ஆக்குவிக்கும். மூன்று தெற்றிகள் இத்திறத்தன உள்ளன.

மூன்று வயல்கள்

மீள மீளநெல் அரிதொறும் விளைவதோர் பழனம்
நாளின் வித்தும்அன் றேபயன் நல்கும்ஓர் கழனி
தாளின் ஏருழ வின்றியே தரும்பயிர் விளைக்கும்
கோள தொன்றென வயல்கள்மூன் றுள்ளன குறிக்கில். 9

மூன்று வயல்களில் ஒன்று நெல் லறுக்குந்தோறும் விளைந்து முற்றும்; ஒன்று விதைத்த அன்றே பயன் தரும்; ஒன்று உழவின்றியே விளைக்கும். இவ் வற்புத வயல்கள் உள்ளன.

நான்கு தவிசுகள்

எண்சீரடி யாசிரிய விருத்தம்

தன்பகுப்பின் மூவரொடு முனிவர் விண்ணோர் பழிச்சிட-வாழ் சதுமுகனைக் காட்டும் ஒன்று, தன்பகுப்பின் மூவர்திரு முத-லோர் சூழுந் திருமாலைச் சார்தோர்க்குக் காட்டும் ஒன்று, தன்பகுப்பின் மூவரொடு கணங்கள் போற்றுந் தழற்கால

ருத்திரனைக் காட்டும் ஒன்று, தன்பகுப்பின் மூர்த்திகளோ டென்றும் காட்டுந் தவிசொன்று மடங்கலணை நான்கு மன்னும்.

ஓர் சிங்காதனம் தன்பகுப்பினராகிய மூவரோடு முனிவருந் தேவருந் துதிசெய்ய வீற்றிருக்கின்ற பிரமனைக்காட்டும்; ஓர் ஆசனம் தன்னைச் சார்ந்தவர்க்குத் தன்பகுப்பினராகிய மூவரோடு இலக்குமி முதலோர் சூழ இருக்கும் திருமாலைக் காட்டும்; ஓர் தவிசு தன்னை அடுத்தவர்க்குத் தன் பகுப்பினராகிய மூவரொடு கணங்கள் துதிசெய்யும் காலாக்கினி உருத்திரரைக் காட்டும்; ஓர் இருக்கை, தன்னை அடுத்தவர்க்குத் தன் பகுப்பினராகிய மூர்த்திகளோடு சூரிய மூர்த்தியைக் காட்டும். ஆக நான்கு சிங்காதனம் அக்காஞ்சியில் நிலை பெற்றிருக்கும்.

பிரமன் வியூகர் விராட்டு, காலன், புருடன். திருமால் வியூகர்: சங்கரிடணன், பிரத்தியும்னன், அநிருத்தன். உருத்திரர் வியூகர்: அரன், மிருடன், பவன். சூரியன் வியூகர்: தண்டியாதிகள், தீப்தி முதலிய நவ சத்திகள், அங்கமூர்த்திகளான நவக்கிரகாதிகள். இவ்வியூகர்கள் தம் முதல்வர்கள் ஆணைபெற்று முத்தொழில் செய்வர்.

ஐந்து தருக்கள்

ஓவாமை அமிழ்தொழுக்கும் பொலம்பூச் சூதம் தன்னி-
ழலைப் பிறர்க்குதவாக் காஞ்சி ஒன்று, பூவாது காயாது கனிகள்-
நல்கும் பூம்புளிபல் வகைப்போதுந் தரும தூகம், தாவாத செம்-
பொன்மலர் அத்தி யென்று சாற்றரிய தெய்வதமாத் தருக்கள்
ஐந்துந், தேவாதி தேவர்இனி தமருங் காஞ்சித் திருநகரின் இறும்-
பூது திகழ ஓங்கும். 11

நீங்காது என்றும் அமுதத்தைச்சொரியும் பொன்னிறப் பூக்களை யுடைய மாமரம் ஒன்றும், தன்னிழலைப் பிறர்க்குக் கொடாத காஞ்சி மரம் ஒன்றும், பூத்தலும் காய்த்தலும் இன்றிப் பழங்களை ஈனும் பொலிவுள்ள புளியமரம் ஒன்றும், தன் பூக்களையே அன்றிப் பல்வகை மலர்களையும் கொடுக்கும் இருப்பைமரம் ஒன்றும், கெடாத செம் பொன்மயமான பூக்கள் மலரும் அத்திமரம்ஒன்றும் ஆகச்சொல்லற்கரிய தெய்வத்தன்மையுடைய மரங்கள் ஐந்தும் மகாதேவர் இனிது வீற்றிருக்கும் காஞ்சிமாநகரில் வியப்புண்டாகச் சிறக்கும்.

ஐந்து தடாகங்கள்

எல்லியிடைப் பங்கயமும் பகற்கா லத்தின் இருங்குமுதச்
செழும்போதும் மலர்ந்து தீந்தேன், பில்குவதொன் றொருகாம்பின்
முளரி மூன்று பிறங்குபுனல் தடம்ஒன்று குளித்தோர் எய்த,
வல்லிவா னரத்துருவம் அளிப்ப தொன்று மூழ்கினோர் மாற்றார்க்-
குக் கொடிய தீமை, நல்குவதொன் றாடினோர் உற்றார்க்கின்ப
நலந்தருவ தொன்றெனலாந் தடாகம் ஐந்தே. 12

இரவில் தாமரையும், பகற்பொழுதில் ஆம்பலும் மலர்ந்து இனிய தேனைத்துளிக்கும் ஓர் தடாகமும், ஓர் கொடியில் மூன்று தாமரைப் பூக்களைக் கொள்ளும் நீர் நிலை ஒன்றும், தன்னில் மூழ்கின வரைக் குரங்கு வடிவாக்கும் தடம் ஒன்றும், தன்னில் மூழ்கினோர் தம் பகைவர்க்குக் கொடுந் துன்பம் கொடுக்கும் தடாகம் ஒன்றும், மூழ்கினோர் தம் உறவினர்க்கு நல் லின்பந்தருவ தொன்றும் ஆக ஐந்து தடாகங்கள் உள்ளன.

ஆறு பறவைகள்

பெய்யாத காலத்தின் அகவிக் கொண்மூ வருவிக்கும் பெருமஞ்ஞை மறைநூ லெல்லாம், எய்யாமை யின்றியுணர் கிள்ளை ஏனைக் கணிதநூல் எனைத்தும்எடுத் துரைக்கும் ஆந்தை, நையாது முழுதுணர்ந்த கபோதம் பாடு நல்லிசைநூ லவைவல்ல நலஞ்சேர் பூவை, பொய்யாது வேட்டவெலாம் வழங்கு நேமிப் புள்ளுமென அறுபறவை பொருந்தும் ஆங்கண். 13

மழை பெய்யாத பருவத்தில் கூவி மேகத்தை வருவிக்கும் பெரிய மயிலும், அறியாமை நீங்கி மறைமுழுதும் உணரும் கிளியும், ஒழிந்த சோதிட நூலும் பிறவும் எடுத்துக் கூறும் ஆந்தையும், கல்லாது முழுதும் எளிதிலுணர்ந்த புறவும், பாடற்குரிய நல்லிசை நூல் வல்ல நலம் நிரம்பும் நாகணவாய்ப் பறவையும், விரும்பிய பொருள்கள் எவற்றையும் இல்லை என்னாது வழங்கும் சக்கரவாகப் பறவையும் என ஆறு பறவையும் அங்கு வாழும்.

ஏழு பொதியில்கள்

வானடர் வார்த்தைசெவிப் புலனும் ஒன்றின் மதகரியை முயல்ஊக்கித் துரக்கும் ஒன்றின், மேனகர் உலகுவிழிப் புலனும் ஒன்றின் மேவினர்க்குத் திசைமயக்கம் எய்தும் ஒன்றில், கானார்நெய் யின்றிவிளக் கெரியும் ஒன்றில் பாதலத்தோர் கழறுமொழி கேட்கும் ஒன்றில், ஆனாது துந்துமிகள் முழங்கும் ஒன்றில் ஆகஏழ் பொதுத்தானம் வயங்கு மாலோ. 14

ஏழு பொதுவிடங்களில், ஒன்றில் தேவர் பேசுதல் கேட்கும். ஒன்றில் மதமுடைய யானையை முயல் ஊக்கங்கொண்டு துரத்தும். ஒன்றில் மேலிடமாகிய விண்ணவர் உலகம் கண்ணிற்குப் புலனாகும். ஒன்றில் அணுகினவர்க்குத் திசைமயக்கம் தோன்றும். ஒன்றில் மண முடைய நெய்யின்றி விளக்கெரியும். ஒன்றில் பாதலத்தோர் பேசுகின்ற மொழிகேட்கும். ஒன்றில் ஒழிவின்றித்தேவதுந்துமிகள் முழங்கும் இவையும் அங்குள்ளன.

எட்டுப் பொய்கைகள்

மூழ்குநர்க்குப் பொன்னுருவம் அளிக்கும் ஒன்று முழுமணி-
ஏர் தரும்ஒன்று விண்ணோர் கோமான், வாழ்வளிக்கும் ஒன்று-
மனக் கினியவெல்லாந் தரும்ஒன்றுவேண்டியதை வழங்கும்ஒன்று,
வீழ்தகைத்தா மெய்ஞ்ஞானம் அளிக்கும் ஒன்று வீடுதவும்
ஒன்றுவினைப் பிணிநோய் முற்றும், பாழ்படுத்தும் ஒன்றென்ன
மலங்கள் மாற்றும் பணிமலர்ப்பூம் பொய்கைஇரு நான்கு மேவும். 15

எட்டுப் பொய்கைகளில், தம்மில் மூழ்குவோர்க்கு ஒன்று பொன்னுருவத்தையும், ஒன்று மாணிக்க நிறத்தையும், ஒன்று இந்திரன் வாழ்வையும், ஒன்று மனத்திற் கினிய எவற்றையும், ஒன்று விரும்பிய பொருளையும், ஒன்று விரும்பத் தக்கதாகிய மெய்யறிவையும், ஒன்று வீடுபேற்றையும் கொடுக்கும். ஒன்று தீவினைகாரணமாக வரும் கொடிய நோய்களை முற்றும் போக்கும். என்றிங்ஙனம் அழுக்கினை அகற்றும் குளிர்ந்தமலர்களைக் கொண்ட நீர் நிலைகள் எட்டும் அங்குள்ளன.

ஒன்பது சிலைகள்

தீண்டினரைத் தேவாக்கும் ஒருகல் பாம்பின் கடிவிடந்-
தீர்த் திடும்ஒருகல் சித்தி யெல்லாம், ஆண்டளிக்கும் ஒருகல்உயிர்
உதவும் ஓர்கல் வழக்கனைத்தும் நடுவாய்நின் றறுக்கும் ஓர்கல்,
மூண்டபிணித் தழும்புறுபுண் மாற்றும் ஓர்கல் மொய்யொளி-
மெய்த் துணிஉறுப்பைப் பொருத்தும் ஓர்கல், ஈண்டியதீ வினை-
இரிக்கும் ஓர்கல் ஞானந் தரும்ஒருகல் எனச்சிலைகள் ஒன்ப
தோங்கும். 16

ஒருகல் தீண்டினரைத் தேவராக்கும். ஒருகல் பாம்பின் கொடிய விடத்தை மாற்றும். ஒருகல் சித்தி யெல்லாம் கொடுக்கும். ஒருகல் இறந்தவர்க்கு உயிர் கொடுக்கும். ஓர் கல் கோடாது நடுவாய் நின்று வழக்கைத் தீர்க்கும். முதிர்ந்த பிணியாகியதொழுநோய் வடுக்களைப் போக்கும். ஒருகல் ஒளிசெறியும் துண்டுபட்ட உறுப்பினைப் பொருத்தும் ஒருகல் திரண்ட தீவினைகளை அழிக்கும். ஒருகல் மெய்யறிவைத்தரும். இங்ஙனம் சிலைகள் ஒன்பதும் அங்குச் சிறப்புறும்.

ஒன்பது பொழில்கள்

ஒன்றினோர் பெறக்கனக மாரி ஒன்றில் இரசதமா மழை-
ஒன்றில் முத்து மாரி, ஒன்றில்ஒளிர் குருவிந்த மாரி ஒன்றில் வயிர-
மழை ஒன்றில்வயி டூய மாரி, ஒன்றில்ஒளி விடும்புருட ராக மாரி
ஒன்றில்அடற் புள்ளேற்றுப் பச்சை மாரி, ஒன்றினில்இந் திரநீல
மாரி ஒன்றில் பொழியுமலர்ப்பொழில்இவைஓரொன்ப தோங்கும்

ஒன்றில் பொன் மழையும், ஒன்றில் வெள்ளி மழையும், ஒன்றில் முத்து மழையும், ஒன்றில் பதுமராக மழையும், ஒன்றில் வயிரமழையும், ஒன்றில் வயிடூரிய மழையும், ஒன்றில் புட்பராக மழையும், ஒன்றில் கருடப்பச்சை மழையும், ஒன்றில் இந்திர நீல மழையும் பொழியும் ஒன்பது சோலைகளையும் உடைத்து அந்நகர்.

பத்து மன்றங்கள்

சொல்லருமா பாவியுறின் மூங்கை யாக்குஞ் சோரர்களை மருளுறுத்துங் கல்வி தேற்றும், பல்வகைய வடிவுதவுஞ் சாவா மேன்மை பாலிக்கும் பாதலஞ்சேர் பிலத்தைக் காட்டும், வல்லவர்க்-குந் திசைமயக்கும் பொன்மா ணிக்க மழைபெய்யும் பகல்இரவு மாறுக் காட்டுஞ், செல்லுநரைப் பிறர்காணு வியப்புச் செய்யும் இவைமன்றம் ஒருபதெனத் திகழு மாலோ. 18

பேசற்கரிய பெரும்பாவி சேர்ந்தால் ஒன்று ஊமையாக்கும்! ஒன்று திருடர்களை மயக்கும். ஒன்று கல்வியை அறிவுறுத்தித் தெளிவிக்கும்; ஒன்று பல்வகை வடிவங்களைக் கொடுக்கும்; ஒன்று இறவாத மேன்மையைக் கொடுக்கும்; ஒன்று பாதல உலகிற்குச் செல்லும் பிலத்துவாரத்தைக் காட்டும்; ஒன்று அறிவான் வல்லவர்க்கும் திசை மயக்கைச் சேர்க்கும்: ஒன்று பொன்னும் மாணிக்கமுமாகிய மழையைப் பெய்யும்; ஒன்று பகலை இரவாகவும், இரவைப் பகலாகவும் மாறுபட உணர்த்தும். தன்கண் சேர்ந்தவரைப் பிறர் காணுதவாறு மறைக்கும் அதிசயத்தைச் செய்யும். இவைபத்தும் மன்றங்களாகத் திகழும்.

பதினொரு கூவல்கள்

தயிர்க்கூவல் பாற்கூவல் நறுநெய்க் கூவல் மதுக்கூவல் செழுங்கருப்புச் சாற்றுக் கூவல், மயக்கமற முத்திநெறி துறக்க மார்க்கம் மற்றுலகின் கதிகாட்டும் மும்மைக் கூவல், வியப்பெய்த நிழல் பிணிக்குங் கூவல்பாரின் வித்தின்றி நாறுசெய்யும் விரிநீர்க் கூவல்,அயர்ப்பின்றி அங்கணைந்தோர் மீளச் செய்யும் அருங்கூவ லொடுங்கூவல் பதினொன் ருமால். 19

தயிர், பால், நறியநெய், தேன், கருப்பஞ்சாறு, இவை தனித் தனிக் கிணறுகளாக உள்ளன. மூன்று கிணறுகள் தெளிவுற முத்திக்கு வழியையும், சுவர்க்க நெறியையும், பிற உலகிற்குச் செலவையும் காட்டுவன ஆகும். விம்மிதமடைய நிழலைப்பிணிக்கும் கிணறு ஒன்றும், நிலத்தில் விதையின்றி முளையைத் தோற்றுவிக்கும் கிணறு ஒன்றும், மயக்கமின்றி அங் கணுகினோரைத் திரும்பச் செய்யும் கிணறு ஒன்றும் ஆகப் பதினொரு கூவல்கள் அங்குள்ளன.

செக்கு- சிலை - சிலம்பொலி

தன்னிடைஎள் ளினைப்பெய்யின் மற்றோர் ஞாங்கர்த் தயிலம்எழச் செய்வதொரு செக்கும் உண்டு, மன்னுயிர்செய் வினைப்பயனைத் தாமே நல்குஞ் சிலைஒன்று சிலைப்பாவை ஒன்று மன்னுங், கன்னிமதிற் காஞ்சிநகர் காவல் பேணுங் கருமேனி வயி-ரவமாக் கடவுள் பாத, நன்னடனச் சிலம்போசை இடைய றாது நானிலத்தோர் வியப்பெய்தக் கேட்கும் ஓர்பால். 20

தன்னிடத்தில் எள்ளையிடின் பிறிதோரிடத்து நெய் (எள் நெய்) எழச் செய்வதொரு செக்கும் உள்ளது. பல்லுயிரும் செய்கின்ற புண்ணிய பாவப் பயன்களைத்தாமே நல்க வல்ல கல் ஒன்றும்; கல்லால் அமைந்த பாவை ஒன்றும் உள்ளன. அழிவில்லாதமதில் சூழ்ந்த காஞ்சி நகரைக்காக்கும் காரி எனும் பெயருடைய வயிரவர் தம் திருநடனச் சிலம் பொலி நானிலத்தோர் அதிசயிக்குமாறு ஓவாது கேட்கும் ஒரு புறம்.

இன்னனவாம் அதிசயங்கள் மற்று முள்ள எல்லையிலை அவைமுழுதும் அறிவார் யாரே; முன்னுகத்தின் எல்லார்க்கும் காட்சி எய்தும் மூண்டகொடுங் கலியுகத்திற் படிமை வாழ்க்கை, மன்னினோர் சிலர்க்கன்றித் தோன்றா முத்தி மருவினர்க்கு மேலுலகின் வைத்த வண்ணம், அன்னமலி வயற்காஞ்சி வரைப்-பின் வாழ்வார் அகங்களிப்பக் கண்ணுதலார் அமைத்த வாகும் 21

இவைபோல்வன ஆகிய விம்மிதங்கள் மேலும் உள்ளன அள வில்லாதன ஆகும். அவற்றை முற்றவும் அறியவல்லவர் யாவரே? கிரே தாயுகத்தின் யாவர்க்கும் காணப்படும். கொடுமை முதிர்ந்த கலியுகத் தில் தவ வாழ்க்கையில் நின்றோர் சிலர்க்கே அல்லாமல் ஏனையோர்க்குப் புலப்படா. முத்தியை அடைந்தோர் மேலுலகில் வைத்தபடி அன்னங் கள் தங்குகின்ற வள வயலையுடைய காஞ்சி வைப்பில் வாழ்வார் மன மகிழச் சிவபெருமானார் அமைத்தன வாகும்.

இங்குரைத்த மேன்மையெலாங் கண்டுங் கேட்டும் இந்நகரிற் கொடுந்தீமை இழைப்பா ராயின், அங்கவரே கயவரெனப் படுவர் அந்தோ அறிவின்றி அறியாதுஞ் செய்த பாவப், பங்கமெலாம் ஒழிவெய்தும் அறிந்து செய்யிற் பாற்றரிதாம் ஆதலின்நாற் பயனும் வேண்டி, உங்குறைவோர் தத்தமக்கு விதித்த வாற்றான் ஒழுகியே கம்பரருட் குரிய ராவர். 22

இங்குக் கூறிய விம்மிதங்கள் யாவற்றையும் கண்டும் கேட்டும் வைத்து இக்காஞ்சியிற் கொடிய தீங்குகளைச் செய்வராயின் அவரே கீழ் மக்களெனப் பேசப்படுவார். ஐயகோ! அறிவு சிறிதும் இன்றியும் இவற்றை அறியாதும் செய்த பாவப்பயன்களாகிய துன்பங்கள் கெடும்.

அறிந்து வைத்துச் செய்தால் அப்பாவங்கள் போதல் இல்லையாகும். ஆகலின், அறம் பொருளின்பம் வீடாகிய நாற்பயனையும் விரும்பி இங்கு வாழ்வோர் தத் தமக்கு விதித்தபடி ஒழுகின் திருவேகம்பர் தம் திருவருளுக்குப் பாத்திர ராவர்.

*விம்மிதப் படலம் முற்றிற்று.*

*ஆகத் திருவிருத்தம் 2553*

—:0:—

# ஒழுக்கப் படலம்

*அறுசீரடி யாசிரிய விருத்தம்*

*மாதரை யெல்லாம் வீழும் மடவனும் ஈன்ற தாயைக்*
*காதலன் ஆகான் அச்சீர்க் கடியனுஞ் சிவன்வாழ் வைப்பிற்*
*பாதகம் புரியல் காஞ்சிப் பதியிடைச் சிறிதுஞ் செய்யல்*
*ஓதிய விதியி னூறே ஒழுகுதல் முறைமைத் தாமால்.* 1

மகளிர் எவரையும் விரும்பும் பெருந் தூர்த்தனாகிய அறிவிலியும் தன்னைப் பயந்த தாயை விரும்பான். அதுபோலக் கொடியனும் சிவ தலங்களில் பாவம் செய்யாதிருக்கக் கடவன். அவற்றினும் காஞ்சி நகர்க்கண் சிறிதும் பாவம் செய்யற்க. நூல்களில் விதித்த வழியில் ஒழுகுதலே வழக்குடைத்தாகும்.

*செந்துவர் படரும் ஆழித் தினகரன் எழுமுன் கன்னல்*
*ஐந்தென எழுந்து வெண்ணீ றணிந்துயர் மாவின் மூலத்*
*தெந்தையைக் காம நோக்கின் இறைவியை நினைந்து போற்றிப்*
*புந்தியின் உறத்தான் செய்யும் பொருள்அறம் சிந்தை செய்து.* 2

பவளக்கொடி படர்கின்ற கடலில் சூரியன் தோன்றுதற்கு ஐந்து நாழிகை அளவு முன்னெழுந்து திருநீற்றினை அணிந்து உயர்ந்த மாவடியில் எழுந்தருளும் எந்தையையும் காமாட்சியம்மையையும் எண்ணிப் போற்றிப் பின் அறிவில் நன்கு பொருந்தத் தான் செய்யவேண்டிய பொருளையும் அறத்தையும் சிந்தித்து,

*கரகமுந் தண்டும் மற்றுங் கரந்தழீஇக் காமர் ஊர்க்கு*
*நிருதியிற் படர்ந்து காதில் நீண்ட முப் புரிநூல் ஏற்றித்*
*தரணியில் திருணம் இட்டுச் சந்திகள் பகல்வ டக்கும்*
*இரவுதென் பாலும் நோக்கி இருந்திரண் டியக்கம் நீத்து.* 3

கமண்டலமும், தண்டமும், பிறவும் கைக்கொண்டு அழகிய ஊர்க்கு அப்பால் தென்மேற் றிசையிற் சென்று முப்புரி நூலை வலக் காதில் சுற்றிக்கொண்டு பூமியில் துரும்பை இட்டு உதயத்தில் வடக்கு நோக்கியும் அத்தமனத்தில் தெற்கு நோக்கியும் இருந்து மலசலங்களைக் கழித்து,

*குறி இடக் கரத்துப் பற்றிக் குறுகிநீர் முகந்திட் டோர்கால்*
*வெறிகமழ் புனலான் மண்ணாற் குறியினை விழுமி தாக்கி*
*நிறையமண் முக்கால் இட்டுக் குதங்கழீ இக் கழுவு நீள்கைக்*
*கிறுதியின் ஈரைங் காலும் இருகைசேர்த் தேழு காலும்.* 4

குறியை இடக்கையில் பற்றி நீரைக் குறுகிக் கைப் பாத்திரத்தில் முகந்து ஓர்முறை நீராலும் மண்ணாலும் அக்குறியைத் தூய்மை செய்து மும்முறை மண் சேர்த்துக் குதத்தைக் கழுவிக் கழுவிய இடக்கையைப் பத்து முறையும் இரு கையையும் சேர்த் தேழு முறையும்,

*அடிஎழு காலும் பூசி அறலினாற் சுத்தி செய்க*
*இடனுடை இல்லோர்க் கீதாம் இரட்டிமும் மடங்கு நாற்றி*
*கடனறி பிரம சாரி காட்டகத் துறைவோன் மற்றைக்*
*கெடலருந் துறவி இன்னோர் கெழுதக இயற்றல் வேண்டும்.* 5

கால்களை ஏழுமுறையும் கழுவி மண்கொண்டு தூய்மை ஆக்குக. இம்முறை மனைஅறம் காப்பவர்க்கு விதித்த தாகும். பிரமசாரி இரு மடங்கும், வானப் பிரத்தன் மும்மடங்கும், சந்நியாசி நான்கு மடங்கும் இங்ஙனம் செய்தல் வேண்டும்.

*கொணர்வுறு நீர்வாய்ப் பெய்து கொப்புளித் திருகால் தூய்மை*
*அணையநீர் குடித்துப் பின்னர் அணிவிரல் உறுப்புத் தீண்டல்*
*இணைவிழைச் சுணவு மாற்றீ ரியக்கமுற் றிடில்நா லெண்கால்*
*இணையில்ஈ ரெண்கா லெண்காற் கொப்புளித் திடுதல் வேண்டும்.* 6

நீரைக் கொண்டு வந்து வாயில் விட்டு இருமுறை கொப்புளித் துமிழ்ந்து தூய்மை உண்டாக இருமுறை ஆசமனம் செய்து பின்னர் மோதிர விரலால் அங்கங்களைத் தொடுக (அங்க நியாசம்கரநியாசம்). புணர்ச்சியுறின் முப்பத்திரண்டு முறையும் உணவிற்குப் பின் பதினாறு முறையும், மலசலமோசனத்திற்குப் பின்பு எட்டு முறையும் வாய்கொப் புளித்திடல் வேண்டும்.

*சலமலம் விடுக்கும் போதுந் தையலார் கலவிப் போதும்*
*குலவெரி வளர்க்கும் போதும் வெண்பல்கோல் தின்னும் போதும்*
*உலவுநீர் குடையும் போதும் உணவினும் பேசல் செய்யார்*
*மலவலி துரக்கும் எங்கோன் வகுத்தநூல் முறையின் நிற்போர்.* 7

மலவன்மையைக் கெடுக்கும் எமது பெருமான் விதித்த நூல்வழி நடப்பவர் சலம் மலம் விடும்போதும், கலவிக் காலத்தும், வேள்வி செய்யும் பொழுதும், பல் துலக்கும்போதும், அசைகின்ற நீராட்டுக் காலத்தும், உணவுகொள்கையினும் உரையாடார்.

*விதித்தகோல் தின்று தூய மென்புனல் படிந்து மேனி*
*கதிர்ப்பநீ றணிந்து சந்திக் கடன்புரிந் துறுபே ரன்பின்*
*முதிர்ச்சியின் இலிங்க பூசை நாள்தொறும் முட்டா தாற்றித்*
*துதித்தனர் காலந் தோறும் ஏகம்பந் தொழுது போற்றல்.* 8

ஆல், வேல் முதலிய விதித்த கோலால் பற்களைத் தூய்மை செய்து, தெண்ணீரில் மூழ்கித் திருமேனியில் ஒளியெழத் திருநீற்றினை அணிந்து சந்தியாவந்தனத்தை முடித்து மிக்க பேரன்பின் முறுகிய நிலைமையால் சிவலிங்க பூசனையை நாடோறும் வழுவாது செய்து துதித்தனராய்க் காலங்கள்தோறும் சென்று திருவேகம்பரைத் தொழுது போற்றுக.

*இம்முறை ஒழுக்கின் மாறா தியங்குறும் பிரம சாரி*
*செம்மணி வடிவிற் கம்பர் திருவருள் கிடைத்தல் வேண்டி*
*மம்மரில் குரவன் மாடே மறையெலாம் முறையின் ஓதல்*
*மும்மறை இரண்டொன் றேனும் முற்றுறப் பயிறல் வேண்டும்.* 9

இவ்வாறு வழுவாது ஒழுகும் பிரமசாரி மாணிக்க வண்ணராகிய திருவேகம்பர் திருவருள் வாய்த்தலை விரும்பி மயக்கமில்லாத (தெளிவுடைய) ஆசிரியரிடத்தே வேதங்கள் அனைத்தையும் மரபொடும் ஓதுக. மூன்று வேதங்களில் இரண்டொன்றேயினும் திரிவையங்களின்றி முழுவதும் பயிற்சியுறவேண்டும்.

*மடங்கலிற் கன்னி தன்னின் மதிநிறைந் துறுநாள் ஓதத்*
*தொடங்குக மகரத் தந்நாள் துகளற முடிக்க மீண்டு*
*மடங்கரும் வெண்கேழ்ப் பக்கத் தோதுக அங்க மாதி*
*உடங்குதேய்ப் பக்கத் தோதல் விலக்குநாள் ஓதல் வேண்டா.* 10

சிங்கம், கன்னி எனப்படும் ஆவணி புரட்டாசி மாதங்களில் பௌர்ணிமை கூடும் நாட்களில் நூல் பயிலத் தொடங்குக. மகரத்து அந்நாள் ஆகிய தை மாதத்துப் பௌர்ணிமையில் குற்றமறப் பூர்த்தி செய்க. அடுத்து வளரும் (வெண்கேழ்) சுக்கிலபட்சத்தில் அங்கங்கள் உபாங்கங்கள் ஆகிய இவற்றை ஓதத் தொடங்குக. கிருட்டின பக்கத்தும் விலக்கிய நாட்களிலும் தொடங்குதல் கூடா.

*செவ்விநாண் உடையே தண்டந் திகழ்முந்நூல் உத்த ரீயம்*
*அவ்வவர் தமக்கு வெவ்வே றருமறை விதித்த வாற்றால்*

எவ்வமில் மறையோ ராதி மூவரும் இயல்பிற் கொள்க
செவ்வழல் விதியின் ஓம்பி அணிகஅத் திருவெண் ணீறே. 11

அரைநாண், அரைக்காடை, கோல், முந்நூல், மேலாடை நூல் விதித்தவாறு பார்ப்பனர், அரசர், வணிகர் எனப்படும் முத்திறத்தவரும் தம்மியல்பிற் கொள்க. விதிப்படி வேள்வியைக் காத்துத் திருவெண் ணீற்றை அணிக.

முன்னிடை கடையின் ஒன்றப் பவதிச்சொல் மொழிந்துபார்ப்பார்
மன்னவர் வணிகர் பிச்சை ஏற்பது மரபாம் ஆயுள்
முன்னுறும் இளையர் தம்மின் மூத்தவர்ப் பணிக தாழ்ந்த
பின்னவர் தமக்கு மூத்தோர் வாழ்த்துரை பேசல் வேண்டும். 12

'பவதி' என்னும் சொல்லைப் பிராமணர் முதலான மூ வருணத் தவரும் முறையே முதலிலும், இடையிலும் கடையிலும் கூட்டிப் 'பவதி பிட்சாந் தேகி,' 'பிட்சாம் பவதி தேகி', 'பிட்சாந் தேகி பவதி' எனப் பிட்சை ஏற்றல் சம்பிரதாயமாகும். ஆயுள் வளர விரும்புகின்ற இளையர் தம்மினும் வயதின் மூத்தோரை வணங்குக. வணங்கியபின், வணங்கப் பட்டோர் வணங்கினோர்க்கு வாழ்த்துரை கூறுவாராக.

ஓதிய பிரம சாரி ஒழுக்கினில் வழாது நின்று
மூதரு மறைநூல் கற்றோர் முனிவர்தங் கடனில் தீர்ந்து
வேதமா மூலத் தெங்கோன் திருவருள் மேவப் பெற்றுப்
பேதமில் பெருவீட் டின்பப் பேற்றினுக் குரிய ராவார். 13

முற்கூறிய பிரம சரியத்தில் தளராது நின்று பழமறைகளைக் கற்றோராகிய முனிவரர்தம் கடனைக் கேள்வியான் முற்றுவித்து வேத மாகிய மாவடியில் எழுந்தருள்கின்ற திருவேகம்பர்தம் திருவருள் கைவரப்பெற்று ஒன்றுபடும் முத்திப் பேரின்பத்திற் குரிமை உடைய ராவர்.

வேறு

பின்னவர்கள் பற்றிகந்து பத்தியினால் திருக்காஞ்சிப் பேரூர் வாழ்க்கை, மன்னுதல்வேட் டனராயின் ஏகம்பன் றனக்கணித்-தாம் இருக்கை வைகிப், பன்னருஞ்சீர்க் கண்டிகைநீ றுடல்-வயங்கச் செய்பணிகள் பலவும் ஆற்றித், துன்னியமாந் தருமூலச் சுடரொளியை முட்டாது தொழுது வாழ்வார். 14

நான்காம் வருணத்தவர் இருவகைப் பற்றும் விட்டு மெய்யன்பி னால் திருக்காஞ்சியாகிய பெருநகரில் வாழ்தலை விரும்பினராயின் திருவே கம்பர் ஆலயத்திற்கு அணித்தாக ஓரிடத்தில் இருந்து சொல்லுக் கடங்காத சிறப்பினையுடைய உருத்திராக்கத்தையும் விபூதியையும்

விளங்க அணிந்து செயத்தக்க தொண்டுகள் பலவற்றையும் செய்து மாவடியில் முளைத்த பரஞ்சுடரை வழுவாது தொழுது வாழ்வார்.

கலி விருத்தம்

வற்றரு மறைஅவ்வா றோதி வாழ்க்கையிற்
பற்றில னுயிடிற் குரவன் பாலென்றும்
உற்றினி துறைகபற் றுடைய னேயெனில்
பெற்றியின் அருட்குரு இசைவு பெற்றரோ. 15

தழைத்த மறைகளை மேலே கூறியவாறு கற்று இல்லற வாழ்வில் விருப்பிலன் ஆயின் ஆசாரியனிடத்துத் தங்கி வாழ்க. விருப்புடையன் ஆயின் உரிய முறையின் அருட்குருவின் சம்மதத்தைப் பெற்று,

கடவுளர் பிதிரர்தங் கடன்கள் நீக்குவான்
வடுவறும் இலக்கணம் மாண்ட கற்பினின்
மிடலுடைக் கிழத்தியை விதியின் வேட்டுப்பின்
நெடுமனை வாழ்க்கையின் ஒழுகல் நீதியே. 16

தேவர், தென்புலத்தார் தம் கடன்களை முடித்தற் பொருட்டுக் குற்றமற்ற இலக்கணத்தால் மாட்சிமையுடைய கற்பினால் திண்ணிய உரிமையை விதிப்படி திருமணம் புரிந்துகொண்டு மனை அறத்தில் ஒழுகுதல் முறையே.

கருதுமுப் பதிற்றிரு கவள மென்பதம்
இருபொழு துண்டலும் எச்சம் ஐவகை
புரிதலும் விதித்தநாள் மனைவி பூண்முலை
மருவலும் இனையவும் இவர்க்கு மாணுமே. 17

ஒரு வேளைக்கு முப்பத்திரண்டு கவளமாக இருவேளை உணவு கொள்ளலும், ஐவகை வேள்வியை யியற்றலும், விதித்த நாட்களில் மனைவியொடு கலத்தலும் ஆகிய இவை இவர்க்குச் சிறக்கும்.

ஓதெரி சமிதையின் ஓம்பல் தெய்வமாம்
ஏதமில் பிதிரருக் கீதல் அன்னதாம்
பூதருக் கிடுபலி பூத எச்சமே
வேதியர்க் கோதனம் வீசல் மானிடம். 18

விதித்த சமித்துக்களைக் கொண்டு வேள்வி செய்தல் தேவயாகம், துன்பில்லாத தென்புலத்தார்க்குத் தருப்பணம் செய்தல் பிதிர்யாகம், பலியிடல் பூதயாகம், பிராமணர்க்குச் சோறு வழங்கல் மானுட யாகம்,

பெருமறை ஓதுதல் பிரம எச்சம்இவ்
விருமகம் ஐந்தனுட் பிரம எச்சந்தான்
திருமிகச் சிறத்தலில் தெய்வ வேதியர்
ஒருதலை யாகஈ தோம்பல் வேண்டுமால். 19

வேதம் ஓதுதல் பிரமயாகம் எனப்படும் இவ்வைந்து வகையுள் பிரமயாகம் தெய்வத் தன்மை மிக்கமையால் தெய்வத் தன்மையுடைய பிராமணர் துணிவாக இதனைக் கடைப்பிடிக்கவேண்டும்.

வைகறை எழுந் தசெய் வினைகள் மாண்டகச்
செய்துமா நகர்ப்புறத் தொழுகுந் தெய்வநீர்
எய்தினர் குடைந்துவெண் டுகில்இ ரண்டுடுத்
தைதுறு கண்டிகை நீற ணிந்துபின். 20

விடியற் காலையில் துயிலெழுந்து காலைக் கடன்களை முடித்த பின்பு பெரிய நகரின் மருங்கே ஓடும் ஊறும் நதி முதலிய தீர்த்தங்களை அடைந்து மூழ்கி வெள்ளிய ஆடை இரண்டனை உடுத்து அழகு மிகும் உருத்திராக்கமும் திருநீறும் அணிந்ததன் பின்,

வண்புதல் தருப்பைமேல் வைகி மும்முறை
ஒண்புனல் வேதங்கள் உவப்ப ஆசமித்
தெண்பெற வாய்துடைத் தியல்பில் தீண்டியே
பண்பயில் மறைகளைப் படித்தல் வேண்டுமால். 21

தருப்பாசனத்தில் இருந்து வேதங்கள் மகிழத் தெய்வநீரை ஆசமனம் செய்து கருத்துடன் வாயைத் துடைத்துத் தொடுமிடங்களை மந்திரத்துடன் மோதிர விரலால் தொட்டுச் சந்தத்துடன் கூடிய வேதங்களை ஓதுதல் வேண்டும்.

மாதவப் பேற்றினன் மறைகள் அண்ணலைச்
சூதமாய் நிழற்றலின் தொல்லை ஏகம்ப
நாதனுக் கினியதிப் பிரம நன்மகம்
மேதகும் அறங்களுள் மிக்க தாகுமால். 22

பெருந்தவப் பயனால் வேதங்கள் பெருமானுக்கு மா மரமாய் நிழல் செய்தலின், இப்பிரமயாகம் (வேதம் ஓதல்) திருவேகம்பப் பெருமானுக்கு உவப்பாவது. மேன்மை பொருந்திய அறங்கள் பலவற்றுள்ளும் தலையாயதும் ஆகும்.

ஆற்றலுக் கியையஎவ் வளவைத் தாயினும்
போற்றரு மறையினைப் போற்றி மேதகச்

சாற்றுகா யத்திரி சதவு ருத்திரம்
ஏற்றஐந் தெழுத்திவை விதியின் எண்ணியே. 23

தத்தமக்கு முடிந்த நிலையில் எத்துணைச் சிறு பொழுதாயினும் துதித்தற்கரிய வேதங்களை ஓதி எடுத்தோதப்படும் காயத்திரி சத வுருத்திரம், இயைந்த பஞ்சாக்கரம் இவற்றை விதித்தபடி கணித்து,

அனைத்தினும் நிறைந்துறை அடிகள் பூசனை
தனக்குறு திருப்பள்ளித் தாமங் கொய்துபோய்
மனைத்தலை வைத்துமேல் வாழ்க்கைக் கேய்ந்தன
எனைத்துள கருமமும் இயல்பின் நாடியே. 24

எவற்றினும் நிறைந்துறையும் சிவபிரானார் பூசனைக்குத் தக்க திருப்பள்ளித் தாமத்திற்குரிய மலர்களைக் கொய்துகொண்டு போய் மனையில் தொடுத்தற்குரிய இடத்தில் வைத்து மனைவாழ்க்கைக்கு வேண்டும் எவ்வகைச் செயல்களையும் ஒழுங்குபட ஆராய்ந்து முற்று வித்து,

கதிரவன் உச்சியி னணுகுங் காலையின்
முதுசிவ கங்கைநீர் முறையின் மூழ்குபு
மதியுறு நியதிகள் முடித்து மாகிழல்
அதிபனை முறையுளி அணுகந்து போற்றியே. 25

உச்சிப்போதில் அறிவுருவான சிவகங்கையில் முறைப்படி மூழ்கி மதிப்புடைய நியமங்களை முற்றுவித்துத் திருவேகம்பப் பெருமானை விதிப்படி அடுத்துப் பரவி,

மீண்டுதன் மனைவயின் மேவித் தற்பொருட்
டீண்டிய அருட்குறி இறைவன் அர்ச்சனை
பூண்டபே ரன்பினிற் புரிந்து பூசனைக்
காண்டுறப் பெனப்படும் அழலும் ஓம்பியே. 26

திரும்பித் தன் மனையைச் சேர்ந்து ஆன்மார்த்தமாக எழுந்தருளி யுள்ள சிவலிங்க பூசனையைப் பேரன்பினால் செய்து அப்பூசனைக் கங்க மாகிய சிவாக்கினியையும் வழிபாடு செய்து,

அறமுதல் இழிஞர்ஈ றான வற்றினுக்
குறுபலி உதவிஊனங் கெச்சம் ஐவகை
முறையுளி யாற்றிஅவ் வேலை முன்னிய
பெறலரு விருந்தினர் பேணி ஊட்டியே. 27

காக்கைக்குப் பலியிடல் முதலாக இழிந்தவர் கடையாக எவற்றுக்கும் பொருந்திய பலியையிட்டு ஐவகை யாகங்களை முறைப்படி முடித்து அப்பொழுது அடுத்த பெறற்கரிய விருந்தினரை விரும்பி உண்பித்து,

நீத்தவர்க் கையமும் நேர்ந்து நோயினர்
வாய்த்தவெஞ் சூல்முதிர் மகளிர் பிள்ளைகள்
மூத்துறு கிழவரை முந்த ஊட்டிப்பின்
ஏத்துறு கிளைஞரோ டுண்டல் ஏயுமால். 28

துறந்தவர்க்குப் பிச்சையிட்டு நோயுற்றவர், நிறை கருவுற்ற மகளிர், குழவிகள், வயதான் முதிர்ந்தவர் இவர் தம்மை முன்னர் உண்பித்துப் பின்பு ஏற்றமிக்க உறவினரோடு உண்ணுதல் தகும்.

எழுசீரடி யாசிரிய விருத்தம்

கங்கைவார் சடிலக் கடவுளை நினைந்து கறிதயிர் நெய்யுடன் ஆவி, அங்கியை எழுப்பி ஆகுதிச் செய்கை யாகமுப் பதிற்றிரு கவளம், பங்கமில் விதியா லுண்டுகை பூசிப் பாகடை தின்றதன் பின்னர்ப், பொங்குபே ரன்பின் ஒக்கலோ டமர்ந்திப் புராணமே கேட்டிடல் வேண்டும். 29

சங்காதரராகிய பெருமானைத் துதித்து உள்ளே அனலை எழுப்பிக் கறிகள், தயிர், நெய் இவற்றுடன் வேள்வியி லிடும் அவிசாக முப்பத்திரண்டு கவளம் குற்றமில்லாத விதியினால் உண்டு கையையும் வாயையும் தூய்மை செய்து தாம்பூலம் தின்று பிறகு சுற்றத்தாரையும் உடன் வைத்துத் தழைத்த பேரன்பொடும் இருந்து காஞ்சிப் புராணத்தையே செவிமடுக்க வேண்டும்.

நான்மறைப் பொருளாய்க் கதைக்கெலாம் இடனாய் நாற்பயன் உதவும்ஏ கம்பன், மேன்மையுங் காம நோக்குடை இறைவி மேன்மையும் விளக்குவ திதுவே, நான்முறை வருண நிலைகளின் ஒழுக்கம் நுண்ணிதின் தெரிப்பதும் இதுவாம், பான்மையாற் காஞ்சிப் புராணமே நாளும் பயில்வுறக் கேட்பது மரபால். 30

நான்கு வேதங்களின் பொருளாயும், எல்லா வரலாறுகளையும் தன்னுட் கொண்டதாயும், அறம் பொருளின்பம் வீடுகளை அளிப்பதாயும், திருவேகம்பர் காமாட்சி இவர்தம் மேன்மையை விளக்குவதாயும், நூல் வழக்குகளையும், வருணம் ஆசிரமம் இவற்றின் ஒழுக்கங்களையும் நுட்பமாக எடுத்து விளக்குவதும் இக்காஞ்சிப் புராணமே ஆகும் இயல்பினாலும் இதனையே நாடொறும் அடிப்பட்டுவரக் கேட்டலும் வழக்காம்.

அலர்கதிர் என்றூழ் மறைந்திடுங் காறும் ஆன்றவர் படித்திடக் கேட்டுக், குலவுசீர் அந்தி செய்கடன் முற்றிக் கோயிலைக் குறுகி ஏ கம்பத், தலைவனைத் தொழுது மனைவயி னணுகிச் சமிதையின் அங்கிவேட் டமர்ந்து, பலருடன் அருந்தி மனைவியோ டிரவிற் பள்ளியின் மேவுதல் விதியே. 31

சூரியன் மறையுமளவும் அறிவொழுக்கங்களான் நிரம்பியவர் உரைக்க விரும்பிக் கேட்டுச் சிறப்பு விளங்கும் அத்தமன காலத்தில் அனுட்டானம் முதலிய முடித்துக் கோயிலை நெருங்கித் திருவேகம்பரை வணங்கி வீட்டிற் புகுந்து அக்கினி காரியம் செய்து பலருடனும் இருந்து உணவருந்தி மனையாளுடன் இரவில் படுக்கையிற் பொருந்துதல் விதியாகும்.

தருக்குறு வனப்பிற் பிறர்க்குரி யவரைத் தவ்வையில் தங்கையிற் காண்க, உருத்திர கணிகை மகளிரைத் தாயின் உன்னுக வயிணவ மடவார், அருப்பிளங் கொங்கைத் தாதிகள் மாட்டும் அன்னதே யாகலிற் புணர்ச்சி, விருப்பினை அவர்பால் மறப்பினும் எண்ணல் ஓம்புக நன்னெறி விழைவார். 32

இறுமாத்தற்குரிய பேரழகுடைய பிறர் மனைவியரைத் தமக்கையர் தங்கையராக வைத்து மதிக்க. கோயிற் றொண்டுசெய் உருத்திர கணிகையரைத் தாயென எண்ணுக. திருமால் கோயிற் பணிப்பெண்கள், மொட்டனைய இளங்கொங்கையையுடைய வீட்டேவற் பெண்டிர்கள் ஆகிய இவர் திறத்தும் அத் தாயுணர்ச்சியே எய்துக. அறவழியை விரும்புவோர் யாவரும் கலவியின்பத்தை மறந்தும் எண்ணுதலைப் பரிகரிக்க.

இருட்சுரி கருமென் மலர்க்குழல் மனையாள் இளமுலைப் போகமும் மகவின், பொருட்டெனக் கொண்டே விலக்குநாள் ஒழித்துப் புணர்ந்தபின் நீங்கிவெம் பாந்தள், அரைக்கசைத் தருளும் அடிகளீ ரடியும் அகந்தழீஇத் துயிலுக மற்றீங், குரைத்தவா றென்றும் ஒழுகுநர் எங்கோன் திருவருட் குரியவ ராவார். 33

இருண்டு நெய்த்து சுரிந்து தோன்றும் மலரணிந்த கூந்தலையுடைய மனைவியினிடத்துப் பெறும் போகத்தையும் மகவு பெறற் பொருட்டென மதித்து விலக்கிய நாள்களில் வில்க்கி விதித்த நாட்களில் அம்மனையாளைக் கலந்து பின் பிரிந்து பாம்பை உதரபந்தனமும் (அரைக்கச்சு) ஆக வீக்கியருளும் சிவபிரானுர் திருவடிகளை மனத்துட்கொண்டு தனித்துத் துயில்க. இங்குக் கூறியவாறென்றும் ஒழுகுவோர் இறைவன் திருவருட்குப் பாத்திர ராவர்.

*கச்சிமா நகரிற் கம்பநா யகன்முன் கரிசறுத் தான்றவர் முகப்ப, அச்சுவம் ஆடை ஊண்முதல் தானம் ஆதரித் தியைந்தவை அளித்தல், பொச்சமில் அவ்வக் கொடைப்பெரும் பயன்ஒன் றனந்தமாய்ப் பொலியும்அவ் வரைப்பின், நச்சிமெய் யுணர்வு கொளுத்துவோன் வீடு நணுகும்மேம் பட்டதித் தானம்.* 34

காஞ்சியில் திருவேகம்பர் திருமுன்பு குற்றம் நீங்கி உயர்ந்தோர் கொள்ளும்படி குதிரை, ஆடை, உணவு முதலாம் இவற்றை அன்றித் தம்மால் இயைந்தவற்றைத் தானம் விரும்பிக் கொடுக்க. அவ்வப் பொருளுக்கு ஏற்பக் கொடையினால் வரும் மெய்ப் பெரும் பயன் ஒன்று பல மடங்காய்ப் பெருகும். அச்சந்நிதியில் விரும்பி மெய்யறிவைப் புகட்டும் ஆசிரியன் வீட்டினைத் தலைப்படும் அத்துணைச் சிறப்புடையது அவ்விடம்.

*ஓதல்வேள் வீகை ஓதுவித் திடல்வேட் பித்தல்ஏற் றலுமாறும் மறையோர்க், காதியின் மூன்றோ டளித்திடல் ஊர்தி படைத்-தொழில் அரசருக் குரிய, ஆதியின் மூன்று வாணிகம் பசுஏர் வணிகருக் காகுமங் கவற்றுள் ஆதியின் மூன்றும் அல்லவை முறையே அவ்வவர் விருத்திகட் காமால்.* 35

ஓதல், வேட்டல், ஈதல், ஓதுவித்தல், வேட்பித்தல், ஏற்றல் என்னும் இவ்வாறும் வேதியர்க்குரியன. முன்னுள்ள மூன்றாகிய ஓதல், வேட்டல், ஈதல் என்னும் இவையும் காவல் செய்தல், ஊர்தி பழகல், படைக்கலப் பயிற்சி என்னும் இவையும் ஆக ஆறும் அரசர்க் குரியன. முன் மூன்றாகிய ஓதல், வேட்டல், ஈதல், என்னும் இவையும் வாணிபம் செய்தல், ஏருழுதல், பசுக் காத்தல் என்னும் இவையும் ஆக ஆறும் வணிகர்க் குரியன. பின்னுள்ள மூன்றும் மூவகையவர்க்கும் தத்தமக்குப் பிழைப்புத் தொழிலாகும்.

*இருதமோ டமிர்த விருத்தியும் ஆன்றோர்க் கிசைவன மிருத-மும் ஆகும். தருபிர மிருதஞ் சத்தியா நிருதம் தழுவலும் ஒன்று-நாய் விருத்தி, ஒருவலே வேண்டும் உஞ்சநல் விருத்தி இருதமாம் ஒன்றிர வாமல், வருவதே அமிர்தம் இரந்துறல் மிருதம் உழவின்-வந் துறல்பிர மிருதம்.*

இருதமும், அமிர்தமும் வயிறு வளர்த்தற்கு மூவகையருள்ளும் தக்கோர் மேற்கொள்ளத் தகுவன. மிருதமும் சிறப்பின்று எனினும் கொள்ளுதலும் ஒருவாறு பொருந்தும். பிரமிருதமும், சத்தியாநிருதமும் ஆகிய இரண்டனையும் விலக்கல் வேண்டும். ஒருவாறு தழுவிக்கொள்ளலும் ஆகும். நாய் விருத்தி எனப்படும் ஒன்றனை விலக்கலே வேண்டும். நல்ல உஞ்சவிருத்தியாவது அறுக்கப்பட்ட வயல்களில் சிந்திக் கிடப்ப வற்றைப் பொறுக்கிப் பிழைத்தல் ஆகும். அஃது இருதம் எனப்படும்.

பிறரை இரவாமல் வருபொருள் அமிருதம் எனப்படும். யாசித்துப் பெறின் அது மிருதம் ஆகும். உழவாற் பெற்றது பிரமிருதம்.

சத்தியா நிருதம் வாணிக விருத்தி தாழ்வுறுஞ் சேவகஞ் செய்யல், வைத்தநாய் விருத்தி ஆதலின் அதனை மாற்றியே இருபிறப் பாளர், ஒத்ததோர் தூய விருத்தியால் தம்மை ஓம்பிமெய்ந் நூல்பல பயின்று, தத்தமக் குரிய நியதியின் ஒழுகித் தங்குதல் மரபெனப் படுமால்.

வாணிகத்தால் வாழ்தல் சத்தியாநிருதம் ஆகும். தாழ்வு மிகும் சேவகம் எனப்படும் பிறர் ஏவலின் நின்று வாழ்தல் நாய்விருத்தி ஆகும். அந்நாய் விருத்தியை விலக்கி முதல் மூன்று வருணத்தவரும் தமக்குப் பொருந்தியதோர் நல்வழியால் தம்மைக் காத்து மெய்ப்பயனைக் காட்டும் நூல்கள் பலவும் பயின்று தத்தம் வருணத்திற்கு விதித்த வழியில் நடந்து அடங்குதல் வழக்கு ஆகும்.

கைசெவி சென்னி கழுத்தினெப் போதுங் கண்டிகை அணிதல்வெண் ணீறு, மெய்யெலாம் பூசி ஐந்துமூ விடத்தும் விலங்குமுப் புண்டரம் பொறித்தல், வைதிக நிலையோர் மரபென மறைநூல் வகுத்திடும் ஆதலின் இவற்றைக், கைவிடா தென்றுங் கடைப்பிடித் திடுக இகழ்ந்திடிற் கடையரே யாவார். 38

கைகள், காதுகள், கழுத்து ஆகிய இவ்விடங்களிலும், தலைமேலும் எப்பொழுதும் உருத்திராக்க மணிதலும் வெண்ணீற்றை மேனி முற்றும் பூசிப் பதினைந்திடங்களில் ஒளி விடுகின்ற திரிபுண்டரம் தீட்டுதலும் வைதிக வழக்கினர் இயல்பென நூல்கள் இயம்பும் ஆகலின் இவற்றை வெறுத்தொதுக்காது எந்நாளும் கைக்கொண்டொழுகுக. பழித்திடில் கீழோரே ஆவர் அவர்.

வைதிக சைவ நெறிகளைப் பற்று மாண்பிலாச் சூத்திரர் முதலோர்க், கைதுமீப் போய புண்டர மாதி அணியலாம் ஏனையர்க் காகா, மெய்திகழ் மறைகள் ஆகமம் விதித்த கருமம்மற் றினையன பிறவும், உய்தியை வேட்டோர் ஆசரித் தொழுகி விலக்கின ஒழிவது முறையே. 39

வேதநெறி சைவநெறிகளைப் பின்பற்றுதற்குரிய மூவருணத்துட் பிறக்கும் பேறில்லாத சூத்திரர் முதலானோர்க்கு ஊர்த்துவ புண்டரம் முதலாக அணிதல் தகும். பிறர்க்கு அங்ஙனம் அணிதல் தக்கதன்று. உண்மை விளங்கும் வேதாகமங்கள் விதித்த கருமங்கள் ஆகிய இங்குக் கூறியவும் பிறவும் கடைத்தேறுதலை விரும்பினோர் கைப்பற்றி நடந்து, விலக்கிய தீயவழிகளைக் கைவிடுதல் தக்கதென்க.

*தவத்தினாற் செருக்கல் கண்டது விளம்பல் பொய்யுரை சாற்று-
தல் ஐந்தும், அவித்தஅந் தணரை இகழுதல் யாதும் அளித்தது
புகழ்ந்தெடுத் துரைத்தல்,எவற்றினை யானுங் கொலைசெயல் பிறர்-
பால் இடுக்கணை யுறுத்துதல் குறளை,செவிப்புகப் புகறல் பூப்புடை
மனையைத் தீண்டலும் வழுவெனப் படுமால்.* 40

தவஞ்செய்து இறுமாப்புறல், கண்டவற்றைப் பறைசாற்றல், பொய்ம்மொழியைப் பரப்புதல், ஐம்பொறிகளைப் புறஞ்செலாது அடக்கிய அந்தணரைப் பழித்தல், மிகச்சிறு கொடையையும் தற்பெருமை பாராட்டல், வறிதேயும் கொலைசெயல், பிறரைத் துன்புறுத்தல், புறங்கூறலைக் கேட்க விரும்புதல், புறங்கூறல், மாதவிடாயுற்ற மனைவியைத் தீண்டல் ஆகிய இவை குற்றம் எனப்படும்.

*மனைவியோ டுண்டல் அவளுடன் துயிறல் மனைவிஆ வித்துழிப்
பசிப்பில், வினைஇகந் தியல்பான் இருப்புழி உண்ணும் வேலையும்
ஆங்கவட் பார்த்தல், கனைகதிர்த் தேவைக் கிழக்கெழுங் காலை
மேல்கடற் பால்விழுங் காலைப், பனிவிசும் புச்சி யுற்றிடுங் காலைப்
பார்த்தலும் பழுதெனப் படுமால்.* 41

மனைவியை உடன்வைத் துண்ணல், கலந்தபின் வேறு துயிலாது அவளுடன் துயிலல், அவள் கொட்டாவி விடும்போதும் பசித்துள்ள போதும் வேலையின்றி இருக்கும்பொழுதும் உண்ணும்பொழுதும் அவளை நோக்குதல், சூரியன் எழும்பொழுதும், மறையும்பொழுதும், உச்சிப் போதும் ஆகிய இம் முக்காலங்களில் சூரியனைக் காணுதல் ஆகிய இவையும் குற்றம் எனப்படும்.

*உடையொழிந் திருநீ ராடுதல் ஆடை ஒன்றுடுத் துண்டல்ஈ
ரியக்கம், நடைவழிச் சாம்பர் ஆனிலை தீநீர் நள்ளுற விடுதல்ஆங்
குமிழ்தல், உடையிலா மாதை நோக்குதல் இருகால் ஒளிர்ந்தசெங்
கனலிடைக் காய்ச்சல், இடையுறும் அந்தி வேலையின் அருந்தல்
இவைகளும் விலக்கெனப் படுமால்.* 42

பெரிய நீர்நிலைகளில் உடையின்றி நீராடல், ஆடை ஒன்றுடுத் துண்ணல், வழியிலும், சாம்பலிலும், பசுக்கள் கூடுமிடத்திலும், தீயிலும், நீரிலும், சலம் மலம் விடுதல், அவற்றில் எச்சி லுமிழ்தல், நிருவாண மகளிரை நோக்கல், நெருப்பிடைக் காலைக் காய்ச்சல், சூரியன் மறையும் அந்திப்போதில் உண்டல் இவைதாமும் வழுவெனப்படும்.

*இந்திர திருவில் விசும்பிடை நோக்கி ஏனையர்க் கறிவுறக்
காட்டல், நிந்தையின் வாளா பேரிகல் விளைத்தல் கையிணை
குவித்துநீ ரருந்தல், செந்தழற் கடவுள் வான்பசு பார்ப்பார்*

தேவர்கள் ஞாயிறு குரவர், இந்துவின் முன்னர் இச்சையா றிருத்தல் இன்னவுந் தீங்கெனப் படுமால். 43

வானவில்லைப் பிறர்க்குக் கண்டு காட்டல், பழித்தற்குரிய பெருஞ் சண்டைகளை வறிதே கொள்ளல், இரு கைகளால் முகந்து நீரைப் பருகல், வேள்வித் தீ, சிறந்த பசுக்கள், பார்ப்பனர், தேவர், சூரியன், ஆசிரியர், சந்திரன் இவர்முன் நல்லிருக்கை கொள்ளாமல் மனம்போன படி இருத்தல் ஆக இவையும் குற்றம் எனப்படும்.

கேழுகிர் உரோமந் துணித்திடல் உகிராற் பல்லினைக் கிளைத்-திடல் தனியே, பாழ்மனைத் துயிறல் கண்படை எழுப்பல் முடிவட பாலின்வைத் துறங்கல், ஆழ்துரும் பொடித்தல் ஓட்டினை அடித்தல் தனிவழிச் செலல்பிறர் அணிந்த, காழகஞ் செருப்பு முதலிய அணிதல் இனையவுங் கடிந்திடப் படுமால். 44

நிறமுடைய நகம் மயிர் இவற்றைக் களைதல், நகங்களாற் பற்களைக் கீறுதல், குடியில்லாத பாழ்மனையில் தனியே துயிலல், உறங்குவோரை எழுப்புதல், வடதிசையில் தலையை வைத்து உறங்கல், துரும்புகிள்ளல், பிறருடைய செருப்பு, உடை இவற்றை அணிதல் ஆகிய இவையும் வழுவெனப்படும்.

அறக்கடை மிகும்ஊர் பெரும்பிணி யுறும்ஊர் அமர்இழி குலத்தவர் பதிதர், மறக்கொடுந் தொழிலோர் துவன்றும்ஊர் வைகல் வரையிடை நெடும்பொழு துறைதல், இறப்பரும் இசும்பின் ஏறுதல் இழிதல் இளவெயிற் காய்தல்நீ ராடா, துறப்பெருஞ் சிவலிங் கார்ச்சனை புரியா துண்டலும் வழுவெனப் படுமே. 45

பாவிகள், பெருநோயர், தாழ்குலத்தவர், சண்டாளர், கொடும் பாவச் செயலைப் புரிவோர் ஆகிய இவர்கள் மிக்கிருக்கும் ஊர்களில் தங்குதல், மலையில் நெடுங்காலம் இருத்தல், கடத்தற்கரிய நீரூறும் மலைச்சரிவில் ஏறுதல் இறங்கல், காலை வெயிலில் இருத்தல், நீராடல் சிவபூசனை இவை தவிர்ந் துண்ணல் ஆகிய இவையும் குற்றங்கள் எனப்படும்.

பூத்தவள் பதிதன் இழிஞனை அழுத்தைப் புத்தரைத் திகிரி-மேற் பொறித்த, மூர்த்தியைத் தீண்டல் காண்டலும் விலக்கே இலங்குமுப் புண்டரம் இன்றி, மீத்திகழ் வடிவம் முதலிய பொறித்த வேதியர் முகத்தினை மறந்தும், பார்த்துளோர் கம்பத் தலைவனைப் படர்ந்து கண்ணுறின் நண்ணுவர் தூய்மை. 46

பூப் பெய்தினவளையும், ஒழுக்கமிலாதவனையும், இழிசனனையும், பிணத்தையும், அருகனையும் தீண்டுதலும், காணுதலும் குற்றங்களாம்.

விளங்குகின்ற திருநீற்றினை அணியாது ஊர்த்துவ புண்டரம் முதலிய அணிந்த வேதியர் முகங்களை மறந்தும் பார்த்தல் குற்றமாகும். கபணனுறின் திருவேகம்பரைத் தரிசனம் செய்து தூய்மை அடைக.

மறையுடன் ஏனை நூல்களை எச்சந் தன்னுடன் மற்றைநல்
வினையைக், கறையறும் பார்ப்பா ரோடுஞ்சூத் திரரைக் காஞ்சியி
னொடும்பிற நகரைப், பிறைமுடிக் கடவு ளோடரி யயனை ஒப்பெனப்
பேசற்க பேசிற், குறைவரு நிரயக் குழியில்நீ டூழி குளிப்பதற்
கையமொன் றிலையே. 47

வேதத்தொடு பிற நூல்களையும், யாகத்தொடு பிற அறச் செயல்களையும், களங்கமற்ற பார்ப்பாருடன் சூத்திரரையும், காஞ்சி நகரொடு பிற நகர்களையும், சிவபிரானொடு திருமால் பிரமரையும் ஒப்பாக வைத்துப் பேசற்க. ஒப்பாகப் பேசில் பல்லூழிக் காலம் நிறைந்த நரகக் குழிகளில் மூழ்குவதற்குச் சிறிதும் சந்தேகம் இல்லை.

இன்னன பிறவும் மறைமுதல் நூல்கள் விலக்கிடும் இவற்றினை
யொழிக, பன்னரு மறையின் புறத்துநூ லனைத்துங் கெடுதியே
பயக்குமா தலினால், அன்னவை விடுத்து மறைநெறி வழுவா
தொழுகிநீள் அலர்பொழிற் காஞ்சி, தன்னில்ஏ கம்ப நாயகன்
அடியார் தம்மொடுங் குலாவுதல் முறையே. 48

இவை போல்வன வாக வேதங்கள் விலக்கிய யாவும் விலக்குக. புறச் சமய நூல்கள் தீங்கையே விளைக்குமாகலின் அவற்றைக் கைவிட்டு வேதாகம விதிவழிப் பிறழாது ஒழுகித் திருவேகம்ப நாயகர் அடியவரொடும் கூடியிருத்தல் முறையாகும்,

இருமுது குரவர் இறந்திடு மதிநாள் ஆண்டுதோ றெய்துழி
யுகாதி, வருமனு வாதி உவாமுதல் தினத்தின் வயங்குதென புலத்-
தவர்க் குறித்துத் திருமறை யவர்க்கு முறையின்ஊட் டிடுக ஏனை-
மாத் தலங்களிற் செய்யும், பெருநலம் அனைத்துங் காஞ்சியின்
ஊட்டும் பேற்றினைச் சிறிதும்ஒவ் வாவால். 49

தாய் தந்தையர் இறந்த நாளாகிய ஆண்டுதோறும் அம்மாதத்தில் வரும் அப் பட்சத்துத் திதியிலும், யுகாதி மனுவாதி, அமாவாசை, பருவம் எனப்படும் நாட்களிலும் விளங்குகின்ற பிதிரரை நோக்கி அந்தணரை முறைப்படி உண்பிக்க. பிற பெருந் தலங்களிற் செய்யப் படும் தருப்பணாதிகளால் வரும் பெரு நன்மைகள் யாவும் காஞ்சியில் உண்பிக்கும் பேற்றினுக்குச் சிறிதும் ஒவ்வா வாகும்.

தென்புலத் தவர்தாம் அயன்தருமரீசி முதலியோர் சிறுவர்அங் கவருள், இன்புறு மரீசி விராட்டுவை முதலோர் ஈன்றவர் சுராசுரர் முதலோர்க், கண்புடைப் பிதிர ராகுவர் கவியோ டங்கிரா புலத்தி-யன் வசிட்டன், என்பவர்க் குதித்தோர் மறையவர் அரசர் வணிகர் வே ளாளருக் கியைவர்.

பிதிரர் என்போர் பிரமனார் தம் மக்களாகும் மரீசி முதலானோருடைய மக்கள் ஆவர். அவர் தம்முள் மரீசி விராட்டு முதலாமவர் மைந்தர்கள் தேவர் அசுரர் முதலோர்க்கும் கவி, அங்கிரா, புலத்தியன், வசிட்டன் எனப்பெறும் முனிவரர்தம் மக்கள் முறையே வேதியர்க்கும், அரசர்க்கும், வணிகர்க்கும், வேளாளர்க்கும் பிதிரராவர்.

முனிவரிற் பிறந்தார் தென்புலத் தவர்அம் முதல்வரிற் சுரா-சுரர் பிறந்தார், புனிதவிண் ணவரிற் சராசரம் அனைத்தும் புகரறத் தோன்றின முறையால், இனையசீர்ப் பிதிரர் தமைக்குறித் தீசன் இணையடிக் கன்புடை மறையோர், நனியுளங் களிப்ப உட்றுதியாற் காஞ்சி நகர்வயின் ஊட்டுதல் கடனே. 51

முனிவரரிடத்துப் பிதிரரும், அப்பிதிரரிடத்துச் சுராசுரரும், தேவரிடத்துச் சராசரங்களும் பிறந்தன ஆகலின் அப் பிதிரர்களை உளங்கொண்டு சிவபெருமான் திருவடிக் கன்புடைய வேதியர் பெரிதும் உள்ளம் மகிழும்படி அவர்தம்மைக் காஞ்சியில் உண்பித்தல் இல்வாழ் வார்க்குக் கடப்பாடாம்.

அறுசீரடி யாசிரிய விருத்தம்

இம்முறை இல்லின் வைகி இடைப்படுங் காற்கூ றுயுள்
செம்மையிற் கழிப்பிப் பின்னர்ச் செறிமயிர் நரைப்புக் காணும்
மம்மரின் அறிவு மிக்கார் மனைவியை மகன்பால் வைத்து
வம்மென உடன்கொண் டேனும் வனத்திடைச் சேறல் வேண்டும்.

இவ்வாறுஇல்லறத்தின் வழுவா தொழுகி ஆயுளின் நான்கிலொரு பங்கு காலம் நன்முறையிற் கழித்த பின்பு மயிரில் நரைதோன்றி மயக்கு நிலையின் அறிவு மிக்கவர் மனைவியை மகனிடத்து வைத்தேனும் அன்றி உடன்கொண்டேனும் வனத்தினை அடைக.

விழைதரு காஞ்சி மூதூர்ப் புறனில வரைப்பின் மேவித்
தழைபொதி சாலை வைகி வேனில்ஐந் தழலின் நாப்பண்
மழையினிற் பனியில் நீருள் வதிந்துமா தவங்க ளாற்றிக்
குழைவுறு மனத்தான் உஞ்ச விருத்திகொண் டுறைக மாதோ. 53

விரும்பத்தகும் காஞ்சிக்கு அயலே சென்று பன்னசாலை அமைத்து வாழ்கையில் இளவேனில் முதுவேனிற் பருவ காலங்களில் பஞ்சாக்கினி

நடுவிலும் பனிக்காலங்களில் நீருளும் நின்று தவம்செய்து நெகிழ்ந்த உள்ளத்தனாகி உஞ்சவிருத்தி பெற்றுண்டு தங்குக.

*கண்டிகை நீறு தாங்கிக் கம்பனைக் காம நோக்கின்*
*ஒண்டொடிப் பிராட்டி தன்னை உன்னிஅஞ் செழுத்தும் எண்ணி*
*அண்டர்கோன் பூசை யாற்றி அன்னணம் வதிந்த பின்னர்*
*மிண்டரும் வனத்தின் வாழ்க்கை மெய்த்தவ முதிர்ச்சி யாலே.* 54

உருத்திராக்கம் விபூதி இவற்றைத் தரித்துத் திருவேகம்பரைப் பெருமாட்டியொடும் நினைந்து திருவைந்தெழுத்தைச் செபித்துத் தேவ தேவன் பூசனையைப் புரிந்து அவ்வாறு வதிந்த காலை வானப்பிரத்த வாழ்க்கையில் உண்டாகிய உண்மைத் தவத்தின் முற்றுப் பேற்றினாலே,

*அற்றமில் அறிவில் தூய ராகிஇவ் வுலக வாழ்வும்*
*பொற்றபூங் கமல வாழ்க்கைப் புண்ணியன் முதலோர் வாழ்வும்*
*பற்றற வெறுத்து வீட்டின் அவாவுறும் பான்மை பெற்றான்*
*முற்றுறத் துறவின் எய்தி மறைமுடி புணர்தல் வேண்டும்.* 55

குற்றமற்ற அறிவுடைமையால் மனந் துயராகி இவ்வுலக வாழ்க்கையிலும், பிரமபதம் முதலாம் பதங்களிலும் உள்ள பற்றினை முற்றவும் வெறுத்தொழித்து வீடு பேற்றில் விருப்புமிகும் இயல்பினைப் பெற்றவன் (சந்நியாசம்) முழுத் துறவினை எய்தி வேதாந்தப் பொருளை உணர்தல் அவசியம்.

*ஐந்தவித் துயர்ந்த ஆசான் றன்புடை அருள்நூல் கேட்டுச்*
*சிந்தனை செய்து மாணத் தெளிந்துபின் நிட்டை மேவும்*
*இந்தவா றடைவின் எய்தும் இயல்பினைத் தலைநின் றேறார்*
*அந்தணன் இருதாள் என்றும் அகந்தழீஇ ஒழுகல் ஆறே.* 56

ஐம்புலன்களை வென்றமையால் உயர்ந்த ஆசாரியனிடத்து அருள்நூலைக் கேட்டுச் சிந்தித்து மிகத் தெளிந்து பின் நிட்டை கூடும் இவ்வியல்பினை ஒன்றன்பின்னொன்றாக அடையும் நிலையைத் தலைப்பட்டு விடையூரும் பெருமானார்தம் திருவடிகளை என்றும் உள்ளத்துள் தழுவி ஒழுகலே முறையாகும்.

*அடற்கொடும் பாசம் மாற்றிப் பசுக்களை அருள்வீட் டுய்ப்பப்*
*படைத்தளித் தழித்து நோக்கும் பரம்பொருள் சிவனே என்றல்*
*உடற்றுநர்க் கரிய வேத உள்ளுறை யாவ தென்னத்*
*தொடக்கம்ஈ றெழுவா யான இலிங்கத்தால் துணிதல் கேள்வி.* 57

வலியுடைய கொடிய மலங்களின் வலியைக் கெடுத்து ஆன்மாக்களை முத்தியிற் செலுத்தும் பொருட்டுப் படைத்துக் காத்து அழித்து

இவற்றின் வரு போக உயிர்க்குப் பருவத்தை நோக்கும் எவற்றினையும் கடந்த பொருள் சிவபிரானுரே எனல் பிணக்கர்க்கு அரியலாகாத வேதத்தின் உட்கிடையாவது என்று உபக்கிரம உபசங்கார முதலாகிய இலிங்கத்தால் ஒருதலை துணிதல் கேள்வி ஆகும்.

இலிங்கம்-துணிதற்குக் கருவி

உவமையின் ஏதுத் தன்னுற் கேட்டதை உள்ளங் கொள்ள
அவமறச் சிந்தை செய்தல் சிந்தனை அதனைப் பல்காற்
சிவணுறப் பயிற்சி செய்கை தெளிதலாம் விளங்கக் காண்டல்
தவலறு நிட்டை யென்று சாற்றுவர் புலமை சான்றோர். 58

ஏதுக்கள், எடுத்துக் காட்டுக்களால் கேட்டவற்றை வீண் சிந்தனைகள் அகலச் சிந்தித்தல் சிந்தனை ஆகும். அதனைப் பன்முறை கலக்கு மாறு பயிற்சி செய்தல் தெளிதலாகும். அறிவில் வைத்துத் தெளியக் காணுதல் குற்றமற்ற நிட்டை என்று அறிவான் முதிர்ந்தோர் விரித்துரைப்பர்.

இத்திறம் பயின்று வைகி இருவகைப் பற்றும் நீத்த
உத்தமத் துறவின் மேலோர் ஊர்வயின் பிச்சை யேற்றுச்
சுத்தநீர் அலம்பி முக்கட் சுடரினுக் கூட்டிப் பின்னர்
அத்தகு விதியின் ஓர்போ தெண்பிடி அருந்தல் வேண்டும். 59

இத்திறத்தினைப் பல்கால் பழகி யான் எனது என்னும் அகப்பற்றும் புறப்பற்றும் விட்ட துறவின் முதன்மை பெற்றோர் ஊராரிடும் பிச்சை உணவினை ஏற்றுச் சுத்த நீரால் அலம்பி முக்கண்ணுடைய முதல்வனுக்கு நிவேதித்துப் பின்பு எட்டுப் பிடி அளவுடைய உணவை ஒருபொழுதே உண்ணுதல் வேண்டும்.

அல்லவை முழுதும் நீக்கல் ஆன்றவர் கழித்த தூசு
கல்லசும் பெற்றிக் கோடல் காழ்மரத் தடியின் மேவல்
பல்லவும் ஒப்பக் காண்டல் தமியனாய்ப் படர்தல் வேற்றுப்
புல்லியர் இணக்கந் தீர்தல் பொறிவழி மனஞ்செல் லாமை. 60

பாவச் செயல்களை முற்றவும் விடுத்தலும், பெரியோர் உடுத்துக் கழித்த உடையை நீரில் நனைத்துக் கல்லில் எறிந்து உலர்த்தி உடுத்தலும், வயிரமேறிய மரத்தடியில் தங்குதலும், பல்லுயிரையும் வெறுப்பு விருப்பின்றி ஒப்ப நோக்குதலும், தனியனாய் யாண்டுஞ் சேறலும், அறிவைத் திரிக்கும் கீழ் மக்களொடு கூடாமையும், ஐம்பொறிகளின் வழி மனத்தைப் புறப்பொருள்களிற் செல்ல விடாமையும்,

அடித்துணை நிலத்தில் நோக்கி மிதித்திடல் அறுவை தன்னில்
வடித்தநீர் பருகல் நெஞ்சில் தூயது மாணக் கோடல்
படிற்றுரை யின்றிக் கூறல் நன்மையே பயப்பப் பேசல்
எடுத்துரை பிறவும் முத்தன் இலக்கணம் என்ப மன்னே. 61

ஓரறிவுயிர்க்கும் உறு துயரை மதித்து நிலத்தைப் பார்த்து நடத்தல் (தலைதாழ்த்தலுமாம்), ஆடையால் வடித்தெடுத்த நீரைப் பருகல், நன்னினைவை உறுதியாகக் கொள்ளுதல், மெய் பேசல்,பிறர்க்கு நலம் பயப்பவற்றையே பேசுதல், எனப்படும் இவையும் எஞ்சிய பிறவும் சீவன் முத்தன் இலக்கணம் என்று கூறுவர்.

உறையுளோ டங்கி பேணல் கல்வியின் உடலை ஓம்பல்
சிறையுடற் பொருட்டுச் சீற்றஞ் செய்திடல் சாலப் பேசல்
புறனுரை இகழ்ச்சி பிச்சைப் பொருட்டல தூர்க்குட் சேறல்
மிறையுறுத் திடும்பை செய்வோர் தம்மையும் வெகுள லாகா. 62

ஓரிடத்தில் நிலையாக இருத்தலும், எரியோம்பலும், கற்ற கல்வியை விற்று வயிற்றை வளர்த்தலும், உயிர்க்குச் சிறையாக அமைந்த இவ்வுடம்பை வளர்த்தற் பொருட்டுச் சினங் கொள்ளலும், மிகுதியாகப் பேசுதலும், புறங்கூறலும், பழித்துரையும், பிச்சைப் பொருட்டன்றியும் ஊர்க்குள் புகுதலும், துன்புறுத்துவோர் தம்மையும் வெகுளுதலும் ஆகாவாம்.

சினவிடைக் கடவுள் பூசை கண்டிகை திருவெண் ணீறு
கனவினும் இகழா தோம்பல் கதிரொளி உலோகம் அல்லாப்
புனிதபா சனத்தின் நீரால் தூய்மைகள் பொருந்தக் கோடல்
வினை இகந் தவர்க்காம் என்ப வேள்வியிற் சம்சம் போலும். 63

சிவபூசனையையும், உருத்திராக்கத்தையும், திருவெண்ணீற்றையும் நனவினும், கனவினும் மதித்துப் போற்றுக. ஒளியுடைய உலோகங்கள் அல்லாத மரம், மண் இவற்றால் ஆய தூய பாத்திரத்தால் நீராடல் முதலியன வினைகளை ஒழித்த சீவன் முத்தர்க்கு ஆகும். வேள்வியிற் கொள்ளும் மரப் பாத்திரம் போலும் என்க.

என்பினை நரம்பிற் பின்னிக் குடர்வழும் பிறைச்சி மெத்திப்
புன்புழுப் பொதிந்து செந்நீர்ப் புண்ணசும் பொழுகி நாறித்
துன்பநோய் எவற்றி னுக்கும் உறையுளாய்ப் புறந்தோல் மூடும்
புன்புலை உடம்பே ஆவி வருத்திடும் பிணிவே றில்லை. 64

என்பை நரம்பாற் கட்டிக் குடர் நிணம் ஊன் இவற்றை அப்பிப் புல்லிய புழுக்கள் பொதிந்து இரத்தத்தை கொண்ட புண்ணினின்றும் அருது ஊறி ஒழுகி முடைநாற்றம் வீசித் துன்பத்தைத் தரும் நோய்

அனைத்திற்கும் குடி புகும் இடமாய்ப் புறந்தோலால் மறைக்கப்படும் மிக்கிழிந்த உடம்பே உயிரை வருத்தப் படுத்திடும். வேறோர் நோய் மிகை; இல்லையுமாம்.

பெரும்பிணி இதனைத் தீர்க்கும் மருத்துவன் பிறவி யில்லாப்
பரம்பொரு ளான முக்கட் பரமனே என்று தேறி
முரண்பயில் விடையோன் தென்பால் முகத்தினைச் சரணம் எய்தி
விரும்பிவீ டுறுதற் பாலார் பிறப்பினை வெருவப் பெற்றார். 65

பிறப்பினை அஞ்சப்பெற்றவரே தீரா நோயாகிய இப் பிறவி நோயைத் தீர்க்கும் வயித்தியநாதன் தனக்குப் பிறப்பில்லாத முதற் பொருளான முக்கண்களை யுடைய பரமனே என்று தெளிந்து வலிமை மிக்க விடையை உடைய பெருமான் அகோர முகத்தை அடைக்கலம் அடைந்து விரும்பி வீட்டினைப் பெறுதற்குப் பக்குவராவர்.

கலிநிலைத் துறை

மற்றைத் தெய்வங்கள் எவற்றையும் விடுத்துமா நீழற்
கற்றைச் செஞ்சடைப் பிரான்சரண் சரணெனுங் கருத்தே
பற்றிச் சாவினும் வாழ்வினுங் களிப்பிகல் படாமை
எற்றைப் போதும்ஒத் தொழுகலே துறந்தவர்க் கியல்பாம். 66

பிற தெய்வங்களைத் தொழாது மாவடியில் வீற்றிருக்கும் தொகுதி கொண்ட சிவந்த சடைப்பெருமானார் திருவடிகளே புகலிடம் எனத் துணிவு கொண்டு சாதல் வாழ்தல் இவற்றுள் ஒன்றை விரும்பியும் ஒன்றனை வெறுத்தும் திரிவுபடாது ஒரு தன்மையராய் எக்காலத்தும் சமநிலை பெற்றொழுகுதலே துறந்தவர்க்கு முறையாகும்.

பொறுமை கல்விமெய் தூய்மைஐம் பொறிதெறல் அடக்கம்
உறுதி நாண்வெகு ளாமைகள் ளாமைஒண் பூதி
மறுவில் சாதனஞ் சிவார்ச்சனை தியானம்வண் பதினன்
கறமும் நல்லறம் புரிபவர்க் கிலக்கண மாமால். 67

பொறுமை, கல்வி, தூய்மை ஐம்பொறி, அடக்கல், அடக்கம், உறுதி, நாணம், சினமின்மை, கள்ளாமை, விபூதி, சிவசின்னம், சிவ பூசனை, தியானம் ஆகிய இப்பதினன்கும் நல்லற நெறி நிற்போர்க்குப் பொருந்திய இலக்கணங்களாகும்.

சொன்ன நால்வகை நிலைகளில் துரிசற ஒழுகிக்
கன்னி மாநிழற் கண்ணுதல் அகத்தொழும் பாற்றி
மன்னி நீடிய காஞ்சிமா நகர்வயின் வதிவோர்
துன்னு மும்மலத் துகள்அறுத் தின்பவீ டுறுவார். 68

மேற்கூறிய நால்வகை ஆசிரமங்களில் குற்றமற ஒழுகித் தெய்வ மாந்தருவின் நீழலில் அமர்ந்த திருவேகம்பர்க்கு அகத்தடிமை செய்து ஊழியினும் அழியாத காஞ்சியில் வாழும் இயல்பினர் செறியும் மும்மலக் குற்றம் நீங்கி இன்ப வீட்டினைத் தலைப்படுவார்.

ஒழுக்கப் படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-2621.

# சிவபுண்ணியப் படலம்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

கச்சிநகர் அமர்ந்துறையும் நியதியராய் ஏகம்பக் கடவுள் பாதச் செச்சைமலர் வழிபடுவோர் மேம்பாடு நானேயோ தெரிக்க வல்லேன், முச்சகமும் புகழ்ந்தேத்தும் பன்னிரண்டு பெயர்-படைத்த மூதூர் வைப்பிற், பொச்சமறச் செய்தக்க சிவதருமத் திறனும் இனிப் புகலக் கேண்மின். 1

பெரியீர்! காஞ்சியில் விரும்பி வாழும் நியமம் உடையராய்த் திருவேகம்பர் தம் சிவந்த மலரடிகளை வணங்குவோருடைய சிறப்பினைக் கூறவல்லேன் அல்லேன். மூவுலகானும் புகழ்ந்து போற்றப்படும் இப் பழம் பெருநகரில் உண்மையாகச் செய்யத் தக்க சிவபுண்ணிய வகைகளையும் விரும்பிக்கூற அமைந்து கேளுங்கள்.

எவ்வறமுந் திருக்காஞ்சிக் கடிநகரிற் புரிகிற்பின் ஏற்றம் எய்தும், அவ்வறத்துட் சிவதன்மம் அதிகம் அவை சிவலிங்கப் பதிட்டை ஏனைச், செவ்வியுடைத் திருமேனி திருக்கோயிற் பணி-பூசைச் சிறப்பு மற்றும், ஒளவியந்தீர் மெய்யடியார் திருத்தொண்டு முதற்பலவாம் அவற்றுள் மாதோ. 2

யாதோர் அறத்தையும் இங்குச் செய்தால் சிறப்பு மிகும். பொதுத் தருமங்களினும் சிவபுண்ணியம் சிறக்கும். அச் சிவ புண்ணியம் சிவலிங்கம் தாபித்தலும், சோமாஸ்கந்தர் முதலாம் திருவுருவங்கள் அமைத்தலும், கோயிற் றொண்டுகளும், நித்திய நைமித்திகங்களும், மலக்குற்றம்தவிர்ந்தமெய்யடியார்பூசனையும் முதலாகப் பலவும் ஆகும்.

சிவலிங்கப் பதிட்டைப் பயன்

கயக்கமுறும் அறக்கடையின் சிமிழ்ப்பறுத்துப் பிரமாண்டக் கனத்தை நூறி, மயக்கமிகும் வினைப்பகையும் பெரும்பிறவிப்

பழம்பகையும் மறுக மாட்டி, வயக்கமூறு சிவபதத்தின் உய்க்கும்-
இலங் கயில்வாளாய் மாரு வாழ்வு, பயக்கும்நுதல் விழிக்கடவுள்
நயக்கும்அருட் சிவலிங்கப் பதிட்டை யம்மா. 3

சிவலிங்கப் பிரதிட்டையின் பயன், கலக்கம் உறுத்தும் பாவமாகிய விலங்கைத் தறித்துப் புவனபோகங்களாகிய பெருஞ்சுமையை நீருக்கி மூலகன்மத்தையும் பிறவிக் கேது வாகிய மூலமலத்தையும் கெடுத்து விளக்கமிக்க சிவலோகத்திற் கொண்டு செலுத்தும் கூரிய வாளாகி நிலைத்த வாழ்வினைக் கொடுக்கும் என அறிக.

விரைமலரோன் மணிவண்ணன் முகில்ஊர்தி முனிவர்சித்தர்
விண்ணோர் யாரும், வரைகளினும் வனங்களினும் வார்ந்தநதிப்
புடைகளினும் மணிநீர் வேலைக், கரைகளினும் எங்கெங்குங்
கண்ணுதலோன் சிவலிங்கப் பதிட்டை ஒன்றே, உரைவிளங்கச்
செய்தமைத்தா ரன்றிவே றெவன்செய்தார் உணர்வான் மிக்கீர்.

மெய்யறிவினீர்! தேவரும், முனிவரும், அசுரரும் பிறரும் சிவ பூசனையையே செய்து உய்ந்தனர்.

மேதகைய தவம்தீர்த்தங் கொடைவேள்வி துறவுநிலை விரதம்
யாவும், ஓதுசிவக் குறிநிறுவும் பயன்கோடி படுங்கூற்றின் ஒன்றுக்
கொவ்வா, ஆதலின்இச் சிவலிங்கம் வேதிகையி னொடுஞ்சிலையான்
அமைப்போர் யாரும், ஏதம்அறுத் தவ்வுடம்பின் வீடெய்தப்
பெறுவர்இதற் கையு றேன்மின். 5

தவமுதலாம் பலவும் தரும் பயன்கள், சிவலிங்கம் தாபித்ததனுல் ஆம் பயனுக்குக் கோடியின் ஒரு கூற்றுக்கும் ஒப்பாகா. ஆகலின், பீடத்தொடும் கூடிய சிவலிங்க வடிவைக் கல்லால் அமைத்துத் தாபித்தவர் எடுத்த இப்பிறவியிலேயே ஐயமின்றி முத்தியை எய்துவர்.

இம்முறையில் தாபித்த சிவலிங்கம் இறைஞ்சுநரும் விமான
மேல்கொண், டம்மலர்ப்பூங் குழற்பணைத்தோள் அரம்பையர்சா
மரையிரட்ட அமரர் போற்ற, எம்மருங்கும் இசைமுழங்கப் பெருந்-
தேவர் அழுக்கறுப்ப இனிதின் ஏகிச், செம்மல்அருட் சிவலோகத்
தானந்தந் திளைத்துறைவார் பிறவுங் கேண்மோ. 6

இவ்வாறு நிறுவிய சிவலிங்கத்தை வணங்கினவரும், மூங்கிலை ஒக்கும் தோளுடைய தேவ மகளிர் பணி செய்யவும் விண்ணவர் போற்றவும் போகங் கண்டு உள்ளம் புழுங்கவும் ஆக விமானத்தின் வழியே சிவலோகம் புகுந்து பேரின்பத்தில் மூழ்குவர். மேலும், கேண்மின்.

சோமாஸ்கந்தர்

ஷை வேறு

*அடலிற் கொதிக்கும் படைஆழி அண்ணல் முதலோர் ஏத்தெடுப்பத்*
*தடவுச் சீயப் பீடர்த்தலையிற் கவினும் மணிப்பூந் தவிசும்பர்க்*
*கடவுட் பிராட்டி உடங்கிருப்பக் கதிர்வேற் காளை நள்ளிருப்ப*
*நடலைப் பிறவி மருந்தாகி வைகும் நாதன் திருவுருவம்.* 7

திருமால் முதலோர் போற்றவும் சிங்காசனத்தின்மிசை உமையம்மைக்கும் பெருமானுக்கும் இடையே முருகப் பெருமானார் உடனிருப்பவும் துன்பத்திற்கு ஏதுவாகிய பிறவிப் பிணிக்கு மருந்தாகி வீற்றிருக்கும் வடிவம் சகஉமாஸ்கந்தர் திருவுருவம்.

ஏகபாதர்

*அடுப்பார்க் கருளும் ஒருதாளும் அம்பொற் கமல விழிமூன்றும்*
*படப்பாம் பணிந்த புயம்நான்கும் சூலப் படையும் எழில்வயங்க*
*இடப்பால் அரியை வலத்தயனை எழுநாற் கோடி உருத்திரரை*
*நடுப்பால் தோற்றி ஐயைந்து வடிவும் உடனும் நலம்பிறக்கி.* 8

நண்ணினர்க்கு நலம்புரியும் ஓர் திருவடியும், முக்கண்ணும், நாற்றோளும், திரிசூலமும், அழகுற விளங்கவும் இடத்தினும் வலத்தினும் நடுவினும் முறையே திருமாலையும் பிரமனையும் இருபத்தெட்டு கோடி உருத்திரரையும் தோற்றுவித்துச் சிவ வடிவங்கள் இருபத்தைந்தும் ஒக்க விளங்கும் நலத்தை விளங்க வைத்தும்,

*புகன்ற இடப்பாற் பகுதியினைப் புந்தித் தலத்திற் புந்தியினை*
*அகங்கா ரத்தின் உறுதன்மாத் திரையிற் பொறியின் அவ்வவற்றைத்*
*தகுந்தாள் குய்யம் உந்திகளம் தலையிற் பார்நீர் அனல்வளிவான்*
*மிகுஞ்சீர் விழியி னிடத்திரவி வெண்கேழ் மதியைப் படைத்தருளி.*

முற்கூறிய இடப் பக்கத்தில் பிரகிருதியையும், இதயத்தில் புத்தியையும் பூதாதி அகங்காரத்தில் தன்மாத்திரைகளையும் தைசத அகங்காரத்தில் ஐம்பொறிகளையும் தக்க திருவடி, குறி, கொப்பூழ், கழுத்து, தலை என்னப்பெறும் அங்கங்களில் முறையே நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் இவற்றையும் சிறப்புடைய வலக்கண்ணில் சூரியனையும் இடக்கண்ணில் சந்திரனையும் தோற்றுவித்தருளி,

*அடியின் அடங்குங் கீழுலக மனைத்தும் அடியின் உறத்-*
*தோற்றி, முடியின் அடங்கும் மேலுலக முழுதும் முடிப்பால்*
*அளித்தருளிப், படியில் கருணைப் பிழம்பாகிப் பரசும் அடியார்*
*அகவிளக்காய்க், கொடிய மலநோய் அரட்டொதுக்குங் கோனைப்* 10
*பெருமான் திருவுருவம்.*

அடியின் கீழடங்கும் கீழுலகம் அனைத்தையும் அதனால் தோற்றுவித்தும் திருமுடியின் அடங்கும் மேலுலகங்களை அத்திருமுடியால் படைத்தும் ஒப்பில்லாத கருணை வடிவாகித் துதிக்கும் அடியவர் உள்ளத்துச் சுடராகிக் கொடிய ஆணவ நோய்த் தீமையைச் சாய்க்கும் அழிவின்மையை யுடைய ஏகபாதர் திருவுருவம்,

எச்சேச்சுரர்

ஓவா இன்பப் பெருங்கருணை ஒன்றும் வதனம் ஓர்இரண்டும்
பூவார் கமலப் பதம்மூன்றும் போகு கூர்ங்கோ டொருநான்குங்
காவாய் என்பார் மலம்ஐந்தும் அறுமா றளிக்குங் கரம்ஏழுந்
தாவா அருளும் படைத்துடைய எச்சத் தலைவன் திருவுருவம். 11

ஒழியாத இன்பத்திற்குக் காரணமாகிய பெருங் கருணை பொருந்தும் இருமுகங்களும், மூவடிகளும், கூரியவாம் நீண்ட நான்கு கொம்புகளும், காக்கவேண்டுவார் தம் ஐந்து மலங்களையும் அறுக்கும் ஏழு கைகளும், குன்றாத திருவருளும் கொண்டு விளங்குகின்ற வேள்வி நாயகர் எனப் பெறும் எச்சேச்சுரர் திருவுருவம்,

இடபாரூடர்

இகலி எதிர்ந்தோர் குடர்குழம்ப இடியின் முழங்கி ஏற்றெதிர்ந்து
தொகுவெம் படைகள் முழுதுழக்குந் தோலா மதுகைச் சூர்த்தவி
புகரில் காட்சி வெள்ளிவரை நடந்தா லனைய போர்விடைமேல் [ழிப்
திகழ மலைமா துடனுறையுந் தேவ தேவன் திருவுருவம். 12

பகைத்துப் போரில் எதிர்ந்தவர் உள்ளம் திடுக்கிடும்படி இடி போலக் கர்ச்சனை செய்து மேற்கொண்டெதிர்ந்து திரண்ட தறுகண்மை யுடைய முழுப் படையையும் அழிக்கும் தோல்வி காணாத வலிமையும் அச்சுறுத்தும் கண்களும் குற்றமற்ற தோற்றமும் வெள்ளிமலை கால் கொண்டு நடந்தால் அனைய கோலமும் உடைய இடபத்தின்மேல் விளங்க மலைமகளுடன் வைகும் இடபாரூடர் எனப் பெறும் மகாதேவர் திருவுருவம்,

சந்திரசேகரர்

உடையாள் ஒருபால் வீற்றிருக்குஞ் செல்வி நோக்கி உள்புக்கு
மிடையா நின்ற பெருந்தேவர் விலகப் புடைக்கும் வேத்திரத்திண்
படையார் குடங்கைத் திருநந்தி பகவன் றனக்கு வரமுதவிப்
புடையார் கணங்கள் போற்றிசைப்ப வைகும் புராணன்
திருவுருவம். 13

அம்மையாருடனிருந்து அருள் செய்யும் சமய மறிந்து புகுந்து நெருங்குகின்ற திருமால் முதலாம் பெருந்தேவர் சந்நிதியில் ஒதுங்கி

நிற்கும்படி தாக்கும் பிரம்பினை உள்ளங் கையிற் கொண்ட திருநந்தி தேவர்க்கு அருள் வழங்கிச் சிவகணங்கள் போற்ற வீற்றிருக்கும் சந்திரனை முடியிலணிந்த சந்திசேகரர் திருவுருவம்,

நடராசர்

சிலம்பின் ஒலிகேட் டருகணையுஞ்செங்கால்அன்னப் பெடைமானப்
புலம்பு மணிப்பூண் முலைஉமையாள் மகிழ்ந்து நோக்கிப் புடைநிற்ப
உலம்பி மறைகள் ஒலமிட உம்பர் பழிச்ச முடிக்கங்கை
அலம்ப அழகார் பெருந்திருக்கூத் தாடும் பெருமான் திருஉருவம்.

திருச் சிலம்பின் ஒலியைத் தனது சேவலின் குரலென்று மயங்கி நெருங்கும் சிவந்த கால்களையுடைய வெண்ணிற அன்னப்பேடையை ஒப்ப ஒலிக்கும் அணிகளைப் பூண்ட சிவகாமி அம்மையார் மகிழ்ந்து நோக்கி ஒரு மருங்கு ஒதுங்கி நிற்பவும் ஒலித்து மறைகள் முறையிடவும் தேவர் போற்றவும் முடியிற் கங்கை ஒலிக்கவும் அழகு நிறைந்த பெரிய திருக்கூத்தினைப் புரியும் நடராசப் பெருமான் திருவுருவம்,

உக்கிரர்

வடாது மலையிற் புயம்நான்கும் மலர்க்கண் மூன்றும் உருத்திரமும்
தடாய படப்பாப் பரைநாணுங் கபாலக் கரமுந் தழலன்றிக்
கடாது சிவந்த சுரிபங்கி கவின்ற முடியும் வெண்ணிறமும்
கெடாத வனப்பிற் பெருங்கோலங் கெழீஇய பெருமான்
திருஉருவம். 15

மேருமலையை ஒக்கும் நான்கு தோள்களும் செந்தாமரை மலர் போலும் மூன்று கண்களும் உக்கிரமும் அகன்ற படமுடைய பாம்பால் அமைந்த அரைநாணும் பிரமகபாலந் தாங்கிய திருக்கையும் நெருப்பை அன்றிப் பிற ஒவ்வாது சிவந்த சுரிந்த சிகையும் அழகிய முடியும் வெண்ணிறமும் அழியாத அழகுடைய பெருங்கோலமும் அமைந்த பெருமான் திரு உருவம்,

புரசைக் களிறட் டுரிபோர்த்த கோலப் பொலிவும் புகைவடிவும்
அரசச் சீய உரிகொண்ட உத்த ரீயத் தனியழகும்
பிரசக் கமல மெனச்சிவந்த விழிகள் மூன்றும் பிறங்குலகம்
பரசத் தகுவெண் டலைதண்டம் பரித்த கரமுங் கூரெயிறும். 16

கழுத்திடு கயிறுடைய மதயானையை அழித்து அதன் தோலைப் போர்வையாகக் கொண்ட அழகிய கோலமும், புகை நிறமும், நரசிங் கத்தின் தோலை மேலாடையாகக் கொண்ட ஒப்பற்ற அழகும், தேனூறுந் தாமரை மலரெனச் சிவந்த மூன்று கண்களும், சான்றோர் போற்றத் தக்க வெண்டலையையும் தண்டத்தையும் ஏந்திய திருக் கைகளும் கூரிய பற்களும்,

மருவிற் பொலிந்த மலர்க்கிழவன் வகுத்த அண்டம்
அனைத்தினையும், பொரியிற் கொறித்துக் கொறித்துமிழும் பூட்கைக்
குரண்டப் பெயரானைச், செருவிற் படுத்த வெள்ளிறகு திங்கட்
குழவிக் கதிர் கிளைத்திட், டுருவுற் றெழுந்தா லெனமாடே ஒளிரச்
செருகுந் திருமுடியும். 17

மணமுடைய மலரவன் படைத்த அண்டங்கள் அனைத்தினையும் நெற் பொரி போலப் பல்லில் அதுக்கி உமியைப் போலக் கோதினை உமிழவல்ல மனவலியுடைய குரண்டாசுரனைப் போரில் அழித்து வெள்ளிய இறகினை இளம்பிறை ஒளி தழைத்தெழுந்தாலென ஒருபுடை ஒளிரச் செருகிய திருமுடியும்,

பகன் என்னும் அசுரன் (குரண்டம்-கொக்கு.) கொக்கு வடிவில் தீங்கு செய்யச் சிவபிரான் அவனை அழித்துச் சிறகை அணிந்து தேவர் துயரைத் தீர்த்தனர்.

திருமால் பணிலக் கோவைநிரை வயங்கும் புயமுந் தெரித்தருளிப்
பெருநீர் அளக்கர் வாய்மடுத்தும் உங்கா ரப்பே ரொலிவிளைத்தும்
வெருவா வீரம் படநகைத்தும் பூத கணங்கள் மிடைந்தேத்த
அருளா னந்த நடங்குயிற்றும் அண்டர் பெருமான் திருவுருவம். 18

திருமால் பலருடைய சங்கு மாலை அணிந்த தோளொடும் கடல் நீரை நிரம்பப் பருகியும் உங்காரப் பேரொலி முழக்கியும் அஞ்சாத வீர நகையைப் புரிந்தும் பூதகணங்கள் நெருங்கித் தொழ அருளும் ஆனந்தத் திருக்கூத்தைப் புலப்பட நடிக்கும் பெருமான் திருவுருவம்,

அர்த்தநாரீஸ்வரர்

உமையுந் தானும் வேறன்மை உருவி னிடத்துந் தெளிப்பான்போல்
இமைய மயிலை ஒருபாதி வடிவின் இருவி நாற்கரத்தும்
அமைய வனசந் திரிசூலம் அபய வரதம் இவைதாங்கி
நமையும் உய்யக் கொண்டருளும் நாரி பாகன் திருவுருவம். 19

உமையம்மையுந் தாமும் ஒன்றுந் தன்மையை வடிவினும் வைத்து விளக்குதல் போல அம்மையை இடப்பாகத்தில் நிறுவி நாற்கரங்களும் ஏற்பத் தாமரை மலரையும் திரிசூலத்தையும் ஏந்தி அபய வரதமொடும் நம்மையும் ஆட்கொண்டருளும் அம்மை அப்பர் திருவுருவம்,

இலகுளீசர்

அடுத்தங் குடனும் பரம்பொருளை அன்றே விரவ வொட்டாமல்
தடுத்து முக்கூற் றுயிருணர்வைத் தகையும் அவிச்சை முழுதிரிய
மடுத்த கருணைத் திருநோக்கின் மாணுக் கருக்குப் பொருளுரைப்ப
எடுத்த கரத்தான் வீற்றிருக்கும் இலகுளீசன் திருவுருவம். 20

ஒட்டி உடனுகும் முதற்பொருளை உயிர் கூடாதபடி அநாதியே தடுத்து ஒரு மலம் இரு மலம் மும்மலத்தால் மூவகையர் ஆக உணர்வை மறைத்து நிற்கும் ஆணவ வலி முழுதும் கெடப் பொழிகின்ற அருட்டிரு நோக்கத்தால் மாணுக்கருக்குப் பொருள் கூற விளக்கும் எடுத்த கரத்தொடும் வீற்றிருக்கும் இலகுளீசர் திருவுருவம்,

*நீலகண்டர்*

*நவில்''ஓம் நீல கண்டாய நம''என் றியம்பும் எட்டெழுத்தும்*
*நுவல்வார் மீள மலக்கூட்டின் நுழையா வாறு பெறஇமையோர்*
*கவலா திரங்கி ஆலாலங் கதிர்ப்பூங் கரத்தின் ஏந்திஅரிச்*
*சுவலார் அணையின் வீற்றிருக்குஞ் சோதிச் சுடரோன் திருவுருவம்.*

கணிக்கப்படும் 'ஓம் நீலகண்டாய நம' என்றோதப்படும் திரு எழுத்து எட்டனையும் அடிபட்டுரைப்போர் மீளவும் மலக்குரம்பையாகிய சிறையில் புகாத வழியை அடைய இமையோர் வருந்தாதபடி கருணைபூத்து விடத்தை மலர்க்கரத்தில் தாங்கிச் சிங்கத்தின் பிடரிமிசை அமைந்த இருக்கையில் வீற்றிருக்கும் பேரொளி வடிவினராம் திருவுருவம்,

*சலந்தராரி*

*இருகூ றுகச் சலந்தரனை இறுத்து மாட்டி அவ்வடிவம்*
*அருகே தோன்றச் சுதரிசனம் அங்கைத் தலத்தின் மிசைஏந்தி [கத்*
*முருகார் கடுக்கைத் தண்ணறும்பூந் தொடையல் வாகை முடிவிளங்*
*திருவார் காட்சி அளித்தருளுந் தேவர் கோமான் திருவுருவம்.* 22

சலந்தரனை இருகூறு படப் பிளந்து கொன்று அச்சலந்தரன் வடிவம் அருகில் விளங்க அழகிய கரத்தில் அழித்த சுதரிசனம் என்னும் சக்கரத்தை ஏந்தி நறுமணங் கமழும் கொன்றை மலர்மாலை வெற்றி மாலையாகத் திருமுடியில் விளங்கும்படி திருக்கோலம் காட்டி நிற்கும் சலந்தராரி திருவுருவம்,

*சக்கரதானர்*

*வழிதீஞ் சுவைக்கள் வாய்மடுத்து மழலைச் சுரும்பர் இசைமிழற்றுஞ்*
*செழிபூங் கமலம் ஒன்றினுக்குத் திருந்து காதல் மெய்யன்பின்*
*விழிசூன் றடியின் அருச்சித்த விறல்மா யனுக்குச் சுதரிசனங்*
*கழிபே ரருளால் ஈந்தருளுங் கடவுட் பெருமான் திருவுருவம்.* 23

வழியும் இனிய தேனைப் பருகி வண்டு பாடுதற்கிடனுகிய தாமரை மலர்ஒன்றன் குறைவை நீக்குதற் பொருட்டுத் திருந்திய மெய்யன்பினுல் கண்ணைப் பெயர்த்து மலராக அருச்சனை செய்த திண்ணிய திருமாலுக்கு மிக்க பெருங் கருணையொடும் சுதரிசனத்தை வழங்கும் சக்கரதானர் திருவுருவம்,

அந்தகாரி

வெருவா நிகும்பன் மிசைஒருதாள் ஊன்றி நின்று வெஞ்-
சூலத், தொருகூர்ப் பரம்வைத் தொருகரத்தால் உமையைத்
தழுவிக் கைகூப்பி, அருகே நிற்கும் அந்தகனை நோக்கி அரவச்
சிலம்பணிந்து, திருமால் முதலோர் தொழுதேத்தச் சிறக்கும்
இறையோன் திருவுருவம். 24

அஞ்சாத நிகும்பன் என்னும் அசுரன் மேலோர் திருவடியை ஊன்றி நின்று கொடிய சூலத்தை ஓர் முழங்கையை வைத்து மற்றோர் கரத்தால் உமையம்மையைத் தழுவிக்கொண்டு கைகுவித்து அணித்தாக நிற்கும் அந்தகா சுரனை அருளொடும் நோக்கிப் பாம்பாகிய ;சிலம்பைத் திருவடியில் அணிந்து திருமால் முதலாம் தேவர் போற்றப் பொது நீங்கிப் பொலிவுறும் அந்தகாரியின் திருவுருவம்,

திரிபுராரி

பொருப்புச் சிலையில் வாசுகிநாண் பூட்டி அரிகோல் வளிஈர்க்கு
நெருப்புக் கூராம் படைதொடுத்துப் பிரம வலவன் நெடுமறைமா
விருப்பிற் செலுத்து நிலத்தேர்மேல் நின்று தெவ்வூர் வெந்தவிய
அருப்புக் குறுவெண் ணகைமுகிழ்த்த அந்த ணாளன் திருவுருவம்.

மேருவை வில்லாகவும், வாசுகியை நாணியாகவும் கொண்டு பூட்டித் திருமாலை அம்பாகவும், வாயுவை அலகாகவும், அக்கினியை அம்பின் நுதியாகவும் படை அமைத்துக் கொண்டு பிரமனைத் தேர்ப் பாகனாகவும் வேதங்களைத் தேர்க் குதிரையாகவும் கொண்டு பூமியாகிய தேர்மிசை நின்று பகைவர் ஊராகிய முப்புரம் வெந்தழியும்படி அரும்பு தலையுடைய புன்முறுவல் பூத்த அறவோராகிய திரிபுராரி திருவுருவம்.

கங்காதரர்

விசும்பி னின்றும் வெகுண்டார்த்து முழங்கிக் கொதித்து வீழ்தந்த
அசும்பு திரைநீர் வான்யாற்றை அங்கோர் வேணி மயிர்நுதியிற்
பசும்புல் அறுகிற் பனிஉறைபோல் தாங்கி வைகிப் பாவவினை
இசும்பு கடக்கும் பகீரதன்நின் றிரப்ப மகிழ்வரன் திருவுருவம். 26

பொங்கி முழங்கி வெகுண்டு விண்ணினின்றும் பாய்ந்து வந்த கங்கையைச் சடையிடை ஓர் உரோமத்தின் நுனியில் பசும்புல்லாகிய அறுகுநுதியிற் காட்டும் பனித்திவலைபோலத் தாங்கி இருந்து பாவத்தின் பயனாகும் இழுக்கு நிலமாகிய நரகத்தைக் கடப்பிக்கும் பகீரதன் நின்று வேண்ட அவனுக்கு அருள் செய்யும் கங்காதரர் திருவுருவம்,

ஆபற் சகாயர்

கணங்கள் கலுழி மதக்கடவுள் கதிர்வேற் குரிசில் எழுமாதர்,
நிணங்கொள் திகிரிப் படைஏந்தல் நிலவெண் டோட்டு மலர்ப்புத்-
தேள், அணங்கு நவக்கோள் முனிவரர்சூழ்ந் தணுக்க ராகப்
பொலந்தவிசின், இணங்கும் ஆவற் சகாயனெனும் இறைமைப்
பெருமான் திருவுருவம். 27

விநாயகப் பெருமான், முருகப் பெருமான், சத்தமாதர், திருமால், பிரமன், சிவகணங்கள், வருத்துகின்ற நவக்கிரகங்கள், முனிவரர் ஆக இவர் புடை தழுவி நெருங்கி இருப்பப் பொன் தவிசில் வீற்றிருக்கும் ஆபற் சகாயர் திருவுருவம்,

சோதிலிங்கேச்சுரர்

கடைக்கால் வெள்ளப் பெரும்புணரி நாப்பட் கதிர்த்த சுடர்-
இலிங்கத், திடைப்பால் மதியம் முடிவயங்கத் தோன்றி விசும்பின்
எகினமுங்கீழ்த், தொடைப்பூந் துளபச் சூகரமுந் துலங்க முடிமேற்
கரங்குவித்துப், படைப்பான் முகுந்தன் வலம் இடமும் பரவத் திகழ்-
வோன் திருவுருவம். 28

ஊழிக்காலப் பெருவெள்ளத்தின் நடுவே ஒளிகொண்ட சோதி லிங்க வடிவுடன் பால் போலும் நிறமுடைய பிறை முடியில் விளங்கத் தோன்றி மேலே அன்னமும் கீழே துழாய் அணிந்த திருமாலாகிய பன்றியும் காணும்படி சிரமேற் கரங்கூப்பிப் பிரமனும் திருமாலும் இடமும் வலமும் போற்றுதல் செய்யச் சோதி லிங்கேசுவரராய்த் தோன்றும் திருவுருவம்,

மச்ச சங்காரர்

வானம் பழிச்ச வலைமாக்கள் வடிவு தாங்கி வலம்புரிக்கை
மீனம் படுத்து விழிசூன் று விரல்மோ திரத்தின் எவ்வுயிர்க்கும்
ஞானம் பயப்பக் குருவிந்த நலங்கேழ் மணிபோற் பதித்தணிந்த[ம்.
கானம் படித்துச் சுரும்புளருங் கடுக்கைத் தொடையோன் திருவுருவ

விண்ணோர் வேண்ட வலைஞர் திருமேனி தாங்கிப் பாஞ்ச சன்னியம் உடைய திருமாலாகிய அவதார மீனின் கண்ணை இடந்து அதனால் செருக்கு அகற்றி மோதிரத்திற் பதித்த வயிரம்போலக் கொண்டு விரலில் அணிந்து பாட்டிசைத்து வண்டுகள் சூழும் கொன்றை மலர் மாலையை அணிந்த மச்ச சங்காரர் திருவுருவம்,

கூர்ம சங்காரர்

மகரந் திளைக்குங் கடல்ஏழும் மலங்கக் கலக்கும் பசுந்துளவ
முகைவிண் டலர்தார் ஆமைதனைப் பற்றித் தகர்த்த முதுகோடு

நகுவெண் டலைமா லிகையணிக்கு நடுநா யகமாக் கோத்தணிந்து
புகரின் றுயர்ந்தோர் தொழப்பொலிந்த புத்தேள் செல்வத்
திருவுருவம். 30

சுருமீன் வழங்கும் கடல்கள் ஏழனையும் கலங்கக் கலக்கும் அவதார ஆமையைப் பற்றிக் கோட்டினைப் பறித்துத் தலைமாலை அணியின் இடையே நாயகமாக விளங்க அணிந்து குற்றமின்றி உயர்ந்தோர் தொழும்படி விளங்கும் கூர்மசங்காரர் திருஉருவம்,

வராக சங்காரர்

சுழிக்கும் புனல்ஏழ் கடல்சுவற்றி மலைகள் ஏழுந் துகள்படத்தீ
விழிக்குங் கடவுட் பன்றியினை விறல்வே டுருக்கொண் டெழுந்தருளி
அழித்தங் கொருவெண் கோடுபறித் தணிந்து மற்றை இடக்கோடு
பழிச்சுந் துதிகேட் டுளம்இரங்கி விடுத்த பகவன் திருவுருவம். 31

எழுகடலையும் வற்றச் செய்து எழுமலையையும் நீறுக்கும் செந்தீச் சிந்தும் திருமால் கொண்ட அவதாரப் பன்றியினை வேட்டுவ வடிவம் கொண்டு தோன்றி வலக்கோட்டினைப் பறித் தணிந்து துதிகேட்டு இரங்கி இடக்கோட்டினை விடுத்தவராம் வராக சங்காரர் திருவுருவம்,

நரசிங்க சங்காரர்

நன்ஞை லிரண்டு திருவடியும் நனிநீள் வாலும் முகம்இரண்டும்,
கொன்னர் சிறகும் உருத்திரமும் கொடும்பே ரார்ப்பும் எதிர்தோற்-
றிச், செந்நீர் பருகிச் செருக்குநர மடங்கல் ஆவி செகுத்துரிகொண்,
டொன்னர் குலங்கள் முழுதழிக்கும் உடையான் சரபத்
திருவுருவம். 32

எட்டுத் திருவடிகளும் மிக நீண்ட வாலும் இருமுகங்களும் அச்சந் தோன்றும் சிறகுகளும் உக்கிரமும் கொடிய பெரிய முழக்கமும் தோன்றும் வடிவுடன் தோன்றி இரணியனது இரத்தத்தைக் குடித்து வெறிகொண்டு கேடு செய்த நரசிங்கத்தைக் கொன்று அதன் உரியைப் போர்வையாகக் கொண்ட சார்த்தூலத்தின் வடிவொடு விளங்கும் நரசிங்க சங்காரர் திருவுருவம்,

கங்காளர்

குறளாய் அணைந்து மூவடிமண் கொண்டு நெடுகி மூவுலகுந்
திறலான் அளந்து மாவலியைச் சிறையிற் படுத்து வியந்தானை
இறவே சவட்டி வெரிந்எலும்பை எழிற்கங் காளப் படையென்ன
அறவோர் வழுத்தக் கைக்கொண்ட அங்க ளாளன் திருவுருவம். 33

மாவலி முன் வாமனனாய்க் குறுகி மூன்றடி மண் இரந்து பெற்றுப் பின் நெடியோனாய் மூவுலகையும் சூழ்ச்சியால் அளந்து அம்மாவலியைச் சிறையிலழுத்திச் செருக்கிய திருமாலை அழியுமாறு அழித்து முது கெலும்பை அழகிய கங்காளம் (முழு எலும்பு) ஆயுதமென்று அறவோர் ஏத்தக் கைக்கொண்ட கண்ணோட்ட முடைய பிரானைக் கங்காளர் எனப் பேசப்பெறும் திருவுருவம்,

காலபைரவர்

பொலங்கொள்பங்கிமுகரோமம் பொலிய உமையோ டம்புயம்போல்
அலர்ந்த விழிகள் இரண்டும்அது முகிழ்த்தா லனைய நுதல்விழியும்
இலங்க இரவி நடுவிளங்கி இருவர் இகல்போ தயன்சிரங்கொய்
தலங்கும் உகிரான் மருங்கமர அமர்ந்த பெருமான் திருவுருவம். 34

பொன்னிறமுடைய சடையும், மீசையும் பொலியவும் செந்தாமரை மலர் போலும் மலர்ந்து சிவந்த இரு விழிகளும் அம்மலர் குவிந்தாலனைய நெற்றி விழியும் விளங்க, மலரவனும் மாலும் உலகிற்கு முதல்வரெனத் தம்முட் போர் செய்யும் காலைச் சூரிய மண்டிலத்தி னின்றும் தோன்றிப் பிரமன் சிரத்தைக் கொய்து அவ்வெற்றி விளங்கும் நகத்தொடும் உமையம்மையுடனிருப்ப விளங்கும் கால பைரவர் திருவுருவம்,

பிட்சாடனர்

அடியில் தொடுத்த பாதுகையும் அசைந்த நடையும் இசைமிடறும்
வடிவிற் சிறப்ப நடந்தருளி மூழை ஏந்தி மருங்கணைந்த
தொடியிற் பொலிதோள் முனிமகளிர் சுரமங் கையரை மயல்பூட்டிப்
படியிட் டெழுதாப் பேரழகாற் பலிதேர் பகவன் திருவுருவம். 35

திருவடியில் பூண்ட மிதியடியும், அடியிட்ட நடையும், சாம கண்டமும் வடிவிற் புலப்பட எழுந்தருளி வந்து பிச்சைச் சோறு கொணர்ந்த முனிவரர் மனைவியராகிய கலங்காத பெண்டிரைக் காமுறுத்திப் பிரதி (ஒப்பு) இட்டு எழுதலாகாப் பேரழகொடும் பலி தேரும் பிட்சாடனர் திருவுருவம்,

பதிட்டைப் பயன்

என்று மறைஆ கமம்வகுக்கும் இன்னோ ரன்ன திருவுருவுள்
ஒன்று காஞ்சித் திருநகரில் உடைய பெருமான் ஏகம்ப
மன்றல் கமழும் மலர்வாவி மதில்சூழ் கோயில் அகவரைப்பின்
நன்று மகிழ்ந்து விதியாற்றாற் பதிட்டை புரிந்த நலமுடையோர். 36

என்று வேதா கமங்கள் வகுத்துணர்த்தும் திருவுருவங்களுள் ஒன்றனைக் காஞ்சிமா நகர்க்கண் ஆளுடைய திருவேகம்பர் தம் மணங்

கமழும் பொய்கையும், மதிலும் சூழ்ந்த கோயிலினுள் பெரிதும் விரும்பி விதிப்படி தாபித்த பேறுடையோர்,

எண்ணில் கோடி இளம்பரிதி குழீஇக்கொண் டெழுந்தா லெனவயங்கி, விண்ணை விழுங்கும் வளரொளிசூழ் விமான மேல்-கொண் டிருமருங்கும், வண்ண மணிச்சா மரைஇரட்ட வானோர்-முடிகள் அடிவருடத், தண்ணென் நறும்பூ மழைபொழியத் தனி-வெண் கவிகை மிசைநிழற்ற. 37

அளவில்லாத இளஞ் சூரியர்கள் ஒருங்குகூடி யிருந்தாற்போலச் சுடர்விரித்து விண்முழுவதையும் தன்னுள் அகப்படுத்தும் ஒளியுடைய விமானத்தில் வீற்றிருந்து கவரி இருமருங்கும் வீசவும் தேவர்தம் முடிகள் அடியைத் தடவும்படி வணங்கவும், மலர்மழை பொழியவும், ஒப்பற்ற வெண்குடை நிழல் செய்யவும்,

மிதுனம் பயிலுங் கின்னரங்கள் மெய்சோர்ந் தணுகிப் புடை-வீழப், பொதுளுந் தருக்கள் கனிந்துருகிப் புதுப்பூங் கொம்பர் தலைகுரங்க, மதுரங் கனிந்த மென்கிளவி மடவார் பாடும் மிடற்-றிசையும், முதிருஞ் சுவைத்தீங் குழல்இசையும் முதல்யா ழிசையுந் தலைமயங்க. 38

யாழ் இசையிற் றிளைக்கின்ற கின்னரப் பறவைகள் மெய்ம்மறந்து அருகில் வீழவும் செறியும் தருக்கள் முறுகி உருகிப் புதிதாய்த் தழைத்துத் தலைவளையவும் ஆகச் சுவைமிக்க மெல்லிய சொற்களைப் பேசும் மகளிர் பாடும் கண்டத்து இசையும், இனிய குழலின் கனிந்த இசையும் தலைமை அமைந்த யாழின் இசையும் ஒருங்குகூடவும்,

பண்ணின் மழலைத் தேன்துளிப்பப் பனிப்பூங் கதுப்பில் தேன்துளிப்பக், கண்ணும் விரலும் புடைபெயரக் கண்டோர் மன-மும் புடைபெயர, வண்ண மணிமே கலைஇரங்க மறுகும் இடைக்கு வேள்இரங்க,விண்ணின் வாழ்க்கை மெல்லியலார் மின்னுக் கொடி-போல் எதிர்நடிப்ப. 39

பண்ணுடன் கூடிய மழலைச் சொல்லாகிய தேன் வாயினின்றும் பொழியவும், குளிர்ந்த மலரணிந்த கூந்தலினின்றும் தேன் துளிப்பவும் கண் பிறழவும் விரல்கள் நரம்பின்மீதும் துளைகளின்மீதும் நடப்பவும் காணும் காமுகர் உள்ளமும் ஊசலாடவும் அழகிய மணிமேகலை அரற்றவும், மன்மதன் இடைமுறியும் கொல் என்று இரங்கவும் தேவ மகளிர் மின்னற் கொடியை ஒப்ப எதிரே நிருத்தம் செய்யவும்,

சென்று சேர்ந்து பன்னெடுநாட் சிவலோ கத்திற் பரபோகம்
நன்று நுகர்ந்து பின்நெடுமால் நளினக் கிழவன் வாசவன்சீர்

*ஒன்றும் ஏனைப் பெருந்தேவர் உலகம் அனைத்தும் அணைந்தணைந்து*
*மன்ற நெடுநாள் ஆங்காங்குப் போகம் நுகர்ந்து வைகியபின்.* 40

விமான வழியாகச் சென்று சேர்ந்து சிவலோகத்திற் பரபோகத்தைப் பெரிதும் நுகர்ந்து பின்னர்த் திருமால், பிரமன், இந்திரன், சிறப்புறும் ஏனைய பெரிய தேவர் பதங்கள் அமைந்த உலகங் களை அடுத்தடுத்து நிச்சயமாக நெடுங்காலம் போகம் நுகர்ந்து இருந்த பின்பு,

*முந்நீர் வரைப்பின் அவதரித்து ஞால முழுதும் ஒருகுடைக்கீழ்ப்*
*பன்னாள் ஆண்டு மறுவலுஞ்சீர் பரவுங் காஞ்சித் திருநகரிற்*
*பொன்னார் வேணி ஏகம்பப் புத்தேள் அடிக்கீழ் வழிபட்டு*
*மின்னேர் பாகன் திருவருளான் மீளா வீட்டின் நிலைபெறுவார்.* 41

கடல் சூழ்ந்த உலகிற் பிறந்து உலக முற்றவும் பொது நீக்கித் தனக்கே உரிமையாக்கி ஆண்டு மீண்டும் சிறப்புப் பரவும் காஞ்சிமா நகரில் பொன்போலும் சடை மவுலித் திருவேகம்பர் அடியிணைகளை வழிபாடு செய்து திருவருள் பெற்று மீண்டும் பிறப்பில் வாராத முத்தியைத் தலைப்படுவர்.

*மற்றைய பதிட்டைப் பயன்*
*எழுசீரடி யாசிரிய விருத்தம்*

*ஓங்குயர் விழுச்சீர்க் கம்பனார் கோயி லுள்ளுற நந்திஎம் பிரானை, ஆங்கவர் திருமுன் வெள்ளியங் கயிலை அமர்ந்தெனத் தருமவெள் விடையை, வாங்குவில் வரையார் வாய்தலின் இருபால் வாயில்காப் பாளரை அமைப்போர், தேங்கிய செல்வச் சிவபுரி அணுகித் திருநலந் திளைத்துவீ டடைவார்.* 42

ஓங்கி உயர்ந்த மிக்க சிறப்பினையுடைய திருவேகம்பர் ஆலயத்துள் நந்தி எம்பெருமானைச், சந்நிதியில் வெள்ளிக் குன்றனைய தரும தேவதையாகிய வெள்ளிய ஏற்றினை மேருமலையை வில்லாக வளைத்தவர் தம் வாயில் காவலரைத் தாபித்தோர் வீங்கிய செல்வச் சிவலோகத்தை அணுகித் தூய போகம் நுகர்ந்து வீட்டினையுறுவார்.

*அங்குச பாசம் வரதமோ டபயம் நாற்கரத் தமைவரக் கலை-மான், பங்கயக் கிழத்தி பாங்கியர் சூழப் பத்திர பீடமேல் வைகும், எங்கள்நா யகிதன் திருவுருப் பிறவும் இயற்றிவண் காஞ்சியின் அமைப்போர், தங்கிளை குளிர்ப்ப நெடிதுநாள் வாழ்ந்து கடைமுறை தாளிணை சேர்வார்.* 43

அங்குசம், பாசம், அபயம், வரதம் பொருந்திய நான்கு கரங்கள் அமைந்து சரசுவதியும் திருமகளும் ஆகிய சேடியர் மருங்கிருக்கப்

பத்திராசனத்தில் எழுந்தருளியிருக்கும் இறைவியின் திருவுருவைக் காஞ்சியில் அமைத்தவர்கள் தம் சுற்றத்தொடும் இன்பமிக நெடுங் காலம் வாழ்ந்து இறுதியில் திருவடிகலப்பர்,

ஐங்கரப் பெருமான் அறுமுகக் குரிசில் அறிவிலான் வேள்வி-
பாழ் படுத்த, வன்கழல் வீரன் கேத்திர பால வயிரவர் தம்மை-
ஆங் கமைப்போர், செங்கதிர் துர்க்கை மாயனை அயனைத் திருத்தக
நிறுவினர் தாமும், புங்கவர் வழுத்தும் அவ்வவர் உலகம் புகூஉப்-
பெரும் பயன் நுகர்ந் தமர்வார். 44

விநாயகப் பெருமானுர், முருகப்பெருமானுர், தக்கன்வேள்வியை அழித்த வீரபத்திரர், க்ஷேத்திரபால வயிரவர் என்னும் இம்மூர்த்திகளைத் தாபித்துத் தம் சுற்றமும் இன்புற நெடிது காலம் வாழ்ந்து இறுதியில் திருவடிகளை அடைவர்,

அறநெறி ஒழுகிச் சிவாகமம் மறைநூல் அஞ்செழுத் துண்மை-
தேர்ந் துணர்ந்து, முறையுளி வழாது கண்டிகை பூண்டு முழுதுநீ
றணிந்துவெள் விடைஊர், இறையவன் அடிக்கீழ்ப் பொதுவறு
சிறப்பின் எண்வகை உழுவல்அன் புடையார், மறையவர் வேந்தர்
வணிகர்வே ளாளர் மற்றையர் யாவரே யாக. 45

அறவழியில் நடந்து வேத சிவாகமங்களின் உண்மைப் பொருளாம் திரு அஞ்செழுத்தின் உண்மையை ஓர்ந்து விதியினின்றும் வழுவாது உருத்திராக்கம் பூண்டு திருமேனி முற்றும் வெண்ணீறு பூசி விடையூரும் பெருமான் திருவடிக்கீழ்ப் பொதுநீக்கிச் சிறப்பாக எண் வகையாம் எழுபிறப்பினும் தொடர்ந்த அன்பினர் நால்வருணத் தரேயாக அனுலோமர் பிரதிலோமர் பிறரேயாக,

மன்னிய பிரம சரியம்இல் வாழ்க்கை வனம்புரி நிலையின ராக,
அன்னவர் தமக்கு மனைநிலை ஈகை யாதிய அளித்துவண் காஞ்சித்,
தொன்னகர் வரைப்பிற் கவலையின் றிருத்துந் தூயவர் கறைமிடற்
றிறைவன், தன்னருள் வடிவம் பதிட்டைசெய் தவர்க்குச் சாற்றிய
பயன்முழு தடைவார். 46

நிலைத்த பிரமசரியம், இல்வாழ்க்கை, வானப்பிரத்தம் என்னும் நிலையினரேயாகச் சிறப்புற வழிபாடு செய்யும் அவர்க்கு வீடு, பொன் முதலிய கொடுத்துக் காஞ்சியில் குடியிருத்தும் நல்லார் சிவபெருமான் திருவுருவைத் தாபித்தவர்க்கு உரிய பயன் முழுதும் பெற்று வாழ்வார்.

பற்றெலாம் ஈசன் திருவடித் தலத்தே பதித்துடற் சார்பற
நீத்த, அற்றமில் காட்சிப் பெருந்துற வுடையார் அடியிணை

தொழுதுபோற் றிசைத்துச், சுற்றமும் பொதும்பர்த் தடம்புனற்
காஞ்சிச் சூழலுட் பயிக்கம்நன் குதவப், பெற்றவர் பெறும்பே
றிற்றெனக் கிளத்தல் பெரும்பணித் தலைவர்க்கும் அரிதே. 47

பற்று முற்றவும் சிவபெருமான் திருவடியிற் பதித்து உடற் பற்றும் அற்ற குற்றமற்ற மெய்யுணர்வினால் பெருந்துறவு பூண்ட அன்பர்தம் திருவடிகளைப் போற்றி செய்து சோலைகளும், நீர்நிலைகளும் சூழ்ந்த காஞ்சியில் அவர்க்குப் பிச்சை நன்கு வழங்கினவர் பெறும் பயனை முற்றக் கூறுதல் ஆயிரம் நாவுடைய ஆதிசேடனுக்கும் அமைவ தன்று.

பொருள்நிலைக் கேற்ப ஓவியத் தலத்திற் புகரறு படாந்தனில் அனைய, திருவடி வங்கள் எழுதிவைப் பவருந் தீவினை துணித்துவீ டடைவார், அருமறை மிருதி சிவாகம புராணம் அனைத்தினும் புகன்றவா புகன்றாம், மருள்நிலை கழித்த மாசறு தவத்தீர் மற்றுள தருமமும் புகல்வாம்.

தங்கள் வருவாய்க்குத் தக்கவாறு சுவரில், குற்றமற்ற திரைச் சீலைகளில் முற்கூறிய திருவுருவங்களைச் சித்திரமாகத் தீட்டிவைப்பவரும் தீயவினைகளைக் கெடுத்து முத்தியைச் சேர்வர். வேதமுதலாம் நூல்களில் கூறியபடி கூறினோம். சகலநிலை நீங்கிக் குற்றமற்ற தவத்தைக் கைக்கொண்டீர்! வேறுள்ள பல சிவதருமங்களையும் எடுத்துக் கூறுவாம்.

சிவாலயம் எடுத்தற் பயன்
கலிநிலைத் துறை

வளங்கொள் கச்சிமா நகர்மறு கிடைவிளை யாடும்
இளஞ்சி றார்களும் புழுதியிற் சிவாலயம் இயற்றிக்
கிளர்ந்து போற்றினுஞ் சிவபுரங் கெழுமுவ ரென்றால்
விளங்கு காஞ்சியிற் சிவாலயம் எடுப்பதே வேண்டும். 49

செல்வ வளம் கெழுமிய காஞ்சிமா நகரிடை வீதியில் விளையாடும் சிறுவரும் மணலாற் சிவாலயம் எடுத்து அன்பு கிளர்ந்து போற்றுவரேல் புகழால் விளங்கும் அக்காஞ்சியிற் சிவாலயம் எடுப்பதே செயத்தக்கது.

ஈட்டு கின்றதம் பொருள்வரு வாயினுக் கிசைய
ஊட்ட ருஞ்சுடர் மணிகளிற் கனகத்தின் ஒட்பங்
காட்டு தாதுவில் வெள்ளியிற் சுதையினிற் கனலின்
வாட்டு செங்கலின் மரத்தினின் மண்ணினா னாதல். 50

முயன்று தேடுகின்ற பொருள் வருவாய்க்குத் தக்கவாறு இயல்பாக ஒளி வீசும் மணிகளே ஆகப் பொன்னே ஆக ஒளியுடைய

செம்பே ஆக வெள்ளியே ஆகச் சுண்ணும்பு நெருப்பிற் சுட்ட செங்கல், மரம், மண் என்னும் இவற்றின் ஒன்றே ஆகக் கொண்டு,

கந்த மாதனம் பனிவரை நீலம்வான் கயிலை
மந்த ரந்திகழ் ஏமகூ டம்வளர் நிடதம்
முந்து பொன்வரை முதற்குல வரைப்பெய ரொன்றாற்
சந்த மேனிலைக் கோபுரம் மண்டபந் தயங்க. 51

கந்தமாதனம், இமாசலம், இந்திரநீலப் பருப்பதம், கயிலை மந்தரம், ஏமகூடம், நிடதம், மேரு எனப் பெறும் சிறப்புடைய மலையின் பெயர் ஒன்றைத் தாங்கிய அழகிய மேனிலைகளையுடைய கோபுரமும், மண்டபமும் விளங்குமாறு,

விளங்கு நாகரந் திராவிடம் வேசரம் மற்றுங்
கிளந்த வற்றுளோர் பெற்றியிற் கெழுவுபே ரன்பால்
துளங்கு வெண்டிரைக் கருங்கடற் சுடுவிடம் பருகிக்
களங்க றுத்தவன் ஆலயங் காண்டக எடுப்போர். 52

வடமொழி, தென்மொழி, தெலுங்கு என்னும் இம்மொழி நூல்களுள் பிறமொழி நூல்களுள் விதித்தபடி பேரன்பினுல் திருநீலகண்டமுடைய சிவபெருமானுக்குத் திருகோயில் சமைப்போர்,

மேவும் அவ்வமால் வரைநிகர் விமானமேல் கொண்டு
தேவர் மாலயன் முனிவரர் சித்தர்ஏத் தெடுப்பக்
காவி நேர்மிடற் றெம்பிரான் கயிலையை நண்ணி
ஓவ ரும்பெரும் போகம்உண் டுறைந்துவீ டடைவார். 53

முன் சொல்லப் பெற்ற மலைகளின் பெயரொடு கோபுரம் அமைத்தவர் அவ்வம் மலையை ஒக்கும் தெய்வ விமானத்தில் திருமால் முதலானோர் புகழ்ந்து போற்றிச் சூழ்ந்துவர நீலமலரை ஒக்கும் விடமுண்ட கண்டர்தம் கயிலையை நண்ணி ஒழி வரிய பெரும்போகத்தை நுகர்ந்து தங்கி முடிவில் வீட்டினைத் தலைப்படுவர்.

புதுக்குதற் பயன்•

முரிந்து வீழ்ந்தன வெடித்தன உடைந்தன முதிய
நெரிந்த வாகிய கோபுரம் நெடுமதில் பிறவுந்
தெரிந்து முன்னையிற் சீர்பெறப் புதுக்குவோர் பண்டு
புரிந்து ளோர்பெறும் புண்ணியம் நான்மடங் குறுவார். 54

முரிந்தும், வெடித்தும், உடைந்தும், பழமை உற்றும், நெளிந்தும் வேறுபட அழிந்தும் கிடக்கும் கோபுரம், பெருமதில் முதலாம் பிற வற்றையும் முன்போலச் சிறக்குமாறு புதுப்பிப்போர் (சீரணோத்தாரணம் செய்வித்தோர்) முன் அவற்றை எடுத்தவர் பெறும் பேற்றினும் நான்கு மடங்கு பயனை எய்துவர்.

மெய்யன் ஆலயப் பணிஉடல் விருத்தியைக் குறித்துச்
செய்து ளோர்பெறும் பயனும்ஒண் மகமெலாஞ் செய்தார்
எய்து மாறரி தென்றிடில் உறுதியோ டியற்றும்
உய்தி யாளருக் குரைத்திட வேண்டுவ தெவனே. 55

சத்தியனாகிய சிவபிரானார் தம் திருக்கோயிலைக் கூலியின் பொருட்டுக் கட்டினவர் எய்தும் பயன் அளவு விதிப்படி யாகங்கள் பலவும் செய்த புண்ணியரும் பெறார் . எனின் துணிவுடையராய்க் கோயிலை வகுத்த உய்யத் தக்கவர்தம் பயனை உரைக்குமாறு அரிதென்க.

எட்டுச் செங்கலி னாயினும் ஈர்ம்புனல் வேணி
வட்டச் சென்னியான் ஆலயத் திருப்பணி வகுத்தல்
ஒட்டிப் பெற்றஇவ் வுடற்பய னாவதென் றுணர்வீர்
அட்டுத் தீவினை ஐந்தவித் தொழுகும்அந் தணர்காள். 56

தீவினையைக் கெடுத்து ஐம்பொறிகளை அடக்கி மெய்ந்நெறியிற் செல்லும் அந்தணீர், கங்கையை வட்டமாகிய சடையிடை வைத்த பிரானார்க்கு எட்டுச் செங்கல் கொண்டாயினும் விளையாடும் சிறுவரை ஒப்பச் சிவாலயம் வகுத்தலே இவ்வுடம் பெடுத்ததன் பயனென அறிமின்.

ஏற்றின் மேலவன் ஆலயத் திருப்பணி இயற்றும்
ஆற்றல் இல்லருங் கோயிலின் அகம்புறம் எங்கும்
போற்றி நுண்ணுயிர் மெல்லென அலகிடல் புரிதல்
நூற்று நூறுசாந் திராயண கிரிச்சரம் நோக்கும். 57

விடையூரும் விமலர்க்கு ஆலயம் எடுத்தற்கு வேண்டும் ஆற்றல் இல்லாதவரும் கோயிலின் அகத்திலும் புறத்திலும் நுண்ணிய உடம்புடைய எறும்பு முதலாம் இனங்களுக்கும் தீங்கு நேராதவாறு மெத்தென விளக்குமாறு கொண்டு திருவலகிடுதல், பதினாயிரம் சாந்திராயண விரதம், கிரிச்சரவிரத பயன்களை ஒக்கும்.

அறுசீரடி யாசிரிய விருத்தம்

குடம்புரை செருத்தல் தீம்பால் கொழித்திடுங் கபிலை ஆப்பி
இடம்படும் விசும்பின் ஏந்தி வடித்தநீர் வாக்கி என்றும்
அடம்பணி சடிலத் தெங்கோன் ஆலயம் மெழுகு வோர்க்குப்
படும்பயன் அதனின் நூறு மடங்கெனப் பகரும் நூல்கள். 58

குட மொக்கும் மடியினின்றும் இனிய பாலைப் பொழியும் கபிலை என்னும் புண்ணியப் பசுவின் (மலம்) சாணத்தைக் கீழே விழாமல் ஏந்தி வடிகட்டிய நீரைக்கொண்டு கரைத்து அடம்பம் பூவை முடியில்

அணிந்த சிவனாரது ஆலயத்தை மெழுகுவார்க்கு உண்டாம் பயன் முற்கூறியதனின் நூறுமடங்கு மிகும். பத்திலக்கம் மடங்கு பெரிதாகும் என்பதாம்.

ஒலிமலர்த் தொடரி பெம்மான் ஒள்நிலாக் குழவி வேய்ந்த
அலர்முடிச் சடையிற் சாத்தல் நூற்றுநூ றதிக மாகும்
மலர்தொறும் உவகை பூத்து வானவர் வதிவார் அந்த
நலமிகு மலர்கொண் டேத்தல் நாதனுக் கினிதென் றோர்வீர். 59

பெருமானார்தம் இளம்பிறையை முடித்த சடையில் தழைத்த மலர்மாலையைத் தொடுத்து அணிதல் முன்னைய புண்ணியத்தினும் பதினாயிரம் மடங்கு மிகும். பல்வகை மலர்களிலும் தேவர் விரும்பி உறைவர். அத் தகு நலமுடைய மலர்களைக் கொண்டு போற்றுதல் நாதனார்க்கு உவப்பாகும் என்றறிதிர்.

மலர்களில் வாழும் கடவுளர்கள்

கன்னிகா ரத்தில் வாணி அலரியிற் கமலப் புத்தேள்
வன்னியில் வன்னி நந்தி நந்தியா வட்டப் பூவிற்
புன்னையில் வளிக மேருப் பூவினிற் கணங்கள் ஏடு
துன்னிய எருக்கின் அங்கித் தோன்றல்செண் பகத்துச் செவ்வேள்.

கோங்க மலரில் சரசுவதியும், அலரி மலரில் பிரமனும், வன்னிப் பூவில் அக்கினியும், நந்தியாவட்ட மலரில் திருநந்திதேவரும், புன்னை மலரில் வாயுவும், ஓர்சாதிப் புன்னைமலரில் கணங்களும், இதழ்கள் செறிந்த எருக்க மலரில் அக்கினியும் செண்பக மலரில் முருகப் பெருமானாரும்,

திருமகள் வில்லந் தன்னிற் சிறந்தகொக் கிறகின் மாயோன்
வருணன்வா ருணமென் போதில் வகுளத்திற் சுயசை மற்று
நிருதிமென் கிரீடப் பூவிற் சாதியில் நிகழ்ஈ சானன்
பரிதிசெங் கழுநீர்ப் பூவிற் குமுதத்திற் பனிவெண் டிங்கள். 61

வில்வத்தில் இலக்குமியும், கொக்கிறகு மந்தாரை மலரில் திருமாலும், வாருணம் என்னும் நீர்ப் பூவில் வருணனும், மகிழம்பூவில் நந்திதேவர் திருமனைவியும், வாகை மலரில் நிருதியும், சிறுசண்பகத்தில் ஈசானமூர்த்தியும், செங்கழுநீர்ப் பூவில் சூரியனும், அல்லிமலரில் சந்திரனும்,

இந்திரன் மந்தா ரத்தின் இயக்கர்கோன் பொலம்பூ மத்தத்
தந்தகன் அபாமார்க் கத்தின் ஆரருள் கூர்ந்து வாழ்வார்
கந்தமென் கமலப் போதிற் கண்ணுதல் இறையே வைகும்
பைந்துகள் நீலப் பூவிற் பனிவரைப் பிராட்டி மேவும். 62

மந்தார மலரில் இந்திரனும், பொலிவுடைய ஊமத்தம் பூவில் குபேரனும், நாயுருவியில் இயமனும் விரும்பி உறைவர். தாமரை மலரில் சிவபெருமான் மேவுவர். பசிய மகரந்தமுடைய நீலோற்பல மலரில் உமையம்மையார் விரும்பி உறைவர்.

மேதகு வாசத் தெல்லாம் மலைமகள் விரும்பி வைகும்
ஆதலால் இனைய பூக்கள் அமைந்தவை கொண்டு செய்யும்
பாதபூ சனைக்கே கம்பப் பரம்பொருள் கருணை கூரும்
போதணி புயத்தின் மேலாம் பூந்தொடை தொடுத்துச் சாத்தல். 63

மேன்மை பொருந்திய நறுமணப் பூக்கள் எவற்றிலும் உமையம்மையார் உவந்துறைவர் ஆகலின் இத்தகைய மலர்களையும் தழைகளையும் வாய்த்தவற்றைக் கொண்டு அடிமலரில் அருச்சித்தற்குத் திருவேகம்பப் பெருமான் பேரருள் சுரக்கும். மலரணிதற்குரிய திருத்தோளில் மாலை தொடுத்துச் சாத்துதல்,

அவற்றினும் அதிக மாகும் அலர்ந்தபுண் டரிக மாலை
எவற்றினுஞ் சிறந்த மேன்மை எழிற்கருங் குவளைப் போது
நிவப்புறு நூற்றுப் பத்தால் நெடுந்தொடை மாலை சாத்திற்
பவத்தொகை இரிய நூறி முத்தியே பயக்கும் அம்மா. 64

முற்கூறிய முறையினும் மிக்குப் பயன்தரும். தாமரை மலராலும் எவற்றினும் சிறந்த நீலோற்பல மலரானும் உயர்வுற ஆயிரம் மலர்களால் மாலை தொடுத்துப் பெருமானுர்க்கும் பெருமாட்டியார்க்கும் சாத்தினுல் பிறவி நோயை முற்றும் கெடுத்து முத்தியையே வழங்கும்.

ஓங்குயர் திருவே கம்பம் உடையவன் திருமுன் வாசம்
வீங்குநெய் விளக்குத் தூபம் விளைத்திடின் முருகு நாறிப்
பாங்கொளி பரப்பு மேனி படைத்துவெண் கயிலை நண்ணித்
தேங்கருட் பரமானந்த வேலையுள் திளைத்து வாழ்வார். 65

திருவேகம்பப் பெருமான் திருமுன்னர் மணமிகும் நெய் தீபமும், நறும் புகையும் பணிபுரிந்தால் நறுமணங்கமழும் ஒளியுடைய உடம்பினராய்க் கயிலையை அடைந்து அருளுடைய பரமானந்தத்தில் மூழ்கி வாழ்வார்.

மட்டவிழ் பொழில்சூழ் கம்ப வரைப்பிடை மதிதேய் பக்கத்
தட்டமி பதினன் கான தினங்களின் அன்பு கூர்ந்து
கட்டெழிற் கபிலை ஆன்நெய் கலந்தகுங் கிலியத் தூபம்
இட்டவர் செய்த குற்றம் ஆயிரம் பொறுப்பன் எங்கோன். 66

தேனைத் துளிக்கின்ற சோலைகள் சூழ்ந்த திருவேகம்பத்தில் கிருட்டினபக்கத்து வரும் அட்டமி சதுர்த்தசி தினங்களில் அன்பு பெருகிப் பேரழகுடைய கபிலை என்னும் பசுவினது நெய்யொடு கலந்த குங்கிலியத் தூபம் புகைத்தவர் செய்த பிழைகள் ஆயிரமும் பொறுப்பர் எம்பெருமானார்.

*வடித்தநீர் வாசம் பெய்து வள்ளலுக் காட்டல் செய்யிற்*
*படித்தலைப் பத்து நூறு பரிமேதஞ் செய்த பேறும்*
*கடிச்செழுந் தயிலம் ஆன்நெய் கமழும்ஐந் தமிர்தம் எம்மான்*
*அடித்துணைக் குறும்ஆ னைந்தும் ஒன்றின்ஒன் றதிக மாமால்.* 67

வடித்த நீரில் பச்சைக் கருப்பூரம் முதலாம் நறுமணப் பொருள் களிட்டுப் பெருமானார்க்குத் திருமுழுக் காட்டினால் உலகில் ஆயிரம் அசுவமேதம் செய்த பயனை அது வழங்கும். மணங்கமழும் எள்ளின் நெய், பசுநெய், மணமுடைய பஞ்சாமிர்தம், வழிபாட்டிற்குரிய பஞ்சகௌவியம் என்ற இவை ஒன்றனைவிட ஒன்று ஏற்றமுடைய தாகும்.

*மண்டுபே ரன்பின் ஆன்பால் மணிமுடிக் காட்டு வோர்பால்*
*அண்டர்தம் பெருமான் மேன்மேல் அளவிலா மகிழ்ச்சி கூரும்*
*வெண்டயிர் கருப்பஞ் சாறு விளைமதுப் பிறவும் ஆட்டின்*
*எண்டபும் வேள்வி யெல்லாம் இயற்றிய பெரும்பே றெய்தும்.* 68

செறிந்த மெய்யன்பொடும் பசுப்பாலைத் திருமுழுக்காட்டுவோர் திறத்தில் தேவதேவனார் மேலுமேலும் அளவுபடாத மகிழ்ச்சி யுறுவர். இறுகிய தயிரும், கருப்பஞ்சாறும், செவ்விய தேனும் பிறவும் கொண்டு அபிடேகம் செய்யின் அளவிறந்த வேள்விகள் அனைத்தும் செய்த பெரும் பயன்கள் கைகூடும்.

*மந்திரத் திருஒற் றுடை சாத்திமான் மதங்கர்ப் பூரஞ்*
*சந்தனக் கலவை சாத்திச் சாந்தாற்றிப் பணிசெய் கிற்போர்*
*தந்திரு மரபிற் கோடி தமர்களை நரகின் நீக்கி*
*இந்துவாழ் சடிலத் தெந்தை இணையடி நீழல் வாழ்வார்.* 69

மந்திரத்துடன் திரு ஒற்றுடைகொண்டு ஈரம் புலர்த்திக் கத்தூரியும், பச்சைக் கருப்பூரமும் கலந்த சந்தனக் குழம்பை மட்டித்துத் தொண்டு செய்ய வல்லவர் தம் மரபின் வந்த முன்னவர் பாவப்பயனாக நரகிற் கிடப்பவர் கோடி என்னும் அளவினரை நரகினின்றும் எடுத்துச் சந்திரசேகரர் திருவடி நிழலில் வாழ்விப்பவராவார். தாமும் வாழ்வர்.

*நுழையும்நூற் கலிங்கம் வெண்கேழ் நுரைபுரை நறும்பூம் பட்டு*
*விழைதகு தீவில் தந்த விசித்திரப் படங்கள் அன்பான்*

மழைமிடற் றிறைக்குச் சாத்தின் மழுவலான் உலகின் ஓரோர்
இழையினுக் கியம்புங் கற்பம் ஆயிரம் இனிது வாழ்வார். 70

நுண்ணிய நூலான் அமைந்த துகிலும், வெள்ளிய நுரையை ஒக்கும் மெல்லிய பட்டாடையும், பல தீவுகளினின்றும் வந்த விரும்பத் தக்க ஆடைகளும் ஆகிய இவற்றைப் பேரன்புடனே மேகம் போலும் கரியகண்டமுடையவர்க்குச் சாத்தினுல் பரசுபாணியர் தம் சிவலோகத்தில் ஓரோர் நூலிழைக்கும் சொல்லப்பெறும் ஆயிரம் கற்பம் இனிது வாழ்வர்.

நால்விரல் அளவை கொண்ட நல்லிழை தொண்ணூற் ருறிற்
சால்புற மும்மூன் ருக்கி மூன்றுறச் சமைத்த பூணூல்
சீலமோ டென்றுஞ் சாத்துந் திருமறை யவரைக் கண்டால்
மாலுடைப் புலையர் தாமும் மறுமையின் மறையோ ராவார். 71

நால்விரலை ஒன்றுபடுத்தித் தொண்ணூற்ருறு முறை சுற்றி அளவுபடுத்தி மூன்று புரியாக ஒவ்வொன்றில் மூன் றமைய முறுக்கிக் கொண்ட பூணூலைத் தகைமையோ டென்றும் அணியும் மறையவரைத் தரிசித்தால் குற்றமுடைய புலையரும் மறுமையில் அந்தணராவர்.

இம்மியி னளவு செம்பொன் எம்பிரான் முடியிற் சாத்தின்
அம்மஆங் கவர்பெ றும்பே றனந்தற்கும் அளத்தல் செல்லா
விம்மிய செல்வர் கோடி வீசலும் வறியோர் தன்னம்
உண்மையின் அளித்தற் கொவ்வா உறுதிஅன் புடைமை பெற்ருல்.

மத்தங்காய் அளவு செம்பொன்னை மணிமுடியிற் சாத்திஞலும் அவரடையும் திருவருட் செல்வத்தை ஆயிரம் நாவுடைய ஆதிசேடனுலும் சொல்ல இயலா ஆகும். பெருஞ்செல்வர் கோடி அளவாகச் செம்பொன் வழங்கினுலும் வறியவர் சிறிதே ஆரவாரமின்றி உண்மை அன்பொடும் வழங்குவராயின் அதற்கு அச்செல்வர் பொருள் ஒப்பாகாது தாழும்.

வெறிமலர் இண்டை மாலை விரைகமழ் தூப தீபம்
அறுசுவை அடிசில் ஆன்ற வெள்ளிலை பழுக்காய் மற்றும்
உறுகுடை கவரி யாதி பூசனைக் குரிய வெல்லாம்
முறுகுபே ரன்பின் எந்தைக் காக்குவோர் முத்த ராவார். 73

மணங்கமழும் முடிமாலையும், மணங்கமழும் தூபமும் தீபமும் அறுவகைச் சுவையுடைய போனகமும், தாம்பூலமும், மேலும் சிறந்த குடையும், கவரியும் பூசனைக்கு வேண்டும் பிறவும் முதிர்ந்த பேரன் பொடும் எமது பெருமாஞர்க்கு உரிமை ஆக்குவோர் சீவன் முத்தராவார்.

நித்தியத் திருநாள் பக்க விழாநிகழ் திங்கட் சாறும்
புத்தலர் இளவே னிற்கட் பொருவரும் வசந்தங் கோடை
மெத்திய முதுவே னிற்கண் மிதவைநீ ராட்டு மாரி
மொய்த்தகார்ப் பருவந் தன்னிற் பவித்திர முதுவி ழாவும். 74

நாள் விழாவும், பட்ச விழாவும், மாத விழாவும், புதுமை விரிகின்ற இளவேனிற் பருவமாகிய சித்திரை வைகாசிகளில் வசந்த விழாவும், வெயில் மிகுந்த முதுவேனிற் பருவமாகிய ஆனி ஆடி மாதங்களில் தெப்பவிழாவும், மழை செறிந்த கார்காலமாகிய ஆவணி புரட்டாசிகளில் பவித்திரப் பெருவிழாவும்,

அன்புறு கூதிர்க் காலை ஐப்பசிப் பூரச் சாறு
முன்பனிப் பருவந் தன்னில் வைகறை முகிழ்த்த பூசை
பின்பனிப் பருவந் தன்னிற் பிறங்குபொன் னூச லாட்டும்
என்பன சிறப்பு மாண இயற்றுவோர் வீடு சேர்வார். 75

காதலர் அன்பு செய்தற்குக் காரணமாகிய கூதிர்ப் பருவமாகிய ஐப்பசியும் கார்த்திகையும் கூடிய மாதங்களில் ஒன்றில் ஐப்பசிப் பூரவிழாவும், முன்பனிப் பருவங்களுள் வரும் மார்கழி தை மாதங்களில் (உஷக்காலம்) வைகறை வழிபாடும் பின்பனிப் பருவமாகிய மாசி பங்குனியில் சிறந்த பொன்னூஞ்சல் விழாவும் எனப் பெரிய விழாக்களை மாட்சிமைப்படப் புரிவோர் வீடுறுவர்.

பொங்கரி பரந்த உண்கட் பூவையோ டொருமா நீழல்
தங்கிய பெருமா னார்க்குச் சார்தரும் ஆண்டு தோறும்
பங்குனித் திருநாட் செய்கை பழுதறு சிறப்பின் மல்க
மங்கல விதியி னாற்றால் விடைக்கொடி வயங்க ஏற்றி. 76

மதர்த்துச் செவ்வரி பொருந்திய கண்களையுடைய நாகணவாய்ப் பறவையை யொக்கும் அம்மையொடும் மாநீழலில் வீற்றிருக்கும் திருவேகம்பர்க்கு ஆண்டுதோறும் வருகின்ற பங்குனித் திருவிழாவைக் குற்றமற்ற சிறப்பின் விளங்குமாறு மங்கல முறைப்படி இடபக்கொடியை விளங்க ஏற்றி,

கலி விருத்தம்

முழவந் திண்டிமம் பேரி முரசுசீர்
ஒழுகு காகள மாதி உலம்புவ
கழிபெ ருங்கடல் காட்ட அதனிடைக்
குழுமு பேனமொத் தொண்குடை பம்பிட. 77

மத்தளம், தம்பட்டம், பேரி, முரசம் முதலிய தோற்கருவிகளும், நீண்ட ஊதுகொம்பு முதலிய கருவிகளும் ஒலிப்பன மிகப் பெரிய

ஒலியையுடைய கடலை அறிவுறுத்தவும்; அக்கடலிடை எழும் செறிந்த நுரையை ஒத்து விளக்கமுடைய குடைகள் நெருங்கவும்,

அன்ன மாக்கடல் தோன்றிய ஆரமிழ்
தென்ன மாதர் மிடற்றிசைப் பாடலும்
நன்னர் மங்கல நாதமும் வேதமும்
மன்னும் அன்பர்கள் பாட்டும் மலிந்தெழ. 78

அக்கடலிடைப் பிறந்த அரிய அமிழ்தத்தை ஒப்ப மகளிர் கண்டப் பாடலொலியும், சுபச் சோபன ஒலியும், வேத ஒலியும் மெய்யன்பர் தோத்திர ஒலியும் மல்கி எழவும்,

இமய மாதிய ஈகையங் குன்றெலாந்
தமதி ருங்குடித் தையல்நல் லாளொடும்
விமலர் கொள்ளும் விழாவணி காணவந்
தமைவு கொண்டெனத் தேர்கள் அலங்குற. 79

இமயம் முதலிய பொன்மலைகள் யாவும் தம்குடியிற் றோன்றிய மலைமகளாருடன் பெருமானார் கொள்ளும் திருவிழாவைச் சேவிக்க வந்து சேர்ந்தாலெனத் தேர்கள் விளங்கவும்,

பொன்னங் கிண்கிணி பூஞ்சிலம் பின்னொலி
மின்னு மேகலை ஆர்ப்பொலி மிக்குற
அன்ன மன்ன அணங்கனை யார்குழாந்
துன்னி எங்கணும் ஆடல் தொடங்கிட. 80

பொன்னாலமைந்த கிண்கிணி, சிலம்பு, மேகலை இவற்றின் ஆரவார ஒலி மிக்கெழ அன்னம்போலும் நடையினையும் தேவ மகளிர் போலும் வடிவினையும் உடைய மங்கையராயம் நெருங்கி யாண்டும் ஆடல் தொடங்கவும்,

சிகர மாளிகைத் தெற்றி தொறும்பயில்
மகர தோரணப் பன்னிற மாமணி
துகளில் பேரொளி துன்றிய வீதியும்
புகரில் சித்திரந் தீட்டிய போலுற. 81

சிகரங்களையும் மேடைகளையும் உடைய வீடுகள் தோறும் தூக்கிய மகர மச்ச வடிவில் அமைந்து பல நிறங்களையுடைய மணிகள் பதித்த தோரணங்களின் குற்றமற்ற பேரொளி செறிந்த வீதிகளும் குற்றமற்ற சித்திரங்கள் தீட்டப்பெற்றுள்ளனபோலக் காட்சி அளிப்பவும்,

பூக மும்பசும் பொற்குலை வாழையும்
மாக முந்திட நாட்டி வயக்கிய
போகு பந்தரும் பூரண கும்பமும்
ஏகும் அவ்விடந் தோறும் இலகிட. 82

பாக்கு மரங்களும், குலையுடைய வாழைகளும் விசும்பு பிற்படத் தூக்கி விளங்க வகுத்த மிக்குயர்ந்த பந்தர்களும் நிறைகுடங்களும் செல்லுமிடமெல்லாம் விளங்கவும்,

வளிஉ லாமதர் மாளிகை சூளிகை
குளிர்கொள் மண்டபங் கோபுர மீதெலாம்
நளிம லைத்தலை நன்கொடி பூத்தெனக்
களிம டக்கொடி யார்கஞ லித்தொழ. 83

காற்று வழங்கும் சாலேகங்களையுடைய மாடங்களும் மேல் தெற்றிகளுடைய குளிர்ச்சி வாய்ந்த மண்டபங்களும், கோபுரங்களும் ஆகிய இவற்றின்மேல் பெருமை பொருந்திய மலைமிசை நல்ல கொடிகள் பூத்து விளங்கினாற்போல உறுப்பெல்லாம் மலர்களை ஒக்கும் கொடிபோல்வார் செறிந்து தொழவும்,

குங்கு மக்குழம் புங்குளிர் சாந்தமும்
பொங்கு வாசப் புதுப்பனி நீரொடு
வெங்கண் மங்கையர் பந்தினில் வீசுவ
எங்கும் மல்கி அடிகள் இழுக்குற. 84

குங்குமக் குழம்பும், குளிர்ந்த சந்தனச் சேறும், மிக்குக் கமழும் பனிநீரொடும், கொடிய பார்வையையுடைய மகளிர் நீர்வீசுந் துருத்தியால் வீசுதலின் தெருவிடங்கள் எவ்விடத்தும் செல்வோர் அடிகள் வழுக்குறவும்,

முடிகள் தம்மின் அராவி முழுமணி
படியில் உக்கன பாறினங் கொண்மின்என்
றுடைய மாந்தர்க் கறிவுறுத் தாங்கவர்
அடிகள் பைதுறுத் தங்கங் கவிர்தர. 85

முடியொடு முடிதாக்கிப் பதித்திருக்கும் நிறைமணிகள் வீழ்ந்து கிடந்தனவாய் யாம் சிதறினம் கொள்ளுங்கோள் என்று மணிக்குரியவர் தமக்கு உணர்த்துவனபோல அவர் அடிகளில் உறுத்தி ஆங்காங்கு ஒளிவிடவும்,

இளிந்த பூகத் திருங்கனி வெள்ளிலை
ஒளிர்ந்த பொன்மணி ஒண்பொரி பன்மலர்

அளிந்த பல்பழ மாதி இறைப்பன
குளிர்ந்து வீதி குழீஇத்திடர் செய்திட. 86

பாக்கு மரத்திற் பழுத்த பழுக்காயும், வெற்றிலையும், ஒளிவிடும் பொன்னும், மணியும், வெண்பொரியும், பல்வகை மலர்களும், கனிந்த பழங்களும் ஆக வீசப்படுபவை வீதியிற் கிடந்து திரண்டு மேடுபடவும்,

கவள யானைக் கடாம்மழைத் தாரையும்
இவுளி வாயின் இழிந்த விலாழியும்
உவரி யாகி உயர்ந்தஅத் திட்டையைத்
திவள மோதிப் படர்ந்தன செல்லவே. 87

கவளங் கொள்ளும் களிறுகளின் மதநீர்ப் பெருக்கும் குதிரைகளின் வாயினின்றும் ஒழுகுகின்ற நுரைநீரும் கூடிக் கடல்போலாகி முற்கூறிய மேடுகளை இடம் பெயரத் தாக்கிப் பரவினவாய்ச் செல்லவும்,

அறுசீரடி யாசிரிய விருத்தம்

கல்வரைப் பிராட்டி செவ்வேள் ஐங்கரன் கணங்கள் சூழப்
பல்வகை ஊர்தி உம்பர்ப் படரொளி அரச வீதி
எல்லையில் உயிர்கட் கெல்லாம் எண்ணருங் கருணை பூத்துப்
புல்கொளித் திருவே கம்பன் திருஉலாப் போதச் செய்வோர். 88

மலைமகளும் முருகப் பெருமானும், விநாயகரும் சிவகணங்களும் சூழ்ந்துவரவும் தத்தமக்கு உரிய வாகனங்களில் ஒளி உலவும் அரசவீதிகளில் அளவில்லாத ஆன்மாக்களுக்கும் அளவிடலரிய திறத்தன ஆகும் அருளைப் புரிந்து எழுந்தருளும்படி திருவேகம்பரை உலாப் போதுமாறு விழா நடாத்துவோர்.

மேதகு தவந்தா னங்கள் வேள்விகள் அனைத்துஞ் செய்தோர்க்
கோதிய பயத்திற் கோடி யுடைராய்க் கோடி கோடி
ஏதமில் குலத்தி னோடும் எம்பிரா னுலகின் வாழ்ந்து
சாதலும் பிறப்பும் இல்லாத் தத்துவந் தலைப்பட் டுய்வார். 89

மேன்மை பொருந்திய தவத்தையும், தானத்தையும், யாகங்களையும் புரிந்தவர்க்குச் சொல்லப்பட்ட பயனைக் காட்டினும் கோடிமடங்கு பயனை எய்துவர். குற்றமற்ற பல கோடியராய் மரபின் வந்தவரோடும் சிவலோகத்தில் வாழ்ந்து இறத்தலும் பிறத்தலும் நீங்கிய மெய் யுணர்வைப் பெற்றுய்வார்.

இத்தகு கடவுட் சாறு நோக்கிஅங் கிறைஞ்சு வோரும்
அத்தகு விழவின் ஈற்றில் தீர்த்தநீர் ஆடு வோரும்

பைத்தபாம் பல்குற் செவ்வாய்ப் பனிமொழி ஒருபால் மேய
வித்தகன் கயிலை நண்ணி விறற்கண நாத ராவார். 90

காஞ்சியம்பதியில் திருவேகம்பர் திருவிழாவைக் கண்டு சேவிப்ப வரும் உமையம்மையை ஒருபுடை தழுவிய சதுரர்தம் கயிலையை நண்ணி வெற்றி வாய்ந்த கணநாதராவார்.

ஏழுயர்ந் தேழு மண்தோய்ந் திலக்கணம் நிரம்பும் வேழங்
காழ்மணி யணிகள் பூட்டிக் கவின்பெற விருத்தி யோடுங்
கோழரைத் தனிமா நீழற் குழகனுக் குதவப் பெற்றோர்
பாழ்வினைச் சிமிழ்ப்பின் தீர்ந்து திருவருள் பற்று வாரால். 91

ஏழுமுழம் அளவாக உயர்ந்து ஏழுறுப்புக்கள் மண்தோய்ந்து பிற இலக்கணங்களும் நிரம்பப்பெற்ற உத்தம யானைக்கு மணிமாலைகளைப் பூட்டி அழகுண்டாக நாளும் வேண்டும் பாதுகாப்புப் பொருள்களுடன் கொழுவிய அடியினையுடைய ஒப்பற்ற மாநீழலில் வீற்றிருக்கும் குழகனார்க்கு அதனைக் கொடுத்த பேற்றினையுடையோர் வறிதே செயற்படுத்தும் வினைவிலங்கினின்றும் நீங்கித் திருவருளைத் தலைப்படுவர்.

நலமிகும் பரிமா ஆக்கள் நாடகக் கணிகை நல்லார்
நிலம்நகர் நாடு மற்றும் நெடுமறை மாவின் மூலத்
தலைவனுக் கினிது நல்கும் தவத்தினோர் கயிலை நண்ணி
அலகில்பல் லூழி வாழ்ந்தங் கரும்பெறல் வீடு சேர்வார். 92

பெருமை பொருந்திய வேதமாவின்கீ ழெழுந்தருளியுள்ள பெருமானுக்கு உத்தமக் குதிரைகள், பசுக்கள், ஆளாகும் கணிகையர், விளைநிலங்கள், சிற்றூர், பேரூர் எனப்பெறும் இப்பொருள்களை நல்கும் தவமுடையார் கயிலையை அடைந்து நெடுங்காலம் வாழ்ந்து பெறலரிய வீட்டினைப் பெறுவர்.

மாயிரு மறைகள் மற்றும் புத்தகத் தெழுதிக் கம்பக், கோயி-
லின் அமைப்போர் வெள்ளிக் குன்றிடை எழுத்தொவ் வொன்றற்,
காயிரங் கற்பம் வாழ்வார் சிவாகமம் அமைக்கும் பேறு, மேயினோர்
எய்தும் பேற்றை யாவரே விளம்ப வல்லார். 93

அரிய பெரிய வேதங்களை ஏட்டினில் எழுதிக் கோத்துத் திருவேகம்பர் திருக்கோயிலில் சேர்ப்போர் கயிலையில் எழுத் தொன்றுக்கு ஆயிரம் கற்பம் அளவில் வாழ்வார். சிவாகமத்தை எழுதித் தருவோர் பெறும்பயனை யாவரே முற்றவும் கூறவல்லவர் ஆவர்? ஒருவரும் இலர்.

வண்டுளர் தனிமா நீழல் வள்ளலுக் கன்பு கூர்ந்து
பண்டுளோர் ஆக்கும் இன்ன அறங்களைப் பாது காப்போர்

ஒண்டிறல் அன்னோர் பேற்றிற் பதின்மடங் குறுவர் மையல்
கொண்டிவை காவா வேந்தர் நிரயமே குளிப்பர் உண்மை. 94

ஏகாம்பரநாதப் பெருமானார்க்கு இவ்வாறு வழங்கிய பொருள்களை அவ்வழியே பயன்படப் பாதுகாக்கும் அறங்காவலர் கொடையாளரினும் பத்து மடங்கு பயனைப் பெறுவர். செல்வச் செருக்கினால் இவற்றைக் குறிக்கொண்டு காவாத அரசர் சத்தியமாக நரகில் மூழ்குவர்.

அனந்தரால் அவற்றொன் றேனுங் கவருநர் ஐயமின்றி
இனம்பயில் கடும்பி னோடுங் கெடுவரால் இனைய நீரால்
தனங்களுங் கிளையுந் துன்றத் தங்குதல் விழையும் வேந்தர்
கனம்பயில் பொழில்சூழ் காஞ்சி உறுதியின் வழாது காத்தல். 95

அறியாமையால் மயங்கிப் பெருமானுடைய பொருள்களுள் ஒன்றையேனும் வஞ்சித்து நுகர்வோர் சிறிதும் ஐயமின்றிக் குடியொடும் கெடுவர். இவ்வியல்பினால் செல்வமும், குடியும் நீடு வாழ விரும்பும் அரசர் மேகங்கள் தங்கும் சோலைகள சூழ்ந்த காஞ்சியிலிருந்து சிறிதும் வழுவாது காத்தல் வேண்டும்.

கச்சியின் வாவி கூவல் கடிபொழில் வகுத்துப் பேணிப்
பொச்சமில் சிவநே சர்க்குப் பொருள்நிலம் வதுவை ஈவோர்
நிச்சலும் அன்ன தானம் நிகழ்த்துவோர் எய்தும் பேறு
பச்சிளங் கொடியின் ஓர்பாற் பகவனே அறியும் மன்னோ. 96

காஞ்சிமாநகரில் குளம், கிணறு, சோலை இவற்றுள் ஒன்றோ பலவோ அமைத்துப் பின்னும் மெய்யன்பர்க்குப் பொருளும், நிலமும், மணப்பெண்ணும் தந்து காப்போரும் நாடோறும் அன்னதானம் செய்வோரும் அடையும் நற்பயனை இமயவல்லியை ஒருபுடை தழுவிய பெருமானாரே முற்றவும் அறிவர்.

சொல்லும்இத் தரும வாய்மைத் தொகுதியுள் யாதொன் றேனும்
வல்லுநர் வல்லா ராக மதிபொதி வேணி யார்க்கு
நல்லர சிருக்கை யாய காஞ்சிமா நகரின் ஓர்நாள்
அல்லதோர் கணமே யானும் அமர்ந்திடிற் பிறப்பு நீப்பார். 97

கூறப்பெறும் இத் தருமங்களுள் ஒன்றேனும் செய்ய வல்லவராக அன்றி வலியிலராக ஆயினும் பிறையை அணிந்த பெருமானார்க்கு விளங்கி வீற்றிருத்தற் கிடனாகிய காஞ்சியில் ஓர் நாளாயினும் இயலாக்கால் ஒருகணமாயினும் விருப்புற்றுத் தங்கிற் பிறப்பொழிவார்.

கண்டிகை நீறு தாங்கிக் காலையும் மாலைப் போதும்
அண்டர்கோன் அடிகள் போற்றி அடியவர் பூசை யாற்றித்
தொண்டினல் அங்கண் வைகுந் தூயவர் தமக்கே கம்பத்
தொண்டொடி பாகன் எங்கோன் கருணைகூர்ந் துதவும் முத்தி. 98

உருத்திராக்க வடமும், விபூதியும் அணிந்து காலை மாலையாகிய இருபொழுதும் தேவர்பெருமானார் திருவடிகளைத் தொழுது மெய் யன்பர் பூசனையைப் புரிந்து திருத்தொண்டொடும் அங்கு வாழும் தூயவர்க்கு ஒள்ளிய தொடியை அணிந்த உமையம்மையார் தலைவனார் அருள்கூர்ந்து முத்தியை வழங்குவர்.

பற்பல பேசி என்னே பருவரு நிரயத் துன்புந்
துற்றபல் யோனி தோறுஞ் சுழன்றுழல் பிறவி நோயும்
உற்றிடும் ஆண்டாண் டெய்தும் உறுதுயர் பலவும் நோக்கி
மற்றிவை யொழிதல் வேட்டோர் காஞ்சியின் வதிதல் வேண்டும்.

பலப்பல கூறிப் பயன் என்னை? நரகத் துன்பமும், செறிந்த பல்வகை யோனிகளினும் புக்குழலும் பிறவித் துன்பமும் அவ்வவ் வுலகங்களின் வாழ்க்கைத் துன்பமும் நோக்கி இவற்றை நீக்க விரும் பியவர் காஞ்சியில் உறைக.

காஞ்சியே கலியில்வசித்தற் கிடமெனல்

கலி விருத்தம்

காமருஞ் சிவிகைகள் காவி யாயினுந்
தோமுறு பிறர்சுமை சுமந்திட் டாயினுஞ்
சாமிஎன் றிழிஞர்தம் பணிசெய் தாயினும்
மாமதிற் காஞ்சியின் வதிதல் வேண்டுமால். 100

அழகிய பல்லக்குக்களைச் சுமந்தாயினும், குற்றமிகும் கீழ்மக்க ளுடைய சுமையைச் சுமந்தாயினும், இழிஞரைத் தலைவரே எனப் போற்றி அவர்தம் ஏவல் செய்தாயினும் கூலிபெற்றுப் பெருமதில் சூழ்ந்த காஞ்சியில் வைகுதலை விரும்புக.

கழுதைமேய்த் தாயினும் மற்றுங் காழ்படும்
இழிதொழில் இயற்றியும் இரந்துண் டாயினும்
ஒழிவறு பத்தியின் உறுதி யாளராய்
வழுவறு காஞ்சியின் வதிதல் வேண்டுமால். 101

கழுதையை மேய்ப்பார் ஒருவரும் இலர் ஆகவும் அதனைச் செய்தாயினும், குற்றமுடைய இழிதொழில் யாதும் செய்தும், இரந்துண்டாயினும் நீங்காத பேரன்பினல் உறுதிப்பாடுடையராய்க் குற்றமற்ற காஞ்சி மாநகரில் வைகுதல் செய்ய வேண்டுவது.

பாதக மிகுதியோர் பதிதர் மூர்க்கர்கள்
போதமில் கயவர்கள் புலைய ராயினும்
மாதர்வண் காஞ்சியின் வதிவ ராயிடின்
கோதறு கலியினின் முத்தி கூடுவார். 102

பெரும் பாவிகள், ஒழுக்கமில்லாதவர், இழிசெயலில் விடாப் பிடியர், அறிவில்லாத கீழ்மக்கள், புலைத்தொழிலர் என்ற இவரே யாயினும் அழகிய வழங்குதலையுடைய காஞ்சியில் வாழ்க்கையராயிடின் குற்றமற்றக் முத்தியை கலியுகத்தில் எய்துவர்.

ஔவியங் கொலைகள வாதி மிக்குடைக்
கௌவைகூர் கொடுந்திறற் கலியு கத்திடைத்
தெய்வதக் காஞ்சியந் தேயத் தன்றிமற்
றெவ்விடத் தெய்தினும் முத்தி இல்லையே. 103

பொறாமையும், கொலையும், களவும் பிறவும் மிக்குள்ள துன்ப மிகும் கொடுமை மிண்டிய கலியுகத்தில் தெய்வத்தன்மை பொருந்திய காஞ்சி புரத்தி லன்றிப் பிற தெய்வத் தலங்களில் எங்குறைந்தாலும் முத்திப்பேறு இல்லையாகும்.

இல்லைவை திகநெறி இல்லை நல்லறம்
இல்லைநால் வருணம்ஆச் சிரமம் இல்லையாம்
இல்லைமா ணாக்கர்கள் இல்லை ஆரியர்
இல்லைநல் லொழுக்கமுங் கலியின் என்பவே. 104

இல்லை வேதவொழுக்கங்கள்; இல்லை சிவபுண்ணியங்கள்; இல்லை நால்வகை வருணங்கள்; பிரமசரியம் முதலாம் ஆச்சிரமங்களும் இல்லை யாகும்; இல்லை உரிய குணங்களமைந்த மாணாக்கர்; உரிய பண்புகள் அமைந்த ஆசிரியர் இல்லை; நல்லொழுக்கமும் கலிகாலத்தில் இல்லை எனக் கால இயல்பை அறிந்தோர் கூறுவர்.

வைதிக சைவநூல் மானக் கோள்இலை
பொய்யில்ஐந் தெழுத்திற்கண் மணியிற் பூதியில்
ஐமுகப் பிரானிடத் தன்பும் இவ்வுகத்
தெய்திடும் இருபிறப் பாளர்க் கில்லையே. 105

வேதசிவாகமங்கம நூல்களிற்பெறும் சிறந்த குறிக்கோளும் இல்லை. மெய்ம்மை அமைந்த ஐந்தெழுத்தும் உருத்திராக்கமும் திருநீறும் ஆகிய சிவசாதனங்களிடத்தும் சிவபிரானிடத்தும் அன்புதானும் இந்தக்கலியுகத்தில் இருபிறப்பாளர் எனப்படும் பிராமணர்கட்குச் சிறிதும் இல்லை.

98

தாபதப் பிருகுமெய்த் ததீசி கௌதமன்
சாபமன் றியுங்கலி தோடத் தான்மிகத்
தேய்பொருட் பாஞ்சராத் திரம்ப வுத்தமாம்
பாபநூல் உறுதியே பனவர்க் குண்டரோ. 106

மெய்த் தவமுடைய பிருகுமுனிவரும் ததீசி முனிவரும், கௌதம முனிவரும் இட்ட சாபமே அன்றியும் கலியுகத்தின் தோஷத்தானும் மிகத் தேய்ந்த பொருள்களைக் கூறும் பாஞ்சராத்திரமும், மாயா வாதமும் ஆகும் பாப நூல்களைப் பிரமாணமாக் கோடலே பார்ப் பனர்க்குத் தோன்றும்,

யாதுகொல் கலியதன் இயல்பும் அங்கதற்
கேதமும் அதன்மிறை காஞ்சிக் கின்மையும்
ஓதுதி விரித்தெமக் கெனஉ ரைத்தலுஞ்
சூதமா முனிமுனி வரர்க்குச் சொல்லினன். 107

கலி என்பது யாது? அதன் குணவிசேடம் யாது? அதன் துன்ப விளைவும், அதன் கொடிய ஆட்சியும் காஞ்சித்தலத்தில் அக்கலியின் கொடுமை தலையெடாமையும் விரித் தெமக் குரைத்தருள வேண்டும் என வினவிய முனிவரர்க்குச் சூதபுராணிகர் விடைகூறத் தொடங்கினர்,

யுகங்கள் வரம்பெறல்

கலிநிலைத் துறை

சகமெ லாம்மலை மாதொடுந் தன்னகத் தொடுக்கிப்
பகல்இ ராஉள திலதெனும் பகுப்பில்அக் காலைப்
புகழ்ப டைத்ததான் ஒருவனே வைகிமுன் போல
அகில லோகமும் படைத்திடக் கருணைசெய் தருளி. 108

எல்லா வுலகங்களையும் உமையம்மையா ரொடும் தன்னுள் ஒடுக்கிப் பகற்போதும் இராப்போதும் உளதென்றும் இலதென்றும் பகுத்துக் கூறவொண்ணாத அச்சங்கார காலத்தில் என்று முள்ள செம்பொருள் எனப்பெறும் புகழ்படைத்த பிரானாரே தனித்து வைகி முன்போல அகில உலகங்களையும் தோற்றுவிக்கத் திருவுள்ளங்கொண்டு.

அறிவும் இச்சையும் செய்கையும் அடைவுறத் தோற்றி
வெறிம லர்த்தவி சிருக்கைவே தியனைமுன் படைத்து
மறைகள் ஈந்துபின் மாயனை உம்பரை உலகை
முறையின் ஈன்றளித் தருளினன் முக்கண்எம் பெருமான்.

ஞானசத்தி இச்சாசத்தி கிரியாசத்தி என்னும் முச்சத்திகளை முறையே தோற்றுவித்து நறுமணங் கமழும் தாமரை மலரி லுறையும் பிரமனை முன்னர்ப் படைத்து வேதங்களை அவனுக்குத் தந்து பின்னர்த்

திருமாலையும் விண்ணவரையும் உலகையும் முறையே படைத்தருளினர் முக்கண் முதல்வர்.

மன்னு நான்மறை வேதியர் மன்னவர் வணிகர்
பின்னு ளோருடன் வீடறம் பெரும்பொருள் காமம்
என்னு நான்கினை இசைவுறத் தோற்றிஇந் நான்கிற்
பன்னு சீர்உகப் பெயரிய நான்கையும் படைத்தான். 110

நிலைபெறும் நான்கு வேதங்களை ஓதுகின்ற வேதியர், அரசர், வணிகர், நான்காமவருடன் மேலும் வீடு, அறம், பொருள், இன்பம் என்னும் நான்கனையும் தோற்றுவித்து இந்நாற்பொருளையும் முறையே சிறப்பாக வழங்கும் கிரேதாயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் என்னும் நான்கு யுகங்களையும் படைத்தனர்.

கனிந்த காதலால் அன்னவை காஞ்சியைக் குறுகி
அனந்த பற்பநா பேச்சரந் தனக்கயல் வடபால்
மனந்த ழைத்திடச் சிவக்குறி நிறுவிநாண் மலர்கள்
புனைந்து போற்றிநின் றருந்தவம் ஆற்றிடும் பொழுது. 111

அந் நான்கு யுகங்களும் காஞ்சியை அணுகி அனந்தபற்பநாபே சத்திற்கடுத்த வடபுறத்தில் முதிர்ந்தெழுந்த அன்பொடும் உள்ளந் தழைப்பச் சிவலிங்கம் தாபித்து அன்றலர்ந்த மலர்களைச் சாத்திப் போற்றி இருந்து செயற்கரிய தவத்தைச் செய்யும்பொழுது.

கம்ப நாயகர் விடைமிசைக் காட்சிதந் தருளி
இம்பர் வேட்டது விளம்புமின் தருதும்என் றருள
வம்பு லாமலர் தூய்த்தொழு திறைஞ்சிவாழ்த் தெடுத்துத்
தம்பி ரான்எதிர் உகங்கள்மற் றின்னது சாற்றும். 112

திருவேகம்பர் விடைமிசை எழுந்தருளித் திருக்காட்சி தந்து ‘இந்நிலையில் விரும்பிய பொருளைக் கூறுமின் தருவேம்’ என்றருள்செய்ய, மணங்கமழும் மலர்களைத் திருவடியில் தூவித் தொழுது வாழ்த்தி உயிர்களுக்குத் தலைவனார் முன்பு யுகங்கள் கீழ் வருவனவற்றைக் கூறும்.

நரகும் வானமும் நல்கிடும் பனிவரைத் தென்பாற்
கரும பூமியை யாம்பகுத் தாள்கருத் துடையேம்
பெரும நீபகுத் தெங்களுக் கருளெனப் பேசித்
திருவ டித்துணை பழிச்சலுஞ் சேவுடைக் கொடியோன். 113

‘பெருமானே! நரகையும் சுவர்க்கத்தையும், முத்தியையும் வழங்குதற்கிடனாகிய இமயமலைக்குத் தென்பாலுள்ள கருமபூமியை யாங்கள் பிரித்து ஆளும் அவாவுடையோம். நீ பிரித்து எங்களுக்கு அருள் செய்யெனக் குறையிரந்து துதிசெய்த அளவே விடைக்கொடியை உடைய பெருமானார்,

அறுசீரடி யாசிரிய விருத்தம்

கருமநிகழ் பாரதமாம் வருடமிசைக் காலப்பே ரிறைமை நும்பால், இருவினேம் ஆண்டளவை ஒன்ருெழிந்த பதிஞெருநான் கிலக்க மேலால், இருபதிஞ யிரமுறுக இங்கிவற்றை நால்வர்க்கும் ஏயு மாற்ருல், வருமுறையிற் கூறுபடுத் துதவுதும்என் றருள்செய்து வகுக்க லுற்ருன். 114

கரும பூமியாகிய பாரத வருடத்தின் காலப் பெயர்பெற்ற தலைமைப் பாட்டினை நும்மிடத்து வைத்தோம். அக்கால அளவை நாற்பத்து மூன்று லட்சத்து இருபதிஞுயிரம் வருடமாகுக. இவற்றை நீவிர் நால்வீர்க்கும் பொருந்து முறையால் கூறுசெய்து உதவுவோம் என்றருளி வகுக்க லுற்றனர்.

அருள்பயக்கும் வீடுதவுங் கான்முளையாங் கிருதயுக மூத்தோய் ஆதி, தெருள்பயக்கும் அறம்பயக்குந் திரேதாநீ இளையோய்காண் செப்புங் காலைப், பொருள்பயக்குந் துவாபரநீ இவர்க்கிளையாய் பொலிவுபெறு காமம் ஈன்ற, மருள்பயக்குங் கலியுகநீ மூவருக்கும் இளையோயாய் வயங்கு வாயால். 115

அருளை வழங்கும் வீட்டினைக் கொடுக்கும் சற்புத்திரனும் கிருத யுகமே! நீ மூத்தோன் ஆவாய். தெளிவுணர்வை நல்கும் அறத்தைங் கொடுக்கும் திரேதாயுகமே! நீ முன்னவனுக்கு இளைய சகோதரனுவாய். சொல்லுமிடத்துத் பொருளைக் கொடுக்கும் துவாபரயுகமே நீ திரேதா விற்கு இளையை ஆவாய், விளக்கம் மிகும் காமம் பயக்கும் மயக்கத்தைப் பயக்கும் கலியுகமே! நீ மூவர்க்கும் இளையோய் ஆகி விளங்குவாய் ஆதி.

வேதியனே கிருதயுகம் வேல்வேந்தன் திரேதாமெய் வணிகன் ருனே, ஓதுதுவா பரம்ஏனேன் கலியாகும் இம்முறையான் உமக்கு வைத்த, ஏதமில்இந் நாற்பத்து மூன்றிலக்கத் திருபதிஞ யிரமாம் ஆண்டும், பேதமுறும் ஈரைந்து கூருகப் பகுத்தந்தப் பிரிவின் மன்னே. 116

கிருதயுகம் முதலாம் நீவிர் நால்வீரும் பிராமணம் முதலாம் நால்வகை வருணத்திற்கும் உரிமை உடையீராவீர் ஆகுக. நாற்பத்து மூன்று இலக்கத்து இருபதிஞுயிரம் வருடமும் பத்துக்கூருய்ப் பகுக்கப் பெற்று அப்பகுப்பில்,

கிருதமோர் நாற்கூறு முக்கூறு திரேதாவுங் கிளந்து கூறும்
இருகூறு துவாபரமும் ஒருகூறு கலியுகமும் எய்து வீரால் [கட்கு
பெருவாய்மை மறையாக நாற்குலத்து மனைவியர்பாற் பெறுஞ்சேய்
வருகூறும் இவ்வாறே நான்குமூன் றிரண்டொன்று வழக்கமாமால்

கிருதயுகம் நாற்கூறுகொண்டு பதினேழு லட்சத்து இருபத்தெட்டாயிரம் ஆண்டுகள் ஆட்சிசெய்க. திரேத யுகம் முக்கூறுகொண்டு பன்னிரண்டு லட்சத்துத் தொண்ணூற்றுறாயிரம் வருடங்கள் ஆணையைச் செலுத்துக. துவாபரயுகம் இருகூறுகொண்டு எட்டு லட்சத்து அறுபத்து நான்காயிரம் வருடம் அரசாள்க. கலியுகம் ஒரு கூறுகொண்டு நான்கு லட்சத்து முப்பத்திரண்டாயிரம் ஆண்டுகள் ஆட்சி செய்க. நாற்குலத்து மனைவியரிடத்தும் முறையே பெறும் மக்கட்கு முறையே பொருளும் நான்கு, மூன்று. இரண் டொன்று என்றிங்ஙனம் தாயபாகம் பெறுவராகுக.

*இவ்விடையேற் றறக்கடவுள் முறையானே எழிற்கிருத முதலீர் நும்மை, எவ்வமறு நாற்பாதம் முப்பாதம் இருபாதம் ஒருபா தத்தாற், கௌவையற நடத்திடநீர் காசினியை நடாத்திடுமின் முதல்மூவிர்க்கும், ஔவியமில் அம்புயத்தோன் இரவிமால் இவர்முறையே இறைவ ராவார்.* 118

இவ் விடையாகிய தருமதேவதையான நான்கு யுகங்களாகிய உங்களை நாற்கால், முக்கால், இருகால், ஒருகால் கொண்டு நடாத்த நீவிர் ஆள்க. முதல் மூவீர்க்கும் மனக்கோட்டம் இல்லாத பிரமன் சூரியன், திருமால் மூவரும் தலைவராகுக.

*தீமையே மிகப்படைத்த கலிஇவரால் காப்பரிய திறத்தால் இந்த,நாமநெடுங் கலிநாளின் மன்பதைகள் புரப்பதற்கு நாமே உள்ளேம், காமருசீர் உகங்காள்மற் றின்னும்ஒரு மொழிகேண்மின் காதல் கூர்ந்தி, யாமினிது மகிழ்ந்துறையுங் காஞ்சியிடை நும்அவத்தை எய்தா தாக.* 119

கொடுமையே மிகக்கொண்ட கலியுகத்தில் இத் தேவரால் காத்தல் அரிதாகலின், அஞ்சத்தக்க இக்கலியில் பல்லுயிர்களையும் யாமே காத்தற்குத் தலைவராவேம். விரும்பத்தக்க யுகங்களே! விரும்பி யாமுறையும் காஞ்சிபுரத்தில் நும் அவத்தைகள் செயற்படாதாகுக.

*வெய்யகொடுங் கலித்தீமை சிறிதும்இவண் உறல்வேண்டா இவ்வா றென்றும், மையகல நம்மாணை வழிஒழுகி உய்மின்என வரங்கள் ஈந்து, கையொளிரும் மழுப்படையோன் அருள்செய்தான் ஆதலின்இக் கலிநாள் முத்தி, எய்தியிடும் விழைவுடையோர் திருக்காஞ்சி இடம்பிரியா திருத்தல் வேண்டும்.* 120

'மிகக் கொடிய கலியின் ஆணை சிறிதும் இத்தலத்திற் செல்லாது, இங்ஙனம் விதித்தபடி பிழைபடாது நம் ஆணை வழியில் ஒழுகிப் பிழைத்துப் போமின்' என்று வரங்களை வழங்கினர் பரசுபாணியர். ஆகலின், கலியுகத்தில் முத்தியை விரும்பினோர் திருக்காஞ்சியில் பிரிவின்றித் தங்குவாராக.

நந்திபிரான் அருள்பெற்றுச் சனற்குமரன் நவின்றபடி
வியாதமேலோன், இந்துவாழ் சடைப்பெருமான் திருவடிகாண்
பதற்கேது இதுவே யென்ன, அந்நிலெனக் குரைசெய்த அரும்-
பொருள்இங் குமக்குரைத்தேன் அறிவின் ஆன்ற, சிந்தையீர்
தெளிமின்எனச் சூதமுனி முனிவரர்க்குத் தெருட்டி னுைல். 121

திருநந்திதேவர் திருவருளைப் பெற்றுச் சனற்குமார முனிவரர் கூறியபடி வியாசர் சிவபெருமான் திருவடியைப் பெறுதற்கு ஏது இவ்வுபாயமே என்று அடியேனுக் கருள அப்பொருளை உங்களுக் குரைத்தேன் என்று சூதமுனிவரர் மற்றைய முனிவரர்க்குத் தெரிவித்தனர்.

சிவபுண்ணியப் படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் 2742.

ஸ்ரீ சிவஞான சுவாமிகள் அருளிச்செய்த காஞ்சிப்புராணம்
முற்றிற்று.



ஏகம் பத்துறை எந்தாய் போற்றி
பாகம் பெண்ணுரு ஆனுய் போற்றி.

சிவஞான மாதவன் சேவடி வாழ்க.



# செய்யுள் அகராதி

## ஏ



## ஐ

—::—



முரச பந்தம்
(284-ஆம் பக்கத்திலுள்ளது)




**உபயநாக பந்தம்**

(287–288-ஆம் பக்கங்களிலுள்ளன).




சுழிகுளம்

(288-ஆம் பக்கத்திலுள்ளது)

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| வீ | யா | வா | மா | மா | வா | யா | வீ |
| யா | வா | யா | ரா | ரா | யா | வா | யா |
| வா | யா | டே | மா | மா | டே | யா | வா |
| மா | ரா | மா | தோ | தோ | மா | ரா | மா |
| மா | ரா | மா | தோ | தோ | மா | ரா | மா |
| வா | யா | டே | மா | மா | டே | யா | வா |
| யா | வா | யா | ரா | ரா | யா | வா | யா |
| வீ | யா | வா | மா | மா | வா | யா | வீ |

சருப்பதோ பத்திரம்

(289-ஆம் பக்கத்திலுள்ளது)

திருச்சிற்றம்பலம்

# திருத்தல விளக்கம்

வலம்புரி விநாயகர்: தேவர்கள் தம் செயல்கள் இடையூறின்றி முற்றுப்பெறவும் அசுரர்தம் செயல்கள் இடையூறடைந்து முற்றுறாதொழியவும் அருளுதற்பொருட்டுத் தமக்கோர் கடவுளை அருளச் சிவபிரானை வேண்டினர். அருள்செய்து அத்திருமால் முதலானோரைப் போக்கி முத்தேவரையும், முச் சத்தியரையும் முறையே ஈன்ற சிவப் பிரணவத்தையும் சத்திப் பிரணவத்தையும் யானை வடிவுடையவாகக் கண்ட அச்சித்திரச் சாலையுள் அம்மை அப்பர் அவ்வடிவு கொண்டு கலந்து விநாயகரை அருளினர்; தலைமைப் பதவியையும் அவர்க்கு நல்கினர். ஓர்கால் விளையாட்டாக விநாயகப் பெருமானார் பாற்கடலை யுண்டுமிழ்ந்தவழி உட்புகுந்து வெளிவந்து வீழ்ந்து மயங்கிக் கிடந்த மால் இழந்த பாஞ்சசன்னியம் என்னும் வலம்புரியை வழங்கி வலம்புரி விநாயகராய் அத்திமலையில் திருமால் விருப்பப்படி எழுந்தருளியிருந்து அருள் புரிந்து வருகின்றனர்.

இவ்வரலாற்றைக் கற்றவர் கேட்டவர், நல்லவரைக் கேட்பித்தவர் இடையூறுகள் தவிர்ந்து மக்கட் பேறு முதலாம் யாவும் பெற்றுப் பின் சிவபோகமும் பெறுவர்.

திருநெறிக்காரைக்காடு: சிவி என்னும் இந்திரன் இருவினை ஒப்பும் மலபரிபாகமும், சத்திநிபாதமும் கைவரப் பெற்றுப் போகங்களை உண்டுமிழ்ந்த சோற்றினும் அருவருத்து வியாழ பகவானின் செவியறிவுறூஉப் பெற்று முன்னர் இந்திரபதவியை வழங்கிய அக்காரைக் காட்டீசரை வணங்கி முத்திசேரும் கணநாதர்தம் தலைவன் ஆயினன். இந்திரன் வழிபட்டமையால் இந்திரபுரம் எனவும் காரைமரங்களின் சூழலால் காரைக்காடெனவும் பெறும் அத்தலம். புதன் வழிபட்டுக் கிரகநிலை பெற்றமையின் புதன்கிழமை இந்திர தீர்த்தத்தில் மூழ்கிக் காரைக்காட்டீசரை வணங்குதல் சிறப்புடையது. காஞ்சியில் திருக்காலிமேடு என வழங்கும் அத்தலம் திருஞான சம்பந்தமூர்த்தி நாயனாரது திருப்பதிகத்தொடும் மேற்கு நோக்கிய திருமுன்புடையதாய்த் திகழும்.

புண்ணியகோடீசர்: திருமால் பிரமனையும் பதினான்கு உலகங்களையும் படைக்க விரும்பித் தனக்குப் பொற்றாமரைப் பொய்கையினின்றும் மலர் பறித்துதவிய கசேந்திரன் என்னும் யானை ஆதிமூலம் என்றலறப் பற்றிய முதலையைச் சக்கரத்தால் பிளந்து

அவ்வியானையைக் காத்து அதன் பூத்தொண்டினைக் கொண்டு சிவபிரானை அருச்சித்து ஆங்குச் செய்யப்படும் புண்ணியம் ஒன்று கோடியாகவும் 'வரதா வரதா' என இறைவனைப் பலமுறை எதிரெழுந்தருள்கையில் போற்றி, வரதராசன் என்னும் திருப்பெயர் தனக்கு உண்டாகவும் வரம் அருளப்பெற்ற திருத்தலம். சின்ன காஞ்சிபுரம் அமுதுபடித் தெருவின் பின்னுள்ளது இது.

சிவாத்தானம்: பிரமன் திருமாலொடும் உலகைப் படைக்கும் ஆற்றலைவேண்டிக் கபிலைப் பெருமானார் ஆணைப்படி புண்ணிய கோடீசத்திற்குக் கிழக்கில் 'தேனம்பாக்கம்' என்னும் இடத்தில் பிரம தீர்த்தம் தொட்டுக் கரையில் சிவலிங்கம் தாபித்துப் போற்றினன். பின்பு சோமயாகம் தொடங்குகையில் தேவர் முனிவர் சூழ்ந்திருக்கும்போது சரசுவதி நீரினும், பின்பு மரங்களினும் சூக்குமவடிவிற் கரந்தனள். மனைவியாகிய சரசுவதியைக் காணாது சாவித்திரி காயத்திரி ஆம் மற்றைய இரு மனைவியரொடும் பிரமன் யாகம் செய்தனன். பிரமனைக் கண்டு வெகுண்ட சரசுவதி நதியுருவாய் யாகத்தை அழிக்க வருகையில், வேள்வித் தலைவராகிய சிவபெருமானார் வேள்வி வடிவினராகிய திருமாலை ஏவ அவர் மூன்றுமுறை கிடந்து தடுத்துக் கடலை நோக்கிச் செலவிட்டனர். சிவபிரானார் தோன்றி, 'திருமாலே, நீ யாம் சொன்ன வண்ணம் செய்தமையின், 'சொன்ன வண்ணம் செய்தவன்' எனவும், இரவிருளில் நதியைக் காணவேண்டி விளக்கொளியாய் நின்றமையின், 'விளக்கொளிப் பெருமாள்' என்னும் பெயர் பெற்று எவ்வரையும் இன்புறுத்துக' எனவும் அருளி மறைந்தனர்.

நதியுருவம் மாறி மீண்டும் மரவடிவில் மறைந்த சரசுவதியை அம்மரத்திற் றண்டுகொண்டு இருத்துவிக்குக்களால் வேறு பிரித்து உருவுகொண்ட அவளுடன் யாகத்தை செய்து முடித்தனன் பிரமன். காட்சி வழங்கிய அம்மை அப்பர் திருவடிகளை வணங்கி இத்தீர்த்தத்தில் மூழ்கினவரும், இவ்விலிங்கத்தை வழிபட்டவரும் முத்தியை அடையவும், தன்னுடைய இருக்கையாகிய அத்தானத்தைச் சிவபிரானுக்கு வழங்கினமையின் சிவாத்தானமென வழங்கவும் வரம் பெற்றனன். மேலும், திருமாலையும் உலகங்களையும் படைக்கும் ஆற்றலையும் பெற்றனன்.

முத்தீசம்: காசிப முனிவர் மனைவியாகிய கத்துரு, சுபருணை தத்தம் அழகைப் பாராட்ட நடுநின்ற கணவர் கத்துரு அழகின் மிக்கவள் என்றமையின், தோற்ற சுபருணை, தங்களுள் ஒட்டிய வாறு சிறைப்பட்டனள். தேவ அமுதம் கொடுப்பின் விடுதலை பெறுவை என்ற கத்துருவின் விருப்பத்தை நிறைவு செய்யச்

சுபருணை காஞ்சியில் முத்தீசரை வணங்கி வரம்பெற்றுக் காசிப முனிவர் அருளால் கருடனை ஈன்று வளர்த்து அவனுக்குக் குறையைக் கூறினள்.

கருடன் தேவலோகம் சென்று இந்திரனைப் புறங்காணச் செய்து அமுதத்தைக் கைப்பற்றி வருங்கால் தடுத்த திருமாலொடு இருபத்தொரு நாள் நிகழ்ந்த கடும்போரில் வெற்றி தோல்வி கண்டிலன்.

திருமால் வியந்து 'வேண்டுவ கேள் தருதும்' என்றனர். கருடன் கேட்டு, 'நினக்கு யாது வேண்டும் அதனை என்பாற் பெறுக' எனத் திருமாலை நோக்கிக் கூறினன். 'எனக்கு வாகனமாம் வரத்தைத் தருக' என்ற திருமாலுக்கு வருந்தியும் சொல் தவறாது 'அவ்வாறாகுக' என்று பின் இசைவு பெற்றுச் சென்று, அமுதத்தைக் கத்துருவிற்குக் கொடுத்துத் தாயைச் சிறைவீடு செய்தனன் கருடன். கருடன் தனது தாய் அருச்சித்த முத்தீசரை வணங்கிக் கத்துருவின் புதல்வர்களாகிய பாம்புகளைக் கொல்லும் வரத்தைப் பெற்றனன். ஏகாலியர் குலத்திற் பிறந்த திருக்குறிப்புத் தொண்ட நாயனாரும் முத்திபெற்றனர். கருடன் வழிபட்ட கருடேசர், முத்தீசர்க்கும் பின்புறம் கோயில் கொண்டுள்ளனர். இக்கோயில் காந்திரோட்டில் உள்ளது.

மணிகண்டேசம்: தேவரும், அசுரரும் பிரமனொடும் சூழ்ந்து திருமாலை வணங்கி இறப்பினை வெல்லும் வழியை அருளவேண்டினர். திருப்பாற் கடலினின்றும் அமுதம் பெற்றுண்டலே உபாயமென மதித்து மந்தரத்தை மத்தாகவும், வாசுகியைக் கயிறாகவும் கொண்டு சுராசுரர் கடைந்தபொழுது அங்கு வந்த வாலி, இயலாத அவரை விலக்கி மலை கடலில் அழுந்தாதபடி திருமால் ஆமையாய்த் தாங்கக் கடைந்தனன். வாசுகி வலிபொறாது வாய்நுரையைக் கக்கிப் பெருமூச்செறிந்தனன். அக்கலப்பினால் ஆலாலம் என்னும் கொடியவிட மெழுந்து உலகைக் கனற்றுவதாயிற்று.

வாலி ஓட்டெடுப்பப் பொன்னிறம் போய்ப் புகைநிறமுற்ற பிரமனும், வெண்ணிற மிழந்து கரிய நிறமுற்ற மாலும் நிறமாறிய பிறர் பிறரும் கயிலையைச் சரணடைந்தனர். 'அஞ்சலீர்' என்றருள் செய்த சிவபிரானார் திருவுளக் குறிப்பின்படிவிடம் யாண்டும் பரவிச் செறிந்து நின்றநிலை நீங்கி நீட்டிய மலர்க் கரத்தில் மலரில் வண்டுபோலத் தங்கித் திருக் கண்ணைக்குற்றுச் சிற்றுருவாய் மெய்யன்பர் திருமனம் இறைவன் திருவடிக்கீழ் ஒடுங்குமாறுபோல அடங்கியது. திருவடித் தொண்டராகிய தமிழ் முனிவர் திருக்கரத்தில் உழுந்தளவாகக் கடல்நீர் சுருங்குமேல் இந்நிகழ்ச்சி புகழ்ந்துரைக்கும் பொருளதோ? இறைவன் சங்கற்பப்படி அம்மையார் திருக்கண்களால் ஆலமுண்டு அமுதம்

பொழிந்த அந்தவிடத்தைப் பிறரால் நிறுத்தலாகாத கண்டத்தில் நிறுத்தித் திருநீலகண்டர் ஆயினர். அருளைப்பெற்று மீண்டு எழுந்த விடத்தை இறைவனுக்காக்கிய பிழைதீரக் காஞ்சியில் சிவலிங்கம் தாபித்துத் திருமால் முதலானோர் தொழுது நீலமணியை ஒக்கும் கண்டம் உபகரித்த செய்ந்நன்றியை நினைந்து மணிகண்டேசர் என வழங்கினர். பின்பு கடலைக் கடைந்து அருளாற்பெற்ற அமுதத்தை அசுரரை வஞ்சித்துத் தேவர் உண்டு நோய் நீங்கி இறவாமையை எய்தினர். அமுதம் விடமும் போல அனைத்திலும் விரவி நிற்கும் இன்பம் தலைதூக்கித் துன்பம் தொலைய மணிகண்டேசர் வழிபடற் பாலர் ஆவர். இத்தலம் திருக்கச்சிநம்பி தெருவில் மணிகண்டேசர் ஆலயம் எனச் சிறப்புற்று விளங்கும்.

கோயிலின் உள்ளே மேற்புறத்தில், வாசுகி தன்னால் விடமெழுந்த குற்றம் தீரச் சிவலிங்கம் நிறுவிஅனந்த தீர்த்தம் தொட்டுப் பண(பணம்-படம்)த்தில் உள்ள இரத்தின மணிகளால் பூசித்து உமையம்மை மணாளனார் திருமேனியில் அணிகலனாகும் பேறு பெற்றனன். மணிகண்டேசரை வணங்கி முத்தியை அடைந்தவர் அளப்பிலர்.

சத்ததானம் (ஏழிடம்):- முன்னாளில் அத்திரி, குச்சன், வசிட்டன் பிருகு, கௌதமர், காசிபர், அங்கிரா என்னும் முனிவர் எழுவரும் இமய மலையில் தவத்தால் பிரமனைக் கண்டு, பேரறிவாளர் பெறுதற் குரிய முத்தியை அறிவாற் குறைந்தவரும் பெறுதற் குபாயம் யாதென வினாவினர்.

பிரமன் அதற்கு விடைபகர்வான்: தருமம் ஒன்றே இறைவன் திருவுள்ளத்தை மகிழ்வித்து முத்தியை நல்குவிக்கும். அஃது இருவகைப் படும். ஒன்று சிவதருமம் எனவும் மற்றொன்று பசு தருமம் எனவும் படும். இவை முறையே சிவபுண்ணியம் பசு புண்ணியம் எனவும் கூறப் பெறும். உலக நல்வினையாகிய வேள்வி முதலியன தம்தம் பயன்களைக் கொடுத்து அழிந்துபோம். உணவு உண்ட அளவில் பசி தீர்ந்து பின் பசி உண்டாம். சிவ புண்ணியமோ பயனையும் கொடுக்கும் பின் மேன் மேற் செலவிற் கேதுவாய் அழியாது நின்று மெய்யறிவையும் விளைத்து முத்தியை நல்கும். எங்ஙனமெனின், அமிழ்தம் பிற உணவு போலன்றி உண்ட வழிப் பசி தீர்தலும் அல்லாமல் பின் பசி தோன்றாதவாறும் நிற்கும்.

அத்தகு சிவபுண்ணியம் ஆவன சிவலிங்கத்தைத் தாபித்துப் பூசித்தலும், சிவனடியாரை உண்டி முதலியவற்றால் உபசரித்தலும். இச் சிவபுண்ணியங்கள் இடவிசேடத்தால் சிவதலங்களிற் செய்வுழி ஏனைய இடத்தினும் பயன் கோடிஆக மிகும். அத்தலங்களினும் மிக்க காஞ்சியிற் செய்தால் பயன் எண்ணிலி கோடி ஆகும் எனத் தெருட்டினன்.

முனிவரர் நான்முகன் மொழிவழியே காஞ்சியை நண்ணிச் சிவ கங்கையில் முழுகித் திருவேகம்பரைத் தொழுது மஞ்சள் நதிக்கரையில்

எழுவரும் தம்தம் பெயரால் சிவலிங்கம் நிறுவிப் போற்றுகையில் பெருமான் காட்சி தந்து 'வைவச்சுத மனுவந்தரத்தில் நீவிர் ஏழ்முனி வரராமின்; முடிவில் முத்தியையும் வழங்குவோம்' ஏழிடங்களில் வணங்குவோர் வினைப் பிணிப்பின் நீங்கி இம்மை மறுமை இன்புடன் வீட்டினைத் தலைப்படுவர் என அருளி மறைந்தனர்.

இத்தலங்கள் சின்ன காஞ்சிபுரம் கண்ணப்பன் தெருப் புளியந் தோப்பிலுள்ளன.

பராசரேசம்: வசிட்டர் மாட்டுத் தீராப் பகைகொண்ட விசுவா மித்திரர், வசிட்டர் சாபமேற்று அரக்கனுய சுதாசன் என்னும் அரசனைத் தூண்ட அவன் வசிட்டர் புதல்வர்களாகிய சத்தி முதலாம் நூற்றுவரை யும் விழுங்கினன். கேள்வியுற்ற வசிட்டர் மனைவி அருந்ததியோடும் வருந்திப் புத்திர சோகத்தால் உயிரைவிடத் துணிந்து மலைமேல் ஏறி வீழ்ந்தனர். பூமிதேவி தாங்கிப் பிழைப்பித்தனள்.

வசிட்டர் மூத்த மகனுகிய சத்தியின் மனைவி கருப்பம் சிதையு மாறு வயிற்றில் அடித்துக் கொண்டனள். 'சந்ததியை அழிக்காதே' என்னும் வசிட்டர் ஆணைக் கஞ்சிய வழிக் கருவில் இருக்கும் குழவியின் அழுகுரல் கேட்டது.

அப்பொழுது திருமால் எதிரெழுந்தருளி 'அறிவான் மிக்கு என்னை ஒப்பவனுய்ச் சிவபிரானிடத்து மெய்யன்புடையனுய்க் குலந் தழைக்க மகனுக்கு மகன் இப்பொழுதே தோன்றுவன்' என்றருளி மறைந்தனர்.

சத்தி மனைவியாகிய அதிர்சந்தி மகப்பெற்றுச் சடங்குகளுடன் இளம் பிறைபோல் வளர வளர்க்கும் நாளில் அன்னை மடியிலிருந்த குழவியாகிய பராசரர் தன் தாயை நோக்கி 'மங்கல மின்றி இருப்ப தென்னை'? என் தந்தை எங்கே என வினவினர். வசிட்டர் முதலானோர் வருந்தி யழுமாறு 'தந்தை முதலானோரை அரக்கன் விழுங்கினன்' என்றனள் தாய். 'உலகை விழுங்குவேன்' என்ற பெயரனை நோக்கி 'உலகம் என் செய்யும்? அரக்கர் குலத்தை வேரொடும் களையச் சிவ பூசனையைத் தனக்கு ஒத்ததும் உயர்ந்ததும் இல்லாத காஞ்சியில் ஓர் நாள் செய்யினும் திருவருள் வாய்க்கப் பெறும்' என்னும் வசிட்டர் மொழியைச் சிரமேற் கொண்டு காஞ்சியை நண்ணிக் கம்பா நதியில் மூழ்கித் திருவேகம்பரை வணங்கி மஞ்சள் நதிக்கரையில் மணிகண்டே சத்திற்கு வடமேற்கில் 'பராசரேசர்' எனச் சிவலிங்கம் நிறீஇப் போற்றி வழிபட்டனர் பராசரர். காட்சி தந்த சிவபிரானுர் 'மைந்தனே நின் பூசனையால் எம்மை அடைந்து உன்னைக் காணப் போந்த நின் தந்தை யைக் காண்க. ஓர் யாகம் செய்து அதில் அசுரர்களை நீறு செய்க. இந்தச் சிவலிங்கத்தில் என்றும் வாழ்வோம்' என்றருளி மறைந்தனர்.

அங்ஙனமே வேள்வியால் அரக்கர் பலரை அழிவு செய்து முனிவர் உரையால் முனிவு தீர்ந்து வாழ்ந்தனர் பராசரர். இத்தலம் செட்டி கோயில் என விளக்கம் பெற்றுக் காந்திரோடில் உள்ளது.

ஆதீபிதேசம் (தீபிதம்-விளக்கொளி): சிவாத்தானத்தில் பிரமன் செய்த வேள்வியை அழிக்க வந்த நதியைத் தடைசெய்ய வந்த திருமால் நள்ளிரவில் விளக்கொளியாய் நின்று அப்பொருள் பயக்கும் 'ஆதீபிதேசர்' எனச் சிவலிங்கம் நிறுவிப் போற்றி அத்தலத்திற்கு எதிரில் விளக்கொளிப் பெருமாள் என்னும் திருப்பெயரைச் சிவபிரானுர் வழங்க வீற்றிருக்கின்றனர். விளக்கொளிப் பெருமாள் வழிபட்ட விளக்கொளியீசரைப் போற்றிஞேர் வேண்டிய வரங்களைப் பெற்று முத்தியையும் பெறுவர். இத்தலம் ஆலடிப் பிள்ளையார் கோயில் தெரு கீரைமண்டபத்திற் கருகில் விளக்கொளிப் பெருமாளுக் கெதிரில் உள்ளது.

சார்ந்தாசயம் (சார்ந்தார்க்குப் பற்றுக்கோடு): பராசரமுனிவர் தவத்தால் தோன்றி வேதபுராணங்களைக் கரைகண்டு வகுத்தமையால் வேதவியாசர் எனப் போற்றப்படும் முனிவரர் கலியுகம் வருதலைக் கண்டஞ்சிக் காசியை அடைந்து நோன்புகள் புரிந்து வந்தனர்.

முனிவரர்கள் அவரை அடுத்து நூல்களின் மெய்ப்பொருளைத் தெள்ளிதின் விளக்கவேண்டினர். வியாசரும் தனித்தனி விரித்துரைத் தனர். கேட்டு மகிழ்ந்த முனிவரர் தொகுத்து இது பொருள் என ஒரே வார்த்தையில் விளக்கவேண்டினர். முன்தோற்றிய பொருளுக்கு மாறுபட 'நாராயணனே பரப்பிரமம்' ஆகும். இது சத்தியம் சத்தியம்!' என்று கையெடுத்துச் சூள் கூறிய வியாசர் சொற்கேட்டு முனிவரர் அஞ்சினர்.

முனிவரரொடு சபதம் செய்த வியாசர் விசுவநாதர்முன் இரு கைகளையும் எடுத்து நிறுத்தி முன்கூறியவாறே கூறினர். எப்பெயரும் தம் பெயரே ஆகலின் விசுவநாதப் பெருமான் வெகுண்டிலர். நந்திபெருமான் சர்பத்தால் வியாசர் கைகள் மடக்க முடியாமல் பெருமான் புகழை நிலைநிறுத்தும் வெற்றித் தூண்கள்போல் நின்றன. திருமாலைத் துதித் தனர் முனிவர்.

திருமால் எதிர்தோன்றி, 'என்ன காரியஞ் செய்தனை! நீயும் கெட்டனை! என்னையும் கெடுத்தனையே! மற்றியாவரையும் விலக்கிச் சிவ பெருமான் ஒருவரே தியானிக்கற்பாலர்' என அதர்வசிகை எடுத் தோதும் நிலையைக் கைவிட்டனை. அவர் அருளைப்பெற்ற முறையால் ஒரோவழி உபசரித்துக் கூறும் வாக்கியத்தைக் கொண்டு யாண்டும் எடுத்தோதும் உண்மை மொழியை மறந்தனையே பேதாய்! பலவாறு தெருட்டத் தெருண்ட வியாசர் 'சிவனை யாவரே அருச்சனை செய்யாத வர் சிவன் மற்றெவரை யாயினும் அருச்சனை இயற்றிய துண்டோ' என்று கூறிச் சிவபெருமானைப் பல்வகையாகப் போற்றினர்.

உமையம்மையோடும் விடைமேல் தோன்றிய சிவபிரானுர், 'வியாசனே, நீ போற்றிய திருமாலும் பிரமனும் இரண்டு திருவடிகளை யும் தாங்கி வருதலைக் காண். மேலும், கற்பங்கள் தோறும் கணக்

கில்லாத திருமால் பிரமர்கள் இறக்க அவர்கள் எலும்புகளை மாலையாக அணிந்து அவர்கள் தம் அநித்தியத் தன்மையையும் நம் நித்தியத் தன்மையையும் உன்போன்றவர்க்குக் கண்கூடாகக் காட்டி நிற்கின்றேம்! என அருளினர். பின்னும், வேதமுடிபைக் கண்டுணர்ந்த தலைவர்தம் தலைவனுகிய நீ எம்மைப் பூசித்து முத்தியை அடைவாயாக' என அருளித் திருவுருக் கரந்தனர்.

வியாசர் நெடிது சிந்தித்து இம்மயக்கம் 'எனக்கு வந்ததற்குக் காரணம் தவம் செய்வோர்க்குத் தேவர்கள் இடையூறுய் நின்று அறிவை மயக்குவர் என்ப. அது என்னளவில் உண்மையாயிற்று' எனத் துணிந்து காஞ்சியை அடைந்தனர். சிவகங்கையில் மூழ்கித் திருவேகம்பரைப் பணிந்து மணிகண்டேசத்திற்குத் தென்மேற்கில் சார்ந்தாசயப் பெருமானைத் தாபித்துப் பூசித்தனர். பெருமான் வெளி நின்று வேண்டுவ கேளென, அச்சிவலிங்கத்தில் என்றும் நீங்காதிருந்து யாவர்க்கும் அருளும் தனக்குத் திருவடியில் இடையரு அன்பும் வழங்கியருளவேண்டுமென்றனர். பெருமான் அவர்க்கு அவற்றை அருள்செய்து திருவுருவிற் கரந்தனர்.

சித்தீசம்:- இமய மன்னன் மகளார், கம்பை நதிக்கரையில் தவஞ்செய் காலத்தில் மஞ்சட் காப்பினைத் திருமேனியில் திமிர்ந்து முழுகிய வெள்ளப் பெருக்கு நறுமணம் பரந்து பாய்ந்து மஞ்சள்நீர் நதி என்னும் பெயரொடு அயலெலாம் இடங்கொண்டு செல்லும் அளவே கங்கை சடைப் பிரானுர் அருளடங்காது மீதுவழியும் மகிழ்ச்சியொடும் சிவலிங்க வடிவாய் அவ்விடத்தே முளைத்தனர்.

அக்காரணத்தால் அவருக்கு 'மஞ்சள்நீர்க் கூத்தர்' என்னும் திருப்பெயர் வழங்கினர். நடம்புரியும் திருவடிகளைச் சித்தர் மிகப்பலர் அணைந்து போற்றிப் பெருஞ் சித்திகளைப் பெறுதலினுல் பெருமை நிரம்பிய சித்தீசர் என்னும் திருப்பெயரானும் உலகரால் போற்றப் பெறுவர். அவ்வண்ணலார் திருமுன்பில் கிணறு ஒன்றுள்ளது. அத்தீர்த்தத்தில் ஞாயிறு, சனிக்கிழமைகளில் முழுகிப் பெருமானை வணங்கும் வெற்றி வாழ்க்கையர்க்குப் பிறவி நோய் ஓட்டெடுக்கும். இத்தீர்த்தம் சித்த தீர்த்தம் எனப்பெறும். இத்தலம் குயவர் வீதியில் மஞ்சள் நீர்க்கரைக் கண் உள்ளது.

இட்ட சித்திச்சரம்: பிருகு முனிவர் மரபின் வந்த ததீசி முனிவர் குபன் என்னும் அரசனெடு நட்புப் பூண்டு அளவளாவு நாளில் அந்தணர் சிறப்புடையரோ? அரசர் சிறப்புடையரோ என விளையாட்டு விருப்பினராய் அசதியாடினர். அந்தணரைப் பாராட்டினர் முனிவர். அரசரைப் போற்றினர் அரசர். சொற்போர் முதிர்ந்து மற்போராயது. முனிவர் வெகுண்டு அரசனைத் தாக்க, அரசன் சினந்து வச்சிராயுதத்தால் முனிவரை இருகூறுபட வெட்டி வீழ்த்தினுன். முனிவர் சுக்கிரனை மனங்கொண்டு தரையில் உருண்டனர்.

சுக்கிரன் உணர்ந்து போந்து உடலைப் பிணைத்துத் ததீசியை உயிர்ப்பித்தனன். உயிர்பெற்ற ததீசியை நோக்கி 'இறைவனை வழி படின் எங்கும் எவரானும் அழிவுறாத யாக்கையைப் பெறல் கூடும். வழிபாட்டிற்குரிய சிறந்த இடம் காஞ்சியே ஆகும். அங்கு, இட்ட சித்தீசப் பெருமானை வணங்கியே மிருதசஞ்சீவினி என்னும் இறந் தோரை உயிர்பெறச் செய்யும் மந்திரத்தைப் பெற்றேன். அந்த இட்ட சித்தீசப் பெருமானுக்குத் தென்பால் இட்டசித்தித் தீர்த்தம் உள்ளது. காணினும், கேட்பினும், கருதினும், தீண்டினும், மூழ்கினும் நாற் பொருளையும் பயக்கும் அத்தீர்த்தத்தின் சிறப்பைக் கூறவும் கூடுமோ? அத்தீர்த்தத்தால் பெறாத பேறொன்றில்லை. முதல் யுகத்தில் பிரமன் மனைவியொடும் மூழ்கிச் சத்தியலோக பதவியையும் படைத்தற் றொழிலையும் பெற்றனன். இரண்டாம் யுகத்தில் சூரியன் மூழ்கி வேத வடிவமாம் உடலையும் ஆயிரங் கிரணங்களையும் பெற்றனன். துவாபரத் தில் திருமால் இலக்குமியொடும் முழுகிக் காத்தற் றொழிலையும் வைகுந்த வாழ்க்கையையும் பெற்றார்.

கலியுகத்தில் உமையம்மையார் முழுகி இறைவனது திருமேனி யில் இடப்பாதியிற் கலந்தனர். சூரியன், பகன் என்பவர் முழுகித் தக்கன் வேள்வியில் இழந்த பற்களையும் கண்களையும் முறையே பெற் றனர். குபேரன் அம்மையை நோக்கி இழந்த கண்ணையும் இறைவ னுக்கு நண்பன் ஆதலையும் அத்தீர்த்தத்தால் எய்தினன். துச்சருமேளன் ஊர்வசியையும் கண்ணன் புதல்வன் சாம்பன் குட்டநோய் நீக்கமும் பெற்றனர். நளனும் பஞ்ச பாண்டவரும் முழுகிப் பகையை வென்று இழந்த நாட்டைக் கைப்பற்றினர். இத்தீர்த்தத்தில் வடக்கு, கிழக்கு, தெற்கு, மேற்கு என்னும் நாற்றிசையினும் முறையே அறம், பொருள், இன்பம் வீடென்னும் நாற்பொருளையும் பயக்கும் நான்கு தீர்த்தங்கள் அடங்கியுள்ளன. எல்லா மாதங்களிலும் முழுகுதல் சிறப்புடைத்தா யினும் வைகாசி, மாசி, கார்த்திகை, ஆடி மாதங்களில் மூழ்குதல் முறையே ஒன்றற்கொன் றேற்றமுடையவாகும். கார்த்திகை மாதத்து ஞாயிறு சாலச் சிறப்புடைத்தாகும்.

முழுகுதல், மந்திரம் கணித்தல் இவைகளை அங்குச் செயின் ஒன்று பலவாகும். இவ்வாறு விரித்துக் கூறிய சுக்கிரன் ததீசிக்கு மிருத சஞ்சீவினி மந்திரத்தையும் செவி அறிவுறுத்தனர்.

பின்பு ததீசி முனிவர் காஞ்சியை அடைந்து இட்டசித்தித் தீர்த் தத்தில் முழுகி இட்டசித்தீசரைப் போற்றப் பெருமான் எழுந்தருளி வந்து யாண்டுங் கொலையுறாதவச்சிரயாக்கையைத்தந்தருளப்பெற்றனர். பின்பு, முனிவர் அரசவையைச் சார்ந்து குபன் என்னும் அரசனைத் தலை மேல் உதைத்தனர்; அரசனுக்கு உதவவந்த திருமாலைப் புறங்கண்டனர். இத்தலமும் தீர்த்தமும் கச்சபேசர் திருக்கோயிலில் உள்ளன.

சிவபெருமான் ஓர் கற்பகாலத்தில் ஐம்பெரும் பூதங்களையும் அவற்றிடைத் திருமால் முதலாம் தேவர் பிறர் பிறவாம் சராசரங்களை

யும் அழித்து, அவ்விரவில் இறைவியோடு தனித்திருந்து திருக்கூத்தி யற்றி, மீண்டும் உலகைப் படைக்கும் சங்கற்பராயினர்.

உலகமெல்லாம் அழிந்தும் அழியாது தன்காப்பில் விளங்கும் காஞ்சியில் சோதிலிங்கமாக வெளிநின்று தமது சத்தியால் முன்போல விளங்க உலகங்களையும் உலகிடைப் பொருள்களையும் சிருட்டித்தனர். அச்சோதிலிங்கத்தைப் பிரமன் சரசுவதியுடன் வணங்கிப் படைப்புத் தொழிலிற் றலைமை பெற்றான்.

முன்னொரு கற்பத்திற் றேவர்கள் பாற்கடலைக் கடைவுழித் திருமால் ஆமையாய் மந்தர மலையைத் தாங்கி அமுதம் கண்டு உபகரித் தமையால் செருக்குக் கொண்டு உலகம் அழியுமாறு கடலைக் கலக்குகையில் உயிர்களின் அச்சம் கெடவும், திருமால் அகந்தை நீங்கி அறிவுறவும் அவ்வாமையை அழித்து அதன் ஓட்டினை வெண்டலை மாலையிடையே கோத்தணிந்தனர்.

திருமால் குற்றம் நீங்கிச் சோதிலிங்கத்தை வழிபாடு செய்து மெய்யன்பும், வைகுந்த பதவியும் அவர் அருள்செய்யப் பெற்றனர். அச்சிவலிங்கத்திற்குக் 'கச்சபேசன்' என்னும் திருப்பெயர் விளங்கவும், என்றும் அதன்கண் விளங்கவும், காசியினும் அவ்விடம் சிறப்புறவும் வரம் வேண்டிய திருமாலுக்குச் சிவபெருமான் அவற்றை வழங்கினர்.

கச்சபேசப் பெருமானை எண்ணினோரும் சென்று கண்டவரும் இவ்வுலகத்தில் துன்பம் நீங்கி இன்பம் பெற்று முடிவில் முத்தியையும் பெறுவர்.

அக்கச்சபேசப் பெருமானைத் துர்க்கை,ஐயனார்,சூரியன் வயிரவர், விநாயகர் இவர்களும் வழிபட்டு அத்திருநகரைக் காவல் செய்வா ராயினர்.

கச்சபேசருக்குத் தென்மேற்கில் திருமால் பூசித்த 'சத்தியமொழி விநாயகர்' வீற்றிருக்கின்றனர். அப்பெருமானை வணங்கினவர்கள் எப்படிப்பட்ட இடையூறுகளும் தவிர்ந்து விரும்பிய பயனைப் பெறுவார்கள்.

பணாதரேசம்: கருடன் சிவபிரானை வணங்கிப் பெற்ற பேற்றினால் தம் குலத்தை அழிக்கக் கண்ட பாம்புகள் வேகவதியின் வடகரையில் ஆதீபி தேசத்திற்குத் தெற்கில் பணாதரேசப் பெருமானைத் தாபித்துப் பூசித்துத் தம் குறை தீர வேண்டப், பெருமானார் தமது திருமேனியில் அவற்றை அணிகலமாகத் தரித்துக் கொண்டனர். திருமாலுடன் வந்த கருடனை இறைவன் திருமேனியிலுள்ள பாம்புகள் 'ஏன் கருடா சுகமோ' என வினவின. இஃது உலகிற் பழமொழியாகவும் விளங்கும். சிறியர் சார்பினை விடுத்துப் பெரியோரைச் சார்தல் வன்மை தரும் என்பது பெறப்படும். இத்தலம் ஆலடிப் பிள்ளையார் கோயிலுக்கு அணித்தாக வடக்கில் உள்ளது.

காயாரோகணம்: காஞ்சியில் மிகப் பெருஞ் சிறப்பினவாய இடங்கள் மூன்றென்று போற்றப்பெறும். அவை திருவேகம்பம், கச்ச பேசம், காயாரோகணம் எனப் பெற்று முறையே உமையம்மையார், சரசுவதி, இலக்குமி என்னும் முச்சத்திகளால் வழிபடப்படுவன. காஞ்சிக்கு உயிராய் விளங்கும் இத்தலத்தில் சிவபிரானுர் திருமால் பிரமர் இறக்கவரும் காலத்தில் அவர்களை ஒடுக்கி அவர்கள் சரீரத்தைத் தன் தோள்மேல் தாங்கி நடனம் புரிவர். ஆகலின், அவ்விடம் காயா ரோகணம் எனப் பெற்றது.

இலக்குமி வில்வத்தால் காயாரோகணேசுவரரை அருச்சித்துத் திருமாலைத் தனக்குக் கணவனுகப் பெற்றனள். வியாழபகவான் அங்கு வழிபாடு செய்து 'எமது பெருமானே, தேவரீரே தேவர்களுள் பிராமண ராவீர்! ஏனையோர்களுள் பிராமணன் அடியேன். பிராமணனுக்குப் பிராமணனே புகலிடம். பிராமணன் பிராமணராகிய தங்களைத் தொழாது பிறரை வணங்கில் நலமுமுறுன்; நரகமும் புகுவன் என்றிங் ஙனம் மறைகள் விரித்துரைக்கும். பிராமணனுகிய எனக்குத் தங்கள் திருவடிகளே கதி' என்று கூறிய பிருகற்பதிக்குப் பெருமான் முன் னின்று 'வேண்டுவகேள் அருளுதும்' என்றனர். 'திருவடியில் இடையறு அன்பும் எனக்குரிய வியாழக் கிழமையில் காயாரோகண (தாயார்குளம்) தீர்த்தத்தில் மூழ்கி இங்கு வழிபடுவார்க்கு விரும்பியவும், வழங்கி மேலும் முத்தியையும் அளித்தருள வேண்டுமென வேண்டினர். 'என் றென்றும் இவ்விலிங்கத்தே அம்மையொடும் விளங்கி அவரவர் விரும்பிய அனைத்தும் அருளுவோம்' என வாய்மலர்ந்து தேவர்களுக்குக் குருவா கும் வரத்தை வழங்கி இலிங்கத்தே மறைந்தருளினுர்.

இயமன் அங்கு வந்து பூசனை புரியத் 'தென் திசைக்குத் தலைவ னுக்கி நம்மை வணங்குவோரைத் தண்டம் செய்யின் அன்று இப்பதவி உனக்கு நீங்கும்' என்றருளி விடுத்தனர். இயமனும் பூசித்த இங்குப் பிதிரர்க்கு நீர்க்கடனைச் செய்வோர் வீடு பெறுவர். வேகவதி நதிக் கரையில் உள்ள இத்தலம் அறிவு பெறவும் செல்வம் பெறவும் ஒருங்கு சிறப்புடைய தலமாகும்.

தான்தோன்றீசம்: உயிர்கள் மலக்கட்டினின்றும் நீங்கி முத்தியைப் பெறும்பொருட்டு இறைவன் சிவலிங்க வடிவமாகத்தானே தோன்றியருளினமையால் தான்தோன்றீசன் என்னும் திருப்பெய ருடைய அவ்விலிங்கத்தை, ஒரு சிறுவர் வழிபாடு செய்து, இனியபால் பெற்ற வரலாறிதுவாகும்.

வியாக்கிர பாதமுனிவர் வசிட்டர் தங்கையை மணந்தார். அவ் வம்மையிடமாகத் தோன்றிய உபமன்னியன் என்கின்ற சிறு குழவி, தனது மாமன் வீட்டில் காமதேனுவின் பாலைத் தேக்கெறிய உண்டு வளருநாளில் தந்தை தாயார் தம்மில்லிற்குத் தம்மகவைக் கொண்டு சென்றனர். அங்கு மாவை நீரிற் குழைத்தூட்டப் பருகாது அழுதனர், முன்னைத் தவம் செய்யாதார் விரும்பிய போகங்களை இப்பொழுது

எங்ஙனம் பெற இயலும் என்னும் அன்னை சொற்கேட்டு வினவியறிந்து காஞ்சியை அடைந்து தான்தோன்றீசப் பெருமானைப் பூசனை புரிந்து பெருமான் திருப்பாற்கடலைக் கொண்டூட்ட உண்ட உபமன்னிய முனிவர் கண்ணபிரானுக்குத் திருவடி தீக்கை செய்து சிறந்தனர்.

தீக்கைபெற்ற கண்ணபிரானுர் திருநீற்றுடன் உருத்திராக்க முதலிய பூண்டு 'சிவநேசர்' எனப் போற்றப்பெற்றனர். இத்தலம் ஏகாம்பரநாதர் சந்நிதி வீதியில் உள்ளது.

இரணியேசம்: இரணியன் எனப் பெயரிய அவுணர் தலைவன் தனது, குலகுருவாகிய சுக்கிரனை வருவித்து வணங்கி, பிறர் எவரும் பெருத திருவினையுடைய அரசு பெறற்குரிய உபாயம் யாதென வினுவினன். சிவபூசனையே எவற்றையும் நல்கவல்லதெனவும், அரனைப் போற்ருத ஆக்கையும், பொறிகளும் பயப்பாடு உடையன அல்ல எனவும் குருவால் அறிவுறுக்கப்பெற்றனன் இரணியன். மேலும், தலங்கள் பலவற்றுள்ளும் காசியே சிறப்புடையது; அதனின் மிக்கது காஞ்சி எனவும் அறிந்தனன். பச்சிலையோ, பழம்போதோ யாதோ கொண்டு பேரன்பொடும் செய்யப்பட வேண்டும் என்னும் கேள்விச் செல்வனுய் இரணியன் தன் தமையன் இரணியாக்கன் அவன் மகன் அந்தகன் தன் மகன் பிரகலாதன் வழிவந்த மைந்தர்கள், மனைவிமார் மற்றும் பலரொடும் காஞ்சியை அடைந்து அவரவரும் தம்தம் பெயரால் சிவலிங்கம் தாபித்துப் பூசிக்கத் தானும் இரணியேசம் எனத் தன் பெயரால் சிவலிங்கப் பதிட்டை செய்து அருச்சனை புரிந்தனன். மனிதராலும், விலங்காலும், ஏனைய சீவர்களாலும், நிலத்திலும்,விண்ணிலும், கொடிய ஆயுதங்களாலும் உலர்ந்த ஈரிய இடங்களிலும் வீட்டிற்குப் புறத்திலும் அகத்திலும் இரவிலும் பகலிலும் ஆக இத்திறங்களில் இறவாமையும், மூவுலகை ஆளும் அரசும் வேண்டிய இரணியனுக்கு அவற்றை வழங்கினுர் சிவபிரானுர். உடன் போந்தவரும் தத்தம் மனத்திற்கினியன வேண்டிப் பெற்றனர். இரணியன் பூசித்த இரணியேசம் ஏனையோர் வழிபட்ட தலங்களோடும் உத்தமோத்தமமாய்ச் சிறக்கும். இத்தலம் சருவதீர்த்தத்தின் கிழக்குக் கரையிலுள்ளது.

ஓணகாந்தன் தளி: வாணுசுரனுடைய சேனைத் தலைவராகிய ஓணன்காந்தன் என்னும் அசுரர் இருவர் காஞ்சியை அடைந்து தீர்த்தம் எடுத்து அதன் கரையில் சிவலிங்கம் இரண்டு தத்தம் பெயரால் நிறுவிப் பூசித்தவழிப் பெருமானுர் விடைமீது அம்மையொடும் காட்சிதரத் தமக்கு மெய்யறிவு தந்துய்யக் கொள்ளவும், அவ்விலிங்கங்களில் எழுந்தருளியிருந்து எந்நாளும் யாவர்க்கும் அருள் செய்யவும் வரம் பெற்றனர்.

இத்தலம் பஞ்சுப்பேட்டைக்கு மேற்கில் உள்ளது. சுந்தரர் தேவாரம்பெற்ற விளக்கமுடைய திருத்தலம்.

அரிசாப பயந்தீர்த்த தானம்: தேவரும் அசுரரும் போர் புரிகையில் தேவர்க்குத் துணையாக வந்த திருமால் அசுரரைத் தாக்கினர். புறங்கொடுத்தோடிய அசுரர் பிருகு முனிவரர் தம் மனைவியாகிய கியாதியைச் சரணடைந்தனர்.

அசுரர்க்கு இடங்கொடுத்து வீட்டு வாயிலில் காவலிருந்த கியாதியை பெண்ணென்றும் தனக்கு மாமியென்றும் எண்ணாது தலையை அறுத்தனர் திருமால். கூகூ என்னும் அரற்றுக் கேட்டு யோகம் கலைந்த பிருகு முனிவர் 'திருமாலை நோக்கிப் பெரும் பாவத்திற்குப் பாத்திரமானவனே, 'சைவ சமயமே ஏனைச் சமயங்களிற் றலையாய சமய மென்பதும், சிவபிரானையன்றி மற்றைத் தெய்வங்களை மறந்தும் புறந்தொழாத மாண்புடையேம் என்பதும் உண்மையேயாயின் பாவத்திற்கேதுவாகிய பிறப்புப் பத்தெடுத்து உழலுக எனவும், நின்றொண்டர் புறச்சமய நூல்வழி ஒழுகி ஏகதண்டம் திரிதண்டம் தாங்கித் திரிக' எனவும் கடுஞ்சாபம் இட்டனர்.

பின்னர்ச் சுக்கிரன் துணைகொண்டு மனைவியை உயிர்பெறச்செய்த முனிவரர் தவவாழ்க்கையிற் றலைநின்றனர்.

திருமால் காஞ்சியை அடைந்து சிவகங்கையில் மூழ்கித் திருவேகம்பரைத் தொழுது பின்பு கச்சபேசத்திற்குக் கிழக்கில் அரிசாப பயந்தீர்த்த பிரானைத் தாபித்துப் பூசித்தவழிப் பெருமான் வெளிநின்று 'எம்மால் தரப்படும் சாபம் எம் அடியவரால் விரும்பின் நீக்கப்படும். அவரால் தரப்படும் சாபமோ எம்மால் நீக்கப்படமாட்டாது' என அடியவர் பெருமையை அறிவுறுத்தி அடையும் பத்துப் பிறப்புக்களையும் உலகிற்கு நலம் பயப்பனவாகவும், பிறப்பு ஐந்தனுள் மறக்கருணையும் ஐந்தனுள் அறக்கருணையும் காட்டி அருள்வதாகவும் அருள் செய்தனர் மேலும், திருமாலுக்கு வேண்டியவற்றை அருளி அவர் விருப்பப்படி வழிபடுவார்க்கு அருள் செய்ய 'அவ்விலிங்கத்தே வீற்றிருப்பேம் என வழங்கித் திருவுருக் கரந்தனர். இத்தலம் நெல்லுக்காரத் தெருவில் உள்ளது.

திரிகாலஞானேசம்: இறப்பு நிகழ்வு எதிர்காலங்களின் நிகழ்ச்சிகளை ஒருங்கே அறிவான் முனிவரர் சிலர் சிவலிங்கம் நிறுவிப் போற்றி முக்கால ஞானத்தை அத் திரிகால ஞானேசராற் பெற்றனர். உருகும் அன்பர்க்கு அருள்செய்யும் தலமாகும். இது காஞ்சி நகரப் பேருந்து வண்டி நிலையமாகிய மதுராந் தோட்டத்தில் உள்ளது.

திருப்புகலூரில் முருகநாயனர் வழிபாடுசெய்த பூத பவிஷ்ய வர்த்தமான இலிங்கங்கள் திருஞானசம்பந்தர் திருப்பதிகம் பெற்றமை நினைவு கூர்க. பூதம்-இறப்பு. பவிஷியம்-எதிர்வு. வர்த்தமானம்-நிகழ்வு.

மதங்கேசம்: ஐம்புலக் குறும்புகளை அடக்கவேண்டி மதங்க முனிவர் அருச்சித்த மதங்கேசர் கோயில் மதங்கேசர் தெரு மிஷன் மருத்துவமனைக் கெதிரில் மேற்கு நோக்கிய திருமுன்பொடும் விளங்குகின்றது. பல்லவர்காலச் சிற்பங்கள் அமைந்து அரசியலால் காக்கப்படுகிறது.

அபிராமேசம்: திருமால் இந்திரனுக்கு அருளுதற்பொருட்டுக் காசிபர் புதல்வராய் வாமனராகத் தோன்றி அபிராமேசரை நிறுவிப் போற்றி அருளைப்பெற்று மாவலி என்னும் அசுரர் தலைவன் வேள்விச் சாலையை அடுத்து மூன்றடி நிலம் அவனிடம் இரந்துபெற்றுத் தடுத்த சுக்கிரன் கண்ணைக் கெடுத்தனர். பின்பு, மாவலி ஆட்சியுட்பட்ட விண்ணையும் மண்ணையும் ஈரடி அளவையாற்கொண்டு மூன்றுமடிக்கு மாவலி தலையில் வைத்து அவனைப் பாதலத்தழுத்தித் தேவர்கோன் துயரைத் தீர்த்தனர். மீண்டு வந்த திருமால் 'வாமன குண்டம்' என்னும் தீர்த்தம் தொட்டு நீராடி அபிராமேசரை வணங்கி உலகளந்த பேருரு (திரிவிக்கிரமவடி)வை அவர்க்குக் காட்டி அருள்பெற்று 'உலகளந்தபெருமாள்' என்னும் திருப்பெயருடன் விளங்குகின்றனர். 'அபிராமேசர்' உலகளந்தார் வீதியில் சங்குபாணி விநாயகர்க்கு வலப்புறத்தே கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளனர்.

ஐராவதேசம்: நான்கு தந்தங்களையுடைய ஐராவதம் என்னும் வெள்ளையானை, சிவலிங்கம் நிறுவி ஐராவதேசர் என்னும் அப்பெருமானைப் பூசனை புரிந்து யானைகட்குத் தலைமையையும், இந்திரன் ஊர்தியாம் நிலைமையையும் பெற்றது. இத்தலம் இராஜவீதியும் நெல்லுக்காரத் தெருவும் கூடுமிடத்தில் மேற்கு நோக்கிய திருமுன்பொடும் விளங்குகின்றது.

மாண்டகன்னீசம்: அழகிய காதர் என்னும் பொருள் தரும் மாண்ட கன்னி முனிவர் 'மாண்ட கன்னீசர்' எனப் பெயரிய சிவலிங்கம் நிறுவிப் போற்றித் திருவருள் வலத்தால் விண்ணுலகத்தில் வைத்து நுகரவேண்டிய தேவபோகத்தை இந்திரனு (போகியு)ம் நாணுமாறு இக்காஞ்சியில் ஐந்து அரம்பையரைக் கொணர்ந்து மணந்து நுகர்ந்து வாழ்ந்தனர். அவர் நாளும் நீராடிய நீர்நிலை 'ஐயரம்பையர் தீர்த்தம்' என்றாயது.

முனிவர் நெடுங்காலம் போகம் நுகர்ந்து உவர்த்து முடிவில் முத்தியைப் பெற்றனர்.

வன்னீசம்: (வன்னி-அக்கினி.) அக்கினிதேவன் தமையன்மார் மூவர் வேள்வி அவியைச் சுமக்கலாற்றாது இறந்தனர். அது கண்டஞ்சிய அக்கினி ஐயரம்பையர்தீர்த்தத்தைப் புகலடைந்து சகோதரனை ஏற்றுக் காக்கவேண்டி அதனுள் மறைந்து கரந்தனன். தேவர் எங்கும் தேடி முடிவில் (ஒக்கப்பிறந்தான் குளம்) சகோதர தீர்த்தக்கரையை

அடைந்து அதன்கண் வாழும் மீன்கள் காட்டிக்கொடுக்கக் கண்டு கூவி அழைக்கும் தேவர்களை முன் போகவிட்டுப் பின்பு மீன்களைத் தூண்டிலிற் படுகெனச் சாபமிட்ட அக்கினி அக்குளக்கரையில் வன்னீசரைத் தாபித்துப் பூசித்து அவிசுமக்கும் ஆற்றலைப் பெற்றேகினன். இவ்விரு தலங்கள் மாண்டகன்னீசர் தெருவில் உள்ள ஒக்கப்பிறந்தான் குளக் கரையில் உள்ளன.

சவுனகேசம்: சவுனகமுனிவர் தம்பெயராற் சிவலிங்கம் நிறுவிப் போற்றி மலநோய் நீங்கி முத்தி எய்தினர். இக்கோயில் புத்தேரி தெருவை அடுத்துள்ள சவுனகேசர் தெருவில் உள்ளது.

சுரகரேசம்: வெப்பு நோயைக் கண்களால் பிறர்க்கு ஆக்குத லால் சுராக்கன் என்னும் பெயருடைய அசுரனை அழிக்கச் சிவபிரான் ஆக்கிய தலமும், சுரநோயைப் போக்குதலின் 'சுரகரம்' என்னும் தீர்த்தமும் உடைய அவ்விடத்தே சிவவீரியத்தைத் தேவர்கள் பொருட்டு அக்கினி உட்கொண்டு கருப்பத்தால் வெப்பமுற்ற தேவர் அனைவரும் இறைவன் ஆணைப்படி இத்தீர்த்தத்தில் மூழ்கிச் சுரகரே சரை அருச்சித்துச் சுரம் நீங்கப்பெற்றுப் போய்க் கங்கையில் விடுத்த வீரியம் சரவணப் பொய்கையில் தங்கி வளர்ந்து ஆறுமுகப்பெருமான் ஆக அருள விளங்கும் தலம் இது. இத்திருக்கோயில் திருவேகம்பர் சந்நிதி வீதியில் உள்ளது.

அமரேசம்: தேவரும் அசுரரும் பலயுகம் பொருது வெற்றி தோல்வி காணாராயினர். போர் முற்றுப்பெற உமையம்மையார் விரும்பச் சிவபிரானார் சிறிது ஆற்றலை அசுரரிடத்து வைத்துத் திருமால் முதலோரைத் தோல்வியுறச் செய்தனர். பின்பு அம்மையார் கருத் தாகத் தேவரை வெற்றிகொளச் செய்தனர். வெற்றிக்குக் காரணம் தாம் தாமென மயங்கிச் செருக்கிய திருமால் பிரமன் இந்திரன் முதலா னோர் முன்பு :யட்சனாக வந்தபெருமானார், துரும்பை நிறுத்தி இதனை ஏறிய வல்லவர் வென்றவர் ஆவர் எனத் தனித்தனி முயன்று இயலா மையின் நாணிய அத்தேவர் முன்னின்றும் மறைந்தனர். திகைக்கும் தேவர்முன் உமையம்மையார் தோன்ற யாவரும் துதி செய்தனர்.

'சிவனருளின்றித் துரும்பையும் அசைக்கமுடியாத நீவிர் தற் போதத்தினால் எழுந்தருளியிருந்த பெருமானைக் காணீர் ஆயினீர். எப்பொருளின் கண்ணும் விளங்கும் எவ்வகை ஆற்றலும் அவனருளிய ஆற்றலே என்னும் உண்மையை மறந்து தருக்கிய நீங்கள் பிழைதீரக் காஞ்சியிற் சிவபூசனை புரிமின்' என அருளி மறைந்தனர். அம்மையார் அருளியவாறு காஞ்சியில் திரிதசர் ஆய தேவர் 'திரிதசேச'ரைத் தாபித்துப் பூசித்துப் பெருவலி பெற்றனர். இக்கோயில் பெரிய காஞ்சி புரம் அமரேசர் கோயில் தெருவில் உள்ளது.

திருமேற்றளி: (தளி-கோயில்) உருத்திரர் நூற்றுவரும் பிறரும் வழிபட்ட நூற்றுப்பதினெட்டுத் தலங்கள் உள்ளன. அத்தலங்கள் என்றும் தபோதனர்களால் பூசிக்கப்படுகின்றன. அவற்றுள் திருமேற் றளியும் ஒன்று.

முன்னாளில் திருமால் சிவசாரூபம்பெற அத்தளியில் தவஞ்செய்தனர். சிவபிரானார் அவர்முன் தோன்றி 'நீ விரும்பிய பேற்றை வைவச்சுத மனுவந்தரத்து இருபத்தெட்டாம் கலியுகத்தில் சீகாழிப் பதியில் அவதரிக்கும் நம் அடியவனாகிய திருஞானசம்பந்தன் அருள் செய்வான். அதனளவும் அங்கே தவஞ்செய்தி' என்றருளி மறைந்தனர். அங்ஙனமே திருஞான சம்பந்தர் திருப்பதிகத்தால் திருமால் சிவசாரூபம் பெற்ற இடம் அத்தலம். திருநாவுக்கரசர் திருப்பதிகம் ஒன்றும், சுந்தரர் திருப்பதிகம் ஒன்றும் இத்தலத்திற்கு உள்ளன. திருஞான சம்பந்தர் பதிகத்திற்கு உருகிய திருமால் சிவலிங்கவடிவாய் ஓத உருகீசர் என்னும் திருமுன்பொடும், சிவபிரான் திருமேற்றளிநாதர் என்னும் திருமுன்பொடும் விளங்குகின்றனர். தெருவின் கீழைக் கோடியில் திருஞான சம்பந்தர் எழுந்தருளியுள்ளனர். அவர் பாடலைக் கேட்ட முத்தீசர் சந்நிதியும் உள்ளது. திருஞான சம்பந்தர் பிள்ளையார் என்னும் பெருமையால் காஞ்சிபுரத்தில் மேலைப்பகுதி முழுவதும் பிள்ளையார் பாளையம் எனப் போற்றப்பெறும். உதியமரம் இருத்தலின் ஒதியடிமேடை என்பது பிரசித்தமாக வழங்கும் இடம் அதுவாகும்.

அனேகதங்காவதம்: (அனேகபம்-யானை) யானைமுகமுடைய விநாயகர் தம் பெயரால் 'அனேகபேச்சுரன்' எனப்பெறும் சிவலிங்கம் நிறுவிப் போற்றப் பெருமான் வெளி நின்றனர். 'யாது பணி' என வணங்கி வேண்டிய விநாயகர்க்குப் பெருமான் அருள் செய்தனர்.:

நல்லோர் வழிபட அவர் கருமங்களை இடையூறு நீக்கி முற்றுப் பெறச் செய்யவும், வழிபடாத தீயோர் செயல்களை இடையூற்றினை ஆக்கி அழிக்கவும் தேவர்கள் விருப்படி உன்னைத் தந்தோம். அவற்றிற்கு வேண்டும் ஆற்றலையும் இப்பொழுதே வழங்கினோம். மேலும், இரணிய புரத்துக் கேசி முதலாம் அசுரை அழித்து அவர் கருவுள் இருக்கும் வல்லபை என்னும் சத்தியை மணந்து 'வல்லபை விநாயகர் என்னும் பெயரொடும் விளங்கி அவ்வாறெண்ணி வழிபடுவார்க்கு அருள் செய்' என மகிழ்ச்சியொடும்அனேகபேச்சுரர் விடைதரச் சென்று அவ்வசுரரை அழித்து வல்லபையை மணந்து வீற்றிருந்து இடையூறு நீக்கிக் காத்தருளுகின்றனர். விநாயகர் பூசித்த பிரானை வணங்கினோர் பிறவி நோய் நீங்கித் திருக்கயிலையை அடைந்து வாழ்வர். இத்தலம் புத்தேரி தெருவிற்கு மேற்கில் கயிலாயநாதர் ஆலயத்திற்கு அணித்தாக உள்ளது. சுந்தரமூர்த்தி நாயனார் திருப்பதிகம் பெற்ற தலம்.

கயிலாயம்: பூமி, அந்தரம், சுவர்க்கம் என்னும் மூவுலகங்களில் பொன், வெள்ளி, இரும்புகளாலாகிய முக்கோட்டைகளைக் கொண்ட திரிபுரர் என்னும் அசுரர் மூவர் குருலிங்கசங்கம மெய்ப்பத்தியில் தமக்கு ஒருவர் நிகரிலராய் வாழ்ந்தனர். எனினும், குலப்பகையால் மிகப் பெரிதும் தேவரை வருத்தினர்.

திருமாலின் துணைகொண்டு தேவர், முப்புரத்தசுரரை அழிக்க 'ஆபிசாரம்' என்னும் யாகம் செய்து தோன்றிய பூதங்கள் ஏவப்பட்டு

சிவ பூசை, மகேசுரபூசை, விபூதி சாதனங்களில் உறுதியொடு தலைநின்ற அவ்வசுரர் முன்செல்லவும் மாட்டாவாய் அழிந்தன.

நெடிது சிந்தித்துத் திருமால் தன் கூற்றில் ஆதிபுத்தனைத் தோற்றுவித்து நாரதனையும் உடன் போக்குவித்துத் திரிபுரத்து உள்ள தலைவர் மூவரொழிய ஏனைய அவுணரை முற்றவும் தாம் ஆக்கித் தந்த நூலால் மயக்கிச் சிவநெறியைக் கைவிடுவித்தனர். பெண்டிரும் நாரதர் சொல்வலைப்பட்டுக் கற்பிழந்தனர்.

அந்நிலையில் திருமால் தேவரொடும் கயிலை புகுந்து சிவபிரானார் திருவடிகளில் விண்ணப்பிக்க அத்தேவர்களைத் தேராகவும் போர்க்குரிய கருவிகளாகவும் கொண்டுஅப்பெருமானார் திரிபுரத்தவருள் தலைவர் ஏனையோரையும் மூவரொழிய முப்புரங்களையும் சிரித்தெரித்தனர். திருமால் முதலானோர் சிவபூசனையையும் சிவசாதனங்களையும் கைவிட்டவர் என்றும் தமக்குப் பகைவரேயாவர் எனக் கூறித் தத்தம் இடம் சென்றனர்.

பலயுகங்கள் நரகிடைக் கிடந்தாலும் தீராக் கொடுஞ்செயலாகிய துர்ப்போதனை புரிந்தமைக்கு :வருந்திய புத்தனும் நாரதரும் சிவபுண்ணியத்தைச் செய்யத் தூண்டாது செய்வோரைப் பிறழ்வித்தமைக்குப் பெரிதும் வருந்திக் கழுவாய் இல்லாத குற்றம் தீரக் காஞ்சியை இருவரும் எய்தினர்.

புத்தநாரதரை வருத்தும் இருப்புக்குன்றத்தினும் பெரும்பாரமாகிய பாவச்சுமை காஞ்சியை நெருங்குகையில் பருத்திக்குன்றினும் மெலிதாய் விட்டமை நோக்கி அவ்விடத்திற்குப் 'பருத்திக்குன்றம்' எனப் பெயரிட்டனர்.

அதற்கு வடகிழக்கில் அதிவிசித்திரச் சிறபக் கோயிலை இருவருமாக அமைத்து, கயிலாயநாதரை எழுந்தருளுவித்துப் பூசனை புரிந்து தவம் இயற்றினர் இருவரும். சிவபெருமான் வெளிநின்று 'பிறர் நலம் பெற ஓரோர்கால் பாவம் சிறிது செய்யலாமாயினும் சிவாபராதமாகிய செயல் நினைப்பினும் அதனைப் போக்கப் பல்லூழிகாலம் நரகிடைக் கிடந்தாலும் உய்தியில்லை. அத்தகு பாவமும் காஞ்சியை அடுத்தமையால் பெரிதும் நீங்கிற்றுயினும் பல் பிறப்பெடுத்து அநுபவித்தே கழிக்க வேண்டியுள்ளது. ஆகலின், அப்பிறப்புக்களைக் கழிக்குமாறு கூறுதும் கேண்மினென' அருளினர்.

'இக்கயிலாயநாதரை வலம் செய்யப்புகும் இடத்தும், வெளிவரும் இடத்தும் வழியைச் சுருங்கையாக அமைத்தோம்' இவ்வழிகளால் வலங்கொள்ளும் முகத்தால் பல்யோனியிற் புக்குழலும் பிறப்பு இறப்புக்கள் நுமக்குக் கழிவனவாகுக. முடிவில் முத்தியை வழங்குவோம்' என வாய் மலர்ந்து பெருமானார் திருவுருக்கரந்தனர்.

புத்தனும் நாரதரும் அங்ஙனமே நெடுங்காலம் இறைவனை வலம் வருவோராய்த் திருவருளைப் பெற்றனர். கயிலையை ஒக்கும் இத்தலம் ஒப்பது மூவுலகினும் இல்லை.

இக் கயிலாயநாதர் கோயில் கலைகளுக்கிடமாக அதிவிசித்திரச் சிற்பக் கோயிலாக, அசரீரிகேட்ட இராசசிம்மனால் கி. பி. 700ல் அமைக்கப்பட்டது. இதன் இயல்புகள் சொல்லுக்கடங்காச் சிறப்பின. காஞ்சியை அடைந்தோர் யாவரும் வந்து வணங்கிய கோயில் எனினும் ஆம்; கயிலாயநாதர் திருக்கோயிலைக் காணக் காஞ்சிக்கு வருகின்றனர் எனினும் அமையும். இத்தலம், 'கச்சிப் பலதளியும் ஏகம்பத்தும் கயிலாதநாதனையே காணலாமே' என்னும் சிறப்பொடும் புத்தேரி தெருவிற்கு மேற்கில் உள்ளது.

வீரராகவேசம்: இராமன், தன் மனைவியாகிய சீதையை இராவணன் கவர்ந்து சென்றமையால் வருந்தி அம்மனைவியைப் பெறுமாறும் இராவணனை வெல்லுமாறும் உபாயமும் உபதேசமும் புரிந்த அகத்தியர் சொல்வழி 'வீரராகவேசன்' என்னும் பெயரால் சிவலிங்கம் நிறுவிப் போற்றினன்.

பிரானார், வெளிநின்று வீரம் வேண்டினை ஆகலின் வீரராகவன் என்னும் பெயரொடும் விளங்குக' எனவும், பாசுபதப்படையை வழங்கித் தேவர் பிறரைக்கொண்டு அவரவர் படைகளை வழங்குவித்து இலக்குவனொடும் சுக்கிரீவன் முதலாம் படைத் தலைவனொடும் இலங்கை புகுந்து இராவணனை அவன் சுற்றத்தோடும் அழித்துச் சீதையை மீட்டுக் கொண்டுபோய் அயோத்தியை அடைந்து அரசு செய்க' எனவும் அருள் புரிந்தனர்.

அகத்தியர் உணர்த்திய தத்துவங்களின் ஐயங்களைஇராமனுக்குப் போக்கிய சிவபிரானார், இங்கு வணங்கினோர் பகைவரை வென்று வாழ்ந்து திருவருளை எய்துவர் என அருளி மறைந்தனர்.

இத்தலம் புத்தேரி தெருவிற்குத் தெற்கிலுள்ள வயலில் அமைந்துள்ளது.

கற்கீசம்: ஊழி முடிவில் கொடியவர்களை அழித்தற் பொருட்டுத் திருமால் கற்கி (குதிரை) ஆக இருந்து வீரராக வேசத்திற்குத் தெற்கில் மண்ணி தீர்த்தக் கரையில் வணங்கி வரம்பெற்ற தலம் ஆகும். வீரராகவேசத்திற்கும் ஐயனார் கோயிலுக்கும் அடுத்துள்ள இச்சிவலிங்கத்தை வணங்கினோர் போக மோட்சங்களைப் பெறுவார்.

வாணேசம்: வாணன் தவத்தினுக்கு எளிவந்து சிவபிரானார் திருநடனம் செய்தனர். திருநந்திதேவரொடு வாணனும் குடமுழா முழக்கினன். பெருமானார். ஆயிரங் கைகளை அவ்வசுரனுக்கு அளித்து மேலும், அவன் விரும்பிய நெருப்புவடிவமான கோட்டையையும் மூவுலகையும் ஆளும் வல்லமையையும், அழியாத இயல்பையும் பிறவற்றையும் வழங்கினர்.

யாவரையும் அடிப்படுத்து அவ்வசுரன் ஆளும் நாளில் கயிலைக்குச் சென்று பெருமானை வணங்க 'நினக்கு வேண்டும் வரம் யாதென' வினவிய கயிலைநாயகர்பால் நாளும் திருக்காட்சி தர அம்மையொடும்

குமரர்களோடும் என் இல்லத்தில் எழுந்தருளி இருத்தல் வேண்டும் என்றனன்.

மனக்கருத்தை முற்றுவிக்க வாயிலில் வீற்றிருக்கும் பெருமானுரைத் தோள்தினவு தீரப்போருக்கு அழைத்தனன் வாணன். பெருமான் புன்முறுவலுடன் 'முப்பதுமுறை உன்னிடத்துத் தோற்ற கண்ணன் உபமன்னியர்பால் சிவதீக்கை பெற்று எம்மைப் பூசித்துப் பெருவலி பெற்று நின்னை வெல்லும் வலியினனுய் நின்மகள் உஷைக்கோர் பழிவருங்கால் மதிற் கொடியும் அற்றுவிழும் துன்னிமித்தத்தில் போர்க்கு வருவன்' என்றனர்.

அங்ஙனே, உஷை கனுக் கண்டு நனவில் வருந்தும்போது சித்திரலேகை என்னும் தோழி தீட்டிய அரசிளங்குமரர்களுள் தன்னைக் கனவிற் கலந்தவனைக் காட்டக் கண்டு கண்ணபிரான் பெயரனும் பிரத்தியும்நன் மகனுமான அநிருத்தனைத் துயிலும் அணையொடும் கொணர்ந்தனள் தோழி.

அந்தப்புரத்தில் அவனொடும் இருந்த உஷை கருவுற்றமை அறிந்த வாணன் அநிருத்தனை அரிதிற் சிறைப்படுத்தினன்.

அநிருத்தன் சிறைப்பட்டமை நாரதரால் அறிந்த கண்ணன் சோணிதபுரத்தின்மேற் படையெடுத்துழி வாயிலில் காவல்கொண்டிருந்த சிவபிரானுர் பல்வகையாகத் தேற்றி என்னையும் வெல்லும் ஆற்றலை முன்னொருகால் மந்தரமலையில் வழங்கியுள்ளோம் அதனை மறந்தனை' எனத் துவாரகை மன்னனைத் தெருட்ட வேறு வழியின்மையால் எதிர்நின்று போர்செய்கையில் கண்ணனுக்கு வெற்றியை வழங்கினர்.

இவ்வாறே உமையம்மையார், விநாயகர், முருகப்பெருமானுர் இருந்த ஏனைய மூன்று வாயில்களையும் கடந்தபோது வாணன் கண்ணனுடன் போர்செய்து முடிவில் தொளாயிரத்துத் தொண்ணூற்றுரு கரங்களை அறுபட் டிழந்துழிச் சிவபெருமான் எதிரெழுந்தருளிக் 'கண்ணனே நின்போல் என்பால் அன்பனுகிய வாணன் நம்மை வழிபட இரு கரங்களை விடுக' என அருளினர். கேட்ட கண்ணன் 'நும் அன்பர் எனக்கும் அன்பரேயாவர்' என நாற்கரம் விடுத்தனர்.

சிவபிரான் புன்முறுவல் பூத்து வாணனை நோக்கி 'தோள் தினவு தீர்ந்தது போலும்' என வினவி உஷையை அநிருத்தனுக்கு மணம் புரிவித்துத் துவாரகைக் கனுப்பினர். வாணனுக்குக் குடமுழா முழக்கும் பேறு அளித்துக் கைலைக்கேகினர் பெருமானுர்.

இத்தலம் திருவோணகாந்தன் தளிக்கு மேற்கில் ஒரு பர்லாங்கு தொலைவில் வயற்கண் உள்ளது.

சலந்தரேசம்: சலத்தில் தோன்றினமையால் சலந்தரன் எனப் பெயர்பெற்ற சலந்தராசுரன் சிவலிங்கம் தாபித்துப் பூசிக்கத் திருவே கம்பர் எழுந்தருளி அவன் விரும்பியவாறு ஆண்மையும், வலிமையும், தலைமையும், பகைவரை அழித்தலும், இறைவனை ஒழிந்த பிறரால் அழிவுறாமையும், முத்தியை வழிபட்ட இவ்விடத்தே பெறுகையும் ஆகிய இந்நலங்களை அருளப்பெற்றனன்.

எண்டிசைத் தலைவரையும் வென்று கீழ்ப்படுத்தித் திருமாலைச் சிறைப்படுத்தித் தேவர் வேண்ட விடுத்தனன்.

வாழ்நாள் உலந்தமையின் சிவபிரானொடு பொரக் கயிலையை அணுகினன் அவுணன். அதனை அறிந்த திருமால் துறவோர் வேடம் பூண்டு அசுரன் மனைக்கிழத்தி பிருந்தையைக் கொள்ளுதற்கிது தக்க பருவம் என மதித்து அவன் மனையிடைப் பூம்பொழிலில் தங்கினர். அசுரன் மனையாள் முனிவரைக் கண்டு 'தவத்தீர்! என் கணவர் சிவபிரானொடும் பொரத் திருக்கயிலை சென்றனர். வெல்வரோ? தோற்பரோ? விளைவறியேன் விளக்கியருளல் வேண்டும்' என வினவினள்.

திருமாலாகிய துறவோர் 'சிவபிரானை வென்றவர் உளரேயோ? ஆகவே, நின் கணவன் நிச்சயமாக உயிரை இழப்பன்' என அவளுக்கு விடை கொடுத்தனர்.

அந்நிலையில், ஓர்தானவன் ஓடிவந்து 'அம்மே! நம் படையைச் சிவபிரான் நீறுபடுத்திப் பின் சக்கரமொன் றுண்டாக்கி அதுகொண்டு உன் தலைவனை அழித்தனன்' என்னலும், முனிவன் அவள் கையைப் பற்றக் கணவனையிழந்த யான் மூன்று நாட்களுக்குப் பிறகு நின் மனைக் கிழத்தி யாகுவென்' என்று விடுவித்துத் தீப்புகுந்தொழிந்தனள்.

அச்சாம்பரிற் புரண்டு மயல் பூண்ட திருமாலின் மயக்கம் நீங்க உமையம்மையார் கொடுத்த சந்தனத் திரள் மூன்றனையும் தேவர், சாம்பரி லிடத் துழாய், நெல்லி, அகத்தி மூன்று மரங்களாக முளைத்த அவற்றுள் துழாயைத் தழுவிப் பிருந்தையால் ஆயநோய் நீங்கப்பெற்று வைகுந்தம் அடைந்தனர் திருமால்.

துவாதசியில் இம்மூன்றனையும் போற்றிக் கொள்வோர்க்குத் திருமாலின் இன்னருள் கைகூடும்.

கயிலையில் அழிந்த சலந்தரன் ஒளிவடிவாய்க் காஞ்சியை அடைந்து தான் முன்பு வழிபட்ட இலிங்கத் தொன்றுறக் கலந்தனன்.

இத்தலம் பின்பு நிகழ்ந்த மாறுதலான் இப்பொழுது ஓணகாந் தன் றளியுள் சேர்ந்து அவ்விருவர் வழிபட்ட சிவலிங்கங்களுக்குத் தெற்கில் மூன்றாவது சந்நிதியாக விளங்குகிறது.

தக்கேசம்: வேள்வி நாயகனுன சிவபிரானை மதியாது வேள்வி வடிவினராம் திருமால் முதலியோரைக் கொண்டொரு வேள்வியைத் தொடங்கினன் தக்கன். உமையம்மையார் காணச் சென்று பழித்த தந்தையாகிய தக்கன் யாகம் பாழ்படச் சாபமிட்டுக் கயிலையை அடைந்தவழிச் சிவபிரான் தன் கூற்றில் வீரபத்திரரையும் அம்மையார் தன் கூற்றில் காளியையும் தோற்றுவித்து வேள்வியை அழிக்குமாறு செலுத்தப் பூதகணங்களுடன் போய்த் ததீசி முனிவர் நன்மொழியைக் கேளாத தக்கனையும், அவையையும் நோக்கிச் சிவபிரானுக்குரிய அவியைக் கொடுக்குமாறு தூண்டினர்.

மறுத்தமையால் பூத கணங்களைக் காவற் படுத்திய வீரபத்திரர் உள்ளே புகுந்து சூரியர் கண்களைப் பறித்தும் பற்களைத் தகர்த்தும், சந்திரனைக் காலாற்றேய்த்தும், அக்கினியின் கையையும் நாவையும் துண்டுபடுத்தியும் ஏனைத் தேவரையும் பொருந்திய தண்டங்களைச் செய்தும் செய்வித்தும் நிறுத்தினர் .

உடன்சென்ற காளியும் சரசுவதியின் கொங்கையையும், மூக்கையும் அரிந்தும் பெண்டிர்பிறரைத் தண்டித்தும் நின்றனள். அந்நிலையில் காக்கநின்ற திருமால் விடுத்த சக்கரப்படையை வீரபத்திரர் அணிந்திருந்த தலைமாலையுள் ஓர்தலை விழுங்கியது. இவ்வாறாகப் பெருமானார் அம்மையொடும் விடைமேற்றோன்றி போற்றி அடைக்கலம் புக்க விண்ணோரைக் காத்து அருள் புரிந்தனர். தக்கனை ஆட்டுத்தலையைப் பொருத்தி உயிர்பெறச் செய்தனர் பிரானார்.

பெருமான் திருமால் முதலாம் விண்ணோரை நோக்கித் தக்கன் யாகத்திற் பங்குகொண்ட பாவந்தீர எம்மைப் பூசனைபுரிவீராக. புரியுங்காறும் சூரபதுமன் முதலான அவுணர் நுமக்குப் பகைவராய் நலிவு செய்வர்' என அருளித் திருவுருக் கரந்தனர். தக்கன் தன் மக்கள் பூசனை புரிந்த அச்சூழலை அடுத்துச் சிவலிங்கம் தாபித்துப் பூசனைபுரிந்து சிவகணத் தலைமை பெற்றனன். பூசனையை மறந்த விண்ணோர் சூரபதுமன் ஆட்சியில் துன்பக் கடலில் மூழ்கினர். பிரமனால் அறிந்த விண்ணோர் யாவரும் சிவபூசனை புரிந்து, அச்சூரன் முதலானோரை முருகப்பெருமான் தொலைவு செய்தமையால் மகிழ்ந்து வாழ்ந்தனர். 'தக்கேசம்' என்னும் இத்தலம் பிள்ளையார்பாளையம் கச்சியப்பன் தெருவிலுள்ளது.

வயிரவேசம்: மேருமலைச் சிகரத்தில் தவஞ்செய்த முனிவரர் சிலர் முன் பிரமன் தோன்றினன். ஐந்து முகங்களையுடைய பிரமனை முனிவரர் பின்வருமாறு வினவினர்; 'காணப்படும் இவ்வுலகம் யாரை முதல்வனாக உடையது? இது எவரிடத்துத் தோன்றி நின்றொடுங்கும்? பலவாய பசுக்களினுடைய பாசத்தை நீக்கி அருள்செய்யும் தலைவன்யாவன்? இவற்றை விரித்துரைத்தருள்க' என வேண்டினர்.

பிரமன், மூவகை வினாவிற்கும் உரிய முதற்பொருள் தானே எனத் தருக்கினன். அப்போது வேதங்கள் வெளிப்பட்டு ஒருங்கும் தனித்

தனியும் மேருமலையை வில்லாகவுடைய சிவபிரானே தலைவன் எனப் பல சாத்திரங்களும் வேதங்களும், புராண இதிகாசங்களும் விரிக்கின்றன' என விளம்பின. பிரணவமும் எதிர்நின்று பகரவும் கொள்ளானாயினன் பிரமன்.

திருமால் ஆங்குத் தோன்றித் தானே தலைவன் என, பிரமன் யானே தலைவன் என இங்கனம் இருவரும் மாறுபடும்பொழுது சூரிய மண்டிலத்தினின்றும் வயிரவர் எழுந்தருளினர். கண்ட அளவே வெருவிய திருமால் ஓட்டெடுத் துய்ந்தனர்.

'என் மகனே! வருக' என அழைத்த பிரமனின் பழித்துப் பேசிய ஐந்தாம் தலையை வயிரவர் நகத்திறுற் கொய்தனர். மலர்மிசையோன் உயிர்போய் மீள அருளால் உயிர்பிழைத்து மயக்க நீங்கி அம்மை அப்பரை வணங்கிப் போற்றி நான்முகனாய் வாழவும், தான் செய்த பிழையைப் பொறுக்கவும் வரம்பெற்றுச் சென்றனன்.

சிவபெருமான் கட்டளைப்படி இரத்தப் பிச்சை ஏற்கப் புகுந்து வைகுந்தத்தில் விடுவச்சேனனைச் சூலத்திற் றூக்கினர். திருமால் தன் நெற்றி நரம்பைப் பிடுங்கி இரத்தத்தைக் கபாலத்தில் நூறாயிரம் வருடம் பெய்தும் நிரம்பாத அந்நிலையில் மூர்ச்சையுற்று விழுந்த மாலை வயிரவர் கையால் தடவி மயக்கம் நீக்கினர்.

திருமாலுக்கு அபயமும், அருளும் வழங்கிப்போய் முனிவர் மனைவியரைப் புன்முறுவலால் மயலுறுத்தித் தேவர்தம் செருக்கை முற்றவும் இரத்தப் பலி தேர்தலால் போக்கிய வயிரவர் காஞ்சியை அணுகிக் கபாலத்தை ஓர்மருங்கு வைத்துச் சூலநுதியினின்றும் விடுவச்சேனனைத் திருமாலின் வேண்டுகோளின்படி விடுத்தனர். பின்பு தம் பெயரால் வயிரவேசர் எனச் சிவலிங்கம் நிறுவிப் போற்றி வெளிநின்ற பெருமானை உமையம்மையொடும் அருட்குறியில் இருந்து யாவர்க்கும் அருளவும், தாம் திருமுன்பிருந்து தொண்டு செய் துய்யவும் வேண்டிப் பெற்றனர் வயிரவர்.

மேலும், இறைவனார் ஆணைப்படி இரத்தத்தைக் கணங்களுக் களிக்கச் சிலவற்றிற்கும் பருகப் போதாமை கண்டு போர்க்களத்தில் உயிர்விடுவோரைத் துறக்கம் சேர்த்து அவர் இரத்தத்தைக் கணங்களைப் பருகுவித்து இரணமண்டில வயிரவராய்க் காஞ்சியைக் காவல் புரிவர்.

இத்தலம் பிள்ளையார்பாளையம் சோளீஸ்வரர் கோயில் தெருவில் உள்ளது.

குமரகோட்டம்: முருகப்பெருமானார் தாருகன் முதலாம் அசுரரை அழித்துத் தேவரை வாழ்வித்தபின் திருக்கயிலையில் அம்மை அப்பரை வணங்கி அருள்விளையாடல்களைப் புரிந்துகொண்டிருந்தனர். பிரமன் தேவர் குழாங்களுடன் சிவபிரானை வணங்கச் செல்லும்பொழுதும் மீளும் பொழுதும் முருகப் பெருமானை மதியாது சென்றனன்.

அவனது அகந்தையை நீக்கக் கருதிய கருணையொடும் குமரப் பிரானுர் வேதனை அழைத்து ஒருவாறு வணங்கிய வேதனை 'வேதம் வல்லையோ' என வினவினர்.

ஓம் மொழிப் பொருளின் உண்மைகாணுது மயங்கிய பிரமனைக் குட்டிச் சிறையி விட்டுப் பிரம கோலத்துடன் படைத்தற்றெழிலை மேற் கொண்டனர் தேவசேனுதிபதி.

தேவர் முறையீட்டிற்குத் திருச்செவி சாத்திய சிவபிரானுர் நந்தியை விடுத்தபோது முருகப்பெருமான் பிரமனைச் சிறைவீடு செய் யாமையின் தாமே போந்து பிரமனை விடுவித்தனர். பிரமன் வேற் கடவுள் கருணையால் நல்லறிவு பெற்றேனென வணங்கித் தன் இருக்கை சார்ந்து படைப்புத் தொழிலை மேற்கொண்டனன்.

சிவபிரான் மடித்தலத்திலிருந்து முருகப்பெருமான் ஓம்மொழிப் பொருளைத் தந்தையார்க்கு வெளிப்படுத்தி அவரருளைப் பெற்றனர். ஆயினும் தந்தையார் பணியாகிய பிரமனைச் சிறைவீடு புரியாமையான் நேர்ந்த பிழைதீரத் தம்பெயரால் தேவசேனுபதீசர் எனச் சிவலிங்கம் இருத்திப் போற்றினர்.

முருகப்பெருமான் மான்தோலுடையும், தருப்பை அரைநாணும், திருக்கரங்களில் உருத்திராக்க வடமும், கமண்டலமும் விளங்க நினைப் பவர் பிறப்பறுதற்கு ஏதுவாகிய குமரகோட்டத்துள் முனிவரர் போற்றத் தேவசேனுபதீசர் திருமுன்பு மேற்கு நோக்கிய திருக்கோலத் துடன் நின்றருள் புரிவர். அவர்தம்மை வணங்குவோர் இன்பமுத்தியை எளிதிற் பெறுவர்.

அடியவரை மயக்கும் குற்றத்தினின்றும் எஞ்ஞான்றும் தவிரவும் மார்க்கண்டேயரை வஞ்சகப் படுத்த முயன்ற பிழை தீரவும் தேவ சேனுபதீசப் பெருமானை வணங்கி 'உருகும் உள்ளக்கோயிலான்' என்னும் திருப்பெயருடன் திருமால் குமரகோட்டத்தில் முருகப்பெரு மான் அருளையும் பெற்று விளங்குகின்றனர்.

குமரகோட்டம் என்னும் இத்தலம் காஞ்சிக்கு நடுநாயகமாய் விளங்குகின்றது.

கண்ணேசம்: (கண்ணன்-கரியன்) திருப்பாற்கடலில் எழுந்த விடத்தால் கரிந்து வெப்புற்ற திருமால் 'கண்ணேசர்' என்ற பெயரால் சிவலிங்கம் நிறுவிப் போற்றி அப்பெருமான் ஆணைப்படி திருவேகம்பத் தில் திருமுடியில் உள்ள நிலவின் அமுத கிரணத்தால் வெப்பம் நீங்கி நிலாத்துண்டப் பெருமாள் என்னும் திருநாமம் பெற்றனர். கண்ணே சத்தில் வழிபாடு செய்வோர் மேலுலகில் வாழ்வர்.

இக்கண்ணேசம் செங்கழுநீரோடை வீதியில் மொட்டைக் கோபுரத்திற் கெதிரில் உள்ளது.

கவுசிகேசம்: உமாதேவியார் கழித்த கருஞ்சட்டையில் தோன்றிய கவுசிகி பூசித்துப் பெற்ற அருளால் சும்பன் நிசும்பன் என்னும் அசுரரை அழித்துக் காஞ்சியைக் காவல் செய்யும் பேறு பெற்றனள். இத்தலம் காமாட்சியம்மை கோயிலை அடுத்துப் புறத்தே வடகிழக்கில் உள்ளது.

மாகாளேசம்: மாகாளன் என்னும் பாம்பு திருக்காளத்தியில் பூசனை புரிந்து வீடு பேற்றை விரும்பப் பெருமான் கட்டளைப்படி காஞ்சியை அடைந்து சிவலிங்கம் நிறுவிப் போற்றி அருள்பெற்றுப் போய்த் திருக்காளத்தியில் முத்தியை எய்திற்று. இத்தலம் காமகோட்டத்திற்கும் காளிகோயிலுக்கும் இடையில் உள்ளது.

திருமாற்பேறு: திருமால், குபன் என்னும் அரசனுக்குத் துணை நின்று அவனுக்குப் பகைவராம் ததீசி முனிவர்மீது சக்கரத்தை எறிய வயிரயாக்கையிற் பாயாது அது கூர்மழுங்கியது. சலந்தரனைத் தடிந்த சக்கரத்தைச் சிவபிரானிடத்திற் பெறுமாறு உமையம்மை வழிபாடு செய்த திருமாற்பேற்றீசரை நாடொறும் ஆயிரம் தாமரை மலர்களைக் கொண்டு அருச்சனை புரிந்து வருவாராயினர்.

சிவபெருமான் திருமாலின் அன்பினை அளந்து காட்டுவான் மலரொன்றினை மறைத்திட மந்திரம் ஒன்றினுக்கு மலர்பெறாது தமது கண்ணைப் பறித்து மலராகத் திருவடியில் இட்டனர்.

சிவபிரானார் மகிழ்ந்து சூரியமண்டிலத்தினின்றும் பேரொளியுடன் இறங்கிவரக் கண்ட தேவர் ஓட்டெடுத்தனர்; திருமால் வணங்கிப் போற்றினர். அதுகாலைச் சிவபிரானார் திருமாலை நோக்கி 'உனக்குத் தாமரை மலரை ஒக்கும் கண்கொடுத்தோம். ஆகலின், நினக்குப் பதுமாக்கன் என்னும் பெயர் வழங்குக. இவ்வூர் இனித் திருமாற்பேறு என்னும் பெயரொடும் நிலவுக. 'சுதரிசனம்' என்னும் இச்சக்கரத்தால் வெல்லற்கரிய எத்துணைப் பெரும் பகையையும் வெல்லுக. நீ கூறிய பேராயிரமுங் கொண்டெம்மையருச்சிப் போர்க்கு மலம் நீக்கி முத்தியை வழங்குவோம். அன்றியும், தீண்டச் சிவந்தார், சாதரூபர், மணிகண்டர், தயாநிதியார், பவளமலையார், வாட்டந்தவிர்த்தார், சாகிசனர், திருமாற்குப் பேறளித்தார் என்னும் எட்டுப் பெயர்களும் அவ்வாயிரம் பெயருக்கு ஒப்பாகும்' என்றருளினர்.

திருமால் மேலும் தொழுது துதித்து 'இவ்வூரிற் கணப்பொழுது தங்கினவர்க்கும் முத்தியையும் இவ்விலிங்கத்தை வணங்கினோர் கடல் சூழ்ந்த உலகிலுள்ள சிவலிங்கங்கள் எவ்வெவற்றையும் பணிந்த பயனையும் வழங்கவேண்டும்' என வேண்ட வேண்டுவார்க்கு வேண்டுவ வழங்கும் பெருமானார் அவர்க்கு அவற்றை அருள்செய்து அச்சிவலிங்கத்துள் மறைந்தருளினர்.

இத்தலம் காஞ்சிபுரத்திற்கு வடக்கே எட்டுக்கல் தொலைவிலுள்ள 'திருமாற்பேறு' என்னும் தொடர் வண்டி நிலையத்தினின்றும்

மேற்கே 2½ மைலில் உள்ள திருமாற்பேறு என்னும் ஊரிலுள்ளது. இறைவன் திருப்பெயர் மால்வணங்கீசர். இறைவி திருப்பெயர் கருணை நாயகி. திருஞானசம்பந்தர் திருப்பதிகம் இரண்டும் திருநாவுக்கரசர் திருப்பதிகம் நான்கும் கொண்ட தலம் இது.

அந்தகேசம்: இரணியாட்சன் மகன் அந்தகாசுரன் அந்தகேசப் பெருமானைப் பூசனை புரிந்து பெற்ற வரத்தினால் திருமால் முதலான தேவர்களைப் புறங்கண்டு அரசாண்டு வந்தனன். தேவர்கள் அவனுக்குப் பயந்து பெண்ணுருக்கொண்டு திருக்கயிலையில் இறைவியின் கணங்களொடும் இருந்தனர். அறிந்த அசுரன் அங்குப் போர் செய்தற்குச் செல்ல அம்மையார் அருளைப்பெற்றுத் திருமால் அளவில் மகளிர் சேனையைச் சிருட்டித்து அனுப்பத் தோற்றோடினன்.

அதுகாலை இறைவனார் பேரழகுடைய பிட்சாடனகோலம் பூண்டு தாருகாவன முனிவர் மனைவியர்பாற் சார்ந்து மயல் பூட்டினமையால் அப்பெண்டிர் கற்பினை இழந்தனர். அறிந்த முனிவரர் சிவபெருமானை அழித்தற் பொருட்டு வேள்வி ஒன்றியற்றி அவ் வாபிசாரயாகத்திற் றோன்றிய முயலகன், புலி, பாம்பு, மான், பூதம், மழு, யாகத்தீ இவற்றை ஏவினர். பெருமானார் அவற்றை அடக்கி ஏன்றுகொண்டனர்; மேலும் அம்முனிவரர் முன் திருக்கூத்தியற்றி நல்லறிவு அருள் செய்தனர். பிழை பொறுத்து முத்தியளிக்க வேண்டிய முனிவரர்க்குக் 'காஞ்சியில், புல்பூடு முதலாம் எத்துணைத் தாழ்ந்த பிறப்பிற் றோன்றினும் முத்தி கைகூடும். ஆகலின், நீங்கள் காஞ்சியில் பிறந்து இல்லறமினிது நடாத்தி முத்தி அடைக' என்றருளினர். பெருமானார் திருவாணைப்படி பிருகு முனிவர் முதலாம் நாற்பத்தெண்ணாயிரவரும் காஞ்சியில் பிறந்து சிவ பூசை செய்து வாழ்ந்தமையால் காஞ்சியில் உள்ளார் யாவரும் முனிவர்களே; அத்தலத்துள்ள கல்லெல்லாம் இலிங்கமே; நீரெல்லாம் கங்கையே; பேசுகின்ற பேச்செல்லாம் மந்திரங்களே; செய்யும் செயல்கள் யாவும் இறைவனுக்கு ஆம் திருப்பணியே; எனவே, இயமனுக்கு அந்நகரில் புக உரிமையில்லை.

பெருமானார் திருக்கயிலைக் கெழுந்தருளிய பின் மீண்டும் அந்தகாசுரன் போருக்குச் சென்றனன். இறைவனார் வயிரவ மூர்த்தியை அனுப்பினர். அவர் எதிர்சென்று அந்தகனைச் சூலத்தில் ஏந்தி திருநடம் புரிந்தனர். அசுரன் அறிவுபெற்றுச் சூலத்திற் கிடந்தவாறே துதித்தனன். வயிரவர் மகிழ்ந்து வேண்டும் வரம் கேள் என்றருளி முத்தி வேண்டினன் அசுரன். வயிரவர் இறைவன் திருக்குறிப்பின்படி காஞ்சியை அடைந்து சூலத்திற் கிடக்கும் அந்தகனைத் திருவேகம்பர் திருக்கோயிற் சிவகங்கையில் மூழ்குவித்துத் திருவருளை நல்கிப் பாசத்தைப் போக்கினர். அந்தகன் தான் முன்பு வழிபட்டு வரம்பெற்ற இலிங்கத்துள் கலந்து ஒன்றுபட்டனன்.

இத்தலம் காஞ்சிபுரத்திற்கு மேற்கே எட்டுக் கல் தொலைவில் திருப்புட்குழியில் உள்ளது.

காமேச்சரம்: இறைவன் சித்தத்தில் தோன்றிய சித்தசன் எனப் பெறும் மன்மதன் சிவபிரானை வழிபட்டு உயிர்கள் தோற்றுதற்குக் காரணமாக ஆண்பெண் சேர்க்கையை உண்டாக்கி இரதிக்கு இனியனாய் இருந்து கொடுப்போர் கொள்வோர் உள்ளத்திருந்து அச் செயலைச் செய்வித்து மூவுலகினும் தன் ஆணையைத் தடையின்றி நிகழ்த் தும் பேற்றினை வேண்டினன். பெருமானார் திருவுள்ளப்படி மன்மதன் காஞ்சியை அடைந்து சருவதீர்த்தத் தென்கரையில் சிவலிங்கம் நிறுவிப் போற்றிக் கருதிய வரத்தைப் பெற்றனன். அவனை மனத்தில்கொண்டு தானம் பெற்றால் பெற்ற பிராமணர் ஆசையென்னும் குற்றத்தி னின்றும் நீங்குவர். இத்தலம் காமேச்சரம் எனப் பெற்றுச் சருவ தீர்த்தத் தென்கரையில் விளங்கும்.

தீர்த்தேச்சரம்: காமாட்சியம்மையார் சிவபூசனையில் இறைவ னார் ஏவலின் அண்டத்தின் அகத்தும் புறத்தும் உள்ள தீர்த்தங்கள் யாவும் ஒருங்கு திரண்டு போந்து அம்மை இறைவனைத் தழுவிக்கொண்ட பின்பு அத்தீர்த்தம் யாவும் சருவ தீர்த்தம் என்னும் பெயரால் காஞ்சி யில் தங்கிச் சிவபிரானைத் தீர்த்தராசன் எனச் சிவலிங்கம் நிறுவிப் போற்றிப் பெற்ற திருவருளுடைய அத்தீர்த்தத்தில் மூழ்கித் திருவே கம்பப் பெருமானை வணங்கினோர் எல்லா நலங்களும் பெற்றுக் கொலைப் பாவங்களும் நீங்கும் நிலைமையைப் பெற்றுத் திகழ்வர். அத்தீர்த்தத்தில் முழுகித் திருவேகம்பரைத் தரிசித்தோர் பிறப்பிற் புகார் முத்தியைத் தலைப்படுவர். பிரகலாதன், விபீஷணன், பரசிராமன், அருச்சுனன், அசுவத்தாமன் என்றின்னோர் முறையே தந்தையையும், தமையன் மாரையும், வீரரையும், குரு முதலியோரையும், கருவையும் கொன் றழித்த பாவங்களை முழுகியும் தரிசித்தும் போக்கிக்கொண்டனர். சருவ தீர்த்தத்தின் பெருமையை முற்றச் சொல்லவல்லவர் இலர். இத்தலம் சருவதீர்த்தத்தின் மேற்குக் கரையில் இரணியேசத்திற்குக் கிழக்கி லுள்ளது.

கங்காவரேச்சுரம்; வருணன் கங்காதேவியுடன் இறைவனை வணங்கிப் போற்றி நீர்க்கும், நீரிடை வாழும் உயிர்களுக்கும் தலைவனா யினன். இத்தலம் கங்காவரேச்சுரம் எனப் பெற்றுச் சருவதீர்த்தக் கரையின் கிழக்கில் மேற்கு நோக்கிய சந்நிதியை உடையது.

விசுவநாதேச்சரம்: உலகில் உள்ள சிலதலங்கள் யாவும் ஒருங்கு சூக்குமமாகப் பொருந்தியிருக்கும் தலம் இதுவாகும். காசி விசுவநாத ரும் காசியினும் காஞ்சி சிறந்ததென்று இங்கெழுந்தருளியுள்ள சிறப் பினது. இப்பெருமான் திருமுன்னர் முத்தி மண்டபம் ஒன்று உளது. இவ் விசுவநாதரை வணங்கித் திருமுன் புள்ள முத்திமண்டபத்தைக் கண்டவர் முத்தராவார். இத்தலமும் மண்டபமும் சருவதீர்த்தத்தின் மேற்குக் கரையில் இரணியேசம், தீர்த்தேச்சரம் என்னும் தலங்களுக்கு வடக்கே அடுத்துள்ளன.

முத்தி மண்டபம்: உலகெலாம் ஈறுசேர் பொழுதினும் இறுதி யின்றியே மாறிலாதிருந்திடு வளங்சொள் காஞ்சியில் மூன்று மண்டபம்

உள்ளன. அவை: ஆடிசன்பேட்டை முத்தீசர் சந்நிதியில் இருக்கும் முத்திமண்டபம் ஒன்று, சருவதீர்த்தத்தின் மேலைக் கரையில் உள்ள முத்திமண்டபம் ஒன்று; திருவேகம்பர் திருக்கோயிலுக்கு வெளியில் பதினாறுகால் மண்டபத்தினை அடுத்து, 'இராமேச்சுரம்' என்னும் தலத்தில் இராமநாதர் திருமுன்பு பரமானந்த மண்டபம் ஒன்று. இம் மூன்று மண்டபங்களையும் விடியற் காலையில் எழுந்து அன்போடு நினைப்பவர் பாசத்தளையினின்றும் விடுபட்டு முத்தியை அடைவர்,

மகாலிங்கத்தானம்: ஓர் ஊழிமுடிவில் துயிலெழுந்த பிரமன் உலகைப் படைக்க எண்ணுகையில் வெள்ளத்தில் பாம்பணைமேல் துயிலும் தன் தந்தையாகிய திருமாலை மயக்க உணர்வினால் 'நீயாரென' வினவினன். திருமால் 'உலகிற்கு முதல்வன் யான்' எனக் கூறக்கேட்ட பிரமன் நகைத்து 'உலகிற்கு முதல்வன் நீயுமல்லை; பிறரும் அல்லர்; யானே முதல்வன்' என்றனன். இவ்வாறு இருவரும் சொற்போர் புரிந்து முதிர்ந்து விற்போரால் தேவப் படைகளை வீசிப் பதினாயிரம் வருடம் போர் செய்தனர். பிரமன் விடுத்த பாசுபதமும் திருமால் விடுத்த உருத்திரக் கணையும் நிகழ்த்திய போரிடையே சிவபிரானார் தீப் பொறி சிதறச் சோதிலிங்க வடிவமாய்த் தோன்ற அவ்விரு படையும் இவ்விலிங்கத்துள் மறைந்தன.

திருமால் பன்றியாய் அச்சோதிலிங்கத்தின் அடியையும், பிரமன் அன்னமாய் அதன் முடியையும் காண்பான் முறையே பூமியை இடந்தும், விசும்பிற் பறந்தும் ஆயிரம் வருடம் தேடியும் வெற்றிகாணாமையால் மயங்கினர். அப்பொழுது நாதம் ஒலிவடிவமாய் ஓம் உம என இருபகுப்பாகி ஒன்று கலந்து இருக்கு, யசுர். சாமம் என்னும் மூன்று வேதமாய் விரிந்து இறைவன் இயல்பை விளக்கி 'அவனது அருட்குறியாகும் இது' எனக் கூறின. மயக்கம் நீங்கி உண்மையை உணர்ந்த இருவரும் இறைவனைப் போற்றி செய்தனர். வெளி நின்ற சிவபிரானாரை இத்தகைய மயக்கம் அணுகாமையையும் பெருமான்பால் அன்புடைமையையும் திருமால் பிரமர் வேண்டிப் பெற்றனர். பின்பு சிருட்டித் தொழில் தனக்கு நிலைபெறத் தன்னிடத்துப் பெருமான் தோன்ற வேண்டுமெனப் பிரமன் வேண்டினன். அதனை அவனுக்கு வழங்கிய இறைவன் மேலும் சில அருள் செய்தனர்.

'நீவிர் இருவரும் காஞ்சியை அணுகி இதுபோலும் ஓர் சிவலிங்கம் தாபித்துப் பூசித்துப் படைத்தல் காத்தலுக்குரிய உரிமையைப் பெறுவீர்களாக. மானிடர் தேவர் யாவரும் சிவலிங்க பூசனையை மேற்கொள்வார்களாக. 'அவ்வாறு பூசனை புரிவார்க்கு மயக்கம், வறுமை, பயம், மனக்கவலை, பசி, நோய் முதலிய தோன்றி வருத்தும் பிறவி ஒழிவதாக. ஓர்கால் பிறப்பினும் வருத்தமின்றி மகிழ்ச்சி எய்தி அவர் வாழ்வாராக. இயமன் ஒருகாலும் அவர் தம்மை அணுகாதொழிக. பூசனை புரியாதார் தமக்கொரு களைகண் இல்லாதவராவார். அவர்களுடன் வார்த்தையாடுதலும் இழிஞரிலும் இழிஞர் ஆதற்கு ஏதுவாகும். வேள்வி, தானம்,விரதம்,முதலானவை தரும்பயன் பூசனையால் வரு பயனுக்குக் கோடியில் ஒரு பங்கிற்கும் நிகராகா. உலகம் உய்யுமாறு

இத்தகு ஆணைகளை விதித்தோம்' என்றருளி மறைந்தனர். திருமாலும், பிரமனும் காஞ்சியை அடுத்துச் சிவலிங்கம் நிறுவிப் பூசித்துப் பயன் பெற்றனர். சிவலிங்க பூசனையின் பயனை வரையறுத்துக்கூற வல்லவர் ஒருவர் உளரேயோ?

மகாலிங்கத் தானம் என்னும் இத்தலம் கோனேரிகுப்பம் அப்பாராவ் முதலியார் தெருவில் மேற்கு நோக்கிய திருமுன்பினை உடைத்தாய் விளங்குகின்றது. மிகப் பெரிய திருவுருவில் விளங்கும் இம் மூர்த்தியை அண்டக நாயனர் எனவும் வழங்குவர்.

வாலீசம்: வாலி பூசித்துப் போரில் எதிர்த்தவர் வலியில் செம்பாதி தன்னையடையப் பெற்றதலம். கச்சி மயானத்திற்குக் கிழக்கதாய் மேற்கு நோக்கியதாய்ச் சித்தர்கள் வழிபடத்தோன்றிய வாயுலிங்கமே அவ்வாலீசமாகும். வாலி தன் இருக்கைக்குக் கொண்டு செல்லப் பெயராது வால் அற்று வீழ அதன் வடுப் பெற்று'இக்காஞ்சியை விட்டென்றும் நீங்கோம்' எனப் பெருமான் அருளும் சிறப்பினது. (திருவே. 103-120)

கச்சிமயானம்: பண்டன் என்னும் அசுரன் வரத்தினல் தேவர் முதலானோர்தம் உடம்பிற் கலந்து வீரியத்தைக் கவர்ந்துண்டு மெலிவிக்க, இறைவன் உடம்புடைய அனைத்துயிரையும் அவியாக வேள்வியில் இட்டு அவ்வழியாகப் அப்பண்டனை அழித்துப் பண்டுபோற் படைத்தனர். (பண்டம்-உடம்பு) கச்சியில் மயானமாய் வேள்வியில் மூளைத்தவர் பிரானர். மேற்கு நோக்கிய சந்நிதியாய்த் திருவேகம்பத்தில் கொடிமரத்தின் முன்னே தேவாரம் பெற்றுத் திகழ்வது இத்தலம்.

நல்ல கம்பர்: உருத்திரர் வழிபட்டு வேறற ஒன்றி நின்றனர். அவ்வரை அன்பொடும் வழிபடுவோர் ஒன்றி ஒன்று நிலையை எய்துவர். திருவேகம்பர் திருமுன்பு நிலாத்துண்டப் பெருமானுக்கு அயலே மேற்கு நோக்கி வீற்றிருப்பர். (திருவே. 88)

கள்ளக் கம்பர்: திருமால் உயிர்களை மயக்குறுத்த வழிபட்டமையின் அப்பெயர் ஏற்றனர். இவரை வணங்குவோர் மாலாரின் மயக்குட்படார். அம்மையார் வழிபட்ட மூல இலிங்கத்திற்கு வடக்கில் உள்ளது இத்தலம். (திருவே. 87)

வெள்ளக் கம்பர்: பிரமன் வெள்ளை (தூய) உள்ளத்தோடும் பூசனை புரிந்தமையின், இப்பெயரைத் தாங்கினர். பிறவியாம் அழுக்குடம்பு போய்த் தூயராவர். இவர் மூல இலிங்கத்திற்கு வலப்புறத்தே கிழக்கு நோக்கி வீற்றிருக்கின்றனர். (திருவே. 86)

இம்மூத்தலமும் சுந்தரர் கண்பெற்ற பதிகத்துட் போற்றப் பெற்றுள்ளன.

—[முற்றும்]—